# எண்பத்திரண்டில்
# தமிழ்



உலகத் தமிழா[ராய்ச்சி நிறுவனம்]
[ஐ]. [டி]. டி. ஐ., தரமணி, சென்னை

# எண்பத்திரண்டில் தமிழ்

*பதிப்பாசிரியர்*

ச. வே. சுப்பிரமணியன்

ந. கடிகாசலம்

அன்னிதாமசு




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

டி. டி. டி. ஐ., தரமணி, சென்னை-600 113.

## Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title of the book | : | Eṉpattiraṇṭil Tamiḻ |
| Editors | : | Dr. S. V. Subramanian, M. A., Ph. D., Director and Chief Professor; |
| | | Dr. N. Ghadigachalam, M. A., Ph. D., Senior Research Fellow; |
| | | Dr. Annie Thomas, M. A., Ph. D., Associate Professor |
| | | International Institute of Tamil Studies, T. T. T. I, Taramani, Madras-600113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies, T. T. T. I, Taramani, Madras-600 113. |
| Publication number | : | 113 |
| Language | : | Tamil and English |
| Edition | : | First |
| Date | : | July 1985 |
| Paper used | : | 14.6 kg. Demy Size |
| Size of the book | : | 21×18 cms. |
| Printing types used | : | 10, 12, 14 pts. |
| Number of pages | : | xii+1136 |
| Number of copies | : | 1200 |
| Price | : | Rs. 90 (Rupees Ninety only) |
| Printer | : | Sri Gomathi Achagam, Madras-5. |
| Artist | : | Anandan |
| Subject | : | A compilation of articles on the wealth of Tamil in 1982. |

# முன்னுரை

நூற்றாண்டு வாரியாகவும், இலக்கிய-அரசியல்-சமயக் காலக் கட்டங்கள் வாரியாகவும் தமிழை அணுகி அதன் வளர்ச்சியைக்கணித்த தமிழிலக்கிய வரலாற்றுநிலையில், 'ஆண்டுதோறும் தமிழ்' என்பது ஒரு புதிய முயற்சி. ஒரு வேளை, பத்தொன்பது நூற்றாண்டுகளுக்கு மேலாக, தவழ்ந்தும், தளர்நடையிட்டும், மெல்ல இயன்றும் முன்னேறிய தமிழ், இன்று குதித்து, ஓடி, விரைந்து, முன் செல்கின்றது. பல் வகையான அறிவியல் கண்டு பிடிப்புகளும், நாகரிக வளர்ச்சிகளும் தந்த பல்வகைப் பயன்படு பொருட்களின் பெருக்கும், கல்வி—பொருளாதாரம் போன்ற துறைகளின் மனித முன்னேற்றமும், மக்கட் தொடர்புச் சாதனங்களும், உலகை அறிந்ததால் ஏற்பட்ட தற்பேணல் முயற்சியும், போன்ற பல இதற்குக் காரணமாகலாம். இந் நிலையில் இலக்கிய ஆக்கங்களாகவும், மேடை மொழிகளாகவும், பத்திரிகை இதழ்களாகவும், வான் ஒலியாகவும், தொலைக் காட்சியாகவும், ஆய்வாகவும், பாடமுறையாகவும்...பெருகிப் பிரவகிக்கின்ற தமிழ், ஆண்டுப்பார்வை முயற்சியிலும் முழுவதும் உட்பட்டு அடங்காது விம்மி நிற்கின்றது இயல்பேயாகும்.

கால வரையறைப் படுத்தினும், இட வரையறை எல்லை நீங்கியும், வகை நிலைகள் விஞ்சியும், உலக நாடுகள் பலவற்றிலும் பரந்து படர்ந்த தமிழ்க் கொடி, தளிரும், பூவும், பிஞ்சும், கனியும் ஒரே நேரத்தில் கொண்டு நிழல் அளிக்கின்றது; வளம் காட்டுகின்றது. தமிழகத்துக்கு வெளியேயும் பேச்சு மொழியாகவும், இந்தியாவுக்கு வெளியேயும் ஆட்சி மொழியாகவும் ஆணை செலுத்துவதுடன், நிலையான ஆக்கங்களும், சுவையான படைப்புகளும், சீரான புனைவுகளும் தந்து வளமுடையதாக அமைகின்றது தமிழ். இவ் வளங்களைக் கணக்கிடும் போது வளர்ச்சியும் மாற்றமும் புலப்படுவது, காரணங்களை, உண்மைச் சூழல்களை விளக்கும். எத் துறையில் வளர்ச்சி குறைவு என உணர இயல்வதால் அதனைச் சீராக்க, நேராக்க என்ன செய்யலாம் எனும் சிந்தனையும் எழும். புதியன எழுதல், புதுமையான திருப்பங்கள் உருவாகுதல் என்பன உணரப் படுவதால் வரலாற்று முளை புலப்படும்.

'எண்பதில் தமிழ்' இவ்வகையின் முதன்முயற்சியாக அமைந்து, ஓராண்டுத்தமிழ் வளர்ச்சியை முப்பத்தைந்து கோணத்

தில் அணுகிக் கண்டு காட்டியது. இது உலகத் தமிழின் முழு உரு வரைவாகவன்றி, ஒரு பகுதிப் புனைவாகவே அமைந்தமையை, எதிர்பார்த்த எழுபதிற்கும் மேற்பட்ட தலைப்புகளுள், முப்பத் தைந்து பற்றிய கட்டுரையே வந்து அச்சேறியமைபுலப்படுத்தும். எனினும் தமிழின் பல் துறையின் செய்திகள், புள்ளி விவரங்கள் தரப்பட்டமை ஆழமாகஅடிக்கல் அமைத்தது. தொடர்ந்து வந்த 'எண்பத்தொன்றில் தமிழ்' அடுத்த படி நிலை வளர்ச்சி காட்டி, முன் தொகுதி தராத இருபதுக்கும் மேற்பட்ட பொருண்மை களைப் பேசிப் புதிய அணுகு முறைகளையும் புலப்படுத்தியது. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு, தமிழ்ப் பல்கலைக் கழகம் போன்ற சிறப்பு அம்சங்கள் இவற்றில் குறிப்பிடத்தக்கன. அந்தமான், புதுவை, சிங்கப்பூர், மேற்கு ஜெர்மனி ஆகிய இடங் களின் தமிழ் வளமும் வளர்ச்சியும் வகுக்கப்பட்டன. புதுக் கவிதை, குறும்புதினம், மேடை நாடகம், வானொலி நாடகம், தொலைக்காட்சி எனப் படைப்பு நிலைகள் புலப்படுத்தப் பெற்றன. மேலும், வரலாறு, தொல்பொருள்-கல்வெட்டு; மருத்துவம், அறிவியல்; தமிழ் கற்பித்தல், சுவடி திரட்டுதல், சோதிடம்; கம்பன் கழகங்கள்; மாத-காலாண்டு இதழ்கள், அரசுத் துறை வெளியீடு எனப் பல துறைகள் அணுகி ஆயப் பெற்றன.

'எண்பத்திரண்டில் தமிழ்' நாற்பத்துநான்குகட்டுரைகளுடன் அமைகின்றது; முன் இரு ஆண்டு நூற்றொகுதிகள் தந்த ஒரு சில தலைப்புகளில் கட்டுரைகளை வழங்க இயலாமை தமிழரின் தவக்குறைவே; ஆயின் பதினைந்திற்கும் மேற்பட்ட புதுத் தலைப்புகளில் கட்டுரைகளமைவது வளர்ச்சி நிலையில் சிறப் பாகக் குறிப்பிடத்தக்கது. மாத நாவல் (1), திரைப்படம் (4), மருத்துவ இதழ்கள் (9), தனித் தமிழ் ('4), பீகிங் வானொலியில் தமிழ் (19), சீனா (2 ), யப்பான் (21), செக்கோஸ் லோவேக்யா (22), ருஷ்யா (23) ஆகிய இடங்களில் தமிழ், தொலைக்காட்சி நாடகம் (28), வார இதழ்ச் சிறுகதைகள் (30), தமிழில் பிற மொழிக் கவிதைகள் (31), நகைச் சுவைத் துணுக்குகள் (32), நாள் இதழ்கள் (34), வழக்காடு மன்றம் (பட்டிமன்றமும் வழக் காடு மன்றமும் 35), சமய நூல்கள் (40), (உலகத் தமிழாராய்ச்சி) நிறுவனப் பணிகள் (43) என்பன. இப் புதுமை பயக்கத் துணை நின்ற ஆய்வறிஞர் தனித்த பாராட்டுக்குரியவர்.

ஒரு சில துறைகள் குறித்து மூன்று ஆண்டுகளும் கட்டுரைகள் அமைவதும் தனியே குறிப்பிடத்தக்கது. தம் துறை பற்றிய செய்திகளைத் தவறாது, வரன்முறையாகக் கூறிவரும் இவ்

ஆர்வலரின் அன்பு பாராட்டுக்குரியது. சிறுகதை, நாடகம் நாவல், இலக்கிய (த்திறன்) ஆய்வு, மொழிபெயர்ப்பு, சென்னைப் பல்கலைக் கழக ஆய்வேடுகள், ஒப்பிலக்கியம், நாட்டுப்புறவியல், சுவடிப் பதிப்புகள், தமிழ்ப் பாடத் திட்டம், இலக்கணம், பட்டிமன்றம், வானொலி, நூற்றொகை என்பன இந்நிலையின.

எதிர்பார்ப்புக்கும் நிறைவேற்றத்திற்கும் இடையே பெரு இடைவெளி அமைவது முன்ஆண்டுகள் போலவே இங்கும் உணர இயல்கின்றது. 78 தலைப்புகளில் தொகுப்பும் ஆய்வும் பெற விழைந்த போதும் 44 தலைப்புகளே நிறைவு பெற்றமை 56.4% வெற்றியையே காட்டினது. வரும் ஆண்டுகளில் எழுத விரும்பு வோரும் இத்தலைப்புகளைக் கருத்தில் கொள்ள வேண்டு கிறோம்.

**படைப்பிலக்கியம்**

1. மரபுக் கவிதை
2. புதுக்கவிதை
3. நாடகங்கள்
4. நாவல்கள் (நூலாக வெளியிடப் பெற்றவை)
5. நாவல்கள் (திங்களிதழில் வெளிவந்தவை)
6. குறும் புதினங்கள்
7. சிறுகதைகள்
8. குழந்தை இலக்கியம்

**இலக்கிய ஆய்வு**

9. இலக்கிய ஆய்வு நூல்கள்
10. இலக்கியத் திறனாய்வு நூல்கள்
11. இலக்கிய ஆய்வுக்கட்டுரைகள்
12. ஆய்வேடுகள்
13. ஒப்பிலக்கியம்

**இலக்கண மொழியியல் ஆய்வு**

14. இலக்கணஆய்வுக்கட்டுரைகளும் நூல்களும்
15. மொழியியல் ஆய்வு நூல்கள்
16. தமிழ் பயிற்று முறை

**பிற**

17. அறிவியல் நூல்கள்
18. இசை பற்றிய நூல்கள்
19. உளவியல் நூல்கள்
20. சமய நூல்கள்
21. சோதிட நூல்கள்
22. தத்துவ நூல்கள்
23. நாட்டுப்புறவியல் பற்றிய நூல்கள்
24. பண்பாட்டு நூல்கள்
25. பயணக் கட்டுரைகளும் நூல்களும்
26. புதைபொருள் கல்வெட்டு ஆய்வு
27. மருத்துவ நூல்கள்
28. மனையியல் நூல்கள்
29. மானுடவியல் நூல்கள்
30. மொழிபெயர்ப்பு நூல்கள்
31. வசன நூல்களும் உரையும்
32. வரலாற்று நூல்கள்
33. வாழ்க்கை வரலாற்று நூல்கள்

**பதிப்புக்கலை**

34. சுவடி சேகரிப்புப் பணி

35. நூலாக வெளிவந்த சுவடிகள்
36. பதிப்பகங்களும் தமிழும்

பல்கலைக் கழகங்கள்

37. இந்தியப் பல்கலைக் கழகங்களில் தமிழாய்வு
38. தமிழ்ப் பாடத் திட்டம்.

மக்கள் தொடர்பு

39. நாளிதழ்கள் (காலைப் பதிப்பு)
40. நாளிதழ்கள் (மாலைப் பதிப்பு)
41. வார இதழ்கள்
42. மாதமிருமுறை இதழ்கள்
43. திங்கள் இதழ்கள்
44. காலாண்டு இதழ்கள்
45. மலர்கள்
46. தமிழ்பற்றிய ஆங்கில இதழ்கள்
47. இலக்கிய இலக்கண ஆய்வு இதழ்கள்
48. அரசுத்துறை வெளியீடுகள்

இலக்கிய நிகழ்ச்சிகள்

49. அறிஞர் விழாக்கள்
50. ஆய்வுக் கருத்தரங்குகள்
51. இலக்கிய அமைப்புகள்
52. கவியரங்குகள்
53. சிறப்புச் சொற்பொழிவுகள்
54. பட்டி மன்றங்கள்

திரைப்படம்

55. தமிழ்த் திரைப்படங்கள்
56. திரை இசைப் பாடல்கள்
57. திரைப்பட இதழ்கள்

வானொலியும் தொலைக் காட்சியும்

58. வானொலி நாடகங்கள்
59. வானொலியில் தமிழ்
60. தொலைக்காட்கி நாடகங்கள்
61. தொலைக்காட்சியில் தமிழ்

கலை நிகழ்ச்சிகள்

62. நாட்டுப்புறக் கலைகள்
63. மேடை நாடகங்கள்

மதிப்புரை

64. நூல் மதிப்புரைகள்

நூலகம்

65. நூலகர் பார்வையில் நூல்கள்

பிறநாடுகளில் தமிழ்

66. சிங்கப்பூர்
67. மலேசியா
68. ஸ்ரீலங்கா
69. மேற்கு ஜெர்மனி
70. மொரீசியசு
71. அமெரிக்கா
72. கிரேட் பிரிட்டன்
73. போலந்து
74. பிரஞ்சு ஆப்பிரிக்கா
75. பிரான்சு
76. ருஷ்யா
77. செக்கோசுலோவாகியா
78. ஹாலந்து.

ஒருவர் எண்ணம், பல கைகளின் முயற்சியால், பல காலப் பணிகளால் உருப்பெற்று நிறைவுறுவதாக இவ் 'ஆண்டுகளில் தமிழ்'த் தொகுதிகள் அமைகின்றன. தங்களுக்குரிய பல்வகை வேலைகளுக்கிடையில் நிறுவனத்துடன் ஒத்துழைத்துக் கட்டுரைகள் வழங்கிய அன்பர் பாராட்டுக்குரியவர். அவர்கட்கு எங்கள் நன்றி.

பலகாரணங்களால் இந்நூல் ஓரிரு ஆண்டுக் கழிவுக்குப்பின் வெளி வருகின்றது சீனநாட்டு, பீகிங்வானொலியில்பணியேற்றுச் செல்லும் நிலையில், டாக்டர் கடிகாசலம் அவர்கள் அதுவரை வந்த பதினெட்டுக் கட்டுரைகளை (1-18) அச்சுக்கு வாய்ப்பாகச் செப்பம் செய்து தந்தார். தொடர்ந்து வந்த கட்டுரைகளின் பதிப்புப் பணியில் டாக்டர் அன்னிதாமசு உதவினார். நூல் அச்சேறுங்கால் திரு. விவேகானந்தன் (2-30 படிவம் மட்டும்), திரு. நீலகண்டன் எம். ஏ, எம். ஃபில். ஆகியோர் மெய்ப்புத் திருத்தும் பணி மேற்கொண்டு உதவினர்.

கவனக் குறைவு காரணமாக, தவிர்க்க வியலாத சில பிழைகள் இதன்கண் ஏற்பட்டுள்ளமையைத் தமிழுலகம் பொறுத் தருள வேண்டும். (1) முதற்கட்டுரையின் பின்னிணைப்பாக அமைய வேண்டிய ஒரு பட்டியலும், மூன்று அட்டவணைகளும், பக் 41-44-இல், இரண்டாம் கட்டுரையைத் தொடர்ந்து அமை கின்றன. (2) ஐந்தாம் படிவத்தில், பக்கங்களின் தலைப்பில் ஆசிரியர் பெயர் தவறுதலாக அமைந்துள்ளது. (3) 433-448-ஆக அமைய வேண்டிய பக்கங்களில் 443-458 என எண் அச்சாகி யுள்ளது. அதனால் 449 முதலாகப் பத்துப் பக்கங்கள் —A எனும் இணைவுடன் அமைகின்றன. (4) கட்டுரைகள் சில எண் பெறா தும், தவறாக, வந்த எண்ணே பெற்றும் அமைகின்றன. (5) சில கட்டுரைகளில் அடிக்குறிப்புக்கள் அவ்வப் பக்கத்திலும், சிலவற் றில் கட்டுரை முடிவிலும் அமைகின்றன. (6) அச்சுப் பிழைகள் காணப்படுகின்றன.

'ஆண்டுகளில் தமிழ்' எனும் இப்பணி, தொடர்ந்து நடை பெற்று வருகின்றது. 'எண்பத்து மூன்றில் தமிழ்' பதிப்பு நிலையிலும், 'எண்பத்து நான்கில் தமிழ்' தொகுப்பு நிலையிலும் உள்ளன. இப்பணியும் நிறுவனத்தின் பல்வேறு பணி களும் இடையறாது நடக்க ஆக்கமும் ஊக்கமும் தரும் நிறுவனத் தலைவர் கல்வியமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர் கட்கு நிறுவனம் நன்றிக் கடன்பட்டுள்ளது.

நூலின் அச்சுப்பணியை மேற்கொண்ட ஸ்ரீ கோமதி அச்சகத் தினர்க்கு நன்றி.

ச. வே. சுப்பிரமணியன்

## கட்டுரையாளர்


1. அழகப்பராசு, த.
ஆய்வாளர்,
உலகத்தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113.

2. இரகுபதி, இரா.
தமிழாசிரியர்,
தூய சூசையப்பர்
மேல்நிலைப் பள்ளி,
செங்கற்பட்டு-603002.

3. இராதா கிருஷ்ணன்,
ஏர்வாடி எஸ்.
(பாரத ஸ்டேட் வங்கி)
4, முத்து முதலி தெரு,
புரசைவாக்கம்,
சென்னை-600007.

4. கடிகாசலம், டாக்டர் ந.
தமிழ்ப் பிரிவு,
பீகிங் வானொலி
நிலையம்
பீகிங், சீனா.

5. கிரி, பி. வி,
நிருபர்,
தமிழரசு, சென்னை.

6. குருநாதன்,
டாக்டர் இராம.
விவேகானந்தா கல்லூரி,
சென்னை.

7. சண்முகதாஸ், டாக்டர் அ.
அதிதிப் பேராசிரியர்,
கச்சுயின் பல்கலைக்கழகம்,
தோக்கியோ, யப்பான்.

8. சண்முக வேலாயுதம், சு.
மொழிபெயர்ப்பியல்
ஆராய்ச்சி உதவியாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113.

9. சத்தியமூர்த்தி, அ.ம.
ஆய்வாளர்,
தமிழ் இலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக்
கழகம்,
சென்னை-600005.

10. சர்மா, எஸ். எஸ்,
பிளாக் 33 10-13,
தங்கிளின் ஹால்ட்ரோடு,
சிங்கப்பூர் 0314

11. சற்குணம், மா.
துணைப் பேராசிரியர்,
சி.பா.சு. தமிழ்க்கல்லூரி,
மயிலம்-604 304.

12. சாயபு மரைக்காயர், மு.,
துணைப் பேராசிரியர்,
தாகூர் கலைக்கல்லூரி,
பாண்டிச்சேரி.

13. சிவகாம சுந்தரி, ந.
நூலகர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை-113.

14. சிவகாமி, டாக்டர் ச.
முதுநிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை-113.

15. சிவலிங்கனார், ஆ.
தொல்காப்பியத் திட்ட
முதுநிலை அலுவலர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600 113.

16. சுந்தரம், இளசை எஸ்.
தயாரிப்பாளர்,
அகிலஇந்திய வானொலி,
திருச்சி-620 001.

17. சுப்பிரமணியன்,
டாக்டர் ச. வே,
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை.600113.

18. சுப்பிரமணியன், பூ,
முதுநிலை ஆராய்ச்சி
உதவியாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113.

19. சுன் கோ சியாங்,
தமிழ்ப் பிரிவு,
பீகிங் வானொலி
நிலையம்,
பீகிங், சீனா.

20. சொல்விளங்கும்பெருமாள்
டாக்டர் பூ.
பேராசிரியர், தமிழ்த்
துறை
என். எம். எஸ். எஸ். வி.
என். கல்லூரி,
மதுரை-19.

21. தங்கராசு, டாக்டர் மு.
தமிழ்த்துறை,
கிறித்தவக் கல்லூரி,
தாம்பரம், சென்னை-59.

22. தண்டாயுதம்,
டாக்டர் இரா,
இந்திய ஆய்வியல் துறை,
மலாயாப் பல்கலைக்
கழகம்,
கோலாலம்பூர், மலேசியா

23. தமிழமல்லன், க.
தலைவர்,
தனித்தமிழ்க் கழகம்,
168, மாரியம்மன்
கோயில் தெரு,
தட்டாஞ் சாவடி,
புதுச்சேரி 605009.

24. தனஞ்செயன், ஆ.,
ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை-
600113.

25. திருமாவளவன், வே. ச.
எழிலகம்,
17, எப், அவ்வை நகர்
புதுச்சேரி-605008.

26. நல்ல தம்பி, வெ,
தயாரிப்பாளர்,
தொலைக்காட்சி
நிலையம்,
ஆடம்ஸ்சாலை,
சென்னை-600005.

27. நாகராசன், டாக்டர். கரு
துணைப் பேராசிரியர்,
குருநானக் கல்லூரி,
சென்னை-600032.

28. பகவதி, டாக்டர் கே.
முதுநிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை-113.

29. பஞ்சாங்கம், க.
தமிழ் விரிவுரையாளர்,
தாகூர் கலைக்கல்லூரி,
புதுச்சேரி-605008.

30. பார்வதி, இரா
துணை நூலகர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113.

31. பிச்சை, டாக்டர் அ.
மாநில முறைசாராக்
கல்வி மையம்,
18, ஆடம்ஸ் சாலை,
சென்னை-600005.

32. பிள்ளை, ஏ. எம்,
கதிரவன் ஜோதிட
நிலையம்,
28, சாவடித்தெரு,
பல்லாவரம்,
சென்னை-600043.

33. பெருமாள், டாக்டர்
ஏ.என்,
பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113.

34. மதிவாணன், கு,
தமிழ் விரிவுரையாளர்,
தாகூர் கலைக்கல்லூரி,
புதுச்சேரி-8.

35. மாதவன், வே. இரா
சுவடியியல் ஆராய்ச்சி
உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-113.

36. முத்தப்பன், பழ.
தமிழ்க் கல்லூரி, மயிலம்.

37. முத்தையா, டாக்டர் கரு,
தமிழ்த் துணைப்
பேராசிரியர்
ஸ்ரீ சேவுகன் அண்ணா
மலைக் கல்லூரி,
தேவகோட்டை விரிவு-3

38. ரகுநாயகன், கா. அ ச.
வரதம், 62, கச்சேரித்
தெரு,
திருப்பத்தூர் 635 601.

39. ரத்தினம், டாக்டர் க.
தமிழ்ப் பேராசிரியர்,
மன்னர் சரபோசி அரசு
கலைக் கல்லூரி,
தஞ்சாவூர்-613 005.

40. வீராசாமி, டாக்டர்
தா. வே.
பேராசிரியர் தலைவர்,
தொகுப்பியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்-613 001

41. வேங்கடராமன்,
டாக்டர் சு.
தமிழ் மற்றும் இந்திய
மொழிப் புலம்,
மதுரை காமராசர்
பல்கலைக் கழகம்,
மதுரை-625 021.

42. Alexander Dubianski, Dr.
Institute of Asian &
African studies,
Dept. of Literature,
Moscow state University,
Marx Prospect 18, USSR

43. Babu Sivaraja Kiru-
banithi, R.
Professer of English,
Aditanar college of Arts
and Science,
Virapandian patnam,
Tiruchendur.

44. Vacek, Dr. Jaroslav,
Dept of Asian studies,
Charles university,
Celetna 20,
Praha 11001
Czechoslovakia.

45. Natarajan, A.
Correspondent,
The T.C.A. (Tamil)
U.P. School
Tirupati, Andhra.

# உள்ளே

இணைப்பு

# மாத நாவல்

—கரு. முத்தய்யா

*1982—இல் வெளியான தமிழ் மாத நாவல்களின் எண்ணிக்கை 101. இவற்றில் புதிய நாவல்கள் 98 தான். இவற்றில் 96 நாவல்கள் இக் கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளன. 96 நாவல்களையும் எழுதிய 45 நாவலாசிரியர்கள் அனைவரும் நன்கு அறிமுகமானவர்களே; ஒருவர் கூட புதியவர் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.*

இருபதாம் நூற்றாண்டில் தமிழிலக்கியத்தைப் பொறுத்த வரை கதையிலக்கியம்தான் மிகுதியாக வளர்ந்திருக்கிறது. இந்தக் கதையிலக்கியம் சிறுகதை, நாவல் என இரு பிரிவாக அமைந்துளது. நாவல்கள் தமிழில் வெளிவரத் தொடங்கிய பிரதாப முதலியார் சரித்திர காலத்திலிருந்து, அவை இரண்டு வகையாகத்தான் வெளிவந்தன. ஒன்று முழு நாவலாக எழுதப் பெற்று நூல் வடிவில் வெளிவருவது. மற்றொன்று வார மாத இதழ்களுள் ஏதாவதொன்றில் தொடர்கதையாக வந்து, முற்றுப் பெற்றபின் தனி நூல் வடிவில் வெளிவருவது.

அண்மைக் காலத்தில் மூன்றாவது வகையாக ஒன்று தோன்றியிருக்கிறது. மாத இதழ்கள் என்ற பெயரில் சில நிறுவனங்கள், சில இதழ்களைப் பதிவு செய்து, அப்பெயரில் மாதம் ஒரு நாவலாக வெளியிடும் முறைதான் அது. ''ராணி'' எனும் வார இதழ் நிறுவனம் ''ராணி முத்து'' என்ற பெயரில் ஓர் இதழைப் பதிவு செய்து, முன்னமே நூல் வடிவில் வெளியான நாவல்களில் சிறந்தவற்றை மலிவுப்பதிப்பாக வெளியிட்ட பணி தான் இவ்வகையிலான முதல் முயற்சி.

அதனைத் தொடர்ந்து ''குமுதம்'' வார இதழ், ''மாலை மதி'' எனும் திங்கள் இதழைத் தோற்றுவித்து, மாதம் ஒரு புதிய நாவலை வெளியிடத் தொடங்கியது. பிற வார இதழ்கள் சிலவும் இவ்வழித்தடத்தை அடியொற்றி மாதம் ஒரு புதிய நாவலை வெளியிடத் தொடங்கின. ராணிமுத்துவும் பழைய நாவல்களுக்கு

மலிவுப்பதிப்பு வெளியிடுவதை விட்டுவிட்டு, மாதம் ஒரு புதிய நாவலை வெளியிடும் முறையைப் பின்பற்றியது. இதுதான் தமிழில் மாத நாவல்கள் வெளிவரத் தொடங்கிய சூழ்நிலை.

நாவலையும் சிறுகதையையும் பிரித்தறிவது போல, நாவலையும் குறுநாவலையும் பிரித்தறிவது அவ்வளவு எளிதன்று. இவ்விரண்டிற்குமிடையே உள்ள வேறுபாட்டைத் திறனாய்வாளர்கள் இன்னும் தெளிவாக வரையறுக்கவில்லை. ஆனாலும் நாவலுக்கும் குறுநாவலுக்கும் இடையிலான மிக இன்றியமையாத வேறுபாடு, அளவுதான் என்பதை அவற்றின் பெயர்களே தெளிவுபடுத்தும். அந்த அடிப்படையில் பார்த்தால் மாத நாவல்கள் அனைத்தையும் குறுநாவல்களாகத்தான் கொள்ள வேண்டியிருக்கும். ஏனெனில், மிக நீளமான மாத நாவல்களே, டெமி என்ற அளவில், அச்சில், நூறு பக்க அளவுதான் உள மிகச்சிறிய மாத நாவல்களோ ஐம்பது பக்க அளவுதான் உள. எனவே, இவை ஐயத்திற்கிடமின்றிக் குறுநாவல்களே. என்றாலும், சில நடைமுறை வசதிகட்காக, இக்கட்டுரை முழுவதிலும் இவை நாவல்களென்றே குறிப்பிடப் பெறுகின்றன.

1982 ஆம் ஆண்டில் வெளியான, தமிழ் மாத நாவல்களைப் பற்றிய செய்திகளைத் திரட்டித் தருவதும், அவற்றைத் திறனாய்வு செய்வதும் இக்கட்டுரையின் நோக்கங்கள். அதற்கேற்ப இக்கட்டுரை மூன்று பிரிவுகளாக அமைகிறது. முதற்பிரிவு மாத நாவல்களைப் பற்றிய செய்தித் திரட்டு: இரண்டாம் பிரிவு அவை பற்றிய சுருக்கமான திறனாய்வு; மூன்றாம் பிரிவு அத்திறனாய்வு முடிவுகளுள் இன்றியமையாதவற்றின் தொகுப்பு.

## 1. செய்தித் திரட்டு

### இதழ்கள்

1982 ஆம் ஆண்டில் தமிழில் மாத நாவல்களை வெளியிட்ட இதழ்கள் ஒன்பது. அவை **கதைக் கதிர், திரை கதிர், நவரத்தினம், நறுமணம், மணியன், மாலை மதி, மேகலா, மோனா, ராணிமுத்து** ஆகியவை. இவற்றின் ஆசிரியர், வெளியீட்டாளர் போன்ற செய்திகள் பின்னிணைப்பு 1 இல் தரப்பெற்றுள. இவற்றுள் நறுமணம் தவிர ஏனையவை 1982க்கு முன்னரே இயங்கிக் கொண்டிருந்தவை. நறுமணம் 1982 ஆம் ஆண்டு, சூன் திங்களில்தான் மாத நாவல் வெளியிடத் தொடங்கியது.

**நாவல்கள்**

மேலே குறிப்பிட்ட ஒன்பது இதழ்களுள் திரை கதிர், நறுமணம் என்ற இரு இதழ்கள் நீங்கலாக ஏனையவை ஏழும் மாதத்திற்கு ஒரு நாவல் என்ற முறையில் 1982இல் ஒவ்வொன்றும் பன்னிரண்டு நாவல்களை வெளியிட்டுள. திரை கதிர் இதழ் என்ன காரணத்தினாலோ, 1982 செப்டம்பர், 1982 அக்டோபர் ஆகிய இரு மாதங்கட்கும் சேர்த்து ஒரே ஒரு நாவலைத்தான் வெளியிட்டுளது. எனவே, இவ்விதழ் 1982இல் வெளியிட்ட நாவல்கள் பதினொன்று தான். நறுமணம் சூலையில் நாவல் எதனையும் வெளியிடவில்லை. எனவே, இவ்விதழ் 1982இல் வெளியிட்ட நாவல்கள் ஆறு தான்.

இங்கே கொடுத்துள்ள கணக்கின்படி 1982இல் வெளியான மாத நாவல்களின மொத்த எண்ணிக்கை 101. அவற்றுள் ராணி முத்து 1982 மார்ச், 1982 மே, 1982 நவம்பர் ஆகிய மூன்று மாதங்களில் வெளியிட்ட நாவல்கள், முன்னரே நூல் வடிவில் வெளியானவற்றின் மலிவுப் பதிப்புக்கள். எனவே, 1982இல் வெளியான புதிய தமிழ் மாத நாவல்கள் 98தான்.

இந்த 98 நாவல்களுள் நறுமணம் 1982 சூன், 1982 அக்டோபர், 1982 நவம்பர், 1982 டிசம்பர் ஆகிய மாதங்களில் வெளியிட்ட நாவல்கள் எனக்குக் கிடைக்கவில்லை. எனவே, இக் கட்டுரையின் இரண்டாம் பகுதியாகிய திறனாய்வு எஞ்சிய 94 நாவல்களைப்பற்றியதாகவே அமையும். இங்கே எனக்குக் கிடைக்கவில்லை எனக் குறிப்பிட்ட நான்கு நாவல்களுள் இரண்டின் பெயர், அவற்றின் ஆசிரியர் பெயர் ஆகியவற்றை முந்திய நாவலில் வெளியான விளமபரங்களின் வாயிலாக அறிய முடிந்தது. எஞ்சிய இரு நாவல்களைப்பற்றி எந்தச் செய்தியும் தெரியவில்லை.

101 நாவல்களுள் செய்தி எதுவும் தெரியாத இரு நாவல்கள் நீங்கலாக, 99 நாவல்கள் பற்றி, அவற்றின் பெயர், அவற்றை எழுதியோர் பெயர், அவற்றை வெளியிட்ட இதழின் பெயர், அவை வெளியிடப் பெற்ற மாதம் ஆகியவை பின்னிணைப்பு 2இல் தரப்பெற்றுள.

**நாவலாசிரியர்கள்**

1982 இல் தமிழில் வெளியான புதிய மாத நாவல்கள் 98 இல், செய்தி தெரியாதவை இரண்டை நீக்கி, 96 நாவல்களைப் பார்க்கும்போது அவை 45 நாவலாசிரியர்களால் எழுதப் பெற்றுள. ஆண்கள் 25 பேரும், பெண்கள் 20 பேரும் அடங்கிய இந்த 45 நாவலாசிரியர்களும், முன்னரே, வார, மாத இதழ்

களில் சிறுகதை அல்லது தொடர்கதை எழுதி, தமிழர்கட்கு அறிமுகமானவர்களே. புதுமுகம் என்று சொல்லத்தக்கவர் யாரும் இலர்.

ஆண்களில் 15 பேரும், பெண்களில் 12 பேரும் ஆக 27 நாவலாசிரியர்கள் தலைக்கு ஒரு நாவல் மட்டுமே எழுதியுள்ளர். ஆண்களில் பதின்மர், பெண்களில் எண்மர் ஆகப் பதினெட்டு நாவலாசிரியர்கள் ஒவ்வொருவரும் ஒரு நாவலுக்கு மேல் எழுதியுள்ளர். ஆண்களில் மிக அதிகமான நாவல்களை எழுதியவர் ராஜேந்திரகுமார். இவர் எழுதிய நாவல்கள் எட்டு. பெண்களுள் ஏழு நாவல்களை எழுதிய லக்ஷ்மி இவ்விடத்தைப் பிடிக்கிறார். ஒரு நாவலுக்கு மேல் எழுதிய நாவலாசிரியர்களைப்பற்றிய விளக்கப்படத்தைப் பின்னிணைப்பு-3 காட்டுகிறது.

### கதைக் கரு

1982ஆம் ஆண்டில், தமிழில் வெளியான, புதிய மாத நாவல்கள் 98இல், எனக்குக் கிடைத்த 94நாவல்களை அவற்றின் கதைக்கரு அடிப்படையில் எவ்வாறு பகுக்கலாம் என்பதை விளக்கப்படம் 5.2. காட்டும். தனித்தனியே எக்கதை, எதனைக் கருவாகக் கொண்டது என்பது பின்னிணைப்பு-4இல் குறிப்பிடப் பெற்றுளது. நாவலின் ஒரு வகையாகிய வரலாற்று நாவல், நாவல் என்ற வடிவத்திலேயே சேர்க்கத் தயக்கம் காட்டும் நடைச்சித்திரம் ஆகிய இரண்டையும் நடைமுறை வசதிகட்காகக் கதைக்கரு அடிப்படையிலான பகுப்புடனேயே சேர்த்திருக்கிறேன்.

## 2. திறனாய்வு

### குற்றவியல்

கொலை, கொள்ளை போன்றவை நடப்பதும், அவற்றைக் காவல் துறையினர் அல்லது துப்பறிபவர் துப்புத்துலக்கிக் கண்டு பிடிப்பதுமாகிய அமைப்பில் உள்ள நாவல்களைக் குற்றவியல் கருவுடையவை எனக் கொள்ளலாம். அவ்வாறான நாவல்களே எண்ணிக்கையில் பிற எந்தக் கருவையும் உடைய நாவல்களை விட மிகுதியாக உள. 94 நாவல்களில் குற்றவியல் நாவல்கள் 21. இந்த உண்மை பொதுமக்கள் இத்தகைய விறுவிறுப்பும், சுவையும் உடைய நாவல்களையே அதிகம் விரும்பிப் படிக்கின்றனர் என்பதை உணர்த்துகிறது. ஆனால், மக்களின் சுவையுணர்வை,

இவ்வகைக் கதைகளையே விரும்பும் வண்ணம் வளர்த்ததில் இன்றைய எழுத்தாளர்கட்கும் பொறுப்பு உண்டு.

21 நாவல்களுள் பெண் நாவலாசிரியர்கள் எழுதியவை நான்குநாவல்கள்தான். தமிழ் நாட்டுப் பெண் நாவலாசிரியர்கள் குற்றவியல் நாவல் எழுதும் முயற்சியில் அதிகம் ஈடுபடவில்லை எனத் தெரிகிறது. எஞ்சிய 17 நாவல்களில் புஷ்பா தங்கதுரை எழுதியவை மட்டும் ஆறு நாவல்கள். மேலும், இந்த 94 நாவல்களில் அவர் எழுதியவையே ஆறுதான். அந்த ஆறும் குற்றவியல் நாவல்களாகவே உள.

பொதுவாகக் குற்றவியல் நாவல்கள் அனைத்திலும் சுவை சேர்க்கும் எண்ணத்துடன் நாவலாசிரியர்கள் பாலுணர்வுக் காட்சிகள் அல்லது உரையாடல்களை ஆங்காங்கே கலந்துள்ளனர் என்றாலும் பெரும்பாலானோர் விரசம் அல்லது ஆபாசம் என்ற எல்லையைத் தொட்டுவிடாமல் கவனமாகவே மேற்படி காட்சிகள் அல்லது உரையாடல்களைப் பயன்படுத்தியுளர். ஆனால் புஷ்பா தங்கதுரை அந்த எல்லையைத் தாண்டி வெகுதொலைவு சென்று விடுகிறார். சரியாகச் சொல்லப்போனால், வயது வந்த, திருமணமாகாத பெண்கள் இருக்கும் வீடுகளில் அவரது நாவல்களை வாங்கிப் படிக்கலாமா என்பதே கேள்விக்குறியாக அமையும் அளவிற்கு அவரது சில வருணனைகள் அமைந்துள.

மொத்தத்தில் இந்த 21 நாவல்களும் வெறும் பொழுது போக்கு நாவல்களே.

## குடும்பம்

ஆழமான சிக்கல் எதுவும் இல்லாமல், குடும்பத்தில் நிகழும் நிகழ்ச்சிக் கோவைகள் கதைகளாக்கப் பெற்றிருக்கும் அமைப்புள்ள நாவல்களைக் குடும்பம் என்ற கதைக்கருப்பிரிவில் அடக்கியுள்ளேன். இவ்வகை அமைப்புடையன 20 நாவல்கள். இவற்றுள் 15 பெண் எழுத்தாளர்களால் எழுதப் பெற்றவை. இவையும் வெறும் பொழுது போக்கு நாவல்கள்தான்.

## வரலாறு

வரலாற்றுப்பின்னணியுடைய நாவல்கள் இந்த 94இல் மூன்று தான். மராட்டிய வீரன் சிவாஜியின் வாழ்க்கை, பிற்காலச் சோழர் வரலாற்றின் இறுதிப் பகுதி, பல்லவர் வரலாறு இவற்றை அடிப்படையாகக் கொண்ட இந்த மூன்று நாவல்களும்கூடக் கற்பனை உலகில் மகிழ்வு காணும் பொழுது போக்கிற்குத் துணை செய்பவையே.

**இயற்கையிறந்த ஆற்றல்**

மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட, நம்ப முடியுமா? முடியாதா? என்ற வினாவிற்குச் சாலச் சாலபாக விடை காண இயலாத சூழலையுடைய ஆற்றல்களை அடிப்படையாகக் கொண்ட நாவல்கள் இரண்டு. பேயை உலவவிட்டு மெல்ல மெல்ல ஒரு திகிலை உருவாக்கியிருக்கிறார் ராஜேஷ்குமார். பெண் ஒருத்தி, திடீரென, காலம், தூரம் கடந்த நிகழ்ச்சிகளை அறிந்து சொல்லும் ஆற்றலைப் பெற, அது அவள் குடும்ப வாழ்க்கையை எப்படியெல்லாம் பாதிக்கிறது? அவள் மீண்டும் எப்படி, அந்த ஆற்றலை இழந்து இயல்பான பெண்ணாகிறாள் என்பதையெல்லாம் ஜே.எம். சாலி தனது மூன்றாவது கணையில் காட்டுகிறார். இவை திகில் என்ற சுவையைச் சேர்த்துக் கொண்டிருப்பவை என்பதைத் தவிர, இவையும் பொழுதுபோக்கு நாவல்கள் என்றே கூறுவது தவறாகாது.

**நடைச் சித்திரம்**

நாவல் என்பதற்குத் திறனாய்வாளர்கள் கூறும் இலக்கணத்தைப் பொருத்திப் பார்த்தால் அந்தச் சட்டத்திற்குள் பொருந்தாத நடைச்சித்திரங்கள் இரண்டும் இந்த 94இல் அடங்கியுள. ஒற்றன், மகா ஒற்றன் என்ற இரு நாவல்களை எழுதிய வெளி நாட்டு நாவலாசிரியர், இருவருடன் தான் அயோவா நகரத்தில் கழித்த நாட்களின் நினைவுக் குறிப்புக்களின் தொகுப்பை அசோகமித்திரன் இரு ஒற்றர்கள் ஆக்கியிருக்கிறார். உலகம் சுற்றிய மூவர் என்பது சாவியின் நகைச்சுவைத் தொடர். எனவே இவையும் ஆழ்ந்த சிந்தனைக்குத் தூண்டுகோலாக அமையாத பொழுது போக்கு வகையைச் சேர்ந்தவையே.

**அறிவியல்**

"தன் மன வளர்ச்சிக்காக ஒருவன் நாவல்களைப் படிக்கிறான் என்றால், கேட்கும் யாரும் நகைப்பர். இருந்தபோதிலும் நாவல் படிப்பதனால் ஒருவன் பெறும் மன மகிழ்ச்சியின் வாயிலாக அவன் மனம் வளர்கிறது என்பது உண்மை"[1] என்பார் ஊரீசு எனும் திறனாய்வாளர். அத்தகைய மன வளர்ச்சியை உருவாக்கும் அடித்தளம் எதுவும் இதுகாறும் பார்த்த நாவல்களில் இல்லை.

---

1. "Though one may laugh at the idea of reading novels with the object of 'improving one's mind, the fact is that the mind is improved through the kind of enjoyment one gets from novel—reading" R.J. Rees An Introduction to English literature (2nd Edn 1968)— P. 130.

இனிப் பார்க்கப் போகும் நாவல்கள் நேரடியாகவோ, மறைமுகமாகவோ படிப்போர் சிந்தனையைத் தூண்டும் இயல்புடையவை. அறிவியல் புனை கதைகள் எனும் முயற்சி மேலை நாடுகளில் மிகுதியாக உளது. தமிழில் இப்போதுதான் ஆங்காங்கே இம்முயற்சி தலைகாட்டுகிறது.

தலையில் காயமெதுவும் இன்றி, உடலெல்லாம் தீக்காயம் ஏற்பட்டு இறக்கிறாள் ஒருத்தி. அதே மருத்துவமனையில், தலையில் காயம் பட்டதால் மூளை சேதமடைந்த ஒருத்தி சேர்க்கப் பெற்றிருக்கிறாள்.

இறந்தவளின் மூளையை இருப்பவளுக்குப்பொருத்தி அவளை உயிர்ப்பிப்பதாகக் குரும்பூர் குப்புசாமி செய்யும் அறிவியல் சார்ந்த கற்பனையை **தேவி ஸ்ரீதேவி** யில் சந்திக்கிறோம்.

இது உண்மையிலேயே முடியக் கூடியதா என்பது ஒருபுறம் இருக்க, தமிழ் நாவலாசிரியர் ஒருவர், கண் மாற்றும் சிகிச்சை, இதயமாற்று மருத்துவம் இவற்றைப் பார்த்து, அதே அடிப்படையில் மூளை மாற்றும் சிகிச்சையைக் கற்பனை செய்திருப்பது மகிழ்ச்சி தருவதாகவும், வரவேற்கத் தக்கதாகவும் அமைகிறது.

அறிவியலை, அழிவு வேலைகட்கு எப்படியெல்லாம் பயன்படுத்தலாம் என்ற உண்மை கலந்த கற்பனையைச் சொல்லு, **அவன் யார்?** எனும் நாவலில் காட்டுகின்றனர் கிருஷ்ண குரு. (கிருஷ்ண மூர்த்தி, குரு மூர்த்தி என்ற இருவரின் கைவண்ணமே இந்நாவல்). மேலோட்டமாகப் பார்த்தால் இந்நாவல் குற்றவியல் கருவுடையயதே. ஆனால், குற்றம் செய்பவன் தனி மனிதர்களைக் கொலை செய்யாமல், கொள்ளையடிக்காமல், ஒரு நாடு முழுவதையும் பொருளியல் சூழலில் நசித்துப் போகச் செய்யும் முயற்சியில் அறிவியலை எவ்வளவு தூரம் பயன்படுத்துகிறான் என்பது நம்மை மலைக்க வைக்கிறது.

இத்தகைய அறிவியல் புனைகதை முயற்சிகள் தமிழில் இன்னும் பெருக வேண்டும்.

### சமுதாயம்

சமுதாயக் கண்ணோட்டத்தோடு, சமுதாயத்திற்கும் தனி மனிதனுக்கும் இடையே உள்ள உறவு அல்லது முரண்பாட்டைமையக் கருவாகக்கொண்ட நாவல்கள் இந்த94இல் நான்குதான். அவற்றுள்இரண்டை எழுதியவர் ஜெயகாந்தன். அந்தஇரு நாவல்களையும் படிக்கும்போது, இவரைப்பற்றி, வெங்கட் சாமிநாதன் "...எதிலும், அவசரப் பத்திரிகை விளைச்சலில் கூட ஓர் ஆழ்ந்த

தனிப்பார்வை துலங்கச் செய்துவிடுகிறார்.''[2] என்று குறிப்பிடு வது எவ்வளவு பொருத்தம் எனத்தெரிகிறது. ஓ அமெரிக்கா! நாவலில், இந்நாட்டின் செல்வக் குடும்பங்களில் காணப்படும் திரைப்படப் பித்தையும், அமெரிக்க மோகத்தையும் சுட்டிக் காட்டி, அவற்றின் போலித்தன்மையைப் புரிய வைக்கிறார் ஜெயகாந்தன்.

இவருடையமற்றொருநாவல், இல்லாதவர்கள். இந்நாவலில் வறுமையாளர்களை இந்தச் சமுதாயம் எப்படி நடத்துகிறது? இயல்பில் நல்லவனான வறுமையாளன் சமுதாயத்தால் எப்படிக் குற்றவாளியாக்கப்படுகிறான்? என்பதை எல்லாம் எடுத்துக் காட்டுகிறார். சூழ்நிலையால் திருடனான டோனிக்கு இந் நாவலின் இறுதியில் திருந்தி வாழ வாய்ப்புத் தருகிறார் ஒருவர். ஆனால்அவனோ, ''இல்லாதவர்கள் திருடாமல் வாழமுடியாது'' எனக்கூறித் தன் வழியிலேயே சென்றுவிடுகிறான். இக்கூற்றுடன் இந்நாவல் முடிந்துபோவதால், இதற்கு ஆசிரியர் வேறு விளக்கம் எதுவும் கொடுக்காததால், இது சரியான கண்ணோட்டமா? இல்லையா? என்ற ஐயம் பலருக்கு எழலாம். ஆனால், இது எவ்வளவு சரியான கண்ணோட்டம்என்பதைச்சமுதாயக் கதைக் கரு உடைய ஏனைய இந் நாவல்களும் புலப்படுத்துகின்றன. இந்துமதியின் ஆரண்ய வாசம் நாவலின் கதைத்தலைவன் சந்துரு ஒரு வேலை கிடைக்காத பட்டதாரி. வறுமைச் சூழல் இல்லை யென்றாலும் வேலையின்றி, பிறர் வருவாயைச் சார்ந்து வாழும் சூழலில், மனமாறுபாடுகட்கு உள்ளாகி ஒருநாள் வீட்டை விட்டு ஓடிவிடுகிறான்அவன். கர்நாடகத்திற்கும் ஆந்திரத்திற்கும் இடையே ஓர் எல்லையோரச் சிற்றூரில் அவன் ஓர் இறையாற்ற லுடைய சாமியார் ஆக்கப்படுகிறான்.

மக்கள் இவனைச் சாமியாராக நம்பிப் பெருமளவில் பணத்தைக் காணிக்கையாகக் குவிக்கின்றனர். இவனை வைத்து அச்சிற்றூரைச் சேர்ந்தவர்கள் நன்றாகப் பிழைக் கின்றனர். இவனுக்குத் தன் குடும்பப்பற்றும், தான் ஏமாற்று வேலை செய்கிறோம் என்ற உறுத்தலும் வந்தபோது, சாமியார் வேடத்தைக் களைந்துவிட்டு, தன் குடும் பத்தோடு இணைய முயல்கிறான் இவன். ஆனால் இவனை வைத்துப் பிழைத்து வந்த அந்தச் சிற்றூரைச் சேர்ந்தோர் இவன் அங்கிருந்து போவதை விரும்பவில்லை. அவன் மீறித்

---

2. வெங்கட் சாமிநாதன்-பாலையும் வாழையும்—(முதற் பதிப்பு, 1976) ப. 154.

தப்ப முயலும்போது அந்தச் சிற்றூர் மக்களாலேயே கொல்லப் படுகிறான்.

ஏறத்தாழ இதே போன்ற சிக்கலைக் கருவாகக் கொண்டது தான் தாமரை செந்தூர் பாண்டியின் நீரலைகள்... நாவலும். உழைப்பாளி ஆன அல்போன்சு ஊராரின் அவசரப் புத்தியால் விரட்டப் படுகிறான். அருகிலுள்ள காட்டில் தங்கி வழிப்பறிக் காரனாக வாழ்கிறான். இறுதியில் திருந்தி வாழ முறப்பட்டு அண்மையிலுள்ள வேறொரு சிற்றூரில் தோட்ட வேலையில் சேர்கிறான். ஆனால், திருந்தி வாழும் அவனை, அவனது சொந்த ஊரார் தேடிக் கண்டுபிடித்து, அவனது பழைய குற் றங்கட்காக அடித்தே கொன்று விடுகின்றனர்.

இவ்விரு கதையின் தலைவர்களும் ஏதோ காரணத்தால் சமுதாயத்தை ஏமாற்றுபவர்களாக, எதிர்ப்பவர்களாகத் தடம் மாறியவர்கள். அவ்வாறு தடம் மாறியவன்தான் டோனியும். இவர்கள் திருந்தி வாழ முற்படும்போது, அதனை அனுமதிக்காத சமுதாயம் இவர்களைக் கொலை செய்கிறது. இதுதான் டோனி கூறும் ''இல்லாதவர்கள் திருடாமல் வாழ முடியாது'' என்ற கூற்றின் உட்பொருள். சமுதாயத்தால் புறக்கணிக்கப் பெற்ற வர்கள் தடம் மாறுகிறார்கள். அவர்கள் திருந்த நினைத்தாலும் சமுதாயம் ஏற்பதுமில்லை. வழிவிடுவதும் இல்லை.

இவை, தனி மனிதர்கள் தொடர்ந்து தவறு செய்ய வேண்டும் எனக் கூறும் நாவல்களல்ல; சமுதாயம் தனி மனிதர் களைப் புறக்கணித்தால் அவர்கள் டோனிகளாக, சந்துருக் களாக, அல்போன்சுகளாக உருவெடுப்பர் என எச்சரிக்கும் நாவல்கள்.

### முதியோர் காதல்

முதியோர் காதலைக் கருவாகக் கொண்ட நாவல்கள் இரண்டு; பாலகுமாரனின் கல்யாண முருங்கையில் தன் இள வயதில் எல்லாம் மனம்போல வாழ்க்கை நடத்திய விஜி, தன் முப்பத்தாறாவது வயதில், தன் அலுவலகத்தில் அதிகாரியாகப் பணியாற்றும் ரங்காவைக் காதலித்து மணப்பதைக் காண் கிறோம்.

சுபாஷிணியின் சாயங்கால பூஜையில் வரும் கற்பகம் இள வயதிலேயே திருமணமானவள்; ஒரு பெண் குழந்தையைப் பெற்றவள்; கணவனால் கைவிடப்பட்டவள். மகளை வளர்த்து, அவள் இளம்பெண்ணாக இருக்கும்போது, ஏறத்தாழ ஒய்வு

பெறும் நிலையில் உள்ள கற்பகம், கோபால் என்ற முதியவரைக் காதலிக்கிறாள். இந்தக் காதலைக் கற்பகத்தின் மகள் லீலாவும் ஏற்க, கற்பகம் — கோபால் திருமணம் நடைபெறுவதாகச் சுபாஷிணி கதையை முடிப்பது தமிழிலக்கிய உலகில் புதுமை யானது; துணிச்சலானது.

காதல்

காதலைக் கதைக் கருவாகக் கொண்ட நாவல்கள் மொத்தம் எட்டு. இந்த எட்டு நாவல்களுள் ஒரே ஒரு நாவலில்தான் காதலை இரு தரப்புப் பெற்றோரும் ஏற்றுத் திருமண ஏற்பாட் டைச் செய்கிறார்கள். ஆனால், அந்த நாவலில் திருமணத் திற்கு முன் சாலை விபத்தொன்றில் காதலன் இறந்துவிடுகிறான். அலைபாயுதே நெஞ்சம் எனும் இந்த நாவலை இந்துமதி ஏன் இவ்வாறு முடித்தார் என்பது புரியாத புதிராக இருக்கிறது. முடிவு பொருத்தமற்றதாகவும், தேவையற்றதாகவும், நிறை வளிக்காததாகவும் அமைந்துளது.

எஞ்சிய ஏழு நாவல்களிலும் காதல் இரு தரப்புப் பெற்றோ ராலும், அல்லது ஒரு தரப்புப் பெற்றோரால், அல்லது குடும் பத்தாரால் எதிர்க்கப்படுகிறது. அந்த எதிர்ப்பை மீறி, பிளஸ் டூ பயிலும் இளம் காதலர்கள் வீட்டைவிட்டு ஓடி, ஆதிவாசிகள் வாழும் மலைப்பகுதியில் திருமணமின்றியே இணைந்து வாழும் முடிவைக் காட்டுகிறார் சவீதா, காதல் விளையாட்டு எனும் தன் நாவலில்.

கோமகளின் நிலவில் மலராத மலர்களிலும், ராஜேஷ்குமாரின் இந்து சிரிக்கிறாளிலும், பெண் வீட்டாரின் எதிர்ப்புடன் திரு மணம் நடந்தாலும் திருமணத்திற்குப் பின் அவர்கள் அதனை ஏற்றுக் கொண்டு விடும் முடிவைப் பார்க்கிறோம்.

இந்துமதியின் வசந்த கால நதிகளில், பெண் வீட்டார் எதிர்ப் புடன் திருமணம் நடக்கிறது. பின்னரும் அவர்கள் அதனை ஏற்க வில்லை. கணவன் ஒரு திருடன் என்பது திருமணம் முடிந்து ஆறாண்டுகட்குப் பிறகே மனைவிக்குத் தெரிய வருகிறது. ஆனாலும் அவனைப் பிரிய முடியாத அளவு அவளது காதல் உறுதியானது என்பதே இந்துமதி இந்நாவலில் வலியுறுத்தும் செய்தியாக அமைகிறது. எஞ்சிய மூன்று நாவல்களிலும், பெண் வீட்டுக் குடும்பத்தாரின் எதிர்ப்பால் காதல், திருமணத்தில் முடியாத நிலையைப் பார்க்கிறோம். விமலா ரமணியின் சிவப்பு அலகுகளில் காதலியின் தந்தை ஆள்வைத்துக் காதலனின் காலை ஒடித்து விடுகிறார்: பின் தன் மகளுக்குவேறொரிடத்தில்

திருமணமும் செய்து விடுகிறார். ஆனால் இதய நோயாளியான மாப்பிள்ளை, இவர்கள் உரிய மருத்துவத்திற்கு ஏற்பாடு செய்யு முன்பே இறந்து விடுகிறான்.

அனுராதா ரமணனின் வாசல் வரை வந்தவளில் காதலியின் அண்ணன்மார் ஆள் வைத்துக் காதலனைக் கொலை செய்ய எடுக்கும் முயற்சியில், தற்செயலாகக் காதலனின் நண்பனொருவன் சிக்கிக் கொண்டு இறக்கிறான். ஆனாலும், திருமணம் நடைபெறவில்லை.

ராஜேஷ் குமாரின் ''மதுபாலாவின் மறுபக்கம்'' எனும் நாவல் இவ்வகையில் அமைந்த சிறந்த, வித்தியாசமான நாவல். மதுபாலாவின் காதலனை, அவள் கண்ணெதிரேயே, தற்செயலாக நடப்பது போல் அடியாட்கள் வாயிலாகக் கொலை செய்கிறார், அவள் தந்தை. உண்மையைத் தெரிந்து கொண்ட மதுபாலா, பைத்தியம் போல நடித்து, தன் தந்தையின் மன அமைதியையும், தன் குடும்பப் பெயரையும் கெடுக்கிறாள். தக்க சமயம் வந்ததும், தனக்கு உண்மை தெரியுமென்பதையும், தான் இதுவரை நடித்ததற்கான காரணத்தையும் தந்தையிடம் கூறி விட்டுத் தற்கொலை செய்து கொள்கிறாள்.

காதலின் மென்மையையும், அதே நேரம் உறுதியையும், இலக்கியச் சூழலில் காட்டுபவை இந்த எட்டு நாவல்களும்.

**உளவியல்**

உளவியல் சிக்கல்களைக் கதைக் கருவாகக் கொண்ட நாவல்கள் பத்து. அவற்றுள் மூன்று நாவல்களை எழுதியவர்கள் பெண் நாவலாசிரியர்கள். எஞ்சிய ஏழு நாவல்கள் நான்கு ஆண் நாவலாசிரியர்களால் எழுதப் பெற்றுள. ராஜேந்திரகுமார் மட்டும் நான்கு உளவியல் நாவல்களை எழுதியுளார்.

''ஒரு பாத்திரம் அல்லது பல பாத்திரங்களின் மனத்தில், தன்னுணர்வு நிலையில், நிகழ்ச்சிகள் பதிவு செய்யப்படுவதாக எழுதப்படும் புனைகதையே உளவியல் நாவல். இவ்வகை நாவல்களில் மன உணர்வுகளின் செயல்கள், புறச் செயல்களுக்கு சமமான அளவு, அல்லது அவற்றைவிடக் கூடுதலான அளவு அழுத்தம் பெறும்.

இவ்வகையான ஆக்க நோக்கு ஆய்வு நாவல்களில் மிகச்சிறிய அளவிலேயே கதைப் பின்னல் இடம்பெறும். இருக்கும் நிகழ்ச்சிகள், அவை நிகழ்ந்த கால முறைப்படி எடுத்துச்சொல்லப் படுவதில்லை. மாறாக, அவை பாத்திரங்களின் எண்ணத்

தொடர்பில் எவ்வரிசை முறையில் இடம் பெறுகின்றனவோ, அவ்வரிசை முறையிலேயே சொல்லப்படுகின்றன.''[3] என உளவியல் நாவலுக்கு இலக்கணம் வகுக்கிறது பிரித்தானியக் கலைக் களஞ்சியம்.

முழுக்க முழுக்க இவ்விலக்கணத்திற்குப் பொருந்துபவையாக அமைபவை இந்தப் பத்து நாவல்களுள் இரு நாவல்கள். அவை ஆதவனின் பெண், தோழி, தலைவியும், ஆர். சூடாமணியின், இறுதியின் நிழலில்...நாவலும் ஆகும். லலிதா என்ற பெண், ஓர் அலுவலகத்தில் வேலைக்கு அமர்ந்து, அங்கே தொழிற் சங்கத் தலைவனாக இருந்த செல்வராஜிற்குத் தோழியாகி, இறுதியில் அவளே தொழிற்சங்கத் தலைவியாகப் பரிணமிப்பது வரை நிகழும்அவளது மனஉணர்வு வளர்ச்சிகளையும் மாற்றங்களையும் காட்டுகிறார் ஆதவன்.

அங்கயற்கண்ணிக்கு ஐம்பது வயதிற்குப் பிறகு இதய அறுவைக்கு நாள் குறிக்கப்பெறுகிறது. அறுவைக்குப்பின் பிழைப்பது, கேள்விக்குறியாக இருக்கும் சூழலில் அவள் மன நிலையும், அவளைச் சுற்றியுள்ளோர் மனநிலையும் எப்படி இயங்குகின்றன என்பதைச் சித்தரிக்கிறார் ஆர். சூடாமணி. உளவியல் நாவல் என்ற முயற்சியில், இந்நாவல் குறிப்பிடத்தக்க ஒன்று என்பதில் ஐயமில்லை.

அன்புக்கு ஏங்கும் உள்ளத்தை மையமாக வைத்து, அவ்வுள்ளத்தின் உரிமையாளர் குடும்பத்தில், அவரது ஏக்கத்தால் நிகழும் நிகழ்ச்சிகளை நாவல்கள் ஆக்கியுளர் உஷா சுப்ரமணியமும், ராஜேந்திரகுமாரும். முன்னவரின் வானத்து வேலிகளில் சுதீரையும், பின்னவரின் ஒத்தையிலே வாடி மெத்தையிலே சாய எனும் நாவலில் அரவிந்தையும் அன்புக்கு ஏங்கும் செல்வக் குடும்பப் பிள்ளைகளாகச் சந்திக்கிறோம்.

---

3. "Work of fiction in which events are registered subjectively in the mind of one or more characters and in which the processes of consciousness are of equal or greater interest than external events...In the introspective novel there is little plot. Events are not presented in chronological order but as they occur in the characters' thought associations."
Encyclopaedia Britannica Inc.—The New Encyclopaedia Britannica—Micropaedia vol. VIII (5th Edn. 1973-74)—p. 272.

இதே சிக்கலின் இன்னும் சிறிது கடுமையான வடிவத்தை மையமாகக் கொண்டது ராஜேந்திர குமாரின் ஒரு A பிரச்சினை. சுதாகர் என்ற இளைஞன் மீது வேறொருவரின் மனைவியான வைதேகி காட்டும் பாலுறவுத் தொடர்பற்ற, அதே நேரத்தில், முழுமையான உடைமையாக அவனைக் கொள்ளும் வகையிலான (Possessiveness) அன்புதான் இக்கதையில் ஒரு A பிரச்சினையாக அமைகிறது. இது தமிழிலக்கிய உலகிற்குப் புதியது.

தனிப்பட்ட மனநோய்களை மையமாகக்கொண்ட நாவல்கள் நான்கு. பாரனாய்டு, ஸ்கிஸோப்ரினியர் என்ற நோய்களால் கற்பனைத் துன்பங்களைச் சந்தித்து அதனாலேயே தற்கொலை செய்து கொள்ளும் சரசுவை மையமாக்கி, அனுராதா ரமணன் எழுதிய நாவல் தேவதைகள் தூங்குவதில்லை. இக்கதை உத்தி வகையில் குறிப்பிடத்தக்க நாவலாக அமைந்துளது. உண்மையில் சரசு மனநோயாளியா? அல்லது அவளது துன்பங்கள் உண்மையானவையா? என்பது குறித்துப் படிப்போர் எப்படி வேண்டுமானாலும் முடிவு செய்து கொள்ளத் தக்க வகையில் கதையை ஆசிரியர் சொல்லிச்சென்று முடித்திருப்பது பாராட்டத் தக்கது.

தன்னளவில் சாதுவாக இருந்து, ஆனால் எங்கேயாவது அநியாயம் நிகழ்வதைக் கண்டால், துடித்தெழுந்து, தானே நீதிபதியாகி, அநியாயக்காரர்கட்குத் தண்டனை வழங்கும் விசித்திரமான மனநோயுடைய அப்புவை மையமாகக் கொண்ட நாவல் பி. வி. ஆரின் குளிருக்கும் வெப்பம் உண்டு. இறுதியில் அந்த மனநோயின் விளைவாகவே தற்கொலை செய்து கொள்கிறான் அப்பு.

தூக்கத்தில் நடக்கும் இன்ஸ்பெக்டர் ராமையும், தன்னால் பல பெண்களோடு உறவு கொள்ள இயலவில்லையே என்ற ஏமாற்ற உணர்வு, மனநோயாக மாற, கொலைகாரனாகும் பிரபாகரனையும் மையமாகக் கொண்ட நாவல் ராஜேந்திர குமாரின் ''ஒரே நாள் கதை''

தன்னின மோகம் (Homosexuality) கொண்ட கௌதமை மையமாகவைத்து வாலி எழுதியிருக்கும் நாவல் ரிஷி. கௌதமை மணக்கும் ஸ்வப்னா, மனநோய் மருத்துவர் அம்பிகா மேனனின் துணையோடு, தன் கணவனின் நோயைக் குணப்படுத்தும் முறையைக் கலைநயத்தோடு, விரசமின்றி எழுதுகிறார் வாலி. இத்தகைய சிக்கல் தமிழிலக்கிய உலகில் மிகத் துணிச்சலாக இவரால் கையாளப் பெற்றிருக்கிறது.

தமிழிலக்கிய உலகிற்குப் புதுமையான ஒருசிக்கலை மையமாக்கிச் சில அந்தரங்க அவஸ்தைகளை எழுதியுள்ளார் ராஜேந்திர குமார். ஒரு பெண்ணை இரு ஆண்கள் மணப்பதென்றும், பகலில் ஒருவருடனும், இரவில் ஒருவருடனுமாக அப்பெண் தங்க வேண்டுமென்றும், பகலில் உடனுறைபவன் உடலால் அவளை மனைவியாக்கிக் கொள்வதில்லை என்றும் ஓர் உடன்பாட்டிற்கு, தொடர்புடைய மூவரும் வரும் சூழ்நிலையை ராஜேந்திரகுமார் உருவாக்கும்போது, ஒரு வித்தியாசமான கதையைச் சந்திக்கிற உணர்வு ஏற்படுகிறது. ஆனால், திருமணத்தன்று தான் யாரைக் காதலிக்கிறாளோ, அவனது தாலியை ஏற்றுக் கொண்டவுடன், மற்றவன் தாலி கட்டுமுன் இறக்கும் வண்ணம் நஞ்சருந்தி அப் பெண் இறப்பதாக நாவலாசிரியர் முடிக்கும்போது, வழக்கமான மரபுக் கதையாகவே இதுவும் அமைகிறது.

மொத்தத்தில் இந்த உளவியல் நாவல்கள் பத்தும், படிப் போர் சிந்தனைக்கு நல்ல வேலை கொடுக்கின்றன.

### பெண்கள்

பெண்கள் வாழ்வில் உண்டாகக்கூடிய சிக்கல்களை மையக் கருவாகக் கொண்ட நாவல்கள் இந்த 91இல் 20 ஆகும். அவற்றுள் 14 பெண் நாவலாசிரியர்களாலேயே எழுதப் பெற்றவை என்பது குறிப்பிடத் தக்க செய்தியாகும்.

பெண்ணின் பிறப்புச் சூழலே அவள் வாழ்வில் சிக்கலை உண்டாக்கலாம் என்பதைக் காட்டுகிறார் பி. வி. ஆர். காந்த லுக்கும் ருசி உண்டு நாவலில், தந்தை பெயர் உலகுக்குத் தெரியாத முறையில், திருமணமாகாத காந்திமதிக்குப் பிறந்த லோகேசுவரிக்குத் திருமணம் நிகழ்வது எவ்வளவு கடினம் என்பதை இந்நாவலில் காண்கிறோம். ஆனால், இறுதியில் முற்போக்குச் சிந்தனையுடைய, செல்வம் வாய்ந்த இளைஞன் திருவிக்ரமன் அவளை மணக்கிறான்.

பெண் பருவமடையும் நிலைக்குப் பிறகு அவள்ஆண்களோடு பழகுவதில் எவ்வளவு கவனமாக இருக்கவேண்டும் என்பதை லக்ஷ்மியின் அஞ்சனா புரிந்து கொண்டாள் தெளிவுபடுத்துகிறது.

குடும்பத்தினருக்காக உழைக்கும் பெண்ணை மையமாகக் கொண்டவை இரு நாவல்கள். சிறு வயதிலிருந்தே தனக்கெனக் குடும்பமெதுவும் இல்லாத சூழலில், தம்பிக்காகவும் தங்கைகட் காகவும், வாழ்நாள் முழுவதும் உழைத்து, அவர்கள் குடும்பங் களை எல்லாம் உருவாக்கிய அலமேலு, தன் அறுபதாவது வயதில், சர்க்கரை வியாதியையும், கண்ணில் திரையையும்

பெற்றவுடன் அவளது தம்பிக்கு அவள் எப்படிப் பாரமாகிப் போகிறாள் என்பதை சிவசங்கரியின் விமோசனம் விளக்கு கிறது.

சிறு திருட்டுக்களின் வாயிலாகக் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள் சாரு. அவள் வேலையி லமர்ந்து குடும்பத்தைக் காப்பதாக நம்பும் குடும்பத்தினர் அவளுக்கு மிகுந்த மதிப்புத் தருகின்றனர். தற்செயலாக அவள் செய்யாத விபசாரக் குற்றத்திற்காக அவள் கைது செய்யப் பெற்ற சூழலில், அதே குடும்பத்தினர் நன்றி மறந்து, அவளைத் தூற்றி, புறக்கணிக்கும் நிலையை அனுராதா ரமணனின் யாரை எதிர்பார்க்கிறாய், ராஜா?வில் காண்கிறோம்.

குடும்பத்திற்காக உழைக்கும் பெண்ணுக்குக் கிடைக்கும் மதிப்பு நிலையற்றது என்பதை இவ்விரு நாவல்களும் தெளிவு படுத்துகின்றன.

பெண்ணிற்குச் சரியான பாதுகாப்புத் தேவை. அவ்வாறு இல்லாத பெண்கள் மிகவும் தொல்லைப்படுவார்கள் என்பதை மையமாகக் கொண்ட நாவல்கள் மூன்று. தாயை இழந்து, ஆண்களை நம்பாமல் வளர்ந்து, தந்தையால் பொருளீட்டும் பொறியாகக் கருதப்படும் ஆனந்தி, ஒருவேலைக்குரிய நேர்முக தேர்விற்காகத் தன் தம்பியுடன் தனியே புதுதில்லிக்குப் புகை வண்டியில் பயணம் செய்கிறாள். அவளை விரும்பும் பாஸ்கர் தற்செயலாக அதே வண்டியில் வர, அவனை நம்ப அஞ் சிய ஆனந்தி, நம்பத் தகுதியற்ற சாந்தாவை நம்பி, அவளால் விபச்சாரியாக்கப்படும் வேதனை கதைதான் அனுராதா ரமண னின் மண்ணில் நீந்தும் மீன்கள்.

அக்காவையும் அவள் கணவனையும் தங்கட்குப் பாதுகாப் பாக நம்பி, உடன் வாழும் தங்கையர் இருவர்க்கும் வேலியாக அமைய வேண்டிய அத்தானே, பகையாக அமைவதால் ஒருத்தி தற்கொலை செய்து கொள்வதையும், ஒருத்தி வீட்டைவிட்டு ஓடிப் போவதையும் இந்துமதியின், தானங்கள் தவறும் நாவலில் காண்கிறோம்.

கணவனும் மாமனாரும் கூடச் சில குறிப்பிட்ட சூழலில் சரியான பாதுகாப்பாக அமைய இயலாது என்பதை விளக்கு கிறது வாஸந்தியின் பாதையோரத்து பூக்கள். கணவனுடைய சித்தியின் சூழ்ச்சியால், கணவனாலேயே கொடுமைப்படுத்தப் பெற்றவள் மீரா. ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொண்டு இணைந்து வாழத் தொடங்கும்போது, குறுக்கிடும்

கணவனின் மாமாவைக் கொலை செய்து விடுகிறாள் அவள். கொலைக் குற்றத்தால் மனம் பேதலித்து, ஊரை விட்டு ஓடி, டெல்லியில் $1\frac{1}{2}$ ஆண்டுகள், சலீம் எனும் முகமதியக் கிழவரொருவரின் பாதுகாப்பில் தெருப்பிச்சைக்காரியாக வாழ்கிறாள்.

சலீமின் இறப்பிற்குப் பின் மீராவிற்குப் பழைய நினைவுகள் திரும்ப, ஊருக்குச் செல்கிறாள். தன் கணவன் வேறு மணம் செய்து கொண்டிருப்பதையும், தன் வரவு குறித்து மகிழாமல், தன்மீது அன்புகாட்டத் தயாராக இல்லாமல், இரக்கம் பாராட்ட மட்டுமே தயாராக இருப்பதையும் காண்கிறாள். இதே $1\frac{1}{2}$ ஆண்டுப் பிரிவு தன்கணவனுக்கு நேர்ந்து, அவன் திரும்பி வந்திருந்தால், தான் எப்படி வரவேற்று மகிழ்ந்திருப்போமென மீரா நினைத்துப் பார்ப்பது ஒரு நல்ல கேள்விக்குறி. ஆணுக்கும், பெண்ணுக்குமிடையே குடும்பத்திலும், சமுதாயத்திலும் காட்டப் பெறும் வேற்றுமைகள் இம்மூன்று நாவல்களிலும் அழுத்தமாக உணர்த்தப் பெறுகின்றன.

கற்பிழந்த பெண்ணை மையமாகக் கொண்ட நாவல்கள் மூன்று. அழகாபுரி அழகப்பனின் காத்திருக்கிறது கொலை எனும் நாவலில், ராதாவைக் கற்பழித்து விடுகிறான் ராமு. அவனைப் பழிவாங்கும் உணர்வை ராதாவின் மனத்தில் ஊட்டி, அவளைத் தயார் செய்கிறாள் பாரதி. எதிர்பாராமல் ராமு பாரதியை மணக்கிறான். நன்றி உணர்வால பழிவாங்கத் தயங்குகிறாள் ராதா. உண்மையறிந்த பாரதி, தானே ராமுவைச் சுட்டுக் கொன்று ராதாவுக்கு நியாயம் வழங்குகிறாள். கற்பழித்த கயவனை இவ்வாறு தண்டிக்கும் ஆசிரியர், கற்பிழந்த பெண்ணுக்கும் வாழ்வு கொடுக்கிறார். உண்மை தெரிந்த ராதாவின் காதலன் கண்ணன் அவளை மணக்கிறான்.

ஏறத்தாழ இதே போன்ற கதைக் கருவுடைய நாவல்தான் ஜோதிர்லதா கிரிஜாவின் வெகுளிப் பெண். இந்நாவலில் கயவர்கள் மூவரால் கற்பிழந்த தேவிக்கு, உண்மை தெரிந்தும், வாழ்வு கொடுக்க முன் வருகிறான், சிவன் என்ற முற்போக்கான இளைஞன்.

இவ்வகை நாவல்களிலேயே வித்தியாசமானது ரமணி சந்திரனின் அவள் ஒரு தேவதை. சக்தி என்ற பெண்ணை மணக்க விரும்பும் பணக்கார இளைஞன் சித்தார்த்தன். நேரடியான முயற்சிகள் வெற்றி பெறாத சூழலில், அவளைப் பலவந்தமாகக் கற்பழித்துவிட்டு, தானே அவளை மணக்கத் தயார் என அவள் தாயாரிடம் கூறுகிறான் சித்தார்த்தன். தாயின் வற்புறுத்தலால் மன இசைவின்றிச் சக்தி அவனை மணக்கிறாள். படிபபடி

யாக அவனது உண்மை அன்பை உணர்ந்து, உண்மையிலேயே அவனது மனைவியாகச் சக்தி ஆகும் சூழலை விளக்குகிறார் ஆசிரியர்.

கற்பிழந்த பெண்களின் துயரத்தையும், அவர்கட்கு வாழ்வு கொடுக்கப்பட வேண்டிய கட்டாயத்தையும் இந்த மூன்று நாவல்களும் விளக்குகின்றன.

திருமண வாழ்வில் மனச்சலனத்துக்கு ஆளாகும் பெண்ணை மையமாக வைத்து எழுதப்பெற்ற நாவல்கள் இரண்டு. ஜே.எம். சாலியின் கை படாத ரோஜாவில் வரும் வித்யா, தன் பள்ளித் தோழன் சந்துருவைச் சந்திக்கும்போது மனத்தளவில் சலனப்படு கிறாள். அதை அறிந்த அவள் கணவன் ரகுநாத் அவளை ஏறத் தாழ விடுதலை கொடுத்து அனுப்பிவிடுகிறார். மனச்சலனம்கூட குடும்பப் பெண்ணுக்கு உதவாது என்பது ஆசிரியர் வலியுறுத்தும் செய்தி.

மனத்தால் சலனமடைவதோடு நிற்காமல் கணவனுக்குத் துரோகம் செய்து, கணவனது ஊழியனோடு உடலுறவு கொள்ளும் பூமேனியை அவளது கணவனே கொன்றுவிடும் கதை தான் ராண்டார்கையின் நன்றி மீண்டும் கொல்வேன்.

கணவனால் துன்புறுத்தப்பெறும் பெண்ணை மையமாகக் கொண்ட நாவல்கள் இரண்டு. மனைவியைத் தேவையில்லாமல் ஐயப்பட்டு, அவளை அடித்து, உதைத்து, உடலளவில் துன்புறுத்துகிறான் ரோகிணியின் கணவன் ஆனந்த். இதனால், துணிவோடு கணவனை விட்டுவிட்டுத் தான் பிறந்த ஊருக்கு வருகிறாள் ரோகிணி, திருமணத்திற்கு முன் காதலித்த பிரசாத்தை ஊரார் ஆதரவுடன் மணக்கும் கதைதான் மகேந்திரனின் நினைவே...நினைவே...நினைவே...

உடலளவில் இல்லாமல் மனத்தளவில் மூர்த்தியால் துன்புறுத்தப்பெறும் சந்திராவைச் சிவசங்கரியின் மூக்கணாங் கயிறு நாவலில் சந்திக்கிறோம். மனைவியோடு நிறுத்திக்கொள் ளாமல் பல பெண்களோடு உறவுகொண்டு, மனைவியை அடிமை போல நடத்துகிறான் மூர்த்தி. பிள்ளைகள் கல்லூரி செல்லும் அளவு வளர்ந்துவிட்ட சூழலிலும் அவன் போக்கு மாறவில்லை. நீண்ட நாட்களாக வாய்ப்பை எதிர்பார்த்திருந்த சந்திரா, மூர்த்திக்கும் அவனுடைய அப்போதைய காதலியும், அலுவலகச் செயலருமான நளினிக்கும் தானே முன்னின்று திருமணம் செய்து வைக்கிறாள்? தனக்கும் மூர்த்திக்கும் இனிக் கணவன் மனைவி என்ற உறவில்லை என்றும், தன் பெயரில் உள்ள வீடு, சொத்துக் கள் இவை தனக்கும், தன் பிள்ளைகட்கும் போதுமெனறும், மூர்த்தி தன் ஊதியத்தை மட்டும் வைத்துக்கொணடு நளினி

யோடு வாழ வேண்டுமென்றும் அவள் கூறும்போது, துள்ளித் திரியும் முரட்டுக்காளை மூர்த்திக்கு, திமிரும் சுயநலமும் உடைய நளினி சரியான மூக்கணாங்கயிறாக அமைவாளென்பதைச் சந்திரா கோடிட்டுக் காட்டுகிறாள். கணவனுடைய நடத்தைக்கு முற்றுப்புள்ளி வைக்க சந்திரா கண்ட தீர்வும், அதனைச் செயற் படுத்திய அணுகுமுறையும் மிக வித்தியாசமானவை.

குழந்தைத் தொடர்பாகப்பெண் வாழ்வில் ஏற்படும் சிக்கலை மையமாகக் கொண்ட நாவல்கள் ஆறு. தான்பெறாத, மூத்தாள் பெற்ற குழந்தையைச் சித்தியாக இருந்து வளர்க்கும் பெண் காட்டும் பாராமுகத்தால் அக்குழந்தை கெட்டுப்போவதை லக்ஷ்மியின் இரண்டாவது அம்மா கோமகளின் மலர்கள் நடுங்கு கின்றன ஆகிய நாவல்கள் காட்டுகின்றன.

ஒரு பெண்ணைப் பொறுத்தவரை, அவள் பெற்ற குழந்தை, அவளது மறுமணத்திற்கு எப்படித் தடையாகும் என்பதை உணர்த்துவது அனுராதா ரமணனின் வசந்த காலப் பூக்கள் கணவனை இழந்த டாக்டர் பாரதியை மணக்க முன் வரும் டாக்டர் ரவிச்சந்திரன் அவள் முதற்கணவன் வாயிலாகப்பெற்ற குழந்தையை விடுதியில் சேர்த்து விடவேண்டும் என்ற நிபந்தனையை முன் வைக்கிறான். இதனால் மனம் கசந்த பாரதி மறுமண எண்ணத்தை ஒதுக்கி விடுவதாகக் கதைமுடிகிறது. குழந்தையோடு வாழும் தந்தை, மறுமணம் செய்து கொள்ளும்போது அக்குழந்தையை வளர்க்கும் பொறுப்பே இரண்டாவது மனைவியின் முதற்பொறுப்பாகிறது. ஆனால் அதுவே பெண்ணின் நிலையானால் என்ற கேள்வியை எழுப்பு கிறது இந்நாவல்.

இதே கேள்வியை இன்னும் சிறிது வித்தியாசமாக எழுப்பு கிறார் எஸ். லட்சுமி சுப்ரமணியம் தன் அம்மா என்ற பெண் எனும் நாவலில். ரவியும், வித்யாவும் காதலர்கள். ஆனால் திருமணத்திற்கு முன்னால், ஓரிரவில் சில குண்டர்கள் வித்யாவைக் கற்பழித்துவிடுகின்றனர். அதனையறிந்தும் ரவி, அவளை மணக்கிறான். ஆனால், அந்தக் கற்பழிப்பு நிகழ்ச்சியால் வித்யா கருவுற்றிருக்கிறாள் என்ற உண்மை தெரியும்போது, கருவைக் கலைக்க வேண்டுமென்கிறான் ரவி. வித்யா உடன்படவில்லை. தந்தை வீடு சென்று, குழந்தை பெற்ற வித்யாவிடம், குழந்தையை ஆசிரமத்தில் விட்டு விட்டு வந்தால், அவளை ஏற்றுக்கொள்வதாக ரவி கூறுகிறான். அதற்கும் வித்யா உடன் படாமல், தனித்தே வாழ்வதாகக் கதை முடிகிறது. இக்கதையில் வித்யாவின் பிடிவாதம் ஓரளவு பொருளற்றதாகவே தெரிகிறது.

கொஞ்சமும் தொடர்பில்லாத யாரோ ஒருவனால், தன் மன விருப்பமும் இல்லாமல், உருவாக்கப்பட்ட கரு, ஒரு பெண் மனத்தில், ரவி போன்ற முற்போக்கு எண்ணங்களுடைய ஒருவனின் துணையையும் புறக்கணிக்குமளவு பிடிவாதத்தை ஏற்படுத்துமென்றால், அதனைத் தாய்மையுணர்வின் வலிமை எனக் கொள்ளலாமா? கொள்ள வேண்டும் என்பதே நாவலாசிரி யர் கருத்து.

குழந்தை பெறமுடியாத உடற்குறையுடைய பெண் அல்லது ஆணை மையமாகக்கொண்டு எழுதப்பெற்ற நாவல்கள் இரண்டு. மைத்ரேயி ஒருவனைக் காதலித்து, மணந்து, அவனால் கொடுமைப்படுத்தப் பெற்று, அவனை விட்டுவிட்டு ஓடிவிடு கிறாள். பின்னர் வேறொருவனால் கற்பழிக்கப்படுகிறாள். இதற்கெல்லாம் பிறகு ஒரு நல்ல குடும்பத்தின் ஆதரவில் தங்கி யிருக்கிறாள். அக்குடும்பத்தாருக்கு இவளது கதைமுழுமையாகத் தெரியும். அக்குடும்பத்தலைவி லலிதா, ஒரு குழந்தை பெற உடற் குறையுடையவள். எனவே அவளே முன்னின்று மைத்ரேயி யைத் தன்கணவர் சுவாமிக்கு மணமுடித்து வைக்கிறாள். சுவாமி வாயிலாக மைத்ரேயி ஓர் ஆண் மகவைப் பெறுகிறாள். இது ஹேமா ஆனந்த தீர்த்தனின் மூன்றாவது ஆண் நாவல்.

இங்கே உடற் குறையுடையவள் பெண். அவளைமணந்ததால் பாதிக்கப்பெற்றவன் ஆண். அப்போது தீர்வு மிக எளிமையாக அமைந்துவிடுகிறது. இதுவே மாறி இருந்தால்...? இவ்வினாவை எழுப்புகிறார் இந்துமதி தனது கண்கள் எங்கே? நெஞ்சமும் எங்கே? நாவலில்.

குழந்தை பெற முடியாத உடற் குறையுடைய சுகுமாரன் ராதிகாவைக் காதலித்தான். காதல் காலத்திலேயே ராதிகா விற்குக் குழந்தை ஆசை மிகுதி என்பதையும், தன் உடற்குறை யையும் சுகுமாரன் அறிவான். ஆனாலும் ராதிகாவிடம் உண்மை யைக் கூறாமல் அவளை மணக்கிறான். நான்காண்டுகட்குப் பிறகு தவிர்க்க இயலாத சூழலில் உண்மையை ஒப்புக்கொள் கிறான் அவன். ராதிகா சுகுமாரனை அளவு கடந்து வெறுக் கிறாள். வாழ்க்கை நரகமாகிறது.

வெறுப்பு மிகுந்த ஒரு சூழலில் சுகுமாரன், ராதிகாவிடம், "உனக்குக் குழந்தை வேண்டுமென்றால், யார் மூலம் வேண்டு மானாலும் பெற்றுக்கொள். எனக்குத் தடையில்லை" என்கி றான். அதை அப்படியே ஏற்றுச் செயற்படுத்தும் ராதிகா, சுகுமாரனின் நண்பன் ரகுவின் வாயிலாகக் கருவுறுகிறாள்.

இன்றையத் தமிழ்ச் சமுதாயத்தில் இது இயல்பான தீர்வு இல்லை என்ற உறுத்தல் நாவலாசிரியருக்கு ஏற்பட்டதால,

குழந்தைப் பேற்றின்போது ராதிகா இறந்து விட்டாளெனக் கதையை முடித்து, பிறந்த பெண் குழந்தையைச் சுகுமாரன், ரகு இருவரும் வளர்ப்பதாகக் குறிப்பிடுகிறார் அவர். ஒரே சிக்கல் ஆணுக்கு ஏற்பட்டால் தீர்வு எளிதாக இருப்பதையும், பெண்ணுக்கு ஏற்பட்டால் அவ்வளவு எளிதாக இல்லாததையும் இவ்விரு நாவல்களையும் ஒப்பு நோக்குவோர் நன்றாகஅறியலாம்

மொத்தத்தில் இந்த 20 நாவல்களும் பெண்கள் தொடர்பான சமுதாயச் சிக்கல்களைப் படிப்போர் மனத்தில் விதைத்து அவைபற்றிச் சிந்திக்க வைக்கின்றன.

## 3. முடிவுகள்

1982 ஆம் ஆண்டு ஒன்பது நிறுவனங்களின் வாயிலாகத் தமிழில் வெளியான மாத நாவல்கள் 101. அவற்றுள் புதியவை 98. அவற்றுள் இக்கட்டுரையில் திறனாயப் பெற்றவை 94. அவற்றுள் குற்றவியல் சார்ந்தவை (21), குடும்பக் கதைகள் (20) வரலாற்றுப் பின்னணி உடையவை (3), இயற்கையிறந்த ஆற்றல்களைப் பற்றியவை (2), நடைச்சித்திரமாக அமைந்தவை (2), ஆகிய 48 நாவல்களும் வெறும் பொழுதுபோக்கு நாவல்களே. அவற்றுள், புஷ்பா தங்கதுரையின் நாவல்களில் பால் உணர்வுக் காட்சிகளும், வர்ணனைகளும் வரம்பு மீறி அமைந்திருப்பது கண்டனத்துக்குரியது.

மேற்குறிப்பிட்ட 48 நாவல்கள் தவிர, மற்ற 46 நாவல்கள் பெருமளவோ, ஓரளவோ, நேரடியாகவோ, மறைமுகமாகவோ படிப்போர் சிந்தனையைத் தூண்டுபவை.

சமுதாயக் கண்ணோட்டத்தோடு எழுதப்பெற்ற நாவல்களுள் ஜெயகாந்தனின் நாவல்கள் குறிப்பிடத் தக்கவை.

முதியோர் காதலை மையமாகக் கொண்டு சுபாஷிணி எழுதியிருக்கும் சாயங்கால பூஜை துணிச்சலான புதிய முயற்சி.

காதலை மையக்கருவாகக் கொண்ட நாவல்களுள் ராஜேஷ்குமாரின் மதுபாலாவின் மறுபக்கம் நினைவில் நிற்கிறது.

உளவியல் நாவல் என்ற வடிவத்தில் ஆர். சூடாமணியின் இறுதியின் நிழலில்... எனும் நாவல் மறக்க முடியாதது.

ஒரு A பிரச்சினை, சில அந்தரங்க அவஸ்தைகள் ஆகிய இரு நாவல்களிலும் ராஜேந்திரகுமார் அறிமுகப்படுத்தும் சிக்கல்கள் தமிழிலக்கிய உலகிற்குப் புதியவை.

கதை சொல்லும் உத்தியால் பாராட்டைப் பெறுவது அனுராதா ரமணனின் தேவதைகள் தூங்குவதில்லை.

தன்னினமோகம் என்ற, தமிழிலக்கிய உலகிற்குப் புதிய சிக்கலைப் பயன்படுத்தி வாலி, விரசமின்றிச் சிறப்பாக எழுதியிருக்கும் நாவல் ரிஷி

ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்ற சமுதாயச் சூழலைச் சுட்டிக்காட்டும் படைப்புக்கள், வாஸந்தியின் பாதையோரத்துப் பூக்கள், அனுராதா ரமணனின் வசந்தகாலப் பூக்கள், இந்துமதியின் கண்கள் எங்கே? நெஞ்சமும் எங்கே? ஆகியவை.

வழக்கமான சிக்கலுக்குப் புதிய அணுகு முறையில் வித்தியாசமான தீர்வு காணும் நாவல் சிவசங்கரியின் மூக்கணாங் கயிறு.

# 2. குறும் - புதினம்

—இராம. குருநாதன்

82—இல் வெளிவந்த குறும்—புதினங்கள் வளர் மாற்றம், சிதை மாற்றம் என்ற இரண்டு நிகழ்ச்சிகள் சேர்ந்த வளர்சிதை மாற்றங்களைக் காட்டுகின்றன. இரண்டு கோணங்களிலும் இலக்கியத்தை இயக்க வைத்துள்ளனர் இன்றைய எழுத்தாளர்கள். 82—இல் குறும்—புதினக் குழந்தைகளைச் சில இதழ்கள் கருத்தோடு காத்து அவற்றின் வளர்ச்சிக்குப் பாடுபட்டுள்ளதைப் பெருமையோடு குறிப்பிட வேண்டும்.

*இத்தனை படிக்கிறீங்களே! எழுதறது உண்டா?*

*'இருக்கிற ஒட்டகங்கள் போறாதா'*

*'ஒட்டகமா?'*

'ஒட்டகம் பார்த்திருக்கிறீர்களா'. மிருக ஜாதியிலேயே அழகான கழுத்து அதுக்குத்தான். யானை மாதிரி இருக்கிற இடம் தெரியாமல், சிங்கம் மாதிரி புதராக மண்டாமல்; முழுநீளத்துக்கு வழுவழு கழுத்து. கழுத்து மட்டுமல்ல. இரண்டு ஜோடி புஜம் ........தனித்தனியாப் பார்த்தா ஒவ்வொரு அங்குலமும் அழகா இருக்கும்...எல்லாம் ஒட்டு மொத்தமா சேர்ந்து ஒட்டகமா எழுந்து நிற்கிறபோது குமட்டிக் கொண்டு வரும். இத்தனை அவலட்சணமா ஒரு பிறவின்னு தோணும். அப்படித் தானே இருக்கு தமிழிலே எழுத்து இன்னிக்கு. வார்த்தையைப் புரட்டிப் புரட்டிக் கவிதையாகக் கோர்க்கிறார்கள். ஒரு தரம் படிச்சா பிரமிப்பாக இருக்கிறகு. ஆன்ா காலிக் குடுக்கை. இன்னொரு பக்கம் சந்நியாசம். அன்னிய மாதர்னு தலைய பிச்சுக்கிற தத்துவங்களை எழுதியிருக்கிறாங்க, ஆனா பாஷை நெருடுகிறது...தமிழிலே ஒட்டு மொத்தமாகப் பார்த்தா ஒட்டகம்தான். நடக்கிற பூமி பாலைவனமா வெறிச்சிருந்தா, இருக்கிற ஜீவன் ஒட்டகமாகத் தான் இருக்கும்.

## எழுந்திரு, பறந்து (மாலன்)

I

இலக்கிய மனம் படைத்தவர்கள் சொற் சிற்பிகள். ஒரு சிற்பத்தின் நெளிவு சுளிவுகளைச் செதுக்கிச்செப்பமிடும் சிற்பியை விடச்சொற் சிற்பியின் சிந்தனையில் காணப்படும் செப்பம் மெருகோடு அமைய வேண்டும்.

உருவத்தில் காட்டப்படும் அருமையைக் காட்டிலும், எண்ணத்தில் வடிக்கும் திறமை வல்லமை உடையது. அருமைப்பாடு இரண்டிலும் துலங்கும் என்றாலும், முன்னைய ஆற்றலை விடப் பின்னைய ஆற்றல் சிறந்து விளங்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பை இலக்கியவாதியிடம் காண்கிறோம். நடராச உருவைப் படைத்தவனும் மனிதன்தான். அதைப் பாடலில் தீட்டிக் காட்டியவனும் மனிதன்தான். நடராச உருவைக் கண்டதுமே அதில் மயங்கி 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று பாடிய சொற் சிற்பியின் உணர்வு சிந்திக்கத் தூண்டுகிறது. கண்ணால் கண்டதை நெஞ்சில் ஊன்றி எண்ணமாக எழுத்தில் வடிக்கும் இலக்கியவாதிகள், சிறந்த படைப்பாளர்களே!

மனிதப்பிறவியையும், மாநிலத்தையும்எழுத்தால், எண்ணத்தால் இயக்கிவைக்கும் வல்லமை இலக்கியவாதிகளுக்குண்டு.

மனிதப்பிறவி கொண்ட இந்தமாநிலத்தில் காணும் பொருள்களும், காணாப் பொருள்களும் எழுத்தாளனின் கண்களில் குடி புகுந்து விடுகின்றன. இன்னவற்றைப் பொருளாகக் கொண்டு அதற்குக் கலைவடிவம் தரலாம் என்று அவன்எண்ணும் பொழுது பொருள் விரிவடைகிறது; பார்வை துலக்கமாகிறது; நெஞ்சம் ஒன்றிவிடுகிறது. எழுதுகோல் தாளில் பதிகிறது; கலையானது பக்கங்களில் 'ஒளிச் சேர்க்கை' யாகப் பதிவாகிறது. வளர்சிதை மாற்றங்கள் அறிவியலில் உள்ளன. இலக்கியத்திலும் வளர்சிதை மாற்றங்கள் உண்டு.

வளர்மாற்றத்தில் கருத்துச் சேமிப்பு உண்டு; சிதை மாற்றத்திலோ கருத்துச் சிதைவது மட்டுமன்றி, இலக்கியப் பயனும் வெளியேறிவிடுகிறது. எழுதுவோரின் உழைப்பும் வீணாகிறது. எனவே, இலக்கிய வளர் மாற்றம் ஓர் ஆக்க சக்தி; சிதை மாற்றமோ ஓர் அழிவு நிகழ்ச்சி. ஒன்று, இலக்கிய ஆன்மாவை உயிர்ப்போடு உலவச் செய்கிறது. மற்றொன்று இலக்கிய உயிர்ப்பின் பிறழ்ச்சிக்குக் காரணமாகிவிடுகிறது.

82-இல் வெளிவந்த குறும்-புதினங்கள் வளர்மாற்றம், சிதை மாற்றம் என்ற இரண்டுநிகழ்ச்சிகள் சேர்ந்த வளர்சிதை மாற்றங் களைக் காட்டுகின்றன. இரண்டுகோணங்களிலும் இலக்கியத்தை இயங்க வைத்துள்ளனர் இன்றைய எழுத்தாளர்கள்.

II

இருபதாம் நூற்றாண்டு இலக்கியக் கலை வடிவங்களில் புதினமும், குறும் புதினமும் ஒன்றையொன்று கைக்கோத்து உலா வருகின்றன. இவ்விரண்டிற்கும் உள்ள பக்க வரையறை எல்லை கள் நம்மை மயக்குவன. புதினத்திற்கு உள்ள கருத்துப் பரிமாற்றம் குறும் புதினத்திலும் படையல் பொருளாகிறது. குறும் புதினத்தை எந்த இடத்தில் ஆசிரியர் முடிக்க நினைக் கின்றாரோ அதுவே அக்குறும் புதினத்தின் எல்லை ஆகிவிடுகிறது போலும்! கொடு கொட்டியாட்டம் என்ற கதையில், கதை முடிந்த பின்னரும், 'பின்னுரை' என்ற ஒன்றில், கதையின் விரிவஞ்சி நிறுத்தி விட்டதாகக் கூறுகிறார் அதன் ஆசிரியர்.

சிறுகதைக்கும், புதினத்திற்கும் இடையே பின்னப்படும் ஒரு நெசவுப்பாலமே குறும் புதினம் என்பதை நம்முடைய நிறைவுக் காக இலக்கணமாகக் கொள்ள வேண்டியுள்ளது. புதினத்திற் குரிய நிகழ்ச்சிகள் ஓரளவு சுருங்கிய அளவிலும், சிறுகதைக்குரிய ஒருமைப் பண்பு ஓரளவு போற்றப்படுவதிலும் குறும் புதினம் அடங்கி விடுகிறது; சிறு கதைக்குரிய செறிவுத்தன்மை குறைந்து, புதினத்திற்குரிய நெகிழ்ச்சியில் தன்னைக் காட்டிக் கொள்கிறது. உருவத்தில் தோன்றும் கனபரிமானங்களை விட, உள்ளடக் கத்தில் அமையும் உணர்வாழத்தின் கனபரிமானங்களே, ஒரு குறும்புதினத்தைச் சிறப்பானதாகச் செய்யும் என்பதை உறுதிப் படுத்தும் வகையில், 82இல் சில குறும்புதினங்கள் அமைந் துள்ளதை வரவேற்க வேண்டும். இதில் கணையாழியின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது.

82இல் குறும் புதினக் குழந்தைகளைச் சில இதழ்கள் கருத் தோடு காத்து அவற்றின் வளர்ச்சிக்குப் பாடுபட்டுள்ளதை பெருமையோடு குறிப்பிட வேண்டும். கணையாழி, கலைமகள், அமுதசுரபி, மங்கையர் மலர் ஆகியவற்றில் குறும் புதினங்கள் அதிகம் இடம் பெற்றுள்ளன. கல்கி, தாமரை, குங்குமம் ஆகியவை ஓரிரு குறும் புதினங்களை வெளியிட்டுள்ளன.

இன்னும் ஒரு நூற்றாண்டுக்குச் சமூகத்தின் விடியலுக் கான வெளிச்சத்தை எதிர்நோக்கும் விளைவுகளைக் காட்டி விடக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டே சில பழைமைப் போக்கில் கட்டுண்ட இதழ்கள் கூட, ஓரளவு

சமூகத்தைப் புரிந்து இனங்கண்டு கொண்டு எழுதப் பாடு பட்டுள்ளன. அதே சமயம் சமுதாய அமைப்பையும், நெறி முறையையும் புரிந்து கொண்டு, எழுதுவதாகப் பாசாங்கு செய்யும் வேடதாரி இதழ்களையும் நன்றாகவே இனங் காண முடிகிறது.

மனித அவலமும், சமூகத்தின் மேல் அவநம்பிக்கையும் கொண்டு எழுதும் ஒரு கூட்டமும் நம்மிடையே உண்டு என உணர்கிறோம். நிழல்களைப் பிடித்து 'நிச' வேடத்திற்கு அவற்றைத் தயாராக்கிக் கொண்டிருக்கும் இதழ்கள் நம் மிடையே நிறைய உள்ளன.

வக்கரித்துப் போன வாழ்க்கை வேடிக்கையின் காம விளையாட்டில் களித்து, அதனையே உணர்வாகவும், உணவா கவும் எழுதிப் பசி தீர்த்துக் கொள்ளும் சில எழுத்தாளர்களை நம்மை அறியாமலேயே ஒதுக்க வேண்டிய கால கட்டம் வந்து விட்டதைப் புரிந்து கொள்கிறோம்.

III

82இல் வெளிவந்த குறும் புதினங்கள் சில பரிசுக் குறும் புதினங்களாகும். கலைமகள் ஆண்டுதோறும் குறும் புதினப் போட்டி நடத்தி வருவதைப் போல, கணையாழி இதழ் 82முதல் குறும் புதினப்போட்டி நடத்தி வருவது குறும் புதின வளர்ச்சிக்கு வாயில்.

பரிசுகள் எப்போதுமே விவாதத்திற்குரியதாகிவிடுவது இயல்பு. படிப்போரின் தீர்மானங்கள், பரிசளிக்கப்படுவன வற்றோடு பெரும்பாலும் ஒத்துப் போவதில்லை. தங்களுக்கென உள்ள 'பத்திரிக்கைத் தர்மங்களை' எண்ணிப் பரிசளிப்பது ஒரு வகை. கலைமகள் இது தொடர்பாக ஒரு மரபையே பின்பற்றி வந்துள்ளது. தன்னிலையில் ஒரு கொள்கைப் பிடிப்பைக் கொண்டு 'கற்பொழுக்கம்' காத்து வருவதாகவே அதனை இங்குக் குறிப்பிடலாம்.

கணையாழியின் குறும் புதினப் போட்டிகளை இன்னும் பொறுத்திருந்துதான் அணுக வேண்டும். அது தனக்குரிய 'தகுதிகளை'த் தாண்டி வெளியே வந்ததில்லை. இதுவே அதன் தனித் தன்மையாகக் கூட இருக்கலாம்! குறும் புதினப் போட்டி நடத்திவருவது அதனை மேலும் ஒருபடி உயர்த்தியுள்ளது; இலக்கியத் தரத்திற்கு ஏணிப் படியென அதன் வளர்ச்சியைச் சுட்டலாம்.

குறும் புதினங்களை வெளியிடுவதில் கணையாழியையும், மற்ற இதழ்களையும் ஒன்றெனக் கருதலாகாது. முன்னணி எழுத்

தாளர் பலரும் எழுதிவரும் 'பிரபல' இதழ்களின் நோக்கம் வேறு. தனக்கெனத் தனியான பாணியில் இளைஞர் சிலரை ஊக்கு விக்கும் நோக்கில், குறும் புதினப் போட்டியை நடத்தும் கணை யாழியின் நோக்கம் வேறு. இன்னும் இவற்றை வேறுபடுத்திக் காண பக்க வரையறைகளே போதுமானது. கலைமகள் பதினைந்து முதல் இருபது பக்கங்களைக் குறும் புதினத்திற்கென ஒதுக்கும். கணையாழியோ முப்பது பக்கங்களிலிருந்து ஐம்பது பக்கங்களில் குறும் புதினங்களை வெளியிட்டுள்ளது.

IV

குறும் புதினங்களில் பல்வேறு பொருள்கள் கதைப்பொருளாகி யுள்ளதை 84 இதழ்கள் காட்டுகின்றன. குடும்பச் சிக்கலே அடிப் படைக் கதைப் பொருளாக அமைந்துள்ளது. இதோ ஒரு சாவித்திரி, விடுதலை, மழை, சீதை இல்லாத ராமாயணம், தீக்குள் விரலை வைத்து, சின்னஞ்சிறு வயதில், கூவ முடியாத குயில்கள் சிநேகிதி முதலிய கதைகள் அத்தகைய கதைப் பொருளை மைய மாகக் கொண்டவை.

கணவன், மனைவி ஆகிய இருவரிடையே நிகழும் காதல், சகிப்புத்தன்மை, மனவேறுபாடு, ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளுதல் ஆகிய நிகழ்ச்சிகளை ஊமைக்குயில், சில மாறு வேடங்கள், பெரியவர்கள், அகழி, ஒன்றும ஒன்றும் ஒன்று, ஜீவநதி கள் கோடைமேகங்கள் முதலான கதைகளில் காண்கிறோம். மற்றும் வாழ்வெனும் ஊஞ்சல், பச்சைக்கல் பரதேவதை, ஜோசப் பாதிரியார் ஆகிய கதைகளும் இவற்றில் அடங்கும்.

குடும்பம் காதல் துறவு என்ற நிலையில் சற்றே மாறுபட்ட கதைகளைப் வெண்முகில் பெய்த தண்மழை, முழு நிலவில் இரு பைத்தியங்கள், விடுதலை, ஒருஜோடிச் சலங்கைகள் ஆகிய குறும் புதினங்களில் காணலாம்.

கொடு கொட்டியாட்டம், ஸ்காட் ஒளித்த கடிதம், இரவல் தாய் நாடு, கழுகு அழுதது, எழுந்திரு, பறந்து முதலிய கதைகள் வழக்க மான பாணியில் இருந்து மாறுபட்ட வரவேற்கப்பட வேண்டிய (இவை மட்டுமே வரவேற்பு என்ற சொல்லிற்கு வரம்பு கட்டி விடாது) கதைகளாக ஏற்றுக்கொள்ளலாம். இவைஒவ்வொன்றும் ஒவ்வொரு கோணத்தில் தத்தம் தனித் தன்மைகளைக் காட்டுவன.

கதைகூறும் பண்பாட்டுச் சிதைவிலிருந்து தம்மைப் பாதுகாப் பாகவே வெளியேற்றிக்கொண்ட இந்த 'வரவேற்புக் கதை களில்போலி வசந்தத்திற்கு வாழ்த்துக்கூறும் தடயங்

களைக் காண முடியாது; நினைவின் தடயங்களிலிருந்து தேய்ந்து விடாதபடி இவை மனக் கண்ணில் பயணம் செய்கின்றன.

சமுதாய உறவுகளையும், சமுதாய மதிப்பீடுகளையும், சமுதாய சீர்கேடுகளையும் சரியாக எடைபோடும் காரணத்தால் துலாக்கோலில் இவற்றின் கணபரிமாணங்கள் தாழ்ந்து விடுகின்றன. அதிக எடையுள்ளது தட்டில் தாழத்தானே செய்யும்! இவற்றின் உள்ளடக்கத்தில் சொல்லப்பட்டிருப்பன கருத்தின் கணபரிமானங்கள்.

வாழ்க்கையின் நெறிகளை'நீற்றுப்போன' பார்வையில் பார்க்காமல், ஒரு விடியலை நோக்கிக் காத்திருக்கும் பாதையில் பயணத்தைத் தொடர்கிறோம் என்ற என்ற உணர்வே நம்முன் எழுகிறது.

'வரவேற்புக்' கதைகளில் ஒரு சிலவற்றைப் படித்தவுடனே நம்நெஞ்சங்களில் சிலுவை அறையப்பட்டது போன்ற உணர்வு. சிலுவை அறையப்பட்ட பின்னர் குருதி வழிபடுகிறதே என்று ஆன்மா கவலைப்படுவதில்லை.

சமுதாயத்தில் புரையோடி விட்ட புண்களைக் காட்டுவதையே நோக்கமாகக் கொண்டுள்ளனர் சிலர். புண்களைப் போக்க மருத்துவர்களைத்தான் காணோம்! மருத்துவரைக் காட்டிலும் நோயை கனங்குறித்துச் சொல்ல இவற்றின் படைப்பாளிகளே மிகவும் பொறுப்பானவர்கள்.

பழைமைப் பிடிப்பிலிருந்து கழண்டு விடாதபடி, பாதுகாப்பாக நம்மைப் பிணைத்துக் கொள்ள பழைய போலிச் சடங்குகள் துணை செல்வதைப் பெரியவர்கள் கதை விளக்குகிறது. தன் குடும்பம் தாழ்வடைந்தமைக்கு உறவினர் ஏவல் செய்துவிட்டனர் என்று எண்ணும் சக்குபாய், கணவன் தன்னைக் கொடுமைப் படுத்துவதற்கும் அதுவே காரணம் எனக் கருதிப் பரிகாரம் தேடுகிறாள். தற்சிந்தனை-தற்சார்பு இன்றி அடிமைப்பட்ட பெண் மனத்தின் அலைவினைக் கொண்ட 'சக்கு பாய்கள்' சமுதாயத்தில் நிறைய உள்ளனர்.

ஆளும் ஆண்வர்க்கக் கோட்பாடுகளால் அடிமை என்று முத்திரை இட எண்ணுகின்ற நிலையைக் கடந்து, அக்கோட்பாடுகளின் கோடுகளைத் தகர்த்துத் தான் நினைத்தபடி நெறியைக் காப்பாற்றிக் கொள்ளும் புரட்சிப் பெண்களாக இதோ ஒரு சாவித்திரியில் வரும் சாவித்திரியும், சீதை இல்லாத ராமாயணத்தில் வரும் மனோன்மணியும் உலவுகிறார்கள். எழுந்திரு, பறந்து என்ற கதையில் வரும் மைதிலியோ பொங்கி எழுந்து, இன்றைய

சீர்கெட்ட சமுதாய நிலையை எதிர்த்தழிக்கும் காளியாக மாறி ஊழிக் கூத்தாடுகிறாள். கணவனைப் புறக்கணித்து, பிறந்தகத்திற்கும், புக்ககத்திற்கும் உழைத்துப் பெருமை சேர்க்கும் பானுவைச் சின்னஞ்சிறு வயதில் சந்திக்கிறோம்.

பாரதி நூற்றாண்டாகையால், பெண்களுக்கு உரிமையும், உயர்வும் தரவேண்டும் என்ற விழைவையும், வேட்கையையும் மேற்கூறிய கதைகளில் காணலாம்.

தற்கால எண்ணங்களும் எழுச்சிகளும் சமுதாயத்தில் கீழ்மைப் பண்பை வளர்க்கின்றன என்று சமுதாயத்தைக் குறை கூறும் போக்கில் சாவித்திரியும், மைதிலியும் ஒன்றுபடுகிறார்கள்.

ஒரு கிராமத்திற்கு ஆசிரியராகப் பணியேற்க வரும் சாவித்திரி, காமக்கழுகுகளால் துரத்தப்பட, அவளைக் காப்பாற்றித் தன் இல்லம் அழைத்து வருகிறார் மனைவியை இழந்த சுவாமிநாத குருக்கள். அவளுக்கு வரன் பார்க்கிறார். ஆனால் வாழ்க்கையில் சலிப்புற்ற அவளோ தனக்கு ஆண் துணை தேவை என அவரையே மணந்து கொள்கிறாள். ஒரு சமயம் வீட்டில் தங்க நேர்ந்த சங்கர் நோயில் வீழ, அவனுக்குப் பணி விடை செய்கிறாள். அவனோ அவளிடம் தவறான நோக்கில் நடக்க முயற்சிக்க, அவன் கன்னத்தில் அறைந்து அவனுக்கு அறிவுரை புகட்டி அனுப்புகிறாள்.

கணவன்-மனைவி ஆகியோரின் வாழ்க்கைச் சிக்கலை அடிப்படையாகக் கொண்ட கதைகளில், பெண்களின் மனப் போராட்டங்களையும், படிப்படியாக அவை தெளிவு பெற்று நிறைவடைவதையும் காணலாம். ஊமைக் குயில், வாழ்வெனும் ஊஞ்சல், சீதை இல்லாத ராமாயணம், ஒன்றும் ஒன்றும் ஒன்று, சிநேகிதி முதலிய குறும் புதினங்கள் மேலே கூறியதைத் தெளிவு படுத்தும்.

ஊமைக்குயிலில் அழகான பெண் ஒருத்தி, 'விகாரமான' முகம் கொண்ட ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்டதை எண்ணி மனப் போராட்டத்தை வளர்த்துக் கொள்கிறாள்.

வாழ்வெனும் ஊஞ்சலில்... கணவன், நோயிலிருந்து மீள வேண்டும் என்ற நினைப்பில் மனப்போராட்டம் தலையெடுக்கிறது.

சீதை இல்லாத ராமாயணத்தில் கணவனிடமிருந்து விலகிய மனோன்மணியின் உளநிலையும், புதிய மனைவியாகக் குடியேறிய சீதாவின் மனப்போராட்டமும் ஒருங்கே வளர்கின்றன.

தன் கணவன் மீது ஐயம் கொண்டு உண்மைகளை அணுகத் துடித்த சஞ்சனாவிடம் அரும்பும் மனப்போராட்டத்தை ஒன்றும் ஒன்றும் ஒன்று என்ற கதையில் பார்க்கிறோம்,

அழகே உருவான அனுசா, மகேஷ் என்ற அசிங்கமான முகங் கொண்டவனை மணக்க நேர்கிறது. இந்திராவின் மாப்பிள்ளையோ ஊனம். 'மனிதர்களுக்கு ஏதாவது ஒரு குறை இருக்கத்தான் செய்யும். மனத்தில் ஊனமும், குறையும் உள்ளவர்களை விட வெளியில் தென்படும் ஊனம் பெரிசில்லை,' என்று கூறும் இந்திராவிடமும், அருகில் வசிக்கும் பெண்களிடமும் அவள் நட்பு கொண்டு பழகிப் பக்குவம் பெறும்போது, தன் கணவனின் 'அக அழகு' தெரிகிறது. கணவனை வெறுத்து இது நாள் வரை தொடாதிருந்த அனுசாவிற்குக் குழந்தைப் பேற்றிற்கு ஏங்கும் வகையில் அவனிடம் மதிப்பு ஏற்படுகிறது.

வாழ்வெனும் ஊஞ்சலில் வரும் புவனா நோயாளியான தன் கணவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்க, அவளிடம் மயக்கங் கொண்ட மாதவன் அங்கு வர, தன் கணவன் குணமடைய அவனை வேண்டிக் கொள்ளச் செய்கிறாள். தான் வந்த நோக்கம் நிறைவேறா நிலையில், புவனாவின் குடும்ப உறவின் ஆழத்தை, 'ஒரு அழகிய மலரின் இதழ்களைப் பிரித்துப் போட நினைத்தேனே' என எண்ணி வருந்துகிறான்.

சோதனை வரும் ஒவ்வொரு கட்டங்களிலும் 'தற்காத்துத்' தகை சான்ற சொல் கொண்டு வாழும் பெண்மையின் பண்புகளைக் காண்கிறோம். கணவன் தன்னை அந்நியப்படுத்தினாலும் அவன் குணமடைய வேண்டும் என்ற பண்பு; தன்னை விரும்பியவனுக்குத் தன் கணவன் நிலையைச் சொல்லி அவனை மாற்றும் பண்பு; தன்னிடம் தவறான நோக்கத்தில் பழக எண்ணிய இளைஞனை மாற்றிவிடும் போக்கு இவற்றை முறையே அனுசா, புவனா, சாவித்திரி ஆகியவர்களிடம் காண்கிறோம். இந்த மூவருக்கும் ஏற்படும் சோதனைகளில் ஒவ்வொருவரும் தத்தம் உயர்ந்த பண்புகளை வெளிப்படுத்தி மரபில் பூத்த மலர்களாக ஒளிவிடுகின்றனர்.

பெண் ஒருத்தியால் எந்த வல்லமையையும் சாதிக்க முடியுமென்றாலும், மென்மை படைத்த பெண்மையுள்ளம் பாசத்தில் கட்டுண்டுவிடும் என்பதை 'அகழி' என்ற கதை காட்டுகிறது. 'பொண்ணா பொறந்துட்டா குதிரைக்குக் கண்ணு மறைச்சுக் கடிவாளம் போடற மாதிரி சின்னவயசிலேயேபோட்டுடணும்,... இல்லேன்னா என்னாட்டம் தறிகெட்டு நாதி இல்லாமபோயிடும் என்று கூறும் பரணி, தாய் விரும்பாத நிலையில், தன்காதலுடன் வாழ்வு நடத்தும் அவள், தன் உயிர் பிரியும் தறுவாயில் மேலே காட்டிய தத்துவத்தை உதிர்த்துத் தாய்ப்பாசத்தை மெய்ப்பிக்கின்றார்.

விதவை ஒருத்தியின் உளமாற்றத்தை நெகிழ்ச்சியோடு அணுகி, இறுதியில் அவள் தன்நிலையை உணர்ந்து கொள்வதை அனுராதா ரமணன் 'மழை' காட்டுகிறது.

இளம் விதவையான மைதிலி, பிரசன்னாவின் கதைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவள். ஒருநாள் அவன் அனுப்பிய மடல் அவளது மனமாற்றத்திற்குக் காரணமாகி விடுகிறது. நேரில் பிரசன்னாவைக் கண்டபொழுது, மைதிலியின் மகன் பள்ளி ஆசிரியைக்குக் காதல் மடல் எழுதியதாகப் புகார் வருகிறது. 'கையிலே பேனாவும் பேப்பரும் கிடைச்சா எதை வேணுமானாலும் யாருக்கு வேணுமானாலும் எழுதிடறதா', என்று கூறிப் பிரசன்னாவுக்கு நேராகவே பையனை அறைந்து விடுகிறாள். 'சும்மா கிடக்கிற சங்கை ஊதிக் கொடுக்கிற ஆம்பிளைப் புத்தி' என மறைமுகமாகப் பிரசன்னாவைக் குத்திக் காட்டித் தன்னிலை உணர்த்தித் தனது எல்லையைக் காத்துக் கொள்கிறாள் மைதிலி.

மனைவியை இழந்த ஒருவன் அன்போடு பழகி களங்கமற்ற நிலையில் தான் வளர்த்த நங்கையிடம் பேசிப் பொழுது கழிக்கிறான். அவளோ 'அங்கிள்' என்று கூறி அவனையே வளைய வருகிறாள். அவனிடம் இருந்த சலங்கையை ஒருநாள் ஒளித்து வைத்து விடுகிறாள். அது அவனுடைய மனைவியின் சலங்கை. நீண்ட நாள் கழித்து அவனைப் பார்த்தபோது பழைய மனைவியின் உருவில், தான் இருப்பதாகக் கூறி ஏற்கச் சொல்கிறாள். மனைவியின் இடத்தில் மற்றொருவளா என்று நினைத்த அவனது உயிர் பிரிகிறது. ஒரு ஜோடிச் சலங்கையின் கதை இது.

இன்றைய சமுதாயத்தில் பரிசுச் சீட்டு, மக்களின் உள்ளங்களில் எத்தகைய விளைவுகளை விதைத்துள்ளன என்பதை 'விடுதலை', 'திடீர்க் குபேரர்கள்' ஆகிய இரு கதைகளும் தெளிவு படுத்தியுள்ளன. முன்னைய கதையைவிட இரண்டாவது கதை, கதைக் கருவால் சிறந்து விளங்குகிறது. ஆனால் சொல்லப்படும் நேர்த்தியில் இரண்டாவது கதையைவிட முதல் கதையே பெரிதும் போற்றத்தக்கது.

திடீரென்று கிடைக்கும் பெருந்தொகையால் ஏழைகளுக்கும், அநாதைகளுக்கும், அபலைகளுக்கும், ஊதாரிகளுக்கும் பலன் இல்லை. திடீர் குபேரர்களைச் சுற்றியுள்ள வாழ்வின் நெளிவு சுளிவுகளைப் புரிந்துகொண்ட அனுபவசாலிகள் அவர்களை மீண்டும் குசேலராக ஆக்கிவிடுவதைச் சித்திரிக்கிறது திடீர்க் குபேரர்கள் என்ற கதை.

தமிழகப் பரிசுச் சீட்டில் லட்சாதிபதி ஆகிவிட்ட நால்வரும் எப்படிப்பட்ட சமூக, பொருளாதாரப் பின்னணியுள்ளவர்கள் என்பதை, அமெரிக்காவில் வசிக்கும் சமூகவியலில் டாக்டர் பட்டம் பெற்ற தம்பதியர் தமிழ்நாடு வந்தபோது ஆராய்கின்றனர். இது அவர்களின் ஆராய்ச்சியின் முதல் கட்டம். பரிசுத் தொகை மூன்றாண்டுகளுக்குப் பின்னர் அந்நால்வரையும் எங்ஙனம் மாற்றியிருக்கிறது என்பது ஆராய்ச்சியின் இரண்டாவது கட்டம். இந்த நால்வரைச் சந்தித்த நிகழ்ச்சியாகக் கதை செல்கிறது. நால்வரும் பரிசுத் தொகையால், பாதிப்புக்குள்ளானதைத் தெரிவிக்கிறது.

விடுதலை என்ற கதையிலும் பரிசுச்சீட்டே மையமாக அமைகிறது. வழக்கறிஞர் வரதாச்சாரிக்குப் பரிசு விழுகிறது. பாசமில்லாத மகன் அவரை அணுகுகிறான்; உறவினர் பணத்திற்குப் பங்கு போடக் கூடியுள்ளனர். ஆனால் அவரோ முரடர் மூவரால் கடத்தப்படுகிறார். தன் ஆன்ம பலத்தால் மூவரையும் தன்வயப் படுத்தி மகனிடம் இல்லாத பாசத்தை அவர்களிடம் காண்கிறார். பரிசு விழுந்ததுமே உறவுகள் புதுப்பிக்கப்பட்டுக் கொண்டாடப்படுவதையும், மனித நேயங் கடந்த நிலையில் செயற்கையான போலி வாழ்வே மிஞ்சுகிறது என்பதையும் இக்கதை அழகுறச் சித்திரிக்கிறது.

பழைய பாணியில் கதை சொல்லப்படுவதை ஜோசப் பாதிரியார், பச்சைக்கல் பரதேவதை, வெண்முகில் பெய்த தண்மழை ஆகிய கதைகள் உணர்த்துகின்றன. சூழ்நிலையால் மனைவி கணவனைச் சுடுவதும், அப்பழியைப் பாதிரியார் ஏற்றுக் கொள்வதும் ஜோசப் பாதிரியார் கதையாகும். காதலனோடு வாழ்ந்து அவனை எண்ணியே உயிர்விடும் ஒருத்தியைப் பச்சைக்கல் பரதேவதை உணர்த்துகிறது. பழைய பாணியாக இருந்தாலும் கதையை மெருகோடு சொல்லலாம் என்பதை, வெண் முகில் பெய்த தண்மழை என்ற கதையின் நடைமூலம் அறிந்து கொள்ளலாம். இளமையின் வேகம் துறவுக்கு ஆளாக்குவதையும், துறவு பூண்ட பலவருடங்களுக்குப் பின்னர், இளமையில் சந்தித்த ஒருத்திமேல் சலனங் கொள்வதையும் கதைப் பின்னலாக்கியுள்ளார் அதன் ஆசிரியர்.

உளவியல் அடிப்படையில் கதை எழுதுவது உத்திவகைகளுள் ஒன்று. 'Moon Mania' என்பது முழுநிலா நேரத்தில், மனம் பிறழ்ச்சியடைதலைக் குறிக்கும் இது நரம்பியல் சார்ந்த ஓர் உளவியல் சிக்கல். இதனை மையமாகக் கொண்டு படைக்கப்பட்ட கதையே முழுநிலவில் இரு பைத்தியங்கள்.

முழுநிலவு அன்று தன் உடல் வெறியைத் தீர்த்துக்கொள்ளத் துடித்துக் காதலனைத் தேடி வருகிறாள் உஷாராணி. காதலன் இரவீந்திரனோ முழுநிலவு நாளன்றே கொலை செய்வதில் நாட்டங் கொள்கிறான். மனநோய் மருத்துவரின் உதவியால் உஷாராணி கொலை செய்யப்படுவது இறுதியில் தவிர்க்கப்படு கிறது. உஷாராணியின் உடல் வெறிக்கும், இரவீந்தரனின் கொலை வெறிக்கும் உளவியல் பிறழ்ச்சியே காரணமாகும்.

மிகச் சாதாரண நிகழ்ச்சியும் கதைக்குக் கருவாகலாம் என்பதை ஸ்காட் ஒளித்த கடிதம் காட்டி விடுகிறது. என்றைக்கோ எழுதப்பட்டு 'ஸ்காட்' எழுதிய நூல் ஒன்றில் ஒளிந்து கொண் டிருந்த படிக்கப்படாத கடிதம், ராஜியாவின் சோக எழுத்துக் களைத் தாங்கியுள்ளது. புத்தகம் ஏற்படுத்திய விளைவையும், பெரியோர் தொகுத்து வைத்த நூல்களை விற்று மது அருந்தும் இன்றைய நிகழ்கால இளைஞரை வளர்த்துவிட்ட சமுதாயத்தை யும் ஒரு சேர இக்கதையில் காண்கிறோம்.

பிணங்களை விடவும் உயிரோடு உலவும் மனிதர்கள் பயங்கர மானவர்கள் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தும் அதிர்ந்த இரவில், சுகவனத்தின் ஒருநாள் நிகழ்ச்சி உணர்வோடு கூறப் பட்டுள்ளது.

பிடிபடாத வாழ்க்கையின் போலி மயக்கத்திற்கு ஆளாகும் மனிதர்களைச் சில மாறுவேடங்கள் கதையில் காட்ட முயல்கிறார் ஐசக் அருமைராசன்.

இந்தியப்பண்பாடு-குறிப்பாகத் தமிழகத்தின் அகப்புற வாழ்க்கைச் சிந்தனைகள் — எவ்வாறு திசை திரும்பியுள்ளன; சமூகப் பொருளாதார அரசியல் சீர்குலைவுகள் மக்களிடம் எத்த கைய படிப்பினைகளை விதைத்துள்ளன என்பதைப் பாளையப் பிரவேசம் என்ற கதையால் அறிகிறோம்.

மேல்படிப்புக்காக அமெரிக்காசென்று அங்கேயேபணி புரியும் கோபாலன் பத்தாண்டுகளுக்குப் பின்னர் தன் கிராமத் திற்கு வருகிறான். அந்தக் கிராமத்தில் அமெரிக்கா சென்று திரும்பிய பஞ்சாயத்துத் தலைவர் பராங்குசத்திற்குப் பாராட்டுக் கூட்டம். தற்செயலாக அங்கு இளமைக் கால நண்பனைச் சந்தித்து உரையாடுகிறான் கோபாலன். தன் வீட்டில் வேலை செய்து வருபவரின் மகனான அவன் கோபா லிடம், பஞ்சாயத்துத் தொகுதி உறுப்பினராக ஆவதற்குப் போட்டியிடப் போவதையும், அதன் மூலம் ரோடு காண்ட் ராக்டு, வாட்டர் பைப்பு காண்ட்ராக்ட், எலெக்ட்ரிக் சாமான் காண்ட்ராக்ட் இப்படி பல வழிகளில் சம்பாதிக்கும் வாய்ப்பு

அதில் உள்ளதாகக் கூறுகிறான். கிராம மக்களும் வாழக் கற்றுக் கொண்டு விட்டதை அறிகிறான். புறநிலையில் இதனை அறிந்து கொண்ட கோபால், திருமணம் என்ற பெயரில் வாங்கும் 'வரதட்சணை வணிகத்தைத்' தன் அக வாழ்க்கையில் ஏற்க வேண்டியவனாகிறான். தந்தை கேட்ட வரதட்சணையைத் தந்து விட்டுத் தான் விரும்பிய ஒருத்தியை மணந்து அமெரிக்கா விற்குச் சென்று விடுகிறான்.

இன்றைய சமுதாயத்தில் சிலரால் ஏற்படும் சிதைவுகள் சமுதாயத்தையே பாழ்படுத்திச் சீர்குலைத்து வருவதைக் கழுகு அழுதது என்ற கதை படம் பிடித்துக் காட்டியுள்ளது.

அலுவலகத்தில் பொறுப்புள்ள பதவியில் இருந்து கொண்டு, ஒரு விதக் குற்றவுணர்வு எள்ளளவும் இல்லாமல் தன் தேவை களையும் தன் குடும்பத்தின் அன்றாடத் தேவைகளையும் சரி கட்ட எந்தெந்த வழிகளையெல்லாம் கற்று வைத்திருக்கிறார் கள் என்பதற்கு கழுகாசலம் என்ற கழுகே சான்று.

கழுகு அலுவலர்களைத் தரம் பிரிக்கும் விதமே தனி. தாமாக முன்வந்து கவனிப்பவர் உத்தமர், கேட்டுச் செய்பவர் மத்திமர், கேட்டும் செய்யாதவர் அதமர். 'கழுகின்' பார்வை, எந்தக் கோப்புகளையும் தப்ப விடுவதில்லை. அலுவலகத்தில் ஊழல் துணையாக இவருக்கு கீழ்ப் பணியாற்றும் அலுவலர்கள், புற வாழ்க்கையில் பொல்லாத வாழ்க்கை வாழும் கழுகிற்கு, அக வாழ்க்கையில் சோதனையான புத்தி மாறாட்டங் கொண்ட பையன், ஒருநாள் அவன் அடுத்த வீட்டு குழந்தையின் வாயில் 'சாக்பீஸ்' திணித்து 'தின்னு தின்னு' என்று அடித்து நொறுக்கி விடுகிறான். அக்கம் பக்கத்தாரின் பேச்சுக்கு இதனால் ஆளாகும் கழுகு, சாமி படத்தருகே அமர்ந்து பாமாலைப் படித்துக்கொண் டிருக்க, அந்தக் குழந்தையை, 'இப்படித்தாம்பா' அடித்தேன் என்று சொல்லித் தந்தையை விளாசுகிறான் பையன். ஆனால் அவரோ, 'பகவானே, நான் யாருக்கு என்ன தீங்கு செய்தேன்? எனக்கு ஏன் இப்படி புத்தி சுவாதீனமில்லாத பிள்ளையைக் கொடுத்துச் சோதிக்கிறாய்' என்று கேட்பதாகக் கதை முடிகிறது.

திரு செ. யோகநாதன் ஈழத்தமிழர்களுக்குச் சிங்களவர் இழைத்து வரும் கொடுமைகளை இரவல் தாய் நாடு என்ற கதையில் நடுநிலையோடு எடுத்துக் கூறியுள்ளார். ஈழ நாட்டின் சமூக—அரசியல் பொருளாதார நிலைகளில் தமிழர்கள் மிகுந்த அளவில் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பதையும், அடிப்படைச்

சிக்கலிலிருந்து இன்னமும் தமிழீழ மக்கள் விடுதலை பெற வில்லையே என்பதையும் ஆழ்ந்த உணர்வோடு சிந்தித் துள்ளார்.

ஒரு கதையின் அடிப்படையான பண்பு, சமுதாய மக்களின் நெஞ்சை ஆழ ஊடுருவிப் பாதிக்க வேண்டும் என்ற உணர்வில் எழுதப்பட்டுள்ளது இக் கதை. கதை என்பதைவிட, இலங்கை யின் இன்றையச் சிக்கலை வெளிப்படுத்தும் ஒரு சமூக ஆவணம் எனக் குறிப்பிடலாம்.

அமெரிக்காவிலிருந்து இலங்கை வந்தஅருள், அங்குத்தமிழீழ மக்களுக்கு எதிரான விளைவுகளைக் கண்டிக்கிறான்; அடிப்படை தேவைகள் கூடத் தமிழர்க்கு வழங்கப்படாததைக் கண்டு வருந் துகிறான். இன அடிப்படையில் சிங்களவர் பெற்று மகிழும் பல உரிமைகளை எதிர்க்கிறான். பயங்கரவாதப் பிரமுகர்களில் ஒருவன்; உள்ளூர் பயங்கரவாதிகளோடு தொடர்பு; கிராமத்தில் கிளர்ச்சி; வெளிநாடுகளில் இயக்கக் கொள்கை பரப்புதல் ஆகிய காரணங்களுக்காக அவன் மேல் குற்றம சுமத்தி நாடு கடத்தி விடுகின்றனர்.

இலங்கையில் நடைபெறும் கல்வி முறைத் திட்டம், 1972இல் இலங்கைத் தமிழர் இரண்டாம் குடிமினராக ஆன நிலை, 1974இல் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் நடந்த கொடுமை, கற்பழிப்பு, ஆண்மை இழக்கப்பட்டமை முதலிய பல்வேறு வகைகளில் தமிழீழ மக்களின இன்னல்களை செ. யோகநாதன் சுட்டியுள்ளார்.

இலங்கையில் இன, மொழி அடிப்படையில் நடந்து வரும் போராட்டத்தை எழுத்தாளன் ஒருவனுக்கு இருக்க வேண்டிய நியாய உணர்வோடு இவர் அணுகியுள்ளார்.

சமுதாய நெறியின் பழைய பண்பாடும், அதன் போக்கும் எவ்வெவ்வகைகளில் சீர்குலைந்துள்ளன என்பதற்குக் 'கொடு கொட்டியாட்டம்' காட்டும் சிங்கப் பெருமாள் கோயில் என்ற கிராமமே சான்று.

தனிமனித வாழ்க்கை, பொதுநல வாழ்க்கை இவை இரண்டுமே ஒரு சிதைவான பாதையில் சென்று கொண்டிருக் கின்றன என்பதை, வாழ்வில் நம்பிக்கையின்மை, போலியான ஆன்மீக, நாத்திக வாதங்கள், உழைக்க மறுக்கும் சலிப்புத் தன்மை, அந்தரங்கமான உடல் வேட்கை, சாதியச் சிக்கல்கள், பொருளற்ற பகுத்தறிவு வாதம், வரட்டு வேதாந்தங்கள் ஆகிய இவற்றினூடே எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர். கண்ணன், சுவாமி, மதிவாணன், பெரியண்ணன், சீமாச்சு, ரங்கநாயகி,

மலையாளக் குட்டி, பாஸ்கரன்குருவி, மணவாளன், இராவணன் ஆகியோர் இந்தக் கதைக்கு உயிரூட்ட முயன்றுள்ளனர்.

சமூக நெறியின் நியாயமான கோட்பாடுகளைப் பொசுக்கி விட்டு, மறத்துப் போன மனிதப் பண்புகள் மண்ணில் வக்கரித்து அழிவுப் பாதை நோக்கிச் செல்வதால் கோயிலில் பிடித்த அந்தத் தீ, ஊரையே பொசுக்கிவிடுகிறது என்பதைக் குறிப்பாகக் காட்டி யுள்ளது.

தீயின் கோரதாண்டவ ஊழிக் கூத்திற்குச் சிங்கப் பெருமாள் கோயில் மட்டும் பலியானது என்று எண்ணிவிடக் கூடாது. இந்தத் தேசியத்திற்கு அந்தக் கிராமம் ஒரு குறியீடே!

ஒரு கதையைப் 'பிரச்சனை'யாகக் காட்டிவிடாமல், கதையாகவே கதை இழையோடியிருப்பது ஒரு நேர்த்தியான நெசவு.

V

82-இல் வெளிவந்த குறும் புதினங்களில் பெரும்பாலும் குடும்பப் பாங்கான கதைகளே மிகுதி. கணவன் மனைவி உறவு, பெண்மை மனம் ஆகியவற்றிற்கே முதலிடம் தந்துள்ளனர்.

குறிப்பிட்ட சில கதைகளை மட்டும் சில கோணங்களில் காண்பது இங்கு அவசியமாகிறது. எனவே வகைக்கு ஒரு கதையாக எடுத்துக் கொள்ளலாம்

சமுதாய மதிப்பீடுகளை வெளியிடுவதில் எழுத்தாளனின் பங்கு எத்தகையது என்பதனைப் பொறுப்போடு உணர்ந்து சொல்ல வேண்டியவர்கள் இன்னும் அதனைத் தெளிவோடு அணுகியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் சமுதாயச் சீர்கேடுகளைச் சரியாகவே இனங்காட்டத் தெரிந் துள்ளனர். கொடு கொட்டியாட்டம், கழுகு அழுதது, பாளையப் பிரவேசம்ஆகிய மூன்று கதைகளையும் இவ்வகையில் அடக்கலாம். எனினும் இவை ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு குறையை உடையனவாகவே காட்சியளிக்கின்றன. 'கொடி கொட்டியாட்டத் தில்' அதன் முடிவு ஒரு குறையாக உள்ளது போல் தோன்று கிறது. கதைக்கு முடிவு கூறவேண்டும் என்ற முனைப்பே தென் படுவதால், திரைப்படக் காட்சிக்கே உரிய உச்சநிலையைத்தான் இக்கதையின் இறுதியில் காண்கிறோம். தெய்வம் நின்று கொல்லும் அல்லது அதருமம் ஓங்க அதனைத் தீ உண்ணும் என்ற பழைமைப் பாறையில் வழுக்கி விழும் பாங்கைக் காட்டுவ தால் என்ன பயன்? இதனால் இவர் சொல்ல வந்ததுகூட அந்தத் தீயிலேயே கருகிவிட்டதோ! சமுதாயத்தில் நம்பிக்கை நலிவைக் காட்டுவது கதையோடு நம்மை ஒன்றிப் போகச் செய்யாதவாறு

தடுக்கிறது. ஆயின் இந்தப் 'பலவீனமே' ஒரு வலிமையான பின்னணியை அமைத்துத் தந்துள்ளது.

சிந்தனை மாற்றத்திற்குச் சிறிது விலகிச் செல்லும்போது, சிறுகதையாகக் கூம்பிப் பின்னர் குறும் புதினமாகத் தன் இதழ்களை விரித்துள்ளது. சில சிறுகதைகளைச் சேர்த்து ஒரு புதினத்திற்கான பூமாலை கட்டி வைத்தது போன்றஉணர்வை ஏற்படுத்தாமலில்லை. இந்தக் கதையில் வரும் உரையாடல் நம்மை உண்மை உலகிற்குக் கொண்டு வந்திருப்பது ஆசிரியரின் தனித்த வெற்றி.

கண்ணன் சுவாமியும், சௌரியும் உரையாடும் கட்டங்கள் இன்றைய தலைமுறை இடைவெளியின் விரிசல்களைக் காட்டுகின்றன.

'இந்த யூனியனை ஸ்தாபிச்சுண்டு போராட்டக் கொடி பிடிச்சா லோகத்துலே பிரச்சனைகள் தீர்ந்திடுமா? இல்ல தீர்ந்தாச்சா?'

'கோயில் கும்பாபிஷேகம் செய்து தீர்க்க முடியாத சமூக சிக்கலை இந்த யூனியனை பிரதிஷ்டைப் பண்ணித் தீர்க்கப் பார்க்கிறோம்'.

'ஆதிநாளிலே மனுஷாள் மத்தியிலே கோயிலுக்கு கும்பாபிஷேகத்துக்கு ஒரு மதிப்பு இருந்தது. ஒரு கலாச்சாரப் பின்னணியைக் கோயிலைச் சுத்தி அமைச்சுண்டா?

'யூனியனுக்கும் போராட்டத்துக்கும் கூட ஒரு அந்தஸ்து இருக்கு. நிஜமாவே ஒரு கலாச்சார பின்னணி இருக்கு. சரித்திரத்தின் பக்கங்களே சான்றுகளாய் இருக்கு.'

'அப்போ பெரியவா சொன்னதெல்லாம் பொய்யா போயிடுத்து. மதங்கள், தர்மங்கள், கர்மா இதெல்லாம் தேவையில் லேங்கிறே.'

'மதங்களும் தர்மங்களும் சுமையா இருந்தா ஜனங்கள் தூக்கி எறிஞ்சிடுவா. மேலே போறச்சே பகவானே குறுக்க நின்னாலும் அவனையும் தூக்கி வைச்சு போயிண்டிருப்பா.'

'அப்போ! கடவுள் பெரியோர்னு ஒருத்தர் இருக்கிறார்ன்னு நீ நம்பறியா? இல்லையா?'

'நம்பறதா! கடவுளை தேவாதிகளும் அறிவு ஜீவிகளாய்த் தங்களை பிரகடனப்படுத்திக் கொள்ளும் கும்பலும் அவரைக் கொன்று அநேக நாளாச்சே.'

தந்தைக்கும், மகனுக்கும் இடையே நிகழும் இந்த உரையாடல், தலைமுறைச் சிந்தனையில்—விளைந்த மாற்றத்தை உணர்த்தி விடுகிறது.

அறம் குன்றினால் எல்லாம் அழிவுக்குத்தான் என்பதை நியாயப்படுத்த வருமிடந்தோறும் அதனை வலியுறுத்த வேண்டியதில்லை.

'இல்லாட்டி நெருப்பு மழையா பெய்யும்' (ப. 19), ஏதோ நெருப்பு மழை—நெருப்பு மழைன்னு சொன்னீங்களே (ப. 21) கலி முத்திடுத்துவோய்! பிரளயம் வரப் போறது, ஜமாயும், அக்னியாயும் அவன் பிரசன்னமாயிடுவான் (ப. 24), காலம் முதிர்ந்து போச்சு பிரளயம் வந்து உலகம் அழிய போறத்துக்குத் தான் அறிகுறி. (ப. 35) கலிமுத்திப் போச்சு; எல்லாம் அழிவுக்குத் தான் (ப. 37), காலம் முத்திப் போச்சுன்னா நெருப்பு மழை பெய்யும்னு (ப. 37), தீ வளர்த்திடுவோம் தீம்திரிகிட தீம்திரிகிட (ப. 49), பூமி தாங்காது பிரளயம் வரப்போகிறது (ப. 54) என ஆங்காங்கே எடுத்துச் சொல்லி அந்த ஊரை தீ உண்ணவிருப்பதை உறுதிப்படுத்துவது கதையை ஓரளவு செயற்கைப்படுத்தி விடுகிறது. கருத்து வார்ப்புகளின் நுனியில் இன்னும் தீ கனன்று கொண்டேயிருக்கும்.

பெரியவர்கள் என்ற கதை ஓர் அகநிலை வெளிப்பாட்டில் பெண்ணின் மனப்போராட்டங்களை இயல்பாகக் கூறிச் செல்கிறது. எளிய நடையில் நேர்த்தியாகப் பின்னப்பட்டுள்ள இக்கதை மெருகோடு அமைய, சோகப் பின்னணியே அதற்குச் சுருதி சேர்க்கிறது. இன்னும் ஒரு சில இடங்களில் அழுத்தம் தேவை என்பதையும் உணர்த்திவிடுகிறது.

கழுகு அழுதது என்ற கதையில் கழுகாசலம் கழுகு என்று அஃறிணையாகவே 'அது' 'இது' எனக் குறிப்பிடுவதில் மெல்லிய அங்கதம் இழையோடுகிறது. கதை என்ற ஒன்று இல்லாமல் போய் விடுமோஎன்று நினைத்துக் கழுகின் பையன் வழியாகக் கதைக்கு நிறைவு தேடப்பட்டுள்ளது. இந்தப் பிறவியில் செய்யும் தீமைக்குப் பலனாக அவரது பையன் விளங்குகிறான் என்பது போலக் கதையில் நீதியுணர்த்தியது தேவைதானா? யாருக்கும் கலங்காத ஒரு சிறிதும் அஞ்சாத குற்றவுணர்வே அற்ற கழுகு, மனைவியைக் கண்டு அஞ்சுவது (திருமண நிகழ்ச்சி) வியப்பாக உள்ளது!

கதையின் இறுதியில் மகன் தந்தையை அடித்துவிடும்கட்டம் வெறும் நகைச்சுவையன்று, மெல்லிய அங்கதம். கழுகின் புறச் செயல்களுக்கு மனத்தளவில் ஒரு சாட்டை.

ஒரு கதையின் நீள அகலங்களே அக்கதையைத் தீர்மானித்து விடுவதில்லை. ஒரு புதினத்திற்கான கதையைக் குறும் புதினம்

மாக்கியுள்ள கொடு கொட்டியாட்டம் போலவே, சிறுகதையாகச் சொல்லப்படவேண்டியதைக் குறும் புதினமாக விரித்துள்ளதைக் கழுகு அழுதது, அகழி, ஜோசப் பாதிரியார் முதலான கதைகளில் காணலாம்.

விடுதலை, பாளையப் பிரவேசம் என்ற கிருஷ்ணமணியின் கதைகள் இயற்கையான நடையில் அமைந்துள்ளன. கதைப் பின்னலை அமைக்கும் பாங்கு இயல்பாக உள்ளது. எனினும் ஆசிரியர், கல்கியின் பழைய பாணித் தன்மையைச் சிலவிடங்களில் காட்டியுள்ளார். கதையின் இடையில் நுழைந்து கதைத் தலைவனைப் பற்றிய கண்ணோட்டத்தில் இறங்கிவிடுகிறார்- (சான்று! இதுதான் நம் நாயகனின் தோற்றம் பாளையப் பிரவேசம் ப, 48) கதை முடிந்துவிட்ட பிறகு கதைமாந்தர் சிலர் என்னஆனார்கள், நடக்கும் நிகழ்ச்சிகள் என்ன என்பன போன்ற செய்திகள் கதையின் மெருகைக் குலைத்துவிட்டுள்ளன. உணர்ச்சி நடையில் கதையின் இறுதிக்கட்டங்கள் அமையும் பொழுது, செய்தி நடையில் ஆசிரியர் கதை முடிந்த பிறகு அவற்றை எடுத்துரைப்பது சுவையைக் குறைத்து விடுவதோடு பழையபாணி முடிவையே காட்டுகிறது. (சான்று: விடுதலை கதையில் வரதாச்சாரியும் அவரது மனைவியும் இறந்து விட்டதோடு கதை முடிகிறது. அதன் பின்னர் சமாதி எழும்பல், தோட்டத்தில் முரடர் மூவரும் வேலை செய்து பிழைத்தல், கோயில் எழுப்பித்தல்—இவற்றைக் கூறியுள்ளமை)

மேற்கூறிய கதையில், முரடர்களின் மனமாற்றம் இயல்பாகச் சித்திரிக்கப்பட்டாலும் போதிய அளவு அதில் அழுத்தம் இல்லை. 'மிருகங்களா இருந்த எங்களை மனுசனா ஆக்கின தெய்வம்மா' என்று முரடர்கள் கூறுவது கதையோடு ஒன்றச் செய்தாலும் ஓரளவே நம்பகத் தன்மையைக் காட்டுகிறது.

'சமுதாய நல்வாழ்வே மண்ணில்காணும் சொர்க்கம்' என்று விடுதலை வரதாச்சாரி வாயிலாகக் கூறுவது சிறப்புடையதாக உள்ளது. வக்கில் வரதாச்சாரியாரின் பண்போவியம் கவர்ந்த அளவிற்கு நம் கவனத்தை ஈர்க்கத் தவறியவன் பாளையப் பிரவேசத்தில் வரும் கோபாலன்.

கோபாலன் இந்திய ஏழ்மையையும் வறுமையையும் எண்ணுகிறான்; சேரிக்குச் செல்கிறான்; அரிசனங்களைப் பற்றிச் சிந்திக்கிறான். ஆனால் அவன் தந்தைக்குத் தரும் வரதட்சணை வாயிலாக அவன் பெறக்கூடிய இலாபம், தான் விரும்பிய நடுத்தரக் குடும்பத்துப் பெண்ணை மணத்தல், சேரிகளுக்குச் சென்றாலும் அங்கிருந்து பெண் ஒருத்தியை மணந்துக் கொள்வதாக கதை

யிலாவது காட்டியிருக்கக் கூடாதா? கிராமத்தின் எல்லா நிலைகளையும் இரக்கத்தோடு அணுகும் கோபால் போன்றவர்கள் இவ்வாறு செய்து விடக்கூடாதுதான். மேல்நாட்டில் படித்த நம் தமிழ்நாட்டு இளைஞனல்லவா? இன்னும் சாதியும், சடங்கும் இருக்கிறது என நம்பும் அவன், இது போன்ற புரட்சியிலே இறங்க முடியாதுதான்! எனவேதான் அகத்தளவில் சேரிகளையும் தமிழ்நாட்டு மக்களையும் சிந்திக்கும் எண்ணங் கொண்ட கோபால், விரும்பியவளை மணந்து மேல் நாட்டிற்குச் சென்று விடுவதில் 'தப்பியோடும் மனப்பான்மையே தலை எடுக்கிறது.

வரதட்சணைக் கொடுமையால் பெண்களின் வாழ்க்கையில் சோகத் திரை விழுதல், இன்றைய திரைப்படம், பத்திரிகைகளில் வரும் கதைகள் ஒழுக்கக் கேட்டிற்கு காரணமாதல், கதைகளில் தனிப்பட்ட ஓரினத்தை இழிவுபடுத்தி எழுதுதல் ஆகியவற்றை எதிர்க்கும் மனப்பான்மை கொண்ட சாவித்திரி (இதோ ஒரு சாவித்திரி) வாழ்க்கையை அறிந்து கொண்டவள்போலவே காட்டப்படுகிறாள்.

சாவித்திரி, குறிப்பிட்ட நேரம் கடந்து வெகு நேரமாகி விடவே மாப்பிள்ளை 'வரவே இல்லை' என்று அறிந்தபின் ஏற்கனவே மனைவி இழந்த—தனக்கு ஆதரவாக உள்ள குருக்களின் காலில் விழுந்து அவரையே கணவனாகஏற்றுக்கொள்ளும் அவசரப் போக்கு அவளுடைய ஆழமற்ற சிந்தனையைக் காட்டி விடுகிறது. குருக்களை மணந்த பின்னர், 'நீ பார்க்கிற ஆம்பிளைகளிலே யாரையாவது புடிச்சிருந்தா அவாளோடேபோயிடலாம்' என்று குருக்கள் கூறுவது அவரது பண்பின் சிதைவு.

## VI

82இல் வெளிவந்த குறும் புதினங்கள் பெரும்பாலும்போட்டிகளுக்காக (கணையாழி, கலைமகள்) எழுதப்பட்டவை என்பதை உறுதி செய்கின்றன. எந்த இதழ்களுக்கு எப்படிப்பட்ட கதை தேவையோ அதற்குத் தகுந்தவாறு எழுத்தாளர்கள் எழுதுவதையும், இதழ்கள் அதனை வெளியிடுவதையும் அறிகிறோம். எனினும் குறும் புதினத்தின் வளர்ச்சிப் படிகளாக இவற்றை எண்ணுதல் வேண்டும்.

மாத இதழ்களே குறும் புதின வளர்ச்சிக்குத் துணை செய்து வந்துள்ளன.

குறும் புதினங்களில் பொழுது போக்குத் தன்மையே தலை தூக்கியுள்ளது.

குறும் புதினங்களில் இன்னும் பல சோதனைகள் நிகழ்த்தப் பெறுதல் வேண்டும். கணையாழியின் பங்கு இங்குக் குறிப்பிடத் தக்கது.

கணையாழியில் வெளிவந்துள்ள பரிசு பெற்ற, பரிசுக்குத் தகுதியுடைய, தகுதியற்ற குறும் புதினங்கள் எல்லாமேசோதனை வேள்வியில் தங்களை ஆகுதியாக்கியுள்ளன. உள்ளடக்கச் சோதனையில் இன்னும் பல பரிமாணங்களை அது காட்டும் என்னும் நம்பிக்கை ஒளிவிடுகிறது. இதற்கு 82இல் அதில் வெளி வந்த குறும் புதினங்களே சான்று.

கலைமகள் ஒரு பாரம்பரியச் கோட்டில் மரபுநிலை குன்றாத வகையில் பரிசுக் குறும் புதினங்களையும், குறும் புதினங்களையும் வெளியிட்டுள்ளது. இவற்றில் பொழுது போக்குத் தன்மையே காணப்படினும் அவை முகத்தை உறுத்தாத கடிவாளங்கள்.

அமுதசுரபி 82இல் ஓரளவு குறும் புதினங்களை வெளியிட்டுப் பெருமை தேடிக் கொண்டுள்ளது. அனுராதா ரமணனின் மழை கிருஷ்ணமணியின் பாளையப் பிரவேசம் ஆகியவை குறிப் பிடத்தக்க கதைகள்.

மங்கையர் மலர் இதழில் முன்னணி எழுத்தாளர் பலரின் குறும் புதினங்கள் இடம்பெற்றுள்ளன. பாரதியின், 'கனவுகளில்' பெண்ணிற்குப் பெருமை சேர்க்கும் பெண்கள் எழுதிய சில குறும் புதினங்கள் (சிநேகிதி, சின்னஞ்சிறு வயதில், கோடை மேகங் கள், நாடி வந்த நேரத்தில்) குறிப்பிடத்தக்கவை மாலனின் எழுந்திரு, பறந்து என்ற கதை பாரதியின் காளி பற்றிய புறக் கோல வடிவங்களுக்கு அகநிலையில் ஒரு கருத்துப் பொறி.
'நடக்கிற பூமி பாலைவனமா வெறிருச்சிருந்தா, இருக்கிற ஜீவன் ஒட்டகமாகத்தான் இருக்கும்.' நமக்குக் கிடைக்காத 'நீர்ச் சோலை' அவைகளுக்கு எங்கே கிடைக்கப் போகிறது!

## பின்னிணைப்பு—1

# இதழ்களின் ஆசிரியரும் வெளியீட்டாளரும்

| வரிசை எண் | இதழ் | ஆசிரியர் | வெளியீட்டாளர் |
|---|---|---|---|
| 1 | கதைக்கதிர் | பார்த்தசாரதி, நா. | இந்தியன் எக்சுபிரசு (மதுரை) பிரைவேட் லிமிடெட், எக்சுபிரசு எசுடேட்டு, சென்னை-600 002. |
| 2 | திரை கதிர் | சித்ரா லக்ஷ்மணன் | திரைகதிர் பிரிண்டர்சு 64, தம்பையா ரெட்டி தெரு, சென்னை-600 033. |
| 3 | நவரத்தினம் | சண்முகவேல், எம். | நியூசுமென் அசோசியேட்சு லிமிடெட், 1. முதல் மெயின் சாலை, யுனைடெட் இந்தியா காலனி, கோடம்பாக்கம், சென்னை-600 024. |
| 4 | நறுமணம் | சயீது முகமது இபுறாகிம் | சாலார் பிரிண்டர்சு, 3, பெரிய மலையப்பன் தெரு, இராயப்பேட்டை, சென்னை-600 014. |
| 5 | மணியன் | மணியன் | இதயம் பப்ளிகேசன்சு பிரைவேட் லிமிடெட், 98, மவுண்ட் ரோடு கிண்டி, சென்னை-600 032. |
| 6 | மாலை மதி | பார்த்தசாரதி, பி. வி. | பார்த்தசாரதி, பி.வி. 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 010. |

| | | | |
|---|---|---|---|
| 7 | மேகலா | துரைக்கண்ணு, ஆ. | சரோசினி பப்ளிகேசன்சு, 3, ஆர்லேசு சாலை, சென்னை-600 010. |
| 8 | மோனா | சாவி | பாலசந்திரன், வி. (பாச்சா) அசோக் உமா பப்ளிகேசன்சு, 249, பூந்தமல்லி நெடுஞ்சாலை, அமைந்தகரை, சென்னை-600 029. |
| 9 | ராணி முத்து | சாமி, அ. மா. | ராணி பப்ளிகேசன்சு, 46-சி, ஈ.வெ.கி. சம்பத்சாலை, சென்னை-600 007. |

| வியல் | | | | | வியல் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர்—அக்டோபர் | | நவம்பர் | டிசம்பர் |
| சுஜாதா | ராஜேந்திர குமார் | லக்ஷ்மி | விமலா ரமணி | அனுராதா ரமணன் | வாஸந்தி | பி.வி.ஆர். | ராஜேஷ் குமார் | ★ தாமரை செந்தூர் பாண்டி | | புஷ்பா தங்கதுரை | சவீதா |
| இன்னும் ஒரு பெண் | உலராத உதடுகள் | அஞ்சனு புரிந்து கொண் டாள் | தாவணி விசிறிகள் | வசந்த காலப் பூக்கள் | ஒரு மகனைத் தேடி... | காந்தலுக்கும் ருசி உண்டு | மதுபாலாவின் மறு பக்கம் | நீரலைகள் | | நைட் கிளப் 8 | காதல் விளை |
| குற்றவியல் | குற்றவியல் | பெண்கள் | குடும்பம் | பெண்கள் | குற்றவியல் | பெண்கள் | காதல் | சமுதாயம் | | குற்றவியல் | காதல் |
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்ப |
| ராஜேந்திர குமார் | புஷ்பா தங்கதுரை | மகரிஷி | இந்துமதி | மணிசேகரன், கோவி. | லக்ஷ்மி | ராஜேந்திர குமார் | புஷ்பா தங்கதுரை | மகரிஷி | இந்துமதி | மணிசேகரன், கோவி. | லக்ஷ்மி |
| ஒதுந்தையிலே வாடிமெத் தையிலே சாயு | பதுமைகள் பேசுவதில்லை | வெளிச்சத் தின் உறக் கம் | வசந்தகால நதிகள் | மாவீரன் காதலி | காதலெனும் புயல் | சில அந்த ரங்க அவஸ் தைகள் | இரவுப் பறவைகள் | விழாக் கோலம் | அலைபாயுதே நெஞ்சம் | தியாக வீணை | வெளி தைத் |
| உளவியல் | குற்றவியல் | குடும்பம் | காதல் | வரலாறு | குடும்பம் | உளவியல் | குற்றவியல் | குற்றவியல் | காதல் | வரலாறு | குடும்ப |
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
| ∧ | ∧ | ∧ | ∧ | ∧ | ○ | இந்துமதி | ∧ | அனுராதா ரமணன் | ○ அபர்ணா நாயுடு | ○ லக்ஷ்மி | ○ |
| | | | | | | கண்கள் எங்கே? நெஞ்சமும் எங்கே? | | மண்ணில் நீந்தும் மீன்கள் | கண்மணி ராஜி | அக்கரைக்கு... | |
| | | | | | | பெண்கள் | | பெண்கள் | | | |
| சனவரி | பிரப்வரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்ப |
| புஷ்பா தங்கதுரை | இந்துமதி | பால குமாரன் | அனுராதா ரமணன் | உஷா சுப்ரமணியன் | மகரிஷி | லட்சுமி சுப்ரமணியம், எஸ் | ராஜேந்திர குமார் | கீதா பென்னட் | அசோக மித்திரன் | சுபாஷினி | கோம |
| ஷோ பிஸினஸ் | ஆரண்ய வாசம் | கல்யாண முருங்கை | வாசல்வரை வந்தவள் | வானத்து வேலிகள் | கண்ணீர்த் துளியில் கடலோசை | அம்மா என்ற பெண் | ஒரு A பிரச்சினை | ஏழு ஸ்வரங்க ளுக்குள் | இரு ஒற் றர்கள் | சாயங்கால பூஜை | நிலவில் மலரா மலர்க |
| குற்றவியல் | சமுதாயம் | முதியோர் காதல் | காதல் | உளவியல் | குற்றவியல் | பெண்கள் | உளவியல் | குடும்பம் | நடைச் சித்திரம் | முதியோர் காதல் | காதல் |
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
| பட்டுக் கோட்டை பிரபாகர் | சாவி, ஜே. எம். | கிருஷ்ண குரு | ஹம்சா தன கோபால் | ஹேமா ஆனந்த தீர்த்தன் | அறவாழி, மாரி | நித்யா மூர்த்தி | ராஜேஷ் குமார் | அனுராதா ரமணன் | அழகாபுரி அழகப்பன் | ராஜேந்திர குமார் | பி. வி. |
| அவன் தப்பக் கூடாது | மூன்றாவது கணை | சொல்லு, அவன் யார்? | தெவத்தா | மூன்றுவது ஆண் | கேள்விகள், சந்தேகங்கள் | அழகு என்ற ஆயுதம் | இந்து சிரிக்கிறாள் | யாரை எதிர் பார்க்கிறாய், ராஜா? | காத்திருக் கிறது கொலை | ஒரே நாள் கதை | குளிருக் வெப்ப உண்டு |
| குற்றவியல் | இயற்கை இறந்த ஆற்றல் | அறிவியல் | குடும்பம் | பெண்கள் | குடும்பம் | குடும்பம் | காதல் | பெண்கள் | பெண்கள் | உளவியல் | உளவிய |
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
| சிவசங்கரி | லக்ஷ்மி | வாஸந்தி | ஜெயகாந்தன் | ராஜேந்திர குமார் | வாலி | புஷ்பா தங்கதுரை | மகேந்திரன் | இந்துமதி | விக்கிரமன் | ராண்டார்கை | சிவசங்க |
| விமோசனம் | இரண்டாவது அம்மா | விடியலை நோக்கி... | ஓ, அமெரிக்கா! | ஒரு சாத்தான் ஓதிய வேதம் | ரிஷி | கிளாவர் ராணி | நினைவே... நினைவே... நினைவே... | தாளங்கள் தவறும் | ஒரு மகுடம் ஒரு வாள் இரு விழிகள் | நன்றி, மீண்டும் கொல்வேன் | அப்போது இப்போது |
| பெண்கள் | பெண்கள் | குடும்பம் | சமுதாயம் | குற்றவியல் | உளவியல் | குற்றவியல் | பெண்கள் | பெண்கள் | வரலாறு | பெண்கள் | குடும்பம் |
| சனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | சூன் | சூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
| விமலா ரமணி | பட்டுக் கோட்டை பிரபாகர் | ஹேமா ஆனந்த தீர்த்தன் | அனுராதா ரமணன் | வேதா கோபாலன் | விமலா ரமணி | சாவி | பி. வி. ஆர். | ராஜேந்திர குமார் | சூடாமணி, ஆர். | ராஜேஷ் குமார் | ஸ்மிதா பாக்யரா |
| ராஜா—ராணி—ஜாக்கி | தோழா, தோற்றுப் போ! | பிற்பகல் | தேவதைகள் தூங்குவ தில்லை | வருகிறேன் வீணா! | சிவப்பு அலகுகள் | உலகம் சுற்றிய மூவர் | மோகினி ஆட்டம் | பகலில் இங்கே! இரவில் எங்கே? | இறுதியின் நிழலில்... | மெல்ல மெல்ல ஒரு திகில் | கார்த்திக இது உன் கடைசி இ |
| குடும்பம் | குற்றவியல் | குடும்பம் | உளவியல் | குற்றவியல் | காதல் | நடைச்சித்திரம் | குற்றவியல் | குற்றவியல் | உளவியல் | இயற்கை இறந்த | குற்றவிய |

பின்னிணைப்பு • 3


நாவல்களின் பகுப்பு
(ஆசிரியர் அடிப்படையில்)
மொத்தம்
96
ஆண்கள்
எழுதியவை
51
பெண்கள்
எழுதியவை
45
ஒரே நாவல்
எழுதியோர்
15
இரு நாவல்கள்
எழுதியோர்
4
சாலி·
ஜே·எம்
பட்டுக்
கோட்டை
பிரபாகர்
மணி
சேக
ரன்·
கோவி·
ஜெய
காந்
தன்
3 நாவல்கள்
எழுதியோர்
2
ராஜேஷ்
குமார்
ஹேமா
ஆனந்த
தீர்த்தன்
4 நாவல்கள்
எழுதியோர்
2
பி.வி
ஆர்
மகரிஷி
6 நாவல்கள்
எழுதியவர்
புஷ்பா
தங்கதுரை
8 நாவல்கள்
எழுதியவர்
ராஜேந்திர
குமார்
ஒரே நாவல்
எழுதியோர்
12
இரு நாவல்கள்
எழுதியோர்
2
கோமகள்
தாமரை
செந்தூர
பாண்டி
3 நாவல்கள்
எழுதியவர்
வாஸந்தி
4 நாவல்கள்
எழுதியோர்
2
சிவ
சங்கரி
விமலா
ரமணி
5 நாவல்கள்
எழுதியவர்
இந்துமதி
6 நாவல்கள்
எழுதியவர்
அனுராதா
ரமணன்
7 நாவல்கள்
எழுதியவர்
லக்ஷ்மி

## பின்னிணைப்பு-4

நாவல்களின் பகுப்பு
(கதைக்கரு அடிப்படையில்)

மொத்தம் 94

- அறிவியல் 2
- இயற்கை இறந்த ஆற்றல் 2
- நடைச் சித்திரம் 2
- முதியோர் காதல் 2
- வரலாறு 3
- சமுதாயம் 4
- காதல் 8
- உளவியல் 10
- குடும்பம் 20
- பெண்கள் 20
- குற்றவியல் 21

## பின்னிணைப்பு

### 82-இல் வெளிவந்த குறும் புதினங்களில் சில.

### அமுதசுரபி.

வெண்முகில் பெய்த தண் மழை — கு. ராஜவேலு (மே)

பாளையப் பிரவேசம் — கிருஷ்ணமணி (ஜூன்)

பச்சைக்கல் பரதேவதை — பொன். பரமகுரு (ஆகஸ்டு)

வாழ்வெனும் ஊஞ்சல் — ஏ. நடராசன் (அக்டோபர்)

மழை — அனுராதா ரமணன் (நவம்பர்)

ஜோசப் பாதிரியார் — பகீரதன் (டிசம்பர்)

### கணையாழி

கழுகு அழுதது★ — கண்ணன் பாலா (ஜூன்)

பெரியவர்கள்★ — விமலாதித்த மாமல்லன் (ஜூலை)

கொடு கொட்டியாட்டம்★ — ஏ. நாகராசன் (ஆகஸ்டு)

இரவல் தாய்நாடு — செ. யோகநாதன் (செப்டம்பர்)

ஸ்காட் ஒளித்த கடிதம் — 'தூன்' (அக்டோபர்)

சில மாறுவேடங்கள் — ஐசக் அருமைராசன் (நவம்பர்)

அதிர்ந்த இரவு — கிருஷாங்கினி (டிசம்பர்)

### கலைமகள்

முழுநிலவில் இரு பைத்தியங்கள் — ர. சு. நல்லபெருமாள் (மே)

இதோ ஒரு சாவித்திரி★ — அய்க்கண் (ஜூன்)

ஊமைக்குயில்★ — 'ரத்னா' (ஜூலை)

திடீர்க் குபேரர்கள்★ — பெரி. சோமசுந்தரம் (ஆகஸ்டு)

விடுதலை — கிருஷ்ணமணி (நவம்பர்)

### கல்கி

ஒன்றும் ஒன்றும் ஒன்று — சவீதா (ஏப்ரல்)

அகழி — சுபா (தீபாவளி மலர்)

## மங்கையர் மலர்

ஒரு ஜோடிச் சலங்கைகள் — கல்பனா (சனவரி)

சீதை இல்லாத ராமாயணம் — வையவன் (பிப்ரவரி)

பொய்களுக்கு நடுவே ஒரு பூர்ணிமா — பி. வி. ஆர் (மார்ச்)

தீக்குரல் விரலை வைத்து—சுபா (ஏப்ரல்)

எழுந்திரு, பறந்து—மாலன் (மே)

சின்னஞ்சிறு வயதில்—விமலாரமணி (ஜுன்)

நாடிவந்த நேரத்தில்—வாசந்தி (ஜுலை)

கூவ முடியாத குயில்கள்—லட்சுமி ராசரத்தினம் (ஆகஸ்டு)

சிநேகிதி—அனுராதா ரமணன் (செப்)

ஜீவநதிகள்—ஜெயரதன் (அக்)

கோடை மேகங்கள்— லட்சுமி (நவம்)

★ உடுக்குறி இட்டவை அந்தந்த இதழ்கள் நடத்திய குறும் புதினப் போட்டியில் பரிசு பெற்றவை.

# 3. மேடை நாடகம்

மு. தங்கராசு

*1982-ஆம் ஆண்டு நாடகங்களில் ஒரு சில தவிர மொத்தமும் நகைச்சுவைக் குவியல்களே சென்ற ஆண்டுகளில் நல்ல வெற்றி கண்ட நாடகங்களின் சாயலைப் பல நாடகங்களில் காண முடிகின்றது. இது நாடக வளர்ச்சிக்கு நல்லதல்ல. தமிழ் உணர்வும் தமிழறிவும் படைத்த ஒரு சிலராவது மேடை நாடகங்களைப் படைக்க முயற்சி மேற்கொள்ள வேண்டும்.*

1982 ஆம் ஆண்டில் நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ் நாடகங்கள் மேடையேறியுள்ளன. அவை பல்வேறு அரங்கங்களின் வாயிலாக ஆயிரக்கணக்கான முறை நடிக்கப்பெற்றுள்ளன. இலட்சக்கணக்கானவர்கள் கண்டுள்ளனர். இந்த எண்ணிக்கை ஒரு பெரிய சாதனையோ, அல்லது வியப்புக்குரிய ஒன்றோ அன்று. இது கடந்த சில ஆண்டுகளாக இருந்துவரும் நடைமுறையாகும்.

இத்தகைய நாடகங்களின் கதைகளைச்சொல்லி, காலத்தையும் பக்கத்தையும் வீணாக்கத் தேவையில்லை. இன்னொன்று, கதையென்று நோக்கினால் ஏமாற்றம் உண்டாகவும் செய்யும். ஆகையால், ஒரு சில நாடகத்திற்கு அடிப்படையாக அமைந்த செய்திகள் அல்லது கதைக்கரு எவை என்பதனை மட்டும்காணல் பொருந்தும்.

## 1. துருப்புச் சீட்டு

இந்த நாடகத்தின் பெயர் ஆங்கிலத்தில் அமைந்தது. இதற்கு ஆசிரியர் பிரபு இட்டுள்ள பெயர் 'டிரம்ப் கார்டு' என்பதாகும். பிரபு எழுதிய இந்த நாடகத்தை 'ஸ்டேஜ் இமேஜ்' குழுவினர் நடித்தனர். சட்டம் மனிதனைக் காக்க முயலுவதைவிட அவனைத் தன் முரட்டுக் கரங்களுக்குள் அடக்கிடவே பெரிதும் முயல்கின்றது என்பதுதான் இந்நாடகத்தின் அடிப்படைக் கருவாக அமைந்துள்ளது.

2. கல்யாணம் பண்ணிக்கலாம் வா!

இது ஒரு நாடகத்தின் தலைப்பு. எழுதி இயக்கியவர் கஸ்தூரி ரங்கன். இந்நாடகத்தைச் சூப்பர் ஸ்டேஜ் குழுவினர் மேடையேற்றினர்.

பெரியவர்கள் பேசி முடிக்கின்ற திருமணத்தில் மனநிறைவு இல்லாத பெண்ணும் பிள்ளையும் (கதாநாயகன், நாயகி), அவரவர் வீட்டுப் பெ)றோர்களுக்குத் தெரியாமல் ஓடிவிடுகிறார்கள். ஒரு சூழலில் சந்திக்கிறார்கள். பெரியவர்களும் அவர்களின் வழியிலே அவர்களை விட்டுத் திருமணத்தை முடித்து வைக்கிறார்கள்.

3. படி தாண்டிய பதி

ஸ்டேஜ் கிரியேசன்ஸ் நடித்த இந்த நாடகத்தைக் கசேந்திர குமார் எழுதியுள்ளார். பேராசை மனிதனுக்கு வரக்கூடாது. அதுவும் பெண்களுக்கு உண்டாகும் பேராசைக் குடும்பத்தையே பாழ்படுத்திச் சீரழித்து விடும் என்பதுதான் இந்நாடகத்தின் கரு.

4. நெஞ்சங்கள் வாழ்த்தட்டும்

பரத் எழுதியது. சௌமியா குழுவினர் நடித்துள்ளனர். இந்த நாடகத்தின் கதைத் தலைவன் எதற்கும் கணக்குப் பார்க்கிறவன். தன் மனைவிக்கு அழகு தேவையில்லை; சம்பாதிக்கிறவளாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறான். இதற்கிடையில் அவன் குடியிருக்கும் வீட்டுச் சொந்தக்காரருக்கு உண்டாகும் சந்தேகம், நாடகத்தை விறுவிறுப்பாக்கப் பயன்படுகிறது. இறுதியில் சந்தேகம் தீர்கிறது. கதைத் தலைவன் எதிர்வீட்டுப் பெண்ணை மணக்கிறான். இந்த நாடகம் கதை சொல்லும் நாடகம்.

5. ரூபாய்க்கு மூணு கொலை

வியட்நாம் வீடு சுந்தரம் எழுதி, யு.ஏ.ஏ. குழுவினர் நடிக்கும் நாடகம் இது. ஒருவன் அப்பாவியாகவும் இருக்க முடியும்; அவனுள்ளேயே கொடிய மிருகத்தனமும் இருக்கமுடியும்என்பதனை காட்டும் நாடகம் இது. பகலெல்லாம் அலுவலகத்தின் மற்றவர்களின் எடுபிடி ஆளாகப் பயன்படுகிற சுப்பு, இரவில் ஆல்பெர்ட்டாக மாறி அட்டகாசம் செய்கின்றான். இந்த இரண்டு குண நலன்களையும் வளர்த்துக் காட்டுவதே நாடகமாக அமைகின்றது.

6. தொடரும் அத்தியாயம்

பரத் எழுதி டி.ஆர். சக்ரவர்த்தி இயக்கிய இந்த நாடகம் சாந்திநிகேதன் குழுவினரால் அரங்கேற்றம் பெற்றது.

மரண பயம் ஒன்றுதான் மனிதனைக் கட்டுப்படுத்துகிறது. அவனை இறை வழிபாட்டில், அற ஈடுபாட்டில் செலுத்துகிறது. மரண பயம் இல்லையென்றால் ஒவ்வொரு மனிதனும் ஒரு அரக்கனாகத்தான் இருப்பான் என்கிற கருத்தினை அடிப்படையாக வைத்து எழுதப்பெற்ற நாடகம்.

7. நீயும் பொம்மை நானும் பொம்மை

பவித்திராலயா குழுவினரால் நடிக்கப் பெற்ற இந்நாடகம் வெங்கட் எழுதியது.

பெண்களுக்கு அகம்பாவம் இருப்பது ஆபத்தானது. அதுவும் திருமணமான பின்னர் உள்ள அகம்பாவம் அவர்களின் வாழ்வையே சிதைத்துச் சீரழித்துவிடும் என்ற கருத்தினைக்கொண்டு எழுதப் பெற்ற நாடகம் இது. அகம்பாவத்தால் செய்யும் அநியாயங்களுக்கு மன்னிப்பே இருக்கக்கூடாது என்பது போன்ற முடிவோடு இந்த நாடகம் நிறைவு பெறுகின்றது.

8. யுக மகா புருஷர்கள்

சிவரஞ்சனி குழுவிற்காக முரளிமனோகர் எழுதி இயக்கி நடித்தது இந்நாடகம்.

ஏற்கனவே மேடையில் வலம்வந்த மோடிமஸ்தான், சுப முகூர்த்த பத்திரிகை ஆகிய இரண்டு நாடகங்களின் சாயலும் முதலில் இந்நாடகத்தில் இருந்து, பின்னர் திசை திரும்புகிறது. இந்த உலகத்தில் யார் எதற்கும் கவலைப்படாத சுயநலவாதியாக இருக்கிறார்கள்? அவர்களுக்குப் பணம் மட்டும்தான் முக்கியம். மானம்கூட அவ்வளவு முக்கியமல்ல. கல் நெஞ்சம் படைத்த அத்தகையவர்கள் எதைச் செய்யவும் தயங்குவதில்லை என்பதனை விளக்குவது இந்த நாடகத்தின் நோக்கமாகும்.

9. அவர்கள் அப்படித்தான்

பேக்ட் கலைக் குழுவுக்காக எழுதி இயக்கியவர் கோவை அனுராதா. மாமியார் மருமகள் சிக்கலை வழக்கமான பாணியில் சொல்லாமல், மாறுபட்ட கோணத்தில் காட்ட முயன்றுள்ளார். மாமியார், மருமகள் இருவரின் மனநிலையையும் ஆராயும் மாறுபட்ட நாடகம் இது. கதையில் அழுத்தம் அதிகம் என்று சொல்ல முடியாததற்குக் காரணம், நகைச்சுவைக்கு அதிக இடம் வழங்கப் பெற்று விட்டதே ஆகும்,

10. இதயம் பேசுகிறது

திரைப்பட இயக்குநர் எம். பாஸ்கர் கதைக்கு, சண்முகப் பிரியனும், ஈசுவரனும் உரையாடல்களைத் தீட்டியுள்ளனர்.

இந்நாடகம் உத்தராஸ் நாடகக் குழுவினரால் மேடையேறியது.

மனைவியை இழந்த ஒரு பேராசிரியர், அவரை மாணவி காதலிக்கிறாள். அவளை வேறொரு மாணவன் காதலிக்கிறான். இந்த மூவரின் மனப் போராட்டம்தான் இதயம் பேசுகிறது நாடகம்.

**11. அவனுடைய செல்லம்மா**

கண்ணன் எழுதி இயக்கிய இந்நாடகம் கிரியேட்டிவ் எண்டர்டெயினர்ஸ் குழுவினரால் நடிக்கப்பெற்றது.

ஒரு குடும்பத்தில் நிகழும் சில நிகழ்ச்சிகள் எப்படி எதிர் பாராத திருப்பங்களை உண்டாக்கி விடுகின்றன என்பதனைத் தெரிவிக்கும் நாடகம் இது. இந்த நாடகம் நகைச்சுவையும், உணர்ச்சி வேகமும் கலந்த ஒன்று.

**12. கோபுரம் தாங்கும் பொம்மை**

நாடக மந்திர் குழுவிற்காகச் சௌந்தர்யன் எழுதிய இந் நாடகத்தை இயக்குபவர் மாலி.

கதைத்தலைவன், முதல் மனைவிக்குத் தெரியாமல் இன் னொரு பெண்ணை ஏமாற்றுகிறான். வேலையில்லாத நிலையில் இருந்தாலும் தன் கணவன்தான் உயிர் என்று இருந்த முதல் மனைவிக்கு இச்செய்தி தெரிந்ததும் அவனை வெறுக்கிறாள். எதிர்பாராத விதமாகக் கணவனால் கெடுக்கப்பட்ட பெண்ணைத் தானே காப்பாற்றும் பொறுப்பினை ஏற்கிறாள். சிறிது காலம் கடந்து கணவன் வசதியோடு வருகிறான். அப்போது இரண்டு பெண்களுமே அவனை ஏற்க மறுத்துவிடுகின்றனர்.

இரண்டு மனைவிகளைப் பற்றிய இந்நாடகம் சுவையான நிகழ்ச்சிகளின் மூலம் முன்னேறிச் செல்கிறது. முடிவும் தவறு செய்கிறவர்களுக்குத் தண்டனை உண்டு என்று அமைகின்றது. பழைய கருத்தினைப் புதிய கோணத்தில் பார்த்திருக்கிறார் சௌந்தர்யன்.

**13. பிஞ்சு நெஞ்சம்**

கங்கா கிரியேஷன்ஸார் நடித்த இந்த நாடகத்தைப் பேரா சிரியர் மலையசாமி எழுதியுள்ளார். இயக்கியவர் டாக்டர் மல்லை முத்தரசன்.

பெற்றோர் பாசம் இல்லாவிட்டால், ஒரு குழந்தைக்கு வேறு எத்தனை வசதிகள் இருந்தும் பயனில்லை என்பதனையும், தாய்ப் பாசத்தோடு வளர்க்கப்படாத பிள்ளை தகாத முறையில்

ஈடுபடுவதைத் தடுக்க முடியாது என்பதனையும், இன்றையச் சமுதாயச் சீர்கேட்டிற்குக் காரணமே, பல பிள்ளைகள் பெற்றோரின் அன்பான அரவணைப்பில் ஆளாவாததுதான் என்பதனையும் அடிப்படையாக வைத்துத் தீட்டியுள்ளார் இந்நாடக ஆசிரியர். சமுதாய உணர்வோடு தீட்டப்பெற்ற நாடகம் இது.

**14. 27-7-1974.**

அகஸ்டோ எழுதிய இந்த நாடகம் ஸ்ரீசக்தி குழுவினரால் நடிக்கப் பெற்றது. இது ஒரு வேட்கை தூண்டும் (சஸ்பென்ஸ்) நாடகம்.

27-7-1974 அன்று நடந்த ஒரு நிகழ்ச்சியை வைத்துச் சுவையாக அமைத்துள்ளார் நாடகாசிரியர் அகஸ்டோ. தேவையான அளவுக்கு நகைச்சுவையும் இணைந்த விறுவிறுப்பான துப்பறியும் நாடகமாக இது அமைந்துள்ளது.

**15. பாரா உஷார்**

இந்நாடகத்தை எழுதியவர் சந்தானம். கீத்மாலிகா குழுவினர் நடித்துள்ளனர். இந்த நாடகமும் வேட்கை வளர்ப்பு (சஸ்பென்ஸ்) நாடகப் பாணியில் அமைந்ததுதான். ஆனால் இந்நாடகத்தின் ஆசிரியர் கையாண்டுள்ள இரட்டைப் பொருள் தரும் தரக்குறைவானஉரையாடல்கள் நாடகத்தின் தரத்தையே குறைத்துவிடுகின்றன.

**16. ஞானயோகம்**

இது ஒரு புதுமையான கதையமைப்பு உடைய நாடகம். இந்த நாடகம் ஐ. என். ஏ. தியேட்டர்ஸ் குழுவினரால் நடத்தப் பெற்றது. எழுதியவர் கே. கே. இராமன்.

இந்த நாடகத்தில் சாரதி என்ற ஒரு பெரும் பணக்காரர் வருகிறார். அவர் பாத்திரம்தான் நாடகத்தின் முழு பொறுப்பையும் ஏற்கிற கதைப்பாத்திரம். அந்தப் பணக்கார சாரதிக்கு ஒரு பெரிய சந்தேகம் வருகிறது. இதனைச் சந்தேகம் என்பதை விட ஆசை என்று கூறலாம். அதாவது, தான் அரும்பாடுபட்டு ஈட்டிய கோடிக்கணக்கான சொத்துக்களையும் இறந்தபின்னரும் ஏன் தானே எடுத்துக்கொண்டு போகக்கூடாது என்பதுதான் அந்த ஆசை. அதற்கு வழி கண்டாகவேண்டும் என்று தன்னிடம் வேலைபார்க்கும் அத்தனை சக்திகளையும் அந்த வழியினைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபடுமாறு செய்கிறார். எவருக்கும் இதுபற்றி ஒன்றும் விளங்கவில்லை. இறந்த பின்னர் எப்படி மொத்த சொத்துக்களையும் ஒருவன் தன்னுடன் எடுத்துச்

செல்ல இயலும்? என்று கேட்டுத் தலையைப் பிய்த்துக் கொள்கிறார்கள்.

இந்நிலையில் சாரதியின் கம்பெனியில் சாதாரண தட்டச்சுப் பார்க்கும் ஒருவர் தான் அந்த வழியினைக் கூறமுடியும் என்கிறார். சாரதியும் மகிழ்ந்து, அந்தவழியைக் கூறுமாறு வேண்டுகிறார். ஒரு குறிப்பிட்ட நாளில் கூறுவதாகக் கூறிவிடுகிறார் அந்த ஆள்.

தட்டச்சு எழுத்தர் ஒருவர், ஒருவன் இறந்தபின் அவனுக்கு உரிமையான எல்லாவற்றையும் உடன் எடுத்துச் செல்லலாம் என்ற வழியைக் கண்டுபிடித்து விட்டார் என்ற செய்தி நாடு முழுவதும் பரவுகிறது. பத்திரிகைக்காரர்கள் அவன் இருக்கும் இடத்திற்கு விரைகிறார்கள். பாராளுமன்றம் இதுதொடர்பாகக் கூட்டப்பெறுகிறது. உலக நாடுகளில் உள்ள பொருளாதார மேதைகள் எல்லாம் கூடிப் பேசுகிறார்கள். இப்படி ஒரு பரபரப்பு ஏற்படுகிறது.

குறிப்பிட்ட நாளில் சாரதி தனக்கு அந்த வழியைக் கூறுமாறு கேட்கிறார். அப்போது அவன் ''நீங்கள் இங்கிருந்து அமெரிக்காவுக்குப் போனால், இந்தியப் பணத்தை எடுத்துச் செல்வீர்களா? அல்லது அதற்குப் பதிலாக அமெரிக்க டாலராக மாற்றி எடுத்துச் செல்வீர்களா'' என்று கேட்கிறான். பணக்காரர் சாரதி, ''டாலராக மாற்றித்தான் எடுத்துச் செல்வேன்'' எனப் பதில் அளிப்பதோடு, ''இந்தியப்பணம் எப்படி அமெரிக்காவில் செல்லும்'' என்றும் கேட்கிறார். உடனே எழுத்தர் கூறுகிறார்; அதே போலத்தான் நீங்கள் உங்கள் சொத்துக்கள் முழுவதையும் மேல் உலகத்தில் உள்ள பணமாக மாற்றிவிட்டால் சுலபமாக எடுத்துச் செல்லலாம், அங்கு அது உங்களுக்குப் பயன்படும் என்கிறான். மேலுலகப் பணமாக எப்படி மாற்றுவது என்ற வினாவுக்கு, தர்மமாகவும், புண்ணியமாகவும் நீங்கள் உங்கள் பணத்தை இங்குச் செலவிட்டால், அது மேலுலகில் உங்கள் கணக்கில் பத்திரமாக இருக்கும். அமெரிக்கா போகும்போது, இந்தியப் பணத்தை இந்தியாவில் கட்டிவிட்டு, அமெரிக்காவில் அமெரிக்க டாலர் பெறுவது போன்று என்று கூறுகிறான். இப்படி இந்த 'ஞான யோகம்' நாடகம் அமைந்துள்ளது. இது கே. கே. இராமனின் புதுமையான நாடகம்.

### 17. மீண்டும் சுப்ரபாதம்

இந்நாடகம் ஓம் கணேஷ் குழுவினரால் நடிக்கப்பெற்றது. எழுதி இயக்கியவர் இரமணி. இதனை மிகச் சிறந்த நாடகம்

என்று போற்றாவிட்டாலும் பாராட்டலாம். ஓரளவுக்கு கதையும் இணைந்த நாடகம்.

ஒரு பெண்ணின் மனத்துணிவை அடிப்படையாக வைத்து எழுதப்பெற்ற நாடகம் இது. பல கம்பெனிகளையும், எஸ்டேட்களையும் மிகச் சாதாரணமாக நிர்வாகம் செய்யும் ஒரு பெண், தன் காதல் என்று வருகிறபோது எப்படிக் குழைந்து போகிறாள் என்பதனைக் காட்டும் நாடகம் இது.

## 18. தர்ம பத்தினிகள்

தங்கையைக் கெடுத்தவிட்டதோடு கொலையும் செய்துவிட்டான் என்று அறிந்தும் கணவன் பக்கமே வாதாடும்மனைவி; தன் மகளைக் கெடுத்ததுடன் தன் வளர்ப்பு மகனையும் கொலை செய்துவிட்ட மருமகனைத் தூக்கில் தொங்கவிடவேண்டும் என்று அயராது முயன்று வருகின்ற வக்கீல் மாமியார்; அம்மாவுக்கும் அக்காவுக்கும் இடையில் நிற்கும் கெடுக்கப்பட்டவள்; இந்த மூன்று பேருடைய போராட்டங்கள்தான் நாடகம். எப்படியும் முயன்று மருமகனுக்குத் தூக்குத்தண்டனை வாங்கித் தந்துவிட்டுத் தன் மூத்த மகளுக்கு வெள்ளைப் புடவையும் வாங்கி வருகிறாள் தாய். அந்த வெள்ளைப் புடவையைக் கெடுக்கப்பட்டவள் உடுத்துக்கொண்டு வந்து நிற்கிறாள். இப்படி இந்த நாடகம் அமைந்தது.

ஸ்ரீ அம்மன் கிரியேஷன்ஸ் குழுவினர் நடிக்க இந்த நாடகத்தை எழுதியவர் மணிமோகன்.

## 19. தேவை ஒரு பிரம்மச்சாரி

இந்நாடகம் 'வாண்டட் ஏ பேச்சலர்' என்ற ஆங்கிலத் தலைப்புடன் நடத்தப்பெற்றது. ரகு எழுதிய இந்நாடகத்தைப் பிரியா ஸ்டேஜ் குழுவினர் நடித்தனர்.

## 20. நாரதரும் நாலு திருடர்களும்

தில்லைராசன் கதைக்கு வாசு உரையாடல்களைத் தீட்ட, நாடக மத்திர் குழுவினர் நடித்துள்ளனர். இந்நாடகத்தை இயக்கியவர் தில்லைராசன்.

விண்ணுலக நாரதர் மண்ணுலகில் வந்து இங்குள்ள மனிதர்களிடையே மாட்டிக் கொண்டு எப்படியெல்லாம் அல்லல் படுகின்றார் என்பதனைக் காட்டும் நகைச்சுவை நாடகம்.

## 21. மேரேஜ் மேட் இன் சலூன்

இது ஒரு தமிழ் நாடகம். எழுதியவர் கிரேசி மோகன். இந்நாடகத்தை கிரேசி கிரியேஷன்ஸ் குழுவினர் நடித்தனர்.

ஒரு பெண்ணுக்குத் திருமணம் செய்வதற்காகக் குறுக்கு வழியில் செல்லும் ஒரு தந்தையை அடிப்படையாக வைத்து அமைக்கப் பெற்றது இந்நாடகம்.

பத்மநாப ஐயர் ஒருநாள் ஓர் இளைஞனைச் சந்தித்து ஒரு பந்தயம் கட்டுகிறார். இன்னும் ஓராண்டில் தன் மகளை அந்த இளைஞன் காதலித்துக் காட்டவேண்டும் என்பதுதான் அந்தப் பந்தயம். அதுவரையில் இந்தப் பந்தயம் பற்றிய செய்தியையும் வெளியில் சொல்லக் கூடாது என்பது நிபந்தனை. பந்தயத்தில் வெற்றிபெற அந்த இளைஞன் செய்யும் முயற்சிகள் யாவும் நகைச்சுவையோடு அமைக்கப் பெற்றுள்ளது. இறுதியில் தான் தெரிகிறது, பத்மநாப ஐயர் இப்படியாவது தன் பெண்ணுக்குத் திருமணம் ஆகாதா என்ற ஆசையில்தான் பந்தயம் கட்டினார் என்று.

## 22. இண்டியா டுடே

இந்த ஆங்கிலத் தலைப்பில் நாடகம் எழுதியுள்ளவர் தமிழ்க் கவிஞர் வாலி. கண்ணம்மா கிரியேஷன்ஸ் குழுவினர் நடித்துள்ளனர்.

தமிழ்க் கவிஞர் வாலி ஆங்கிலத் தலைப்பில் எழுதிய இந்த நாடகத்தில் சிலையாக இருந்த பாரதியார் உயிர்ப்பெற்று வந்து, இந்த இந்தியத் திருநாட்டைக் காண்கிறார். இந்த நாட்டின் இன்றைய நிலை கண்டு வேதனைப் படுகிறார் பாரதி. தான் கண்ட கனவுக்கும், இன்று நடப்பதற்கும் முரண்பாடு உள்ளதே என்று வருந்தி மீண்டும் சிலையாகி விடுகிறார் பாரதியார்.

பாரதியின் நூற்றாண்டு விழாவிற்காக வாலியால் எழுதப் பெற்ற இந்த நாடகம் எந்த வகையிலும் சிறந்ததாக அமைய வில்லை. தெளிவு மிகக் குறைவு. சில ஆங்கிலச் சொற்களுக்கு இரட்டைப் பொருள் கூறி தன் திறம் காட்ட முயன்ற வாலி, நல்ல நாடகமாகப் பாரதிக்குப் படைக்க இயலாதவராகி விட்டார் பாரதி நூற்றாண்டு விழாவில் பாரதியின் நினைவாக எழுதப்பெற்ற இந்த நாடகத்துக்கு ஆங்கிலத் தலைப்பிட்டதே பாரதியின் எண்ண எழுச்சிக்கு இழுக்கு உண்டாக்குவதாகும்.

## 23. மானிடத்தின் மகாகவி

இந்நாடகத்தை எழுதியவர் சி. வி. எம். இரமணா. சேவா ஸ்டேஜ் குழுவினர் மேடை ஏற்றினர். இது தமிழ்நாடு அரசு எட்டயபுரத்தில் கொண்டாடிய பாரதியார் விழாவிலும், பாண்டிச்சேரியில் அரசு சார்பில் நடந்த பாரதியார் விழாவிலும் நடைபெற்றது.

பாரதியார் தம் வாழ்வின் நாயகர்களான காந்தி அடிகள், வ. வே. சு. ஐயர், வ. உ. சி. போன்றவர்களைச் சந்தித்த நிகழ்ச்சிகள் உணர்ச்சிப் பூர்வமாக இந்நாடகத்தில் இடம் பெற்றுள்ளன.

**24. மருது பாண்டியர்**

இராஜா தியேட்டர்ஸ் குழுவினரால் நடிக்கப்பெற்ற இந் நாடகத்தை எழுதியவர் சம்பத். மருது பாண்டியர் வாழ்நாளில் அடங்கிய உணர்ச்சிமிகு நிகழ்ச்சிகளைத் தொகுத்து நாடகமாக்கி யுள்ளார் சம்பத். நகைச்சுவை கொஞ்சமும் இல்லாத ஒரு நல்ல நாடகமாக மருது பாண்டியர் அமைந்துள்ளது.

**25. எமதர்மன்**

ஸ்ரீகவி எழுதி ஹெரான் தியேட்டர்ஸ் குழுவினரால் நடிக்கப் பெற்ற நாடகம் எமதர்மன்.

எமதர்மனின் கடமைகளை விளக்கும் அருமையான புராண நாடகம் இது. இனிமையான தமிழில் உரையாடல்களை எழுதி யுள்ளார் ஸ்ரீகவி. எமன் யார் யாரை எப்படி எப்படிக் கொண்டு செல்கிறான் என்பதையும், எமனிடமிருந்து எவரும் தப்பவே முடியாது என்பதனையும், எமன் கடமைகளில் கவனமாக இருக்கும் முறையினையும் ஸ்ரீகவி தெளிவாக எழுதிக் காட்டி யுள்ளார்.

**26. கருணை தெய்வம் கந்தன்**

இது பக்தி நாடகம். முருகப் பெருமானின் அருட் திறத்தி னைப் படம் பிடித்துக் காட்டும் நாடகம் இது. இந்நாடகத்தை எழுதியவர் காஞ்சி ரங்கமணி.

**27. ஒரு இந்தியக் கனவு**

கோமல் சுவாமிநாதன் எழுதிய இலக்கிய நாடகம் ஒரு இந்தியக் கனவு. ஸ்டேஜ் பிரண்ட்ஸ் குழுவினர் நடித்தனர்.

இது சமுதாய விழிப்புணர்ச்சி நாடகமாகக் கருதப்படும். சமுதாயத்தில் நடைபெறும் ஏற்றத்தாழ்வுகளையும், ஏமாற்றங் களையும் ஏன், எப்படி நிகழ்கின்றன என்று படம் பிடித்துக் காட்டுவதுதான் ஆசிரியரின் நோக்கம். அரசியல் கலந்தது.

இன்னும், ஜகதீஷ் எழுதி இயக்கிய ராதை தேடிய கண்ணன் ‘இதயதாசன் எழுதி இயக்க வீட்டுவசதி வாரியத்தின் நுண் கலைக் குழுவினர் நடித்த தகுதி நெல்லை ராஜசிங் கதைவசனம் எழுத, எம். எம். ஏ. நவமணி இயக்கிய மாறியது நெஞ்சம், துரை பாண்டியன் எழுதி இயக்க, எழில் கலைக் குழுவினர் நடித்த ஜீவ

காவியம் இப்படிப் பல நாடகங்களைக் குறிப்பிட்டுக் கொண்டே போகலாம்.

**நாடக உத்திகள்**

1982ஆம் ஆண்டில் மேடை நாடக வல்லுநர்கள் கையாண்ட புதிய உத்தி என்று குறிப்பிட்டு எதையும் சொல்லுதற்கில்லை. முன்னர்க் கையாளப் பெற்றவை இடையில் கைவிடப்பட்டு மீண்டும் கையாளப் பெறுகின்ற சூழ்லும் உண்டாகியுள்ளது. எடுத்துக்காட்டாகக் கூறவேண்டுமானால் நாடகக் காட்சிகளின் போது பொருத்தமான திரைப்பாடல்களை ஒலிக்கச் செய்வது. இது இந்த ஆண்டின் பல நாடகங்களில் இடம்பெற்றது.

சிவ தாண்டவம் நாடகத்தின் மூலம் மனோகர் அறிமுகப் படுத்திய வேக ஒளிப்பாய்ச்சும் உத்தியும் இந்த ஆண்டின் பல நாடகங்களில் இடம்பெற்றது.

**1982 இல் மேடைக்குப் புதியவர்கள்**

புகழோடு விளங்கிய பலர் மேடையிலிருந்து திரைக்குச் சென்று விட்டதனால் புதியவர்கள் பலர் வந்திருக்கின்றனர். 'ராதை தேடிய கண்ணன்' நாடகத்தை எழுதிய ஜகதீஷ், 'அவர்கள் அப்படித்தான்' நாடகத்தை எழுதிய கோவை அனுராதா, பிஞ்சு நெஞ்சம் எழுதிய பேராசிரியர் மலையசாமி போன்றவர்களும் இன்னும் பலரும் இந்த ஆண்டு மேடை நாடகத்துறையில் புதியவர்களாக அடியெடுத்து வைத்துள்ளனர். இதயம் பேசுகிறது' கதையை எழுதிய திரைப்பட இயக்குநர், எம். பாஸ்கரும், அதன் உரையாடல்களைத் தீட்டிய சண்முகப் பிரியன், ஈசுவரன் ஆகியோரும் மேடைக்குப் புதியவர்களே. வந்தவர்கள் பலர். நிலைக்கப் போகிறவர்கள், நிலையான நாடகங்களைப் படைக்கப் போகிறவர்கள் எத்தனைப் பேர் என்பதனை இனிப் பொறுத்திருந்து தான் காணவேண்டும்.

**மேடை நாடகமும் மன்றங்களும்**

இங்கு மன்றங்கள் என்று குறிக்கப் பெறுவது சபாக்கள். சென்னையில் இத்தகைய மன்றங்கள் நூற்றுக்கணக்காக இருக்கின்றன. இந்த மன்றங்களின் நிலையான அங்கத்தினரின் பெருந் துணையால் நாடகங்களை நடத்தி வருகின்றனர்.

இம் மன்றங்களில் 'கார்த்திக் பைன் ஆர்ட்ஸ்' மன்றமும் மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்பும்' குறிப்பிடப் பெறவேண்டிய இரு மன்றங்களாகும். இந்த இரு மன்றங்களும்தான் பெரும்பாலான நாடகங்களை அரங்கேற்ற வழிவகுக்கும் மன்றங்கள்,

1982 ஆம் ஆண்டு புதிதாகத் தோன்றிய மன்றங்கள் ஏறத் தாழப் பத்துக்குமேல் இருக்கும் குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்குச் சாதனைகளைச் செய்த புதிய மன்றம் எதுவும் இல்லை.

### மேடை நாடகமும் அரங்கங்களும்

சென்னையில் நாடகம் நடைபெறும் அரங்குகள் பல இருக் கின்றன. எந்த நாளும் தவறாது நாடகம் நடக்கும் அரங்கமாகத் திகழ்வது ராஜா அண்ணாமலை மன்றம் மட்டுமே. ஞாயிறு, மற்றும் முக்கியமான விடுமுறை நாட்களில் காலைக் காட்சி நாடகங்களும் இந்த அரங்கத்தில் நடைபெற்று வருகின்றது. ஆர். ஆர். சபாவும், மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப் அரங்க மும் மிகவும் குறிப்பிடப் பெறவேண்டிய அரங்கங்களாகும். இந்த இரண்டு அரங்கங்களில்தான் பெரும்பாலான நாடகங்களின் அரங்கேற்றம் நிகழ்கின்றது.

வாணிமகாலிலும், எழும்பூர் அருங்காட்சியகக் கலையரங் கிலும், பல நாடகங்கள் அரங்கேற்றப் பெறுதல் உண்டு. பார்த்த சாரதி, ராஜா அண்ணாமலை மன்றம், கலைவாணர் அரங்கம் போன்ற அரங்கங்களில் ஒவ்வோர் ஆண்டும் சில நாடகங்களின் அரங்கேற்றம் நிகழ்வதுண்டு. இன்னும் வேறு சில அரங்கங்களி லும் சிலர் அரங்கேற்றம் செய்கின்றனர்.

### நாடகக் குழுக்கள்

இந்த ஆண்டு பல பழைய நாடகக் குழுவினர் தங்கள் புதிய நாடகத்தை மேடையேற்றவில்லை. அவர்களுக்கு ஈடாகப் புதியக் குழுக்கள் பெரும் அளவில் தோன்றவும் இல்லை. ஒருசில புதியக் குழுக்கள் தோன்றியுள்ளன. அவை இயங்கும் திறத்தினைப் பொறுத்திருந்துதான் காணவேண்டும். குறிப்பாக, மனோகர் 1982 ஆம் ஆண்டு எந்த நாடகமும் மேடைக்குக் கொண்டு வராததைக் குறிக்கலாம்.

### மேடை நாடகச் சுவைஞர்கள்

மேடை நாடகச் சுவைஞர்கள் என்று குறிப்பிடப்பட வேண் டியவர்கள் உறுப்பினர்கள்தான். இவர்கள் ஒவ்வொரு நாடகத் தையும் தங்கள் மன்றங்களின் (சபாக்கள்) உதவியால் காண்கின் றனர். இவர்கள் எல்லாம் மாதச் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ, அல்லது ஆயுள் சந்தாவாகவோ பணம் கட்டி மன்ற உறுப்பினர்களாக இருக்கின்றனர். நாடகச் சுவைஞர் களில் இன்னொரு சாரார் எந்த மன்றத்திலும் சேராமல் தங்க

ளுக்கு விருப்பமான நாடகங்களுக்குத் தாங்களாகவே நுழைவுக் கட்டணம் செலுத்தி நாடகம் பார்க்கின்றனர். இந்த இரு பிரிவினரும் ஏறத்தாழ எல்லா நாடகங்களையும் கண்டு சுவைக்கின்றனர்.

ஆனால் இவர்கள் சுவைத்து மகிழ்கின்ற அதே நாடகத்திற்கு, வெளியூரில் இருந்து வருகின்ற ஒரு நண்பரையோ உறவினரையோ அழைத்துச் சென்றாலும், அல்லது இல்லத்திலிருந்து புதிதாக ஒருவரை நாடகத்திற்கு அழைத்துச் சென்றாலும் சுவைத்துக் காணுவதில்லை. குறை சொல்லவோ, சலிப்பாகப் பேசவோ செய்கின்றார்கள்.

இது நாடகம் பற்றியத் திறனாய்வுக்குப் பெரிதும் பயன்படுகின்ற ஒரு வேறுபாடு. தனித் தலைப்பில் கட்டுரையாகஅமையும் அளவுக்கு இந்த இருபாலரிடையே உள்ள மனநிலை அமைந்துள்ளது.

**மேடை நாடகமும் பத்திரிகைகளும்**

எண்ணிக் கணக்கிட முடியாத அளவுக்குப் பத்திரிகைகள் பெருகியுள்ள காலம் இது. குறிப்பாகத் திரைப்படத் தொடர்பான பத்திரிகைகளின் எண்ணிக்கை எத்தனை என்று சொல்வது கடினம். இப்படிப் பல பத்திரிகைகள் இருந்தும் நாடகத்திற்குப் பத்திரிகைகள் இல்லை. தனியாக இல்லாவிட்டாலும், நாள் தோறும் வருகின்ற காலை, மாலை பத்திரிகைகளும், வாரப் பத்திரிகைகளும், மாதப் பத்திரிகைகளும் நாடகத்திற்கு முக்கிய இடம்தருகின்றனவா என்றால்இல்லை. இந்துபத்திரிகை,எக்ஸ்பிரஸ் பத்திரிகை போன்ற ஆங்கிலப் பத்திரிகைகள் வாரம் ஒருநாள் நாடகம் பற்றிய செய்திகள் வெளியிடுகின்றன. ஆனந்த விகடன் சில இதழ்களில் நாடகத் திறனாய்வு மட்டும் எழுதுகிறது. மற்ற பத்திரிகைகளுக்கு நாடகம் என்ற ஒன்று இருப்பதே தெரியவில்லை.

**நாடகச் சிறப்பிதழ்கள்**

பல பத்திரிகைகள் ஆண்டுக்கொருமுறை நாடகச் சிறப்பிதழ்களை வெளியிடுகின்றன. அந்த வகையில் 1982ஆம் ஆண்டும் சிறப்பிதழ்கள் வெளியிடப் பெற்றன. ஆனால் எந்தச் சிறப்பிதழும் 1982 ஆம் ஆண்டின் நாடகங்கள் பற்றிய தெளிவான செய்திகளைத் தாங்கி வரவில்லை. பெயருக்கு சிறப்பிதழ் வெளியிடும் பழக்கமாக உள்ளது.

**சபாநாயகன்**

இந்த ஒரு இதழ்தான் மேடை நாடகத்திற்கு என்று உள்ள இதழ். மன்றங்களின் (சபாக்கள்) விளம்பரங்களும், மற்றவை களும் அதிகமாக வருமாறு செய்து நாடகங்களுக்குத் திறனாய்வு செய்வதை ஒரு பகுதியாக அமைத்து வெளி வருகிறது. இப் பத்திரிகை. இது இன்னும் செம்மையாகவும் சீராகவும் வெளி வரலாம். இந்த ஓர் இதழ் தவிர வேறு தனி இதழ் நாடகத்திற்கு என்று இல்லாததே பெரிய குறையே.

**ஆய்வுரை**

இதுவரையில் கண்ட செய்திகள் அனைத்தும் 1982ஆம் ஆண்டு மேடை நாடகங்கள் பற்றிய பொதுச் செய்திகள். இனி, திறனாய்வு நோக்கில் சில கருத்துக்களைக் காணுதல் பொருந்தும்.

திறனாய்வு நோக்கில் 1982ஆம் ஆண்டு நாடக நிலை என்று காணும்போது குறிப்பிட்டுச் சொல்லும் சிறப்பு எதுவும் இருப்ப தாகத்தெரியவில்லை. பழைய நிலையைத்தொடர்ந்து பின்பற்றி வருகின்றார்கள். 1982ஆம் ஆண்டு நாடகங்களில் ஒருசில தவிர மொத்தமும் நகைச்சுவைக் குவியல்களே. இந்த நகைச்சுவை குவியல்களில் கருத்தாழம் உண்டா என்றால் அதுவும் இல்லை. பல நகைச்சுவைகள் பழையவை. இன்னும் பல இரு பொருள் தருபவை, இந்த இரு பொருள் தரும் நகைச்சுவையை இந்த ஆண்டு ஏராளமாகவும், தாராளமாகவும் சேர்த்துள்ளனர்.

கதைக் கரு என்று பார்த்தால் பல்வேறு துறைகளில் நுழை பவர்களாக யாரும் தென்படவில்லை. அல்லது பொதுமையான உயர்ந்த கருத்துக்களைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியும் யாரிடமும் இல்லை. சென்ற ஆண்டுகளில் நல்ல வெற்றி கண்ட நாடகங்களின் சாயலைப் பல நாடகங்களில் காண முடிகின்றது. இது நாடக வளர்ச்சிக்கு நல்லதல்ல. மேலும் திருமணத்திற்குப் பிள்ளை சில கட்டுப்பாடுகள் விதிப்பது போன்ற சில காட்சிகள், உரையாடல்கள் ஒன்றுபோலவே பல நாடகங்களில் அமைந் துள்ளன. இது கடந்த காலத்தில் வெற்றி கண்ட நாடகச் சாயலே.

பெரும்பாலான நாடகங்கள் பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்கத் திண்டாடுவது; அதில் வருகின்ற சிக்கலைப் பற்றி மட்டும் சொல்வது என்ற நிலையில் அமைந்திருப்பதையும் காணுகின்றோம். நாட்டில் எத்தனையோ சிக்கல்கள், தொல்லைகள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் மையமாக

வைத்துச் சிந்தித்து நாடகம் படைத்தால் மேடை நாடகக் கலையும் சிறக்கும்; எழுதுகின்றவர்களும் பெருமையடையலாம்.

1982ஆம் ஆண்டு, சென்னையில்தண்ணீர்ப் பஞ்சம்மிகுதியாக உள்ள ஆண்டு. எனவே, தண்ணீர் பற்றிய நகைச்சுவையை எல்லா நாடக ஆசிரியரும் சேர்த்திருக்கிறார்கள். இது வரவேற்கப் பெற வேண்டிய ஒன்றுதான். ஆனால் இதையே ஒரு சிக்கலாக்கி கோமல் சுவாமிநாதன் ஒரு நாடகமே படைத்தாரே அதுபோல நாடகம் படைக்க முயல வேண்டும். அங்ஙனமின்றி, நகைச் சுவைகளை உதறிவிட்டுப் போய்விடுவதால் எந்தப் பயனும் ஏற்படாது.

பொதுமையான உரையாடல்களும், மிகச் சிறந்த கதை களும், அருமையான கதைப் பின்னலும், கொண்ட நாடகங் களைப் படைக்க வேண்டும் என்ற நல்ல எண்ணம் நாடகம் படைக்கின்றவர்களுக்கு உருவாக வேண்டும். இல்லையேல் சிலர் காட்டில் மட்டும்தான் மழை பெய்து கொண்டிருக்கும். அவர்கள் மற்றவர்களுக்குக் 'காதிலே பூச்சூட்டிக் கொண்டே' பணமும் புகழும் சம்பாதித்துக் கொண்டு போவார்கள். இந்த நிலை மேடை நாடகத்தின் நல்ல எதிர்காலத்தைக் காட்டவில்லை.

1982 ஆம் ஆண்டு ஒரு நாடகம் கூட நல்ல நாடகமாக அமையவில்லை என்று சொல்லிவிட முடியாது. சில நல்ல நாடகங்கள் இருக்கின்றன. அந்தச் சில, பலவாக மாறவேண்டும். நகைச்சுவையும் கட்டுப்படுத்தப்பட வேண்டும். அளவாகக் கலக்கும்போது அதற்கு இப்போதிலும் அதிகமான வரவேற்பும் சுவையும் கூடும்.

தமிழ் உணர்வும், தமிழ் அறிவும் படைத்த ஒரு சிலராவது நாடகங்களைப் படைக்க முயற்சி மேற்கொள்ள வேண்டும். தமிழ் அறிந்தவர்கள் முழுமையாக ஒதுங்கி இருக்கும் துறை இன்று மேடை நாடகத் துறைதான்; அது ஒன்றுதான் இன்றைய குறை. பல தமிழ் உள்ளம் படைத்த நாடகக் கலைஞர் புதிது புதிதாக மேடைக்கு வந்தால் மேடை நாடகத் துறை நன்கு சிறக்கும்.

# 4. திரைப்படம்

கரு. நாகராசன்

*1982- இல் வெளியான தமிழ்த் திரைப் படங்கள்-119 இவற்றில், வயது வந்தோர் மட்டுமே பார்ப்பதற்குரியவை என்ற தகுதிச் சான்றிதழ் பெற்றவை 57. கறுப்பு வெள்ளைப் படங்கள் இரண்டே இரண்டுதான்; ஏனையவை வண்ணப் படங்கள். நாவல்களிலிருந்து மூன்று திரைப்படமாக மாறின; நாடகங்களிலிருந்து திரைப்படமானவை எட்டு; 13வேற்று மொழிக் கதைகள் தமிழில் திரைப்படமாக்கப்பட்டன. 119 திரைப்படங்களில் 14 அல்லது 15 மட்டுமே வெற்றிப் படங் களாகியுள்ளன.*

## முன்னுரை

மனித சமுதாயம் காலப் போக்கில் படிப்படியாகப் பல வளர்ச்சிகளைப் பெற்று வந்துள்ளதையுணர்கிறோம். அவ் வளர்ச்சிகள் பல நிலைகளில் அமையும். நாகரிகம், பண்பாட் டளவில் பெற்ற வளர்ச்சிகளுடன் பல வியத்தகு சாதனைகளை யும் செய்து காட்டி அறிவு நிலையிலும் மனிதர் இன்று பெருமைக் குரிய வளர்ச்சிகளைப் பெற்றுள்ளார்கள். இவ்வளர்ச்சிகட் கெல்லாம் மூலக் காரணம் அறிவியலே. அந்த அறிவியல் தாயின் அற்புதக் குழந்தைகளில் ஒன்று தான் திரைப்படம். "விஞ்ஞா னம் வளர்த்துவிட்ட சமீப காலத்திய கலை திரைப்படம். உலக மக்களின் அன்றாட வாழ்வில் அது பாதிப்பை ஏற்படுத்துகிறது. கதாநாயக வணக்கத்தை ஏற்படுத்துகிறது; ஒரு கவர்ச்சியை ஏற்படுத்துகிறது; களியாட்டத்தில், மாயையில் மக்களை மூழ் கடிக்கிறது; சில சமயங்களில் பீறிட்டு எழுந்து சமுதாய எதார்த்த நிலையைக் கிழித்துக் காட்டுகிறது. ஒரோர் சமயம் அவைகளுக்குத் தீர்வும் சொல்கிறது."[1] படித்தவர்களிலிருந்து பாமரர் வரை அனைவர் வாழ்வையும் எவ்வகையிலேனும் பாதித்துவிடும் அருங்கலை இது. எனவே திரைப்படங்களைப் பற்றிய ஆய்வு மனித சமுதாயத்தைப் பற்றிய ஒருவகை ஆய்வு என்றுதான் கூறவேண்டும். அதிலும் திரைப்படப் பாடல்களைப்

பற்றிய ஆய்வு 'முனைவர்' பட்டம் பெற்றுத் தரும் அளவுக்கு முக்கியத்துவம் பெற்று வரும் இன்றைய நாளில் அப்பாடல்கள் பிறக்கக் காரணமாக இருந்த திரைப்படங்களைப் பற்றிய ஆய்வும் வேண்டற் பாலதேயாம்.

**திரைப்படங்களின் நன்மை தீமைகள்**

நாடகத்தாய் ஈன்றெடுத்த நன்மகவே திரைப்படக் கலை. தாய்க்குக் கிட்டாத பல அரிய வாய்ப்புகள் சேய்க்குக் கிட்டின. அறிவியல் வளர்ச்சிகளால் திரைப்படக்கலை அரிய பல புதுமைகளைப் பெற்றுப் பொலிவு பெற்றது. ஊமைப் படங்களாக ஒரு காலத்தில் உலாவந்த திரைப்படங்கள் இன்று கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ண ஓவியங்களாக வளர்ச்சி பெற்றுள்ளன. திரைப்படக் கலையால் வேறு பல கலைகளும் வளர்ச்சி பெறுகின்றன. ஆடை அணிகலன்கள், ஒப்பனை, உடற் பயிற்சி போன்ற கலைகளுடன் வேறு பிற எண்ணற்ற தொழில் நுட்பக் கலைஞர்களும் திரைப்படத்தால் வாழ்வு பெறுகின்றன. அவ்வகையில் நாட்டில் பலருக்கு வேலை வாய்ப்பளிக்கும் நிறுவனமாகவும் திரைப்பட நிறுவனங்கள் செயல்படுகின்றன. மக்கள் தங்கள் மனக்கவலை மாற்றும் இடங்களாகவும், உற்சாகமான பொழுது போக்கிற்கு உரிய இடங்களாகவும் திரையரங்குகள் திகழ்கின்றன. வரலாற்று நாயகர்களை மீண்டும் தரிசிக்கும் வாய்ப்பையும் இறையருட் தொடர்பான செய்திகளையும் திரைப்படங்கள் மூலம் பெற முடிகிறது. உலகைப் பற்றிய செய்திகளை அறிகிறோம். நம்மால் சென்றுவரமுடியாத மேனாடுகளையெல்லாம் திரைப்படங்களின் மூலம் கண்டு மகிழ்கிறோம். சமுதாய மேம்பாட்டிற்குத் தேவையான நல்லுணர்வுகளையூட்டி முறைப்படி நம்மை நெறிப்படுத்தும் அரும்பணியையும் சில திரைப்படங்கள் செய்துள்ளன.

"திரைப்படம் என்பது தற்காலத்தில் ஒரு வலிமை வாய்ந்த சாதனமாகும். சிறுவர் முதல் தள்ளாத முதியோர் வரை ஏதாவது ஒரு வகையில் இது பாதிக்கவே செய்கிறது. மக்களின் ரசனையை மட்டுமில்லாது உயர்தரமான — ஆரோக்கியமான சிந்தனைப் போக்கை உருவாக்க வேண்டியது திரைப்படத்தின் கடமையாகும். வாழ்க்கையில் தாம் படுகிற கஷ்டங்களிலிருந்தும் நெருக்கடிகளிலிருந்தும் தற்காலிகமாக தப்பித்துக் கொள்ளவும், கொஞ்ச நேரமாகிலும் மறந்திருக்கவும் திரைப்படம் பெரிதும் உதவுகிறது. எனவே, அவர்களின் மனதைப் பாழ்படுத்தாத வண்ணம், ஆபாசங்களிலும், வக்கிரங்களிலும் ஆழ்த்தாத வண்ணம் ஓரளவு பொழுது போக்கான படங்களைத் தரமான முறையில் வழங்குவதில் தவறில்லை என்றே நான் கருதுகிறேன்.

அதே நேரத்தில் கொழுந்து விட்டெரிகிற அன்றாடப் பிரச்சினை களை சமுக ரீதியாகக் காலங் காலமாக அழுத்திக் கொண்டுள்ள கொடுமைகளை ஓரளவு கற்பனை வடிவில் காட்டுவதன் மூலம் ரசிகர்கள் தம்மைத் தாமே தரிசித்துக் கொள்வதற்கு வழி வகுக் கிறது''[2] என்று தமிழ்த் திரைப்பட முன்னணி இயக்குநர் ஒருவர் குறிப்பிடும் வகையில் சில திரைப்படங்கள் அமைந்துள்ளதைக் காண்கிறோம். ஆனால் அப்படிப்பட்ட சில படங்களால் சமுதாயம் பெற்ற நன்மைகள் பயன் விளைவிக்காத வகையில், எதிர் விளைவையும் ஏற்படுத்தும் வண்ணம் வேறு சில திரைப் படங்கள் வெளியிடப்பட்டுள்ளதையும் உணர்கிறோம்.

ஆபாசங்களையும் வக்கிரங்களையுமே மூலதனமாகக் கொண்ட பல திரைப்படங்கள் அண்மைக் காலத்தில் வெளியாகி யுள்ளதையறிகிறோம். கதை, கருத்தாழமிக்க உரையாடல்கள், பாடல்கள் ஆகியவற்றை வைத்துப் படமெடுப்போர் குறைந்து, மக்களின் பலவீனங்களைப் பயன்படுத்திக் காசு சேர்க்கும் முயற்சியே இன்று திரையுலகில் மிகுந்துள்ளது. தாம் தயாரிக்கும் படத்தின் மூலம் எத்தகைய கருத்துக்களை மக்களுக்குத் தர முடியும் என்று நினைப்பவர்கள் இன்று குறைவு. எப்படியெல் லாம் தயாரித்தால் படம் அதிக நாள் ஓடும் என்பதிலேயே பலர் இன்று கவனமாக உள்ளார்கள். சிறந்த கதைக்காகவும், உரையாடல், பாடல்களுக்காகவும், நடிப்பிற்காகவும் படம் அதிக நாட்கள் ஓடிய நிலை மாறி சில கவர்ச்சிக் கன்னியர்களுக் காக மட்டுமே படம் ஓடுகிறது என்று கூறும் துயர் நிலையும் அண்மை காலத்தில் உருவாகியுள்ளது. சிறந்த நாகரிகம், பண்பாடு என்றெல்லாம் நம் நாட்டில் இருப்பதாகப் பெருமைப் பட்டது, இன்று 'பொய்யாய் கனவாய் பழங்கதையாய்' போய் விடக் காரணங்கள் பல உண்டு. அக்காரணிகளில் சிறப்பிடம் பெறுவது திரைப்படமே. பல சமூகக் கேடுகளையும் ஒழுக்கக் கேடுகளையும் கூடத் திரைப்படங்கள் உருவாக்கி வருகின்றன. கதையை வைத்துப் படமெடுக்கும் நிலை மாறி, சில காட்சிகளைப் படமாக்கிக் கொண்டு, பின்பு அதற்கேற்பக் கதையென ஒன்றை அமைக்கும் முயற்சியே பெரும் பாலாக நடைபெறுகிறதாம். இந்நிலையில் அவசரமாக உருவாக்கப்படும் திரைப்படங்கள் குறைப் பிரசவங்களாக இருப்ப தில் வியப்பில்லைதான். எனினும் இந்தச் சூழ்நிலைகளுக்கிடை யிலும் வருமானத்திற்காகத் தன் மானத்தை இழந்துவிடாது, தரமான படங்களைத் தயாரித்து அளிக்கும் நல்லவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். நல்லனவும், அல்லனவும் கலந்து வெளிவரும் திரைப்படங்களில் நல்லனவற்றைப் பகுத்துணர்ந்து

பயன்பெறும் பெரும் பொறுப்பு ரசிகர்களிடையில்தான் உள்ளது.

**திரைப் படமும் சமுதாய மாற்றமும்**

ஒரு வீட்டில் உள்ளவர்கள் மழையாலும் வெயிலாலும் பாதிக்கப் படாமல், பாதுகாப்போடு இருக்க வேண்டுமென்றால் அவ்வீட்டின் மேற்கூரை நன்முறையில் அமைந்திருக்க வேண்டும். இச்சமுதாய வீட்டின் மேற்கூரைகளில் இன்றியமையாத இடம் கலைகளுக்கு உண்டு. அக்கலைகள், மக்கள் வாழ்வு மேம்பாடு அடையத் துணை செய்யவேண்டும். சமுதாய மாற்றங்களுக்கு மேம்பாடுகளுக்குப் பயன்படுமாறு அமையவில்லையென்றால் அக்கலைகள், 'கலைகள்' என்னும் தகுதியையே இழந்து விடு கின்றன. வெறும் பொழுது போக்கிற்காக மட்டுமே கலைகளைப் படைக்கும் நோக்கம் உள்ளவர்களால் கலைகளின் தரமும் உயராது; அக்கலைகளால் சமுதாயம் எப்பயனையும் பெறவும் முடியாது. சமுதாயத்தில் உள்ள பலதரப்பட்ட மக்களின் வாழ்வையும் பாதிக்கக்கூடிய கலை திரைப்படக் கலை. அக் கலையை உருவாக்குவோர் நோக்கமும் சமுதாய மேம்பாடு கருதியதாக அமையவேண்டும்.

சமநிலைச் சமுதாய அமைப்புள்ள நாடுகளில் தயாரிக்கப் படும் திரைப்படங்களெல்லாம் மக்கள் வாழ்விற்குப் பல நிலை களில் உதவுகின்றன. பொருந்தாத கற்பனைகளையும், நடை முறை வாழ்விற்கு ஒத்துவராத நிகழ்ச்சிகளையும் காட்டி நம்மை மேலும் மூடராக்கும் முயற்சிகளே திரைப்படங்களின் மூலம் இங்கும் செய்யப்படுகின்றன. ஆனால் அங்கெல்லாம் ஒவ் வொரு திரைப்படமும் ஒரு புத்தகமாக விளங்கி பல அரிய உண்மைகளை மக்களுக்கு உணர்த்துகின்றன. அங்கும் காதல் உண்டு; ஆனால் ஆபாசம் இருக்காது. வீரம் எடுத்துக் காட்டப் படும்; அதில் விவேகமும் சேர்த்து உணர்த்தப்படும். கவர்ச்சி களால் மனம் அலைமோதும் நிலை ஏற்படாது; கருத்துகளால் மனம் புத்துணர்ச்சி பெறும் நிலையே உருவாகும். அதனால் தான் அத்தகைய நாடுகளில் திரைப்படங்களைப் பார்த்துவிட்டு வெளியில் வருவோர் மனதில் தம்நாட்டிற்காக எப்படியெல்லாம் உழைக்கலாம் என்ற இலட்சிய வெறி ஏற்படுகிறது. கதா நாயகனைப் போல உடையணிவது, காதல் செய்ய முற்படுவது போன்ற உணர்வுகளையும், சில தீய செயல்களைச் செய்ய முற்படுவதுமே இங்கு படங்களைப் பார்ப்பவர்கள், பார்த்துச் செல்லும்போது பயனாகிப் பெறுகிறார்கள். அத்தகையோர் சமுதாய மாற்றத்திற்கு எதனைச் செய்துவிடப் போகிறார்கள்;

தீய செயல்களை அவர்களுக்குப் பயிற்றுவிக்கும் இடங்களாகவே திரையரங்குகள் சிலபோது அமைந்து விடுகின்றன.

இம்மண்ணுலகின் சொர்க்க பூமியாகத் திகழ்வதுசோவியத்து நாடு. எல்லாரும் எல்லாமும் பெற்று, இல்லாமை, கல்லாமை, இரவாமைபோன்ற ஆமைகளை ஒழித்துக் கட்டிய நாடு அது, அங்கு தயாரிக்கப்படும் திரைப்படங்களெல்லாம் நாட்டுப்பற்று, சமுதாய மேம்பாட்டு உணர்வு புனித இலட்சிய வாழ்வு ஆகியன வற்றை எடுத்துக்காட்டும் விதத்திலேயே அமைந்துள்ளன. அங்கு தயாரிக்கப்பட்டு சர்வதேசப் புகழ்பெற்ற படங்களில் ஒன்று 'மாஸ்கோவிற்குக் கண்ணீரில் நம்பிக்கை இல்லை' என்ற ஆங்கிலப் படம் சொர்க்க பூமியான சோவியத் நாட்டு மக்கள் வாழ்விலும் கூடச் சில சிக்கல்கள் உள்ளன என்பதை நன்கு எடுத்துக் காட்டி, அச்சிக்கல்கள் எவ்வாறு தீர்க்கப்படுகின்றன என்பதையும் அப்படம் நன்கு உணர்த்துகின்றது. அப்படத்தைப் பார்த்த மனநிறைவோடு நாம் வெளியில் வரும் போதே மாஸ்கோவிற்குக் கண்ணீரில் ஏன் நம்பிக்கை இல்லை என்ற வினாவிற்குரிய விடையையும் மனத்தெளிவையும் பெற்றே வருகிறோம்.

இரசாயனத் தொழிற்சாலையொன்றில் சாதாரணத் தொழிலாளியாகச் சேர்ந்த ஒரு பெண்ணின் இலட்சிய வாழ்வை சித்திரித்துக் காட்டும் படம் அது. அழகான அந்த இளம் பெண்ணைக் காதலிப்பதாக நடித்து உறவுகொண்டு, அவள் கரு வுற்றிருப்பதையறிந்தவுடன் பிரிந்து ஓடிவிடுகிறான் ஒருவன். அந் நிலையிலும் மனச்சோர்வோ,வாழ்வில் விரக்தியோ அடையாமல் தொடர்ந்து உழைத்து, இடைவேளையில் மேலும் படித்து அதே தொழிற்சாலையில் உயர் அதிகாரியாகவே ஆகிவிடுகிறாள் அவள். அருமை மகளை நன்கு வளர்த்து பொறுப்புடன் படிக்க வைத்து உருவாக்குகிறாள். கன்னிப் பருவத்தினளான தன் மகளுக்குத் தன்னைப்போல் கசப்பான அனுபவம் ஏற்பட்டு விடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறாள். பார்க்கும் அலுவலுக் கேற்ப பிற தேவைகள் நிறைவு செய்யப்பட்டிருந்தாலும் அவளது அந்தரங்கத் தேவை அடிக்கடி மனப்போரைத் தூண்டுகின்றன. இந்நிலையில், நல்லவன் ஒருவன், ஆண்களில் நல்லவர்களும் உண்டு என்பதை உணர்த்தும் விதத்தில் அத்தலைவியிடம் அன்பு காட்டி பழகி வருகிறான். என்றோ அவளை விட்டு ஓடிப்போன வன், இப்போதைய அவள் நிலையையறிந்து மீண்டும் உறவாட முயன்றபோது அவனுக்கு இடம்தர மறுத்ததுடன், தன் மகளுக்கு அவன்தான் தந்தை என்பதைக்கூடக் கூற மறுக்கிறாள் அந்த

வீரத்தாய். தீயவன் ஏமாற்றத்துடன் திரும்ப, பயன் கருதாது அன்பு காட்டிய தூயவனுடன் அவள் வாழ்க்கைப் பயணம் தொடர்கிறது.

எவ்வளவோ உண்மைகளையும், படிப்பினைகளையும் இப் படத்திலிருந்து நாம் பெறமுடியும். புதுமைக் கவிஞர் பாரதியார் பிறந்த மண்ணில், அவள் பிறக்காவிட்டாலும் அவர் இணங்கண்டு வரவேற்ற 'யுகப்புரட்சி' தோன்றிய மண்ணில் அவள் தோற்று விக்கப் பட்டிருப்பது அம்மண்ணின் மாண்பை உணர்த்துகிறது.

'அங்கமதில் மங்கையர்க்கு அழகிருந்தால் அறிவில்லை;
ஆராய்ந்து முடிவு செய்ய அறிவிருந்தால் அழகில்லை;
அழகும் அறிவும் படைத்த பெண்கள்
அதிசயமாய் பிறந்து விட்டால்
குறுகுமனம் கொண்டவர்கள் குலைக்காமல் விடுவதில்லை''

என்று இந்நாட்டுப் பெண்கள் நிலைகண்டு வருந்திப் பாடினார் மக்கள் கவிஞர் பட்டுக் கோட்டையார். குறுகுமனம் கொண்ட வர்கள் சோவியத்து நாட்டிலும் இருந்தாலும் பெண்களின் வாழ்வை அவர்கள் குலைத்து விடமுடியாத அளவுக்குச் சமுதாய அமைப்பும், சமநிலை அரசும் அங்கு அமைந்துள்ளது. எனவே தான் ஒரு வீரத்தாயாக அத்திரைப்படத் தலைவியால் விளங்க முடிந்தது.

''சோவியத் மாதருக்கே இத்தகைய தாம்பத்திய நெருக்கடி களும், குடும்பச் சிக்கல்களும் நேர்கின்றனவென்றால் புளுத்துப் போன இந்த முதலாளித்துவ சமுகத்தில் நங்கையர் நிலைபற்றி நினைத்தாலே நெஞ்சு பதறுகிறது.

மார்க்ஸீயம் வழங்கியுள்ள மகத்தான வாழ்வுமுறை ஒன்று தான் இந்தக் கட்டுத்தளைகளை நொறுக்கித் தகர்க்கும் ஆற்றல் பெற்றது என்பதை இப்படம்மார்தட்டிப் பிரகடனம் செய்கிறது. சர்வதேசப் புகழ்பெற்ற ஆஸ்கார் பரிசு இப்படத்திற்கு வழங்கப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதன்மூலம் ஆஸ்கார் பரிசுக்கு ஒரு கூடுதலான மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டிருக்கிறது என்பதே பொருத்தம்''[4] என்ற திறனாய்வு முற்றிலும் ஏற்புடை யதே. இப்படிப்பட்ட திரைப்படங்களால் சமுதாய மாற்றமும் மேம்பாடும் ஏற்படும் என்பது உறுதி. ஆனால் நம் நாட்டில் தயா ராகும் படங்களில் எத்தனை படங்கள் இப்படி அமைந்துள்ளன?

சிறந்த முறையில் தயாரிக்கப்பட்ட திரைப்படங்களுக்கு ஆண்டு தோறும் தமிழக அரசு உதவித்தொகை வழங்கிவருகிறது. இரண்டு ஆண்டுகட்கு முன்பு அவ்வுதவித் தொகை' வேண்டிப் பல

தயாரிப்பாளர்கள் அரசுக்கு விண்ணப்பித்துள்ளார்கள். அவர்களிடம் அரசுத்தரப்பில் ஒரு விளக்கம் கேட்கப்பட்டது. "உங்கள் படங்களின் மூலம் மக்களுக்கு நீங்கள் எதை உணர்த்தியுள்ளீர்கள்?" என்ற ஒரே வினாவிற்குரிய விடையினையே அரசு எதிர் பார்த்தது ஏற்கெனவே விண்ணப்பித்திருந்தவர்களில் பலர் அவ்வினாவிற்கு விடையளிக்கவே இல்லை. காரணம், அவர்களுக்கே தெரியும் அவர்கள் படங்களின்மூலம் மக்களுக்கு எதையுமே உணர்த்தவில்லை என்று. தேர்வில் தவறான விடை எழுதிய மாணவன்கூடத் தனக்கு நல்ல மதிப்பெண் கிடைக்கும் என்று எதிர்பார்த்திருப்பான். காரணம், அவன் தவறு செய்தவனாக எண்ணிச் செய்தவனல்லன். ஆனால் திரைப்படத் துறையில் உள்ள பலர் திட்டமிட்டே, வருவாய் ஒன்றினையே நோக்கிச் சமுதாயச் சீர்கேடுகளையே திரைப்படமாக்கித் தந்து கொண்டிருக்கின்றார்கள். சமுதாய அமைப்பே மாறினால்தான் இந்த அவல நிலைகளும் மாறும் போலும்!

## தமிழ்நாட்டில் திரைப்படக்கலை

முத்தமிழில் ஒன்று நாடகம். அந்நாடகக் கலையில் நல் வளர்ச்சி பெற்றிருந்தனர் தமிழர். தாம் வழிபடும் தெய்வத்தைக் கூடக் கூத்த பெருமானாகவே கண்டு தொழுதனர். நாடக நுணுக்கம் பற்றிக் கூறும் நூல்கள் சிலவும் தமிழில் எழுதப்பட்டிருந்ததையுணர்கிறோம். நாடகக் கலை பல நிலைகளில் வளர்ச்சி பெற்றபோதுதான் திரைப்படக்கலை இங்கு தோன்றியது. பல நாடக நடிகர்களே திரையுலகிலும் அன்று தோன்றினார்கள். ஆரம்ப காலத்தில் இந்நிலை மிகுதி. தற்போது குறைவு. நாடக நடிகர்கள் திரையுலகில் பிரவேசிப்பதும், நாடகங்களே திரைப் படங்களாக மாற்றப்படுவதும் இன்றும்கூட நிகழ்ந்து வருவதே. ஆனால் நாடகத் துறையில் காணக்கூடிய அளவுக்குக்கூட கருத் தாழமிக்க கதைகளையும், உரையாடல்களையும், திரையுலகில் காணமுடியவில்லை. இது ஒரு பெருத்த ஏமாற்றமென்றே கூற வேண்டும்.

ஒருவன் சிறுவனாக, இளைஞனாக இருக்கும்போது தவறு செய்தால் மன்னிக்கலாம். பின்பு என்றேனும் அவன் திருந்துவான் என்றும் கூட எதிர்பார்க்கலாம். ஆனால், ஐம்பது வயதைத் தாண்டியும் கூட அவன் போக்கில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படவில்லை என்றால்... அம்மனிதனை எண்ணி நோகாமல் இருக்க முடியாது தமிழ்த் திரைப்படத் கலையின் நிலையும் அதுவே. 1981ஆம் ஆண்டில் தான் தமிழ்த் திரையுலகின் பொன்விழாக் கொண்டாடப்பட்டது. திரைப்படக்

கலை தமிழ் நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டு ஐம்பது ஆண்டுகள் உருண்டோடி விட்டன. ஆண்டுகளின் வளர்ச்சியை நினைவு படுத்தும் விதத்தில் தான் அந்த விழா இங்கு கொண்டாடப் பட்டதேயன்றி அதற்கேற்ப எல்லா நிலைகளிலும் அக்கலை இங்கு வளர்ச்சி பெற்றுள்ளதா என்றால் இல்லை என்றுதான் கூற வேண்டும்.

ஒலி, ஒளி அமைப்பு, அரங்க அமைப்பு, படமெடுக்கும் முறைகளில் புதுமை போன்ற புறநிலை வளர்ச்சிகளைப் போதிய அளவு தமிழ்த் திரையுலகமும் பெற்றே உள்ளது. ஆனால் அக வளர்ச்சியாகிய கதை, உரையாடல், பாடல்கள், நடிப்பு போன்ற நிலைகளில் ஐம்பது ஆண்டுகளுக்கேற்ற ஆரோக்கியமான வளர்ச்சி பொதுவாக இல்லையென்றே கூற வேண்டும். ஒன்றிரண்டு சிறந்த நடிக, நடிகையர், ஒன்றிரண்டு சிறந்த கவிஞர்கள், சில நல்ல எழுத்தாளர்கள் என்ற நிலையைத் தான் காண முடிகிறது. அவர்களது ஆற்றலால் சமுதாயத்திற்கு விளைந்த விளைவினைக் கணக்கிடும் போதும் அது ஐம்பதாண்டு கால வளர்ச்சியெனப் பெருமையுடன் கூறும் நிலையில் அமைய வில்லை என்பதே உண்மை. திரைப்படங்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் வளர்ந்துள்ளது; திரையுலகால் பிழைப்பவர்களில் பலரது வாழ்க்கை வசதிகளும் வளர்ந்துள்ளது. ஆனால் திரைப் படங்களின் தரமோ, இடையில் ஏற்பட்ட சிறிது வளர்ச்சியும் கூட வீழ்ச்சியாக மாறும் நிலைக்கு ஆகி வருகிறது. ஐம்பத்தி ஓராம் (1982) ஆண்டிலும் அதே நிலைதான் நீடித்து வருகிறது.

## 82இல் வெளியான திரைப்படங்கள்

வருடம் தோறும் வெளியிடப்படும் படங்களின் தரத்தில் வளர்ச்சி இல்லாவிட்டாலும் எண்ணிக்கையில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியினைத் தமிழ்த் திரையுலகில் நிச்சயமாகக் காண முடியும். 1981-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட திரைப்படங் கள் 104. 1982 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட திரைப் படங்கள் 119. (பெயர் அட்டவணை இறுதியில் காண்க) முந்திய ஆண்டைக் காட்டிலும் 15 திரைப்படங்கள் அதிகமாகவே 1982 ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றுள்ளன. இதுவே குறிப் பிடத்தக்க ஓராண்டு வளர்ச்சி. இந்த 119 அசல் தமிழ்த் திரைப் படங்கள் தவிர, டப்பிங் செய்யப்பட்ட 9 படங்கள் வேறு 82-இல் திரையிடப்பட்டுள்ளன. வயது வந்தவர்கள் மட்டுமே பார்ப்ப தற்குரியது என்று தகுதிச் சான்றிதழான 'ஏ' முத்திரை குத்தப் பட்ட படங்களின் எண்ணிக்கை 57. மொத்த வெளியீட்டில்

சுமார் ஐம்பது சதவீதம் திரைப்படங்கள் 'ஏ' முத்திரையுடனே வெளியாகியுள்ளன என்பது சிந்தித்தற்குரியது.

ஆனால், பெரும்பாலும் வயது வராதவர்களே அப்படங்களைப் பன்முறை விரும்பிப் பார்ப்பார்கள் என்பது சொல்லாமலே விளங்கும். அவர்கள் மனநிலை என்னவாகும் என்பதை ஆங்காங்கு உணர்ந்து வருகின்றோம். இவ்வகையில் வயது வராதவர்களைப் பாதிக்கும் படங்களே 82இல் மிகுதியாக வெளியாகியுள்ளன என்பதையுணர்கிறோம். கறுப்பு வெள்ளைப் படங்களாக இரண்டு படங்கள் மட்டுமே வெளியாகியுள்ளன. எஞ்சியவையெல்லாம் வண்ணப் படங்களே.

ஆனந்த ராகம் (அலைகள் ஓய்வதில்லை), பகடை பன்னிரண்டு, மெட்டி ஆகிய மூன்று திரைப்படங்களும் நாவல்களிலிருந்து திரைப்படங்களாக மாறியவை. மணல் கயிறு (மோடி மஸ்தான்), பரிட்சைக்கு நேரமாச்சு, தாம்பத்யம் ஒரு சங்கீதம், ஒரு வாரிசு உருவாகிறது, இரட்டை மனிதன், தூக்கு மேடை, நன்றி மீண்டும் வருக, நிஜங்கள் ஆகிய திரைப்படங்கள் நாடகங்களிலிருந்து திரைப்படங்களாக மாறியவை. வேறு மொழிகளிலிருந்து தமிழில் பதின்மூன்று கதைகள் 82-இல் படமாக்கப்பட்டுள்ளன.

ஒரு வாரம், பத்து நாட்கள் என்ற அளவோடு தங்கள் ஓட்டப்பந்தயத்தை முடித்துக் கொண்ட பல திரைபடங்களுக்கிடையில் தொடர்ந்து இருபத்தைந்து வாரம் ஓடி வெள்ளி விழாக் காணும் தகுதியினையும், நூறு நாட்கள் தொடர்ந்து ஓடிச் சாதனை புரிந்த பெருமையினையும் சில திரைப்படங்கள் பெற்றுள்ளன. மூன்றாம் பிறை, வாழ்வே மாயம், பயணங்கள் முடிவதில்லை, சகல கலா வல்லவன் ஆகிய திரைப்படங்கள் வெள்ளி விழாப் படங்கள்.

புதுக்கவிதை, எங்கேயோ கேட்ட குரல், சிம்லா ஸ்பெஷல், மணல் கயிறு, ரங்கா, வா கண்ணா வா, பரிட்சைக்கு நேரமாச்சு, மூன்றுமுகம், தூறல்நின்னு போச்சு, டார்லிங் டார்லிங் டார்லிங் ஆகிய திரைப்படங்கள் நூறு நாட்கள் தொடர்ந்து ஓடியுள்ளன. நூற்றுப் பத்தொன்பது திரைப் படங்களில் பதினான்கு, அல்லது பதினைந்து படங்கள் (போக்கிரி ராஜா என்ற படம் வெள்ளி விழாவை எட்ட முயன்றதாம்) மட்டுமே வெற்றிப் படங்களாகியுள்ளன. அப்படங்களின் கதையமைப்பின் அடிப்படையில் கீழ்க்கண்ட ஏழு பிரிவுகளில் அவைகளை அடக்கி விடலாம்.

1. குடும்பக் கதை 2. கிராமியக்கதை 3. காதல் கதை 4. சரித்திரக்கதை 5. பக்திக் கதை 6. நகைச்சுவைக் கதை 7. பொழுது போக்கு அம்சங்கள் அமைந்த கதை.

82இல் வெளியான திரைப் படங்களில் பல, முதல் மூன்று பிரிவுகளில் அடங்குவனவே. குடும்பப் பிரச்சினைகளைப் பல நிலைகளில் எடுத்துக்காட்டிய படங்களே மொத்தத்தில் பாதி என்று கூறலாம். கணவன் மனைவி, பெற்றோர் பிள்ளைகள் இவர்களிடையே ஏற்பட்ட கருத்துகளால் குடும்பத்தில் அமைதி இல்லாத சூழல்கள், பிள்ளைகளால் பெற்றவர்க்கு ஏற்படும் பல தொல்லைகள், நீதியும் பாசமும் ஒரு குடும்பத்திற்குள்ளேயே மோதுதல், காதல் விவகாரம், கல்யாணச் சிக்கல்களால் குடும்பத்தில் உருவாகும் குழப்பங்கள் இவைகளைப் பலநிலைகளில் பல திரைப்படங்கள் எடுத்துக் காட்டியுள்ளன.

குடும்பக்கதை என்ற அளவிலேயே பெரும்பாலும் கிராமியக் கதைகளும் அடங்குமெனினும், நகர்ப்புறத்துக் குடும்பங்களுக்கும் நாட்டுப்புறக் குடும்பங்களுக்கும் பல வேறுபாடுகள் உண்டு. பிரச்சினைகள் பொதுவானவைகளைப் போலத்தோன்றினாலும் அவைகள் உருவாகும் சூழல்கள், தீர்வுகாணவேண்டிய முறைகள் ஆகியனவற்றில் வேறுபாடு உண்டு. நகர்ப்புற நாகரிகங்களிலும் செயற்கை வாழ்விலுமே அடங்கிப்போயிருந்த திரைப்படத்துறை இயற்கையழகு நிறைந்த, இயல்பான வாழ்வு வாழும் கிராமம் நோக்கி நகர முற்பட்ட பின்புதான் ஓரளவு வலுவான கதைகளைத் திரைப்படத்தில் காண முடிந்தது. கிராமத்திலிருந்து நகரத்திற்கு வந்த இயக்குநர்களான பாரதி ராஜா, பாக்யராஜ், கங்கை அமரன், விசு போன்றோர் கிராமத்து மண்வாசனை மாறாத சில படங்களை வழங்கியுள்ளார்கள்

82இல் வெளியான படங்களில் பல திரைப்படங்கள் காதல் கதையமைப்பினைக் கொண்டதே. குடும்பக் கதை, கிராமியக் கதைகளிலும் காதல் உண்டு. அப்படிப் பார்த்தால் மொத்தத்தில் பெரும்பாலான படங்கள் காதல் உணர்விற்கு முக்கியத்துவம் கொடுத்துத் தயாரிக்கப்பட்ட படங்களே. நகர்ப் புறக்காதலும் உண்டு; நாட்டுப்புறக்காதலும் உண்டு. பாக்யராஜின் இரண்டு படங்களும் இருநிலைகளுக்கும் சான்று. 'தூறல் நின்னு போச்சு' படத்தில் நாட்டுப்புறக் காதலைக்காட்டி, 'டார்லிங் டார்லிங் டார்லிங்' படத்தில் நகர்ப்புற, நாகரிகமான குடும்பச் சூழலில் தோன்றும் காதலின்தன்மையைக் காட்டியுள்ளார். நிறைவேறிய காதல்கள், நிறைவேறாமல் சோகமுடிவைத் தழுவியதனாலேயே நம் நெஞ்சை வருத்தும் காதல்கள், சபலத்திலிருந்து தோன்றிய காதல்கள், சவால்களுக்கிடையில் அரும்பிய காதல்கள் இப்படிப்

பல திறப்பட்ட காதல் நிகழ்ச்சிகளால் பின்னப்பட்ட பல திரைப் படங்கள் 82இல் வெளியாகி வெற்றியும் பெற்றுள்ளன. வெள்ளி விழாப்படங்களிலும், நூறு நாட்கள் ஓடிய படங்களிலும் பல திரைப்படங்கள் காதல் கதைப் படங்களே.

> "காதல் காதல் காதல்—காதல் போயிற்
> சாதல் சாதல் சாதல்"[5]

என்று பாடிய மகாகவி பாரதி நூற்றாண்டாகவும் '82 அமைந்து விட்டதாலோஎன்னவோ,இவ்வாண்டு வெளியான பல படங்கள் அப்பாடல் வரிகளைப் பிரதிபலித்துக் காட்டுமாறே அமைந் துள்ளன.

மேற்கண்ட மூன்று பிரிவுப் படங்களையும் பொது நிலையில் 'சமூகப்படங்கள்' என்று கூறலாம். தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் நாடகங்களும் சரி, திரைப்படங்களும் சரி, பெரும்பாலும் சமூகக் கதையமைப்பைக் கொண்டனவாகவே 82இல் வெளியாகி உள்ளன. சரித்திர, பக்தி தொடர்பான படங்களைத் தயாரிப் பதில் அதிகப் பொருட் செலவும், பொறுப்புணர்ச்சியும் தேவை. குறிப்பிட்ட சரித்திர, அல்லது பக்திக்கதையை முறையாக, முழு மையாக அறிந்திருக்க வேண்டும்; சுவையாகப் படமாக்கப்பட வேண்டும்; திறமாக நடிகர்கள் நடிக்க வேண்டும். அப்போது தான் அது வெற்றிப்படமாக அமையும். ஏனென்றால் சரித்திர, பக்தித் தொடர்பான கதையை ஏற்கெனவே நாட்டு மக்கள் தெரிந்து வைத்துள்ளார்கள்; அக்கதையின் புனிதம் கெடக் கூடாது என்றும் எதிர்பார்க்கிறார்கள். எனவே இத்தகைய பலப் பரிட்சைகளில் இறங்கும் துணிவு எல்லோருக்குமே எளிதில் வந்து விடுவதில்லை, ஏற்கெனவே பல படங்களைத் தயாரித்த அனுபவசாலிகளுக்கு மட்டுமே அது இயலும். 82இல் ஒரே ஒரு சரித்திரப்படமும் (நாயக்கரின் மகள்), இரண்டு பக்திப் படங்களுமேதான் (தேவியின் திருவிளையாடல், தாய் மூகாம்பிகை) தயாரிக்கப்பட்டுள்ளன. திரையுலகில் பல ஆண்டு களாகத் தன் ஆற்றலை வெளிக்காட்டி வரும் கே.எஸ். கோபால கிருஷ்ணனின் முயற்சியால்தான் ஒரு சரித்திரப் படமும், ஒரு பக்திப் படமும் 82இல் வெளியாகியுள்ளன. இன்று திரையுலகில் பலபிரமுகர்களின் இஷ்டதேவதையாக எண்ணப்படும் தெய்வம் மூகாம்பிகை. அந்த வகையால் சிலரின் கூட்டுமுயற்சியாகவே 'தாய் மூகாம்பிகை' வெளியிடப்பட்டுள்ளது.

சிறந்த கருத்துகளும் மக்கள் மனத்திற்கு எளிதாக எடுத்துச் செல்லப்படும் ஓர் அரிய வாகனம் நகைச்சுவை. மேலை நாடு களில் நகைச்சுவையின் மூலம் அரிய கருத்துகளைக் கூறும் வகை

யில் பல நாடகங்கள், திரைப்படங்கள் அமைந்துள்ளன. ஆனால் இங்கு அந்தக் கலை போதிய வளர்ச்சி பெறவில்லை என்றுதான் கூறவேண்டும். நாடகங்களில் நகைச்சுவையுண்டெனினும் பெரும் பாலும் அரசியல் நெடியைக் கிளப்பி அதன் மூலம் மட்டுமே நகைச்சுவையை உண்டாக்குகிறார்கள். திரையுலகில் அதுவும் குறைவு. எல்லாப் படங்களிலுமே நகைச்சுவை நடிக நடிகையர் பெயருக்கு மட்டுமே வந்து போகின்றனர். சிலபோது சிரிக்க வைக்க அவர்கள் செய்யும் முயற்சி வெறுப்பையே உண்டாக்கு கிறது. கலைவாணர் என். எஸ். கே, கே. ஏ. தங்கவேலு, சந்திர பாபு போன்ற நகைச்சுவை நாயகர்கள் தமிழ்த் திரையுலகில் இருந்த போது சிரிப்பின்மூலம் சிந்தனையும் இங்கு ஊட்டப் பட்டது. இன்று அந்நிலை இல்லை. மூன்றாம் தரமான ஆபாச உரையாடல், நிகழ்ச்சிகளின் மூலமே நகைச்சுவையை உண் டாக்க முடியும் என்ற நிலை இன்று ஏற்பட்டுள்ளது. இது மாற்றப்பட்டாக வேண்டும். நகைச்சுவை எழுத்தாளர்களும் இன்று குறைவு. 82இல் தயாரிக்கப்பட்ட சில நகைச்சுவைப் படங்களில் 'சிம்லா ஸ்பெஷல்' போன்ற ஒன்றிரண்டு படங்கள் மட்டுமே வெற்றிப் படங்களாகியுள்ளன. நகைச்சுவைக் கலந்த கதைத் தலைவர்களாக பாக்கியராஜ், விசு போன்றவர்கள் நடித்து அதன்மூலம் வெற்றி பெற்று வருவதும் குறிப்பிடத் தக்கது.

மேற்கண்ட ஆறு பிரிவுகளில் அடங்குமாறு வெளியாகிய படங்களே மிகுதியெனினும் அவை எதிலும் அடங்காத, ஆனால் அவைகளின் எல்லாத் தன்மைகளும் விரவிய 'அவியல்' படங்கள் சிலவும் வெளியாகியுள்ளன. திரைப்படத் திறனாய்வாளர்களின் நடையில் கூற வேண்டுமானால் அவைகளெல்லாம் 'மசாலா' அம்சங்கள் கொண்ட படங்கள் என்று நாகரிகமாக (அப்படங் களில் நாகரிகம் இல்லாவிட்டாலும் கூட)க் குறிப்பிடலாம். இப்படிப்பட்ட படம் தயாரிப்பவர்களுக்குக் கதையைப் பற்றிய கவலையே இல்லை. எந்தெந்தக் காட்சிகளைக் காட்டினால் படம் நன்கு வசூலைத் தேடித் தருமோ அக்காட்சிகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்து அவைகளைப் படமாக்கி விட்டுப் பின்பு 'கதையெனும் பேரில் ஒன்றை அமைத்து வெளி யிடுவது இவர்கள் பாணி. காலைக் காட்டிலும் செருப்புக்கு முக்கியத்துவம் தரும் இவர்களால்தான் ஆபாசங்கள் பெருமள வில் புகுத்தப்படுகின்றன. இப்படிப்பட்டவர்களால் தயாரிக்கப் படும் படங்களின் பெயர்கள் மாறியிருக்குமே தவிர சில முக்கிய அம்சங்கள் நிச்சயம் எல்லாப் படங்களிலும் இடம் பெற்றிருக்கும்.

நம்முடைய பலவீனங்களைப் புரிந்துகொண்டு, அதை மிகைப் படுத்திக் காட்டி, அதன்மூலம் காசு சேர்க்கும் 'தொழிலை'ச்

செய்யும் மசாலாப் படத்தயாரிப்பாளர்கள் எல்லாம் சமுதாயச் சீர்கேட்டிற்குப் பெருந் தொண்டாற்றுகின்றார்கள் என்றே கூற வேண்டும். இப்படிப்பட்ட படங்கள் தயாரிக்கப் படுவது தடுக்கப் படல்வேண்டும். வெளியில் புலப்படாமல் உடம்பிற்குள், இதயத்திற்குள்ளிருந்து பெருந்தீங்கு செய்து இறுதியில் உயிரையும் கவரும் கொடிய நோயைப் போன்றதே மசாலாப் படங்களின் கொடிய தன்மைகள். அப்படிப்பட்ட படங்களைத் தடை செய்யாமல் விடுத்து சமுதாய மேம்பாட்டுப் பணிகளைச் செய்ய முற்படுவது புண்ணுக்குப் புனுகு போடும் போலிச் செயலைப் போன்றதாகும். அறுவைச் சிகிச்சைகளின்மூலம் தீர்க்கப்பட வேண்டிய கொடிய நோய்கள் திரையுலகிலும் உண்டு என்பதைச் சமுதாயச் சீர்த்திருத்தவாதிகள் உணரவேண்டும். களைகள் களையப் பட்டால்தானே பயிர்கள் செழித்து வளரமுடியும்?

**திரைப்படங்களின் தரம்.**

82இல் வெளியாகிய திரைப்படங்களைப் பற்றிக் குறிப்பிடும் போதே அப்படங்கள் எவ்வகைப் பிரிவில் அடங்கும் என்பதைக் குறிப்பிட்டு, அப்பிரிவுகளின் அடிப்படையில் அவைகளின் தரத்தையும் ஓரளவு மதிப்பீடு செய்துள்ளோம். ஆண்டுதோறும் தயாரிக்கப்படும் படங்களின் எண்ணிக்கை உயர்ந்துள்ள அளவிற்கு அப்படங்களின் தரம் உயரவில்லை என்பது மறுக்க முடியாத உண்மை. தரம் உயர வேண்டும் என்ற கவலையும் திரையுலகில் இருப்பவர்களிடம் காணப்படவில்லை. சிறிதேனும் அக் கவலை அவர்களிடம் இருந்திருந்தால் தரமான படங்களைத் தர வேண்டும் என்ற தவிப்பும், தரமுடியாதபோது இயலாமையை எண்ணிய வருத்தமும் காணப்பட வேண்டும். காணப்படவில்லையே! அதற்கு மாறாக, போட்டி போட்டுக் கொண்டு ஆபாசப் படங்களையல்லவா தயாரித்து வெளியிட்டுக் கொண்டிருக்கின்றார்கள்! தன் உடலை மூலதனமாகக் கொண்டு பொருளீட்டும் பொருட் பெண்டிர்கள் கூடத் தம் செயலை எண்ணி வேதனைப் படக்கூடும். ஆனால் அவர்களைக் காட்டிலும் இழிவான செயல்புரியும் படத்தயாரிப்பாளர்கள் தம் தொழிலை எண்ணிச் சிறிதும் வெட்கப்படுவதில்லை. மனத்துணிவோடும், நம்பிக்கையோடும் தங்கள் திருப்பணிகளை அவர்கள் தொடர்ந்து செய்து கொண்டுதானிருக்கிறார்கள். இவ்வகையில் எண்ணற்ற ஏழைத் தொழிலாளர், உழைக்கும் வர்க்கத்தினரின் இரத்தத்தை உறிஞ்சிக் கொழுக்கும் அட்டைகளாகவே படத்தயாரிப்பாளர்கள் உள்ளனர். ஏழைகளின் இரத்தத்தை உறிஞ்சுவதற்குக் கைமாறாக 'ஆபாசங்கள்' என்ற நஞ்சினையே அவர்கள் மனத்தில் இவர்கள் புகுத்துகிறார்கள்.

தீய செயல் புரிந்தேனும் செல்வம் சேர்ப்பவனையே இச் சமுதாயம் மதித்துப் போற்றுகிறது. அவன் எப்படிப் பணத்தைச் சேர்த்தான் என்பதைப் பற்றியெல்லாம் யாரும் கவலைப் படுவதில்லை. இந்நிலை மாற்றப்பட்டாக வேண்டும். வலியோர் சிலர் எளியோர் தமை வதை புரியும் துயர் நிலை சமுதாயத்தின் வெளியில் மட்டுமல்ல; வெளியில் தெரியாத வகையில், எச்சரிக் கையோடு திரையுலகிலும் அத்துயர்க் கொடுமைகள் நடத்தப் படுகின்றன. அத்துயரங்களுக்கு விடிவுகாண வேண்டுமென்றால் திரைப்படத்துறை நாட்டுடைமையாக்கப்படவேண்டும். அப் போது தான் வெளி யாகும் படங்களின் தரமும்உயர்ந்து காணப் படும்.

கடந்த நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்த் திரைப்படங்களைத் திறனாய்வு செய்துவரும் மாத இதழ் பேசும்படம். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் அவ்வாண்டில் வெளியான படங்களைப் பற்றிய பொதுவான மதிப்பீட்டை வெளியிட்டு, தரமான படங் கள் தமிழில் தயாரிக்கப்படவேண்டும் என்ற வேண்டுகோளையும் தொடர்ந்து அவ்விதழ் வெளியிடுகிறது. அதன் வேண்டுதல் யாவும் இதுவரை செவிடன் காதில் ஊதிய சங்காகவே ஆகியுள்ளது. 1981 இல் வெளியாகிய படங்கள் பற்றிக் குறிப் பிட்டு எழுதியபோது, "எப்படியாவது படத்தை எடுத்து வெளி யிட்டால் போதுமென்பதே பலரது எண்ணமாக இருக்கிறது. படங்களின் எண்ணிக்கை மட்டுமே திரையுலக ஏற்றத்திற்கு உதவாது என்பதை உணரும் காலம் வரவேண்டும்"[6] என்று அவ் விதழ் உணர்த்தியிருந்தது. 82 ஆம் ஆண்டிலும் அவ்விதழ் எதிர் பார்த்த அக்காலம் வரவில்லை. அந்த ஏமாற்றத்தின் எதி ரொலியை இவ்வாண்டுப் பேசும் படம் மறவாமல் குறிப்பிட்டு தன் வேதனையையும் வெளிப்படுத்தியுள்ளது.

"...துரதிருஷ்ட வசமாக 82-ஆம் ஆண்டிலும் அதே நிலை தொடர்ந்திருப்பதைக் கண்டு ஏமாற்றமும் வேதனையும் அடைந் தோம். 81-இல் 104 படங்கள் என்றால், 82-இல் 109 படங்கள் திரையிடப்பட்டிருக்கின்றன. அவற்றில் வெற்றிப் படங்களின் எண்ணிக்கை பத்துப் பதினைந்து சதவீதம்கூட இல்லை என்பது, வேதனையும் வெட்கமும் பட வேண்டியதாகும்"[7] திரைப்படத் துறையைச் சேர்ந்த ஓர் இதழ்தான் வெட்கப்படுகிறதே தவிர, சம்பந்தப்பட்டவர்கள் இது பற்றி வேதனைப்பட்டதாகவோ வெட்கப்பட்டதாகவோ தெரியவில்லை. வெற்றிப் படங்களாகப் 'பேசும்படம்' குறிப்பிடும் படங்களும்கூட சமுதாய மேம்பாட் டிற்கு ஆக்கபூர்வமாக உதவிய வகையில் வெற்றி பெற்றுள்ள தாகக் கூற முடியாது. ஏனென்றால் எவ்விதக் கதைக் கட்டுக்

கோப்பும் இல்லாத சில மசாலாப் படங்களும்கூட வெற்றிப் படங்கள் என்ற நிலையை எட்டிப் பிடித்துள்ளன. ரசிகர்களைக் கவரும் சில உத்திகளை நன்முறையில் அவைகள் பின்பற்றியமையால்தான் வெற்றிப் படங்களாக மதிப்பீடு செய்யும் தகுதியை அவைகள் பெற்றுள்ளன. அந்த உத்திகளைப் பின்பற்றத் தவறிய சில நல்ல படங்களும்கூட (உ-ம்: ஏழாவது மனிதன்) தோல்வியைத் தழுவியுள்ளன.

**கதையில் தரம்**

பாரதி நூற்றாண்டு விழா கொண்டாடப்படும் ஆண்டில் பாரதியார் பாடல்களை மட்டுமே படப்பாடல்களாகக் கொண்டு வெளிவந்த 'ஏழாவது மனிதன்' ஒரு தரமான சமூகப் படம். ஆனால் அது வெற்றி பெறவில்லை. "சென்ற ஆண்டு டெல்லியில் நடைபெற்ற சர்வதேசத் திரைப்படவிழாவில் கலந்து கொண்ட இப்படம், வியாபார ரீதியில் வெற்றியடையவில்லையென்றாலும் தரமான படங்களுள் ஒன்று என்பதை மறுக்க முடியாது"[8] என்று 'பேசும்படம்' அப் படத்தைப் பாராட்டியுள்ளது. அத்தி பூத்தாற்போல் எப்போதோ ஒரு நல்ல படமும் தமிழில் வெளிவருகிறது என்ற நிலை மாறவேண்டும். சமுதாயச் சீர்கேடுகள் மலிந்துள்ள இந்நாட்டில் தயாரிக்கப்படும் படங்கள் அக்கேடுகளை எடுத்துக் காட்டிப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் துணிவையும் மக்களுக்கு ஊட்டவேண்டும். அறிவை மயக்கும் போதைப் பொருள்களைப் போன்று மக்களை மேலும் மூடர்களாகவும், சோம்பேறிகளாகவும், குறுக்கு வழியில் உயர முயல்பவர்களாகவும், தன்னம்பிக்கையற்றவர்களாகவும் ஆக்கும் கதையமைப்புள்ள படங்கள் எடுப்பது தவிர்க்கப்படல்வேண்டும். உடலுக்கு உயிர் போன்றது ஒரு திரைப்படத்திற்கு வலுவான கதையமைப்பு என்பதைத் திரையுலகத்தினர் உணரவேண்டும். கதைக்காகத்தான் நடிகர்களேயன்றி, நடிகர்களுக்காக கதை என்ற நிலை மாற வேண்டும். தரமான படங்கள் வெளிவருவதற்கு மூலகாரணம் வலுவான கதையமைப்பே. 82இல் வெளியான படங்களில்நல்ல கதையமைப்பைக் கொண்ட படங்கள் மிகக் குறைவே.

**உரையாடல்களின் தரம்**

கருத்தாழமிக்க, நல்ல உரையாடல்களும் கூட படங்களின் வெற்றிக்கும், உயர்ந்த தரத்தை உணர்வதற்கும் துணை செய்கிறது. முன்பெல்லாம் நீண்ட உரையாடல்கள், அடுக்குமொழிகளாக அமைந்திருக்கும். அந்த உரையாடல்களை ஒழுங்காக உச்சரித்து, உணர்வுப் பூர்வமாக வெளிப்படுத்தும் ஆற்றல்

பெற்ற நடிக, நடிகையரும் அன்று இருந்தனர். இன்று அந்நிலை மாறிவிட்டது. தமிழ் பேசத் தெரியாத சிலரும்கூட இன்று தமிழ்த் திரைப்படங்களில் நடித்து வருகின்றார்கள். இன்று எடுக்கப்படும் படங்களில் உரையாடல்கள் மூலம் உணர்த்துவதை விட ஒளிப்பதிவுக்கருவி (கேமரா)யின் மூலம் நுட்பமான நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டியே உணர்த்தி விடுகிறார்கள். நீண்ட உரையாடல்களைப் பொறுமையுடன் கேட்கும் நிலையிலும் மக்கள் இன்று இல்லை. இருப்பினும் நறுக்குத் தெரித்தாற் போல் சுருக்கமாகவும் கருத்துச் செறிவுடனும் உரையாடல்கள் அமையும்போது கேட்டு மகிழ்ந்து பாராட்டவே செய்வர்.

82 இல் வெளியான படங்களில் நல்ல தமிழில் உரையாடல்களை எழுதிய சிலரும் உள்ளனர். சரித்திர, பக்திப் படங்களிலேயே அத்தகு உரையாடல்களுக்கு அதிக வாய்ப்பு உண்டாதலால் கே. எஸ். கோபாலகிருஷ்ணனின் தமிழ் உரைநடை இவ்வகையில் தனித்துவம் பெறுகிறது. பேச்சு மொழி என்ற நிலையில், ஓரளவு கொச்சையாகவும் அதே சமயம் பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு உரையாடல்களை அமைக்கும் திறம் படைத்த பலர் 82'ஆம் ஆண்டில் உரையாடல்களை எழுதியுள்ளார்கள். பாலசந்தர், ஸ்ரீதர், மகேந்திரன், பாக்யராஜ், விசு போன்றவர்கள் அவ்வரிசையில் சிறப்பிடம் பெறுகின்றனர். எஞ்சியவர்களில் பலர் ஆபாசங்களை உள்ளர்த்தமாகவும், சிலபோது வெளிப்படையாகவும் உரையாடல்களில் அமைத்துத் தமிழின் தரத்தையே தாழ்த்தியுள்ளனர் என்றுதான் கூறவேண்டும். சென்னை நகரில் சில பகுதியினர் பேசுவது போன்ற [இஸ்துகினு, இன்னா சொல்றே மச்சி...] உரையாடல்களையும் பல படங்களில் காண முடிகிறது. ஒழுங்கான கதையமைப்பு இல்லாத படங்களில்தான் இதுபோன்ற குறைபாடுகளை அதிகம் காணமுடிகிறது. தரக் குறைவான உரையாடல்களாலும் படங்களின் தரம் குறைந்து விடுகிறது என்பதை அத்துறையினர் உணர வேண்டும்.

**பாடல்களில் தரம் :**

சில திரைப் படங்களின் வெற்றியையும், அதன் தரத்தையும் நிர்ணயிப்பதில் அப்படத்தில் இடம் பெற்ற பாடல்களுக்கு முக்கியப் பங்கு உண்டு. சொல்லப் போனால், உரையாடல்களைக் காட்டிலும் பாடல்களுக்குத்தான் செல்வாக்கு அதிகம். ஏனெனில் அந்தப் படத்தைப் பார்க்கும்போது மட்டுமே உரையாடல்களைக் கேட்டு உணர்கிறோம். ஆனால் பாடல்கள், வானொலி, தொலைக்காட்சி வாயிலாகவும், ஒலி பெருக்கிகள் வாயிலாகவும் அடிக்கடி கேட்கும் நிலையில் அமைகின்றன. படித்தவர் முதல்

பாமரர்வரை அனைவரது கவனத்தையும் ஈர்க்கும் ஆற்றல் திரைப்படப் பாடல்களுக்கு உண்டு. உரையாடல்கள் மூலம் உணர்த்துவதைவிட பாடல்களின் மூலமே உயர்ந்த கருத்துக் களையும் எளிமையான முறையில் மக்களுக்கு உணர்த்தலாம். அப்படிஉணர்த்தி வெற்றிபெற்ற கவிஞர்களில் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், கண்ணதாசன் ஆகியோரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

திரையுலகின் கவிச்சக்கரவர்த்தியாக விளங்கிய கண்ணதாச னின் மறைவிற்குப் பிறகு 1982இல் வாலி, வைரமுத்து, புலமைப் பித்தன், முத்துலிங்கம், பஞ்சு அருணாசலம், கங்கை அமரன், ராஜேந்தர் உட்பட பல கவிஞர்கள் பாடல்களை எழுதியுள் ளார்கள். எல்லோரையும்விட அதிகப் படங்களுக்கு (51 படங்கள்)ப் பாடல்களை எழுதியவர் வாலி. அதற்கடுத்து நிற் பவர் வைரமுத்து. வைரமுத்துவைத் தவிர ஏனைய கவிஞர் களெல்லாம் மரபுமுறை பிறழாது பாடல்களை எழுதும் திறம் பெற்றவர்கள். பட்டுக்கோட்டையாரைப் போன்று உயர்ந்த தத்துவங்களை எளிய முறையில் கூறிய பாங்கினையும், கண்ண தாசன் எழுதியது போன்று இலக்கியத் தரம் மிகுந்த பாடல்களை யும் இன்று காண முடியவில்லையெனினும் ஓரளவு தமிழின் தரம் குறையாப் பாடல்களைப் பெரும்பாலோர் படைத்து வருகின்றார்கள். வைரமுத்துவின் பாடல்களில் புதுக்கவிதைத் தன்மைகளாகிய புரியாத உருவகங்கள், போதையூட்டும் சொற் சாலங்களே மிகுதி. திரையுலகில் அடிவைத்த போது விண்ணைப் பார்க்கத் தொடங்கிய அவர் இன்னும் தன் பார்வையைக் கீழே தாழ்த்தவில்லை. மண்ணையும் அதில் புரையோடிப் போய் விட்டிருக்கும் மாசுகளையும் இனங்கண்டு எடுத்துக் காட்டும் ஆற்றல் பெற்றிருந்ததால் தான் பட்டுக்கோட்டையார், ஒரு 'மக்கள் கவிஞராக' மலர்ந்தார். எத்தனைப் பேரும் புகழும் இன்றையக் கவிஞர்களுக்கு இருந்து என்ன பயன்? மீண்டுமோர் 'பட்டுக் கோட்டையார்'ராகும் தகுதி எவருக்கும் இல்லையே! பாடல்களில் உள்ள கருத்துகளுக்காக இல்லையென்றாலும் இனிய இசைக்காகவே அதிக நாட்கள் ஓடிய படங்கள் 82'இல் உள்ளன. 'வாழ்வே மாயம்', 'பயணங்கள் முடிவதில்லை, என்ற படமும் வெற்றிப் படங்களாகியுள்ளதை இவ்வகையில் குறிப்பிடலாம். அரிய கருத்துகளையும் எளிய நடையில் எல் லோருக்கும் புரியும் முறையில் கூறும் நிலை உருவானால், இசை யின் கைத்தாங்கலின்றியே கம்பீரமாக வீறுநடை போடும் பாடல்களாக அவை அமையும். அதைச் செய்ய வேண்டுவதே காலத்திற்கேற்ற சேவையாகும்.

# 82' இல் திரைப்படக் கலைஞர்கள்

திரைப்படம் தயாரித்தல் என்பது ஒரு கூட்டுமுயற்சி. பணம் படைத்த தனிப்பட்ட சிலருக்கே அப்படங்களின் இலாபம் உரிமையாகிறதெனினும் அப்படங்களை உருவாக்கும் முயற்சியில் பலருக்குப் பங்கு உண்டு. அதில் முதலிடம் பெறுபவர் படத்தை இயக்கும் பொறுப்பை ஏற்றவரே. ஒரு நிறுவனத்தைச் சிறப்பாக நிர்வகிப்பதில் இயக்குநருக்குப் பெரும் பொறுப்பு இருப்பது போலவே திரைப்பட இயக்குநருக்கும் அப்படம் உருவாவதில் பெரும் பொறுப்பு உண்டு. தயாரிப்பாளரின் தயவால் 'இயக்குநராக' நியமிக்கப் படுபவர்கள் உண்டு. அவர்களால் அப்படங்களின் வெற்றி தோல்விகள் நிர்ணயிக்கப்படுவதில்லை. ஆனால், அனுபவத்தாலும் திறமையாலும் இயக்குநர்களாக உயர்வு பெற்றுள்ள சிலர் தங்களுக்கென்று தனிப்பாணியையும், பாங்கினையும் அமைத்துள்ளனர். அவர்களின் பெயரைக் கேட்ட அளவிலேயே அவர்களால் இயக்கப்படும் படங்களின் கதையமைப்பு எப்படி இருக்கும் என்பதைக் கூறிவிட முடியும். தமிழ்த் திரைப்படங்களில் தமிழின் நிலை என்ன என்பதை நிர்ணயிப்பவர்களும் இத்தகைய இயக்குநர்களே!

82இல் வெளியான திரைப்படங்களில் சில சிறந்த படங்களை இயக்கிய இயக்குநர்களைப் பற்றியும் அவர்களால் தேர்வு செய்யப்படும் கதையமைப்பைப் பற்றியும் கீழ்க்கண்டவாறு திறனாய்வு செய்கிறார் திரைப்படத் திறனாய்வாளர் ஒருவர்.

''...இவர்களில் கே. எஸ். கோபாலகிருஷ்ணனின் படைப்புகள் குடும்பப் பிரச்சினைகளை மையமாக வைத்து வெறும் சென்ட்டி மென்ட்டலாகச் சித்திரிக்கப்படுபவை. மகேந்திரன், பாலுமகேந்திரா ஆகியோர் சொல்லும் கதையைவிட, அதை எவ்வாறு சொல்வது என்பதில்தான் ஆர்வம் காட்டுகிறார்கள். டி. ராஜேந்தர் போன்றோர் மனித வாழ்வின் இளமைக்காலப் பகுதியான காதல் அம்சத்தை மட்டுமே பிரதானப்படுத்துகிறார்கள். நம்பிக்கைகளைத் தகர்த்து நிராசையின் எல்லையில் நம்மைக் கொண்டுபோய் நிறுத்துகிறார்கள். துவக்க காலத்தில் ஓரளவு சமுதாயப் பிரச்சினைகளை—குறிப்பாக பெண்கள் பிரச்சினைகளைச் சித்திரித்து வந்த துரை கூட தற்போது டி. ராஜேந்தர் பாணிக்கு இறங்கிவிட்டார். எல்லாவற்றைக் காட்டிலும் கவலை தரத்தக்க விஷயம் இந்த அணியில் இப்போது பாரதிராஜாவும் அட்மிஷன் ஆகியிருப்பதுதான்.

கிராமத்து மக்களை வித்தியாசமான கோணத்தில் புதுமையாகச் சித்திரித்து மகத்தான சாதனை புரிந்த பாரதிராஜா

காதல் களத்திற்குத் திரும்பி விட்டார். இவரது படங்களில் ஆழமான கதையம்சம் படிப்படியாகக் குறைந்துகொண்டே போய் வெறும் காதலையும் பாடலையும் மட்டுமே வைத்து ரசிகர்களைக் கிளுகிளுப்பூட்டும் மசாலாவே மலிந்து விட்டன. எனவே எவ்வித சமுதாயப் பொறுப்புணர்ச்சியும் இல்லாமலேயே எப்படியாகிலும் ஒரு படம் எடுத்துவிடலாம் என்ற போக்கு மலிந்து விட்டது.

திரையுலகில் இன்று வர்த்தகரீதியாகக் கொடி கட்டிப் பறப்பது பாக்யராஜ்தான். ஆனால் இவரது படைப்புகள் பழமையையும் பத்தாம் பசலித்தனமான கருத்தோட்டங்களையும், பெண்ணடிமைத் தனத்தையும்தான் பறைசாற்றுகின்றன. நளினமான இந்த நச்சுக் கருத்துக்கள் நமக்குப் புதியவை அல்ல. மணியன், சிவசங்கரி போன்றோரால் ஏற்கெனவே துவக்கி வைக்கப்பட்டதுதான்.

ஆரம்பத்தில் நடுத்தர வர்க்க குடும்பத்து பிரச்சினைகளை ஓரளவு சமுதாயக் கண்ணோட்டத்துடன் அறிவு ஜீவிகளை ஈர்க்கின்ற வகையில் படங்களை உருவாக்கியவர் பாலசந்தர். ஸ்ரீதருக்குப் பிறகு இவர் ஒரு Trend Sether. வாழ்க்கையின் பொருளாதாரப் போராட்டங்களை நேரடியாகச் சித்திரிப்பதை விட அதன் விளைவான மனப்போராட்டங்களையும், ஆன்மீக நெருக்கடிகளையும் கலையார்ந்த ரசனையோடு சித்திரிப்பது பாலசந்தருக்குக் கைவந்த கலை...''[9]

வெறும் காதலையும், மன உணர்வுகளையும், குடும்பப் பிரச்சினைகளையுமே கருவாகக்கொண்டு தயாரிக்கப்படும் படங்கள் வியாபார ரீதியில் வெற்றி பெறலாம். ஆனால் ஓர் இலட்சியக் கலைப்படைப்பின் நோக்கம் அதுவாக இருக்கக் கூடாது. வியாபார ரீதியில் தோற்றாலும் சமுதாய மேம்பாட்டிற்கு உதவிய வகையில் வெற்றியைப் பெறும் படங்களையே இயக்கும் பொறுப்பை இயக்குநர்கள் துணிந்து ஏற்கவேண்டும். அப்போதுதான் பல பாலசந்தர்கள் இங்கு உருவாக முடியும்.

இயக்குநர்களுக்கு அடுத்துச் சிறப்பிடம் பெறுபவர்கள் இசையமைப்பாளர்களே. ஒரு படத்தின் கதையமைப்பினை மாற்றும் வாய்ப்பு இவர்களுக்கு இல்லாவிடினும், அப்படத்தைத் தனது இசைத்திறமையால் வெற்றி பெறச்செய்யும் வாய்ப்பு இவர்களுக்கு உண்டு. இனிய இசையமைப்போடு கூடிய பாடல்களாலேயே வெள்ளிவிழாக் காணும் வாய்ப்பினைப் பெற்ற படங்களும் 82இல் வெளியாகியுள்ளன. இசையமைப்பாளர்களால் கவிஞர்களும், ஏன்? கவிதையின் தரமும்கூட உயர்வடைவதுண்டு. வாலியும் வைரமுத்துவும் கொடி கட்டிப் பறக்கக்

காரணம் விசுவநாதனும், இளையராஜாவும் தான் என்பதை எவரும் அறிவர். இசைஞானத்துடன் தமிழறிவையும் அவர்கள் பெற்றிருந்தால் இனிய இசையுடன் தரமான, கருத்தாழமிக்க பாடல்களையும் கேட்டு மகிழும் வாய்ப்பை நாம் பெறமுடியும்.

82இல் வெளியான படங்களில் பல படங்களுக்கு (39 படங்கள்) இசையமைத்திருப்பவர்கள் சங்கர்கணேஷ். அதற்கடுத்த நிலையில் இளையராஜாவும் பின் விசுவநாதனும் வருகின்றார்கள். கே. வி. மகாதேவன், ஷியாம், டி. ராஜேந்தர், கங்கை அமரன் போன்றவர்களும் சில படங்களுக்கு இசையமைத்துள்ளார்கள். எனினும் தான் இசையமைத்த படங்களில் பல படங்கள் தன் இனிய இசையாலேயே வெற்றி பெற்றுள்ளது என்ற பெருமையைந் பெறுபவர் இளையராஜாதான். கர்நாடக இசையிலிருந்து (காதல் ஓவியம்) கிராமிய மெட்டுகள் வரை (கோழி கூவுது); மேனாட்டுப் பாணி இசையிலிருந்து மெல்லிசை மெட்டுகள் வரை பல நிலைகளிலும் தம் ஆற்றலை வெளிப்படுத்தி, இசைத்தமிழ் அருவி திரையுலக மலையிலிருந்து வழிந்தோடி வந்து நம் மனங்களைக் குளிருமாறு செய்துள்ளார்.

இப்போதெல்லாம் உரையாடல்களால் விளக்கிக் கொண்டிருப்பதைக் குறைத்து காட்சிகளைக் காட்டுவதன் மூலமாகவே கதையின் அடிப்படை நோக்கத்தையும், பாத்திரத்தின் பாங்கினையும் காட்டி அதே சமயம் தமிழ்ப் பண்பாட்டினையும் காத்து விடுகிறார்கள். இப்புதிய முறையில் பாரதிராஜா, மகேந்திரன் போன்றவர்கள் நல்ல வெற்றியையும் பெற்று வருகிறார்கள்.

தீயவன் ஒருவன், ஓர் இளம்பெண்ணை நிர்வாணமாக்கிக் கற்பழிக்க முயல்வது போன்ற ஒரு காட்சி. அவள் ஆடைகளை அவன் கலையச் சொல்வது வரையில் அக்காட்சியைக் காட்டிய இயக்குநர் (மகேந்திரன்) அதற்கு மேலும் அத்துயரக் காட்சியையே தொடர்ந்து காட்டாமல் அந்த இளம்பெண்ணின் காதலன் வெளியில் ஓர் இடத்தில் அமர்ந்துகொண்டு பக்கத்திலிருந்த செடி ஒன்றைப் பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்டு பொழுது போக்கிற்காக அச்செடியில் உள்ள இலைகளை ஒவ்வொன்றாகப் பிடுங்கி வீசுவதுபோன்ற காட்சியைக் காட்டுவார். செடியில் உள்ள இலைகள் எல்லாம் பிடுங்கப்பட்டு விட்டன. நடுவிலிருந்த பூ மட்டும் பிடுங்கப்படவில்லை. அருமையான உத்தி. அந்த இளம் பெண் நிர்வாணமாக்கப் பட்டாளேயன்றி கற்பழிக்கப்படவில்லை என்பதை நாகரிகமாக அப்படத்தில் (உதிரிப் பூக்கள்) காட்டிவிட்டார் இயக்குநர். அது போன்ற நுணுக்கமான கலை நுட்பத்தைத் தொடர்ந்து அவரிடமே காண முடியவில்லையே!

அந்தக் குழந்தை பிறந்து பல மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் இன்னும் அதன் கால்கள் அசைவற்ற நிலையிலேயே இருந்தன. கால்கள் இயங்காமலேயே போய்விடுமோ என்று பெற்றவள் பதைக்கிறாள். ஒரு நாள் அக்குழந்தையைக் காண உறவினர்கள் வந்திருந்த போது, அவர்களுடன் வந்த இளம் சிறுவன் ஒருவன் போகிப் பண்டிகையின் போது சிறுவர்கள் கையில் வைத்து அடிப்பது போன்ற சிறு பறை யொன்றினைக் கையில் வைத்துக் கொண்டு ஒலி எழுப்புகிறான். அவ்வொலி, சதங்கையொலி போன்று ரிதமாக, இதமாக வெளிப்படுகிறது. அவ்வொலிக்கேட்பக் குழந்தையின் கால்களும் அசைவதைக் காட்டுகிறார் இயக்குநர் பாரதிராஜா. அதன் உட்பொருள் அக்குழந்தை பிற்காலத்தில் சிறந்த நடன மாதாக உருவாகப் போகிறாள் என்பது. அப்படம் (காதல் ஓவியம்) வெற்றி பெற வில்லையெனினும் பாரதிராஜாவின் பண்பட்ட முத்திரைகளைப் பல இடங்களில் பார்த்து மகிழுதற்கு அப்படத்தில் வாய்ப்புண்டு.

மேற்கண்ட நிகழ்ச்சிகளை நோக்கும்போது படத்தின் வெற்றிக்கு ஒளிப்பதிவாளர்களின் நுணுக்கமான கலை நுட்பமும் தேவை என்பது புலப்படும். 82இல் வெளியான சிறந்த படங்களி லெல்லாம் ஒளிப்பதிவாளர்களின் ஆற்றல் பளிச்சிடுகிறது. பாலு மகேந்திரா (மூன்றாம் பிறை), அசோக்குமார் (அழகிய கண்ணே, டார்லிங் டார்லிங் டார்லிங்) பாபு (சகலகலா வல்லவன்), லோக நாதன் (அக்னிசாட்சி) போன்றோர் சிறப்பாகக் குறிப்பிடு மாறு ஒளிப்பதிவு செய்துள்ளார்கள். இத்தகைய நுணுக்கமுள்ள ஒளிப்பதிவாளர்கள் தமிழ்த் திரையுலகிற்கு இன்னமும் தேவை.

## 82-இல் அறிமுகமானவர்கள்

திரைப்பட உலகம் எளிய முறையிலேயே பொருளையும் புகழையும் ஈட்டி விடுவதற்கு வாய்ப்பளிக்கும் ஒரு கவர்ச்சியான உலகம். அதற்கு மாறாக, இருந்த பொருளையும் புகழையும் கூட இழந்து விடும் விபரீதமான நிகழ்ச்சிகளும் இங்கு நடப்ப துண்டு. அதிர்ஷ்ட தேவதையின் அருள் இருந்தால் அதிக உழைப்பும் ஆற்றலும் கூட இல்லாமலேயே புகழின் உச்சிக்குச் சென்றுவிடலாம் என்றுபலர் எதிர்பார்க்கச்செய்யும் உலகம் இது. எதிர்பாராமல் அப்படிச் சில விபத்துகளும் கூட ஏற்பட்டு விடுவ துண்டு. எனவே, குறுக்குவழிகளிலேயே சென்று பழகிய நம்மவர், எளிய முறையில் பெரிய வாய்ப்புகளைப் பெற முயற்சிப்பது இயல்புதானே!

82'இல் நடிகர் நடிகையர் மட்டுமன்றிப் பல துறைகளிலும் பலர் அறிமுகமாகியுள்ளார்கள். கண்ணன் (காதல் ஓவியம்),

ரகுவரன் (ஏழாவது மனிதன்), பிரபு (பல படங்கள்) உட்பட 15 நடிகர்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளார்கள். அதில் தொடர்ந்து வாய்ப்புகளைப் பெற்று, தன் நடிப்பு முத்திரையைப் பல நிலைகளிலும் பதித்து வருபவர் பிரபு ஒருவரே. அது போல் 15க்கு மேற்பட்ட புதுமுக நடிகையர்களும் அறிமுகப்படுத்தப் பட்டனர். மனோசித்ரா (மாதுளை முத்துக்கள்), சுலக்ஷணா (தூறல்நின்னுபோச்சு), விஜி (கோழி கூவுது) போன்ற நடிகையர் நினைவில் நிற்குமளவு நடித்துள்ளார்கள். தரமான நடிகை என்ற நிலையை சுலக்ஷணா மட்டுமே அடைந்துள்ளார். மற்றவர்களும் முயன்று வருகின்றார்கள்.

இயக்குநர் என்ற நிலையில் புதிதாக அறிமுகமானவர்களில் சுந்தரராசன் (பயணங்கள் முடிவதில்லை), விசு (மணல் கயிறு), ஹரிஹரன் (ஏழாவது மனிதன்) போன்றவர்கள் குறிப்பிடத் தக்க அளவு வெற்றி பெற்றுள்ளார்கள். வேறு துறைகளிலும் பலர் அறிமுகமாகியுள்ளார்களெனினும் குறிப்பிட்டுக் கூறுமள விற்குத் தங்கள் திறமையை அவர்கள் வெளிக்காட்டவில்லை. அல்லது வெளிகாட்டுதற்குரிய வாய்ப்பு அவர்கட்கு அளிக்கப்பட வில்லை என்று கூறலாம். வெற்றி பெற்றவர்கள் எல்லோரும் திறமையானவர் என்றோ, தோல்வியைத் தழுவியவர் எல்லோ ரும் திறமையற்றவர் என்றோ திரையுலகைப்பொறுத்தவரையில் கூறமுடியாது. எனினும், ஆற்றலும் இடைவிடாத முயற்சியும் உடையவர்கள் என்றேனும் ஒருநாள் வெற்றி பெறுவர் என்ற நியதி திரையுலகிற்கும் பொருந்தும்.

**நிறைவுரை:**

இயல்,இசை,கூத்து என்ற முத்தமிழும் ஒருங்கு வளர்வதற்கு உரிய இடம் திரைப்படமே. தரமான கதை, வளமான உரை யாடல், கருத்துச் செறிவு மிக்க பாடல்கள் என்ற நிலையில் திரைப்படம் உருவாக்கப்படுமென்றால் இயற்றமிழ் செழித்து வளரும். ஆனால் அந்நிலை இன்று இல்லை. சில ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிலையும் கூட இப்போது தாழ்ந்தே வருகிறது. 'தங்கப் பதக்கம்' படத்தில் பளிச்சிட்ட மகேந்திரனின் எழுத் தாற்றல் இப்போது வெளிப்படவில்லையே! 'புதியவார்ப்' பில் வெளிப்பட்ட பாக்யராஜின் எழுத்தாற்றலை இப்போது காண முடியவில்லையே! நறுக்குத் தெறித்தாற்போல் சுருக்கமாகவும் பொருட்சிறப்புடனும் அதே சமயம், கூடுமானவரை நல்ல தமிழிலும் உரையாடல்கள் எழுதப்படவேண்டும். பாடல்களும், பெரும்பாலும் பிறமொழிச் சொற்களையும், கொச்சைச் சொற் களையும் தவிர்த்து, தூய தமிழில் எழுதப்படல் வேண்டும்.

இசைக்காகச் சொற்கோலங்கள் போடுவதைத் தவிர்த்து பாமரர்க்கும் பொருள் புரியுமாறு பாடல்கள் எழுதப்படல் வேண்டும்.

உள்ளமும் செவியும் குளிருமாறு மட்டுமே இசை அமைந்து விட்டால் போதாது. அது தமிழ்ப் பண்ணோடு பொருந்தக் கூடியதாக அமையவேண்டும். ஏழிசையின் வெளிப்பாடாகத் திரை இசைப் பாடல்கள் அமைய வேண்டும். 'ஏழிசையாய், இசைப்பயனாய்' இறைவனைக் கண்ட நாடு இது. இந்நாட்டுத் திரைப்படப் பாடல்கள் இசைத்தமிழின் பெருமையை மேலும் உயர்த்துவதாக அமையவேண்டும். பிறநாட்டவரின் இசையைக் கதையமைப்பை யொட்டி ஏற்கலாம்; தமிழிசையில் பிறநாட்டு இசையைக் கலந்து அவியல் செய்யும் நிலை மாறவேண்டும்.

அண்மைக் காலத்துப் படங்களில் பெரும்பாலும் கூத்திற்கு வாய்ப்பில்லை. நடனமாடத் தெரிந்த நடிகையரும் இன்று குறைவு. 82 இல் வெளியான படங்களில் 'காதல் ஓவியம்' போன்ற ஒன்றிரண்டு படங்களில் கூத்தின் சிறப்பைக் காண முடிந்தது. சொந்தக் குரலில் ஒழுங்காக உச்சரித்துப் பேசும் திறமும், உணர்ச்சிகளை முகபாவங்களால் வெளிக்காட்டும். ஆற்றலும் இயல்பான நடிப்பாற்றலும் உடையவர்களை இனங் கண்டு வாய்ப்பளித்து உற்சாக மூட்டவேண்டும். அப்போதுதான் தமிழ்த்திரைப்படத்தின் தரம் உயரும்; திரைப்படத்தால் தமிழும் வளரும்.

## அடிக்குறிப்பு விளக்கம்

1. கோமல் சுவாமி நாதன்-திரைப்பட விமர்சனங்கள்-முன்னுரை
2. பாலசந்தர் கே.
3. பட்டுக் கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள்- பக்கம் 161
4. டி. எஸ். ரவீந்திரதாஸ்-திரைப்பட விமர்சனங்கள்-பக்கம் 39
5. பாரதியார் கவிதைகள்-குயில்பாட்டு
6. பேசும் படம் மாத இதழ்—மார்ச்சு 1982 பக்: 28
7. ௸ ௸ மார்ச்சு 1983 பக்: 32
8. ௸ ௸ பக்-27
9. டி. எஸ். ரவீந்திரதாஸ்—திரைப்பட விமர்சனங்கள் பக்-13-15

பின்னிணைப்பு

## 82-இல் வெளியான தமிழ்த் திரைப்படங்கள்

1. அனு
2. அம்மா
3. அஸ்திவாரம்
4. அழகிய கண்ணே
5. அவள் ஏற்றிய தீபம்
6. அக்னி சாட்சி
7. அதிசயப் பிறவிகள்
8. அர்ச்சனைப் பூக்கள்
9. அவனுக்கு நிகர் அவனே
10. அந்த ராத்திரிக்குச் சாட்சி இல்லை.
11. ஆகாய கங்கை
12. ஆட்டோ ராஜா
13. ஆனந்த ராகம்.
14. ஆயிரம் முத்தங்கள்
15. இனியவளே வா.
16. இளஞ் ஜோடிகள்
17. இதோ வருகிறேன்
18. இதயம் பேசுகிறது
19. இரட்டை மனிதன்
20. இராகம் தேடும் பல்லவி
21. ஈரவிழிக் காவியங்கள்
22. ஊரும் உறவும்
23. ஊருக்கு ஒரு பிள்ளை
24. எச்சில் இரவுகள்
25. எங்கேயோ கேட்ட குரல்
26. ஏழாவது மனிதன்
27. ஒரு வாரிசு உருவாகிறது
28. ஓம் சக்தி
29. கல்யாண காலம்
30. கண்ணோடு கண்
31. கண்மணி பூங்கா
32. கண்ணே ராதா
33. கனவுகள் கற்பனைகள்
34. கடவுளுக்கு ஓர் கடிதம்

35. கருடா சௌக்கியமா
36. காதல் ஓவியம்
37. காதலித்துப் பார்
38. காற்றுக் கென்ன வேலி
39. காதோடுதான் நான் பேசுவேன்
40. குரோதம்
41. குப்பத்துப் பொண்ணு
42. கேள்வியும் நானே பதிலும் நானே
43. கோபுரங்கள் சாய்வதில்லை
44. கோழி கூவுகிறது
45. சட்டம் சிரிக்கிறது
46. சகல கலா வல்லவன்
47. சங்கிலி
48. சிம்லா ஸ்பெஷல்
49. சிவந்த கண்கள்
50. சின்னஞ் சிறுசுகள்
51. டார்லிங் டார்லிங் டார்லிங்
52. தணியாத தாகம்
53. தனிகாட்டு ராஜா
54. தாய் மூகாம்பிகை
55. தாம்பத்யம் ஒரு சங்கீதம்
56. தியாகி
57. தீர்ப்பு
58. தீராத விளையாட்டு பிள்ளை
59. தீர்ப்புகள் திருத்தப் படலாம்
60. துணை
61. துணைவி
62. தூக்கு மேடை
63. தூறல் நின்னு போச்சு
64. தேவியின் திருவிளையாடல்
65. தொட்டால் சுடும்
66. நலந்தானு
67. நன்றி மீண்டும் வருக
68. நம்பினால் நம்புங்கள்
69. நடமாடும் சிலைகள்
70. நாடோடி ராஜா
71. நாயக்கரின் மகள்
72. நான் குடித்துக் கொண்டே இருப்பேன்
73. நிரந்தரம்
74. நிஜங்கள்

75. நிழல் சுடுவதில்லை
76. நிழல் தேடும் நெஞ்சங்கள்
77. நினைவெல்லாம் நித்யா
78. நீதிதேவன் மயக்கம்
79. நெஞ்சங்கள்
80. நெஞ்சில் ஒரு ராகம்
81. நேரம் வந்தாச்சு
82. பஞ்சவர்ணம்
83. பயணங்கள் முடிவதில்லை
84. பட்டணத்து ராஜாக்கள்
85. பகடை பன்னிரண்டு
86. பக்கத்து வீட்டு ரோஜா
87. பரிட்சைக்கு நேரமாச்சு
88. பண்ணைபுரத்துப் பாண்டவர்கள்
89. பார்வையின் மறுபக்கம்
90. புதுக் கவிதை
91. பூம்பூம் மாடு
92. பொய் சாட்சி
93. போக்கிரி ராஜா
94. மகனே மகனே
95. மணல் கயிறு
96. மஞ்சள் நிலா
97. மருமகளே வாழ்க
98. மாதுளை முத்தங்கள்
99. மானாமதுரை மல்லி
100. மாமியாரா மருமகளா
101. முறை பொண்ணு
102. முள் இல்லாத ரோஜா
103. மூன்றாம் பிறை
104. மூன்று முகம்
105. மெட்டி
106. ரங்கா
107. ராக பந்தங்கள்
108. ராணித் தேனீ
109. லாட்டரி டிக்கட்
110. வடை மாலை
111. வடிவங்கள்
112. வசந்தத்தில் ஓர் நாள்
113. வாழ்வே மாயம்

# 5. புதுக்கவிதை

இரா. இரகுபதி

புதுக்கவிதையின் பாடுபொருள் எழுபதுகளிலும் அதன் பின்னும் சர்வதேச எல்லைகளைத் தொட்டு நின்றது. 1982—இல்—நாட்டின் நிலை, அரசியல், சுதந்திரம், வாழ்க்கை நிலை ஆகியவற்றைப் பாடுவதாகவே அமைந்துள்ளது.

## முன்னுரை

1982-இல் பாரதி நூற்றாண்டு விழா தமிழகத்தின் மட்டு மல்லாது நம் நாடெங்கும் அனைத்து மாநிலங்களும் கொண் டாடப்பட்டது. உலக சமாதான ஒருமைப் பாட்டுக்குழு நாடு களில் பாரதியைக் கொண்டாடி மகிழ்ந்தது. அத்தகைய நூற் றாண்டு விழாவின் நாயகன் தமிழில் தொடங்கி வைத்ததுதான் ‘வசன கவிதை’ என்ற புதிய துறை.

பாரதி தொடங்கி வைத்த வசன கவிதையை, ந. பிச்சமூர்த்தி, கு. பா. ரா, வல்லிக்கண்ணன், சி.சு செல்லப்பா போன்றோர் சீராட்டி வளர்த்தனர். ஆனால், இவர்களுடைய கவிதைகள் ஒரு வட்டத்திற்குள்தான் சுழன்று கொண்டிருந்தன. இப்படி ஒரு குறிப்பிட்ட வட்டத்தில் பயின்று கொண்டிருந்த கவிதையை 1968, 69, 70 ஆம் ஆண்டுகளில் மக்கள் மத்தியில் எடுத்துக் கொண்டு வந்தவர்கள் சிற்பி, மீரா, நா.காமராசன், அப்துல் ரகுமான், வானம்பாடி குழுவினர் போன்றவர்கள்தான். இன்று இவர்களோடு இணையும் கவிஞர்களின் பட்டியல் நீளும்.

இன்று புதுக்கவிதை என்று சொல்வதையே, பலர் அதில் ‘‘புது’ என்ற அடையை ஏன் சேர்க்க வேண்டும்? நாங்கள் எழுது வதுதான் ‘கவிதை’’’ என்று முனைப்புடன் விவாதிக்கத் தொடங்கி இருக்கின்றனர். இதுபற்றி புலவர் புலமைப் பித்தன் எதுகவிதை என்ற நூலையே எழுதி வெளியிட்டுள்ளார்.

தான் எழுதத் தொடங்கும் போது வசன கவிதை என்றே பாரதி பெயரிட்டான். இன்று புதுக்கவிதை உரைவீச்சு,

உரைநடைக் கவிதை என்று பல்வேறுவகைகளில் இதனை வழங்கி வருகின்றனர். ஆனால் புதுக்கவிதை என்பதே அனைவரும் அறிந்த வழக்காக, இன்று இலக்கிய உலகம் ஏற்றுப் பயன்படுத்தி வருகிறது.

அத்தோடு, புதுக்கவிதை இடையறாத தாக்குதல்களையும், வரவேற்பையும் பெற்று வளர்ந்து கொண்டே வருகிறது. எனவே இவ்விடத்தில், "புதுக்கவிதை என்பதை எதனுடைய எதிர்ப்பாகவோ—அல்லது மீறலாகவோ கருத வேண்டியதில்லை. காலத்தோடு ஒட்டிய இயல்பான மொழிவளர்ச்சியே ஆகும். அது ஆரம்பகாலம் முதலே கவிதைத் துறையில் எழுதுகிறவர்களின் தேவைக்கும், மொழி வளர்ச்சியின் அவசியத்துக்கும் ஏற்ப அநேக மாற்றங்களும் வடிவ வளர்ச்சிக்கும் ஏற்பட்டிருப்பது போலவே, இப்போதும் பரிணாம ரீதியில் இந்த வடிவ வளர்ச்சி தோன்றியுள்ளது" என்னும் வல்லிக் கண்ணன் அவர்களின் கூற்று (முன்னுரை: விதி புதுக்கவிதைகள்) எண்ணுதற்குரியது. மரபுக் கவிதையில் தொல்காப்பியம் தொடங்கி காரிகை வரை பல மாற்றங்கள் ஏற்பட்டன. விருத்தங்கள், சிந்து, சந்தப்பாக்கள் அனைத்தே மரபுக் கவிதையின் வளர்ச்சியைச்சுட்டி நிற்பவையே. இவை பல்வேறு காலங்களில் 'தனித்துவம்' பெற்றுத் திகழ்ந்தன என்பது இலக்கிய வரலாறு. இன்று நாவல், சிறுகதை போன்றவைகளுக்கு இல்லாத அளவில் வாசகர்கள் தொகை 'புதுக்கவிதைக்குப்' பெருகியுள்ளனர்.

மற்றைய முந்திய ஆண்டுகளைவிட 1982 புதுக்கவிதையை இரசிப்பதிலும், படைப்பதிலும் வாசகர்கள் கூட்டம் முனைப்புடன் செயல்பட்ட ஆண்டு என்று குறிப்பிடுவது மிகையாகாது. இவ்வாண்டில் இளைய தலைமுறையின் முன்னோடிக் கவிஞர்களான சிற்பி, நா.காமராசன், அப்துல்ரகுமான், புவியரசு போன்றோர் தம் புதுக்கவிதை தொகுதிகளை வெளியிடா விட்டாலும் பாரதியை மெய்யும், சிந்தையும் சிலிர்க்கும் வண்ணம் பாடிப் போற்றியுள்ளனர். "பாரதி—1982" என்னும் சிவகங்கை பாரதி நூற்றாண்டு விழா மலரில்,

'அவன்
ககன இருட்டுக்
கபாட புரத்து
முகடுகள் கிழிய
முழங்கிய சேவல் (பக்.24)

நாமா வளிகளைப் பிறர்
நவின்று கொண்டிருக்கையில்
அவன்
சூறா வளிகளைச்
சுமந்த கர்ப்பம் (பக். 25-27)

என்று சிற்பியும்,

‘உனது வருகைக்குப் பிறகு
இந்தியர்களின் உடலில் படும்
துப்பாக்கிக் குண்டுகள் கூடத்
தூக்க நேரத்துக்
கொசுக் கடியை விடவும்
அற்ப மானவை ஆயின.
குரல்கள் எல்லாம்
போர்ப் பாடல்கள் ஆயின (பக்.44)

என்று நா.காமராசனும்,

உன் பேனா
கிரீடம் கழற்றிய போதெல்லாம்
ஆங்கிலேயன் கிரீடம்
ஆட்டம் கண்டது (பக்.21)

என்று அப்துல் ரகுமானும்,

‘சுதந்திரத்தை அடைகாத்த
கவிப் பறவையே!
குஞ்சு பொரித்தபோது
நீ இல்லாமல் போனாய்!
நாங்கள் அதைக்
கூடையில் போட்டு
மூடி வைத்திருக்கிறோம்! (பக்.51)

என்று புவியரசும், போற்றுவதையே போர்ப்பரணி போல் பாடியுள்ளார்.

மு.மேத்தா : தம்முடைய கண்ணீர்ப் பூக்களால் எண்ணிறந்த புதுக்கவிதை இரசிகர்களை தேடியிருக்கின்றார் என்பதே இவருடைய நூல்களின் முன்னுரைப் பகுதிகளில் காணமுடிகிறது. புதுக்கவிதை என்று சொல்லுகின்றபோது அதை எப்படி இனம் கண்டு கொள்வது என்று ஐயம் எழுதல் இயல்பு. எனவே இவர்

‘ இலக்கணச் செங்கோல்
யாப்புச் சிம்மாசனம்
எதுகைப் பல்லக்கு
மோனைத் தேர்கள்
தனிமொழிச் சேனை
பண்டிதப் பவனி
இவை எதுவும்
இல்லாத
கருத்துக்கள் தம்மைத்
தாமே ஆளக்
கற்றுக் கொண்ட
புதிய மக்களாட்சி
முறையே புதுக்கவிதை (ஊர்வலம் பக்.87)

என்று புதுக்கவிதை இலக்கணத்தையே வரையறுத்துப்பாடுவார்.

இவர் பாடும் புதுக்கவிதை இலக்கணத்திற்கு 82இல் மலர்ந்த இவரின் காத்திருந்த காற்று எனும் நூலே காட்டாக அமையும். எளிமையும், தெளிவும் இணைந்து வர, இவருடைய புலமையை நிமிர்த்தும் கவிதைகள் நிரம்பியதாகும் இது. இந்நூலின் முகப்பிலேயே

“ காத்திருக்கும் வரை
நம் பெயர்
காற்றென்று இருக்கட்டும்...
புறப்பட்டு விட்டால்
புயலென்று புரிய வைப்போம் ”

என்று படிப்போரை நிமிர்ந்து உட்காரச் செய்கிறார். இன்னும் ‘இளைய தோழனுக்கு’ என்று பாடும்போது,

நட
வெற்றி தேவதை
உன்னுடைய விலாசத்தை
விசாரிக்கத் தொடங்கும்வரை
நட.
பாதங்கள்
நடக்க
தயாராக இருந்தால்
பாதைகள்
மறுப்புச் சொல்லப்
போவதில்லை ” (பக். 5-6)

தூங்கி விழுந்தால்
பூமி உனக்குப்
படுக்கையாகிறது
விழித்து நடந்தால்
அதுவே உனக்குப்
பாதையாகிறது '' (பக். 7)

என்று, இலட்சியங்களற்ற இளைஞர்களுக்கு இலட்சியப் பாதையை வகுத்துக் கொடுப்பதோடு, அவர்கள் சோர்வு படும் போது, அச்சோர்வை நீக்கும் அருமருந்தையும் தருகின்றார்.

நாடு உரிமை பெற நல்லோர் பலர் பாடுபட்டார்கள். காவலர்களின் மிகக் கடுமையான தாக்குதல்களையும், சிறைக்கோட்டங்களையும் அடைந்து அல்லல் பட்டார்கள். இது நம் முன்னவர் நிலை. இன்று உரிமை பெற்ற பின்னும் அந்நிலை மாறிவிட்டதா? இல்லை... பெற்ற சுதந்திரம் ஒருசில பேர்களுக்கே. மற்றவர்கள் இன்னும் சுதந்திரத்திற்காகப் போராடுகின்றார்கள். படுகாயமடைகின்றார்கள். இது மட்டுமா? மனிதர் நிலை, சுதந்திரம் பெற்ற நாட்டில் எப்படி இருக்கிறது? பாமரனுக்கும் புரியும் நிலையில்,

'' எங்கள் முன்னோர்
சுதந்திரத்திற்காகப்
போராடி
காயம் பட்டார்கள்
நாங்கள்
சுதந்திரத்தோடு
போராடி
காயம் படுகிறோம் (பக். 9)

என்று பாடுகிறார்.

எனவே இங்கே

'' பொருள்களையல்ல
பூமியையே
புதுப்பிப்போம்.
இங்கே
பொதுவாக்க வேண்டியது
கடமைகளை மட்டுமல்ல
உடைமைகளையும் தான் '' (பக். 52)

என்று சமுதாய மாற்றத்திற்கான சரியான திசையைச் சுட்டிக் காட்டுகிறார். பாரதி கவிதாஞ்சலியாகப் பாடும்போதுகூட

"பாரதி வேண்டியது
ஜாதிகள் இல்லாத
தேதிகள்.
நமக்கோ
ஜாதிகளே இங்கு
வீதிகள்" (பக். 83)

என்று தான் வாழும் சமுதாயத்தை விமர்சிக்கிறார். கண்ணதாசன் நினைவாஞ்சலி என்று பாடும்போது, அவரின் கவிதை, உரைநடை நூல்கள் அனைத்தையும் திறனாய்வு செய்வதுபோல்

"உன்னுடைய கவிதையில்
உரைநடையின்
எளிமை;
உன்னுடைய உரைநடையிலோ
கவிதையின்
இனிமை.
... ... ... ...
சுருக்கமாகச்
சொல்லலாம் இப்படி :
கவிதைக்கு
நீ
புருஷன்
உரைநடைக்கோ
அரசன் (பக். 87)

என்று பாடி கண்ணதாசனை நிறைவாக இலக்கியத் தராசுத் தட்டில் நிறுத்துகிறார்.

இதோடு நிற்கவில்லை. இவர் 82 இல்காதல் ஓவியங்களாக நடந்த நாடகங்களை குறித்தும் பாடியிருக்கிறார். கவிஞர், அரும்பு மலர்வதைப் போல் மென்மையினும் மென்மையாக,

"அன்போடு
அனுப்பி வைக்கிறேன்
உன்
கண்கள் நடத்தும்
காதல் திருவிழாவில்
கலந்து கொள்ள
என்
கடிதங்களை"

என்று அனுப்பி வைக்கிறார்.

மேலும்,

அதன்மீது
ஆயிரக்கணக்கான
கற்பனை ரதங்கள்
அன்றாடம் ஓடும்.
இருப்பினும்
அந்த
ஒல்லி மலர்க்கொடி
ஒடியாமல்
இருப்பது எப்படி?

என்று பாடும்போது கவிஞரின் புதுவகைக் கற்பனையும், கேள்வியும் புதுமையாக இருக்கிறது

ஆனால்

'என் மனைவிக்கு
எதிரியாய் இருந்தது
மதுதான்
வாயிற் படியேறி
நீ
வரும் வரைக்கும்'

என்று பாடும்போது, இலட்சியங்களையும், இலட்சியக் காதலர்களையும் பாடும் கவிஞர், இங்கே பலவீனமான இதயமுடையோரைக் கவிதையில் வேறு காட்ட வேண்டுமா? என்று எண்ணத் தோன்றுகிறது. கவிஞர் 'சென்னை சிரிக்கிறது' என்ற புதுக்கவிதை, சிறுகதையையும், 'இரண்டாம் வனவாசம்' என்று புதுமைப்பித்தனைத் தொடர்ந்து புதிய பார்வையோடு 'அகலிகை' பாத்திரத்தை வைத்து புதுக்கவிதை நாடகத்தையும் (காத்திருந்த காற்று) தந்து புதுக்கவிதையை 82இல் வளப்படுத்தியுள்ளார்.

தமிழன்பன்: காலத்திற்கு ஒருநாள் முந்தி எனும் தம் புதுக் கவிதைத் தொகுதியில் "எனது கவிதைகள் மனித வாழ்வின் அனைத்து அம்சங்களோடும் உதறிவிட முடியாத உறவு கொண்டவை என்னும் உண்மையைக் கோடிட்டுக் காட்டுவதை"ப்புலப்படுத்தும் (பக். 3) என்று பிரகடனப்படுத்தியிருக்கிறார். அதற்கேற்பவே இயந்திரமாகி விட்ட மனித நட்பினை

"என்ன சேது
எப்போ வந்தீங்க
இருபது வருஷமாச்சு

பார்த்து
இதோ
'இருபத்து நாலு!'
வருது......
வரட்டுமா...பார்ப்போம்
பிறகு! )பக்.20)

என்று படம்பிடித்துக் காட்டிசிந்திக்க வைக்கின்றார். நட்பினைப் பாடும் இவர், நாட்டு நடப்பினை அரசியல்வாதியைத் தோலுரித்துக் காட்டுகிறார்.

'எங்கள் ஊரில்
ஒருவர்
ஊராட்சி உறுப்பினரானார்—
ஒன்றியத் தலைவரானார்—
சட்ட மன்ற
உறுப்பினரானார்—
அமைச்சரானார்—
அயல்நாட்டுத் தூதரானார்—
இறுதிவரை...
ஒரு முறை கூட
மனிதராகாமலே
மரணமானார் (பக். 52)

மேலும், பாரத தரிசனத்தில்

தேசப் படத்தில்
நதிகளும் மலைகளும்
தெரிந்தால் போதாது
பாமர மனிதன்முகம்
எப்போது தெரியும் (பக். 70)

என்று கேட்டு, பாமரன் பக்கம் நின்று அவனை மேலுயர்த்தத் துடிக்கின்றார்.

ஆனால் இவர்,

'அவன் என்ன எழுதிக் கிழித்துவிட்டான்
இவன் என்ன எழுதிக் கிழித்து விட்டான்
நான் விமர்'சினம்' செய்ய (பக். 48)

என்று 'கவிச்சினம்' கொண்டு எழுதுவது உரைநடையாகி உடைந்து போகிறது.

'அடங்கும் போது
எனக்கு
ஆறடி நிலம் போதும்—ஆனால்
வாழும் போது
வானும் நிலமும்—என்
வசப்பட வேண்டும்'' (பக். 53)

என்று 'டால்ஸ்டாயுடன் ஒரு வார்த்தை பேசும்போது நன்றாகவே இருக்கிறது. ஆனால்,

''விரலில்
நகம் வளர்ந்தது
நகத்தை வெட்டினோம்
மனத்தில்
நகம் வளர்ந்தது
மனத்தை வெட்டினோம்'' பக். 31-32)

என்ற இக்கவிதைகள் இறுக்கமானவை. ''வார்த்தைகளே! யாப்புக் கூண்டிலிருந்து வழங்கப் போகிறேன் விடுதலை உங்களுக்கு'' (பக். 49) என்று சொல்லிவிட்டு இவரே வார்த்தைகளை 'இருண்மை' கூண்டிலே தள்ளும் நிலையைச் செய்துவிடுகின்றார்.

வாலி:

திரைப்படக் கவிஞர் வாலி பொய்க்கால் குதிரைகள் மூலம்,

''யாப்புக் கடவுளுக்குப்
போட வைத்த
தோப்புக் கரணங்கள் அல்ல!
உறங்கும்
உள்ளங்களை
உசுப்பி
உணர்வு வர
உஷ்ணப்படுத்தும்
சூரியக் கிரணங்கள்.
இந்தக்
கிரணங்கள்
இலக்கண
கிரகணங்களால்
பீடிக்கப்படாதவை'' (பக். 3)

என்று புதுக்கவிதைகளை எழுதி அரங்கேற்றம் செய்துள்ளார். இவரின் புதுக்கவிதைகள், இயக்குநர் கே. பாலசந்தர் அவர்கள் அக்னி சாட்சி படத்தில் சரிதா பாடுவதாக,

'மரங்கள்
தமக்குள்
முனகிக் கொண்டன
இந்த மனிதர்கள்
நம்மைக் கொண்டு
பல
சிலுவைகளைச்
செய்து விடுகிறார்கள்;
ஆனால்
தம்மைக் கொண்டு
அவர்களால்
இன்னமும்
ஓர்
ஏசுவைத்
தயாரிக்க
இயலவில்லையே
அது ஏன்?' (பக். 5)

போன்ற கவிதைகள் இசையின் துணையோடு பாடி பலரின் உள்ளங்களை ஈர்த்துள்ளன.

'மறியே! செம்மறியே!!
மேயப் போகிறாயா!
போ!
உன்னைத் தேடும்படி வைக்காதே!
இருட்டியதும்—நீயாகவே
வீடு திரும்பி விடு
.........—...
விடியும் வரையில்...அரைத் தூக்கத்தில்
ஆனந்தமாக அசைபோடு!
விடிந்த பிறகுதான்...
பக்ரீத்'

அன்பு! உருக்கம்! நெகிழ்ச்சி, அத்தனை உணர்ச்சிகளையும் உருட்டித் திரட்டி 'பக்ரீத்' என்பதன் மூலம் இடிச்செய்தியை தெரிவிக்கிறார். இக்கவிதையில் புதுக்கவிதைக்கே உரிய உத்திகள் வெகு இயல்பாக வாலிக்கு வசப்பட்டிருப்பதை காண முடிகிறது.

'அந்தப் பிறைநிலா! பற்றிப் பாடும்போது

''அந்தப்
பிறைநிலா?
எங்கள்
உழவர் பெருமக்கள்...

நிலக்கிழார்கள்
நெடும் பசிக்கே
அறுவடை
செய்து
அறுவடை
செய்து......
தங்கள்
அரை வயிற்றுக்
கஞ்சிக்கும்
ஆலாப் பறக்கும்
ஆத்திரத்தில்..........
விண்ணை நோக்கி
விட்டெறியப்
பிடி
ஒடிந்து போய்
மேகப் புதரில்
மாட்டிக் கொண்ட
அரிவாள்தான்
அது'' (பக் 13-14)

என்று பாடும் போது கவிஞனின் சிந்தனை வலு புலப்படுகிறது- அதே கவிதையில்,

'ஆகாய கங்கை
பூமியைக்
குனிந்து
பார்க்கையில்......
அவள்
மேக ரவிக்கையை
மீறிப்
பிதுங்கிய மார்பகக் கதுப்போ?' (பக். 11)

என்று பாடும்போதும், 'மலைகள் மல்லாந்து படுத்திருக்கும் மண் மாதாவின் மார்பகங்கள், (பக்.39) என்று பாடும் போதும் கற்பனை விரசம் தலை நீட்டுகிறது

இருப்பினும், வாலியின் புதுக்கவிதைகள் மேலும் மலர வேண்டும் என்ற ஆவலைத் தூண்டக் கூடிய அளவிற்கு பொய்க் கால் குதிரைகள் மூலம் உண்மையாக்கியுள்ளார்.

வைரமுத்து

புதுக் கவிதைகளைப் பாமரர்களின் புத்தகங்களான திரைப் படங்களில் உலவ விட்டு இன்று அனைவரையும் தன் பக்கம் ஈர்த்துள்ளவர் வைர முத்து.

இவர் தன்னுடைய கவிராஜன் கவிதையின் மூலம், புதுக் கவிதை வரலாற்றில் ஒரு புதிய தடயத்தை உருவாக்கி இருக்கிறார். நூலாக வெளிவந்துள்ள இக்கவிராஜன் கதை முன்னுரையில் ''ஒரு கவிஞனின் வரலாறு கவிதையால் எழுதப்பட்டமையானும், புதுக்கவிதை நெடுங்கதையாக முடியும் என நிருபித்தமையானும், புதுக்கவிதைக்குக் காப்பியத் தகுதி பெற்றுத் தந்தமையானும்'' முவ்வழிகளில் இந்நூல் முதனூலாமென்க'' என மொழிந்துள்ளார். பாரதியின் வரலாற்றை, முந்நூற்றுக்கும் மேற்பட்ட பாரதி பற்றிய நூல்களில் மூழ்கித் தெளிவின் ஒளியோடு பட்டை தீட்டியிருக்கிறார் கவிஞர் வைரமுத்து.

'ஒரு மழை மாதத்தில்
எட்டய புரத்தின்
இளைத்த தெருவொன்றில்
அந்தப் பிஞ்சுஞ் சூரியன் பிறந்தது.
அந்தத்
தொட்டில் குயில் அழுதது
அது
பாலுக்கு அழவில்லை;
பாஷைக்கு அழுதது
சோற்றுக்கு அழவில்லை
சுதந்திரத்துக்கு அழுதது
கோடிக் கண்களின் சோகத்தை
ஜோடிக் கண்களால் அழுதது' (பக். 12-14)

என்று 'அழுதத் தாகமாக' எழுதி வேகத்தையும் விறுவிறுப்பையும் ஏற்றுகிறார். காசி வாசத்திற்குப்பின் எட்டையபுர அரண்மனையிலிருந்து மதுரைக்கு வந்த பாரதியின் உணர்வுகளை

''ஒரு சுதந்திரச் சூரியன்
அரண்மனை
விடி விளக்காய்
ஒட்டியிருக்க
ஒன்னுமோ?
ஒரு நாள்
குயில்
கூண்டு தாண்டியது.
அரண்மனைக் கதவை
ஒரு
திரையைப் போல் விலக்கித்
தெருவுக்கு வந்தது

பொதிகைத் தென்றல்
பூப்பெய்தி
மதுரைக்கு வந்து
மையமிட்டது' (பக். 42)

என்று பாடும்போது இவரிடம் கவிதை குபுகுபுவென மடை திறந்து கொட்டுவதை உணர முடிகிறது. ஓர் ஆய்வாளன்போல் பாரதியின் வரலாற்றை ஆண்டுகள் வாரியாகப் பிரித்து, ஒரு பூக்காரன் தேர்ந்தெடுத்து மலர்களை லாவகமாகக் கட்டித் தந்ததைப் போன்று கவிராஜன் கதையைப் படைத்திருக்கின்றார். மதுரையின் கோபுரங்களைப் பாடும் போது,

''உச்சி வானை முத்தமிட
இங்கிருந்தே
உதடு குவிக்கும் கோபுரங்கள்'' (பக். 43)

எனவும், 'புயலின் புத்திரர்கள்' எனும் தலைப்பில 'இந்தியா' பத்திரிகை பற்றிப் பாடும் போது

'நாலாயிரம் பிரதிகள்
அத்தனையும்
நகரும் நெருப்பின்
நகல்கள்' (பக். 67)

என்று பாடும் இடங்கள், பாரதி—வ.உ.சி. சந்திப்பு, கல்கத்தா காங்கிரஸ், சூரத்காங்கிரஸ், புதுவை வாசம், கடையம் சென்றது போன்ற பாரதியின் அத்தனை வரலாற்று நிகழ்ச்சிகளையும் நிரல் பட யாத்துள்ளார்.

ஆனால் சில இடங்களில் இவர் கவிதை உரைநடையாகி உடைந்து போவதைப் பார்க்கிறோம். ''வ. ராவின் தோளில் வலது கை போட்டுக் கொண்டு பட்டாளநடைநடந்தான் பாரதி. முகத்தில் மொய்த்திருந்த சோகச் சுருக்கங்கள் அழிந்துவிட்டன. இதயத்திலிருந்த நம்பிக்கை ஜோதி கண்களில் கீற்றிட்டது. கடுகி நடந்தான். கலவை சங்கர செட்டியாரின் கதவைத் தட்டினான். கவிஞனைக் கண்டு தாழ்ந்தது செட்டியாரின் சிரம். 'நீங்களெல்லாம் இருந்துநாங்கள்புதுவையை விட்டுப் போகவோ? விரலில் இருக்க நகத்திற்கு அனுமதி இல்லையோ? பாரதியின் கேள்வியில் ஆண்மையான சோகம் அமர்ந்திருந்தது. செட்டியாரின் இருவிழி ஓரமும் ஈரம் கட்டியது'' (பக். 176) இது ஒரு சான்று. இன்னும் சில இடங்கள் உண்டு. ஆனால் இதில் கூறும் படிமங்கள் அத்தனையையும் நமக்கு பழக்கமாகி விடுவதைப் போன்று நடையில் ஒளியை ஏற்றியுள்ளார். இவர்தம் முயற்சி இவருக்குப் பின்னவர்களை உருவாக்குவதன் மூலம்

இலக்கிய வரலாற்றில் தனி இடம் பெறும். இவர் 82இல் இன்னொரு தேசீய கீதம் என்ற நூலையும் தந்துள்ளார். இதில் உள்ள கவிதைகள் படிப்பவரின் உள்ளத்தில் ஆர்வக் கனலை எழுப்பும் வல்லமை வாய்ந்தவை. இவர் பார்வை சமூகத்தை ஊடுருவிப் பார்க்கும் பார்வை. எனவேதான் கிராமத்துமக்களின் அறியாமையையும், தமிழ்த் திரைப்படங்களையும் விமர்சனப் பார்வையோடு பாடுகிறார்.

'நம்மூர் ஜனங்கள்
வாழ்க்கையை வெளியே தொலைத்துவிட்டு
சினிமா கொட்டகையின்
செயற்கை இருட்டில் தேடுகிறார்கள்.
நம்மூர் ஜனங்கள்
வேறெங்கினும் வடித்த
வேர்வையை விடவும்
சினிமா டிக்கெட்டுக்குச்
சிந்தியதே அதிகம்
திரையரங்குகள்
தேனீக்களைக் கூடக்
கொசுக்களாய் மாற்றிவிட்டன?' (பக். 13-14)

தமிழகத்தில் ஆபாசப் படங்களே பெரும்பாலும் வெளிவருகின்றன. எனவே ஊரில் உள்ள கழுதைகள் கூடின. காரசாரமான விவாதத்திற்குப்பின் தீர்மானங்களை நிறைவேற்றின. விளைவு,

'கழுதைகள் எல்லாம் கூடி
ஒரு தீர்மானம் போட்டன.
வயதுக்கு வராத கழுதைகள் இனிமேல்
'ஏ' சுவரொட்டிகளை மேயலாகாது
ஐயகோ! பாவம்
வயதுக்கு வராத கழுதைகள் இதனால்
வாரம் முழுவதும் பட்டினி கிடந்தன' (பக். 15)

என்று.

மத்திய தர வர்க்கத்து மக்கள் திருமண நிகழ்ச்சிகளை வெகு ஆடம்பரமாக செய்துவிட்டு, அதன்பின் கல்யாணக் கடனை அடைப்பதையே தம் வாழ்க்கை கடனாகிப் போவதைக் கண்ட கவிஞர் வைரமுத்து,

''கல்யாண விரயம்
நிலப் பிரபுத்துவம்
விட்டு வைத்திருக்கும்
விலாசங்களுள் ஒன்று
........................
ஜலதோஷத்தை விட
சடங்குகள் கொடியவை
பார்த்ததும் பரவும்
இந்தக் கல்யாண ஆடம்பரம்
மேட்டு வர்க்கத்தின் மின்னல்!
நடுத்தர வர்க்கத்தின்
கண்களை அது கருக்கி விட்டது!'' (பக். 22)

என்று ஆடம்பரச் சடங்குகளைச் சாடுவது கவிதையின் புதிய பாடு பொருளாகும். திருமணங்களில்கலப்பு மணத்தை எவ்வளவு தான் அரசு ஆதரித்தாலும் சமூகத்தின் அங்கீகாரம் எளிதில் கிடைப்பதில்லை. அதற்குக் காரணம் வேரோடிவிட்ட ஜாதிகள் தான். எனவே.

''பொருளாதாரப் பூட்டுகள்
தெரிக்கும் வரைக்கும்
ஜாதியின் சல்லிவேரைக்கூடக்
கிள்ளி விட முடியாது
அந்தப் பூட்டைத்
திறப்பதற்கு நாம்
தேதி குறிப்போம்!" (பக் 30)

என்று 'பொருளாதார சமத்துவம்' ஏற்பட்டால்தான் கலப்பு மணங்கள் பெருகும். எனவே பொதுவுடைமை காண அழைப்பு விடுகிறார் கவிஞர்.

மேலும் 'அந்த அக்டோபர் புரட்சி' என்ற தலைப்பில் சோவியத் மண்ணில் நடந்த புரட்சியை, பாரதி இனம் கண்டு வரவேற்றதை அற்புதமாக பாடுகிறார்.

''பூமி
அன்று கொஞ்சம்
நின்று சுழன்றது
வானம்—
நிலத்தில் விழுந்து
சிவப்பானது!
...........

அன்று தெறித்த
நெருப்புக் கங்குகள்
ஒவ்வொரு தேசத்தின்
விலாவிலும் விழுந்தது!
...............
இந்தியா விலும்
வந்து விழுந்தது
ஆனால்... ஒரு
மீசைக்காரனைத் தவிர
அது தன்னைச்
சுட்டதாய் எவனும்
சொல்லவே இல்லை'' (பக். 94-95)

1947—ஆகச்டு 15 நாடு உரிமை பெற்ற நாள் நன்னாள். ஆனால் இக்கவிஞரோ அந்நாளை,

''அவன்
ஒரு
பட்டு வேட்டி பற்றிய
கனாவில் இருந்த போது
கட்டியிருந்த கோவனம்
களவாடப் பட்டது! (பக். 99)

என்று பாடி, நாட்டில் பாமரனின் பரிதாப நிலையைச் சுட்டு கிறார். இதுவன்றி 'போகி நெருப்பே பொசுக்கு' என்ற பாடலி லும் உழவனின் நிலையைப் பாடும் போது

''அவன்
வீட்டுக் கூரையின் வயது
வேட்டிக்கும் ஆகிறது'' (பக். 104)

என்று பாடி இதயத்தை உலுக்குகிறார்.

பாரதியின் பாப்பாப் பாட்டைப் போல் 'புதுக்கவிதை'யில் இவர் பாப்பாவுக்கு ஒரு பாட்டெழுதியிருக்கிறார். பட்டுக் கோட்டையார் தம் 'சின்னப் பயலை' நம் சிந்தையில் நினைவு படுத்தும் பாடல் பாட்டின் தலைப்பு 'நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா' என்பது:

''ஓய்ந்து கிடக்க
உனக்கேது நேரம்?
எழுந்திரு
............
பேதங்களை பிளந்து எறி

நீ ஆடும்
பல்லாங் குழியில் மட்டுமே
மேடுபள்ளம் இருக்கட்டும்! (பக். 122)
நீ முளைக்கத் தொடங்கும்
முயற்சியிலேயே
சுற்றியிருக்கும்
களைகளின் வேர்கள்
கழன்று போகட்டும்
தூண்டாமலே எரியும்
சூரிய விளக்காய்ச்
சுடர்விடு நீ
உன்
இரத்த ஓட்டம்
இந்த மண்ணுக்கு
இன்னும் சில கங்கைகளை
இழுத்து வரட்டும்'' (பக். 124)

இவ்வாறு பாமரன், பாப்பா, அவளுக்கே அவன் அந்நிய மானான்' என்ற கவிதையில் நம் நாட்டின் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகப் பாடத்திட்டங்கள்—போன்றவற்றைப் பாடி, ''நாட்டின் நிலையில் மாறுதலை உண்டாக்க வேண்டும்'' என்ற வேகத்தை படிப்பவருக்குத் தருகின்றார் கவிஞர். அதன் மூலம் இவர் கவிதை வெற்றி பெறுகிறது. 82இல் தம் புதுக்கவிதைகள் மூலம் நிமிர்ந்து நிற்கிறார் இக்கவிஞர் எனலாம்.

**தணிகைச் செல்வன் :** மார்க்சீய தத்துவத்தை பின்புலமாகக் கொண்ட இக்கவிஞர் 82இல் செம்மலரில் பல புதுக்கவிதைகளை எழுதி இருக்கிறார். தத்துவங்கள் என்ற தலைப்பில் செம்மலர் ஏப்ரல் இதழில்,

''தத்துவங்கள் எந்த வடிவத்திலும் தலையெடுக்கும்
வர்க்கங்கள் மட்டும் வடிவம் மாறாமல்
அவற்றின் பின்னால் ஒளிந்து நிற்கும்!
பிறர் பஞ்சம் நீக்கவரும் தத்துவமே
பிர பஞ்சத் தத்துவம்—எனப்
பெயர் பெறுதல் சரியாகும்!
—அதனை வரவேற்போம்; வாழ்த்துவோம்;
போதாது:
நாமே அதுவாக மாறுவோம்!'' (பக். 12)

என்று மார்க்சின் தத்துவ வெற்றியைச் சுட்டி அழைப்பு விடுக்கிறார். இக்கவிஞர் தம் கவிதையில் பிரச்சாரத்தை அதிகம் திணிப்பதால் கவிதையின் கலைத்தன்மை குறைபட்டு விடுகிறது,

**புகழேந்தி:** 'ஒரு கையெழுத்தில்லா கடிதம்' என்ற நூலின், மூலம் தன் புதுக்கவிதைச் சிறகை விரித்திருக்கிறார். இவரின் அழுத்தமான கவிதை நடையையும், சிந்தனையையும், சமூகத்தின் மீது வைத்துள்ள கோபத்தையும் இந்நூல் காட்டுகிறது.

''திருமணங்கள்
நிச்சயிக்கப்படுவது
சொர்க்கத்திலென்று
யார் வேண்டுமானாலும்
சொல்லிக் கொள்ளட்டும்
நான்
சொர்க்கத்தையே
திருமணம்
செய்து கொள்வதை
வலுவான வார்த்தைகளாய்
பிரகடனம் செய்கிறேன்'' (பக். 23)

என்று கம்பீர நடை போடுகிறார்.

ஆனந்த சுதந்திரம் பற்றிப் பாடும் இவர்

'சுதந்திரப் புல்லாங்குழல்
ஊதிப் பாருங்கள்
இன்னும் கூட
வெள்ளை ராகம் தான்
உற்பத்தியாகிறது' (பக். 60)

என்கிறார். 'பொசுங்கி விட்ட புஷ்பப் போர்வைகள்' என்னும் பாடலில்

''ஓ... பாரதத்தாயே
உனக்கும்
ஜனநாயகத்துக்கும்
நிச்சயதார்த்தம் மட்டும்
அடிக்கடி நடக்கிறது
ஆனால்
ஒவ்வொரு முறையும்
ஜானவாச ஊர்வலத்தோடு
திருமணம்
நின்று விடுகிறது
..................
சட்டப் புத்தகத்தை

நீ ஏன்
பக்கத்துப் பையனைப் பார்த்துக்
காப்பி யடித்தாய்?
இப்போது பார்
வெள்ளையனை விரட்டிய பின்னும்
அவன் உன்னைப்
புத்தக வடிவில்
ஆட்சி செய்வதை'' (பக். 26)

என்று இன்றைய நாட்டின் சட்டங்களை வீதிக்கு கொண்டு வந்து வெளிச்சமாக்குகிறார். இவர் பாடும் 'திருப்பள்ளி எழுச்சி' புதுமையாக இருக்கிறது.

''ஏ. கோபாலகிருஷ்ணா!
புல்லாங் குழலின்
மூச்சைப்
புயலாக்கி காட்டு என்றால்
நீ
பல்லாங் குழியாடப்
பெண்களைத் தேடுகிறாய்'' (பக். 71)

என்று இடிக்கிறார். தொனிப் பொருள் தொனிக்கும் கவிதைஇது

இன்னும் இவரின் 'இன்னொரு முன்னுரை' என்ற கவிதையில்

''திரும்பிப் பாருங்கள்
நான்
தெரிந்தவனாயிருக்கலாம்!
அஹிம்சை
எனது அடிப்படை உரிமைதான்!
அதற்காக
ஆயுதங்கள்
என்னிடம்
அறிமுகமாவதை
அராஜம் என்று
அறிவித்து விடுவதா?'' (பக்.87)

என்று எழும்பும் கேள்வி சிந்தனைக்குரியது. புகழேந்தி, என்பத்தி ரெண்டில் தன் புதுக் கவிதைப் பயணத்தில் அழுத்தமாக காலூன்றியுள்ளார் என்பதை இக்கவிதைத் தொகுதி தெற்றெனக் காட்டுகிறது.

நாகை மனோகரன்: தாமரை, அரும்பு, அலிபாபா, தேவி ஏடுகளில் புதுக்கவிதை எழுதி வந்த இவர் புள்ளிகளின் பூ முடிப்பு என்ற ஒருநூலைத் தந்திருக்கின்றார், ஓவியராகிய இவர் 'கவிதை ஓவியம்' வரைவதிலும் கைவரப் பெற்றவராகத் திகழ் கிறார்.

வரதட்சணைப் பற்றி பாட வந்த இவர்

''கரும்பைக் கடிப்பதற்குக்
கூலியா......?
காதல் பாடம் படிப்பதற்குக்
கையூட்டா...?
நாடித் துடிப்பைப்
பார்க்கவா
நரம்பையே எடுக்கிறீர்கள்...?
.................
வாழ்க்கைப் படகில்
செல்லுங்கள்
ஆனால்—படகே பயணப்படித்
தரவேண்டும் என்பது
என்ன நியாயம்?'' (பக். 57)

என்று வினாச் சரங்களைத் தொடுக்கிறார்.

அழகியல் ரசனையோடு கவி வடிக்கும் இவர் மீசையையும் விட்டுவிடவில்லை. மீசையை,

'வாரந்தோறும்
வளர்ந்து வரும் தொடர்கதை' (பக். 71)

என்று சுவைபடப் பாடுகிறார். இவர் கவிதை ''வெறும் சொற் களின் வெற்றுக் குவியலாக இல்லாமல், இவரது புதுக்கவிதை சலசலத்து ஓடுகிற சங்கீத நதி போல் ஆடி அசைந்து அழகு காட்டுகிறது'' (பக்.3)

டானியா நடராஜன் ; இவர் ஒரு மார்க்சிய கவிஞர். என்றா வது ஒரு நாள் என்ற இவரின் கவிதைத் தொகுதியில், தான் சேர்ந்த இயக்கத்திற்கேற்ப தத்துவத் தெளிவோடு கவி இசைக் கிறார்.

'உழைக்கும் மக்களின்
உதிர்ந்து போன
வாழ்வின் ஏட்டை
புரட்டி விடுங்கள்
தழைத்து வளரும்
இளந்துளி ரதுவை

கிள்ளி எறிந்தது போல்
உழைத்தும்
உதிர்ந்து போன
பாட்டாளி வாழ்வின் ஏட்டைக்
கொஞ்...ச்சம்
புரட்டி விடுங்கள்' (பக்.7)

என்று கிளர்ச்சிக் கவிஞராய் சூடேற்றுகிறார். இன்னும், மற்றை கவிஞர்கள் காதல் ஏக்கத்தில் தகிப்பதைப் பாடுவர். இவரோ

' விடியாத இருட்டில்
வாழுகிற எங்களில்
என்று ஒரு லெனின் பிறப்பானோ...?
அன்றுதான்
விடியல் கீதம்
பாடும் பறவைகளாவோம்' (பக். 29)

என்று பாடி—நாட்டின் ஏற்றம் காணத் துடிக்கிறார்.

**நாவேந்தன்**

இன்று வந்த எதிர்காலம் என்ற புதுக்கவிதை நூலில் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார்' என்ற தொல்காப்பிய மரபினை யொட்டி 'அவன், அவன், அவன், அவள், அவள், அவள்—என்று இருவர் காதற் கவிபாடுவதாகப் பாடியுள்ளார்.

பாரதி, பாரதிதாசன் இருவரும் காதல் வேகத்தில் கன்னியர் பார்வையால் மலைகளைச் சாடுவோம், மாமலையும் ஒரு கடு காம் எனப்பாடி மகிழ்வர். இவரோ, அவன் பாடுவதாகப் பாடு கிறார்.

'' சூரியக் கரங்களை
பூமியைத் தொடாமல்
வெட்டி வீசிட முடியும்
ஆனால்
எந்தன் கரங்கள்
உன்னுடல் வருடும்
வாய்ப்பைத் தந்திட
முடிய வில்லையே'' (பக்.32)

என்று, சூரியக் கரங்களையும் காதல் வன்மையால் வெல்லமுடியும் என்கிறார். ஆனாலும் காதலியை அடைய முடியவில்லையே என்று தவிக்கிறார். அவள் பாடுவதாகப் பாடும் போது புதிய உவமையொன்றை இவர் கையாளுகின்றார். கண்களைச்

செவிட்டுக் கண்களெனச் சொன்ன முதற் கவிஞர் இவராகத் தான் இருக்க முடியும்

' உன் செவிட்டுக் கண்கள்
பேச மறுத்ததால்
இருட்டுச் சாலையில்
இடி மேளத்துடன்
மின்னல் விளக்குடன்
மழையில்
ஊர்வலம் போகிறேன்.
இது
மவுன ஊர்வலமா?
அல்லது
மரண ஊர்வலமா?' (பக்.43)

அவலத்தால் நெஞ்சைக் குலுக்குகிறார்.

கவிஞர் உலகன் : சந்தம், சிந்துப் பாடல்களோடு புதுக் கவிதைகளையும் 82இல் தாம் படைத்த "புதிய பூபாளத்தில்" இசைத்திருக்கிறார். 'ஒரு மகன் தந்தையானான்' என்ற கவிதை இவருடைய சமுதாயப் பார்வையைக் காட்டி நிற்கிறது. இன்றைய அரசின் ஊதிய முறைகளையும், சமூக வாழ்வையும் எளிதாய்ச் சொல்லும் வேதனைக் கவிதை இது-

'அன்று
அவன்
தன் பெற்றோர்களின்
ஊதியத்தில்
ஆடைகள் அணிந்தான்;
அவனது
ஆடைகளில்
மடிப்புகள் கலையவில்லை.
இன்று
அவன்
தன் சொந்த
ஊதியத்தில்
ஆடைகள் அணிகின்றான்;
அவனது
ஆடைகளில்
மடிப்புக்கள்...இல்லை
வெடிப்புக்களே உள்ளன' (பக். 89).

**விஷ்ணு நாகராஜன்:** அன்னம் வெளியீட்டின் நவகவிதை யாளர் இவர். 82இல் புதிய திசையோடு வந்து வெறும் சொற் கோலம் போட்டு, வேதாந்தி போன்று புதக்கவிதைகளைத் தந் துள்ளார். 'தவம்' என்ற தலைப்பில் பாடுகிறார்.

' உருப்படியாய்
இராத்திரியில்
என்ன செய்யலாம்
காத்திருந்தேன்
காத்திருந்தேன்
விடியலுக்காக (பக். 13)

'வறுமையில் தளர்ந்து
வயதான கிழவியின்
சுருங்கிய முகத்தில்
பொக்கைச் சிரிப்பு' (பக். 33)

இது இவர் காணும் அழகின் சிரிப்பு. 'படிமம்' பொதியப் பாடு வது போன்று பாடி, வாசகர்களை 'இருண்மை' எல்லையில் நிறுத்தி விடுகிறார்.

**விக்ரமாதித்யன்:** இவர் தம் ஆகாசம் நீலநிறம் என்ற நூலில் 'கனவுக் கடைகள்' என்ற புதுக்கவிதையின் மூலம் எழுத்தாளர் களைச் சாடுகிறார். அடுத்த இவரின் 'காரணம்' என்ற கவிதை

'ஏன் தாடி வளர்க்கிறாய்?
என்று கேட்கின்ற நண்பர்களே!
இழப்பதற்கும்
வளர்ப்பதற்கும்
வேறென்ன இருக்கிறது
வேலையில்லா இளைஞனுக்கு?' (பக். 22)

என்று 'விரக்தி'யைக் காட்டுகிறார். இத்தொகுதியில் 'குறுங் கவிதை கூட்டம்' என்று பாடியிருக்கிறார். அனைத்தும் இவரின் சிந்தனையின் வலுவின்மையைச் செப்புவது.

'உடம்பு
விவஸ்தை கெட்டு
யோனி
தேடச்செல்லும்.
மனம்
அக்னியில் குளிக்க
ஆசை கொண்டு
அல்லல்படும் (பக். 44)

'தூக்கம் புதுப்பிக்கும்
தண்ணீர் உயிர்ப்பிக்கும்' (பக். 47)

இவையெல்லாம் புதுக்கவிதையில் தோன்றிய களைகள் என்பது தெளிவு.

கி. விஜயலட்சுமி

அன்னம் வெளியீடு காட்டும் நவகவிதையாளர். காற்றின் சந்தேகம் என்னும் எண்பத்திரண்டின் புதுக்கவிதை நூலில் வரதட்சணையின் கொடுமையைச் சீறிப் பாடும்போது, வரதட்சணை கொடுத்து வாழ்வதைவிட தனித்தே வாழ்ந்து விடலாம்' என்று உரிமைக்குரல் எழுப்புகிறார்.

'அருமைகளே சிறுமையாகும்
நாகரிக உலகில்
'வேலி போடுமுன்
பணம் கேட்கும் படிப்பாளிகட்கு
இலட்சமென தட்சணை தந்து
இலட்சனங்களை இழந்து
தேய்ந்து மடிவதைவிட
உரிமையின் உண்மையாய்
அழுக்குக்—கரம் படாமலே
தனித்து நின்று தேயலாம்' (பக். 27)

என்கிறார். 'சீற்றம் பிரச்னைக்கு தீர்வு கண்டு விடுமா?' இக் கவிஞரின் 'அரசியல்', 'உங்களில் யாருக்கேனும்' 'அவசரம் அவசரம்'—போன்ற கவிதைகள் சிறப்பாய் மலர்ந்துள்ளன.

நா. விச்வநாதன்: இவரும் அன்னம் வெளியீடு தரும் நவ கவிதையாளரே சுதந்திரம் என்னும் பெயரில் புதுக்கவிதை நூலைத் தந்துள்ளார். இவர் தரும் புதுக்கவிதைகள் பல இருண்மையின் வடிவங்களாய் உள்ளன. 'என் திருப்திக்கான படையல்' என்ற கவிதையில்

''பொம்மையொன்று செய்வேன்
பொல்லாத ஆசையால்!
ஈரக் களிமண்ணை
இதமாய் உருட்டு
பிசைந்து பதமாக்கு
கண்வரும் கால்வரும்
காதுகளும் வாயும்
வாயில் குமிழ் சிரிப்பும்
வர்ணமாய் வரும்

வேண்டிய விதத்தில்
நீட்டு — நிமிரும்
பொமமை வந்ததென்று
நினை
போதும்! '' (பக். 10)

என்று பாடுகிறார். இவர் கவிதைகள் பலவும் இப்படியே உள்ளன.

தி. வீரபாண்டியன் :

தம் 'சௌந்தர்ய சொப்பனங்கள்' என்னும் நூலில் மரபுக் கவிதைகளோடு புதுக் கவிதைகளையும் தந்திருக்கின்றார். மரபின் தாக்கத்தோடு இவரின் புதுக்கவிதைகள் அமைந்துள்ளன. ஆனால் நல்ல சமூகப் பார்வையுள்ள இக்கவிஞர்

' பருவ வயதில்
பிரபல் யமான
அழகு நடிகையின்
ஆட்டம் ஓய்ந்தது...?
காரணம்
மார், கட்டு சரிந்து விட்டதால்
மார்கட்டும் சரிந்து விட்டது' (பக். 26)

என்று விரசக் கவிதை பாடுவது அழகன்று.

துரை கோவிந்தராஜன் :

இவரும் மரபுகளோடு புதுக்கவிதைகளை தந்தவர். குற்றங்கள் தீர்ப்பு எழுதினால் என்ற இவர் நூலில் 'சறுக்கல் கோடுகள்' எனும் கவிதையை இப்படி தந்துள்ளார்.

'கிறுக்கல் வாழ்க்கையில்
ச
று
க்
கி
ய
எங்களின்
விதிக் கோடுகளை
யார்தான்
ஓவிய மாக்கப்
போகிறீர்கள்' (பக். 13)

இவர்களோடு இலங்கையைச் சேர்ந்த மேமன்கவியின், ஹிரோஷிமாவின் ஹீரோக்கள், முல்லையூரானின் 'போர்க்காற்று, எம். ஏ. நுஃமானின் அழியா நிழல்கள் போன்றவையும் ௦2இல் புதுக்கவிதை நூல்களாக வெளிவந்துள்ளன.

இதில் மேமன்கவி, 'புயல் சுமந்த மௌனங்களும் மயானத் தெருக்களும்' என்ற படிமம் பொதிந்த தலைப்பில் ''எழுத்துக் கலையின் ஜீவன்களான 95000 புத்தகங்களோடு-1981ஆம் ஆண்டு யாழ்நூலகம் எரிந்த செய்தி'' கண்டு வந்த சோகம் இங்கே கவிதை ராகமாய்,

'அறிவு விதைகள்
95000 புத்தகங்களின்
மலையாய் பிரகாசித்த
நூலக பூமி
யாக வேள்வி வார்க்கும்
தீக் கிறையாய்
தணல்களைக் கக்கியது' (பக். 98)

என்று ஹிரோஷிமாவின் ஹீரோக்கள் எனும் நூலில் எழுதி, நெஞ்சைத் துணுக்குறச் செய்கின்றார். உள்ளடக்கத்தில் உயர்ந்து நிற்கின்ற இலங்கையைச் சார்ந்தஇக்கவிஞர்கள் வடிவத்திலும், சொற்களிலும் கவனம் செலுத்துவது இன்றியமையாதது. உதய காலங்கள், எனும் நூலில் அமுதபாரதி,

'சலவைச் சட்டைக்குள்
சல்லடை பனியன்' (பக். 44)

என்று பாடி கொஞ்சம் உண்மையாக, கொஞ்சம் போலியாக வாழ்க்கையை விமர்சித்து, ஓவியங்களோடு 'உதய காலங்களை' மீட்டியுள்ளார். அடிவானத்துக்கப்பால் என்னும் புதுக்கவிதை நூலில் இயல்பு நவிற்சியோடு பாடி நவகவிதை தந்துள்ளார். அகல்யா.

இத்தோடு ஆங்காங்கே துணுக்குகளைத் தெளிக்கும் ஏடுகள் இப்போதெல்லாம் புதுக்கவிதைகளையே வெளியிடுகின்றன. தீபம், தேவி, தினமலர்-வாரமலர், அரும்பு, தேன்மழை போன்ற ஏடுகள் இவ்வகையைச் சார்ந்தவை. இதுவன்றி தாமரை, செம் மலர் போன்ற ஏடுகள் புதுக்கவிதைகளை வெளியிடுவதையே வழக்கமாய் கொண்டுள்ளன. இவ்வேடுகளில் பரிணாமன். இரா. வேலுச்சாமி, பாப்ப்ரியா, பறம்பைச் செல்வன், புதிய ஜீவா, சூரியகாந்தன், ஜீவபாரதி, விநாயகமூர்த்தி, இளந்துறவி

இ. முத்துராமலிங்கம், பொன்மணி வைரமுத்து போன்றோரும், இவர்களோடு இன்னும் பலரும் 82இல் தமிழ் இதழ்களில் புதுக் கவிதைகள் படைத்துள்ளனர். இவர்களின் பட்டியல், பட்டாளம் போன்று பெருகியதாகும்.

82இல் வெளிவந்துள்ள புதுக்கவிதைகளால் இக்கட்டுரை யாளன் பெற்ற ஆய்வு முடிவுகள்:

1. புதுக்கவிதை பாடுவோர், மரபுக் கவிதை பாடுவோரை விடமிகுந்துள்ளனர். அதற்குரிய காரணம். எளிமையும் இதழ்கள் தரும் ஆதரவுமாகும்.
2. மரபுக் கவிதைகளைப் படிப்பவரைவிட புதுக்கவிதை வாசகர் தொகை பெருகியுள்ளது. காரணம்சுருக்கமும், சட்டென்று கருத்தை உணர்த்தும் லாவகமும் ஆம்.
3. மரபினை அறிந்து புதுக்கவிதை பாடுவோரே, புதுக் கவிதையின் வடிவம், சுருக்கம், தெளிவு, படிமம் இவற்றை நன்கு கையாளுவோராய் உள்ளனர்.
4. புதுக்கவிதையின் பாடுபொருள் எழுபதுகளிலும் அதன் பின்னும் சர்வதேச எல்லைகளைத் தொட்டு நின்றது. 82இல் நாட்டின்நிலை, அரசியல், சுதந்திரம், வாழ்க்கை நிலைகளைப் பாடுவதாகவே அமைந்துள்ளது.
5. புதுக் கவிதையில் சிறுகதை, நாடகம், நெடிய வரலாறு போன்றவை சோதனை முயற்சிகளாகப் பாடி வெற்றி பெற்றுள்ளன

---

## 1982-இல் வெளியான புதுக்கவிதை நூல்கள்

1. அடிவானத்துக்கு அப்பால்—அகல்யா,
முதற்பதிப்பு: 1982,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை.
2. அழியா நிழல்கள்—எம். ஏ. நுஃமான்,
முதற்பதிப்பு: 1982,
நர்மதா பதிப்பகம்,
சென்னை-17.
3. ஆகாசம் நீலநிறம்—விக்ரமாதித்யன்,
முதற்பதிப்பு: 1982,

அன்னம் வெளியீடு,
சிவகங்கை.

4. இன்று வந்த இறந்த காலம்—நாவேந்தன்,
முதற்பதிப்பு: 1982,
நாயகி பதிப்பகம்,
சென்னை-2.

5. இன்னொரு தேசியகீதம்—கவிஞர் வைரமுத்து,
முதற்பதிப்பு: ஏப்ரல் 1982,
கலைஞன் பதிப்பகம்,
பாண்டி பஜார்,
சென்னை-17.

6. உதய காலங்கள்—அமுதபாரதி,
முதற்பதிப்பு: 1982,
நர்மதா பதிப்பகம்,
தி. நகர், சென்னை-17.

7. 'என்றாவது ஒருநாள்' டானியா நடராஜன்,
முதற்பதிப்பு: 1982
வசந்தா பிரசுரம்,
மேற்கு மாம்பலம்,
சென்னை-13.

8. ஒரு கையெழுத்தில்லா கடிதம் — புகழேந்தி,
முதற்பதிப்பு : 1982,
கவிதா பப்ளிகேஷன்,
மேட்டுப்பாளையம்,
சென்னை-33.

9. கவிராஜன் கதை — கவிஞர் வைரமுத்து,
முதற்பதிப்பு : டிசம்பர் 1982,
பாரதி பதிப்பகம்,
தி. நகர்,
சென்னை-17.

10. காத்திருந்த காற்று — மு. மேத்தா,
முதற்பதிப்பு : ஆகஸ்டு — 1982,
பாரிநிலையம்,
பிராட்வே, சென்னை-12.

11. காலத்திற்கு ஒருநாள் முந்தி — தமிழன்பன்,
முதற்பதிப்பு : ஆகஸ்டு- 1982,
பூம்புகார் பிரசுரம்,
பிராட்வே, சென்னை-1.

12. காற்றின் சந்தேகம் — கி. விஜயலட்சுமி,
முதற்பதிப்பு : செப்டம்பர் 1982,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை.

13. சுதந்திரம் — நா. விச்வநாதன்,
முதற்பதிப்பு : 1982,
அன்னம் பிரைவேட் லிமிடெட்,
சிவகங்கை.

14. சௌந்தர்ய சொப்பனங்கள்-கவிஞர் தி. வீரபாண்டியன்
(கவிதைகளும் வசன கவிதைகளும்)
முதற்பதிப்பு : 1982,
வீனை வெளியீடு,
திருத்துறைப்பூண்டி,
தஞ்சை மாவட்டம்.

15. நடந்த நாடகங்கள் — மு. மேத்தா,
முதற்பதிப்பு : ஏப்ரல் 1982,
நர்மதா பதிப்பகம்,
சென்னை-600 002.

16. புதிய திசை — விஷ்ணு நாகராஜன்,
முதற்பதிப்பு : ஆகஸ்டு 1982,
அன்னம் பிரைவேட் லிமிடெட்,
சிவகங்கை - 623560.

17. புதிய பூபாளம் — கவிஞர் உலகன்,
முதற்பதிப்பு : 1982,
சோலோ பதிப்பகம்,
பட்டாபிராம், சென்னை-72.

18. புள்ளிகளின் பூ முடிப்பு — நாகை மனோகரன்,
முதற்பதிப்பு : 1982,
மணிமலர் பதிப்பகம்,
மலையடி வேம்பாக்கம்,
செங்கற்பட்டு-603001.

19. பொய்க்கால் குதிரைகள் — கவிஞர் வாலி,
முதற்பதிப்பு : 1982,
வானதி பதிப்பகம்,
சென்னை-600 017.

20. போர்க்காற்று — முல்லையூரான்,
முதற்பதிப்பு : 1982,
நர்மதா பதிப்பகம்,
சென்னை-17.

21. ஹிரோஷிமாவின் ஹீரோக்கள் — மேமன்கவி...
முதற்பதிப்பு : அக்டோபர் 1982,
நர்மதா பதிப்பகம்,
சென்னை-600 017.

# 6. வார இதழ்கள்

-ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்

**1982**—இல் பாரதியைக் கவுரவப்படுத்தும் வகையில் வார இதழ்கள் தமது பொறுப்பினைச் செவ்வனே செய்தன இவ்விதழ்களில் கவிதைகளுக்கும் நாடகத்திற்கும் ஒதுக்கப்பட்ட இடம் மிகமிகக் குறைவே. தொடர்கதைகளுக்கான விளம்பரங்களைச் சினிமா பாணியில் இவை செய்தன. சிண்டு முடிதல், விவாதங்களை விவகாரமாக்கி வேடிக்கை பார்த்தல் ஆகியவை சில வார இதழ்களுக்குக் கைவந்த கலையாகத் தென்படுகிறது. வார இதழ்களுக்கு இவ்வாண்டிலும் இலக்கியம் அத்துணை அன்னியோன்னியம் இல்லாமல் தான் இருக்கிறது.

**வாரந்தோறும் வசந்தம்**

ஒரு வசந்த வருகையை எதிர்பார்ப்பதைப் போல வார இதழ்களை வரவேற்கிற ஆர்வம் பலரது நெஞ்சங்களில் இருக்கிறது. சில பழக்க வழக்கங்களுக்கு ஆட்படுவதைப்போல பத்திரிகைகளில் லயிப்பதும் இப்போது நமது பழக்கவழக்கங்களில் ஒன்றாகிவிட்டது. ஒவ்வொரு மாத, இருவார இதழ்களுக்கு இடைபட்ட பருவத்தை விட வார இதழ்களுக்கு இடைப்பட்ட பருவம் குறைவாக இருப்பதால் மிகவும் நெருக்கமான உறவை வாசகர்களுடன் இவை ஏற்படுத்திக் கொள்கின்றன. வாரத்தின் ஒவ்வொரு நாட்களிலும் ஏதேனும் ஓரிரு இதழ்கள் வெளியாகிக்கொண்டே இருக்கின்றன.

வார இதழ்களின் வளர்ச்சி மகத்தானது. அவற்றின் வளர்ச்சிக்கு தலையாய காரணம் மாறிவரும் யுகவேகத்திற்கு ஈடுகொடுத்து அவை தம்மை மாற்றிக்கொள்வதுடன் மக்கள் எதிர்பார்ப்பதைக் கொடுத்து அவர் தம் இதயத்தில் இடம் பெற்றதுமேயாகும். 1982ஆம் ஆண்டு வெளிவந்த தமிழ் வார இதழ்களில் பட்டியல் கட்டுரையின் பின்னிணைப்பில் தரப்பட்டிருந்தாலும் முன்னணி இதழ்களை அகர வரிசைப்படுத்தினால்—

ஆனந்த விகடன், இதயம் பேசுகிறது, கல்கி, கல்கண்டு, கமலம், குமுதம், குங்குமம், சாவி, சுனிதா, சுஜாதா, தாய், திலகம், தினமணிகதிர், தேவி, மயன், முத்தாரம், பூவாளி, ராணி, வண்ணத்திரை, ஜெமினி சினிமா

ஆகியவைதான் முன்வந்து நிற்கும்.

இவற்றுள் விற்பனை அதிகமாயிருந்தும் பரபரப்பாகப் பேசப் பட்டுமான இதழ்கள் ஒரு சிலவே. தங்கவயல் செல்வராஜன் என்பவர் புனைந்திருந்த

குமுதமாய் மலர்ந்து
குங்குமம் அணிந்து
கல்கண்டாய் இனித்திடக்
காதல் ராணியாய்க்
கலைமகளாய் தேவியாய்
கழுத்தில் நறுமணம் வீச
கருத்தைக் கவரும்
அவளிடம் தான் என்
இதயம் பேசுகிறது...

என்ற கவிதையில் (சுனிதா 23/5) கிட்டத்தட்ட பெரிய வார இதழ்களின் பெயர்களைக் கொண்டு வர முயன்றிருப்பது தெரிகிறது.

### மேலோட்டமாக

எல்லா வார இதழ்களுமே அவற்றின் அமைப்பிலும் அசை போடும் அம்சங்களிலும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியான தோற்றத்தையே கொண்டிருந்தன. இக்கருத்தை வலுப்படுத்தும் விதத்தில் 'பத்திரிகை ஒரு பார்வை' என்ற கட்டுரையில் (சாவி 3/1) கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறார் ஐஸ்வர்யன்).

''இருட்டிலே எல்லாப் பெண்களும் ஒன்றுதானாம். பல சமயம் நினைத்துண்டு அட்டையை உரித்துவிட்டால் பகலிலேயே எல்லாப் பத்திரிகைகளும் ஒன்றுதான் என்று''

இது நூற்றுக்கு நூறு உண்மை. அழகான பெண்ணொருத்தியின் அட்டைப்படம், விலக்கிவிட்டு உள்ளே நோக்கினால் அரசியல், சினிமா, செக்ஸ் என்று ஒரேவிதமான பொருளடக்கம் இவைதான் இன்றைய வார இதழ்களின் கலவை. எண்பத்திரண்டாம் ஆண்டின் வார இதழ்களில் வெளியானவற்றை இனிவரும் பத்திகளில் பார்ப்போம்.

## பாரதி நூற்றாண்டு

எண்பத்திரண்டாம் ஆண்டின் இணையில்லாச் சிறப்பு இவ்வாண்டு பாரதி நூற்றாண்டாக இருந்தது தான். பாரதி நூற்றாண்டைக் கௌரவப்படுத்தும் வகையில் பத்திரிகைகள் தமது பொறுப்பினைச் செவ்வனே செய்தன மிகுந்த பொறுப்புணர்வோடு வார இதழ்கள் செய்த பாரதி நூற்றாண்டுப் பணிகளை மனமுவந்து பாராட்டத் தமிழுலகம் கடமைப் பட்டுள்ளது.

குமுதத்தில் (1/3) வாஞ்சி ஐயர் ஆஷ் துரையைக் கொன்றதைப் பாரதி விரும்பாததைப் பற்றி எட்டையபுரம் பா. நா. கணபதி கட்டுரை எழுதியிருந்தார். "நான் பாரதியாரைச் சந்தித்தால்" என்ற தொடரில் காளிமுத்து, அப்துல்சமது வீரமணி போன்ற அரசியல் பிரமுகர்கள் குமுதத்தில் தமது கருத்துக்களை எழுதினார்கள்.

பாரதி நூற்றாண்டையொட்டி கல்கி பல்வேறு போட்டிகளை நடத்திப் புதுமை புரிந்தது. பாரதியின் கவிதைத் தலைப்புகளுக்கேற்றபடி சிறுகதைகளை வாங்கிப் பிரசுரித்தார் பாரதி கலைக்கழகத் தலைவர் சுராஜ். டி. வி. எஸ். மொபெட் திட்டம், பாரதியின் படத்தை அஞ்சலட்டையில் வரைவது, மரபு புதுக் கவிதைப் கோட்டி, எந்தெந்த எண்களைப் பாரதி பாடினார் என்பது போன்ற பல்வேறு விதமான போட்டிகளை கல்கி நடத்தியது. அத்துடன் பாரதி பிறந்த நாளான டிசம்பர் 11இல் பிறந்து பாரதி என்ற பெயர் சூட்டப்பெற்ற குழந்தைகளுக்கும் பரிசளித்தது. 'பாரதி புகழ் வளர்த்த கல்கி' என்ற தலைப்பில் மா. பொ. சி. கல்கியில் (12/12) கட்டுரை எழுதியிருந்தார்.

"கட்டபொம்மனை பாரதி ஏன் பாடவில்லை" என்பது பற்றிய பேட்டிக் கட்டுரைகள் தாய்(7/2) இதழில் வெளிவந்தன. "பாரதிக்கு எதிராகப் பட்டி மன்றம் நடத்துகிறவர்களே கோலி விளையாடப் போங்கள்" என்று தாய் (11/4) இதழில் நீண்ட கட்டுரைக் கணை வெளியானது. 'நெஞ்சமெல்லாம் பாரதியே' என்ற கட்டுரை 12-9-82 இதழில் வந்திருந்தது. கல்கத்தாவில் நடந்த பாரதி விழா பற்றிய செய்தித் தொகுப்பு 31-10-82 இதழில் இருந்தது.

"பாரதி முதல் சுஜாதா" வரை என்ற தலைப்பில் பல தமிழறிஞர்களைப் பற்றிய கட்டுரைத் தொடரை டாக்டர் இரா. தண்டாயுதம் சாவியில் எழுதி வந்தார். இவ்வேட்டில் புதுக்

கவிதை வடிவத்தில் ''கவிராஜன் கதை'' என்ற தலைப்பில் வைரமுத்து, பாரதியின் வரலாற்றைத் தொடராக எழுதினார்.

ரகமி தொகுத்த ''பாரதியின் குடும்பம் யார் யார் எங்குள்ளனர்''? என்ற பேட்டிக் கட்டுரை (3/9) சுராஜ் எழுதிய பாரதியாரின் நகைச்சுவை என்ற கட்டுரை (10/2) தி. ச. ராஜு வடித்த ''பாரதியும் பாவேந்தரும்'' என்ற கட்டுரை (12/9) ஆகியவற்றை வெளியிட்ட தினமணிகதிர் கல்கத்தா தமிழ்ச்சங்கத்துடன் இணைந்து பாரதியார் கட்டுரைப் போட்டியை நடத்தியது குறிப்பிடத்தக்கது. 'புதுமையின் சிற்பி' என்ற கட்டுரையை எழுதிய வையவன் முதற்பரிசைப் பெற்றார். இக்கட்டுரை 18.6.82 இதழில் வெளியானது.

'பாரதி குடும்பம்' எமக்குத் தொழில் கட்டுரையும் கூட' (பாரதியின் கட்டுரைப் பகுதிகள்) ஆகிய இரு கட்டுரைகள் ஆனந்தவிகடனில் (12/12) வெளியாகியிருந்தன. ஹேமலதா என்பவர் 25.4.82 இதழில் 'பாரதியைப் பார்த்திருக்கிறேன்' என்ற கட்டுரையை எழுதியிருந்தார். 'வெட்கமாய்த்தான் வெட்கமாய்த்தான்' என்ற இரா. வேலுச்சாமியின் கவிதை (12/12) இன்றைய சமூகத்திற்குச் சரியான சவுக்கடி.

அபிநயத்தில் பாரதியை நினைவூட்டி அவர் தம் பாடல்களுக்குக் காட்சி வடிவம் கொடுத்திருந்தார், சித்ரா விஸ்வேஸ்வரன். குங்குமம் (19/12) இதழில் இவ்விருந்து இருந்தது.

பாரதியை நினைவு கூர்ந்ததிலும் அவரைப் பற்றிய பல்வேறு செய்திகளை உலகறியச் செய்ததிலும் தமிழ் வார ஏடுகளின் பணி நிறைவாகவே இருந்தது என்பதில் இதயம் குளிர்கிறது.

**அரசியல் :**

''அரசியலும் சினிமாவும் இல்லாமல் பத்திரிகை நடத்துவது ஒரு பாணி. தனித்தன்மை. அவ்வளவுதான். அதற்காக அரசியலையும் சினிமாவையும் தொட்டு எழுதுகிற பத்திரிகைகள் தரம் கெட்டவை ஈனத்தனமானவை என்று பொருள்படப் பேசுவது, பேசுபவர்களுக்குப் பெருமையாக இருக்கவில்லை'' என்று மணியன் இதயம் பேசுகிறது இதழில் (கலைமகள் பொன் விழாவில் பேசியது (16. .82) எழுதியிருந்ததை இனிவரும் இரு தலைப்புகளுக்கும் முன்னுரையாக வைத்துக் கொள்வது நலம்.

தமிழகத்தின் தனிப்பெரும் அரசியல் கட்சிகளான திராவிட முன்னேற்றக் கழகம் மற்றும் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகப் பிரமுகர்கள் நடத்தும் வார இதழ்களோடு அவர்களைச்

சார்ந்து போகிற சில சுதந்திரமான இதழ்களும் தங்கள் தலையங்கங்களிலும் கேலிச் சித்திரங்களில் கட்டுரைகளிலும் தத்தம் அரசியல் நிறத்தைக் காட்டிக் கொண்டன.

எண்பத்திரண்டாம் ஆண்டின் பிற்பகுதியில் பெரியகுளம் தேர்தல் வந்த நேரம். எல்லாப் பத்திரிகைகளுக்கும் சரியான வேட்டை. 26.9.82 இதயம் பேசுகிறது இதழில் முழுக்க முழுக்க பெரியகுளம் விவகாரமே நிறைந்திருந்தது. 26.9.82 ஆனந்த விகடனும் இவ்வாறே இருந்தது. அட்டைப் படத்தில் வேட்பாளர்களின் படங்களைப் போட்டு உள்ளே விலாவரியாகக் கட்டுரை படைத்திருந்தது ஆனந்த விகடன்.

கிட்டத்தட்ட ராணியின் பல இதழ்கள் (18/8, 29/8, 5/9, 12/9, 19/9, 26/9, 10/10) பெரியகுளம் தேர்தலுக்கே அர்ப்பணிக்கப்பட்டவை போலிருந்தன. பெரியகுளத்தில் அந்தக் கட்சி ஏன் வெற்றி பெறக்கூடாது என்ற தலைப்பில் அரசியல் பிரமுகர்கள் சிலர் குமுதத்தில் அப்படியும் இப்படியுமாக எழுதியிருந்தனர்.

டில்லி வட்டார அரசியல் செய்திகள் 'தில்லிமுல்லு' என்ற தொடரில் தினமணி கதிரில் வெளியாகின. 'அரசியல் டைரி' என்ற பகுதியை தி. கஸ்தூரி ரங்கன் எழுதியிருந்தார். இது போலவே நியூஸ் & வியூஸ் என்ற பகுதியின் மூலம் மணியன் இதயம் பேசுகிறது இதழில் தன் கருத்துகளை எழுதிக் கொண்டிருந்தார்.

3.10.82 ஆனந்தவிகடன் இதழ் காந்தி ஜெயந்தி மலர். கள்ளுக் கடைகளில் ஏலம் விறுவிறுப்பு, வரதட்சிணைக்கொடுமை, கர்ப்பிணி மனைவி உயிருடன் எரிப்பு, சிமெண்ட் ஊழல், விழுப்புரம் அருகே வகுப்புக் கலவரம், மண்டைக் காடு துப்பாக்கிச் சூடு போன்ற பல செய்திகளைப் போட்டு கூடவே காந்தியின் படத்தையும் அச்சிட்டு இருந்தது. இது காந்தி பிறந்த நாடென்று சொல்லிக் கொள்ளவே அருகதையற்ற நாடாகி விட்டதோ என்ற அச்சத்தை அளிப்பதாயிருந்தது அந்த அட்டைப்பட ஓவியம்.

அரசியல் பிரமுகர்களைப் பற்றிய புகழுரைகளும் பேட்டிகளும் வார இதழ்களில் நிறைய வந்தன. 'தாய்' இதழில் முதல்வர் எம். ஜி. ராமச்சந்திரனைப் பற்றிய கட்டுரைகளும் அவரைச் சந்தித்தவர்களின் பேட்டிகளும் தொடர்ந்து வெளியாகின. பேட்டியோடு நின்றுவிடாமல் போட்டியும் நடத்தியது

தாய். எம். ஜி. ஆர். நடித்தவற்றுள் தனக்குப் பிடித்தவற்றுள் தனக்குப் பிடித்த படம் எது? என்று வாசகர்களுக்கு ஒரு போட்டியை அறிவித்தது தாய்.

இவையன்றி அரசியலைப்பற்றி என்ன தெரியும் (கல்கி) ராமராவ் அலை (தேவி 27/10) ஜெயவர்த்தனே வெற்றி (விகடன் 11.7) முதல்வரின் சமபந்தி போஜனம் (இதயம் பேசுகிறது 1/8) வெளிநாடு போய்வந்த அமைச்சர்கள் (இதயம் பேசுகிறது 1/8) என். டி. ராமராவ் வெற்றி (ராணி 3.10) ஜெயில்சிங் வெற்றி (கல்கி 11/7) வாஜ்பாயி பேட்டி (கல்கி 7/2) சிவசங்கரியின் என்னைக் கவர்ந்த அன்னை இந்திரா தொடர் (ஆனந்த விகடன் 12/12 முதல்) என்று இன்னும் பல அரசியல் அம்சங்களை அடுக்கிக் கொண்டே போகலாம்.

கேலிச் சித்திரங்கள் (கார்ட்டூன்) வாயிலாகவும் அரசியல் வாதிகள் விமர்சிக்கப்பட்டனர். ஸ்ரீதர், மதன், கோபுலு, பீட்டர், ஜெயராஜ், சுதீர், தாமெரியோ, வாணி என்று கேலிச் சித்திர ஓவியர்கள் பட்டியல் நீள்கிறது.

தலையங்கங்களில் அரசியலும் சமூகச் சீர்கேடுகளும் பெரிதும் விமர்சிக்கப்பட்டன. தமிழகத்தை உலுக்கிய திருச்செந்தூர் சுப்ரமணிய பிள்ளை மரணத்தைப் பற்றி பல வார ஏடுகள் எழுதின. 7.1.82 குமுதம் இதழில் ஒரு வன்மையான தலையங்கம் வெளிவந்தது. திருச்செந்தூரில் வங்கி மேலாளர் ஒருவர் அரசியல்வாதி ஒருவரால் தாக்கப்பட்டது பற்றி தாய் (7/3) இதழில் கட்டுரை வந்தது. மண்டைக் காடு சம்பவங்களைப் பற்றியும் பல வார ஏடுகள் பலவாறு எழுதியிருந்தன. ஆளும் கட்சி செய்த கதவடைப்பை சாவி (24/10) இதழ் சாடியிருந்தது.

### திரைப்படம்

வழக்கம் போல எண்பத்திரண்டாம் ஆண்டிலும் திரையுலகச் செய்திகளும் விமர்சனங்களும் படங்களும் கட்டுரைகளும் பேட்டிகளும் வாரப் பத்திரிகைகளில் அதிக அளவு இடம் பெற்றன. சுஜாதா என்ற இருவார ஏடு சினிமா வார ஏடாக மாறியதும் குங்குமத்தின் உடன் பிறப்பாக வண்ணத்திரை என்ற சினிமா வார ஏடு ஜனித்ததும் இவ்வாண்டில்தான். ஆனந்த விகடன் (19.9) இதழ் 'சினிமாஸ்பெஷலாக' மலர்ந்தது. பலவார ஏடுகள் சினிமாக் கலைஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் கதை கட்டுரைகள் எழுதப் பெரிதும் இடமளித்தன. பாக்யராஜ் எழுதிய "கங்கையில் நெருப்பு" (முழுநீளநாவல் கல்கி 17/1) ராபர்ட் ராஜசேகரன் எழுதிய "கல்யாண காலம்" (தொடர்கதை

குமுதம்வைரமுத்துஎழுதிய"வானம்தொட்டுவிடும்" தூரம்தான் (தொடர்கதை குமுதம்) ஜெயலலிதா எழுதிய "நெஞ்சில் ஒரு கனல்" (தொடர்கதை குமுதம்) இயக்குநர் மகேந்திரன் எழுதிய "மருதாணி" (தொடர்கதை தாய்) ராஜ் பரத் எழுதிய "தொட்டால் சுடும்" (தொடர் திரைக்கதை மயன்) ப. நீலகண்டன் எழுதிய "வெண்திரைக்கு ஒரு பொன்மாலை" (தொடர் கட்டுரை இதயம் பேசுகிறது) அறந்தை நாராயணன் எழுதிய "நமது சினிமா கலைஞர்கள்" முதலியன (தொடர் கட்டுரை தினமணிகதிர்) ஜெயலலிதா எழுதிய "எண்ணங்கள்", (தொடர்கட்டுரை இதயம் பேசுகிறது) "ஒருசுத்தி ஒருடோப்பா" (கட்டுரை ராணி) சிலுக்கு ஸ்மிதா எழுதிய "என் காட்டில் மழை பெய்கிறது" (தொடர்க்கட்டுரை ராணி) காதல் தோல்வியால் காவலனுக்குப் பலியான படாபட் ஜெயலட்சுமிபற்றி அவருடைய தந்தை எழுதிய "என் மகள் படாபட்" (தொடர்க்கட்டுரை ராணி) நடிகை லட்சுமி எழுதிய 'பாதைகள் பசுமையானவை" (தொடர்க் கட்டுரை தாய்) நம்பியார் எழுதிய "சபரிமலை அனுபவங்கள்" (தேவி 22/13) செந்தாமரை எழுதிய பரிசுச் சீட்டில் லட்சாதிபதியாவதற்கான வழிகள்" (தொடர் கட்டுரை குமுதம்) போன்றவையெல்லாம் பெருமளவில் வரவேற்கப்பட்ட திரையுலகப் புள்ளிகளின் எழுத்தோவியங்களாகும்.

இயக்குநர்கள் பாலச்சந்தரும், ராஜேந்தரும் முறையே சாவியிலும் ராணியிலும், நடிகை ஸ்ரீதேவி குங்குமத்திலும், நடிகர் கமலஹாசன் இதயம் பேசுகிறது இதழிலும் ஒரு பக்கக் கட்டுரைகள் எழுதினர். சந்திப்பு என்ற பகுதியின் மூலம் திரைப்பட இயக்குநர்களைப் பற்றிய கட்டுரைத் தொடரை தினமணிக்கதிர் வெளியிட்டது" 28 தகவல்கள் என்ற தலைப்பில் வாரந்தோறும் ஒரு சினிமாக் கலைஞரைப் பற்றிய 28 தகவல்களைக் குங்குமம் தொடர்ந்து எழுதியது.

சிலுக்கு ஸ்மிதாவின் மறுபக்கத்தை தாய் தொடர்ந்து வெளியிட்டது. இந்த அம்மையார் குமுதம் வாசகர்களுக்கு தெலுங்கு கற்பித்தார். தாய்வாசகர்களுக்கு யோகாசனம் கற்று தந்தார். (15/8) இவரது படத்தை அட்டையில் போட்டு புண்ணியம் கட்டிக்கொண்ட இதழ்கள் குமுதம் (10/6) கதிர் (8/10) தாய் (2/5) போன்றவை. இவரோடு மாயா, ஜெயமாலினி என்ற கவர்ச்சிக் கன்னிகள் தாங்கள் ஆடுவது கவர்ச்சியா? ஆபாசமா? என்ற தலைப்பில் இதயம் பேசுகிறது இதழில் (31/1) சலனுக்குப் பேட்டியளித்திருந்தனர். இப்பேட்டிக்கான படங்கள் வாலிபக் கண்களுக்கு விருந்தோ விருந்து.

மாயாவின் உடற்கட்டு குலையாதிருக்க காலையில் கடற் கரையில் ஓடுவது, எந்த நடிகைக்கு நீச்சல் உடை பொருந்துவ தென்று கண்டுபிடிப்பது, வனிதாவின் தூக்க அனுபவம் போன்ற பயனுள்ள (?) தகவல்கள் இதயம் பேசுகிறது முறையே 10-1-82 24-1-82, 31-1-82 22-8-82,) தேதியிட்ட இதழ்களில் வெளி யாகின.

திரைப் பாடலாசிரியர்களாக அறிமுகமான மு. மேத்தா, பொன்னடியான் போன்றோர் தம் பேட்டி, தினமணி கதிர்(19/2) ஏட்டில் வெளியானது. கலைக் குடும்பத்தின் கடைசி வாரிசு என்ற தலைப்பில் டி.கே. பகவதி பற்றி இதயம் பேசுகிறது இதழில் (19/12) கட்டுரை வந்தது.

வாசகர்களின் கேள்விகளுக்கு சுமலதா (தாய்) ஜெயலலிதா, ராஜேந்தர் (தேவி) பாக்யராஜ் (இதயம்பேசுகிறது) போன்றோர் பதில் அளித்தனர்.

வார இதழ்களில் சினிமாச் செய்தித் தொகுப்புக்கான தலைப்புக்கள் மிகவும் கவர்ச்சியாகஇருந்தன. சினிமா மத்தாப்பு (தினமணிகதிர்) மூடுமந்திரம், கிளாப்ஸ். சினி புல்லட்டின், ஹலோ (இதயம் பேசுகிறது) லைட்ஸ் ஆன் (குமுதம்) வானவில் (தாய்) சினிமா சினிமா (கல்கி) ஆகியன அவற்றுள் குறிப்பிடத் தக்கவை.

திரைப்பட விமர்சனங்கள் பெரும்பாலும் எல்லா வார ஏடு களிலுமே இடம் பெற்றன. சினிமா ரசிகர்களைத் திரையரங்கத் திலேயே பிடித்து விமர்சனம் செய்ய வைத்தது இதயம் பேசு கிறது. திரைப்படங்களுக்கு மதிப்பெண்கள் கொடுத்து விமர் சித்தது விகடன். வாசகர்களை வைத்தே விமர்சனம் செய்ய வைத்தது குமுதம்.

ஆங்கிலத் திரைப்படங்கள் திரைப்பட விழாக்கள் பற்றிய செய்திகளையும் வார இதழ்கள் வெளியிட்டன. இவ்விமர்சனங் களையும் செய்திகளையும் டி. எம். ஆர். பல இதழ்களில் தொகுத்தளித்தார். எழுத்தாளர் சவீதாகல்கத்தா படவிழாவில் இடம் பெற்ற படங்களின் கதைச் சுருக்கத்தை குங்குமத்தில் தொடராக எழுதினார்.

இதயம் பேசுகிறது இதழில் அவ்வப்போது சித்திர குப்தன் நக்கீரன் ஆகியோர் சினிமா உலகத்தைச் சூடாக விமர்சித்தனர் (உதாரணம் ஜாக்பாட் ராஜாக்கள் 31-1-82 இதழ்)

**ஆன்மீகம்.**

வார இதழ்களில் ஆன்மீகத்திற்கும் ஓரளவு இடமளிக்கப் பட்டது. அமெரிக்காவில் மீனாட்சியம்மன் ஆலயம் கட்டப் படுவது பற்றி டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி ஆனந்தவிகடனில் (6/6) எழுதியிருந்தார். குமுதத்தில் ''நினைவெல்லாம் ஹீஸ்டனில்'' என்ற தொடர் வெளியானது. இதயம் பேசுகிறது (1/9)இதழிலும் ஹீஸ்டன் மீனாட்சியம்மன் ஆலயக் குடமுழுக்கு பற்றிய கட்டுரை இருந்தது.

ஆனந்தவிகடனில் மகரிஷி மகேஷ் யோகியின் ஆன்மீகப் புத்துணர்வு இயக்கம்,மூங்கிபாய் கோயங்கோ மேல்நிலைப்பள்ளி யில் நடத்திய ஆழ்நிலைத் தியானம் பற்றிய கட்டுரையும் (22/8) கோதை பிறந்த ஸ்ரீ வில்லிபுத்தூர் பற்றிய அட்டைப்படக் கட்டு ரையும் (19/12) வெளியாகின. கல்கியில் ஆன்றோர் வாக்குப் பகுதியில் ஆன்மீகப் பெரியோர்களின் அறிவுரைகள் தொடர்ந்து வந்தன. ''திருத்தலம் கண்டேன்'' என்ற தலைப்பில் வாசகர் கள் எழுதிய பல்வேறு திருத்தலங்கள் பற்றிய கட்டுரைகளை கல்கி பிரசுரித்தது. சிறந்த கட்டுரைகளுக்குப் பரிசுகளும் வழங்கப் பட்டன.

தாய் வார ஏட்டில் ஆன்மீகக் கட்டுரைகள் அநேகம் வந்தன. 3/1 இதழிலிருந்து நாகர்கோவில் கிருஷ்ணன் மாங்காடு அம்மன் மகிமை என்ற தொடரை எழுதினார்.

'சொர்க்கத்தில் ஒருநாள்' 'ஞானச்சேரியிலிருந்து' ஆகிய தலைப்புக்களில் ஆன்மீகப் பெரியார்களைப்பற்றி எழுதப் பட்டன.

பொன் பாஸ்கர மார்த்தாண்டன் எழுதிய 'தேவி தரிசனம்' (இதயம் பேசுகிறது) பரணீதரன் எழுதிய 'திருத்தலப்பெருமை' (ஆனந்த விகடன்) கீரன் எழுதிய 'இலக்கியத்தில் இறையுணர்வு' (கல்கி) ஆகிய தொடர்கள் இதயத்தைத் தொட்ட இதமான ஆன்மீகக் கட்டுரைகளாகும். காஞ்சிப் பெரியவர், சத்யசாய் பாபா, ஜெயேந்திர சரஸ்வதி போன்ற சமயப் பெரியோர் தம் படங்கள் சில வார இதழ்களின் அட்டைப் படங்களை அலங் கரித்தன. சென்னையில் ஆன்மீகத் தலைவர்கள்என்ற தலைப்பில் (தினமணி கதிர் 14.5). இதழில் கட்டுரை வெளியானது.

சாய்பாபா பிறந்த நாள் மலராக இதயம் பேசுகிறது (5/12) மலர்ந்தது. 26/12 இதழ் கிறிஸ்துமஸ் சிறப்பிதழ். அன்னை மேரி யின் அட்டைப்படம் அற்புதமாயிருந்தது. தாய் இதழில்

ஜே. எம். சாலி ஹிஜ்ரி சிந்தனைகள் என்னும் தொடரை எழுதினார்.

சமயச் சொற்பொழிவுகளை உன்னிப்பாகக் கேட்டுச் சுவையான தகவல்களைத் துணுக்காக எழுதி வருகின்றனர் சிலர். இவ்வகையில் சங்கரி புத்திரன் முன்னணியில் இருக்கிறார்.

**கவிதை:**

எண்பத்திரண்டாம் ஆண்டில் வெளியான வார ஏடுகளில் கவிதைக்கு அளிக்கப்பட்ட இடம் மற்றெல்லா அம்சங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது மிகமிகக் குறைவு. இருந்தாலும் பிரபலமாக இருந்த கவிஞர்களுக்காகவே சில வார இதழ்கள் கவிதைக்கு இடமளித்தன. அது அந்தப் பத்திரிகைகளின் கவிதை உணர்வைக் காட்டியதைவிட குறிப்பிட்ட அந்தக் கவிஞர்கள் மீதுள்ள நட்புணர்வையே வெளிப்படுத்தின எனலாம்.

புதுக்கவிதைக்கு வரவேற்பு மிகுதியானது. இலக்கண விலங்குகளை உடைத்தெறிந்துவிட்டு புதுக்கவிதைச் சிறகு விரித்துப் பறந்தன பல கவிஞர்களின் கற்பனைப் பறவைகள். வைரமுத்து சாவி இதழில் எழுதிய 'கவிராஜன் கதை' என்ற பாரதி தொடரோவியம் புதுக்கவிதைக்கு அவர் அளித்த அரியாசனம். "இதுவரை நான்" என்ற சுயபுராணத்தொடரை எழுதக் குங்குமம் இவருக்கு வாரந்தோறும் இரு பக்கங்களைத் தானம் செய்தது ஏன்? என்பது மட்டுமே புரியவில்லை.

இவரது 'இந்த மௌனம் சம்மதமன்று' (ஆனந்தவிகடன் 21/3) மு. மேத்தாவின் தோழனுக்கு (ஆனந்த விகடன் 21/3) இரா வேலுச்சாமியின் கண்ணீர் பிறக்கும் கதை (ஆனந்த விகடன் 4/4) வெட்கமாய்த்தான் வெட்கமாய்த்தான் (ஆனந்த விகடன்) வாலியின் கருணைமனு (ஆனந்தவிகடன் 14/11) ஆர்.ஈ. சந்திரசேகரனின் பாடமுடியாத பல்லவிகள் (தாய் 25/4) மணிமொழியின் காதலிக்குக் கடைசி வரிகள் (தாய் 1/8) என்று நல்ல கவிதைகளை அடுக்கிக்கொண்டே போகலாம்.

சமூகப் பிரச்னைகள், காதல், ஞானம், நகைச்சுவை, இயற்கை, ஆன்மீகம் போன்ற உணர்வுகள்தான் பெரும்பாலான கவிதைகளில் வெளிப்பட்டன. பொன்மணி வைரமுத்து தான் ரசித்த சில கவிதை வரிகளை இதயம் பேசுகிறது இதழுக்காக (14/11) தொகுத்திருந்தார்.

மேத்தா, தணிகைச் செல்வன், மீரா, தமிழன்பன், வைரமுத்து, அப்துல் ரஹ்மான் நா. காமராசன் போன்ற கவிஞர்களின் கவிதைகளை அவர் ரசித்திருந்தார்.

தாய் வார ஏட்டில் "காதலியிடம் கடைசி வரிகள்" என்ற தலைப்பில் பல புதிய பழைய நல்ல கவிஞர்களின் உணர்ச்சி வெளிப்பாடுகள் கவிதை அருவியாய் வழிந்தன. தாய் இதழில் வெளியான சிறுகவிதைச் சிதறல்கள் குற்றாலப் பருவத்தின் குளுமையை இதயத்திற்கு ஏற்படுத்தின. கவிஞர் செந்தமிழ் மாறன் இவ்விதழில் தெய்வீகப் பாடல்கள் பலவற்றைத் தொடர்ந்து எழுதி வந்தார். காவல் துறை இயக்குனர் ராதா கிருஷ்ணன் (கிராக்கி) "ஒரு கிரவுண்ட் நிலம்" என்ற தலைப்பில் (ராணியில் 26 / 9) கவிதை எழுதியிருந்தார்.

நறுக்குத் தெரித்தாற் போன்ற நயமான வரிகள் நிறைய வந்தன. வாழ்க்கை என்ற தலைப்பில் (குங்குமம்) அமுதபாரதி எழுதிய "சலவை சட்டைக்குள் சல்லடை பணியன்கள்"போன்ற வரிகள் சுவையாக இருந்தாலும் வேறு யாரோ எழுதிய

"அன்று வீட்டில்
பலகாரம்
சப்பாத்திதான்
ஜோராக இருந்தது
வீட்டிலே செய்ததா
என்றேன்
இம்,...... Weateடிலே
செய்ததுதான்
என்றாள் அவள்"

போன்ற வரிகள் (மயன் 17/1) சோபிக்கவுமில்லை. சுவைக்கவு மில்லை.

சகாயம், முத்துகிருஷ்ணன், கல்யாண்குமார், சூரியகுமார், பாபநாசம் குறள்பித்தன், இளந்தேவன், போன்ற பல கவிஞர் கள் தாய் இதழுக்கு நல்ல பல கவிதைகளைத் தந்தனர். 14.11 தாய் இதழில் குருவிக்கரம்பை சண்முகம், முத்துலிங்கம், பூவை செங்குட்டுவன், கண்ணதாசன், கங்கை அமரன் ஆகியோர் சில இயற்கைக் காட்சிகளுக்காக இனிய கவிதைகளை படைத்திருந் தனர்.

கவியரசு கண்ணதாசனைப் பற்றிய பசுமையான நினைவு களை இராம. கண்ணப்பன் ராணி இதழில் தொடராக எழுத, கவிஞருக்கு மூன்று மனைவிகள் ஏன்? என்று மூன்றாவது மனைவி புலவர் வள்ளியம்மை இதயம் பேசுகிறது இதழில் எழுத, அந்த நல்ல கவிஞன் நினைவு நமது இதயங்களில் புதுப்பிக்கப்பட்டது.

வார ஏடுகள் சிலவற்றில் கவிதைப் போட்டிகள் நடந்தன என்பது கவிதையைக் கௌரவப்படுத்திய செயலாகும். புதுக் கவிதை அறுவை போட்டி (ராணி) எம்.ஜி.ஆர். பொற்கிழிக் கவிதைப் போட்டி (தாய்) அட்டைப்படக் கவிதைப்போட்டி (இதயம் பேசுகிறது) வெண்பாப் போட்டி (சுனிதா) பாரதி நூற்றாண்டு மரபுக் கவிதை, புதுக்கவிதைப் போட்டிகள் (கல்கி) புதுக்கவிதைப் போட்டி (குங்குமம்) போன்ற போட்டிகள் அவற்றுள் குறிப்பிடத்தக்கவை.

**சிறுகதைகள்:**

எந்தப் பருவ இதழாக இருந்தாலும்சிறுகதைகள் எப்போதும் சிறப்பான இடத்தை வகிக்கின்றன. சிறுகதைகளின் வழக்க மான கருப்பொருட்கள் வரதட்சிணை, காதல், காமம், சோரம் போதல், மது, தீண்டாமை, மனப் போராட்டம் குடும்பப் பூசல்கள் துரோகம், கொலை கொள்ளை போன்றவை தான் என்பதில் எண்பத்திரண்டில் எவ்வித மாற்றமுமில்லை. ஒவ்வொரு வார இதழும் ஒன்றிலிருந்து ஏழெட்டு சிறுகதை களைப் பிரசுரிக்கின்றன. எண்பத்திரண்டில் கல்கி வார இதழ் சிறுகதைகளில் பல புதுமைகளைச் செய்தது. பத்திரிகைகளின் பெயரையே தலைப்பாக வைத்துச் சில எழுத்தாளர்களைக் கதை யெழுத வைத்தது (16/5) பாரதியின் பாடல் வரிகள், தேர்தல் சின்னங்கள், 82ம ஆண்டு தீபாவளிக்கு வெளியான திரைப்படங் கள் இவற்றையெல்லாம் கூட கல்கி தன் சிறுகதைகளுக்குத் தலைபபாக்கியது. பல்வேறு மாநிலச் சிறுகதைகளும் கலகியில் (5/12) வெளியாகின.

ஆனந்தவிகடன் பல பிரபல எழுத்தாளர்களின் ஒரு பக்கக் கதைகளை 21-3-62 இதழில் தொகுத்திருந்தது. 82ஆம்ஆண்டில் காலமான எழுத்தாளா தி. ஜானகிராமனின் நினைவஞ்சலியாக அவரெழுதி 1956ம் ஆண்டு தீபாவளி மலரில் பிரசுரமான 'கங்கா ஸ்நானம்'' என்ற சிறுகதையை மீண்டும் (5/12) பிரசுரித்தது ஆனந்தவிகடன்.

குமுதம் வார ஏட்டில் புதுமையாகவும் பரபரப்பாகவும், பதினோரு எழுத்தாளர்களின் பதினோரு இளமைக் கதைகள் வெளியாகின. சிறந்த இளமைக் கதையை எழுதியதாக வாசகர் கள் அழகாபுரி அழகப்பனைத் தேர்ந்தெடுத்தனர். என் மதிப்புக் குரிய கதை என்ற தொடரில் பிரபல எழுத்தாளர்கள் சிலர் தாம் ரசித்த நல்ல சிறுகதைகளைத் தொகுத்தளித்தனர். உதாரணத்

திற்கு அகிலன் ரசித்த கு. ப. ராஜகோபாலனின் தாய் என்ற சிறுகதையைக் குறிப்பிடலாம் (குமுதம் 19.8)

வானவில் கதைகள் என்ற தலைப்பில் வாசகர்களுக்கு 'சாவி' வார ஏடு ஒரு போட்டியை நடத்தியது. 15-3-82 இதழில் ஏாரளமான இருபக்கக் கதைகள் வெளியாகியிருந்தன. மணிக் கதைகள் என்ற தலைப்பில் தரமான நல்ல கதைகளுக்குகடிகாரம் பரிசளித்திருந்தது சாவி.

தேவி வார இதழில் ''கனவு மனிதர்கள்'' என்ற தலைப்பில் மனநலக் கோளாறு சம்பந்தப்பட்ட விபரீதமான பழக்கங்களைக் கொண்ட மனிதர்களைப் பற்றிச் சிறுகதைத் தொடரொன்றை எழுதி வந்தார் இந்துமதி. 'தாத்தா சொன்ன கதைகள்' என்ற தொடரை கி. ராஜநாராயணன் எழுதிக் கொண்டிந்தார்.

எண்பத்திரண்டில் சிறுகதைகளைப் பொறுத்தவரை ராஜேஷ் குமார், பிரதிபா ராஜகோபாலன், கோவி.மணிசேகரன், லட்சுமி ராஜரத்தினம், ஜோதிர்லதா கிரிஜா, அன்னம், சுமங்கலி, தாமரை செந்தூர் பாண்டி, சமுத்திரம், ஜெயரதன் மாலன் பிரபஞ்சன், பட்டுக்கோட்டை பிரபாகர், கார்த்திகா, ராஜ்குமார், ஜெயந்தன், வேதா கோபாலன், வனமாலி, பானுமதி ராஜகோபாலன், ஏ. வி. எம். கணேஷ் ஆகியோரது படைப்புகளை அடிக்கடிப் பார்க்க முடிந்தது.

வார இதழ்கள் சிறுகதைப் போட்டிகளை நடத்தித் தரமான சிறுகதைகளைப் படைப்பதற்கான ஆர்வத்தை எழுத்தாளர் களிடையே ஏற்படுத்தின. கல்கி நினைவு சிறுகதைப் போட்டி, இதயம் பேசுகிறது அட்டைப்படக் கதைப்போட்டி, ராணி ஆதித்தனார் நினைவு நாவல் சிறுகதைப் போட்டி தினமணிகதிர் வித்யாசமான தலைப்புகளுக்கேற்ற கதைப் போட்டி ஆகியன குறிப்பிடத்தக்கவை.

பத்திரிகைகளில் வெளியாகும் சிறுகதைகளை மாதந்தோறும் விமர்ச்சித்து அம் மாதத்தில் சிறந்ததென்றும் அவ்வாண்டில் சிறந்ததென்றும் தேர்ந்தெடுத்து கௌரவிக்கும் இலக்கிய சிந்தனை என்ற அமைப்பைப் பற்றி சொல்லாமற் போவது இத் தலைப்பிற்கு நிறைவைத் தராது. தளராமல் தொடரும் பாராட் டுக்குரிய பணி இது.

**தொடர்கதைகள்:**

வாசகர்களைத் தக்க வைத்துக் கொள்வதில் தொடர்கதை களுக்குப் பெரும் பங்கிருக்கிறது. சுவையான தொடரின் அடுத்த

வாரத்தில் என்னவோ என்ற வாசகர்களின் ஆர்வம் நிச்சயமாக விற்பனைக்குச் சாதகமாய் இருக்க வேண்டும். இல்லாமலா வார இதழ்கள் தொடர் கதைகளுக்கான விளம்பரங்களை ஒரு சினிமாவைப் போலச் சுவரொட்டி அடித்து ஒட்டுகின்றன!

வழக்கம் போல எண்பத்திரண்டிலும் சாண்டில்யன் ஜெயகாந்தன், சுஜாதா, சாவி, மணியன், சிவசங்கரி, லஷ்மி, புஷ்பா, தங்கதுரை, ஹேமா ஆனந்த தீர்த்தன், வாஸந்தி, அனுராதா ரமணன், பாலகுமாரன், சவீதா, பட்டுக்கோட்டை பிரபாகர் போன்ற நாவலாசிரியர்களின் காட்டில் நல்ல மழை.

பெரும்பாலான தொடர் கதைகளில் 'செக்ஸ்' தான் பிரச்சினை. "இது முழுக்க முழுக்க செக்ஸ் சம்பந்தப்பட்ட கதைதான். ஆனால் ஆபாசக் கதையல்ல. மிக்க சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடும் கருணையுள்ளத்தோடும் எழுதப்பட்டுள்ளது" என்ற பீடிகையோடு ஹேமா ஆனந்த தீர்த்தன் 'தாய்' இதழில் எழுதிய 'ரேகா சதீஷ் ராஜி' என்ற தொடர்கதை வாசகர்கள் வட்டாரத்தில் பரபரப்பாகப் பேசப்பட்டது.

சமூதாய சீர்கேடுகளைச் சாடுகிற விதத்தில் நல்லதொரு கருவை உள்ளடக்கியிருந்தது. ரா.சு. நல்ல பெருமாள் (தினமணி கதிரில்) எழுதிய "தூங்கும் எரிமலைகள்" திரைப்படக் கலைஞர் களை நடிக்க வைத்து தொடர்கதை வெளியிட்டது இதயம் பேசுகிறது. (மணியனின் 'வாழ்த்தும் நெஞ்சங்கள்' என்றும் உன்னுடைய ராதுவின் 'அவள் ஒரு செய்தி') இலங்கை எழுத்தாளர் அருள் சுப்பிரமணியம் எழுதிய சூரசம்ஹாரம் ஆனந்த விகடனில் தொடர்ந்து வந்தது.

எண்பத்திரண்டாம் ஆண்டில் மர்மத் தொடர்கதை என்ற வகைக்கு ராண்டர் கை ("கருத்தடை மரம்" இதயம் பேசுகிறது) கிருஷ்ணவேணி(முத்தம் பதித்த மோகினி' தினமணிகதிர்)பி.டி. சாமி ("ஒரு கொலை ராகம்" ராணி) ரகுநாத் ("உயிருக்கு அப்பால்" தாய்) போன்ற இன்னும் சிலரும் சரித்திரத் தொடர் கதை என்ற வகைக்கு சாண்டில்யன் (விஜய மகாதேவி)' குமுதம், "மண்மலர்" ராணி "விலைராணி' குங்குமம், ('கடல்நீலி' கமலம்) கலைஞர் கருணாநிதி ("தென்பாண்டிச் சிங்கம்" குங்குமம்) தாமரை மணாளன் "இந்திரவிழா" (இதயம் பேசுகிறது) கௌதம நீலாம்பரன் ("நிலாமுற்றம்", "பாசதுபந்தனம்" இதயம் பேசுகிறது) கௌசிகன் ("ஜுலேகா" தினமணிகதிர்) செம்பியன் ("ரவிகுல திலகன்" கல்கி) ஸ்ரீவேணுகோபாலன் ("சுவர்ணமுகி" கல்கி) அமரர் அரு ராமநாதன ("வீரபாண்டியன் மனைவி"

தேவி) அமரர் கல்கி (''கள்வனின் காதலி'' கல்கி) ஆகியோரும் சித்திரத் தொடர்கதை என்ற வகைக்கு பாக்கியம் ராமசாமி (''அப்புசாமியின் கலர் டி. வி. குமுதம்) அபர்ணாநாயுடு (நினைவெல்லாம் நித்யா'' கல்கி) மிஸ் கவிதா (''டேவிட்'' சாவி) செல்வமணி (கொலை வருகிறது'' குமுதம்) போன்றோரும் தம் பொறுப்பினைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.

இதயம் பேசுகிறது இதழில் அந்தாதிக் கதையாகப் பல எழுத்தாளர்கள் எழுதினர். இதே போன்று 'நேசமனம் நெஞ்சிலே' என்ற தொடர்கதையை வாரம் ஒருவராக சாவியில் 12 எழுத்தாளர்கள் எழுதினர்.

குமுதத்தில் வந்த 'க்ரைம்' சாவியில் வந்த ''துளசிதளம்'' (மூலம் தெலுங்கு) குங்குமத்தில் வந்த மாதவி (சரத்சந்திரர் எழுதியது) டெக்கமெரான் கதைகள் (திவ்யா அன்புமணி) தேவியில் வந்த சிகப்பு ரோஜாக் கதைகள்) புஷ்பா தங்கதுரை) தாயில் வந்த சில கிரிமினல் கொலை வழக்குகள் (ராஜதேவன்) ஆகியவை பரபரப்பாகப்படிக்கப்பட்ட தொடர்கள். பொன்.பரமகுரு அந்த 30 நாட்கள் என்ற மினித்தொடர் ஒன்றை தாய் வார ஏட்டில் (13, 20, 27 ஜுன் இதழ்கள்) எழுதினார்.

தொடர் கதைகளைப் பற்றி எழுதும்போது கதாசிரியர்களின் கற்பனைப் பாத்திரங்களைக் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகிற ஓவியர்களைப் பற்றியும் ஒரு வரி எழுதவேண்டும். ஓவியர்கள் ஜெயராஜ் (பிரிவோம் சந்திப்போம், தாரா தாரா தாரா, விடிவதற்குள் வா, காற்று வெளியினிலே) மணியம் செல்வன் (சாயங்கால மேகங்கள், ரோகா சதீஷ் ராஜீ) உமாபதி (கவர்ச்சிகள், மாதவி) கோபுலு (விலை ராணி) லதா (வீரபாண்டியன் மனைவி, விஜயமகாதேவி) ராமு (கங்கை யெல்லாம் கோலமிட்டு, சந்தனக்காடுகள்) அரசு(மருதாணி) ஜி.கே. மூர்த்தி (என்றென்றும் அன்புடன்) வர்ணம், அர்ஸ்போன்றோன் தம் ஓவியங்கள் அனைத்துமே வாசகர்கள் வட்டாரத்தில் பிரபலமானவை.

**நாடக உலகம்:**

நடிக்கப்படும் நாடகங்களைப் போலவே படிக்கப்படும் நாடகங்கள் என்பதும் ஒருவகை. எண்பத்திரண்டில் வார இதழ்கள் நாடகங்களுக்கு அளித்த இடம் திருப்திகரமானதாயில்லை, எப்போதாவது ஓரங்க நாடகங்கள் சிலவற்றைக் குமுதமும் தினமணி கதிரும் வெளிவிட்டன.

மேடைகளில் நடிக்கப்பட்ட பிரபலமான சில நாடகங்கள் சில வார இதழ்களில் வெளியாகின. சுஜாதாவின் டாக்டர் நரேந்

திரனின் விநோத வழக்கு (பூரணம் விஸ்வநாதன் குழுவினர்) தினமணி கதிரிலும், வெங்கட் எழுதிய அந்த சில நாட்கள் (பிரிய தர்சினி குழுவினர்) 'தாய் வார ஏட்டிலும், வியட்நாட் வீடு சுந்தரத்தின் ரூபாய்க்கு மூணு கொலை (ஒய். ஜி, மகேந்திரன் குழுவினர்) கல்கியிலும் வெளியாகின.

தாய் இத... அனுராதாரமணன் எழுதிய "தீராத விளை யாட்டுப் பொண்ணு" என்ற நாடகமும் மார்க்ரெட் பென் பெல்லா எழுதிய "நூறாவது ஆள்" என்ற நாடகமும், ஆனந்த விகடனில் மரீனா எழுதிய "எங்கம்மா" என்ற நாடகமும் தினமணிக்கதிரில் "தினபயம்" என்ற நாடகமும் தொடராக வந்தன.

தாய் வார ஏடு நாடகப்பிரியா குழு, கலாரசனா சபா ஆகிய வற்றுடன் இணைந்து ஒரு முழு நேர மேடை நாடகத்திற்கான போட்டியை நடத்தியது. இவ்வேட்டின் 24-1-82 இதழ் நாடகச் சிறப்பிதழாக மலர்ந்ததைக் குறிப்பிட வேண்டும். மேடை நாடகங்களை உற்சாகப் படுத்தும் வகையில் கிட்டதட்ட எல்லா வார ஏடுகளுமே நாடக விமர்சனங்களை எழுதின.

பல வார ஏடுகள் மேடை நாடகங்களிலிருந்து சில பகுதி களைப் பிரசுரித்தன. பிரபல நாடகாசிரியர்கள் அறுக்கிறார்கள் என்ற தலைப்பில் நிஜமாகவே சிரிப்பை வரவழைத்த நகைச் சுவை வெடிகளைக் குமுதம் பிரசுரித்து வந்தது.

**விளையாட்டரங்கம் :**

எண்பத்திரண்டின் இறுதியில் நடந்த ஆசிய விளையாட்டுப் போட்டிகள் மட்டுமல்ல. ஆண்டுதோறும் இந்தியப் பெருநகரங் களில் நடைபெற்று வரும் கிரிக்கெட் போன்ற ஒருசில விளை யாட்டுகளும் கராத்தே போன்ற பாதுகாப்புக் கலைகளும், உடற் பயிற்சி முறைகளும் வார இதழ்களின் பக்கங்களைச் கணிசமாக ஆக்கிரமித்துக் கொண்டன.

கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கு திரைப்பட நட்சத்திரங் களுக்கு இணையான மவுசு இருப்பதாலோ என்னவோ நமது பத்திரிகைகள் அவர்களை நன்றாகவே மொய்த்தன. கிரிக்கெட் வீரர்களான கவாஸ்கர் கபில்தேவ் பற்றிய அட்டைப்படக் கட்டுரை (கவர் ஸ்டோரி) ஆனந்தவிகடனில் 7-11-82 வெளி யானது. இந்துமதி குமுதம் இதழில் (28.1) சென்னையில் நடந்து முடிந்த 5வது கிரிக்கெட் டெஸ்டை விமர்சித்தார். தாய் 10-1-82இதழ் கிரிக்கெட் சிறப்பிதழாக வந்தது. கிரிக்கெட் சம்பந்தப்பட்ட பல்வேறு சுவையான விவரங்கள் அதில் வெளி

யாகியிருந்தன. பம்மல் ராம்சோ என்பவர் கிரிக்கெட் புதுக்குறள் என்று புதிய குறட்பாக்களைப் படைத்திருந்தார். அதில் ஒன்று.

''நல்லதொரு பாட்ஸ்மேனும் பௌலரும் வல்லதொரு
கேப்டனும சேர்வதாம் டீம்.''

கல்கியும் (17.1) கிரிக்கெட் சிறப்பிதழ் வெளியிட்டது. அரசியல் தலைவர்கள் டெஸ்ட் வர்ணனை செய்தால் எப்படியிருக்கும் என்ற கல்கியின் கற்பனை சுவையாக இருந்தது. கிரிக்கெட் ஒழிக்கப்படவேண்டுமென்று பகீரதன் பாய்ந்திருந்தார் 28-2 83 கல்கி இதழின் அட்டைப்படத்தை கிரிக்கெட் வீரர் சிவராமகிருஷ்ணன் தம்பதியினர் அலங்கரித்தனர். அவர்களுடைய பேட்டியும் அவ்விதழில் வந்தது. 4-7.82 இதழில் உலகக் கோப்பை யாருக்குக் கிடைக்கும் என்ற அட்டைப்படக் கட்டுரை ஸ்பெயினில் நடந்த உலகக்கோப்பைக் கால்பந்தாட்டப் போட்டி பற்றி ஆனந்த விகடன் எழுதியதாகும். ராஞ்சி காட்டிய பாதையும் மார்ச்செனட் வகுத்த வழியும் என்ற கட்டுரையை சுந்தரேசன் கல்கி (10/1)யில் எழுதினர்.

ப்ரூஸ்லீ பற்றிய கட்டுரை தினமணிகதிரில் (28/5) வெளியானது. கராத்தே வீரர் மணி குங்குமம் இதழ் வாயிலாக கராத்தே பயிற்சி குறித்த விளக்கங்களை வழங்கினார். இவர் ''உலகம் பிறந்தது எனக்காக'' என்ற தொடரை 'தாய்' இதழில் எழுதினார்.

கியூப் என்ற பொழுதுபோக்கு இவ்வாண்டில் பலரது பொழுதைப் போக்கப் பயன்பட்டது. பத்திரிகைகளின் பக்கங்களை நிரப்பவும் பயன்பட்டது. ஆனந்தவிகடன் தான் இந்தப் பொழுது போக்கில் பெரிதும் ஈடுபட்டது. கியூப் போட்டி நடத்திய பெருமையும் இவ்வேட்டிற்கு உண்டு. சுபஸ்ரீ ''கியூப்'' என்ற தலைப்பில் சிறுகதை எழுதியிருந்தார். குங்குமத்தில் (10/10) ''க்யூப் சால்வ் செய்வதெப்படி'' என்ற கட்டுரை வெளியாகியிருந்தது.

ஆசிய விளையாட்டுப் போட்டிகளைப்பற்றி எல்லாப் பத்திரிகைகளும் எழுதின. டில்லித் திருவிழா என்ற தலைப்பில் குமுதம் (2/12) எழுதியது, அன்புடன் வாஸந்தி என்ற தொடரில் குங்குமத்தில் எழுதிய வாஸந்தி இதயம் பேசுகிறது இதழிலும் கட்டுரை எழுதியிருந்தார். தாய் வார ஏடுகளிலும், ஆசிய விளையாட்டுச் செய்திகள் நிறைய வெளியாகின. ''ஆர்வ அலைகளில் மிதக்கிறது ஆசிய விளையாட்டு மைதானம்'' என்ற தலைப்பில் தாய்

(14/11) வெளியிட்ட கட்டுரை சிறப்பாயிருந்தது. இந்தியாவில் ஏஷியன் கேம்ஸ் என்ற தொடர் கல்கி 5-12-82 இதழிலிருந்து தொடங்கியது. "தங்கம் கொண்டு வந்த தங்கங்கள்" "எப்படி இருந்தது ஏஷியாட்" என்பவை முறையே 16/12, 9/12 ஆகிய குமுதம் இதழ்களில் வந்த பேட்டிக் கட்டுரைகளாகும்.

## துணுக்குத் தோரணங்கள் :

பத்திரிகைகளில் துணுக்குகள் என்பவை சுவையான உணவுக்குத் தொட்டுக் கொள்ள வைக்கப்படுகிற பதார்த்தங்கள் போன்றவை.

வெறும் பதார்த்தங்களை மட்டும் தின்று கொண்டிருப்பதைப் போல துணுக்குகளை மட்டுமே சுவைக்கிற வாசகர்களும் நிரம்ப உள்ளனர். சிறுகதை, தொடர்கதை எழுத்தாளர்களைப் போலவே துணுக்கு எழுத்தாளர்களும் வார இதழ்களின் வாயிலாகப் பேரும் பொருளும் பெற்றுக் கொண்டிருக்கிறனர். எனவே துணுக்குகளையோ துணுக்கு எழுத்தாளர்களையோ சாதாரணமாகக் கருதி விட முடியாது.

துணுக்குகள் எழுதியே (இவர்களில் ஒரு சிலர் சிறுகதைகளும் எழுதியுள்ளார்) புகழ் பெற்றவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் உ. ராஜாஜி, வெ.சீதாராமன், ப்ரியா பாலு, கோவி.பரஞ்சோதி ஏ.வி. தேவன், கடலூர் கன்னியப்பன், அமுதன் மைந்தன், டி.வி. பாலு, ராமுசாமி, ராஜகணேஷ், லலிதா, செல்லப்பா, கீதாபஞ்சு, முத்து தங்க ஐயப்பன், கணியூர்பரூக், அனிதா ராமச்சந்திரன், வ. தேனப்பன், மற்றும் பலர். இவர்களில் ப்ரியா பாலு தான் எழுதிய துணுக்குகளைத் தொகுத்து ஒரு புத்தகமே வெளியிட்டுள்ளார். வெ. சீதாரமன் ஒரு டாக்டர். மயன் (17/1) இதழுக்கு வெ. சீதாராமன் துணுக்கெழுத்து அனுபவங்களைப் பற்றிப் பேட்டியளித்திருந்தார்.

துணுக்குச் செய்திகள் பெரும்பாலும் சினிமா, அரசியல், இலக்கியம், ஆன்மீகம், விளையாட்டு, விநோதமான வெளி நாட்டு உள்நாட்டுச் செய்திகள் என்று பல துறைகள் சம்பந்தப் பட்டவையாக இருந்தன. சிலரது வெளிநாட்டுப் பயண அனுபவங்கள் கூடத் துணுக்குகளாகச் சுருங்கியிருந்தன. நகைச் சுவைத் துணுக்குகளையும் (?) இந்தத் தலைப்பின் கீழேயே கொண்டு வந்து விடலாம்.

துணுக்குகள் சில வார ஏடுகளில் குறிப்பிட்ட சில தலைப்பு களின் கீழ் மொத்தமாகத் தொகுத்தளிக்கப்பட்டன. மசாலா, சின்னச் சின்ன செய்திகள், பளிச் பளிச், (ஆனந்தவிகடன்)

கொறிக்க (ராணி), நியூஸ் ஜூஸ். மூர்மார்க்கெட் (இதயம் பேசுகிறது) தே. மா. ப. சு. (தினமணிகதிர்) சுறுக் துணுக் (தேவி) சின்னஞ் சிறு மின்னம் மினி, டிங்கா டிங்கா ரோசா (தாய்) போன்றவை அத்தலைப்புகள். முத்தாரம், கல்கண்டு, பூவாளி போன்றவை துணுக்குகளுக்காகவே அவதரித்த ஏடுகள்.

நகைச்சுவைத் துணுக்குகள் பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்து மக்களின் அவலங்களையும் பிரச்சினைகளையும் வெளிப்படுத்துபவையாக இருந்தன. இல்லறம், விருந்தினர் வருகை, தீபாவளி, பட்ஜெட், டி. வி நிகழ்ச்சிகள், ஹோட்டல்கள், தண்ணீர்ப் பஞ்சம் புதிய சினிமாக்கள் ஆகியவை பற்றிய நகைச்சுவைத் துணுக்குகளே அதிகம் வந்தன.

உதாரணத்திற்கு ஒன்றிரண்டு :

"சில ஓட்டல்காரர்களைப் போல நாங்கள் இட்லி விலையை உயர்த்தப் போவதில்லை."

"பலே பலே...அப்புறம்?"

"ஆனால் இட வாடகையை நிமிஷத்துக்குப் 10 காசு வசூல் பண்ணப் போறோம். (குமுதம் 11/2)

ஒரு கொசு: (இன்னொரு கொசுவிடம்) அவுங்கதான் டி. வியிலே டிராமா பார்த்திட்டிருக்காங்களே நீ வேற ஏன் கடிச்சி இன்னும் அவங்களைக் கஷ்டப்படுத்தறே. (கல்கி 22/8)

"ஆல் இந்தியா ரேடியோவிலே வானிலை அறிவிப்பாளரான அவரைக் கூப்பிட்டு வாழ்த்தச் சொல்லாதிங்கப்பா. அவரோட வார்த்தை எதுவும் பலிக்காது." (தேவி 11/8)

கல்கி (14/3) இதழில் பட்ஜெட் நகைச்சுவைத் துணுக்குகள் நிறைய இடம் பெற்றிருந்தன. விகடனில் வெளியாகி வந்த 'சாரி கொஞ்சம் ஓவர்' மற்றும் நடுப்பக்க நகைச்சுவைத் துணுக்குகள் நிச்சயமாக விலாவை நோக வைக்கும் நிஜமான நகைச்சுவையாய் இருந்தன. பல சமுதாயப் பிரச்சினைகளும் இவ்வகையில் நையாண்டி செய்யப்பட்டன. 'இதெல்லாம் நிஜம்தானா' என்ற தலைப்பில் நிச்சயமாக அப்படியெல்லாம் இருக்க முடியாத ஆட்டோ டிரைவர்களைக் கற்பனை செய்திருந்தது குமுதம் (12/8).

**கற்பனை நாயகர்கள்**

வார இதழ்களில் சாகாவரம் பெற்றுள்ள சில கற்பனை மனிதர்கள் வாசகர்கள் மனதில் நீங்கா இடம் பெற்றிருப்பதால்

இக்கட்டுரையிலும் இடம் பெறுகிற அந்தஸ்தைப் பெறுகின்றனர். குரங்கு குசலா (ராணி) அப்புசாமி சீதே (குமுதம்) நம்ப டாக்டர், அரசியல் அய்யாவு, ரெட்டைவால் ரெங்குடு, சிரிப்புத் திருடன் சிங்கார வேலு, புரோக்கர் புண்யகோடி (ஆனந்தவிகடன்) கட்ட பொம்மன், கமென்ட் கவிதா (சாவி) ஆகியோர் நகைச்சுவை விருந்தையும், ஆபீஸ்பாய்(குமுதம்) சுதிர்த்தும்பி (தினமணிகதிர்) ஆகியோர் அரசியல் நையாண்டிகளையும் அற்புதமாக வழங்கினர்.

### விமர்சனங்கள்

அரசியல், நாடகம், சினிமா விமர்சனங்களை அந்தந்த தலைப்பிட்ட பத்திகளில் பார்த்தோம். இவையன்றி புதிய நூல்கள் மற்றும் இசை விமரிசனங்களும் வார இதழ்களில் வெளி வந்தன. இசைச்சுட்டி (கேஸட்) மோகம் பெருத்து விட்டதாலோ அல்லது இசைச்சுட்டி தயாரிப்பாளர்களும் பெரிய விளம்பரதாரர்களாக இருப்பதாலோ பத்திரிகைகள் இசைச்சுட்டி விமர்சனங்கள் செய்யத் தொடங்கின. ஆனால் இவ்விமர்சனங்கள் தொடராமல் சப்பென்று நின்று விட்டன. சாவியும், தாயும் காஸெட் விமர்சனங்களைச் செய்தன.

புத்தக விமர்சனங்கள் குங்குமம், தாய், குமுதம், கல்கி ஆகிய இதழ்களில் தொடர்ந்து வெளியாகின.

### பேட்டிக் கட்டுரைகள்

அரசியல், திரையுலகப் பிரமுகர்கள், பிற துறைக் கலைஞர்கள், சாதனையாளர்கள் சோதனைக்குள்ளானவர்கள், வித்தியாசமானவர்கள் என்று மனிதர்களைத் தரம் பிரித்துக்கொண்டு வாரப் பத்திரிகைகளில் வெளிவந்த பேட்டிக் கட்டுரைகளை அணுகலாம். எண்பத்திரண்டாம் ஆண்டில் மிகவும் பிரபலமாகப் பேசப்பட்ட அல்லது விமர்ச்சிக்கப்பட்ட பெண்மணியான பெங்களூர் சாவித்திரி கண்ணாடி முன்னால் நிர்வாணமாக நின்று கொண்டு தன்னைத் தானே வரைந்ததோடு நின்று விடாமல் அந்த ஓவியங்களை வைத்து ஒரு கண் காட்சியே நடத்தி விட்டார். அவரைப் பற்றிய பேட்டிகளும் படங்களும் (நிர்வாணப் படங்களும்) பத்திரிகைகளுக்குக் கணிசமான அவலாக இருந்தன. (இதயம் பேசுகிறது 12/9, குமுதம் 29/7, குங்குமம் 5/9, தேவி 8/9) சாவித்திரி செய்தது சரியா என்று சாவியில் (12/9) சிலருடைய கருத்துக்கள் வாங்கிப் பிரசுரிக்கப்பட்டன.

ஹரிகதா வித்தகர் எம்பார் விஜயராகவன் ஆனந்த விகடனுக்கும் (14/11) அமெரிக்காவில் வாழும் தமிழ் டாக்டர்

ஆறுமுகம் (கண்ணதாசனுக்கு ஆன வைத்திய செலவு பற்றி) குமுதத்திற்கும் (15/4) வஜ்பாயி கல்கிக்கும் (7/2) இண்டியன் எக்ஸ்பிரஸ் நிர்வாக ஆசிரியர் அருண்ஷோரி (மாகஸேஸே விருது பெற்றவர்) கல்கிக்கும் (5/9) கணித மேதை சகுந்தலா தேவி குங்குமத்திற்கும் (21/2) அன்னை தெரஸா தாய்க்கும் (14/2) அளித்த பேட்டிகள் குறிப்பிடத்தக்கவை. 'விபசாரம் குற்றமல்ல' என்ற தலைப்பில் டெல்லி போலீஸ் டெபுடி கமிஷனர் கிரண் பேடியின் பேட்டியை வாஸந்தி இதயம் பேசுகிறது(25/8) இதழில் எழுதினார்.

ப்ளஸ் டு தேர்வில் 1007 மதிப்பெண்கள் பெற்றிருந்தும் கல்லூரியில் இடம் பெறாத கற்பகம் என்ற பெண்ணைக் குமுதம் பேட்டி கண்டது(21/9). பத்திரிகையில் பேட்டி வந்தபிறகு அந்தப் பெண்ணுக்கு இடம் கிடைத்து விட்டதாக அறிவிக்கப்பட்டது.

சுங்கத்துறை அதிகாரி கே. வாசுதேவனின் அலுவல் அனுபவங்களையும் சாதனைகளையும் சாவி தொடர்ந்து பிரசுரித்தது.

சாதாரண மக்களைக் கூட்டிப் போய் பெரிய மனிதர்களைச் சந்திக்க வைத்தது குங்குமம். உதாரணமாக சுண்டல் வியாபாரி ஒருவர் தொழிலதிபர் ஈஸ்வரன், உமாரமணன், சண்முகம் ஆகியோரைச் சந்தித்தார். (குங்குமம் 28/11) கல்கியின் கடைசிப் பக்கத்தில் பலரது முதல்தரமான கடைசி அனுபவங்களைப்பேட்டி கண்டெழுதினார் ஏ. வி. எம். கணேஷ்.

விசிட் என்ற பகுதியின் கீழ் பல பதிப்பகத்தார்களைப் பேட்டி கண்டது தினமணிகதிர். வெள்ளி விழாக் கண்ட வானதி திருநாவுக்கரசு பற்றிய கட்டுரை இதயம் பேசுகிறது இதழில் வந்தது (30/5)

பேட்டிக் கட்டுரையாளர்களில் நவீனன், பாரி வள்ளல், சலன், திரைஞானி, ப. ஜீவகன், ராஜாசெந்தில் நாதன், வாமாலி, வினோத், பால்யூ, ராணி மைந்தன், ராசி அழகப்பன், ஆர். சி. சம்பத், சாந்தி கோபாலன், ரஜத், பொன் ஜெயந்தன், மு. சிவாஜி, தியாகராஜன், அறிவுமணி ஆகியோர்குறிப்பிடத்தக்கவர்கள். புகைப்படப் பத்திரிகையாளர்களில் (Photo Journalists) குறிப்பிடத்தக்கவர்கள் உத்ரா, ஈ. வே. ரா. மோகன், சுபா சுந்தரம், ஏ. வி. பாஸ்கர், எம். கே. ராமமூர்த்தி, ரவி போன்றோர்.

**கேள்வி பதில்கள்:**

பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதுவதும் பத்திரிகை ஆசிரியர்களைக் கேள்விகேட்பதும் பத்திரிகைகளில் வாசகர்கள் பங்கேற்க

கிற சந்தர்ப்பங்கள் இவ்விரு பகுதிகளுக்கும் பத்திரிகைகள் ஓரிரு பக்கங்களை ஒதுக்குகின்றன.

அரசு, (குமுதம்) பராசக்தி (குங்குமம்) மணிவண்ணன், கதிர்த் தும்பி (தினமணிகதிர்) ஜூனியர் (கல்கண்டு) மணியன், நக்கீரன் (இதயம் பேசுகிறது) கமெண்ட் கவிதா, சாவி (சாவி) அபஸ்வரம் ராம்ஜி, எம். எஸ். உதயமூர்த்தி (மயன்) கிட்டப்பா (பூவாளி) அன்புள்ள அல்லி (ராணி) பைரவி (தாய்) பதில்கள் குறிப்பிடத் தக்கவை. ஆனந்தவிகடனில் கேள்வி பதில் கிடையாதென்பது தனித்துவம்.

பத்திரிகையாசிரியர்கள் பதிலளிப்பது போதாதென்று சினிமாக் கலைஞர்களும் வாசகர்களுக்குப் பதிலளித்தனர். கட்டுரையின் முற்பகுதியில் திரைப்படம் என்ற தலைப்பில் விவரம் தரப்பட்டுள்ளது. குங்குமம் இதழில் எழுத்தாளர் அனில் தார்க்கர் ரீடர்ஸ் டைஜஸ்ட் ஆசிரியர் ராகுல்சிங் கேள்விபதில்கள் இடம் பெற்றன. ஒரு மாறுதலுக்காக வாசகர்களுடைய பதில் களுக்காக கேள்விகளைக் கொடுத்தன முத்தாரமும், சாவியும்.

### போட்டிகள்

வாசகர்கள் பத்திரிகைகளில் ஒரு ஈடுபாட்டை வளர்த்துக் கொள்ளவும், நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்தவும் போட்டி கள் நடத்தப்படுகின்றன. எல்லா ஆண்டுகளையும் போலவே எண்பத்திரண்டாம் ஆண்டிலும் பத்திரிகைகள் பல போட்டி களை வாசகர்களுக்கென நடத்தின. பிழைக்கும் வழி, 'கல்யாண காலம்' தொடர்கதையில் எத்தனை சீதா, மூதன் முதலாக கணவர் செய்துபோட்ட நகை, பரிதாபமான குடிகாரர்கள், இளமைக் கதைகளில் எது சிறந்தது (குமுதம்) நறுக்கென்று ஒரு குட்டு, மனந்திறந்த பாராட்டு, அது அந்தக் காலம், ஜோக்கான விலைவாசி அறிவுக்கதிர், பத்துப்பாட்டுபோட்டி, நான் டைரக்ட ரானால் (தினமணிகதிர்) நான் செய்த நல்ல காரியம், வாழ்த்தும் நெஞ்சங்கள் திரைப்படப் போட்டி, 24.1.82 இதழ் அட்டைப் படச் சிறுகதை போட்டி, அம்மா படப் போட்டி, இதயம் பேசு கிறது சுற்றுலாவாரியம் இணைந்த சுற்றுலாப் போட்டி. 1.8.82. இதழ் புகைப்படச் சிறுகதைப் போட்டி, 4.4.82 இதழ் அட்டைப் பட உரையாடல் போட்டி (இதயம் பேசுகிறது) கியூப் போட்டி (ஆனந்த விகடன்) சின்ன வீடு ஏன், முதலிரவில் கணவர் பேசியது, மனதில் நிற்கும் நிகழ்ச்சி, ஆண்களுக்கு மீசை அவசியமா, (ராணி) அலசுங்கள் நடிகர்களை, மற்றும் 16 5.82 இதழில் அறிவித்தபோட்டிகள் (தாய்)என்னுயிர்த்தோழி (தேவி) ரசிகமணி நூற்றாண்டு கட்டுரை போட்டி பாரதி நூற்றாண்டு

போட்டிகள் (கல்கி) சாவி கையில் இருந்தால் (சாவி) என்று பத்திரிகைகள் நடத்திய போட்டிகளை அடுக்கிக் கொண்டே போகலாம்.

குமுதம் இதழில் ஒரே மாதிரியான இரண்டு படங்களைப் போட்டு ஆறு வித்தியாசங்களைக் கண்டுபிடிக்கிற பொழுது போக்கு எல்லா வயதினரையும் ஈர்த்தது.

பயண கட்டுரைகள்

வெளிநாட்டிற்குப் போய் வந்த பத்திரிகை ஆசிரியர்களும் பிற துறைகளில் புகழ் சம்பாதித்துள்ள பிரமுகர்களும் அந்நிய மண்ணில் தமக்கேற்பட்ட அனுபவங்களைத் தொடராகவும், கட்டுரையாகவும் துணுக்குகளாகவும் எழுதியுள்ளனர்.

பயண அனுபவங்களைப் பொறுத்தமட்டில் எப்போதும் போல இதயம் பேசுகிறது ஆசிரியர் மணியன் நிறைய பயணத் திருக்கிறார். நிறையவும் எழுதியிருக்கிறார். இலங்கை இந்து மாநாட்டிற்குச் சென்று திரும்பிய அவர் 9.5.82 இதழில் சிறப் பான கட்டுரையொன்றை எழுதினார். ஹூஸ்டனில் நடந்த மீனாட்சி அம்மன் கோவில் கும்பாபிஷேகம் பற்றி 1.8.82 இதழில் கட்டுரை வந்தது. மணியனின் நேபாளப் பயணக்கதை 7.2.82 இதழிலிருந்தும் அலாஸ்கா பயணத் தொடர் 15.8.82 இதழிலிருந்தும் தொடர்ந்தன.

வீணை எஸ்.பாலசந்தர் தமது ஜப்பான் பயண அனுபவங்களை 8.8 82 ஆனந்த விகடன் இதழிலிருந்து எழுதத் தொடங்கினார். அந்த இதழின் அட்டைப்படத்தையும் அவரே அலங்கரித்தார்.

தாய் வார ஏட்டில் 'வெளி நாட்டில் சில வேடிக்கை அனுபவங்கள்' தொடரை மதி ஒளி எழுதி வந்தார். 'சாவி'யில் ராணி மைந்தன்' 'பாங்காங் இரவுகள்' பயணத்தொடரை எழுதினார். சாவி ஆசிரியர் சாவி (விஸ்வநாதன்) 'ஜப்பானில் நாலு நாள்' தொடரைத் தொடர்ந்தார்.

குமுதத்தில் வெளிவந்த 'நினைவெல்லாம் ஹூஸ்டனில்' தொடரையும் பயணக் கட்டுரை வகையில் சேர்த்துக் கொள்ள லாம்.

சிண்டு முடிதல்

ஒருவருக்கொருவர் சிண்டு முடிவதும் விவாதங்களை விவகார மாக வளர்த்து வேடிக்கை பார்ப்பதும் பத்திரிகைகள் கையாளு கிற ஒரு வகையான விளம்பர யுத்தி. குமுதம், இதயம் பேசுகிறது

இதழ்களுக்கு இது கைவந்த கலை. மற்ற பத்திரிகைகளும் அ(இ)க் குறும்பைச் செய்யாமலில்லை.

சென்னை தொலைக் காட்சியில் வேலை பார்க்கிற தஞ்சை வாணனுக்கும் கங்கை அமரனுக்கும் சண்டு முடிந்தது இதயம் பேசுகிறது (11.4.82)

"கட்சி எங்கே? கொள்கை எங்கே?" என்ற தலைப்பில் சாமி சண்முகமும் குமரி அனந்தனும் தினமணி கதிரில் (11/6) மோதிக் கொண்டனர். இளைஞர் சிறப்பிதழில் (கதிர் 18/6) இது சதி. ஒரு தேசியவாதிக்குச் செய்கிற துரோகம் என்ற கட்டுரையை குமரி அனந்தன் எழுதியிருந்தார்.

பெரியகுளத்தில் அ.தி.மு.க ஏன் ஜெயிக்கவேண்டும் ஜெயிக்க கூடாது என்ற தொடர் குமுதத்தில் வந்தது. 16/8 இதழில் ரகுமான்கான் ஜெயிக்கக்கூடாது என்று எழுதியிருந்தார்.

'யோசிக்கும் வேளை'யில் என்ற தொடரில் ஜெயகாந்தன் பெண் எழுத்தாளர்களைப் பற்றி எழுதப்போக பெண் எழுத்தாளர்களும் சில வாசகர்களும் கொதிக்க, தாய் (16/5) இதழ் வரை விவகாரம் தெறித்தது.

டாக்டர் கிருஷ்ணா ஸ்ரீனிவாஸைப் பேட்டி கண்டு அவருடைய வாயை மட்டுமல்ல மேலும் சிலருடைய வாய்களையும் கிளறிவிட்டு நாலைந்து இதழ்களுக்கு ஆகாரத்தைத் தேடிக் கொண்டது தாய் (11/7, 25/7, 1/8, 5/9)

**கிராக்கிக்கு கிராக்கி:**

இதற்கு முன்பிருந்தே பல ஆண்டுகளாய் எழுதிக் கொண்டிருக்கும் காவல்துறை இயக்குநர் இராதாகிருஷ்ணனை எண்பத்திரண்டாம் ஆண்டில் வார இதழ்கள் நிறைய எழுத வைத்தன. எந்தப் பத்திரிகையை விரித்தாலும் இவருக்கென்று ஓரிரு பக்கங்கள் இருக்கும். சிறுசிறு சம்பவங்களையும் அன்றாடம் வாழ்வில் நாம் சந்திக்கும் பிரச்சினைகளையும் பல்வேறு தலைப்புகளில் தமக்கே உரிய பாணியில் சுவையாக எழுதியுள்ளார் இவர்.

பூட்டிக் கிடந்த அறை பரபரப்பாகிறது என்ற கவர் ஸ்டோரியுடன் 6-6-82 இதழின் அட்டைப்படத்தை அலங்கரித்தஇவரைக் கனிவும் கண்டிப்பும் மிக்கவர் என்று கௌரவித்திருந்தது ஆனந்த விகடன்.

சிறு கட்டுரைகள் கதைகள் என்றெல்லாம் நிறைய எழுதியுள்ள இவர் கவிதைத் துறையைக் கூட விட்டு வைக்கவில்லை.

ராணி (26/9) இதழில் 'ஒரு கிரவுண்ட்' நிலம் என்ற தலைப்பில் ஒரு கவிதை எழுதியிருந்தார். கிராக்கி என்ற புனைபெயரில் வெளிப்பட்டுக் கொண்டிக்கும் இவரது எழுத்தோவியங்களுக்கு எண்பத்திரண்டில் ஏகப்பட்ட கிராக்கி.

**சமூகப் பொறுப்புணர்வு:**

சமூகத்தில் தானும் ஒரு அங்கம், தனக்கும் சமூக நலனில் பொறுப்பிருக்கிறது என்பதை வார இதழ்கள் நன்கு உணர்ந்திருந்தன. இவை நாட்டில் நடக்கிற சில அக்கிரமங்களையும் யாருக்கும்தெரியாமல் எங்கோ நடக்கிற அநீதிகளையும் வீதிக்குக் கொண்டு வந்தன. தீயவைகளைத் தட்டிக் கேட்கிற பத்திரிகைகள் நல்லவை நிகழும்போது தட்டிக் கொடுத்துப் பாராட்டவும் செய்தன. (உ.ம்) ''தமிழக முதல்வரின் சம்பந்தி போஜனம்'' ''முதல்வரின் சத்துணவு'' (தாய் 18/7) (இதயம் பேசுகிறது 29/8) கண்தானம் செய்தோர் பட்டியல் (விகடன்).

ஆனந்த விகடனில் பல அவலங்கள் அட்டைப்படக் கட்டுரைகளாக, கவர்ஸ்டோரி, வெளியாகின. கேட்பாரில்லையா என்ற பகுதியில் பல முறைகேடுகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. கம்பன் ஏமாந்தான் என்ற கட்டுரை (16/5) யில் தேரெழுந்தூர் கம்பன் மேட்டின் அலங்கோலங்கள் சுட்டிக்காட்டப்பட்டன. ஆட்டோ பிரச்சினைகளை15/8/82 இதழில் அலசியது. தண்ணீர்ப் பிரச்சினை (24/10) பூம்புகாரின் இன்றைய நிலை (9/5) போன்றவை பற்றியும் எழுதப்பட்டன.

குமுதம் எண்பத்திரண்டிலும் தன்பிரார்த்தனைக் கிளப்பைத் தொடர்ந்தது. பிணியுற்றவர்களுக்காக ஒரு குறிப்பிட்ட நேரத்தைக் குறிப்பிட்டு வாசகர்களைப் பிரார்த்தனை செய்யக் கேட்டுக் கொள்ளும் பகுதி இது. வேலையில்லாப் பட்டதாரிகளைப் பற்றிய தொடர் கல்கியில் வந்தது. 1982ம் ஆண்டு முதியோர்ஆண்டென்பதை மறவாமல்நினைவூட்டியது குங்குமம். (31-1-82) தாய் வார ஏடு வாசகர்களின் சட்டம் சம்பந்தப்பட்ட கேள்விகளுக்குப் பதிலளித்தது. கவனிப்பாரில்லையா என்ற பகுதி மூலம் 'தாய்' பல முறைகேடுகளைச் சுட்டிக் காட்டியது.

**வாரப் பலன்கள்:**

இவ்வாரம் என்ன நடக்கும் என்ற ஆரூடம் கூட சில வாரப் பத்திரிகைகளில் ஒரு அம்சமாக இருக்கிறது. தினமணிகதிர் (பீட்டர் லிடால்) இதயம் பேசுகிறது (பால ஜோஸியர்), தாய்

(நாராயணன்), ராணி போன்ற இதழ்கள் ராசி பலன்களை வெளியிட்டன. இவ்வாண்டின் இறுதி வாக்கில் 'எண்கள்' என்ற வார இதழ் எண் கணித ஜோதிடத்திற்காகவே (நியூமரலாஜி) தொடங்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

**தலையங்கங்கள்:**

பத்திரிகை ஆசிரியர்கள் தலையங்கங்களில் மட்டுமல்ல, தனக்கென்று சில பக்கங்களிலும் அவ்வப்போது தலை தூக்குவர். 82ஆம் ஆண்டின் முக்கிய சம்பவங்களான பாரதி நூற்றாண்டு, திருச்செந்தூர் நிகழ்ச்சி, மண்டைக்காடு மோதல்கள், தண்ணீர்ப் பற்றாக் குறை, பெரியகுளம் தேர்தல், காவிரி நீர்ப்பங்கீடு, தமிழ் நாடு பல்கலைக் கழக ஊழல், பத்திரிகை சுதந்திரம், ஆளும் கட்சி நடத்திய கடையடைப்பு மற்றும் தலைவர்களின் தேர்வு, மறைவு போன்றவைகள்தான் பெரும்பான்மையான தலையங்களுக்குக் கருப் பொருட்களாயிருந்தன.

**மாற்றங்களும் ஏமாற்றங்களும்:**

பத்திரிகை உலகில் புதியன புகுதலும் புதிதாகவே, கழிதலும், உருப்பெறுதலும் உருமாறுதலும் கூட எண்பத்திரண்டாம் ஆண்டில் நிகழ்ந்தன. ஜே. எம். சாலியை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப்பட்டு அபஸ்வரம் ராம்ஜியால் தொடரப் பட்டு அளவுமாறி அப்படியே மெல்ல மறைந்தும் போனது மயன். நவீனன் ஆசிரியர் பொறுப்பேற்றிருந்த பூவாளி இவ்வாண்டில் நின்றுவிட்டது. சுஜாதா என்ற மாதமிருமுறை வாராந்தரியாக மாறி சினிமாவில் சேர்ந்துவிட்டது. ஆம் இப்போது அது சினிமா வார ஏடு. தினமணிகதிர் தமிழ்ப் புத்தாண்டிற்குப் பிறகு அளவு மாறி வந்து கொண்டிருக்கிறது. சுனிதா, கமலம், திலகம் போன்ற வார ஏடுகள் அற்ப ஆயுளில் மறைந்தன.

**மாற்றான் தோட்டத்து மல்லிகைகள்:**

வார இதழ்களில் மற்ற இதழ்களின் ஆசிரியர்கள் கௌரவிக்கப்பட்டதை மனமுவந்து பாராட்டவேண்டும். பத்திரிகைகள் நடத்தும் சிறுகதை, நாவல், குறுநாவல், கவிதைப் போட்டிகளுக்கு ஏனைய இதழாசிரியர்கள் நீதிபதிகளாக இருப்பது வேறு.

தனது எண்பத்திரண்டாமாண்டின் முதல் இதழில் சரித்திர நாவலாசிரியர் டாக்டர் விக்கிரமனைச் சமூகச் சிறுகதை எழுத வைத்திருந்தது இதயம் பேசுகிறது. இப்படியெல்லாம் கூட பத்திரிகைகள் வருகின்றனவா என்று யாருக்கும் தெரியாத பல சிறு பத்திரிகைகளின் சிறப்பான வரிகளைத் தொகுத்து

தொடர்ந்து வெளியிட்டு விளம்பரம் வெளிச்சம் போட்டு உதவியது இதயம் பேசுகிறது. (4/4, 11/4) எண்பத்திரண்டாம் ஆண்டு சாவி ஆசிரியர் சாவிக்குப் பொன்விழா ஆண்டு. 18-7-82 கல்கி இதழில் இவரது அட்டைப்படம் மட்டுமல்ல உள்ளே, 'ஒரு பேனா மன்னரின் பொன்விழா' என்ற புகழாரக் கட்டுரையும் பிரசுரமாகியிருந்தன. கலைமகளுக்கும்இது பொன்விழா ஆண்டு. தனது 16-5-82 இதழின் மூலம் கல்கி, கலைமகளுக்குப் புகழ் சாமரம் வீசியது. வாழ்க்கை ஒரு சமுத்திரம் என்ற தொடர் மூலம் எழுத்தாளர் சமுத்திரத்தின் மீது வாழ்த்துப் பன்னீர் தெளித்தது குமுதம்.

**உள்ளத்தைச் சொல்லுதற்கு ஓரிரு பக்கங்கள்:**

எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள், கலைஞர்கள், சமூகத்தில் பிற துறைகளில் பெருமை கொண்டோர் இவர்களெல்லாம் வார இதழ்களில் தம்கருத்துக்களையும் அனுபவங்களையும் எழுதினர். சுவையான அந்தப் பக்கங்கள் வாசகர்கள் மத்தியில் மிகுந்த வரவேற்பைப் (சில நேரங்களில் எரிச்சலையும்) பெற்றன.

பால்யூ பக்கம், ஜெயகாந்தன் பக்கம் (குமுதம்) சோ பக்கம் ம. பொ. சியின் கடைசிப் பக்கம் (கல்கி) ஸ்ரீதேவிபக்கம், ஜெயகாந்தனின் யோசிக்கும் வேளையில் (குங்குமம்) ஜெயலலிதா பக்கம், மாலன் பக்கம் (தாய்) பாலசந்தர் பக்கம், சாவியின் பழைய கணக்கு (சாவி) என் பக்கம்—நவீனன் (பூவாளி) இவையெல்லாம் பத்திரிகைகளில் வந்த சில பிரபலமான பக்கங்கள்.

**சிறப்பிதழ்கள்:**

புத்தாண்டு, பொங்கல், தீபாவளி, கிறிஸ்மஸ் போன்ற நாட்களைக் குறிப்பிடவும் மாவட்டங்கள், கலைகள் போன்றவற்றைச் சிறப்பிக்கவும் சில வார ஏடுகள் சிறப்பிழ்களாக மலர்ந்தன. தலைவர்களைச் சிறப்பிக்கவும் சிறப்பிதழ்கள் வந்தன.

நீலகிரி மாவட்ட மலர் (இதயம் பேசுகிறது) மெல்லிசைச் சிறப்பிதழ் (தினமணிகதிர் 15/10) கியூப் சிறப்பிதழ் (ஆனந்த விகடன் 9/5) நேருமலர் (ஆனந்தவிகடன் 14/11) ராஜாஜி நினைவு இதழ் (கல்கி 26/12) இசை விழா மலர்கள் (பல பத்திரிகைகள்) செகந்தராபாத், ஹைதராபாத், இரட்டைச் சிறப்பிதழ் (குங்குமம் 28/2) கல்கத்தா சிறப்பிதழ்கள் குங்குமம் (16, 23, 30 5, 6/6) கிரிக்கெட் சிறப்பிதழ் (தாய் 10/1) நாடகச் சிறப்பிதழ் (தாய் 24/1) கல்கத்தா சிறப்பிதழ் (இதயம் பேசுகிறது 12/12) என்று சிறப்பிதழ்களின் எண்ணிக்கையை எண்ணிக் கொண்டே போகலாம்.

**அறிவியல் மருத்துவம் ஆளுமை வளர்ச்சி:**

வெறும் பொழுது போக்கு அம்சங்களைத் தருவதாக மட்டுமே அமைந்துவிடாமல் பத்திரிகைகள் பல பயனுள்ள பகுதிகளையும் உள்ளடக்கியிருந்தன என்று ஏற்கனவே குறிப்பிட்டது, அறிவியல் மருத்துவம் ஆளுமை வளர்ச்சி (Personality Deoctopment) குறித்த கட்டுரைகள், வினா விடைகள் பேட்டிகளையும் சேர்த்துதான்.

தினமணி கதிரின் அறிவியல் தொடர், இதயம் பேசுகிறது இதழின் எளிய மருத்துவம் என்பவை பயனுள்ள சிறு தகவல்கள் அடங்கிய தொடர். தென்னிந்தியாவின் முதல் மனிதன் என்ற கவர் ஸ்டோரி மூலமாக (25-4-82) ஆனந்தவிகடன் இதழ் லெமூரியா கண்டம் பற்றிய பல அரிய செய்திகளைத் தந்தது. வேதனை என்ற தலைப்பில் பெனாசிடின் மருந்தின் அபாயத்தையும் சாதனை என்ற தலைப்பில் தொழுநோய் குணமாகும் உபாயத்தையும் ஆனந்தவிகடன் (1-8-82) எழுதியிருந்தது. அறிவியலைப் பற்றி என்னதெரியும் என்ற தொடர், கல்கியில் பல பயனுள்ள அறிவியல் செய்திகளை வெளிப்படுத்தியது. நளினி சாஸ்திரி, கல்கி விஞ்ஞான பக்கங்களில் தொகுத்த விஞ்ஞான செய்திகள் ஏராளம். தாய் வார ஏட்டில் டாகடர் உமா மகேசுவரி தொடர்ந்து எழுதி வந்தார். பொ. ம. இராசாமணி 'வாழ்ந்து பார்ப்போம் வாருங்கள்' என்ற தலைப்பில் இல்லற வாழ்விற்கேற்ற ஏற்றமிகு அறிவுரைகளைத் தந்து கொண்டிருந்தார். மயன் வார ஏட்டில் 'தட்டுங்கள் திறக்கப்படும்' என்ற கேள்வி பதில் பகுதியில் பல பயனுள்ள ஆளுமை வளர்ச்சிக் கருத்துக்களைத்தந்தார் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. இவர் தம் மனநலம் சம்பந்தப்பட்ட கட்டுரைகளும் அநேகம் அற்புதம்.

'புகழ் பெற்ற விஞ்ஞானிகள்' என்ற தொடரையும் அப்துல் ரஹீம் எழுதிய "வாழ்க்கையில் வெற்றி" "எண்ணமே வாழ்வு" கட்டுரைகளையும் முத்தாரம் பிரசுரித்து வந்தது.

**இளைய தலைமுலையினர்க்கு...**

இளைய தலைமுறையினருக்குப் பயன் படுவதாகவும் அவர்களைப் பயன்படுத்துவதாகவும் சில பகுதிகள் வார ஏடுகளில் அறிமுகப்படுத்தப் பட்டன.

மயன் வாரஏடு இளைஞர்களுக்காகவே பிறந்ததென்றாலும் ஏனோ இளமையிலேயே மறைந்துவிட்டது. இருந்தாலும் இருந்த வரை இளமை குன்றாத இதழாகவே இருந்தது எழுச்சி பெற்ற இளைய தலைமுறை என்ற பகுதியில் ஆசிரியர் ராமஜி

(அபஸ்வரம்) பல இளைஞர்களைப்பற்றி எழுதி வந்தார். தாயில் வந்த இளையவர் இனியவர் என்ற பகுதியும் இதே ரகம்தான்.

மாணவர் பக்கம் வாயிலாக மாணவ மணிகளின் எழுத்தாற்றலை வளர்த்து வருகிறது. ஆனந்தவிகடன், குமுதம், தினமணிகதிர், குங்குமம் ஆகிய வாரஏடுகளில் ப்ளஸ் டு மாணவர்களுக்கான மாதிரிக் கேள்விகள் பிரசுரமாகின. இனிமேல் என்ன படிப்பது என்ற பகுதியின் மூலம் தினமணிகதிர் பயனுள்ள இதழில் அடிப்படையிலான கல்வி வாய்ப்புகளைப் பிரபலப் படுத்தியது. 25க்குக் கீழே என்ற பகுதியில் குமுதம் பல பிரபல மான இளைஞர்களின் ஆற்றலைப் பாராட்டி எழுதி அறிமுகம் செய்தது.

**இலக்கியஉணர்வுகள்:**

எப்போதும் போல் எண்பத்திரண்டாம் ஆண்டிலும் வார இதழ்களுக்கு இலக்கியம் அத்தனை அன்னியோன்னியமில்லாமல் தான் இருந்தது. இருந்தாலும் இரட்டுற மொழிந்தவையும் சில இலக்கியச் சொற்பொழிவாளர்களின் சிலேடைச் சிதறல்களும் துணுக்குகளாக அவ்வப்போது வெளிவந்தன. கீரனும், கி. வா. ஜகந்நாதனும், கிருபானந்தவாரியாரும் தான் அதிகமாகச் சிலேடைகளைச் சிந்திய சொற்பொழிவாளர்கள்.

சிலம்புச் செல்வர் ம. பொ. சி. படைத்து வரும் கடைசிப் பக்கம் (கல்கி), கலைஞர் மு. கருணாநிதி தீட்டி வரும் குறளோவியம் (குங்குமம்), ப. உ. சண்முகம் எழுதிவரும் ஒரு குறள் ஒரு கதை (தாய்)ஆகியன சிறந்த இலக்கியப் புதையல்கள்.

**இதழ்கள் இதுவரை:**

எண்பத்திரண்டாம் ஆண்டில் மலர்ந்த வார இதழ்களின் பொருளடக்கத்தை இதுவரை கணித்தோம் கவனித்தோம். இனி தொடர்வது வார இதழ்களைப் பற்றிய மதிப்பீடு. வார ஏடுகளின் வயதின் அடிப்படையில் அவற்றை அடுக்கி வைத்துக் கொள்வோம்.

**ஆனந்தவிகடன் :**

இதன் நிறுவனர் காலத்துத் தோற்றத்தையும் இப்போதைய தோற்றத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது புதுப் பொலிவு என்ற பெயரில் மாற்றமடைந்திருப்பதும் வழக்கமான வாசகர்களுக்கு ஏமாற்றம் கிடைத்திருப்பதும் நன்கு புலனாகிறது. கவர்ச்சியான படங்களை இதுவரை பார்த்திராதவர்கள் இப் போது பார்க்கலாம். இருந்தாலும் ஆபாசம் அதிகமில்லை என்

பதில் ஆறுதல் கிடைக்கிறது. தரமான சிறுகதைகள், நிஜமாகவே சிரிப்பை வரவழைக்கிற விரசமில்லா நகைச்சுவைத் துணுக்குகள் விகடனுக்குத் தனிச் சிறப்பை அளிக்கின்றன. சாரி கொஞ்சம் ஓவர் பகுதியைப் பார்த்துவிட்டு அலுவலகம் பொது இடம் என்பதையும் மறந்துவிட்டு சிரித்து வெடிக்கிற பலரை நம்மில் பலர் பார்த்திருக்கக் கூடும். விகடனில் வெளிவரத் தொடங்கியுள்ள அட்டைப் படக் கட்டுரைகள் (கவர் ஸ்டோரி) முழுமையாகவும் மிக்க கவனத்தோடும் எழுதப்படுகின்றன. இவை பயனுள்ளவை. பரபரப்பானவை.

**கல்கி :**

ராஜாஜி, சதாசிவம் ஆகியோரின் கையில் தவழ்ந்து வளர்ந்த கல்கி இன்னும் அவர்களுடைய புகழ் பாரம்பரியத்தைக் காத்து வருகிறது. எண்பத்திரண்டில் பாரதி நூற்றண்டைக் கௌரவித்த இதழ்களில் கல்கி முதலிடம் வகிக்கிறது பாரதியின் பெருமைகளை வெளிக்கொணர, பல்வேறு விதமான போட்டிகளை நடத்தி வாசகர்கள் மத்தியில் பிரபலமானது. ஒவ்வொரு ஆண்டும் தவறாமல் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியை நடத்தி அதன் வாயிலாக பல சிறந்த சிறுகதைகள் உருவாக உதவி வருகிறது கல்கி.

**குமுதம் :**

எப்போதும் போல இவ்வாண்டிலும் குமுதம்தான் விற்பனையில் முதலிடம் வகிக்கிறது. தன்னை யாரும் நெருங்க முடியாத ஒரு பாணியைக் குமுதம் வைத்துக் கொண்டுள்ளது. மற்றெல்லாப் பத்திரிகைகளைக் காட்டிலும் விலை குறைவு என்பது குமுதத்திற்கு உரிய ஒரு அசாதாரண அம்சம். வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படுகிற ஒரு பகுதியைத் திடுமென்று நிறுத்திவிட்டு வேறொரு பகுதியைத் தொடங்குவது குமுதத்தின் தனிச் சிறப்பு. கொஞ்சம் செக்ஸ், சற்று சமூகப் பிரச்சினை கலந்த பரபரப்பான சிறுகதைகள், வாசகர்கள் பங்கேற்கும் பல புதுமையான போட்டிகள் பகுதிகள் ஆகியவை குமுதத்தின் தனித்துவமாகும். குமுதத்தின் அரசு பதில்கள் அற்புதமானவை. இதை சகோதர பத்திரிகை ஒன்றின் பாராட்டே புலப்படுத்தும்.

**ராணி :**

விற்பனையில் குமுதத்திற்கு அடுத்தபடியாக இருப்பது ராணி. ராணி வார ஏட்டின் வாசகர்கள் ராணிக்கு மட்டுமே வாசகர்கள் என்ற வகையில் கலைக்க முடியாத ஒரு ரசிக ராஜ்ஜியத்தை ஏற்படுத்தியுள்ளது என்று கூடச் சொல்லலாம். ஓரிரு சிறுகதைகள், ஒரு தொடர்கதை ஒரு சித்திரக் கதை, சமையற்

குறிப்பு, நகைச்சுவைத் துணுக்குகள், சிறுவர் பகுதி, பெண்கள் பகுதி, அரசியல், கேள்விபதில்கள், ராசிபலன், கருத்துப் படங்கள் என்று ஒரு சுவையான அவியலைப் படைக்கிறது இவ்வேடு. புதுமைகளைப் பற்றிக் கவலைப்படாமல், பழைய பாணியிலேயே இருந்தாலும், எளிய தமிழ் எல்லோர்க்கும் பிடித்தமான பாணி என்பதெல்லாம் ராணியின் விற்பனை வெற்றிக்கான ரகசியங் கள். இவ்விதழ் சமுதாயத்தின் நடுத்தர, சாதாரண மக்களால் பெரிதும் வரவேற்கப்படுகிறது.

**தினமணிகதிர் :**

அளவை மாற்றிப் பார்த்தாலும் ஆசிரியர்களை மாற்றிப் பார்த்தாலும் அப்படியே தோற்றமளிக்கிறது இந்த வார ஏடு. புதுமைகளைத் துணிந்து ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், தர மான சிறு கதைகள், தொடர்கதைகள், சுவையான பொழுது போக்கு அம்சங்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. விற்பனை யில் ஒஹோ என்றில்லாவிட்டாலும் சராசரி பத்திரிகை என்ற பெயரை மட்டும் தினமணிகதிர் தக்க வைத்துக் கொண்டுள்ளது.

**குங்குமம் :**

படிப்பதற்கு நிறைய விஷயங்களைத் தருகிற பத்திரிகை. அரசியல் தலைவர் ஒருவருடைய குடும்பப் பத்திரிகை என்பதற் கான சாயல் நன்றாகத் தெரிகிறது. இருப்பினும் குறளோவி யம், தென்பாண்டிச் சிங்கம் போன்ற தொடர்கள் அன்னை தமிழுக்குக் குங்குமத்தின்மூலம் கிடைத்து வரும் அற்புதமான அணிகலன்கள்.

**இதயம் பேசுகிறது :**

அறிவித்துக் கொண்ட அரசியல் ஏடாக இல்லாமற் போனா லும் அரசியல் சார்பை நன்றாகவே காட்டிக் கொள்ளும் ஏடு. வீட்டிலுள்ள வயோதிகர்கள், வாலிபர்கள், பெண்கள், சிறு வர்கள் என்று எல்லோரையும் திருப்திப்படுத்த ஏராளமான பகுதிகள் கொண்ட வார ஏடு. கவர்ச்சியான படங்களைத் (சில சமயங்களில் ஆபாசமாகவும்) தாங்கி வரும் இதயம் பேசுகிறது இதழ்களில் போட்டியில் முந்த வேண்டுமென்ற வேகம் நன்றாகத் தெரிகிறது.

**தேவி :**

தோற்றத்தில் இன்னொரு ராணியாக இருந்தாலும் பரபரப் பூட்டும் தொடர்கதைகளாலும் தரமான சிறுகதைகளாலும் வேறு பல புதிய அம்சங்களாலும் விலகி நிற்கிறது. பல்வேறு

செய்திகளை — இதயத்தை அரிக்கிற — அழுத்துகிற — நெகிழ்விக்கிற பல்வேறு நிகழ்ச்சிகளைச்சுவையாகத்துணிந்து வெளியிடுகிறது தேவி.

**சாவி :**

மிகவும் மெலிவாகக் காணப்பட்டாலும் அனுபவமிக்க ஆசிரியரின் பொறுப்பில் உருவாகிற காரணத்தாலோ என்னவோ சிறப்பாக இருக்கிறது. பல புதியவர்களை உருவாக்கியதிலும் உருப்படியாக வளர்த்ததிலும் சாவிக்கு நிகர் சாவிதான்.

**தாய் :**

கவர்ச்சியாக படிப்பதற்கான அம்சங்களை அதிகம் தாங்கியதாக வருவதால் பிரபலமாகி வரும் வார ஏடு கவிதைச் சுவை தாங்கி வரும் தாய் தான், கவிஞர்களுக்குச் சிறப்பளித்து அதிக வரவேற்பளிக்கும் ஏடாகத் தோன்றுகிறது. பிரபலங்களைக் கவனியாது கவிதைப் பிரமாதங்களை மட்டுமே கணிக்கிற தனித்துவமிக்க ஏடு.

மூக்குத்தி, மாயா போன்ற வார ஏடுகளில் பாலுணர்வே விஞ்சியிருந்தாலும், சுஜாதா, ஜெமினி சினிமா, வண்ணத்திரை ஆகியவை முழுக்க முழுக்க சினிமா வார இதழ்களாக இருந்தாலும் கல்கண்டு, முத்தாரம், பூவாளி போன்றவை துணுக்குகளுக்கே அதிக முக்கியத்துவம் அளித்த இதழ்களானதாலும், எண்கள் ஜோதிடத்திற்காகவே நடந்தாலும், கமலம், மயன், சுனிதா போன்றவை இந்தப் பந்தயத்தில் இறுதிவரை ஓடிவராததாலும் தனித் தனியே குறிப்பிடும்படி இல்லை. இருப்பினும் இவ்வேடுகளிளெல்லாம் எடுத்துக் கொண்ட பணியைச் சிறப்பாகவே செய்தன.

**கூட்டிக் கழித்துப் பார்த்தால்......**

எண்பத்திரண்டாம் ஆண்டு வரை நிலைத்த வார ஏடுகளின் வளர்ச்சி மகத்தானது. பத்திரிகைகளின் எண்ணிக்கை பெருகியிருப்பதால் பிரசுரிப்பதற்கான எழுத்தோவியங்களும் ஏனைய அம்சங்களும் ஏராளமாய்த் தேவைப்பட்டன. பக்கங்களை நிரப்புவதற்காகவே பல கவர்ச்சிப் படங்களும் துணுக்குகளும் வரவேற்கப்பட்டன. தொடர்கதை, சிறுகதை எழுத்தாளர்களைப் போலத் துணுக்கு எழுத்தாளர்களும் பேட்டிக் கட்டுரையாளர்களும் புகழ் பெற்றிலங்கினர். பேட்டிக் கட்டுரைகளிலும் பிற பகுதிகளிலும் பல புதிய யுத்திகள் கையாளப்பட்டன. எங்கும் எதிலும் கவர்ச்சியும் பரபரப்பான தகவல்களும் காணப்பட்டன.

தொடர்கதைகள், சிறுகதைகள் இவற்றிலெல்லாம் தரமும் நடையும் வளர்ச்சி பெற்றிருப்பதைக் காண முடிந்தது. இருப்பினும் அவற்றில் பெரும்பாலும் காதல், காமம், கொலை, வேண்டாத உறவுகள் போன்றவையே கருப்பொருள்களாய் இருந்தன. இடையிடையே மண் மணம் கமழும் கதைகளும், வாழ்க்கைப் பிரச்னைகளின் அடிப்படையில் எழுதப்பட்ட கதைகளும் வெளியாகின.

எண்பத்திரண்டில் வந்த வார ஏடுகள் பல சமுதாயச் சீர்கேடுகளைச் சாடி எழுதின. நடந்ததை நேர்மைத் துணிவுடன் எழுதிய போதும் சில பத்திரிகைகளுக்குத் தமது அரசியல் உணர்வுகளை உதாசீனப் படுத்த முடியாமற் போனதையும் காண முடிந்தது.

இதுவரை அரசியல் பிரமுகர்களுக்கும் திரைப்படக் கலைஞர்களுக்கும் அளிக்கப்பட்ட சிறப்பான இடத்தையும் விளம்பரத்தையும் இலக்கியவாதிகளுக்கும் பொதுவாக்கி கௌரவித்தன பல வார ஏடுகள். ஆனால் விளம்பரம் பெற்று விட்டதால் மட்டுமே யாருக்கும் சுய சரிதம் பாடும் தகுதி வந்ததென நினைத்தல் ஏற்புடைத்தன்று. எந்தத் துறையாக இருந்தாலும் பழுத்தவர்களிடம் மட்டுமே பயனுள்ள பல தகவல்களையும் அனுபவங்களையும் கேட்டு இன்புற முடியும். இளந்தளிர்களிடமல்ல.

தமிழ் வார ஏடுகள் என்று தலைநிமிர்ந்து நிற்கும் நமது சில ஏடுகள், குறிப்பிட்ட சில பகுதிகளுக்கு ஆங்கிலத் தலைப்புகளை அளித்தது ஏற்கத் தக்கதாயில்லை. கவர் ஸ்டோரி, லைட்ஸ் ஆன், கிளாப்ஸ், நியூஸ் & வியூஸ் இவற்றிற்கு இணையான தமிழ்த் தலைப்புக்கள் இல்லையா என்ன?

மேடை நாடகங்களுக்கு விமர்சனம் எழுதுவது, அவற்றில் சிதறும் சில சிரிப்பு வெடிகளைச் சேகரித்துப் பிரசுரிப்பது மட்டுமே நாடகக் கலையை வளர்க்கிற செயலன்று, விமர்சனமுமன்று. சிறிய பெரிய நாடகங்களும் தொடர் நாடகங்களும் நிரம்ப வெளிவர பத்திரிகைகள் உதவிட வேண்டும்.

இவையன்றி வார இதழ்கள் எவ்வாறிருத்தல் வேண்டும், தரமும் தகுதியும் சிறக்க என்னென்ன செய்ய வேண்டும் என்பதற்கான சில ஆலோசனைகள் வருமாறு.

1. தமிழ் இலக்கியச் சிந்தனைகளும் பண்டைய இலக்கியக் காட்சிகளும் பத்திரிகைகளில் நிறைய எழுதப்பட வேண்டும். இவை எல்லோரும் ஏற்கத் தக்க விதத்தில் சுவையாகவும் எளிமையானதாகவும் இருத்தல் நலம்.

2. அரசியல், மருத்துவம் உலகத்தின் பல்வேறு பகுதிகளில் நடக்கிற அறிவியல் சாதனைகள் இவற்றைத் தொகுத்து வெளியிட வேண்டும்.

3. இந்தியத் திருநாட்டின் எதிர்காலம் இளைஞர்களின் கையில்தான் இருக்கிறது என்று வாயைக் கிழித்துக் கொண்டிருப்பதைவிட எல்லோரும் அவர்களுக்காக ஏதாவது செய்தாக வேண்டும் என்ற சிந்தனை தீவிரமடைந்துள்ள நேரமிது. பத்திரிகைகள் இளைஞர்களின் பொது அறிவை வளர்க்கத்தக்கப் பகுதிகளை அறிமுகம் செய்தல் அவசியம்.

4. பிற மொழிக் கதைகளையும், சிந்தனைகளையும் நம்மவரும் அறிய உதவுமாறு செய்தல் வேண்டும். மேலை நாட்டு இலக்கியங்களையும், இவற்றுள் சுவையான பகுதிகளையும் நம்மவர்க்குப் படைக்க வேண்டும்.

5. அரசியல் அநீதிகளைச் சுட்டிக் காட்டுவதோடு மட்டும் நின்றுவிடாது நுகர்வோரின் அதிருப்திகளை வெளியிட்டு வணிகப் பொருட்களின் குறைபாடுகளைச் சுட்டிக் காட்ட பத்திரிகைச் சக்தி பயன்படவேண்டும். நுகர்வோர் பக்கம் என்று ஓரிரு பக்கங்களை ஒதுக்க வேண்டும்.

6. எங்கோ விளம்பரம் இல்லாமல் இருந்து கொண்டு, ஏதோ ஒரு சாதனையைச் செய்துவிட்டு உற்சாகமளிப்போர் இல்லாமல் உள்ளம் சோர்ந்திருப்பர்களை உலகிற்கு அறிமுகப்படுத்த, கல்லூரி மாணவ மணிகள் எத்தனை புதிய கண்டுபிடிப்புகளைச் செய்கின்றனர் என்பதைப் பத்திரிகைகளைப் போல வேறெந்த சாதனம் பிரபலப்படுத்த முடியும்?

7. நகரமும் நகர்ப்புற நாகரீகமும் என்றிலாமல் கிராமங்களையும் கிராமத்தார்களையும் சந்திக்கவேண்டும். அவர்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அவர்களது வாழ்க்கை அடிப்படையில் கதைகள் உருவானது மட்டுமல்ல பேட்டிக் கட்டுரைகளும் பிற செய்திகளும் வெளியாதல் வேண்டும்.

8. எங்கெல்லாம் நாம் ஏமாற்றப்படுகிறோம். நமது சில அலுவல்களை நடத்திக் கொள்ள என்னென்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் பத்திரிகைகளில் ஒரு பகுதி வரலாம். இதில் முதல் ஆலோசனையை கல்கி ஓரிதழில் செய்திருந்தது. சட்டம் குறித்த பொது அறிவை மக்களுக்கு ஏற்படுத்த பத்திரிகைகள் உதவ வேண்டும்.

9. நல்ல அறிவுரைகளைத் தொகுத்து வெளியிடவேண்டும். ஆன்மீகம் என்பது எல்லா மதங்களுக்கும் பொதுவானது எல்லா மதத் சிந்தனைகளையும் தொகுத்தெழுதல் நலம்.

10. எல்லாவற்றிற்கும் மேலாக எந்தப் பகுதியாக இருந்தாலும் யார் எழுதுகிறார்கள் என்பதைக் கவனிப்பதைவிட, என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதைப் பத்திரிகைகள் கவனித்தால் இலக்கிய உணர்வு மதிப்பைப் பெறும் தரமும் வளரும்.

**சரித்திரம் படைப்போம்:**

குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் வெளிவருகிற பத்திரிகைகள் மக்களை மகிழ்வித்து விட்டுப் போகிற அல்லது அவர்களுடைய பொழுதைப் போக்க உதவுகிற சாதனங்கள் மட்டுமல்ல. மக்களின் அப்போதைய நிலை, கலாச்சாரம், உணர்வுகள், அரசியல், கலை, இலக்கியம் போன்றவை இருந்த நிலைகள் ஆகியவற்றிற்கான, வரலாற்றுச் சான்றுகள் என்பது மறக்கப்படலாகாது. எனவே வாரஇதழ்கள் வளரும் பருவத்திலுள்ள மகனிடம் ஒரு தந்தை நடந்து கொள்கிற அல்லது நடத்துகிறஅளவுக்குப் பொறுப்பினைக் கொண்டிருக்கவேண்டும், உங்கள் கையிலும் தமிழ் இருக்கிறது. தமிழகம் இருக்கிறது. தமிழ் மக்கள் இருக்கின்றனர். நாளை நம்மவர்கள் மட்டுமல்ல, நம்மையறிய விழையும் ஏனையோரும் ஏறெடுத்துப் பார்க்கையில் தமிழும், தமிழகமும், தமிழ் மக்களும் ஏற்றமிகு நிலையில், சிந்தனையில் இருந்தனர் என்பதற்குச் சான்று படைப்போம்.

## பின்னிணைப்பு

### எண்பத்திரண்டாம் ஆண்டில் வந்த தமிழ் வார இதழ்கள் (அகர வரிசையில்)

அடிச்சுவடு
ஆனந்தவிகடன்
இதயம் பேசுகிறது
இந்திய முரசு
இன்றைய உலகம்
இடைக்காடர் ஜோதிடம்
உங்கள் எதிர்காலம்
உங்கள் எதிர்கால விளக்கம்
உங்கள் நல்ல காலம்
உழவன் முரசு
கமலம்
கல்கண்டு
கல்கி
குங்குமம்
குமுதம்
குடிசை ஒலி
சஞ்சய் சக்தி
சமுதாயப் புரட்சி
சாவி
சிகப்பு நாடா
சிந்தனையாளன்
சித்ரா ராசிபலன்
சுனிதா
சுதந்திரம்
சுஜாதா
செங்கோல்
சைனிக் சமாச்சார்
சோவியத் பலகணி
தஞ்சை மணி
தமிழ் நிலம்
தாய்
திலகம்
தினமணிகதிர்
தினமலர் இணைப்பு
தென் குரல்
தேவி
நறுமணம்
நாத்திகம்
பஞ்சாயத்துச் செய்தி
புதுவைக் குரல்
பூவாளி
போர்வாள்
(நாடார்) மகாஜனம்
மக்கள் தொடர்பு
மக்கள் தொண்டன்
மயன்
மறுமலர்ச்சி
முத்தாரம்
முத்து காமிக்ஸ்
வண்ணத்திரை
வணிகச் செய்தி
வஞ்சி நாடு
வாராந்தரி ராணி
விஜய பாரதம்
விசாகம்
வியாபார முரசு
விடிவெள்ளி
ஜனசக்தி
ஜெமினி சினிமா

குறிப்பு: வாரஇதழ்களின் பட்டியலைத் தயாரிக்க எடுத்துக் கொண்ட முயற்சியில் கிடைத்த இதழ்கள் பற்றிய விவரமிது. இன்னும் நிறைய வார இதழ்கள் இருக்கக்கூடும்.

## பின்னிணைப்பு—2

### சில முன்னணி வார ஏடுகள் குறித்த விவரங்கள் (அகர வரிசையில்)

| வரிசை எண் | வார ஏட்டின் பெயர் | விலை | பக்கங்கள் | இதழ் அளவு செ. மீ | விற்பனை (லட்சங்களில்) சுமார் |
|---|---|---|---|---|---|
| 1. | ஆனந்தவிகடன் | 100 காசுகள் | 96 | 20.5 | 2.54 |
| 2. | இதயம் பேசுகிறது | 120 காசுகள் | 68 | 19.7 | 0.70 |
| 3. | கல்கி | 120 காசுகள் | 64 | 23.7 | 0.52 |
| 4. | குங்குமம் | 100 காசுகள் | 72 | 19.8 | 1.39 |
| 5. | குமுதம் | 90 காசுகள் | 112 | 19.7 | 5.44 |
| 6. | சாவி | 1:0 காசுகள் | 64 | 19.7 | 0.70 |
| 7. | தாய் | 100 காசுகள் | 80 | 19.7 | 0.85 |
| 8. | தினமணிகதிர் | 100 காசுகள் | 80 | 19.7 | 0.58 |
| 9. | தேவி | 90 காசுகள் | 34 | 26.0 | 1.25 |
| 10. | வாராந்தரி ராணி | 80 காசுகள் | 34 | 26.0 | 3.81 |

# 7. திங்கள் இதழ்கள்

-மா. சற்குணம்

*1982—இல் 377 திங்களிதழ்கள் தமிழில் வெளியாகியுள்ளன. இவற்றில் சில இதழ்களே பலதரப்பினரும் அறிந்த இதழ்கள். ஏறத்தாழ எல்லா இதழ்களிலும் பாரதியின் படங்களும், அவர் தம் படைப்புக்களைப் பற்றிய ஆய்வுகளும், அவரைப் பற்றிய கவிதைகளும் இடம் பெற்றிருப்பது ஒரு பொதுமைப் பண்பாகக் காணப்படுகிறது. மொழி நடையில், அண்மைக் காலத்தில் ஆங்கிலமொழித் தொடர்களின் தாக்கத்தை திங்களிதழ்களில் காண முடிகிறது.*

விரிதமிழின் தலைப்பில் திங்களிதழ்களின் பங்கு திறனாய்விற்குரியது ஆகும். 1982ஆம் ஆண்டில் திங்கள் இதழ்களாக வெளிவந்தவற்றின்மூலம் அறியலாகும் செய்திகளைத் தொகுத்தும் பகுத்தும் காண்பது அவசியம். அது உண்மையை அறியவும் வளர்ச்சிக்கு வழி காட்டவும் கூடும்.

82-இல் வெளியான நாளிதழ்கள், வார இதழ்கள் முதலிய பல்வேறு பருவ முறை இதழ்களுள்ளும் (periodicals) திங்களிதழ்களே எண்ணிக்கையில் மிக்கு விளங்குகின்றன. சுமார் 300க்கு மேற்பட்ட திங்களிதழ்கள் தமிழில் வெளியாயின, வெளியாகின்றன. அவற்றுள் அனைத்தும் எமது ஆய்விற்கு உள்ளடங்கா. எமக்குத் தனித்தும், நூலகங்கள் வாயிலாகவும் கிடைக்கப்பெற்ற இதழ்களைக் கொண்டே இவ்வாய்வு அமைகிறது.

திங்களிதழ்களைப் பல்வேறு அணுகுமுறைகளில் ஆராயின் பற்பல புதிய செய்திகளையும், வளர்ச்சிக்குரிய முறைகளையும் கண்டறியலாம். மற்றும் மொழிவளர்ச்சியின் போக்குகள், அதற்கானக் காரணங்கள் போன்றவற்றையும் தெரிந்து கொள்ளலாம்.

தமிழில் திங்களிதழ்கள் தமிழகத்தில் மட்டுமன்றி வெளி மாநிலங்களிலிருந்தும், அயல் நாடுகளிலிருந்தும்கூட வெளிவருகின்றன. ஆயினும் வெளியிலிருந்து வெளிவரும் சில திங்களிதழ்களைத் தவிர பிற எமக்குக் கிடைக்காமையினால்

இக்கட்டுரை 'திங்கள் இதழ்கள்' என்ற தலைப்பிற்கேற்ப முழுமையானதாகாது.

தமிழில் வெளிவரும் திங்களிதழ்களில் சிலவே பலதரப் பினரும் அறிந்த இதழ்கள் பெரும்பாலும் இத்தகைய இதழ்களை பத்திரிகை தொழில் செய்வோர் பல ஆண்டுகளாக நடத்தி வருகின்றனர். கலைமகள், மஞ்சரி, அமுதசுரபி, தீபம் முதலிய இதழ்கள் இத்தகையனவே. இத்தகைய இதழ்களில் பெரும் பாலும் படிப்பாளர் விரும்பும் பல பகுதிகளும் அமைந்துள்ளன.

வேறு சில இதழ்கள் தமிழ் படித்தோரால் விரும்பிப் படிக்கப் படும் இதழ்களாக வெளிவருகின்றன. பெரும்பாலும் இவற்றுள் கதைகளோ, கவிதைகளோ சுவைக்குரியச் செய்தித் தொகுப்பு களோ மிகுதியும் இடம்பெறுவதில்லை. மாறாக, இலக்கியக் கட்டுரைகளே சிறப்பிடம் பெறுகின்றன. இவ்வகையில் தமிழ்ப் பொழில், செந்தமிழ்ச் செல்வி முதலியவற்றைக் குறிப்பிடலாம். இவற்றின் மொழியாட்சியில் கருத்து செலுத்தப்படுகிறது.

இவற்றையடுத்து வெவ்வேறு துறையினராலும் படிக்கப் படும் இதழ்கள் இடம் பெறுகின்றன. அறிவியல், கல்வி, சமயம், தொழில், இயக்கம் சார்ந்த இதழ்களை இவண் குறிப்பிடலாம். அவ்வச் செய்திகளில் நாட்டமுடையோர் மட்டுமே அவ்வவற்றை விரும்பிப் படிக்கின்றனர்.

வேறுபலஇதழ்கள் 'தனிச்சுற்றுக்கு' உரியன என்றே அச்சிடப் பெற்று வருகின்றன. விற்பனையில் முந்தையவற்றினும் இவ் விதழ்கள் குறைந்தே இருப்பது கண்கூடு இவை தனிப்பட்டோ ராலும், சில சமூக அமைப்புகளாலும்—தத்தம் கருத்துக்களை வெளியிட்டு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதற்காக நடத்தப் படுகின்றன. சமுதாய நோக்கில் முந்தைய பிரிவு இதழ்களைவிட தரம் வாய்ந்த பல இதழ்கள் இவ்வகையில் உள்ளன. ஆனால்— இப்பிரிவில் அடங்கும் பல இதழ்கள் 'சிறு பத்திரிகை' என அழைக் கப்படுவதும் ஈண்டு நோக்கத்தக்கது. இந்தியாவில் சுமார் 1930 வாக்கில் தோன்றிய இத்தகு இதழ்கள் தமிழகத்தில் இந்திய விடுதலைக்குப் பின்னரும் பெரும் எண்ணிக்கையில் வளரவில்லை. அதன் பின்னர் எழுந்த பல கொள்கைப் பரப்பும் அரசியல் சார்ந்த இயக்கங்களால் இவ்விதழ்கள் பெருகத் தொடங்கின. இவ்வகையில் மனிதன், சரஸ்வதி, எழுத்து, தாமரை முதலிய வற்றைக் குறிப்பிடலாம். பின்னர், நாட்டின் பல்வேறு துறை களின் குறைபாடுகளை நீக்கி மக்களிடையே விழிப்புணர்ச்சி யினைத் தூண்ட அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்ட பல தன் முனைப்பு இயக்கங்களின் குழுக்களும், ஆட்சி சாரா மக்கள்

இயக்க அணிகளும் தோன்றியதால் வரலாற்றில் இல்லாத அளவிற்கு திங்களிதழ்கள் (எண்ணிக்கையிலும் உருவத்திலும், உள்ளடக்கத்திலும்) வளர்ச்சியுற்றன. இது எழுபதுகளுக்குப் பின் ஆண்டுக்காண்டு முன்னேற்றத்தைக் கண்டது.

இவ்விதழ்களில் பலவும் குறைந்த எண்ணிக்கையில் அச்சாவதும், விற்பனையாவதும் குறைந்த வாசகர்களால் படிக்கப்படுவதும் இவற்றின் தரத்தை மதிப்பிடற்குரிய காரணங்களாகா. இவற்றை வைத்து சிறு பத்திரிகைகள் எனக் குறிப்பது அவ்வளவு சரியாகாது. தனிச்சுற்றுக்கு என்ற அறிவிப்போடு வருவதும் குறுகிய ஆயுட்காலத்தைப் பெறுவதும் இவற்றின் பொருளாதார நெருக்கடியைக் காட்டுமேயொழிய தரக்குறைவைப் புலப்படுத்தாது. எனவே, தரத்தில் சிறந்துள்ள இவ்விதழ்களை ஒட்டு மொத்தமாக 'சிறு பத்திரிகை' எனக் குறிப்பது பொருந்தாதென்றே தோன்றுகிறது.

முந்நூறுக்கு மேற்பட்ட எண்ணிக்கையில் திங்கள் இதழ்கள் வெளிவருகின்றன என முன்பே குறிப்பிட்டோம். இவ்வெண்ணிக்கை வளர்ச்சி 1980க்குப் பிறகே இந்த அளவை எட்டியது.

இவற்றுள் பல தனிப்பட்டோரின் பெரு முயற்சியால் கையெழுத்துப் பிரதியாகவோ, உருட்டப் பட்டதாகவோ (Stencil roneo) அல்லது அரிதின் முயன்று அச்சிடப் பெற்றதாகவோ வெளிவருகின்றன. பொதுவாக, இவை வியாபார முறையில் நடைபெறும் ஏடுகளைப் போல வாசகரின் விருப்பங்கட்கு ஏற்பச் செய்திகளை வெளியிடா. மாறாக தமது கருத்துக்கட்கு ஏற்ப படிப்போரைக் கவர்ந்து இழுத்துக் கொள்ளக்கூடியனவாகவே அமைவதைக் காணலாம். சிறந்த அச்சு அமைப்புகளோ, உருவ அல்லது பட வெளியீட்டு வாய்ப்புகளோ இல்லாத நிலையில் உள்ள இவ்விதழ்களில் மிகப் பல இதழின் உருவத்தைப் பற்றிக் கவலைப்படாமல் உள்ளடக்கத்திலேயே கருத்தைச் செலுத்துகின்றன. இவ்விதழ்களை வாங்கிப் படிப்போரும் இந்நோக்கு உடையரே என்பதும் நினைவிற் கொள்ளத் தக்கது. இவ்வகையைச் சார்ந்த இதழ்களில் பல, பொருளாதாரச் சிக்கலால் அவ்வத்திங்களில் வெளிவரயியலாமற் போவதும் உண்டு. சில இதழ்கள் சில திங்களுக்கு ஒன்றாக வெளிவரக் கூடிய நிலையும் உளது. சில இடையிலேயே தம் வாழ்வை முடித்துக்கொள்வதையும் காண முடிகிறது. அவ்விதழ்களைச் சுட்டிச் சொல்வது தேவையற்றதாகலின் மேற் செல்வோம்.

1982-ஆம் ஆண்டு பாரதி நூற்றாண்டு விழா ஆண்டாக' அமைந்தமையால் இவ்வாண்டில் வெளியான எல்லா இதழ்களி

லும் பெரும்பாலும் பாரதியாரின் படங்களும், அவர்தம் படைப்புக்களைப் பற்றிய ஆய்வுகளும், அவர் பற்றிய கவிதைகளும் இடம் பெற்றுள்ளன.' இது இவ்வாண்டு இதழ்களில் காணக் கிடக்கும் ஒரு பொதுமைப் பண்பாக அமைந்துள்ளது. இனி தனித்தனியே சில இதழ்களைப் பற்றி ஆராய்வோம். இவ் வகையில் தமிழ் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு வெளி வரும் சில இலக்கிய இதழ்களை முதற்கண் நோக்குவோம்.

## இலக்கிய இதழ்கள் :

### செந்தமிழ்ச் செல்வி :

இவ்வேடு தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் நடத்தப் பெறுகிறது. தமிழன்னையின் வீணை ஏந்திய காட்சியை அட்டைப் படமாகக் கொண்டு வெளிவரும் இவ்விதழ் தமிழ் இலக்கிய, இலக்கண ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டு ஆய்வு விழைவைத் தூண்டி வருகிறது. மேலும், தமிழில் புதிய சொல்லாக்க முறைகளை உணர்த்துவதாக அமையுமுறையில் பல சொல்லாராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டு வருவது குறிப்பிடத்தக்கது. மேலும், கழகம் நடத்தும் இலக்கிய ஆய்வுக் கூட்டத்தின் செய்திகள் பல அவ்வப்போது வெளிவருகின்றன. இவ்விதழ் கையாளும் தூய மொழி நடையும், ஆட்சி மொழிச் சொல்லாக்கச் செய்திகளும், தமிழ் வளர்ச்சிக்குப் பெரும் பயன் நல்குவன. சிக்கலுக்குரிய சில தலைப்புகள் குறித்துத் தமிழறிஞர்கள் எழுதிவரும் ஆய்வுரையைத் தொடர்ந்து வெளியிடுவதை இது மேற்கொள்வதால் படிப்பாளர்கள் ஆழ்ந்த உண்மைகளைத் தேர்ந்து தெளிவதற்கு வாய்ப்பாகிறது.

### தமிழ்ப்பொழில் :

ஐம்பது ஆண்டுகட்கு மேல் இவ்விதழ் தொடர்ந்து கரந்தைத் தமிழ்ச் சங்கத்தால் நடத்தப்பட்டு வருகிறது. ஆயினும், தமிழ் நாட்டில் தமிழ்ப் படித்தோர் ஐநூறு பேர்கூட இதனை வாங்கிப் படிக்கவேண்டும் என்ற உணர்விழந்து உள்ளமையை எண்ணி வருந்தத்தான் வேண்டியுள்ளது. சிறந்த பல இலக்கிய, இலக்கண, மொழியியல் ஆய்வுக் கட்டுரைகள் வெளிவரும் இவ்விதழ் தமிழ்ப் பணியாற்றும் இதழ்களின் முன்வரிசையில் உள்ளது. வடமொழி மற்றும் ஆங்கிலக் கலப்பற்ற நடையில் கருத்துக்களை வெளியிடுவதும் இதன் சிறப்பாகும். வாசகர்களின் படைப்பாற்றலை ஊக்கப்படுத்தும் பொருட்டு வெண்பாப் போட்டியையும் இவ்விதழ் நடத்தி வருகிறது.

ஓர்-இதழில் 'பாரதியின் நாடக படைப்புகள்' என்ற தலைப்பில் ஆய்வுப் போக்கில் எழுதப்பட்ட ஒரு கட்டுரை பாரதியின் படைப்பாற்றலைப் புலப்படுத்தியுள்ளது. ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ந்து வரும் இக்காலத்தில் குமரன் ஆசானையும் பாரதியாரையும் ஒப்பிட்டு ஒரு கட்டுரை எழுதப்பட்டுள்ளது. பாவலர் பாலசுந்தரனார் அவர்கள் எழுதிய பல கட்டுரைகளும், வினாக்களுக்கான விடைகளும் தமிழ்ப் படித்தோர்க்கு பயன்நல்குவதாக அமைந்தன.

சுவடிகளைப் பயில்வோருக்கும், படி எடுப்போர்க்கும் நன்மை பயக்கும் வகையில் 'ஏடும் எழுத்தும்' என்பது போன்ற கட்டுரைகள் வெளியாகியுள்ளன. மற்றும் 'கல்வெட்டுக்களில் கலைச் சொற்கள்', 'புலங்காணா புதுக் கல்வெட்டுக்கள்' போன்ற கட்டுரைகள் சிலவும் வெளிவந்து கல்வெட்டாய்வாளர்க்குத் துணை செய்கின்றன. 'தொண்டு, தமிழ், முன்னேற்றம்' என்ற தமது நோக்கத்திற்கேற்ப தமிழ்ப்பொழில் துணர் 56-இல் இருந்து புதிய பொலிவுடன் வெளிவந்து கொண்டிருக்கிறது. சுமார் ஐம்பது ஆய்வுக் கட்டுரைகளை இவ்வாண்டு இதழ்கள் தாங்கி வந்துள்ளன.

குறளியம் என்ற இதழ் ஈரோட்டிலிருந்து வெளிவருகிறது. திருக்குறட் கருத்துக்களைப் பரப்பும் ஒரே நோக்குடன் இவ்விதழ் வெளிவருகிறது. பல்வேறு கோணங்களிலிருந்தும் அறிஞர்கள் திருக்குறட் பாக்களுக்கு அளிக்கும் எளிய விளக்க உரைகளும், வாழ்வியல் நோக்கில் எழுதப்படும் கட்டுரைகளும் சிறப்பாக இதில் இடம் பெறுகின்றன.

தமிழ்பணி என்ற இதழ் கவிஞர் வ.மு. சேதுராமன் அவர்களால் சென்னையிலிருந்து நடத்தப்பெறுகிறது' இவ்விதழில் பல வேறிடங்களில் நடக்கும் நல்ல இலக்கியக் கூட்டங்களின் செய்திகளும், தமிழ்ப் பெரியார்களின் இலக்கியக் கட்டுரைகளும், கவிதைகளும் சிறப்பாக வெளியாகின்றன.

தென் மொழி என்ற இதழ் தனித்தமிழ் இயக்க இதழாக தமிழின் தொன்மையையும் நன்னீர்மையையும் எடுத்துக்காட்டும் வகையில் பல அரிய கட்டுரைகளைக் கொண்டு சென்னையிலிருந்து வெளிவருகிறது. பிறமொழிக் கலப்பற்று தனித்தமிழ் அனைத்தையும் வெளிப்படுத்தும் முறைக்கு ஏதுவாக நல்ல சொல்லாராய்ச்சி செய்திகள் இடம் பெறுகின்றன. இவ்வகையில் வெளிவரும் இதழ்கள் வேறு சிலவும் உள. தமிழ்ச் சுடர் என்பது இவற்றுள் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ், தமிழாசிரியர், கணையாழி, தமிழியக்கம், செந்தமிழ், நித்திலக்குவியல் முதலியனவும் சிறப்பான இலக்கிய இதழ்களாகும். புலவர் புகழேந்தி என்பவரால் நடத்தப்பெறும் 'புலவர்' என்ற இதழ் தமிழ் இலக்கியத்தோடு தமிழாசிரியர்களின் இயக்க செய்தியையும் உள்ளடக்கமாகக் கொண்டு வெளியாகிறது. இவை 'இலக்கியத் திங்களிதழ்' எனும் அறிவிப்போடு வெளிவரும் வேறுபல தரமான இதழ்களும் உள. மயில், மலர்கள், மாதுளை, மாலை, நினைவுகள், நிறைமதி, நவீனம், சான்றோர் முரசு, விடிவு, தூரிகை முதலியன அத்தகையன. இலக்கிய இதழ்களுள்ளும் கவிதைக்குயனவாகவே பல இதழ்கள் வெளிவருகின்றன. அவற்றுள் சில மரபுக்கவிதைகளையே கொண்டனவாகவும், சில மரபுக் கவிதைகளுச்கு இடம் அளிப்பனவாகவும் விளங்குகின்றன. இவற்றுள் முல்லைச் சரம், காவியப் பாவை, கவிதை முதலிய இதழ்கள் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளி வருகின்றன வண்ணங்கள், கவியமுது, கவிப்புனல் முதலிய இதழ்களும் கவிதை இதழ்களே.

சென்னையில் திங்கள்தோறும் கடற்கரைக் கவி அரங்கம் நடைபெறுவதுபோல திருச்சியில் பழக்கடைப் பூங்காவில் திங்கள் தோறும் கடைசி ஞாயிறு மாலையில் கவிஞர்கள் கூடித் தம் கவிதைகளை அரங்கேற்றுகின்றனர். அவை சோலைக் குயில்கள் என்ற இலக்கியத் திங்களிதழின் மூலம் படிப்பாளர்க்கு வழங்கப்படுகின்றன. அச்சோலைக் குயில்கள் இசைத்த ராகங்களில் இனிமையானவை பல உள.

''வானம் பார்த்த
இந்திய விவசாயிகள்
இப்போது
அரசியல்வாதிகளின்
வாயைப் பார்த்துக்
கொண்டிருக்கிறார்கள்
இரண்டும்
ஒன்றுதான்
இரண்டுமே
பொய்த்துதானே
போகின்றன...''

இப்போதும் என்ற தலைப்பிலான இக்கவிதை வரிகளைப் போல பல வெளிவந்துள்ளன.

'யாருக்காக இந்த...இந்தியச்சுதந்தரந்தான்?' என்ற தலைப்பிலமைந்த மரபுக் கவிதை மனங்கவர்கிறது. இவற்றோடு

மட்டுமன்றி கவிதா மண்டலம், நிறைமதி, கவிஞன் முதலியவை யும் நல்ல கவிதை இதழ்களாக உலா வெளிவருகின்றன.

பல்சுவை இதழ்கள்:

கலைமகள்—தமிழகத்தில் ஐம்பது ஆண்டு காலமாக மக்கள் அறிந்த ஓர் திங்கள் இதழாக விளங்கி வருவது கலைமகள். இவ்விதழில் பெரும்பாலும் அருளுரை, தொடர்கதை, சிறுகதை, கட்டுரை, கவிதை, மற்றும் சுவைப் பகுதிகள் ஆகியன் அடங்கி யிருக்கும். இவ்வாண்டு கலைமகள் பாரதியார் பற்றி பரந்த அளவில் கட்டுரைப்போட்டி நடத்திப் பரிசுகள் வழங்கியதுடன் சிறந்த கட்டுரைகளை இதழ்களில் வெளியிட்டுச் சிறப்பித் துள்ளது ஓரளவு வாணிபத்தைச் கருத்தில் கொண்டாலும் பிற இதழ்களைப்போல தரம்தாழாது இவ்விதழ் வெளிவருவதை இவ்வாண்டு இதழ்களாலும் அறியலாம். கொட்டிச்சேதம், ஆயா போன்ற கதைகளும், எனமா பூமியா, வாழ்வெனும் மகா நதி போன்ற தொடர்கதைகளும் கலைப் படைப்பின் சிறப்பை அறிவிக்கின்றன. பாரதியைப் பற்றி வந்த கவிதைகளுள் 'வீரத்தைப் பயிர் செய்தாயே' என்பது சுவைக்கத் தக்கதா யிருந்தது.

மஞ்சரி:- கலைமகள் அலுவலகத்திலிருந்து வெளியாகும் மற்றுமோர் இதழ் மஞ்சரி. இவ்விதழில் கதை மட்டுமன்றி நாடகம், வரலாற்றுச் செய்திகள், பல்வேறு செய்திகளைப்பற்றிய கட்டுரைகள், முதலியன கலந்து இடம் பெறுகின்றன. இவ்வாண்டு வந்தவற்றுள் காளிதாசரின் 'மாலவிகாக்னி மித்ரம்' என்ற நாடகம் தமிழாக்கித் தரப்பட்டுள்ளது சிறப்பானதாகும். இதுபோல், வடமொழி தவிர பிற மொழிகளிலிருந்து அவ்வப் போது பல படைப்புக்கள் தமிழில் வழங்கப்படுவது இதன் சிறப்புக் கூறாக விளங்குகிறது. பக்தி தொடர்பான பல கட்டுரை களும் தொடர்ந்து வெளிவருகின்றன.

அமுதசுரபி, குண்டூசி, சுபம், போன்ற சில இதழ்கள் இவ் வரிசையில் எண்ணத்தக்கன. இவை கலை, இலக்கியம், விஞ்ஞானம் முதலிய பல துறைகளைச் சார்ந்த செய்திகளையும் படிப்பாளர்களின் சுவைக்கேற்ப வழங்கி வருகின்றன. இவற்றில் தரமான கவிதைகளும் கட்டுரைகளும் இடம் பெறுவதுண்டு.

'ஓ'! என்ற ஓரெழுத்தையே இதழின் பெயராகக் கொண்டு பல்சுவைத் திங்களிதழ் ஒன்று வெளிவருகிறது. இவ்விதழில் பெரும்பாலும், புதிர்ப் போட்டி, கணிதப் போட்டி, திரைப் போட்டி, பொது அறிவுப் போட்டி, பெண்களுக்கான போட்டி

போன்றவை மிகுதியாக நடத்தப்படுகின்றன, பல நல்ல கவிதைகளும், கதைகளும் அவ்வப்போது வெளியாகின்றன. சான்றுக்கு ஒன்று.

### நேர்மை

"முகவரி இழந்துவிட்ட
இந்த அனாதையை
இப்போது
எங்கு தேடியும்
காணவில்லை
யாராவது பார்த்தால் சொல்லுங்கள்"

இப்படி சிந்திக்க வைக்கும் படைப்புக்கள் இன்னும் பல உள.

**முற்போக்கு இதழ்கள்**

இத்தகு தலைப்பில் சிலவற்றை மட்டும் அடக்குவது எளிதல்ல. பொதுவாக 'முற்போக்கு' என்ற சொல் நற்சிந்தனையுடையோரால் பயன்படுத்தப்பட வேண்டிய ஒன்று. ஆனால் முற்போக்கு என்ற சாயத்தைப் பூசிக்கொண்டு பலர் மக்களிடையே செல்வாக்கு பெற முயல்வதையும் காண முடிகிறது. இதைப் பகுத்துக் காணவேண்டியது படிப்பாளரின் கடமையாகும். இயக்கம் சார்ந்த நிலையிலும், சாரா நிலையிலும் பலர் சீரிய முறையில் சமுதாயச் சிக்கல்களை எடுத்துக் காட்டி விழிப்புணர்வை (social awarness) ஏற்படுத்தி வருகின்றனர். அத்தகையோரின் இதழ்கள் சிலவற்றையேனும் ஈண்டு சுட்டுவது அவசியமாகும். குடிசை என்ற இதழ் மதுரையிலிருந்து வெளியாகிறது. இதில் இடம் பெறும் கட்டுரைகளும், கவிதைகளும் மக்களின் அன்றாட வாழ்வின் துன்பப் பகுதிகளைப்படங்களோடு சித்திரிப்பதாக அமைகின்றன. ஆகஸ்டு-செப்டம்பர் இதழின் வெளியான 'நாஞ்சில் நாடும் உழைப்பவர் நிலையும்' என்ற கட்டுரையும் பல புதுக் கவிதைகளும் படிப்பவர் நெஞ்சைத் தொடுகின்றன.

"அழுகைக்கு
அடர்த்தி இல்லை
ஆமாம்
தொழுகைக்கு எப்படி
உண்மை இல்லையோ
அதுபோல்தான்
அழுகைக்கை அடர்த்தி இல்லை."

என்ற கவிதை வரிகள் நம்மை சிந்திக்க வைக்கின்றன.

திருச்சியிலிருந்து வெளியாகும் இதழ் குமுறும்நெஞ்சம் இவண் குறிப்பிடத்தக்கதாகும். ஆங்காங்கு நடைபெறும் பல சமூக இழிவுச் செயல்களைச் சிறப்பாக ஆராய்ந்து வெளியிடுகிறது இவ் விதழ். 'சிவகாசியில் தொழிலாளர்கள் அவல நிலை', 'ஓ ஜன நாயகமே!' முதலிய கட்டுரைகள் விழிப்பை ஏற்படுத்துகின்றன.

நிஜங்கள், ஆக்கம், எழுச்சி ஆகியஇதழ்கள் இவ்வகையினைச் சார்ந்து மக்களின் வட்டாரச் சிக்கல்களை எடுத்தியம்பி அவற்றிலிருந்து விடுதலை பெற வழி வகுக்கின்றன. 'ஆண்களும் விலையாகிறார்கள்?' என்றஎழுச்சி (மார்ச்) இதழின்கட்டுரையும் 'நிழல் தேடும் மரங்கள்' என்ற கட்டுரையும் சான்றுகளாகும். ஆக்கம் சூன் இதழில் வெளியான 'உழைக்கும் பெண்களும் உழைப்புச் சட்டங்களும்' என்ற கட்டுரையும் 'சமூக நீதி' என்ற தொடர் கட்டுரைப் பகுதியும் பயன் நல்கக் கூடியன.

சென்னையிலிருந்து வெளியாகும் சுட்டி என்ற மாத இதழ் கிடைத்த இதழ்களுள் அளவில் சிறியதாயினும் தரத்தில் சிறந்த படைப்புக்களோடு வெளிவருவது இவண் குறிப்பிடத்தக்கது ஆகும்.

### கல்வி இதழ்கள்

'கல்வி' என்ற பெயரைத் தம் இதழ்ப் பெயரில் வைத்துக் கொண்ட இதழ்கள் சில உள. ஆனால் அவையனைத்தும் கல்விக்கே முதலிடம் தருகின்றன என்றும் கூறுவதற்கில்லை, கல்வித் துறைக்கு மிகப் பொருத்தமான கட்டுரைகளையும், மாணாக்கர்களின் பொது அறிவுக்கான செய்திகளையும் மற்றும் அவ்வப்போது சிறந்தபல கவிதைகளையும் கொண்டு வெளிவரும் கல்வியிதழ்களில் பணகுடியிலிருந்து வெளிவரும் 'கல்வி அரங்கம்' சென்னையிலிருந்து வெளிவரும் 'கல்வி உலகம்' ஆகியன குறிப்பிடத் தக்கன.

இவற்றுள் கல்வியரங்கம் ஓர் இருமொழி இதழ். 'ஆங்கிலம்-தமிழ் ஆகிய இருமொழிகளிலும் படைப்புக்கள் இதில் வெளி வருகின்றன. இவ்விதழ் எழுத்துச் சீர்திருத்தத்திற்கு இன்றியமை யாமை அளிக்கிறது. 'புள்ளித் தொல்லை போகும்' என்ற தலைப்பிலான தம் கட்டுரையில் கொண்டல் சு மகாதேவன் அவர்கள் மெய்யெழுத்துக்களைப் புள்ளியின்றி எழுதுவதாலும், அகரம் சேர்ந்த உயிர்மெய் எழுத்துக்களோடு ஒரு குறியீட்டைச் சேர்ப்பதாலும்,பெரும்தொல்லை நீங்கும் என்று கூறி உயிரையும், மெய்யையும் தனித்தனி வடிவங்களால் எழுதும் முறை நல்லது என வலியுறுத்தியுள்ளார். வரலாற்றுத் துறைப் பேராசிரியர்

ராஜு காளிதாஸ் அவர்கள் 'இந்தியாவில் சாதிகளின் வரலாற்றுப் பின்னணி' என்ற தலைப்பில் ஓர் ஆய்வுக் கட்டுரையை எழுதி யுள்ளார் அக்டோபர் நவம்பர் இதழ்களில்.

மேலும், சுவடிப் பதிப்புச் சிக்கல்கள் குறித்து பயன் தரும் ஆய்வுக் கட்டுரை ஒன்றும் வெளிவந்துள்ளது. இவ்வாறு 82-இல் நலம் பயக்கும் கட்டுரைகள் பல நல்ல தமிழில் இவ்விதழில் வெளியாகியுள்ளன.

கல்வி உலகம் என்ற இதழில் பட்ட வகுப்பில் பயில்வோருக் குரிய தமிழகக் கலை பற்றிய பல பாடக் கட்டுரைகளும் இயக்கச் செய்திகளும் வெளியாகியுள்ளன.

**கல்வி மறுபக்கம் கண்ணோட்டம்:**

இவ்விதழ் தமிழ்நாடு தனியார் பள்ளி ஆசிரியர் சங்க மாத இதழாகும். ஒரு சாதாரண நாளிதழின் அரைப்பக்க அளவில் இம்மாத இதழ் செய்தித்தாள் போலவே வெளிவருகிறது. இதில் அவ்வாசிரியர்களின் இயக்கச் செய்திகட்கே முன்னுரிமை அளிக்கப்பட்டுள்ளதைக்காணலாம். இவர்கள்தமது சிக்கல்களைக் கவிதைகளின் வடிவிலும் வெளிப்படுத்தியுள்ளனர்.

**காளை:**

இவ்விதழின் பெயரில் 'கல்வி' இல்லையாயினும் 'கிராமியக் கல்விக்கான கருத்துப் பெட்டகம்' என்றஅறிவிப்போடு இவ்விதழ் வெளியிடப்படுகிறது. மதுரையிலிருந்து வெளிவரும் இவ்விதழின் முகப்பில் பொன்முடியார் பாடிய

''களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''

என்ற வரி எல்லா இதழ்களிலும் காணப்படுகிறது. ''சமத்துவ சமுதாய நீதிகளைப் பற்றி மக்களைச் சிந்திக்க வைப்பதற்காக வருகிறான், ''காளை'' என அறிமுகப்படுத்தப்பட்ட இவ்விதழ் முறையான வாழ்வியல் கல்வியை நோக்காகக் கொண்டு வெளி வருகிறது.

இவ்விதழின் பலபகுதிகளிலும் தனியாராலும் அரசினராலும் இழைக்கப்படும் சமூகக் கொடுமைகள் மக்களுக்கு எடுத்துக் காட்டப்படுகின்றன. சமூகத்தில் பெண்கள் நிலை, தொழிலாளர் வாழ்க்கை போன்றவை குறித்து ஆராய்ந்து கட்டுரைகள் எழுதப் படுகின்றன. சிறு பத்திரிகைகள் நிலை பற்றியும் ஒரு கட்டுரை எழுதப் பெற்றுள்ளது. இதுபோன்ற இதழ்கள் பலவும் மொழியை விட வாழ்வியலுக்கே சிறப்பிடம் தருவது எண்ணிப் பார்க்கத் தக்கது.

இன்னும் இவ்வரிசையில் முன்னிற்கும் இதழ்களாகக் கல்வி, அறிவுக் கூர்வாள் போன்ற இதழ்களைக் குறிப்பிடலாம். இவ் விதழ்களில் இலக்கிய விளக்கங்களும், சிந்தனைக் கட்டுரைகளும் வெளிவருகின்றன.

**கலைக்கதிர்**: கோவையிலிருந்து பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவரும் இவ்விதழ் ஓர் அறிவியல் (Science) சார்ந்த திங்களிதழ் என்றாலும் இது வளர்ந்து வரும் விஞ்ஞான வளர்ச்சிகளை நன்கு வெளிப்படுத்தும் ஏடாக இருப்பதாலும் அறிவியல் துறையில் உள்ளோர்க்குப் பயனளிக்கும் பல அரிய கட்டுரைகளை வெளியிடுவதாலும் இதனை இப்பிரிவில் அடக்க லாம். 82இல் வெளியான கலைக்கதிர் இதழ்களில் மின்னணுவியல் (Electronics) பற்றிய பல கட்டுரைகளும் வானியல் ஆய்வுக் (Space research) கட்டுரைகளும், சில இலக்கியக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

விஞ்ஞானச் சுடர் என்ற ஏடும் இவ்வகையில் பணியாற்றி வருகிறது. உழவியல் கல்வியை விஞ்ஞான முறைப்படி அளிக்கும் ஏடாக வெளிவருவது விஞ்ஞான விவசாயம் என்பதாகும்.

யுனஸ்கோ நிறுவனத்தின் வாயிலாகத் தமிழில் வெளிவரும் திங்களிதழ் கூரியர் என்பதாகும். இதன்கண் எண்ணரிய கலை இலக்கியச் செய்திகள் பல நாடுகளிலிருந்தும் திரட்டப்பெற்று அளிக்கப் பெறுகின்றன. கலை, பண்பாடு போன்றவற்றின் கலப்பிற்கு வழி வகுக்கும் ஓர் இதழே இது எனலாம்.

மருத்துவத் துறை சார்ந்த அடிப்படைக் கல்வியை அளிக்கும் ஏடுகள் சில உள. 'ஹோமியோபதி' என்ற பெயரில் கும்பகோணத் திலிருந்து வெளிவரும் இதழ் அம்மருத்துவக் கல்வியைத் தனிப் பயிற்சியாக மேற்கொள்வோருக்குப் பெரும் பயன் நல்குவதாய் அமைந்துள்ளது. இதைப் போல் மூலிகை மருத்துவக் கல்வியை அளிப்பதாய் மூலிகை மணி என்ற ஏடு வெளிவருகிறது. நல்வழி என்ற இதழையும் இவ்வகையில் குறிப்பிடலாம். இவ்வாறு பல்வேறு துறைகளிலும் கல்விப் பணியாற்றும் இதழ்கள் மேலும் சில உள.

**சமய இதழ்கள்:**

தமிழகத்தில் வெளிவரும் ஏடுகளில் சுமார் பத்து விழுக் காட்டளவிற்குச் சமய இதழ்கள் இடம் பெறுகின்றன எனலாம். சமயம் இதழ்கள் எனும் இத் தலைப்பு பலசமயங்களையு உள்ளடக்கியதே. இந்து, முகமதியம், கிறித்தவம் ஆகியவற்றைச் சார்ந்த இதழ்கள் பற்பல நடைபெறுகின்றன. தமிழக அரசே இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் மூலம் திருக்கோயில்

என்ற இதழை நடத்துகிறது. இது தவிர தமிழகத்தில் உள்ள திருமடங்கள் பலவும், தனியார் சிலரும் சமய இதழ்களை நடத்து கின்றனர். ஞான சம்பந்தம், குமரகுருபரர், அமுதம், கடவுள், மக்கள் சிந்தனை, ஞானபூமி, சப்தகிரி முதலியனவற்றை இத் தலைப்பில் அடக்கலாம். இவை தவிர, சைவசித்தாந்தப் பெரு மன்றம் சித்தாந்தம் என்ற ஓரிதழையும் நடத்துகிறது.

அப்போஸ்தல எதிரொலி, ஏல்பெத்தேல் செய்திகள் போன்ற கிறிஸ்துவ சமயத்தைச் சார்ந்த இதழ்களும், முஸ்லீம் மறுமலர்ச்சி, குர்ரானின் குரல், இஸ்மி போன்ற முகமதிய சமயத்தைச் சார்ந்த இதழ்களும், அனுவிரதம், முக்குடை போன்ற சமணசமயத்தைச் சார்ந்த இதழ்களும் தமிழில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

திருக்கோயில் இதழ்களில் சைவசமயக் கட்டுரைகளும் வைணவ சமயக் கட்டுரைகளும் தரம் வாய்ந்தனவாக வெளி வருகின்றன. பொதுவாக இவை சாத்திர மற்றும் தோத்திர நூல்களுக்கு விளக்கம்தருகின்றன. சமய இலக்கிய பகுதிகளுக்குத் திறனாய்வுப் போக்கு உடையதாக விளக்கக் கட்டுரைகள் பெரியோர் பலரால் எழுதப்படுகின்றன. சில இதழ்களில் இலக்கியம், கல்வெட்டு, கலைகள் முதலிய குறித்தும் கட்டுரைகள் இடம் பெறுகின்றன. பெரும்பாலும் இதழ்களின் முன்னட்டைகள் ஒரு திருக்கோயில் கோபுரத்தைச் சித்திரிப்ப தாகவும், பின் அட்டை அறநிலையத் துறையின் தலைவர்களும், சமயத் தலைவர்களும் கலந்து கொண்ட விழாப் புகைப்படங் களோடும் வெளிவருகின்றன. 82-இல் சுமார் நூறு கட்டுரைகள் திருக்கோயிலில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் கோயில்களை பற்றிய கட்டுரைகளும், சமய ஒப்பீட்டுக் கட்டுரைகளும் அறிவிய லோடு ஆன்மீகத்தைத் தொடர்புறுத்திக் கூறும் பகுதிகளும் அனைவரும் அறியத்தக்கன.

குமரகுருபரர், ஞனசம்பந்தம் ஆகிய இதழ்கள் திருமடங்களி லிருந்து வெளிவருதலான் அவ்வித்திருமட முதல்வர்களின் வரலாற்றையும், அருளிச் செயல்களையும் போற்றி கட்டுரைகள் பல வருகின்றன. மேலும் சமய நூற் செய்திகளைத் தாங்கிய பல விளக்கமுறைக் கட்டுரைகளும் இடம் பெறுகின்றன.

மக்கள் சிந்தனை என்ற இதழ் குன்றக் குடி ஆதீனத்திலிருந்து வெளிவரினும் முந்தையவற்றிலிருந்து தனித்த போக்கினதாய் அது அமைந்துள்ளதைக் காண முடிகிறது. சமயப் பணியோடு மக்கட் பணியையும் உணர்த்தும் வகையில் குறள் நெறி காட்டும் ஏடாக அது வெளிவருவது குறிப்பிடத் தக்கது.

**அமுதம்** என்ற ஏடு சிரவணபுரம் கௌமார மடத்திலிருந்து வெளிவருகிறது. இதில் கௌமார நெறி சார்ந்த பல கட்டுரைகள் இலக்கிய நயங்களுடன் புலப்படுத்தப் படுகின்றன.

**ஞானபூமி** என்ற இதழ் இதயம் பேசுகிறது பத்திரிகை அலுவலகத்திலிருந்து அனுபவம் பெற்ற ஆசிரியரால் வெளியிடப் பெறுகிறது. மிகுந்த செலவில் பல வண்ணப் புகைப்படங்களாக திருக்கோயில்களையும், சமயப் பெரியோர்களையும் வாசகர்கட்குக் காட்டி இனிய செய்திகள் பலவற்றைச் சுவையாக வெளியிட்டு வருகிறது.

கிறித்துவம், முகமதியம், சமணம் போன்ற பிற சமய ஏடுகள் எளிமையாகவும், ஆனால் அடிப்படையான தம் சமயக் கருத்துக்களை எளிதில் உணர்த்தும் முறையிலும் வெளியிடப் படுகின்றன. இவைதவிர **சித்தாந்தம், தர்மசக்கரம், பொதுமறை,** முதலிய இதழ்கள் அதிக விற்பனை இல்லையாயினும் நற்கொள்கைப் பரப்பும் அறவுணர்வோடு சில நிறுவனங்களால்தொடர்ந்து நடத்தப் பெறுகின்றன.

**இயக்க இதழ்கள்** எவ்வகைப் பட்டச் சமுதாயத்திலும் குறைபாடுகள் புரையோடி, வளரும் காலக்கட்டத்தில் அவற்றை நீக்குவதற்குக் கருத்துப் புரட்சிகள் தோன்றாமல் இராது. அத்தகு புரட்சிகள் மக்களைச் சென்றடைய மிகவும் பயன்படும் கருவிகளுள் இதழ்கள் குறிப்பிடத்தக்கன. இயக்கக் கருத்துகள் இதழ்களின் வாயிலாகப் பரப்பப்படுகின்றன. அவ்வியக்கங்கள் அரசியல் சார்ந்திருக்கலாம், சமயம் சார்ந்திருக்கலாம், தனிப்பட்டவர்களிடமிருந்தும், தொண்டு நிறுவனங்களிடமிருந்தும் அவ்வியக்கங்கள் வேகம் பெருவதுண்டு. தமிழகத்தின் சாபக்கேடு போலும், இங்கு சாதி இன இயக்கங்கள் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றன! இவ்வியக்கங்களின் சார்பில் எண்ணற்ற திங்களிதழ்கள் சமுதாயத்தில் உலவுவதையும் காண முடிகிறது.

அரசியல் கட்சி சார்ந்த ஏடுகளில் **தாமரை, செம்மலர், மன ஓசை, சிகரம்** முதலிய இதழ்களைக் குறிப்பிடலாம். இவை மார்க்சியக் கருத்துக்களை உள்ளடக்கமாகக் கொண்ட படைப்புகளை வெளியிடுகின்றன. பல்சுவை ஏடுகளைப் போலன்றி இவை பாலுணர்வு கலவாத, கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டாத வகையில் கதைகளை வெளியிடுகின்றன. அரைகுறை உடைகளோடு கூடிய பெண்களின் படங்களை இவற்றில் காண்பது அரிது. மாறாக, சமூகப் பிரசினைகள் பலவற்றை அலசி ஆராய்கின்றன; செம்மலர் டிசம்பர் மாதத்தில் 'பாரதி—திரு. வி. க, சிறப்பு மலர்' வெளியிட்டுள்ளது. அவ்விதழ் பல சிறந்த ஆய்வுக்

கட்டுரைகளைத் தாங்கிவந்திருப்பதைக் காணலாம். எழுத்தாளர் சு. சமுத்திரம் அவர்களின் 'சத்திய ஆவேசம்' என்ற தொடர் கதை சிகரம் இதழில் சில அத்தியாயங்கள் வெளிவந்து பின்னர் இது செம்மலரில் இடம் பெற்றுள்ளதையும் காண முடிகிறது. சிந்திக்கத் தூண்டும் பல புதுக் கவிதைகள் சிகரத்தில் வந்த வண்ணமிருக்கின்றன.

'தாய் மண்' என்ற இதழும் ஓர் அரசியல் இயக்கம் சார்ந்த இதழ்தான். அதன் ஆசிரியர் கவிஞர் அருமைநாதன் தாம் சார்ந்துள்ள அரசியல் கட்சியைச் சார்ந்த தலைவர்களைப் பற்றிய செய்திகளையும், யாப்போடு கூடிய கவிதைகள் பலவற்றையும் வெளியிட்டு வருகிறார். 'செந்நீர்' என்ற இதழ் ஜனதா கட்சி சார்ந்த திங்கள் இதழாக வெளிவருகிறது.

'அறிவு வழி' என்ற இதழ் பகுத்தறிவு சமதர்ம இயக்க ஏடாக சென்னையிலிருந்து வெளிவருகிறது. இதன் சிறப்பாசிரியராக நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் உள்ளார்கள். சாதி, மதம், இனம், நிறம், மொழி ஆகியவற்றால் வேற்றுமையற்ற, பொருளாதார வேறுபாடுகள் அற்ற நாத்திகப் பொதுவுடைமை அரசை நிறுவுவதையே நம் நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் வெளியிடப்படுகிறது. பகுத்தறிவு சமதர்ம இயக்கச் செய்திகள் பலவும் இதில் இடம் பெறுவதோடு திரு நெ. து. சு. வின் 'பெரியாரும் சமதர்மமும்' என்ற நீண்ட கட்டுரைத் தொடரும், மற்றும் 'விஞ்ஞான சமூகப் பொதுமை முறையா?' என்ற ஒரு கட்டுரைத் தொடரும் மேலும் பல கவிதைகளும் இவ்விதழ்களில் இடம் பெற்றுள்ளன.

'அறிவியக்கம்' என்ற இதழ் திரு. சாலை. இளந்திரையனைச் சிறப்பாசிரியராகக் கொண்டு வெளிவருகிறது. நாத்திகக் கொள்கையைச் சார்ந்த செய்திகளும், சிந்தனையைத் தூண்டும் பல கட்டுரைகளும் கவிதைகளும் இதில் வெளியாகின்றன. பெரியாரின் எழுத்து மாற்ற வடிவங்களைத் தொடர்ந்து இவ்விதழ் பின்பற்றுகிறது. ஐகாரம் 'அய்' என்றே எல்லா இடங்களிலும் குறிக்கப் பெறுகிறது.

இயக்கங்கள் பல விதம். சாதி, இன இயக்கங்கள் பலவும் தத்தம் இன ஒற்றுமைக்காகவும், வளர்ச்சிக்காகவும் பற்பல இதழ்களை நடத்தி வருகின்றன. தமிழ்நாடு மலைக் குறவர் சங்கம் 'வள்ளி மலர்' என்ற பெயரில் ஓரிதழை நடத்தி வந்தது. பின் அப் பெயரை 'நம்பி ராஜன்' என மாற்றிக் கொண்டு வெளியிடுகிறது. 4 பக்கங்களில் வெளிவரும் இவ்வேடு ஒரு

செய்தி ஏடாகவேத் திகழ்கிறது. அச்சங்கத்தின் பல்வேறு கிளை அமைப்புகளின் செய்திகளே இதில் இடம் பெறுகின்றன.

ஒடுக்கப்பட்ட சிறுபான்மையோர் இதழாக 'தலித் குரல்' என்ற ஏடு வெளிவருகிறது. தாழ்த்தப்பட்டவர்களின் நலனுக்கான செய்திகளை இது தொடர்ந்து வெளியிடுகிறது. 'உரிமை' என்ற இதழும் இவ்வகையில் திருச்சியிலிருந்து வருகிறது.

மீனவன், செங்குந்தமித்திரன், கருணீகர் நல்வாழ்வு, பார்க்கவன் தூது, குலமுரசு இப்படி எத்தனையோ இதழ்கள் இனச் சார்பு ஏடுகளாக வெளிவந்து கொண்டுள்ளன.

**மாணவரிதழ்கள்:** மாணவர்கள் சென்ற சில ஆண்டுகளாகவே இதழியல் துறையில் துடிப்புடன் செயலாற்றி வருகிறார்கள். மாணவர்களின் சமுதாயத்திற்கான மாணவர்களாலேயே பல இதழ்கள் நடத்தப்பட்டன, நடத்தப்படுகின்றன.

திருப்பத்தூர் தூய நெஞ்சக் கல்லூரியிலிருந்து **நெஞ்சம்** என்ற இதழ் வெளிவருகிறது. நல்ல சிந்தனை வளத்துடன் கூடிய இலக்கியப் படைப்புக்கள் பல அதில் வெளிவருகின்றன.

சென்னை பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் சிலர் **பார்வைகள்** என்ற இதழை நடத்தினர். திருச்சி நகரிலிருந்து **சுழல்** என்ற இதழ் மாணவர்களால் வெளியிடப்படுகிறது.

திருச்செந்தூரில் உள்ள கல்லூரிமாணவர்களால் **கலைச்சங்கு** என்ற இதழ் நடத்தப்பெறுகிறது. சிந்தனையோட்டம் நிறைந்த படைப்புக்கள் பல இதில் இடம் பெற்றுள்ளன. காரைக்காவிலிருந்து **'இருளுக்குளிலிருந்து'** எனும் பெயருடன் மாணவரிதழ் ஒன்று வெளிவருகிறது. மேலும், **தேன்மழை** என்ற இதழ் சமுதாய உணர்வு மிக்க மாணவர்களால் சென்னையிலிருந்து நடத்தப் பெறுகிறது. **சிறகு, ஸ்வரம்**முதலிய இதழ்களையும்இவ்வரிசையில் சேர்க்கலாம்.

**இளைஞர் இதழ்கள்:** இப்பெயர் மாணவர்கள் மட்டும் அல்லாமல் எல்லா இளைஞர்களையும் குறிக்கும் வகையில் உள்ளது. காஞ்சியிலிருந்து வெளிவரும் **பாலம்,** பெங்களூரிலிருந்து வெளிவரும் **பிருந்தாவனம்** போன்ற இதழ்கள் துடிப்போடு நடத்தப் பெறுகின்றன. மற்றும் **வால், நாம், தீர்ப்பு, சுழல், சிம்லா** முதலிய இதழ்களை இப்பட்டியலில் இணைக்கலாம்.

**மகளிர் இதழ்கள்:** பெரும்பாலான திங்கள் இதழ்கள் ஆண், பெண் இருசாராருக்கும் பொதுவானதாகவே வெளிவர, பெண்கட்கு மட்டும் உரியதென சில இதழ்கள் வெளியாவதையும் காண முடிகிறது. இவற்றுள் சென்னையிலிருந்து வெளியாகும் **பெண்**

விடுதலை என்ற இதழ் முற்போக்கு எண்ணம் கொண்டோரால் பெண்கள் நலம் காக்கும் இதழாக வெளிவருகிறது. தனிப்பட்ட வகையில் இஸ்லாமியப் பெண்கட்கு என்று நர்கீஸ் என்ற இதழ் நடைபெறுகிறது. இவை தவிர பலரையும் கவரும் வண்ணம் மங்கை, மங்கையர் மலர் போன்றவை இயங்கி வருவதையும் காணலாம். பெண்பால் என்ற பெயரில் ஓரிதழ் மகளிர்ப் பகுதி களுடன் வெளிவருகிறது.

**தொழிலாளர் இதழ்கள்:** ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு உழவும் தொழிலும் செழித்திருப்பது அவசியம். இந்நிலையில் இத் தொழில் செய்வோர் நலம் பெறல் இன்றியமையாததாகும். இவர்களின் நலம் காக்கும் ஏடுகளாகப் பல வெளிவருகின்றன. அவற்றுள் பெரும்பாலானவை தொழிற்சங்க ஏடுகளாகவும், சில தனிப்பட்டோர் நடத்துவனவாகவும் உள்ளன.

**அச்சகத் தொழிலாளி** என்ற இதழ் சென்னையிலிருந்து 82 ஜனவரி முதல் தொடங்கப்பட்டு வெளி வருகிறது. அச்சகத் தொழிலாளர்களின் சங்கச் செய்திகளே இதில் மிகுதியும் வெளி வருகிறது. மிகக் குறைவான ஊதியம் பெறும் அவர்களின் நிலை மையை எடுத்துரைத்து பணிக்கு ஏற்ற ஊதியம் பெறவேண்டிய ஆவசியத்தை அனைவர்க்கும் உணர்த்துவதாகக் கட்டுரைகள் வெளியாகின்றன. தமது கோரிக்கைச் செய்திகளைத் தெளிவாக அச்சகங்கள் நடத்துவோர் செவிகளில் எட்டுமாறு செய்கின் றனர்.

**தையல் கலைஞன்** என்ற திங்களிதழ் சென்னையிலிருந்து அழகிய தோற்றத்தோடு கூடியதாக வெளிவருகிறது. தையல் கலைஞர்கள் (Tailors) சங்கச் செய்திகள் இதில் இடம் பெறுவ தோடு மட்டுமன்றி ஆண்களுக்கும் பெண்களுக்குமான உடைகள் தைக்கும்முறைகளை வரைபடங்களோடு பயில்வோருக்குக்கற்பிக் கின்றது. தையற் பயிற்சி நிலைய ஆசிரியர்கள் பலரைக்கொண்டு நல்ல கட்டுரைகளை எழுதச் செய்தும் அவ்வப்போது வெளியிடு கின்றனர்.

**பாட்டாளித் தோழன்** என்ற ஏடு தொழிலாளர் நலம் காக்கும் ஏடாக மலர்ந்துள்ளது. ஊர்திகளில் பணிபுரியும் அலுவலர்கள், தங்கள் பிரச்சினைகளைக் கூறித் தீர்வு காண்பதற்கேதுவாக போக்குவரத்துத் தொழிலாளி என்றோர் இதழை நடத்துகின்ற னர். தமிழ்நாடு மின்சார வாரிய ஊழியர்கள் மின் காசாளர் என்ற இதழை வெளியிடுகின்றனர். துறைமுகத்தில் சரக்குகளை ஏற்றி இறக்கும் பணிகளைச் செய்வோர் 'ஹார்பர் தொழிலாளி' என்ற பெயரில் தம் சங்க இதழ் ஒன்றை நடத்தி வருகின்றனர்.

இவை மட்டுமன்றி சங்கத்தின் ஏடாக தொழிற்சங்கச் செய்தி வெளிவருகிறது. சி. ஐ. டி. யு. செய்தி, என். ஜி ஒ குரல் முதலிய பெயர்களிலும் அரசாங்க அலுவலர்கள் தம் தொழிற்சங்க ஏடுகளை நடத்தி வருகின்றனர்.

**அரசு இதழ்கள்:** தமிழ்நாடு அரசு பல்வேறு துறைகளின் சார்பாகத் திங்களிதழ்கள் சிலவற்றை நடத்தி வருகின்றன. முன்பு குறிப்பிட்டிருந்த 'திருக்கோயில்' என்ற இதழ் மட்டுமன்றி குடும்பநலச் செய்திக் கதிர் என்றோர் இதழை அரசு நடத்தி வருகிறது. அரசு மேற்கொள்ளும் குடும்பநலத் திட்ட நிகழ்ச்சிகள், மற்றும் நலவாழ்வுக்கான கட்டுரைகள் போன்றவை இதில் இடம் பெறுகின்றன.

இவை தவிர விவசாயிகளுக்குப் பயனளிக்கும் வகையில் 'வளரும் வேளாண்மை' என்ற இதழ் நவீன உழவியல் முறைகளை வெளிப்படுத்துவதாய் திங்கள்தோறும் வெளிவருகின்றது. மற்றும் கூட்டுறவு, கூட்டுறவுச் செய்தி மலர் போன்றவை கூட்டுறவு அமைப்புகளின் ஆக்கச் செயல்களை எடுத்துக் காட்டுவனவாகவும், கூட்டுறவின் முக்கியத்துவத்தைமக்கட்கு உணர்த்துவனவாகவும், நடைபெறுகின்றன. அரசாங்க இதழ்களில் பொதுவாகக் காணப்படும் ஒரு பண்பு யாதெனில் அரசியலாரும், அதிகாரிகளும் பங்குபெறும் விழாக்கள் பற்றிய செய்திகள் பல புகைப் படங்களோடு வெளிவருகின்றன. அரசாங்கச் சாதனைகள் மக்களுக்கு விளம்பரப் படுத்தப்படுவதை இவற்றால் நன்கு அறியலாம்.

**உடலியல் இதழ்கள்:**

உடல்நலம் பேணும் திங்களிதழ்கள் பல தமிழகத்தில் வெளிவருகின்றன. கல்வி பற்றிய இதழ்கள் என்ற தலைப்பில் முன்பு குறிப்பிட்ட மூலிகை மணி, ஹோமியோபதி முதலிய இதழ்களோடு வேறு சில இதழ்களும் உடல்நலம் காக்க எழுந்தன. ஆரோக்கியம் என்ற இதழ், சுற்றுப்புறச் சுகாதார முறைகளோடு வாழ வேண்டியது பற்றியும், உடலுக்கு எவ்வெச் சத்துக்கள் குறைவதால் எவ்வெந்நோய்கள் வருகின்றன என்பது குறித்தும் மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

'சத்துணவு' என்ற இதழ் ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டிய வைட்டமின்களுக்குத் தக்க உணவுப்பொருள்கள் பற்றியும் அவற்றை எந்த அளவு கொள்ள வேண்டும் என்பது குறித்தும் தெரிவிப்பதோடு மட்டுமன்றி, பிற உடல்நலப் பாதுகாப்பு முறைகளையும் எடுத்தியம்புகிறது. இவ்வகையில் சுகவழி என்ற இதழும் பணியாற்றுகிறது.

**மருத்துவ மஞ்சரி, மருத்துவ முரசு** போன்ற இதழ்கள் நம் சித்தமருத்துவ முறைகளை மக்கட்கு அறிவித்து வருகின்றன. ஊட்ட உணவின் பற்றாக்குறைவினால் மட்டுமன்றி பிறவற்றால் நமக்கு நேரும் நோய்களும் அவற்றைத் தீர்க்கும் முறைகளும் குறித்தும் இவ்விதழ்கள் பல நல்ல செய்திகளை எளிய முறையில் வெளியிட்டு வருகின்றன.

**கணியர் இதழ்கள்:** இயற்கையில் அமைந்துள்ள **நாள் மீன், கோள் மீன்** ஆகியவற்றின் இயக்கங்களைக் கண்டறிந்து அதற்கேற்ப உலகில் ஏற்படும் மாறுதல்களைக் கணித்துரைக்கும் வல்லுநர்களைத் தமிழுலகம் **கணியர்** என்றழைத்து வந்துள்ளது. தற்காலத்தில் சோதிடக் கலை என்றழைக்கப் பெறும் அத் தொழில் சார்ந்த இதழ்கள் பல தமிழில் வெளிவருகின்றன. அவற்றுள் அவ்வந்நாள் மீன்களுக்கு (நட்சத்திரம்) உரியோர்க்குரிய பலன்களைக் குறித்தும், ராசிகளுக்குரிய பலன்களைப் பற்றியும் தொடர்ந்து செய்திகள் வந்தவண்ணமுள்ளன. இவை தவிர **ஆண்டின் பலன்கள்,** கிரக மாற்றங்களும் அவற்றிற்கேற்ப மேற்கொள்ள வேண்டிய செயல்கள் குறித்தும் குறிப்புகள் தரப் படுகின்றன. இத்தகு ஏடுகளில் தனிப்பட்டோரின் பிறப்புக் குறிப்புகளைக் குறித்து வரும் வினாக்களுக்கு உரிய விடைகளும் அளிக்கப்படுவதைக் காண முடிகிறது. **பொய்யாமொழி, மாத ஜோதிடம், முருகு ஜோதிடக்கலை, வாணி ஜோதிடம், ஜோதிட நண்பன், ஜோதிஷ' கலைமணி** ஆகிய இதழ்கள் இவ்வரிசையில் இடம் பெறுகின்றன.

**திரைப்பட இதழ்கள்:**

வளர்ந்து வரும் நாகரிக உலகில் மிகுந்த சக்தி வாய்ந்த கலைக் கருவியாகத் திகழ்வதாகிய திரைப்படத் துறையைச் சார்ந்த இதழ்கள் பல வெளியாகின்றன. பிற இதழ்களைவிட இவை விற்பனையிலும் சற்று முன்னிற்பதைக் காண முடிகிறது. பெரும்பாலும் இவ்வகையைச் சார்ந்த எல்லா இதழ்களும் செய்திகளைப் படங்களோடு அச்சிட்டுப் படிப்பாளரைக் கவர்கின்றன. திரைப்படத்துறை கலைஞர்களைப் பற்றிய செய்திகளையும், திறைபடத் திறனாய்வுகளையும், தொழில் நுணுக்கக் கருத்துக்களையும் கொண்டு வெளிவரும் இவ்விதழ்கள் இளைய தலைமுறையிடம் மிகுதியும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன.

**கலைப்படம், திரைக்கதிர், சினிரமா, திரைக்கதிர், பேசும்படம், பொம்மை, பிலிம் ரோல், பிலிமாலயா** போன்ற இதழ்கள் இவ்வகையைச் சார்ந்தனவாய் வெளிவருகின்றன.

மேற்கண்ட வகைகளைத் தவிர பிற துறைகளைச் சார்ந்தும் ஓரிரு இதழ்கள் ஆங்காங்கு வெளிவந்து கொண்டிருக்கின்றன. சிறுவர்களுக்கான இதழ்கள் சில உள. அம்புலிமாமா, பாலமித்ரா, தமிழ்ச்சிட்டு போன்றவை எளியமொழியில் இனியகதைகளையும் பாடல்களையும் தருவனவாய் அமைகின்றன.

யோகாசன ஆலய விஜயம், விளையாட்டுக் களஞ்சியம், வரிச் செய்தி போன்ற இதழ்கள் தனித்தனித் துறைப் பற்றியனவாய் வெளிவரும் சில இதழ்களாகும்.

'ஊற்று, பிருந்தாவனம்' போன்ற இதழ்கள் தமிழகத்துக்கு வெளியேயிருந்து வெளியாகும் திங்களிதழ்களாகும். சில வெளி மாநிலங்களிலிருக்கும் தமிழ்ச் சங்கங்களாலும், சில இளைஞர் களாலும், சில தனிப்பட்டவர்களாலும் நடத்தப் பெறுகின்றன.

ஈழச்செய்தி, மக்கள்மறுவாழ்வு போன்ற இதழ்கள் வெளிநாடு களில் உள்ளதமிழர்பற்றியும்,வெளியிலிருந்து தாயகம் திரும்பிய தமிழர்கள் பற்றியும் வெளிவரும் நலங்காக்கும் ஏடுகளாகும்.

மேற்கண்ட பற்பல வகையான திங்களிதழ்களை ஆராய்ந்து காண்கையில் சில உண்மைகள் புலனாகின்றன. தமிழில் வெளி யாகும் இவ்விதழ்களில் பொதுவான பல்சுவை இதழ்கள்தாம் எண்ணிக்கையில் மிக்கு விளங்குகின்றன. இவற்றுள் எல்லா இதழ்களுமே படைப்பிலக்கியங்களுக்கு இடம் அளிக்கின்றன என லாம். இலக்கியஇதழ்கள் இரண்டாவதுஇடத்தைப்பெறுகின்றன. ஈண்டு இலக்கியம் என்ற சொல் கவிதை இதழ்களையும் உள்ளடக்கியதாகவே கையாளப் பெறுகின்றது. இலக்கிய இதழ் களில் இலக்கிய விளக்கங்கள், ஆய்வுரைகள், புதிய படைப்புக்கள் தவிர, பெரும்பாலும் சமுதாயச் செய்திகளுக்குநேரடியாக இடம் அளிப்பதில்லை.

வெளியாகும் திங்களிதழ்களில் சுமார் ஆறில் ஒருபங்கு இதழ்கள் (17.%)சமயஇதழ்களாக இருப்பதைக் காணமுடிகிறது இந்து சமயத்தைச் சார்ந்த இதழ்களே அவற்றுள் முதலிடம் வகிக் கின்றன. சுமார் நாற்பது இதழ்கள் இவ்வகையில் வெளிவரு கின்றன. முகமதியம், கிறித்துவம் ஆகிய சமயங்களைச் சார்ந் தனவாய் சுமார் 20 இதழ்கள் கிடைக்கின்றன.

தொழிலாளர் இயக்க இதழ்களாகச் சுமார் இருபதும், சாதி (இனம்) இயக்க இதழ்களாக சுமார் இருபதும் வெளிவருகின்றன.

மகளிர் இதழ்கள் தமிழில் குறைவாகவே வெளியாகின்றன. குழந்தைகளுக்கான திங்களிதழ்களும் மிகக்குறைந்த அளவிலேயே வெளிவருகின்றன இளைஞர்களுக்கும், மாணவர்களுக்கும் உரிய

இதழ்கள் சுமார் ஐந்து விழுக்காடு அளவிற்கு நடைபெறுகின்றன. பிற தனித் துறைகளைச் சார்ந்த இதழ்கள் மிகக் குறைநத அளவே உள்ளன. குறிப்பாக அறிவியல் குறித்த இதழ்கள் மிகுந்த எண்ணிக்கையில் வெளிவரவில்லை என்பது நோக்கத் தக்கது.

திங்களிதழ்களின் பெயர்களை நோக்கின் அவை அனைத்தும் தமிழிலேயே இல்லை என்ற உண்மை புலனாகும். மாறாக முழுமையும் ஆங்கிலத்திலோ அல்லது வடமொழியிலோ அமைந் துள்ள பெயர்களும் பல உள. டாப் ஸ்டார், பியூட்டி லைப், மூவிடைம்ஸ், ஜோக்கர், பிலிம் ரோல், செக்ஸ் லைப், மிஸினரி இண்டலிஜன்ஸர், வாய்ஸ் ஆப் இந்தியா போன்ற பல இதழ்ப் பெயர்கள் முழுக்க ஆங்கிலத்திலேயே அமைந்துள்ளதற்குச் சான்றாவன. பாலமித்ரா, தேசோபகாரி, பாஷாபிமானி, ஸ்ரீசங்கர ருபா, சப்தகிரி ஸ்வரம் போன்றவை முழுக்க வடமொழிப் பெயர்கள் என்பதும் நோக்கத்தக்கது. இவை தவிர இருமொழிப் பெயர்களைத் தாங்கிய இதழ்களும் பலஉள. ஹார்பர் தொழிலாளி என்.ஜி.ஓ. குரல் போன்றவை சான்று.

நல்ல தமிழிலேயே பெயரைத் தாங்கியுள்ள இதழ்கள் பல அடிப்படையாயின. சில காரணப் பெயர்களாகவும், உருவகப் பெயர்களாகவும் வேறுசில செயலுணர்த்துவனவாகவும் மற்றும் சில தனியார் பெயருடனும் வெளிவருகின்றன. ஒரு இதழ் மட்டும் 'ஓ!' என்ற ஓரெழுத்துப் பெயருடன் நடைபெறுகிறது. இதுவும் வியப்பைத் தரும் ஏடு எனும் பொருளில் அப்பெயரைத் தாங்கியிருப்பதாகத் தோன்றுகிறது. மோட்டார், லாரி எனும் பெயர்களிலும் இதழ்கள் உள்ளன,

இடம், பொருள், காலம், சினை ஆகியவற்றின் பெயர்களிலும் இதழ்கள் வெளிவருகின்றன. பூக்கடை, மாதுளை, ஏப்ரல், நெஞ்சம் போன்றன முறையே அவற்றுக்கு எடுத்துக்காட்டுகளாகும். இப்படி பல்வேறு அடிப்படையில் பெயர்களைப் பெற்றிருந் தாலும் சுமார் எண்பது விழுக்காடு இதழ்கள் தூய தமிழ்ப் பெயர்களையே கொண்டிலங்குவது மகிழ்வைத் தருகிறது. இது இதழ்களை நடத்துவோரின் தமிழ்ப்பற்றைப் புலப்படுத்த ஒரு சான்றாகும் என்றும் கொள்ளலாம். இதழ்களில் கையாளப் பெறும் தமிழ் நடையும் பெரும்பாலும் மொழிக் கலப்பு அதிக மின்றியே காணப்படுகிறது. ஆயினும் சில இதழ்களில் வெளி யாகும் புதுக்கவிதைகள் பலவற்றில் வடமொழி, ஆங்கிலம் இவற்றின் கலப்பு மிகுந்துள்ளதையும் மறக்க இயலாது.

திங்களிதழ்களில் அரசும், இயக்கங்களும், சமூகப் பணியாற்றும் குழுக்களும் நடத்தும் இதழ்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் தனியார் நடத்தும் இதழ்களின் எண்ணிக்கை அளவில் மிகுந்துள்ளன.

மேலும், வெளியாகும் இதழ்களில் மிகப்பல அதிக விற்பனையில்லாதனவாய் உள்ளன. பொருளாதாரத் தட்டுப்பாடுள்ள இதழ்கள் பல தொடர்ந்து' எல்லா திங்களிலும் வெளிவர இயலாமற் போனதுமுண்டு. சில இதில் ஏழெட்டு மாதங்கட்கு ஒன்றாக வெளிவந்தும் உள்ளன. சுமார் முப்பது விழுக்காடு அளவிலான இதழ்கள் தனிச்சுற்றுக்கு (Private circulation) மட்டும் உரியனவாய் வெளிவருகின்றன. எனவே எல்லா இதழ்களும் எல்லா பகுதிகட்கும் செல்லும் வாய்ப்பு இல்லை. மற்றும் சில இதழ்கள் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு மட்டும் உரியனவாகவே வெளிவருகின்றன. அவற்றை மற்றவர்கள் படிக்க அவசியம் நேர்வதுமில்லை. சான்றாக குரோம்பேட்டை செய்திகள், புதுவைச் செய்திகள், கொங்கு நண்பன் போன்ற இதழ்கள் வட்டாரச் செய்திகளை மட்டும் தாங்கி வருவனவாய் உள.

கல்வி அரங்கம், இங்கும்-அங்கும் போன்ற சில இதழ்கள் இருமொழி இதழ்களாக வெளியாகின்றன. இவற்றில் தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் படைப்புக்கள் வெளிவருகின்றன எனினும், தமிழைவிட ஆங்கிலமே அதிகம் இடம் பெறுவதையும் காணமுடிகிறது. இத்தகு இதழ்கள் மிகச்சிலவே உள.

அச்சாகும் இதழ்களில் 'பிட்நோட்டீஸ் பத்திரிகை' என்ற அறிவிப்புடனும் ஒரு மாத இதழ் வெளியாகிறது. மேலும் மொத்தம் வெளியாகும் இதழ்களில் ஒரு விழுக்காடு அளவு சில இதழ்கள் உருட்டப் பெற்றும் (cyclostyled) அனுப்பப் பெறுகின்றன. பூபாளம், மலர்கள், வழிகள், விடிவு முதலிய இதழ்கள் இத்தகையனவே ஆகும். இவை தரமான இலக்கியப் படைப்புக்கள் பலவற்றைக் கொண்டு வெளிவருகின்றன. இவற்றுள்ளும் பூபாளம் என்ற இதழ் கையெழுத்திலும், உருட்டப் பெற்றும் வெளிவருகின்றது.

**தலையங்கம் :**

வெளியாகும் அனைத்து இதழ்களுமே தலையங்கத்தைப் பெற்றுவருகின்றன என்று கூற இயலாது. சில இதழ்கள் தலையங்கம் இன்றியும் வருகின்றன. தலையங்கப் பகுதியில் பல இதழாசிரியர்கள் நாடு தழுவிய பல சிக்கல்களைக் குறித்து சிந்திக்கத் தூண்டும் தமது கருத்துக்களை எழுதியுள்ளனர்.

நிறைமதி என்ற இதழின் ஆகஸ்டு ஏட்டில் விடுதலை நாள் நினைவாக,

...''பாடுபட்டுப் பெற்ற விடுதலையின் பயன் நீடு நின்று நிலவுகின்றதா என்றால் இல்லை. ஏனெனில் விடுதலைபெற்ற நாம், நம் நாடு—பாரதநாடு என்றெல்லாம் மேடைதோறும் முழங்கி, திட்டங்கள் பலப்பல தீட்டிய, பின் கூட்டிக் கழித்துப் பெருக்கி வகுத்துப் பார்த்ததில் விடையாய் நின்றவை ஊழல், கையூட்டு, வறுமை, தீண்டாமை, பழிபாவத்துக்கஞ்சா நிலையால் ஏற்படும் கொலை, கொள்ளை, கற்பழிப்பு, வரதட்சணைக் கொடுமை ஆகியவையன்றி வேறில்லை.

நமக்கா பொறுப்பு? நாட்டை ஆள்வோருக்கே பொறுப்பு! என்றெண்ணித் தத்தம் வழியில் செல்வோரே, நீர் உண்மையான விடுதலையின் பயனைத் துய்த்திடுவீர்''

என்று வெளியாகியுள்ளது போல மிகப் பல உள்ளன ஆயினும் வேறு சில இதழ் ஆசிரியர்கள் சில சொந்தச் செய்திகளைப் படிப்போருடன் பகிர்ந்துகொள்ளவே இப்பகுதியைப் பயன் படுத்துவதையும் காண முடிகிறது. இதற்குக் காரணம் போதிய அனுபவமற்றோர் சிலர் இத்துறையில் தம் விருப்பம்போல் செயற்பட முனைந்தமையே எனலாம்.

**கவிதை:** சுமார் 15 கவிதை இலக்கிய இதழ்களில் மட்டுமன்றி, பிற இதழ்கள் பலவற்றிலும் கவிஞர்கள் பலர் அரிய படைப் பாற்றல் மிக்க கவிதைகளை எழுதியுள்ளனர். இக்கவிதைகளில் மரபுக் கவிதை, புதுக்கவிதை ஆகிய இரண்டும் அடங்கும் மரபுக் கவிதைகளிலும் பழைய இலக்கியச் சாயல் மிக்கவைபல இயற்றப் பட்டுள்ளன. கவிப்புனல் என்ற இதழின் செப்டம்பர் மாத ஏட்டில் இடம் பெற்ற 'நாணுத்தகவுடைத்து' எனும் தலைப்பி லான கவிதை இதற்குச் சான்று. மேலும் கவிஞர் சமதர்மனின்

''வல்லமையால் பேதமதை வெறுத்தொதுக்கி
வளர்ந்துவரும் சாதிமதம் எடுத்தெறிந்து
எல்லாரும் ஒன்றெனவே சமுதாயத்தில்
எழுச்சி மிகு சமதர்மக் கொள்கை தாங்கி
நல்லதொரு வாழ்வுதனை அமைத்துக் கொண்டு
நாட்டினிலே சமத்துவமாய் வாழுகின்ற
நல்ல உளம் கொண்டிருக்கும் மனிதனைத்தான்
நானென்றும் இப்புவியில் பாடுவேனே''

என்பது போன்று பல்வேறு விருத்தங்களில் அமைந்த கவிதைகள் பலவற்றைக் காணலாம்.

புதுக்கவிதைகள் பல புதிய புதிய நோக்கில் புரட்சிக் கருத்துக் களைச் சிந்துவனவாய் வெளிவந்துள்ளன. 'எழுத்தாளர்கள் ஏமாற்றுகிறார்கள்' என தம்மையே விமர்சனம் செய்து கொள்ளும் வகையிலும் சிலர் எழுதியுள்ளனர்.

''வாழ்க்கைச் சந்தையிலே
எங்கள் வியாபாரம்
எங்களுக்கு
எழுத்துக்களை விற்பதே
வயிற்றுப் பிழைப்பு!
எண்ணங்களை விதைப்பதோ
வெறும் நடிப்பு
.................
.................
உங்கள் பலவீனம்...
அதுவே
எங்கள் மூலதனம்
நாங்கள் கூட
எழுத்தாளர்கள்!
ஏனெனில்
நீங்கள் எல்லாம்
ஏமாளிகள்...'' (குமுறும் நெஞ்சம்)

என்பன போன்ற கவிதை வரிகள் படிப்போர் உளத்தைப் பாதிக்கும் ஆற்றல் வாய்ந்தவை. வாணிப நோக்கில் இதழ்களில் எழுதும் வாடிக்கையாளர்களை உலகிற்கு சரியாய்க் காட்டுவன வாகவும் அமைகின்றன.

கட்டுரை: கட்டுரை இலக்கியம் முன் எப்போதும் இருந்ததை விட அதிக அளவில் இவ்வாண்டு இதழ்களின் மூலம் வளர்ச்சி கண்டுள்ளது எனலாம். இலக்கிய ஆய்வுக் கட்டுரைகள் பல வெளி வந்துள்ளன. 'அகப் பொருளில் ஆய்வு முறை'(இங்கும் அங்கும்—நவ.' 82), 'சந்தப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும்' (தமிழ்ப் பொழில்—82) போன்று எண்ணற்றவற்றைச் சான்று காட்டலாம். அரசியல், மற்றும் சமுதாயச் செய்திகள் பற்றிய கட்டுரைகள் மிகப் பல வந்துள்ளன. 'பீகார் பத்திரிகைமசோதா' (ஆக—செப் 82—குடிசை) 'அலுவலகங்களும் அலைச்சல்களும்' (டிசம்பர்— 82) போன்றவற்றை அதற்கு எடுத்துக் காட்டலாம்.

மொழி பெயர்ப்புக் கட்டுரைகள் பல தமிழில் வெளி வந்துள்ளன. 'நவீன நாடகத்தின் துவக்கம்' (கலாச்சாரம் நவம்பர் 82), 'தடை செய்யப்பட்ட மருந்துகள் தாராளமாய் கிடைக்கிறது' (அக்டோபர் 82) ஆகியன குறிப்பிடத்தக்கன. சமயம், தத்துவம் சார்ந்த கட்டுரைகள் பல வெளிவந்துள்ளன.

ஆயினும் படிக்கும் பருவத்தில் உள்ளவர்களுக்குப் பயன்படும் வகையில் அறிவியற் செய்திகள், அறிவு வளர்ச்சியைத் தூண்டும் கட்டுரைகள், அறிஞர்களின் சிந்தனை மொழிகள், உலகச் செய்திகள் போன்றவற்றைப் பற்றி அலசி ஆராய்ந்து எழுதப் படும் கட்டுரைகள் மிகுந்த எண்ணிக்கையில் வரவில்லை என்பதும் நோக்கத்தக்கது.

**கதைகள்:** வாணிப நோக்கில் வெளியாகும் மக்கள் அறிந்த சில திங்கள் இதழ்கள் தவிர, பிற ஏடுகளில் கதைகளுக்கு முக்கியத் துவம் அளிப்பது குறைவாகவே உள்ளது. கலைமகள், தீபம், அமுதசுரபி, மஞ்சரி போன்ற சில இதழ்களிலேயே தொடர்கதை களும், சிறுகதைகளும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. பிற இலக்கிய இதழ்களில் கூட கதைகள் பெற்றுள்ள இடம் குறைவே யாகும். பிற பருவமுறை இதழ்களைவிட குறிப்பாக வார இதழ் களை விடத் திங்களிதழ்களில் வெளியாகும் தொடர்கதைகளின் எண்ணிக்கை மிகக் குறைவேயாகும். இதற்கான காரணம் பெரும்பாலான திங்களிதழ்கள் மக்கள் வாழ்வியல் சிக்கல்களை எடுத்துக் காட்டுவதிலும் அவற்றை நீக்குதலிலும் மிகுந்த நாட்டம் கொண்டுள்ளமையே எனலாம். இதனால்தான் கதைகள் முன்புபோல் முதலிடம் பெறவில்லை. இருப்பினும் வெளியாகும் கதைகளை உற்று நோக்குகையில் அவை மனிதத் துவக் கோட்பாட்டைச் (Humanism) சார்ந்தே புனையப் பட்டுள்ளதைத் தெரிந்து கொள்ளலாம்.

தாமரை, செம்மலர் சிகரம், முனைவன் முதலான இதழ்களில் வெளிவரும் கதைகள் நூற்றாண்டு விழா காணும் கார்ல் மார்க்ஸின் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே இயங்குவதையும் உணரலாம். உள்ளடக்கிப் போக்குகளை யொழிய உருவத்தில் எவ்வித புதிய சோதனைகளும் இவ்வாண்டு நிகழ்ந்திருப்பதாகத் தெரியவில்லை.

**படங்கள்:** இதழ்களுக்கு வரையும் ஓவியர்களின் படங்கள் கலைமகள், தீபம், முதலிய இதழ்களிலும், தாமரை அமுதசுரபி முதலிய இதழ்களிலும் அதிகம் இடம் பெற்றுள்ளன. சில இதழ் களின் அட்டைப்படங்களே கதைகளுக்கான வரைபடங்களாக அமைந்துள்ளன. (சான்று: செப்டம்பர்—கலைமகள் இதழ்) பெரும்பாலும் எல்லா இதழ்களிலும் அவ்வப்போது புகைப் படங்கள் இடம் பெறலாயின. சில இதழ்களில் ஆசிரியர்களின் புகைப்படங்களொழிய வேறு பலவும் வெளிவந்துள்ளன. குறிப்பாக பல உண்மை நிகழ்ச்சிகள் படங்களோடு படிப்பாளர்க்குக் காட்டப்பெறுகின்றன. இவ்வகையில் குடிசை சுட்டி, எழுச்சி ஆகிய இதழ்கள் குறிப்பிடத் தக்கன.

திரைப்படத்துறை சார்ந்த இதழ்களில் பெரும்பாலான படங்கள் வண்ணங்களிலும் கருப்பு வெள்ளையிலும் வெளிவந்து திரைப்பட ஆர்வலர்களை வெகுவாகக் கவர்கின்றன.

இலக்கிய இதழ்கள் பலவற்றிலும் பெரும்பாலும் படங்கள் ஏதும் இடம் பெறுவதில்லை இதைப்போல் உருட்டப்பெற்ற இதழ்களிலும், கையெழுத்துப் பிரதிகளிலும் வரைபடங்களைக் கூட காண்பது அரிது. பிற இதழ்களில் ஓரளவு தேவையான அளவிற்கு படங்கள் இடம் பெறுகின்றன. ஆனால் பொருளாதாரத் தட்டுப்பாட்டினால் ஐம்பது விழுக்காட்டிற்கு மேலாக இதழ்களில் புகைப் படங்களும், வரைபடங்களும் குறைவாகவே இடம் பெறுகின்றன.

இதைப் போன்றே பல்சுவை இதழ்கள் தவிர்த்த பிற இதழ்களில் விளம்பரங்கள் இடம் பெறுவதும் மிகக் குறைவாகவே உள்ளன. அரசு விளம்பரங்களும் இவற்றுக்கு அளிக்கப்படுவதில்லை. சில வட்டார இதழ்கள் அதிகம் விற்பனையாகவில்லையாயினும் தம் சொந்த செல்வாக்கினால் ஓரளவு விளம்பரங்களை வெளியிடும் வாய்ப்பைப் பெற்று விடுகின்றன. இதழ்களின் வளர்ச்சிக்குப் பொருளாதார அடிப்படையில் விளம்பரங்கள் கிடைப்பதும் அவசியமாகும்.

**செய்திகள்:** பொதுவாகத் தமிழில் திங்கள்தோறும் வெளிவரும் செய்தி இதழ்கள் ஏதும் இல்லை. ஆதலால் பல்துறைகளைச் சார்ந்து வெளிவரும் இதழ்களே செய்திகளுக்கென ஓரிரு பக்கங்களை ஒதுக்குகின்றன. இருப்பினும் இவைகள் துணுக்குச் செய்திகள் (Tit bits) என்ற அளவில்தான் உள்ளன. ஆனால், முற்போக்கு இதழ்களாகவும், கிராமியக் கல்விக்காகவும் வெளியாகும் பல இதழ்கள் சமுதாயத்தில் மக்கள் அன்றாடம் அவதிக்குள்ளாகும் பல்வேறு செய்திகளையும் வெளியிட்டு வருகின்றன. உலக நிகழ்ச்சிகள் குறித்து இவற்றில் காண்பது அரிது.

**தமிழ்நடை:** தனித்தமிழ் இதழ்கள் ஒழிந்த ஏனைய இதழ்களில் பெரும்பாலும் வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிச் சொற்களின் கலப்பைக் காண முடிகிறது. செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில் போன்ற இலக்கிய இதழ்களில் இம்மொழிக் கலப்பைக் காண்பது அரிது.

பிற இதழ்களில் வெளியாகும் கதை, கட்டுரை, புதுக்கவிதை போன்றவற்றில் வடசொற்கலப்பு சற்று அதிகமாகவே உளது. ஆங்கிலச் சொற்கலப்பு கதைகளில் மட்டும் மிகுதியாக காணப்படுகிறது.

மொழி நடையில் அண்மைக் காலத்தில் ஆங்கில மொழித் தொடர்களின் தாக்கத்தை திங்கள் இதழ்களிலும் காண முடிகிறது. நடையியல் (Stylistics) பற்றிய ஆய்வினை இவ்விதழ்களில் அறிஞர்கள் விரிவாக மேற்கொள்வது நல்லது.

## இணைப்பு-I

# திங்களிதழ்கள்....

இணைப்பு-II

## 1982-இல் வெளியான திங்கள் இதழ்கள்:

### (ஆய்வாளர் அறிந்தவை)

1. அகல்விளக்கு
2. அச்சகத் தொழிலாளி
3. அப்போஸ்தல எதிரொலி
4. அப்போஸ்தல தூதன்
5. அம்புலி மாமா
6. அம்பேத்கார்ஸ்ட்ஸ்
7. அம்மன்
8. அம்மா
9. அமுதசுரபி
10. அமுதம்
11. அமுதபாரதி
12. அருங்கொடை
13. அருட்குரல்
14. அரும்பு
15. அல்இஸ்லாம்
16. அறிவியக்கம்
17. அறிவுக் கூர்வாள்
18. அறிவு வழி
19. அறைகூவல்
20. அன்பொளி
21. அன்னம் விடுதூது
22. அன்னை பூமி
23. அன்னையின் அருட் சுடர்
24. ஆக்கம்
25. ஆசிரியர் கூட்டணி
26. ஆத்ம தர்மம்
27. ஆதவன்
28. ஆர்னிகா
29. ஆரம்பக் கல்வி
30. ஆரோக்கியம்
31. இங்கும் அங்கும்
32. இந்தியன் காப்பி
33. இந்தியன் முஸ்லீம் ஹெரால்டு
34. இந்து சமயச் செய்தி
35. இருமலர்
36. இருளுக்குளிருந்து
37. இளந்துறவி
38. இஸ்கஸ்
39. இஸ்மி
40. ஈழச்செய்தி
41. உணர்வுகள்
42. உதயக்கதிர்
43. உதயம்
44. உயிர்மெய்
45. உரிமை
46. உலக இதய ஒலி
47. உழைக்கும் விவசாயி
48. உழைப்பவர் உலகம்
49. ஊற்று
50. எழுச்சி
51. எழுத்தாளன்
52. என். ஜி. ஓ. குரல்
53. ஏப்ரல்
54. ஒலிக்கதிர்
55. ஓ!
56. கடவுள்
57. கடவுளின் பிரதிநிதி
58. கடைசி எக்காளம்
59. கண்டுபிடி
60. கண்ணீர்க் குரல்
61. கணையாழி
62. கருணீகர் நல்வாழ்வு
63. கருணீக மித்திரன்
64. கல்புனா

65. கல்வி
66. கல்வி அரங்கம்
67. கல்வி மறுபக்கம் கண்ணோட்டம்
68. கலாச்சாரம்
69. கலா வல்லி
70. கலைக் கதிர்
71. கலைக் கனல்
72. கலைப் படம்
73. கலைமகள்
74. கவிக்கொண்டல்
75. கவிஞன்
76. கவிதா மண்டலம்
77. கவிதை
78. கவிப் புனல்
79. கவியமுது
80. கற்பகம்
81. காஞ்சிக் கூட்டுறவு
82. காதல்
83 காமன்
84. காயத்திரி
85. காயிதேமில்லத்
86. காவற்கோபுரம்
87. காவியப் பாவை
88. காளை
89. கிராம இயக்கம்
90. கீதாசார்யன்
1. குடிசை
92. குடும்பநல செய்திக் கதிர்
93. குண்டூசி
94. குபேரன்
95. குமரி மலர்
96. குமுறல்
97. குமுறும் நெஞ்சம்
98. குர்ஆனின் குரல்
99. குருசடியின் குரலொலி
100. குரோம்பேட்டைச் செய்திகள்
101. குலமகள்
102. குலமுரசு
103. குறளியம்
104. கூட்டுறவு
105. கூட்டுறவுச் செய்தி மலர்
106. கேள்விகள்
107. கைத்தறி
108. கொங்கு நண்பன்
109. சங்கு
110, சத்தியச் சுடர்
111, சத்தியம்
112. சத்திய வர்த்தமானி
113. சத்துணவு
114. சதங்கை
115. சப்தகிரி
116. சம்பக்
117. சமய ஜோதி
118. சமாதான வழி
119. சமூகத் துணைவன்
120. சமூக நற்பணி மன்றம்
121. சமூக நிழல்
122. சர்வோதயம்
123 சலேசியச் செய்திமலர்
124. சன்மார்க்க விவேக விருத்தி
125. சனாதன சாரதி
126. சாணக்யா
127. சாரணர்
128 சான்றோர் முரசு
129. சி. ஐ. டி. யு. செய்தி
130. சிகரம்
131. சித்தர் செயல்
132. சித்தாந்தம்
133. சித்தாலயா
134. சிம்லா
135. சிவசக்தி
136. சிவஞான தீபம்
137. சிவப்பு மலர்கள்
138. சிவாஜி
139. சிறகு
140. சினிமா மஞ்சரி

141. சினி ரமா
142. சீரத்
143. சுகவழி
144. சுட்டி
145. சுத்த சன்மார்க்கம்ம
146. சுட்டி
147. சுதந்தரப் பறவைகள்
148. சுப்ரதீபக் கவிராயர்
149. சுபம்
150. சுரங்கம்
151. சுழல்
152. சுவிசேஷ பிரபல்ய வர்த்தமானி
153. செக்ஸ் லைப்
154. செங்குந்த மணி
155. செந்தமிழ்
156. செந்தமிழ்ச் செல்வி
157. செந்தமிழ் மொழி
158. செந்நீர்
159. செம்மலர்
160. செய்திமடல்
161. சேவகர்
162. சேனைத் தலைவர் செய்தி
163. சோலைக் குயில்கள்
164. ஞானசம்பந்தன்
165. ஞான தூதன்
167. டாப் ஸ்டார்
168. தஞ்சை அமுதம்
169. தடம்
170. தமிழ்ச்சபை தீபிகை
171. தமிழ்ச் சிட்டு
172. தமிழ்ச்சுடர்
173. தமிழ்த் தேன்
174. தமிழ்நாட்டுக் காவலன்
175. தமிழ்ப் பணி
176. தமிழ்ப்பொழில்
177. தமிழ் முனிவன்
178. தமிழகத்தின் தொழில் வளம்
179. தமிழம்
180. தமிழாசிரியர்
181. தமிழியக்கம்
182. தர்ம சக்கரம்
183. தலித் குரல்
184. தாமரை
185. தாய் மண்
186. தாராமதி
187. திரு இருதயத்தூதன்
188. திருக்கயிலை
189. திருக்கோயில்
190. திருநீலகண்டன்
191. திருநெல்வேலி டயோஸிஸன்
192. திருக்கோயில் வரலாறு
193. திரைக்கதிர்
194. திரைக் கதை
195. தீச்சோலை
176. தீபம்
197. தீபிகை
198. தீர்க்க தரிசன விளக்கம்
199. தீர்ப்பு
200. தீர்ப்புத் திரட்டு
201. தீவிரவாதி
202. துடிப்பு
203. துந்துபி
204. துளிகள்
205. தூரிகை
206. தென் ஒலி
207. தென்மொழி
208. தேசோபகாரி
209. தேம்பாவணி தீபம்
201. தேவ எக்காளம்
211. தேவர் நாடு
212. தேவர் முரசு
213. தேன் மழை
214. தேனமுதம்
215. தேனலைகள்
216. தையல் கலைஞன்
217. தொழிற்சங்கச் செய்தி

218. தோழன்
219. நண்பர்கள் மலர்
220. நபிநேசன்
221. நம்பி ராஜன்
222. நம் ராஜ்ய சேவை
223. நமது பாரதம்
224. நர்கீஸ்
225. நல்வழி
226. நயனதாரா
227. நவீனம்
228. நற்கருணை வீரர்
229. நற்சிந்தனை
230. நாகமணி
231. நாணயம்
232. நாம்
233. நாரயண குரு
234. நாளைய பாரதம்
235. நித்திலக் குவியல்
236 நிலவளம்
237. நியல்கள்
238. நிறைமதி
239. நிஜங்கள்
240. நூதன விடியல்
241. நெஞ்சம்
242. படைப்பு
243. பண்ணைத்தொழில்
244. பல்லவநாதம்
245. பல்லவி
246. பாட்டாளித்தோழன்
247. பார்க்கவன் தூது
248. பார்வைகள்
249. பாலம்
250. பாலமித்ரா
251. பாஷாபிமானி
252. பி. ஆர். சி. கீதம்
253. பிருந்தாவனம்
254. பிலிம் ரோல்
255. பிலிமாலயா
256. பியூட்டி லைப்
257. பிறை
258. புதிய நம்பிக்கை
259. புதிய பயணம்
260. புதிய பறவை
261. புதுவைச் செய்திகள்
262. புயல்
263. புரட்சி மின்னல்
264. புலவர்
265. பூக்கடை
266. பூண்டி மகான்
267. பூபாளம்
268. பூஜாதீபம்
269. பூஜாமணி
270. பெண் விடுதலை
271. பேசும் படம்
272. பொதுப்பணிக் குரல்
273. பொதுமறை
274. பொதுமை
275. பொம்மை
276. பொம்மை வீடு
277. பொய் முகங்கள்
278. பொய்யாமொழி
279. பொய்யா விளக்கு
280. பொன்னகரம்
281. போக்குவரத்துத் தொழிலாளி
282. போரணி
283. மக்கள் மறுவாழ்வு
284. மகிழ்ச்சி
285. மங்கை
286. மங்கையர் மலர்
287. மஞ்சரி
288. மணிவிளக்கு
289. மதினா
290. மருதமலர்
291. மருத்துவ மஞ்சரி
292. மருத்துவ முரசு
293. மயில்
294. மலர்கள்
295. மன்னாதி மன்னன்
296. மன ஓசை

297. மனம்
298. மனைமலர்
299. மாணவர் குரல்
300. மாத ஜோதிடம்
301. மாதுளை
302. மார்க்சீய ஒளி
303. மார்க்கெட் செய்திக் கதிர்
304. மாலை நினைவுகள்
305. மின் காசாளர்
306. மிஷினரி இண்டலிஜன்ஸர்
307. முக்குடை
308. முகங்கள்
309. முகில்
310. முத்துச்சுடர்
311. முத்துராஜாமுத்திரியர் சங்கநாதம்
312. முத்துமாலை
313. மும்தாஜ்
314. முருகு ஜோதிடக்கலை
315. முல்லைச்சரம்
316. முனைவன்
317. முஸ்லீம் முரசு
318. மூலிகை மணி
319. மூவிடைம்ஸ்
320. மெய்வழி
321. மேனிலைக் கல்வி
322. மோட்டார்
323. யுனஸ்கோ கூரியர்
324. யோகாசன ஆலய விஜயம்
325. ரத்னபாலா
326. ரஹ்மத்
327. ரூசாமலர்
328. லஷ்மி லலிதா சதனம்
329. லாரி
330. லீலா காமிக்ஸ்
331. வக்கீல்
332. வண்ணங்கள்
333. வரிச்செய்தி
334 வரி விகடன்
335. வல்லமை
336. வழிகள்
337. வள்ளல்பாரி
338. வளரும் வேளாண்மை
339. வாணி ஜோதிடம்
340. வாய்ஸ் ஆப் இந்தியா
341. வால்
342. விகோதரன்
343. விஞ்ஞானச் சுடர்
344. விஞ்ஞான விவசாயம்
345. விடிவு
347. விண்ணரசு
348. வியர்வைத் துளி
349. விழிகள்
350. விழித்தெழு
351. விளையாட்டுக் களஞ்சியம்
352. விஸ்வப்பிரியா
353. வெண்ணங்கி
354. வெள்ளி விளக்கு
355. வெளுப்பு
356. வெற்றிலைப்பாக்கு
357. வேளாளர் துணை
358. ஹார்பர் தொழிலாளி
359. ஹோமியோபதி
360. ஸ்ரீ குமர குருபரர்
361. ஸ்ரீகாம கோப்ரதீபம்
362. ஸ்ரீ சங்கர க்ருபா
363. ஸ்ரீ சுப்ரமணிய பாரதி கவிதா மண்டலம்
364. ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்
365. ஸ்ரீ நரசிம்மவரப்ரியா
366. ஸ்ரீ பாம்பன் ஜோதிட மலர்
367. ஸ்ரீ புவனேஸ்வரி விஜயம்
368. ஸ்ரீ ரங்கநாத பாதுகா
369. ஸ்ரீராமானுஜன்

370. ஸ்ரீ ராமகிருஷ்ணவிஜயம்
371. ஜெய கிறிஸ்து
372. ஜோக்கர்
373. ஜோதிட நண்பன்
374. ஜோதிட நன்மை
375. ஜோதிட கலைமணி
376. ஸ்தானாபதி
377. ஸ்வரம்



# சிறு பத்திரிகை

**க. பஞ்சாங்கம்**

*1982—இல் சிறு பத்திரிகைகளில் குறிப்பிடும் படியான ஒரு வளர்ச்சி தெரிகிறது. திறனாய்வு என்னும் பெயரில் எழுபது களில் நடந்த குழுச்சண்டை அல்லது குடும்பி பிடிச்சண்டை 82-இல் குறைந்திருக்கிறது அல்லது இல்லை என்றே சொல்லி விட லாம். கருத்து வேறுபாடுகள் ஆரோக்கியமான சூழலில் பேசப் பட வேண்டும் என்பதை எல்லா இதழ்களும் புரிந்திருப்பது போல் தெரிகிறது. பெரும் பத்திரிகைகள் தமிழால் பிழைக் கின்றன; சிறு பத்திரிகைகள் தமிழுக்காகப் பிழைப்பு நடத்து கின்றன.*

அச்சு இயந்திரக் கண்டுபிடிப்பை ஒட்டித் தோன்றிய பத்திரிகைத் தொழிலானது மானுட சமூகத்திற்குக் கிடைத்த மாபெரும் சக்தியாக விளங்கிக் கொண்டிருக்கிறது. மனிதனின் கருத்துலகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகள் காண முடியாத வளர்ச்சியை நூறு ஆண்டுகளில் சாதித்துக் காட்டியிருக்கிறது. செய்தித் தொடர்புக் கருவிகளாகத் திரைப்படம், வானொலி, தொலைபேசி, தொலைக்காட்சி என்று எத்துனையோ கருவிகள் வந்த பின்பும் பத்திரிகையின் செல்வாக்கு இன்னும் தீயாகத் தான் இருந்து கொண்டிருக்கிறது என்பதற்கு இன்றைய நடை முறை அரசியல் வாழ்வில் பல சான்றுகள் காணக் கிடக்கின்றன.

இந்தப் பத்திரிகைகளைப் பெரும் பத்திரிகைகள், சிறு பத்திரி கைகள் என்று ஆய்வு வசதிக்காக மட்டும் நாம் பிரிக்கவில்லை. இவற்றின் நோக்கங்களில், செயல்பாட்டில், உள்ளடக்கத்தில் பல வேறுபாடுகள் காணக் கிடக்கின்றன. தமிழில் பெரும் பத்திரிகைகளை வாசிப்பது என்பது ஒரு பொழுது போக்குகிற — சாய்வு நாற்காலிச் சங்கதியாகக் — கொச்சைப் படுத்தப் பட்டி ருக்கிறது. சூன் - 1982 - 'தீபம்' இதழ் இந்த உண்மையை அப் பட்டமாகக் — கடுமையாக — இவ்வாறு எழுதுகிறது.

''எதையாவது எப்படியாவது விற்றால் போதும் என்கிற மனப்பான்மை மட்டுமே தூக்கலாகத் தெரிகிறது. முன்பு அம்மாமி இலக்கியம் பண்ணிக் கொண்டிருந்தவர்கள் இப்போது

அம்மண இலக்கியம் பண்ணி வயிறு வளர்க்கிறார்கள்... இன்றைய சமூகப் பொறுப்பு, சமூகப் பிரக்ஞை, சமூக நோக்கம் எதுவுமே பத்திரிகைகளுக்குக் கிடையாது.''

சிறு பத்திரிகைகள்தாம் இன்று நம்பிக்கை அளிக்கக் கூடியவைகளாக இருக்கின்றன. இவைகள் இந்தத் தொழிலைச் சந்தைச் சரக்காக ஆக்காமல், ஒரு குறிக்கோளுக்காகவே நடத்துகின்றன. ''குறிக்கோள்'' என்பதே முதலாக நிற்கும்போது, சென்றடையும் வட்டமும் சுருங்குவது இயல்பே! எனவே இவைகளை நாம் சிறு பத்திரிகைகள் என்கிறோம்! உண்மையில் உள்ளடக்கத்தில் பெரும் பெரும் படைப்புக்களையும் கருத்துக்களையும் சுமக்கும் இந்தப் பத்திரிகைகளைச் சிறு பத்திரிகைகள் என்று அழைப்பது ஒரு முரணுரையே! (Paradox) இவற்றுள்ளும் ஒரு நோக்கில் நடத்தப்படும் சாதி இதழ்கள், மாதர் இதழ்கள், மருத்துவ இதழ்கள், சமய இதழ்கள், அறிவியல் இதழ்கள், திரைப்பட இதழ்கள், அவரவர் தொழில் சார்ந்த இதழ்கள், குழந்தை இதழ்கள், சோதிட இதழ்கள் முதலியவற்றை ஒதுக்கி விட்டு, கலை, இலக்கியம் சார்ந்த சிறு பத்திரிகைகளை மட்டுமே நாம் எடுத்துக் கொள்கிறோம். ஏனென்றால், ஒவ்வொரு சாதி இதழ்களையும், ஒவ்வொரு சமய இதழ்களையும் மட்டுமே சேர்த்து எண்ணிப் பார்த்தால்கூட நூற்றைம்பது இதழ்கள் வரைச் சேரும்! எனவே நம்முடைய எல்லையை இங்கே கலை இலக்கியத் தொடர்புடைய இதழ்களோடு மட்டும் நிறுத்திக் கொள்வது நல்லது!

தமிழ் மறுமலர்ச்சி அடைந்த இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே சிறு பத்திரிகைகளும் தோன்றித் தொண்டு புரிந்திருக்கின்றன. மறைமலை அடிகள், வ. உ. சி, பாரதியார், வ. வே. சு. அய்யர், பூர்ணலிங்கம் பிள்ளை, கனகசபாபதி போன்றோர் சிறு பத்திரிகை வரலாற்றில் பேரிடம் பெறுகின்றனர். பின்பு 1930 — வாக்கில் தோன்றிய ''மணிக்கொடி'' ஒரு இயக்கமாகவே சமூகத்தில் பரிணாமம் பெற்றிருப்பதைப் பார்க்கிறோம்! அதுபோலவே ''எழுத்து", ''சூறாவளி'', ''கலா மோகினி'' ''சரஸ்வதி'', ''தீபம்'', ''வானம்பாடி'' போன்ற சிறு பத்திரிகைகள் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஆழமாகத் தங்கள் சுவடுகளைப் பதித்துள்ளன. ''மணிக்கொடி காலம்", என்று பி. எஸ். இராமையாவும், ''சரஸ்வதி காலம்'' என்று வல்லிக்கண்ணனும், ''எழுத்து காலம்'' பற்றி சி. சு. செல்லப்பாவும் எழுதி தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறு பத்திரிகைகளின் பேராண்மை பொருந்திய இடத்தைப் பிடித்துள்ளனர்!

"82-இல் சிறு பத்திரிகைகள்" என்ற இந்தக் கட்டுரையில், இப்பத்திரிகைகளை ஐந்து தலைப்பின் கீழ் பிரித்துக் கொண்டால் ஆய்விற்கு எளிமையாக இருப்பதோடு தெளிவும் கிடைக்கும். ஏனென்றால் கலை, இலக்கியம் சார்ந்த இந்தப் பத்திரிகைகளின் தோற்றத்திற்கும் கூடப் பல காரணங்கள் — நோக்கங்கள் — இருக்கின்றன. எந்த ஒரு நிகழ்ச்சிக்குமே முழுக்க முழுக்க ஒன்றே ஒன்று மட்டும் காரணமாக அமைவதில்லை என்கிற உண்மை இந்தப் பத்திரிகைகளின் தோற்றத்திற்கும் பொருந்தும்.

அ. இலக்கியத்தில் உன்னதச் சுவையைத் தேடுதல்; படைப்புக் கலையின் மர்மம் நிறைந்த உச்சியை நோக்கி அழைத்தல்; உத்தியில் சோதனை செய்தல் — இப்படி இலக்கியத்தை முதன்மைப் படுத்தும் நோக்கிற்குத் தளமாக அமையும் பத்திரிகைகள்—"கணையாழி", "ஸ்வரம்" "சதங்கை" 'ழ', 'கவனம்' முதலியன—

ஆ. நிகழ்கால மனிதனை முதன்மைப்படுத்தி, அவனது துக்க, துயரங்களுக்காக இலக்கியம் போர்புரிய வேண்டும் என்கிற கருவோடு படைப்புக்களை வெளியிடும் பத்திரிகைகள்; மார்க்சீய சிந்தனைக்குப் படைப்பிலக்கிய வடிவம் கொடுக்க முனையும் இதழ்கள் — படிகள் — முழக்கம் — மன ஓசை — விழிகள், காற்று, முனைவன் முதலியன. செம்மலர் — தாமரை—சிகரம் — முதலியன.

இ. சமூக நீதிக்காகப் போராடும் இதழ்கள் — இவைகள் படைப்பிலக்கியத்திற்கு முதலிடம் தராமல் உண்மை. நிகழ்ச்சிகளை உருக்கமாகவும் புள்ளி விவரத்தோடும் தந்து மனித நேயத்தை வளர்க்கின்றன — சுரங்கம், குமுறும் நெஞ்சம், சுட்டி, உணர்வுகள், குமுறல், நிஜங்கள் முதலியன.

ஈ. தமிழ், தமிழினம், தமிழ்நாடு என்ற திராவிட இயக்கக் கொள்கைகளுக்காக வரும் இதழ்கள் — தென்மொழி, மீட்போலை, குறளியம், தமிழியக்கம், பொதுமை, செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்நிலம், பகுத்தறிவு, அறிவுவழி, சிந்தனையாளன், உண்மை, வல்லமை முதலியன

உ. இந்தப் பிரிவை பிற இதழ்கள் என்று கூறலாம்.

1. பல்சுவை இதழ்கள் (கலைச்சுரங்கம், ராகதீபம், 'ஓ', மாதுளை, நிழல்கள், பொன்னகரம் முதலியன.

2. கவிதை இதழ்கள் — தமிழ்ப்பணி, கவிதை, கவியுகம், வானம்பாடி, 'ழ' முதலியன.

3. சில நிறுவன வெளியீடுகள் :- பூ. சா. கோ. அறக் கட்டளை வெளியிடும் கலைக்கதிர்; உலகத்தமிழா ராய்ச்சி நிறுவனம் வெளியிடும் தமிழாய்வு; அண்ணா மலைப் பல்கலைக் கழகம் வெளியிடும் மொழியியல்; சைவசித்தாந்தக் கழகம் வெளியிடும் ''செந்தமிழ்ச் செல்வி''; கரந்தைத் தமிழ்ச்சங்கம் வெளியிடும் 'தமிழ்ப் பொழில்' முதலியன.

4. சில தனி மனிதர்கள் வெளியிடும் இதழ்கள் : பொற்கோ வெளியிடும் 'புலமை'; சாலை இளந் திரையன் வெளியிடும் அறிவியக்கம் முதலியன. (இந்தப் பிரிவில் உள்ள பல 'இதழ்கள்' என் பார் வைக்குக் கிடைக்கவில்லை).

இன்னும் அங்கங்கே தட்டச்சு இதழ்கள், கையெழுத்து இதழ்கள் என்று பல இதழ்கள் தோன்றிக் கொண்டும் மறைந்து கொண்டும் இருக்கின்றன. எண்பதுகளில் பெரும்பத்திரிகைகள் பல தோன்றியும், ஒவ்வொன்றும் துணைப் பத்திரிகைகளோடு, தங்கள் சந்தையைப் பெருக்கியும், முழு ''நாவல் இதழ்கள்'' பல உற்பத்தியாகியும் கூட, இந்த அளவிற்குச் சிறுபத்திரிகைகளின் தேவையும் இந்தச் சமூகத்திற்கு வேண்டியதிருப்பது மகிழ்ச்சி தரக்கூடியதே!

இனி, ஒவ்வொரு பிரிவையும் தனித்தனியாகப் பார்த்து; இறுதியில் சாரமான சில செய்திகளைச் சொல்லுவதற்கு முயல்வோம்! இங்கே இன்னொரு செய்தியையும் சொல்லிவிட வேண்டும். நான் இந்த ஆய்விற்காக ஏறத்தாழ எண்பது சிறுபத்தி ரிகைகளோடு அஞ்சல் அட்டையில் அச்சடித்துத்தொடர்புகொண் டும் சரியாக 14 பத்திரிகைகளிடமிருந்துதான் அதற்குரிய பதில் கிடைத்தது. சில முகவரியில் ஆள் இல்லாமல், அட்டைகள்[2] திரும்பி வந்தன இதற்கெல்லாம் காரணம் என்ன? சிறுபத்திரிகை யாளர்கள் கல்வி நிறுவனத்தில் இருக்கும் கல்வியாளர்களின் மேலும், அவர்களின் ஆய்வுகளின் மேல் கொண்டிருக்கும் கோபமா? அல்லது ஒன்றிரண்டு இதழ்களோடு நின்று போய் விட்டனவா? அல்லது அனுப்பி வைப்பதற்குக் கையில் இதழ்கள் இல்லாது போயிற்றா? எண்ணிப் பார்க்க வேண்டும்! தமிழகத் தில் ஆய்விற்கானச் செய்திகளைத்திரட்டுவதுஎன்பது ஒவ்வொரு துறையிலும் அப்படித்தான் கட்டிதட்டிப் போய்க் கிடக்கிறது!

**கணையாழி:**

பதினெட்டு ஆண்டுகளாக நடந்து கொண்டிருக்கும் ''கணை யாழி'' ''நல்ல'', ''உயர்ந்த'' இலக்கியத்தை வாசகர்முன்

வைப்பதற்கு முயன்று வருவதாகத் தெரிவிக்கிறது. சிறுகதை—குறுநாவல்—தொடர்கதை—புதுக்கவிதைகள் புத்தகவிமர்சனம்[3] நாட்டு நடப்பைப் பற்றிய சில பார்வைகள் கடைசிப் பக்கம் என்று ''ஸ்டார்'' மதிப்புள்ள சுஜாதா எழுத்து, 'சில நிரூபணங்கள்' என்று அசோகமித்திரனின் படைப்பிலக்கியம் இல்லாத எழுத்து—இப்படிப் பல விதத்தில் கணையாழியில் இலக்கியம் வெளிப்படுகிறது. இதன் சாரம் என்ன? தொனி என்ன? வேத காலத்து அறிவோடும், தற்கால உயர் அறிவு மனப்பான்மையோடும், சமூகத் தட்டில் உச்சத்தில் நிற்கும் உயர்சாதி மனப்பான்மையோடும் எல்லாப் பிரச்சனைகளையும் பார்க்கிறது; தீர்வு கூறுகிறது. ரிக்சாக்காரனைப் பற்றிய கதையென்றாலும் கூட பேரம் பேசுவதில் அவன் எவ்வாறு தந்திரமாக ஏமாற்றுகிறான் என்று மத்திய தர வர்க்கத்தின் இழப்பைத்தான் முன்னிறுத்தி விளக்குப் போட்டுக் காட்டுகிறது.[4]

நான் பார்த்த ஒன்பது இதழ்களில் ஏறத்தாழ 24 சிறுகதைகள் வெளி வந்துள்ளன. ஒன்றிரண்டு தவிர (அதுவும் உயர்சாதிச் சூழல்தான்) மற்றவை அனைத்தும் பிராமணக் குடும்பச் சூழலில் பிறந்தகதைகள்தாம்—வரதட்சணை, பெண்ணுரிமை, வேலைக்குப் போகும் பெண்கள்; அதனால் கணவன் மனைவி உறவில் ஏற்படும் மாற்றம், பழைய வேத மரபு நொறுங்குதல், பிராமணப் பெண்கள் விபச்சாரத் தொழிலுக்குப் போதல், தாயின் சாவு, தலைமுறைப் பிரச்சனை, தாய்ப்பாசம், வேலையில்லாத் திண்டாட்டம்—இப்படி எடுத்துக் கொண்ட பிரச்சனைகளில் பெரும்பாலானவை அந்தச் சமூகம் இன்றைக்கு அழுத்தமாகச் சந்திக்கின்ற பிரச்சனைகள்தாம்!

இதுபோலவே 82-இல் நடத்திய குறுநாவல் போட்டியிலும் செ. யோகநாதன் எழுதிய ''இரவல் தாய்நாடு''—இலங்கைத் தமிழர் பிரச்சனையை நெஞ்சுலையுமாறு வெளியிடுகிற உன்னதமான ஒரு படைப்பாகும். முதல் பரிசு பெற எல்லாத் தகுதியும் இருந்தும் மூன்றாம் பரிசுகூடக் கொடுக்காமல், 'ஸ்ரீரங்கச்' சூழலில் நடக்கும் ஒரு அக்கரகாரத்துக் கதைக்கு முதல் பரிசு கொடுத்ததும் கணையாழியினுள் அதிராமல் ஓடுகின்ற ஆழமான உள்ளோட்டத்தை அடையாளம் காட்டி விடுகிறது—ஆனாலும் ''இரவல் தாய்நாட்டை'' வெளியிட்டுத் தனது இலக்கிய ஆர்வத்தை மகிமைப்படுத்தியமைக்காகக் 'கணையாழியை'ப் பாராட்டத்தான் வேண்டும். இன்றைய சூழலில் அத்தகையக் கதைகளை வெளியிடுகிற நேர்மையும் துணிவும் உடைய பத்திரிகைகள் சிலவே!

'நல்ல' 'உயர்ந்த' இலக்கியம் என்று பேசுகிற 'கணையாழி' 'ம. ந. ராமசாமியின்' 'கலாச்சார மயக்கம்' என்ற கட்டுரையைச் 'சிறுகதை' என்று ஏற்று வெளியிட்டிருக்கிறது—திராவிடர், ஆரியர் பிரச்சனையில், ஆரியர் பக்கம் நின்று தன் வாதத்தை முன்னிறுத்திக் காட்டவே அந்த முயற்சி என்பது தெளிவாகத் தெரிகிறது. அந்தக் கதை, ''திராவிடர்களும் இங்கே வெளியே இருந்து வந்தவர்களே! சாதி முறையை ஆரியர்கள் இங்கு வருவதற்கு முன்பே திராவிடர்கள் உருவாக்கியிருந்தார்கள்'' போன்ற கருத்துக்களை வைத்து, பெரியார் இயக்கத்தின் அடித்தளத்தையே அடித்து நொறுக்க முயலுகிறது.

அடுத்து, 'கணையாழி' உண்மையைச் சொல்லுகிறது; ஆனால், உண்மையைக் கேட்பவன் உணர்ச்சியில் ஒரு சின்ன அசைவுகூட ஏற்பட்டு விடாதபடியான ஒரு தத்துவார்த்தமான மொழியில் சொல்லிவிட்டு ஒதுங்கிக் கொள்கிறது. இதுவும் ஒரு வகையில் உண்மையின் பக்கம் நிற்பது போலக் காட்டுவதற்கு உண்மையை எழுதிவிட்டு, ஆனால் மெய்யாகவே உண்மைக்கு எதிரான பணியை ஆற்றுகிற ஒரு உயர்மட்ட உத்திதான்! உயர் மட்ட அறிவுடைய, உயர்சாதி மனப்பான்மையின் வெளியீடே இப்படித்தான் இருக்கிறது.

'கணையாழியின்' சமூகத் தளம் இத்தகையதுதான் என்றாலும், இன்றைய பத்திரிகைச் சூழலில், இலக்கியம் பற்றிய ஆழமான, பல்முக விசாரணைத் தெளிவோடு படைப்புக்களை வெளியிடுகிற இதழ்களில் கணையாழிக்குச் சிறந்த இடமுண்டு என்பதில் ஐயமில்லை. உயர்மட்டச் சாதிக்காரர்களால், உயர் மட்டச் சாதிக்காரர்களுக்காக, உயர்மட்ட அளவில் நடத்தப் படும் இந்தக் கணையாழியில் இருந்து ''முற்போக்கு இதழ்கள்'' திராவிட இயக்க இதழ்கள் கற்றுக்கொள்ள வேண்டியவை எவ்வளவோ இருக்கின்றன. கி. ராஜநாராயணின் ''இண்டாம் பாகம் நாவலில் ரண்டு அத்தியாசங்கள்'' என்று வந்த அந்தக் கதை, ராமாபுரம் சந்துருவின் ''சலனம்'', வீர. வேலுச்சாமியின் ''பங்கீடுகள்''—போன்ற கதைகளைக் கணையாழியில் பார்த்த பின்பு முன்பிருந்ததைவிடக் கொஞ்சம் கூடுதலான விவரம் பெற்று விட்டது போன்ற உணர்வு ஏற்படுகிறது!

கணையாழியில் வரும் 'கவிதைகள்' என்று எடுத்துக் கொண்டால், சமகாலப் பிரச்சனைகளை, சமகால உவமையில்—யதார்த்த நிலையில், உப்புச் சப்பில்லாமல் சொல்லிவிட்டுப் போய்விடுதல் என்கிற நிலையிலேயே வெளிப்பாடு நடக்கிறது. பல கவிதைகள் விடுகதை நிலையிலும் இன்னும் சில கவிதைகள்

அதையும் தாண்டிப் புரியாத நிலைக்கும் போய் விடுகின்றன. புவியரசின் ''ஒரு முக்கிய அறிவிப்பு''—அதன் உத்தி நலத்தினால் இன்னும் நெஞ்சில் அறிவிப்பை நடத்திக் கொண்டே இருக்கிறது.

ஆங்கிலச் சொற்களை அப்படியே ஆங்கில எழுத்தில் எழுதப் பட்ட கவிதைகளைக் கூட கணையாழி வெளியிடும் இப்படி ஒரு கவிதை!

''ராணி சீதை ஹாலில் ஒரு நாடகம்''—

''இருண்டடைந்த கூத்தரங்கில்
ஏராளம் பேர் காத்திருந்தார்
சிரித்து நிறைந்து நினைக்கவும்
அருஞ்சமயம் சிற்சிலவும்
கடக்கும் ஒளிரும் கடிகாரம்
கதை துவங்கின பாடில்லை
கூட மின்னும் No Smoking''

புகையக் கூடாது இனி எழுத்து''[5] இப்படியே இன்னும் ஒரு பத்தி நீளம் இந்தக் கவிதை போகிறது. அதிலும் '2' ஆங்கிலச் சொற்கள் அப்படியே இருக்கின்றன. இந்த இடத்தில் சிறு பத்திரிகை நடத்தும் அறிவு ஜீவிகள் கையாளும் இந்த நடையைப் பற்றி மொத்தமாக வைத்து வல்லிக்கண்ணன் தீபம்-செப்டம்பர் 82 இதழில் கூறுவதை எண்ணிப் பார்ப்பது நல்லது.

''சிறு பத்திரிகைக்காரர்கள் சிலரது இயல்பாகவே இந்தப் போக்கு வளர்ந்து வந்திருக்கிறது. தங்களை அறிவு ஜீவிகள் (இன்டெலக்சுவல்ஸ்) என்று காட்டிக் கொள்ள விரும்புகின்றவர்களின் போக்காகவும் இது காணப்படுகிறது... தமிழில், தமிழ் வாசகர்களுக்கு எழுதுகிறோம்—சிந்திக்கிறோம்—கருத்துக்களை வெளியிடுகிறோம் என்பதையே அவர்கள் மறந்து விடுகிறார்கள். இதை ஒரு ஃபாஷன் ஆக மதித்து—இப்படி தமிழும் இங்கிலீஷும் கலந்து கலந்து எழுதாவிட்டால் மற்றவர்கள் தங்களை அறிவு ஜீவிகள் என்று மதிக்க மாட்டார்கள் என்று எண்ணியும்—இதைக் கையாள்வதில் சந்தோஷமும் பெருமையும் கொண்டார்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும்''

ஆனாலும் நல்ல கவிதைகளும் நல்ல மொழிபெயர்ப்புக் கவிதைகளும் தமிழில் இலக்கியத்திற்குக் கணையாழிமூலம் கிடைக்கிறது என்பதில் சந்தேகமில்லை. துரையரசனின் ''நகரம்'' நா. விஸ்வநாதனின் ''முதுகென்பது'' போன்ற கவிதைகள் நெஞ்சில் நன்றாகச் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொள்ளுகின்றன,

**தீபம்:** இன்றைக்குத் தொடர்ந்து நடக்கும் சிறு பத்திரிகைகளுள் பழமையானது 'தீபம்'தான்! கணையாழி போல் இல்லாமல், காந்தியம் தழுவிய சமூகப் பார்வை அழுத்தமாகப்படும்படியான நல்ல இலக்கியங்களைஅடையாளம்காட்டும்தாளமாகத் 'தீபம்' வெளிவந்து கொண்டிருக்கிறது. 82-ல் வந்துள்ள தீபங்கள் தன் வடிவத்தில் தேய்ந்தாலும் உள்ளடக்கத்தில் தனது தன்மையைத் தேயவிடாமல் தக்க வைத்திருக்கிறது எனலாம். 'மணிக்கொடி' காலத்தை பி. எஸ். ராமையா மூலம் எழுத வைத்துத் தொடர் கட்டுரையாக வெளியிட்டும், வல்லிக்கண்ணனின் "சரஸ்வதி காலத்தைத்" தொடர் கட்டுரையாக வெளியிட்டும் சிறு பத்திரிகை உலகிற்குப் பெருந் தொண்டாற்றியிருக்கிறது 'தீபம்'. "புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்" இந்தத் தீபம் கொடுத்ததுதான். தற்போது சிறு பத்திரிகைகளின் வரலாற்றை வல்லிக் கண்ணன் இதில் எழுதி வருகிறார்! பக்கத்து மாநில இலக்கியங்களைத் தமிழில் தந்து தேசிய இலக்கிய பாரம்பரியத்திற்குத் தான் தேர்ந்தெடுத்தக் காந்திய நெறிக்கு ஏற்பப் பணிபுரிந்து வருகிறது தீபம்! 82 இதழ்களில் மலையாற்றூர் இராமகிருஷ்ணனின் 'சல்லி வேர்கள்' என்ற மலையாள நாவல் குறிஞ்சி வேலன் மொழிபெயர்ப்பில் வெளியிடப்பட்டுள்ளது. அது புத்தகமாகவும் தற்போது வெளிவந்துவிட்டதைப் பார்க்கிறோம்—மார்க்சீய சிந்தனைகளைக்கூட இலக்கியம் என்பதற்காக ஏற்றுக் கொள்ளுகிற தீபம், தனித் தமிழ், திராவிட இயக்கச் சிந்தனைகளை மிகவும் கவனமாக விலக்கிவிடுகிறது. மீராவின் "கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்" என்ற நூலின் பாணியில் காதல் கவிதைகளை வெளியிடுவதும்; மேத்தாவின் 'தேசப்பிதாவுக்குத் தெருப்பாடகனின் அஞ்சலி'' என்ற கவிதையின் பாணியில் காந்தியை வைத்துக் கவிதை வெளியிடுவதும் தீபத்தின் சாரமாக இருக்கிறது.

சிறுகதைகள் அதிகம் வெளியிடும் சிறு பத்திரிகை என்று எடுத்துக் கொண்டால் தீபம்தான் முதலில் நிற்கும். சமூகப் பிரச்சனைகள் அத்தனையையும் இச்சிறுகதைகளில் காணலாம். இலக்கியத் தரம் சிறந்த, தரம் குறைந்த இரண்டு வகையானக் கதைகளையும் தீபத்தில் காணலாம்!—இலக்கிய மேடை (வினா விடை) கவிதை, சிறுகதை, குறுநாவல், புத்தக மதிப்புரை, மொழிபெயர்ப்பு, திறனாய்வுக் கட்டுரை, தொடர்கதை, வாசகர் மடல், தலையங்கம் என்று உத்திகள் அனைத்தையும் 'தீபம்' கையாளுகிறது. ஆனாலும் 'தீபம்' தேய்வதைப் பார்த்தால் வாசகர்களும் குறைந்து கொண்டு போகிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது. தீபம் தொடங்கப்பட்ட

காலத்து இருந்த சூழல் வேறு; அன்றைய சமூக உணர்வுள்ள பெரும்பாலான இளைஞர்களின் மனநிலை வேறு; இன்றைய சூழல் வேறு; இளைஞர்கள் வேறு! இதை இளைஞர்களின் சமூகப் பார்வை பெரும்பாலும் மார்க்சீயம் சார்ந்ததாக இருப்பதைப் பார்க்கிறோம். அதை அறிந்துகொண்டு, தீபமும் அந்தச் சாயலோடு பல கதைகளைத் தற்போது வெளியிடத் தொடங்குவது போல் தெரிகிறது. இப்படி நடந்தால் சிறு பத்திரிகை உலகிற்கும் தமிழுக்கும் தீபத்தால் இன்னும் பல நல்ல எழுத்தாளர்கள், நல்ல நூற்கள் கிடைப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது !

**சதங்கை, கவனம், ழ:**

சதங்கை, தரமான படைப்பிற்காக, அவைகளை வெளியிடும் தளமாக அமைய வேண்டும் என்கிற அறிவிப்போடு வெளியிடப் படுகிறது[6] அதே நேரத்தில் அது எதிர்பார்க்கும் தரமான படைப்புக்கள் கிடைக்காமல் திண்டாடுவதும் தெரிகிறது. ''பிலாசபி+புதிர்'' என்ற தலைப்பில் ஒரு கவிதை[7] புரியவேயில்லை! படைப்பு என்பது சமூகத்தின் விளைச்சலாகவும் இருக்கிறது என்பதை வசதியாக மறந்துவிட்டு, தனிமனிதனின் உலைச்சலில் பிதுங்குவது என்கிற பார்வை இருக்கும்போது இவைகளெல்லாம் கவிதையாகத் தெரிகின்றன. கே-டானியலின் 'பஞ்சமன், போரானிகன்' என்ற இரண்டு நாவலையும் அ. யேசுராசா இதில் விமர்சித்துள்ளார். அந்தவிமர்சனத்தில் இருந்தே சதங்கை இன்னும் மேல்கட்டு மனப்பான்மையோடு, இலக்கியத்தை 'அசைபோடும்' ஒரு சமாச்சாரமாகவே பார்த்துக் கொண்டிருக்கிறது என்பது புலனாகிறது.

கவனம் 'ழ'இரண்டுமே கவிதையின் 'உத்தி—வடிவம்' பற்றி அதிகம் அக்கறை உடையவை 'ழ' முழுக்க முழுக்கப் புதுக்கவிதை இதழாக வருகிறது. இரண்டிலும் ஒவ்வொரு இதழ் மட்டுமே நண்பர்கள் உதவியால் கிடைத்தன. தனிமனித சோகங்கள்; படிமங்கள்; கவித்துவ நயத்தோடு வெளியிடப்படுகின்றன. வாழ்வின் இடுக்குகளில் கவனிப்பாரற்றுக் கிடக்கும் சின்னச் சின்ன நுண்ணிய சில உணர்வுகளைப் பிடிப்பதில் பிரயாசைப் படும் கவிதைகள்தாம் அதிகம்! மொழிபெயர்ப்புக் கவிதைகள் இதழுக்குக் கனம் சேர்க்கின்றன. புதுக்கவிதையின் தொடக்க கால பிச்சமூர்த்தி மறபை—இவைகள் தொடர்ந்து பின்பற்றுகின்றன.

**ஸ்வரம்**

82இல் வந்த நான்கு இதழ்கள் கிடைத்தன. உதக மண்டலத்திலிருந்து வருகிறது. புதுக்கவிதை இதழ் என்றே கூறலாம். அந்த அளவிற்குக் கவிதை பற்றிய ஒன்றிரண்டு கட்டுரைகளைத் தவிர, அனைத்தும் கவிதைகளே! "கவித்துவத்தின் உச்ச நிலை அடைதல்; அதே நேரத்தில் கவிஞன் தான் என்ன எழுதுகிறானோ அதுவாகவே வாழ்ந்து காட்டுதல்" இந்த உண்மை நாட்டம் இந்த இதழ்களில் காணக்கிடக்கிறது. புதுக்கவிதைகளையும் மொழி பெயர்ப்புக் கவிதைகளையும் அதிகம் வெளியிடும்'ஸ்வரத்தை' "இலக்கியத்திற்கு ஆரோக்கியமான வளத்தை இந்த இதழ் அளிக்கக்கூடுமென்று வல்லிக் கண்ணனைப் புகழ்கிறார். 'ஸ்வரம்—நவம்பர்' இதழில் "இன்னும் எத்தனைக் காலம்தான் நா. காமராசன் மாதிரியும், கலாப்ரியா மாதிரியும், தருமு மாதிரியும் புதிய இளைஞர்கள் கவிதை செய்துகொண்டிருக்கப் போகிறார்கள்? வீச்சும் வீரியமும் உள்ள ஒரு கவிஞரை காண முடியவில்லையே" என்று விக்ரமாதித்யன் தனது மடலில் வருத்தப்படுகிறார். ஆனால் நல்ல இளைஞர்கள் உருவாகியுள்ளார்கள் என்பதை ஸ்வரம் இதழ் உறுதிப்படுத்துகிறது.

"நாற்றமடிக்க ஆரம்பித்து விட்டது
காற்றும் தண்ணீரும்கூட
பண்டக சாலைகளிலிருந்து
முத்திரை குத்தப்பட்ட பின்னரே
வெளிச்செல்ல அனுமதிக்கப்படுகிறது!"[3]

என்று சந்தை நாகரிகத்தின் 'விமான இரைச்சலை' மிக மவுனமாக — அழுத்தமாக வெளியிடும் ஆற்றலைப் ப்ரதீபா ஜெயச்சந்திரனிடம் பார்க்கிறோம்—"புதுக்கவிதை சந்தைக்கு வந்துவிட்டது; கலைஞன் மரித்துப் போனான்" என்று தமிழ்நாடன் குறிப்பிடுவது உண்மைதான் என்றாலும், மரித்தல் என்பது பிறப்பதற்குத்தான் என்பதை புதிய இளைஞர்கள் நிரூபிப்பார்கள்போல் தெரிகிறது!

'கவிதையும் சமூக நிர்ப்பந்தங்களும்'—என்ற தலைப்பில் மணிக்கண்ணன் என்பார். ரேனே லேனாட் (Rene Lenand)-ஐ அறிமுகப் படுத்தியிருக்கும் சிறு கட்டுரை தமிழ்ச்சூழலில் குறிப்பிடப்படவேண்டிய கட்டுரையாகும்!

"ஒரு குறிப்பிட்ட சமூக நிர்ப்பந்தத்தை எதிர்கொள்ளும்போது இக்கவிஞனுக்குக் கவிதையைவிட கடமையும் போராடும் களமும்தான் உன்னதமானதோர் வாழ்வுக்கான அர்த்தத்தை

வழங்குகிறது. ஒரு மனிதன்—அவனது வாழ்வு—அவ்வாழ்வின் யதார்த்தம் யாவுமே ஒன்றுபடும் ஒரு மையத்தில் கவிதைக்கான மகத்துவத்தைத் தந்தவன் 'ரேனே லேனாட்''.[10] தமிழுக்குத் தரணி போற்றும் இலக்கியம் இனிக் கிடைக்கவேண்டுமென்றால், தமிழ்க் கவிஞர்கள் இந்த ரேனே லேனாட் வாழ்க்கையை எண்ணிப் பார்ப்பது நல்லது!

இரண்டாவது பிரிவு:-

படிகள்: பெங்களூரில் இருந்து வரும் காலாண்டு இதழ். இன்றைக்கிருக்கும் சிறு பத்திரிக்கைகளுடன் தொடர்பு கொண்டு 'இலக்கு' என்னும் ஒரு பண்பாட்டு அமைப்பைக் கொண்டு செலுத்தும் பத்திரிக்கை! வாழ்க்கை பற்றிய 20-ஆம் நூற்றாண்டுத் தத்துவச் சிந்தனைகள்—மனிதன் தன்னோடும் பிறரோடும் சமூகத்தோடும் இயற்கையோடும் கொண்டிருக்கும் உறவு—சமூகவியல், மானிடவியல், உளவியல் அடிப்படையில் கலை இலக்கியம் பற்றிய தேடல்—நவீன ஓவியம்—உலகிலும் பிற மாநிலங்களிலும் உருவாகும் ஆரோக்கியமான கலை இலக்கியம் பற்றிய தத்துவ விசாரணைகள்—இப்படிக் கனமான சிந்தனை களுக்கு இடம் அமைத்துக் கொடுக்கிறது படிகள். இன்றைய தமிழ் சொல்லத் திணறுகிற சர்ரியலிசம், இருப்பியல் தத்துவம் போன்றவைகளை யெல்லாம் தமிழில் அறிமுகப்படுத்தித் தமிழனை நிகழ்கால மனிதனாக அமைப்பதற்குச் சமர்புரிகிறது.

''அறிவு ஜீவிகள்'' என்பவர்கள் புத்தகத்தை மேய்ந்துவிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு அசைபோடும் 'குளத்து மனிதர்களாக' இருப்பதில் புண்ணியமில்லை. சிறு பத்திரிகை தளத்தில் எழுதித் தீர்ப்பதால் மட்டும் பயனில்லை. அரசியல் ஈடுபாடும் கொள்ளும் போதுதான் முழுமையான பணி நிறைவேறுகிறது என்றும் எழுதி, படிகள், சிறு பத்திரிகைகள் செயல்படும் தளத்தை ஒருபடி மேலே எடுத்துச் செல்லுகிறது.[11] அதற்கேற்ப தமிழ் ஈழத்தேசிய வாதம் குறித்தும், ஐ. எம். எப். கடன் குறித்தும், லத்தீன் அமெரிக்கா, எல்சால்வடோர் —. பிலிப்பைன்ஸ்— போராட்டங்களைக் குறித்தும், துக்ளக் அரசியல் குறித்தும் கட்டுரை வெளியிட்டிருக்கிறது.

''ஓர் இலக்கிய விவாதம்' (படிகள் 12) என்றும் ''பிளவை இணைத்தல் அரசியல் இலக்கியம் குறித்து ஒரு பார்வை''(படிகள் 13) என்றும் வந்த இரண்டு மொழி பெயர்ப்புக் கட்டுரைகள் இலக்கியம் பற்றிய ஆய்வுத்தளத்தை ஆழமாகவும் கூர்மையாக வும் தமிழுக்குக் காட்டியிருக்கிறது என்பதில் ஐயமில்லை. 'ஓர் இலக்கிய விவாதம்' என்ற கட்டுரை சீரழிவு இலக்கியம்

பற்றி (litrature of decadance) மான்பவுல் சார்த்தர் எர்னஸ்ட் பிஷர், எட்டுயர்டு கோல்ஸ்டக்கர், மிலான் குண்டேரா ஆகிய நால்வரும் கலந்துரையாடுவதாகும். "சீரழிவு இலக்கியம்" என்கிற கருத்தாக்கத்தையே விட்டுவிடவேண்டும். காப்கா, ஜாய்சு போன்றோரைச் சீரழிவு இலக்கியம் படைத்தவர்கள் என்று கூறுவது வரட்டுத்தனமான எதிர் நிலை வாதம் என்றும், சீரழிவு இலக்கியம் என்கிற சொற்களுக்குப் பதிலாக மனிதாபிமான பங்கம் (de-humanisation) போன்ற பதங்களைப் பயன்படுத்தலாம் என்று சார்த்தர் கூறுகிறார். அதற்குக் கோல்ட்ஸ் டக்கர், சீரழிவு இலக்கியம் இல்லை என்று கூறுவதை எதிர்த்து, சீரழிவு இலக்கியம் என்றால் என்ன என்று விளக்குகிறார். "செயல்பாட்டிலிருந்து ஒதுங்குவையும், இருண்மை நோக்கையும், ஒரு ஜீவ ஆசை இன்மையையும் நான் சீரழிவு அம்சம் என்று கூறுகிறேன்" என்றும் சொல்லுகிறார். நமது எண்ண உலகம் விரிந்து கொடுக்கிறது.

இதுபோலவே அஸில் லஹ்ரி எழுதியுள்ள "பிளவை இணைத்தல்" என்றகட்டுரையும், அனுபவப்பூர்வமாக உணர்வை நெஞ்சில் தேக்கிக் கொள்ளாமல் வெறும் வறட்டுச்சுலோகங்களை வைத்து இலக்கியம் செய்து கொண்டிருக்கும் இன்றைய தமிழ் முற்போக்குச் சிந்தனை உலகிற்குப் பெரிதும் பயன்படும். "வடிவத்தில் ஏற்படும் கோளாறு என்பது, யதார்த்தத்தைப் பற்றிய தெளிவில்லா, குறைவான அறிவிலிருந்து பிறக்கும் அக்கறையற்ற மேலோட்டமான உணர்ச்சியின் விளைவே" என்று அழகாகச் சுட்டுகிறார். "அனுபவத்தின் தரமும்" "தூண்டலின் ஆழமும்" தான் ஒரு படைப்பாளிக்கு உன்னதமான வடிவத்தைக் கையில் வந்து கொடுக்கும் என்கிறார். ஆக, புரட்சிகரமான அரசியல் உள்ளடக்கத்திற்கும், அதற்கேற்ற பூரணத்துவம் நிறைந்த வடிவத்திற்குமான ஐக்கியமே உன்னதமான கலைகளை உருவாக்க முடியும் என்கிறார். அப்படியிருந்தும், "எவ்வப்போதெல்லாம் புதிய கலை வடிவம் தோன்றுகிறதோ, அவ்வப்போதெல்லாம். அவ்வப் போதைய ஆளும் வர்க்கத்தின் ஆளும் சுவையுணர்வு (Ruling taste). அக்கலைப் படைப்பிற்கு எதிராகப் போர் தொடுக்கிறது. பிறகு காலகதியில் அதையே மரபாக ஏற்றுக் கொள்கிறது" என்கிறார். தாகூரின் படைப்புக்கள் 'விரஸம்'—'நன்னெறியற்றவை'—'புதிரானவை' என்றெல்லாம் விமர்சிக்கப்பட்டதை எடுத்துக் காட்டுகிறார்.

அடுத்துக் குறிப்பிடப்படவேண்டிய கட்டுரை சாருநிவேதிதா எழுதியுள்ள "சார்த்தர்—ஓர் தத்துவத் தேடலின் புதிய பரிமாணங்கள்" என்ற கட்டுரையாகும்! அதிதீவிர தனிமனித

வாதம் பேசிய சார்த்தர் 1960-இல் கொடுத்த ஒரு பேட்டியில் "எல்லோரும் சுதந்திரமாகாதவரை எந்த மனிதனும் சுதந்திர மானவன் அல்லன்" என்று கூறும் போது 'சமூகம்' என்கிற பெரிய சக்தியை உணர்கிறோம். சார்த்தர், "நாம் அனைவரும் வாழும் இந்த உலகம் பற்றாக்குறையால் நிர்ணயிக்கப்பட்டு, அதனாலேயே நாம் ஒன்றுபடுத்தப்பட்டிருக்கிறோம்" என்கிறார்! ஒவ்வொருவருக்குமிடையில் நிற்கும் பகையின் மேலேயே நமது உறவு கட்டப்பட்டிருக்கிறது என்று ஆழமாக உணர்த்துகிறார். மூன்று மணி நேரம் மாலையிலும் மூன்று மணி நேரம் காலை யிலுமாக ஆறுமணி நேரம் நாள்தவறாமல் சார்த்தர் எழுதுவார். '28' மணி நேரங்கூட தொடர்ந்து எழுதக் கூடியவர் என்கிற செய்தி நமக்குப் பெரும் ஊக்கமளிப்பதாக இருக்கிறது.

பர்ட்டன் ஸ்டேயின் (Burton Stein) என்பார் எழுதிய "Peasant State and Society in Medieval South India" என்ற புத்தகத்தைச் "சோழர் காலச் சமுதாயமும் அரசும்—வேளாளர் களும் பிராமணர்களும்" என்ற தலைப்பில் பி. எஸ். ஆர் அறிமுகப்படுத்தியிருக்கும் கட்டுரைபடிகள் 14ஆவது இதழில் வந்திருக்கிறது. இடைக்காலத் தமிழகம் பற்றிப் பல செய்திகள் கிடைக்கின்றன. இன்றைய சாதி அரசியல் எவ்வளவு தொன்மையானது என்பதை இந்தப் புத்தகம் தெளிவுபடுத்து கிறது. "வேளாளர்-பிராமணர்கள் ஆகியோரின் தேவைகளும் தீர்வுகளும்தான் தென்னிந்திய வரலாற்றின் இயக்கமாக வந்துள்ளன" என்பதும் தெரிய வருகிறது. நிலத்தொடு தொடர்புடைய குழுக்களுள் ஆதிக்கக் குழுவான வேளாளர்கள், தங்கள் சமூக மதிப்பு உயர, தங்களை வேறுபடுத்திக் காட்ட, தங்கள்வாழ்முறையை சமசுகிருதமயமாக்கிக் கொண்டனர். அது போல் புத்த, சமணமதங்கள் தொடுத்த, தாக்குதலிலிருந்துத் தங்களைக் காக்க பிராமணர்கள், ஆதிக்கக் குழுவான வேளாளர் களைத் தங்களோடு இணைத்துக் கொண்டனர். இவ்வாறு 'தேவையின்' இணைந்த இந்த இருவரும் சேர்ந்து உருவாக்கிய அரசுதான் சோழப் பேரரசு என்று நிறுவுகிறார். 3500க்கு மேலான செப்பேடுகள், கல்வெட்டுக்களைப் பார்வையிட்டு, 20 ஆண்டு கால உழைப்பில் இந்த நூல் உருவாகியிருக்கிறது. பல புதிய வரலாற்று உண்மைகளைக் கொடுக்கும் இந்த நூலை அறிமுகப்படுத்தியதன்மூலம் 'படிகள்' எதிலும் விசாரணை மனப் பான்மையோடு இருக்கும் நல்ல தன்மை கொண்டிருப்பதை அறிகிறோம்.

படிகளில் வந்த படைப்பிலக்கியம் என்று பார்த்தால் மிகக் குறைவே! மொழி பெயர்ப்பில் ழான்பவுல் சார்த்தரின் 'சுவர்'

என்ற சிறுகதை ஒன்றே ஒன்று—இலங்கைக் கவிதை மூன்று—இன்னும் சில வெளிநாட்டுக் கவிதைகளின் மொழி பெயர்ப்பு—விக்ரமாதித்தன், ஆத்மாநாம் கவிதைகள்—இவ்வளவுதான். இன்றைக்குத் தமிழில் நல்ல படைப்பிலக்கியம் படிக்க வேண்டுமென்றால் மொழிபெயர்ப்பை நாடித்தான் அலைய வேண்டியதிருக்கிறது என்பதைப் படிகளும் எடுத்துக்காட்டுகிறது போலும். இன்றைய தமிழில் படைப்பிலக்கியம் என்பது—சிறுபத்திரிகை வட்டத்திலும்கூட-எதிலும் ''தன்னைமறந்த லயத்தில்'' ஆழமாக இறங்க மறுக்கும் மத்தியதர வர்க்கத்தின் மத்தியில், மாதக் கூலி வாங்குபவர் மத்தியில். மாட்டிக் கொண்டது. ஜமீன்தார்கள், மடாதிபதிகளிடமிருந்து இலக்கியத்தை மீட்டார் பாரதி. இனி இந்த நடுத்தர வர்க்கத்திடமிருந்து ஒடுக்கப்பட்ட மக்கள் எழுச்சியுற்று மீட்கும்போதுதான் இறவா இலக்கியம் தமிழில் பிறப்பெடுக்கும் என்று நம்பலாம்.

இது பத்திரிகைகளின் மொழிநடை பற்றிய வல்லிக்கண்ணனின் கூற்று 'படிகளுக்கும்' பொருந்தும். எழுத்துப் பிழைகளைப் பற்றியோ வாக்கியப் பிழைகளைப் பற்றியோ மொழித் தூய்மை பற்றியோ பெரும்பாலும் சிறு பத்திரிகைகள் கவலைப்படுவதே இல்லை! 'படிகள்' இதைக் கவனிக்கவேண்டும்.

**விழிகள்:** நவீனப் படைப்பிலக்கியம்—பழைய கூத்து—நாட்டுப்புற இலக்கியம்,—வீதிநாடகம்—போன்றவைகளில் அதிக கவனம் செலுத்தி நடத்தப்படும் இதழ் மதுரையிலிருந்து வருகிறது. பாரதியின் நூற்றாண்டு விழாவினை ஒட்டி சனவரி இதழைப் பாரதி மலராக வெளியிட்டுள்ளது. அந்த மலரின் அட்டையில்

> ''தமிழர்களாகிய நமக்குக்குள்ளே ஆண்மை போய்விட்டது; வீர்யம் போய்விட்டது; நமக்குத் தேசம் கிடையாது; ராஜ்யம் கிடையாது; சுவாதீனம் கிடையாது; இந்த நிலைமையில் 'ஸரஸ்வதி' இந்நாட்டிலே வந்து அவதரிப்பாளா?''

என்ற பாரதியின் எழுத்தைப் போட்டுள்ளது. இது ஒன்றே இந்த இதழின் நோக்கைப் புரிந்துகொள்ளப் போதுமானது. பாரதியின் ஆத்மாவை மிகக் கவனமாகத் தொலைத்துவிட்டுப் பெயரை மட்டும் இறுக்கப் பிடித்துக் கொண்டு வெற்றி விழா எடுக்கும் கொடுமையைச் சுட்டிக் காட்டும் 'ராம்சாமி' கட்டுரை பாரதி பற்றிய பல புதிய செய்திகளைக் கொடுக்கின்றது. பாரதி உள்ளூர் மக்களால் 'கோட்டி' என்றே அழைக்கப்பட்டார் என்றும், கை, கால்களில் விலங்கிட்ட 'கட்டைய மணிக்காரன்' என்கிற ஒரு

கோட்டியுடன் எருக்கம்பூமாலை அணிந்துகொண்டு, கஞ்சா இழுத்துக்கொண்டு, தனது இளமைக்காலத்தைக் கழித்தார் என்றும், 'பாரதி பிறந்த வீடு' என்று அரசு எடுத்திருக்கும் வீடு, உண்மையிலேயே பாரதி பிறந்த வீடு அல்ல என்றும், இதைச் சோமசுந்தரப் பாரதியார்கூடக் கண்டித்திருக்கிறார் என்றும் பல செய்திகளை இந்தக் கட்டுரை அளிக்கிறது.

பாகவதமேளா—திருமலைமெச்சான் தெருக்கூத்து—தேவ ராட்டம்—உமையாட்டம்—கலைமாமணி பரிசை கண்ணப்பத் தம்பிரான் கூத்துக்கலை வடிவில் பாரதியின் பாஞ்சாலி சபதத்தை அரங்கேற்றிய செய்தி—கூத்துப்பட்டறை பற்றிய செய்திகள்—இவ்வாறு விழிகள் கூத்துக்கலை, இதழாக இயங்கு கிறது' கூத்துக்கலை' மலர்கூட வெளியிட்டுளது.

விழிகளில் வரும் கதைகள் வெறும் செய்திகளாக இல்லாமல் இலக்கியத்தரம் வாய்ந்தவைகளாக வெளிவருகின்றன. என்ப தற்கு லக்ஷ்மாவின் 'ஆளுக்கொரு குகை', மீனாவின் 'அவனை விடுங்களேன்' பாவண்ணனின்' ஜனனம், சிவசுவின் 'வாரியக் குச்சியில் சிக்கிய ரயில் பூச்சிகள்'' சான்றாக நிற்கின்றன. ''பாது காவல்'' என்ற பேரில் மனிதன் எந்த அளவிற்குப் போலீஸ்காரர் களால் மனிதாபிமானமின்றி அவமானப் படுத்தப்படுகிறான் என்பதை சிவசு நெஞ்சில் அப்பும்படியாக வெளியிடுகிறார். ஒவ் வொரு இந்திய மனிதனும்—சமூக விழிப்புணர்வு உடையவன் கூட—குடும்பம் என்கிற பாரமிகு இயந்திரத்தை ஓட்டும் ஒரு சின்னஞ்சிறு திருகாணியாகவே வாழ்வைப் பணயம் வைக்கும்படி நிர்ப்பந்திக்கப்படும் அவலத்தைப் பாவண்ணன் கலைநயம்படத் படைத்துள்ளார்.

சத்தீஷ் பகதூரின் 'நாடகமும் திரைப்படமும்' என்கிற தொடர்கட்டுரை, நாடகத்தின் முதலிடத்தை ஆழமாக ஆய்ந்து விளக்குகிறது. நாடகத்தின் ஒரு விரிவாக்கமே திரைப்படக்கலை என்கிற எண்ணத்தையே மறுக்கிறது ''நடித்துக்காட்டும் நேரத் தில் மட்டுமே நாடகம் இருக்கிறது; அதன்பிறகு அந்த நாடகம் இருப்பதில்லை. இது திரைப்படத்தில் சாத்தியமில்லை'' என்று அவர் எழுதும்போது முகத்தில் வெளிச்சம் பாய்ப்பதுபோல் இருக் கிறது! சிறு பத்திரிகைகளின் மூலம்தான் இத்தகைய கட்டுரைகள் தமிழுக்குக் கிடைக்க முடியும்

பெரும் பத்திரிகைகளின் பாணியில் ஒரே இதழில் 7 திரைப் படங்களை விமர்சித்து உள்ளது விழிகள். வெறுமனே—எந்தவித மான ஆழமான அலசல் ஏதுமின்றி சில முடிவுகளை மட்டும் கூறி விட்டுப் போவது சிறு பத்திரிகையின் தன்மை அல்ல! விரிவாக

திறனாய்வு செய்வதற்குத் தகுதியில்லாத படங்கள்என்று விழிகள் உணர்ந்தால், இவ்வாறு பெறும் உரைகளைக் கூறுவதைவிட விமர்ச்சிக்காமலே விட்டுவிடுவது நல்லது.

கல்வியாளர்களையும், பல்கலைக் கழகங்களையும், தமிழக ஆய்வின் நடைமுறைகளையும் கடுமையாக விமர்சிக்கும் ''விழிகள்''பல்கலைக்கழக மட்டத்தில் தமிழ் 'மொழிப்பாடமாக சொல்லிக்கொடுக்கப்படும் முறைகளை மாற்ற வேண்டிய அவசியம் பற்றியும் தெளிவாகச் சிந்திக்கிறது.

மன ஓசை''நமக்குத்தொழில் கவிதை; நாட்டுக்கு உழைத்தல்; இமைப்பொழுதும் சோராதிருத்தல்'' என்ற பாரதியின் கூற்றுக் கிணங்க, கலை, இலக்கியம் என்பவை ஏமாற்றப்பட்ட மக்களின் எழுச்சிமிகு ஆயுதமாகப் பயன்படவேண்டும் என்ற அதிராக் கொள்கையோடு நடத்தப்படும் இதழாகவிளங்குகிறது. கலைகள் யாவும் மக்களுக்காகவே என்றுகூறும் சென்னை மக்கள் கலை இலக்கியக் கழகத்தின் மாத இதழாக வந்துகொண் டிருக்கிறது. கலை இலக்கியங்களை 'ஆயுதம்' என்று சொல்லும் போது இயந்திரத்தனமாகப் புரிந்து கொள்ளாமல், அவைகள் எந்த அளவிற்குச் சுவைபடப் படைப்பது'— —'உவட்டாமல் இனிக்கும்படியாய்ப்' படைப்பது—என்கிற படைப்புக்கலை பற்றிய ஆழமான, விரிவான, பார்வையோடு நடத்தப்படுகிறது என்பதை இந்த இதழ்களில் வரும் படைப்புக்கள் நிறுவுகின்றன. வீர.வேலுசாமியின் ''ஏன் அழுதாள் மீனா?'', சூரிய தீபனின் ''அவர்கள் வருகிறார்கள்'' என்ற கதைகளும் மொழி பெயர்ப்புக் கதைகளும் நம்மைச் சிந்தனைச் சுழிக்குள் சிக்க வைக்கின்றன. தினமணிகதிரிலிருந்து தீபம். நா. பா. வெளியேற்றப்பட்ட செய்தியில் இருந்து, தாழ்த்தப்பட்ட மக்கள் கற்பழிக்கப்படுவதும், எரிக்கப்படுவது மான சமுதாயக் கொடுமைகள் வரை அனைத்தையும், பாதிக்கப் பட்ட மக்களின் பக்கம் நின்று படம் பிடித்துக் காட்டுகிறது மன ஓசை. இன்றைய மனிதன் எவ்வளவு பெரிய மனிதாபிமானத்தை நெஞ்சில் குவித்து வைத்திருக்க வேண்டும் என்பதை மனஓசை நன்றாகவே வலியுறுத்துகிறது. மாணிக்பந்தோபாத்யாங் எழுதிய 'டீச்சர்' என்ற கதையை டாக்டர் லீலாவதி அழகாக மொழி பெயர்த்துள்ளார். இந்த நூற்றாண்டில் குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சிகளுள் ஒன்று, ''இளைய தலைமுறையை உருவாக்கும் தியாகிகள்'' என்று முத்திரை குத்தப்பட்ட ஆசிரியர் களும் கொடிப் பிடித்துத் தெருவில் ஊர்வலம் வருகிற காட்சி! அதுபோலவே ''ஒட்டுண்ணியின் இருமுகங்கள்'' என்ற பஞ்சாபிக்

கதையும், இங்கே மனிதர்கள் எப்படி விவரமற்ற சுயநலவாதிகளாக மாறிப் போனார்கள் என்பதை அழகாகப் படம் பிடிக்கிறது.

"உன்னில் குடிபுகுந்த கருநாகங்களால்
தேசம் நீலம் பாரித்துக்கிடக்கிறது
நீ டாக்டர்களை ஏற்றுமதி செய்துவிட்டு
நோய்களை இறக்குமதி செய்கிறாய்"

என்ற பல்கலைக் கழகங்களைப் பற்றிய அக்கினிப் புத்திரனின் வரிகளில் கிடைக்கும் பன்முக சக்தியானது நம்மைக் கேட்காமலேயே நமக்குள்ளேபோய் உட்கார்ந்து கொள்ளுகிறது. மொத்தத்தில் 'மனஓசையில், மனிதநேயம் ஒவ்வொரு பக்கத்திலேயும் ஒப்பாரிப் பின்னணியில்லாமல், போராட்டப் பின்னணியோடு குழந்தைகள் மத்தியில் இருக்கும் உயிரோட்டமான வாழ்வு போல வெளிப்படுவதைப் பார்க்க முடிகிறது!

காற்று

நாடகம், கவிதை, மொழிபெயர்ப்பு, திரைப்படம் என்று கலை இலக்கியம் சார்ந்த பல துறைகளையும் தழுவி வரும் 'காற்று' 82-ஆல் இரண்டு வந்துள்ளன. கவிஞர் புவியரசு நடத்துகிறார். டிசம்பரில் வந்த இதழ் 'நாடகச் சிறப்பிதழாக' வெளிவந்துள்ளது. சோவியத் கலைஞர் ஸ்தனிஸ்லாவஸ்கி (Stanislavsky யின் "நாடகப் பயில்முறையை" அறிமுகப் படுத்துகிறது காற்று.

"நடிப்பு என்பது நடிகனுக்கு மாலை நேரப் பொழுது போக்கல்ல; புகழ் ஈட்டுவதற்கான குறுக்கு வழியல்ல. அது ஆன்மாவை மேடையில் பிழிந்து வார்ப்பது; தன்னையே அர்ப்பணிப்பது; கடுமையான உடல், மனப்பயிற்சிகளின் பின் கைவரக் கூடியது; ஒரு யோகப் பயிற்சிக்கு சமமானது"

என்று நடிப்புக்கலையின் அருமையை உரைக்கும்படியாகக் காட்டுகிறது. இத்தகைய மேடைக்கலைப் பரிசோதனைகள் எல்லாம் பக்கத்து மாநிலங்களில் கையாளப் படுகின்றன. தமிழ் மண்ணில் எப்போது என்று வேதனைப்படுகிறது 'காற்று'.

அறிவு ஜீவிகளையும், பண்டிதர்களையும், சொற்பொழிவாளர்களையும், தத்துவ விசாரணையில் அலைபவர்களையும் அழகாகக் கிண்டல் செய்கிறது. "கிழவனும் கழுதையும்" என்ற ஜி.சங்கரப் பிள்ளை எழுதிய நாடகம் தமிழில் எம்.அரவிந்தன் தந்துள்ளார். அதுபோலவே கமல் எழுதியுள்ள "தீக்குள்ளே

தியாகி'' என்ற நாடகமும், பிரச்சனை என்கிற வரிசையிலேயே வரக்கூடாத சின்னஞ்சிறு தொல்லைகளையெல்லாம், பூதாகர லான பிரச்சனைகளாக எண்ணிக் கொண்டு, உண்மையாலேயே தன் கருத்தைச் சுற்றி நடந்து கொண்டிருக்கும் பெரும் பெரும் பிரச்சனைகளைப் பற்றிக் கொஞ்சங்கூட உணர்வின்றி மரத்துப் போய்க் கிடக்கிறான் மனிதன் என்பதை அழகாகக் காட்டுகிறது. புவியரசின் மேடைக் கவிதை அவருக்கே உரிய நடையில் சமூக அவலங்களைப் படம் பிடிக்கிறது.

'சிரிக்க வைக்க ஒரு காரணம் இருக்க வேண்டும்' என்று கூறும் சார்லி சாப்ளின் பற்றிய கட்டுரை பல செய்திகளை நமக்குக் கொடுக்கிறது. அவர் கூறுகிறார் ''எனக்கு சோகம் தான் பிறக்கும்; அது தான் அழகாக இருக்கிறது; நகைச்சுவை கூட அழகாக இருக்கும் போதுதான் நன்றாக இருக்கிறது; வாழ்க்கை யில் இருப்பதெல்லாம் இது தான்; அழகு! அதை நீங்கள் கண்டு பிடித்து விட்டால் எல்லாவற்றையும் கண்டவர் ஆகிவிடுவீர்கள். ஆனால் இதைக் கண்டு பிடிப்பதுதான் கடினம்''—மொத்தத்தில் நல்ல இலக்கியம்; சமூக ஈடுபாடு என்கிற இரண்டையும் இணைத்துச் செல்ல முயலுவதைப் பார்க்கிறோம்!

தாமரை, செம்மலர், சிகரம் :- இந்த இதழ்கள் நிறுவனமய மாக்கப் பட்ட கட்சிகளின் பத்திரிகை என்றாலும், அந்தக் கட்சி களின் நடைமுறைச் சித்தாந்தத்திற்கு எந்த விதத்திலும் முரணின்றிக் கட்சிகளின் மேலிடத்துக் கண்காணிப்போடு வருபவை என்றாலும், கவிதை, சிறுகதை, நாடகம், திறனாய்வு, ஆய்வுக்கட்டுரை, வரலாறு, சமூகவியல், மானிடவியல், நாட்டுப்புறவியல் என்று கலை இலக்கியம் தொடர்பான இத்தனைகளுக்கு அதிக இடம் அளிக்கின்றன. 'தாமரை' தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க சாதனையைப் புரிந்திருக்கிறது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இலக்கியத்தில்— திறனாய்வில் — மார்க்சீயப் பார்வையை அறிமுகப் படுத்திய பத்திரிகை என்ற முறையில் 'ஜீவா' ஆரம்பித்து வைத்த தாமரைக்குப் பெரும் பங்கு உண்டு. பேராசிரியர் நா. வானமாமலை, தோதாத்ரி, கனகசபாபதி, கைலாசபதி, சிவத்தம்பி. நா. வே. வீரசாமி போன்ற கல்வி யாளர்களுக்குக் சமுதாயக் கண்ணோட்டத்தோடு இலக்கியத் தைப் பார்ப்பதற்குத் தளமாக அமைந்தது தாமரைதான். அதைத் தொடர்ந்து தற்போது செம்மலர், சிகரம் இரண்டும் குறிப்பிடும்படியாய் வளர்கின்றன.

பாதிக்கப்பட்ட மக்களின் பக்கமாக நின்று, சமூகத்தின் எல்லாப் பிரச்சனைகளைப்பற்றிய கதைகளை இந்த முற்போக்கு

இதழ்கள் வெளியிடுகின்றன. ஆனால்] படைப்பின் தரமென்று பார்க்கும்போது, ''இயந்திரத்தனமான சூத்திரத்திற்குள்'' இவைகள் மாட்டிக்கொண்டனவோ என்று ஐயுற வேண்டியதிருக்கிறது. எப்படி பலவீனமான பால் உணர்ச்சிகளைக் கொச்சைத்தனமான நகைச்சுவை உணர்வுகளைப் பயன் பயன்படுத்திச் சந்தைப் பத்திரிகைகள் காசு சம்பாதிக்கிறதோ? அதுபோல மக்களின் சமுதாய உணர்வை—ஆளுபவர்களின் மேல் இயல்பாகவே தோன்றும் எதிர்ப்பு உணர்வை—முற்போக்கு என்ற பேரில் இந்தப் பத்திரிகைகளும் பயன்படுத்திக் கொள்ள முயலுகின்றன என்று சிலர் குற்றஞ்சாட்ட வழி ஏற்படும் அளவிற்கு, அனுபவ உள் வாங்கல் இல்லாத வறட்சியான படைப்புக்களை வெளியிடுகின்றன. மக்களிடமிருந்து எடுத்து மக்களுக்காக மக்களிடமே திருப்பிக்கொடுத்தல் என்கிற பரிணாமவளர்ச்சியை அவர்களின் படைப்புக்களில் காண இயலவில்லை. அஸ்வகோஷ் போன்று கலையும் தொழிலும்(Craft)ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை[12] என்கிற தெளிவோடு படைக்கிறவர்களும் இருக்கிறார்கள் என்றாலும் அந்த ஆரவாரமான கோஷத்தில் இவர்களின் குரல்கள் அமுங்கி விடுகின்றன.

சமீபத்தில் இறந்த கைலாசபதியின் ''ஈழத்துத் தமிழ்க் கவிதையில் பாரதியின் தாக்கம்'', டாக்டர் சிவத்தம்பியின் 'அரசியல் பிரச்சார சாதனமாகத் திரைப்படம்'', டாக்டர் தா. வே. வீரசாமியின் ''குயிலும் அழகும்''—போன்ற கட்டுரைகள் தாமரைக்குக் கனம் சேர்க்கின்றன. தோதத்ரியின் 'பாரதியும் மார்க்சீய அரசியலும்'என்ற கட்டுரையை விதந்து கூறவேண்டும்.

''மக்கள் கலாச்சாரத்தை நோக்கி'' என்ற அஸ்வகோஷின் மொழிபெயர்ப்புக் கட்டுரையும், பா. மதிவாணனின் 'நாட்டுப் பாடல்கள் ஒரு கண்ணோட்டம்' என்ற கட்டுரையும், 'கலையும் தொழிலும்' என்ற அஸ்வகோஷ் கட்டுரையும் செம்மலரில் குறிப்பிடும்படியாய் உள்ளன. டாக்டர் மே. து. ராசுகுமாரின் 'சோழர் காலத்து வாழ்க்கை முறை'—டாக்டர் சி. கனகசபாபதியின் சைவத்திருமுறைகள் வைணவப்பிரபந்தங்கள்—என்ற இரு கட்டுரைகளும் மார்க்சீய பார்வையில் இடைக்காலத் தமிழகத்தைச் கணிக்கின்றன. சு. சமுத்திரம், டி. செல்வராஜ் போன்றவர்கள் இந்த இதழ்களில் குறிப்பிடும்படியாய் எழுதுகிறார்கள். இந்த மூன்று இதழ்களுமே கவிதை, சிறுகதை, கட்டுரை என்று அதிகம் வெளியிடுவதால் ஒவ்வொன்றையும் தனித்தனியாக எடுத்து விளக்குவதற்கில்லை! ஆனாலும் சூலை செம்மலரில் வெளிவந்துள்ள ஆர். சியாமளம் எழுதியுள்ள திரைப்படக்கலை என்ற கட்டுரை,மொழி > ஓவியம் > புகைப்படம் > சலனப்படம் >

ஊமைப்படம் > பேசும்படம் > திரைப்படமென்று வளர்ந்த வரலாற்றை ஒரு மேதாவிக்குரிய தெளிவோடு விளக்கிச் செல்வதைக் குறிப்பிட்டே ஆக வேண்டும்.

**முழக்கம்—அன்னம் விடு தூது**

திறனாய்வு இலக்கியத்திற்கு அதிக முக்கியத்துவம் அளித்தும் சமூகப் பிரக்ஞையோடும் பூம்புகாரில் இருந்து வெளிவரும் இந்த இதழின் பொறுப்பாசிரியர் ஆ. செகந்நாதன் ஆவார். ஒரே ஒரு இதழ்தான் பார்வைக்குக் கிடைத்தது. பாரதியைப் பற்றிய பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 'முதல் மூன்று தமிழ்நாவல்கள் ஒரு மதிப்பீடு' என்று வல்லிக்கண்ணன் அவருக்கே உரிய தெளிவோடும் நிதானத்தோடும் வரலாற்றுப் பார்வையோடும் அழகாக எழுதியுள்ளார். இந்த இதழில் வந்துள்ள—யார் எழுதியது என்று குறிப்பிடப்படாத ''பாரதி வழியில்(பாரதிக்குப் பின்) தமிழ்க்கவிதை'' என்ற கட்டுரை ஆசிரியரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்! இன்றைய கவிஞர்களுக்கு ''அச்சத்தை சுட்டு தின்கின்ற'' பெரும் பணிதான் முதலில் வேண்டியது என்று அந்தக் கட்டுரை ஆசிரியர் கூறும் திறமும், ஒழுங்கும் சிறு பத்திரிகைகளின் மத்தியில் முழக்கத்தின் இடத்தை முன்னுக்கு எடுத்துச் செல்லுகிறது.

82-டிசம்பரில் தொடங்கப்பட்டுள்ள ''அன்னம் விடுதூது'' தமிழ்ப்புத்தக மதிப்புரை உலகிற்குக் கிடைத்த ஒரே இதழாகும்! சிவகங்கையில் இருந்து அன்னம் பதிப்பகத்தின் வெளியீடாக மீராவால் வெளியிடப்படுகிறது எல்லாம்புத்தகமதிப்புரைதாம். அம்ரிதா ப்ரீதம் பற்றிய அறிமுகக் கட்டுரையை மீரா, அவருக்கே உரிய நளினமான காதல் நடையோடு கொடுத்துள்ளார். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் நடத்திய ''விடுதலைக்குப் பின் தமிழ்க்கவிதை''என்றகருத்தரங்குச்செய்தியைபுதுமையான முறையில் கொடுத்திருப்பது 'அன்னம் விடுதூது' மூலம் தமிழுக்கு வளம் வந்து சேரும் என்ற நம்பிக்கை அளிக்கிறது. இந்தக் கருத்தரங்கில் அதன் துணைவேந்தர் வி. ஐ. சுப்பிரமணியம் தன் தலைமையுரையில் குறிப்பிட்டுள்ள கருத்து ஒன்றை இங்கே சுட்டுவது தமிழ்த் திறனாய்வு உலகிற்குப் பயன் அளிக்கும்.

''இலக்கிய சீர்தூக்குகளில் (அழகியலில்) புள்ளிவிவர இயலையும், கணிதத்தையும் பயன்படுத்தி வெற்றி பெற்றிருப்பதை நாம் கிழக்கு ஐரோப்பிய நாடுகளிற் காண்கிறோம். தமிழ் இலக்கிய விமர்சனத்தில் விஞ்ஞான முறையாகிய காரண, காரிய முறையைப் (Objectivity) பின்பற்ற வேண்டியது மிகவும் தேவை!''

முனைவன்: கும்பகோணத்தில் இருந்து வெளிவரும் இந்த இதழ் ஒன்றுதான் பார்வைக்குக் கிடைத்தது. இதன் ஆசிரியர் வே. மு. பொதியவெற்பனே அனுப்பி வைத்திருந்தார். "ஓர் இதழிய—விமர்சன ஏனைப்பிற சமூக விஞ்ஞான காலாண்டிகை" என்று முனைவன் தன்னைக் கூறிக் கொள்ளுகிறது என்றாலும், மார்க்சீய சிந்தனை அடிப்படையில் இந்த இதழ் மலர்கிறது என்பதில் ஐயமில்லை. 'இதழிய உறவு' என்று இது வெளியிடும் பகுதி மூலம் தமிழகத்தில் வெளிவரும் சிறுபத்திரிகைகள் அனைத்தையும் அறிந்துகொள்ள வாய்ப்பாக இருக்கிறது. "தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதியும்" என்ற கே. டானியல் கட்டுரை தாழ்த்தப்பட்ட மக்களின் புதிய விழிப்புணர்வை அறிய வழி ஏற்படுத்துகிறது. அது போலவே 'மார்க்சீய இலக்கியக் கொள்கை' என்ற பேராசிரியர் அ. மார்க்ஸ் என்பாரின் மொழிபெயர்ப்புக் கட்டுரையும் "முனைவனுக்குப்" பத்திரிகை உலகில் நல்ல ஒரு இடத்தைப் பிடித்துக் கொடுக்கிறது!

**சமூக நீதிக்காய் எழுதும் இதழ்கள்!**

தமிழ் தெரிந்த வாசகனின் மூளையை நடிகையர், நடிகர்களின் தொடர்பான செய்திகளால் பெரும் பத்திரிகைகள் நிரப்பிக்கொண்டு இருக்கும்போது சமூக மனிதர்களுக்குத் தங்கள் சமூகத்தைப் பற்றிய விழிப்புணர்வை ஊட்டி, சமூக நீதிக்காய்ப் போராடுகின்ற முற்போக்கு எண்ணங்கொண்ட சிறு பத்திரிகைகள் பல வெளிவருகின்றன. 'சுரங்கம்', 'குமுறும் நெஞ்சம்', 'சுட்டி', 'உணர்வுகள்', 'இளைய கரங்கள்', 'பாட்டாளி தோழன்', 'கேள்விகள்', 'நிஜங்கள்', 'தேன்மழை', 'தடம்', 'எழுச்சி' இப்படிப் பல இதழ்கள் வெளிவருகின்றன. வாசகனின் அறிவையும் உணர்வையும் விசாலமாக்கி விவரமானவனாக மாற்றுகின்றன. இத்தகைய இதழ்கள் அனைத்துமே துணிவோடும், அயரா உழைப்போடும், நம்பிக்கையோடும், மனிதாபிமானத்தோடும் நடத்தப்படுகின்றன. ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பார்க்க இடமில்லை. ஆதலால் மொத்தமாக சாரத்தை மட்டும் சொல்லிச் செல்லுதல் நல்லது!

(அ) இவைகள் அனைத்துமே புள்ளிவிவரம் கொடுக்கிற உத்தியைக் கையாளுகின்றன.

(ஆ) ஆங்கில இதழ்களிலிருந்து செய்திகளைத் தேடிப் பிடித்து வெளியிடுகின்றன.

(இ) அழகு அழகான கேலிப் படங்கள் வரைகின்றன.

(ஈ) உண்மை நிகழ்ச்சிகளை உருக்கமாய் விவரிக்கின்றன.

(உ) நமீபியா பிரச்சனை, போலந்து பிரச்சனை, ஈழத்துப் பிரச்சனை, எல்சால்வயோர் போன்ற லத்தீன் அமெரிக்கப் புரட்சியைப் பற்றிய செய்திகள் இத்தகைய உலகப் பிரச்சனைகள் அனைத்தையும் கிட்டதட்ட எல்லா இதழ்களும் வெளியிட்டுள்ளன. அதுபோலவே எஸ்.ஐ இ.டி. கல்லூரி பிரச்சனை, ஐ. எம். எப். கடன், பத்திரிகைச் சட்டம், விசாரணைக் கைதிகளுக்கு இழைக்கப்பட்ட கொடுமை, அஸ்ஸாம் பிரச்சனை, மணடைக்காடு, புளியங் குடி, குமரிமுனைகளில் நடந்த சாதி மதக் கலவரங்கள், பெண்ணுரிமை, கற்பழிப்பு, வரதட்சனை, அரிசன மக்களின் மேல் நடத்தப்படும் படுகொலை, குழந்தைத் தொழி லாளர்கள், ஊழல், கல்வி நிலையங்களின் நிலைமை, ஆங்கிலக் கல்வியின் செல்வாக்கு, போலீசு போராட்டம், போலீசு அத்துமீறல்-இப்படி உள்நாட்டுப் பிரச்சனைகள் அனைத்தையும் இந்த இதழ்கள் எல்லாம் ஒன்று போல் வெளியிட்டுள்ளன.

இந்த இதழ்களில் பெரும்பாலானவைப் படைப்பிலக் கியத்திற்கு அவ்வளவாக இடம் கொடுக்கவில்லை. சும்மா பேருக்கு ஒரு கதை, சில கவிதைகள் என்று வெளியிட்டுள்ளன. தங்கள் கருத்துக்களை உன்னதமான படைப்புக் கலையின் மூலம் செலுத்தும் போதுதான் அவை படிப்பவர்களின் உணர்வாகி, சமூகத்தின் உணர்வாக வளர்ந்துப் பூத்துக் குலுங்கி பயன்தரும். வெறும் செய்திகளும், புள்ளிவிவரங்களும், பேசு வதற்கும் எண்ணுவதற்கும் பயன்படுமேஒழிய, உணர்வுநிலையை இடப்பெயர்ச்சி செய்வதற்குப் பயன்படா! இந்தக் கோணத்தில் இந்த இதழ்கள் எண்ணாமல் இருந்திருக்குமோஎன்பதுசந்தேகமே ஒருவேளை அத்தகைய அனுபவத்தில் தோய்த்தெடுத்த நல்ல படைப்புகள் தமிழ்ப் படைப்பாளிகள் மத்தியில் இருந்து கிடைக்க வில்லையோ என்னமோ? சென்னையில் நடந்த இலக்கியக் கருத் தரங்கில் சுட்டிக்காட்டியது போல தமிழ் மொழிக்கு இன்றைக்கு நல்ல உயர்தரமான படைப்புகள் இலங்கையில்தான் உருவாகிக் கொண்டிருக்கின்றன என்பது உண்மைதானோ என்னமோ? இந்த இடத்தில் ஒருசிறு பத்திரிகையை வெளிக் கொண்டுவருவது பற்றி "அஃகு" பரந்தாமன் குறிப்பிடுவதை எழுதிச் செல்வது நல்லதாகப்படுகிறது.

"முழுக்க முழுக்க ஒரு பத்திரிகையே படைப்பாக வெளி வந்தாக வேண்டும் என்கிற அத்தியாவசியத்துக்கான கால கட்டமிது. நம்மைச் சுற்றியுள்ள எல்லாவற்றிலுமே நாம் அதிதீவிர அதிருப்தி கொண்டிருப்பதான நிஜத்துக்கு இப்படிப்

பட்ட ஒரு முழு மாற்றத்துக்கான அணுகலே பரிகாரமாகும். சிறு பத்திரிகைகளின் உள்ளும் புறமுமான படைப்புத் தரங்களின் விஸ்தாரமான வீச்சில்தான் ஜனரஞ்சக ஏடுகளை மிஞ்சமுடியும். மிஞ்சி விட்டால் மாறுதல் தானே விளைகிறது. அதுவரைக்கும் எதற்கும் பின்வாங்காத போர்க்குணம் தேவைப்படுகிறது... இவர்களைப் போன்றவர்களே சிறுபத்திரிகைத் துறையின் அல்லது சமுதாயத்தின் சகல துறைகளின் முழு மாற்றத்துக்கு மான போராளிகள் ஆவார்கள்''[13] இதிலிருந்து சிறுபத்திரிகைத் தொழில் என்பது எவ்வளவு நெஞ்சை நெருக்கும் சங்கடமான ஒன்று என்பது தெளிவாக விளங்குகிறதல்லவா!

திராவிட இயக்கம் சார்பான சிற்றிதழ்கள்!

இந்த நூற்றாண்டு பிறந்தபோது, தமிழின் மறுமலர்ச்சியும் கூடவே பிறந்தது. தமிழின் தொன்மையான இலக்கியங்கள், தனித்தன்மை மிளிரும் தமிழ் இலக்கியங்கள், கண்டு பிடிக்கப் பட்டு நூற்களாக வெளிவரத் தொடங்கின. அதற்கேற்றாற் போல் ஆங்கில ஆட்சியின் நடைமுறையினாலும், கல்வி முறை யினாலும் உயர்சாதி இந்துக்கள், பிராமணர்களுக்கு எதிராக ஒவ்வொரு மாநிலத்திலும் ஒன்று திரண்டார்கள். எனவே தமிழகத்தில் பிராமணீயத்திற்கு எதிரான திராவிடர் கொள்கை 1917 வாக்கில் நீதிக்கட்சி என்ற பேரில் அரசியல் வடிவம் எடுத் தது. அதுபோலவே கருத்துலகத்திலும் பக்தி இலக்கியத்திற்குப் பதிலாக சங்க இலக்கியங்களும், இராமாயணத்திற்குப் பதிலாக பெரியபுராணமும் சிலம்பும், இந்து மதத்திற்குப் பதிலாக சைவ மும், சமசுகிருதத்திற்குப் பதிலாக தமிழும், வேதத்திற்குப் பதிலாக திருக்குறளும் முன்னிறுத்தப்பட்டன. தமிழர் வேதம், தமிழர் சமயம், தமிழ்ப் பண்பாடு, தமிழ் இலக்கியம் என்கிற தனித்தன்மையை பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, மறைமலை அடிகள், கனகசபைப் பிள்ளை, பூர்ணலிங்கம் பிள்ளை, சோம சுந்தர பாரதியார் போன்றோர் வளர்த்தெடுத்தனர். இதனுடைய உச்சகட்ட வளர்ச்சிதான் 1967-இல் அண்ணா ஆட்சியைக் கைப்பற்றியது. இத்தகைய திராவிட இயக்க வரலாற்றுப் பின்னணியில்தான் தென்மொழி, குறளியம், தமிழியக்கம், மீட்போலை, செந்தமிழ்ச் செல்வி, செந்தமிழ், தமிழ்நிலம், பொதுமை, தமிழ்ப்பொழில், பகுத்தறிவு, அறிவு வழி, வல்லமை, சிந்தனையாளன், உண்மை முதலிய பல இதழ் கள் வெளி வருகின்றன. இவை பிராமணீயத்தை—இந்தியை—இந்து மதத்தை, சமசுகிருதத்தை—வடவர் ஆதிக்கத்தை ஒரே குரலில் எதிர்க்கின்றன. தாய்மொழி வழிக்கல்வியை வலியுறுத்தும் இந்த இதழ்கள், மொழி, இன அடிப் படையில்

திருக்குறளை முன்னிறுத்தும் இந்த இதழ்கள்—பொருளாதார நெறியில்மார்க்சியநெறியைத் வலியுறுத்துகின்றன. ஆனால்இவ்வ கள் பேசுகிற மார்க்சீயம் தி. மு. க. வினர் பேசிய மார்க்சீயமே! ஏனென்றால் ''குறளியம்" குன்றக்குடி அடிகளாரை மிகச் சிறந்த மார்க்சீயப் பேரறிஞர் என்று பாராட்டுகிறது! மொத்தத்தில் இந்த இதழ்களில் பெரும்பாலானவை மீட்பு வாதத்தை முன் வைக்கின்றன. பழைய தமிழ்ச் சமூகம் பொன்மயமானது; அதற்குத் திரும்பவேண்டும்; திருக்குறளே எல்லாம்; அதற்குமேல் எதுவுமில்லை என்கிற உறுதிப் பாட்டோடு செயல்படுகின்றன. மொழித் தூய்மையைக் கடுமையாகப் பின்பற்றுகின்றன. இந்த இதழ்களுள் பெரும்பாலானவை வேண்டியவர்களைப் பாராட்டுதல்—பட்டமளித்தல்—திருமண நிகழ்ச்சி (புகைப்படங்களுடன்) பதவி வேண்டல், தனிமனிதர்களைக் கொண்டாடுதல்—இப்படி ஒரு கும்பல் கலாச்சாரத்தின் வெளிப்பாடாய் செயல்படுகின்றன. இவ்வாறு இயங்கும் வரை திருக்குறள் பேரவையின் தலைவர் குன்றக்குடி அடிகளார் வேண்டுவது போல ''சோவியத்தில் ஏற்பட்ட புரட்சியைப் போல ஒரு புரட்சியை ஏற்படுத்தத் தக்க வலிமையுடையவைகளாக'' இவைகள் வளர்ந்து செல்லுமா என்பது சந்தேகமே!

படைப்பிலக்கியம் என்று பார்த்தால் ஓரிரு கட்டுரைகளைத் தவிர வேறொன்றும் சொல்வதிற்கில்லை. தங்கள் கருத்துக் களைப் படைப்பிலக்கியம் மூலம் வெளியிடும் சக்தியின்றிக் கட்டுரைகளாய் வெளியிடுகின்றன. மேலும் ஒவ்வொரு இதழிற்கும் பின்னும் ஒவ்வொரு கழகம் இருக்கிறது. எனவே கழகத்தின் செய்திகளை வெளியிடும் வெறும் செய்தி இதழாகக் குறுகிப் போய்விடுகின்றன. அழகு அழகான, ஆழமான கட்டுரைகளை ஒரு காலத்தில் வெளியிட்ட தென்மொழி கூட, தற்போது வெறும் கழகச் செய்திகளின் தொகுப்பாகக் காணக் கிடக்கிறது.

இந்த இதழ்களுள் ''பொதுமை'' இதழ்தான் நம்பிக்கை அளிக்கக் கூடியதாய் இருக்கிறது. ஈழப் பிரச்சனையை இந்த இதழ்கள் அணைத்தும் தலைமேற்கொண்டு எழுதி இருக்கின்றன என்றாலும், 'பொதுமை' வெளியிட்ட கட்டுரைகள் போல வேறு எந்த இதழ்களும் வெளியிட்டுவிடவில்லை. இந்த இதழ்களுள் ''பாரதியை'' மகாகவி என்று ஏற்றுக் கொள்கிற ஒரே இதழ் ''பொதுமை'' ஒன்றுதான். போலந்து பிரச்சனை போன்ற உலகப்பிரச்சனைகளையும் தமிழ் வாசகர்களுக்கு அளிக்கிறது பொதுமை! தனிமனிதனைத் தலைமேல் வைத்துக் கொண் டாடுதல் என்கிற கொடுமையிலிருந்தும் விடுபட்டு நிற்கிறது

த. கோவிந்தனின் பொதுமை எனலாம். மொழி வெறியை இனவெறியைத் தன்னலத்திற்காக, தலைமைக்காக, பெரும் புகழுக்காகத் தூண்டிவிடும் நிலைமை இன்னும் தொடர்வதைப் பொதுமை சுட்டிக்காட்டுவதும், மொழி இனப் பிரச்சனை களை அறிவியல் பூர்வமாக அணுகுகிற தன்மையும் பொதுமை தொடர்ந்து வெளிவரவேண்டும் என்கிற ஆசையைத் தூண்டு கின்றன.

தமிழ்நாடு பகுத்தறிவு சமதர்ம இயக்கத்தின் இதழாக நெ. சுந்தர வடிவேல் அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'அறிவு வழி' வெளிவருகிறது. கடவுள் மறுப்புக் கொள்கையை- பிராமண எதிர்ப்புக் கொள்கையை முதன்மைபடுத்தி, பொதுவுடைமைக் கொள்கையை அடுத்த நிலையில் வைத்துப் பேசுகின்றது. பகுத்தறிவு, சிந்தனையாளன், உண்மை என்று பல இதழ்கள் தந்தை ஈ. வெ. ரா. வழியில் வந்துகொண்டிருக்கின்றன.

இனி பிற இதழ்கள் என்ற பிரிவிலுள்ள பல இதழ்கள் என் பார்வைக்குக் கிடைக்கவில்லை. சிறு பத்திரிக்கையுலகில் அவை களின் தாக்கமும் குறைவுதான். காரணம் இவைகள் அனைத்துமே (பல்சுவை இதழ்கள் தவிர) தமிழ் இலக்கிய இலக்கணப் படிப்புப் படித்தவர்கள் மத்தியில் மட்டுமே பேசப் படுபவை. படைப்பிலக்கியங்கள் அறவேயின்றி, பழைய, புதிய இலக்கியங்களைப்பற்றிய கட்டுரைகளை மட்டும் வெளியிடுபவை. முழுக்க முழுக்கக் கல்வி சார்ந்த இதழ்களாக மட்டும் இருப்ப தால் இங்கே இவ்வளவு சொன்னது போதுமென்றே கருதலாம்!

சிறுபத்திரிகைகள் அனைத்தையும் மொத்தமாக வைத்துப் பார்க்கும்போது சில உண்மைகள் காணக்கிடக்கின்றன.

சமூகத்தில் நடக்கும் அநீதிகளைத் தேனீ போலத் திரட்டித் சிறுபத்திரிக்கைகள் சுறுசுறுப்பாக இருக்கின்றன.

இன்றைய சமூக அமைப்பைக் கடுமையாக விமர்சிக்கின்றன; கொடுமையாக மாறிப் போய்விட்ட சமூகத்தின் பழக்க வழக்கத்தின் மேல் வெட்டுக்கிளியாய் விழுந்து வெட்டித் தீர்க்கின்றன.

பெரும்பாலும் எல்லா விதமான சிறுபத்திரிகைகளுமே மொழி பெயர்ப்புகளைப் பெரிதும் வெளியிடுகின்றன.

82 பாரதி நூற்றாண்டு ஆதலால், பாரதியைப்பற்றி பெரும் பாலும் எல்லா இதழ்களுமே மலர், கட்டுரை, கவிதை என்று வெளியிட்டிருக்கின்றன. ஆனால், பாரதிக்கு நூற்றாண்டுவிழா

எடுத்த முறையைக் கடுமையாக அனைத்து இதழ்களுமே சாடி யிருக்கின்றன. 'பாரதி' என்கிற 'சொல்' மட்டும் சந்தைக்கு வந்து விட்ட அவலத்தை உரைக்கும்படி வெளியிட்டுள்ளன.

சிறு பத்திரிக்கை மத்தியிலும் குறிப்பிட்ட சிலரே எழுதுவதை யும், பத்திரிகைக்குத் தகுந்தவாறு எழுதுகிற எழுத்தாளர்களை யும் பார்க்க முடிகிறது.

கொள்கை உடன்பாடுடைய சிறு பத்திரிகைகைகளாவது ஒன்றாகச் சேர்ந்து ஒரே இதழாக வெளியிட்டால் இன்னும் சிறு பத்திரிகைகளின் பலம் விரிவடையும் என்பதில் ஐயமில்லை.

82-சிறு பத்திரிகைகளில் குறிப்பிடும் படியான ஒரு வளர்ச்சி தெரிகிறது. 70-களில் நடந்த பத்திரிக்கைகளில் திறனாய்வு என்ற பேரில் குழுச் சண்டையானது குடுமிபிடிச் சண்டையாக நடந்து கொண்டிருந்தது. வெ. சாமிநாதனும், தருமு சிவராமும், வெ. கிருஷ்ணசாமியும் இதை விமர்சனம் என்ற நல்ல பெயரின் கீழ் செய்து கொண்டிருந்தார்கள். இதை வல்லிக் கண்ணனும் தீபம் ஜூன் 82-இதழில் கசப்பான உண்மை என்று குறிப்பிடு கிறார். இந்தத் தன்மை 82-இதழ்களில் குறைந்திருக்கிறது அல்லது இல்லை என்றே சொல்லி விடலாம். கருத்து வேறு பாடுகள் ஒரு ஆரோக்கியமான சூழலில் பேசப்பட வேண்டும் என்பதை எல்லா இதழ்களுமே புரிந்திருப்பது போல் தெரிகிறது.

நிலை பெற்றிருக்கும் சமூக மதிப்பீடுகள் உடைமைவாக்கம் தனது வர்க்க நலத்திற்காக விரிக்கப் பட்டிருக்கும் வலைகள் என்கிற விழிப்புணர்வை எந்த விதமான ஐயத்திற்கும் இடமின்றி உணர்ந்த பின்புங்கூட, அவைகளை உதறிவிட்டு வரமுடியாமல் முரண்பாடுகளுக்குள் சிக்கிக்கொண்ட மத்தியதர மனிதர்களும்— மாதச்சம்பளம் (ஒன்றோ இரண்டோ) வாங்கும் அறிவு ஜீவி களும் — [14]இந்தச் சிறுபத்திரிக்கைகளை நடத்துபவர்களாக இருக்கிறார்கள். மேலும் சாதிப் படிக்கட்டில் மேலே இருப்பவர் களும் நடுவில் இருப்பவர்கள்தாம் இவர்களுள் பெரும்பாலோர் : இத்தகைய பொருளாதார, சமூகப் பின்னணியின் பாதிப்பு இந்தச் சிறு பத்திரிகைகளின் நடைமுறையை நிர்ணயிக்கின்றன.

கடைசியில் ஒன்று சொல்ல வேண்டும். தமிழிலக்கியப் படைப்பு வரிசையில் காலத்தைக் காலுக்குள் அடக்கி நிற்கும் சக்தி வாய்ந்த படைப்புக்கள் சிறுபத்திரிகைகளின் மத்தியில் தான் கருக் கொண்டிருக்கின்றன என்று நாம் துணிந்து கூறலாம். பெரும் பத்திரிகைகள் தமிழால் பிழைக்கின்றன! சிறு பத்திரி கைகள் தமிழுக்காகப் பிழைப்பு நடத்துகின்றன!

## மேற்கோள் விவரப் பட்டியல்

1. எழுத்து காலம் பற்றி எழுதி முடித்து விட்டதாகவும், விரைவில் வெளிவரும் என்றும் ஆறு திங்களுக்கு முன்பு சி.சு செல்லப்பா அவர்கள் நேரில் பார்க்கும் போது சொன்னார்.
2. விழிகள், குமுறும் நெஞ்சம், கலைக்கதிர், பொன்னகரம், 'ஓ, கலைச்சுரங்ககம், காற்று, துளிகள், சுரங்கம், தலித்குரல், அறிவு வழி-முனைவன்:
3. ஆகஸ்டு-82-கணையாழி
4. டிசம்பர் 82-கணையாழி
5. அக்டோபர் 82-கணையாழி
6. சூன்-82 [74ஆவது இதழ்]சதங்கை
7. ஒன்று என்பதில் கேள்வி இல்லை
   கேள்வி எப்படி ஒன்று பலவாச்சு
   என்பதுவும் இல்லை.
   கேள்வி எல்லாம் ஒன்று எப்படி
   இரண்டாச்சு என்பதில் தான்!
   ஆதலால் ஒன்றே என்பது உண்டா என்பது தான்!
   —சம்பத்—
8. நவம்பர்-82-ஸ்வரம்
9. அக்டோபர் 82ஸ்வரம்
10. படிகள்—பனிரெண்டு
11. நவம்பர்-82—செம்மலர்

13. சூன்.1982—தீபம்

13. இந்தத் தன்மையை 'ஸ்வரம்' இதழுக்கு எழுதியுள்ள வண்ண தாசனின் மடல் அழகாகக் காட்டுகிறது.

"70-71 இல் ராமச்சந்திரன் [வண்ணநிலவன்] கோபால், பா.செயப்பிரகாசம என்று திருநெல்வேலியில் ஒரு குறுகிய பருவகாலம் இருந்ததும் மறைந்ததும் ஞாபம் வருகிறது. வாழ்க்கை திசைதிசையாக ஒவ்வொருத்தரையும் விரட்டிக் கொண்டதில் சிதறிப் போனோம். அடிப்படையாகப் போனால் வயிற்றுக்காக... இதில்இழந்து போனதுஅதிகம், பெற்றிருப்பது எல்லாமே தற்காலிகம் என்று பெறும் போதே தெரிவதால், ஆழ்ந்து போகவும் முடியவில்லை. மீண்டு கொள்ளவும் வழி யில்லை."

'ஸ்வரம்'-ஏப்ரல் மே-1982.

## ஆய்வுக்காகத் தொடர்பு கொண்ட இதழ்கள்:

1. தமிழியக்கம் - சென்னை
2. சிந்தனையாளன்-திருச்சி
3. விழிகள் - மதுரை
4. பிருந்தாவனம் - பெங்களூர்
5. நவீனம் - மானாமதுரை
6. மலர்கள் - சென்னை
7. கேடயம் - சென்னை
8. ராகதீபம் - கோவை
9. கார்க்கி - சென்னை
10. புதிய நம்பிக்கை - தேனி
11. 'ழ' — சென்னை
12. பரிமாணம் - கோவை
13. நிஜங்கள் - மதுரை
14. யாத்ரா - திருச்சுழி
15. கொல்லிப்பாவை - பொற்றையடி
16. சதங்கை-நாகர்கோயில்
17. காற்று - கோவை
18. நிஜங்களின் நிழல்கள் - சென்னை
19. புதுப்புனல் - வடலூர்
20. பேசும் துளிகள் - திருவிடை மருதூர்
21. சுழல் - திருச்சி
22. அறிவுக் கூர்வாள் - சென்னை
23. மானுடம் - திருச்சி
24. தலித்குரல் - சென்னை
25. ஆர்ணிகா - திண்டுக்கல்
26. சாணக்கியன்-சென்னை
27. கண்ணீர்க் குரல்- கடலங்குடி
28. பார்வைகள் - சென்னை
29. புயல் — திருச்சி
30. சமூகநிழல் - மானா மதுரை
31. கலைச்சுரங்கம் - சென்னை
32. தேனலைகள் - ஒட்டன் சத்திரம்
33. அறிவுவழி - சென்னை
34. ஜன்னல் பார்வை-சேலம்
35. சான்றோர்முரசு - இராமேசுவரம்
36. சுரங்கம் - நெய்வேலி
37. குறளியம் - ஈரோடு
38. க்ளிக் - சென்னை
39. அறிவுச்சுடர்-சென்னை
40. சிம்லா - இளையான்குடி
41. மாதுளை - மோகனூர்
42. உதயம் - கும்பகோணம்
43. மாலை நினைவுகள் - நாமக்கல்
44. காளை - மதுரை
45. கேள்விகள் - சென்னை
46. புதியபறவை - திருப்பூர்
47. போரணி - சென்னை
48. காவியப்பாவை - சென்னை
49. பாட்டாளி தோழன் - சென்னை
50. மக்கள் ரதம் - மதுரை
51. பாலம் - திருமுக்கூடல்
52. துளிகள் - கோவை
53. உணர்வுகள் - சென்னை
54. தீச்சோலை - சென்னை
55. 'ஓ' - மதுரை
56. இளையகரங்கள் - கோவை
57. ஸ்வரம் - ஊட்டி
58. 'வால்'-இளையான்குடி
59. முகில் - நாட்டாரம் பள்ளி

60. பெண் விடுதலை - சென்னை
61. உரிமை - திருச்சி
62. பொன்னகரம்-சென்னை
63. நெஞ்சம்-திருப்பத்தூர்
64. நூதன விடியல் - விழுப்புரம்
65. எழுச்சி - கும்பகோணம்
66. மயில் - மார்த்தாண்டம்
67. தாமரை - சென்னை
68. செம்மலர் - மதுரை
69. சிகரம் - சென்னை
70. கணையாழி - சென்னை
71. கவிப்புனல் - சென்னை
72. ஆராய்ச்சி - தூத்துக்குடி
73. முனைவன் - குடந்தை
74. தேன்மழை - சென்னை
75. கலைக்கதிர் - கோவை
76. உதயக்கதிர் - சென்னை
77. குமுறும் நெஞ்சம் - திருச்சி
78. முழக்கம் - பூம்புகார்
79. மனஓசை - சென்னை
80. தமிழ்ப்பொழில் - கரந்தை

இவற்றுள் என் தொடர்புக்குப் பதில் அளித்து உதவி செய்த புதிய நம்பிக்கை, விழிகள், குமுறும் நெஞ்சம், கலைக்கதிர், பொன்னகரம், 'ஓ', உணர்வுகள், கலைச்சுரங்கம், காற்று, துளிகள் சுரங்கம், தலித்குரல், புதுப்புனல், அறிவுவழி, முனைவன் ஆகிய இதழ்களின் நண்பர்களுக்கும், என் பார்வைக்குப் பல இதழ்களைக் கொடுத்து உதவிய மாணவத் தம்பி அரிமா வளவனுக்கும், செம்மலர் அனுப்பி உதவிய நண்பர் அஸ்வகோஷ் அவர்களுக்கும், தாமரை கொண்டு வந்து கொடுத்த மாணவத் தம்பி ரவீந்திரனுக்கும், தனித்தமிழ் இதழ்கள் கொடுத்துதவிய திரு. தங்கப்பா அவர்களுக்கும் பல்லாற்றானும் துணை நின்ற நண்பர் சாயபு மரைக்காயர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# 9. மருத்துவ இதழ்கள்

கு. மதிவாணன்

*1908*—இல் தமிழில் முதல் மருத்துவ இதழ் தோன்றியது. *1982*—இல் 19 மருத்துவ இதழ்கள் தமிழில் வெளியாகியுள்ளன. மருத்துவஇதழ்களைப் படிக்கும் வாசகர்எண்ணிக்கை குறைவாக இருப்பதால் குறைந்த முதலீட்டினைக் கொண்டு குறைந்த பிரதிகளே அச்சடிக்கப் படுகின்றன. எனினும், இவ் இதழ்களில் மருத்துவக் தொடர்பான சிறந்த கட்டுரைகள் அவ்வப்போது வெளிவருவது குறிப்பிடத்தக்கது.

மருத்துவர்கள் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும், மருத்துவ கருத்துக்களை மக்களிடையே பரப்பவும் பயன்படுவன மருத்துவ இதழ்கள். இவை குறைந்த முதலீட்டினைக் கொண்டு குறைந்த படிகளே அச்சிடப்படுகின்றன. மருத்துவ இதழ்களின் வாசகர் வட்டமும் குறைவு. ஆகவே, தமிழ்கூறு நல்லுலகில் மருத்துவ இதழ்கள் பற்பல தோன்றினும் பெரும் பாலானவை விரைவில் மறைந்துவிடுகின்றன.

தமிழில் தோன்றிய முதல் மருத்துவ இதழ் ஆயுர்வேத பாஸ்கரன் (1908), ஆகும். வைத்திய போதினி (1910), நல்வழி (1911), சித்தர் திரு உள்ளம் (1920), தமிழ்வைத்தியக் களஞ்சியம் (1922), தமிழ் வைத்தியம் (1923), தன்வந்தரி (1923), மருத்துவன் (1929), சித்தர் களஞ்சியம் (1934), வைத்திய சந்திரிசா (1938), ஹோமியோபதி (1946), ஹோமியோபதி மித்திரன் (1950), ஹோமியோ புல்லட்டின் (1952), ஆரோக்கிய மார்க்கம் (1956), ஆரோக்கியம் (1962), மூலிகை மணி (1964), மூலிகை ரகசியம் (1965), முதல் சித்தன் (1966), சித்த ஜீவ மலர் (1972), செந்தமிழ்ச் சித்தன் (1973), ஹோமியோ சிந்தனை (1979), ஓமியோ அறிவியல் (1981) போன்றவை அதனைத் தொடர்ந்தன,

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து இரண்டாம் ஆண்டில் தமிழில் வெளிவந்து கொண்டிருந்த சித்தம், ஆயுர் வேதம், யூனானி, ஓமியோபதி, அலோபதி இயற்கை மற்றும்

அவை சார்ந்த நலவியல் இதழ்கள் பற்றிய செய்திகளைத் திரட்டித் தருவதும், ஆய்வுக் கண்ணோட்டத்தில் அவற்றை மதிப்பீடு செய்வதும் இக்கட்டுரையின் நோக்கம். 1982இல் பல்வேறு இதழ்களில் வெளிவந்த மருத்துவக் கட்டுரைகளையோ மருத்துவத் துணுக்குகளையோ இவ்வாய்வில் சேர்த்துக்கொள்ள வில்லை.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இதழ்கள் பத்தொன்பது. மருத்துவமுரசு, சித்த மருத்துவம், சித்த கருவூலம், சித்தர் செயல், மூலிகைமணி, தமிழ் முனிவன், ஆரோக்கியம், ஓமியோபதி, ஓமியோபதித் தொண்டன், சுகவழி, ஹானிமன், ஈஸ்டர்ன் ஓமியோ ஸ்டார், அலோபதிக் மெடிக்கல் ஜர்னல், நல்வழி, மருத்துவ மஞ்சரி, ஆரோக்கிய மலர், செந்தமிழ்ச் சித்தன், ஏர் உழவன், இருமலர் ஆகியவை அவை.

அவற்றுள் பதினைந்து முழுவதும் மருத்துவ இதழ்கள். நலவியல் இதழ் ஒன்று. மருத்துவமும் பிற கலைகளும் இணைந்தவை மூன்று.

மருத்துவ முரசு, சித்த மருத்துவம், சித்தர் கருவூலம், சித்தர் செயல், மூலிகைமணி, தமிழ் முனிவர் ஆகிய ஆறும் சித்த மருத்துவ இதழ்கள். ஓமியோபதி, ஓமியோபதித் தொண்டன், சுகவழி, ஈஸ்டர்ன் ஹோமியோ ஸ்டார், ஹானிமன் ஆகிய ஐந்தும் ஓமியோபதி இதழ்கள். ஆரோக்கிய ஆயுர்வேத இதழ் Allopathie Medical Journal அலோபதி மருத்துவ இதழ், மருத்துவ மஞ்சரி, ஓமியோபதி, சித்தம் அலோபதி பற்றியது. ஆரோக்கிய மலர் சித்தம், ஆயுர்வேதம், யூனானி, அலோபதி மற்றும் ஓமியோபதி பற்றியது.

நல்வழி அலோபதி மருத்துவம் சார்ந்த நலவியல் இதழ். செந்தமிழ்ச் சித்தன் மருத்துவம், சோதிடம் பற்றியது. இரு மலர் சமூகம், மறைச்செய்தியுடன் சிறுபான்மை, ஓமியோபதி சித்த ஆயுர்வேதக் கருத்துக்களைத் தருவது. ஏர் உழவன் இயற்கை மருத்துவம், வேளாண்மை பற்றியது.

இவற்றை நிறுவன வெளியீடுகள், தனியார் வெளியீடுகள் எனப் பகுக்கலாம். 'ஓமியோபதி', 'நல்வழி', 'ஆரோக்கியம்', ஆகிய மூன்று இதழ்களும் நிறுவன வெளியீடுகள். ஏனையவை தனியார் வெளியீடுகள்.

1982-இல் வெளிவந்த மருத்துவ இதழ்களின் ஒட்டு மொத்த உணர்வினைக் காணும்பொழுது அவை மருத்துவக் குறிப்புகளை வழங்குவதுடன் நோயாளிகளைத் தங்கள்பால் ஈர்க்கவும்,

தாங்கள் தயாரித்த மருந்துகளை வாங்கத் தூண்டவும், தாங்கள் நடத்தும் பயிற்சி வகுப்புகளில் சேரத் தூண்டவும், மருத்துவச் சங்கங்களின் நிலையை எடுத்துரைத்து அவை வளரும் வழி தேடவும் பயன்படுகின்றன என்பது வெள்ளிடைமலை.

**இறையுணர்வு:**

மருத்துவ இதழ்களில் பல தெய்வ நம்பிக்கையினை ஊட்டுவன. மூலிகைமணி பெரும்பாலும் திருப்புகழ்ப் பாடலுடனும் தமிழ் முனிவன் திருவாசகப் பாடலுடனும் தொடங்கி இறை நம்பிக்கையை—ஊட்டுவன. ஆரோக்கியம் இதழும் இதனைத் தவறாது செய்து வருகிறது. ஓமியோபதித் தொண்டன் நற்செய்திக் கூட்டங்களை நினைவுறுத்தும். அருட்பெருஞ்சோதி யான கடவுள் நிலை போன்ற கவிதைகள் சித்தர் செயல் இதழில் வெளிவந்து இறையருளைக் கூட்டும்.

**ஆன்மீகக் கருத்துக்கள்**

சில மருத்துவ இதழ்கள் நல்லெண்ணத்தையும் நல்லொழுக் கத்தையும் உருவாக்கும் கருத்துக்களைத் துணுக்குகளாக வெளி யிட்டுள்ளன. ஆரோக்கியம் இதழின் மேல் அட்டையும் உள் அட்டையும் வாக்படர், சரகர், சூச்ருதர், சிவப்பிரகாசர் போன்றோரின் பொன்மொழிகளுடன் பொலிவுறுவன. 'ஆகம வேதங்கள் ஏதுக்கையா?' என்னும் கவிதையினைச் சாகாக் கல்வி சாமிநாதன் 'சித்தர் செயலில்' (செப். 28) வழங்கியுள்ளார். 'ஆருயிரைச் சேவிப்பதே ஆண்டவன் சேவை', 'மாதவம் செய்யாதார் மனிதராமோ?', ஆன்மீக வாழ்வே அழிவைத் தராத வாழ்வு' என்னும் தலைப்புக்களில் சிவானந்த தாசின் கவிதைகளையும் வள்ளலாரின் அமுத மொழிகள் சிலவற்றையும் சித்தர் செயல் வெளியிட்டுள்ளது.

**அரசுத் திட்டங்கட்குப் பாராட்டும்—சிறக்க வழிகளும்:**

சில மருத்துவ இதழ்கள் அரசின் சில திட்டங்களுக்குப் பாராட்டும், அவை மேலும் சிறக்க வழிகளும் கூறியுள்ளன. சத்துணவுத் திட்டத்தினை மீண்டும் நடைமுறைக்குக் கொண்டு வந்த தமிழக முதலமைச்சரைச் சித்தர் செயல் (ஆக. 82), சித்தர் கருவூலம் (செப். 82) ஆகிய இதழ்கள் பாராட்டியுள்ளன, அத்திட்டத்தினை மூலிகை மணி பாராட்டுவதுடன் அத்திட்டம் சிறக்கச் சத்து நிறைந்த உணவுப் பட்டியல் ஒன்றினையும் (பிப். 82) சத்துணவுத் திட்டச் செலவுகளைக் குறைக்கச் சில அறிவுரைகளையும் (மே. 82) அளித்துள்ளது. தமிழக அரசு கொண்டு வந்த பசுவதைத் தடைச் சட்டத்தினைச் சித்தர்

கருவூலம் பாராட்டியுள்ளது. சித்த மருத்துவ அறிவியல் மேம்பாட்டுக்குழு சித்த மருத்துவச் சிறப்பினை உலகுக்கு எடுத்துரைக்க உருவாக்கப்பட்டது என்று 'சித்தர் கருவூலம்' புகழாரம் சூட்டியுள்ளது.

**நாட்டு நடப்பு — சமூக உணர்வு :**

நாட்டு நடப்பினைப் படம் பிடித்துக் காட்டும் பணியினையும், சில இதழ்கள் செய்து வருகின்றன. 'கேடு கெட்ட பண ஆசை' (மருத். மஞ்சரி, சூலை—82) என்னும் விருதை ஜி. ஆல்பர்ட்டின் கவிதையும், 'வாங்காதீர் வரதட்சிணை' (நல்வழி, டிசம்., 82) என்ற பி. பரமசிவத்தின் கவிதையும், 'சமயச் சார்பற்ற இந்தியா' (நல்வழி, டிசம்., 82) என்னும் கட்டுரையும் அவற்றுள் சில. வேலை கிடைக்க வேண்டும் என்னும் பேராவலினை 'முத்தாகக் கிடைத்துவிட்டால்' (மருத்துவ மஞ்சரி, ஆக., செப். 82) என்னும் மருத்துவர் லோகநாதனின் கவிதையும், இன்றைய சமுதாய ஏற்றத்தாழ்வின் நிலையினை 'கொண்டாட்டமும் திண்டாட்டமும்' (மருத். மஞ்சரி. நவம்., 82) என்னும் விருதை ஜி. ஆல்பர்ட்டின் கவிதையும் விளக்குகின்றன.

**வினாவும் விடையும் :**

பல இதழ்கள் வாசகர்கள் வினாவும் மருத்துவம் மற்றும் உடல் நலவியல் தொடர்பான வினாக்கட்கு விடை கூறுகின்றன. சித்தர்செயல், ஆரோக்கிய மூலிகை மணி, மருத்துவ மஞ்சரி, சித்தர் கருவூலம், நல்வழி, Allopathic Medical Journal ஆகிய இதழ்கள் அவை. 5-6-82 முதல் ஏர் உழவன் இதழும் வினா — விடைப் பகுதியினை வெளியிடத் தொடங்கியது. இத்தகைய வினா விடைகளால் ஏழை எளியவர்கட்குச் செலவின்றி மருத்துவம் கிடைப்பதோடு மருத்துவ விழிப்புணர்வும் வாசகரிடையே உருவாகின்றது.

**மருத்துவக் கவிதைக் கனிகள் :**

சில இதழ்களில் மருத்துவக் கவிதைகளும் கனிந்துள்ளன. ஓமியோபதி மருந்துகளின் தன்மைகளைக் கவிதை வடிவில் வடித்துத் தந்துள்ளார் கொடுமுடி மருத்துவர் க. அ. பிரகாசம். ஓமியோபதி, சுகவழி போன்ற இதழ்களில் அவை வெளிவந்துள்ளன. பன்னிரு பயோ மருந்துகள் என்னும் தலைப்பில் "பயோ கெமிக்" மருந்துகளின் குணங்கள் பயன்படு முறை முதலியவற்றைக் கவிதை வடிவில் தந்துள்ளார் நாகர் கோவில்

சிவன். ஓமியோபதி இதழ் தொடர்ந்து அவற்றை வெளியிட்டுள்ளது. பெண்களின் பருவநிலை மாற்றங்களை 'மலர்கின்ற பருவத்திலே' என்னும் தலைப்பில் தொடர் கவிதையாக வடித்துள்ளார் புதுவைப் பாவலர் பண்ணடிமை பரமகேது.

மருந்துகள் பயன்படு முறை கவிதை வடிவில் உள்ளதால் அவை எளிதில் மனப்பாடம் செய்யவல்ல நிலையில் உள்ளன.

**மருத்துவக் கட்டுரைகள் :**

மருத்துவ இதழ்களின் பெரும்பகுதி கட்டுரைகளே. அவை நோயின் தன்மை. அவற்றிற்குரிய மருந்துகள் முதலியவற்றை எடுத்துரைப்பன. பெரும்பாலான கட்டுரைகள் தடுப்பு முறைகளையும் எடுத்துரைப்பன. சித்த, ஆயுர்வேத யூனானி மருத்துவக் கட்டுரையாயின் மருந்து செய்யும் முறையும் கூறப்படும். அவற்றுள் பல, தொடர் கட்டுரைகள். சித்தர் செயல், மருத்துவ மஞ்சரி போன்ற இதழ்கள் அவ்வப்பொழுது ஆங்கிலக் கட்டுரைகளையும் வெளியிடுகின்றன. சித்தர் செயல் சித்த மருத்துவத்தின் சிறப்பினை உலகறிய எடுத்துரைக்கும் என்னும் நோக்கத்துடன் பல பேட்டிக் கட்டுரைகளை அவ்வப்பொழுது வெளியிடுகின்றது. ஏர் உழவன் இயற்கை மருத்துவத்தின் மூலம் நோய் நீங்கி நலம் பெற்றோரது அனுபவத்தை வெளியிடும் பேட்டிக் கட்டுரைகளைத் தவறாது வெளியிடுகின்றது.

பல சித்த மருந்துகளுக்கு அடிப்படையாக விளங்கும் 'முப்பு' என்பது என்ன என்பதில் கருத்து வேறுபாடு உண்டு. அது பற்றிய ஆய்வுக் கட்டுரை ஒன்றினை மருத்துவர் பி. பாலசுப்ரமணியம் 'மருத்துவ முரசு'(சூலை 82), 'ஆரோக்கிய மலர்' (சூன் 82) ஆகிய இதழ்களில் எழுதியுள்ளார். மெய்யப்ப சுவாமி என்பவர் 'மூலிகை மணி' இதழில் (ஏப் 82) முப்பு பற்றி ஒரு தொடர் கட்டுரை எழுதி வந்தார்.

சிக்கலான நோய்கட்கு ஏற்ற மருந்துகளைத் தேர்ந்தெடுத்து, நோய் நீக்கும் பணியில் தாங்கள் பெற்ற வெற்றியினையும், அம்முறையினையும் 'அனுபவ கேஸ்' எனும் தலைப்பில் 'ஓமியோபதி' இதழ்கள் சிறப்பாக வெளியிடுகின்னை.

பிற இதழ்களில் வெளிவரும் மருத்துவம் மற்றும் மருத்துவத் தொடர்பான கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்து சுகவழி, மூலிகை மணி, ஏர் உழவன் போன்ற இதழ்கள் வெளியிடுகின்றன. அவ்வகையில் 'மூலிகைமணி' இதழில் 'டாக்டர்! டாக்டர்!' என்ற கிராக்கியின் (காவல்துறைத் தலைமை அதிகாரி கி. ராதாகிருஷ்ணனின்) கட்டுரை இன்றைய மருத்துவத்தின் அவல நிலையைப்

படம் பிடித்துக் காட்டுவதுடன் — ஆங்கில மருந்துகள் — அம்மருத்துவத்துறை பற்றிய விழிப்புணர்வையும் சுட்டிக் காட்டுகிறது.

தமிழ்நாடு ஓமியோபதி சங்க மாநில மாநாடு பற்றி வள்ளியின் செல்வன் எழுதிய தொடர் கட்டுரை (மருத்துவ மஞ்சரி) நேர்முக வர்ணனை போன்ற அமைப்பில் அமைந்துள்ளது. 'ஆரோக்கிய' மலர் இதழில் மருத்துவர் R. K. பழனியப்பா அவர்கள் எழுதிய 'நான் கண்ட கொல்லிமலைச் சுரங்கம்' (பிப். 82) என்னும் தொடர் கட்டுரை கொல்லிமலை வட்டார வழக்கினையும் வாசகர்கட்கு அளித்து மகிழ்வூட்டுகிறது.

ஓலைச்சுவடிகளிலிருந்து :

செல்லின் வாயில் செல்லவிருந்த பழைய மருத்துவ ஓலைச் சுவடிகளில் உள்ள மருத்துவக் குறிப்புக்களைச் சில இதழ்கள் எடுத்து அச்சேற்றி வாசகர்கட்கு வழங்குகின்றன. 'வாத நிதானம்' என்ற ஓலைச்சுவடியில் உள்ள செய்திகளைக்கொண்டு மக்கள் நோய்' என்னும் தலைப்பில் மருத்துவர் பி. கேசவப் பிள்ளை அவர்கள் 'சித்தர் கருவூலத்தில்' ஒரு தொடர் கட்டுரை எழுதி வந்துள்ளார். ஓலைச் சுவடிகளில் உள்ள பல மருத்துவக் குறிப்புக்களை மருத்துவர்க்காகவும், மக்களின் பார்வைக்காகவும் மூலிகைமணி தொடர்ந்து வெளியிட்டு வருகிறது.

நம் நாட்டு மூலிகைகள் :

நம்மைச் சுற்றி வளர்ந்து வருவனவும் எளிதில் கிடைக்கக் கூடியனவுமான மூலிகைகளை இனங் காணவும், பயன்படுத்தி நோய் நீங்கவும் சில மருத்துவ இதழ்கள் துணை புரிகின்றன. மூலிகை மணி தவறாமல் ஒரு மூலிகையினைப் படத்துடன் அட்டையில் அறிமுகம் செய்கிறது. அறிமுகம் செய்யப்படுகின்ற மூலிகையின் தொடர் எண்ணும் குறிக்கப்படுகின்றது. கட்டுரை மூலம் விளக்கம் கொடுக்கப்படுகின்றது. ஆரோக்கியம், சித்தர் கருவூலம் ஆகிய இதழ்களும் மூலிகையின் தோற்றம், கிடைக்குமிடம், பயன்படுத்தும் முறை ஆகியவற்றை விளக்கும் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிடுகின்றன.

மதிப்புரை:

நூல்களைச் செவ்வனே மதிப்பிட்டு மதிப்புரை வழங்கும் பணியினையும் சில மருத்துவ இதழ்கள் செய்து வருகின்றன. துலாக் கோல் என்னும் தலைப்பில் மருத்துவ நூல்களையும் பிற துறை நூல்களையும் சித்தர் செயல் மதிப்பீடு செய்து மதிப்புரை

வழங்கியுள்ளது. S. சிதம்பர தாணுப் பிள்ளையின் **நோய் விளக்கம்** என்னும் நூலுக்குச் **சித்தர்கருவூலம்** (சூலை 82) மதிப்புரைவழங்கியுள்ளது. அமரர் S. V. .சுப்பிரமணியத்தின் 'பயோ கெமிஸ்ட்ரி ரெப்பர்ட்ரி' என்னும் நூலுக்கு 'மருத்துவ மஞ்சரி, மதிப்புரை வழங்கியுள்ளது. 'ஏர் உழவன்' இதழும் மதிப்புரை வழங்கும் பணியினைச் செய்கின்றது.

**அறியலாகும் புதிய மருத்துவ நூல்கள்**

புதிய மருத்துவ நூல்களின் வெளியீட்டினை மருத்துவ இதழ்கள் நமக்கு அறிவிக்கின்றன.

1. சித்தர் காப்பியம் —மருத்துவர் பி. கேசவப்பிள்ளை
2. நித்திரை பலன் —S. சிதம்பர தாணுப் பிள்ளை
3. சோதிடமும் ஓமியோபதியும் —S. K. இராமச்சந்திரன்
4. பயோகெமிஸ்ட்ரி ரெப்பர்ட்டரி —V. S. சுப்பிரமணியம்

போன்றவை அவை.

**வாழ்த்து:-**

பல மருத்துவ இதழ்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றன. மருத்துவ முரசு, சித்தர் கருவூலம், சித்தர் செயல், தமிழ் முனிவன், ஓமியோபதி, ஓமியோபதித்தொண்டன் சுகவழி, ஈஸ்டர்ன் ஓமியோ ஸ்டார், மருத்துவ மஞ்சரி, ஆரோக்கிய மலர் ஆகிய இதழ்கள் தங்களது இதழோடு தொடர்புடையவர்களின் திருமணம், பிறந்த நாள், அறுபதாம் ஆண்டு நிறைவு போன்ற நாட்களில் தங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றன. வாழ்த்துக்கள் கவிதை வடிவிலும் வெளிவந்துள்ளன.

**வருத்தம்:-**

பல மருத்துவ இதழ்கள் அரும்பெரும் மருத்துவர்களது மறைவினையும், மருத்துவத்துடன் தொடர்புடையவர்களது மறைவினையும் நமக்குத் தெரிவிக்கின்றன. மதுரை மருத்துவர் A. V. ரங்காராவ் (18-1-82), புதுவை மருத்துவர் V. முத்தையன் (14-1-82), சேலம் சித்த மருத்துவர் இராஜப்பிள்ளை, சென்னை மருத்துவர் முத்துக் குமாரசாமிச் செட்டியார், கோவை மருத்துவர் K.V. கிரி, சூளைமேடுமருத்துவர் R. பட்டாபிராமன் (27-12-81), முதலியோருடைய மறைவுச் செய்திகள் குறிப்பிடத் தக்கவை.

விளம்பரங்கள்:-

பெரும்பாலான மருத்துவ இதழ்கள் பல்வேறு விளம்பரங்களைத் தாங்கி வருகின்றன. தங்கள் மருத்துவ மனையில் மருத்துவரைச் சந்திக்கும் நேரம், தாங்கள் நடத்தும் நேர்முக மருத்துவ வகுப்புகள் பற்றிய விளம்பரங்களுடன் மருந்து, மருந்தக விளம்பரங்களையும் தாங்கி வருகின்றன.

தமிழ் முனிவன், நல்வழி, செந்தமிழ்ச் சித்தன் ஆகிய மூன்று இதழ்களும் விளம்பரமில்லாமல் நடத்தப்படுகின்றன.

சித்த மருத்துவப் பரம்பரை வரை:-

சித்த மருத்துவப் பரம்பரையை வளர்க்கும் நோக்குடன் பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R.I.M.P.) தேர்வுக்குச் செல்பவர்கட்கு உறுதுணையாகச் 'சித்தர்கருவூலம்' தேர்வுக்குரிய வினாக்களையும், அவற்றிற்கானவிடைகளையும் எவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. சித்தர் செயல், மருத்துவமுரசு ஆகிய இதழ்களும் அவ்வப்பொழுது இதனைச் செய்து வருகின்றன. சுகவழி, ஓமியோபதி இதழா யினும் பதிவு பெற்ற இந்திய மருத்துவர் தேர்வுக்குரிய வினா விடைகளை அவ்வப்பொழுது வெளியிட்டு வருகிறது.

பதிவு பெற்ற இந்திய மருத்துவர் தேர்வுக்குச் செல்வதற்கான தகுதிகள், பாடத்திட்டங்கள், பரிந்துரை நூல்கள் ஆகிய வற்றையும் சித்தர் செயல், சுகவழி, சித்தர் கருவூலம், மருத்துவ முரசு போன்ற இதழ்கள் அவ்வப்பொழுது வெளியிட்டு வருகின்றன.

மருத்துவர்கட்கு உறுதுணையாக:-

சித்த மருத்துவம், மூலிகைமணி, ஹானிமன், ஆரோக்கியம், நல்வழி தவிர ஏனையஇதழ்கள் சித்தம், ஓமியோபதி மருத்துவச் சங்கச் செய்திகளையும் மாநாட்டு நடப்புக்களையும், தீர்மானங் களையும், அரசின் ஆணைகளையும் பதிவுபெறாத மருத்துவர்கள் பதிவு பெறுவதற்கு உரிய தகுதிகளையும், உரிய காலத்தையும், பதிவு செய்து கொள்வதற்கான விண்ணப்பப் படிவங்களையும், விண்ணப்பிப்பதற்கான வழி முறைகளையும் வெளியிடுகின்றன.

நாட்டின் பல்வேறு மூலைகளிலும் உள்ள சித்த மற்றும் ஓமியோபதி மருத்துவர்கள் மாநாடு நடக்கும் இடம், நாள் முதலியவற்றை இவற்றின் மூலம், தெரிந்து கொள்ள முடிகிறது. மாநாட்டுக்குச் செல்ல இயலாதவர்கள் இதழ்களில் வெளிவரும். தீர்மானங்கள் முதலியவற்றின் மூலம் மாநாட்டு நடப்புகளைத்

தெரிந்து கொள்ள முடிகிறது. பதிவு பெறாத மருத்துவர்கள் பதிவு செய்து கொள்ள வாய்ப்பும் வசதியும் ஏற்படுகிறது.

**மூடப்பழக்கங்கள் அல்ல:**

தொன்று தொட்டு நம் முன்னோர்கள் செய்து வரும் சில செயல்கள் மூடப்பழக்க வழக்கங்கள் அல்ல. மருத்துவ அடிப் படையின் பூசு மஞ்சளைத் தண்ணிர் விட்டு அரைத்து வீட்டின் வாசற்படிகளுக்குப் பூசுவது நோய் நுண்மங்கள் (germs) உள்ளே வராமல் தடுப்பதற்காகவே. (சித்த மருத்துவம் அக். 82. பக். 5) வீதியிலே நடந்து வரும் போது பாதங்களிலே ஒட்டியிருக்கும் நச்சு நுண்மங்களை அழிப்பதற்காக மஞ்கள் நீர் ஆரத்தி எடுக்கப் படுகிறது. (சித்த மருத்துவம் (அக். 82. பக். 8) அதிகாலையில் தங்கள் வீடுகளுக்கு முன்பாகத் தெருவில் 15-20, அடி சதுரத் திற்குப் பசுஞ்சாணத்தைத் தண்ணீரில் கரைத்து தெளிப்பது பூச்சிகளை அழிப்பதற்கே; (சித்த மருத்துவம். அக். 82. பக். 13). பெண்கள் பூப்படைந்ததும் மஞ்சள் நீரைச் சடங்கின் பெயரால் கொட்டுவது பூம்பின் நஞ்சும், தீய நாற்றமும் நீங்கு வதற்காகவே; (சித். மருத்துவம். பக். 26). தரையில் இலை போட்டு உண்டபின் இலையை எடுத்து விட்டு அந்த இடத்தைப் பசுஞ்சாணத்தைக் கரைத்துத் தெளித்து மெழுகுகிறார்கள். சாப்பிட்ட இடத்தில் எச்சில் சிந்தி யிருக்கலாம். அதிலிருந்து நச்சு நுண்மங்கள் பரவாமல் இருக்கவே இவ்வாறு செய்கிறார்கள். (சித்த மருத்துவம் அக்-82 பக்-30).

இறந்தவர்களின் நினைவு நாட்களிலும் வேறு சிறப்பு நாட் களிலும் புரோகிதர் பசுஞ்சாணம், கோமியம், தயிர், பால், நெய் ஆகிய ஐந்தின் கூட்டுப் பொருளான பஞ்சகவ்வியத்தைக் கொடுப்பார். இந்த ஐந்தும் சேர்ந்த கூட்டுக்கலவை, நச்சுக் கொல்லியும், பூச்சுக்கொல்லியும் ஆகும். உண்ணாநோன்பு இருக் கின்ற நாட்களில் இதை அருந்தினால் வயிற்றில் நுண்மங்கள் சேராது. உடல் நலம் பெறும். ஆகவேதான் நம் முன்னோர்கள் இந்தப் பழக்கத்தை ஏற்படுத்தி இருக்கிறார்கள். (சித்த மருத் துவம் அக். 82 பக்-30). இவை போன்றவை அவற்றுட்சில.

**குருட்டு நம்பிக்கைகளே:**

சில குருட்டு நம்பிக்கைகள் நம்மிடையே பரவி உள்ளன. அவற்றைக் களைந்து எறிகின்றன சில மருத்துவ இதழ்கள். காக்கை வலிப்புத் தாக்குதல் ஏற்பட்டவர் கையில் இரும்பைக் கொடுத்தால் தாக்குதல் நின்றுவிடும் என்று ஒரு பொதுவான நம்பிக்கை உண்டு. இது தவறானது. அந்தத் தாக்குதல் ஏற்பட்டு இரண்டு மணித் துளிகளுக்குள்ளேயே நின்று விடும். எனவே

இரும்பைக் கையில் கொடுத்தாலும் ஒன்றுதான்; கொடுக்கா விட்டாலும் ஒன்றுதான். (காக்கை வலிப்பு, மூலிகை மணி)

**மனையியல் குறிப்புகள்:**

பொலிவோடும், வலிவோடும் வாழ்வதற்கு ஏற்ற உண வினைச் சத்துக் குன்றாமல் சமைக்கும் முறைகளை நல்வழி, சித்த மருத்துவம், ஏர்உழவன் போன்ற இதழ்கள் எடுத்துரைக் கின்றன.

## தனித்தன்மைகள்

**சித்தர் கருவூலம்:**

சித்தர் கருவூலம் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களது வாழ்க்கை வரலாற்றினைத் தொடர் கட்டுரையாக வெளியிட்டு வருகிறது.

**சித்தர் செயல்:**

இது இலக்கியச் சுவை நிறைந்த பகுதிகளையும், பொதுச் செய்திகளையும் இடையிடையே வெளியிட்டுக் கற்போரைக் கவர் கிறது. நந்தீசுரர் அருளிய கருக்கிடை—300, அகத்தியர் வைத்தியக்கும்பி (நவம், டிச. 82) போன்ற எளிதில் கிடைக்காத நூல்களைத் தொடர்ந்து வெளியிடுதல், கால்நடைகட்கான சித்த மருத்துவ முறைகளை எடுத்துரைத்தல் சித்தர் செயலின் தனித்தன்மைகள்.

**ஆரோக்கியம்:**

இவ்வாண்டு தொடர்ந்து நலமான வாழ்க்கைக்கு ஏற்ற உணவு, பருகல் பற்றிய ஆயுர்வேத அறிவுரைகளை ஆயுர்வேதப் பணிக்குழு (ஆயுர்வேத சேவா சமிதி) தொடர் கட்டுரையாக வழங்கி வந்தது. கட்டுரைகள் சமற்கிருத மேற்கோளுடன் வெளி வருகின்றன. இதில் ஏற்பட்டுள்ள அனைத்து மருத்துவ முறை களும் மருத்துவம் தெரியாதவர்கள்கூடப் பின்பற்றும் வகையில் எளிய முறைகளாக அமைந்துள்ளன. வடமொழிக் கலப்பு மிக்க நடையில் இவ்விதழ் அமைந்துள்ளது.

**ஓமியோபதி:**

ஓமியோபதியின் மருத்துவத் தந்தையான மருத்துவர் சாமுவேல் ஹானிமனின் வாழ்க்கை வரலாற்றை மையமாகக் கொண்டு ஒரு வரலாற்றுத் தொடர் புதினத்தை எழுதி வந்தார் மதுரை மருத்துவர் எஸ். பழனிவேல் அவர்கள். இது மருத்துவர்

சாமுவேல் ஹானிமனின் வாழ்க்கை வரலாற்றை அனைவரும் புரிந்து கொள்ள வேண்டும் என்னும் முயற்சியாயினும் செம்மையாக அமையவில்லை. ஒவ்வோர் ஆண்டும் ஓமியோபதி இதழில் வெளிவந்த சிறந்த மருத்துவக் கட்டுரைகளின் தலைப்புத் தொகுப்பினை டிசம்பர் திங்களிதழில் வெளியிடும் வழக்கத்தினை ஒட்டி இவ்வாண்டும் டிசம்பர் இதழில் சிறந்த மருத்துவக் கட்டுரைத் தலைப்புத் தொகுப்பு வெளிவந்தது. பிற மருத்துவ இதழ்களில் இல்லாத தனிச்சிறப்பு இது.

**ஈஸ்டர்ன் ஓமியோ ஸ்டார்:**

இது பதிவுபெற்ற மருத்துவர்கட்கு உறுதுணையாக அமையும் வகையில் உள்ளது. மருத்துவம் கற்றுக் கொள்பவர்கட்கு ஏற்றவகையில் இலத்தீன் மற்றும் கிரேக்க மூலச்சொற்களிலிருந்து உருவாக்கப்பட்ட மருத்துவக் கலைச்சொற்களுக்கு விளக்கம் அளிக்கிறது. ஒரு குறிப்பிட்ட மருந்தினைச் சித்த மருத்துவர்கள் எவ்வாறு வழங்குகிறார்கள், ஓமியோபதி மருத்துவர்கள் எவ்வாறு வழங்குகிறார்கள் என்று எடுத்துரைக்கிறது. ஓமியோபதி மருந்துகள் அவை உருவாக்கப்படும் நிலத்தின் மற்றும் விலங்கியல் பெயர்களைக் கொண்டுள்ளன. அவை இன்னின்ன பொருட்களிலிருந்து உருவாக்கப்படுகின்றன என்பதனை எவரும் புரிந்துகொள்ளும் வகையில் எடுத்துரைக்கிறது. தொடக்கத்தில் மருத்துவர்கள் ஓமியோபதி மருந்துத் தேர்வில் தளர்வுறா வண்ணம் இந்த மருந்து வேலை செய்யாதபோது இந்த மருந்தினைக் கொடுக்க வேண்டும் என்று பட்டியல் போட்டுக் காண்பிக்கிறது.

ஓரங்க நாடக வடிவில் ஓர் உறுப்பினர் தன் உடல்நிலையை எடுத்துக் கூறவும் ஏற்ற மருந்தினை ஏனைய நாடக உறுப்பினர் கூறுமுகமாகவும் அமைத்து, மருந்துத் தேர்வினை உள்ளம்கொள்ளும் வகையில் அள்ளித்தரும் பாங்கு போற்றுதற்குரியது. 'எமதர்பார்' (செப் 82), 'சமதர்மம்' (அக் 82) அவற்றுட்சில.

நோயினையும், மருந்தினையும் 'சகுனமும் பரிகாரமும்' எனும் தலைப்பில் 'ஓமியோ சோதிடர்' எனும் புனை பெயரில் எழுதியிருப்பதும் கிறித்தவ சமய விளம்பரப் போக்கினில் 'ஹானிமென் அழைக்கிறார், ஊமை பேசுவான்; குருடர்கள் பார்ப்பார்கள்; செவிடர்களுக்குக் காது கேட்கும்; முடவன் நடப்பான். குட்டரோகி சுகம் பெறுவான்' எனும் தலைப்புக்களில் நோயின் தன்மையினையும் நோய்க்கு உரிய மருந்தினையும் கூறி 'எப்போதும் ஹோமியோபதி டாக்டர்களையே விசுவாசியுங்கள்' என்று எழுதியிருப்பதும் கற்போர் உள்ளத்தைக் கவர்வன.

**மருத்துவ மஞ்சரி:**

நோய்க்கு ஏற்ற மருந்தினை அனைவரும் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் விழிப்புணர்வினைப் புதிர் மூலம் மருத்துவ மஞ்சரி உருவாக்கி வருகிறது. சரியான விடை அளிப்பவர்கட்குப் பரிசும் அளிக்கிறது. நிழற்படங்களை வெளியிட்டு நிழற்படப் புதிர்களையும் நடத்தி வருகிறது. குழந்தைகளின் நிழற்படங் களையும், வரவேற்று வெளியிடுகிறது.

**குறிப்புகள்:**

மருத்துவ முரசு 1967 பிப்ரவரி முதல் 1978 ஆகஸ்டு வரை தடைபட்டுப் பின்தொடர்ந்து வெளி வருகிறது. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட ஏனைய இதழ்கள் தொடக்கம் முதல் தொடர்ந்து வெளிவருகின்றன.

பெரும்பாலான இதழ்கள் வாங்குவோரது எண்ணிக்கைக் குறைவால் இழப்பில் நடைபெற்று வருகின்றன.

நல்வழி, ஓமியோபதி, ஆரோக்கிய மலர், மூலிகை மணி, சித்தர் கருவூலம், சித்த மருத்துவம், செந்தமிழ்ச் சித்தன், ஏர் உழவன் ஆகிய இதழ்களைத் தவிர ஏனையவை பொருளாதாரச் சிக்கல் காரணமாகச் சில சமயங்களில் இரண்டு, மூன்று இதழ் களாகச் சேர்த்து வெளியிடப்படுகின்றன.

'சித்தர் கருவூலம்' (பிப். 82) 'சித்த மருத்துவம்' (மே. 82) ஹானிமன் (நவம். 82), ஆகிய மூன்று இதழ்களும் 1982ஆம் ஆண்டு தொடங்கப்பட்டவை.

பெரும்பாலான இதழ்கள் குறைந்த பக்கங்களோடு வெளி வருவதால் தொடர் கட்டுரைகள் இதழ் தோறும் வெளி வருவ தில்லை. இது வாசகரின் ஆர்வத்தைக் குன்றச் செய்கிறது.

பெரும்பாலான இதழ்கள் வாசகர் நலன் கருதி காந்த மருத் துவம், வண்ண மருத்துவம், யோகாசன மருத்துவம் போன்ற பிற மருத்துவத் துறைக் கட்டுரைகளையோ துணுக்குகளையோ அவ்வப்பொழுது வெளியிடத் தயங்குவதில்லை.

ஆரோக்கியம் இதழ் ஆங்கிலத் திங்கள் 27ஆம் நாள்தோறும் வெளிவருகிறது. 'சுகவழி,' 'ஆரோக்கிய மலர்' ஆகியவை ஆங்கிலத்திங்கள் 15 ஆம் நாள் வெளியிடப்படுகின்றன.

நலவியல் இதழ் 'நல்வழி' எழுபத்திரண்டு ஆண்டுகளாகவும், ஓமியோபதி இதழ் 'ஓமியோபதி' 38 ஆண்டுகளாகவும் ஆயுர் வேத இதழ், ஆரோக்கியம் 21 ஆண்டுகளாகவும் சித்த மருத்துவ இதழ் 19 ஆண்டுகளாகவும் வெளிவருகின்றன.

## பின்னிணைப்பு-1

| எண் | பெயர் | ஆசிரியரும் முகவரியும் | பகுப்பு | பக்க அளவு | விலை | படிகளின் எண்ணிக்கை | தொடக்கம் | வெளியீடு ★ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | மருத்துவ முரசு | மருத்துவப் புலவர் R. செகநாதன், 133. சோலையப்பன் தெரு, சென்னை-21. | சித்த மருத்துவம் | 16 | 1.25 | 1000 | சன. 1966 | திங்களிதழ் (ஏப், மே) ★ |
| 2. | சித்த மருத்துவம் | மருத்துவர் ப. சிற்சபை, 4, ராஜ வீதி, காஞ்சிபுரம்—2. | ,, | 32 | 1.00 | 1000 | மே. 1982 | திங்களிதழ் |
| 3. | சித்தர் கருவூலம் | மருத்துவர் பி. கேசவப் பிள்ளை, 58, நெல்லையப்பர் நெடுஞ்சாலை, திருநெல்வேலி-6. | ,, | 36 | 1.50 | 500 | பிப் 1982 | திங்களிதழ் |
| 4. | சித்தர் செயல் | மருத்துவர் A. G. கணபதி, 143.சாமிநாயக்கன் தெரு சிந்தாதிரிப் பேட்டை, சென்னை. | ,, | 24 | 1.20 | 2000 | சூலை 1975 | திங்களிதழ் (சன, பிப்.) (நவ. டிச.) |
| 5. | மூலிகை மணி | மருத்துவர் க. வெங்கடேசன் Phd, 4.இரண்டாவது சாதுகார மடம் வீதி, சலவன் பேட்டை, வேலூர்—632005 | ,, | 36 | 1.50 | 3000 | நவம் 1964 | திங்களித ழ் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 6. | தமிழ் முனிவன் | மருத்துவர்<br>பி. மாசிலாமணி,<br>46, அரங்கப்பிள்ளை வீதி,<br>புதுவை - 605001. | சித்த மருத்துவம் | 4 | (மூவாண்டுக்கு ரூ. 10.00) | 600 | 1971 | திங்களிதழ் (ஆயினும் 2 இதழ்கள் சேர்ந்தே வெளி வரல்) |
| 7. | ஆரோக்கியம் | ஆயுர்வேத சேவா சமிதி,<br>12-D டவுன் ஸ்டேஷன் ரோடு,<br>திருச்சி-620002. | ஆயுர் வேதம் | 24 | 0.60 | — | சனவரி 1962 | திங்களிதழ் (மே. சூன்) |
| 8. | ஹோமியோபதி | மருத்துவர்<br>R. J. மூர்த்தி,<br>மருத்துவர்<br>R. சீனுவாசன் B.A.<br>இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்,<br>கும்பகோணம். | ஓமியோபதி | 20 | 0.75 | — | 1946 | திங்களிதழ் |
| 9. | ஓமியோபதித் தொண்டன் | மருத்துவர்<br>R.S.V. ஜெயபால்ராஜ்,<br>உப்பூர் — 623525. | ,, | 16 | ஆண்டுக்கு (ரூ. 10.00) | 500 | ஏப். 1977 | திங்களிதழ் (ஆயினும் 2 இதழ்கள் சேர்ந்தே வெளிவரல்) |
| 10. | சுகவழி | மருத்துவர்<br>V. S. மணியன்,<br>ராயல் ஓமியோஹால்,<br>சேங்காலிபுரம்,<br>தஞ்சாவூர்-612604. | ,, | 16 | 0.90 | 1500 | செப். 1977 | திங்களிதழ் |

| எண் | பெயர் | ஆசிரியரும் முகவரியும் | பகுப்பு | பக்க அளவு | விலை | படிகளின் எண்ணிக்கை | தொடக்கம் | வெளியீடு |
|---|---|---|---|---|---|---|---|---|
| 11. | ஹானிமன் | மருத்துவர் மர்சியால், 3, ரோசரி வீதி, முத்தியாலுப் பேட்டை, புதுவை. | ,, | 21 | 0.90 | 400 | நவம். 1982 | திங்களிதழ் |
| 12. | ஈஸ்டர்ன் ஓமியோ ஸ்டார் | மருத்துவர் ஜெயராவ் நெல்லிக்குப்பம் கடலூர் | ,, | 18 | ஆண்டுக்கு (ரூ. 9.00) | — | — | திங்களிதழ் |
| 13. | A.M.T.C. Allopathic Medical Journal | மருத்துவர் A. C. சண்முகம், 76, நல்லப்ப வாத்தியார் வீதி, பழைய வண்ணாரப் பேட்டை, சென்னை-21. | அலோபதி மருத்துவம் | 16 | 1.00 | 4500 | சன.1973 | திங்களிதழ் |
| 14. | நல்வழி | J. P. மாசிலாமணி, National Home Health Service, Post Bag 129, Poona-411001. | அலோபதி மருத்துவம் சார்ந்த நலவியல் இதழ். | 28 | 2.00 | — | 1911 | திங்களிதழ் |
| 15. | மருத்துவ | மருத்துவர் மஞ்சரி N. S. மாரியப்பன் 225, சூரமங்கலம்சாலை, பள்ளப்பட்டி, சேலம்-636009. | ஓமியோபதி சித்த அலோபதி மருத்துவம் | 20 | 1.00 | 2000 | மே.1979 | திங்களிதழ் (பிப். மார்ச், ஏப்.) (அக். நவம்) (ஆக. செப்). |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 16. | ஆரோக்கிய மலர் | மருத்துவர் K. வன்னியராஜ் மதுரை-1. | சித்த ஆயுர் வேத யுனானி அலோபதி + ஓமியோபதி | 18 | 1.00 | 500 | ஜுன்.1980 | திங்களிதழ் |
| 17. | செந்தமிழ்ச் சித்தன் | மருத்துவர் துர்க்காதாஸ், எஸ். கே. சுவாமி, நாத்திகம் கட்டிடம், 55, ஆர்க்காடு ரோடு, கோடம்பாக்கம், சென்னை-600 024. | மருத்துவ சோதிட மணிமந்திர இதழ் | 32 | 1.00 | — | மே. 1974 | திங்களிதழ் |
| 18. | ஏர் உழவன் | ரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர், கணபதி, கோவை-641006. | இயற்கை மருத்துவமும் உழவியலும் | 38 | 1.00 | 3000 | நவ.1971 | திங்களிரு முறை |
| 19. | இருமலர் | S. V. ராஜையா, எக்மோர்நெடுஞ்சாலை, சென்னை-600008. | நற்செய்தி மருத்துவம் சமூகம் | 48 | 100 | — | ஏப். 1980 | திங்களிதழ் |

★ இரண்டு அல்லது மூன்று இதழ்கள் சில சமயங்களில் சேர்த்து வெளியிடப் படுகின்றன. அவை அடைப்புக் குறிக்குள் கொடுக்கப் பட்டுள்ளன.

பி. கு : பன்முறை மடல் மூலம் தொடர்பு கொண்டும் சில இதழ்களிலிருந்து விடை இல்லாமையால் அச்செய்திகள் குறிக்கப்படவில்லை.

# பின்னிணைப்பு-2

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட மருத்துவ இதழ்களில் 1982 ஆம் ஆண்டில் வெளிவந்த சிறந்த மருத்துவ, நலவியல் கட்டுரைகள் மட்டும்.

| எண் | கட்டுரை | தன்மை | ஆசிரியர் | இதழ் |
|---|---|---|---|---|
| 1. | ஆரோக்கியமே அருந்தனம் | தொடர் | மருத்துவர் B. C. மேகசியாமளா | மருத்துவமுரசு, பிப். 82 |
| 2. | தாயும் சேயும் | தொடர் | மருத்துவர் R. J. சரசுவதி | ,, ,, மார்ச். 82 |
| 3. | நோயில்லா வாழ்வு வாழ வேண்டுமா? | — | மருத்துவர் சிற்சபை | சித்த மருத்துவம் ,, ,, மே. 82 |
| 4. | சீன நாட்டின் பண்டைய கால வைத்திய முறை | — | மருத்துவர் அம்பிகாபதி | ,, ,, சூலை. 82 |
| 5. | மலச்சிக்கல் தீர வண்ண மருத்துவம் | — | மருத்துவர் சிற்சபை | ,, ,, சூலை. 82 |
| 6. | உண்ணா நோன்பு—ஆரோக்கிய மாளிகையின் திறவு கோல் | — | மருத்துவர் சி. தங்கதுரை | ,, ,, சூலை. 82 |
| 7. | நோயில்லாமல் வாழச் சித்தர்கள் கூறிய வழி | — | மருத்துவர் சிற்சபை | ,, ,, ஆக. 82 |
| 8. | சித்தர்கள் கூறிய காயகல்பம் | — | மருத்துவர் கே. சந்திரசேகரன் | ,, ,, செப். 82 |
| 9. | நித்திரை ஒரு மாத்திரையே | — | மருத்துவர் சி. தங்கதுரை | ,, ,, செப். 82 |
| 10. | தாயும் குழந்தையும் | தொடர் | மருத்துவர் சரசுவதி | ,, ,, செப். 82 |
| 11. | மூக்கிலிருந்து இரத்தம் வருவதும் அதன சிகிச்சையும் | — | மருத்துவர் அம்பிகாபதி | ,, ,, செப். 82 |
| 12. | மஞ்சளின் மருத்துவப் பயன் | தொடர் | மருத்துவர் சிற்சபை | ,, ,, அக். 82 |
| 13. | பசுவின் சாணம், கோமியம் ஆகியவற்றின் பயன்கள் | — | ,, | ,, ,, அக். 82 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 14. | உணவிலிருந்து முழுப்பயன் பெறும் முறை | தொடர் | மாணிக்கம் | சித்த மருத்துவம் | அக். 82 |
| 15. | நோய்தீர்க்கும் பாதையில் சங்கி தத்தின் பணி | — | மருத்துவர் சி. தங்கதுரை | ,, ,, | அக். 82 |
| 16. | மஞ்சட்காமாலை வருவது ஏன் ? | — | மருத்துவர் சிற்சபை | ,, ,, | நவம். 82 |
| 17. | இயற்கை மருத்துவத்தின் தத்துவங்கள் | — | மருத்துவர் சிற்சபை | ,, ,, | நவம். 82 |
| 18. | தேனின் மருத்துவக் குணங்கள் | — | சி. வை. சந்திரசேகரன் | ,, ,, | நவம். 82 |
| 19. | கோபம் நோய்க்கு நண்பனே | — | மருத்துவர் சி. தங்கதுரை | ,, ,, | நவம். 82 |
| 20. | நன்றாகச் சிரியுங்கள் | — | மாணிக்கம் | ,, ,, | டிச. 82 |
| 21. | அறுசுவை உணவு | — | மருத்துவர் சிற்சபை | ,, ,, | டிச. 82 |
| 22. | நம்பிக்கையே நோயாளியின் முதல் மருந்து | | மருத்துவர் சி. தங்கதுரை | ,, ,, | டிச. 82 |
| 23. | மதலை வைத்தியம் | தொடர் | மருத்துவர் பி. கேசவபிள்ளை | சித்தர் கருவூலம் | பிப். 82 |
| 24. | சுகாதாரம் | தொடர் | ,, ,, | ,, ,, | பிப். 82 |
| 25. | வர்மம் | தொடர் | ,, ,, | ,, ,, | பிப். 82 |
| 26. | கண் மருத்துவம் | தொடர் | ,, ,, | ,, ,, | மார்ச். 82 |
| 27. | நம் நாட்டு மூலிகைச் செல்வங்கள் —நொச்சி | — | மருத்துவர் எஸ். காளீஸ்வரன் | ,, ,, | மார்ச். 82 |
| 28. | ஆகாயத் தாமரை | — | மருத்துவர் பி. கேசவப்பிள்ளை | ,, ,, | ஏப். 82 |
| 29. | அன்னபேதி செந்தூரம் | தொடர் | ,, ,, | ,, | ஏப். 82 |
| 30. | மகளிர் மருத்துவம் | தொடர் | மருந்துவர் பி. கேசவப்பிள்ளை | சித்தர்கருவூலம் | ஏப். 82 |
| 31. | ஈஸ்வர மூலி | — | ,, ,, | ,, | ஜூன். 82 |
| 32. | ஊமத்தை | — | ,, ,, | ,, | ஜூலை 2. 82 |
| 33. | எட்டி மரம் | — | ,, ,, | ,, | ஆக. 82 |

| எண் | கட்டுரை | தன்மை | ஆசிரியர் | இதழ் | |
|---|---|---|---|---|---|
| 34. | ஆமணக்கு | தொடர் | ,, ,, | ,, | டிசம். 72 |
| 35. | இரத்த சுற்றோட்டமும் இரத்தப் பிரிவின் ரகசியமும் | — | மருத்துவர். கே. பார்த்தசாரதி | சித்தர் செயல் | ஜன. பிப். 82 |
| 36. | Urology | — | ,, | ,, | மார்ச். 82 |
| 37. | மூலநோய் | தொடர் | மருத்துவர். A.G. கணபதி | ,, | மார்ச். 82 |
| 38. | Cholera | — | மருத்துவர். K. பார்த்தசாரதி | ,, | மார்ச். 82 |
| 39. | உணவே மருந்து மருந்தே உணவு | — | மருத்துவர். S. கிருஷ்ண மூர்த்தி | ,, | ஜூன். 82 |
| 40. | தாய்ப்பாலின் தனிச்சிறப்பு | — | சரோஜ் நாராயணசாமி | ,, | ஜூன். 82 |
| 41. | புகை பிடிப்பதால் விளையும் தீமைகள் | — | சுவாமி சிவானந்த பரமஹம்சர் | ,, | ஜூன். 82 |
| 42. | வெள்ளி | தொடர் | மருத்துவர் A. G. கணபதி | ,, | ஜூன். 82 |
| 43. | நங்கையரின் கூந்தல் | — | S. தங்கமணி அம்மாள் | ,, | ஜூன். 82 |
| 44. | திராட்சைப் பழம் | — | எஸ். நரசிம்மன் | ,, | ஜூன். 82 |
| 45. | பஞ்ச தீபாக்கினி செந்தூரம் | — | பிரம்மஸ்ரீ எஸ். நான்மதி | ,, | ஜூன். 82 |
| 46. | மகளிர், மழலை மருத்துவம் | — | மருத்துவர் K. T. தங்கவேலு | ,, | செப். 82 |
| 47. | எலுமிச்சம் பழம் | — | மருத்துவர் A.G. கணபதி | ,, | ஆக. 82 |
| 48. | Pulse phenomenon in Siddha is of course a perplocity | தொடர் | மருத்துவர் K. பார்த்தசாரதி | ,, | நவம், டிச. 82 |
| 49. | நெல்லிக்கனி | — | ,, | ,, | நவம், டிச. 82 |
| 50. | நல்வாழ்வு தரும் யோகாசனங்கள் | — | யோக விசாரதா பேராசிரியர் O.R. சீனுவாசன் | மூலிகை மணி | ஏப். 82 |
| 51. | கசிவு என்னும் உப்பும், கசிவைக் கட்டும் அப்பும் | தொடர் | நி. மெய்யப்ப சுவாமி. | ,, | ஏப். 82 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 52. | அக்ரகாரம் (Anthemis pyrethrum) | — | மருத்துவர். க. வெங்கடேசன் | ,, | ஏப். 82 |
| 53. | விஷ ஜந்துகளும் மூலிகைகளும் | தொடர் | அமரர். கண்ணப்பர் | ,, | ஏப். 82 |
| 54. | ஓமம் | — | மருத்துவர் க. வெங்கடேசன் | ,, | மே. 82 |
| 55. | காந்த சக்தி வைத்திய சாஸதிரம் | தொடர் | வி. எஸ். குமாரசுவாமி முதலியார் | ,, | மே. 82 |
| 56. | டாக்டர்! டாக்டர்! | — | கிராக்கி | ,, | மே. 85 |
| 57. | ஜாங்கு மட்டை (மருள்) | — | மருத்துவர். க. வெங்கடேசன் | ,, | சூன். 82 |
| 58. | அணு சக்திக் கதிர்களும் மூலிகைகளும் | — | நன்றி. சுதேசமித்திரன் | ,, | சூன். 82 |
| 59. | கருஞ்சீரகம் | — | மருத்துவர். க. வெங்கடேசன் | ,, | சூன். 82 |
| 60. | காக்கை வலிப்பு | — | வே. தயைந்திரன் | ,, | சூன். 82 |
| 61. | கண்ணில் தோன்றும் பிணிகளும் சித்த மருத்துவச் சிகிச்சையும் | தொடர் | மருத்துவர் பி. மாசிலாமணி | தமிழ் முனிவன் | 17-2.82 |
| 62. | தலைவலி என்பது ஒரு நோயா | தொடர் | ,, | ,, | 17-6-82 |
| 63. | நோய் ஏன் திரும்பத் திரும்ப வருகிறது? | — | ஆயுர்வேதப் பணிக்கு | ,, | பிப். 82 |
| 64. | மறதிக்கு என்ன செய்வது? | — | ,, | ,, | பிப். 72 |
| 65. | உடல் மன வலிவு பெற | — | ,, | ,, | மார்ச். 82 |
| 66. | சுவைகள் | — | ,, | ,, | ஏப். 82 |
| 67. | பால்—பயறு—கீரை—உணவுப் பொருட்கள் | தொடர் | ,, | ,, | மே, சூன் |
| 68. | மாதவிடாய் நிற்கும் காலங்களில் பெண்களின் பருவகால மாறுபாடுகள் | தொடர் | மருத்துவர் R. கணேசன் | ஓமியோபதி | ஜன. 82 |
| 69. | எனக்கு அப்பொழுதிலிருந்துதான் உடல்நலம் சரியில்லை | தொடர் | மருத்துவர். K. அம்பலவாணன் | ,, | பிப். 82 |

| எண் | கட்டுரை | தன்மை | ஆசிரியர் | இதழ் | | |
|---|---|---|---|---|---|---|
| 70. | பெண்கள் பகுதி மலர் | தொடர் | மருத்துவர் R. கோபாலகிருஷ்ணன் | ,, | ஏப். | 82 |
| 71. | காது நோயில் காலி (Kali) | — | மருத்துவர் சாமி. நரசிம்மன் | ,, | ஏப். | 82 |
| 72. | நாய்க்கடியும் இணைவிதி முறையும் | தொடர் | மருத்துவர் N. வேலு | ,, | ஏப். | 82 |
| 73. | குழந்தைகளுக்கு வரும் வலிப்பு நோய்களும் அதை நீக்கும் ஓமியோ மருந்துகளும் | — | மருத்துவர். R. இராமதாசு | ,, | ஏப். | 82 |
| 74. | நோய் என்பது என்ன? | — | மருத்துவர் சாமி நரசிம்மன் | ,, | ஆக. | 82 |
| 75. | மூல நோய் | — | மருத்துவர் G. தேவதாசு | ,, | செப். | 82 |
| 76. | நீடித்த நோய்களும் தோசோடு மருந்துகளும் | தொடர் | மருத்துவர் M. சின்னசாமி | ,, | நவம். | 82 |
| 77. | ஒரே வைத்தியம் | — | மருத்துவர் N. வேலு | ஓமியோபதி தொண்டன் | ஜன, பிப். | 82 |
| 78. | உயிர்ப்புச் சக்தி | — | மருத்துவர் தேவராஜன் | ,, | ஜன, பிப். | 82 |
| 79. | சர்க்கரை வியாதி | — | மருத்துவர் V. S. மணியன் | சுகவழி | ஜன. | 82 |
| 80. | ஓமியோபதியின் இரு கண்கள் | — | மருத்துவர். அனந்தபத்மநாபன் | ,, | ஜன. | 82 |
| 81. | நாய்க்கடியும் அதன் பாதுகாப்பும் | தொடர் | மருத்துவர். உ. பாக்கியநாதன் | ,, | ஜன. | 82 |
| 82. | வெளிமருந்துப் பிரயோகத்தை ஓமியோபதி ஏன் ஏற்பதில்லை? | தொடர் | மருத்துவர், V. S. மணியன் | ,, | சன. | 82 |
| 83. | புற்று நோயும் ஓமியோ சிகிச்சையும் | தொடர் | மருத்துவர். உ. பாக்கிய நாதன் | ,, | மார்ச். | 82 |
| 84. | டாக்டர். ஹானிமனும் மூன்று கட்டளைகளும் | — | மருத்துவர். R. அனந்தபத்மநாபன் | ,, | மே. | 82 |
| 85. | தொழுநோய் | — | மருத்துவர். M. மனோகரன் | ,, | ஜூன். | 82 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 86. | மனவளர்ச்சிக்குறை | தொடர் | மருத்துவர். R. துரைராஜ் | ,, | சூன். 82 |
| 87. | நோய் நிர்ணய முறைகள் | தொடர் | மருத்துவர். C. சார்லஸ் துரைராஜ் | ,, | சூன். 82 |
| 88. | காச நோய் | — | மருத்துவர். M. மனோகரன் | ,, | சூன் 2. 82 |
| 89. | கட்டிகளும் பிளவைகளும் | தொடர் | மருத்துவர். R. அனந்தபத்மநாபன் | ,, | ஆக. 82 |
| 90. | தொண்டை அடைப்பான் | — | மருத்துவர். M. மனோகரன் | ,, | ஆக. 82 |
| 91. | விதவிதமான காய்ச்சல்கள் | — | மருத்துவர். R. அனந்தபாலன் | ,, | நவம். 82 |
| 92. | ஓமியோபதியின் சிறப்புகள் | — | மருத்துவர். மர்சியால் | ஹானிமன் | நவம். 82 |
| 93. | நோயாளியைப் பரிசீலனைச் செய்யும் சில வழிகள் | — | மருத்துவர். M. விக்டர் | ,, | நவம். 81 |
| 94. | தொண்டைச் சதை வளர்ச்சி | தொடர் | மருத்துவர். M. விக்டர் | ,, | நவம். 82 |
| 95. | பெண்கள்நோய் வெள்ளைப்பாடு | — | மருத்துவர். K. நாராயணன் | ,, | டிச. 82 |
| 96. | ஓமியோபதி ஒருகண்ணோட்டம் | — | மருத்துவர். ஜெரார்டு | ,, | டிச. 82 |
| 97. | இதய நோய் வந்தால் தோன்றும் சிக்கல்கள் | — | மருத்துவர். டேல் பிராண்டு | நல்வழி | சன. 82 |
| 98. | பசுவின் பாலையன்றி நிலக் கடலைப் பாலையும் சோயாப் பாலையும் பயன் படுத்தலாம் | — | மருத்துவர். ஹெரால்டு ஷிரையாக் | ,, | சன. 82 |
| 99. | காய்கறிகளுடனேபழங்களையும் உணவில் சேர்க்காதீர் | — | மருத்துவர். எச். எச். ஸ்டார்ட்டவுட் | ,, | சன. 82 |
| 100. | மிதமிஞ்சி ஆஸ்பிரின் உபயோகிக்காதீர் | — | மருத்துவர். ஹெரால்டு ஷிரையாக் | ,, | சன. 82 |
| | | | | ,, | சன. 82 |
| 101. | புகைக்குடி நுரையீரலில் சீழ்க் கட்டியை உண்டுபண்ணுகிறது | — | மருத்துவர். J. W. மக்பர்லந்து | ,, | சன. 82 |
| 102. | மிகுதியாகப் பழம் அருந்துங்கள் | — | மருத்துவர். H. C. மெங்கல் | ,, | டிச. 82 |
| 103. | பெண்களின் மார்பகப் புற்று | — | மருத்துவர். ஜெயில். டி. ஹக் | ,, | டிச. 82 |
| 104. | வைட்டமின் 'சி' | — | க. பார்கவி | ,, | டிச. 82 |

| எண் | கட்டுரை | தன்மை | ஆசிரியர் | இதழ் | | |
|---|---|---|---|---|---|---|
| 105. | குழந்தைகளின் நோய்கள் | தொடர் | மருத்துவர். A. S. இராமசாமி | மருத்துவ மஞ்சரி | பிப். | 82 |
| 106. | இளம்பிள்ளை வாதம் | தொடர் | பண்ணடிமை பரமகேது | ,, | பிப், | 82 |
| 107. | பயனுள்ள பயோகெமிஸ்ட்ரி | தொடர் | அப்துல் சமது | ,, | ஜூலை. உ. | 82 |
| 108. | ஆர்கனானின் விளக்கம் | தொடர் | தேவராஜன் | ஆரோக்கிய மலர் | சன. | 82 |
| 109. | சுவைகள் | தொடர் | மருத்துவர். V. சோமசேகர் | ,, | சன. | 82 |
| 110. | இரத்த அழுத்தம் | — | மருத்துவர். வன்னியராஜ் | ,, | சன. | 82 |
| 111. | மருத்துவ உலகில் புற்று நோய் பிரச்சனை | — | மருத்துவர். P. பாலசுப்பிரமணியன் | ,, | மே. | 82 |
| 112. | மகப்பேறும் மாதர் நோயும் | தொடர் | மருத்துவர். J. ஜனகர் | ,, | ஜூலை உ. | 82 |
| | அமுக்கராக் கிழங்கு | — | மருத்துவர் P. பாலசுப்பிரமணியன் | ,, | ஆக. | 82 |
| 113. | சித்த மருத்துவ விளக்கம் | தொடர் | ,, | ,, | ஆக. | 82 |
| 114. | வில்லுவாதசன்னி (Tetanus) தடுபபு முறை | — | மருத்துவர். நாக சுந்தர வடிவேல் | ,, | ஆக. | 82 |
| 115. | மனநிலையும் உடல் நிலையும் | — | மருத்துவர். அனந்தபத்மநாபன் | ,, | அக். | 82 |
| 116. | மாதர் மருத்துவம் | தொடர் | ஜெசிந்தா | ,, | நவம். | 82 |
| 117. | தொண்டை அடைப்பான், கக்குவான் தடுப்புமுறை | — | மருத்துவர் நாக சுந்தர வடிவேல் | ,, | நவம். | 82 |
| 118. | புற்று நோய்க்குச் சித்த வைத்தியம் ரசமணி | தொடர் | மருத்துவர். துர்க்காதாஸ் | செந்தமிழ்ச் | மே. | 82 |
| | | தொடர் | மூலிகைதாசன் P. J. ஜான் | சித்தன் | மே. | 82 |
| 119. | கக்குவான்(சிறுபிள்ளை வைத்தியம்) | — | T. K. சிவராவ் | ,, | மே. | 82 |
| 120. | மனித உடலின் வேகங்கள்-14 | தொடர் | ,, | ,, | மே. | 82 |

| | | | | |
|---|---|---|---|---|
| 121. | துளசி | — பச்சிலைவாணன் | ,, | மே. 82 |
| 122. | அருகு | — ,, | ,, | ஜூன். 82 |
| 123. | உணவுத் தேர்வு | — மருத்துவர் துர்க்காதாஸ் | ,, | ஜூலை 82 |
| 124. | துத்தி | — பச்சிலைவாணன் | ,, | ஆக. 82 |
| 125. | நாய்க்கடிக்கு நமது வைத்தியம் | — மூலிகைதாசன் P. J. ஜான் | ,, | ஆக. 82 |
| 126. | மச்சட்காமாலை (சிறுபன்னை வைத்தியர்) | — மருத்துவர் P. K. சுந்தர முதலியார் | ,, | ஆக. 82 |
| 127. | உடலுக்கு இரும்புச்சத்து ஏன் தேவை ? | — தி. ரா. திருவேங்கடம் | ஏர் உழவன் | 16-1-82 |
| 128. | உணவும் உடல் நலனும் | தொடர் ரா. கிருட்டிணசாமிக் கவுண்டர் | ,, | 16-1-82 |
| 129. | தேன் ஏன் தேவை ? | — எல். பெள்ளு | ,, | 30-1-82 |
| 130. | மருந்துகள் நோய்க்கு வித்திடுகின்றன | — ரா. கிருட்டிணசாமிக் கவுண்டர் | ,, | 30-1-82 |
| 131. | உப்பும் நீங்களும் | — நன்றி : ரீடர்ஸ் டைஜஸ்ட் | ,, | 24-4-82 |
| 132. | இயற்கை மருத்துவத்தில் யோகா சனங்களின் பங்கு | — நா. ஆறுச்சாமி | ,, | 5-6-82 |
| 133. | குறைந்த செலவில் நிறைந்த பயன் தரும் கீரைகள் | மருத்துவர் : தேமொழி பால சுப்பிரமணியம் | ,, | 5-6-82 |
| 134. | நல்வாழ்வில் எலுமிச்சை | மருத்துவர் : ஹெரால்ட் ஆப் ஹெல்த் | ,, | 3-7-82 |
| 135. | புற்று நோய் பற்றிய புதிய கருத்துக்கள் | — மருத்துவர் : N. S. சண்முகவேல் | ,, | 3-7-82 |
| 136. | மலச்சிக்கல் மனித வர்க்கத்தின் பகை | தொடர் நா. ஆறுச்சாமி | ,, | 31-7-82 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 137. | உபவாசமே உயரிய மருந்து | தொடர் | ,, | ,, | 28-8-82 |
| 138. | உங்களுக்கு முதுகுவலி இருக்கிறதா ? | — | கே. பால்ராஜ் | ,, | 25-9-82 |
| 139. | உணவைப் பற்றித் தெரிந்து கொள்வோம் | — | நா. ஆறுச்சாமி | ,, | 25-9-82 |
| 140. | சுவையான இயற்கை மருத்துவம் | — | R. சுப்பிரமணியன் | ,, | 4-12-82 |
| 141. | பிரமசரியமே உன்னை வணங்குகிறேன் | — | நா. ஆறுச்சாமி | ,, | 18-12-82 |
| 142. | கீரைகள் இரத்த வங்கிகள் | — | நன்றி: ஹெரால்டு ஆப் ஹெல்த் | ,, | 18-12-82 |

---

பி. கு. : தொடர் கட்டுரைகள் மட்டும் தொடர் என்று குறிக்கப் பட்டுள்ளது. ஏனையவை முழுக்கட்டுரைகள்.

## பின்னிணைப்பு: III

### சங்கம்—மாநாட்டுச் செய்திகள்:

மருத்துவ இதழ்களில் வெளிவந்தவை: சித்த மருத்துவ அறிவியல் மேம்பாட்டுக்குழு, முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் தலைமையில் சீர்திருத்தி அமைக்கப் பட்டது. முதலில் சித்த மருத்துவ இலக்கியத்தைத் தொகுக்கவும், பதிப்பிக்கவும் மட்டுமே திட்டம் இருந்தது. பின்னர் இக்குழுவின் அதிகார வரம்பு வேலைத்திட்டம் ஆகியவை விரிவாக்கப்பட்டு விட்டது. முப்பத்திரண்டுக்கும் மேற்பட்ட திட்டங்களை அனுப்பி அரசின் அனுமதியைப் பெற்றுள்ளது.
அவை:

1. சித்த மருத்துவ மாநாடு நடத்த அரசு பத்தாயிரம் ரூபாய் அளித்துள்ளது.

2. பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R. I.M.P.) தேர்வு முறை மீண்டும் கொண்டு வரப்பட்டது.

3. இதுவரை பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R.I.M.P) என்று கொடுக்கப்பட்ட சான்றிதழ் பதிவு பெற்ற சித்த மருத்துவர் (R. S. M. P.) என்று கொடுக்கப்படும்.

4. பாளையங் கோட்டையில் உள்ள இந்திய மருத்துவக் கல்லூரி இனி சித்த மருத்துவக் கல்லூரி என்று பெயர் மாற்றம் பெறும்.

5. B. S. M. S. பட்டப்படிப்பு தேர்வுக்குழு உறுப்பினர் களில் ஒருவராகப் பரம்பரை சித்தவைத்தியர் ஒருவர் இருப்பார். இந்த ஆண்டு திருநெல்வேலி பி. கேசவப்பிள்ளை தலைவராக இருந்தார்.

6. புதிதாக இன்னொரு சித்த மருத்துவக் கல்லூரி தொடங்கப்படும். பட்டப் படிப்புக்கான இடங்களில் 23 விழுக்காடு பரம்பரை வைத்தியர்களின் பிள்ளைகளுக்கு ஒதுக்கப் பட்டுள்ளன.

7. அடையாறு கூட்டுறவுச் சித்த ஆயுர்வேத யூனானி மருந்தகத்தில் செய்யப்படும் மருந்துகள் போதுமான அளவில் கிடைக்காததால் கூட்டுறவுச் சித்த மருந்து செய்சாலை தொடங் கப்படும். இதற்கான அறிவிப்பு விரைவில் வரும்.

8. ஊராட்சி ஒன்றியங்களில் இன்னும் 200 இடங்களில் சித்த மருந்தகங்கள் திறக்க முடிவு எடுக்கப்பட்டுள்ளது. பட்டதாரிகள் கிடைக்காதபோது பதிவு பெற்ற இந்திய மருத்து வர்கள் நியமிக்கப்படுவர்.

வெளிநாடுகட்கு மூவர் கொண்ட மூலிகை ஆய்வாளர் குழு ஒன்று மருத்துவர் கேசவப்பிள்ளை உட்படச் செல்லவிருக்கின்றது தஞ்சையில் உள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் மருத்துவர் ஏ. ஆனந்தகுமார் அவர்களை உள்ளிட்ட சித்த மருந்தியல் பேராசிரியர்கள் மூவர் இடம் பெறுவர். மாநில அளவில் மருந்து தர உறுதி ஆய்வுக்குழு, மூலிகை வாரியம் முதலியனவும் அமைக்கப்பட விருக்கின்றன.

எந்த மாநிலத்திலும் இல்லாத வகையில் சித்த மருத்துவ வாரியம் அமைப்பதற்கான விதிமுறைகள் உருவாகிக் கொண் டிருக்கின்றன. (மருத்துவ முரசு மார்ச் 82. பக் 7)

பிறசெய்திகள்:

10-5-82 அன்று தஞ்சையில் உள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சித்த அறிவியல் மேம்பாட்டுக்குழு கூடியது. (மரபு வழிச் சித்த மருத்துவப் பேராளர்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பது சில மருத்துவ இதழ்களின் கருத்து. தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் முதல் அனைத்து இந்திய சித்த மருத்துவ மாநாடு நடைபெற உள்ளது. அனைத்துக் கர்நாடக சித்த மருத்துவர்கள் மூன்றாவது மாநாடு பெங்களூரில் நடைபெறும்.

1982 ஆம் ஆண்டு அக்டோபர் 19 முதல் 24 ஆம் நாள்வரை இலங்கையில் அக்குபஞ்சர் மாநாடு நடந்தது. இம்மாநாட்டில் தமிழ் நாட்டிலிருந்து சென்ற மருத்துவர் ஆனந்தகுமார், மருத்துவர் மாசிலாமணி குமாரசுவாமி அவர்களும் வெளிநாடு களிலிருந்து வந்த R. சிக்வா, G. பெரிஸ்ஹலன், சமவர்த்தி, R. பக்தசேனா ஆகியோர் உட்பட 32 நாடுகளில் இருந்து வந்த மருத்துவர்கள் கலந்து கொண்டனர்.

மாநாட்டில் அக்குபஞ்சர் மருத்துவ முறையால் பத்து மணித் துளிகளில் வலியில்லாமல் பற்கள் அப்புறப் படுத்திக் காட்டப் பட்டன. பார்வை மங்கல் அக்குபஞ்சர் மூலம் போக்கிக் காட்டப் பட்டது.

அக்குபஞ்சர் குறித்தும் சித்த ஆயுர்வேத மருத்துவ முறைகள் தொடர்பாகவும் ஆய்வுரைகள் நிகழ்த்தப்பட்டன. 14-3-82 அன்று ஓமியோபதி சங்க முதல் மாநில மாநாடு சென்னையில்

சிறப்பாக நடந்தது. ஓமியோபதி மருத்துவத்தில் பட்டப்படிப்பு ஏற்படுத்துவது பற்றி அரசு ஆராய்ந்து வருகிறது. அரசு ஓமியோபதிக் கல்லூரியில் பட்டப்படிப்பு கிடையாது. தற்பொழுது அரசு ஓமியோபதிக் கல்லூரியில் 21 மாணவர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். எனவே ஓமியோபதிக் கல்லூரியிலும் பட்டப்படிப்பு ஏற்படுத்தி மாணவர் சேர்க்கையினை விரிவு படுத்த வேண்டுமாய் அனைத்து ஓமியோபதி சங்கங்கள் சார்பிலும் கேட்டுக் கொள்கிறோம். (ஓமியோபதி ஏப்-82)

பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R. I. M. P.)
பதிவு தொடர்பான செய்திகள்:

பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R. I. M. P.) பதிவுக்கான கடைசி நாள் 1—1—82 இலிருந்து 23—4—82 ஆகவும், பின்பு 31—5—82 ஆகவும், பின்பு 30—6—82 ஆகவும், பின்பு 15—7—82 ஆகவும் மாற்றுமாறு சித்த மருத்துவச் சங்கங்கள் கேட்டுக் கொண்டுள்ளன.

பதிவு பெற்ற இந்திய மருத்துவர் (R. I. M. P.) பதிவுக்கான விண்ணப்பத்தாள்கள் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டன. ஆங்கிலம் தெரியாத எண்ணற்ற சித்த மருத்துவர்கட்கு இது தொல்லையாக அமைந்தது. சித்த மருத்துவச் சங்கங்களின் வேண்டுகோளுக் கிணங்கித் தமிழில் விண்ணப்பத்தாட்களை அரசு வழங்கியது.

★ இந்திய மருத்துவ மரபுவழி மருத்துவர்களைப் பற்றித் திருத்தி அமைக்கப்பட்ட விதிமுறைகள் 1-1-82 முதல் நடைமுறைக்கு வரும். (மருத்துவ முரசு. ஏப்-82)

★ விண்ணப்பதாரர்கள் 1-10-71 அன்று 18 அகவை நிரம்பியவராக இருக்க வேண்டும். (1982ஆம் ஆண்டில் இருபத்தெட்டு அகவை இருக்க வேண்டும்.)

★ 5 ஆண்டுக்குக் குறையாமல் மருத்துவத் தொழில் செய்து வருவதனை வருவாய் அலுவலர் மூலம் வட்ட ஆட்சியர் தகுதிக்குக் குறையாமல் இருப்பவரிடம் சான்றிதழ் பெற்று அனுப்ப வேண்டும்.

பாடத்திட்டம்:

1. சித்த மருத்துவ அமைப்பின் அடிப்படைத் தத்துவங்கள் அல்லது மூலாதாரக் கூறுகள்.

ஆன்ம (உயர்) தத்துவம், உடல்தத்துவம், 96 தத்துவங்கள் உடற்கூட்டுகள், அறுசுவை வேகங்கள், காலங்களும், கால ஒழுக்கமும், ஐந்திணை, உணவு, பத்தியம்.

1. குணபாடம்:

மூலிகைப் பகுப்பு, பச்சை மூலிகைகளையும், கடைச் சரக்குகளையும் இனம் அறிதல், சுத்திக் கிரமம், செய்கைகள் இவைகளினாலான கூட்டு மருந்துகள், பிணி நீக்கம் முதலியன.

3. சித்த மருத்துவம்:

நோய்கள் வரக் காரணம், முக்குற்ற தோடம், கற்பங்கள், நாடிநடை, நோய்களின் குறி குணங்கள், சாத்திய, அசாத்தியக் குறிகள், பிணி நீக்கம், பத்தியம் முதலியன. பாடத் திட்டத்தில் உள்ளவைகளைப் பற்றி படிக்கக் கூடிய புத்தகங்கள்.

யூகி முனி வைத்திய சிந்தாமணி 800

தேரையர் தைல வருக்கச் சுருக்கம்

யூகி முனி சிகிச்சா சாரசங்கிரகம்

ஜீவ ரக்ஷா மிருதம் (சித்தர் மதாந்திரம்)

அகஸ்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம்

போகர் 7000

போகர் கார சாரத்துறை 600

சித்த வைத்தியத் திரட்டு

பதார்த்த குண சிந்தாமணி (வைத்தியர் கண்ணுசாமிப் பிள்ளை)

அரசாங்க வெளியீடு:

பொருட் குண நூல்

1) மூலிகைப் பகுப்பு

2) தாதுசீவ பகுப்பு

3) நஞ்சு நூல்

பயன்பட்ட நூல்:

கோதண்டபாணி, இரா. இதழியல், மதுரை, கற்பக நூலகம், ப. 84.

# 10. மருத்துவ நூல்கள்

த. அழகப்பராசு

அறுபத்தி நான்கு கலைகளுள் ஒன்று மருத்துவக் கலை. இருபத்தைந்து நூல்களுக்கும் மேலாக 1982-இல் மருத்துவ நூல்கள் வெளியாகியுள்ளன. பொதுநிலை நூல்கள், சித்த மருத்துவ நூல்கள், மருத்துவக் கட்டுரைகள் அடங்கியநூல்கள், நோய் பற்றியும் அதை நீக்கும் வகை பற்றியும் பேசும் நூல்கள் எனப்பகுக்கப்பட்டு, மருத்துவ நூல்கள் இக்கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளன.

ஆயகலைகளாகப் போற்றப்படும் அறுபத்து நான்கு கலைகளுள் மருத்துவக் கலையும் ஒன்று. இவ்வகையில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து இரண்டாம் ஆண்டில் இருபத்தைந்திற்கும் மேற்பட்ட மருத்துவ நூல்கள் வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் கிடைத்தன கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது. அவற்றுள், பொதுவகையில் அமைந்த நூல்கள் இரண்டு; சித்த மருத்துவத்தை எடுத்துப் போற்றும் நூல்கள் மூன்று; நோய் பற்றியும், மருந்து பற்றியும் பேசுவன முறையே இரண்டு. மருத்துவக் கட்டுரைகளின் தொகுப்பாக அமைந்தது ஒன்று.

## பொதுநிலை நூல்கள்

சத்துள்ள உணவுகள் உண்டு ஆரோக்கியமாய் வாழ்வது எப்படி? என்ற நூலும், மனோபலமே வாழ்வின் நலம் என்ற நூலும் இப்பிரிவில் அடங்குவன.

முதல் நூலில் அரிசி வகைகள், கீரை வகைகள், காய்வகைகள், பருப்பு வகைகள், கிழங்கு வகைகள், உணவு வகைகள் என்று தலைப்பிடப்பட்டுச் செய்திகள் தரப்படுகின்றன.

அரிசி வகையில் இருபத்து மூன்று அரிசிகளைச் சுட்டி நல்லன அல்லன என்று அவற்றின் மருத்துவ குணங்களை விரித்துரைக்கின்றார் ஆசிரியர். நல்லனவும் அல்லனவும் இணைத்தே தரப்படுகின்றன. சான்றாகக் குறுஞ்சம்பா அரிசியை விளக்க வந்தவர்

'வாத சம்பந்தமான வியாதிகள் குணமாகும். வீரிய விருத்தி உண்டாகும். சொரிசிரங்கு உண்டாகும். பித்தத்தை உண்டு பண்ணும். உடலில் வலியை உண்டாக்கும்' என்று கூறுகின்றார்.

கீரை வகைகள் என்னும் பகுதி சற்று விரிவாக அமைந்துள்ளது. அதில் கொத்தமல்லிக் கீரை பற்றிய விளக்கம் மிக விரிவாக அமைந்துள்ளது. அரைக்கீரை, சிறுகீரை, முளைக்கீரை போன்ற இருபத்தேழு கீரைகளுக்கான விளக்கம் அமைந்துள்ளது. இதிலும் ஏற்படும் பயனும், உண்டாகும் நோய்க் குணமும் பேசப்படுகின்றன.

காய்கள் பற்றிய மருத்துவ விளக்கம் மூன்றாவதாக அமைந்துள்ளது காய், பிஞ்சு, பூ என்பனவற்றை அவ்வவற்றின் குணங்களுக்கேற்ப விளக்குகின்றார். முந்திரிப்பருப்பு தொடங்கி பொட்டுக்கடலை முடிய நாற்பதுக்கும் மேற்பட்ட பருப்பு வகைகள் உண்ணவேண்டிய அளவுடன் குறிக்கப்படுகின்றன. இதனடுத்த பகுதி கிழங்கு வகைகளில் பத்துக் கிழங்குகளை எடுத்துரைக்கின்றது.

உணவு வகைகள் என்ற விரிவான பகுதி இறுதியாக அமைந்துள்ளது. எல்லாவகையான உணவு முறையும், வகையும் விளக்கப்பட்டுள்ளன. இதில் பழங்களின் விளக்கங்களும், நெய், பால், மோர், தயிர் போன்றவற்றின் விளக்கங்களும்காணப்படுசின்றன. பருகும் பானங்களும், இனிப்பு வகைகளும் அதனையடுத்து எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

இந்த இறுதிப் பகுதியின் இறுதியில் சில பொருள்களின் குணங்களைத் தலைப்பாகக் கொடுத்து அவற்றிற்கான பொருள்களைத் தொகுத்துரைக்கின்றார் ஆசிரியர்.

### நூலமைப்பும் பகுப்பும்

அரிசி வகை, கீரை வகை, காய்வகை, பருப்பு வகை, கிழங்கு வகை, உணவு வகை என்ற பகுப்பினுள் எல்லாம் செறிவாக முறையுடன் அமைந்திருக்கிறது என்று கூறுவதற்கில்லை.

நூலின் இறுதியாக அமைக்கப்பட்டுள்ள உணவு வகைகள் என்ற பகுதியில் பிற செய்திகளும் செருகப்பட்டுள்ளன. இதில் பழவகை பற்றிய விளக்கம்,காய்வகை விளக்கம்போன்று விரிவாக அமைந்துள்ளது. ஆனால் காயைத் தனியாகத் தலைப்பிட்டு அமைத்தது போன்று கனிவகையும் தனித் தலைப்பின்கீழ் விளக்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது காயையும் இந்த உணவு வகையில் அடக்கியிருத்தல் வேண்டும். நூலினுள் கூறப்பட்டிருக்கின்ற அனைத்துப் பொருட்களும், உணவுப் பொருட்களுள்

அடங்கும். எனவே இவர் உணவுப் பொருள் என்று சிலவற்றை மட்டும் பாகுபடுத்தியிருப்பது சிக்கலைத் தோற்றுவிக்கின்றது.

நூலின் இறுதியாக அமைந்த பகுதி முதலில் கூறிய செய்தி களையே திரும்பவும் வேறுவகையில் சொல்வதாக அமைகின்றது.

சான்றாக 'அறிவை மந்தப்படுத்தும்' என்று சிறு தலைப் பிட்டு எருமைத் தயிர், எருமை நெய், எருமைப்பால், சிற்றீச்சம் பழம், புளியம்பழம், மாங்காய், மாட்டின் கறி போன்றவற்றை எடுத்துக் காட்டுகின்றார் (ப. 67). இதுவே முன்னரே அறிவு மங்கும் - (எருமைத்தயிர், பக். 45) அறிவு மங்கி வரும் (எருமை நெய் பக். 46), அறிவை மந்தப் படுத்தும் (எருமைப்பால், ப.45) அறிவை மழுங்கச் செய்யும் (சிற்றீச்சம்பழம் ப. 56) அறிவை மந்தப்படுத்தும் (மாங்காய், ப. 23) என பல இடங்களில் ஆசிரி யால் சுட்டப்பட்டனவே. இதில் பக்கம் பெருக்கும் நோக்க மின்றி வேறு இருப்பதாகத் தெரியவில்லை.

கத்தரிக்காய் என்றும் கத்தரிப்பிஞ்சு என்றும் அவற்றிற்குத் தனித்தனியே விளக்கம் கொடுத்துள்ளார் ஆசிரியர் (ப. 17). மீண்டும் ப. 21இல் கத்தரிக்காய் என்று தலைப்பிட்டு எழுதியுள் ளார். முன்னும் பின்னும் அவரால் கொடுக்கப்பட்டுள்ள விளக் கங்கள் வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன. பக்கம் 21இல் தரப்பட்டுள்ள விளக்கங்கள் அப்படியே வெள்ளரிக்காய்க்குப் பொருந்தி நிற்கின்றது. எனவே இவை கத்தரிக்காய் எனப்படும் வெள்ளரிக்காயின் குணங்கள். ஆசிரியர் அதை அறியவில்லை போலும்.

சத்துள்ள உணவுப் பொருள்களைப் பற்றியது இந்நூல். மொத்தத்தில் இந்நூல் சத்துள்ள உணவுகளை முறைப்படுத்திக் காட்டியிருக்க வேண்டும். அவ்வவற்றின் அளவுமுறைகளும் இடத்திற்கேற்ப இடம் பெற்றிருத்தல் வேண்டும். முன்பின் இருக்கின்ற முரண்களும், சொன்னதைத் திரும்பச் சொல்லும் நிலையும் தவிர்க்கப்பட்டு நெறியுடன் அமைதல் வேண்டும். உணவுகளின் சத்து நிலையினை அறிய இந்நூல் ஓரளவு துணை செய்யும்.

மனோபலமே வாழ்வின் நலம் என்னும் நூல் மனம், மனத்தின் தன்மைகள் செயற்பாடுகள் போன்றனவற்றை விளக்கி நிற் கின்றது. தொடக்கம் மனபலம் பற்றிப் பேசுகின்றது. மனதின் இயக்கத் தன்மைகள் இப்படித்தான் இயங்குகிறது என்று திட்ட வட்டமாகக் கூற முடியாது என்கிறார். அதன் இயக்கத்தை இரண்டு வகையில் பகுத்தாய்கின்றார்.

மனம் இயங்காமல் ஒடுங்கி நிற்கிறது என்று நாம் நம்பும் தூக்க நிலையிலும் மனம் இயங்கிக் கொண்டுதான் இருக்கிறது என்று விளக்குகின்றார். மானம் என்பது மனத்தின் பிரதி பலிப்புதான் என்பதையும் எடுத்துரைக்கின்றார். மனம் என்பது இதுதான்; மனத்தின் செயற்பாடுகள் இவைதான் என்று உறுதி யுடன் அறுதியிட முடியாது என்கிறார் ஆசிரியர்.

மனம் இரண்டு வகையினது; உடல் அம்மனத்தின் நண்பன் என்று விளக்கி, நபிகளின் நல்ல மனத்தைப் புகழ்கின்றார். மனம் குணம் மாறவும், வழி மன ஒழுக்கம், மனத்தின் சக்தி, மன வளர்ச்சி, மனத்தின் வடிவங்கள், வேறுபாடுகள், எல்லை யின்மை போன்றவையும் உணர்த்தப் படுகின்றன.

மனத்தை ஒருமைப்படுத்தவும், கட்டுப்படுத்தவும் மனத்தின் சக்தியை அறியவும், சாதனைகளை அறியவும், மனித வசியம் தரும் முறையையும், மனத்திற்கும் மூளைக்கும் உள்ள தொடர் பையும், கல்வி கற்றலையும், மனதின் சோர்வு நீங்கவும் வழிகள் காட்டப்படுகின்றன. மனத்தின் பொதுவான தன்மைகளும், மன உணர்வுகளும், மற்ற நிலைகளும், மாற்று அமைப்புகளும், வெளி உள் மனத்தின் தொடர்புகளும், மனதே மற்றவற்றை ஒருமுகப் படுத்தும் தன்மையும், விதி போன்றவற்றை மனம் உருவாக்குகின்ற நிலையும் சான்றுகளுடன் எடுத்துக் கூறி விளக்கப்பட்டு மனம் பலம் பெற வழிகள் உணர்த்தப்பட்டுள்ளன

நூலமைப்பும் ஆய்வும்

வாழ்க்கை உன் கைகளிலே, உயர்வு உன்னிடமே! நல்ல எண்ணம் நன்மை தரும்! முயற்சியே முன்னேற்றம்! போன்ற பல சுய முன்னேற்ற நூல்களைப் படைத்த மெர்வின் அவர்கள் இந்நூலின் ஆசிரியராவார்.

ஆசிரியர் ஒரு குறிப்பிட்ட பொருளை விளக்கப் புகும் முன்னர் அந்தபொருள் எதைப்பற்றியது? அதன் பரப்பு எவ்வளவு? தன்மைகள் எவை-எவை? என்பது குறித்துப் பேசி, பின்னர் அப்பொருளை நமக்கு அறிமுகப்படுத்தி விளக்குகின்றார் அப்பொருள்களைச் சுற்றியுள்ள சூழலையும் புரிந்துகொள்வதற்கு அவர் தனது விளக்கத்தில் இடமளிக்கின்றார்.

கடினக் கருத்தையும் எளிதில் விளங்க வைக்க அவர்தம் மொழிநடை பெரிதும் அவருக்குத் துணை செய்திருக்கின்றது. சிறு சிறு தொடர்கள் அவர் கொண்ட கருத்தைத் தெளிவுபட விளக்குகின்றன. பல நூலின் அனுபவமும். மனோபலம் பற்றிய ஆழ்ந்த அறிவும் இந்நூலை அவர் செம்மையாகச் செய்ய வழி

வகுத்திருக்கின்றன. அடிப்படைக் கருத்துகளை விளக்கும்போது —வலியுறுத்திச் சொல்லும்போது சான்றுகள் தந்து இரண்டு மூன்று வழிகளில் விளக்குகின்றார். மொத்தத்தில் மருத்துவத்தில் மனபலத்திற்கு உரிய இடம் தெளிவாகக் கோடிட்டுக் காட்டப் படுகின்றது. மனத்தின் பலமும் அதை இயக்கும் கட்டுப்படுத்தும் முறையும் விளக்கமாகவும் தெளிவாகவும் இருவேறு வழிகளிலும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

மனத்தின் நிலையை எடுத்துரைக்கும் பல நூல்கள் வெளி யிட்ட நர்மதா பதிப்பகத்தார் இந்த நூலையும் வெளியிட்டிருக் கின்றனர். பார்ப்போரைப் படிக்கத் தூண்டும் வண்ணம் அதன் அட்டை அமைந்துள்ளது. மொத்தத்தில் இது ஒரு நல்ல நூல். அமைப்பு—விளக்க நிலையில் சில மாற்றம் பெற வேண்டும்.

### சித்த மருத்துவத் தொடர்பு நூல்கள்

இவ்வகையின் கீழ் மூன்று நூல்களை கிடைத்துள்ளன. டாக்டர் எஸ். சிதம்பரதாணுப்பிள்ளை அவர்கள் எழுதிய **சித்த மருத்துவ அமுது, மருத்துவத் திறவுகோல்** ஆகிய இரண்டு நூல் களும் டாக்டர் இரா. மாணிக்கவாசகம் அவர்களின் **சித்தர்கள் பரிபாஷை அகராதி** என்னும் நூலும் ஆகும்.

உலக மருத்துவங்கள் அனைத்தும் உடல்நோய்க்கு மருத்துவம் கூறுவன. ஆனால் சித்தமருத்துவம் உடல்நோய்க்கு மட்டுமன்றி ஒப்பற்ற உயிர் உய்வுக்கும் வழிகாட்டுகின்றது. அதனால்தான் இது சிந்தாமணி மருத்துவம் என்று பெயர் பெற்றது என்றுரைக்கின்றார்.

இந்நூல் சித்தமருத்துவக் கடலினின்றும் சிறப்பான— அமுதான சிலவற்றை மட்டும் எடுத்துக்காட்டுகின்றது. சித்தர்கள் சித்தமருத்துவம், பிரபஞ்சம், சித்தமருத்துவ மூலாதாரம், சித்தர்களின் முறைகள், சித்தர்களின் ஆய்வுத்திறன், அவர்தம் அறிவியலறிவு போன்றன இந்நூலின் கண் காணப்படுகின்றன. சித்தமருத்துவத்தின் தொண்மை, குறளின் மருத்துவச் சுவை இவற்றுடன் சித்தர்கள் சரிதத்தில் தேரையர், திருமூலர் ஆகியோரின் சரிதமும், இயற்கை மருத்துவம், அதன் குணம், முறை, உணவு போன்றனவும் எடுத்துரைக்கப் படுகின்றன;

இவர் சித்தர்களின் கருத்துகளை முறைப்பட தொகுத்து வெளியிட்டிருக்கின்றார். இவர் அடிக்குறிப்புகளின் வழி சில செய்திகளைத் தருகின்றார். அவை மேற்கோள் வழியாக விரித்துரைக்கப்படுகின்றன. பாடல்களை, நூலில் தந்து அதற்

கான திரண்ட கருத்தை நூலில் விளக்குகின்றார். அதன் பொருளை, விளங்கும் வண்ணம் அடிக்குறிப்பில் தருகின்றார். சித்தர்கள் கூறிய கருத்துகளைச் சொல்லி அவை நமக்கு விளங்குதற் பொருட்டு இவர் சில கருத்துகளைச் சொல்லி விளக்கம் தருகின்றார்.

கருத்துகள் சரியாக அமைந்தாலும் அவை முறைப்பட தொகுத்துத் தரப்படவில்லை. செய்திகளைத் தருவதில் இருந்த கவனம் அவற்றை முன்பின் முறையமைப்பதில் இருந்திருத்தல் வேண்டும். ஒரே ஒழுங்கு முறையுடன் நூல் சென்றதா என்றும் ஐயப்பட வேண்டியுள்ளது. பாடல்கள் சிலவற்றிற்குப் பொருள் தந்தவர், சிலவற்றிற்குப் பொருள் தந்தாரில்லை. அவை எடுக்கப் பட்ட நூலினைக் குறிக்கின்ற இடங்கள் சில குறிக்காத இடங்கள் பல. ஞானவெட்டியான், பஞ்சரத்திரனம் ஆகிய மருத்துவ நூல்களைப் படைத்த வள்ளுவநாயனாரும் திருக்குறளைப் படைத்த வள்ளுவரையும் ஒருவரென்றே ஆசிரியர் குறிப்பிட்டி ருக்கின்றார். ஆனால் இவர்கள் வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த வர்கள் என்றும், ஆய்வு முடிவுகள் முன்னரே அறிவிக்கப்பட்டு விட்டன. இது பல சித்தர்களின் நூல்களினின்றும் தொகுக்கப் பெற்றனவே. இதற்குத் தம்மை ஆசிரியர் என்று குறிப்பிட்டிருக் கின்றார். தொகுப்பாசிரியர் என்றோ? பதிப்பாசிரியர் என்றோ குறிப்பிட்டிருக்கலாம்.

மருத்துவத் திறவுகோல் என அமையும்அவரது இரண்டாம் நூல் ஒரு சித்தமருத்துவத் திறவுகோலாக அமைகின்றது. இந்நூலும் முந்நூலைப் போன்று ஒரு தொகுப்பு நூலாகவே அமைந்துள்ளது.

பஞ்சபூதங்களும் உடல் நலனும், பொழுதுகள், பிணியணு காவிதி, நாள் ஒழுக்கம், இயற்கை வாழ்வு, பசியும் நீர் வேட்கை யும், ஏழு உடற்கட்டுகள், உடற்கழிவுப் பொருட்கள், பதினான்கு வேகங்கள், சிகிச்சைமுறைகள், பிணிகளைப் பிரித்தல் என்பது போன்று நாற்பத்தைந்திற்கும் மேற்பட்ட துணைத் தலைப்பு களைக்கொண்டு இந்நூல் முடிகின்றது.

நூலாசிரியர் கொண்ட நூலமைப்பு முறையை விளக்குதற்கு தாதுப்பொருள்கள் என்ற பிரிவை (ப. 25) எடுத்துக் கொள்ள லாம்.

தாதுப் பொருள்களை உலோகம், காரசாரம் என்று இரண்டாகப் பகுத்துள்ளார். காரசாரத்தை இரண்டாகப் பகுத்து இயற்கை உப்பு, செயற்கை உப்பு என்று இரண்டாக்கு கின்றார். அவை எவை என்பதை மட்டும் சுட்டி மேற்செல்கின் றார். இதனால் அவற்றின் பெயர்களை மட்டுமே நம்மால் அறிய

முடிகின்றது. அவற்றை அறிந்ததும் இல்லை; அவற்றின் குணத்தை நுகர்ந்ததும் இல்லை; அதற்கு இந்த நூலில் இடமுமில்லை. அவர் சில இடங்களில் சிலவற்றின் மருத்துவ குணங்களைக் கூறுகின்றார். சில நோய்களுக்கு மருந்தும் சொல்கின்றார்.

ஆசிரியர் நூலின் முன்னுரையில் கிராமப்புற மக்களில் 75 சதவீதத்தினர் சித்த மருத்துவத்தையே கடைபிடிப்பதாகக் கூறுகின்றார். ஆனால், உண்மை அதுவன்று. நாகரிகமே வளராத ஏதோ ஒரு சில கிராமங்களில் அதுவும் ஒரு சிலரால் மட்டுமே சித்த மருத்துவமுறை கடைபிடிக்கப்படுகின்றது. இன்னும் சொல்வதனால் அவசர வேளைகளில் இது ஒரு முதலுதவியாகப் பயன்படுகிறதே அன்றி முழுமைதரும் மருத்துவமாகப் பயன்படுத்தப்படுவதாகத் தெரியவில்லை. ஒரு சில தொடர்ப் பிழைகளையும் முன்பின் மாற்றங்களையும் தவிர ஒரு தரமான நூலாக இந்நூல் அமைந்திருக்கின்றது. செய்திகளைக் கூறும் முறையில் மக்கள் விருப்பம் புரிந்து செயல்படுவதனால் இந்நூல் முழுமை பெற்றிருக்கும்.

இவ்வகையின் மூன்றாவதாக அமையும் நூல் சித்தர்கள் பரிபாஷை அகராதி என்பது இந்நூல். யோகம், வைத்தியம், வாதம், ஞானம் ஆகியனவற்றைச் சார்ந்த சொற்களுக்குப் பொருள் தரும் அகராதியாக அமைகின்றது. ஆனால் இந்நூல் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அவ்வப் பகுதிகளுக்குள் சொற்கள் அகரவரிசையில் தரப்பட்டு அவற்றின் பொருள் பொருள்கள் உணர்த்தப்படுகின்றன. இதில் பதின்மூன்றாயிரத்திற்கு மேற்பட்ட சொற்கள் பொருளுரைக்கப்பட்டுள்ளன. இதில் சொற்கள் மட்டுமன்றி சில சிறு தொடர்களும் கூட பொருளுணர்த்தப்படுகின்றன.

சான்று: 1. கூகை—சீவன் (33)
சாசி—பாம்பு (131)
இகலன்—நரி (157)

2. கைத்தாழ் கொண்டாரும்
திறந்தறிவாறில்லை—சுழுமுனையாகிய
தாழ்ப்பாளைத் திறந்து யாரும் அறிவாறில்லை

மேற்கண்டன மட்டுமன்றி,

ஏற்ற 'திப்பிலி காமன் தாதுவிருத்தி
ஏற்றமாம் 'கட்டுக்கொடி' உப்பைக்கட்டும்
ஏமி 'நீர்க்கிழங்கு'க்கு ஈளைபோகும்

என்பது போன்ற தொடர்கள் வழி மருத்தும் கூறும் நிலையையும் இந்நூல்வழி அறிகின்றோம்.

இந்நூலின் பகுப்புகள் ஐந்து; அவற்றில் அடக்கப்பட்டிருக்கின்ற மருத்துவக் கூறுகள் நான்கு. எனவே நம்மால் ஒரு துறை சொல்லைக் காண சான்றாக ஞானம் தொடர்பான ஒரு சொல்லின் பொருள்காண நூலின் ஐந்தாம் பகுதியை நாடுகின்றோம். ஆனால் அந்தக் குறிப்பிட்ட சொல் அப்பகுதியில் காணப்படவில்லை. அது வேறு பிரிவில் விரவிக்கிடக்கின்றது. மேலும் எந்தத் துறையைச் சார்ந்ததென்று புலப்படாத ஒரு சொல்லுக்கு நாம் பொருள் காண விழைகின்றோம். அப்போது அந்த சொல்லை ஐந்து பிரிவுகளிலும் தேடிப் பிடிக்க வேண்டி உள்ளது. இந்நூல் ஒரே அகர முறையினைக் கொண்டதாகவோ, ஒரு துறை சொற்கள் பிறதுறையில் விரவாதனவாக அமைந்திருத்தல் வேண்டும். மற்ற பகுதிகள் எல்லாம் அ, ஆ என்று மட்டும் பெயர் பெற்றிருக்கின்றது. ஆனால் மூன்றாம் பகுதி 'இ' என்பதோடு மட்டுமன்றி மூலிகைகளின் அகராதி எனவும் தலைப்பினைப் பெற்றிருக்கின்றது. இவ்வகையின தவிர்க்கப் படின் நூல் முழுமையும் செம்மையும் பெறும்.

ஆண்டலை என்ற சொல் (ப. 59) சுத்தியைக் குறிக்கும். ஆனால் ஆசிரியர் ஆண்டலை—பூவில்லாமரம்— அத்தி என்பது குறிப்பிட்டிருப்பது அவரது புலமையையும், கடின உழைப்பின் தன்மையையும் சுட்டி நிற்கின்றது. இவர் ஒரு சிறந்த தமிழ்ப் பேராசிரியர் என்பதால்தான் சொல்லிற்குப் பொருள் கொண்டு பொருள் விளக்கத்தைத் தர முடிந்திருக்கின்றது. மொத்தத்தில் இது ஒரு பயன்தரும் அகராதி.

**நோய் பற்றிய நூல்கள்**

மூல பவுத்திரநோய், நோய் விளக்கம் என்ற இரண்டு நூல்கள் இப்பகுப்பின் கீழ் அடங்குவன.

மூலபவுத்திர நோய் என்னும் நூல் நோயறி உணர்வு, மூல நோய், பவுத்திரம் அறுவை சிகிச்சை, பவுத்திர வியாதியினால் நான் பட்டபாடு, டாக்டர் ரங்கபாஷ்யம் காப்பாற்றினார், ரமணா கிளினிக்கும் டாக்டர் ரங்கபாஷ்யமும், சிலவார்த்தைகள் என்ற எண் தலைப்புகளில் அமைந்துள்ளது.

செய்திகள் பரிமாற்றம் பெற்று பரவி மக்களுக்கு நன்மையைத் தருகிறது. தரவேண்டும் என்று ஆசிரியர் விழைகிறார். மூலநோய் தோன்றக் காரணம் அது உண்டாகும் முறை, அதன் வகைகள் (21) இவற்றை விளக்குகின்றார். அவ்வகை

யினுள் உள்மூலம், வெளிமூலம், பவுத்திரமூலம் என்ற மூன்றையே கொள்கின்றார்.

உள்மூலம், வெளிமூலம், பவுத்திரம் இவற்றின் தன்மைகள், அவற்றின் தோற்றக் காரணம், அவை நீங்க கையாளவேண்டிய உணவுமுறை போன்றவற்றையும், அதற்கான அறுவை சிகிச்சை முறையினையும் அடுத்தடுத்து விளக்குகின்றார். ஐந்தாம் பகுதி பவுத்திர நோயினால் நூலாசிரியர் பட்ட துன்பத்தை விளக்கு கின்றார்.

தன்னை நோய்த் துன்பத்திலிருந்து காப்பாற்றிய டாக்டர் ரங்கபாஷயம் அவர்களின் திறமையை வியந்து போற்றுகின்றார் ஆசிரியர். அதன்வழியே தான் உலகப் புகழ்பெற்ற டாக்டர் ரங்கபாஷ்யத்திற்கு நண்பரான சூழலையும் எடுத்துரைக்கின் றார். அவர் குறித்துத் தான் வரைந்த கவிதையை அடுத்தமைத் திருக்கின்றார். சில வார்த்தை என்ற சில பகுதியில் இவர் நோய் வராதிருக்க உணவு முறையையும், வந்திடின் அறுவை சிகிச்சை யின் அவசியத்தையும் விளக்கிச் சென்றுள்ளார்.

தான் அந்த வியாதியால் பாதிக்கப்பட்டதால் நோயையும், அதன்வழி தான் பெற்ற இன்னல், அனுபவங்கள் இவற்றையும் தெளிவாக விளக்குகின்றார். நோயின் தன்மையினை எளிதாக விளங்கிக் கொள்ளும் முறையில் அதன் போக்குகளைச் சிறிது சிறிதாக எடுத்துரைக்கின்றார். டாக்டர் ரங்கபாஷ்யம் அவர் களுக்கு அவரது நன்றியுணர்வை ஒரு கவிதை மூலம் புலப்படுத்தி இருக்கின்றார் ஆசிரியர். கவிஞர் என்ற வகையில் அவ் வேலையை அவர் செம்மையாகவே செய்துள்ளார். ஆனால் மூலபவுத்திரநோய் என்ற நூலுக்கு அது புறத்தே நிற்கிறது. அதை ஆசிரியர் வெளியிடாமலோ பின்னிணைப்புப் போன்றோ அமைத்திருக்கலாம். இது போன்றதே ரமணா கிளினிக்கும், டாக்டர் ரங்கபரஷ்யமும் என்ற பகுதியும்.

உரையாடல் அமைப்பில் சில பகுதிகள் அமைக்கப் பட்டிருப்பது கருத்து நுகர்விற்கு எளிமையானதைத் தருகின்றது. சில இடங்களில் தேவை இல்லாதபோதும் அவ்வுரையாடல் இடம்பெறக் காண்கிறோம்.

இவ்வகையில் இரண்டாவதாக அமையும் நோய் விளக்கம் என்னும் நூலையும் டாக்டர் எஸ். சிதம்பரதாணு பிள்ளை அவர்களே எழுதியுள்ளார்கள். நோய்வகை, மருந்துவகை, வாந்திபேதி நோய் முன்னெச்சரிக்கை என்ற மூன்று பிரிவாக நூல் பகுக்கப்பட்டுள்ளது.

வர்மநோய், சுரம், சன்னி, குன்மம், பாண்டு, காமாலை, சோகை, விஷம், மகோதரம், கரப்பான், விப்புருதி, பெரும்பாடு, அடைப்பான், மேகம், பிரமியம், சிரிச்சரம், விக்கல், வாந்தி, அதிசாரம், மூலசிராணி, மூலம், பவுத்திரம் தலைமயிர் நோய், தலை, பல், காது வலிகள், கண்ணோய், சூலை, வாதம், பித்தம், சிலேத்துமம், நீர்பாய்ச்சல், குட்டம், புற்றுநோய் போன்ற நோய்கள் அதன் காரணங்களோடு விளக்கம் பெற்றுள்ளன. மருந்து வகைகளில் மாத்திரை, செந்தூரம், பற்பம் போன்ற பல முறைகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இறுதிப்பகுதி மிகச் சிறியதாகப் பின்னிணைப்புப் போன்று காணப்படுகின்றது.

வர்மம் தொடர்பானவற்றில் தேர்ந்தவர் இந்நூல் ஆசிரியர். எனவே அதை முதலாவதாகவும், முதன்மையான தாகவும் கருதுகின்றார். சில நோய்களின் பெயர்கள் அடைப்பில் ஆங்கிலத்திலும் கொடுக்கப்பட்டுள்ளது. இடையிடையே பாடல்களும், குறிப்புகளும், மேற்கோள்களும் காணப் படுகின்றன. நோய் வரும்முன் தோன்றும் அறிகுறிகள் அவற்றைப் போக்குதற்கான வழிமுறைகள் போன்றன அதன் கண் காணப்படுகின்றன. இதுவும் ஒரு சித்த மருத்துவ நூலே. ஆனாலும், நோய் பற்றிய முழு விளக்கமாக நூல் அமைந்து விட்டபடியால் அதனைப் பற்றிய விளக்கம் இப்பிரிவின்கண் தரப்படுகின்றது. இன்னும் சற்று எளிமைப்படுத்தி மக்களுக்குப் பெரிதும் பயன்படும் வகையில் அமைத்திருக்கலாம்.

**மருந்து தொடர்பு நூல்கள்**

தலை சிறந்த தமிழ் மருந்துகள், தமிழ் மருந்துகள் என்பன இப் பிரிவின்கண் அடங்குவன. இவ்விரண்டும், நூல்களையும் படைத்தளித்தவர் டாக்டர் திருமலை நடராசன் அவர்கள்.

முதல் நூல் தலைப்பகுதியில் அமைந்துள்ள உறுப்புகளுக்கு மருத்துவம் கூறுகின்றது. வாய், கண், காது, தலை, என்ற நிலையில் பாகு படுத்தப்பட்டுள்ளது. வாய் என்ற பகுதியில் தொண்டைப்புண் வாய் வேக்காளம், பல்லரனை, பல்வலி, பல் கூச்சம், ஈறுகட்டல், கண்டமாலை போன்றவற்றிற்கு மருந்துகள் கூறப்படுகின்றன.

கண் நோய்கள் பற்றிய பகுதி போகமுனிவரின் தயிலம் பற்றியும், அகத்தியரின் காரைத் தயிலம் பற்றியும், கண் வலி, கண் எரிச்சல், கண் பூ போன்ற பதினெட்டு வகையான கண் நோய்களும் பேசப்படுகின்றன. காதில் சீழ்வடிதல், காதிரைச்சல் காது வலி, காது குத்தல் போன்ற பல நோய்கள் காது பற்றிக்

குறிக்கப்பட்டு அதற்கான மருந்துகள் உரைக்கப்படுகின்றன. அடுத்து தலைவலியின் வகைகள் பற்றி விளக்கி அதற்கான மருந்துகளும் மருத்துவ முறைகளும் பேசப்படுகின்றன.

**மருந்தும் மருத்துவ முறைகளும்**

ஒரு நோய்க்கு இருவேறு மருந்து மருத்துவ முறை இருப்பின் —1, —2 என்று அமைக்கின்றார். மருந்துக்குத் தேவையான பொருட்கள் வரிசை எண்ணிட்டுத் தரப்பட்டுள்ளன. அளவும் உணர்த்தப்பட்டுள்ளது. பட்டியலைத் தொடர்ந்து மருந்து செய்முறையும், பதங்களும், பக்குவங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மருந்துண்ணும் போது உண்ணத் தகாதனவற்றைச் சுட்டிச் செல்கின்றார். சில நோய்களுக்குக் குறிப்புகள் தந்து மருத்துவ முறையை விளக்குகின்றார்.

பதின்மூன்றுக்கும் மேற்பட்ட மருத்துவ நூல்களை இவர் படைத்துள்ளார். அதை இவரது அனுபவஞ் சார்ந்த விளக்கங்களே சுட்டி நிற்கின்றன. நூலில் தன்னால் உணர்த்தப்படுகின்ற கருத்துகள் எல்லாம் சித்தர்களுடையது என்பதைக் காட்டியுள்ளார். சில இடங்களில் அவ்வாதரங்களை அடைப்பில் தந்துள்ளார். அவை பார்த்தவுடன் தெரியும் வண்ணம் தடித்த எழுத்துகளில் கொடுக்கப்பட்டுள்ளன. சில இடங்களில் ஆதார நூலை மட்டும் சுட்டாது அந்தக் கருத்துள்ள பாடற் பகுதியையே தந்துள்ளார்.

இந்நூல் தமிழ் மருந்து என்று சித்த மருத்துவத்தைக் குறிப்பிட்டு, அத்துடன் அனுபவத்தையும் சேர்த்துக் குழைத்துத் தந்திருக்கின்றது. இவ்வகை நூல்களை யாக்கும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது.

இவ்வகையின் இரண்டாம் நூலான தமிழ் மருந்துகள் முப்பதுக்கும் மேற்பட்ட நோய்களுக்கு மருத்துவம் கூறுகின்றது. அவற்றிற்கு இலேகியேம், மருந்து, சூரணம், தைலம் என்ற பல முறைகள் சுட்டப்படுகின்றன. இவற்றிற்கு ஆதாரங்களாக இவர் சித்த மருத்துவத்தைக் கொண்டுள்ளார். தலைப்பின் கீழ் அந்த மருந்து, லேகியம், சூரணம் இவற்றில் ஒன்றினையோ, ஒற்றிற்கு மேற்பட்டனவற்றையோ தயாரிக்க தேவையான பொருள்களையும் அவற்றின் அளவுகளையும் கூறுகின்றார்.

பட்டியலைத் தொடர்ந்து மருந்து செய்முறை என்ற பகுதியில் மேற்குறிப்பட்ட பொருள்களை எப்படிப் பதப்படுத்தி தக்கமுறையில் வைத்துக்கொள்வது என்பது முறைபட எடுத்

துரைக்கப்பட்டுள்ளது. பயன்படுத்தப்பட வேண்டிய அளவும்—முறையும் குறிக்கப்பட்டுள்ளது.

இறுதியாக அமைந்த குறிப்புப் பகுதியில் குழந்தைகள், பெரியவர், பிற நோய் கண்டோர் உட்கொள்ள வேண்டிய பிற வற்றையும் விரிவாக எடுத்துரைக்கின்றார் ஆசிரியர். பயன்படுத் தாது தள்ளவேண்டுவனவற்றை கண்டிப்பாகத் தள்ளவேண்டுவன என்று தலைப்பிட்டு அமைக்கின்றார்.

இப்பிரிவின் கண் நாம் கண்ட இரு நூல்களிலும் தமிழ் மருந் தும் தமிழ் மருத்துவ முறையும் ஒன்றில் இடம்பெற்றதே மற்றொரு நூலிலும் இடம் பெற்றிருக்கின்றது. நூலாசிரியர் தனது நூல்களின் நோக்கையும், போக்கையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் முன்னுரையில் கொடுத்துள்ளார். நூலைப் படிக்கத் தொடங்கும்முன் ஆசிரியரையும் நூலின் அமைப்பினை யும் அறிய துணை நிற்கின்றது.

மருந்துகளை முறையோடு செய்து, முறையோடு உட் கொண்டு தள்ளவேண்டிய உணவுப் பொருட்களைத் தள்ளி, உட் கொள்ள வேண்டிய உணவுப்பொருட்களை உண்டு, குளியல், கண்விழிப்பு, கடும் உழைப்பு, உடலுறவு இவைகளையும் நீக்கி னால் நோயின் கொடுமையிலிருந்தும், நோயின் பிடியிலிருந்தும் தப்ப முடியும் என்பது அவரது கூற்று (ப. 6).

இந்தப் பகுதியின் ஒவ்வொரு சிறு தொடரும் சிறிய தலைப்பாக மாறி நூலில் விளக்கத்தைப் பெறுகிறது. மொத்தத் தில் பலருக்கும் பயன்படும் வகையில் அமைந்த இந்நூல் ஆசிரி யரின் மருத்துவ புலமையையும், அனுபவத்தையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.

**கட்டுரைத் தொகுப்பு**

வாதநோயால் ஆண்மை குறையுமா? விலங்குகளுக்குக் கூரிய அறிவு உண்டா? என்பது போன்ற பதின்மூன்று கட்டுரைகளின் தொகுப்பாக அமைகின்றது. புகை பிடிப்பதும் புற்று நோயும் என்பது. நூலின் ஆறாவது கட்டுரைத் தலைப்பே நூல் தலைப் பாக அமைந்துள்ளது.

வாதநோயால் ஆண்மை குறையாது என்பதற்குத் தன்னையே சான்றாக்கி விளக்கம் தருகின்றார். பூனை, குரங்கு, நாய், ஹேன்ஸ் குதிரை போன்றவற்றிற்கு அறிவு தெளிவு—தெளி வின்மை இரண்டையும் எடுத்துரைக்கின்றது அடுத்தக் கட்டுரை. மூளைப் போர்வையின் சுழற்சி நிலையே முதுமையின் முன்னோடி என்கிறார் அவர். முதுமையின் கடுமையால் நேரும்

எதிர்பாரா இறப்புக்கு மன பலமின்மையை அவர் காரணமாகக் கருதுகின்றார்.

அதிகம் உண்டால் ஏற்படும் நோய்கள், அவற்றைத் தடுக்கும் முறைகள் இவற்றை விளக்கும் பகுதி அதிகம் உண்டால் ஆபத்தா? என்று தலைப்பைத் தாங்கி நிற்கின்றது. நோயுள்ளோருடன் உடலுறவு கொள்வது கண்களையே குருடாக்கி விடும் வலிமை படைத்தது என்கிறார். புகையை உண்பவர்க்கு மட்டுமன்றி அவருடன் இருப்போர்க்கும் புற்றுநோய் உருவாகும் என்பதை ஆறாம் பகுதி விளக்குகின்றது.

அடிக்கடி ஏற்படும் மனநிலையின் மாறுபாடுகள் மரணப் பாதையின் முதல்படி என்கிறார். தற்கொலைத் தடுப்புச் சங்கம் என்பது பற்றிய விளக்கம் எட்டாம் பகுதியில் அமைந்திருக்கின்றது. குழந்தை பிறவாமைக்கு கணவன் மனைவி இருவரின் ஒருவரின் முன்நடத்தையே காரணம் என்கிறார். அலியாக ஒருவன் மாறுவதற்கான காரணங்களைக் கூறுகின்றது பத்தாம் பகுதி. நலமாக வாழ நான்கு வழிகளும், அழுவது உடலுக்கு நல்லது என்றும், அடுத்த பகுதிகள் விவரிக்கின்றது. மனித தேகத்தின் வழியே, குற்றவியல் விஞ்ஞானம் என்பன இறுதிப் பகுதிகள்.

புகை பிடிப்பதும் புற்று நோயும் என்ற நூலின் தலைப்பு புகையையும், புற்று நோயையும் பற்றிய முழு நூல் இது என்று எண்ணத் தூண்டுகின்றது. கட்டுரைகளைத் தொகுத்து நூலாக்கும் நிலையில் 1982 ஆம் ஆண்டில் வேறு நூல்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

சொல்லும் முறையில் கதை கூறுவது போன்று காணப்படுகின்றது இந்நூல், நூலில், வாய்ப்பு நேரும் போதெல்லாம் மன பலமே வாழ்வின் பலம் என்பதை எடுத்துக் காட்டுகின்றார். இந்நூல் எண்பது பக்கங்களைக் கொண்டது. இதன் இறுதி பத்துப் பக்கங்கள் (71—80) வரிகளுக்கிடையே உள்ள இடைவெளி இல்லாமல் அமைந்திருக்கின்றது. அவை எண்பது பக்கங்கட்கு மேற்போகாமல் தடுக்கப்பட்டு அடுத்த பாரத்தின் (Form) செலவு குறைக்கப்பட்டுள்ளது. இதைப் பதிப்பாளர் தவிர்த்திருக்கலாம்.

இந்நூல்—மொத்தத்தில் பயன்பாட்டு நிலையில் சிறந்து நிற்கின்றது. நூலின் தலைப்பு மாற்றம் பெற்றால் மேலும் சிறப்புறும்.

கண் மருத்துவம் என்னும் நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. இது சுவடிகளி

னின்றும் பதிப்பிக்கப்பட்ட நூல். அதைப் பற்றிய கருத்தும் விளக்கமும் சுவடி பதிப்பு நூல்களில் இடம்பெறுமாதலால் இங்கு அது தவிர்க்கப்பட்டுள்ளது.

## பின்னிணைப்பு—1

**மருத்துவ நூல்கள்**

(நூல் பெயர் அகர வரிசை)

1. கண் மருத்துவம், இரா. மாதவன் (பதி), உ. த. ஆ. நி, சென்னை, 1982.
2. சத்துள்ள உணவுகள் உண்டு ஆரோக்கியமாக வாழ்வது எப்படி? , எஸ். ஏ. எஸ். ராஜா, தமிழ்ச் சோலைப் பதிப்பகம், சென்னை, 1982.
3. சித்த மருத்துவ அமுது, எஸ். சிதம்பரத் தாணுப் பிள்ளை, சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், சென்னை, 1982.
4. சித்தர்கள் பரிபாஷை அகராதி, இராச மாணிக்க வாசகம், அன்னை அபிராமி அருள், சென்னை, 1982.
5. தமிழ் மருந்துகள், திருமலை. நடராஜன், குமரன் பதிப்பகம், சென்னை, 1982.
6. தலை சிறந்த தமிழ் மருந்துகள், திருமலை நடராஜன், முத்துப் பதிப்பகம், விழுப்புரம், 1982.
7. நோய் விளக்கம், எஸ். சிதம்பர தாணுப் பிள்ளை, சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், சென்னை, 1982.
8. புகை பிடிப்பதும் புற்று நோயும், துரை, நமச்சிவாயம், அசோகன் பதிப்பகம், சென்னை, 1982.
9. மருத்துவத் திறவுகோல், எஸ். சிதம்பரத் தாணுப் பிள்ளை, சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், சென்னை, 1982.
10. மனோபலமே வாழ்வின் நலம், மெர்வின், நர்மதா பதிப்பகம், சென்னை, 1982.
11. மூல பவுத்திர நோய், அரு. சோமசுந்தரம், பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, 1982.

## பின்னிணைப்பு-2

# 1982-இல் தினமணி நாளிதழில் வெளியான மருத்துவக் கட்டுரைகளும், செய்திகளும்.

| | நாள் | தலைப்பு | ஆசிரியர் |
|---|---|---|---|
| 1. | 3-1-82 | ஜலதோஷ மருந்து விடமின் 'சி' | டாக்டர் சுப. சதாசிவம் |
| 2. | 17-1-82 | பெண்களுக்கான குடும்ப நல சிகிச்சை முறை | பத்மா |
| 3. | 20-1-82 | மூல நோய் காரணங்களும் சிகிச்சை முறைகளும் | — |
| 4. | 24-1-82 | கொழுப்புச் சத்து உடலுக்குத் தேவையா? | நளினி |
| 5. | 24-1-82 | கர்ப்பக்கிரகமும் பெண்களும் | நளினி |
| 6. | 24-1-82 | உணவுப் பண்டங்களைப் பாதுகாப்பது எப்படி? | குயிலி ராஜேஸ்வரி |
| 7. | 7-2-82 | தெரிந்து கொள்ள வேண்டியவை உடல் நலனுக்காக | — |
| 8. | 14-2-82<br>21-2-82<br>28-2-82 | சத்தை உறிஞ்சும் குடல் பூச்சிகள் | டாக்டர் சுப. சதாசிவம் |
| 9. | 21-2 82 | மலர்களின் மணமும் ஆரோக்கியமும் | குயிலி ராஜேஸ்வரி |
| 10. | 28-2-82 | சத்து மிகுந்த சமையல் | — |
| 11. | 7-3-82 | நகமும் அதன் பொலிவும் | குயிலி ராஜேஸ்வரி |
| 12. | 7-3-82 | ஆடைகளும் காக்கும் முறைகளும் | — |

| | | | |
|---|---|---|---|
| 13. | 14-3-82 | வண்ணங்களும் குணங்களும் | குயிலி ராஜேஸ்வரி |
| 14. | 28-3-82 | வேனிற்காலத்தில் சரும பாதுகாப்பு | ,, |
| 15. | 11-4-82 | உடல்நலம், முதுகுவலி | டாக்டர் சுப. சதாசிவம் |
| 16. | 25-4-82 | பொடுகு போக | குயிலி ராஜேஸ்வரி |
| 17. | 9-5-82 | மஞ்சள் காமாலை | டாக்டர் சுப. சதாசிவம் |
| 18. | 9-5-82<br>16-5-82 | பெண்கள் தெரிந்துகொள்ளக் கூடிய பொது வைத்தியம் | குயிலி ராஜேஸ்வரி |
| 19. | 23-5-82 | டயாபெடிஸ் | நளினி |
| 20. | 30-5-82 | மனவளர்ச்சிக் குறை | டாக்டர் அ. துரைராஜ் |
| 21. | 6-6-82 | பல்லிடுக்கில் சீழ் பிடித்தல் | டாக்டர் சுப. சதாசிவம் |
| 22. | 27-6-82 | குழந்தைகள் ஆரோக்கியத்திற்கு | நளினி |
| 23. | 4-7-82 | மெனோபாஸ் | குயிலி ராஜேஸ்வரி |
| 24. | 11-7-82 | கர்ப்ப காலத்தில் உடல் பாதுகாப்பு | ,, |
| 25. | 18-7-82 | குழந்தையும் தாய்ப்பாலும் | ,, |
| 26. | 18-7-82 | மூப்பின்றி முதியோர் வாழ்க | டாக்டர் இ.எஸ்.எஸ். இராமன் |
| 27. | 25-2-82 | தாய்ப்பாலும் கவனிக்க வேண்டிய விதிகளும் | குயிலி ராஜேஸ்வரி |
| 28. | 1-8-82 | குழந்தை உணவு | ,, |
| 29. | 8-8-82 | மருந்தாகும் தேநீர் | டாக்டர் சுப. சதாசிவம் |

| | | | |
|---|---|---|---|
| 30. | 8-8-82 | காய்கறிச் சத்தைக் கரியாக்காதீர் | டாக்டர் சுப. சதாசிவம் |
| 31. | 15-8-82 | உயிரினங்களும் மூலிகைகளும் | ஆரணி சுரேஷ் |
| 32. | 15-8-82 | குழந்தை உணவும் சாப்பிடச் செய்யும் முறையும் | குயிலி ராஜேஸ்வரி |
| 33. | 15-8-82 | ஆரோக்கியத்திற்கு மருதாணி | — |
| 34. | 22-8-82 | குழந்தையின் உறக்கமும் வளர்ப்பும் | குயிலி ராஜேஸ்வரி |
| 35. | 5-9-82 | வலிப்பு நோய் | டாக்டர் சு. துரைராஜ் |
| 36. | 12-9-82 | கர்ப்ப காலமும் பாதுகாப்பும் | குயிலி ராஜேஸ்வரி |
| 37. | 19-9-82 | கர்ப்ப கால வலி சிகிச்சை | ,, |
| 38. | 26-9-82 | குழந்தைகளைப் பற்றிய சிந்தனை | ,, |
| 39. | 3-10-82 | இரத்தத்தில் சர்க்கரை குறைதல் | டாக்டர் சந்திரசேகர் ஜி. தாக்கூர் |
| 40. | 10-10-82 | வயிற்றுப்புண் | டாக்டர் சுப. சதாசிவம் |
| 41. | 17-10-82 | காக்கை வலிப்பு | வே. தமையந்திரன் |
| 42. | 24-10-82 | குழந்தைகள் பற்றிய சிந்தனை | குயிலி ராஜேஸ்வரி |
| 43. | 14-11-82 | விடுதியில் வளரும் குழந்தைகள் | ,, |
| 44. | 28-11-82 | நோய் நீக்கும் காந்தம் | டாக்டர் சுப. சதாசிவம் |
| 45. | 19-12-82 | புதிய உணவுமுறை | டாக். சந்திரசேகர் ஜி. தாக்கூர் |
| 46. | 26-12-82 | ஆண்களின் இதய நோய்க்குக் காரணம் பெண்களே! | — |

# 11. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வேடுகள்

அ. ம. சத்திய மூர்த்தி

*1982-இல் 178 ஆய்வேடுகளுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் பிஎச். டி., பட்டம் வழங்கியுள்ளது. இவற்றுள் தமிழ் ஆய்வேடுகள் பன்னிரண்டு ஆகும். ஆயினும், அலுவலகக் குறிப்பின் வழி 22 தமிழ் ஆய்வேடுகளுக்குப் சென்னைப் பல்கலைக்கழகம் பிஎச். டி., பட்டம் வழங்கியிருப்பதாக அறிய முடிகிறது. ஆய்வேடுகளைப் பற்றிய முழு விவரங்களையும் சேகரிப்பதில் இடர்ப்பாடுகள் அதிகமுண்டு.*

## முன்னுரை

திறனாய்வு என்பது இருப்பதனை மதிப்பீடு செய்வதோடு நின்றுவிடாமல் இனி வரவிருக்கும் படைப்புகளுக்கும் வழிகாட்டியாக அமைவதாகும். அத்தகைய திறனாய்வு ஒரு பொருளின் மீது தொடர்ந்து நிகழுமிடத்து கருத்துகள் கூர்மை அடையும். அவ்வகையில் மூன்றாவது ஆண்டு முயற்சியாக வெளிவருவது தான் தமிழ் ஆய்வேடுகள் பற்றிய இக்கட்டுரையாகும்.

## கட்டுரையின் எல்லை

உலகின் பல்வேறு பகுதிகளில் பல்கலைக் கழக நிலையில் தமிழாய்வு வந்தபோதும், மூன்றாவது ஆண்டாக முறையோடு முயற்சித்துங்கூட, சென்னைப் பல்கலைக் கழக எல்லையிலேயே முழுமையான தகவல்களைத் திரட்ட இயலவில்லை. எனவே, இக்கட்டுரை சென்னைப் பல்கலைக் கழக ஆய்வுகளை மட்டுமே மையமாகக் கொண்டு இயங்குகிறது.

தமிழ் ஆய்வேடுகளின் தொகுப்பு வரலாறு, முழுமையான தொகுப்பின் தேவை, பயன் ஆகியன குறித்து 'எண்பதில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வேடுகள்' எனும் கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. கூறியதனையே

திரும்பக் கூற வேண்டியதில்லை எனும் நிலையில் அச்செய்திகள் இங்குப் பேசப்படவில்லை. ஆயினும் அழுத்தம் பெற வேண்டிய கருத்துகள் மட்டும் ஆங்காங்கே சுட்டிக் காட்டப்படுகின்றன.

## புறநிலை மதிப்பீடு

சென்னைப் பல்கலைக் கழகம் 1982-இல் 178 ஆய்வேடுகளுக்குப் பிஎச். டி. பட்டம் வழங்கியுள்ளது.[1] இவற்றுள் தமிழ் ஆய்வேடுகள் பன்னிரண்டு ஆகும்.[2] ஆயினும் அலுவலகக் குறிப்பின்வழி 1982-இல் இருபத்திரண்டு தமிழ் ஆய்வுகளுக்குப் பிஎச். டி. பட்டம் வழங்கப் பெற்றுள்ளதாக அறிய முடிகிறது. இதில் வே சீதாலெட்சுமி, ஜி. ஆர். கிருட்டிணமூர்த்தி ஆகிய இருவரது ஆய்வேடுகள் பற்றிய தகவல்களை அறிய இயலவில்லை. இவை இரண்டும் நீங்க, எஞ்சிய இருபது ஆய்வேடுகள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. இவற்றில் மூன்று ஆய்வேடுகள்[3] நீங்கிய பதினேழு ஆய்வேடுகள் பற்றிய முழுமையான குறிப்புகள் கிடைக்கவில்லை. ஆயினும் அவற்றிற்கு 1982இல் பட்டம் வழங்கப் பெற்றுள்ளது என்ற குறிப்பினை அடிப்படையாகக் கொண்டு, அவை இணைப்பின்கண் உள்ள தொகுப்பில் இடம் பெறுகின்றன.

தமிழோடு தொடர்பு படுத்தப்பெற்று தமிழல்லாத பல்துறைகளில் நடைபெற்ற பிஎச். டி. ஆய்வுகள் தந்து இணைப்பில் இடம் பெற்றுள்ளன.[4] ஆக, இருபத்தைந்து பிஎச். டி. ஆய்வுகள் பற்றிய தகவல்கள் இணைப்பில் இடம் பெற்றுள்ளமையின் அறியலாம். 82-இல் தமிழ் ஆய்வேட்டிற்கு எம். லிட். பட்டம் அளிக்கப் பெற்றதாகத் தெரியவில்லை.

இணைப்பில் இடம் பெறும் எம்ஃபில் ஆய்வேடுகள் ஐம்பது ஆகும். இவற்றுள் முழு விவரங்களும் கிடைக்கப் பெறாதவை

---

1. காண்க சென்னைப் பல்கலைக் கழக ஆண்டறிக்கை (1982)—இரண்டாம் தொகுதி.
2. அவை இணைப்பில் 1, 5, 6, 10, 11, 12, 18, 26, 27, 52, 59, 61 ஆகிய வரிசை எண்களைப் பெறுகின்றன.
3. முழுமையான குறிப்புகள் கிடைப்பவை 1, 37 72 ஆகிய தொடரெண்களைப் பெறுகின்றன.
4. அவை தத்துவம் (17) தொல்பொருளியல் (16), இந்தி (64), ஆங்கிலம் (65), ஆட்சியியல் (75) ஆகிய துறைகளில் நிகழ்ந்துள்ளன.

ஏழு ஆய்வேடுகள்[5]. எஞ்சிய 43-இல் பல்கலைக் கழகத்திற்கு 82-இல் முப்பத்தொன்பதும், எண்பத்தொன்றில் மூன்றும், எழுபத்தொன்பதில் ஒன்றும் அளிக்கப் பெற்றன. பட்டம் வழங்குவதில் ஏற்பட்ட கால தாமதம், தொகுப்பு முயற்சியின் போது தகவல்கள் கிடைக்காமை ஆகிய காரணங்களால், அந்தந்த ஆண்டுகளிலேயே குறிப்பிட்ட ஆண்டிற்குரிய ஆய்வேடுகள் இடம் பெறாமல் போவது உண்டு. அவ்வகை யிலேயே மேற்குறித்த நான்கு ஆய்வேடுகள் பற்றிய செய்திகள் அடங்கும்.

கிடைத்துள்ள 50 எம்ஃபில் ஆய்வேடுகள் இரண்டு பல்கலைக் கழக இந்திய வரலாற்றுத் துறையில் நிகழ்ந்தவை யாகும்.[6] எஞ்சிய 48 ஆய்வுகளும் கல்லூரி மற்றும் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைகளின் வாயிலாக நிகழ்ந்தவையாகும்.

எம்ஃபில், பிஎச். டி. ஆய்வேடுகளைப் பற்றிய முழு விவரங்களையும் அறிய இயலாமல் இருப்பதற்குக் காரணமாக அமைவது பல்கலைக் கழகமே. எவ்வாறெனில், பட்டம் வழங்கப் பெற்ற ஆய்வேடுகள் அனைத்தும் நூலகத்தில் தொகுத்து வைக்கப் பெறவில்லை. நிர்வாகம் ஆய்வேடுகளை நூலகத்திற்கு அனுப்பினால் தானே நூலகத்தில் தொகுத்து வைக்க இயலும். இது ஒரு பல்கலை கழக அளவிலான நிலை. அனைத்துப் பல்கலை கழக ஆய்வுகளையும் எவ்வாறு தொகுப்பது எனில், அரசின் தலையீடு ஒன்றுதான் அதற்கு வழி வகுக்க இயலும். அரசின் உதவியின்றி மேற்கொள்ளும் முயற்சிகள் அனைத்தும் பொருள், காலம், உழைப்பு ஆகியனவற்றின் விரயங்களாகத்தான் முடியும் என்றும் சுட்ட வேண்டியுள்ளது.

எம்ஃபில் ஆய்வேடுகளில் பொறுத்தவரை அவை நிகழ்ந்த துறைகள் சிலவற்றில் காண்பதுகூட அரிதாக உள்ளது. ஆய்வேடுகளைத் துறையிலேயே காணும்படி அமைத்துள்ள மைக்குப் பல்கலைக் கழகத் தமிழ் (மொழி) துறை இலக்கியத்

5. முழு விவரங்களும் கிடைக்கப் பெறாத எம்ஃபில் ஆய்வேடுகள் 7, 32, 43, 44, 62, 67, 70 ஆகிய வரிசை எண்களைப் பெறுகின்றன.

6. இந்திய வரலாற்றுத் துறையில் நிகழ்ந்த எம்ஃபில் ஆய்வுகள் 7, 62 ஆகிய தொடரெண்களைப் பெறு கின்றன.

துறை ஆகியனவும், காணவே முடியாத நிலையில் உள்ளமைக்கு மாநிலக் கல்லூரியின் தமிழ்த்துறையும் சான்றுகளாகும்.

எனவே எம்ஃபில் ஆய்வேடுகளைப் பொறுத்தவரை குறைந்தபட்சம் அவ்வாய்வு நிகழ்ந்த துறைகளிலாவது அவற்றை ஆய்வாளர்கள் தடையின்றி காணும் வகையில் தொகுத்து வைப்பது தேவையான ஒன்றாகும்.

### அகநிலை மதிப்பீடு

ஆய்வினை மதிப்பீடு செய்வதென்பது, ஆய்வாளரைவிட அதிகமாக அறிந்திருந்து மதிப்பீடு செய்யுமிடத்துதான் முழுமையடையும். இந்த நிலையில் தனி ஒருவர் பல ஆய்வேடுகளை அக மதிப்பீடு செய்வதென்பது இயலாத செயல்.

எனினும் எம்ஃபில்—இல் ஒன்றும் பிஎச்.டி. இல் ஒன்றுமாக இணைப்பின் துவக்கத்திலுள்ள இரு ஆய்வேடுகள் பற்றிய ஒரு சில கருத்துகளை இவண் கோடிட்டுக் காட்டலாம்.

இணைப்பின்கண் முதலாவதாக அமைவது தொல்காப்பிய ஆய்வின் வரலாறு எனும் பி எச்-டி- ஆய்வேடாகும். இந்த ஆய்வேடு எழுத்து, சொல் அதிகார ஆய்வின் வரலாற்றை மட்டும் விளக்குகிறது. பொருளதிகார ஆய்வு வரலாறு இந்த ஆய்வின் கண் பேசப்படவில்லை. எனவே ஆய்வேட்டிற்குத் தொல்காப்பியப் பொருளதிகார ஆய்வு வரலாறு எனப் பொதுப் பெயரிட்டமை பொருத்தமற்றதாகவே தோன்றுகிறது. மாறாக அடைப்புக் குறியிலாவது எழுத்து, சொல் எனக் குறிப்பிட்டிருந்தால் பொருத்தமுடையதாக அமைந்திருக்கும். எனவே ஆய்வின் தலைப்பினைத் தெளிவாக அமைக்க வேண்டியது இன்றியமையாதது என அறியலாம்.

அடுத்து இடம் பெறும் தொல்காப்பியப் பொருளதிகார ஆய்வு வரலாறு எனும் எம்ஃபில் ஆய்வேடு பின்பற்றும் நெறி முறைகள் சில பிறந்து கவனத்தை ஈர்க்கும் வகையில் அமைந்துள்ளன. இந்த ஆய்வேட்டின்கண் சாதிப் பெயர்கள் அனைத்தும் நீக்கப்பட்டுள்ளன. சான்றாக மு. இராகவையங்கார் என்பது மு. இராகவன் எனவும், ந. சுப்பு ரெட்டியார் என்பது ந. சுப்பு எனவும் குறிக்கப்படும் பகுதிகளைக் காட்டலாம். இது போன்ற முறையானது நூலாசிரியரது மனத்தினைப் புண்படுத்துவதாக அமைவதுடன், ஆரம்ப காலத்தில் குழப்ப நிலைக்கு வழி வகுக்கும் என்பதும் சுட்டத் தக்கதாகும்.

அடிக்குறிப்பினை அந்தந்த இடத்திலேயே தந்திருப்பது இந்த ஆய்வேட்டின் மற்றுமொரு குறிப்பிடத் தகுந்த இயல்பாகும். இந்த முறையமைப்பு எந்த அளவிற்கு ஏற்புடைத்தாக அமையும் என்பது ஆய்வுலகம் கருதத்தக்கது.

இதுபோன்று ஒவ்வொரு ஆய்வேட்டினையும் நோக்குமிடத்து பல கருத்துகள் எழ வாய்ப்புண்டு. காலமின்மையால் அம்முயற்சி இவண் மேற்கொள்ளப் படவில்லை.

இதுகாறும் நோக்கியவற்றால்,

1. உலகின் பல்வேறு பகுதிகளில் நடைபெறும் தமிழ், மற்றும் தமிழோடு தொடர்புடைய ஆய்வுகளை அரசின் உதவியோடு தொகுத்தல் வேண்டும்.

2. ஆய்வாளர்கள் அனைவரும் தங்கு தடையின்றி காணும் வகையில் ஆய்வேடுகளை அந்தந்தப் பல்கலைக் கழக, மற்றும் கல்லூரி நூலகங்களில் ஒழுங்கு செய்து வைப்பது நிர்வாகத்தினரின் பொறுப்பு.

3. ஆய்வுத் தலைப்புகளைத் தெளிவாக அமைத்தல், ஆய்வேட்டில் வரையறுத்த நெறிமுறைகளைப் பின்பற்றுதல், திட்பம் பெறச் செய்தல் முதலியன ஆய்வாளரின் கடமை எனச் சுட்டலாம்.

இணைப்பில் உள்ள தொகுப்பின்கண் ஆய்வேடுகள் ஒன்பது சிறு தலைப்புகளின்கீழ் அகர வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. ஆய்வேடு பற்றிய செய்திகள் கீழ்க்காணும் வகையில் அமைந்துள்ளன.

ஆய்வுத் தலைப்பு

ஆய்வாளர் பெயர்

ஆய்வேட்டிற்கான பட்டம்

எம். ஃபில் ஆய்வேடானால், அளிக்கப்பட்ட துறை
ஆண்டு

பொருளடக்கம்

இணைப்பின் இறுதியில் ஆய்வாளர் அகரநிரல், ஆய்வுத் தலைப்பு அகரநிரல் ஆகிய இரு அகரநிரல்கள் இடம் பெற்றுள்ளன.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

கு. அ. க—கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரி

த. இ. து—சென்னைப் பல்கலைக் கலகத் தமிழ் இலக்கியத் துறை.

தே. க—திருச்சி தேசீயக் கல்லூரி.

ப. க—பச்சையப்பன் கல்லூரி.

பு. க—பூண்டி புட்பம் கல்லூரி.

மா. க—மாநிலக் கல்லூரி.

ரா. மே. க—ராணி மேரி கல்லூரி.

I. H—University Dept. of Indian History.

# இணைப்பு—I

**எண்பத்திரண்டில் தமிழ் ஆய்வேடுகள்†**

## I. இலக்கணம்

1. தொல்காப்பிய ஆய்வின் வரலாறு, கிருட்டிணமூர்த்தி கோ, பி எச். டி, 1981.
முன்னுரை 1. தொல்காப்பியப் பதிப்புகள் 2. எழுத்ததிகார ஆய்வு 3. சொல்லதிகார ஆய்வு, முடிவுரை.

2. தொல்காப்பியப் பொருளதிகார ஆய்வு வரலாறு, காமேசுவரி கு, எம்.ஃபில், த. இ. து, 1982.
1. முன்னுரை 2-6 அகப்பொருள், புறப்பொருள், மெய்ப் பாட்டியல், உவமவியல், மரபியல்—ஆய்வுகள் 7. முடிவுரை.

## II. தொன்மை இலக்கியம்

3. ஆற்றுப்படை நூல்களின் ஆய்வு வரலாறு (சங்க காலம்) பானுமதி தி. சு. எம்.ஃபில், த. இ. து, 1982
பகுதி 1. புறநிலை 1. முன்னுரை 2-5 பதிப்பு, உரை, நூல்/நூலாசிரியர்,
காலம்—பற்றிய ஆய்வு வரலாறு பகுதி 2 அகநிலை 1-3 ஒப்பியல்,
இலக்கண/இலக்கிய, பல்துறை—ஆய்வு வரலாறு. 4. முடிவுரை.

4. கலித்தொகை ஆய்வு வரலாறு, லலிதா என், எம்.ஃபில், த. இ. து, 1982
1. முன்னுரை 2. கலித்தொகை ஆய்வு வரலாற்றில் பதிப்பு கள் பெறும் இடம்
3-7 கால, நூல்/நூலாசிரியர், இலக்கண/இலக்கிய, பல்துறை ஒப்பு—ஆய்வு வரலாறு 8. முடிவுரை

5. சங்ககாலப் புலவர்—கலைஞர் வாழ்வியல், லெட்சுமி நாராயணி கே, பிஎச். டி.

---

† தொகுப்பு முழுமையானது என்று உறுதிப்படுத்த இயல வில்லை. தொகுப்பில் சேர வேண்டியவை இன்னும் இருக்கலாம்.

6. A Critical study of flowers in Sangam literature, Sarada Kalavathy, Ph. D
7. Historical Studies in Kuruntokai, Kalavathi, M. phil, I. H.

## III. காவியம்

8. கம்பராமாயணத்தில் செய்ந்நன்றியறிதல்
குமரன் அரங்க, எம்.ஃபில், த. இ. து, 1982
1. முன்னுரை 2. செய்ந்நன்றி 3. கம்பனும் கடையப்ப வள்ளலும் 4. செய்ந்நன்றி போற்றும் கதை மாந்தர்கள் 5. முடிவுரை

9. கம்பன் கண்ட குரங்கினம்
உமாதேவி எஸ், எம்.ஃபில், த. இ. து, 1982
1. முன்னுரை 2. கம்பன் கூறும் வானரத்தின் புறவடிவம் 3. வானரங்களிடம் காணப்படும் விலங்கியல்புகள் 4. வானரங்களிடம் காணப்படும் மானிட இயல்புகள் 5. கம்பன் காவியத்தில் வானரங்கள் பற்றிய இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் 6. அறிவியலார் கூறும் குரங்கினம் 7. முடிவுரை.

10. Humanism in Villibharatham
Rajagopalan N, Ph. D

11. The birds in Jeevakachintamani
Arulsami M. S. Ph. D

12. The part playep by word Krishna in Villtbharatham
Valliammal S, Ph. D

## IV.. இடைக்கால இலக்கியம், பக்தி இலக்கியம்

13. தனிப்பாடற்றிரட்டு (கா. சு. பிள்ளை உரைப்பதிப்பு)—ஓர் ஆய்வு ஜெகதீசன் என், பிஎச். டி.

14. திரு அருட்பா ஆய்வு வரலாறு
ராணி எஸ். பி, எம்.ஃபில், த. இ. து, 1982
பகுதி 1 புறநிலை 1. பதிப்பு வரலாறு 2. உரை வரலாறு 3. நூல், நூலாசிரியர் காலம் பற்றிய ஆய்வு பகுதி 2 அகநிலை 1. ஒப்பாய்வு சமயம் பற்றிய ஆய்வு, 2. இலக்கண இலக்கிய ஆய்வு 3. பல்துறை தத்துவம் பற்றிய ஆய்வு, முடிவுரை

15. திருப்போரூர்ச் சந்நிதி முறை (ஓர் ஆய்வு)
அபிராமவல்லி வ. ச, எம்.ஃபில், த. இ. து, 1982
1. நூலின் பெயரும் நுதலும் பொருளும் 2. நூலாசிரியர் சிதம்பர சுவாமிகளும் முருகனைப் பாடிய மற்றப் புலவர் களும் 3. தோத்திரமும் சாத்திரமும் 4. கற்பனை வளமும் கருத்துச் செறிவும் 5. கவிஞர் தம் சொல்லாட்சித் திறன்.

16. A Critical study of Seiku Tambi Pavalar's literature.
Vasula Mohaideen, Ph. D

17. Advaitn vedanta of Kaivalya Navaneetham Jagadeeswari D, Ph. D.

18. A study of the Kiranagama with special reference to Jnanapada
Sabarathinam S. P., Ph. D

19. Iconographic concepts and forms of Siva in the Tamil Country (As revealed by literature and epigraphs up to 9th Century A. D.)
Ekambaranathan A, Ph. D.

V. உரை

20. இறையனார் அகப்பொருள் நக்கீரர் உரைத்திறன்
அரங்கராசன் ஐ, எம்.ஃபில், தே. க, 1982.
1. முன்னுரை 2. இறையனார் களவியலின் வரலாறு 3. உரையாசிரியர்களும் அவர்கள் உரை எழுதக் காரணமும் முதலான 19 தலைப்புகள்.

21. திருக்குறள் உரைவளம்—கா. சுப்பிரமணிய பிள்ளை உரை
பூங்கோதை இரா, எம்.ஃபில், மா. க, 1982.
1. உரை வரலாறும், உரையாசிரியர் வரலாறும் 2. கா. சு. பிள்ளையின் வாழ்க்கை வரலாறு 3. கா. சு. பிள்ளையின் இலக்கியத் தொண்டு 4. கா. சு. பிள்ளையின் திருக்குறட் சார்ந்த இலக்கியப்பணி 5. கா. சு. பிள்ளையின் உரைத் திறன்.

22. திருக்குறள் உரைவளம்—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை உரை, மைதிலி இரா, எம்.ஃபில், மா. க, 1982.
1. உரை வரலாறு 2. நாமக்கல் கவிஞரின் வாழ்க்கை வரலாறு 3. நாமக்கல் கவிஞரின் பணிகள் 4. நாமக்கல் கவிஞரின் திருக்குறட் செல்வங்கள் 5. நாமக்கல் கவிஞரின் உரைத்திறன்.

23. திருக்குறள்—மணக்குடவர் உரை—ஓர் ஆய்வு
சிவகோபாலசுவாமி த, எம்.ஃபில், த. இ. து, 1982.
1. உரை வரலாறும் மணக்குடவரும் 2. மணக்குடவரைப் பற்றிய ஆய்வுகள்—ஒரு புறநோக்கு 3. மணக்குடவர் வரலாறு 4. திருக்குறள்—மணக்குடவர் உரைப் பதிப்புகள் வரலாறு 5. மணக்குடவர் உரைத்திறன் 6. மணக்குடவரும் பாட வேறுபாடும்.

24. திருக்கோவையார்—பேராசிரியர் உரை
உஷாராணி, எம்.ஃபில், தே. க, 1982.
1. தோற்றுவாய் 2. உரை தோன்றிய வரலாறு 3. திருக்கோவையார் 4. தொல்காப்பியம்—திருக்கோவையார் உரை 5. பேராசிரியர் உரை இயல்பு 6. பேராசிரியர் குறித்த இலக்கணக்குறிப்புகள் 7. பேராசிரியர் கையாண்ட இலக்கிய, அகத்திணை இலக்கண மேற்கோள்கள் 8. பேராசிரியர் எடுத்துக்காட்டி விளக்கும் இறைச்சி, உள்ளுறை 9. பேராசிரியர் கண்ட அரிய சொற்பொருள் விளக்கம் 10. முடிவுரை.

25. பரிபாடல்—பரிமேலழகர் உரைத்திறன்
சுபாசு சந்திரபோசு பெ, எம்.ஃபில், தே. க, 1982.
1. முன்னுரை 2. உரையும் உரையாசிரியர்களும் 3. உரையாசிரியர்களில் பரிமேலழகர் 4. உரையின் இயல்புகள் 5. புராணப் புலமை 6. இலக்கணப் புலமை 7. இலக்கியப் புலமை 8. பல்கலைப் புலமை 9. பன்மொழிப் புலமை 10. அரிய செய்திகள்.

II முடிவுரை

## VI-சிற்றிலக்கியம்

26. கலம்பகம் ஓர் ஆய்வு (9-ஆம் நூற்றாண்டு முதல் 18-ஆம் நூற்றாண்டு வரை)
சின்னராசு என், பிஎச்-டி.

27. திரிகூடராசப்பக் கவிராயரின் நூல்கள்—ஓர் ஆய்வு
பத்மநாபன் கே, பிஎச்-டி.

## VII-இக்கால இலக்கியம்

28. அழகர் கிள்ளைவிடு தூது—ஓர் ஆய்வு
கலாவதி சு, எம். ஃபில், ரா. மே. க, 1982.
1. தோற்றுவாய் 2. தூது வகைகள் 3. நூலமைப்பு 4. இலக்கிய நயம் 5. நிறைவுரை.

29. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குக் கிறித்துவப் புலவர்களின் பணி
ஆரோக்கியசாமி இர, எம். ஃபில், கு. அ. க, 1981.

30. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் இயற்கைப் புனைவு சிறப்பிடம் (பாரதிதாசன்—வாணிதாசன்)
காத்தையன், பிஎச். டி.

31. உமாசந்திரனின் 'ஒன்றிய உள்ளங்கள்'—ஓர் ஆய்வு
ஹேமமாலினி இரா, எம். ஃபில். ப. க, 1982.
1. கதைச் சுருக்கம் 2. கதை மாந்தர் 3. சமுதாயச் செய்திகள் 4. உத்திகள் 5. நிறைவுரை.

32. கவிமணி கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு
சொக்கலிங்கம் சி, எம். ஃபில், பு. க.

33. சி. சு. செல்லப்பா சிறுகதைகள்—ஓர் ஆய்வு
தமிழ்ச்செல்வி இரா, எம். ஃபில், ரா. மே. க, 1982.
1. அறிமுகம் 2. இலக்கிய உத்திகள் 3. சமுதாயப் பார்வை 4. நடை 5. சிறுகதை இலக்கியத்தில் சி. சு. செல்லப்பா பெறும் இடம்.

34. சிவசங்கரி நாவல்களில் பெண் பாத்திரங்கள்
சுவர்ணலதா, எம். ஃபில், த. இ. து, 1982.
1. சிவசங்கரியின் சமுதாயப் பின்னணி 2. சிவசங்கரி நாவல்களின் கதைச் சுருக்கம் 3. பாத்திரப் படைப்பு 4. சமுதாயச் சிக்கல்கள் 5. உளவியல் அணுகு முறைகள் 6. தனித்தன்மைகள்.

35. சிற்பியின் புதுக்கவிதைகள்—ஓர் ஆய்வு
மங்கையர்க்கரசி எஸ், எம். ஃபில், ரா. மே. க, 1982.
1. அறிமுகம் 2. புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் 3. வாழ்வும் எழுத்தும் 4. பாடுபொருள் 5. வடிவம் 6. படிமம் 7. குறியீடு 8. முடிவுரை.

36. சு. சமுத்திரம் படைப்புகளில் பெண்மைக் கோட்பாடுகள்
தியாகமணி சா, எம். ஃபில், ரா. மே. க, 1682.
1. நூல் வகைப்பாடும் மகளிர் பிரச்சினைகளும் 2. ஆசிரியர் காட்டும் பெண்கள் சமுதாயம் 3. மகளிர் பாத்திரப் படைப்பு 4. படைப்பாளர் ஆளுமை 5. கலைஞர் காணும் பெண்ணுலகம் 6. பெண்மைக் கோட்பாடுகள் 7. முடிவுரை.

37. சுப்பிரமணிய பாரதியாரின் முப்பெரும் பாடல்கள்—ஓர் ஆய்வு
சீனிவாசலு எம். கே, பிஎச். டி, 1980.
முன்னுரை 1. கண்ணன் பாட்டு 2. குயில் பாட்டு 3. பாஞ்சாலி சபதம் 4. மொழி வடிவமும் அனுபூதியும்.

38. ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள்—ஓர் ஆய்வு
கனகசுந்தரம் வெ, பிஎச். டி.

39. டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் வாழ்வும், தொண்டும்.
பழனி சி, எம். ஃபில், மா. க, 1982.
1. டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் வாழ்வும் தமிழ்த் தொண்டும் 2. உ. வே. சாமிநாதய்யரின் பதிப்புத் தொண்டு 3. ஆராய்ச்சித் தொண்டு 4. உ. வே. சாமிநாதய்யரின் குறுந்தொகைப் பதிப்பு-ஓர் ஆய்வு. 5. தொகுப்புரை.

40. தமிழரசு—ஓர் ஆய்வு (இதழ்கள் 1980 ஜூன் முதல் 1981 மே வரை)
சிவலிங்கம் பெ, எம். ஃபில், ப, க, 1982.
1, தமிழரசு இதழும் இதழ்ப் பணியும் 2. தமிழக அரசின் திட்டச் செயல் கட்டுரைகள் 3. தொழில் துறைக் கட்டுரைகள் 4. கவிதையும், கலையும் 5 பண்பும், பயனும்.

41. தமிழ் நாவலின் ஆய்வு வளர்ச்சி (விடுதலைக் காலம் வரை)
முகையதீன் புலவர் சே, எம். ஃபில், த. இ. து, 1982.
1. சமூக நாவல் 2. வரலாற்று நாவல் 3. துப்பறியும் நாவல்.

42. திரு. வி. க. வின் பெண்ணின் பெருமை—ஓராய்வு.
வஜ்ரவேலு சு, எம். ஃபில், ப. க, 1982.
1. திரு. வி. க.வும் பெண்மையும் 2. பெண்ணுரிமையும் பெண் வளர்ப்பும் 3. இறைவழியும், இயற்கை அறமும் 4. திருமணமும், இன்ப வாழ்வும் 5. பிள்ளைப் பேறும் பெண்ணலமும் 6. பெண்ணுலகின் கறை 7. தாய்மையும் இறைமையும், நிறைவுரை.

43. நாமக்கல் கவிஞர் கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு
நடராசன் இரா, எம். ஃபில், பு. க.

44. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு
மதிவாணன் பா, எம். ஃபில், பு. க.

45. பாரதி பாடல்கள் பற்றி தாமரை வழங்கிய ஆய்வுகள்.
மஞ்சுளா ர, எம். ஃபில், த. இ. து, 1982.
1. முன்னுரை 2. பொது உடைமை வாதிகள் நோக்கில் பாரதி 3. பாரதியின் பாடல்களில் தேசியம் 4. ஒப்பீட்டு ஆய்வு 5. பல கோணங்களில் பாரதி 6. பாடல் விளக்கமும் இலக்கிய நயமும் 7. முடிவுரை.

46. பாரதிதாசன் கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு.
ஜெயலாபதி சு, எம். ஃபில், பு. க, 1982.
1. காலச் சூழல் 2. சமுதாய உணர்வு 3. சமகாலத் தமிழ்க் கவிஞர்களோடு ஒப்பீடு.

47. பாவேந்தர் பிள்ளைத் தமிழ்—ஓர் ஆய்வு
கண்ணையன் வை. எம். ஃபில், ப. க. 1981.
1. பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் 2. பிள்ளைத் தமிழ் பொதுஇலக்கணமும் பொருந்துமாறும் 3. பிள்ளைத் தமிழிலக்கியங்களின் சில மரபு மாற்றங்கள் 4. பாவேந்தர் பிள்ளைத் தமிழ் நூலமைப்பும் பிள்ளைத் தமிழ் இலக்கணத்திற்கும் பெரிதும் பொருந்துமாறும் 5. ஆசிரியரின் இலக்கியத்திறன் 6. பாவேந்தர் பிள்ளைத் தமிழ் இயம்பும் கருத்துப் பொலிவு 7. பாவேந்தர் பிள்ளைத் தமிழால் தமிழ்ச் சமுதாயம் பெறக்கூடிய நன்மைகள்.

48. புலமைப் பித்தன் கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு
மணியன் த, எம். ஃபில், பு. க, 1982.
முன்னுரை 1. காலஞ் சூழல் 2. சமுதாய உணர்வு 3. சமகாலத் தமிழ்க் கவிஞர்களோடு ஒப்பீடு.

49. பெருஞ்சித்திரனார் பாவியங்கள் ஓர் ஆய்வு
சீனிவாசன் இரா, எம் ஃபில், ப. க, 1982.
1. முன்னுரை 2. பெருஞ்சித்திரனார் பாவியங்கள் தோற்றப் பின் புலங்கள் 3. பாடுபொருள் பொது நிலை 4. பாடுபொருள்—சிறப்பு நிலை 5. ஆளுமைத் திறன் 6. யாப்பமைப்பு 7. பெருஞ்சித்திரனார்—பாரதிதாசன்—ஓர் ஒப்பீடு 8. மதிப்பீடு.

50. பேரறிஞர் அண்ணா அவர்களின் சிறுகதைப் படைப்புகள்
முகமது சரீபு கா, எம்ஃபில், ப. க, 1 82.
1. படைப்பிலக்கியம் 2. கட்டுக்கோப்பு 3. கதை மாந்தர்கள் 4. கருப்பொருள்கள் 5. உரையாடல்கள் 6. உணர்வுகள் 7. மன்பதை மலர்கள் 8. கருத்துப் பரப்பல் 9. நுட்பப் புலப்பாடுகள் 10. குறிக்கோள்.

51. மண்ணும் மனிதரும் ஓர் ஆய்வு.
இரஞ்சினி நா, எம்.ஃபில், ப. க, 1982.
1. முன்னுரை 2. ஆசிரியர் அறிமுகம் 3. பெயர்ப் பொருத்தமும் கதைச் சுருக்கமும் 4. நாவலின் கரு, பின்னல், பின்னணி 5. கதைமாந்தர் பண்பும் பங்கும் 6. நாவலில் கலைத்திறன் 7. நாவல் காட்டும் சமுதாயம் 8. நிறைவுரை.

52. ம. பொ. சி.யின் இலக்கிய நூல்கள் ஒரு மதிப்பீடு.
அன்பு. பி, பிஎச். டி.

53. மீராவின் கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் ஓர் ஆய்வு.
முகம்மது அப்துல் காதர் தி, எம்.ஃபில், ப. க, 1982.
1. உள்ளடக்கம் 2. உருவம் 3. படிமம் 4. குறியீடு 5. அகத் தூண்டுதல் 6. முடிபுகள்.

54. ரோமாபுரிப் பாண்டியன்—ஒரு திறனாய்வு.
வரதன் வீ, எம்.ஃபில், மா க, 1982.
1. தமிழ் வரலாற்று நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் 2. ரோமாபுரிப் பாண்டியனின் கதைப் பின்னல் 3. பாத்திர படைப்பு 4. ரோமாபுரிப் பாண்டியன் நாவலில் இலக்கியக் கூறுகள் 5. நாவலின் செய்தி.

55. லக்ஷ்மி நாவல்களில் பெண்மை—ஓர் ஆய்வு.
இரத்னாபாய் மெட்டில்டா, எம்.ஃபில், ப. க, 1982.
1. முன்னுரை 2. தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும் 3. பெண்மை 4. பெண்மைக் குறிப்பிடப் பெறும் நாவல்கள் 5. பெண்மை பேசும் நாவல்களின் உள்ளடக்கம் 6. லக்ஷ்மி நாவல்களில் பெண்மை இடம்பெறும் இடங்கள் 7. நிறைவுரை

56. லஷ்மியின் 'மீண்டும் வசந்தம்'—ஓர் ஆய்வு.
முத்தழகன் பூ, எம்.ஃபில், ப. க, 1982.
1. கதையும், கதைப்பின்னலும் 2. குடும்பநாவல் 3. பாத்திர படைப்பு 4. சமுதாயக் கண்ணாடி 5. உவமைகள் 6. நாவலின் சிறப்புகள் 7. நிறைவுரை.

57. வாணிதாசனின் 'தமிழச்சி' கொடிமுல்லை'—ஓர் ஆய்வு
வசந்தாள் த, எம்.ஃபில், த. இ. து, 1981.
1. கவிதைச் சூழல் 2. சமுதாயம் 3. பாத்திரப் படைப்பு 4. உத்தி 5. இயற்கை 6. நடை.

58. வானம்பாடி இயக்கம்—ஓர் ஆய்வு.
சோமசுந்தரம் ச, எம்.ஃபில், ப. க, 1981.

1. புதுக்கவிதை—தோற்றப் பின்புலங்கள் வளர்ச்சிப் படிநிலைகள் 2. வானம்பாடி இயக்கம் வரலாறு 3. வானம்பாடி கவிஞர்களின் கவிதைகள் — உள்ளடக்கம் 4. உருவம் 5. வானம்பாடி இயக்கம்—பிற்கால நிலை—6. வானம்பாடி இயக்கம்— மதிப்பீடுகள்.

59. A Critical study of characters in Mu. Va. Novels Sambath Kumar B, Ph.D.

60. A critical study of Srimath Pamban Kumara Kurudasa Swamigal's works.
Raman B, Ph.D.

61. Content in Tamil literature—19th Century Sivakami, S, Ph.D.

62. M P. Sivagnanam—A study.
Rengaswamy N, M. Phil, I.H.

## VIII ஒப்பாய்வு

63. பாரதியின் குயில்பாட்டும் கீட்சின் இலாமியாவும்—ஓர் ஆய்வு. இலக்குமிகாந்தன் ச, எம்.ஃபில், ப. க, 1982.
1. பாரதியும் கீட்சும் 2. கவிஞர்களும் காதலும் 3. குயில் பாட்டும் இலாமியாவும் 4. ஒப்பீடும் மதிப்பீடும், முடிவுகள்.

64. A comparative study of the Historical Novel of Vrindayanal Varma and Kalki

65, Model systems of English and Tamil. Thiagarajan, Ph.D.

## IX வரலாறு, பண்பாடு பிற

66. இக்கால அறிவியல் கருத்துக்களின் தமிழாக்கம் இராதா பி, பிஎச்-டி.

67. ஒரத்தநாடு வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்.
தமிழாழிக் கொற்கைவேந்தன், எம்.ஃபில், பு. க.

68. குமரிக்கண்டம்—ஓர் ஆய்வு.
மங்கையர்க்கரசி கு, எம்ஃபில், த. இ. து. 1982.
1. குமரிக்கண்டம் சொல்லும் பொருளும் 2-4 குமரிக்கண்ட ஆய்வின் வளர்ச்சி—கற்பனை நிலை, கொள்கை நிலை, கருவி நிலை 5. கடற்கோள் கண்டத்தின் நாகரிகம்.

69. சீர்காழி வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்.
செல்வராஜ் நா, எம். ஃபில், பு. க, 1982.
1. முன்னுரை ஆய்வுப் பொருள் அறிமுகமும் வரையறையும் 2. அறிமுகம்: சீர்காழி வட்டமும் கோயில்களும் 3. கோயில்களின் அமைப்பும், கடவுளரின் கீர்த்தியும் 4. கோயிலும் செயற்பாடும் 5. கோயிலும் வரலாறும் 6. கோயிலும் சமுதாயமும் 7. முடிவுரை.

70. தஞ்சை வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்.
நடராசன் பா, எம். ஃபில், பு. க.

71. தமிழக சௌராஷ்ட்ரர் மரபும் பண்பாடும்.
இராதா கிருஷ்ணன் கு. இரா, எம். ஃபில், த. இ. து, 1982.
1. தமிழகத்தில் சௌராஷ்ட்ரர் 2. பழக்க வழக்கங்கள்—சடங்குகள் 3. சமயச் சடங்குகள் — நம்பிக்கைகள் 4. கோவில்கள் திருவிழாக்கள் 5. சிறப்புச் செய்திகள்.

72. தமிழ் நூற்களில் மருத்துவக் கலை—ஓர் ஆய்வு.
வெங்கடேசன் க, பிஎச். டி, 1981
பகுதி ஒன்று: 1. அறிமுகமும் ஆய்வு மூலங்களும் 2. தமிழ் மருத்துவக் கலையின் தோற்றம் வளர்ச்சி தனிச் சிறப்பு பகுதி 2: 1. தமிழ் இலக்கியத்தில் மருத்துவக் கலைக் குறிப்புகள் 2. சித்த மருத்துவ நூற்களில் மருத்துவக் கலை 3. நாட்டுப்புற இலக்கியத்தில் மருத்துவக் கலை.

73. திருவையாறு வட்டக் கோயில்களின் பண்பாட்டுக்கொடையும், இலக்கியக் கொடையும்.
மணிவண்ணன் சொ, எம். ஃபில், பு. க, 1982.
1. ஆய்வுப் பின்னணி 2. சைவ சமயக் கோயில்களின் பண்பாடு 3. வைணவக் கோயில்களின் பண்பாடு 4. சிறுதெய்வக் கோயில்களின் பண்பாடு.

74. பிற்காலச் சோழரது சைவப்பணி
மணி அ, எம். ஃபில், கு. அ. க, 1979.
1. பிற்காலச் சோழர்கள் வரலாறு 2. சமயங்களின் நிலை 3. பிற்காலச் சோழரது சைவப்பணி 4. நிலதானம் 5. நிர்வாகம் 6. திருப்பதியம் ஓதுதல் 7. கூத்து, ஆடல் 8. சைவ மடங்கள் 9. சைவ இலக்கியங்கள் 10. கடல் தந்த சைவம்.

75. The politics of Language in Tamil Nadu. Chidambaram M. Ph.D.

# இணைப்பு-II

## ஆய்வாளர்—அகரநிரல்

(எண்—இணைப்பின் வரிசை எண்ணினைக் குறிக்கும்)

# இணைப்பு-III

## ஆய்வுத் தலைப்பு — அகரவிரல்

(எண்—இணைப்பின் வரிசை எண்ணிக்கைக் குறிக்கும்.)

அழகர் கிள்ளைவிடு தூது — ஓர் ஆய்வு, 28.
ஆற்றுப்படை நூல்களின் ஆய்வு வரலாறு (சங்ககாலம், 3).
இக்கால அறிவியல் கருத்துக்களின் தமிழாக்கம், 66.
இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குக் கிறித்துவப் புலவர்களின் பணி, 29.
இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் இயற்கைப் புனைவு சிறப்பிடம் (பாரதிதாசன் — வாணிதாசன், 30).
இறையனார் அகப்பொருள் நக்கீரர் உரைத்திறன், 20.
உமாசந்திரனின் ஒன்றிய உள்ளங்கள் — ஓர் ஆய்வு, 31.
ஒரத்த நாடு வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும் 6, 7.
கம்பராமாயணத்தில் செய்ந்நன்றியறிதல், 8.
கம்பன் கண்ட குரங்கினம், 9.
கலம்பகம் ஓர் ஆய்வு (9-ஆம் நூற்றாண்டு முதல் 18-ஆம் நூற்றாண்டு வரை), 26.
கலித்தொகை ஆய்வு வரலாறு, 4.
கவிமணி கவிதைகளிற் காணும் சமுதாய உணர்வு, 32.
குமரிக்கண்டம் — ஓர் ஆய்வு, 68.
சங்ககாலப் புலவர் — கலைஞர் வாழ்வியல், 5.
சி-சு. செல்லப்பா சிறுகதைகள் — ஓர் ஆய்வு, 33.
சிவசங்கரி நாவல்களில் பெண் பாத்திரங்கள், 34.
சிற்பியின் புதுக்கவிதைகள் — ஓர் ஆய்வு, 35.
சீர்காழி வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும் இலக்கியக் கொடையும், 69.
சு. சமுத்திரம் படைப்புகளில் பெண்மைக் கோட்பாடுகள், 36.
சுப்பிரமணிய பாரதியாரின் முப்பெரும் பாடல்கள் — ஓர் ஆய்வு, 37.
ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள் — ஓர் ஆய்வு, 38.
டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் வாழ்வும் தொண்டும், 39.
தஞ்சை வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும் இலக்கியக் கொடையும், 70.
தமிழக சௌராஷ்ட்ரர் மரபும் பண்பாடும், 71.
தமிழரசு—ஓர் ஆய்வு (இதழ்கள் 1980 சூன் முதல் 1981 மே வரை), 40.
தமிழ் நாவலின் ஆய்வு வளர்ச்சி (விடுதலைக் காலம் வரை), 41.
தமிழ் நூற்களில் மருத்துவக்கலை — ஓர் ஆய்வு, 72.

# 12. பாடத்திட்டம்

அ. பிச்சை

*1982-ஆம் ஆண்டுப் பாடத்திட்டத்தில் சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளது. பாலர் பள்ளிக்குப் பாடத்திட்டம், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் இரண்டு முதுகலைப் படிப்புக் கான பாடத்திட்டங்கள், திராவிட மொழியியலின் பன்னாட்டுப் பள்ளி நடத்திய கல்லூரித் தமிழ்ப் பாடத்திட்டக் கருத்தரங்கு ஆகிய மூன்றும் 82-ஆம் ஆண்டு தமிழ்ப் பாடத்திட்ட வளர்ச்சி யில் குறிப்பிடத்தக்கவை. பாட நூல்களில் மாற்றம் ஏற்பட்டிருப் பதும் குறிப்பிடத்தக்கது.*

## முன்னுரை

கல்வி என்பது சமுதாயத்தை மாற்றத் தூண்டும் ஒரு கருவி. மேலும், மனிதனின் அறிவு, ஆற்றல், பண்பாடு ஆகியவற்றை வளர்க்கும் சாதனமும் அது தான். இந்தியாவில் கல்வித் திட்டம் பொதுவான மூன்று நிலைகளில் செயல்படுத்தப் படுகின்றது. அவை : (1) முதற்கட்டக் கல்வி (Primary Education). (2) இரண்டாம் கட்டக் கல்வி (Secondary Education), (3) மூன்றாம் கட்டக் கல்வி (Tertiary Education) ஆகும். குறிப்பிட்ட நோக்கங்களையும், பொருத்தமான பாடப் பொருள்களையும், ஆர்வமூட்டும் முறைகளையும் துல்லியமான மதிப்பீட்டு முறைகளையும் உள்ளடக்கிய பாடத்திட்டமே கல்வித் திட்டத்தின் வெற்றிக்கு அடிப்படையாகும். எனவே, இக்கட்டுரையில் 1982-இல் தமிழ்ப் பாடத்திட்ட வளர்ச்சியை மதிப்பிட்டு ஆராயலாம்.

## முதற்கட்டக் கல்வி

பாலர் வகுப்புகள் மற்றும் ஆரம்பப் பள்ளி வகுப்புகள் (1—5) இப்பிரிவின் கீழ் அடங்கும். எல்லா நாட்டிலும் எல்லாக் காலத் திலும் தொடக்கக் கல்வி நல்ல குடிமக்களை உருவாக்க அடிப் படையாக அமைகின்றது ஒரு நாட்டின் உற்பத்தியும் பொரு ளாதார வளர்ச்சியும் ஆரம்பக் கல்வி கற்றவர்களின் திறமை

யினைத் தான் சார்ந்திருக்கின்றது. இக்கல்விக்குச் செலவழிக்கும் பணம் நாட்டின் வளர்ச்சிக்கும், சமுதாய முன்னேற்றத்திற்கும் முதலீடு செய்வதாகும். ஆகவே, திட்டமிட்ட பாலர் கல்வியும் ஆரம்பக் கல்வியும் மிகமிக அவசியம்.

இவ்வாண்டில் குறிப்பிடத் தக்க ஒன்று என்னவென்றால், பாலர் கல்விப் பாடத் திட்டம் அமைக்க தமிழக அரசு குழு நியமித்திருப்பதாகும். தமிழும் மற்றும் விளையாட்டுக்களும் முக்கியப் பாடங்களாக அமையும். இதன் பாடத் திட்டம் இன்னும் வெளியிடப்படவில்லை. ஆரம்பப் பள்ளிப் பாடத் திட்டத்தில் மாறுதல்கள் செய்யப்படவில்லை. பாடநூல்கள் மட்டும் புதிதாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. இருப்பினும் மாண வர்களின் ஆர்வம், பயன்பாடு, மொழித்திறன்கள், உளவியல்பு ஆகியவற்றை மனதிற்கொண்டு பாடங்கள் தயாரிக்கப்பட வில்லை. எடுத்துக்காட்டாக, மூன்றாம் வகுப்பு தமிழ்ப் பாட நூலில் உள்ள "தமிழ் எண்கள் அறிமுகம்" என்னும் பாடத்தை எடுத்துக் கொள்வோம். மொழித்திறன்களை வளர்க்கும் நோக் கத்திலும், வாழ்க்கையில் பயன்படுத்தும் நோக்கத்திலும் மதிப் பிட்டால் இப்பாடம் தேவையில்லை என்று தோன்றுகிறது.

### இரண்டாம் கட்டக் கல்வி

ஆறாம் வகுப்பு முதல் பன்னிரெண்டாம் வகுப்பு வரையுள்ள வகுப்புகள் இப்பிரிவின் கீழ் அடங்கும். இது ஆரம்பக் கல்விக் கும் உயர் கல்விக்கும் பாலமாகவும் இதயமாகவும் அமைகின்றது மேனிலைப் பள்ளிக் கல்வியின் ஒரு பகுதியான தொழிற்கல்வி யைச் சீர்திருத்தி அமைக்கும் பொருட்டு அண்ணா தொழில் நுட்பப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. ஆனால், தமிழ்ப் பாடத்திட்டத்தின் நிறைகுறைகளைக் கணித்து, மதிப்பிட்டு, ஆராய்ந்து அதனை மேம்படுத்தவில்லை. ஐந்து ஆண்டுகளாகக் "கன்னித்தமிழ்" போலவே பாடத்திட்டம் இருக்கின்றது. துணை நூல்கள் வைப் பதில் மட்டும் மாற்றம் செய்துள்ளார்கள்.

தமிழகத்தின் முன்னாள் தலைமைச் செயலர்திரவியம் அவர் களின்' தேசீயம் வளர்த்ததமிழ்' என்னும்தமிழ் நூல், மேனிலைப் பள்ளி மாணவர்களுக்குத் துணைப் பாட நூலாக வைக்கப் பட்டது. இதற்குப் பொது மக்கள் சிலரிடமிருந்து எதிர்ப்பு வந்தது. 'எதிரொலி' என்னும் பத்திரிகை மேனிலைப் பள்ளி மாணவர்களின் வயதுக்கும் புரிதிறனுக்கும் அப்பாற்பட்ட— பொருந்தாத பகுதிகளையும் எடுத்துக் காட்டி, கல்லூரி பட்டப்

படிப்பிற்கோ பட்ட மேற்படிப்பிற்கோ பொருத்தமானது என்று சுட்டிக் காட்டியது.

மேனிலைப் பள்ளியின் பாடத்திட்டக் கட்டமைப்புப் பற்றித் தினமணியில் ஜே. ஆல்பர்ட்டு செல்வராஜ் ஒரு கட்டுரை வெளியிட்டுள்ளார். அதில், மேனிலைப் பள்ளிப் பாடத் திட்டம் கல்லூரிக் கல்வியோடு இணைப்புறவில்லை என்பதை விளக்கமாக எடுத்துரைத்துள்ளார். மேனிலைப் பொதுத் தமிழிலிருந்து ஒரு செய்யுளை எடுத்து விளக்கி, மாணவர் இறுதியில் பெற வேண்டிய பயனுக்கும் பாடப் பொருளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதை தெளிவாக்கியுள்ளார். மேலும், முதலாமாண்டுத் தமிழ் உரைநடைப் பாடங்களை ஒன்பதாம் வகுப்பிற்கும், ஒன்பதாம் வகுப்பிக்குரியதைப் பத்தாம் வகுப்புக்கும், பத்தாம் வகுப்புக்குரியதை முதலாமாண்டிற்கும் வைத்தால் நலம் பயக்கும் என்று கருதுகிறார்.

## மூன்றாம் கட்டக் கல்வி

இப்பிரிவின் கீழ் கல்லூரி, மற்றும் பல்கலைக் கழகவகுப்புகள் அடங்கும். முன்பு பல்கலைக் கழகக் கல்வியின் நோக்கம் புதிய சிந்தனையை ஆராய்ச்சியின் மூலம் உருவாக்குதலும், கற்பித்தலும் (Research and teaching) ஆகும். ஆனால் இப்போது பல்கலைக் கழக நிதி குழுமம் உயர் கல்வி அளிக்கும் அனைத்து நிறுவனங்களும் சமுதாய வளர்ச்சியையும் மாற்றத்தையும் தூண்டும் விரிவாக்கப் பணியிலும் (Extension works) ஈடுபட வேண்டும் என்று வலியுறுத்திக் கூறுகின்றது. ஆகவே, ஆராய்ச்சி கற்பித்தல், பரப்புதல் என்னும் மூன்று அம்சங்களின் அடிப்படையில் மூன்றாம் கட்டக் கல்வி வகுப்புக்களின் பாடத்திட்டங்கள் உருவாக்கப்பட வேண்டும்.

தமிழகம் எங்கும் பருவமுறைப் படிப்பில் (Semester system) மாற்றம் ஏற்பட்டிருந்தாலும், பாடத் திட்டங்களில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஒன்றும் இல்லை. மதுரை காமராசர், அண்ணாமலை, சென்னை போன்ற பல்கலைக் கழகங்களில் சென்ற ஆண்டு பாடத் திட்டமே இளங்கலை, முதுகலை, முன்னாய்வுப் பட்டம் ஆகியவற்றில் பின்பற்றப்படுகின்றது. அஞ்சல் வழிக் கல்வித் துறையிலும் பழைய பாடத்திட்டம் தான். இருப்பினும், சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறை மொழியைச் சிறப்பாகக் கொண்டு மற்றொரு முதுகலைப் பட்ட வகுப்பும் நடத்துகின்றது. இவ்விரண்டு முதுகலை வகுப்புக்களும் தமிழ் முதுகலை வரலாற்றில் குறிப்பிடத் தக்கவை.

மொழி முதுகலைப் படிப்பு நான்கு பருவங்களையும், பதினாறு தாள்களையும் கொண்டது. ஒவ்வொரு பருவத்திலும் நான்கு தாள்கள் உள்ளன. முதற்பருவத்தில் இலக்கியம்—1 (இக்காலம் 1,) பதிப்புக் கலை, இலக்கணம்—1 (எழுத்தியல்), இலக்கணம்—2 (சொல்இயல்) ஆகிய நான்கு தாள்கள் அளிக்கப் படுகின்றன; இரண்டாம் பருவத்தில் இலக்கியம்—2 (இடைக் காலம்), இலக்கணம்—3 (பொருள் 1), தமிழ்மொழி வரலாறு, தமிழ் அகராதியியல் ஆகிய நான்கு தாள்கள் அளிக்கப்படு கின்றன. மூன்றாம் பருவத்தில் நடையியல், மொழிப் பெயர்ப் பியல், இலக்கியம்—3 (காப்பியம்), இலக்கியத் திறனாய்வியல் ஆகிய தாள்கள் உள்ளன. நான்காம் பருவத்தில் ஒப்பிலக்கிய இயல், இலக்கியப் படைப்பியல், இலக்கியம்—4 (சங்கம்), இலக்கணம்—4 (பொருள் II) ஆகிய தாள்கள் உள்ளன. விருப்பப் பாடங்கள் இல்லை. ஒவ்வொரு தாளுக்குரிய விளக்கமான பாடப் பொருள்களும், துணை நூல்களும் தரப்பட்டுள்ளன.

இலக்கிய முதுகலைப் படிப்பு நான்கு பருவங்களையும் பதினாறு தாள்களையும் கொண்டது. ஒவ்வொரு பருவத்திலும் நான்கு தாள்கள் உள்ளன. முதலாம் பருவம் உலக இலக்கிய வரலாறு, இந்திய இலக்கிய வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு விருப்பப் பாடம்—1 (பகுதி 1) ஆகிய தாள்களை உள்ளடக்கியது. இரண்டாம் பருவம் தொல் தமிழ் இலக்கியம், பக்தி இலக்கியம், படைப்பிலக்கியம் (சிறப்பாக மக்கள் தொடர்பு), விருப்பப் பாடம்—1 (பகுதி 2) ஆகிய நான்கு தாள்களையும் உள்ளடக் கியது. மூன்றாம் பருவம் மனித நாகரிக பண்பாட்டு வரலாறு, திராவிடப் பண்பாடு, ஆரிய திராவிடப் பண்பாடு பரிமாற்றம், விருப்பப் பாடம்—2 (பகுதி 1) ஆகிய நான்கு தாள்களைக் கொண்டது. நான்காம் பருவம் ஒப்பிலக்கியவியல், திராவிடச் சிற்பக்கலையும் கட்டுமானவியலும், பண்பாட்டு வகைகளும் உலகப் பொதுமையும், விருப்பப்பாடம்—2 (பகுதி 2) ஆகிய நான்கு தாள்களைக் கொண்டது. நான்கு விருப்பப் பாடங்கள் தரப்பட்டுள்ளன. எவையேனும் இரண்டைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒவ்வொரு தாளுக்கும் விரிவான பாடப் பொருள் களும பரிந்துரை நூல்களும் பாட நூல்களும் தரப்பட்டுள்ளன.

தமிழ் இளங்கலை மற்றும் முதுகலை படிப்பு தமிழகத்தில் மட்டுமின்றி, திருவனந்தபுரத்திலுள்ள கேரளப்பல்கலைக்கழகம், திருப்பதியிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகம், ஹைதரா பாத்திலுள்ள உஸ்மானியா பல்கலைக்கழகம், தில்லிப் பல்கலைக் கழகம், காசிப் பல்கலைக்கழகம் ஆகியவற்றிலும் அளிக்கப்படு

கின்றது. கேரளப் பல்கலைக் கழக பாடத் திட்டங்கள் கீழே விவரிக்கப்படுகின்றன.

பட்ட முன் படிப்பு (Pre degree course) இப்பல்கலைக் கழகத்தின் ஆட்சியின் கீழ் வருகின்றது. தமிழ் இரண்டாம் பகுதியாக அளிக்கப்படுகின்றது. இரண்டாம் பகுதித்தமிழ் இரண்டு தாள்களைக் கொண்டது. முதலாண்டில் ஒரு தாளும் இரண்டாமாண்டில் ஒரு தாளும் எழுதவேண்டும். முதல் தாள் துணைப் பாடநூல்களையும் பொதுக்கட்டுரையையும் செய்யுள் நலம் பாராட்டலையும் ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்வதையும் அடக்கியது; இரண்டாம் தாள் செய்யுள், உரைநடை, இலக்கணம் ஆகிய மூன்றையும் கொண்டது. தமிழ்நாட்டுப் பாடநூல் வெளியீட்டு நிறுவனம் மேனிலைப் பள்ளி இரண்டாமாண்டு மாணவர்களுக்கு வெளியிட்டுள்ள செய்யுளும் உரைநடையும் இலக்கணமும் அப்படியே இங்கே பின்பற்றப்படுகின்றது. துணை நூல் மட்டும் இப்பல்கலைக்கழகம் பரிந்துரை செய்கிறது. ஒவ்வொரு தாளும் 75 மதிப்பெண்களைக்கொண்டது. இரண்டு தாள்களையும் அமைக்கும் முறையும், மதிப்பெண்கள் பகுப்பும் தெளிவாகத் தரப்பட்டுள்ளன.

பட்ட முன் படிப்பில் தமிழ் மூன்றாம் பகுதியாகவும் கற்பிக்கப்படுகின்றது. இப்பகுதியின் கீழ் இரண்டு தாள்கள் அளிக்கப்படுகின்றன. இலக்கிய வரலாறும், தென்னிந்திய வரலாறும் முதல்தாள் ஆகும். மு. வரதராசனாரின் இலக்கிய வரலாறும், அ. மு. பரமசிவானந்தத்தின் தமிழக வரலாறும் இத் தாளுக்குப் பரிந்துரை செய்யப்பட்ட நூல்களாகும். இரண்டாம் தாள் செய்யுள், உரைநடை, இலக்கணம் என்னும் மூன்றையும் கொண்டது. திருக்குறள், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், கலிங்கத்துப் பரணி, பாரதியாரின் பாடல்கள் ஆகியவற்றிலிருந்து சில செய்யுள்கள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன. இரண்டு உரைநடை நூல்கள் இடம் பெறுகின்றன. இவற்றுள் ஒன்று உரைநடை நாடகமாகும். இலக்கணத்திற்கு மோசசு பொன்னையாவின் 'தமிழ் இலக்கணத் தெளிவு' பரிந்துரை செய்யப்பட்டுள்ளது. முதல் தாள் 60 மதிப்பெண்களையும் இரண்டாம் தாள் 90 மதிப் பெண்களையும் பெற்றுள்ளன. இரண்டு தாள்களின் வினா அமைப்பும், மதிப்பெண் ஒதுக்கீடும்தெளிவாகத்தரப்பட்டுள்ளன.

பட்ட வகுப்புக்களில் தமிழ் இரண்டாம் பகுதியாக அமைகின்றது. இதன் கீழ் மூன்று தாள்கள் உள்ளன. முதல்தாள் துணைப்பாட நூல்களையும், பொதுக்கட்டுரையையும், மொழி பெயர்ப்பையும் உள்ளடக்கியது. ஐசக் அருமைராசனின் கீரல்கள்,

மு. சண்முகம் பிள்ளையின் துறவு தந்த காப்பியம் ஆகியவை துணைப்பாட நூல்களாகப் பரிந்துரை செய்யப் பட்டுள்ளன. செய்யுளும் இலக்கணமும் இரண்டாம் தாளில் அமைகின்றன. மதுரை காமராசர் பல்கலைக் கழகம் பட்டப்படிப்பு முதலா மாண்டு மாணவர்களுக்கு வெளியிட்டுள்ள செய்யுள் திரட்டு இங்கே பின்பற்றப்படுகின்றது. செய்யுள் நாடகமும் ஆழ்ந்த படிப்பு உரைநடையும் மூன்றாம் தாளாகும். வணிகவியல் (பி. காம்) பட்டப்படிப்பு மாணவர்களுக்குத் தமிழ் இரண்டாம் பகுதியாக ஒரே தாள் அளிக்கப்படுகின்றது. இத்தாளில் இரண்டு கட்டுரைகள், வணிகவியல் கடிதம்,விளம்பரத்திற்கு விண்ணப்பம் தயாரித்தல், ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் மொழிபெயர்த்தல் ஆகியவை இடம்பெறு கின்றன. இரண்டாம் பகுதியில் வருகின்ற ஒவ்வொரு தாளும் 100 மதிப்பெண்கள் கொண்டது. வினாத்தாள் அமைப்பும் மதிப் பெண்கள் ஒதுக்கீடும் ஒவ்வொரு தாளுக்கும் தரப்பட்டுள்ளன.

பட்ட வகுப்பில் தமிழ் மூன்றாம் பகுதியாகவும் உள்ளது. இப்பகுதி ஆறு தலைமைப் பாடத் தாள்களையும் இரண்டு துணைப்பாடத் தாள்களையும் கொண்டது. முதலாண்டில் தலைமைப் பாடத்தின் கீழ் 'உரைநடை இலக்கியம்' இடம் பெறு கின்றது. இரண்டாமாண்டில் தலைமைப் பாடத்தின் கீழ் 'சிற்றிலக்கியமும் விருப்பப்பாட இலக்கியமும்' இடம்பெறுகின்றது துணைப்பாடத்தின் கீழ் தமிழ்ப் பண்பாட்டை விளக்கும் 'தென்னிந்திய வரலாறு' இடம் பெறுகின்றது. மூன்றாமாண்டில் தலைமைப் பாடத்தின் கீழ் 'பண்டை மற்றும் இடைக்கால இலக்கியங்களும், மரபிலக்கணமும், மொழியியலும் திராவிட ஒப்பிலக்கணமும், இலக்கிய வரலாறும் திறனாய்வும், என்னும் நான்கு தாள்கள் அமைகின்றன. மேலும், துணைப்பாடத்தின் கீழ் பொதுக்கட்டுரையும் மொழிபெயர்ப்பும் உள்ளன. ஒவ்வொரு தாளும் 100 மதிப்பெண்கள் கொண்டது வினாத்தாள் அமைப்பும் மதிப்பெண்கள் ஒதுக்கீடும் தெளிவாகத் தரப் பட்டுள்ளன.

தமிழ் முதுகலை வகுப்பும் கேரளப் பல்கலைக் கழகத்தில் நடத்தப்படுகின்றது இது ஒன்பது தாள்களை உள்ளடக்கியது. எட்டு தாள்கள் புறமதிப்பீட்டையும் ஒன்பதாவது தாள் அக மதிப்பீட்டையும் சார்ந்தவை. முதலாண்டில் நான்கு தாள்கள் அளிக்கப்படுகின்றன. தற்கால மற்றும் இடைக்கால இலக் கியங்கள் முதல் தாளாகவும், இலக்கிய வரலாறு, இலக்கியக் கொள்கைகள், மற்றும் இலக்கியத் திறனாய்வு ஆகியவை இரண்டாம் தாளாகவும், யாப்பும் அணியியலும் மூன்றாம்

தாளாகவும், தென்னிந்தியப் பண்பாடும், கல்வெட்டுக்களும் நான்காம் தாளாகவும் அமைகின்றன.

இரண்டாம் ஆண்டில் ஐந்து தாள்கள் அளிக்கப்படுகின்றன. சங்க இலக்கியமும், நீதி இலக்கியமும் ஐந்தாம் தாளாகவும் மரபிலக்கணம் ஆறாம் தாளாகவும் பிறமொழி (மலையாளம் கற்றல் அல்லது இந்தியத் (குறிப்பாகத் தமிழர்த்) தத்துவம் ஏழாம் தாளாகவும், தமிழ்மொழி வரலாறு, மொழியியல், திராவிட மொழியிலக்கணம் ஆகியவை எட்டாம் தாளாகவும், ஆய்வுக் கட்டுரையும் வாய்மொழித் தேர்வும் (Viva Voce) ஒன்பதாவது தாளாகவும் இடம் பெறுகின்றன. முதல் எட்டுத் தாள்கள் ஒவ்வொன்றும் 150 மதிப்பெண்கள் கொண்டவை. ஆய்வுக் கட்டுரை 200 மதிப்பெண்களையும், வாய்மொழித்தேர்வு 100 மதிப்பெண்களையும் கொண்டவை. வினா அமைப்பும் மதிப்பெண்கள் ஒதுக்கிடும் பிறமொழிகற்றல் என்னும் தாளுக்குத் தவிர மற்ற தாள்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## பாடத்திட்டக் கருத்தரங்கு

பாண்டிச்சேரியில் இருக்கும் திராவிட மொழியியலுக்கான பன்னாட்டுப் பள்ளியின் பிராந்திய மையம் பாண்டிச்சேரி பாரதிதாசன் மகளிர் கல்லூரியில் மார்ச்சு 27-28 தேதிகளில் கல்லூரித் தமிழ்ப்பாடத் திட்டக் கருத்தரங்கு ஒன்றினை நடத்தியது. இதில் எட்டுக் கட்டுரைகள் அளிக்கப்பட்டன; இவற்றுள் ஒன்று ஆங்கிலத்தில் உள்ளது. இக் கருத்தரங்கு சிறிய அளவில் நடத்தப்பட்டாலும் கூட, தமிழ்ப் பாடத் திட்டக் கருத்தரங்கு வரலாற்றிலே இது முக்கியத்துவம் பெறுகிறது.

பேராசிரியர் முத்து சண்முகம் பிள்ளை "கல்லூரித் தமிழ்க் கல்வியும் பிற இயல்களும்" என்னும் தம் கட்டுரையில் பாடத் திட்டச் சீரமைப்புப் பற்றிப் பல கருத்துக்களை முன் வைத்துள்ளார். தமிழைச் சிறப்புப் பாடமாகப் படிக்கும் மாணவர்களுக்கு முதல் பாகத் தமிழுக்குப் பதிலாக 'செய்முறை ஆங்கிலம்' அல்லது ஏதேனும் ஓர் இந்திய மொழி கற்றுக்கொள்ள வாய்ப்பளிக்க வேண்டும்; இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றையும் இணைத்துச் சிறப்புத் தமிழ்ப் பாடத் திட்டம் ஒன்று ஆக்க வேண்டும்; அறிவியல் போன்ற பாடங்களைத் தலைமைப் பாடமாகப் படிக்கின்ற மாணவர்களின் முதல் பாகத் தமிழைச் சீர்திருத்தி மாணவர்கள் மொழித்திறம் பெறும் வகையில் மாற்றி அமைக்க வேண்டும். அறிக்கை தயாரித்தல், மொழிபெயர்த்தல்,

குறிப்பெடுத்தல், கவிதை கற்றலில் புரிதிறன் வளர்த்தல், ஒப்பிலக்கியம் கற்பித்தல் ஆகியவைகள் முதற்பாகத் தமிழில் இடம் பெறவேண்டும். தமிழ் கற்கின்ற மாணவர்கள் பல துறைகளிலும் வேலை வாய்ப்பை அடையும் வகையில் இதழியல், நாடகவியல் போன்ற புதிய துறைகளைப் புகுத்தி மாணவர் களின் பயன்பாட்டு நோக்கில் பாடத்திட்டத்தை அடியோடு மாற்றிச் சீரமைக்க வேண்டும். இவ்வாறு பேராசிரியர் சண்முகம் பிள்ளை தம் கருத்துக்களை ஆணித்தரமாக வலியுறுத்திக் கூறி யுள்ளார்.

எம். வாசுகி தம் கட்டுரையில் முதற்பாகத் தமிழ் பல்துறைக் (inter disciplinary approach) கண்ணோட்டத்துடன் மாற்றி அமைக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார். தமிழ் இலககியத் தில் சமூகவியல், உளவியல், அறிவியல், வாணிகம், பொருளா தாரம், அரசியல் போன்ற பல துறைகளைப் பற்றிக் குறிப்புகள் உள்ளன. அவற்றையெல்லாம் தொகுத்து முதற்பாகத் தமிழில், மூன்றாம் பாகத் தலைமைப் பாடத்திற்குத் தக்கவாறு தரல் வேண்டும். அப்படிச் செய்யும்போது முதற்பாகத்தையும் மூன்றாம் பாகத்தையும் மாணவர்கள் ஆர்வமுடன் கற்பார்கள். முதல் பாகத் தமிழ் தேவையா என்ற கேள்வி எழுவதற்கே வாய்ப்பு இல்லை. இவ்வாறு முதற்பாகத் தமிழைப் பல்துறைக் கண்ணோட்டத்துடன் மாற்றி அமைக்க வேண்டுமென்று எடுத் துரைத்துள்ளார்.

இளங்கலைத் தமிழ்ப் பாடத்திட்டத்தைத் திருத்தி அமைத் தல் பற்றி நல்ல பல கருத்துக்களை அ. பாண்டுரங்கன் கூறியுள் ளார்; புதிய பாடத்திட்டம் ஒன்றைப் பரிந்துரை செய்துள்ளார். இவரது கருத்துப்படி, மூன்றில் ஒரு பங்கு பகுதியைப் புதிய பாடங்களுக்கும், இரண்டு பங்கு பகுதிகளை தமிழ் இலக்கியப் பாடங்களுக்கும் கொள்ள வேண்டும். புதிய பாடத்தில் ஒன்று விருப்பப் பாடமாக அமையும். தமிழ்மொழி வரலாறு, திராவிட மொழி ஒப்பிலக்கணம், தமிழ் இலக்கிய வரலாறு, இலக்கியத் திறனாய்வு என்னும் நான்கையும் நீக்கிவிட்டு, மொழியியல், கல்வெட்டியல் (I&II) ஆகியவற்றை இடம்பெறச் செய்ய வேண் டும். இதழியல், புனை கதையியல், பதிப்புக்கலை, ஆட்சித் தமிழ், கோயிற் கலையியல், அருங்காட்சியியல், இசைத்தமிழ், நாடகத் தமிழ் ஆகியவற்றை விருப்பப் பாடமாக வைக்கலாம். தமிழைச் சிறப்புப் பாடமாகப் படிக்கும் மாணவர்களுக்கு முதற்பாகத் தமிழ் தேவையில்லை. அதற்குப் பதிலாகத் திராவிட மொழி களுள் ஒன்றைப் பாடமாக வைக்கலாம். இவ்வாறு, அவர் இளங்

கலைத் தமிழ்ப்பாடத் திட்டத்தைச் சீர்திருத்துவது பற்றித் தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தியுள்ளார்.

இரா. கோதண்ட ராமன் முதுகலைத் தமிழ்க் கல்வியை முற்போக்குச் சிந்தனையுடன் போர்க்கால அடிப்படையில் மாற்றி அமைக்க வேண்டும் என்று முறையீடு செய்துள்ளார். இருவகைப்பட்ட முதுகலைப்பட்ட வகுப்புகளை உருவாக்க ஆலோசனை கூறியுள்ளார். மொழிப் புலமை பெறுபவர்களுக்கு ஒரு முதுகலைப் படிப்பும், இலக்கியப் புலமை பெறுபவர்களுக்கு மற்றொரு முதுகலைப் படிப்பும் அளிக்க வேண்டும். இரண்டு படிப்புக்கும் முதலாண்டில் ஒரே மாதிரியாகப் பத்துத் தாள்கள் இருக்கும். இரண்டாம் ஆண்டில் தான் இரண்டு பிரிவினர்களும் பிரிந்து சிறப்புப் பயிற்சி பெறுவார்கள். வேறுபட்ட பத்துத் தாள் களைப் படிப்பார்கள். மற்ற மாநில மொழிகளைப் படிப்பதற்கும், கோட்பாட்டு அடிப்படையில் சிந்திப்பதற்கும் முதுகலை மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். இவ்வாறு, அவர் தம் கருத்துக்களை அழுத்தம்திருத்தமாக எடுத்துரைத்துள்ளார்.

கல்லூரித் தமிழ்ப் பாடத்திட்டங்களில் இலக்கணத்தின் இடம் பற்றி ம.ரா. பூபதி தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளார். முதல் பாகம் தமிழ் படிப்பவர்களுக்கு எழுத்து மற்றும் சொல் இலக்கணங்களைக் கற்பிக்க வேண்டாம். இலக்கியத் திறனாய் வின் கூறுகளாக விளங்கும் பொருள், யாப்பு, அணி இலக்கணங் களை மட்டும் போதிக்கலாம். பி.ஏ. தமிழின் இலக்கணப் பாடம் பி.லிட்டை விடக்குறைவாக இருப்பதால் இலக்கணப்பாடத்தரம் உயர்த்தப்பட வேண்டும். இலக்கணங்களுக்குப் புதிய எடுத்துக் காட்டுகள் தந்து தொல்காப்பியம், மற்றும் நன்னூல் இலக்கணங் களை ஒப்பீட்டு முறையில் நடத்த வேண்டும். முதுகலைத் தமிழின் இலக்கணப் பாடத்தின் தரமும் உயர்த்தப்படவேண்டும். பி.ஏ/பி.லிட் பாடத்தில் இல்லாத மேம்பட்ட புதிய இலக்கண நூல்கள் இடம்பெறல் வேண்டும். தொல்காப்பியச் செய்யு ளியலை இருட்டடிப்புச் செய்யும் நிலை நீங்கவேண்டும். இவ்வாறு, அவர் இலக்கணப் பாடத்தின் இடம் பற்றி தமது சிந்தனைகளை எடுத்துரைத்துள்ளார்.

சாரதா கலாவதி, கல்லூரித் தமிழ்ப் பாடத்திட்டத்தில் படைப்பிலக்கியத் திறம் பற்றித் தமது கருத்துக்களைத் தெரிவித் துள்ளார். கற்பனை வளத்தையும், மொழித் திறத்தையும் வளர்க்கப் படைப்பிலக்கியம் அவசியம். ஆனால், பாடத் திட்டத்தில் மிகக் குறைந்த இடமே தரப்பட்டுள்ளது. படைப்புத் திறன் வளர்க்க இரண்டு வகையான பயிற்சிகளைத் தரலாம்.

அவை : 1. குறித்தகால எல்லைக்குள் வகுப்பிலேயே முடிக்கப் படுவன; 2. சில நாட்கள் அல்லது சில வார இடைவெளியில் ஓய்வு நேரத்தில் வீட்டில் எழுதப்படுவன. முதல் வகைப் பயிற்சியில் 200 சொற்களுக்கு மிகாத கதையும், உரையாடலும் 50 வரிக்கு மேற்படாத கவிதையும் அமையலாம். இரண்டாம் வகைப் பயிற்சியில் துணுக்கு, விடுகதை, நெடுங்கதை, நாடகம் முதலியவற்றைப் படைக்கலாம். அஃறிணைப் பொருட்கள் தம் வரலாறு கூறுதல், குறிப்புத் தந்து கதை எழுதச் சொல்லல், கதையைத் தொடங்கும் சில வாக்கியங்கள் தருதல், தலைப்பு மட்டும் தந்து எழுதுதல் போன்ற பயிற்சிகளைத் தரலாம். முதல் மூவகைப் பயிற்சிகளும் முதற்பகுதி தமிழ் மாணவர்களுக்கும், மூன்றாம் பகுதி தமிழ் பயிலும் முதலிரண்டாண்டு மாணவர் களுக்கும் ஏற்றவை. நான்காம் வகைப் பயிற்சி இறுதியாண்டு இளங்கலைத் தமிழ் பயில்வோர்க்கும் முதுகலைத் தமிழ் மாணவர் களுக்கு ஏற்றது. இவ்வாறு, அவர் தமிழ்ப் பாடத்திட்டத்தில் படைப்புத்திறன் வளர்த்தலின் அவசியத்தைக் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

கல்லூரித் தமிழ்ப் பாடத் தேர்வுகளில் மாற்றங்கள் என்னும் தலைப்பில் வே.அ. திருமாவளவன் பல கருத்துக்களைத் தெரிவித் துள்ளார். பாடநூல்களின் சுமை பெருகியது போல வினாத் தாள்களின் எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது. மூன்று மணி நேரத் தேர்வு தேவை இல்லை; இரண்டு மணிநேரம் போதும். ஒரு மணிநேரம் குறுவினாவிற்கும், ஒரு மணிநேரம் பத்தி மற்றும் கட்டுரை வினாவிற்கும் ஒதுக்கலாம். குறுவினாக்கள் மாணவர் களின் நுட்ப மதியை வெளிப்படுத்தும் வகையில் குறைந்தளவு 100 குறு வினாக்களாவது இடம் பெற வேண்டும். வினாவிடுப் பிற்கு (choice) இடம் தரக்கூடாது. அறிவியல் மாணவர்களுக்குச் செயல்முறைத் தேர்வு இருப்பது போல இளங்கலை, முதுகலைத் தமிழ் பயிலும் மாணவர்களுக்கு ‘வாய்மொழித் தேர்வு’ வைக்க வேண்டும். அயல் மொழியை முதல் பாகமாகக் கற்பவர் 80 சதவீதம் எடுக்க வேண்டும் என வலியுறுத்த வேண்டும். இவ்வாறு, அவர் தேர்வு முறையில் மாற்றங்கள் செய்யவேண்டும் என்று தம் எண்ணங்களை வெளியிட்டுள்ளார்.

### பரிந்துரைகள்

ஒவ்வொரு கட்டத்திற்கும் மொழிக் கல்வியின் குறிக்கோள் களையும் (goals), ஒவ்வொரு வகுப்பிற்கும் இலட்சியங்களையும் (aims), ஒவ்வொரு பாடத்திற்கும் நோக்கங்களையும் (objectives) தெளிவாக வரையறுத்துக் கொள்ள வேண்டும். முதற்கட்டக் கல்வியில் தாய்மொழி கற்பித்தலின் தலையாய

குறிக்கோள் (75%) நான்கு மொழித் திறன்களை வளர்த்தல் என்றும், துணைக் குறிக்கோள் (25%) குழந்தை இலக்கியத்தில் ஈடுபாட்டை வளர்த்தல் என்றும் கொள்ளலாம். இரண்டாம் கட்ட மொழிக் கல்வியின் தலையாய குறிக்கோள் (75%) இலக்கியச் சுவையினை உணர்தல் என்றும், துணைக் குறிக்கோள் (25%) மொழித் திறன்களிலும் மேலும் ஆற்றலை வளர்த்தல் என்றும் கொள்ளலாம். மூன்றாம் கட்ட மொழிக் கல்வியின் தலையாய குறிக்கோள் (75%) இலக்கியத்தைப் படைத்தல் அல்லது இலக்கியத்தை ஆராய்தல் என்றும், துணைக் குறிக்கோள் (25%) மொழியைப் பயன்படுத்துதல் அல்லது இலக்கியச் சுவை உணர்தல் என்றும் கொள்ளலாம். கற்போரின் சமுதாயத்தின் விருப்பம், தேவை, பிரச்சனை ஆகியவற்றின் அடிப்படையில் வகுப்பின் இலட்சியங்களையும் பாடத்தின் நோக்கங்களை நிர்ணயம் செய்து கொள்ளல் வேண்டும்.

நோக்கங்களை வரையறை செய்தபின்பு அந்நோக்கங்களை அடைவதற்கான பாடப் பொருள்களை அல்லது பாட நூல்களை தேர்ந்தெடுக்க வேண்டும். இங்குதான் நாம் கவனத்துடன் செயல்பட வேண்டும். இன்று பல சந்தர்ப்பங்களில் தமது விருப்பு வெறுப்புக்களைச் சார்ந்தும் அரசையும் அதிகாரிகளையும்மகிழ்வுறுத்தும் பொருட்டும், நூலாசிரியர் மற்றும் வெளியீட்டாரிடமிருந்து பிரதிபலன் கருதியும் பாடங்களை பாட நூல்களைப் பரிந்துரை செய்து விடுகிறார்கள். இதனால் மாணவர்களும் கற்பிப்போரும் துன்பப்படுகிறார்கள். மொழிக் கல்வி நினைத்த பயனைத் தராமல் பிற விளைவுகளைத் தோற்றுவித்து வருகின்றன. கற்போரை மையமாக வைத்து பாடநூல்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கும் போது, மெய்மை (validity), முக்கியத்துவம் (significance), ஆர்வமூட்டும் தன்மை (interest), கற்றல் தன்மை (learnablity) ஆகிய அம்சங்களைப் பின்பற்ற வேண்டும். ஒவ்வொரு கட்டத்திற்கும் வகுப்புக்கும் இம்முறையிலேயே நூல்களைத் தேர்ந்தெடுத்துப் பரிந்துரை செய்ய வேண்டும்.

பொதுவாக, கல்வியியலில் அறிவு நிலை (cognitive domain) உணர்ச்சி நிலை (affective domain), செயலாக்க நிறை (psycho-motor domain) ஆகிய மூன்று நிலைகளில் நோக்கங்களைப் பகுத்துக் கற்போரை மதிப்பீடு செய்வார்கள். சிறப்பாக, அறிவு நிலையில் அறிதிறன் (knowledge), புரிதிறன் (comprehension), பயன்படுத்தும் திறன் (application), பகுப்புத் திறன் (analysis), தொகுப்புத் திறன் (synthesis), மதிப்பீட்டுத் திறன் (evaluation) என்னும் ஆறு பொது நோக்கங்களின் அடிப்படை

யில் வினாத்தாள்களைத் தயாரிப்பார்கள். இவற்றை மனதிற் கொண்டு வினாத்தாள் அமைப்பையும் வினாத்தாள்களையும்

மொழிக் கல்வியில் உருவாக்க வேண்டும். அகவய வினாக் களையும் (Essay types) புறவய வினாக்களையும் (objective types) கொண்ட வினாவங்கிகள் ஒவ்வொரு வகுப்புக்கும் மொழிக் கல்வியில் ஏற்படுத்த வேண்டும். வினாக்கள், சிறந்த மாணவர்களையும், திறன் குறைந்த மாணவர்களையும் பிரித்துக் காட்டும் வகையில் வேறுபாட்டுத் திறன் (discriminative power) சிரமநிலை (difficulty level) ஆகிய அம்சங்களைக் கொண்டிருக்க வேண்டும். அறிவு, ஆளுமை, செயற்பாங்கு ஆகியவற்றை அளந்தறிய உளவியலாளர்கள் அறிவியல்பூர்வமான சோதனைத் தாள்கள் தயாரித்திருப்பதைப் போன்று மொழியாசிரியர்கள் மொழித் திறன்களையும் படைப்பாற்றலையும் கணிக்கும் சோதனைத் தாள்களைத் தயாரிக்க வேண்டும்.

இந்தியா முழுவதும் பாலர் பள்ளித் திட்டம் (pre-school programme) நன்கு செயல்படவில்லை. இதனால் ஆரம்பப் பள்ளியிலிருந்து விலகும் விகிதம் குறையவில்லை; எழுத்தறி வின்மை அதிகரித்துக்கொண்டே வருகிறது. எனவே, திட்டமிட்ட பாலர் பள்ளிகள் தேவை. குறிப்பாக, தமிழ் போன்ற செம்மை மொழிகளைக் கற்போருக்குப் பாலர்பள்ளித் திட்டம் மிகவும் தேவை. ஏனென்றால், பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் மிகுதியான வேறுபாடுகள் உள்ளன. வீட்டுச் சூழ் நிலையில் கற்ற வட்டார மொழிக்கும், பள்ளிச் சூழ் நிலையில் கற்கப் போகும் எழுத்து மொழிக்கும் பாலர்பள்ளிகள் ஒரு பாலமாக அமைய முடியும். கதை சொல்லல், உரையாடல், பாட்டு, விளையாட்டு ஆகியவற்றின் மூலமாக அழுத்தம் திருத்தமாகக் கற்போரின் பேச்சு மொழியை மாற்றி அமைக்க முடியும். மேலும் முதலாம் வகுப்பில் எழுத்துக்களைக் கற்றுத் தேர்வதற்கு வாசிப்பு ஆயத்தத்தை (Reading readiness) பாலர் பள்ளியில் உருவாக்க இயலும். இதனால் மொழி கற்றலில் ஆர்வமும் திறனும் பெருகும்.

வேளாண்மை, சட்டவியல் மாணவர்கள் தமிழைப் பட்ட வகுப்பில் படிப்பதைப் போன்று பொறியியல், மருத்துவம், தொழில் நிர்வாகவியல் (பி.பிஏ.) ஆகியவற்றைப் படிக்கும் மாணவர்களுக்கும் தமிழ்ப்பகுதி வைக்க வேண்டும். அவர்களுக்கு இரண்டு தாள்கள் அளிக்கலாம். முதல் தாளில் அந்தந்த மாணவர்களுக்கு ஏற்ப—பொறியியல் மாணவர்களுக்குத் தமிழர் பொறியியல் வரலாறும், மருத்துவ மாணவர்களுக்குத் தமிழர்

சித்த வைத்திய முறைகளும், தொழில் நிர்வாகவியல் மாணவர்களுக்குத்தமிழரின் தொழில் வரலாறும் பண்பாடும் கற்பிக்கலாம். அப்போதுதான் தமிழர் வரிப் பணத்தில் படித்துவிட்டு, வெளி நாடுகளுக்குச் சென்று வேலை பார்த்து அதிகப் பணம் ஈட்டும் மனப்பான்மை அவர்களுக்கு குறையும். மேலும், தற்காலத் துறைகளுக்கு அடிப்படை, தமிழர் நாகரிகத்தில் உண்டு என்னும் எண்ணமும் மலரும். இரண்டாம் தாளில் மொழிப் பயிற்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கலாம். சமூகப் பணியிலும், ஆட்சித் துறைகளிலும், தகவல் தொடர்பு நிலையங்களிலும் வேலை பார்க்கும் பலரும், எழுத்தறிவில்லாத ஏழை எளிய மக்கள் உணரும் வகையில் தம் சிந்தனைகளைத் தமிழில் எடுத்துரைக்க முடியவில்லை. இதற்குக்காரணம் தொழில் படிப்பு மாணவர்கள் கலையியல் படிப்பு மாணவர்களைப் போல மொழியில் அதிகப் பயிற்சி பெறாமையாகும். எனவே, தொழில் பட்டம் பெற்ற மாணவர்களுக்கும் குறைந்த பட்சம் மொழி பயிற்சியளிக்கும் பாடத்திட்டம் வரைதல் வேண்டும்; செயல்படுத்த வேண்டும்.

மூன்றாம் கட்டக் கல்வி மாணவர்களிடையே வேலையின்மை பெருகி வருகின்றது. குறிப்பாகத் தாய் மொழியில் சிறப்புப் புலமை பெற்றவர்களுக்கு வேலை கிடைப்பது முயற்கொம்பாக உள்ளது. ஆகவே, பல்கலைக் கழகங்கள் ஒரே மாதிரியான பாடத்திட்டங்களை உருவாக்காமல் தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் பல்வேறுபட்ட பாடத்திட்டங்களை உருவாக்கி அளிக்க வேண்டும். ஆசிரியப் பதவியையும் ஆராய்ச்சியை மட்டும் கருத்திற்கொள்ளாமல் தமிழ் மொழித்திறம் தேவைப்படும் அனைத்துத் துறைகளையும் அறிந்து பாடத்திட்டங்கள் தயாரிக்க வேண்டும். வானொலி, தொலைக் காட்சி, இதழியல், திரைப் படத்துறை, ஆட்சித்துறை, சமூகப்பணி நிறுவனங்கள், கல்வி நிறுவனங்கள், விளம்பரம் ம்ற்றும் வியாபாரத் துறைகள், நூலாக்கம், பதிவகம், மொழிபெயர்ப்பு, போன்ற அனைத்துத் துறைகளிலும் தேவைப்படும் மனித சக்திக்கு ஏற்ப—தமிழ் மொழியறிவு தேவைக்கு ஏற்ப பாடத்திட்டங்கள் வரைதல் வேண்டும். துறையறிவு வளர்ச்சி ஒன்றையே மனதிற்கொண்டு தமிழ்ப் பாடத்திட்டங்கள் அமைத்தால் மாணவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் தமிழ்க் கல்வியின் மேலுள்ள நம்பிக்கையும் ஆர்வமும் குன்றிவிடும்.

முடிவுரை

1981-ஆம் ஆண்டு பாடத்திட்டத்தை ஒப்பிடும்போது 1982 ஆம் ஆண்டுப் பாடத்திட்டத்தில் சிறிது மாற்றம் தான்

ஏற்பட்டுள்ளது. பாலர் பள்ளிக்குப் பாடத்திட்டம், சென்னைப் புல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் இரண்டு முதுகலைப் படிப் புக்கான பாடத்திட்டங்கள், திராவிட மொழியியலின் பன்னாட்டுப் பள்ளி (பாண்டிச்சேரி) நடத்திய கல்லூரித் தமிழ்ப் பாடத்திட்டக் கருத்தரங்கு ஆகிய மூன்றும் 1982-ஆம் ஆண்டு தமிழ்ப் பாடத்திட்ட வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கவை; பாட நூல்களில்மாற்றம் ஏற்பட்டிருப்பதும் இவண் நினைக்கத்தக்கது. ஒவ்வொரு கட்ட மொழிக் கல்விக்கும் நிரந்தரமான பாடத் திட்டக் குழுக்கள் இருக்க வேண்டும். இவை மூன்றும் ஒன்றுபட்டு செயல்படவேண்டும். இவை புதியபாடத்திட்டங்களை வரைதல், அமுல்படுத்துதல், மதிப்பிடுதல்,மேம்படுத்துதல் போன்ற செயல் களை மேற்கொண்டு மொழிக் கல்வியின் குறிக்கோள்களை நடை முறைப் படுத்தவேண்டும்.

## துணைநூற் பட்டியல்


ஆல்பர்ட் செல்வராஜ், ஜே. மேனிலைக் கல்விப் பாடத்திட்டக் கட்டமைப்பு, தினமணி, ப.2, 7-8-82.

சண்முகம் பிள்ளை, மு (பதி). கல்லூரிப் பாடத்திட்டக் கருத் தரங்கு, திராவிட மொழியியல் பன் னாட்டுப் பள்ளி, பிராந்திய மையம், பாண்டிச்சேரி, 1982.

Anand Rao, B, Readings in Educational Technology, Himalaya Publishing House, Bombay, 1982.

Bose. A, "Undergraduate curriculum and Teaching", Journal of Higher Education 1:1, 1975, p p 61-76

Buxton, Thomas and Keith W. Prichard, (ed), Excellence in University Teaching (New Essays), University of South California Press, Columbia, S.C. 1975.

Beard R, Teaching and Learning in Higher Education Penguin Books, London, 1970.

Dressel, P, College and University Curriculum Mccuttachan, Berkly, California, 1971 (2nded).

Dressel, P.L. and M.M. Thompson, Independent Study : A New Interpretation of Concepts, Jossey-Bass, San Franciso, 1973.

Fiddy, Rob, A Curriculum for Employablity? Journal of Higher Education, vol.1, No.1, Spring 1982, pp. 16—23.

Harris, Sandra and Ken Morgan., Language Projects: An introduction to the Study of Languags, Enward Arnold, London, 1979.

Heywood, John., Assessment in Higher Education, John wiley & sons, Chichester, 1978.

Harrison, Shellay A. and Lawrence M.Stolurow (ed) Improving Instructional Productivity in Higher Education, Educational Technology Publication, New Jersey, 1973.

John, V.V, "Undergraduate Curriculum and Teaching in Higher Education, Journal of Higher Education, 1:1, 1975, pp. 51-60.

Kozma, Robert B. et al, Instructional Techniques in Higher Education, Educational Technology Publication, New Jersey, 1978.

Levine, A, A Hand Book of Undergraduate curriculam Jossey—Bass, San Francis, 1978.

Munby, John., Communicative Syllabus Design Cambridge University Press, Cambridge, 1981 (Rep).

Ouaraishi, Z.M., "On Curriculum and Teaching in Higher Education" Journal of Higher Education 1:3, 1976, pp. 403—406.

Weiss, J.(ed), Curriculum Evaluation : Potentiality and Reality, Ontario Institute for Studies in Education, Toronto, 1972.

# 13. இலக்கணக் கட்டுரைகள்

—ஆ. சிவலிங்கனார்

*1982-இல் வெளிவந்த தமிழ் இலக்கணக்கட்டுரைகளுள் பெரும் பாலும் தொல்காப்பியக் கட்டுரைகளாகவே அமைந்துள்ளன. இவ் வாண்டில் வெளியான சில கட்டுரைகள் பழைய கருத்துகளையே கூறுவனவாக இருந்தாலும், பெரும்பாலன சிறந்த ஆய்வுகளாகவே காணப்படுதலை அறியலாம். இவற்றால் வடமொழிக்கு மூலமே தமிழ்தான் என்னும் கருத்து உறுதிப்படினும் வியப்பதற்கில்லை.*

1982-இல் வெளிவந்த தமிழ் இலக்கணக் கட்டுரைகளுள் பெரும்பாலன தொல்காப்பியக் கட்டுரைகளாகவே அமைந் துள்ளன. தொல்காப்பியத்துக்குப் பின்னர் வெளிவந்துள்ள வீரசோழியம் முதலிய நூல்கள் பற்றியோ அவை கூறும் செய்திகள் பற்றியோ கட்டுரைகள் மிகுதியும் இல்லை. ஒன்றி ரண்டே யுள. காரணம், தமிழ் இலக்கணம் கூறும் நூல் தொல் காப்பியம் ஒன்றே யாதலாகும். அன்றியும் அதுவே அவற்றுக்கு முதல் நூல் ஆதலுமாகும்.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் 1982-இல் பெங்களூரில் நடத்திய கருத்தரங்கில் தொல்காப்பியத்துக் கென்றே ஒரு சிறப்பு மலர் வெளியிட்டது. அதில் 36 கட்டுரைகள் உள. அவற்றுள் சில மொழியியல் கட்டுரைகள்; பெரும்பாலன மரபு இலக்கணக் கட்டுரைகள்.

செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில் முதலிய மாத இதழ் களில் வெளிவந்த கட்டுரைகள் சிலவுண்டு.

இங்கு எனக்குக் கிடைக்கப்பெற்ற கட்டுரைகளின் கருத்து களைப் பொது நோக்கில் கண்டு குறிப்பிடுகின்றேன்.

## 1. பொது

தொல்காப்பியர்க்கு முன்னரும் அவர் காலத்தும் உயிரியல், பயிரியல், வளியியல், புனலியல், கனவியல், விண்ணியல், நிலவியல், நிலாவியல், மனையியல், கலையியல் கூறும் தனித்

தனி நூல்கள் இல்லையென்றாலும், சில தனி நூல்களும் அவை பற்றித் தொகுத்துக் கூறும் நூல்களும் இருந்திருக்க வேண்டும் என்பதை "முத்தமிழ்த் தொல்காப்பியர் மொழிந்த நூல்கள்" என்னும் கட்டுரை (59) சில சான்றுகளுடன் கூறுகின்றது. 'தொல்காப்பியர் கால மொழி நூல் வல்லார்' என்னும் கட்டுரையால் (43) மொழி நூல்களும் இருந்திருத்தல் வேண்டும் என்று அறியலாம்.

வடமொழிப் பற்றுகொண்டு தொல்காப்பியத்தைப் பாணினீயத்துடன் ஒப்பிட்டுப் பார்த்துப் பாணினீயக் கருத்துத் தொல்காப்பியத்திருப்பதாக முன் கூறி வந்தனர். உண்மையாராய்ச்சியாளர் பாணினீயத்துக்கும் தொல்காப்பியத்துக்கும் வேறுபாடு மிகவுண்டு என்று கூறித் தொல்காப்பியத்தின் தனித்தன்மையை வெளிப்படுத்தி வருகின்றனர். முதுபெரும்புலவர் ச. தண்டபாணி தேசிகரின் 'தொல்காப்பியமும் பாணினீயமும்' என்னும் கட்டுரையும் (40), எழுத்தியல்—பாணினீயம் தொல்காப்பியம்' என்னும் சி. சுப்பிரமணியன் கட்டுரையும் (17) அதனைத் தெளிவு படுத்தும் (பின்னவர் கட்டுரை முடிவு பெறாதுளது).

தொல்காப்பியர் காலம் பற்றிய ஆய்வு இன்னும் முடிவுபெறவில்லை. எழுத்து, சொல், பொருள் பற்றிய மூன்று அதிகாரங்களிலும் ஆங்காங்கே காணப்படும் சொற்பொருள் ஆட்சிகளைக் கொண்டு காலத்தை உறுதிசெய்ய முயன்றுள்ளனர். வடமொழிப் பற்றாளர் சிலர் வடமொழி நூல்களில் காணப்படும் சொற்பொருள்கள் சில தொல்காப்பியத்திற் காணப்படுவதுகொண்டு, அந்நூல்களுக்குப் பிற்பட்டது தொல்காப்பியம் என்கின்றனர். தொல்காப்பியச்சொற் பொருள்கள் வேதம் முதலிய வடமொழி நூல்களில் காணப்படுதலின் காலம் அறியப்படாத தொல்காப்பியத்துக்குப் பிற்பட்டன வடமொழி நூல்கள் என்று கூறினால் என்ன? ஆரியமொழி ஒரு நாடோடிமொழி. தனக்கென ஒரு நாடு இல்லாதது. ஆரியர் தமிழருடன் (திராவிடருடன்) கலந்து வாழ நேரிட்டபோது பேச்சு வழக்கிலிருந்த ஆரிய மொழி— அதன் ஒழுங்கின்மை கருதித் திருத்தியமைக்கப் பட்டது. அதனால் சமக்கிருதம் (சரியாகச் செய்யப்பட்டது) எனப் பெயர் வைக்கப்பட்டது. திருத்தமான ஆரியம் (சமக்கிருதம்) ஏட்டிலும், நாடோடி ஆரியம் பேச்சிலும் இருந்தன. நாளடைவில் பேச்சு மொழி மறைந்தது. ஏட்டு மொழியே

குறிப்பு : பிறைகோட்டுள் உள்ள தனி எண்கள் யாவும் பின் இணைப்பில் உள்ள கட்டுரைகளின் வரிசை எண்கள்.

நிலைத்தது. இந்நிலையில் தமிழ்ச் சொற்களே சமக்கிருதத்தில் ஏறின. அதனால்தான் சில சொற்கள் தொல்காப்பியத்தில் உள்ளவை வடமொழி நூல்களிற் காணப்படுகின்றன. இந்நிலை யறியாதவருள் ஒருவராகத் 'தொல்காப்பியர் காலம்' என்னும் கட்டுரை (42) எழுதியவர், தொல்காப்பியர் காலம் கி. பி. 4 ஆம் நூற்றாண்டு என்றார். அவர் கூறிய ஒரு சான்று வியப்புக் குரியது.

> ''இந்திய வரலாற்றில் முதன்முதலில் ஓர் அந்தணன் அரச மரபினை ஏற்படுத்தியது கி. பி. 345-இல் தான். மயூரசன்மன் என்னும் அவ்வந்தணன் வனவாசியில் கதம்ப அரசினை நிறுவியதே அது. இச்செய்தியை மனதிற்கொண்டு எழுதப்பட்டதே 'அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே' என்னும் சூத்திரம். இதனால் தொல்காப்பியர் மயூரசன்மன் காலத்தவர் அல்லது அவனுக்கும் பிற்பட்டவர் என்பதை நம்பலாம்''

என்பது அவர் கூற்று. தமிழில் அந்தணர் அரசாண்டதாகச் சான்றில்லை. தொல்காப்பியச் சூத்திரத்துக்கு 'அந்தணாளர்க்கு அரசுரிமை நீக்குதல் இல்லை' எனப் பொருள் கொள்வர் யாவரும். உண்மையில் அந்தணர் என்போர் அறவோர் ஆதலின், அவர், கொலையிற் கொடியாரை ஒறுக்கும் வேந்தர் தொழிலுக் குரியர் அல்லர். எனவே தமிழ் அந்தணாளர்க்கு அரசு சேர்த்தல் என்பது இல்லை—அதாவது அரசாட்சி உரிமையில்லை என்பதே பொருளாகக் கொள்ள வேண்டும். இதனால் அக்கட்டுரையாளர் கருத்து தவறானது என்பது பெறப்படும்.

தொல்காப்பியத்தின் அதிகார அமைப்பு பற்றியும், இயல் களின் வரிசையமைப்பு பற்றியும், இயல்களின் பெயர்க்காரணம் பற்றியும் உரையாசிரியர்களின் கருத்துக்களோடு ஒத்தும் மாறு பட்டும் பலர் எழுதி வந்துள்ளனர். வை. தங்கமணி என்பார், ''முதல் நூலாசிரியர் கூறியபடிஎழுத்துகளில் இவை முதல்,சார்பு, உயிர்மெய் என்றும், வடிவம் இத்தகைய என்றும், மாத்திரை இவ்வளவு என்றும், எண்ணிக்கை இத்துணை என்றும், மயங்கும் முறை இவ்வாறு என்றும், (முன்னோர் நூலின் வழியே கூறுவ தால் மரபு என்றும்) கூறும் முதல் இயல் நூன் மரபு எனப் பட்டது'' என்றார்.

## 2. எழுத்து

எழுப்பப்படுதலின் எழுத்து என ஒலியெழுத்துக்கும், எழுதப் படுதலின் எழுத்து என வரிவடிவ எழுத்துக்கும் பெயர் வந்தன வாகக் கூறுதல் உண்டு.

"இழ்-எழு-இஃது ஒலிக்குறிப்பு—அவ்வொலியை எழுப்புதலின் எழுத்தாயிற்று. அவ்வெழுத்தின் முழு இலக்கணமாவது, மக்கள் முயற்சியால்—அவர்தம் உறுப்புகளின் தொழிற்பாட்டால் அதாவது அவ்வுறுப்புகளின் உயிர்த்தல், ஒற்றல், அஃகுதல் என்னும் மூன்று முயற்சிகளுள் ஒன்றனால்-ஓசை நிலையிலோ, ஒலி நிலையிலோ, இசை நிலையிலோ வெளிப்படுவதாய், செவி கண் புலன்களுக்கு அறியலாம்படியதாய், ஒன்றாகவோ ஒன்றுக்கு மேற்பட இணைந்தோ சொல் நிலைப்படுவதாய், தனித்தாயினும் சொல் நிலைய்தாயினும் தன் பிறப்பமைதித் தன்மை கெடாததாய் இருப்பதுவே எழுத்தாம்."

இவ்வாறு கூறி ஆய்தம் ஓசையாகும்; மெய் ஒலியாகும்; உயிர் இசையாகும் என்றும் கூறினார் ச. பாலசுந்தரம். 'எது எழுத்து' என்னும் கட்டுரையில் (15) இவ்வாறு கூறியவர்,

"தொல்காப்பியர் கூறும் இலக்கணம் யாவும் ஒலி வடிவிற்கே; ஒப்பக் கூறல் என்னும் உத்திவகையான் அவ்விலக்கணமே வரிவடிவைச் செய்து கொள்ள ஏற்புடையதாகவுள்ளது"

எனத் 'தொல்காப்பியர் கூறும் எழுத்து வடிவம்' என்னும் கட்டுரையில் (44) கூறினார்.

"உய்+இரு=உயிர். உய் என்பது விரைந்து வெளிப்படுதல்; இரு என்பது அமர்தல். உந்திமுதலா முந்துவளியால் கண்டத்தினின்றும் உய்ந்து வாய் உறுப்புகளின் அமர்ந்து செவிப்புலனாக வெளிப்படும் எழுத்துகளைச் சுட்டி ஒரு சொல்லாய் அமைந்தன. அதனான் உயிர் என்பது காரணக் குறியீடு. உவம ஆகு பெயர் என்பது தவறு. ம்+எய்=மெய் என ஆயது."

இவ்வாறு உயிர், மெய் என்பனவற்றின் காரணங்களும் குறில், நெடில் முதலியவற்றின் காரணங்களும் புதுமையாகக் கூறப்பட்டன 'தொல்காப்பியர் கூறும் தமிழ் எழுத்துகளின் குறியீட்டு விளக்கம்' என்னும் அவரது கட்டுரையில் (45).

ஐ, ஔ என்னும் எழுத்துகளை அய், அவ் என்றே எழுதலாம் என்று இக்காலத்தார் சிலர் கூறிவருவதைக் கண்டித்து 'அறிஞரை மயக்கிய ஐகார ஔகாரம்' என்னும் கட்டுரை (3) ஒன்றும் ச. பாலசுந்தரம் எழுதியுள்ளார். பலராலும் பலகாலும் எழுதப்பட்டு வரும் கருத்தையே அவரும் புதிய உதாரணங்களுடன் எழுதியுள்ளார்.

புதுமை + ஆனவாழ்வு = புதுமையான வாழ்வு.
புதுமய் + ஆனவாழ்வு = புதுமயானவாழ்வு.
ஔ + இடைவராது = ஔவிடைவராது.
அவ் + இடைவராது = அவ்விடைவராது.

இவற்றின் பொருள் மாறுபாடுகளையும், சொல் மாறுபாடுகளையும் காட்டி, செய்யுளில் அவற்றின் இன்றியமையாமையும் காட்டி ஐ, ஔ என்பன தனி எழுத்துகளே; அய், அவ் என்னும் கூட்டெழுத்துகளல்ல என நிறுவினார் அவர்.

'தொல்காப்பியத்தில் சுட்டு' என்னும் கட்டுரை (29) சுட்டெழுத்துகள், சுட்டுச் சொற்கள் பற்றித் தொல்காப்பியத்தில் கூறப்பட்ட செய்திகளும், தொல்காப்பியத்தில் அவை ஆளப்பட்ட முறைகளும் கூறுகின்றது. கட்டுரை முடிவு பெறாமையால் அதனை எழுதிய சு. மகாலட்சுமியின் கருத்தறிய இயலவில்லை.

வினாவானது அறியான்வினா, அறிவினா, ஐயவினா எனப் பல வகையில் வரும் என்றனர் உரையாசிரியர்கள். எஸ். எம். சரோஜினிபாய் என்பவர் இணை, தேற்றம் என்னும் இருவகையிலும் வரும் எனப் புதிய இரண்டுவகைகளை விளக்குகின்றார். 'அப்பசு அழகாக இருக்கிறது; இல்லையா?' இவ்வினா ஆம் அல்லது இல்லை என்ற பதிலை எதிர் நோக்கியுள்ளது. இதனை இணை வினா என்னலாம். கூறப்படுகின்ற செய்தியின்மீது கேட்பவருடைய கவனத்தை ஈர்ப்பதற்காக இணைக்கப்படுவது இணை வினா.

பதிலை எதிர் நோக்காமல் கூறப்படுகின்ற செய்தியின் தெளிவிற்காகவே இணைக்கப்படுவது தேற்றவினா. 'நேற்று நான் வீட்டிற்கு வந்தேன் இல்லையா; முருகனைப் பார்த்தேன்' என்பதில் தேற்றம் இருப்பது காணலாம். இவ்விரு வகை வினாக்களும் சிலப்பதிகாரத்தில் ஆளப்பட்டவாற்றைத் தெரிவிப்பது அவர் எழுதிய 'இணை வினாவும் தேற்ற வினாவும்' என்னும் கட்டுரை (6).

உயிரளபெடை பற்றி ஆண்டுதோறும் ஆய்வுக் கட்டுரை வந்தவண்ணம் இருக்கிறது. ஆனால் தொல்காப்பியச் சூத்திரங்களில் வந்துள்ள உயிர் அளபெடைகளைக் கொண்டு உயிரளபெடையிலக்கணம் கண்டு கூறிய புதுமுயற்சியைத் 'தொல்காப்பியத்தில் உயிரளபெடை ஆட்சி' என்னும் கட்டுரையிற்காணலாம் (27).

சொல்லிசையளபெடை என்பது ஒரு சொல்லை வேறொரு சொல்லாகப் பொருள் நிலையிலும், சொல் நிலையிலும் வேறு படுத்த வருவது.

"இடம் பெற்றுத் தழாஅல்" (தொல். பொருள். கள. 11) இதில் தழுவல் என்பது தழாஅல் என மாற்றப்பட்டது.

"அழிந்தது களைஇய ஒழிந்தது கூற" (தொல். பொருள். அகத். 42).

இதில் களைய என்னும் செயவென்வாய்பாட்டுச் சொல் களைஇய எனச் செய்யிய என்னும் வாய்பாட்டுச் சொல்லாக மாற்றப்பட்டது.

"எழூஉதல் என்மனார்" (தொல். எழு. நூன் .6)
எழுக என்பது தன்வினை. அதைப் பிறவினையாக மாற்ற வேண்டி எழூஉக என்று மாற்றினார்.

"பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்" (தொல். சொல். எச்ச. 53)

இதில் ஆகுந என்னும் செய்வினை ஆஅகுந எனச் செயப்பாட்டு வினையாக மாற்றப்பட்டது.

"மரீஇயது ஒராஅல்" (தொல். சொல். எச்ச. 47) இதில் ஒருவல் என்பது நீக்குதல் என்னும் உடன்பாட்டுப் பொருளுடையது; அதை நீக்காதே என்னும் எதிர்மறைப் பொருளுடையதாகக் கொள்ள வேண்டி ஒராஅல் என அளபெடுத்ததாக மாற்றப்பட்டது.

பேயின் அச்சமிகுதியைக் காட்டப் பே எய் என்பதும் பிறவும் சொல்லிசையளபெடைக்கு உதாரணங்களாம். இப்படியே அளபெடையின் பொது இலக்கணமும், இன்னிசையளபெடையிலக்கணமும் தொல்காப்பிய ஆட்சியிலிருந்தே காட்டப்பட்டன.

தொல்காப்பியர் இடைநிலை மெய்ம் மயக்கத்தை வரையறைப்படுத்திக் காட்டியுள்ளார். மொழியிறுதியில் இரண்டு மெய்கள் இணைந்து மயங்கா; ஆனால் போலும் என்னும் சொல் போன்ம் என வரும்போது—செய்யுளில் மட்டும் னகர மகர ஒற்றுகள் மயங்கி வரும் என்றார் (எழு. மொழிமரபு. 18).

மா. அய்யாச் சாமி என்பார், தொல்காப்பியர் மொழியிறுதியில் 'ன்ம்' என இரண்டு மெய் மயக்கமே செய்யுளில் உண்டு என்றாரேனும் சங்க இலக்கியங்களில் ய்ம், ர்ம், ண்ம், ழ்ம் போல்வனவும் காணப்படுகின்றன என்று உதாரணங்களாக

தேய்ம் (நற். 68-3), ஈர்ம் (குறி. கலி 38-1), கலிழ்ம் (ஐங். 273-4) கொண்ம் (புறம். 152-29) ஆகியவற்றைக் காட்டினர். இவ்வுதாரணங்கள் பொருந்துவனவல்ல. செய்யுள் இறுதியில் இவை இப்படிக் காணப்படவில்லை. அவை தேய்மென, ஈர்ஞ்சடை, கலிழ்மே, கொண்மென என்றே காணப்படுகின்றன. எனவே அவை இடைநிலை மெய்ம்மயக்கங்களேயன்றி இறுதிநிலை மெய்ம்மயக்கங்களல்ல.

பாட்டில் சீர் அமைப்புக்கேற்ப அவை புணர்ச்சி விகாரங்களாகவும் சொல் திரிபுகளாகவும் உள்ளனவே தவிர மொழியிறுதியில் இரண்டு மெய்கள் மயங்கினவல்ல. எனவே 'இறுதிநிலை மெய்ம்மயக்கம்' (8) என்னும் கட்டுரையில் அவர் கூறுவது ஏற்புடைத்தன்று. அக் கட்டுரையிலேயே கூறப்படும் பிற கருத்துகள் ஆய்வுக்குச் சிறந்தனவேயாம்.

'உடம்படுமெய்' என்னும் கட்டுரையில் (11) வெ. இசக்கிமுத்து என்பார், "மணி + அழகு, மலை + அழகு, பூ + அழகு என நிலைமொழியிறுதி உயிரையும் வருமொழிமுதல் உயிரையும் விட்டிசைத்தால் ஒலிக்கும் முயற்சியில் கடினம் இருப்பதாகத் தெரியவில்லை" என்று ஒரு கருத்துக் கூறியுள்ளார். அதாவது உடம்படுமெய் தேவையில்லை என்பது அவர் கருத்து. மணி+அழகு என்பனவற்றை விட்டிசைப்பதைவிடச் சேர்த்திசைப்பதில் எளிமையிருப்பதைக் காணலாம். (மணி அழகு, மணியழகு— இவற்றைச் சொல்லிக்காண்க). "உடம்படுமெய்யைப் பொறுத்தவரையில் விட்டிசையைத் தடுக்கும் நோக்குடன் யகர, வகர உடம்படுமெய்களை உருவாக்க வேண்டியதில்லை" என அவர் எழுதியதும் பொருந்தவில்லை. யகர வகர உடம்படுமெய்கள் உருவாக்கப்படவில்லை. பேச்சின் தொடரோட்டத்தில் தாமே இயைவன. உரையாசிரியர்கள் கூறியாங்கு உடம்படுமெய் சேர்த்தே கூற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை என்று வேண்டுமானால் கூறலாம்.

தமிழ் ஆய்த எழுத்து வடமொழி விசர்க்கத்தோடு ஒத்தது எனக் கூறினோரும் மறுத்தோரும் உளர். 'யாப்பிலக்கணத்தில் ஆய்தம்' என்னும் கட்டுரையாளர் (61) மறுத்தோரைச் சார்ந்து எழுதியுள்ளார். ஆரிய மொழி நன்றாகத் திருத்தப்பட்டபோது தமிழிலிருந்து மேற்கொள்ளப்பட்டவற்றுள் ஆய்த ஒலியும் ஆகும். அவ்வொலி செய்யுளில் வரும்போது அலகு பெறுதலும் பெறாமையும் உண்டு என்பர் அறிஞர். அலகு பெறும்போது உயிராகவும், பெறாதபோது மெய்யாகவும் கருதப்படும் என்றும்

கூறுவர். கட்டுரையாளர் கு. பூங்காவனம் அவர்கள், "யாப்பில் தளைச் சிக்கல் ஆய்தத்துக்கு வரும் இடம் வெண்பா. பெரும் பகுதி திருக்குறளிலேயே வருகிறது. பிற கீழ்க்கணக்கு நூல்களில் ஆய்தம் மெய்யெழுத்து நிலையில் அலகு பெறாமலே வந்துளது. அதனால் குறளிலும் ஆய்தம் வந்த இடம் எங்கும் 'அஃது' என்னும் சொல்லிலேயே வருதலின் 'அஃது' என்பதை அது எனக் கொண்டால் அதாவது ஆய்தத்தை நீக்கி விட்டால் தளைச் சிக்கல் இராது; எனவே ஆய்தம் மெய் போல அலகு பெறாமலேயே பாக்களில் வரும் என்று உறுதிப்படுத்தலாம். குறளில் வந்தனவேயெனின் அவை ஏடெழுதினார் பிழை என்க" என்றெழுதினார்.

"அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி."

என்னும் குறளில், அஃதொருவன் என்றே கொள்ளலாம் என்பது அவர் கருத்து. இக்குறளைப் பாடிப் பார்க்கின் 'அஃதொருவன்' என்பதே இன்னிசையுடையதென்பது புலப்படும்.

இ. முத்தையா என்பார் 'பயன்வழி யியலும்—தொல்காப்பியமும்' என்னும் கட்டுரையில் (52) கூறிய கருத்து பாராட்டுதற்கு உரியதாகும். அவர் கூறியது:

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே (பெயரியல் 1) என்றதன்படி, சொல் பொருள் குறிக்கும் எனினும் ஒரு சொல் தனக்குரிய நேரான பொருளைக் குறிப்பதோடு சொல்லுவான் கருத்தையும் குறிக்கும். சொல்லுவான் கருத்து பொருண்மை எனப்படும். 'உனக்கு மூளைக் காய்ச்சல் வராது' என்றால் சொற்றொடரின் நேர்ப் பொருள் 'உனக்கு மூளைக் காய்ச்சல் வராது' என்பதுவேயாம்; ஆனால் சொல்லுவான் 'உனக்கு மூளை இல்லை; அதனால் மூளைக் காய்ச்சல் வராது' என்ற கருத்தில் சொல்வானேயானால், அத்தொடரின் பொருள் 'உனக்கு மூளையில்லை' என்பதாகும். இது அத்தொடரின் நேர்ப் பொருளன்று. 'மூளையில்லை' என்னும் பொருள் தன்மையை அத்தொடர் தெரிவிக்கிறது. இதுவே பொருண்மை யெனப்படும். இக் கருத்தைத் தொல்காப்பியர் குறிப்பிற்றோன்றல் (தொல். சொல். பெயர் 3) இசைதிரிந்திசைப்பினும் இயையுமன் பொருளே (தொல். பொருளே. 195) என்பனவற்றால் குறிப்பிடுவர். இப் பொருண்மையைக் கிரைசு (Grice) என்பார் 'பயன் வழியியல் கோட்பாடு' (Pragmatic theory) என்பர்.

எனவே மேனாட்டறிஞர்—மொழியியலறிஞர் இன்று கூறிய கருத்துகள் அன்றே தொல்காப்பியர் கூறிய கருத்துகளின் பிரதிபலிப்பே என்னலாம்.

## 3. சொல்

தொல்காப்பியத்தில் காணப்படும் சொல் பின்னூல்களில் ஆளப்பட்டவாறும், தொல்காப்பியம் விவரித்த சொற்களின் வழக்காறும் பற்றிய கட்டுரைகள் பல வெளிவந்துள்ளன.

"புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' (தொல். களவியல் 24) என்னும் சூத்திரத்தில் புரை என்னும் சொல் ஆளப்பட்ட பொருளிலேயே (குற்றம்) திருவள்ளுவத்திலும்

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்

என்னும் குறளில் ஆளப்பட்டுள்ளது. இதனால் தொல்காப்பியத்துக்கும் திருக்குறளுக்கும் உள்ள உணர்வு இயைபையும் கால அணுக்கத்தையும் அறியலாம்'' என்ற கருத்தைக் கூறிச் சான்றுகளுடன் தமிழண்ணல் அவர்களால் எழுதப்பட்ட கட்டுரை 'புரை தீர் கிளவி' என்பதாகும் (56).

ஒன்பது, தொண்ணூறு, தொள்ளாயிரம், ஒன்பதினாயிரம் என்னும் எண்ணுப் பெயர்கள், முறையே, தொண்டு (ஒன்பது) தொண்பது (தொண்ணூறு), தொண்ணூறு (தொள்ளாயிரம்), தொள்ளாயிரம் (ஒன்பதாயிரம்) என்றே அமைதல் வேண்டும் என்று பே. மு இராசகோபாலன் தமது 'தொல்காப்பியரின் இலக்கணம்—எண்ணுப் பெயர்கள்' என்னும் கட்டுரையில் (46) கூறியுள்ளார். இக்கருத்து முன்னரே பலராலும் கூறப்பட்டதே. மிக விளக்கமாக அயல்மொழிகளுடன்—மேனாட்டு மொழிகளுடன் ஒப்பிட்டு விளக்கி அவை எவ்வாறமைய வேண்டுவன எவ்வாறமைந்தன என வரையறை செய்துள்ளார் சுந்தர சண்முகனார். 1971-இல் வெளியிட்ட தொண்ணூறும் தொள்ளாயிரமும் என்னும் அவரது நூலில் காண்க.

ஆகுபெயர், அன்மொழித்தொகை பற்றிய கருத்துகள் இரு வகையில் அமைந்தன. இரண்டும் ஒன்றே என்பதும், இரண்டும் வேறுபட்டன என்பதும் அவை. வேறுபட்டன என்னும் கருத்தில், "ஆகுபெயர் (இருபெயர் ஒட்டு தவிர) ஒரு மொழியில் வருவது என்பதும் அதற்கு மரபு உண்டு என்பதும், தொடர்புடையதற்கு ஆகி வருவது என்பதும் பெறப்படும். அன்மொழித் தொகை இரு மொழியில் வருவது என்பதும், குறிப்பிட்ட மரபு என்பதில்லை

என்பதும், பிறிதொன்றற்கு ஆகும்போது உடைமைத் தொடர்பு தவிரப் பிறிது யாதும் தொடர்பில்லை என்பதும் பெறப்படும்" எனத் தமது முடிபைக் கூறினார் க. வா. சச்சிதானந்தம். அவரது கட்டுரை 'ஆகுபெயரும் அன்மொழித் தொகையும்' (4).

சொற்றொடர்ப் புணர்ச்சி மூலம் சில சொற்களின் பழமையைக் காணவும் முயன்றுள்ளனர்.

''மரம்+ஐ>மரத்தை என வருதல் போல அழன்+ஐ> அழத்தை என வருதலின் அழன் என்பதன் வடிவம் அழம் என்பதாகலாம். அழன் என்பது சழன் என்பதன் பின்னைய வடிவம். கன்னியாகுமரி மாவட்டத்தில் பிணத்தைச் சழன் என்பர்.'' என 'அழன்' என்னும் கட்டுரையில் (2) பெ. சுயம்பு கூறுவர்.

''சங்கம்+காலம் > சங்கக் காலம் என வருதல் வேண்டும். இவ்விரு சொற்களையும் வடசொற்களாகக்கொண்டு சங்ககாலம் எனவரும் என்றனர். இதுதவறு. சங்கம் என்பது பேரெண்ணைக் குறிப்பது. தொல்காப்பியம் 32 இடங்களில் காலம் என்பதை ஆள்கிறது'' என்று கூறிச் சங்கம் என்பது பேரெண்ணைக் குறிக்கும் பழஞ்சொல் எனக் குறிப்பிடுவர் ஆபிரகாம் அருளப்பனார் தமது 'தொல்காப்பியம் புள்ளி மயங்கியல்' என்னும் கட்டுரையில் (36).

''ஈ என்னும் ஏவல்வினை ஈய் என்பதாகவும் அது ஈதலை நின்னிடத்தே கொள் என்னும் பொருளில் தன் வினையேவலாகியும், ஈதலைப் பிறர் கொளச் செய் என்னும் பொருளில் பிறவினையேவலாகியும் வரும்'' என்று 'ஈயென் ஏவல்' என்னும் கட்டுரையில் (10) இரா. மதிவாணன் கூறுகிறார்.

1982-இல் இடைச் சொற்கள் பற்றியும் சில கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

'வேற்றுமையுருபுகளும் சொல்லுருபுகளும்' என்னும் கட்டுரையில் (64) உருபுகளைப் பற்றிய ஆய்வு இல்லாமல் சொல்லுருபுகள் எவ்வெவ் வேற்றுமைக்கு எவையெவை வருகின்றன என்று உதாரணங்களுடன் முன்னோர் காட்டியவாறே காட்டினார் மு. முருகையன். எனினும் கட்டுரை முடிவு பெறவில்லையாதலின் அவர் ஆராய்ச்சி பற்றியறிய வாய்ப்பில்லை.

தொல்காப்பிய இடையியலிற் கூறப்படாதனவும் கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படுவனவுமான இடைச் சொற்களைத் திரட்டித் தந்துள்ளார் ஏ. ஆதித்தன்.

ஆ, ஆன், ஆயின், ஆகவே, ஆயில், ஆனால், என், எனின், ஏயும், ஏல், ஏனும், அங்கு, ஆங்கு, அது, ஆதி, ஆல், ஆன், ஐ, ஒரும், காண், காண்பாய், காறும், தான், தொறு, தோறு, வாளா, இஃதோ, இதோ, ஈதோ, ஈ, தான், எல், எழாய், ஐய, இன்ன, ஊங்கு, ஏர், ஒத்த, சேர்ந்த, நேர் — இவையாவும் அவர் தொகுத்த இடைச் சொற்கள். கட்டுரை கீழ்க்கணக்கில் புதிய இடைச்சொற்கள் (19).

சாரியை பற்றி, த.ஏ. ஞானமூர்த்தியும், பொன். கோதண்டராம னும் கட்டுரை எழுதியுள்ளனர்.

பெயர், வினை ஆகிய இரண்டும் உரிச்சொற்களோடு இடைச் சொற்கள் சேர்ந்து அமைந்த ஒட்டுச் சொற்கள் என்பதையும், சாரியை என்றதன் பொருள் வேறாக நின்ற இருமொழியும் தம்மில் சார்தற் பொருட்டு இயைந்து நின்றது என்னும் நச்சி னார்க்கினியர் கருத்தையும் பொருத்தமுறக் கூறிச் சாரியைகள் யாவும் பொருள் தருவனவே என்பதற்குச் சான்றுகள் காட்டிச் சாரியை பற்றிய கட்டுரையினை எழுதினார் முன்னவர் (22).

சாரியைகள் கட்டாயச் சாரியை என்றும், விருப்பச் சாரியை என்றும் இருவகையில் அடங்கும் என்று ஒரு புதிய கருத்தை வெளிப்படுத்தியவர் பின்னவர் (23). அத்து என்பது கட்டாயச் சாரியை. இது வந்தேயாக வேண்டிய இடத்தில் வருவது. மரம் + ஐ என்பன மரமை என வருவதில்லை. இங்கு சாரியை வந்தேயாக வேண்டும். அவ்வாறு வருவது அத்து. மரம் + ஐ > மரத்தை என வருவதைக் காணலாம். இன் என்பது விருப்பச்சாரியை ஊர் + ஐ > ஊரை எனவும், ஊரினை என வும் வரும். இதில் இன் வந்தமையும் வாராமையும் காண்க. வேண்டும் என விரும்பி அமைக்கப்படுதலின் விருப்பச் சாரியை யாயிற்று. இவர் விளக்கம் பாராட்டுக்குரியது. ஆனால் இவர் மரத்துக்கிளை என்பதில் அத்து ஆறாம் வேற்றுமையென்றும், குன்றத்திருந்தான் என்பதில் அத்து ஏழாம் வேற்றுமை என்றும் கொள்ளலாமா என ஓர் வினா எழுப்பினார். மரத்தினது, குன்றத்துக்கண் என அத்துச் சாரியையின் பின்னர் ஆறன் உருபும் ஏழன் உருபும் விரிக்கப்படுதலின் அத்து சாரியையாமே தவிர உருபாகாது.

தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடங்களுக்கும் வரும் 'இகும்' என்னும் இடைச்சொல்லை, இ+க்+உம் எனப் பிரித்து 'இ' என்பது முன்னிலையையும், 'க்' என்பது இறந்த அல்லது எதிர்காலத்தையும் 'உம்' என்பது பன்மையையும் உணர்த்தும் என்று கொண்டு, எனவே மூன்று பொருள் நிறைந்த

சொற்களின் கூட்டுவடிவமே 'இகும்' என்பதாம் என்று ஆய்வு செய்தவர் சுபாஷ் சந்திர போஸ். 'க்' என்பது புக்கு என்பதில் இறந்த காலமும், காண்கம் (அகம் 261) என்பதில் எதிர்கால மும் காட்டுகிறது. எனவே 'இகும்' என்பதன் ககர ஒற்றும் கண்டிகும் — கண்டேம் (நற். 20) என இறந்த காலமும், கண்டிகும் — காண்பேம் (ஐங். 198) என எதிர்காலமும் காட்டு கிறது என உதாரணங்கள் தந்து கட்டுரையைச் சிறப்பாக அமைத்துள்ளார் (5).

'அந்தை' என்பது தந்தை முறைப்பெயர். தம் + அந்தை > தந்தை என வருகிறது. அச்சொல் இரக்கக் குறிப்பில் 'அந்தோ' என வரும். அப்பன் — அப்பா, ஐயன் — ஐயோ, அச்சன் — அச்சோ, அம்மை — அம்மா, அம்மாடி என வருதல்போல அந்தை என்பது இக்காலத்தில் அந்தோ என வருகிறது. இதைத்தான் தொல்காப்பியர் ''அந்தீற்று ஓவும்'' (சொல். இடை. 34) என் றார். இவ்வாறு கருத்துக் கூறியவர் இரா. இளங்குமரன். கட்டுரை அந்தோ என்பது (1 அ).

உரிச்சொற்கள் யாவும் பெயர் வினைச் சொற்களின் மூலங்கள் என்பர். சிலவுரிச் சொற்கள் பெயர்களாகவும் சில உரிச் சொற்கள் வினைகளாகவும் உள்ளன. தொல்காப்பியர் உரிச் சொற்களின் பொருள்களை யுணர்த்த வேண்டி உரியியல் ஒன்றமைத்தார். உரிச்சொற்களுள் ஒன்று ஒரு பொருள் குறித்து வருவனவும், ஒன்று பலபொருள் குறித்து வருவனவும், பலவுரிச் சொற்கள் ஒரே பொருளைக் குறித்து வருவனவும் என மூன்று வகை கூறப்படுகின்றது தொல்காப்பியத்தில். ஒன்று பல பொருள் குறிப்பதற்குக் காரணம் என்ன என்பதை ஆதித்தன் பின்வருமாறு கூறுவர். கிளைமொழிகளின் தொடர்பால் ஓர் உரிச்சொல் பலபொருள் தருவதாயிற்று. அதனால் உரிச்சொற் களைத் திசைமொழி வழக்கினால் ஏற்பட்ட பல பொருளைத் தரும் ஓர் உருவ வடிவங்கள் என்று கொள்வதே சிறப்புடைய தாகும் என்பது அவர் கருத்தின் முடிபாகும் (13).

## 4. பொருள்

''புறப்பொருளைப் பற்றி முதல்முதலில் நடந்த ஆய்வாக நமக்குக் கிடைப்பது 1912-13-இல் 'தொல்காப்பியப் பொருளதி கார ஆராய்ச்சி' என்ற தலைப்பில் செந்தமிழ் இதழில் வெளி வந்த வே முத்துசுவாமி ஐயரவர்களின் கட்டுரையாகும்'' என்று தொடங்கி வெள்ளை வாரணனார், சுப. மாணிக்கனார், சி. பாலசுப்பிரமணியன், இராம. இராமநாதன், கு. மோகன

ராசு முதலியோர் அவ்வப்போது வெட்சி முதலிய பொருள் பற்றி எழுதிய கட்டுரைகளின் விவரக் குறிப்புகள் காலவரிசை யில் எழுதப்பட்டுள்ள கட்டுரை 'புறப்பொருள் இலக்கண ஆய்வு வரலாறு' என்பது. இது கு. காமேசுவரி என்பவரால் எழுதப் பட்டது.

'தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் இயலமைப்பு' என் னும் தலைப்பில் எழுதிய கட்டுரையில் (34) பொருளதிகாரத் தின் ஒன்பது இயல்களும் அமைக்கப்பட்ட வரிசை முறையினை உரையாசிரியர்களும், வெள்ளை வாரணனார் போல்வாரும் கூறிய கருத்துக்களைக் கூறித் தமது கருத்தையும் கூறுகிறார் சோ. ந. கந்தசாமி.

இரா. குமாரசுவாமி என்பவரால் எழுதப்பட்டு உலகத் தமி ழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்படும் 'தமிழியல்' என் னும் இதழில் (1982 டிசம்பர்) வெளிவந்த 'பாடாண்திணை ஒரு மூலிகை மருந்தறிவியல் ஆய்வு' என்னும் கட்டுரையில் (54) பாடாண்திணைப் பெயர்க்காரணம் சிறப்பாக விளக்கப் பட்டுள்ளது. அதில் "வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை என்பன மருந்தாகப் பயன்படும் மூலிகைகள். அவற்றால் வெட்சித்திணை முதலியவற்றுக்குப் பெயர் அமைந்தமை போலவே பாடாண்திணை என்பதன் பெயரும் ஒரு மூலிகையால் அமைந்த பெயரேயாம். அம்மூலிகை ஆண் என்னும் மரமாகும். தொல்காப்பியத்தில் ஆண் மரம் கூறப்பட்டுள்ளது. அது தொல்காப்பியர் காலத்துக்குப் பின்னர் 'அழிஞ்சில்' மரமாகவும், சங்க காலத்தில் 'ஓமை' மரமாகவும் வழங்கப்பட்டது. ஆண் மரம் ஒரு மூலிகை மரம்". என்னும் விவரம் காணலாம்.

'வைகறை விடியல் மருதம்—ஓர் அனைத்திந்திய இலக்கிய மரபு' என்னும் கட்டுரை (65) த. சு. குப்புசாமி என்பவரால் எழுதப்பட்டது. தொல்காப்பியர் ஊடல் உரிப் பொருளதாகிய மருதத்துக்கு வைகறையும் விடியலும் சிறுபொழுதுகளாகக் கூறிய சிறப்பை வடஇந்தியமொழிகளின் நூல்களிலிருந்து சான்றுகாட்டி விளக்கப்பட்டுள்ளது. இரவு முழுவதும் வராமலிருக்கும் கணவன் வரவை எதிர்நோக்கிய காதலி விடியலில் ஊடல் கொண்ட வளாய்த் தோழியிடம் கூறும் செய்திகளைச் சுட்டிக்காட்டித் தொல்காப்பியரின் இலக்கணவரம்பு பிற இந்திய மொழிகளுக்கும் பொருந்தும் என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. இக்கட்டு ரைக்குத் திருச்சித் தமிழகப் புலவர் குழு 15-5-83-இல் பரிசு வழங்கிச் சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது.

இயற்கைப் புணர்ச்சிப் பின்னர்த் தலைவனும், தலைவியும் பகலினும், இரவினும் குறியிடம் கொண்டு கூடுமிடத்து அவ் விடங்கள் யாவை என்பதை இறையனார் களவியல் ''இரவுக் குறியே இல்வரை யிகவாது'' (கள. 19), ''பகற்குறிதானே இகப்பினும் வரையார்'' (கள. 20) என்ற சூத்திரங்களால் கூறு கின்றது. இவற்றுக்கு உரை எழுதிய நக்கீரர், ''இரவுக்குறியிடம் வீட்டின் எல்லையைக் கடவாது என்றும், அதனால் பகற்குறி யிடம் வீட்டெல்லையைக் கடக்கும் என்றும் முதற்சூத்திரத் திற்கும், இகத்தல் என்பதற்கு ஒன்றைக் கடத்தல்—ஒன்றற்குமேற் பலவாதல் என்ற பொருள் கொண்டு, 'பகற்குறி (வீட்டின் எல்லையைக் கடந்து) ஓரிடம் இன்றிப் பலவிடங்களில் அதாவது ஒவ்வொருநாளும் ஒவ்வோரிடத்தில் ஆகும்'' என இரண்டாம் சூத்திரத்துக்கும் பொருள் கூறினர். ஆர். ஆளவந்தார் அவர்கள், நக்கீரர் இரண்டு சூத்திரங்களுக்கும் இருந்தவாறே பொருள் கொண்டு, பகற்குறியிடம் பலவாதலை இரண்டாம் சூத்திரத்தின் இலேசானே பெற வைத்திருக்கலாம் என்று 'இல்வரை யிகத்தல்' என்னும் கட்டுரையில் (7) கூறினர். இதுபொருந்துவதே.

களவு, கற்பு, ஒழுக்கம் பற்றிய அகப்பாடல்களில் கூற்று நிகழ்த்துதற்குரியவர்களாகப் பன்னிருவரை வரையறை செய்து அவருள், தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி, பார்ப்பான் ஆகிய அறுவரும் களவு, கற்பு ஆகிய இரண்டு கைகோள்களிலும் கூற்று நிகழ்த்துதற்கு உரியர் என்றும்,(தொல். செய். 187, 188) பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய அறுவரும் கற்பில் கூற்று நிகழ்த்துதற்குரியர் (தொல். செய். 188) என்றும் தொல்காப்பியர் கூறினர். எனினும் அவரே ஆங்காங்குக் கூறியுள்ள செய்திகளின்படி பாடினி, இளையர், விருந்தினர் என்னும் மூவர் வாயில்களும், காமக் கிழத்தியர், நற்றாய் ஆகியோரும் கூற்று நிகழ்த்துதலின் அவ்வை வரையும் சேர்க்கக் கூற்று நிகழ்த்துவோர் பதினெழுவர் எனக் கொள்ளலாம் எனக் கருத்துக் கூறினர், வீ. இராசமாணிக்கம் தமது 'கூற்று மொழிகள்' என்னும் கட்டுரையில்(21).

உள்ளுறை, இறைச்சி என்பன பற்றிய கருத்துகள் இதுவரை யும் ஒரு முடிபுக்கும் கொண்டு வரப்படவில்லை.

''உள்ளுறை உவமையின் பாற்படுமாகலின் 'உள்ளுறை யுவமம்' என்றும், இறைச்சி பாடல் உணர்த்தும் குறிப்புப் பொருளின்பாற்படுமாகலின் 'இறைச்சிப் பொருள்' என்றும் வழங்குவதால் இரண்டும் இருவேறுபட்டவைஎன்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இறைச்சி குறிப்புப் பொருள் உணர்த்துமேனும்

சிறப்பாகக் கற்பார் உள்ளத்தே அவல உணர்வினைத் தோற்று வித்தலாகும். இவ்வுணர்வு உள்ளத்தில் ஏற்படச் செய்யும் இறைச்சியே சிறந்ததாகக் கருதப்படும்''—இவ்வாறு இறைச்சிப் பொருள் என்னும் தலைப்பில் (9) இராம. இளங்கோ கூறினார்.

வீரங்காட்டி இறந்தவனின் உருவத்தைப் பொறித்த கல்லை நட்டு அதற்குச் சிறப்புச் செய்து பலிப்பொருள் முதலியன படைப் பதைப் பெரும்படை என்பர்.

போரில் இறந்த அரசர்க்குக் கல்லெடுத்துக் கோயில் அமைப் பதைப் பெரும்படைஎன்றும், அது கல்வெட்டுகளில் பள்ளிப்படை என வருகிறது என்றும் மயிலை-சீனி-வேங்கடசாமி கூறுவர். அதை மறுத்துப் பெரும்படை வேறு பள்ளிப்படை வேறு என வலியுறுத்துவது வெ. கேசவராஜ் எழுதிய 'பெரும்படை' (58).

## 5. யாப்பு

அ. பிச்சை என்பார் 'தொல்காப்பியரின் யாப்படிக் கொள்கை' என்னும் கட்டுரையில் (47) பின்வருமாறு கூறுவர்.

''தொல்காப்பியர் கூறிய எழுத்து வகையடிகளைக் கட்டளையடி எனக் கூறுதல் பொருந்தாது; ஏன் எனின் குறளடி நான்கு அல்லது ஐந்து ஆறு எழுத்துகளால் அமையும் என ஆசிரியர் எழுத்தை இத்துணை எனக் குறிப்பிடாமல் நெகிழ் வாகக் கூறியுள்ளார். கட்டளை என்பது வரையறைப்பட்டது. அதனால் எழுத்து வகையடி என்பதே பொருந்தும். சீர்வகை யடியை விட எழுத்து வகையடியே முதலில் விளக்கமுற்றிருந்தது என்பதும் பொருந்தாது."

யாப்பிலக்கணத்தில் கூறப்படும் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் அசைகள் முறையே 1, 2, 3, 4, அலகுகள் பெறும் எனத் தொல்காப்பியர் கூறியிருப்பது பற்றிப் பிற்கால இலக்கண நூலார் ஒத்தும் வேறுபட்டும் கொண்ட கருத்துகளைத் தொகுத்தும், தமிழ் நேர்பு நிரைபுகளை வடமொழி லகு, குரு வுடன் ஒப்பிட்டுக் கூறுவதைக் காரணம் காட்டி மறுத்தும் எழுதப்பட்ட கட்டுரை 'யாப்பில் அலகு' (60) என்பது. அது முடிவு பெறாக் கட்டுரை. கட்டுரையாளர் சி. மெய்கண்டான்.

செய்யுள் உறுப்புகளுள் நோக்கு என்பதும் ஓர் உறுப்பு. நோக்கு பற்றி இளம்பூரணரும் பேராசிரியரும் கூறிய கருத்து களை ஆய்ந்து தமது கருத்தைக் கூற வந்த 'நோக்கு' என்னும் கட்டுரை (51) நிறைவுறாமல் நின்றது. அதனால் அக்கட்டுரை யாளர் சி. பாலசுப்பிரமணியன் கருத்தைத் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய வண்ணத் தியல்பு என்னும் நூலையும் அதனடியொற்றி இயற்றப் பெற்ற குமாரபூபதீயம் என்னும் வண்ணப்பா யாப்பு நூலையும் ஒப்பிட்டு எழுத்தும், சந்தமும் பற்றி விளக்கும் கட்டுரை கு மோகனராசு எழுதிய 'வண்ணப்பா யாப்பில் எழுத்தும் சந்தமும்' என்பதாம் (62).

"பாட்டியல் இலக்கணம் கூறும் நவமணிமாலை என்பதே பாரதியாரின் பாரதமாதா நவமணி மாலை. நவமணிமாலை என்பதற்கு,

பாவே இனமே என்றிவை யிரண்டு
மேவிய வகையது நவமணி மாலை (பன்னிருபாட்டியல் நூற்பா. 182.)

என்ற அளவில் பாவகை கூறப்பட்டதேயன்றிப் பாடுபொருள் வகை கூறப்படவில்லை. பாரதியார் நீலம் முதல் வைடூரியம் வரை ஒன்பது மணிகள் பெயரமைத்துப் பாடியிருத்தலின், 'நவமணி மாலையாவது நவமணிகளின் பெயரை அமைத்துப் பாடுவது எனக் கொள்ளலாம்." —இவ்வாறு அரங்க - நலங்கிள்ளி என்பார் 'பாரதி இலக்கியமும் பாட்டியல் இலக்கணமும்' என்னும் கட்டுரையில் (55) கூறியது மிகச் சிறப்புடையது. அவர் ஆத்திசூடி பற்றி எழுதிய கருத்தில் மாற்றம் உண்டு. நான்மணி மாலைக்குப் பட்டினத்தார் பாடிய நான்மணி மாலையும், பாரதி பாடிய விநாயகர் நான்மணி மாலையுமே கிடைக்கின்றன என்றதும் தவறு. சிவப்பிரகாசர் பாடிய நால்வர் நான்மணி மாலையும் உண்டு.

தொல்காப்பியத்தில் கூறப்பட்ட 'நூல்' இலக்கணம் பற்றி அன்னி மிருதுல குமாரி தாமசு கூறுவது வருமாறு: (31)

"தொல்காப்பியத்தில் செய்யுளியலிலும் இறுதி மரபியலிலும் நூல் பற்றிய இலக்கணங்கள் தரப்படுகின்றன. ஒரே இடத்தில் இன்றி ஈரிடங்களில் தரப்படுவதற்கு அமைதி தேவை. செய்யுளியல் நூலை உருவாக்கும் செய்யுள் பற்றியும் பொதுக் கருத்து வரையறை பற்றியும் கூற, மரபியல் நூற் பொருள் மரபு பற்றியும் சிறப்பிலக்கண வரையறை பற்றியும் கூறுகின்றது. என்றாலும் இரண்டியல்களில் கூறுதற்கு வேறு சிறந்த காரணம் இருத்தல் வேண்டும். அது, செய்யுளியலிற் கூறப்படும் நூல் இலக்கணம் முதல் நூலுக்குரியது; மரபியலிற் கூறப்படும் இலக்கணம் வழிநூலுக்குரியது என்பதேயாம். வழிநூல் நான்கு வகையில் அமையும். தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்து அதர்ப்படயாத்தல் என்பன அவை. முதல்

நூலைத் தொகுத்தாலும் விரித்தாலும் தொகை விரியாக்கினாலும் தவறு நேராது. ஆனால் மொழிபெயர்க்கும் போது அந்நூலின் நெறி பிறழாமல் யாக்கும்போது தான் குன்றக் கூறல் முதலிய குற்றம் நேரும். அவை போக்கிச் சுருங்கச் சொல்லல் முதலிய அழகுடன் நுதலியறிதல் முதலிய உத்திகளுடன் யாத்தல் இன்றியமையாதது. எனவே மரபியலிற் கூறப்பட்ட கருத்துகள் வழிநூலுக்குரியன என்னலாம்''—இஃதோர் சிறந்த கருத்து.

## 6. அணி

பழ. முத்தப்பன் என்பார் 'எடுத்துக்காட்டுவமை' என்னும் தலைப்பில், எடுத்துக்காட்டுவமை என்பது தொகையுவமை என்றும், எடுத்துக்காட்டுவமை வேறு தொகையுவமை வேறு என்றும் கூறுவார் கருத்துகளைத் தொகுத்துத் தம் கருத்தினை எழுதி முடித்த கட்டுரை, முழுதும் அச்சுக்கு வராமல் பாதியுடன் நின்றது (15) எனினும் அவர் நேரிற் கூறிய கருத்தாவது மறுபொருளுவமையும் எடுத்துக்காட்டுவமையும் ஒன்றே என்பதாகும். பிற அணிநூல்களின் துணை கொண்டு கூறினார். மறுபொருளுவமையில் உவம உருபு உண்டு. எடுத்துக்காட்டுவமையில் உவம உருபு இல்லை. இவ்வேறுபாட்டைத் தள்ளிவிடற்கில்லை.

தொகையுவமை என்பது உவம உருபு தொக வருவது; பவள வாய் என்பது போல. எடுத்துக்காட்டுவமை என்பது முன்னர் ஒரு கருத்துக்கூறி அது நிறுவுவதற்கு ஓர் உதாரணம் தந்து உவம உருபு இல்லாமல் முடிப்பது. 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்பது சொல்ல வந்த கருத்து. அதற்கு உதாரணம் 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்பது. இதில் உவம உருபு இல்லை இப்படிக் கொள்ளலாம் என்பது என் கருத்து.

திருக்குறளில் பரிமேலழகரின் உவமையணி ஆட்சிச் சிறப்புப் பற்றி டி. சீனிவாச வரதன் விவரித்துள்ளார் (53).

மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே

என்னும் தொல்காப்பியப் புறத்திணையியல் நான்காம் சூத்திரத்தில் உள்ள குடிநிலை என்பதை நச்சினார்க்கினியர் துடிநிலை எனவும் சோமசுந்தர பாரதியார் கொடிநிலை எனவும் பாடம் கொண்டனர். சோதிபாய் தேவராசு என்பார் துடிநிலை என்னும் பாடமே சிறக்கும் என்பதற்குத் தக்க சான்றுகள் காட்டி நிறுவ முயன்றும் கட்டுரை முடியவில்லையாதலின் அவர் கருத்தின்

முடிவை அறியக்கூடவில்லை. அவர் கட்டுரை 'குடிநிலை துடி நிலை கொடி நிலை— ஓர் ஆய்வு' என்பதாம் (20).

சு. அழகேசன் எழுதிய 'தொல்காப்பியமும் மரபும்' என்னும் கட்டுரையில் (41) தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள், செய்யுள், உலகியல், நூல் என்னும் அறுவகை மரபுகளை உணர்த்துகின்றது என்று விளக்கம் தரப்படுகின்றது. ஆனால் "தொல்காப்பியம் மரபுயாதுஎன நூலினுள் யாங்கணும்சுட்டாத போதிலும்" என்று முதலில் அவர் குறிப்பிடுவது தவறு. "மாற் றருஞ் சிறப்பின் மரபு" என மரபியல் முதற் சூத்திரத்தில் மரபு என்பது இடையில் ஒருவரால் மாற்ற முடியாதது" என்று குறித் துள்ளமை காணலாம். "தொல்காப்பியர், மரபு தானே மாறு தற்கும் உரியதே என்ற எண்ணத்தில் சில மாற்றங்கள் செய்துள் ளார்" எனக் கூறும் அவர், "மரபு உலகியற்கு அப்பாற்பட்டுக் கால மாற்றத்தால் இலக்கணவுலகில் காணப்படும் அனைத்து மாற்றங்களையும் ஏற்க வேண்டும் எனப் புறனடைகள் மூலம் அறிவுறுத்தித்தான் ஒரு சிறந்த இலக்கண ஆசிரியர் என்பதைப் பறை சாற்றுகின்றார்" என முடித்திருப்பது மிகப்பொருந்தும்.*

நா. செயராமன் என்பார் 'தொல்காப்பிய மரபியல்' என்னும் கட்டுரையில் (38) "நூன் மரபு, மொழி மரபு முதலியன இலக்கண மரபுகளை யுணர்த்த மரபியல் உலகியல் மரபுகளையே உணர்த்துகின்றது என்று கூறி மரபியல் பொருட்சுருக்கத்துடன் கட்டுரையை முடித்துள்ளார்.

"உத்தி எனப்படுவது முதல் நூற்பொருளின் உரை விளக் கத்தை, உலக வழக்கோடும், செய்யுள் வழக்கோடும் பொருந்தும் வகையில் திட்பமாகத் திறனுறப் புரிந்து கொள்வதற்குத் துணை யாக ஆசிரியர் ஒருவரோ பலரோ கண்ட கருவியாகும்" என உத்தி என்பதற்கு விளக்கம் கூறி முப்பத்திரண்டு உத்திகளும் தொல்காப்பியத்தில் ஆளப்பட்டவற்றைத் தெரிவித்துத் 'தொல் காப்பிய உத்திகள்' என்னும் கட்டுரை எழுதியவர் ஆபிரகாம் அருளப்பன் (26).

அம்முப்பத்திரண்டு உத்திகளின் பெயர்ப்பட்டியல் கூற வந்த தொல்காப்பியர் 'ஒத்த காட்சி உத்தி வகை விரிப்பின்' (மரபியல் 111) என்று உத்திகளுக்கு விரி முப்பத்திரண்டு என்றவர் வகை எத்தனை எனக் கூறவில்லை. அவை ஒரு நூலில் காணப்படும்

* இக்கருத்துத் 'தொல்காப்பிய மரபியல்கள் என்னும் கட்டுரையில் (ஆய்வுக்கோவை தொகுதி 2, 1980) விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

அம்முப்பத்திரண்டு உத்திகளுள் சில நூலாசிரியனால் நூலில் அமைக்கப்படுவன, சில உரையாசிரியனால் சேர்த்துக் கூறப்படுவன, சில நூலாசிரியன் அமைக்க உரையாசிரியனால் விளக்கப்படுவன எனக் கூறி அம்மூன்றனுள் முப்பத்திரண்டும் அடங்குமாற்றை 'உத்தி வகை' என்னும் கட்டுரையில் (12) தெரிவித்தவர் ஆ. சிவலிங்கனார்.

## 7. பிற

'தொல்காப்பியத்தில் வழக்கும் செய்யுளும்' என்னும் கட்டுரை (30) மெ. சுந்தரம் அவர்களால் எழுதப்பட்டது. 'வழக்கில் உள்ளது செய்யுளில் மாறுபடும்போது, ஒலிப்பு நிலையில் குறில் நெடிலாகவும் (அவ்விரு—ஆயிரு), நெடில் குறிலாகவும் (இறா—இற), ஒன்று மற்றொன்றாக ஒலி மாறியும் (உப்பின்றி—உப்பின்று), கிளவி நிலையில் மொழி மாற்று நிலையாக மாறியும் (பொன்—பொலம், வேட்கை+அவா→வேணவா), தொடர் நிலையில் இனச்சுட்டில்லாப் பண்புகொள்பெயர் (செஞ்ஞாயிறு) போலும் வகையாகவும் மாறும்' என்பதை விளக்கியவரின் கட்டுரை முடிவு பெறவில்லை.

தொல்காப்பிய உரையாசிரியர்கள் பற்றிய குறிப்புகளைத் 'தொல்காப்பிய உரையாசிரியர்கள்' என்னும் தலைப்பில் கு. சுந்தரமூர்த்தி எழுதினார் (28).

தொல்காப்பிய உரையாசிரியர்கள் தம் முன்னோர் எழுதியவுரையினைப் பின்பற்றியும், மறுத்துத் தம் கருத்தை நிலைநாட்டியும் சென்றுள்ளனர். தாங்காட்டும் உதாரணங்களை மூன்று வகையில் காட்டினர். முன்னோர்காட்டியதை அப்படியே காட்டுவது, சற்றுத் திரித்துக் காட்டுவது, வேறு உதாரணம் காட்டுவது என்பன அவை. உதாரணங்களுடன் அவற்றை விவரித்து, உரையாசிரியர்கள் தத்தம் காலச் சூழல் சமூகவியல்களுக்கேற்பவும் எழுதினர் என்பதையும் விவரித்தார் 'எடுத்துக் காட்டுகளில் உரையாசிரியர்' என்னும் கட்டுரையில் (14) சா. கிருட்டிணமூர்த்தி.

தொல்காப்பியச் சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரைகளேயன்றித் தற்காலவுரையாளர் கூறும் புத்துரைகள் பற்றி விவரித்தார் ஆ சிவலிங்கனார், தொல்காப்பிய நூற்பாக்களுக்குப் புத்துரை' என்னும் கட்டுரையில் (32). சூத்திரங்களே மாறியிருக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது அக்கட்டுரை.

தொல்காப்பியர் காலத்து மொழிநூல் வல்லார் இருந்தனர் என்றும் (இரா. பாலகிருஷ்ணன் 43), தொல்காப்பியத்தில் வரலாற்று மொழியியற் கூறுகள் உண்மை எத்தையது என்றும் (சி.சுப்பிரமணியன் 37), இருவர்கூற, சி. சக்திவேல் என்பார் தொல்காப்பியம்-ஒரு மொழியியற் பார்வை, என்னும் கட்டுரையில் (33) தொல்காப்பியம் மொழியியலுக்கு எவ்வாறு துணை செய்கிறது என்பதை விவரித்தார்.

தொல்காப்பியச் சமூகவியலை விவரித்தார் சொ.சிங்காரவேலன் (39). வே. சண்முகநாதன் என்பார், "உயிரினங்களில் மனம் எனும் உணர் பொறி உடைமையாற் சிறந்து, மொழியாலும் உழைப்பாலும் பிற உயிரினங்களினின்று வேறுபட்டு விளங்கித் தோன்றிப் பெயராலும், வினையாலும், குணத்தாலும், ஆண்மை பெண்மையுணர்த்தி, மேலோங்கித் தோன்றும் காமம் எனும் இன் உணர்வுக்கு நிலைக்களனாகி, உயர் ஒழுக்கம் பேணும் ஆறறிவுயிராகிய ஆண் அல்லது பெண் "மனிதம்" என்னும் முடிப்புரையோடு 'தொல்காப்பியம் உணர்த்தும் மனிதக் கோட்பாடு' என்னும் கட்டுரையை நிறைவு செய்தார் 35).

சி. கதிர்வேல் என்பார் "நன்னூலில் கூறப்பட்ட பதவியல் என்பது வடமொழி நோக்கியதன்று; தொல்காப்பியர் ஆங்காங்கே கூறிச்சென்றதைத் தொகுத்து ஒழுங்குபடுத்திக் கூறப்பட்டதேயாகும்" என்று 'தொல்காப்பியரும் நன்னூற் பதவியலும்' என்னும் கட்டுரையில் விவரித்துள்ளார் (48).

தண்டியலங்காரப் பொதுவணியியலிற் காணப்படும் கருத்துகள் சிலவற்றுக்குத் தொல்காப்பியத்தில் உள்ள மூலங்களைச் சுட்டிக்காட்டுகிறார் செ.ப.சுருளிவேல். தண்டியலங்காரம் கூறும் செறிவுக்குத் தொல்காப்பியத்தின் வல்லிசை வண்ணமும் (செய்யுளியல் 208), தெளிவுக்குப் புலனும் (செய். 33), சமநிலைக்குப் பாஅவண்ணமும் (செய். 206), இன்பத்துக்குத் தோலும் (செய். 230), ஒழுகிசைக்கு ஒழுகுவண்ணமும் (செய். 218), உதாரம் என்பதற்கு உள்ளுறையும் (அகத். 51) மூலங்களாகும் என்பது 'தண்டியலங்காரப் பொதுவணியியலும் தொல்காப்பியமும்' என்னும் அவரது கட்டுரையின் (24) கருத்தாகும்.

'அக இலக்கண ஆய்வு வரலாறு' பற்றி (1) ந.லலிதா அவர்களும், 'வீரசோழியமும் வடமொழி இலக்கணங்களும்' என்பது பற்றி (63) கு.மீனாட்சி அவர்களும், 'தாயுமான சுவாமி பாடல்களில் சொற்றொடர் அமைப்பு பற்றி(25) சி.சுப்பிரமணியபிள்ளை அவர்களும் கட்டுரைகள் வரைந்துள்ளனர். ம.ரா. பூபதி

என்பார் கம்பன் காவியத்தில் கம்பன் கனிச்சீர்களை ஆண்டுள்ள விவரம்குறித்துக் 'கம்பன் கைப்பட்டகனிகள்' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார். சிலர் ஆங்கிலத்திலும் இலக்கணக் கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

பொதுவாக 1982-இல் வெளிவந்துள்ள இலக்கணக் கட்டுரை களைப் பார்க்கும்போது சில கட்டுரைகள் பழைய கருத்து களையே கூறுவனவாக இருந்தாலும் பெரும்பாலன சிறந்த ஆய்வு களாகவே காணப்படுதலையறியலாம். தொல்காப்பியக் கருத்துகள்தாம் பிற்கால இலக்கண நூல்களிலும் வடமொழி யிலக்கண நூல்களிலும் காணப்படுகின்றன என்னும் கருத்துப் பெருக வருவதையும் காணலாம். வடமொழிக்கு மூலமே தமிழ் தான் என்னும் கருத்து உறுதிப்படினும் வியப்பதற்கில்லை.

# இணைப்பு-1

## 1982-இல் வெளிவந்துள்ள இலக்கணக் கட்டுரைகள்.

இ. ப. த. ம. க. ஆய்வு : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு ஆய்வுக்கோவைத் தொகுதி.

செ. செ : செந்தமிழ்ச் செல்வி.

த. பொ : தமிழ்ப் பொழில்

த. ப. க. : தமிழ்ப் பல்கலைக் கழகக் கருத்தரங்கு மலர்.

| என் | கட்டுரை | ஆசிரியர் | வெளியீடு | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. | அக இலக்கண ஆய்வுகள் | ந. லலிதா | இ. ப. த. ம. க. ஆய்வு 1 | 559-563 |
| 1(அ) | அந்தோ | இரா. இளங்குமரன் | செ. செ. சிலம் 57 பரல் 1 | 8-10 |
| 2. | அழன் | பெ. சுயம்பு | த. பொ. துணர் 56 மலர் 4 | 175-179 |
| 3. | அறிஞரைமயக்கிய ஐகார ஔகரம் | ச. பாலசுந்தரம் | த. பொ. துணர் 56 மலர் 3 | 122-135 |
| 4. | ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் | க. வா. சச்சிதானந்தம் | இ. ப. த. ம. க. ஆய்வு 4 | 68-72 |
| 5. | இகும் என்னும் இடைச்சொல் | சுபாஷ் சந்திரபோசு | ஷ | 107-111 |
| 6. | இணை வினாவும் தேற்ற வினாவும் | எம்.எஸ்.சரோசினிபாய் | ஷ ஆய்வு 2 | 106-110 |
| 7. | இல்வரையிகத்தல் | ஆர். ஆளவந்தார் | ஷ ஆய்வு 1 | 35-40 |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | இறுதிநிலை மெய்ம்மயக்கம் | ம. அய்யாச்சாமி | ஷை ஆய்வு 4 | 7-12 |
| 9. | இறைச்சிப் பொருள் | இராம இளங்கோ | ஷை | 40-44 |
| 10. | ஈ என் ஏவல் | இரா. மதிவாணன் | செ. செ. சிலம்பு 56 பரல் 7 | 231-234 |
| 11. | உடம்படுமெய் | வெ. இசக்கிமுத்து | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 25-29 |
| 12. | உத்திவகை | ஆ. சிவலிங்கனார் | ஷை | 91-95 |
| 13. | உரிச்சொல்லும் பல பொருள் ஒரு சொல்லும் | முனைவர் ஆதித்தன் | த. பொ. துணர் 56 மலர் 68 | 224-226 |
| 14. | எடுத்துக்காட்டுகளில் உரையாசிரியர் | சா. கிருட்டிணமூர்த்தி | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 45-50 |
| 15. | எடுத்துக் காட்டுவமை | பழ. முத்தப்பன் | ஷை ஆய்வு 2 | 236-241 |
| 16. | எது எழுத்து ? | ச. பாலசுந்தரம் | த. பொ. துணர் 56 மலர் 5 | 210-214 |
| 17. | எழுத்தியல்-பாணினீயம் தொல்காப்பியம் | சி. சுப்பிரமணியன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 181-186 |
| 18. | கம்பன் கைப்பட்ட கனிகள் | ம. ரா. பூபதி | ஷை ஆய்வு 2 | 219-224 |
| 19. | கீழ்க்கணக்கில் புதிய இடைச்சொற்கள் | ஏ. ஆதித்தன் | த. பொ. துணர் 56 மலர் 3 | 112-116 |
| 20. | குடிநிலை, துடிநிலை, கொடிநிலை | சோதிபாய் தேவராசு | இ.ப.த.ம.க.ஆய்வு 1 | 276-280 |
| 21. | கூற்று மொழிகள் | வி. இராசமாணிக்கம் | ஷை ஆய்வு 4 | 34-39 |
| 22. | சாரியை | த. ஏ. ஞானமூர்த்தி | ஷை | 129-134 |
| 23. | சாரியைக் கோட்பாடு | பொன்.கோதண்டராமன் | ஷை ஆய்வு 2 | 79-84 |
| 24. | தண்டியலங்காரப் பொதுவணியியலும் தொல்காப்பியமும் | செ. ப. சுருளிவேல் | ஷை ஆய்வு 4 | 112-117 |

| எண் | கட்டுரை | ஆசிரியர் | வெளியீடு | பக்கம் |
|---|---|---|---|---|
| 25. | தாயுமான சுவாமி பாடல்களில் சொற்றொடரமைப்பு | சி. சுப்பிரமணியபிள்ளை | ஷெ ஆய்வு 2 | 153-158 |
| 26. | தொல்காப்பிய உத்திகள் | ஆபிரகாம் அருளப்பன் | த. ப. க. | |
| 27. | தொல்காப்பியத்தில் உயிரளபெடை ஆட்சி | ஆ. சிவலிங்கனார் | செ. செ. சிலம்பு 56 பரல் 8 | 385-390 |
| 28. | தொல்காப்பிய உரையாசிரியர்கள் | கு. சுந்தரமூர்த்தி | த. ப. க. | ... |
| 29. | தொல்காப்பியத்தில் சுட்டு | சு. மகாலட்சுமி | இ.ப.த.ம.க. ஆய்வு | 155-160 |
| 30. | தொல்காப்பியத்தில் வழக்கும் செய்யுளும் | மெ. சுந்தரம் | ஷெ | 101-106 |
| 31. | தொல்காப்பியத்தின் நூல் | அன்னி மிருதுல குமாரி தாமசு | ஷெ | 19-24 |
| 32. | தொல்காப்பிய நூற்பாக்களுக்குப் புத்துரை | ஆ. சிவலிங்கனார் | த. ப. க. | ... |
| 33. | தொல்காப்பியம்-ஒரு மொழியியற் பார்வை | சி. சக்திவேல் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 63-67 |
| 34. | தொல்காப்பியம்-பொருளதிகாரத்தின் இயலமைப்பு | சோ. ந. கந்தசாமி | த. ப. க. | ... |
| 35. | தொல்காப்பியம் உணர்த்தும் மனிதக் கோட்பாடு | வே. சண்முகநாதன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 73-78 |
| 36. | தொல்காப்பியம் புள்ளிமயங்கியல் | ஆபிரகாம் அருளப்பன் | செ. செ. சிலம்பு 56 பரல் | 218- |
| 37. | தொல்காப்பியம்-வரலாற்று மொழியியற் கூறுகள் | சி. சுப்பிரமணியன் | த. ப. க. | ... |

| எண் | கட்டுரை | ஆசிரியர் | வெளியீடு | பக்கம் |
|---|---|---|---|---|
| 38. | தொல்காப்பிய மரபியல் | நா. செயராமன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 118-122 |
| 39. | தொல்காப்பியமும் சமூகவியலும் | சொ. சிங்காரவேலன் | த. ப. க. | ... |
| 40. | தொல்காப்பியமும் பாணினீயமும் | ச. தண்டபாணி தேசிகர் | ஷை | ... |
| 41. | தொல்காப்பியமும் மரபும் | சு. அழகேசன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 13-18 |
| 42. | தொல்காப்பியர் காலம் | சி. கோவிந்தன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 57-62 |
| 43. | தொல்காப்பியர் கால மொழி நூல் வல்லார் | இரா. பாலகிருஷ்ணன் | ஷை | 135-139 |
| 44. | தொல்காப்பியர் கூறும் எழுத்துவடிவம் | ச. பாலசுந்தரம் | த. ப. க. | ... |
| 45. | தொல்காப்பியர் கூறும் தமிழ் எழுத்துகளின் குறியீட்டு விளக்கம் | ஷை | த. பொ. துணர் 56 மலர் 1 | 20-25 |
| 46. | தொல்காப்பியரின் இலக்கணம்-எண்ணுப் பெயர்கள் | பே. மு இராசகோபாலன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 30-33 |
| 47. | தொல்காப்பியரின் யாப்படிக் கொள்கை | அ. பிச்சை | இ.ப.த.ம.க ஆய்வு 4 | 144-149 |
| 48. | தொல்காப்பியரும் நன்னூல் பதவியலும் | சி. கதிர்வேல் | ஷை | 187-192 |
| 49. | தொல்காப்பியரும் மரபும் | சு. அழகேசன் | ஷை | 13-18 |
| 50. | நூல் மரபு இயல்விளக்கம் | வை. தங்கமணி | த பொ. துணர் 56 மலர் 3 | 117-121 |
| 51. | நோக்கு | சி. பாலசுப்பிரமணியன் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 193-198 |
| 52. | பயன்வழியியலும் தொல்காப்பியமும் | இ. முத்தையா | ஷை | 170-57 |
| 53. | பரிமேலழகர் உரையில் உவமையணி | டி. சீனிவாசவரதன் | ஷை | 96-100 |

| | | | | |
|---|---|---|---|---|
| 54. | பாடாண்திணை - ஒரு மூலிகை மருந்தறிவியல் ஆய்வு | இரா. குமாரசுவாமி | தமிழியல் (டிசம்பர் 1982) | 88-113 |
| 55. | பாரதி இலக்கியமும் பாட்டியல் இலக்கணமும் | அரங்க-நலங்கிள்ளி | இ.ப.த.ம.க. ஆய்வு 2 | 199-204 |
| 56. | புரைதீர் கிளவி | தமிழண்ணல் | இ.ப.த.ம.க. ஆய்வு 4 | 150-154 |
| 57. | புறப்பொருள் இலக்கண ஆய்வு வரலாறு | கு. காமேஸ்வரி | ஷை ஆய்வு 2 | 47-52 |
| 58. | பெரும்படை | வெ. கேசவராஜ் | ஷை | 74-78 |
| 59. | முத்தமிழ்த் தொல்காப்பியர் மொழிந்த முந்து நூல்கள் | பொன். முனியப்பன் | ஷை ஆய்வு 4 | 175-180 |
| 60. | யாப்பில் அலகு | சி. மெய்கண்டான் | ஷை ஆய்வு 2 | 248-253 |
| 61. | யாப்பிலக்கணத்தில் ஆய்தம் | கு. பூங்காவனம் | ஷை | 213-218 |
| 62. | வண்ணப்பா யாப்பில் எழுத்தும் சந்தமும் | கு. மோகனராசு | த. பொ. துணர் 56 மலர் 9 | 403-410 |
| 63. | வீரசோழியமும் வடமொழி யிலக்கணமும் | கு. மீனாட்சி | இ.ப.த.ம.க. ஆய்வு 2 | 230-236 |
| 64. | வேற்றுமையுருபுகளும் சொல்லுருபுகளும் | மு. முருகையன் | ஷை ஆய்வு 4 | 164-169 |
| 65. | வைகறை விடியல் மருதம்-ஓர் இந்திய இலக்கிய மரபு | த. சு. குப்புசாமி | ஷை ஆய்வு 1 | 142-147 |
| 66. | Brahui and Tamil | G. S. Varma | இ.ப.த.ம.க. ஆய்வு 2 | 335-338 |
| 67. | Cases in Tenth Century inscriptions | Karthikeyani Dhanaraj | ஷை | 62-67 |
| 68. | Deletion of the pronoun Ta:n | B. Padmanabha Pillai | ஷை | 205-207 |
| 69. | History of Tamil infinitive suffixes | H. Chithiraputhiran | ஷை | 117-122 |

| எண் | கட்டுரை | ஆசிரியர் | வெளியீடு | பக்கம் |
|---|---|---|---|---|
| 70. | Metre and Avvaiyar | T. M. Kameswari | ஷை | 53-57 |
| 71. | Puranatai Cu: ttirams of Eluttu | K. Murugaiyan | ஷை ஆய்வு 4 | 161-163 |
| 72. | Some forgotten Sandhi rules in Tamil | D. Ranganathan | ஷை ஆய்வு 2 | 289-294 |
| 73. | Style in Tamil | K. Karunakaran | ஷை | 42-46 |
| 74. | The age of Tolkappiyam | V. T. Chellam | ஷை ஆய்வு 4 | 123-128 |
| 75. | The verb Po:tu in Tamil | A. P. A. Susila Kirubavathy | ஷை ஆய்வு 2 | 147-152 |
| 76. | Tolkappiyam and Modern linguistics | S. Agasthialingam | ஷை ஆய்வு 4 | 1-6 |
| 77. | Transitive-Intransitive distinction in compound verbs | A. Karthikayan | இ.ப.த.ம.க. ஆய்வு 2 | 58-61 |
| 78. | Um in Tamil | S. Jean Lawrence | ஷை | 132-136 |

1982-இல் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட இலககண நூல்கள்.

1. தொல்காப்பிய எழுத்ததிகாரம் உரைவளம் :
    1. புணரியல்
    2. தொகைமரபு
    3. உருபியல்
    4. உயிர்மயங்கியல்
2. தொல்காப்பியச் சொல்லதிகாரம் உரைவளம்
    1. கிளவியாக்கம்.

இந்நூல்களில் தொல்காப்பிய உரையாசிரியர்களின் உரைகளும், தற்கால அறிஞர் பெருமக்களின் உரைகளும் கருத்துரைகளும், பதிப்பாசிரியர் ஆ. சிவலிங்கனாரின் கருத்துரைகளும் உள்ளன.

# இணைப்பு-2

1981-இல் தமிழ் என்னும் தொகுப்பு நூலில் சேர்க்கப் படாது விடுபட்ட கட்டுரைகள் பின்வருவன. அவை ஆண்டுக்கு இருமுறை வெளிவரும் 'புலமை' என்னும் இதழின் தொகுதி 7 பகுதி 1-இல் வெளிவந்தவை.

(1) தொல்காப்பியத்தில் சேரி. சின். கோதில் மொழியன்.

"சேரி என்னும் சொல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள தன்மையைக் கொண்டும், பிற இலக்கியங்களில் கொள்ளப்பட்டுள்ள சூழ்நிலைகளைக் கொண்டும், பண்டைத் தமிழகத்தில் பேரூர்களையடுத்துச் சேரிகள் இருந்தன என்றும், அவை இடைக்காலக் குறிப்புகளாக விளங்கின என்றும், அங்கே கூத்தர், பாணர், பரத்தையர் போன்ற கலைத்தொழில் குடியினரும், அறிவர், தாபதர் போன்ற அறம்புரி மாந்தர்களும், ஊர்க்குப் புதிதாக வந்த பல்வேறு தொழிலாளர்களும் தங்கினர் என்றும், அவ்வாறு வசித்தோரிடையே தீண்டாமை தோன்றவில்லை என்றும், உயர்ந்த சாதியார் வாழ்ந்த பகுதிகளையும் 'சேரி' என்று கூறும் மரபு இருந்தது என்றும், பொதுவாகச் சேர்ந்து வாழ்ந்த குடியிருப்புகள் எல்லாம் சேரி எனப்பட்டன என்றும், அத்தகைய பிரிவுகளே பின்னாளில் பல்வேறு காரணங்களால் தீண்டாமையுடைய சேரிகளாய் விரிந்தன என்றும்" தக்க சான்றுகளுடன் விவரித்து எழுதப்பட்டது "தொல்காப்பியத்தில் சேரி" என்னும் கட்டுரை.

(2) அளபெடை வடிவச் செய்தென் எச்சம்.

பெ. மாதையன்.

செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சத்துள் அடங்குவனவான நசைஇ, அசைஇ, கொளீஇ முதலிய சொற்கள் அளபெடையாகக் கருதப்படும் நிலையிலேயே 'செயீஇ' என்னும் வாய்ப்பாட்டுத் தன்மையதாகக் கருதலாம் என்ற கருத்தைக் குறிப்பாகக் காட்டி, அசைஇ நசைஇ முதலியன அசை + இ, நசை + இ என இகர விகுதி பெற்று வந்தவைகளே எனக் குறிப்பிட்டுள்ளார், மேற்படிக் கட்டுரையாசிரியர். மரபிலக்கண அடிப்படையில் அவை அசையி, நசையி என்றே வரும் அவ்வாறு வாராமையின் அசைஇ, நசைஇ என்பன ஒரு சொல்லை வேறொரு சொல் நிலைப்படுத்த எழுந்த அளபெடைகளே என்பது பெறலாம். கட்டுரையாசிரியர் மொழியியல்

அடிப்படையில் அவற்றை அளபெடைகளாகக் கொள்ளாமல் வினையெச்ச விகுதியாகிய இகரம் பெற்றன என்றார்.

'விரைஇ' என்னும் சொல்பற்றிச் சிறப்பாக விளக்கியுள்ளார். விளக்கமுடிவில், 'விரை' என்பதனை 'விரைஇ' என்பதன் வினையடியாகவும், 'விரா' என்பதனை 'விராஅய்' என்பதன் வினையடியாகவும், 'விரவு' என்பதனை 'விரவி' என்பதன் வினையடியாகவும் கொள்ளல் வேண்டும்'' என்று முடித்துள்ளார். எல்லாவற்றுக்கும் 'விர' என்பதே வினையடியாகக் கொள்ளின் இன்னும் சிறக்கும். 'விர' என்பது 'விரவுதல்' என்பதன் முதல்நிலை. அதை எச்சமாக்குதற் பொருட்டே விராஅய், விரைஇ எனத் திரித்து அளபெடைப் படுத்தும் நிலை வந்தது என்பது என் கருத்து.

தன்வினை பிறவினைப் பொருள்களில் அளபெடை வடிவ வினையெச்சம் வருதற்கு நற்றிணையில் வந்துள்ள 'கொளீஇ' (நற். 67, 293) என்னும் சொல்லைக் காட்டியது சிறக்கும். * கட்டுரை சிறந்த ஆய்வில் அமைந்துளது.

---

* செந்தமிழ்ச் செல்வி சிலம்பு—56 பரல் 8-இல் 'தொல்காப்பியத்தில் உயிரளபெடையாட்சி' என்னும் கட்டுரை காண்க. அதுபற்றி 1982-இல் தமிழ் என்னும் தொகுப்பு நூலில் காணலாம்.

# 14. தனித்தமிழ்

—க. தமிழமல்லன்

*1982-இல் தனித்தமிழ் பல துறைகளிலும் சிறந்த வளர்ச்சி யடைந்துள்ளது. தனித்தமிழ் இயக்கத்தார் மட்டுமின்றிப் பிற துறையினரும் இதில் ஈடுபட்டு உழைத்து வந்திருக்கின்றனர். இருபத்தொரு நூல்கள் இவ்வாண்டில் வெளியிடப்பட்டுள்ளன. புதிய இதழ்கள் தோற்றம் பெற்றுள்ளன; புதிய இயக்கங்கள் சிலவும் தோன்றியுள்ளன.*

**நுழைவாயில்**

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டில் தனித் தமிழின் வளர்ச்சியினைத் தொகுப்பீடாகவும் மதிப்பீடாகவும் இங்கு ஆய்வு செய்துள்ளோம். 1980-இல் தமிழ், 1981-இல் தமிழ் ஆகிய நூல்களில் தனித்தமிழ் பற்றிய கட்டுரை இடம் பெறாமை யால் இதில் தனித்தமிழ் பற்றிய அறிமுகம் கூறப்பட்டுள்ளது. இவ் ஆண்டில் வெளிவந்த நூல்களும் இதழ்களும் ஆய்வுப் பொருளாக வருகின்றன. முன்னரே நடைபெற்று வரும் இதழ் கள் செய்த வளர்ச்சிப் பணிகளும் இங்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. தனித்தமிழிலான படைப்புகள் தனித்தமிழ் அல்லாத இதழ்களிலும் வந்துள்ளன. அவை இங்கு எடுத்துக் கொள்ளப் பெறவில்லை. இதற்கு விலக்காக 'உரைப்பா' பற்றிய செய்திகள் மட்டும் அமைந்துள்ளன.

வெளி வந்திருக்கின்ற நூல்களும், இதழ்களில் வந்துள்ள படைப்புகளும் சில பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டு எழுதப் பட்டுள்ளன. செய்திகள் கொடுப்பது தொடர்ந்து அவை பற்றிய மதிப்பீடும் எழுதப்பட்டுள்ளது. பட்டியல்களும் பாகுபாட்டுடன் அமைந்து அவையும் ஆங்காங்கே மதிப்பீடு செய்யப் பெற்றுள்ளன.

தனித்தமிழிலக்கிய முயற்சிகள் ஆங்காங்குத் தொடர்ச்சி யாகவும் பெருமளவிலும் செய்யப்பட்டு வந்துள்ளன. ஆனால் அவை ஒருங்கிணைப்பாக வெளிப்படுத்தப் பெறவில்லை. வெளி யிடப்பெற்ற நூல்கள் அவ்வப்போது 'மதிப்புரை'ப் பகுதியி

லேனும் மதிப்பீடு செய்யப் பெறாதது இப்பணியில் உதவியாக இல்லை. ஆயினும் நிறுவனத்தின் நன்முயற்சி வெற்றி பெறும் வகையில் விடுபடாமலிருக்க வேண்டும் எனும் விழிப்புணர்வோடு பல துறை தனித்தமிழ் வளர்ச்சி இங்கு ஆய்வு செய்யப்படுகிறது. வெளிநாட்டு முயற்சிகள் இதில் சேர்க்கப் பெறவில்லை.

## அறிமுகம்

இருபதாம் நூற்றாண்டில் தமிழ்மொழிக்கு விளைந்த நன்மைகள் அளப்பரியவை. இந்நூற்றாண்டின் இணையற்ற பாவலர்கள் இருவருள் ஒருவராகிய பாரதிதாசனார் சிறந்த தனித்தமிழ்ப் பாவலராக விளங்கியது தமிழ்மொழிக்குப் பெருஞ் சிறப்பாய் அமைந்து விட்டது.

தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளாரால் தொடங்கப் பெற்ற தனித்தமிழ் இயக்கம் தமிழிலக்கியம் முழுமைக்கும் ஊற்றம் தருவதாயிற்று. எத்தகைய புலவரும் கலவைத் தமிழ் வழங்கிய பின்னர்த் தம் இறுதிக் காலத்திலோ அன்றி இடைக் காலத்திலோ தனித்தமிழ் நெறியே தமிழின் மெய்ந்நெறி யென்றும் உய்ந்நெறியென்றும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

'தனித்தமிழ்' எனும் கொள்கை எழுத்தாளர் எவராயினும் அவரை ஊடுருவிப் பாய்ந்து வருகிறது என்பது உண்மை. இன்று எல்லா இயக்கங்களிலும் தனித்தமிழ் தன் ஒளியை வீசி வருகிறது.

அரசியல், மதம், குமுகாயம், கல்வி எனும் அனைத்துத் துறையினராலும் தனித்தமிழ் புறக்கணிக்கப்பட இயலாத ஒரு கூறாகி விட்டது.

''தமிழ்மொழியில் பிறமொழிச் சொற்களைக் கலந்து எழுதுதல் கூடாது; பிறமொழி எழுத்துக்களைக் கலந்து எழுதுதல் கூடாது'' எனும் நெறி இன்று அனைவராலும் உணரப் பெற்று வருகின்றது.

> ''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே!''

என்ற தொல்காப்பியக் கட்டளையை உணர்ந்தாரும் உணரா தாரும் வட எழுத்தை நீக்கும் முயற்சியில் ஈடுபடும் போக்கு காணப்படுகிறது.

தனித்தமிழ்க் கொள்கையில்லாதவரும், தமிழில் பிறமொழிச் சொற்கள் அளவிறந்து கலக்கப்படுவதை எதிர்க்கும் மனப் பான்மையை இக்கொள்கை ஏற்படுத்தியிருப்பது தமிழ்மொழி வாலாற்றில் ஒரு திருப்பமாகும்.

தமிழ்மொழி பிறமொழிகளின் கலப்பில்லாமலேயே தனித்தியங்க வல்லது; தனித்தியங்குவதே தமிழின் இயற்கை; தனக்குத் தேவையான புதிய சொற்களை ஆக்கிக்கொள்ளும் வேர்ச் சொல் வளம் தமிழில்நிரம்ப உண்டு,எனும்உண்மைகளை அறைவதற்குச் சான்று தரும் மூல ஊற்றுகளாக விளங்குவன கழக (சங்க) இலக்கியங்களாகும். முதற்கழக, இடைக்கழக நூல்கள் அழிந்து போயின; பின்னர்த் தப்பிக்கிடைத்த கடைக்கழக நூல்களும் தூய தமிழ் இலக்கியங்களாகவே திகழ்கின்றன. அவற்றின் செழுமையே தூய்மைக்குச் சான்றாமெனின் முதல், இடைக்கழக இலக்கியங்கள் கிடைத்திருப்பின் இன்னும் எத்துணை கொழுவிய சான்றுகளை வழங்கியிருக்குமோ?

## தனித்தமிழ்க் காலம்

கழக இலக்கியங்களின் தனித்தமிழ்த் தன்மையைத் எழுத் தெண்ணித் தெளிவுபடுத்தியவர் மறைமலையடிகளார் ஆவார்.

பாரதப் போர் நிகழ்ந்தபோது (கி.மு. 3000 –கி.மு. 1000) உடனிருந்த முரஞ்சியூர் முடிநாகராயர் காலந்தொட்டுக் கி. பி. முதல் நூற்றாண்டு வரையிற் சென்ற காலத்தை தனித்தமிழ்க் காலம் என்று அடிகளார் முடிவு செய்துள்ளார்.

கழக இலக்கியங்களில் நூற்றுக்கு இரண்டு வடசொற்களே கலந்துள்ளன. சிலப்பதிகாரம்,மணிமேகலைதோன்றியகாலத்திய வடசொற் கலப்பு நூற்றுக்கு நான்கு, ஐந்தாகப் பெருகியுள்ளன. திருவாசகத்தில் நூற்றுக்கு எட்டுச்சொற்கள் கலந்துள்ளன. அப்பர், சம்பந்தர் தேவாரங்களில் (கி.பி. 6ஆம் நூ. ஆ.) இருபது விழுக்காடு கலந்துள்ளன என்ற கணக்கு அடிகளார் கணக்காகும்.

கழக இலக்கியங்களைப் போன்றே தமிழின் தனித்தன்மையை நிலைநாட்டுவதற்கு ஒப்பிலக்கண ஆய்வு வலிவானசான்றாகியது. தமிழின் தாய்மை, தூய்மை, தனிமை இனிமைப் பண்புகளைக் கால்டுவெலாரின் ஒப்பிலக்கணம் உறுதிப்படுத்தியது.

"திராவிட மொழிகள் அனைத்தினும் உயர்தனிச்செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ், தன்னிடையே இடம் பெற்றிருக்கும் சமற்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர் வாழ்வதோடு, அவற்றின் துணையே ஒரு சிறிதும் வேண்டாமல் வளம்பெற்று வளர்வதும் இயலும்"

"தமிழ், தான் ஏற்றிருக்கும் சமற்கிருதச் சொற்களில் பெரும் பகுதியை ஏன், அவை அனைத்தையுமே அறவே கைவிட்டு, அவ்வாறு கைவிடுவது ஒன்றினாலேயே, முன்னைய நிலை

யினும் சிறந்த உயர் தனிச் செம்மொழியாம் பெருநிலையைப் பெற்று விடும்''

''தமிழ் மொழியிலிருந்து சமற்கிருதச் சொற்களை அறவே நீக்கிவிட்டு நோக்கினால், எஞ்சி நிற்கும் பழம்பெரும் சிறப்பு வாய்ந்த திராவிடச் சொற்கள், ஆரியக் கலப்பற்ற திராவிட நாகரிக வாழ்க்கை முறைகளை உணர்த்தவல்ல உயிர் ஓவியம் ஒன்றை வனப்புற வரைந்து காட்டும்.''

என்னும் கால்டுவெலாரின் கூற்றுகள் தமிழ்மொழிக்கு வடமொழியின் துணை தேவையில்லை என்பதை மெய்ப்பித்தன.

தமிழில் நுழைந்து தமிழை விழுங்கும் பிறமொழிச் சொற்களை அகற்றவேண்டும் என்னும் உணர்வு வளர்ந்தது.

### வடமொழிக் கலப்பால் வந்த கேடு

ஒரே மொழியாக இருந்த தமிழ், வடமொழியின் சேர்க்கையால் தெலுங்கென்றும், கன்னடமென்றும், மலையாளமென்றும் திரிந்து பிரிந்து நால்மொழியானது.

ஒரு மொழி பேசிய தமிழினத்தார் தெலுங்கர் என்றும், கன்னடர் என்றும், மலையாளி என்றும் நாலினத்தாராகச் சிதைந்தனர். இதற்குக் கரணியம் தமிழில் வடமொழி கலக்கப்பட்டதேயாகும்.

தமிழில் வழங்கப் பெற்று வந்த அழகான தூய சொற்கள் எல்லாம் வேண்டுமென்றே வடமொழியில் பெயர்க்கப்பட்டு வழங்கப்பட்டன.

குரங்காடுதுறை—கபிஸ்தலம்
சிலம்பாறு—நூபுரகங்கை
சிற்றம்பலம்—சிதம்பரம்

பழமலை
முதுகுன்றம் } விருத்தாசலம்

மயிலாடுதுறை—மாயூரம்
மறைக்காடு—வேதாரண்யம்

இவ்வாறு ஊர்ப்பெயர்கள் பலவும் வேண்டுமென்றே மாற்றப்பட்டன,

மருதன், மறவன், ஆமூர்மல்லன், குழலி, பாடினி, ஔவை, பூங்குன்றன், நக்கீரன், யாமூலன், ஆலூர்கிழார், கோவூர் கிழார், நல்லந்துவனார், நன்னாகனார், பொத்தியார் எனவும், அதியமான், அந்துவன், அறுகை, அண்டிரன், இளந்தத்தன், இளவிச்சிக்கோ, கரிகாலன், குமணன், நெடுஞ்செழியன் எனவும் வழங்கி வந்த பழகு தமிழ்ப் பெயர்கள் பாழ்படுத்தப்பட்டன.

நிதம்பசூதனி, விசயாலயன், ஆதித்தன், பராந்தகன், அரிஞ்சயன், இராசராசன், இராசேந்திரன், விக்கிரமன், இரணதீரன், வரகுண மகராஜன், சீமாறன், சீவல்லபன், சுந்தர பாண்டியன்,சிவசு கந்தவர்மன், உக்கிரசேனன், சிம்ம விட்டுணு, தந்திவர்மன், நிருபதுங்க வர்மன், என்னும் பெயர்கள் தமிழ ரிடையே வழக்காறு பெறத் தொடங்கிவிட்டன.

குரல், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம் என்னும் ஏழிசைப் பெயர்கள், சட்சம், ரிசபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிசாதம் என்று மாற்றப் பெற்றன. ஆரோசை, அமரோசை, அலுக்கு என்னும் இசைச் சொற்கள் வடமொழியில், ஆரோகணம், அவரோகணம், கமகம் என மாற்றப்பட்டன.

இத்தகைய மாற்றங்கள் இயல்பாக ஏற்பட்டன அல்ல. வேண்டுமென்றே செய்யப்பட்டவை. இம் முயற்சி தமிழின் தனித் தன்மையைக் கெடுத்து ஒழிப்பதற்கென்றே திட்டமிட்டுச் செய்யப்பட்டன என்னும் உண்மைகள் தன்மானப் புலவோரால் தமிழ் மக்களுக்கு உணர்த்தப்பட்டன. வடமொழி மரபில் வந்த பார்ப்பனப் புலவரான வி. கோ. சூரிய நாராயண சாத்திரியார் என்னும் பரிதிமாற் கலைஞர் போன்றோரும் இவ்வுண்மைகளை ஒளிக்காமல் ஏற்றுக் கொண்டு தம் நூல்களில் எழுதினர்.

தமிழில் வடசொற் கலப்பதை ஒரு கொள்கையாகவேஏற்றுக் கொண்டு அதைத் திட்டமிட்டுச் சிலர் செய்து வந்தனர். அந் நடைக்கு 'மணிப்பவள நடை' ('மணிப்ரவாள') என்ற பெயரை யும் சூட்டிக் கொண்டனர், கலவைப் போக்கினர்.

எனினும், தமிழில் கலந்துள்ள வடமொழிச் சொற்கள், இல்லாமல் கடன் வாங்கப் பட்டவை அல்ல; வேண்டுமென்றே திணிக்கப்பட்டவை என்ற உண்மை புலப்படுத்தப்பட்டது.

தேசிய இயக்கமாகிய பேராயக் கட்சி (காங்கிரசு) வலிமை கொண்டு பரவியபோது இந்தியா முழுவதும் மாநில மொழிகள் ஏற்றம் பெற்றன. மாநில உணர்வுகளும் வளர்ச்சியடைந்தன. ஆனால், தமிழ்நாட்டுப் பேராயம் மட்டும் தன்மொழி புறக் கணித்த தேசியத்தையும் தன்னினம் மறந்த தேசியத்தையும்

தன்நிலம் துறந்த தேசியத்தையும் தழுவியது. இதனைத் திரு. வி. க. எதிர்த்தார், ம. பொ. சியும் எதிர்த்தார். தேசிய முழக்கங்கள் வடமொழியிலும் இந்தி மொழியிலும் மட்டுமே அமைந்தன. தமிழ் மக்களும் மொழியுணர்வு சிறிதுமின்றி 'மகாத்மா காந்திக்கு ஜே'! 'பாரத மாதா கி ஜே!' என்று முழங்கத் தொடங்கினார்கள்.

### மறைமலையடிகளாரின் தொண்டு

முற்றிலும் மாறுபட்ட உயிர்ப்பியக்கமாகிய தனித் தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த மறைமலையடிகளார் தனித் தமிழ்க் கொள்கையை நாடு முழுவதும் பரப்பினார். பெருமிதம் வாய்ந்த இனிய சொற்பொழிவுகளாலும் ஆராய்ச்சி நூல்களாலும் அடிகளார் தனித்தமிழை வளர்த்துப் பரப்பினார்.

புதினம், நாடகம், அறிவியல், மெய்மம், திறனாய்வு, உரை, வரலாறு, மொழி பெயர்ப்பு, இலக்கியம் எனும் ஒன்பது வகையான துறைகளிலும் தாமே ஈடுபட்டு எல்லாத் துறைகளிலும் பல நூல்களைத்தனித் தமிழில் எழுதிக்குவித்து எழுநிலை மாடமட்டுமன்றி எழுபது நிலை மாடம் கட்டும்படியான வலிவான கடைகால் அமைத்துத் தந்தார் மறைமலையடிகளார்.

### ஒப்பீட்டாய்வுகள்

ஒப்பீட்டாய்வுகள் பல்கிப் பெருகின. பல மொழிகளும் ஒப்பீடு செய்யப் பெற்ற பொழுதும் தமிழின் தனித்தன்மையே நிலை நாட்டப் பெறுவதாயிற்று. அண்மைக்கால மொழிகளும், கலப்பாகவே பிறந்த மொழிகளும் தனித்தன்மை காக்கும் வேட்கையில் தூய்மை போற்றும் முயற்சிகள் புலனாயின.

ஆங்கிலம், பிரெஞ்சு, சீனம், துருக்கி, சிங்களம், கொரியம், தெலுங்கு, குசராத்தி போன்ற தாயக, அயலக மொழிகள் எல்லாம் பிற்காலத் தோற்றங்களை உடையன வெனினும் கலப்பால் செழித்தன எனினும் தூய்மையைப் போற்றும் முயற்சியில் முனைந்தன, எனும் உண்மைகள் வெளிப்படுத்தப் பெற்றன. இத்தகைய உண்மைகள் தனித்தமிழ் இயக்கத்திற்கு முழு நயன்மை அளித்தன.

### பாவாணரின் வேர்ச் சொல்லாய்வுகள்

தமிழே திரவிடத்தாய் என்பதும் ஆரியத்திற்கு மூலம் என்பதும் உயர்தனிச் செம்மொழி என்பதும் ஞா. தேவநேயப் பாவாணர் அரிய ஆய்வுகளால் நிறுவப் பெற்றன. சிறப்பாகத் தமிழின் வேர்ச்சொல் வளம் நிலைநாட்டப்பட்டது. தமிழ் தனக்குத் தேவையான புதிய சொற்களுக்குக் கடன் வாங்கத்

தேவையில்லை; வேர்ச்சொற்களைக் கொண்டே பல புதிய பொருள்களுக்கெல்லாம் பொருத்தமான சொற்களை அழகிய முறையில் ஆக்கிக் கொள்ளலாம் என்ற மதுகை ஞா. தேவ நேயரால் வழங்கப் பெற்றது. எங்கும் எப்போதும் அழகான தனித்தமிழில் உரையாடும் அவரின் நேர்த்தி எண்ணிறந்த தனித் தமிழன்பர்களை உருவாக்கி விட்டது.

பாவாணரின் வேர்ச்சொல் ஆய்வுப் பணிகளால், தமிழ்ச் சொற்கள் உலக மொழிகளில் எல்லாம் எவ்வாறு திரிந்து வழங்கு கின்றன என்பதையும் அவையே மீண்டும் பிறமொழிக் கலைச் சொற்களாகத் தமிழுக்குத் திரும்பின என்றும் மிக நுட்பமாகவும் சுவையாகவும் விளங்கச் செய்தன.

தமிழில் தொடக்கக் கால முதலே சொல்லாக்கம் நடை பெற்ற வரலாற்றையெல்லாம் நன்கு தெளிவுபடுத்தினார் பாவாணர். அதனால் தனித்தமிழன்பர்களும் அறிஞர்களும் புதிய தெம்பு பெற்றனர், துணிவுடன் பணியாற்றத் தொடங்கினர்.

நடிகர்களுக்கும்,அரசியல் தலைவர்களுக்கும், சுவைஞர்களும் தொண்டர்களும் உருவாதல் போல பாவாணர்க்கும் உருவா யினர். சொல்லாய்வு அறிஞர் ஒருவர்க்குச் சுவைஞர்களும் தொண்டர்களும் கிடைத்தது உலகிலேயே பாவாணர் ஒருவர்க்குத்தான் என்று துணிந்து கூறலாம்.

### இயக்கம்

பாவாணர் தாம் கண்டாய்ந்த தமிழின மீட்சிக்கான உண்மைகள் அனைத்தையும் பரப்ப எண்ணினார். மொழிநூல் உண்மைகளை மெய்ப்பிக்க வேண்டும் என்பதில் தீவிரமாய் இருந் தார். ஆதலின் 'உலகத் தமிழ்க் கழகத்தைத் தோற்றுவித்தார். 'முதன்மொழி' என்னும் இதழையும் கழகத்தின் இதழாகத் தொடங்கினார். தமிழ் நிலத்தில் முறையான ஒரு தனித் தமிழியக்கம் தொடங்கப்படுவதாயிற்று.

தமிழ்நாட்டின் ஊர்கள் தோறும் நகர்கள் தோறும் உ. த. க கிளைகள் உண்டாயின. எண்ணற்றோர் தனித்தமிழ்க் கொள்கை யின்பால் ஈர்க்கப்பட்டனர். தனித்தமிழ்க்கொள்கை நாடு முழுதும் பரவியது.

மு. வரதராசனார், கா. அப்பாத்துரையார் போன்ற அறிஞர்பெருமக்களும்தனித்தமிழின் மேன்மையைப் போற்றினர். "தென்மொழி" எனும் தம் நூலில் கா. அப்பாத்துரையார் ஞா. தேவநேயரை மிகவும் போற்றினார். அறிஞர் அண்ணாவும்

பிற அறிஞர்களும் பாவாணரின் பேரறிவாற்றலை யுணர்ந்து பாராட்டிய நிலை மேலும் தனித்தமிழுக்குப் பொலிவூட்டியது.

ஞானகிரியார் 'தமிழிலிருந்து தோன்றிய ஆங்கிலச் சொற்கள்', ''கிரேக்கச் சொற்கள்'', ''இலத்தீன் சொற்கள்'' ஆகியவை பற்றிய ஆய்வுகளைச் செய்து நூலாக்கியதும், இரா. மதிவாணன், இரா. இளங்குமரன் போன்றோர் சொல்லாய்வில் ஈடுபட்டதும் தனித்தமிழ் இயக்கத்தை இன்றியமையா இயக்க மாக்கின.

செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி, தமிழ்ச்சிட்டு முதலிய ஏடுகள் செம்மையான ஒப்பிலாத தனித்தமிழ்ப் பணிகளில் ஈடு பட்டன. இத்தகைய இதழ்கள் வாயிலாக தனித்தமிழ் முயற்சிகள் அனைத்தும் ஊக்கப்படுத்தப் பெற்றன, பதிவு செய்யப்பெற்றன. தனித்தமிழில் பலதுறை இலக்கியங்கள். ஆய்வுகள், படைப்பிலக் கியங்கள், திறனாய்வுகள் முதலியன பெருகின. அனைத்தையும் தனித்தமிழில் காணவேண்டும் ஆக்கவேண்டும்என்னும் அடங்கா வேட்கை செயலுருவம் பெற்றன.

பெருஞ்சித்திரனார் தம் 'தென்மொழி' 'தமிழ்ச்சிட்டு' இதழ் களின் வாயிலாகத் தனித்தமிழ்க் கொள்கைக்கு ஒப்பற்ற தொண்டு செய்தார். இருபத்தைந்தாண்டு தொடர்ச்சியான வெளியீடுகளினால் விளைந்த தனித்தமிழ் முயற்சிகள் மிகவும் ஆழமானவை; உயர்ந்தவை. தம் உணர்வெழுச்சிப் பாக்களாலும் தாளிகைக் கலைத்திறத்தாலும் தனித்தமிழை விரும்பி ஏற்கும் வண்ணம் ஆக்கினார்.

தனித்தமிழ்க்கொள்கை, தமிழைக் காக்குங்கொள்கை. அது தமிழின் பெருமையை நிலை நாட்டுவது, தமிழுக்கு எல்லாவகை யான நன்மைகளையும் செய்து, பகை எவ்வுருவில் வந்தாலும் ஒன்று பட்டு எதிர்த்துத் தாக்குவது, தமிழை எங்கும் எதிலும் பயன்படுத்தச் செய்வது என்னும் உண்மைகள் புலனாயின. நம்பிக்கை எழுந்தது; தனித்தமிழ் சிறந்து வளர்கிறது!

தென்மொழி, தமிழ்ச்சிட்டு வாயிலாகத் தனித்தமிழால் எல்லாம் முடியும் என்ற எண்ணம் வலுப்பெற்றது.

இலக்கணம், இலக்கியம், அறிவியல், சிறுகதை, புதினம், நாடகம், வரலாறு, ஆராய்ச்சி போன்ற அனைத்துத் துறைகளும் அழகுடன் விறுவிறுப்புடன் எழுதிக் குவிக்கப்பட்டன. இவ் விதழ்கள் வெறும் தாளிகையாக இல்லாமல் இயக்கத்தை வளர்த்தன. இவற்றைப் படித்தோர் படித்தபின் கடையில் போடவில்லை, தென்மொழி, தமிழ்ச்சிட்டுகளைத் தொடர்ந்து

நாடு முழுவதும் பல இதழ்கள் தனித் தமிழில் தொடங்கப் பெற்றன.

கைகாட்டி (அறிவு) பாவை, வலம்புரி, முதன்மொழி, தமிழம், வேந்தம், நித்திலம், வல்லமை, வண்ணச்சிறகு, பூஞ்சோலை, தமிழோசை, தமிழியக்கம் போன்ற இதழ்கள் பல தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வெளிவரத் தொடங்கின. அவற்றின் வாயிலாகப் பலதுறைத் தனித்தமிழ் பெருகிய வளர்ச்சி காண லாயிற்று.

ஆங்காங்கு, இயக்கங்கள் அமைந்தன. உ. த. க வைத் தொடர்ந்து ‘தமிழியக்கம்’, ‘தனித்தமிழ் இலக்கியக் கழகம், தனித்தமிழ்க் கழகம், உலகத் தமிழின முன்னேற்றக்கழகம் போன்ற அமைப்புக்கள் தோன்றலாயின. இவ் அமைப்புகள் அறிக்கைகள், இலக்கியக் கூட்டங்கள், மாநாடுகள், நூல் வெளி யீடுகள் போன்றவற்றால் தனித்தமிழைப் பரப்பின; வளர்த்தன.

திருச்சி, சென்னை, தஞ்சை, மதுரை போன்ற இடங்களில் வலிமையான மாநிலந் தழுவிய மாநாடுகள் தனித் தமிழ்க் கொள்கையை உலகறிய முரசறைந்தன.

அறிவார்ந்த செயலூக்க மிக்க தொண்டர்கள் பலர் எழுந் தனர். செயலால் பணிகளைத் தொடங்கினர். தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும், புதுச்சேரி நேராட்சிப் பகுதியிலும் பெயர்ப் பலகைத் தமிழாக்கப்பணிகள் தனித் தமிழுக்கு வெற்றியை ஈட்டித் தந்தன.

தமிழிலக்கியம் இத்தகைய அமைதியானவிளம்பரம் இல்லாத தூய தமிழ் மறுமலர்ச்சியை இதற்குமுன் கண்டதில்லை. திராவிட இயக்கங்கள் தனித்தமிழை எதிர்க்க இயலாத சூழ்நிலை யில் அவற்றின் வளர்ச்சியிலும் ஆளுகையிலும் தனித்தமிழ் மேலும் வளர்வதாயிற்று. தேவ நேயப் பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்க, அரசே இசைந்து துறையொன்றை அமைத்தது. இவற்றைத் தொடர்ந்து உலகத் தமிழ் மாநாட்டில் தனித்தமிழ்க்குக் குறிப்பிடத் தக்க அளவு சிறப்பிடம் கிடைத்தது.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டாம் ஆண்டில் தனித்தமிழ் பல துறைகளிலும் சிறந்த வளர்ச்சியடைந்துள்ளது. தனித்தமிழ் இயக்கத்தார் மட்டுமின்றிப் பிற துறையினரும் இதில் ஈடுபட்டு உழைத்து வந்திருக்கின்றனர். நூல்கள் பல இவ் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளன. புதிய இதழ்கள் தோற்றம் பெற்றுள்ளன. புதிய இயக்கங்கள் சிலவும் தோன்றியுள்ளன.

இவ் ஆண்டுக்கு முன்னரே வெளிவந்த சில நூல்கள் மறு பதிப்பாக வந்திருக்கின்றன. பெருஞ்சித்திரனாரின் 'கொய்யாக் கனி', 'தன்னுணர்வு', 'ஆரியப் பார்ப்பனரின் அளவிறந்த கொட்டங்கள்' போன்ற நூல்களைச் சான்றாகக் காட்டலாம். பாவாணரின் 'தமிழ் கடன் கொண்டு தழைக்குமா?' எனும் நூலும் மறு பதிப்பாக வந்துள்ளது. இந்நிலைமை தனித்தமிழ்க் குள்ள வரவேற்பையும் வளர்ச்சியையும் காட்டுவதாக இருந்த போதிலும் அவை இங்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளப் பெற வில்லை.

இவ் ஆண்டு தனித்தமிழில் இருபத்தொரு நூல்கள் வந் துள்ளன. இவற்றைப் பாடல் இலக்கியம், உரைநடை நூல்கள் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். உரைநடை நூல் களையும் வாழ்க்கை வரலாற்று நூல்கள், அமைப்பு வரலாறு, மொழியாய்வு, புதினம், குமுகாயவியல், அறிவியல் நூல்கள் என்று பிரித்துக்கொண்டும் காணலாம்.

### பாடல் இலக்கியம்

பெருஞ்சித்திரனாரின் 'உலகியல் நூறு', 'நூறாசிரியம்' (2-ஆம் பகுதி) சுந்தரசண்முகனாரின் 'அம்பிகாபதி காதல் காப்பி யம்' முதுகண்ணனின் 'மணமகளுக்கு', இறையரசனின் 'குறளும் 'பொருளும்' அரிமதிதென்னகனின் 'அரிமதி வெண்பாமாலை' 'தென்னன் என் தோழன்', கடலூர் மணிமாறனின் 'நான் பாடு கிறேன்' ஆகிய நூல்கள் இப்பிரிவில் அடங்குகின்றன.

'உலகியல் நூறு' சில ஆண்டுகளுக்குமுன் 'தமிழம்' ஏட்டில் எழுதத் தொடங்கப் பெற்றது. பின் தென்மொழியில் தொடர்ந்து வந்து நிறைந்தது. நூறு வெண்பாக்களால் ஆகியது இந்நூல். உலக வாழ்க்கை நெறிமுறைகளைக் கூறும் அறநெறி இலக்கியமாக இது விளங்குகிறது. இதில் கூறப்பெறும் நெறி முறைகள் முன்னரே பல அறநெறி நூல்களில் கூறப்பெற்றிருப் பினும் தனித்தமிழ் நடையினாலும் ஆசிரியரே இதற்கு எழுதி யுள்ள உரையினாலும் தனிச் சிறப்புப் பெறுகிறது. அறிவியல் மனப்பான்மையுடன் கொள்கைத் திணிப்பின்றித் தூய இலக்கிய மாக இந்நூல் திகழ்கிறது.

''ஒன்றுநிலம் நீரிரண்டு மூன்றுயிர்கள் நான்கியக்கம்
நின்றியலும் ஐந்துணர்வோ டாறுமனம் ஏழுநிலை
என்றுமுயிர்க் கெட்டுவினை தொண்டுகுறை பத்துநலம்
குன்றல மிகுதல் குறை''

என்னும் பாடலில் அறிவியல் மனப்பான்மையும் மாந்த வாழ் வியலுக்கு இடனாகிய இவ்வுலக அமைப்பை விளக்கும் தன்மை யும் காணலாம்.

உலகியல் நடக்கும் நிலைகளை ஆட்சிநிலை, சட்ட நிலைகளை உள்ளவாறு கண்டு பாடும் ஆசிரியர், இனி உலகியல் நடக்க இருக்கும் நிலைகளையும் புரட்சி எண்ணத்துடன் சிந்தித்திருக் கிறார்.

''அமைத்த வதிகாரத் தாள்வோர்க்குச் சார்பாய்
சமைத்துக் கொளும்நெறியே சட்டம்—இமைத்துரைப்பின்
ஆனைக் குழுசெய் யறநெறியாங் கோரேழைப்
பூனைக் குதவுமெனல் பொய்''

என்னும் பாடல் என்றென்றும் தங்களுக்குச் சார்பாய் வருமாறு இயற்றிக் கொள்வதே சட்டம்; அதனால் ஏழை மக்களுக்கு உதவியில்லை என்றும் உண்மை நிலையைப் பாடுகின்றார்.

### நூறாசிரியம்

நூறு ஆசிரியப் பாக்களைக் கொண்டது என்பதால் நூறாசிரியம் என்னும் பெயர் பெற்றது. இத்தொகுப்பு பத்துப் பாடல்களை மட்டுமே கொண்டது. பதினொன்று முதல் இருப தாம் பாடல் வரையிலான பத்துப் பாடல்கள் இதில் இடம் பெற்றுள்ளன. முதல் பத்துப் பாடல்கள் முதல் தொகுப்பாக முன்னரே, 1976-இல் வந்து விட்டது.

இதில் இடம் பெற்றுள்ள பாடல்கள் கழக (சங்க)ப் பாடல் களோடு ஒப்புமையுடையவை தென்மொழி இதழில் தொடர்ச்சி யாக வந்தவை. இவற்றுக்கு ஆசிரியரே பொழிப்பும், விரிப்பும் எழுதியிருப்பது இதன் தனித்தன்மையாகும். இவ் உரைகள் சொல்லாய்வுக் குறிப்புகளுடன் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் திணையும் துறையும் வகுக்கப் பெற்றமை நூறாசிரியம் முழுமையான கழக இலக்கிய மரபினைத் தழு வியது என்பதற்குச் சான்றாகிறது. கழக இலக்கிய மரபுடன் இன்றைய நடைமுறைகளைப் பாடுவது இதன் புதுமைப் பண் பாகும்.

இப்பாடல்கள் காதலையும், அறவோர் நிலையையும், பாரதி தாசன் கையறவாகவும், மறுமணம் வலியுறுத்துவதாகவும், விழாக்கள் பலவற்றை முறையிலாச் செயல் எனக் கூறுவதாகவும் பாடப்பட்டுள்ளன.

கணவனை இழந்த இளம்பெண் ஒருத்திக்கு மறுமணம் நிகழ்த்துமாறு பாடும் பாடல்,பழைய மரபு வடிவத்தில் புதுமைக் கருத்து குடிகொண்டுள்ளதைக் காட்டுகிறது. மறுமணம் செய் விக்க வேண்டியதன் கரணியங்களைப் பலவாக அடுக்குகிறார் ஆசிரியர்.

"புணர்ந்த தோளும் பொலிவழிந் திலையே!
நிணந்த மார்பும் நிமிர்பழி கிலையே!
மன்றற் கூறையும் மடிகலைந் திலையே!
கலியெழு கிளைமுன் கவிழ்ந்த புன்றலை
இன்றும் ஏர்ந்தன் றிலையே! எழுதிய
கால்வரிக் கோலமும் கலைந்தன் றிலையே!
சுடரொளி வாணுதல் வெளிறப் பொதிகுழல்
படர்ந்து நிலமபுரள இடை நுடங்கிப்
புறமஞ்சி யுள்ளழுங்கும் புலைவார் கண்ணொடு
கையிற்று நெகிழும் கழைமென் றோளிக்கு
உறுநாள் உவப்புற வேண்டி
மறுமணம் புணாத்தீம் மனைவாழ் வோரே!"

எண்ணப் பூக்கள்

சாயபு மரைக்காயரின் இந்நூல் ஒரு புதுமை வடிவம் கொண்டது. இருபத்து மூன்று தலைப்புகளில் பலவகை யாப்பில் அமைந்த பாக்களை யுடையது. இப்பாடல்கள் வேறுபட்ட இருபத்து மூன்று அறிஞர்களால் பாட்டாலும் உரையாலும் மதிப்பீடு செய்யப் பெற்றுள்ளன.

இதில் காதலும், இயற்கையும் நகைச்சுவையும் பாடப் பெற்றுள்ளன. மதவுணர்வும் தமிழ் உணர்வும் விளங்குகின்றன. இறுதித் தலைப்பான 'தனித்தமிழைப் போற்றுக' எனும் வெண்பா இவரின் பற்றுக்குச் சான்றாகிறது.

" ஏற்றமுயர் இன்றமிழில் வேற்றுமொழிச் சொல்லெதற்கு?
மாற்றிடுக மாண்டமிழில் மாசுகளை — நற்றமிழா
தாழ்வு தவிர்த்துத் தனித்தமிழைப் போற்றியே
வாழ்வாங்கு வாழ்ந்திட வா ".

தாழ்வு தவிர்க்கும் முயற்சியில் நன்கு ஈடுபட்டாலும் இவர் ஆங் காங்கே சிற்சில வடசொற்களையும் பெய்துள்ளார் (பாடல் 1, 2, 3).

### அரிமதி வெண்பா மாலை

1981-இல் மணிவிழா கொண்டாடிய சிவ. கண்ணப்பரை அறுபது வெண்பாக்களால் வாழ்த்தித் தரப்பெற்ற கையெழுத்துப் படி 7-3-1982-இல் நூலாக வந்ததுவே அரிமதி வெண்பாமாலை.

தமிழ் வேண்டல், வள்ளுவரை வேண்டல், இளங்கோ வேண்டல், புரட்சிக் கவிஞர் வேண்டல், புதுவைத்தாய் வேண்டல் என்று இவர்கள் சிவ. கண்ணப்பரை வாழ்த்த வேண்டும் என்று வேண்டிப் பின் தன் நெஞ்சையும் வேண்டு வதாக 'நெஞ்சொடு வேண்டல்' எனும் தலைப்புடன் முடிவுறு கிறது இச் சிறிய நூல்.

### தென்னன் என் தோழன்

தம்தோழர் தென்னன் ஐம்பதாம் அகவை நிறைவை யொட்டி அவரை வாழ்த்து முகத்தான் இந்நூல் வெளிவந் துள்ளது. பல்வேறு சிறு தலைப்புகளில் இவர்தம் நடை, நட்பு, தொண்டு போன்றவை போற்றப் படுகின்றன.

இத்தன்மைகளுக்கு இப்பாடல் சான்றாக அமைகிறது.

"பாவேந்தர் தம்பால் படித்த பெருமையுடை
நாவேந்தன் என்தோழன் நல்லான்; எனைப்புரக்கும்
கோவேந்தன் தென்னன் குலோத்துங்கன் என்றுரைப்பேன்!
பூவேந்தன் போலே புலவனெனைக் காப்பானே!"

### நான் பாடுகிறேன்

பாட்டரங்கப் பாடல்களின் தொகுப்பாகக் கடலூர் மணிமாறனின் இந்நூல் வந்துள்ளது. ஆசிரியரின் நாட்டுப்பற்று, மொழிப்பற்றுகளுடன் இவரின் புரட்சி எண்ண மும் இதில் வெளிப்படுகிறது. குமுகாய (சமுதாய) மாற்றத்தை விரும்பும் இவரது எண்ணம்,

"உலகோர் வியக்கும்
உயர்ந்த குமுகாயம்
மலரும் வகை செய்வோம்
முனைப்புடைய இந்நாட்டில்
உயர்ந்த குமுகாயம்
மலரும் வகை செய்வோம்"

என்னும் வரிகளினூடே மின்னுகிறது.

## அம்பிகாபதி காதல் காப்பியம்

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற ஒரு பாவியம் சுந்தர சண்முகனாரின் இந்நூலாகும். பெரும்பாலும் ஆசிரியப் பாக்களால் முப்பது காதைகளுடன் இப்பாவியம் அமைந்துள்ளது. 1982-இல் வெளிவந்த பெரும்பாவியம் இதுவொன்றேயாகும்.

கம்பரின் மகன் என்று வழங்கப் பெறும் அம்பிகாபதி சிறந்த புலவன் 'அம்பிகாபதிக் கோவை' எழுதியவன். 'அம்பிகாபதி அமராவதி' எனும் நாடகம் ஒன்றை உரைநடையில் மறைமலையடிகளார் முன்னரே எழுதியிருக்கிறார்.

சுந்தர சண்முகனார், அம்பிகாபதி வரலாற்றைச் சீர்திருத்தி அவனைப் பற்றிக் கூறப் பெறுகின்ற சில கருத்துக்களை நீக்கிவிட்டு இயன்றவரை பகுத்தறிவுக் கேற்றவாறு நூலினை ஆக்கியிருக்கிறார்.

நூல் முழுதும் இனிய எளிய தனித்தமிழ் நடையில் அமைந்துள்ளது. அரிதாக இடம் பெற்றுள்ள அருஞ்சொற்களுக்குரிய பொருள்கள் அடிக்குறிப்பில் குறிக்கப்பட்டுள்ளன. செந்தமிழ்ப் புரவலர் சிங்கார குமரேசனார் தூண்ட அதனால் இப்பாவியம் எழுந்துள்ளது (பதிகம்).

பகுத்தறிவும் தமிழ்ப்பற்றும் இப்பாவியத்துள் பல இடங்களில் விரவி வருகின்றன.

''எல்லாம் வல்லவர் எம்பெரு மானென
எல்லாரும் உளறுவ தியற்கையாய் விட்டது
எல்லாம் வல்ல இறைவர் உலகில்
சில்லோர் தீவினை செய்ய வைப்பதேன்?
எல்லாரும் நல்வினை இயற்றச் செயலாமே!'' (பக் 102)

என்னும் அடிகள் பகுத்தறிவுடன் இடத்திற்கேற்ப வரையப் பட்டுள்ளன.

''தமிழின் வளர்ச்சியைத் தடைசெயுங் கடையரும்
தமிழ்கற் றோரைத் தாழ்த்தும் மடையரும்
இங்குள் ளமையை இம்மியும் பொறாமே'' (205)

என்னும் அடிகள் தமிழ்ப் பற்றினை வெளிப்படுத்தி நிற்கின்றன.

பலவகையான படிப்பினைகள் இந்நூலில் நிரம்பிக் கிடக்கின்றன. இந்நூலில் கற்பனைக் கதை மாந்தர் சிலரும் படைக்கப்

பெற்றுள்ளனர். கமலி, சிம்மன் போன்றவர் பெயர்களை விடுத்துத் தனித்தமிழ்ப் பெயர்களாக வைத்திருக்கலாம்.

### மணமகளுக்கு

முதுகண்ணனின் இந்நூல் அன்பான அறிவுரைகள் வழங்குவதாக அமைந்துள்ளது. 1 மணமகளே, 2மங்கல வாழ்த்து, 3 அகம், 4 அகப்புறம், 5 மனைமாட்சி, 6 தாய்மை, 7 மகப்பேறு ஆகிய தலைப்புகளில் ஒவ்வொன்றிலும் எட்டெட்டு வெண்பாக்களைக் கொண்டுள்ளது. சொந்த மகளுக்குப் பாசத்துடன் கூறப் பெறும் அறிவுரைகள் போன்று இவை நல்ல தனித்தமிழில் அமைந்துள்ளது.

### குறளும் பொருளும்

இறையரசனின் இந்நூல் ஒரு பாடல் இலக்கிய உரை நூலாகும். திருவள்ளுவரின் 1330 குறட் பாக்களுக்கும் தாழிசையில் பொருள் விளக்கம் செய்யும் வகையில் நூல் விளங்குகின்றது. 1330 தாழிசைகள் நல்ல தூயதமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளன. திருக்குறளுக்கு விளக்கம் கூறும் 'குமரேச வெண்பா' போன்ற செய்யுள் உரை நூல்கள் வரிசையில் தனித்தமிழ் நூலாக இந்நூல் விளங்குகிறது.

### உரைநடை நூல்கள்

வாழ்க்கை வரலாறு, அமைப்புவரலாறு, இடவரலாறு என்னும் முறையில் வரலாற்று நூல்கள் உரைநடையால் இயற்றப்பட்டுள்ளன.

### ஆற்று (இட) வரலாறு

கெடில வளம் (சுந்தர சண்முகனார்), வையை வளம் (இரா. இளங்குமரன்) ஆகிய நூல்கள் ஆற்று வரலாறாகவும் அதைச் சுற்றிய இட வரலாறாகவும் விளங்குகின்றன.

### கெடிலவளம்

சுந்தரசண்முகனார்தாம் இயற்றிய "கெடிலக்கரை நாகரிகம்" என்னும் நூலின் சுருக்கமாகவே 'கெடிலவள'த்தை இயற்றியிருக்கிறார். 1. ஆறுகளின் தோற்றம், 2. உலக ஆறுகளில் கெடிலம், 3. கெடிலத்தின் தோற்றம், 4. கெடிலத்தின் முடிவு, 5. கெடிலத்தின் தொன்மை, 6. இலக்கியத்தில் கெடிலம், 7. கெடில நாடு, 8. கெடிலக் கரை அரசுகள், 9. கெடில நாட்டுப் பெருமக்கள்,

10. கெடிலக் கரைத் துறைமுகம், 11. கெடிலக் கரை ஊர்கள், 12. கெடில நாட்டு வளங்கள் என்னும் தலைப்புகளில் நூல் எழுதப் பெற்றுள்ளது. எளிய தூய தமிழ் நடையில் நூல் அமைந்துள்ளது. 'தனித்தமிழ்' என்று பேர் சொல்லிச் சிலர் கடுநடையாக்கி விளங்காது செய்வர். அது போலன்றிச் சுவையான நடையில் இந்நூலையாக்கியுள்ளார் ஆசிரியர்.

தோற்றம், முதலிடம் (மூலம் பக் 12, 13), உயிர் ஆறு (சீவ நதி—12), பெருந்து வண்டிகள் (16), கழிமுகத்தீவு (டெல்டா—16), அறிவாசான் (ஞானகுரு-76), நிரயம் (93), சுமை தூக்கிகள் (கிரேன் 93), மேட்டு நிலம் (பீடபூமி), முதலிய சொற்களைக் கையாளும் முயற்சிகளில் ஆசிரியர் வெற்றி அடைந்துள்ளார். தனித்தமிழ் இயக்கத்தாரினும் இவர் தனிப்போக்கு கொண்டுள்ளது 'மூலம்' என்னும் சொல்லைத் தமிழென்று ஆளாமல் அதற்குப் பகரமாகத் தோற்றம், முதலிடம் என்று பயன்படுத்தியுள்ளார். 'மூலம்' எனுஞ்சொல் தமிழென்றே பாவாணர் பயன்படுத்துவார்.

வையை வளம்

ஆற்றுவள வரிசை நூல்களை வெளியிடுவதில் ஆர்வம் காட்டிவரும் சை.சி.நூ.ப. கழகம் இதனை வெளியிட்டுள்ளது இரா. இளங்குமரன் பதின்மூன்று தலைப்புகளில் ஆய்ந்து எழுதியுள்ளார்.

1. வையை 2. இலக்கியத்தில் வையை (பொது) 3. இலக்கியத்தில் வையை (சிறப்பு) 4. வையை வரவு 5. வையையின் வறட்சி 6. ஒரு பொற்காலம் 7. பெரியாற்றுத் திட்டம் 8. வையை அணை 9. வையைச் செலவு 10. வையைக்கரை ஊர்கள் 11. வையைக்கரை அரசு 12. வையை வளம் 13. ஆறுகளை நாட்டுடைமையாக்கல் ஆகியன அத்தலைப்புகள்.

பாவாணரின் தூய் தமிழ்நெறியை இவர் இந்நூலில் போற்றியுள்ளார். தொன்மம் (புராணம் 14), குளம்பி (காப்பி 95) போன்ற சொற்களை இதில் காண முடிகிறது. பெயர்களை எழுதுவதிலும் தனித்தமிழ் நெறி கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. (கர்னல் சான்பென்னியுக்—38, சப்பான்-93 நீலமலை-93). பாவாணரின் பெருமை பேசப்படும் (95) இந்நூல் அவர் தம் நூலான 'மண்ணில்விண்' மேற்கோளுடன் நிறைவுபெற்றுள்ளது.

## வாழ்க்கை வரலாறுகள்

'நாங்கள் காணும் பாவாணர்', 'பன்மொழிப் புலவர் மு. ச. சிவம் வாழ்க்கைக் குறிப்புகளும், தமிழுக்குச்செய்த ஆக்கப் பணிகளும்' எனும் நூல்கள் இத்துறையில் வெளிவந்துள்ளன. 'கழக அமைச்சர் திருவரங்கனார் வரலாறு' எனும் நூலும் இத்துறை நூலேயாகும்.

### நாங்கள் காணும் பாவாணர்

நெய்வேலி பாவாணர் தமிழ்க் குடும்பத்தின் வெளியீடு இது. பாவாணர் பற்றிய அறிஞர்களின் கருத்துகளும் அவர் வாழ்க்கைக் குறிப்புகளும் இதில் இடம்பெற்றுள்ளன.

1. பாவாணர் வாழ்க்கைக் குறிப்புகள் 2. தவம்செய்த தவமாம் நேயர் (இரா. இளங்குமரன்) 3. நான் கண்ட பாவாணர் (இரா. மதிவாணன்) 4. பாவாணரும் உலகத்தமிழ்க் கழகமும் (செங்கை செந்தமிழ்க்கிழார்) 5. எண்ணிட: பாவாணருடன் தமிழ்க்குடும்பம் 6. செயற்பட: பாவாணர் வழியில் நாம்— முதலிய கட்டுரைகள் இதில் அடங்கியுள்ளன. பாவாணர் எழுதிய நூல்களின் பட்டியலும் அவரைப் பாட்டாலும் உரையாலும் புகழ்ந்த படைப்புகளும் இந்நூலில் காணப்படுகின்றன. பா. த. குடும்ப அமைப்பின் விளக்கக்குறிப்புகளும் இதில் உள்ளன.

பாவாணர் வாழ்க்கை வரலாற்றினை முழுமையாகக் கூறும் நூலேதும் இல்லாத நிலையில் இந்நூல் அதற்கு ஒரு முன்னோடியாக வந்துள்ளது எனலாம்.

### திருவரங்கனார் வரலாறு

இரா. இளங்குமரனின் இந்நூல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அமைச்சராக இருந்ததிருவரங்கனார் பற்றிய வரலாற்றைத் தனித்தமிழில் அழகுடன் விளக்குகிறது. கழகம் அமைவதிலும் அது சிறந்து விளங்குவதிலும் அவர் ஆற்றிய அனைத்து வகையான அரும்பணிகளையும் 150—பக்கங்களில் தூய தமிழில் விளக்கியிருக்கிறார் இரா. இளங்குமரன்.

### பன்மொழிப் புலவர் மு.ச. சிவம் வாழ்க்கைக் குறிப்புகளும் தமிழுக்குச் செய்த ஆக்கப்பணிகளும்

இரா. வடிலேலனால் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. மு.ச. சிவத்தின் விரிவான வாழ்க்கையினையும் புத்தம் புதிய துறை நூல்களைத் தமிழில் எழுதியதையும் அதன்மூலம் அவர் ஆற்றிய தொண்டினையும் ஆசிரியர் விளக்கியிருக்கிறார்,

மு. ச. சிவம் 150—நூல்களை வெளியிட்டுள்ள வரலாறு இதில் கூறப்படுகிறது.

### அமைப்பு வரலாறு

அமைப்பு வரலாறாக இலக்கிய அமைப்பாகிய 'மதுரை நான்காம் தமிழ்ச்சங்க' வரலாறு கூறப்படுகிறது. இரா. இளங்குமரன் எழுதிய இந்நூல் தமிழ்ச்சங்க வரலாற்றை பதின்மூன்று தலைப்புகளால் கூறுகின்றது.

1. தமிழ் 2. பழந்தமிழ்ச் சங்கங்கள் 3. செந்தமிழ் வளர்த்த தந்தையும் மைந்தரும் 4. நான்காம் தமிழ்ச்சங்கத் தோற்றம் 5. சங்கப் பணித்திறம் 6. ஆய்வும் அரங்கேற்றமும் 7. கல்விக் குழுவின் பணி நலம் 8. சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை 9. செந்தமிழும் நூல் வெளியீடுகளும் 10. சங்கத்து ஆட்சிமுறை 11. ஒரு மாமணி 12. நான்காம் தமிழ்ச்சங்கம் 13. எதிர்காலப் பணிகள் எனுந் தலைப்புகளில் இந்நூல் ஆய்வு செய்கின்றது. பல சான்றுகளும் ஒளிப்படங்களும் நூலை அழகு செய்கின்றன.

தனித்தமிழ் நெறியில் பாற்கரன் (பாஸ்கரன்), தொலைவரி (தந்தி), திருவர் (லார்டு) முதலிய சொற்கள் வழங்கப் பெற்றுள்ளன. நல்ல தமிழில் வெளிவந்த 'செந்தமிழ்' இதழினைப் பற்றியும் 10—3—1958—இல் தமிழ்ச் சங்கத்தில் பேசிய கமில் சுவலபில் ''பிறமொழிச் சொற்களைத் தமிழில் கலக்க வேண்டாம்'' என்று பேசிய பேச்சுப் பற்றியும் தனித்தமிழ் ஆர்வத்தினால் ஆசிரியர் குறித்துள்ளார்.

### மொழியாய்வு

இரா. மதிவாணன் எழுதிய நூல் இத்துறையில் வெளியிடப் பெற்ற ஒரே நூலாகும். பாவாணர் மறைவுக்குப் பின் அவர் துறையில் பொறுப்பு இயக்குநராகப் பணியாற்றும் இவர் தொடர்ச்சியான ஆய்வுப் பணிகளில் ஈடுபட்டுள்ளார்.

### சொல்லாய்வுக் கட்டுரைகள்

இது இரா. மதிவாணன் எழுதிய நூலாகும். வரலாறு, இலக்கணம், இலக்கியம், சொற்பிறப்பியல், அகர முதலி, மொழி எனும் பிரிவுகள் பிரிக்கப்பட்டிருந்தாலும் அனைத்துக் கட்டுரைகளும் மொழியாய்வுகளாகவே அமைந்துள்ளன.

1. அதியமான் பெருவழியில் காதம் 2. அதியமான் சத்திய புத்திரனா? 3. தொண்டும் தொண்ணூறும் 4. அவன் 'வாடு' ஆன வரலாறு 5. கன்னுக்கடிது 6. அவ்வே மாத்திரை

7. ஈ என்னும் ஏவல் 8. திராவிட மொழியில் தானே 9. குடகு நாட்டில் இரவரிவார் 10. முளவுமா முயலே 11. செய்யாமல் செய்த உதவி 12. இன்னும் மண்ணீராட்டு வதுவை 13. வேர்ச் சொற் கட்டுரை 14. பாட்டன் பாட்டி முறைப் பெயர்கள் 15. ஆதி மந்தி 16. சொற் பிறப்பியல் 17. திராவிட மொழி களில் அகரவரிசை 18. தமிழில் எழுத்துச் சீர்திருத்தம் என்னும் தலைப்புகளில் தம் ஆய்வுகளை வழங்கியுள்ளார்.

வேர்ச்சொல் ஆய்வாக 'இல்' துளைத்தற்கருத்து வேர் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. பாவாணர் நெறி தொடர்ந்து கொண்டு செலுத்தப்படுகிறது என்பதற்குச் சான்றாக விளங்கு கிறது.

எழுத்துச் சீர்திருத்தத்தில், வடமொழி எழுத்துகளைப் பயன் படுத்தாமலே தமிழில் எல்லா ஒலிகளையும் வழங்கலாம் என்று இவர் பல சான்றுகளைக் காட்டி வலியுறுத்துவது தமிழ் வலிமை மீது இவருக்குள்ள நம்பிக்கையை காட்டுகிறது.

### புதினம்

#### உணர்வுகள் அழிவதில்லை

படைப்பிலக்கியத் துறையில் நூல் வடிவம் பெற்றுள்ளது இதுவொன்றே. தி. நா. அறிவு ஒளியின் இந்நூல் ஒரு வரலாற்றுப் புதினமாகும். தில்லிக்கு அடிபணிய மறுத்த பகாவுதின்கார்சாப்பு, காம்பிலி தேவனிடம் அடைக்கலம் புகுந்தான். அடைக்கலம் கொடுத்த காம்பிலிதேவனால் பகைவர் படையெடுப்பைத் தாங்க முடியவில்லை. எனினும் அடைக்கலப் பொருளைத் தன் நண்பன்பல்லாளஅரசனிடம் ஒப்படைத்துவிட்டுக் குடும்பத்துடன் எரிமூழ்கி இறந்துபோகிறான். வல்லரசுக்குக் கட்டுப்பட்ட பல்லாளன், முகமதுபின் துக்ளக்கின் படைத்தலைவன் மாலிக்கு சாதாவிடம் காட்டிக்கொடுத்து விடுகிறான். மானமிழந்து வாழ விரும்பாத பகாவுதின் உயிர் பிரிகிறது. இக்கதையினைக் கொண்ட "உணர்வுகள் அழிவதில்லை" ஒரு குறும் புதினமாக அமைந்துள்ளது.

இந்நூலில் வண்ணனைகளும் உரையாடல்களும் சுவையாக எழுதப்பெற்றுள்ளன. ஆனால் கதைசொல்லும் முறையில் விறுவிறுப்பு இல்லை. நேரடியாகச்சில நிகழ்ச்சிகள்கட்டுரைபோல் கூறப் பெறுகின்றன. கதை மாந்தர்கள் மனத்தில் நிற்பதுபோல் அமையவில்லை. நன்கு நினைவிற் பதிந்த தமிழ்நாட்டு வரலாற்று நிகழ்வுகள் தேர்ந்தெடுக்கப் பெறாதது இதற்குக் கரணிய மாகலாம்.

தனித்தமிழ்க் கொள்கையாளரான இவர் ஏராளமான படைப்புகளை எழுதிக் குவித்துள்ளார். தம் புதினத்தை அழகிய தூய தமிழ்நடையில் அமைத்துச் சென்று வெற்றி அடைகிறார்.

"வளரும் நாம் மடிந்து விட்டாலும் வருங்கால வரலாற்றில் உரிமை மறவர்கள் தோன்றிக் கொண்டேயிருப்பார்கள். விடுதலை வரலாறு ஒரு தொடர்கதையே. அது வாழையடி வாழையென வளரும். சுரண்டலற்ற ஓர் உலகம் அமையும் வரை உரிமைப் போர்கள், புரட்சி மலர்கள் மலரும், தீமைகள் உள்ள வரை போராட்டங்களும் ஒழியா" (பக். 21).

என்னும் வரிகளில் ஆசிரியரின் உரிமை உணர்வும் பொதுமை விருப்பும் பளிச்சிடுகின்றன.

### குமுகாயம்

இத்துறையில் இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன. பல்வேறு குமுகாயச் சிக்கல்கள் இருப்பினும் தமிழ்நாட்டைப் பொறுத்த வரை மொழிச் சிக்கல் தீராத தொடர்ந்து அச்சுறுத்தி வரும் சிக்கலாகவே இருந்து வருகிறது. இதற்காகப் பல போராட்டங்கள், உயிரிழப்புகள், விளக்க நூல்கள், சொற்பொழிவுகள் எனப் பல முயற்சிகள் நிகழ்ந்து வந்திருக்கின்றன.

### இந்திச் சிக்கலும் இறுதித் தீர்வும்

கு. ச. ஆனந்தனின் இந்நூல் இச்சிக்கலுக்கு இறுதித் தீர்வு காணும் வேட்கையில் எழுதப் பெற்றுள்ளது. 'தென்மொழி'யில் இவர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இச்சிறு நூலாகும்.

"ஆட்சி மொழித்தகுதியினின்று இந்தியை அகற்றவேண்டும், இனி எந்த ஒரு மொழியையும் 'ஆட்சி மொழி'யாக ஆக்கக் கூடாது; குறிப்பிட்ட ஆறு பயன்பாடுகளுக்கு மட்டும் ஆங்கிலம் வரையறுக்கப்பட்ட தொடர்பு மொழியாகப் பயன்படுத்தப்பட வேண்டும்; அனைத்துத் துறைகளிலும் மாநில மொழிகளே முழுமையான ஆட்சிமொழிகளாக மாநிலங்களில் ஆக்கப் பெற வேண்டும்; ஆங்கிலத்தைப் பதினாறாவது தேசிய மொழியாகச் சேர்த்துவிட வேண்டும்" என்பதை இறுதித் தீர்வாகக் கு. ச ஆனந்தன் கூறியுள்ளார்.

### புதுச்சேரி அரசு தமிழ் வளர்ச்சித்துறை அமைக்க வேண்டும்

க. தமிழமல்லன் எழுதிய இச்சிறு நூல், மேற்குறித்த வேண்டுகோளை விளக்கிக் கூறும் வகையில் எழுதப்பெற்றுள்ளது. தமிழ் வளர்ச்சித்துறை புதுச்சேரியில் இல்லை; தமிழ் ஆட்சி

மொழியாகப் பயன்படுத்தப் பெறவில்லை; தமிழ் புறக்கணிக்கப் படக்கூடாது; பிறப்பு இறப்புச் சான்றுப் படிவத்தில் முன்னிருந்த தமிழ் நீக்கப்பட்டுள்ளது—இவற்றைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

அறிவியல்

**மின்இயல் இயந்திரங்களும் அளவைக் கருவிகளும்**

சொ. குமார் எழுதிய இந்நூல் மின்னியல் துறையில் சிறந்த முயற்சியாகும். 1. மின்னாக்கிகள் 2. மின்மாற்றிகள் 3. மின் அளவுகளும் அளவைக் கருவிகளும் 4. நேர்—மாற்று மின்சாரம் எனும் பிரிவுகளைக் கொண்டுள்ளது இந்நூல்.

தூய தமிழில் சொல்ல வேண்டும் எனும் வேட்கையில் ஏராளமான சொற்களை மிகவும் முயன்று இந்நூலாசிரியர் ஆக்கியுள்ளார். முன்னரே பலரால் காணப்பட்ட சொற்படைப்பு முயற்சிகளைக் கற்க முயன்றிருப்பின் இம்முயற்சி மேலும் சிறப் படைந்திருக்கும்.

| | | |
|---|---|---|
| Break down point | — | முறிவுப் புள்ளி |
| Brushes | — | தொடுவிகள் |
| Commutator | — | திசைமாற்றி |
| Delta connectior | — | முக்கோண இணைப்பு |
| Anmature | — | மின்னகம் |
| Extension | — | நெடுக்கம் |
| Jewels | — | மணிக்கற்கள் |
| Moving Iron | — | இயங்கிரும்பு |
| Rotor | — | சுழலி |
| Viscosity | — | பாகுநிலை |
| Hysterises loss | — | தயக்க இழப்பு |
| Lap winding | — | மடிப்புச் சுற்று |
| Wave winding | — | அலைச் சுற்று |
| Layer winding | — | ஓரடுக்குச் சுற்று |

என்னும் இவர் பயன்படுத்தியுள்ள சொற்கள் இவரது தூய தமிழ் முயற்சிக்குச் சான்றாக விளங்குகின்றன. பாடநூல் அடிப்படையில் ஒவ்வொரு பாடத்தின் பின்னும் பயிற்சி வினாக்கள் தரப் பெற்றுள்ளன. கணிதப் பாடநூல் போல் நூலின் இறுதியில் வினாக்களுக்குரிய விடைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூல் முழுமையான தனித்தமிழ் முயற்சி எனக் கூற இயலாவிடினும் மிகப்பெரிய தனித்தமிழ் முயற்சி என்று கூறலாம்.

**தாளிகைகள் செய்த தனித்தமிழ் வளர்ச்சி**

தனித்தமிழ் வளர்ச்சியில் இதழ்கள் ஆற்றியுள்ள பங்கு பெரியது. தமிழ் எழுத்தாளர்கள் பொதுவாக வணிக எழுத்தாளர்களுடன் போட்டி போட முடிவதில்லை. தங்கள் படைப்புகளை நூலாக்குவதில் மிகவும் துன்புற வேண்டியுள்ளது. துன்புற்று நூல் வெளியிட்டாலும் விற்பனை வாய்ப்பின்றிச் சோர்கின்றனர். பல நூற்றுக்கணக்கான சிறந்த பல துறைத் தனித்தமிழ் நூல்கள் வெளியிடப் பெறாமல் கையெழுத்துப் படிகளாகவே உறங்குகின்றன. இந்நிலையில் இவர்களது படைப் பாற்றலைத் தாளிகைகள் அவ்வப்போது வெளிப்படுத்தி வந்துள்ளன. அவை ஒரு குறிப்பிடத்தக்க அளவு தனித்தமிழ் வளர்ச்சிக்கு உதவியுள்ளன.

**சிறுகதை**

இடையில் நின்று மீண்டும் வரத்தொடங்கியுள்ள வல்லமை இதழில் சிறுகதைகள் தொடர்ச்சியாக வந்தன. 'மூவான்' என்பவர் எழுதிய கதைகளும் பெங்களூர்த் தமிழ்ப்பித்தன் கதைகளும் இவ் இதழில் இடம் பெற்றுள்ளன. தென்மொழியில் நன்னன் எழுதிய நான் கண்ட பேய் என்னும் கதை வந்துள்ளது.

மூவான் எழுதிய இடம் மாறிய மருமகளும் மனம் மாறிய மாமியாரும், நாலு முழம் வேட்டி, அய்யய்யோ போச்சே குடியும் களவும், கூடி என்னுங் கதைகள் குறிப்பிடத்தக்கவை.

இவை எல்லாம் குமுகாய நடைமுறைச் சிக்கலை நடுவாகக் கொண்டு சுவைபெறப் பின்னப்பட்டுள்ளன. சென்னையின் வாழ்க்கையும், பேருந்துக்கு நின்று சோர்வதும் (அய்யய்யோ போச்சே—மூவான்), பேருந்து வண்டியில் நடக்கும் திருட்டு மிகவும் திறமையாகக் காவலரால் பிடிக்கப்படுவதும் (குடியும் களவும் கூடி—மூவான்) நன்கு சொல்லப்படுகின்றன.

அன்பான மாமியார் மனம்மாறி வன்மையாக நடந்து கொள்வதும், மருமகளைக் கொடுமைப்படுத்துவதும், படித்து அலுவல் பார்க்கும் மருமகள் தன் கணவனுடன் வேற்றூர்க்கு மாற்றலானபின் இன்பமாக வாழ்வதும், படிக்காத பட்டிக் காட்டு மருமகளுக்குத் தாழ்வுணர்ச்சி வரக்கூடாது என்பதற்காக மாமியார் அவ்வாறு நடந்துகொண்டதாக அவளின் மடல் மூலம் அறிந்து அவளின் அன்புக்காக மீண்டும் மாமியாரிடம் போக முயலுவதுமான ஒரு மருமகளின் கதையைச் சுவையாகவும் இயல்பாகவும் நனவோடை முறையில் சொல்லப்பட்டுள்ளது (இடம் மாறிய மருமகளும் மனம்மாறிய மருமகளும்).

ஒரு சிறுவனை மாடு முட்டித்தள்ளிவிட அதிர்ச்சியால் அவன் கண்ட கனவு, 'நான் கண்ட பேயா'க நன்னனால் சிறுகதையாக வடிக்கப்பெற்றுள்ளது. அச்சம் மிகுந்த சூழல் உரிய முறையில் உணர்வுகளைப் படிப்படியாக அதற்கு இழுத்துச் செல்லும் போக்கு அழகுற வண்ணனை செய்யப்பட்டுள்ளது.

பொதுவாக இச்சிறுகதைகள் தனித்தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்தாலும் மற்ற தாளிகைகளில் வருகின்ற இயல்பான போக்கிலேயே சொல்லப்பெறுகின்றன. நல்ல ஓட்டமும் கதை யமைப்பும் சொல்லப்பெறுகின்ற முறையும் வெற்றித்தன்மை யுடனே அமைந்துள்ளன.

விடுவிப்பு, தொடரி (செயின்), தானியங்கி ஓட்டி (ஆட்டோ டிரைவர்), அகவை (வயது), காசுமானி (மீட்டர்), கோரும் வரைவு (D.D) போன்ற தூயதமிழ்ச் சொற்கள் இக்கதைகளில் ஆளப் பெற்றிருத்தல் கதைப்போக்கில் சுவை தருகின்றனவாக அமைந் துள்ளன. தமிழுக்கு வளம் சேர்க்கின்ற தன்மையில் விளங்கு கின்றன.

தனித் தமிழில் படைப்பிலக்கியம் வெளியிடுவதற்கு முன்னோடியாக 'விருந்து' சிறுகதைத் தொகுப்பு நூல் வெளி யிடப்பட்டுள்ளது (தனித்தமிழ்க் கழகம்—புதுச்சேரி 1981). இதனைத் தொடர்ந்து நூல் வெளியீட்டு முயற்சிகள் செய்யப் பெறவேண்டும். கதைகளில் வருகின்ற சொற்கள் அவற்றின் வெற்றிக்குத்தடையாக இருப்பதில்லை. ஏனெனில், படித்தவரும் விளங்கிக்கொள்ள இயலாத ஆங்கிலச் சொற்கள் 'சுஜாதா' கதை களில் வருதல் வழக்கந்தானே!

கதையின் கருவும் சொல்லும் முறையும் முதன்மையாகப் பார்க்கப்படுகின்றன. கதையென்றால் தமிழ் வாசகர்கள் எதை யும் பார்ப்பதில்லை. ஆதலால் தனித்தமிழ்ப் படைப்பிலக்கியம் வளர்ச்சியடைய தொடர்ச்சியான முயற்சிகள் துணிவாக மேற் கொள்ளப் பெறவேண்டும்.

**திறனாய்வு**

**இலக்கியத் திறனாய்வு**

தனித்தமிழ் இதழ்களில் பலவகையான கட்டுரைகள் வெளி வந்துள்ளன. அவை ஆராய்ச்சியாகவும், நலம் பாராட்டுவதாக வும் அமைந்துள்ளன.

1981-ஆம் ஆண்டுமுதலே தொடங்கிய 'சிலம்பிற் பிழையா' என்ற இறைக் குருவனாரின் ஆய்வுக் கட்டுரையின் சில தொடர் கள் விட்டு விட்டு இவ் ஆண்டு, தென்மொழியில் (18:9, 18:11)

வந்துள்ளன. சிலப்பதிகாரம் பற்றிய கருத்துகளில் ம.பொ.சி. யுடன் மாறுபடும் போக்குகள் இதில் சான்றுகளுடன் ஆராயப் பெறுகிறது.

குறளியத்தில் (1.11.82) ஒரு பாடலில் இருபது பாடல்கள் எனும் கட்டுரை வந்துள்ளது.

க.சி. கமலையாவின் 'பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து' பற்றி விளக்கமான கட்டுரையைச் செந்தமிழ்ச் செல்வி (56; பக். 219, 337, 374, 400, 440, 535) வெளியிட்டது.

நன்னன், பெண்கொலை புரியக் காரணியமாயிருந்த 'நறுமா' வைப்பற்றி ஆய்வு செய்துள்ளார் பொன். முனியப்பன் (செ.செ: சூலை 82.)

'திருக்குறளில் ஆகமம்' பற்றி சே.வெ. பலராமன் (தெ. மொ 18:11) எழுதியுள்ளார்.

புலவர் நலம் பாராட்டல்

| | | | |
|---|---|---|---|
| 1. | இலக்கிய வேலியைத் தகர்த்த பாட்டுக் குயில் | க. தாமரைச் செல்வன் | மீட். 1:5-10 |
| 2. | அறிவுக்குச் செறிவு பாவாணரின் சொல்லாய்வு | குணா | ,, |
| 3. | திரு. வி. கலியாணச் சுந்தரனார் ஒரு தமிழ்ப் பண்பாளர் | வி.பொ. பழனி வேலனார் | மீட். 2:1 |
| 4. | திரு.வி.க. ஒரு திறனாய்வு | த. ச. தமிழன் | மீட். 2:1 |
| 5. | நல்லோட்கழகு நாணும் மாண்பும் | ச. சிவசங்கு | தெ. மொ 18:9 |
| 6. | இருநிலை அறிவு | தி. நா. அறிவு ஒளி | வல். 4:1 |

தலைவர் நலம் போற்றல்

| | | | |
|---|---|---|---|
| 7. | இன்றைய திராவிடர் இயக்கங்கள் தந்தை பெரியார் வழியில் இயங்கு கின்றனவா? | வி.பொ பழனி வேலனார் | மீட். 2:2 |

8. பெரியார்ஒரு திறனாய்வு த.ச தமிழன் மீட். 2:2
9. பெரியாரின் பெருமை க. தமிழ மல்லன் மீட். 2:2
10. பெரியாரும் வீரமா முனிவரும் தி.நா. அறிவு ஒளி மீட். 2:2

இலக்கணத் திறனாய்வு

11. குணவீரரின் நேமி நாதம் தி. நா. அறிவு ஒளி தெ. மொ. 19:3-4, 5

12. ஈயென்னேவல் இரா. மதிவாணன் செ. செ. 56:7

திறனாய்வுக் கட்டுரைகள் தனித்தமிழ் இலக்கியத்தைப் பற்றியோ,தனித்தமிழ்ப் புலவர்களைப் பற்றியோ மிகுதியாக அமையாமல் பொதுப்படையான திறனாய்வுகளே இவ்விதழ்களில் இடம் பெற்றன. இம்முயற்சிகளும் திட்டமிட்டு நடைபெற்ற தாகத் தெரியவில்லை. "சிலம்பிற் பிழையா?" எனும் கட்டுரை இக்கருத்துக்குத் தடையாக இருப்பினும் அதுவும் தொடர்ச்சி யாக வராமற் போனது.

தனித்தமிழியக்கத்தார் கண்ணதாசனைப்போற்றுவதில்லை. அதற்கு முரணாகக் க. தாமரைச்செல்வன் கட்டுரை காணப்படு கிறது. சற்றுப் புதுமையாகும்.

இலக்கியத் திறனாய்வில் பாநலம் சுவைத்தலாக ச. சிவசங்கு எழுதிய 'நல்லோட் கழகு நாணும் மாண்பும்" என்ற கட்டுரை யும், தி.நா அறிவுஒளியின் 'இரு நிலை அறிவு' என்பதும் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் முன்னது அகநானூற்றின் 34-ஆம் பாடலுக்கு விளக்கம் கூறுவது. பின்னது ஈங்கோய் மலை எழுபதில் ஒரு பாடலுக்கு விளக்கம் கூறுவது.

சமகாலத்துப் படைப்புகள், பாவலர்கள், நூல்கள் பற்றிய ஆய்வுகள் தனித்தமிழில் தனித்தமிழ் இதழ்களில் செய்யப் பெறாதது குறிப்பிடத் தக்கது. ஆனால் படைப்புகள் எல்லாம் தனித்தமிழில் அமைக்க முயன்று வருவது தனித்தமிழின் வளர்ச்சியே ஆகும்.

குமுகாயவியல்

1. தமிழாசிரியர்களின் அவல நிலை சொ.ப.இராமசாமி தெ.மொ.18:7
2. தமிழ்நாட்டினத் திற்குப் பொருந்திய பொதுவுடைமை குணா தெ.மொ.18:7

| | | | |
|---|---|---|---|
| 3. | திட்டக்குழுவின்<br>மூலம் தீவிர<br>இந்தித் திணிப்பு | கு.ச. ஆனந்தன் | தெ.மொ.18:10 |
| 4. | வழக்கு மன்றங்கள்<br>வண்டமிழால்<br>இயங்க | கு.ச. ஆனந்தன் | தெ.மொ. 19 : 2,<br>3-4 |
| 5. | தமிழ் மரபுப்<br>பண்ணையில்<br>விளைந்த<br>நச்சுச் செடிகள் | கோ.மு. பெருமாள் | தெ.மொ. 19:2 |
| 6. | திராவிட இயக்கங்<br>களின் பார்வையில்<br>இந்து சமயம் | கு. ச. ஆனந்தன் | தெ.மொ. 19:5 |
| 7. | மரபும் மக்கள்<br>பண்பாடும் | குணா | தெ.மொ. 19:5 |
| 8. | மொழி உரிமையின்<br>இன்றியமையாமை | ம.இலெ.தங்கப்பா | மீட் 2:2 |
| 9. | கிருட்டிணா நீர்த்<br>திட்டத்தைக்<br>கைவிடுங்கள் | இறைக்குருவனார் | த.நி : 7.11.82 |
| 10. | காவிரி நீர்விடாத<br>கருநாடகமும்<br>தட்டிக் கேட்காத<br>நடுவணரசும் | பெருஞ்சித்திரனார் | த.நி : 7.11.82 |
| 11. | தொலைக் காட்சியில்<br>இந்தித் திணிப்பு<br>நீங்கிடவில்லை | பெருஞ்சித்திரனார் | த.நி : 14.11.82 |
| 12. | சாதியுணர்வால்<br>தமிழினம் மேலும்<br>ஆயிரம் ஆண்டுகளுக்குப்<br>பின்தங்கி விடலாம் | பெருஞ்சித்திரனார் | த.நி : 28.11.82 |
| 13. | ஆசிய விளையாட்<br>டிலும் இந்தித்<br>திணிப்பு | பெருஞ்சித்திரனார் | த.நி : 28.11.82 |

| | | | |
|---|---|---|---|
| 14. | மேல்சாதியார் தந்திரங்கள் | சாலை இளந்திரையன் | த.நி : 28.11.82 |
| 15. | பாரதியாரை அள வுக்குமீறி வானளாவப் பாராட்டுகின்றனர் கொண்டாடுகின்றனர் | பெருஞ்சித்திரனார் | த.நி:12.12.82 |
| 16. | நச்சுத்தன்மை மிக்க பூச்சி மருந்துகளும் நலக் கேடுகளும் | தினமணி 10.11.82 இதழிலிருந்து | த.நி : 12.12.82 |
| 17. | ஏழை நாட்டில் 750 கோடி | பெருஞ்சித்திரனார் | த.நி : 12.12.82 |
| 18. | தஞ்சை மாவட்டம் பாலை நிலம் ஆகிவிடுமா? | ஆனந்தவிகடன் இதழிலிருந்து | த.நி : 12.12.82 |
| 19. | தமிழ்ப் படத்தில் இந்திப் பாடலா? | பெருஞ்சித்திரனார் | த.நி : 19.12.82 |
| 20. | விடுதலைப் புலிகளின் பிணையல் கட்டுப்பாட்டைத் தளர்த்துக | பெருஞ்சித்திரனார் | த.நி : 26.12.82 |
| 21. | புறக்கணிக்கப்பட்ட திரு. வி. க நூற்றாண்டு விழா | த. ச. தமிழன் | த.நி : 26.12.82 |
| 22. | செயவர்த்தனேவை ஆதரித்துச் சிவாஜி கணேசன் பேசுவதா | ப. பத்மநாபன் | த. நி. : 26.12.82 |

முதலிய கட்டுரைகள் குமுகாயத்தின் பல துறைகளைப் பற்றியும் வெளிவந்துள்ளன. சாதி ஒழிப்பு, தமிழ்மொழிக் காப்புணர்வு இந்தித் திணிப்பு எதிர்ப்பு, பொதுவுடைமை, மக்களின் நல வாழ்வு, தமிழ்நாட்டின் வறட்சி, இலங்கைத் தமிழர்க்கு இரக்கப் படுதல் ஆகிய பொருள்கள் கட்டுரைகளின் கருப்பொருளாக அமைந்துள்ளன.

ஆசிய விளையாட்டுப் போட்டிக்கு 750 கோடி ரூபா செலவிடப் பட்டது கண்டிக்கப்பட்டுள்ளது. பிற இதழ்களில் இல்லாத ஒரு போக்கினை இங்கே காண முடிகிறது. ஒட்டு

மொத்தமாக எல்லாரும் பாரதியாரைத் தூக்குகிறபோது இப் போக்கு அளவுக்குமீறிச் செய்யப்படுவதாகவும், பாரதியார் முழுமையான தமிழினநலம் போற்றுபவர் அல்லர் என்பதாகவும் இங்கே எழுதப்படுவது துணிச்சலான போக்கைக் காட்டுகிறது.

வரலாறு

1. இந்தோனேசியாவும் பண்டைத் தமிழர்களும் } மு. சிறிராமுலு த.நி: 7.11.82
2. தமிழீழ விடுதலை வரலாறு—முகுந்தன் த.நி: 7.11.82, 14.11.82, 5.12.82, 19.12.82
3. தமிழின வீழ்ச்சி வரலாறும் மீட்சி முயற்சிகளும் } ப. அருளி த.நி: 14.11.82, 5.12.82
4. பழங்காலச் சீனத் தமிழ் உறவுகள் } குறளியம் குறளியம்: 1.11.82
5. கோச்செங்கணான் யார்?—இரா.கலைக்கோவன் செ.செ:5/:3

போன்ற வரலாற்றுக் கட்டுரைகள் வெளிநாட்டில் தமிழர், இலங்கைத் தமிழர் விடுதலை, தமிழர் வரலாறு, பண்பாட்டு உறவு, அரசர் வரலாறு முதலியவற்றைக் கூறுகின்றன. இவற்றுள் 2,3 ஆகியவை இன்னும் முற்றுப் பெறாதவை, தொடர்ச்சியாக வராதவை. இவ்வரலாறுகள் முன்னரே எழுதப் பெற்றவையே. ஈழம் பற்றிய தொடரே புதியது. தமிழ் இலக்கிய வரலாறோ இன்னும் எழுதப் பெறவில்லை. அம்முயற்சியில் ஈடுபடுதல் நன்று.

சொல்லாய்வு

தனித்தமிழ் வளர்ச்சிக்கு மிக இன்றியமையாதது சொல்லாய்வாகும். பாவாணரின் சொல்லாய்வு தனித்தமிழ்க் கொள்கையை வலிமைப் படுத்தியதைப் போன்றே இன்று செய்யப்படும் முயற்சிகளும் விளங்குகின்றன. இவ் ஆண்டில் அச்சொல்லாய்வு விரிவாக வளர்ந்திருப்பது தெரிகிறது. வேர்ச்சொல் ஆய்வுகள் ஒருவேரினின்று எவ்வாறு பல சொற்கள் தோன்றிப் பெருகியுள்ளன என்பதனை ஆராய்வதாகும். சொல் வரலாற்றை இலக்கிய வழக்காறுகளின் வாயிலாக ஆராய்கின்ற போக்கும் வளர்ந்துள்ளது.

| | | | |
|---|---|---|---|
| 1. | 'இல்' துளைத்தற் கருத்து வேர்ச்சொல் | இரா.மதிவாணன் | செ.செ : 56:369, 406,465,481,524 |
| 2. | சுரம்-ஜுரம்-சுரம் | இரா.இளங்குமரன் | செ.செ : 56:369, 436,418 |
| 3. | காரி, ஐவுளி, குட்டம் | இரா.இளங்குமரன் | செ.செ : 57:44, 56:309, 56:520, 56:201 |
| 4. | வெள்ளரிக்காய் | ப.அருளி | த.நி : 14.11.82 |
| 5. | தொடையும் குறங்கும் | ப.அருளி | த.நி : 5.12.82 |
| 6. | முடிப்பொருள் ஒன்றின் முந்தைய வடிவம் | ப.அருளி | தெ.மொ:19:3-4 |
| 7. | 'கூத்து' இதன் வேர்ச் சொல் யாது? | வீ.ப.கா.சுந்தரம் | செ.செ : 56:7 |
| 8. | கலைச் சொல் லாக்கப்பணி | கோவலங் கண்ணன் | க.சொ : 1:1 |
| 9. | சொல்லாற்றுப்படை | கோவேந்தன் | க.சொ : 1:1 |
| 10. | சொல்லாக்க நெறி முறைகள் | இரா.மதிவாணன் | க.சொ : 1:1 |
| 11. | சொற்பிறப்பியல் அகரமுதலி | இரா.மதிவாணன் | க.சொ : 1:1 |
| 12. | சொல்லை மீட்போம் | வளவன் | க.சொ : 1:2 |
| 13. | பாவாணர் கண்ட மொழி நூல் உண்மைகள் | இரா.மதிவாணன் | க.சொ : 1:2 |
| 14. | சொல்லும் பொருளும் | செழியன் | க.சொ : 1:2 |
| 15. | சொற்பொருளும் வேர்ப்பொருளும் | பொன்மதி | க.சொ : 1:2 |
| 16. | சொல்லுலா | பொன்மதி | க.சொ : 1:2 |

17. உலக மொழிகளில் தமிழ்ச் சொற்கள் — வளவன் — க.சொ : 1:2

18. மொழியகழ்வாராய்ச்சி — இரா.மதிவாணன் — க.சொ : 1:2

முதலிய சொல்லாய்வுக் கட்டுரைகள் புதிய வளர்ச்சியினைத் தனித்தமிழ்க்கு வழங்கி வருகின்றன.

சொற்படைப்பு; தொகுப்பு

எதையும் தனித்தமிழில் எழுதலாம், பேசலாம் என்னும் நிலை உருவாகப் புதியசொற்கள் பல படைக்கப் பெறவேண்டும். அவை வழக்காற்றில் இடம் பெற வேண்டும். இத்தகைய முயற்சிகள் பரவலாக அவ்வப்போது செய்யப்பட்டு வருகின்றன.

இத்தகைய சொற்கள் முன்னரே படைக்கப்பட்டிருந்து அவற்றை எடுத்தாளுவது, ஆங்கிலச் சொற்களை இடத்துக்கேற்ப மொழி பெயர்த்துப் பயன்படுத்துவது எனும் முயற்சிகள் காணப்படுகின்றன. அவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ள சொற்களில் சில.

1. திண் ஊர்தி—Heavy Vehicles
ஒருமையியல்—Monoism — குணா — தெ. மொ: 18;

2. இருட்பக்கம்—கிருஷ்ணபட்சம்
அழல்—கார்த்திகை — இறைக் குருவனார் — தெ.மொ: 18:9

3. சிவனியம்—சைவம் — கு. ச.
மாலியம்—வைணவம்
மெய்ம்மம்—தத்துவம் — ஆனந்தன் — தெ. மொ: 19:5
நிறுவப்பட்ட மதம்—Established Religion
காட்சிகள்—தரிசனங்கள்
இறையுண்மை—ஆத்திகம்
சமயக்கூறு—Cult
உயிர்க்கோட்பாடு—ஆன்மீகம்
மெய்யறிவு—ஞானம்
ஒழுகல்-ஆசாரம்
சைவக்கொண் முடிவு—சைவ சித்தாந்தம்

| | | | | |
|---|---|---|---|---|
| | மெய்மக்காட்சி—ஞானதரிசனம் | | | |
| | நோன்மைத்தன்மை— சகிப்புத்தன்மை | | | |
| 4. | ஒப்புரவு—சோசலிசம் | குணா | தெ. மொ: | 19;5 |
| 5 | கொலைநெறி—Terrorist | குணா | | |
| | நேர்க்குடி வரிமுறை— இரயத்துவாரி முறை | | அறிவியக்கம் | சூன் '82 |
| | நயன்மைக் கட்சி—நீதிக்கட்சி | ,, | ,, | |
| | குமுகம்—சமூகம் | | | |
| | முகாமையான—முக்கியமான | | | |
| 6. | கழிவாய்—ஆசனவாய் | பெ. குரு | குறளியம் | 1.8.82 |
| | குடல்வால்—Appendix | மூர்த்தி | | 1.9.82 |
| | வண்மைப் பொருள்கள்— Bill Rubin | | | 1.12.82 |
| | கரிவளி—கார்பன்-டை-ஆக்சைடு | | | 1.4.82 |
| | உயிர்வளி—பிராண வாயு | | | |
| | அமர்வுகள்—Yoga | | | |
| 7. | சில சட்டச் சொற்கள் | கு. ச. | குறளியம் | |
| | இதில் 491 சொற்கள் | ஆனந்தன் | | 1.3.82 |
| | படைக்கப்பட்டுள்ளன. | | | 1.4.82 |
| 8. | தலைப்புத்தாள்—Letterhead | கோ. முத்துப் | | |
| | கடிதத்தாள்—Letterpaper | பிள்ளை | | |
| | கலைக்கலன் செய்வோர்— Cabinet maker | | | மார்ச் 1982 |
| | அறைக்கலன் செய்வோர்— Furniture maker | | | ஆகச்டு 1982 |
| | திரட்சித் தொகை— Lumpsum | | செ. செ: | அக் 1982 |
| | புறநகர் எல்லைமுனை— Suburban Terminal | | | நவம் 1982 |
| | எல்லைமுனை—Terminal | | | |
| 9. | பொறியியல்துறை சொல்லாக்கம் (எ-டு) | பெரிய நாடார் | | க. சொ. 1:1 |
| | வினை முடுக்கம்—Accelarati on | | | |
| | குவிகோணம்—Acuteangle | | | |
| | நீரெதிர்ப்பு—Afflux | | | |

குமட்டம்—Arch
கப்பியம்—Ballast
பற்றம்—Battery
பிளக்கைப் பிரசம்—Block map
துளையீடு—Boring
தள்ளேறு—Bulldozer

| | | | |
|---|---|---|---|
| 10. | அடுகலை கலைச் சொற்கள்<br>அடுநர்—Cook<br>அப்பம்—Bread<br>இன்னப்பம்—Bun<br>அத்தாழம்—Supper<br>விருந்து—Dinner<br>பனிகம்—Ice | நக்கீரன்<br>(எ-டு) | க. சொ: 1:2 |
| 11. | கால்நடை மருத்துவக் கலைச்சொற்கள் | ச. சண்முக சுந்தரம் செயராசு நத்தானியல் | க. சொ: 1:2 |
| 12. | நூலகவியல் கலைச்சொற்கள் | வே. தில்லை நாயகம் | க. சொ: 1:2 |
| 13. | நாட்டுப்புறச் சொற்றொகுப்பு | ஆ. திருஞான சம்பந்தம் இராமையன் | க. சொ: 1:2 |

இத்தகைய முயற்சிகள் பல துறைகளிலும் நடைபெற்றுள்ளன. அவையனைத்தையும் ஒவ்வோராண்டும் தொகுத்துப் புதுப்புது அகரமுதலி வெளியிடும் பணி வெளிநாட்டில் நடைபெறுவதுபோல நடைபெற்றால் தனித்தமிழின் உண்மையான வளர்ச்சிப் புலப்படும். இங்குக் காட்டப்பெற்ற சொற்கள் சில எடுத்துக்காட்டுகளே. ஏராளமான சொற்கள் படைக்கப் பட்டுள்ளன, தொகுக்கப்பட்டுள்ளன. செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகரமுதலி பாவாணர் தொகுத்தது, வெளியிடப் பெறும் நிலையில் உள்ளது. இத்தகு சொற்களை வழக்காறு படுத்துவதும் அதற்கேற்ப படைப்பிலக்கியங்களை உருவாக்குவதும் உடனடியாகச் செய்யத்தக்கப் பணிகளாகும்.

## பாடல்கள்

தனித்தமிழில் இவ்வாண்டு இதழ்களில் வெளிவந்த பாக்கள் பெரும்பாலும் மரபு தழுவியே வந்துள்ளன. சிற்சில பாக்கள்

உரைவீச்சு, உரைப்பா, உரைப்பாட்டு என்ற பெயர்களில் 'புதுக் கவிதைகள்' ஆக வந்துள்ளன. இப்பாடல்களுள் சிலவே முழுமையான இலக்கியத்தன்மை நிரம்பப் பெற்றுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | திரு.வி.க. எனுந் தெய்வம் | பெருஞ்சித்திரனார் | தெ.மொ: 19:1 |
| 2. | மழையும் குழந்தையும் | பாவண்ணன் | தெ.மொ: 19:2 |
| 3. | பறவை மொழிப் புலவன் | ஒளியவன் | தெ.மொ: 19:2 |
| 4. | குழந்தை இல்லா வீடு | ம. நாராயணன் | தெ.மொ: 19:2 |
| 5. | நூறாசிரியம் | பெருஞ்சித்திரனார் | தெ.மொ: 19:3-4 |
| 6. | பள்ளிக்குப் போய்வா நீ, கண்ணே! | இரணியன் | தெ.மொ: 19:5 |
| 7. | சந்தனம் சாக்கடையாகுமா! | தி. நா. அறிவு ஒளி | மீட்: 2:3 |
| 8. | ஏன் என்றால் | சாலை இளந்திரையன் | அறிவியக்கம் சூன். 82 |
| 9. | விழிப்புணர்ச்சி, விழிப்புணர்ச்சி | சாலை இளந்திரையன் | அறிவியக்கம் மார்ச். 82 |

இவற்றுள் 6, 8, 9 ஆகியவை 'புதுக்கவிதை'களாகும்.

திரு.வி.க.வைப் போற்றும் பாடல் (தெ.மொ: 19: 1), அவரின் பெருமையை நயம்பெறக் கூறுகிறது. பிறருடன் அவரை வேறுபடுத்திக் கண்டு பெருமைப்படுத்துவது நல்ல அழுத்தத்தைக் கொடுக்கிறது.

''உணவும் உடையுமே வாழ்க்கையென் றுலவும்
உலுத்தர்க் கிடையிலும் ஊசையர்க்கிடையிலும்
பணமே நோக்கம் பகட்டே ஆக்கமெனும்
பன்னாடை மக்கட்கிடையிலும் வாழ்ந்த
குணமே வியஒரு கொள்கையின் குன்றம்;
குற்றமில் லாதஓர் வாழ்க்கையின் கூறு அவர்''

இவ் ஆண்டில் வந்த பாடல்களுள் கழக (சங்க) இலக்கிய மரபு தழுவிய பாடல்களையும் பார்க்கமுடிகிறது. பெருஞ்சித்திரனாரின் நூறாசிரியம் தொடர்ந்து பல ஆண்டுகளாக வெளியிடப் பெற்று வருவதாகும். இரண்டு தொகுதிகளுள் ஒன்று இவ்ஆண்டு நூலாக்கம் பெற்றுள்ளது. கழகப்பாடலுடன் ஒப்புமையுள்ள

அருஞ்சொற்கள் விரவி வரப்பெற்ற இன்றைய பொருளைப் பாடுகின்ற பாடல் காணப்படுகிறது (தெ.மொ 19;3-4).

இந்தியை எதிர்த்துக் குண்டடிபட்டு வீழ்ந்த அரசேந்திரனைக் கண்டு இவன்போல் நாம் செயல் ஆற்றவில்லையே என்று அறிஞரும், முதியோர், ஆடவர், தாயர், இளையோர்; பாவையர், உழையோர் ஆகியோரும் தத்தம் நோக்கில் எண்ணி அரற்றுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

''ஆற்றிலம் என்றே அழுங்கினர் சான்றோர்
நோற்றிலம் என்றே நொந்தனர் முதியோர்
பெற்றிலம் என்றே ஆடவர் புலம்பினர்
தாயர் ஆகிலம் என்றனர் தாயர்!''

என்னும் இப்பாடலில் கழகக் காலத்துக் குரல் ஒலிக்கின்றது.

இப்பாடலுக்குப் பொழிப்பும் விரிப்பும் ஆசிரியரால் எழுதப் பட்டுள்ளன. தன் பாவுக்குத் தானே உரையெழுதும் மரபு பழமையைப் பின்பற்றியதேயாகும்.

மழையில் நனைந்த படியே பள்ளிவிட்டு வந்த குழந்தையை அன்புடன் கடிந்தபடியே அதன் அழகைப் பாராட்டும் வகையில் பாவண்ணன் (தெ. மொ: 19;2) எழுதிய பாடல் இலக்கியமாய்ச் சிறக்கிறது.

''பன்னீர் என்று நீநினைத் தாயா
இல்லையேல் பால்மழை எனநினைத் தாயா?
... ... ... ... ... ... ... ... ... ...
குட்டிப் பெண்ணே கொட்டும் மழையினில்
உடல் நனைய வருவதில் இத்தனை மகிழ்வா?
பட்டுத் தெறிக்கும் கதிரவன் ஒளியில்
பட்டுச் சரிகை மின்னுதல் போலச்
சுட்டிப் பிள்ளையே உன்றன் விழிகள்
சுழன்று மின்னல் அழகே அழகடி''

ஓய்வு கொண்டிருந்த புத்தரைக் காணவந்த பார்ப்பனன் ஒருவன் அவரை வசைபாடுகிறான். அமைதியாக எல்லாவற்றையும் கேட்டிருந்து விட்டு, வீட்டுக்கு வரும் விருந்தினர் ஏற்காத விருந்து அளிப்பவனிடமே இருப்பது போல, ஏற்காத வசை மொழிகள் யாவும் கூறிய உனக்கேயாகும் என்று ''சந்தனம் சாய்க்கடையாகுமா?'' என்ற பாடலில் தி. நா. அறிவு ஒளி கூறுகிறார் (மீட்: 2;3).

இதில் அடுக்கடுக்கான உவமைகள் வந்து விழுகின்றன. ஒரு பாடலைச் சிறந்ததாக்குவதற்குத் தேவையான உவமைச்சிறப்பும் சொல்லாட்சியும் இதில் விளங்குகின்றன.

''தூங்கிக் கிடந்த பேரறிவு
துள்ளி விழித்தே எழுந்தாற்போல்
ஏங்கிக் கிடந்த வீட்டினிலே
இன்ப எழுச்சி விளைந்தாற்போல்
தேங்கிக் கிடந்த நாட்டினிலே
சீர்மையாற்றல் விழித்தாற்போல்
ஓங்கிக் கிடந்த கதிரினொளி
உச்சிக் கேறித் தீயிந்ததுவே''

ஏராளமான பாடல்கள் தமிழ்உரிமைக்காகவும், இயக்கத்திற்காகவும், புலவர்களைப் போற்றுவதாகவும், இன உணர்வை வளர்ப்பதற்காகவும், இந்தியை எதிர்த்தும், பகுத்தறிவுணர்த்தியும், சொல்வரலாறு கூறியும் எழுதப் பெற்றுள்ளன.

இத்தகைய பாடல்களுள் புதிய கோணமோ, இலக்கியத் தன்மையோ மிகுதியாக இல்லை. கருத்துக்கள் நேராகக் கூறப் படும் போக்கிலேயே இவை எழுதப்பட்டுள்ளன.

ஆனால் இடித்துரையாகவும் எச்சரிக்கையாகவும் வரும் பாடல்களின் வெளிப்பாடு வேகமாக உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | மன்னிய கொள்கை ஏழும் மலர்கவித் தமிழ் ஞாலத்தே | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :18:7 |
| 2. | வயங்கு தமிழ் வளர்ப்பதற்கு வன்முறை இயக்கம் ஒன்று தேவை | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :18:9 |
| 3. | வீரப்பன் வாயடங்க வேண்டும் | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :18:9 |
| 4. | சூலறுக்கக் கொண்டோம் நற்சூள் | ஒளியன் | தெ.மொ :18:9 |
| 5. | தக்கன செய்க | பாவண்ணன் | தெ.மொ :18:9 |
| 6. | தமிழீழ மறவரைத் தமிழால் வணங்குவேன் | பெருஞ்சித்திரனார் | தெ.மொ:18:10 |

| | | | |
|---|---|---|---|
| 7. | நந்தமிழ்ப் பரம் பரையே | கன்னல் | தெ.மொ:18:10 |
| 8. | தமிழரே உறங் காதீர் | கா.பொ.இரத்தினம் | தெ.மொ:18:10 |
| 9. | வருந்துழல்நெஞ்சமே | பெருஞ்சித்திரனார் | தெ.மொ:18:11 |
| 10. | விடுதலை வந்ததா? | தமிழவேள் | தெ.மொ:18:11 |
| 11. | இந்திக் கோட்டை யைச் சுக்கு நூறாக்குக | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :19:1 |
| 12. | தூக்கில் இட வேண்டாம் | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :19;1 |
| 13. | தமிழ் நாட்டின் இன்றைய நிலை | நாவை.சிவம் | தெ.மொ: 19:1 |
| 14. | உ.த.மு.கழகம் நிலைக்க | பெருஞ்சித்திரனார் | தெ:மொ :19:2 |
| 15. | ஏற்கமாட்டோம் அறிவீர் | இறைக்குருவனார் | தெ.மொ :19:2 |
| 16. | இனி எந்நாளோ? | கா.வில்லவன் | தெ.மொ :19:2 |
| 17. | எத்தனை நாள் பொறுத்திருப்பாய் | தமிழவேள் | தெ.மொ :19:2 |
| 18. | வா, வா! தமிழா! | ஆறுமுகம் | தெ.மொ :19:2 |
| 19. | தலைவன் வருவது எந்நாள்? | கன்னல் | தெ.மொ :19:1 |
| 20. | புதுப்பாட்டின் முத்திரையே | மணிமாறன் | தெ.மொ :19:2 |
| 21. | உ.த மு.க.வில் சேர்மின் | துலங்கொளி | தெ.மொ :19:2 |
| 22. | புன்னெறி போக்கி நன்னெறி நாட்டுக | கா.பொ.இரத்தினம் | தெ.மொ :19:2 |
| 23. | மெச்சும் பெரும் பணி | பெருஞ்சித்திரனார் | தெ.மொ:19;3-4 |

| | | | |
|---|---|---|---|
| 24. | துள்ளி எழுந்திடு | தமிழவேள் | தெ.மொ:19:3-4 |
| 25. | உழைப்போம்வாரீர் | மணிமாறன் | தெ.மொ:19:3-4 |
| 26. | அரபுநாட்டுக்கு அனுப்புக | செம்பியன் | தெ.மொ:19:3-4 |
| 27. | மக்கட் பண்பில்லார் மரம்போல்வர்! | பெருஞ்சித்திரனார் | தெ.மொ :19:5 |
| 28. | மறப்பேனோ? | கன்னல் | தெ.மொ :19:5 |
| 29. | தோற்றுவிப்போம், வெற்றி கொள்வோம் | கன்னல் | தெ.மொ :19:5 |
| 30. | பாவாணர் நூல்கள் கற்பீர்! | கு.பூங்காவனம் | மீட்:1:5-10 |
| 31. | குண்டு போட்ட சட்டம்! | மகிபை. பாவிசைக்கோ | மீட்:1:5-10 |
| 32. | எரிகிறது தங்கவயல் | து.மருது | மீட்:1:5-10 |
| 33. | திரு.வி.க. நம் கண்முன் | அ.பொன்னையன் | மீட்:2:1 |
| 34. | தமிழ் முனிவர் புகழ்வாழ்க | கு.பூங்காவனம் | மீட்:2:1 |
| 35. | ஈரோட்டுத் தந்தையார் | அ.பொன்னையன் | மீட்:2:2 |
| 36. | சொல்லா இல்லை | ம.இலெ.தங்கப்பா | மீட்:2:3 |
| 37. | செந்தமிழா எழுச்சி கொள்வாய் | அ.பொன்னையன் | மீட்:2:3 |
| 38. | திருமறைக்காடு | திருத்துறைக்கிழார் | மீட்:2:3 |
| 39. | பாட்டாளி போலித் தலைவர்களே எச்சரிக்கை! | பூமகன் | த.நி:5:12:82 |
| 40. | தமிழைக்காப்போம் | மணிமாறன் | செ.செ:57:3 |
| 41. | தமிழே நீயோர் கூர் வாள் | ம.நாராயணன் | செ.செ:57:3 |

| | | | |
|---|---|---|---|
| 42. | மறக்க ஒண்ணுமோ மறைமலைப் பெயரை | கா.கணபதி | செ.செ:57:3 |
| 43. | அருள்க தமிழே! | நிறைவாணன் | செ.செ:56:12 |
| 44. | பார்மின் நூல்கள் தேர்மின் | பொன்.முனியப்பன் | செ.செ:56:12 |
| 45. | சூளோடு கிளம்புக | மு.மகிழரசனார் | வல்லமை:4:1 |
| 46. | வாய்மூடிக் கிடக்காதே | மு.மகிழரசனார் | வல்:4:1 |
| 47. | அரசியல்காரர் பொதுநலத் தொண்டர் ஆவாரோ? | மு.மகிழரசனார் | வல்:4:4 |
| 48. | தமிழர் நிலை யிதுவோ | மு.மகிழரசனார் | வல்:4:4 |
| 49. | அடிமையாய் வாழ்வீரோ | மு.மகிழரசனார் | வல்:4:5-6 |
| 50. | நம்பிக்கை இல்லை | மு.மகிழரசனார் | வல்:4:5-6 |
| 51. | பார்ப்பனர் மேல் காழ்ப்புணர்ச்சியா? | கடுமைப் பித்தன் | வல்:4:5-6 |
| 52. | எங்ஙனம் வாழ் வோம் நெஞ்சே | மு.மகிழரசனார் | வல்:4:8 |
| 53. | வளர்தமிழைக் காப்போம் | கருமலைத்தமிழாழன் | வல்:4:9 |
| 54. | திருமரைக்காடு | திருத்துறைக்கிழார் | வல்:4:9 |
| 55. | எழுந்துவா முத் தமிழா | க.செல்வராசன் | வல்:4:9 |

தமிழ்மொழிப் பற்று இப்பாடல்களில் பெருக்கெடுத்தோடு கின்றது. தமிழைப் புறக்கணிக்கின்றவரைத் தாக்கும் வன்முறை தேவை, அத்தகையோரை ஒழித்துக் கட்டத்தான் வேண்டும் போன்ற உணர்ச்சிகள் வெடிக்கின்ற போக்குகளை இப்பாடல் களில் காண முடிகிறது.

இன உணர்வும், மொழிக் காப்புணர்வும் இந்தப் பாடல்களில் பெருகி வழிகின்றன. தமிழறிஞர்கள் உரியவாறு போற்றப்படு கிறார்கள்.

''மென்முறையாய் அன்போடும் அறிவோடும்
மிகச்சொல்லி மேந்தமிழை வளர்க்கும் பாங்கைப்
பன்முறையாய் விளங்கவைத்தும் பயனில்லை;
பாழ்மொழியும் பிழைமொழியும் பல்கக் கண்டோம்!
என்முறையாய்ச் சொன்னாலும் எழுதியுண்ணும்
எத்தர்களும் தாளகரும் இணங்க மாட்டார்!
வன்முறையாய் இயக்கமொன்று தேவையிங்கே;
வணிகரையும் வம்பரையும் வயக்கு தற்கே!''

பெருஞ்சித்திரனாரின் இப்பாடல் (தெ. மொ. 18:9)வன்முறைத் தேவையை வலியுறுத்துகிறது.

''உடன் பிறந்தே உடன் வளர்ந்தே ஒண்தமிழ்த்தாய் மகவாகித்
தடமாறிப் போனவரின் தலைகளுக்கும் மொட்டையிட்டு
இடமின்றி அலகுகுத்தி எருக்கம்பூ மாலையிட்டு
அடலேறு பின்தொடர அணிவகுத்தால் தடுக்குவமோ?
நினைவுக்குள் ஒருகோடி நிலவாய்ச் சுவைக்கின்ற
எனையாளும் செந்தமிழின் ஏற்றம் சிதைக்கின்ற
வினைகழுதைக் கூட்டத்தின் விலாஎலும்பை எடுத்தே
கனைக்கும் தோல்கருவி கனிக்க முழங்கேமோ?''

தமிழின் மீதிருக்கும் அடங்காத பற்றினால் பழிவாங்கும் உணர்வும் வெடித்துக் கிளம்புவதைக் கன்னலின் பாட்டில் (தெ. மொ: 19:5) காணலாகும்.

தமிழீழம் மலர்வதையும் இப்பாடல்கள் வரவேற்கின்றன. ஊக்கப்படுத்துகின்றன. கனியமுதன், செ. பன்னீர் செல்வம், தமிழ் நெஞ்சன், தவமுத்து, அண்ணாமலை (வல்லமை: 4:8) போன்றோரின் பாடல்கள் இத்தகையன.

''தேசிய வீரத்தின் தொகுப்பன்றோ, அன்னவர்!
தமிழீழ நலத்துக்குத் தம்நலம் தின்னவர்!''
தவறிலா விடுதலைப் புலிகளைத்—தமிழீழ
உரிமை வேள்விக்கு உயிர்தரும் இளைஞரை
..........................................
விலையில் லாதஅவ் வீர உயிர்களைத்
தலைதரை தாழ்த்துத் தமிழால் வணங்குவமே''

என்னும் பெருஞ்சித்திரனார் பாடல் வரிகள் (தெ. மொ: 19:1, 18:10) விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாய் வெளிப்படுகின்றன;

அவர்களைத் தூக்கில் இட வேண்டாம் என வேண்டுகின்றன. தனித்தமிழில் மலர்ந்துள்ள பாடல்களில் இந்திய தேசியம் பேசுவது பாடுபொருளாகக் கொள்ளப்படவில்லை. மாறாகத் தமிழ்த் தேசியம் பாடுவதையும் உரிமை கேட்பதையும் பார்க்க முடிகிறது. (தெ. மொ. 19:2, 18:11)

தமிழினத் தலைவர்கள் தாக்கப்படும்போது எரிமலையாய் வெடிக்கும் உணர்வுப் பாக்களையும் தனித்தமிழ் ஏடுகள் படைத்துள்ளன. [வீரப்பன் வாயடங்க வேண்டும். தெ. மொ: 18;9)

தமிழின் சொல் வளத்தை அறிவுறுத்துவனவாகவும், தமிழ்ப் பெயர் வரலாற்றை உணர்த்துவதாகவும் சில பாடல் விளங்குகின்றன. (தங்கப்பா: மீட்: 2;3 திருத்துறைக் கிழார்: 2:3)

## புதுப்பாக்கள்

அளவிறந்த வடமொழிச் சொற்களைக் கலந்து எழுதுவது 'புதுக் கவிதை' என்பதை இலக்கணமாகவே ஆக்கிவிட்ட இந்நாளில் தனித்தமிழில் வெற்றியுடன் பல 'புதுக் கவிதைகள்' படைக்கப்பட்டுள்ளன. 'புதுக் கவிதை'யைத் தனித்தமிழியக்கம் எதிர்த்து வந்த போதிலும் அத்தகைய பாக்களை, உரைப்பா, உரைப்பாட்டு, உரைவீச்சு என்னும் பெயர்களில் சிற்சில சமயங்களில் வெளியிடுவதை வழக்கமாய்க் கொண்டுள்ளனர்.

தனித்தமிழ் இயக்கத்தைச் சாராத சாலை. இளந்திரையன் 'சுட்டி' இதழ்ப் பாவலர்கள் ஆகியோரிடையே தூய தமிழ் உரை வீச்சுகளைப் பார்க்க முடிகின்றது. பிறமொழிச் சொற்கள் தேவைப்படாமாலயே இத்தகையோர் தங்கள் படைப்புகளை வெளியிட்டிருக்கின்றனர்.

"பல்பொடி கொடுக்க
முப்பத்து நான்கு
ஆண்டுகள்
பசித்த வயிறுகளுக்கு
உணவு வழங்க
இன்னும் எத்தனை
ஆண்டுகள்?"

என்னும் உரைப்பாவில் எசு. தவமணியும் (சுட்டி 16),

"ஏண்டா
செல்வமே அழுகின்றாய்?
இன்னைக்கொரு நாள் பொறுத்துக்கோ
நாளை முதல்

பாலும் சோறும் உனக்குப்
பாங்காய்த் தருகிறேன்'' என்றாள் பாரதத்தாய்
''இன்றுகூழ், நாளைபால்''—எனச் சொல்லியே
இளைய பாரதத்தை எலும்பும் தோலுமாய்
வளர்த்துவிட்டாள், வறுமைத்தாய்''

என்னும் உரைப்பாவில் பட்டுக்கோட்டை 'சுரனு'ம், வறுமையைப் பாடுவதில் வெற்றி கண்டுள்ளார்கள்.

பாரதிப்ரியாவின் 'மிளகாய்' எனும் 'புதுக்கவிதை'

''முன்பெல்லாம்
சாப்பிட்டால்தான்
வாய் எரியும்
இப்போதோ
விலை கேட்டாலே
வாயும் வயிறும்
பத்தி எரிகிறதே''

என்று விலையேற்றை அழுத்தமாகச் சாடுகின்றது.

புரியாத நடையில் பிறமொழிச் சொற்களை அளவில்லாமல் பயன்படுத்துவதும், ஆங்கிலச் சொற்களை அதே எழுத்துகளில் பயன்படுத்தி எழுதுவதும் 'மரபு' எனும் நிலை இங்கே வீழ்த்தப் பட்டு, தனித்தமிழைக் கொள்கையாக ஏற்காதவரிடையே கூட தனித்தமிழ்ப் 'புதுக்கவிதை' வெற்றியடைந்துள்ளதைக் காண முடிகிறது. திண்டுக்கல். அ.உசா எழுதிய உரைப்பாக்களும் (தமிழ்ச்சுடர்), பழனி : 3 : 5) புதுப்பா ஏடுகளில் தனித்தமிழ் வண்ணம் பதிப்பவையாக உள்ளன.

'ஆறு'

'' மணலெனும் மங்கையும்
நீரெனும் மணாளனும்
எத்துணை எத்துணை
தடைகள் வரினும்
தாம் பிரியாமல்
இணைந்தே ஓடி
கடலெனும் வீட்டினுள் புகுவது. ''

சாலை. இளந்திரையன் 'உரைவீச்சு' என்ற பெயரில் நூல்களும் வெளியிட்டுள்ளார். தனித்தமிழ் நடையிலும் பல 'உரை வீச்சுகளை' வெளிப்படுத்தியுள்ளார். அவரது 'ஏன் என்றால்'

எனும் உரைவீச்சு (அறிவியக்கம், மார்ச்சு—1982) சிறந்த இலக்கியத் தன்மைகளைக் கொண்டுள்ளது.

**தனித்தமிழ் விழாக்கள்; கருத்தரங்குகள்**

தமிழ்நாட்டின் பல இடங்களிலும், புதுச்சேரியிலும், பெங்களூரிலும் தனித்தமிழ் வளர்க்கக் கூடிய பல விழாக்கள் — கருத்தரங்குகள் — பட்டி மன்றங்கள் — பாட்டரங்குகள் நடந்துள்ளன. தனித்தமிழ் நடை, மக்களின் செவிகளை அடைவதற்கும் தனித்தமிழின் தேவையை அவர்கள் உணர்வதற்கும் அவை பயன்பட்டன. தனித்தமிழ்க் கொள்கைக்காகப் பாடுபட்ட அறிஞர்களைப் போற்றுவதாகவும், திருக்குறளை ஆராய்ந்து பரப்பும் வகையிலும், இதழ் வெளியீடு, சொல்லாய்வு, இயக்கத் தொடக்கம் போன்ற வகைகளிலும் இத்தகைய தனித்தமிழ் விழாக்கள் நடந்துள்ளன. இவற்றுள் முதன்மையாகப் பெருஞ்சித்திரனார் கலந்துகொண்ட விழாக்களே மிகுதியாகும். பத்து நாள் தொடர்ச்சியாகப் பவானியில் நிகழ்ந்த திருக்குறள் தொடர் சொற்பொழிவு குறிப்பிடத் தக்கதாகும். அத்தகைய விழாக்கள் நடந்த விளக்கம் :

| | | | |
|---|---|---|---|
| 1. | பாவாணர் பிறந்தநாள் விழா | உ.த.க. நெய்வேலி | 21-3-1982 |
| 2. | மறைமலையடிகள் விழா | உ.த.க. தெ.ஆ.மா, கடலூர் | 18-7-82 |
| 3. | பாரதிதாசன் விழா | திருக்கோவிலூர் ஒன்றிய பகுத்தறிவாளர் கழகம் | 8-5-82 |
| 4. | பாரதிதாசன் விழா | முச்சங்கம்-சென்னை | 15-5-82 |
| 5. | பாவேந்தர் தமிழியக்க மாநாடு | பாவேந்தர் தமிழியக்கம் ஒரத்த நாடு | 29, 30-5-82 |
| 6. | பாரதிதாசன் விழா | சோழலிங்கபுரம் | 3-6-82 |
| 7. | பாரதிதாசன் விழா | முத்தமிழ் மன்றம், சேசசாயி தாளாலைக் குடியிருப்பு | 23-5-82 |
| 8. | தமிழ் ஆய்வரங்கம் | புதுச்சேரி | 30-5-82 |

| | | | |
|---|---|---|---|
| 9. | திரு. வி. க. நூற்றாண்டு விழா | தமிழர் பேரவை, சூலூர் | 9-9-82 |
| 10. | திரு. வி. க. நூற்றாண்டு விழா | தனித்தமிழ்க் கழகம், புதுச்சேரி | 31-10-82 |
| 11. | மறைமலையடிகள் நினைவுக் கருத்தரங்கம் | தனித்தமிழ்க் கழகம், புதுச்சேரி | 12-9-82 |
| 12. | திரு. வி. க. நூற்றாண்டு விழா | பாவாணர் பயிற்றகம் புதுச்சேரி | 19-9-82 |
| 13. | பாவாணர் படத் திறப்பு, 'தமிழ் கடன் கொண்டு தழைக்குமோ?' நூல் வெளியீடு | தமிழ்ச்சங்கம் பெங்களூர் | 17-10-82 |
| 14. | வீர வணக்க நாள் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கல் | தமிழக ஆய்வரன் பெங்களூர் | 26-1-82 |
| 15. | சொல்லாய்வுச் சுற்றுக் கூட்டம் ஏழு தொடர்கள் | ப. அருளி ஆய்வு | 7-2-82 முதல் 5-10-82 வரை |
| 16. | சொல்லாய்வுக் கருத்தரங்கம் | இரா. மதிவாணன் அகர முதலித்துறை சென்னை | 10-9-82 |
| 17. | பாவாணர் சொல்லாய்வுக் கருத்தரங்கு | ,, | 1-6-82 |
| 18. | உ.த.மு.க மாவட்டத் தொடக்கவிழா | தெ.ஆ மா.உ.த.மு.க. | 9-5-82 |
| 19. | உ.த.மு.க கிளைத் தொடக்கம் | திருவலஞ்சுழி | 15-8-82 |
| 20. | 'மாயூரம்' பெயர் மாற்றம் | த.நா. அரசு மயிலாடுதுறை | 28-6-82 |
| 21. | மா. இளங்கண்ணன் பாராட்டுவிழா | சிங்கப்பூர் எழுத்தாளர் கழகம், சிங்கப்பூர் | 24-10-82 |

| | | | |
|---|---|---|---|
| 22. | தமிழியக்கம் மாவட்ட கூட்டம் | சென்னை | 11-7-82 |
| 29. | 'புதுச்சேரி அரசு தமிழ் வளர்ச்சித்துறை அமைக்க வேண்டும்' கருத்தரங்கம் | தனித்தமிழ்க் கழகம் புதுச்சேரி | 23-5-82 |
| 30. | மொழி ஞாயிறு பாவாணர் விழா | தனித்தமிழ்க் கழகம் புதுச்சேரி | 14-3-82 |

### பிற பணிகள்

தனித்தமிழ் வளர்ச்சிக்காகப் பல பணிகள் நடைபெற்றுள்ளன. நூல்கள், இதழ்கள் மட்டுமன்றித் தனித்தமிழ் உணர்வு பரவுவதற்காகவும் மக்கள் அதனைப் பின்பற்றுமாறு செய்வதற்கும் பல முயற்சிகள் நடந்துள்ளன.

### திருவள்ளுவர் நாள்காட்டி

நெய்வேலி உலகத் தமிழ்க்கழகம் ஆண்டு தோறும் நாள்காட்டி (காலண்டர்) வெளியிடும் பணியை மேற்கொண்டு வருகிறது. அதன்படி இவ்வாண்டும் வெளியிடப்பெற்றுள்ளது. இந்நாள்காட்டி திருவள்ளுவர் ஆண்டையும், தனித்தமிழ் மாதங்களான சுறவம், கும்பம், மீனம், மேழம், விடை, இரட்டை கடகம், மடங்கல், கன்னி, துலை, நளி, சிலை ஆகிய வழக்காற்றையும் பின்பற்றுவதாகும். ஆண்டுப் பிறப்பாகச் சுறவ(தை)த் திங்களே கடைப்பிடிக்கப் படுகிறது. நாள் எண்களைத் தமிழ் வரிவடிவத்தில் இது குறித்துள்ளது. அவற்றின் நடுவில் 'இந்தோ அராபிய' எண்களும் சிறிய வடிவில் விளக்கத்திற்காகப் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்நாள் காட்டியில் தனித்தமிழ் அறிஞர்களின் கருத்துரைகள் இடம் பெற்றுள்ளன. தமிழ் அறிஞர்கள், உலக அறிஞர்களின் பிறந்த நாளும், மறைந்த நாளும் குறிக்கப்பட்டுள்ளன. நடைமுறையில் பயன்படுத்தத்தக்க தனித்தமிழ்ச் சொற்கள் பலவும் ஆங்காங்கே கொடுக்கப்பட்டுள்ளன. இப்பணி, தனித்தமிழ் பரப்புவதில் சிறந்த பங்கினைச் செய்து வருகிறது.

### தனித்தமிழ் இதழ்கள்

முன்னரே நடைபெற்று வரும் தென்மொழி, தமிழ்ச்சிட்டு செந்தமிழ்ச் செல்வி, குறளியம், மீட்போலை போன்ற இதழ்கள் தனித்தமிழுக்குப் பாடுபட்டு வருகின்றன. இவ்அணியில் புதிய இதழ்களும் இவ்ஆண்டு சேர்ந்துள்ளன.

1. தமிழ்நிலம்:

இது 'தென்மொழி' ஆசிரியர் பெருஞ்சித்திரனாரைச் சிறப்பாசிரியராகக் கொண்டு உலகத் தமிழின் முன்னேற்றக் கழக வெளியீடாகச் சென்னையிலிருந்து வெளி வருகிறது. 7-11-82 முதல் இது வெளி வருகின்றது. தனித்தமிழ் இதழ்கள் அனைத்தும் மாத இதழாக வருகையில் இது கிழமை (வார) இதழாக வருவது தனித்தமிழ் வளர்ச்சியைக் காட்டுகிறது.

2. கலைச்சொல்:

இரா. மதிவாணனைச் சிறப்பாசிரியராகக் கொண்டு வெளி வரும் காலாண்டிதழ் இது. தனித்தமிழுக்கு வலிமை சேர்ப்பதற்காகவே கலைச்சொல் ஆக்கும் பெரும் பணியில் சிறப்பாக வெளியிடப்படுவது இவ்இதழ். இது 18-4-82 முதல் வெளிவந்து கொண்டிருக்கிறது.

3. வல்லமை:

இடையில் நின்றுபோன இவ்இதழ் மீண்டும் சூலைத் திங்கள் 1982 முதல் வெளிவரத் தொடங்கியுள்ளது. மாத இதழான இதன் ஆசிரியர் மு. மகிழரசனார். சிறுகதைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருவது இதன் தனித்தன்மையான பணியாகும்.

எவர் எத்தகைய கலவைத் தமிழில் எழுதினாலும், இலக்கியம் என்ற பெயரால் எழுதிக் குவித்தாலும், குன்றனைய பொருள் நிறைத்தாலும் நாளை அதன் பின்னாளை ஆளப்போவது தனித்தமிழே. மணிப்பவள நடை தோற்றதுபோல இன்றைய 'ஆங்கிலத் தமிழும்' ஒழிந்துபோகும். இதற்குத் தனித்தமிழன்பர்கள் முனைப்பான முயற்சிகளில் தாழாது, அயராது ஈடுபடல் வேண்டும்.

இடைக்காலத்தில் எழுந்த எத்துணையோ இலக்கியங்கள் மதிக்கப் பெறாமல் திருக்குறள் மதிக்கப் படுவது போல், கதையிலக்கியங்களைவிடக் கழக இலக்கியங்கள் முழுமையாக மதிக்கப்படுவது போலும் அவற்றினுஞ் சிறப்பாகவும் தனித்தமிழ் மதிக்கப்படும், பின்பற்றப் படும். முயற்சி வெல்லும்.

உண்மையான தமிழ் தனித்தமிழ் என்று அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படுவது தனித்தமிழ்தான். இதன் பன்முக வளர்ச்சி தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறந்த தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது தெளிவு. செய்தித் தொடர்புக் கருவிகளையெல்லாம் இழந்துவிட்ட நிலைமையில் நம் கருத்து வலிவாகப்

பரப்பப் பெறவில்லை. அக்கருவிகளைக் கைப்பற்றினால் குறுகிய காலத்தில் தனித்தமிழ் வளர்ந்துவிடும், பரவிவிடும். இறந்த வட மொழிக்கு எல்லாரும் பணமிறைத்துக் கருவிகளை ஈடுபடுத்திப் பாடுபடுவது போல இல்லாவிட்டாலும், ஒரு சிறிதாவது செய் தாலே இது வென்றுவிடும்; தமிழ்நாடு முழுமலர்ச்சி பெற்றுவிடும் என்பது உறுதி.

குறிப்பறிதல்

| | | |
|---|---|---|
| தெ. மொ | — | தென்மொழி, சென்னை |
| த. நி | — | தமிழ்நிலம் ,, |
| வல் | — | வல்லமை ,, |
| செ. செ | — | செந்தமிழ்ச் செல்வி ,, |
| மீட் | — | மீட்போலை, பெங்களூர் |
| க. சொ | — | கலைச்சொல், சென்னை |
| உ. த. க | — | உலகத் தமிழ்க் கழகம் |

# 15. COMPARATIVE LITERATURE

—*R. BABU SIVARAJA KIRUBANITHI*

*One of the most interesting and salutary developments in Tamil over the past few years has been the growing readiness of the scholars to venture on the comparative study between Tamil writers and others. By introducing a paper in comparative Literature at the under graduate level itself, at least for the English and Tamil literature students in our universities, we can hope to over come the handicap, ie., the inadequate acquaintance with the comparative method, in the long run.*

Comparative literature is a comparision between two or more national literatures and is also a study of literature on the one hand, and other distinct areas of knowledge, on the others This is borne out by the definition given by Prof. Henry H.H. Remak :"Comparative Literature is the study of literature beyond the confines of one particular country, and the study of the relationships between literature on the one hand and other areas of knowledge and belief, such as the arts (e.g.painting, sculpture, architecture, music), philosophy, history, the social sciences (e.g.politics, economics, sociology), the sciences, religion, etc., on the other. In brief, it is the comparision of one literature with another or others, and the comparision of literature with other spheres of human experiences". Francis Jost divides its scope into four contiguous areas : (i) Influences and Analogies, (ii) Movements and Trends, (iii) Genres and Forms, and (iv) Themes, Motifs and Types. Some should consider "translations" as a separate branch. However, they come under "influences". as they are the best intermediaries between any two literatures. It is keeping these points in view he critical survey on the works of in Comparative Literature Tamil during the year 1982 has been undertaken.

One of the most interesting and salutary developments in Tamil over the past few years has been the growing readiness of the scholars to venture on the comparative study between Tamil writers and others. There are a few good articles in *Ayvukkōvai* (Vol.1 ed. by Dr. S. Agathiyalingam et al). J. Victor, in his brief paper "Tamiḻil oppīṭṭu Āyvu Varalāṟu" has traced the origin and developments of Comparative Literature in Tamil. His contention is that Comparative Literature is as old as Tamil Literature in that *Tolkāppiar* himself has compared the literature and grammar of Tamil with Sanskrit. He, however, admits that only after the impact of English, Comparative Literature as such has developed as a distinct discipline in Tamil. The paper makes references to Cauldwel, N.K.Sidhandha, G.Vaiyapuri-pillai, V.V.S. Iyer, Dr. V. Sp. Manickam, Dr. K.Kailasapathy (who passed away last year) and a few others. The paper, unfortunately, has several gaps. Dr. V. Sachidanandan's contribution to the study of Comparative Literature has not been referred to at all, leave alone discussed. It is thanks to his patient and persistent effort a number of scholars in our universities have taken to comparative studies. References also have not been made to the contributions made by G.U. Pope, Dr. M. Varadarajan, Dr. T.P. Meenakahisundaran and Rama Periakarupan. In recent years Dr. S.V. Subramanian, Dr. Annie Thomas and Dr. N. Ghadigachalam of International Institute of Tamil Studies, and Dr. K.Chellappan of Bharathi-dasan University, have been guiding a few scholars working for their doctorate in Comparative Literature. It is sad to think that in the survey their efforts have not been mentioned even in passing. It is heartening to learn that Dr. P. Marudanayagam, Reader of English, Madurai Kamaraj University has undertaken the research project "Comparative Literature in Tamil Nadu–A Critical Survey". When published the work will certainly be a source of encouragement for future students of Comparative Literature.

Analogy studies seem to attract more scholars. Analogy is a parallel study of two writers without necessarily implying a direct relationship. Comparatists have pointed out that a comparative study of two authors or their work belonging to

two different cultures separated by time and space with no imaginable influence on each other, can be aesthetically rewarding, if it is carried out on the basis of accepted methodology and not impressionism. A few writers have kept this point in their mind and their studies are quite interesting and they present future possibilities for prospective scholars to do more detailed and thorough research. Indrani Manian's "Nālaṭiyārum Umar Kayyāmum Kūṟum Nilaiyāmai Paṟṟiya ōr Oppāyvu" is a perceptive study bringing out the theme of mortality and impermanence in *Nālaṭiyār and The Rubaiyats*. In the course of her study she has pinpointed the Tamil work's emphasis on the theory of *Karma*. "Vaḷḷuvarum Confuciusum Kaṇṭa Uyarntōr" by K. Mohanraj succintly presents the similarities and dissimilarities in their respective views on the characteristics of an ideal person or nobleman.

There are a few illuminating articles in the commomorative volume of the 22nd Conference on *Tirukkuṟaḷ*, held in Jaffna, Sri Lanka. K.S. Mettasmoil's Vaḷḷuvattil Araciyal Cāṇakkiyam points out that the political ideas expressed in *Kuṟaḷ* are not much different from those of *Arthaśāstra*. Padmanathan's "Platōvum Tiruvaḷḷuvarum" compares the ideas of the Greek Philosopher and the Tamil seer. V.K. Sivaprakasam, in his "Vaḷḷuvamum Quintilionum" brings out the parallels in their thoughts on education and rhetoric. T. Kangarathinam's "Tiruvaḷḷuvarum Cāṇakkiyarum" throws light on the similar stands taken by the two great thinkers on political philosophy and economic thought. According to the author both the writers are quite pragmatic in their ideas.

Pi. Sri's *Socratesum Vaḷḷuvarum* (published in 1981) is a detailed analysis of the philosophy and ethics of Socrates and Tiruvaḷḷuvar. The author shows that both of them believe in righteous conduct, all embracing love and humility being the guiding principles of man's life. But it cannot be said that their thoughts are identical. As the author points out, they sometimes express diametrically opposite views. Socrates is prejudiced against politicians whereas Vaḷḷuvar maintains that politicians have an important role in educating the citizens of a country and in reforming them. The book is indeed a valuable contribution.

*Gandhi Aṭikaḷum Kamparum* : Ma. Po. Si. analyses a few comparisions in the ideals of Kamban and the Mahatma. The seventh essay will be of much relevance and interest to the students of Comparative Literature. It is a talented presentation of the views of V.V.S. Iyer which established that Kamban excels even Valmiki.

Comparatists think that the growth of literature has been perennially stimulated by ideas borrowed by writers consciously or unconsciously, whether the source of the ideas is foreign or native. Influence studies, therefore, presuppose direct causal relationship between the emitter and the receiver. In Ulrich Weisstein's view the concept of influence is based on the theory that "it posits the presence of two distinct and therefore comparable entities : the work from which influence proceeds and that at which it is directed". A few scholarly works have appeared in 1982 keeping the concept of influence in mind.

*Journal of Tamil Studies* in its twentifirst number carries two learned articles. Prof P. Tirugnanasambandhan's "Contact Between Maharastri Prakrt and Tamil with Reference to Hala's Sattasai and the Tamil cañkam classics" brings out the close similarities between the *Sattasai* and the *Kuruntokai* and *Akanāṉū ṟu* in regard to the type of composition. He convincingly argues that the similarities point to a common poetic convention that was shared by the Tamil classics and the *Sattasai* written in Maharastri Prakrt. Dr. A. Pichai, in his paper on the "Sanskrit Influence on the Tamil Metrics" traces the impact of Sanskrit prosody on Tamil Versification. The paper plausibly presents the view that Sanskrit prosody has influenced Tamil metrical system to some extent. "Sanskrit prosody has acted as a positive catalyst to the change and development of Tamil metres". S.N. Srirama Desikan's *Irumozhi Ilakkiya Inbam* (1981) is a collection of essays drawing attention to the beauties in Sanskrit and Tamil literature and instituting appropriate comparisions. The essays are revealing ones, emphasising how ideas in Sanskrit literature have found their way in Tamil Classics—*Tirukkuṟaḷ*, *Pattuppāṭṭu*, *Eṭṭuttokai*, etc. One essay details how the writers of the Cañkam Age were proficient in Puranic Stories and used them, with suitable

variations according to the times as similes, and points out that this is indicative of the harmony that prevailed in the past in the fields of literature and religion as well. In one article the author deals with the problems one meets with in translation. In the last article there is a detailed comparision between Valmiki and Kamban in regard to the Balakanda, Chapter by Chapter. The students of Comparative Literature will find the book of special interest. It is quite relevant here to quote from J. T. Shaw who has observed : "An author may be considered to have been influenced by a foreign author when something from without can be demonstrated to have produced upon him and/or his artistic works an effect his native tradition and personal development do not explain." There exist two schools of thought in Tamil Literary world with regard to the influence of Sanskrit writing on Tamil Literature. Some scholars acknowledge Sanskrit influence and others deny outright. It is quite a challenging task to dispassionately aim at finding out whether Tamil Classics were subjected to Sanskritic influence or not.

M. Arunachalam's *Iḷampūraṇar*, a compendium of three endowment lectures delivered earlier at the Annamalai University, attempts to deny Sanskritic influence on Iḷampūraṇar, who is generally considered the first Commentator of *Tolkāppiyam*. The work, a scholarly one, will be of great use to research scholars. *Kampan Ilakkiya Uttikaḷ* by Dr. S. V. Subramanian, is an attempt to analyse and assess the literary techniques followed by Kampan, in terms of modern literary criticism. He seeks to categorise Kamban's literary devices with reference to the definitions and explanations contained in *The Princeton Encyclopaedia of Poetry and Poetics* and *Dictionary of World Literary Terms* by Joseph T. Shiply. By means of comparison with other epics and literature of our country, the author comes to the conclusion that many of Kampan's devices are his creations. The book is a laudable attempt disclosing the pains taking effort to gather all the relevant material and subject them to critical scrutiny.

The study of literary genres combines literary history and literary theory in an international context, according to

comparatists. It aims at the discovery of the principle which unites different literary forms under the same generic label. It aims also at the history of the same genre in two different countries in order to discover the changes it undergoes. There is ample scope for scholars to extensively investigate the major genres in Tamil vis-a-vis their counterparts in other literatures. Kala's "Pratāpa Mutaliār Carittiram, Rajasekara Carittiram; ōr oppāyvu" is a good example of the study of literary genre. The paper examines the common fictional element in both the trail-blazing and pioneer novels in Tamil and Telugu. T. Eswara Pillai's "Tamil, Malayala, Sanskrit Tūtu Nūlkaḷ - Oppunōkku" merits one's attention in that it enables the reader to see the general parallels and unique nature of 'the genre of message poems' among the three literatures. The article, though short, examines the standard ingredients of the genre of message poems.

During the centenary celebrations of Bharati, a number of articles on him and his writings were published. But only a few attempt comparison of Bharati with other poets afresh. Two papers stand out. "Bharati and Whitman: A page from Indo-American Literary Relations" brings out the striking similarities between Bharati's "Tāyin Maṇikkoṭi" and Whitman's "Song of the Banner at Day-break," particularly in the use of certain images. Dr. V. Sachidanandan establishes through an analytical comparison the fact that the affinity between the two poems is more than aesthetic. The other one that can be profitably read in conjunction with this is Dr. G. John Samuel's "WhitmanumBharatiyarum". The author argues that as the sensibilities of both the poets blossomed more or less in similar social background there are a number of comparative aspects in their creations. Both the poets believe in the permanance and the reality of the world. The study adds a new dimension to the already familiar area of comparative study made fertile by the critical writing of Dr. V. Sachidanandan.

The survey will be incomplete without a reference to the Department of English and Comparative Literature, Madurai Kamaraj University which still continues to be the dominant

இராமனாதன் அவர்கள் எழுதிய இந்த நூலும் அமைந்து, குழந்தைகளுக்கு நீதி போதிக்கின்றது. உலகம் போற்றும் திருக்குறளின் திரண்டகருத்தோடு, திகட்டாத கதை ஒன்றையும் கூறுகிறது. முதலில் குறள், பிறகு கருத்து, அதன் பிறகு க்தை என்ற அமைப்பில், ஒவ்வொரு தலைப்பிலும் ஒரு கதை உருவாக்கப்பட்டிருக்கிறது. இருபத்து மூன்று கதைகள் இந் நூலில் இடம் பெற்றுள்ளன. எளிய இனிய நடையில், மனத்தில் பதியத் தக்க வகையில் கதையின் ஓட்டம் அமைந்திருக்கிறது. வண்ண முகப்பு நம்மைக் கவர்கிறது.

குறள் கதைகள்: இந்த நூலும், மேற்சொன்னபடி கதை வடிவில் குறள் கருத்தை மனத்தில் பதிய வைக்கிறது. ஒவ்வொரு கதையும் சுமார் இரண்டு பக்க அளவில், மிகவும் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கதைக்கும் படம் இருக்கிறது. இதில் முப்பது கதைகள் உள்ளன. வள்ளுவரே கதைசொல்லும் பாணியில் அமைந்துள்ளது இந்நூல். ஒவ்வொரு கதையின் முடிவிலும் கொட்டை எழுத்தில் திருக்குறள் அச்சிடப் பட்டிருக்கிறது. இக்கதைகள் குழந்தைகளை வெகுவாகக் வரும் என நம்பலாம். நூலாசிரியர் மா.பா. குருசாமி அவர்களின் முயற்சி போற்றத்தக்கது.

பாலர் இராமாயணம்: தலைப்பிலிருந்தே இது என்ன கதை என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். பழம் பெரும் இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம் போன்ற கதைகளை, நாளையத் தலைமுறைகளான இன்றைய குழந்தைகள் அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும். பாலர்க்குப் புரியும் வண்ணம் இந்தக் கதையை வசந்தா இராமனாதன் அவர்கள் எழுதியிருக்கிறார். கதையின் துவக்கத்தில், ''இராமர் கதையை ஏன் படிக்க வேண்டும்?'' என்று ஆசிரியர் ஓர் முகவுரை வழங்குவது, கதையை ஊன்றிப் படிக்க ஓர் திறவுகோலாகும். ''பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் அனைவருமே நிறைய கதைகளைப் படிக்க வேண்டும். அறிவூட்டும் கதைகளாக-நீதிகளை உணர்த்தும் கதைகளாக-ஒழுக்கத்தைப் போதிக்கும் கதைகளாக சிந்தனையை வளர்க்கும் கதைகளாகத் தேடிப் பிடித்துப் படிக்க வேண்டும்'' என்ற ஒரு நல்ல கருத்தை ஆசிரியர் கோடிட்டுக் காட்டுகின்றார். மாணவ மணிகளின் மனத்திலே நல்ல கருத்துக்களை விதைக்க இந்நூல் பெரிதும் உதவும். கதைக்கேற்ப இன்னும் சில படங்களை இதில் சேர்த்திருக்கலாம்.

**பாலர் மகாபாரதம்:** இதுவும் வசந்தா இராமனாதன் அவர்கள் எழுதியதே. இதிலும் கதைக்கு முன்னே, 'தர்மம் வெல்லும் அதர்மம் வீழ்ச்சியுறும்' என்ற தலைப்பில் மகா பாரதம் என்ன சொல்லுகிறது என்பது தெளிவுபடுத்தப்படுகிறது. "வெறும் நீதி போதனையாக மட்டுமின்றி, வாழ்க்கைச் சிக்கல் கள் பலவற்றிற்கும் மகாபாரதம் வழி காண்பிக்கின்றது. பல நுணுக்கமான ஆன்மீகப் பிரச்சினைகளுக்கும் மகாபாரதம் விளக்கமளிக்கிறது" என இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதன் மூலம், பாரதக் கதையின் சிறப்பினை முதலிலேயே உணர்த்தி விடுகிறார் ஆசிரியர். கதையை விளக்கிட சில படங்களும் ஆங்காங்கே இருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

**சாது சுந்தர்சிங் அருளுரைக் குட்டிக் கதைகள்:** "இந்த நூற்றாண்டின் தனிப்பெரும் தேவ ஊழியரான சாது சுந்தர்சிங் அவர்களை அறியாத கிறிஸ்தவர்களே இருக்க முடியாது. இந்தியாவில் மட்டுமின்றி, உலகின் பல நாடுகளிலும் இவர் தேவனுடைய நற்செய்தியை அறிவித்து வந்தார்" என்று சாது சுந்தர்சிங் அவர்களைப் பற்றி இந்நூலில் நாம் அறிந்துகொள் கிறோம். திருக்குறள் கதைகள் போல, பைபிளில் உள்ள பல கருத்துக்களை உணர்த்தும் ஐம்பது குட்டிக் கதைகள்—அதுவும் உண்மைக் கதைகள்—சாது சுந்தர்சிங் அவர்கள் தம் வாழ்க்கை யில் கண்ட சுவையான நிகழ்ச்சிகள் இந்நூலில் இடம் பெற்று உள்ளன. படிக்கத் தூண்டும் வகையில் ஒவ்வொரு கதையும் சுவைபட அமைந்துள்ளது. கதைக்கேற்பப் படங்கள் சேர்த்திருந் தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும். இதனைத் தொகுத்தவர் எஸ்தர் கலாவதி.

## கட்டுரைகள்

**பழனி பால நீதி:** "பழனி பால நீதி என்னும் இந்நூல் பழைய நீதி நூல்களின் கருத்துக்களைப் புதிய முறையில் அமைத்துக் காட்டுவதுடன், காலத்துக்கேற்ற சில புதிய கருத்துக்களையும் தழுவிப் படிப்போரின் சிந்தனைக்கு வேலை தந்து, அவர்களைச் சீர்திருத்தப் பாதையில் இட்டுச் செல்ல வல்லனவாயுள்ளன" என்று பதிப்பாசிரியர் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் கூறுவது முற்றிலும் உண்மை. கைக்கு அடக்கமான சிறு நூலாக இருந்தாலும், பெரிய கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது இந் நூல். அகமது மகிழ், ஆதரவு செய், இடுக்கண் களை, ஈகை மறவேல், உற்றது உரை, ஏங்கித் திரியேல், ஐயம் அறக் கல், ஒற்றுமையுடன் வாழ், ஓதுவது உண்மை, ஔவை சொற்கேள்,

அஃகல் இழிவு—இப்படி ஆத்திசூடி, கொன்றைவேந்தன், திருக்குறள் போல தெள்ளிய பல நீதிகளை நெஞ்சுக்கு உரைக்கின்றது, நம் நெஞ்சமெலாம் நிறைகின்றது.

கெடில வளம்: 'கெடிலம்' என்பது என்ன? தென்னார்க்காடு மாவட்டத்தில் தோன்றி, அம்மாவட்டத்தை வளப்படுத்தி, நாகரிகத்தை வளர்த்து, வரலாற்றில் சீரிய இடம் பெறச் செய்து அம்மாவட்டத்திலேயே கடலோடு கலக்கும் ஆறுதான் கெடிலம். இந்த ஆற்றின் தோற்றம், தொன்மை, சிறப்பு ஆகியவை நூலில் மிக அழகாக விளக்கப்பட்டுள்ளன. உலக ஆறுகளோடு கெடிலத்தை ஒப்பிடும் தன்மை, இலக்கியத்தில் கெடிலம், கெடில நாட்டு வளங்கள்—என்று மிக அழகாகக் கூறிச் செல்கிறார் ஆசிரியர் சுந்தர சண்முகனார் அவர்கள். கெடில ஆற்றின் பழம் பெரும் வரலாற்றை விளக்கிடும் இந்நூல், ஆற்றொழுக்குப் போன்ற தெளிவான நடையில் எழுதப் பெற்றிருக்கிறது. இது ஒரு வழி நூலே என்றும், இதன் முதல் நூல் 1975ஆம் ஆண்டு வெளியிடப் பெற்ற 'கெடிலக்கரை நாகரிகம்' என்னும் பெரிய நூலாகும் என்றும் அறிந்து கொள்கிறோம். தக்க படங்களுடன் கூடிய இந்நூல், மாணவர்க்குப் பெரிதும் உதவும்.

பண்பு வளர்த்த பாவலர்: அருந்தமிழன்னைக்கு அகமும், புறமும் இரு கண்களாக அமைந்துள்ளன எனலாம். அவற்றுள் புறநானூறு என்னும் தமிழ்ப் புதையலில் பொதிந்து கிடக்கும் செல்வங்கள் ஏராளம். அவற்றை வெளிப்படுத்துகின்ற கருவியாக இந்நூல் அமைந்துள்ளது. பதினான்கு கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொன்றும் பழம்பெரும் புலவர்களின்—மன்னர்களின் சிறப்புகளைப் பறைசாற்றுகின்றது. வெள்ளக்குடி நாகனார், நரிவெரூஉத்தலையார், பாண்டியன் அறிவுடை நம்பி, பிசிராந்தையார், கோவூர்கிழார், பரணர், ஔவையார் போன்ற பல புலவர்கள், மன்னர்கள் மனம் போன போக்கில் போகாதபடி தடுத்திருக்கிறார்கள்: இடித்துக் கூறியிருக்கிறார்கள். அந்த அருமையான நிகழ்ச்சிகளையெல்லாம் அருமையாகத் தொகுத்து தந்திருக்கிறார் பூவை அமுதன் அவர்கள். இந்தப் புறநானூற்றுச் செல்வம், மாணவ மணிகளை மட்டுமல்ல, பெரியவர்களையும் மகிழ்விக்கும்.

நவயுக நவமணிகள்: எம். நாராயண வேலுப்பிள்ளை அவர்களால் எழுதப் பெற்ற இந்நூலில், ஒன்பது கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. தாய் நாட்டிற்காக உழைத்த, உழைத்துக் கொண்டிருக்கின்ற ஒன்பது மாதர் திலகங்களின் வாழ்க்கை

வரலாற்றினைச் சித்திரிக்கின்றது இந்நூல். கஸ்தூரிபாய் காந்தி, சரோஜினி நாயுடு, முத்துலட்சுமிரெட்டி, இந்திராகாந்தி, சௌந்திரம் இராமச்சந்திரன், சரோஜினிவரதப்பன், சௌந்தரா கைலாசம்,ருக்மிணிதேவி அருண்டேல், இராஜம்மாள் தேவதாஸ் ஆகியவர்களைப் பற்றிய வரலாறுகள் படிக்க மிக்க சுவையாக உள்ளன.

**திரு.வி.க.சிந்தனைகள்:** பி. எல். இராசேந்திரன் அவர்கள் எழுதிய இந்நூலில் பதின்மூன்று தலைப்புகளில், திரு.வி.க. அவர்களின் சிறப்பு, தமிழர் தொண்டு, அயராதபணி, அமுதமொழிகள் ஆகியவை மிக அழகாக, எவரும் எளிதில் கிரகித்துக் கொள்ளும் வண்ணம் வரையப்பட்டுள்ளன. தமிழ்த் தென்றல் திரு.வி.க. பற்றி அறிந்து கொள்ளவும், அவர் அன்னை மொழிக்கு ஆற்றியுள்ள அருந்தொண்டுகள் குறித்துத் தெரிந்து கொள்ளவும் இந்நூல் பெரிதும் உதவும். அதுமட்டுமன்று, ஆராய்ச்சி மாணவர்க்கு அரிய கருவூலமாகவும் இது திகழ்கிறது.

**தமிழ் மாலை:** தமிழின்தொன்மை, வன்மை, சிறப்பு முதலான தன்மைகளையெல்லாம் காலங்காலமாகச் சொல்லிக் கொண்டே இருக்கலாம். இந்நூலில் தமிழன்னையின் பெருமைகளைப் பல படக் கூறியுள்ளார் தங்கவயல் லோகிதாசன் அவர்கள். நல்ல தொகுப்பு நூல் இது.

**ஞான மணிகள்:** இதைக் கதை வடிவில் அமைந்த கட்டுரை எனலாம். பரம்பொருள் ஒன்றே என்றும், இறைவன் இருக்கிறான் என்றும், அவன் அருள் எல்லையில்லாதது என்றும் பறைசாற்றக் கேட்டிருக்கிறோம். இந்நூலும் அந்தக் கருத்தினை அழகாக எடுத்துக் கூறுகின்றது. சிறுவர் மட்டுமல்ல பெரியவர்களும் கூடப் படித்து மகிழ்வதற்கேற்ற வண்ணம் தம் கை வண்ணத்தைக் காட்டியுள்ளார் தங்கவயல் லோகிதாசன்.

**கவிதைகள்:**

**மலரும் பூக்கள்:** கவிஞர் ரா. பொன்ராசன் அவர்கள் எழுதிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பே இது. கவிஞரின் இத்தோட்டத்தில் நாற்பத்திரண்டு பூக்கள் மலர்ந்திருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையானவை; வண்ணமானவை. சிந்தைக்கு விருந்தூட்டும் சிறிய சிறிய பாடல்கள். ஒவ்வொரு பாட்டுக்கும் ஏற்ற படங்கள், ஜாடிக்கேற்ற மூடி போல! பிரார்த்தனை, வாழைமரம், இதயகீதம் போன்ற பாடல்கள் இனிமை! இனிமை!

எலிகடித்த பூனை: புதுமையான தலைப்பைக் கொண்டுள்ள இந்நூல் தமிழக அரசின் பரிசு பெற்றது. கவிஞர் குழ. கதிரேசன் அவர்களால் எழுதப் பெற்றது. இருபத்துநான்கு பாடல்கள்—படங்கள் உள்ள இந்நூலில் நம் இதயம் தொடும் பல பாடல்கள் உள்ளன. உயர்வும் பணிவும், கடலில் நிலா, ஏனழுதாய்? முள், எலிகடித்த பூனை போன்ற பாடல்கள் நம்மையறியாமலேயே பாட வைக்கின்றன.

பாலர் பாடல்கள்: கவிஞர் திருச்சி வாசுதேவன் அவர்கள் எழுதிய இச்சிறு நூலில் இருபத்தாறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. படங்களுடன், பெரிய கொட்டை எழுத்தில் பாடல்கள் அச்சிடப்பட்டுள்ளன. எங்கள் பள்ளி, இருசொல் வரிசை, கோபுரம், பனைமரம், செந்தமிழ் ஆகிய பாடல்கள் குறிப்பிடத்தக்கனவாகும். குழந்தைகள் படிக்கவும், பாடவும் இந்நூலைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அன்புக் குழந்தைக்கு அறுபது பாடல்கள்: குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் மணிவிழாத் தொகுப்பாக இந்நூல் வெளி வந்துள்ளது. அறுபது கவிஞர்கள், அறுபது தலைப்புகளில் அறுபது பாடல்கள் படைத்துள்ள இந்நூல் நல்லதொரு தொகுப்பாகும். பல கவிஞர்களின் மனப்போக்கை, சிந்தனைச் சிதறல்களைஉணர்த்த இந்நூல் சிறந்த எடுத்துக்காட்டு. தொகுப்பாசிரியர் கவிஞர் செல்லகணபதி, கவிஞர் ரா. பொன்ராசன் ஆகியோரைப் பாராட்ட வேண்டும்.

பூந்தளிர்: திரு செம்பை அவர்கள் எழுதிய இந்தக் குழந்தைப் பாடல்கள், குழந்தைகளை குதூகலிக்கச் செய்யும்என நம்பலாம். எழுபத்திரண்டு பாடல்கள் இதில் இடம்பெற்று உள்ளன. உயிரெழுத்து, தேனீ, மீன், திராட்சைப் பழங்கள், வாழைமரம், புத்தகம், திசைகள் போன்ற பாடல்கள் மனத்தைத் தொடுகின்றன. பாடல்களில் ஓசை நயம் உண்டு; பொருளும் உண்டு.ஆனால், இத்தொகுப்பில் படங்களே இல்லாதது பெருங்குறை. குழந்தைப் புத்தகம் என்றால் அதில் படங்கள் அவசியம் இருத்தல் வேண்டும். எப்பாடுபட்டேனும் படங்களைச் சேர்ப்பது நல்லது என்பது என் கருத்து.

நாடகங்கள்

வள்ளல் எழுவர்: கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய நாடகக் காவியம் இது. கடையெழு வள்ளல்களான பாரி, பேகன், ஓரி, காரி, அதியமான், ஆய் அண்டிரன்,

நள்ளி ஆகியோரை இந்நாடகத்தில் மிக அழகாகப்படம்பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர். சொற்சுவை, பொருட்சுவை, கற்பனை நயம் கலந்து எல்லாத் திறத்தாரும் எளிதில் படித்தறிந்து கொள்ளக்கூடிய வகையிலே சொல்லோவியமாகத் தீட்டப்பட்டிருக்கிறது இந்நாடகம். இதனைப்படிக்கலாம்-நடிக்கலாம்-பாடலாம்-ஆடலாம். எல்லாவற்றுக்கும் ஏற்ற நூல் இது.

**கோமதியின் கோபம்:** பூவண்ணன் அவர்களின் படைப்பு இது. ஒன்றைப் படித்து அறிந்து கொள்வது சற்று சிரமமாக இருக்கலாம். ஆனால் நடிப்பின் மூலமாகவோ அல்லது படத்தின் மூலமாகவோ பார்த்து அறிந்து கொள்வது மிகவும் எளிதாக இருக்கிறது. அது இதயத்தில் உடனே இடமும் பிடித்து விடுகின்றது. வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியவற்றில் குழந்தைகள் தம் நடிப்புத்திறனை வெளிப்படுத்துவதை நாம் பார்க்கிறோம். நாடகம் இருவகையில் நமக்குப் பயன்படுகிறது. ஒன்று, நடிப்பவர்களின் ஆற்றலை அது வளர்க்கிறது; மற்றொன்று,பார்ப்பவர்களுக்குப் படிப்பினையும் பரவசத்தையும் தருகிறது. இந்த நாடக நூல் நடிக்க மட்டும் அல்ல, படிக்கவும் பயன்படும் என நம்பலாம்.

நாவல்

**குழந்தைகள் கட்டிய நேரு பாலம்:** பெரியவர்களுக்காக எழுதப்படும் அளவுக்குக் குழந்தைகளுக்காக எழுதப்படும் நாவல்கள் குறைவாகவே இருக்கின்றன. குழந்தைகளுக்காக எழுத ஆரம்பித்து—அல்லது குழந்தைகளுக்காக எழுதிக் கொண்டிருந்தவர், பெரியவர் பக்கம் போய்விட்டதன் விளைவோ இது என்று எண்ணவேண்டியிருக்கிறது! இந்தக் குறையைப் போக்கக் குழந்தை எழுத்தாளர் பெருக வேண்டும். முயன்றால் முடியாதது இல்லை—ஒற்றுமை இருந்தால் வெற்றி பெறலாம் என்பதை எடுத்துக்காட்டும் கண்ணாடியாக இந்நாவல் திகழ்கிறது. இதனைப் படைத்த ரேவதி (ஈ. எஸ். ஹரிஹரன்) பாராட்டுக்குரியவர். கதை இதுதான்: விடுமுறையைக் கழிக்கக் கிராமத்துக்கு வரும் குழந்தைகள், அமராவதி நதிக்கு ஒரு பாலம் கட்டுகிறார்கள். அதற்குத்தான் எத்தனை சோதனை! வேதனை! எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு எடுத்த காரியத்தை முடிக்கிறார்கள். நாவலில் கடவுள் பக்தி, ஒற்றுமை உணர்வு, விடா முயற்சி, நாட்டுப்பற்று போன்ற பல நல்ல பண்புகளைத் தூவி விடுகிறார் ஆசிரியர்.

அறிவியல்:

**பறவைகளே! பறவைகளே!** குழந்தைகளுக்கான அறிவியல் நூல்கள் மிக அரிதாகவே வெளிவருகின்றன. இத்தகைய நூல்கள் பல்கிப் பெருகிட குழந்தை எழுத்தாளர்கள் (பெரிய எழுத்தாளர்களும் கொஞ்சம் குழந்தைகளுக்காகத் தம் கவனத்தைத் திருப்பலாமே!) ஆவன செய்ய வேண்டும். 'பறவைகளே! பறவைகளே!' என்னும் இந்த அறிவியல் நூல் மிக்க சுவையாக எழுதப் பெற்றுள்ளது. அறிவியல் என்பது சற்றுக் கடினமானதுதான். அதைக் குழந்தைகளுக்குத் தரவேண்டும், தேனில் மருந்தைக் குழைத்துத் தருவதுபோல! அந்த வகையில், இந்நூலை எளிய இனிய நடையில், எளிதில் குழந்தைகள் 'ஜீரணிக்கும்' வண்ணம் எழுதியுள்ளார், நூலாசிரியர் கு. ராஜாராம் அவர்கள். விண்ணை வட்டமிடும் வண்ணப் பறவைகளைப் பற்றி எவ்வளவு செய்திகளைத் தெரிந்து கொள்கிறோம் இந்நூலில்! உலகமெங்கும் பறந்து திரிகின்ற உயிர்வாழும் ஆகாய விமானமாகிய பறக்கும் பொறியாகிய (Bird is a flying machine) பறவைகளின் பரிணாம வளர்ச்சி (Evolution of birds) பற்றியும், பார்வை தீட்சண்யம் பற்றியும், நுகரும் ஆற்றல் பற்றியும், பறவை பறப்பது எப்படி (Aero Dynamics of bird flight) என்பது பற்றியும், மிகப் பெரிய கடற்பறவையாகிய அல்பட்ராஸ் முதல் மிகச் சிறிய பெருவிரல் அளவே கொண்ட தேன்சிட்டு வரை உள்ள பறவைகள் பற்றியும், அவற்றின் வியத்தகு ஆற்றல் பற்றியும் அப்படியே சித்திரித்துக் காட்டுகிறதே இந்நூல்!

**அறிவியல் இன்பம்:** இதுவும் கு. ராஜாராம் அவர்களால் எழுதப்பட்டதே. இந்நூலில் பத்துக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சுவை பயக்கிறது. கட்டுரைகளைப் படித்து முடித்ததும், விஞ்ஞான விந்தையினை எண்ணி வியக்கின்றோம். சந்திரனுக்குப் போனால்...என்னும் முதல் கட்டுரையே நூலுக்கு முத்தாய்ப்பாக விளங்குகிறது. கண்ணாடி வழியே...என்ற கட்டுரையும், முத்துச்சிப்பி, கடலியல், சூரிய ஆற்றல் போன்ற பிற கட்டுரைகளும் மாணவர்க்கு மட்டுமல்ல, பெரியவர்கட்கும் பெரிதும் பயன்படும் பொது அறிவுத் தகவல்களாகும். இந்த நூலும் சற்றுப் பெரிய எழுத்தில் குழந்தைகளுக்கென்றே அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது.

**அறிவியல் துணுக்குகள்:** வசந்தா இராமநாதன் அவர்கள் எழுதிய இத்தொகுப்பு நூலில்தான் எத்தனை எத்தனை அறிவியல் துணுக்குகள்—சுவையான தகவல்கள் நிறைந்துள்ளன.

அத்தனையும் கற்கண்டாய் இனிக்கின்றன; நம் அறிவுக்கு அரு மருந்தாய் விளங்குகின்றன. அறிவியல் கற்கும் மாணவர்க்கு மட்டுமல்ல, பொதுஅறிவு வேட்கை மிகுந்தவர்க்கும் இது ஒரு வரப் பிரசாதமாகும்.

**விஞ்ஞான விநோதங்கள்:** இதுவும் அறிவுக்கு விருந்தூட்டும் அரிய படைப்பே. காந்தம்—மின்சாரம் இந்த இரண்டையும் அலசி ஆராய்கிறார் இந்நூலாசிரியர் வசந்தா இராமனாதன் அவர்கள். காந்தமும், மின்சாரமும் நமக்குத் தெரிந்ததுதான் என்றாலும், இந்நூலைப் படிக்கும்போது நமக்குத் தெரியாத செய்திகள் எவ்வளவு இருக்கின்றன என்பதை நம்மையறியா மலேயே ஒப்புக் கொள்கிறோம். குடும்பத்தில் எல்லாரும் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய பல பயனுள்ள தகவல் களின் திரட்டாகத் திகழ்கிறது இந்நூல்.

### குழந்தை இலக்கியம் வளர என்ன செய்யலாம்?

சோவியத் இலக்கியத்தின் தந்தையான மாக்சிம் கார்க்கி, சோவியத் நாட்டில் குழந்தை இலக்கியத்திற்கு அடிகோலியவர் களில் ஒருவர். குழந்தைகளுக்கு அவர் ஒரு கடிதம் எழுதினார்:

"புதிய புத்தகங்களில் எதை நீங்கள் படிக்க விரும்பு கிறீர்கள்?" என்று கேட்டார். "சோவியத் நாட்டின் வீரர்களைப் பற்றிய நூல்களை வெளியிடுங்கள். அவர்களை நாங்கள் பின் பற்ற விரும்புகிறோம். புதிய தேவதைக்கதைகளும், விஞ்ஞானப் புத்தகங்களும், வேடிக்கைப் பாடல்களும், களிப்பூட்டும் சிறுகதை களும் எங்களுக்குத் தேவை!" என்று அவர்கள் பதில் அளித்தனர்.

இதிலிருந்து குழந்தைகளுக்கு என்ன பிடிக்கும் என்பதை நாம் அனுமானிக்கலாம். நோய்க்குத் தகுந்த மருந்து தருவது போல குழந்தைகளுக்கு ஏற்ற கதைகளை, பாடல்களை, புத்த கங்களை நாம் ஆக்கித் தருதல் வேண்டும்.

ஒரு கை ஓசையால் ஒன்றுங் கிடைத்துவிடாது; பலர் கை ஓசையால் மட்டுமே பலன் கிடைக்கும் என்பதை நாம் அறி வோம். எனவே, பலரும் உண்மையாக உழைப்பதன் மூலமே குழந்தை இலக்கியத்தை உருப்படியாக வளர்க்க முடியும். எருவும், தண்ணீரும் இன்றிப் பயிர் தானே வளர்ந்துவிடுமா என்ன? எனவே, விளையும் பயிராகிய குழந்தைகள் வளர வேண்டுமானால், குழந்தை இலக்கியம் செழிப்பாக வளர வேண்டும். அதற்காக நாம் முனைப்பாகச் செயல்பட வேண்டும்.

குழந்தை இலக்கியமென்னும் மாளிகைக்கு அடித்தளமாக இருப்பவர் குழந்தை எழுத்தாளர்; அந்த அழகிய மாளிகையாக விளங்குபவர் பதிப்பகத்தார்; அந்த மாளிகையில் கீறல் விழாமல்-வெடிப்பு ஏற்படாமல் பாதுகாப்பவர் வாசகர். இவர்களுடைய முழு ஒத்துழைப்பினாலும் கூட்டு முயற்சியினாலுமே குழந்தை இலக்கியப் பயிர் தழைத்து வளரமுடியும்.

மேலை நாடுகளிலெல்லாம் குழந்தை இலக்கியம் ராக்கெட் வேகத்தில் வளர்ந்து கொண்டிருக்கின்றது. அங்கு வெளியிடப் பெறும் குழந்தை நூல்கள் பெருமளவில் விற்பனையாகிக் கொண் டிருக்கின்றன. இப்படிச் செய்திகளைப் படிக்கின்றபோது, நாமும் அதேபோல் முன்னேற வேண்டுமே என்ற ஆவல் நம்மை உந்தித் தள்ளுகிறது. அதே சமயத்தில் ஓர் உண்மையும் தெரி கிறது. படிக்கின்ற ஆர்வம் அங்கெல்லாம் பெருகியிருக்கின்றது; நூல்களை அனைவரும் விரும்பி, விலை கொடுத்து வாங்குகின்ற பழக்கம் அங்கு வளர்ந்திருக்கின்றது. இந்த ஆரோக்கியமான சூழ்நிலை நம்மிடையேயும் வரவேண்டும்-வளர வேண்டும்.

ஒரு நல்ல தரமான, குழந்தைகளுக்கேற்ற, புதிய புத்தகம் ஒன்று வெளிவந்திருக்கிறது என்றால அதை வாங்க மட்டும் நமக்குச் சக்தி இருப்பதில்லை! கையில் காசு இருப்பதில்லை.வசதி யில்லை, வறுமை என்றெல்லாம் சாக்குப்போக்குச் சொல்லித் தப்பித்துவிடுகிறோம், மனச்சாட்சிக்கு விரோதமாக! இந்த அவல நிலை மாறுகிறவரை ஆக்க பூர்வமான செயல்களுக்கெல் லாம் முட்டுக்கட்டை இருந்து கொண்டுதான் இருக்கும். இதற்கு வழி, நம் மனநிலை மாறுவதைத் தவிர வேறு விமோசனமே இல்லை.

ஒரு செய்தி, நம்மையெல்லாம் வியப்பில் ஆழ்த்துகிறது; அதைப் படித்து முடித்ததும் கனவா? நனவா? என்றுகூட ஐயம் ஏற்படுகிறது. அந்தச் செய்தி இதுதான்—

"குழந்தைகளுக்கான நூல்களை வெளியிடுவதில் சோவியத் நாடு உலகில் முதலிடம் வகிக்கிறது. மொத்தம் 600 கோடி பிரதி களைக் கொண்ட 90,000 பதிப்புகள், அங்கு வெளிவந்துள்ளன. 70க்கும் மேற்பட்ட பதிப்பகங்கள், ஆண்டுதோறும் மொத்தம் 32 கோடி பிரதிகளுக்குமேல் குழந்தை நூல்களை வெளியிடுகின்றன. இளைஞர் பத்திரிகைகள் தவிர 40க்கு மேற்பட்ட குழந்தைப் பத்திரிகைகளும் அங்கு வெளிவருகின்றன. குழந்தைகளின் முக்கிய பத்திரிகையான 'பயனிர்ஸ்காயா பிராவ்தா' சுமார் ஒரு கோடி பிரதிகளும், 'முர்ஜில்கா' என்னும் இதழ் 50 இலட்சம் பிரதிகளும் விற்பனையாகின்றன..."

இதைப் படித்துவிட்டு யாரும் மூர்ச்சையாக வேண்டாம்! இன்னும் பாருங்கள்:

மாக்சிம் கார்க்கியின் முயற்சியால், உலகிலேயே முதன்முதலாக, குழந்தை இலக்கியத்திற்கான 'அரசாங்கப் பதிப்பகம்' ஒன்று சோவியத் நாட்டில் நிறுவப்பெற்றுள்ளதாம். அது மட்டுமா? இங்கு 50க்கு மேற்பட்ட மொழிகளில் குழந்தை நூல்கள் வெளியிடப் பெறுகின்றன—பல குழந்தை எழுத்தாளர்களுக்கு சோவியத் யூனியன் அரசாங்கப் பரிசும், ரஷ்ய சமஷ்டியின் குருப்ஸ்காயா—பரிசும் வழங்கப் பெற்றுள்ளன. இங்குள்ள குழந்தை எழுத்தாளர்கள் மிகுந்த பொறுப்புணர்ச்சியுடனும், ஆழ்ந்த ஆர்வத்துடனும் பணியாற்றுகிறார்கள்—பள்ளிகளிலும் பெரிய விழாக்களிலும், இளம் வாசகர்களைச் சந்திக்கிறார்கள்—ஒவ்வொரு ஆண்டும் இளவேனிற் காலத்தின் போது நாடு முழுவதிலும் 'குழந்தைப் புத்தக வாரம்' கொண்டாடப் பெறுகிறது—என்ற தித்திக்கும் செய்தி, நாம் மேலே மேலே தளராமல் முன்னேறிச் செல்வதற்கு, அருமருந்தாய் இருக்கிறது அல்லவா?

குழந்தை இலக்கியத்துக்காக நாம் நம்மாலான முயற்சிகளை செய்துகொண்டுதான் இருக்கிறோம் என்றாலும், அதில் இன்னும்வேகம் வேண்டும் என்பதுதான் நம்முடைய விருப்பமும், வேண்டுகோளுமாகும். குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு அமைப்புகள் (நிறுவனங்கள்) பதிப்பகங்கள்—பத்திரிகைகள் - வானொலி-தொலைக்காட்சி ஆகியவை தொண்டாற்ற முடியும்—தொண்டாற்றியும் வருகின்றன. அமைப்பு என்கிறபோது முதலில் நம் நினைவுக்கு வருவது, குழந்தை எழுத்தாளர் சங்கம் தான்.

வெள்ளிவிழாக் கண்ட இச்சங்கம், குழந்தை இலக்கிய மாநாடுகளை நடத்தி, குழந்தை இலக்கிய முன்னோடிகளைச் சிறப்பிக்கின்றது. ஆண்டு தோறும் குழந்தை இலக்கியப் போட்டியை நடத்தி, குழந்தைகளுக்கான புதிய கையெழுத்துப் பிரதிகள் வெளிவர ஆவன செய்வதுடன், ஏவி. எம். அறக்கட்டளையின் பரிசான தங்கப் பதக்கம், வெள்ளிப் பதக்கங்களை வழங்கி வருகின்றது. இவையன்றிக் குழந்தை எழுத்தாளர் 'யார்? எவர்' நூலை வெளியிட்டும், நாடகவிழா, புத்தகக் கண்காட்சிகள் நடத்தியும், குழந்தைகளுக்குக் கதை சொல்லுதல், அறிமுகம்-அனுபவம் ஆகிய நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குச் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றது. அத்துடன், ஆண்டுதோறும் குழந்தைகள் தினத்தின்போது, பல பதிப்பகத்தார் தயாரித்துள்ள குழந்தை நூல்களை இது வெளியிடுகின்றது. நூலாசிரியர்களையும் பதிப்பகத்தாரையும் அறிமுகப்படுத்துகின்றது.

''குழந்தை இலக்கிய 'வளர்ச்சிக்கு என்ன செய்யலாம்?'' என்ற வினாவுக்கு, அனைத்துலகக் குழந்தைகள் ஆண்டில் வெளி வந்த குழந்தை இலக்கிய மாநாட்டுச் சிறப்பிதழில் குழந்தைக் கவிஞர் அழ வள்ளியப்பா அவர்கள் ஆற்றிய தலைமையுரையின் சில பகுதிகள் விடையாக அமைந்திருக்கிறது. அந்தக் கருத்துக் களைக் கவனத்தில் கொள்வோமாக. அதாவது:

1. நாடெங்கும் குழந்தைகளுக்கான நூலகங்கள் தோன்ற வேண்டும். குழந்தைகளுக்கான கலை அரங்குகள் அமைக்கப் பெறவேண்டும். குழந்தைகளுக்கான திரைப்படம் எடுக்கப்பட வேண்டும். தமிழ் மொழிக்கெனத் தனியாக ஒரு 'குழந்தைப் புத்தக டிரஸ்ட்' நிறுவப் பெறவேண்டும்.

2. நல்ல குழந்தைப் பத்திரிகைகள் தொடர்ந்து வெளிவர வேண்டுமாயின் அரசினர் அவற்றிற்கு மானியம் வழங்க முன்வர வேண்டும். மானியம் தர இயலாது போனாலும், தமிழகத்தில் இன்றுள்ள 36,000 பள்ளிகளில், 10,000 பள்ளிகளிலாவது அவற்றை வாங்குவதற்கான ஏற்பாட்டையாவது செய்யலாம்.

3. குழந்தைகளுக்கானகலைக் கூடங்கள் (Children's Theatres) நகரின் பல பகுதிகளிலும் தோன்றவேண்டும். குழந்தை நாட கங்கள் நல்ல முறையில் உருவாகவும், குழந்தைகளின் கலைத் திறன் ஓங்கவும், குழந்தைகளின் மகிழ்ச்சி பெருகவும் கலைக் கூடங்கள் தேவை. அத்தகைய கூடங்கள் தோன்றும்வரை, ஒவ் வொரு பகுதியிலும் உள்ள சில பள்ளிகள் ஒன்றுசேர்ந்து கூட்டாக ஒரு மன்றம் அமைக்கலாம்.

அண்மையில் நடந்த ஒரு விழாவில்கூட, சென்னைப் பல்கலைக் கழகத்தில் குழந்தை இலக்கியத்துக்கென ஒரு பாடம் ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டதை இங்கு நினைவு கூர்வது நல்லது. இதேபோல,தஞ்சாவூரில் உள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும், சிறுவர் இலக்கிய வளர்ச்சி கருதிச் சில முயற்சிகளை மேற்கொள்ளலாம் என்று யோசனை தெரி வித்துக் குழந்தைக் கவிஞர் அவர்கள் ஒரு கடிதம் எழுதியுள் ளார். தமிழ்ப் பல்கலைக் கழகச் 'செய்தி மலரில்' (14.10.82) வெளியான அக்கடிதத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களாவன :

''சிறுவர் இலக்கியத்திற்கெனத் தனித்துறையை ஏற்படுத்த லாம். பயிற்சி பெறுவோருக்கு டிப்ளமோ வழங்கலாம். சிறுவர் இலக்கிய ஆராய்ச்சிக்கு உதவிடும் வகையில் இதுவரையில் தமிழில் சிறுவர்களுக்காக வெளிவந்துள்ள அனைத்து நூல்களை யும் திரட்டி வைப்பதோடு, சிறுவர் இலக்கியம் படைப்போருக்குச்

சிறுவரின் மனோதத்துவம் தெரிந்திருப்பின் மிக்க உதவியாக இருக்குமாதலால், சிறுவர் உள நூல்களையும் திரட்டி வைக்கலாம்.''

''சிறுவர் இலக்கியக் கருத்தரங்குகள் நடத்தலாம். பயிற்சிக் காலத்தில் சிறுவர்க்கு ஏற்ற வகையில் நூல்கள் எழுதப் பயிற்சியாளருக்கு வாய்ப்பளிக்கலாம். அவ்வாறு எழுதப்பெறும் நூல்களில் தகுதி வாய்ந்தவற்றைப் பதிப்பாளர்கள், பாடநூல் நிறுவனம் வெளியிடப் பரிந்துரை செய்யலாம்.''

''சிறுவர் மனோதத்துவ நிபுணர்கள், சீர்திருத்தப் பள்ளித் தலைவர்கள், மற்ற பள்ளி ஆசிரியர்கள், ஓவியர்கள், சிறுவர் இதழ் ஆசிரியர்கள் போன்றோருடன் கலந்துரையாடும் வாய்ப்பினைச் சிறுவர் இலக்கியப் படைப்பாளருக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் ஏற்படுத்திக் கொடுக்கலாம்.''

''சிறுவர், இலக்கியங்களைப் படைத்தபின், அவை எந்த வயது பிரிவினருக்காக எழுதப் பெற்றவையோ, அந்த வயதுப் பிரிவில் உள்ள சிறுவர்களை அழைத்து வந்து, அவற்றைப் படித்துக் காட்டி அவர்கள் எவ்வாறு வரவேற்கின்றனர் என்பதை அறியலாம். தற்போது பள்ளிகளிலும், நூலகங்களிலும் சிறுவருக்கு எவ்வகையான நூல்கள் வெளிவந்துள்ளன என்பதை அறிய வாய்ப்பு இல்லை. அக்குறை தீர இதுவரை தமிழில் சிறுவருக்காக வெளிவந்துள்ள நூல்களின் விவரப்பட்டியல் ஒன்றைத் தயாரித்து வெளியிடலாம்'' எனப் பல கருத்துகள் தரப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டில் குறிப்பாகச் சென்னையில் ஏராளமான பதிப்பகங்கள் உள்ளன. புத்தக வெளியீட்டாளர்கள் மற்றும் விற்பனையாளர்கள் தவிர, எழுத்தாளர்களும் சொந்தமாகத் தம் நூல்களை வெளியிடுகிறார்கள். பொதுவாக, பதிப்பகங்களின் புத்தக விலைப்பட்டியலைப் பார்க்கும்போது, குழந்தைகளுக்கான நூல்கள் குறைவு என்றுதான் சொல்லவேண்டும் ஒரு சில பதிப்பகங்களின் பட்டியலில் தான் குழந்தை நூல்கள் நிறைய இடம் பெற்றுள்ளன.

குழந்தை நூல்கள் என்கிறபோது, அதன் தயாரிப்புச் செலவுகள் மற்ற நூல்களைவிட அதிகம் பிடிக்கின்றது என்ற உண்மையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். குழந்தைகளுக்கான கதை, நாவல் அல்லது பாடல்கள் என்றால் அதற்குப் படங்கள் மிகமிக அவசியமாகிறது. இந்தச் சிரமம் பெரியவர்களுக்கான நூல்களுக்கு இல்லை. வெறும் எழுத்திலேயே பக்கங்களை ஓட்டிக் கொண்டு போய்விடலாம்,

நல்ல தாளில், படங்களைப் போட்டு, கவர்ச்சியான முகப் பில் வெளியிட்டாலும் குழந்தைப் புத்தகங்கள் எதிர்பார்த்த அளவுக்கு விற்பதில்லை என்கிறார் பதிப்பகத்தார். அவர்கள் நிலைமையையும் நாம் உணரத்தான் வேண்டும்.

இன்று தமிழ்நாட்டில் குறிப்பாகச்சென்னையில் நிறைய பதிப் பகங்கள் இருக்கின்றன. அவை பல்வேறு தலைப்புகளில் (Titles), பொருள்களில் (Subjects) நூல்களை வெளியிட்டு வருகின்றன. அவற்றுள் குழந்தை நூல்களும் அடங்கும். குழந்தை நூல்கள் என்கிற போது கதை, கட்டுரை, நாவல் என்று தான் அதிகம் வெளிவருகின்றன. அறிவியல் நூல்கள் அதிக அளவில் வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அது மட்டுமன்று, குழந்தைக் கவிதைகள், சிறுவர் பாடல்கள் வெளி வருவதும் அரிதாகவே இருக்கின்றன.

பொதுவாக இன்று வெளிவரும் குழந்தை நூல்கள் அது கதையானாலும் சரி, கட்டுரையானாலும் சரி அட்டைப் படத் தோடு நின்று விடுகிறது. வயதுத் தொகுதிக்கேற்ப (Age Groups) குழந்தை நூல்கள் வெளியிடும் போது, அதற்கேற்ப படங்களை ஓரளவாவது சேர்க்க வேண்டும். சிறுகதைத் தொகுப்பு என்றால், ஒவ்வொரு கதைக்கும் ஒரு படத்தைச் சேர்க்கலாம். நாவல் என்றால் நூல் முழுக்க ஒரே எழுத்தாக இல்லாமல், முக்கியமான இடங்களில் படம் வரும்படி அமைக்கலாம். அப்போதுதான் குழந்தைகளின் மனத்தில் நாம் சொல்கின்ற கருத்துக்களை எளிதில் பதிய வைக்க முடியும். நம்முடைய நோக்கமும், எழுத்தாளரின் ஆசையும் நிறைவேறும்.

அறிவியல் நூல்கள் வெளிவருகின்றன. ஆனால் உள்ளே சொல்கின்ற விஷயங்களுக்கு ஏற்ப விளக்கப் படங்கள் இடம் பெறுவது இல்லை. இது பெருங்குறை. வெறும் எழுத்துக் களால் மட்டும் குழந்தைகளைக் கவர்ந்து விட முடியாது; திருப்திப்படுத்தி விடவும் முடியாது; கருத்துக்களைப் பதிய வைக் கவும் முடியாது.

அறிவியல் நூல் என்கிறபோது தமிழில் குறைவு என்றே சொல்லவேண்டும். வெளிவந்த நூல்களைப் பார்த்தால் எல்லாம் நல்ல நூல்களே. ஆனால் உள்ளே ஒரு படம் கூட கிடையாது. அட்டைப் படத்தோடு சரி. இந்தக் குறைபாடு நீங்கிட, அறிவியல் நூல்கள் குழந்தைகளின் வயதுத் தொகுதிக் கேற்ப, வண்ணப்படங்களுடன் வெளிவர ஆவன செய்தல் வேண்டும்.

இம்மாதிரியான தரமான நல்ல நூல்களைப் பொது நூலகங்களும், தனியார் படிப்பகங்களும், வீட்டில் குட்டி நூலகம் வைத்திருக்கும் தனிப்பட்டவர்களும் வாங்கி ஆதரவு தருதல் வேண்டும். குறிப்பாக, பள்ளி, கல்லூரி மற்றும் நூலகங்களுக்கு வாங்கி வழங்கிட அரசு முன்வருதல் வேண்டும். வாங்கும் சக்தி அதிகரிக்க, அதிகரிக்க, கொடுக்கும் சக்தி— நூல்களைத் தயாரித்துக் கொடுக்கும் சக்தியும் அதிகரிக்கும் என நாம் நம்பலாம்.

அமெரிக்கா, ரஷ்யா போன்ற நாடுகளில் குழந்தை நூல்கள் கண்ணைக் கவரும் வண்ணப்படங்களுடன் வெளி வருகின்றன. அவை பெருமளவில் அச்சடிக்கப்பட்டு, இலட்சக்கணக்கில் விற்பனையும் ஆகின்றன. அதுமட்டுமல்ல அவை மீண்டும் மீண்டும் அச்சாகும் (Reprints) தகுதியையும் பெறுகின்றன.

உதாரணத்துக்கு ஒன்றைச் சொல்லலாம். 'How and why?' என்ற வரிசையில் இலண்டனிலிருந்து குழந்தைகளுக்கான விந்தை நூல்கள் வெளிவருகின்றன. இவை கண்ணும் கருத்துமாகத் தயாரிக்கப்பட்ட அருமையான புத்தகங்களாகும். அந்நூல்களை அப்படியே கண்களில் ஒற்றிக் கொள்ளலாம் போல உள்ளது. அதில் ஒரு புத்தகம், 'மைக்ராஸ்கோப்' (Microscope) பற்றியது. அந்தப் புத்தகம் 48 பக்கம் தான். அதிலுள்ள படங்களோ— அதுவும் வண்ணப் படங்களோ 72. படங்கள் இல்லாத பக்கங்களே இல்லை. இந்தப் புத்தகம் ஒன்பது தலைப்புகளில், ஏராளமான சிறு சிறு உள் தலைப்புகள்கொண்டுஎளிய நடையில்எழுதப் பெற்றுள்ளது. 'மைக்ராஸ் கோப்' என்றால் என்ன? அது எப்படி இயங்குகிறது? அதில் எத்தனை வகைகள் உள்ளன? அது எப்படியெல்லாம் பயன்படுகின்றது? இப்படி சிறுசிறு துணைத் தலைப்புகளைக் கொண்டு விளக்கம் தருகிறது இந்நூல். இது ஆறு முறை பதிப்பிக்கப்பட்டுள்ளது! இதே(How and why?)வரிசையில் பறவைகள், விலங்குகள், மீன்கள், தாரகைகள், இரயில்கள், பூமி, பூச்சியினங்கள், மின்சாரம், பாலைவனம், செய்தித்தொடர்பு, காலநிலை, ஒளி, ஒலி, மனித உடல் இப்படி ஏராளமான தலைப்புகளில் நூல்கள் வெளிவந்துள்ளன. ஒரு பொருளை (Subject) எடுத்துக் கொண்டால் அதை அலசி ஆராய்ந்து விடுகிறார்கள்!

'Health Trails'—என்னும் அமெரிக்கப்புத்தகம் ஒன்று, குழந்தைகள் எப்படி நல்வாழ்வுடன் விளங்கவேண்டும் என்பதை விளக்குகிறது. 272 பக்கமுள்ள இந்நூலில் பக்கத்துக்குப் பக்கம் வண்ணப்படங்கள் உள்ளன. மனத்தைக் கவரும் வகையில் இப்புத்தகம் தயாரிக்கப்பட்டிருககிறது.

குழந்தைகள் நல்லபடியாக வளரப் பெற்றோர் முன்மாதிரியாக விளங்கவேண்டும் என்று கூறுகிறோம். குறிப்பாக, அவர்கள் நல்ல நல்ல நூல்களைப் படிக்க வேண்டும், அதற்கு நாம் உதவியாக இருக்க வேண்டும் என்று சொல்கிறோம் இந்தக் கருத்துப் படி ஒரு நூலே வெளிவந்து விட்டது—படங்களுடன். அந்தப் புத்தகத்தின் பெயர் 'A Parent's guide to children's reading.' அமெரிக்க வெளியீடான இந்தக் கையடக்கப் பதிப்பு நூல் 258 பக்கங்கள் கொண்டது. இதில் படிக்கும் முறை, படிக்க வேண்டிய நல்ல நூல்கள் எவை? அவை கிடைக்கும் இடங்கள் என்பன போன்ற விவரங்கள் எல்லாம் சுவையாகத் தரப்பட்டுள்ளன.

'Bed time Stories' என்பது ஒரு புத்தகத்தின் பெயர். இது இலண்டன் வெளியீடு. சிந்தை கவரும் சின்னச் சின்ன கதைகள் 14 இதில் உள்ளன. பெரிய எழுத்தில், முழுப்பக்க அளவில் பல வண்ணங்கள் கொண்ட கண்ணைக் கவரும் படங்கள் இதில் உள்ளன. 92 பக்கமுள்ள இந்நூலில் 92 பக்கமும் பெரிய பெரிய வண்ணப்படங்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இன்னொரு புத்தகம் '101 Great Lives' என்பது அதன் பெயர். இந்நூலில் 101 அறிவியல் அறிஞர் பற்றிய சுருக்கமான வரலாற்றுடன், அவரது கண்டுபிடிப்புகள் பற்றிய குறிப்புகளும் அடங்கியுள்ளன. ஒவ்வொரு கட்டுரையும் இரண்டு பக்கத்துக்குள் அடங்கி விடுகிறது. வெற்று அலங்காரச் சொற்கள் எதுவும் இல்லை. ஒவ்வொரு கட்டுரைக்கும் சிறுசிறு படமும் உண்டு. உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் படித்து அறிந்து கொள்ளக் கூடிய எளிய நடையில் எழுதப் பெற்றுள்ளது. 256 பக்கங்களுள்ள இந்நூலில் பிளாட்டோ, கலீலியோ, ஷேக்ஸ்பியர், ஐன்ஸ்டீன் போன்ற அறிஞர் பெருமக்கள் இடம் பெற்றுள்ளனர் இலண்டன் வெளியீடான இந்நூல் மூன்றாவது பதிப்பாக வெளிவந்துள்ளது. இதே வரிசையில் இவ்வெளியீட்டாளர் 101 Best Bible Stories, 101 Best Adventure Stories என்ற நூல்களும்வெளியிட்டுள்ளனர்.

Bumber Story Book for Girls and Boys என்னும் ஆங்கிலப் புத்தகம், குழந்தைகளுக்கானது. அகலமான வடிவில், கனத்த தாளில் 93 பக்கங்கள் கொண்டது இந்நூல். வண்ண முகப்புடன், உள்ளே ஒவ்வொரு குட்டிக் கதைக்கும் பெரிய சிறிய படங்கள் உள்ளன. இந்நூலில் கதைகள் தவிர, படக்கதைகளும் உண்டு. அது மட்டுமல்ல, இந்நூலின் முத்தாய்ப்பாக விளங்குவது மாதங்களைப் பற்றிய பாடல்கள். ஜனவரி, பிப்ரவரி என்று 12 மாதங்கள் பற்றிய குட்டிப் பாடல்களுக்கு முழுப்பக்கப் படங்கள் வரையப்பட்டுள்ளன. மனத்தைக் கொள்ளை கொள்ளும்

இந்நூல் படித்து முடிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டு கிறது. மிக அழகிய முறையில் இந்நூலைத் தயாரித்திருக்கிறார் கள். இதுபோல் தமிழில் வெளிவந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்ற ஏக்கப் பெருமூச்சும் ஏற்படாமல் இல்லை!

மேலைநாட்டுக் குழந்தை நூல்கள் படங்கள் இன்றி வெளி வருவதே இல்லை. அவர்கள் எந்தப் பொருளையும் (Subject) ஒரு நூலாக்கி விடுகிறார்கள். அதற்காக அவசரக் கோலம் அள்ளித் தெளி என்பதெல்லாம் அங்கே இல்லை. ஒரு நூலை வெளிக் கொணர எத்தனைக் காலம் பிடித்தாலும், அது சம்பந்தமான எல்லாத் தகவல்களையும் அரும்பாடு பட்டுச் சேகரித்து முழுமை யாக வெளியிடுகிறார்கள். அதேசமயத்தில் பொருட் செலவைப் பற்றிக் கவலைப்படாமல் அற்புதமாகத் தயாரிக்கிறார்கள்.

அவர்கள் பாடுபடுவதற்குப் பலன் அங்கே நிறையக் கிடைக் கிறது. நம்மைப்போல ஓராயிரமோ ஈராயிரமோ அல்ல, பல்லா யிரக் கணக்கில், லட்சக்கணக்கில் நூல்களை அச்சிடுகிறார்கள். அவற்றை ஆர்வமுடன், விரும்பி விலைகொடுத்து வாங்குகிற வர்கள் அங்கே அதிகப் பேர் இருக்கிறார்கள். படிக்கும் பழக்கம் அங்கே நிறைய வளர்ந்திருப்பதே இதற்குக்காரணம் என்று சொல்லலாம். அதனால் புதியபுதிய நூல்கள் வெளிவந்த வண்ண மிருக்கின்றன. அந்த ஆரோக்கியமான சூழ்நிலை இங்கேயும் உருவாக வேண்டும், உருவாக்க வேண்டும்.

சோவியத் நாட்டு வெளியீடுகளும் நம் குழந்தைகளை வெகு வாகக் கவருகின்றன. சோவியத் நாட்டில் தமிழில் அச்சான அகலமான புத்தகம் ஒன்று, 'வெற்றி கண்டு வருக' என்று பெயர். விண்வெளிப் பயணம் பற்றியது. இதே போல இதே அளவில் ஏராளமான நூல்கள் அழகிய படங்களுடன் குறைந்த விலையில் கிடைக்கின்றன.

அடுத்து, குழந்தைப் பாடல்கள். கவிதை என்றாலே நாம் வெளியிடத் தயங்குகிறோம். அதாவது நம் பதிப்பாளர் அதனை வெளியிடச் சற்று தயக்கம் காட்டுகின்றனர். கவிதை விற்ப தில்லை...'' என்றுகூறி மறுத்து விடுகின்றனர். அதனால்தானோ என்னவோ, பெரும்பாலான கவிஞர் தம் கவிதைகளைத்தாமே வெளியிட்டுக் கொள்கின்றனர்.

பெரியவர்களுக்கான கவிதைகள் என்றால், தலைப்புகள் உட்பட எழுத்துகளாலேயே நிரப்பிவிடலாம். ஆனால் குழந்தைப் பாடல்களை நாம் அவ்விதம் செய்யமுடியாது. ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்போடு சேர்த்து ஒரு சிறு படமாவது போட வேண்டும். இதுவே மேலை நாட்டு வெளியீடாக இருந்தால், ஒரு பாட்டைச் சுற்றியே படத்தை வரைந்து தள்ளி விடுவார்கள்.

மூவண்ண முகப்பும், உள்ளே படங்களும் போடுவதால் தயாரிப்புச் செலவு அதிகமாகிறது. பிறகு புத்தகத்துக்கு என்ன விலை வைக்க முடியும்? அப்படி விலை வைத்தாலும் எங்கே விலை போகிறது? என்ற குரல் நம் காதில் விழாமல் இல்லை.

இலண்டனிலிருந்து வெளியிடப்பெற்ற ஒரு ஆங்கிலக் கவிதைத் தொகுப்பு. The Way Opens. இதில் பிரபலக் கவிஞர்களின் 46 கவிதைகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கவிதைக்கும் படம் உள்ளது இரு வண்ணங்களில். இங்குதான் நாம் கவனிக்க வேண்டும். இது ஒருவரே எழுதிய கவிதை நூல் அல்ல. பலர் எழுதியுள்ள கவிதைகளின் தொகுப்பு நூல். இது பெருமளவில் விற்பனையாகி இருக்கிறது என்பதற்குத் தக்க அடையாளம், இது 1953இலிருந்து 1965வரை பத்து பதிப்புகளாக வெளிவந்துள்ளதேயாகும். அது மட்டுமல்ல, இது நம் நாட்டுப்பள்ளிகளில் பாட நூலாகவும் இருந்திருக்கிறது.

அண்மையில்வெளிவந்துள்ள Stories and Poems for Children என்னும் மாஸ்கோ பதிப்பு பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது.

பொதுவாகக் கவிதைகள் குறிப்பாக, குழந்தைப் பாடல்கள் விற்காது என்று சொல்வதற்கில்லை. நாம் வணிக நோக்கோடு எத்தனையோ நூல்களை வெளியிடுகிறோம். பெரிய பதிப்பாளர்கள் அந்த நிலையிலிருந்து சற்றுக் கீழே இறங்கிவந்து, இது நாளைய தலைமுறைக்காக என்ற நோக்கில் இலாப நட்டம் பார்க்காமல் குழந்தைப் பாடல்களைத் துணிந்து வெளியிட முன் வருதல் வேண்டும்.

'விற்காது' என்று காரணங்காட்டி எதையும் தள்ளிவிட வேண்டாம். நல்ல விஷயங்கள் சமுதாயத்துக்குத் தேவை, தெரியவேண்டும் என்ற பொதுநல எண்ணத்தில், வெறும் விற்பனையை மட்டும் கருத்தில் கொள்ளாமல், ஒரு சமுதாயத் தொண்டாகவே கருதி கவிதைகள் போன்றவற்றை வெளியிட முன் வருதல் வேண்டும். பக்கம் பக்கமாகப் படிப்பதைவிடமணிக் கணக்காகக் கேட்பதைவிட குழந்தைகள் ஆடிப்பாடி மகிழ்வதையே விரும்புகின்றன. அதற்குக் குழந்தைப் பாடல்கள் அவசியமன்றோ?

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் 'மலரும் உள்ளம்' போன்ற குழந்தைப்பாடல்கள் துரிதமாக விற்பனை ஆகியுள்ளன. கவிஞர் பல்லவன் அவர்கள் எழுதி அண்மையில் வெளியிட்ட 'மயில்தோகை' குழந்தைப் பாடல்கள் வெளியீட்டு விழாவிலேயே ஆயிரம் பிரதிகள் விற்றுவிட்டன. குழந்தை எழுத்

தாளர் சங்கம் நடத்திய குழந்தை இலக்கியப் போட்டியில் முதல் பரிசான ஏவி. எம். அறக்கட்டளையின் தங்கப் பதக்கம் பெற்ற என்னுடைய குழந்தைக் கவிதை நூல் 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே!' சென்னையில் அண்மையில் நடந்த புத்தகக் கண்காட்சியில் பலர் வாங்கிச் சென்ற தகவல் மகிழ்ச்சியை அளிக்கிறது. எனவே வெளியிடாமலேயே விலை போகாது என்ற முடிவுக்கு யாரும் வந்துவிட வேண்டாம். நானும் 'நிலாச்சோறு' என்னும் என்னுடைய குழந்தைக் கவிதைத் தொகுப்பை வெளியிட பதிப்பகங்களை நாடினேன்; பயன் ஏதும் இல்லை, இறுதியில் நானே அதைச் சொந்தமாக வெளியிட்டு விட்டேன். நல்ல ஆதரவும் கிடைத்து வருகிறது.

நூல்கள் பெருமளவில் வெளிவர, உலக நாடுகளோடு நாம் ஓரளவாவது போட்டியிட அல்லது புத்தக வெளியீட்டில் — விற்பனையில் நம் நாடும் முன்னணியில் நிற்கிறது என்பதை காட்ட அரசும், பொதுமக்களும் முழு ஒத்துழைப்பினை நல்கிட வேண்டும்.

படித்தவர்கள், விவரம் தெரிந்தவர்கள் வீட்டில் ஒரு குட்டி நூலகத்தை உருவாக்க வேண்டும் என்ற சாக்கிலாவது நூல்களை வாங்கி வாங்கிக் குவிக்கலாமே! வருகின்ற வருமானத்திலேயே எப்படியாவது ஒரு சிறு தொகையை ஒதுக்கலாமே! இப்படி விலை கொடுத்து நூல்களை வாங்குவதன் மூலமே பதிப்பகங்கள் வளர முடியும் — இலக்கியங்கள் செழிக்க முடியும். விலை கொடுத்து நூல்களை வாங்குகின்ற பழக்கத்தினால், போட்டு வைத்த நூல்களும் விற்பனையாகும்; புதிய புதிய நூல்களும் வெளிவர வழி ஏற்படும்.

கதை, நாவல், கட்டுரை என்று வெளியிடும் பதிப்பக அன்பர்கள், கவிதை என்கிறபோது அதுவும் குழந்தைக் கவிதை என்கிறபோது முகம் சுளிக்கிறார்கள். 'கவிதைகள் விற்பதில்லை' என்றும் கை விரித்துவிடுகிறார்கள். வணிக நோக்கம் இருக்கத்தான் வேண்டும் என்றாலும், கொஞ்சம் சமுதாய நோக்கோடு நாளைய தலைமுறையினருக்காக என்கிற நல்ல எண்ணத்தில் விட்டுக் கொடுத்து, குழந்தைக் கவிதை நூல்களை அவர்கள் அன்புடன் ஏற்கலாம் என்பது என் தாழ்மையான கருத்து.

குழந்தைப் புத்தகங்களை நேஷனல் புக் டிரஸ்ட்—இந்தியா, மற்றும் நேரு பால புத்தகாலயம் அதிக அளவில் வெளியிட்டு வருகின்றன. மைய அரசின் புத்தக வெளியீட்டுப் பிரிவும்

(Publication Division) இளைய தலைமுறையினர்க்கு நூல்களை வெளியிடுகின்றது. சாகித்திய அக்காதெமி குழந்தை நூல்களை வெளியிடுவதில்லை எனத் தெரிகிறது. அருள்கூர்ந்து அவர்கள் தம் வெளியீடுகளில் குழந்தை இலக்கியத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இது என் போன்றவர்களின் பேரவா மட்டுமல்ல, இதை எல்லாருமே மனமுவந்து வரவேற்கவும் செய்வார்கள் என்பது என் கருத்து.

குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் பத்திரிகைகளுக்கும் முக்கியப் பங்குண்டு என்பதை நாமறிவோம். ஒரு காலத்தில் குழந்தைகளுக்காக ஏராளமான பத்திரிகைகள் வெளிவந்தன. அணில், டமாரம், ஜில்ஜில், குரங்கு, மிட்டாய், பூஞ்சோலை, கண்ணன், துப்பாக்கி, யுவன், ஜிங்லி என்று காலணா, அரையணா வுக்குக்கூட பத்திரிகைகள் வந்தன. குழந்தைகள், இந்தப் பத்திரிகைகள் வரும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த காலமும் இருந்தது. ஆனால் கால வெள்ளத்தில் அந்த நல்ல பத்திரிகைகளெல்லாம் இருந்த இடம் தெரியாமலேயே போய் விட்டன. பிறகு சில இதழ்கள் அவ்வப்போது தலைகாட்டின; அவையும் தலைதூக்க முடியாமல் மறைந்தன. இன்றோ விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சில இதழ்களே, முழுக்க முழுக்கக் குழந்தைகளுக்கென்று வெளிவருகின்றன. 'அம்புலிமாமா'—இது பன்மொழிகளில் வண்ணப்படங்களுடன் வெளிவருகிறது. 'கோகுலம்' அதிகப் பக்கங்களில் பயனுள்ள பல தகவல்களைக் கொண்டு மீண்டும் வெளிவருகிறது. பாலமித்ரா, விஞ்ஞானச் சுடர், ரத்ன பாலா ஆகிய குழந்தை இதழ்களும் இப்போது வெளி வருகின்றன.

தமிழ்நாட்டில் இன்று நிறைய பல்வேறுபத்திரிகைகள் வெளி வருகின்றன. நாளிதழ்கள், வார, மாத, மாதமிருமுறை இதழ் களுக்குக் குறைவில்லை. இவற்றில் 'சிறுவர் பகுதி' உள்ள பத்திரிகைகள் எத்தனை? என்ற வினாவெழுப்பினால் ஒரு சில தவிர மற்றவையெல்லாம் முழுக்கமுழுக்க பெரியவர்கள் பக்கமே போய்விடுவதைப் பார்க்கலாம். முன்பு 'கல்கி' 'ஆனந்தவிகடன்' ஆகிய இதழ்கள் சிறுவர்களுக்கெனச் சில பகுதிகளை ஒதுக்கி வந்தன. (ஆனந்தவிகடனில் தற்போது வரும் 'மாணவர் பக்கம்' கல்லூரித் தரத்திற்கேற்றவாறு உள்ளது). மீண்டும் அவ்வாறே அவை வெளிவந்தால் குழந்தைகள் குதூகலத்துடன் வரவேற் பார்கள்.

தமிழக அரசின் அதிகாரப்பூர்வமான ஏடான 'தமிழரசு' இதழில் 'மாணவர் பக்கம்' பள்ளிக் குழந்தைகளுக்கென கதை,

பாடல், துணுக்குகள் தாங்கி மூன்று பக்க அளவில் வெளிவருகின்றது.

'ராணி' வார இதழில் 'மாணவர் உலகம்' தொடர்ந்து வருகின்றது. இப்போது 'இதயம் பேசுகிறது' என்னும் வார இதழில் குழந்தைகளுக்கான குட்டிக்கதைகள் வெளிவருகின்றன. கிறிஸ்துவ இலக்கியச் சங்கத்தின்சார்பில் வெளிவரும் 'பூக்கூடை' மாத இதழில் சிறுவர்க்கான தகவல்கள் இடம் பெறுகின்றன. 'ஸ்ரீஇராமகிருஷ்ண விஜயம்' இதழிலும் சிறுவர் பகுதி இடம் பெறுகிறது.

பெரியவர்களுக்கான வார, மாதப் பத்திரிகைகள் ஏறக்குறைய நூறு பக்க அளவில் வெளிவருகின்றன. இந்த நூறு பக்கங்களில் இரண்டு பக்கங்கள் குழந்தைகளுக்காக ஒதுக்கலாமே! நாளிதழ்களும் 'வார மலர்' வெளியிடுகின்றன. அதில் குழந்தைகளுக்காக ஒரு பகுதி ஒதுக்கலாம்.

வசதி படைத்தவர்கள், பெரிய அளவில் அச்சகம் வைத்திருப்பவர்கள், அல்லது பல பத்திரிகைகளை (Group Magazines) நடத்துகிறவர்கள் குழந்தைகளுக்கெனப் பத்திரிகைகளைத் தொடங்குவதில் சிரமம் ஒன்றும் இருக்காது. இந்த உதவியைச் செய்வதன்மூலம், குழந்தைப் பத்திரிகைகள் அதிகம் இல்லாத குறையைப் போக்கலாம்; இந்தப் பணியை ஒரு தொண்டாகக் கருதிக்கூட அவர்கள் செய்ய முன்வரலாம்.

ஆண்டு தோறும் நவம்பர் திங்களில் 'குழந்தைகள் தினம்' வருகிறது. அந்நாளில் வெளியிடுவதற்கேற்ப, ஒவ்வொரு பதிப்பகமும் குறைந்தது ஐந்து புத்தகங்களையாவது கொண்டுவந்தால் கூட, குழந்தைப் புத்தகங்களின் எண்ணிக்கையைக் கூடுதலாக்கலாம்.

குழந்தைகள் தினத்தின்போது தமிழக அரசும், குழந்தைகள் தினவிழா, கலைநிகழ்ச்சிகள் நடத்தியும், ஓவியம் மற்றும் புத்தகக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்தும் வருகின்றது. இவையன்றிநாடெங்கும் தேசிய புத்தக வாரமும் கொண்டாடப் படுகிறது. கதை, நாவல், கட்டுரை, கவிதைப் புத்தகங்களோடு, கண்ணைக் கவரும் வண்ணங்களில் சித்திரக் கதைப் புத்தகங்களும் காட்சியில் இடம் பெறுகின்றன.

புத்தகக் கண்காட்சிகளில் 10% முதல் 40% வரை தள்ளுபடி விலையில் புத்தகங்கள் விற்கப்படுகின்றன. இதனைப் பெற்றோர்கள், ஆசிரியர்கள், மாணவ மணிகள் பயன்படுத்திக்

கொள்ளவேண்டும். புத்தகங்கள் அர்த்தமுள்ள பரிசு என்பதால், அவற்றை வாங்கி, பிறந்த நாள், திருமணம் ஆகிய விழாக்களில் பரிசாக அளிக்கலாம்.

அடுத்து, நாம் வானொலிக்கு வருவோம். சென்னை வானொலியில் 'மழலை அமுதம்' 'சிறுவர் சோலை' ஆகிய நிகழ்ச்சிகள் குழந்தைகளின் திறமையை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. பலபகுதிகளில் உள்ள வானொலிச் சிறுவர் சங்கங்கள், சின்னஞ்சிறு வயதிலேயே குழந்தைகளுக்கு ஆடல், பாடல் போன்ற கலைகளில் பயிற்சி தந்து, வருங்காலத்தில் சிறந்த கலைஞர்களாக வருவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றன. வானொலி சிறுவர் சங்கப் பேரவைத் தலைவர் புலவர் தணிகை உலகநாதன், 'வானொலி அண்ணா' கூத்த பிரான் ஆகியோருடைய ஒத்துழைப்பினாலும்குழந்தைகள் கல்வியோடு கலைகளிலும் சிறந்து விளங்கிட ஊக்கம் பெற்று வருகின்றனர்.

சென்னைத் தொலைக்காட்சியில் 'கண்மணிப்பூங்கா' நிகழ்ச்சியும் குழந்தைகளுக்கான பல்வேறு நிகழ்ச்சிகளை நடத்தி வருகின்றது. இதன் மூலம் பல குழந்தைகள் ஊக்கமும் உற்சாகமும் பெற்று வருகின்றனர். இலங்கைத் தொலைக்காட்சி 'ரூபவாகினி'யில் நாள்தோறும் சிறுவர் நிகழ்ச்சிகள் இடம் பெறுவதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

திரைப்படங்களும் குழந்தை இலக்கியத்துக்கு உதவ முடியும். 'Children's Film Society, India' என்னும் அமைப்பு, பல குழந்தைப்படங்களை எடுத்திருக்கின்றது. எடுத்தும்வருகின்றது. இதன் சார்பில், அனைத்து நாட்டுக் குழந்தைகள் திரைப்பட விழாவும், சென்னையில் சிறப்பாக நடந்ததை நாமறிவோம். இந்தவிழாவில் திரையிடப்பெற்ற 'The Jungle Book' ஒருஅருமையான குழந்தைப் படமாகும். இதைப்போல, தமிழகத் திரைப்படத் தயாரிப்பாளர்களும், குழந்தைப் படங்கள் எடுப்பதற்குச் சற்றுக் கவனம் செலுத்தலாம்.

குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டாக, தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் வெளிவரும் 'குழந்தைகள் கலைக்களஞ்சியம்'(Children's Encyclopaedia) விளங்குகின்றது. வண்ணப் படங்களுடன் ஏராளமான தகவல்களை வாரி வழங்குகின்றது இது. இப்போது பத்து தொகுதிகள் வெளிவந்துள்ளன. பொது அறிவுக் களஞ்சியமான இது, எல்லாத் திறத்தார்க்கும் ஏற்ற இன்சுவைப் படையலாகும்.

எனவே, குழந்தை நூல்கள் வெளிவர, அவை பெருமளவில் விற்பனையாக, அதன் மூலம் குழந்தை இலக்கியம் வளர குழந்தை எழுத்தாளர் —பதிப்பாளர்—ஆசிரியர்—பெற்றோர்—மாணவ மணிகள்—இப்படி எல்லாரும் ஆர்வமுடன் ஒருங்கிணைந்து உழைத்திட வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக அரசும் ஆதரவு நல்கிட வேண்டும்.

நல்ல எழுத்துக்கள் மலர—நல்ல நூல்கள் வெளிவர—அவை அதிக அளவில் விற்பனையாக உறுதி கொள்வோமா!

## இக்கட்டுரைக்கு அடிப்படையான 1982-இல் வெளியான குழந்தை நூல்கள்

(1) திருக்குறள் நீதிக் கதைகள்: வசந்தா இராமனாதன், அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை-600014, விலை. ரூ. 8.

(2) குறள் கதைகள்: மா. பா. குருசாமி, மீனாட்சி புத்தக நிலையம், 222, டாக்டர் நடேசன் சாலை, சென்னை-600005, விலை. 3.75.

(3) பாலர் இராமாயணம்: வசந்தா இராமனாதன், அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை-600014, விலை ரூ. 6.

(4) பாலர் மகாபாரதம்: வசந்தா இராமனாதன், அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை-600014 விலை ரூ. 5.

(5) சாது சுந்தர்சிங் அருளுரைக்குட்டிக் கதைகள்: எஸ்தர் கலாவதி, கிறிஸ்டியன் பேப்பர் பேக்ஸ், 29, செட்டித் தெரு, சென்னை-600023. விலை ரூ. 3.

(6) பழனி பால நீதி: புலவர் இரா. இளங்குமரன், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை, சென்னை-600 108, விலை ரூ. 3.50.

(7) கெடில வளம்: பேராசிரியர் சுந்தர சண்முகனார், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை, சென்னை-600 108, விலை ரூ. 7.

(8) பண்பு வளர்த்த பாவலர்: பூவை அமுதன், மயிலவன் பதிப்பகம், 7, முண்டகக் கண்ணி அம்மன் கோயில் தெரு. சென்னை-600004, விலை ரூ. 6.

(9) நவயுக நவமணிகள்: எம். நாராயணவேலுப்பிள்ளை மயிலவன் பதிப்பகம், 7, முண்டகக் கண்ணி அம்மன் கோயில் தெரு, சென்னை-4, விலை ரூ 7.

(10) திரு. வி. க. சிந்தனைகள்: பி. எல். ராஜேந்திரன், செல்வ நிலையம், 18 முத்து முதலி தெரு, சென்னை-600014, விலை ரூ. 12.

(11) தமிழ் மாலை: தங்கவயல் லோகிதாசன், தங்கவயல் பதிப்பகம், 3/37, சத்தியமூர்த்தி நகர், நந்தனம், சென்னை-600035, விலை ரூ. 7.

(12) ஞானமணிகள்: தங்கவயல் லோகிதாசன், தங்கவயல் பதிப்பகம், 3/37, சத்தியமூர்த்தி நகர், நந்தனம், சென்னை 600035, விலை ரூ. 5.

(13) மலரும் பூக்கள்: ரா. பொன்ராசன், பாவலர் இல்லம், குன்றக்குடி-623 206, விலை ரூ. 5.

(14) எலி கடித்த பூனை: குழ. கதிரேசன், மீனாட்சி புத்தக நிலையம், 222, டாக்டர் நடேசன் சாலை, சென்னை-600 005, விலை ரூ. 6-75.

(15) பாலர் பாடல்கள். திருச்சி வாசுதேவன், கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், பூங்கா நகர், சென்னை-600 003, விலை ரூ. 3-50.

(16) அன்புக் குழந்தைக்கு அறுபது பாடல்கள்: தொகுப்பாசிரியர்கள்: கவிஞர் செல்லகணபதி, கவிஞர் ரா. பொன்ராசன், குழந்தைக் கவிஞர் மணிவிழா வெளியீடு, பழனியப்பா பிரதர்ஸ், 14, பீட்டர்சு சாலை, சென்னை-600014. விலை ரூ. 3.

(17) பூந்தளிர்: செம்பை சேவியர், ப்ரீதா பதிப்பகம், 15, மேற்கு அவென்யூ சாலை, சென்னை-600 024, விலை ரூ. 2-50.

(18) வள்ளல் எழுவர்: புத்தனேரி ரா. சுப்பிரமணியம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை, சென்னை 600108, விலை ரூ. 2-50.

(19) கோமதியின் கோபம்: டாக்டர் பூவண்ணன், பழனியப்பா பிரதர்ஸ், 14, பீட்டர்சு சாலை, சென்னை-600 014 விலை ரூ. 3-40.

(20) குழந்தைகள் கட்டிய நேரு பாலம்: ரேவதி, பழனியப்பா பிரதர்ஸ், 14, பீட்டர்சு சாலை, சென்னை-600014, விலை ரூ. 4-50.

(21) பறவைகளே பறவைகளே: கு. ராஜாராம், மீனாட்சி புத்தக நிலையம், 222, டாக்டர் நடேசன் சாலை, சென்னை-600 005, விலை ரூ. 6-75.

(22) அறிவியல் இன்பம்: கு. ராஜாராம், மீனாட்சி புத்தக நிலையம், 222, டாக்டர் நடேசன் சாலை, சென்னை-600 005, விலை ரூ. 6.

(23) அறிவியல் துணுக்குகள்: வசந்தா இராமநாதன், அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை-600 014, விலை ரூ. 6.

(24) விஞ்ஞான விநோதங்கள்: வசந்தா இராமநாதன், அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, சென்னை-600 014, விலை ரூ. 6.

# 19. பீகிங் வானொலியில் தமிழ்

-ந. கடிகாசலம்

சீன நாட்டின் பீகிங்வானொலி 38 உலக மொழிகளில் ஒலி பரப்புச் செய்கின்றது. கடந்த இருபது ஆண்டுகளாகச் சிறப் புடன் இயங்கும் இவ்வானொலித்தமிழ்த் துறை தினந்தோறும் ஒரு மணிநேரத் தமிழ் ஒலிபரப்பில் ஈடுபடுகின்றது. 1982-இன் ஒலிபரப்பில் செய்திகள், விமரிசனக் கட்டுரைகள், செய்தித் தொகுப்பு, சிறப்புக் கட்டுரை, மக்கள் சீனம் எனும் சிறப்பு நிகழ்ச்சி, இசை நிகழ்ச்சி என்பன குறிப்பிடத் தக்கன.

## முன்னுரை

பழங்காலந்தொட்டு வரலாற்றுத் தொடர்புடைய இந்தியாவும் சீனாவும், பல்வேறு ஒற்றுமைகளுடன் கூடிய அண்டை நாடுகளாக விளங்குகின்றன. அனைத்து இந்திய வானொலியின் தென்கிழக்காசிய ஒலி பரப்பில் சீனமொழி ஒலிபரப்பும், பீகிங் வானொலியில் இந்தி, தமிழ் ஒலிபரப்பும் நடைபெறுவது குறிப் பிடத்தக்க ஒற்றுமையாகும். மக்கள் சீனக்குடியரசின் சர்வதேச ஒலி பரப்புக்கான பீகிங் வானொலியை அறிமுகப் படுத்துவதும் 1982-இல் அது ஒலிபரப்பிய தமிழ் நிகழ்ச்சிகள் பற்றிய விவரங் களைத் தருவதும் இக்கட்டுரையின் நோக்கங்களாகும்.

## I

தொண்ணூற்றாறு இலட்சம் சதுரக் கிலோ மீட்டர் நிலப் பரப்பையும், நூறு கோடி மக்கட் தொகையையும் கொண்டு விளங்கும் மக்கள் சீனக் குடியரசின் தலைநகரான பீஜிங் (பீகிங்) மாநகரின் மையப்பகுதியில் பீகிங் வானொலி நிலையம் அமைந் துள்ளது. உலக நாடுகளில் உள்ள வானொலி நிலையங்களில் குறிப்பிடத்தக்க ஒன்றாக விளங்கும் பீகிங் வானொலி நிலையம் 1947 செப்டம்பர் பதினோராம் நாள் துவக்கப்பெற்றது. 1950-இல் பீகிங் வானொலியின் சர்வதேச ஒலிபரப்பு அதிகாரப் பூர்வ மாகத் துவங்கியது. அப்போது, ஆங்கிலம், ஜப்பான், கொரியன், வியட்நாம், தாய், பர்மியம், இந்தோனீசியன் ஆகிய ஏழு

மொழிகளில் மட்டுமே சர்வதேச ஒலிபரப்பு நடைபெற்றது ஆனால், தற்போது சீனமொழி,அதன் நான்கு கிளைமொழி களுடன், 38 அந்நிய மொழிகளிலும் (காண்க: இணைப்பு : )ஒலி பரப்பு நடைபெறுகிறது.

நாள்தோறும் நடைபெறும் மொத்தம் 137 மணி நேர ஒலி பரப்பில், செய்திகள், சர்வதேச நிகழ்ச்சிகள் பற்றிய விமரிசனம் ஆகியவற்றுடன், சீன மக்களின் வாழ்க்கை, சீன மக்கள் சமுதாயம், சீனாவின் பண்பாடு, கலை, இலக்கியம், பொருளா தாரம், அரசியல், இசை; சர்வதேசப் பிரச்சினைகளில் சீனாவின் கருத்தும் நிலையும் பற்றிய அடிப்படை விவரங்களைத் தரும் வகையிலும்; சீன மக்களுக்கும் பிறநாட்டு மக்களுக்கும் இடையில் புரிந்துணர்வையும், நட்புறவையும் வளர்க்கும் வகையிலும் சிறப்புக் கட்டுரைகளுடன் கூடிய சீன நிர்மாணம், பயணக் கட்டுரை, இசை நிகழ்ச்சி போன்ற பல்வேறு நிகழ்ச்சிகளும் இடம் பெறுகின்றன. இவை தவிர, விடுமுறை, திருவிழாக்கள், பிற குறிப்பிடத்தக்க நாட்கள் ஆகியவற்றின் போது சில சிறப்பு நிகழ்ச்சிகளும் ஒலிபரப்பாகின்றன. அத்துடன், நேயர்கள் விரும்பிக்கேட்கும் சில நிகழ்ச்சிகளும் தயாரித்தளிக்கப்படு கின்றன. எடுத்துக்காட்டாக, சீனமொழி கற்க விருப்பம் தெரி வித்த நேயர்களுக்காக, ஆங்கிலம், ஜப்பான், பிரெஞ்சு ஆகிய மொழிப் பிரிவுகளின் ஒலிபரப்பில் சீன மொழிப் பாடங்கள் துவக்கப்பெற்றதைச் சிறப்பாகக் கூறலாம் இது போன்றே, மூன்றாவது உலகம் முன்னேறுகிறது (Third world marches on) எனும் நிகழ்ச்சி ஆங்கிலப் பிரிவிலும், "வியட்நாமிய சமூகம்—ஒரு பார்வை" வியட்நாமியப் பிரிவிலும், "சீன முஸ்லீம்கள்"— அரபு மொழிப் பிரிவிலும், "நட்பின் சதுக்கம்"—ஜப்பானிய மொழிப் பிரிவிலும், "புரட்சிக் கதைகள்" கம்போடியப் பிரிவி லும் நேயர்களின் விருப்பத்திற்கிணங்கத் துவங்கிய நிகழ்ச்சிகளில் சிலவாகும்.

சீனாவின் இசைவாணர், கலைஞர், எழுத்தாளர், விளை யாட்டு வீரர், நடிகர், நடிகையர் ஆகியோரின் பேட்டியும், அவர் களைப்பற்றியகட்டுரைகளும் ஒலி பரப்பப்படுவதுண்டு. சீனாவின் பாரம்பரிய இசையும், பிறநாட்டு இசையும் ஒலிபரப்பாகின்றன. இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் சர்வதேச நேயர்களின் சீனாவைப் பற்றிய புரிந்துணர்வை மேம்படுத்த வேண்டும் என்னும் நோக் கத்தைக் குறிக்கோளாகக் கொண்டு தயாரிக்கப்படுகின்றன.

II

பீகிங் வானொலி நிலையத்தின் 38 அந்நிய மொழித் துறை களில் பணிபுரிவோர் அனைவரும் சீனர்களே. அவர்கள், அம்

மொழிகளை முறையாகப் பயின்றவர்கள், அத்துடன், அவை பேசப்படும் நாடுகளுக்குச் சென்று, இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் அங்குள்ள பல்கலைக் கழகங்களில் சேர்ந்து பயில்வது முண்டு. இதனால், குறிப்பிட்ட மொழியில் தேர்ச்சி பெறு வதுடன், அம் மொழி பேசப்படும் சூழ்நிலையில் வாழ்வதால் அம் மொழி பேசும் மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, கலை, பேச்சு மொழி வழக்கு போன்றவற்றை நேரிடையாகக் கண் டுணரும் வாய்ப்பையும் அவர்கள் பெறுகின்றனர்.

எடுத்துக்காட்டாகத் தமிழ்த் துறையைக் காண்போம். 1960-இல், பீகிங்கில் உள்ள பல்கலைக் கழகங்களில் ஒன்றான பீகிங் ஒலிபரப்புக் கல்லூரியில் நான்கு ஆண்டுக் காலத் தமிழ் மொழி வகுப்பு துவக்கப் பெற்றது. இதில் 20 மாணவர் சேர்ந்து தமிழ் மொழியைப் பயின்றனர். அவர்களில் சிலர், 1963 ஆகஸ்டு திங்களில் பீகிங் வானொலி நிலையத்தில் தமிழ்த் துறை துவக்கப்பட்டபோது, அதில் சேர்ந்து பணிபுரியலாயினர். பின்னர், ஆண்டுக்கு ஒருவர் அல்லது இருவர் வீதம் இலங்கை சென்று, அங்குள்ள பல்கலைக்கழகங்களில் தமிழ்மொழியையும், இலக்கியத்தையும் பயின்றனர்.

ஒவ்வொரு மொழித் துறையிலும், அந்நிய நாட்டவர் நிபுணராகப் பணிபுரிகிறார். கடந்த இருபது ஆண்டுகளாக இலங்கையைச் சேர்ந்தோர் தமிழ்த்துறையில் நிபுணர்களாகப் பணியாற்றினர். தமிழகத்தைச் சேர்ந்த இக்கட்டுரையாசிரியர் தற்போது நிபுணராகப் பணிபுரிந்து வருகிறார்.

III

பீகிங் வானொலி நிலையத்தின் செய்திப் பிரிவு, அனைத்து மொழித் துறைகளுக்கும் சீன மொழியில் செய்திகளை வழங்கு கிறது. பின்னர், ஒவ்வொரு துறையிலும் பணிபுரிவோர் அவற்றைத் தத்தம் மொழிகளில் மொழிபெயர்க்கிறார்கள். அவர் தம் மொழிபெயர்ப்பு, நிபுணரால் சரிபார்க்கப்படுகிறது. செய்திகள் தவிர, சீன மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்படும் விமரிசனம், செய்தித் தொகுப்பு, பிற கட்டுரைகள், பேட்டி, இசை நிகழ்ச்சி தொடர்பான கட்டுரைகள் ஆகியவற்றின் மொழி பெயர்ப்பையும் அவர் சரிபார்க்கிறார். ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்க வேண்டிய சிறப்புக் கட்டுரைகள் அனைத்தும்

நிபுணரால் மொழி பெயர்க்கப்படுகின்றன. குறிப்பிட்ட மொழியில் மேலும் தேர்ச்சியும் புலமையும் பெறும்வகையில், அம் மொழித் துறையில் பணிபுரியும் சீனர்களுக்கு இலக்கிய வகுப்பையும் நிபுணர் நடத்துகிறார். ஒவ்வொரு மொழித் துறையிலும் பணிபுரியும் பலரின் கடும் உழைப்பாலும், நிபுணர்தம் ஒத்துழைப்பாலும், பீகிங் வானொலி நிலையத்தின் சர்வதேச ஒலிபரப்பு சீருடனும் சிறப்புடனும் நடைபெற்று வருகிறது என்றால் மிகையாகாது.

IV

இனி பீகிங் வானொலி நிலையத்தில் கடந்த இருபது ஆண்டுகளாகச் சிறப்புடன் விளங்கி வரும் தமிழ்த்துறை, 1982-இல் ஒலிபரப்பிய நிகழ்ச்சிகள் பற்றிக் காண்போம்.

செய்திகள், விமரிசனக் கட்டுரை, செய்தித் தொகுப்பு, சிறப்புக் கட்டுரை, மக்கள் சீனம் எனும் சிறப்பு நிகழ்ச்சி, இசை நிகழ்ச்சி ஆகியவை, கடந்த ஆண்டு ஒலிபரப்பான தமிழ் நிகழ்ச்சிகளின் பொதுப் பிரிவுகளாகும். இவை தவிர, அவ்வப்போது சீனப் பழமொழிகளும் கதைகளும் ஒலிபரப்பாகியுள்ளன.

**செய்திகள்:** பெரும்பான்மையாகச் சர்வதேச செய்திகளும், சீனா பற்றிய சில செய்திகளும் நாள்தோறும் செய்தியறிக்கையில் இடம் பெற்றுள்ளன. செய்திகளை உடனுக்குடனும், விரைவாகவும் வழங்குவதில் பீகிங் வானொலி இயன்றளவில் விரைந்து செயல்படுகிறது. பல்வேறு நாடுகளில் உள்ள இவ்வானொலியின் நிருபர்கள் அனுப்பும் செய்திகளுடன், சீனாவின் செய்தி நிறுவனமான சிங்குவா (Xinhua) தரும் செய்திகளும் உடனுக்குடன் ஒலிபரப்பப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, இந்திய நேரம் இரவு 7-30 மணிக்கு ஒலிபரப்பாகும் பீகிங் வானொலியின் தமிழ்ச் செய்தியறிக்கையில், மாலை 5-30 மணி வரை வரும் செய்திகள் மொழிபெயர்க்கப்பட்டுச் சேர்க்கப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

**விமரிசனம்:** சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகள் பற்றிய விமரிசனத்தை உடனுக்குடன் ஒலிபரப்புவது என்பது பீகிங் வானொலியின் சிறப்புப் பணியாக விளங்குகிறது. பெரும்பாலும், அனைத்து மொழிகளின் ஒலிபரப்பிலும் விமரிசனம்

இடம் பெறுகிறது. தமிழ் ஒலிபரப்பில் வாரத்திற்கு ஐந்து நாட்கள் விமரிசனம் இடம்பெற்று வருவது (காண்க: இணைப்பு III) குறிப்பிடத்தக்கது.

1982-ஆம் ஆண்டைப் பொறுத்தவரையில், பலஸ்தீனப் போராட்டம், ஆப்கானிஸ்தானில் சோவியத் யூனியனின் ஆக்கிர மிப்பு, வியட்நாமின் கம்போடிய ஆக்கிரமிப்பு, அமெரிக்க—சோவியத் ஆயுதப் போட்டி, லெபனானில் இஸ்ரேலின் ஆக்கிர மிப்பு ஆகியவை முக்கிய சர்வதேசப் பிரச்சினைகளாக விளங் கின. இவை பற்றிய விமரிசனங்கள் தமிழ் ஒலிபரப்பில் (காண்க: இணைப்பு IV (அ)) இடம் பெற்றுள்ளன. இவ்விமரிசனங்களில், பிரச்சினையின் உண்மை நிலை, அது தீர்க்கப்பட வேண்டிய முறை ஆகியவை நடுநிலையுடன் ஆராயப்பட்டுள்ளன. எந்த ஒரு நாடும் இன்னொரு நாட்டின் மீது ஆக்கிரமிப்பு மேற்கொள்ளக் கூடாது என்னும் மக்கள் சீனக் குடியரசின் கோட்பாடு, இவ்விமரி சனங்களில் இழையோடியுள்ளதைக் காண முடிகிறது. அண்டை நாடுகளுடன் பரஸ்பர நட்புறவு என்னும் சீனாவின் கொள்கை யும் வலியுறுத்தப்பட்டுள்ளது என்பதற்கு, இந்தியத் தலைமை அமைச்சரின் சோவியத் பயணம், பாகிஸ்தான் அதிபரின் இந்தியப் பயணம் பற்றிய விமரிசனங்களை எடுத்துக்காட்டாகத் தரலாம். சுருங்கிய அளவில், பிரச்சினைகளைத் தெள்ளத் தெளி வாகப் படம்பிடித்துக் காட்டும் வகையில் அமைந்துள்ள இவ் விமரிசனங்கள், பீகிங் வானொலிக்குப் புகழ் சேர்ப்பதில் வியப்பேதுமில்லை.

**செய்தித் தொகுப்பு:** சர்வ தேசப் பிரச்சினைகளைப் பற்றிய முழு விவரங்களையும் தொகுத்துத் தரும் வகையில் இது அமைந் துள்ளது. ஒரு பிரச்சினை உருவான நாட்டிலிருந்து, அது தொடர்பாக, அங்குள்ள பீகிங் வானொலி நிருபர் அனுப்பும் விவரத் தொகுப்புகள் 'செய்தித் தொகுப்பு' எனும் தலைப்பில் ஒலிபரப்பாகின்றன. 1982-இல், அரபாத் தலைமையிலான பலஸ்தீன விடுதலை நிறுவனம், ஆப்கானிஸ்தான் மக்கள் ஆகியோரின் போராட்டம் பற்றிய செய்தித் தொகுப்புகள் குறிப் பிடத்தக்க வகையில் அமைந்துள்ளன. சீனாவின் தலைமை அமைச்சர் சௌ ச்சு யாங் அவர்களின் வட ஆப்பிரிக்கப் பயணம் பற்றிய செய்தித் தொகுப்பு, நட்பு நாடுகளின் உறவு குறித்து கருத்து வெளியிட்டுள்ளது.

**பேட்டியும், வானொலி உரையும்:** மக்கள் சீனக் குடியரசுக்கு வருகை தரும் அல்லது பயணம் மேற்கொள்ளும் வெளிநாட்டுப் பிரமுகர்களைப் பீகிங் வானொலி பேட்டி கண்டுவருகிறது. பிரதி

நிதிக் குழு, நல்லெண்ணத் தூதுக்குழு, இசைக் குழு ஆகியவற்றில் இடம் பெற்று, சீனாவுக்கு வருகை தரும் முக்கியப் பிரமுகர்கள், கலைஞர்கள் ஆகியோரையும் வானொலி பேட்டி காண்கிறது. 1982-இல் சீனப் பயணம் மேற்கொண்ட தமிழ்நாட்டுக் கல்வியமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் வழங்கிய வானொலி உரை, தமிழ் ஒலிபரப்பில் இடம் பெற்றுள்ளது. தமிழ் மொழியின் சிறப்பு, தமிழர்தம் பண்பாட்டுச் சிறப்பு, உலகமெலாம் தமிழோசை பரவுதல் வேண்டும் என்பதன் சிறப்பு ஆகியவை குறித்து அவர் கூறியுள்ள கருத்துக்கள் சிறப்பானவையாகக் காணப்படுகின்றன. மிதிவண்டியில் உலகப் பயணம் மேற்கொண்டு, சீனா வந்த ஓர் இந்தியப் பயணியின்பேட்டியும் கடந்த ஆண்டின் தமிழ் ஒலிபரப்பில் இடம் பெற்றுள்ளது.

சிறப்புக் கட்டுரையும் ''மக்கள் சீனம்'' என்னும் சிறப்பு நிகழ்ச்சியும்! சீனாவைப் பற்றிய அறிவை அதிகரிக்கும் வகையில் இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் அமைந்துள்ளன. சீனாவின் அரசியல், பொருளாதாரம், புவியியல், பண்பாடு, கலை, இலக்கியம் ஆகியவை தொடர்பான அடிப்படை அறிவைத் தரும் வகையில் அமைந்துள்ளதே ''மக்கள் சீனம்'' எனும் சிறப்பு நிகழ்ச்சி. 1982-இல் ஒலிபரப்பான ''மக்கள் சீனம்'' [காண்க: இணைப்பு IV (உ)] நிகழ்ச்சிகளை ஆராய்ந்தால், அதன் பரந்துபட்ட எல்லை புலனாகிறது.

சிறப்புக் கட்டுரைகள், 'மக்கள் சீனம்' நிகழ்ச்சியில் இடம் பெறும் கட்டுரைகள் ஆகியவை ஆங்கிலத்திலிருந்தும், சீன மொழியிலிருந்தும் தமிழாக்கம் செய்யப்படுகின்றன.

1982-இல் ஒலிபரப்பான 'மக்கள் சீனம்' நிகழ்ச்சியில் இடம் பெற்ற கட்டுரைகளைப் பின்வருமா வகைப்படுத்தலாம் இவ்வாறு வகைப்படுத்திய பின்னர்தான் ''மக்கள் சீனம்'' எனும் நிகழ்ச்சி உண்மையிலேயே சிறப்பு நிகழ்ச்சியாக உள்ளது என்பது தெரிகிறது.

| பொருள் | | தலைப்பு |
|---|---|---|
| (அ) நாடு | ... | சீனாவின் உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து, சீனாவில் மத சுதந்திரம், சீனாவின் ஆற்றல்வளம், [redacted]னாவின் நெடுஞ்சாலை நிர்மாணம், சீனாவின் மிக நீளமான கால்வாய், |

| | | |
|---|---|---|
| (ஆ) மக்கள் | ... | சீனாவின் தேசிய இனங்கள், உய்கூர் இன மக்கள், கானி தேசிய இனம், தாயுர் இனம், கிர்கிஸ் இனம், நக்சி தேசிய இனம். |
| (இ) மொழியும் இலக்கியமும் | ... | சீனாவில் வழங்கப்படும் மொழிகள், ஹான் வமிச செய்யுள், கேசர் எனும் திபெத் காவியம், இலக்கிய மேதை லூ சின், புகழ் பெற்ற எழுத்தாளர் காவ் சிசி. |
| (ஈ) கல்வி | ... | படிப்புக்குப் பின் பல்கலைக்கழக வாழ்க்கை, லௌ நின் மாநிலத் தொழிற்பள்ளிகள், சீனக் கல்வித் துறையாளர்களில் ஒருவரான யெ செங்தா. |
| (உ) அறிவியல் | ... | சீன விஞ்ஞானக் கழகம், சீனா அனுப்பிய துணைக் கோள். |
| (ஊ) மருத்துவம் | | மேலை மருத்துவமும் சீனாவின் பாரம்பரிய மருத்துவமும், ஜின் செங் வேர். |
| (எ) வேளாண்மை | ... | சீனாவில் நெல் அறுவடையும் சேமிப்பும், உற்பத்தியில் பொறுப்பு முறை, விவசாய நவீனமாக்கல் பரிசோதனை. |
| (ஏ) அரசியல் | ... | சீன அரசியலமைப்பு முறை, சீன மக்கள் அரசியல் கலந்தாலோசனை மாநாட்டின் ஐந்தாவது தேசியக் கமிட்டியின் ஐந்தாவது கூட்டம். |
| (ஐ) பொது | | சீனாவில் அஞ்சல் தலை வரலாறு பற்றிய கண்காட்சி, லோயாங் பியோனி மலர்கள், ஓமெய் மலைக் குரங்குகள், சீனாவின் கடலோடி செங்கே, இரண்டு நாய்கள் பற்றிய கதை. |

**இசை நிகழ்ச்சி:** தமிழ் ஒலிபரப்பைக் கேட்டு மகிழும் பல்லாயிரக்கணக்கான நேயர்களின் விருப்ப நிகழ்ச்சியாக விளங்கும் இந்நிகழ்ச்சியில், சீனாவின் நாட்டுப்புறப் பாடல்கள்,

நாட்டுப்புற இசை ஆகியவற்றுடன், பிற நாட்டுப் பாடல்களும், கருவி இசையும் இடம் பெறுகின்றன. சீனாவின் பாரம்பரிய இசைக் கருவிகளால் உருவான இசை, கேட்கக்கேட்கத் தெவிட்டாத தேனிசையாகக் காதில் விழுகிறது. சீனாவில் 55 தேசிய இனங்கள் வாழ்வதால், சீன இசை மரபுச் செல்வம் வளமாகவும், பழம்பெருமை வாய்ந்ததாகவும் விளங்குகிறது. சர்வதேச இசைப் போட்டிகளில் பங்கு கொண்டு வெற்றி பெற்ற இசைக் கலைஞரின் இசையும், பாடலும், பேட்டியும் இந் நிகழ்ச்சியில் ஒலி பரப்பாவதால், பெரும்பாலான நேயர்களை இது கவர்ந்துள்ளதில் வியப்பேதுமில்லை.

முடிவுரை:

''சீனாவைப் பற்றிய புரிந்துணர்வை அதிகரிக்கும் வகையில் வானொலி நிகழ்ச்சிகள் அமைதல் வேண்டும்; அதே வேளையில், நேயர்களை மனத்தில் வைத்தே அவை தயாரிக்கப்பட வேண்டும்'' என்பது பீகிங் வானொலி நிலைய இயக்குநர் டிங் இ லான் (Ding yi Lan) எனும் அம்மையாரின் கோட்பாடாகும். இதை அடியொற்றி, சுன் கோ சியாங் (Sun Guo Qiang) அவர்களின் தலைமையில் வானொலியின் தமிழ்த்துறை சிறப்பாக இயங்குகிறது என்பதற்கு 1982-இல் ஒலிபரப்பாகியுள்ள தமிழ் நிகழ்ச்சிகள் சான்று பார்கின்றன. இனி வரும் ஆண்டுகளில், பீகிங் வானொலி நிலையத்தின் தமிழ் நிகழ்ச்சிகள்மேலும் பொலிவுடன் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

## இணைப்பு-I

### "உலக வானொலிகளில் தமிழ்" (இலங்கை தவிர)

| எண் | வானொலி நிலையம் | நாடு | ஒலிபரப்பு நேரம் (இந்திய நேரம்) | ஒலிபரப்பாகும் அலைவரிசை (சிற்றலை) | ஒலிபரப்பு நாட்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | அனைத்திந்திய வானொலி (தென் கிழக்காசிய சேவை) | இந்தியா | காலை 5:30 — 6:15 | 25, 31, 41 | நாள்தோறும் |
| 2. | தூரக்கிழக்கு ஒலிபரப்பு நிலையம் (FEBA) | சேஷல்ஸ் | காலை 6:30 — 7:15 | 49 | நாள்தோறும் |
| | | | இரவு 6:45 — 7:45 | 25 | |
| 3. | பிரிட்டிஷ் ஒலிபரப்புக் கூட்டுத் தாபனம் (BBC) | இங்கிலாந்து | பிற்பகல் 3:00 — 3:30 | 16 | செவ்வாய், வியாழன், |
| | | | இரவு 9:45 — 10:15 | 25, 41, 49 | சனி, ஞாயிறு இரவு மட்டும் |
| 4. | பீகிங் வானொலி நிலையம் | மக்கள் சீனக் குடியரசு | இரவு 7:30 — 8:00 | 25, 31 | நாள்தோறும் |
| | | | இரவு 8:00 — 8:[illegible]0 | 25, 31 | |
| 5. | மாஸ்கோ வானொலி | ருஷ்யா | மாலை 6:00 — 6:30 | 13, 19, 25 | நாள்தோறும் |
| | | | இரவு 7:30 — 8:00 | 16, 19, 25 | |
| 6. | வெரித்தாஸ் தமிழ்ப்பணி | பிலிப்பைன்ஸ் | காலை 7:00 — 7:30 | 19 | நாள்தோறும் |
| | | | இரவு 7:30 — 8:00 | 19, 25, 31 | |
| 7. | ரேடியோ பாகிஸ்தான் | பாகிஸ்தான் | பிற்பகல் 2:30 — 3:15 | 19, 25 | நாள்தோறும் |
| 8. | ரேடியோ வத்திக்கான் | வத்திக்கான் நகர் (Vatican) | இரவு 8:45 — 8:55 | 16, 25 | வியாழன் |
| 9. | Trans World Radio (TWR) | GUAM★ | இரவு 8:00 — 8:30 | 31 | நாள்தோறும் |

★பசிபிக் பெருங்கடலில் அமைந்துள்ள இத்தீவு, அமெரிக்க ஆதிக்கத்திற்குட்பட்டது.

## இணைப்பு — II

### பீகிங் வானொலி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகும் 38 அந்நிய மொழிகள் :

1. Albanian
2. Arabic
3. Bengali
4. Bulgarian
5. Burmese
6. Czech
7. English
8. Esperanto
9. French
10. German
11. Hausa
12. Hindi
13. Hungarian
14. Indonesian
15. Italian
16. Japanese
17. Kampuchean
18. Korean
19. Lao
20. Malay
21. Mongolian
22. Nepalese
23. Persian
24. Pilipino
25. Polish
26. Portuguese
27. Pushto
28. Romanian
29. Russian
30. Seıbo-Croation
31. Sinhalese
32. Spanish
33. Swahili
34. Tamil
35. Thai
36. Turkish
37. Urdu
38. Vietnamese.

## இணைப்பு — III

### பீகிங் வானொலித் தமிழ் ஒலிபரப்பு விவரம் :

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | செய்திகள் | —இசை நிகழ்ச்சி— | |
| திங்கள் | செய்திகள் | விமரிசனம் | சிறப்புக் கட்டுரை |
| செவ்வாய் | செய்திகள் | விமரிசனம் | விளையாட்டுச் செய்திகள் |
| புதன் | செய்திகள் | விமரிசனம் | சிறப்புக் கட்டுரை |
| வியாழன் | செய்திகள் | விமரிசனம் | இசை நிகழ்ச்சி |
| வெள்ளி | செய்திகள் | விமரிசனம் | சிறப்புக் கட்டுரை (அ) சீனக் கதை |
| சனி | செய்திகள் | —மக்கள் சீனம்— | |

அலை வரிசை : சிற்றலை 25, 31

நேரம் : இந்திய நேரம் இரவு 7:30 — 8:30

# இணைப்பு-IV

## 1982-இல் ஒலிபரப்பான தமிழ் நிகழ்ச்சிகள்

### (அ) விமரிசனக் கட்டுரைகளில் சில:

1. மூன்று வட ஆப்பிரிக்க நாடுகளில் சீனப் பிரதமர்.
2. ஆப்கானிஸ்தான் மக்கள் வெற்றிபெற்றே தீருவார்கள்.
3. கம்போடிய மக்களின் முக்கியத்துவம் வாய்ந்த போராட்டம்.
4. டாக்டர் கோட்னிஸின் சர்வதேசிய எழுச்சி.
5. கடல் சட்டம் பற்றிய ஐ. நா. வின் புதிய ஒப்பந்தம்.
6. மத்தியக் கிழக்குப் பிரச்சனை நியாயமாகத் தீர்க்கப்பட வேண்டும்.
7. பலஸ்தீன மக்களின் சட்டபூர்வமான உரிமை.
8. சமத்துவமற்ற வர்த்தக உறவுகளை மாற்றக் கோரும் வளரும் நாடுகள்.
9. சச்சரவுகளுக்கிடையில் மீண்டும் நடைபெறும் ஐரோப்பியப் பாதுகாப்பு ஒத்துழை மாநாட்டுத் தொடர்கூட்டம்.
10. ஆசிய விளையாட்டு விழா.
11. அமெரிக்காவுக்கும் சோவியத் யூனியனுக்கு மிடையில் தீவிரமாகி வரும் ஆயுதப் போட்டி.
12. ஆர்ஜென்டினாவின் அரசுரிமைக்கு மதிப்பு கொடுக்க வேண்டும்.
13. ஹனாயின் புதிய துணிச்சல்வாத நடவடிக்கை.
14. சர்வதேச நீதியின் இன்னொரு வெற்றி.
15. சீனாவுக்கும் வெளிநாடுகளுக்குமிடையிலான பண்பாட்டுப் பரிமாற்றங்கள்.
16. சோவியத் யூனியனுக்கான அமெரிக்கத் தானிய ஏற்றுமதி.
17. மேற்கு ஐரோப்பாவில் கடுமையாகி வரும் வேலையின்மைப் பிரச்சினை.
18. இந்தியத் தலைமை அமைச்சரின் சோவியத் பயணம்.

19. இன்றைய காபுல்.
20. அணு ஆயுதக் குறைப்பு.
21. ஆசிய-பசிபிக் பிரதேசத்தின் மக்கள் தொகை.
22. பேகின் அதிகார வட்டாரங்களின் கொலைகாரத்தனமான செயல்.
23. கொரியத் தலைவரின் சீனப் பயணம்.
24. பலஸ்தீன மக்களின் சட்டபூர்வமான உரிமைகள் தவிர்க்கப்பட முடியாதவை.
25. தென் ஆசியப் பிரதேசத்தின் ஒத்துழைப்பை விரைவுபடுத்துவதற்கான கூட்டம்.
26. அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கையின் முரண்பாடுகள்.
27. அமெரிக்காவுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் இடையில் நிலவும் தீவிர முரண்பாடுகள்.
28. படைக்கலக் குறைப்பின் முன்னேற்றப் போக்கைத் தடைசெய்தது யார்?
29. கம்போடியாவின் முத்தரப்பு உடன்பாடு.
30. சோவியத் யூனியனின் போலியான படைக்கலக் குறைப்பு.
31. லெபனானை இஸ்ரேல் ஆக்கிரமித்ததன் நோக்கம் யாது?
32. அணிசேரா இயக்கத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் பேணிக்காக்கப்பட வேண்டும்.

(ஆ) செய்தித் தொகுப்புகளில் குறிப்பிடத்தக்க சில:

1. ஆக்கிரமிப்பு யுத்தத்துக்கு எதிராக உறுதியுடன் போராடும் ஆப்கானிஸ்தான் மக்கள்.
2. மூன்றாவது உலக நாடுகளுக்கிடையில் ஐக்கியத்தையும் ஒத்துழைப்பையும் பலப்படுத்துவதற்கான சீனாவின் தலைமை அமைச்சரின் பயணம்.
3. சீன-ஆப்பிரிக்க நட்பு இடைவிடாமல் வளர்ந்து வருகிறது.
4. பாகிஸ்தான் ஜனாதிபதியின் இந்தியப் பயணம்.
5. ஜோர்டான் நதியின் மேற்குக் கரையை வல்லிணைப்புச் செய்வதை இஸ்ரேல் தீவிரப்படுத்துகிறது.

(இ) வானொலி உரை

1. தமிழ்நாடு மாநிலக் கல்வியமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் ஆற்றிய வானொலி உரை.

(ஈ) பேட்டி

1. பல்வேறு நாடுகளுக்குச் சைக்கிளில் பயணம் மேற்கொண்ட ஓர் இந்தியப் பயணியுடன் பீகிங் வானொலி நிருபர் நடத்திய பேட்டி.

2. அன்குவேய் மாநிலத் துணைக் கவர்னருடன் பேட்டி.

(உ) "மக்கள் சீனம்" என்னும் சிறப்பு நிகழ்ச்சியில் இடம் பெற்ற (மொழி பெயர்ப்புக்) கட்டுரைகளில் சில:

| எண் | தலைப்பு | மூலம் |
|---|---|---|
| 1. | சீன அஞ்சல் தலைகளின் வரலாறு பற்றிய கண்காட்சி | ஆங்கிலம் |
| 2. | சிங்கியாங் பிரதேசமும், அங்கு வாழும் உய்கூர் இன மக்களும் | ,, |
| 3. | மேலை மருத்துவமும், சீனாவின் பாரம்பரிய மருத்துவமும் | ,, |
| 4. | சீன சோயா பீன்ஸ் மன்னன் பேராசிரியர் வாங்ஜிங்லிங் | ,, |
| 5. | கானி தேசிய இனம் | ,, |
| 6. | பீகிங்கில் உள்ளறை மீன் வளர்ப்பு பரிசோதனைகள் | ,, |
| 7. | சீன விஞ்ஞானக் கழகம் | ,, |
| 8. | சீனாவின் தேசிய இனங்கள் | ,, |
| 9. | இலக்கிய மாமேதை லூ சின் | சீன மொழி |
| 10. | புகழ்பெற்ற எழுத்தாளர் காவ் சிசி | ஆங்கிலம் |
| 11. | ஓமெய் மலை பற்றிய வு கே யு அவர்களின் பயணக் குறிப்புகள் | ,, |
| 12. | குளிரூட்டப் பாதுகாப்புத் தொழில் துறை | ,, |

| | | |
|---|---|---|
| 13. | யுனான் மாநிலத்தில் வாழும் நக்சி தேசிய இனம் | ஆங்கிலம் |
| 14. | சீனாவின் நெடுஞ்சாலை நிர்மாணம் | சீன மொழி |
| 15. | சீன வேளாண்மைக்குப் புத்துயிரூட்டியுள்ள உற்பத்தியில் பொறுப்பு முறை | ,, |
| 16. | சிங்காய்-திபெத் இரயில்வேயின் நிர்மாணம் | ஆங்கிலம் |
| 17. | சீனாவில் உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து | சீன மொழி |
| 18. | சீனாவில் மத சுதந்திரம் | ,, |
| 19. | தாயுர் இனம் | ,, |
| 20. | சீனாவின் ஆற்றல் வளம் | ,, |
| 21. | சீனாவின் மிக நீளமான கால்வாய் | ,, |
| 22. | கேசர் (Gesai) எனும் திபெத் காவியம் | ஆங்கிலம் |
| 23. | கிர்கிஸ் இனம் | ,, |
| 24. | லோயாங் பியோனி மலர்கள் | ,, |
| 25. | ஒமெய் மலைக் குரங்குகள் | ,, |

(ஊ) சிறப்புக் கட்டுரைகளில் சில;

| எண் | தலைப்பு | மூலம் |
|---|---|---|
| 1. | சீனாவில் வழங்கப்படும் மொழிகள் | ஆங்கிலம் |
| 2. | சீன அரசாங்க அமைப்பு முறை | ,, |
| 3. | ஜின் செங் வேர் | ,, |
| 4. | சீனாவில் நெல் அறுவடையும் சேமிப்பும் | ,, |
| 5. | படிப்புக்குப் பின் பல்கலைக்கழக வாழ்க்கை | ,, |
| 6. | லெள நின் மாநிலத் தொழிற் பள்ளிகள் | ,, |
| 7. | சீனக் கல்வித் துறையாளர்களில் ஒருவரான யெ செங்தா | ,, |
| 8. | ஹான் வமிச செய்யுள், கட்டுரை | ,, |
| 9. | விவசாய நவீன மயமாக்கல் பரிசோதனை | சீன மொழி |
| 10. | சீனக் கடலோடி செங் கே | ,, |
| 11. | உங்கள் நேர்மைக்கு நன்றி | ,, |

# 20. சீனாவில் தமிழ்

-சுன் கோ சியாங்

*சீனா, தமிழகத்தின் காஞ்சிமா நகருடன் கி.மு. முதலிருந்தே தொடர்பு கொண்டுள்ளது. எனினும் 1960-ஆம் ஆண்டு தான் தமிழ்க் கல்வி சீனாவில் தொடங்கியது. பீகிங் ஒலிபரப்புக் கல்லூரி எனும் சீனப் பல்கலைக் கழகம் நான்காண்டுக்காலத் தமிழ்ப் பயிற்சி அளித்து வருகின்றது. 1967 முதல் சீன அயல்மொழிப்பதிப்பகம், தமிழ் நூல்களையும் வெளியிட்டு வருகின்றது. 1978-இல் நிறுவப்பட்ட தென் ஆசிய ஆய்வுக் கூடம், தமிழாய்வுக்கும் இடமளிக்கின்றது.*

சீனாவும் இந்தியாவும் அண்டை நாடுகள். இரு நாடுகளும் உலகில் மிகத் தொன்மையான நாகரிகங்களுடையவை. உலகப் பண்பாட்டின் வளர்ச்சியில் அவை தலை சிறந்த பங்கினை ஆற்றியுள்ளன. சீனாவின் மஞ்சள் நதி, யாங்சி நதிப் பள்ளத்தாக்குகள் போல, கங்கை நதி, சிந்து நதிப் பள்ளத்தாக்குகளும், உலகில் மிக ஒளிமயமான பண்பாட்டின் ஊற்றுக்கண்களாக விளங்குகின்றன. அத்துடன், இரு நாடுகளின் பண்பாடுகளும், நாகரிகங்களும் பரஸ்பரம் தொடர்பு கொண்டிருந்து தாக்கம்பெற்று விளங்குகின்றன. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, சீன மக்களுக்கும் இந்திய மக்களுக்குமிடையில் நேசத் தொடர்புகள் ஏற்பட்டன. சீன வரலாற்று நூல்களும், இந்தியக் காவியங்களும் கூறியவாறு, ஈராயிரத்துக்கு அதிகமான ஆண்டுகளுக்கு முன்னர் சீனாவுக்கும், இந்தியாவுக்குமிடையில் பண்பாட்டுப் பரிமாற்றங்கள் நிகழ்ந்தன. அதுபோலவே, சீன மக்களுக்கும், தமிழ்நாட்டு மக்களுக்குமிடையிலும் வரலாற்றில் நீண்டகாலத் தொடர்புகள் இருந்தன. கி.மு.140 முதல் கி.மு. 87 வரையான ஹான் வூ பேரரசர் காலத்தில் சீனா அன்றைய காஞ்சியுடன் நட்புறவை உருவாக்கியது. கி. பி. 572-இல் பல்லவர்களின் தலைநகரமாகிய காஞ்சியைச் சேர்ந்த போதிதர்மர் என்னும் பௌத்த ஆசாரியர் சீனா வந்து புத்தமதத்தைப்பரப்பினார். 7ஆம் நூற்றாண்டில் இந்தியாவுக்குச் சென்ற சீன புத்த மதப்பெரியார் ஹியூன் சாங் காஞ்சியில் சில காலம் தங்கியிருந்தார். அதே நூற்றாண்டில், சீனாவின்

காண்டன், ஜியேன்சோ நகரங்களுக்கும், சேர நாட்டின் கொல்லம், கோழிக்கோடு மற்றும் துறைமுகங்களுக்கும் இடையில் பல வணிகத் தொடர்புகள் ஏற்பட்டன. 1015-இல், சீனாவின் சுங் வம்ச காலத்தில் தென் இந்தியாவின் சோழ நாடு, சீனாவிற்கு நல்லெண்ணப் பயணம் மேற்கொள்ள 205 பேரைக் கொண்ட தூதுக்குழு ஒன்றை அனுப்பியது. இந்த நேசத் தொடர்புகள் எல்லாம், இரு நாட்டு மக்களிடையே நட்புறவை மேம்படுத்தியுள்ளன. இன்று, சீன அறிஞர்களும், தமிழ் மொழியைப்பயின்று ஆராய்வது, இந்தப் பாரம்பரிய நட்புறவை மேற்கொண்டு சீராக்குவதற்குத் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை.

தமிழ் மொழியானது, உலகில் மிகத்தொன்மை வாய்ந்த மொழிகளில் ஒன்றாக விளங்குகிறது. எனினும், இந்தப் பழம் பெரும் மொழி, 1960-இல்தான் சீனாவில் பரவத் துவங்கியது.

1960-ஆம் ஆண்டு மார்ச் மாதம், சீனப் பல்கலைக் கழகங்களில் ஒன்றான பீகிங் ஒலிபரப்புக் கல்லூரி, தமிழ்மொழி வகுப்பை நடத்தத் துவங்கியது. அப்பொழுது, இந்தியாவைச் சேர்ந்த இரண்டு ஆசிரியர்கள், அழைப்பின்பேரில் இக்கல்லூரியில் விரிவுரையாளராகப் பணிபுரிந்தனர். அவ்வகுப்பில் 20 சீன மாணவர்கள், தமிழ்மொழியைச் சிறப்புப் பாடமாகப் படித்தனர். சீனாவின் பல்கலைக்கழகங்களில் தமிழ்மொழி வகுப்பு நடைபெற்றது இதுவே முதல்முறை என்பது குறிப்பிடத்தக்கது. 4 ஆண்டுக்காலப் பயிற்சி நெறியை முடித்துக்கொண்டபின் இந்த மாணவர்கள், இக்கல்லூரியிலிருந்து பட்டம் பெற்றனர். பின், அவர்களில் பலர், பீகிங் வானொலி நிலையத்தில் பணிபுரிந்து வருகின்றனர்.

மொழியானது, மனிதர் தம் கருத்துக்களைத் தெரிவித்துப் பரிமாறிக் கொள்ளும் ஒரு சாதனம். வானொலி ஒலிபரப்பு விரைவாக வளர்ந்து வரும் இன்று, மின்னலை வாயிலாக, நாட்டின் எல்லையைக் கடந்து, ஒரு நாட்டின் விவரங்களைப் பிறநாட்டு மக்களுக்கு அறிவிக்க முடிகின்றது. இதன்மூலம் பல்வேறு நாட்டு மக்கள், புரிந்துணர்வையும் நட்புறவையும் உருவாக்கியுள்ளனர். இந்த நோக்கத்துடனே, 1963-ஆம் ஆண்டு ஆகஸ்ட் முதல் நாள், இலங்கைத் தமிழ்அறிஞர் மாதகல் கந்தசாமி அவர்களின் உதவியுடன், பீகிங் வானொலி நிலையம், தமிழ் நிகழ்ச்சியைத் துவக்கி வைத்தது. பீகிங் வானொலி நிலையத்தின் தமிழ் நிகழ்ச்சி, இந்திய நேரம் இரவு 7.30முதல் எட்டுமணிவரை, எட்டு மணி முதல் எட்டு முப்பது வரை நிகழ்கிறது. பீகிங் வானொலியின் தமிழ் ஒலிபரப்பில், செய்திகள், விமரிச்னங்கள், சீனாவின்

அரசியல், பொருளாதாரம், பண்பாடு முதலியவை தொடர் பான சிறப்புக் கட்டுரைகள், ''மக்கள் சீனம்'' என்னும் சிறப்பு நிகழ்ச்சி, விளையாட்டுச் செய்திகள், இசை நிகழ்ச்சி, சீனக் கதை கள் ஆகியவை இடம் பெறுகின்றன.

1964-இல், பீகிங் ஒலிபரப்புக் கல்லூரி, இன்னொரு தமிழ் வகுப்பை நடத்தத் தொடங்கியது. இந்த வகுப்பிலும் 20 மாணவர்கள் தமிழ் கற்றனர். 1967 முதல் 1975 வரையில், சீன அயல்மொழிப் பதிப்பகம், தமிழ்மொழியில் நூல்களை வெளி யிட்டது. இந்நூல்களில், சீன இலக்கியப் படைப்புகள், சீனாவை அறிமுகம் செய்யும் நூல்கள், தலைவர் மா சே துங்கின் படைப்பு கள் ஆகியவை இடம் பெறுகின்றன. 1975 முதல், தமிழ் மொழியைப் பயிலும் வகையில், சீன அரசாங்கம் பன்முறை இலங்கைக்கு மாணவர்களை அனுப்பியுள்ளது. 1978-இல், சீன சமுக விஞ்ஞானக் கழகத்தைச் சேர்ந்த தென் ஆசிய ஆய்வுக் கூடம் நிறுவப்பட்டது. இந்த ஆய்வுக் கூடத்தில் முக்கியமாக, தென் ஆசிய நாடுகளின் அரசியல், பொருளாதாரம், பண்பாடு, வரலாறு, கலை, இலக்கியம், மதம் முதலியவை தொடர்புடைய ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. இப்பொழுது, இந்த ஆய்வுக் கூடத்தில் தமிழ்மொழி, இலக்கியம், வரலாறு ஆகியவை பற்றிய ஆராய்ச்சியும் நடைபெற்று வருகின்றது.

1982-இல் வெளிவந்த ''சீனக் கலைக்களஞ்சியம்'' என்னும் நூல்—தொகுதியில், தமிழ் இலக்கிய வரலாறு என்ற பகுதி இடம் பெற்றது, மகிழ்ச்சிக்குரியதாகும். அதில், திருக்குறள், சிலப்பதி காரம், கம்பராமாயணம் ஆகிய பண்டை இலக்கிய நூல்களை யும், மகாகவி பாரதியார், கல்கி, புதுமைப்பித்தன், மறைமலை யடிகள், திரு.வி. க, அகிலன், ஜெயகாந்தன் முதலிய எழுத்தாளர் களையும் அறிமுகப்படுத்தும் கட்டுரைகளும் காணப்படுகின்றன. தற்கால இலங்கை மற்றும் மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு களைச் சீன மொழியில் சீன அறிஞர் மொழிபெயர்த்துள்ளனர். தமிழ் மொழி, கலை, இலக்கியம் ஆகியவற்றை அறிந்து கொள்ள மேலும் அதிகமான சீன மக்களுக்குத் துணைபுரியும் வகையில், அகிலன், ஜெயகாந்தன், மு. வரதராசன் முதலிய தமிழ் எழுத் தாளர்களின் சிறுகதைகளையும், நாவல்களையும் சிலர் மொழி பெயர்த்து வருகின்றனர். வேறு சிலர், சீன இலக்கிய மேதை லு சுனின் சில சிறுகதைகளைத் தமிழாக்கம் செய்துள்ளனர்.

சீனாவில் தமிழ் ஆராய்ச்சிப்பணி, கடந்த சில ஆண்டுகளில் தான் ஆரம்பிக்கப்பட்டது. எனவே, அது இன்னும் ஆழமான முறையில் நடைபெறவில்லை. தமிழ் ஆராய்ச்சிப் பணியை

வளர்ச்சியுறச் செய்யும் பொருட்டு, பல்வேறு நாடுகளின் தமிழ் அறிஞர்களுடன் அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ளவும் ஒத்துழைப்பை வலுப்படுத்தவும் சீன அறிஞர் விரும்புகின்றனர். ''கற்றாரைக் காண்பதுவும் நன்று, கற்றார் சொற் கேட்பதுவும் நன்று, கற்றாரோடு இணங்கி இருப்பதுவும் நன்று'', என்னும் நோக்கத்துடன் தான், 1981-ஆம் ஆண்டு ஜனவரியில் மதுரை நகரில் நடைபெற்ற 5-வது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் இரண்டு சீன அறிஞர்கள் கலந்து கொண்டனர். சீன அரசாங்கத்தின் ஆதரவுடனும் சீன அறிஞர்களின் முயற்சியுடனும் சீனாவில் தமிழ் ஆராய்ச்சிப்பணி முன்னேற்றமடைவது திண்ணம்.

# 21. யப்பானில் தமிழ்

—அ. சண்முகதாஸ்

தமிழும் யப்பானியமொழியும் ஒலி நிலையிலும், பொருள் நிலையிலும் உறவுடையன என்பதுடன், இரு மக்களின் பண்பாட்டுப் பழக்க வழக்கங்களில் ஒப்புமை அமைகின்றது என்பதும் நிறுவப்பட்டுள்ளது. 1982-ஆம் ஆண்டு யப்பானில் தமிழ் 'கொடி கட்டிப் பறந்த காலம்'. தமிழ் என மொழியொன்றமைந்ததை யப்பானியப் பொதுமக்களும் இக் காலத்தில் உணர்ந்தனர். பத்திரிகை நிறுவனங்களும் கருத்தரங்குகள் வழி, தமிழ்-யப்பானிய உறவை ஆய்ந்தன.

தமிழ் மொழியைக் கற்பதிலும், தமிழாய்விலே ஈடுபடுவதிலும் பல நாட்டு அறிஞர் ஆர்வங்காட்டி வருவதை நாம் அறிவோம். பல நாட்டுப் பல்கலைக் கழகங்களிலே தமிழாய்வு செய்வதற்குரிய வசதிகளையும், வாய்ப்புகளையும் ஏற்படுத்திக் கொடுத்துள்ளனர். அண்மைக் காலங்களில் யப்பான் நாட்டைச் சேர்ந்த பல அறிஞர் தமிழ் மொழியைக் கற்பதிலும் தமிழ் ஆய்விலும் ஈடுபடத் தொடங்கியுள்ளனர். அத்தகைய தமிழ் ஆய்வுகளில் தற்போது மிகவும் பிரபலியம் அடைந்துள்ளது, பேராசிரியர் சுசுமு ஓனொ தொடக்கி வைத்துள்ள "யப்பானிய - தமிழ் மொழி உறவு" என்பது பற்றிய ஆய்வாகும்.

"தமிழ் - யப்பானிய மொழி உறவு" பற்றிய ஆய்வு நீண்ட வரலாற்றையுடையது. அத்துடன் தற்போது யப்பானிய அறிஞரிடையே கருத்து வேறுபாட்டினை ஏற்படுத்தி அறிவை வளர்க்கும் விடயமாகவும் ஆகிவிட்டது. 1982-ஆம் ஆண்டு யப்பானில் தமிழ் "கொடி கட்டிப் பறந்த காலம்" எனலாம். இந்த ஆண்டிலேதான் தமிழ் மொழி என்று ஒரு மொழி உண்டு என்பதைச் சாதாரண யப்பானிய மக்களும் அறிந்துகொண்டனர். யப்பானிய மொழிக்கும் தமிழ் மொழிக்குமிடையே உறவு உண்டு எனக் கூறிய பேராசிரியர் சுசுமு ஓனொவும், அதனை மறுத்துக் கருத்துக்கள் வழங்கிய அறிஞரும் எழுதிய பல கட்டுரைகள் இவ்வாண்டிலே வெளியாயின. பத்திரிகை

நிறுவனங்கள் இதுபற்றிய கருத்தரங்குகளை ஏற்படுத்தின. அஷகி பத்திரிகை நிறுவனம் ஒழுங்கு செய்த கருத்தரங்கிலே சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் பொன். கோதண்டராமன், கக்சுயின் பல்கலைக் கழக யப்பானிய மொழிப் பேராசிரியர் சுசுமு ஓனொ, தோக்கியோ கியோப் பல்கலைக்கழக ஷிச்சிரோ முரயம, ஒஸ்மானியப் பல்கலைக் கழகப் பேராசிரியர் ப. கிருஷ்ணமூர்த்தி, அனைத்துலக திராவிட மொழியியல் நிறுவன ஆய்வாளர் நொரிஹிக்கோ உச்சிடா ஆகியோர் கலந்து கொண்டனர். இக்கருத்தரங்குக் கருத்துக்கள் ஆங்கிலத்தில் International Journal of Dravidian Linguistics என்னும் இதழிலே வெளிவந்துள்ளன. இக்கருத்தரங்கிலே திராவிட மொழியியல் அறிஞர் ப. கிருஷ்ணமூர்த்தி கூறிய கருத்து ஒன்றினை இங்கு மனங்கொள்ளுதல் நலம். அக்கருத்து :

> " Dr. Ohno's studies mark the very first step in comparing Japanese with Tamil. It remains to be determined at what stage Japanese separated from the other Dravidian languages. And detailed studies must follow. "

இவ்வாறு வெகுசனத் தொடர்பு சாதனங்கள் மூலமாக இவ்வாய்வு பற்றிய சில தகவல்கள் சாதாரண மக்களுக்கும் வழங்கப்பட்டன. இத்தகைய பரபரப்பு ஏற்படுத்திய "யப்பானிய - தமிழ் மொழி உறவு" பற்றிய ஆய்வு எப்படித் தொடங்கிற்று?

1856-இல் வெளிவந்த **திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்** எழுதிய கால்டுவெல் அவர்களே "தமிழ் - யப்பானிய மொழி உறவு" பற்றி முதன்முதலாக எடுத்துக் கூறினார். இரு மொழிகளின் சொற்களிடையே காணப்பட்ட உருவ ஒற்றுமையினையும், பொருள் ஒற்றுமையினையும் அவர் எடுத்துக் காட்டினார். பின்வருஞ் சொற்கள் உதாரணங்களாக அவராலே எடுத்தாளப்பட்டன.

| தமிழ்மொழி | | | யப்பானிய மொழி |
|---|---|---|---|
| இரு : | iru | 'to be' | அரி, இரி, ஒரி, உரி |
| கரு : | karu | 'black' | குரொ / குரொஇ |
| பர : | para | 'to spread' | பரு (baru) / ஹரு |
| பழ : | paṛa | 'old' | புருஇ (burui, furui) |

கால்டுவெலுக்குப் பின்னர் தமிழையும் யப்பானிய மொழியையும் ஒப்பு நோக்கும் ஆய்வு நீண்ட காலமாக நிகழவில்லை. எனினும், எழுபதுகளில் இவ்வாய்வு தொடர்ந்து நடைபெறும் சாத்தியக் கூறுகள் தென்பட்டன, யப்பானிய அறிஞர்களான

சுசுமு ஷிபா, அகிர புஜிவர, மினொரு கோ ஆகியோர் திராவிட மொழிகளுக்கும் யப்பானிய மொழிக்குமிடையேயுள்ள தொடர்புகளை ஆராய்ந்தனர். இத்தகைய ஆய்வு நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது, டெல்கிப் பல்கலைக்கழக யப்பானிய மொழி அறிஞர் பாலாம்பாள், யப்பானிய - தமிழ் மொழிகளிலே உள்ள வேற்றுமை உருபுகள், இடை நிலைகள் ஆகியவற்றிடையே காணப்படும் ஒற்றுமை பற்றி எழுதிய கட்டுரையினைப் படித்த பேராசிரியர் சுசுமு ஓனொ யப்பானிய மொழியினைத் தமிழ் மொழியுடன் ஒப்பிட்டு நோக்கும் முயற்சியிலே ஈடுபடத் தொடங்கினார்.

பேராசிரியர் சுசுமு ஓனொ எழுதிய **Sound Correspondences Between Tamil and Japanese** (தமிழ் - ஜப்பானிய மொழிகளிடையே ஒலி ஒற்றுமைகள்) என்னும் நூல் 1980-ஆம் ஆண்டு கக்சுயின் கல்வி நிறுவனத்தால் வெளியிடப்பட்டது. அந்நூலிலே ஏறக்குறைய 357 சொற்களைத் தெரிந்து அவற்றுக்கிடையே காணப்படும் ஒலித் தொடர்பினையும் பொருள் தொடர்பினையும் விளக்கிச் சென்றுள்ளார். இத்தகைய தொடர்பு சாதாரணமாக உலகில் எந்த இரு மொழிகளுக்குமிடையே காணப்படக்கூடியதொன்று எனச் சிலர் கூற முற்பட்டுள்ளனர். ஆனால், அச்சொற்களுக்குப் பகைப்புலமாக அமையும் கலாசாரத் தொடர்பினை நோக்கின், இரு மொழிகளுக்குமிடையே ஏதோ ஒரு காலத்தில் உறவு இருந்தது என்ற அடிப்படையினை உணர்ந்து, மேலும் இத்துறையிலே ஆய்வு செய்ய முடியும். பேராசிரியர் ஓனொ இவ்வடிப்படையிலேயே தொடர்ந்தும் இவ்வாய்விலே ஈடுபட்டுள்ளார். இதனை விடுத்து, தமிழவன் போன்றோர் நேரடி ஆய்வு அனுபவமின்றி, வேறொருவருடைய பூரணமற்ற ஆய்வு முடிவுகளை அடிப்படையாகக் கொண்டு "தமிழுக்கும் யப்பானிய மொழிக்குமுள்ள உறவு பற்றிய செய்திகள் தற்சமயம் சந்தேகத்திற்கு உரியனவாக விளங்குகின்றன" என்று முடிவு கூறுதல் பொருத்தமாகாது. "தமிழில் ஆர்வமுள்ள ஆய்வாளருக்கு உண்மை காணப் பயன்படும் என்னும் நோக்குடன்" அவசர அவசரமாக யசுமொத்தொ பித்தென் அவர்களுடைய கட்டுரையினைத் தமிழவன் (கால், ஏப்ரில் - ஜூன், 1982) அறிமுகப்படுத்தியுள்ளார். பேராசிரியர் சுசுமு ஓனொவின் கருத்தினை மறுத்துக்கூறும் இக்கட்டுரையினைத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும் தமிழவன், சுசுமு ஓனொ கூறியவற்றை முதலில் அறிமுகஞ் செய்திருக்கலாம். கருதுகோளை நன்கு அறிமுகஞ் செய்யாது, அதற்கு எதிர்க்கருத்தினை முதலிலே அறிமுகஞ் செய்து வைப்பது ஆய்வு அறமன்று. மேலும், பேராசிரியர் பித்தென் அவர்களுடைய

ஆய்விலே காணப்படும் பிழைகளை அவர் அறிவது நன்று. பேராசிரியர் ஓனொ அதற்கு எழுதிய மறுப்புக் கட்டுரையினைப் படிப்பதும் நன்று. Breast என்னும் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ப்பதம் தேடிக்கொடுத்த "ஒரு தமிழர்" மார்பு என்னுஞ் சொல்லை மாத்திரம் கொடுத்துள்ளார் போலும். முலை என்னும் பழந்தமிழ்ச் சொல்லினை அவர் அறியாரா? யப்பானியச் சொல்லாகிய முனெ, யப்பானிய மொழியுடன் தொடர்புற்றதெனக் கூறப்படும் யூரலிக் மொழிகளுள் ஒன்றாகிய வொற்றியாக் சொல்லாகிய மொல், தமிழ்ச்சொல்லாகிய முலை ஆகியவற்றிடையே காணப்படும் ஒற்றுமையினை எப்படி விளக்கலாம்? யப்பானியச் சொல்லாகிய முனெ, பித்தென் அவர்களால் தமிழ்ச்சொல்லாகிய மார்பு என்பதுடன் மாத்திரம் ஒப்பிடப் படுகின்றது. பித்தென் அவர்களுடைய கட்டுரையிற் காணப் படும் குறைக்கு இது ஓர் உதாரணமாகும்.

1981-ஆம் ஆண்டு அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டிலே பேராசிரியர் ஓனொ தன்னுடைய ஆய்வு பற்றி ஒரு கட்டுரை படித்தார். அதே ஆண்டு நிஹொங் கொ தொ தமிரு கொ (யப்பானிய மொழியும்—தமிழ் மொழியும்) என்னும் நூலினை எழுதி யப்பானிய மொழியிலே வெளியிட்டார். இரு மொழிகளுக்குமுள்ள உறவு வெறும் மொழியியல் உறவு மாத்திரமல்ல; கலாசார அடிப்படையிலும் உறவு கொண்டன என்பதை எடுத்துக் கூறுவதுபோல் அவருடைய அந்நூலின் முதல் அத்தியாயம் தமிழர் தைப் பொங்கலுடன் தொடர்புள்ள நிகழ்வுகள் பல யப்பானிலும் தைத் திங்கள் 14-ஆம், 15-ஆம் நாட்களில் நடைபெறுகின்றன என்றும் அவற்றுக்கிடையே பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன என்றும் கூறுகின்றது.

1981-இல் யப்பானுக்குச் சென்று திரும்பிய தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் அங்கு நடைபெற்று வரும் திராவிடவியல் ஆய்வு பற்றி (D. L. A. News Vol. V. No 10 and 11) விரிவாக எழுதுமிடத்துத் தமிழ் ஆய்வு பற்றிய விவரங்களையும் தந்துள்ளார். தோக்கியோப் பல்கலைக் கழகப் பேராசிரியர் நொபொரு கரஷிம அவர்களே தமிழியல் ஆய்வுடன் முதன்முதலில் நெருங்கிய தொடர்புகொண்ட யப்பானிய அறிஞராவார். அவர் மூலமாகத் தமிழாய்விலே ஈடுபட்டவர் முனெஓ தொகுநக, தக்கஹஷி தகநொபு ஆகியோர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துடன் தொடர்பு கொண்டுள்ள தொகுநக தமிழ் இலக்கணம் என்னும் நூலினை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். தற்காலத் தமிழ் மொழியின் இலக்கணத்தினையே அந்நூல் கூறு

கின்றது. தக்கஹஷி மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்) அவர்களிடம் தமிழ் பயின்றவர். பேராசிரியர் சுசுமு ஓனொ பொன். கோதண்டராமனிடம் தமிழ் கற்றார். இவ்வறிஞர் யாவரும் நேரடியாகத் தமிழாய்வுடன் தொடர்புடையவர். அவர்களைவிட, நொரிஹிகொ உச்சிடா, யசுகெ இகாரி, யசுமச செக்கினெ போன்றோரும் ஏதோ வகையில் தமிழியல் ஆய்வுடன் தொடர்புறுகின்றனர். உச்சிடா திராவிடவிய லுடனேயே நெருங்கிய ஈடுபாடுடையவர். மற்றிருவருள் இகாரி சமஸ்கிருத மொழி அறிஞர். அவரும் கக்சுயின் பெண் கள் கல்லூரி மானிடவியல் துணைப்பேராசிரியர் செக்கினேயும் இணைந்து இலங்கைத் தமிழர்களுடைய விழாக்கள், கொண் டாட்டங்கள் ஆகியன பற்றி ஆய்வு செய்து முடிவுகளை யப்பானிய மொழியிலே எழுதியுள்ளனர். திரு. செக்கினே தமிழ் மொழியைச் சுயமாகக் கற்றுக்கொண்டு திரும்பவும் யாழ்ப்பா ணத்தில் ஆய்வு மேற்கொண்டார். யாழ்ப்பாணத் தமிழரிடையே வழங்கும் பிறப்பு—இறப்புக் கிரியைகள் பற்றிய அவருடைய ஆய்வு முடிவுகள் இவ்வருட இறுதிக்குள் நூலாக வெளிவர வுள்ளது.

தோக்கியோப் பல்கலைக் கழகத்திற் பேராசிரியர் கரஷிம நடத்திவரும் தமிழ் வகுப்புகள் பற்றி வி.ஐ. சுப்பிரமணியம் குறிப்பிட்டுள்ளார். தற்போது, தோக்கியோவிலுள்ள கக்சுயின் பல்கலைக் கழகத்திலும் தமிழ் வகுப்புகளும் கருத்தரங்குகளும் நடைபெற்று வருகின்றன. பேராசிரியர் சுசுமு ஓனொவும் இக் கட்டுரை ஆசிரியரும் இணைந்து இவற்றை நடத்திவருகின்றனர். இவற்றிலே பங்கு கொள்பவர் (மொழியியற் பேராசிரியர் ஒருவர் உட்படப் பத்துப் பேர்) பழந்தமிழ் இலக்கணம் பற்றியே தமக்குக் கற்பிக்கும்படி விரும்பிக் கேட்டனர். தோக்கியோப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் கரஷிமவிடம் தமிழ் கற்ற சிலர் தமிழிய லுடன் தொடர்பான ஆய்வுகளிலே ஈடுபட்டுள்ளனர். தமிழ் நாட்டிலே மாரியம்மன் வழிபாடு பற்றி ஒரு பெண் ஆய்வு செய்கின்றார். ''இந்திய—இலங்கைத் தமிழ்மொழி, கலாசாரம் ஆகியவற்றுக்கும் யப்பானிய மொழி, கலாசாரத்துக்குமிடையே யுள்ள தொடர்பு'' என்னும் ஆய்வுத் திட்டமொன்றினைக் கக்சு யின் பல்கலைக் கழகம் மேற்கொள்ளவிருக்கின்றது. பேராசிரியர் சுசுமு ஓனொவுடைய தலைமையில் நடைபெறவிருக்கும் இவ் வாய்விலே யப்பானிய மொழியியல், மானிடவியல், புவியியல் பேராசிரியரும், பொன். கோதண்டராமன், இக்கட்டுரை

ஆசிரியர், மனோன்மணி சண்முகதாஸ் ஆகியோரும் இணைந்து ஈடுபடவுள்ளனர்.

தற்சமயம் யப்பானில் தமிழ் மொழியைப் படிக்கவும் தமிழியல், திராவிடவியல் பற்றி ஆய்வு செய்யவும் ஆர்வம் மிக்குக் காணப்படுகின்றது. தோக்கியோப் பல்கலைக் கழகத்திலே பேராசிரியர் கரஷிம தலைமையில் தென்னிந்தியா தொடர்பான ஆய்வுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. சமஸ்கிருத மொழி அறிஞர் தொகுநக தற்பொழுது தமிழ் ஆய்வுக்கே முதலிடங் கொடுக்கிறார். தொல்காப்பியம் கற்பதற்காக அண்மையில் தமிழ்நாடு சென்று வந்தார். கக்சுயின் பல்கலைக் கழகத்தில் தொடர்ந்து தமிழ் வகுப்புகள் நடத்துவதற்கு ஒழுங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. பேராசிரியர் சுசுமு ஓனொ தலைமையில் ஓர் ஆய்வுக்குழு கால்டுவெல் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் ஆங்கில நூலை யப்பானிய மொழிக்குப் பெயர்த்துக் கொண்டிருக்கின்றது.

யப்பானில் தற்போதுள்ள தமிழாய்வு ஈடுபாட்டுக்கு உதாரணமாக அண்மையில் நடைபெற்ற சில நிகழ்வுகளை இங்கு சுட்டலாம். 1983-ஆகஸ்ட் மாதம் 31-ஆம் திகதி தொடக்கம் தோக்கியோவிலும், கியோதோவிலும் ஆசிய-வட ஆபிரிக்க மனித அறிவியல் பற்றிய 31-வது அனைத்துலக மாநாடு (International Congress of Human Sciences in Asia and North Africa) நடைபெற்றது. அம்மாநாட்டுக்குப் பல தமிழ் அறிஞர்களும் வருகை தந்தனர். அவர்களுள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் ச. வே. சுப்பிரமணியன் கக்சுயின் பல்கலைக் கழகத்துக்கு வருகை தந்தார். பேராசிரியர் சுசுமு ஓனொவினுடைய தமிழாய்வு பற்றிய விவரங்களை அறியும் ஆவலுடன் வந்த அவர், பேராசிரியர் ஓனொவைச் சந்தித்துக் கலந்துரையாடினார். கக்சுயின் பல்கலைக் கழகத்திலே வளர்ச்சியடையக்கூடிய தமிழ் ஆய்வு முயற்சிகளுக்கு அடிப்படையாக ஒரு பெரிய தமிழியல் சார்ந்த நூலகம் அமைக்கப்பட வேண்டுமென ஆலோசனை கூறி, அதற்கேற்ற வழி வகைகளையும் கூறினார். அவருடைய நிறுவனத்தின் நூல்களும் தமிழியல் சார்பான பெரும்பாலான நூல்களும் விரைவில் கக்சுயின் பல்கலைக்கழகத்துக்கு வந்து சேரவுள்ளன. மாநாட்டுக்கு வருகை தந்த இன்னொரு தமிழறிஞர் மதுரைக் காமராசர் தமிழ்த்துறைத் தலைவர் இராம. பெரிய கருப்பன் (தமிழண்ணல்) ஆவார். அவர் தோக்கியோப் பல்கலைக்கழகத் தென்னிந்திய ஆய்வுக் கருத்தரங்கிலே சங்க இலக்கியம் பற்றிச் சொற்பொழிவாற்றினார். இம்மாநாட்டிலேயே யப்பானியக் கமி வழிபாட்டுக்கும் யாழ்ப்

பாணப் பிள்ளையார் வழிபாட்டுக்குமிடையேயுள்ள ஒற்றுமைப் பண்புகளை எடுத்துக்காட்டி, இக்கட்டுரையாளரும் அவருடைய மனைவி மனோன்மணியும் கூட்டாகக் கட்டுரை சமர்ப்பித்தனர். யப்பானிய-தமிழ் மொழி உறவுக்கு அடிப்படையாக ஒரு கலாசார உறவும் உண்டு என்பதைக் காட்டும் ஆரம்ப முயற்சியாகவே இக் கட்டுரை அமைகின்றது. இது பற்றிய விரிவான ஆய்வு தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

இவ்வருடம் ஏப்ரல் மாதம் 6-ஆம் திகதி தோக்கியோவிலுள்ள இந்தியத் தூதரகம் பாரதிக்கு விழா எடுத்தது. அவ் விழாவிலே பாரதி பற்றி பேராசிரியர் கரஷிம தமிழிலே சொற்பொழிவாற்றி, யப்பானிய மக்களும் பாவலன் பாரதி பற்றி அறியும்படி செய்தார்.

யப்பானில் தமிழாய்வு பற்றி எண்ணுமிடத்து, யப்பான் நிறுவனத்தின் (Japan Foundation) பங்களிப்பினைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். தமிழ்- யப்பானிய மொழி உறவு பற்றிய ஆய்வினை மேற்கொள்வதற்கு முதன்முறையாக இக்கட்டுரையாசிரியர்க்கு அந்நிறுவனம் புலமைப் பரிசில் வழங்கியது. இவ்வாய்வுத் துறையிலே ஈடுபட விரும்பும் தமிழறிஞர்கள் இந்நிறுவனத்தின் ஆதரவு மூலம் தமிழ்த் தொண்டாற்றும் வாய்ப்பு உண்டு என எண்ணுகிறேன்.

# 22. Tamil Studies in Czechoslovakia

**(Teaching Tamil to non-college students**
**—A problem of method and approach)**

*—J. Vacek*

*There are many problems faced by a foreigner who teaches Tamil to similar foreign students in an atmosphere, thousands of miles away from Tamil nadu. The available teaching material, both by natives and foreigners have to be adapted, by the teacher, as per the needs and standards of the students. Instead of following the books, as they are, suitable methods and approach have to be constituted by him.*

1. In 1982 we had about 12 students of Tamil in the Language school in Prague who subscribed to a language course of 3 hrs a week. They were divided into two groups, 1st and 2nd year students. Since in such an institution any student can come if he pays the entrance fee, I faced several problems with regard to both the method of teaching and the subject. It is because some students may not have any other linguistic experience, or very little, and they are attracted towards the study of an Indian language due to the influence of reading of either translations of Indian literature or books on Indian culture and history, both of which are plentily available for the general public reading only in Czech. There is a long standing tradition of translating Indian classics into Czech which started already in the last century and which has continued till the present day. The last 30 years in particular had brought many translations from the modern Indian languages including Tamil, some of them in book form and quite a lot of poems and short stories in journals and magazines. This naturally creates a milieu for the general reader who may be induced to try to read some pieces in the original.

2. Now from this it follows that both the method and the subject (type of language) taught must be adapted to the needs and abilities of the student. As for the needs or aims of the study, it is obvious that in the conditions of a Central European country where there is very little chance for the student that he will use the language in a regular conversation with the Tamilian speaker, the choice is unequivocally on the Standard Literary Tamil. The student will mainly use some of the Tamil journals or books which he will read for his satisfaction. Such reading materials are available here though they may not be always up-to-date*

Now that the aim and needs of the students are clearly set, it is, nevertheless, not easy to decide about many aspects of the teaching itself particularly because of the fact that until now there is no standard textbook of literary Tamil for foreign students.

The difficulty lies above all in the style of language to be taught in the beginning and in the materials available. There have been several textbooks of standard Tamil written in the last decades not all of which are readily available here in sufficient number of copies. And it should be noted that quite a lot of effort was devoted to the spoken variety both in India (M. Shanmugam Pillai, Spoken Tamil, Annamalainagar and Madurai, 1968, 1971; S. Rajaram, An Intensive course in Tamil, Central Institute of Indian Languages Mysore, 1979) and abroad (esp. H. F. Schiffman, Reader for Advanced Spoken Tamil, Washington, 1971, 2 parts; H. Schiffman, A Grammar of Spoken Tamil, Madras, The Christian Literature Society, 1979). The Standard Literary language was also a subject of several textbooks.

A great problem with the older textbooks is the vocabulary they teach. This is particularly the case of P. Jothimuthu's A Guide to Tamil by the Direct Method, Madras, 1963 (rev.), 1970. Though with regard to grammar this is the most systematic textbook available, it uses some lexical items which nowadays seem to be slowly vanishing even from the colloquial usage (e.g. tapāl āpīs for post-office). The systematic approach to grammar and vocabulary and careful grading of the material,

however, are among the great advantages of this textbook which make it usable for foreign students especially if they are not living in a Tamil-speaking milieu. The other disadvantage of this textbook, however, is lack of systematic exercises and absence of continuous texts for reading both of which have to be overcome by the teacher's own effort. It is relatively easy to produce drill exercises on the basis of the individual lessons. As for the texts they have to be chosen from some other materials and adapted for the level of the student's knowledge. One such source of additional material is e. g. V. I. Subramoniam and V. Veerasamy's Tamil, An intensive Course, Trivandrum, 1973 which, however, proceeds very quickly especially in the grammatical part and may not be followed easily by the type of non-college students as defined above. But the short topical texts presented in this book can be introduced after some time with great profit for the student because they greatly stimulate his interest by making him feel that he is able to read and understand a prose piece. For that purpose I re-write the texts on a Tamil typewriter.

There is also a very good attempt by P. Kothandaraman (A Course in Modern Standard Tamil, Laboratory Manual, Texts and Exercises, International Institute of Tamil Studies, Madras, 1975) to combine the spoken and literary variety and teach both at a time or in succession. Basically this is a very fortunate policy with regard to teaching Tamil to the foreign students because the existence of two standards is very intriguing for the foreigners. The fact that these two varieties of Tamil, one literary and one spoken, differ in their phonetics (and consequently also grammar) to such an extent that they practically represent two languages makes learning Tamil very difficult. In this context there is a question of which is better to begin with the literary or the spoken language. From the ordering of the respective parts it seems that P. Kothandaraman prefers to begin with the spoken idiom. The same is done in the CIIL in Mysore where they use the book by S. Rajaram as a basis and the written variety is introduced later. I discussed the matter with the author himself in January 1983 in the Thanjavur University. I agree that for an Indian student or for a

foreign student living in the country it is perhaps more appropriate to start with the spoken idiom. But the situation seems to be different with students learning the language thousands of miles away from Tamil Nadu. Here what is of immediate use is not the spoken but the written form of the language. Also from the point of view of the system of the language it seems to me that the standard Tamil grammar is more elaborated and the forms are more easily convertible to the spoken forms than vice versa. At the same time the written form seems to be used more widely (writing in the colloquial variety is still to be considered only a literary experiment). The colloquial variety is limited only to certain tpyes of (mainly oral) communication.

On the other hand the foreign student wants to learn also such a language that can be used in oral communication which is a natural part of a living language. For this purpose it seems to me better to start with the standard written variety of the language and after mastering certain amount of the material to convert it into the colloquial pronunciation. Though this may seem clumsy at first sight, it has a great advantage of preventing a confusion in the first months of learn ing. The student "settles" in one form of the language and only after that he starts to learn another variety. The time to start with the spoken idiom may differ according to the type of students, number of lessons per week and also the general aim for which the students learn the language. In the type of teaching as described above it seems that a safe period for the introduction of the spoken form is after the 2nd year of learning, i.e after the students have grasped the basic tenets of the grammatical and syntactical structure and they are able to read and understand some of the easier prose (possibly also with the help of a dictionary).

In this respect what is necessary and cannot be enough stressed is learning by heart, a time-honoured method which has a very good tradition also in India. Fully automated patterns which are reproduced easily and without hesitation are a criterion of good performance which has to be distinguished from a mere intellectual knowledge of how the language may function. Not everything in language can be grasped by logic

and intellect, there is quite a lot in learning to speak a language which goes beyond just logical rules. Though I am far from denying the necessity of logic and rules in learning a language, particularly in the earlier phases of the process, I still think that at a certain level learning and especially speaking a foreign language is an "art" which is governed not only by the laws of logic but also by the laws of intuition and feeling. The operation of the latter laws, however, needs somespace which may be created only by a very laborious process of learning of which learning by heart is an inseparable part.

3. My choice in the above mentioned course fell on Jothimuththu's book though I was aware of some of its disadvantages. To overcome these disadvantages I used some of the additional materials mentioned above. Beside converting the conversations in S. Rajaram's Intensive course into the standard language and making the students learn them by heart I use also some other materials, particularly short texts from some of the above mentioned textbooks and also easy literary pieces. Since much attention is paid to repetition of all the material in every lesson (as the Latin proverb has it-Non multa sed multum), we have been able, with three teaching hours a week, to do one lesson from Jothimuththu's textbook in two weeks on average (cca. 20-22 lessons per year)plus a number of additional reading and conversational material.

A good reading material for the elementary level is still A. Clayton's Graded Tamil Reader I (Madras, 1948) though its language may be outdated in some parts of the vocabulary. But I know of no other collection of easy texts (the teaching materials prepared in the University of Chicago in recent years are not available to me) which could be used for both reading and oral reproduction etc. (R.E. Asher and R. Radhakrishnans' A Tamil Prose Reader, Cambridge, 1971 is meant for a more advanced reading and can be used later in the process of teaching).

With regard to reading there is also a question of what type of literary pieces should be chosen on the elementary level. Since reading even a little bit in every lesson has a great stimulatory value with students who learn the language for

their leisure and want to use it especially in reading literature, I have decided to include a little piece in every lesson. To begin with I have chosen some easy proverbs and later on easy poems by contemporary authors. Especially attractive and easy to understand were poems e.g. by Amutapārati where abstract ideas and feelings are expressed by a reference to a concrete reality and are therefore easily grasped by the beginner. The amount of profit from such readings depends then on the teacher's ability to persuade the students that it is more appropriate to learn even the proverbs or short poems by heart and that after all learning by heart is what gives learning a language a real thrill.

I have also tried to introduce some Kurals already in the first year (there are a few Kurals which are relatively easy both in grammar and vocabulary) but though the students were anxious to learn them, they had difficulties in understanding that type of Tamil and I realized that the beginner cannot overcome easily the difference in grammar and therefore I decided to postpone this reading for a later period. Obviously we are much experimenting the teaching methods but with regard to Tamil and its literature we should separate the teaching of the language of different periods, or at least make a rough distinction between contemporary and classical Tamil. After all, this is what even the Tamil children do when they are taught and explained the Kurals in special Sunday courses. They are learning to appreciate the beauty and preciseness of the old classics but they have to be explained through the modern language.

What conclusion is to be drawn from what I have said so far? Surveying all the teaching materials available we can say that not all the aspects of teaching are satisfactorily put down in the textbooks. Teaching a foreign language is a complex process which includes many aspects. Each of the available textbooks covers only a part or one aspect of the process and we still have to wait for a standard textbook. My experience from a different field (teaching Mongolian) has proved to be inspiring. A joint work of a bearer of the language (preferably a linguist) and a foreigner (preferably a language teacher) may

be fruitful. It is because we foreigners still do not know the language very well or well enough, we need a correction at hand. But still, we may serve as a "sieve" helping to classify and especially grade the teaching material for a foreigner. It is because we may feel or predict how much grading is needed to make teaching smooth or what speed of teaching is acceptable for a non-Indian student. Thus though it is possible to teach Tamil to foreigners now, much could be improved by a textbook conceived in a more complex way. It would help to spread the knowledge of Tamil among the many foreign students who are interested to learn it.

**A Note:**

*In 1981 the Govt. of Tamil Nadu has offered us a fund for several Tamil Journals, which we were getting regularly in the course of almost two years. Besides we were presented a great number of contemporary books and a Tamil typewriter. We make a very good use of the typewriter in reproducing some of the scarce materials which we offer to the students to read.

# 23. Tamil Studies in The USSR

— *ALEXANDER DUBIANSKI*

*The Centenary of Bharati's birth was celebrated in the USSR in 1982, and this followed into the next year also. Translations of his works into Russian and other languages of the USSR were done; Papers were read in seminars and Research articles were collected and published. Other than these selections from sangam classics were translated and M. Andronov continued his active role in the field of linguistics.*

The activity of Soviet Tamilologists in the year 1982 were centered around the centenary of Subramania Bharati's birth. As a token of respect for the memory of the poet who had made a great contribution to the cause of liberating the Indian people from colonial domination and who had welcomed the Revolution in Russia, Soviet people celebrated S. Bharati's birthday on a nationwide scale. A special Jubilee Committee was organised under the joint auspices of the Soviet-Indian Friendship Society, the Writers' Union and the USSR Academy of Sciences. The Committee was headed by a prominent Soviet writer Sergei Baruzdin and by professor Evgeni Chelyshev, Corresponding Member of the USSR Academy of Sciences. Among the members of the Committee were Soviet Tamil Scholars-V. Furnika( ecretary), L. Bychikhina, S. Trubnikova, A. Dubianski. The Committee worked out an extensive programme aimed at acquainting a wider readership with Bharathi's work, by the publication of new translations of his poems (not only into Russian but also into the other languages of peoples of the USSR) and also of articles and scholarly studies on his work, and the holding of rallies and literary evenings devoted to him. The activities of the committee attracted attention of

the press and Moscow Radio, whose representatives attended all sessions of the Committee.

In the year 1982 about 15 articles and essays on Bharati, more than 40 new translations of his poetry were published in the USSR. They appeared in various periodicals including such popular magazines as Novy Miz (New world), Foreign Literature, Moscow, Zvezda Vostoka (Star of the East), published in Tashkent, Kodry, published in Moldavia, Vsesvit published in the Ukraine. A new edition of an anthology of Bharati's Poems in Russian and a book about his life and work (by V. Furnika and L. Bychikhina) are now being prepared for printing. Soviet radio stations broadcast special programmes which included poems and songs by Bharati. In the city of Vyborg (Leningrad Region) there was an exhibition of the work of a young artist, M. Fyodorov, who has painted a number of portraits of Bharati and his friends, V. V. S. Aiyar and Aurobindo Ghosh. In November, 1982, a literary evening dedicated to the memory of Bharati was held in a Moscow school.

One of the final events of the 'Bharati year' was the visit to India by a delegation from the Union of Soviet Societies for Friendship and Cultural Relations with Foreign countries. The delegation, which consisted of Sergei Baruzdin and Alexander Dubianski, in the period from December 27 to January 7, visited Delhi, Calcutta, Varanasi, Madras and Selam and took part in meetings held by the Indo-Soviet Cultural Organisation.

The delegation arrived in Madras on the day when a collection of articles on Bharati by Soviet scholars was put out in English and Tamil by the Madras branch of the Novosti Press Agensy. This book contains articles examining different aspects of Bharati's poetry written by Prof. E. Chelyshev, M. Andronov, V. Makarenko, V. Fournika, L. Bytchikhina, S. Rudin, A. Dubianski and T. Smirnova. The majority of the articles were specially prepared for this collection.

Dubianski took part in an International Seminar on S. Bharati held in Delhi by Indian Sahitya Academy (January, 7-10), where he read his paper "Some observations on Subramania Bharati's poetics".

On January 12, 1983, a jubilee meeting dedicated to the centenary of Subramania Bharati's birth was held in Moscow at the House of Friendship with the peoples of Foreign countries. This meeting was a concluding event of "S. Bharati's year". But this does not mean, of course, the end of the Soviet scholars activity concerning the poet's work. The articles on Bharati still appear in periodicals (for instance, a paper by A. Dubianski, "Subramania Bharati's patriotical poetry" was published in "Moscow University Herald, Oriental Studies" n1, 1983; an article "S. Bharati in the USSR" by the same author appeared in the 'Soviet Literature' n7, 1983; several new translations of Bharati's poetry were published in 'Zvezda Vostoka' (Star of the East) n1, 1983).

As to other fields of Tamilology mention should be made of a collection of Sangam classics in Russian translations 'Jasmine Song', made by Alev Jbragimov, a poet and translator. This is the second separate book of ancient Tamil poetry (the first, 'Songs on palm-leaves' was prepared by A. Dubianski and poet A. Naiman in 1979). It includes poem from 'Purananuru,' 'Akananuru', 'Kuruntokai' 'Kalittokai' and two poems from 'Pattuppattu', 'Mullaippattu', and 'Kurincippattu'. Whereas the first book had a scholarly touch on it and the translators tried to convey the complexity of the poetical diction and images of Tamil poetry, the second one is made in much more popular poetical style and makes easy reading.

Vitaly Fournika in the year 1982 has published about 10 essays on S. Bharati's life and poetry. Besides, he wrote an article, "Some aspects of ideological struggle in the literature of South India" (the collection of articles, "Modern Asian and African literatures and ideological struggle," Moscow, 1982), and made several reviews of the books of Tamil authors, such as 'நூற்றாண்டு தமிழ் நாவல்', 'தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டமும்', 'விமர்சன சிதறல்கள்' by T. C. Ravindradas. He also wrote an essay on Folklore team, "வில்லிசைக் குழுவினர்" (newspaper, Soviet Culture 21.09.1982).

L. Bychikhina is engaged in analysing modern Tamil literature (her Ph.D. thesis was devoted to Putumaippittan short

stories). In the year 1982 she published an article 'Modern realistic novel in Tamilnadu' (in, 'Literature of the East in the 70-ies' Moscow, 198_). She also made a report at the conference of Soviet indologists (held in Moscow in October, 1982): 'Some traditional features of Bharati Dasan's poetry'.

At the same conference Alexander Dubianski read a paper, 'Ancient Tamil poets and the problem of Tamil Sangam.' Having analysed several references to poetical activities in old Tamil texts (mostly Purananuru) he held that the literary production of the so called Sangam epoch reflects the stage of transition from bardic poetical efforts to more academic style which is not completely formed yet.

Dubianski is now preparing a book on classical Tamil poetry (due to be finished in 1984) and in collaboration with L. Bychikhina is working on a short sketch of Tamil Literature.

In the field of linguistics the active role plays a prominent Soviet scholar M. Andronov. He published two articles on Dravidian languages. 'From the history of classification of Dravidian languages' (in 'Theoretical foundations of classification of the languages of the world: problems of genetic ties, Moscow, 1982) and 'Dravidian languages' (in, 'Comparative-historical Studies in different linguistic families; tasks and perspectives', Moscow, 1982).

# 24. சிங்கப்பூரில் தமிழ்

-எஸ். எஸ். சர்மா

பன்முக நோக்கில் தமிழ் வளர்ச்சி சிங்கப்பூரில் அமைகின்றது. தேசியமொழிகளிலொன்றாகஅமையும் தமிழ்,கல்வித் துறையிலும் இரண்டாம் மொழியாக இடம் பெற்றுள்ளது. எனினும் மொழிப் பயிற்சி வளர்ச்சியடைய வேண்டியுள்ளது. இலக்கிய ஆக்கத்திற்குத் 'தமிழ் முரசு' நாளிதழ் உதவுகின்றது. இயல், இசை, நாடகம், கதை, கவிதை, கட்டுரை, உரை எனப் பல வகையிலும் 1982-இல் தமிழ் இங்கு வளர்ச்சி கண்டுள்ளது.

1982-இல் சிங்கப்பூர்க் குடியரசில் நம்பிக்கை அளிக்கும் விதத்தில் தமிழ் வளர்ச்சி கண்டிருக்கிறது.

## மொழி வளர்ச்சி

சிங்கப்பூரில் மாண்டரின் (சீன மொழி), ஆங்கிலம், மலாய் ஆகியவற்றுடன் தமிழ்மொழியும் தேசிய மொழித் தகுதி பெற்றுள்ளது. இந்த நான்கு மொழிகளும் அதிகார மொழிகளாக உள்ளன.

சிங்கப்பூரின் மக்கள் தொகை 24 லட்சம் பேர். இவர்களில்—

| | |
|---|---|
| சீனர் | 18 லட்சம் |
| மலாய் | 4 லட்சம் |
| இந்தியர் | 1½ லட்சம் |

மிகச் சிறுபான்மையினரான இந்தியரில் தமிழரின் எண்ணிக்கை ஒரு லட்சம் பேர். பெரும்பான்மைச் சமூகத்தினரான சீனர், மலாய் இனத்தவரிடையே ஆங்காங்கு சிதறி வாழும் தமிழர் தங்கள் மொழியையும், பண்பாட்டையும் போற்றி வளர்க்க வேண்டிய சூழலில் வாழ்க்கை நடத்துகின்றனர். பிற இனத்தவருடன் ஆங்கிலம் அல்லது மலாய் மொழியில் தொடர்பு கொள்ள வேண்டியிருப்பதால், பல தமிழ்க் குடும்பங்களில் தொடர்பு மொழியே, வீட்டு மொழியாகவும் இடம் பிடித்துள்

ளது. இப்படிப்பட்ட இல்லங்களில் தமிழை அந்நிய மொழியைக் கற்பிப்பது போல் போதிக்க வேண்டியுள்ளது.

தமிழ்மொழியை ஒரு பாடமாக எடுத்துப் படித்துப் பட்டறிவு பெறும் வாய்ப்பை சிங்கப்பூர் அரசாங்கம் வழங்கியுள்ளது. சிங்கப்பூர்ப் பள்ளிகள் அனைத்திலும் ஆங்கிலம் பிரதான மொழியாகும். இரண்டாம் மொழியாக மாண்டரின் (சீனம்), மலாய் அல்லது தமிழ்மொழி ஒன்றை மாணவர் கற்பது கட்டாயமாகும்.

பிரிட்டிஷ் காலனித்துவ ஆட்சியிலிருந்தே ஆங்கில மொழிக்கு அடிமையாகி விட்ட அநேக தமிழ்க் குடுமபங்களுக்கு, தமிழ் மொழிப் போதனை என்பது புதிய மொழி ஒன்றைக் கற்பது போன்ற சிரமத்தைப் பெற்றதில் வியப்பில்லை. மேலும் தமிழ் மொழியை விட மலாய் மொழி கற்பது பலதமிழ் மாணவர்களுக்கு எளிதாக இருந்தது. மலாய் மொழி, ஆங்கில எழுத்து வடிவத்தைக் கொண்டிருப்பதாலும் (''ரோமனைஸ்ட்'' மலாய்) பாட நூல்கள் எளிமையான நடையில் இருந்ததாலும் அதையே விருப்ப மொழியாக பல இந்திய மாணவர்கள் எடுத்தனர் இவர்களுக்குத் தமிழ் உணர்வை உண்டு பண்ணுவதற்கு சிங்கப்பூரிலுள்ள தமிழர் அமைப்புகளும், தமிழ் சமூகத் தலைவர்களும், தமிழாசிரியர்களும் அரும்பங்காற்றியுள்ளனர். இளைய தமிழ்த் தலைமுறையினரிடையே தமிழ் உணர்வும், ஆர்வமும் ஏற்படுத்துவதில் வெற்றி காணப்பட்டுள்ளது.

### தமிழ்ப்பள்ளி எதுவுமில்லை!

இன்று சிங்கப்பூரில் தமிழ்மொழியை அடிப்படைக் கலவியாகக் கொண்ட பள்ளிக்கூடம் ஒன்றுகூட இல்லை. தமிழ் மொழியைப் போதனா மொழியாகக் கொண்டிருந்த கடைசித் தமிழ்ப்பள்ளிக்கூடம் உமறுப்புலவர் தமிழ் உயர்நிலைப் பள்ளி. இது 1962-ஆம் ஆண்டில் மூடப்பட்டு விட்டது. தமிழ்ப் பள்ளிக்கூடங்களை மூட நேர்ந்த காரணம் தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கவே தமிழ் மாணவர் விரும்பியதுதான். இன்று சிங்கப்பூரில் 100 ஆங்கிலத் தொடக்கப் பள்ளிகளில் தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கும் வசதி செய்யப்பட்டுள்ளது.

இந்திய மாணவர்களில் 53 விழுக்காட்டினர்—அதாவது 10,246 இந்திய மாணவர்—தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கின்றனர்.

உயர்நிலை வகுப்புப் பள்ளிகளில் தமிழ்மொழி நிலையங்களில் தமிழ்க் கல்வியை இரண்டாம் மொழியாகக் கற்கும் மாணவர் எண்ணிக்கை 5139. சிங்கப்பூரில் 1982 இல் பள்ளிகளில் பயின்ற மொத்த மாணவர்களின் எண்ணிக்கை 1,76,845 இவர்களில் 15 000 பேருக்கு மேல் தமிழ் கற்கும் மாணவர். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட 25 விழுக்காட்டினர் மலாய் மொழியை (சிலர் சீன மொழியும்) இரண்டாம் மொழியாகப் பயில்கின்றனர்.

## தமிழ்மொழித் தேர்வு

இளந் தலைமுறையினரிடையே தமிழ்மொழி ஆர்வத்தை, உணர்வை ஏற்படுத்துவதில் வெற்றி கண்டுள்ளனர் சிங்கப்பூர்த் தலைவர்கள்.

"19 2-இல் தமிழை இரண்டாம் மொழியாக எடுத்தவர்களில் இறுதித் தேர்வில் 86 விழுக்காட்டுத் தமிழ் மாணவர் தேறியுள்ளனர். இவர்களில் 34 விழுக்காட்டினர் மிகச் சிறப்புத் தேர்வு பெற்றுள்ளனர்" என்று கூறுகிறார் சிங்கப்பூரின் மூத்த தமிழாசிரியர் த. பா. சாமி அவர்கள்.

தாய்மொழியான தமிழில், தமிழ் மாணவர் நல்ல தேர்ச்சி கண்டிருப்பதில் நாம் மகிழ்ச்சி அடைந்தாலும், மறுபுறம் முதல் மொழியான ஆங்கிலத்தில் அத்துணை சிறப்பாகச் செய்யாதது நமக்கு மனக்குறை தரும் செய்தியாக உள்ளது.

இது குறித்து சிங்கப்பூர் தமிழர் பேரவைத் தலைவர் கோ. கந்தசாமி அவர்கள் கூறுவதைக் கேட்போம்:

"1975 முதல் 1980வரை தமிழை இரண்டாம் மொழியாகக் கற்ற பிள்ளைகளின் எண்ணிக்கை ஆண்டுக்குச் சராசரி 1,500. இவர்களில் ஏறத்தாழ 1060 பேரே ஜி. சி. இ. "ஓ" நிலை (G. C. E. "O" என்பது பொதுநிலைக் கல்விச்சான்று) தேர்வுக்குச் சென்றனர்.

"தொடக்கக் கல்வி இறுதி ஆண்டுத் தேர்வில் 500 பேர் கல்வியைத் தொடரவில்லை. 1060 பேரில் 90 பேர் மட்டுமே பொதுநிலைக்கல்வி மேற்பிரிவு (G.C.E. "A" Level) சென்றனர். 984 மாணவர்கள் உயர்நிலைப் பள்ளிகளுக்குச் செல்லவில்லை" என்று கூறுகிறார்.

கந்தசாமி அவர்கள் தந்துள்ள புள்ளி விவரப்படி பார்த்தால் தமிழ் மாணவர்களில் 50 விழுக்காட்டினர் மட்டுமே ஆறாம்

படிவத்திற்கு மேல் செல்கின்றனர். பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பை 10 முதல் 15 விழுக்காட்டினர் எட்டுகின்றனர். இறுதியில் 1.4 விழுக்காட்டினர் தேசியப் பல்கலைக் கழகம் அல்லது தொழில் நுட்பக் கல்லூரி (பாலிடெக்னிக்) போகின்றனர்.

இந்த நிலையை உணர்ந்து பல தமிழர் அமைப்புகள் இணைந்த தமிழர் பேரவை துணை வகுப்புகளை ஏற்பாடு செய்தது. தேசிய இளையர் கல்லூரியும் (National Junior College), உமறுப் புலவர் தமிழ் மையமும் உயர்நிலை தமிழ்ப் பயிற்சி வகுப்புகளை ஏற்பாடு செய்தன. இந்தத் துணை வகுப்புகள் பின்தங்கிய தமிழ்மாணவர்களின்கல்வி நிலையை உயர்த்தப் பெரிதும் உதவியாக உள்ளன.

''சரிவைச் சரி செய்தல்!''

தமிழ் மாணவர்கள், தங்கள் தாய்மொழியான தமிழில் தேர்வு பெற்றால்தான் உயர்நிலைப் படிப்பிற்கோ, பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பிற்கோ போகமுடியும் என்பதை இப்போது நன்குணர்ந்துள்ளதால் தமிழ்க் கல்வியறிவில் நல்ல மதிப்பெண்களைப் பெற்று வருவது ஆக்கமளிக்கிறது.

தாய்மொழி அறிவு இன்றியமையாதது என்பதை அரசாங்க அதிகாரிகளும் அவ்வப்போது அறிவுறுத்தி வருகின்றனர். கலாச்சாரத் துணை அமைச்சர் மேஜர் போங் சிப்சீ அண்மையில் தாய்மொழி அறிவை வலியுறுத்திப் பேசுகையில், ''தாய்மொழி என்பது உயிர்மொழியாகும். அது சிங்கப்பூரர்களின் கலாச்சாரத்தையும், நெறிமுறைகளையும் கொண்டிருக்கிறது. எனவேதான் அரசாங்கம் தனது இரு மொழிக் கொள்கையைச் செயல் படுத்தி வருகிறது'' என்றார்.

ஆங்கிலமொழித் தேர்வில் ஏற்பட்டு வரும் பின்தங்குதலை சரி செய்யவும் துணை வகுப்புகள் நடத்தப்பட்டு வருகின்றன. அண்மையில் உமறுப்புலவர் தமிழ் மையத்தில் நடைபெற்ற பரிசளிப்பு விழா நிகழ்ச்சியில் சட்ட உள்துறை துணை அமைச்சர் பேராசிரியர் எஸ். ஜெயக்குமார் அவர்கள் ஆற்றிய உரையில் கூறியதாவது: ''தமிழ் மாணவர் தாய்மொழி அறிவில் உயர்ந்து விளங்கினாலும் ஆங்கிலப் பாடங்களில் தேர்ச்சி பெறத்தவறுவது நம் மனத்தை வருத்துகிறது. ஆங்கிலப் பாடங்களில் நல்ல தேர்ச்சி பெற்றால்தான் பல்கலைக்கழகங்களில் அல்லது தொழில் கல்லூரிகளில் இடம்பெற முடியும் என்பதை அவர்கள் உணர்ந்து, முதல் மொழியான ஆங்கிலத்திலும் அதிக கவனம் செலுத்த வேண்டும்'' என்றார்.

சிங்கப்பூரின் பெரும்பான்மைச் சமூக மக்களான சீன, மலாய் சமூகத்தினர் நடுவில் வாழும் தமிழ் மாணவர், உயர்ந்த கல்வித் தகுதியைப் பெற, தேர்வில் உயர்ந்த மதிப்பெண்களைப் பெறவேண்டும். அப்போதுதான் இதர சமூகத்தினருடன் போட்டியிட்டு நல்ல வேலை வாய்ப்புகளைப் பெறமுடியும். இது சிங்கப்பூரின் இளைய தலைமுறையினருக்கு மட்டுமல்ல, உலகெங்கும் வாழும் எல்லாத் தமிழ்மாணவர்களுக்கும் பொருந்தும்.

சில நாடுகளில் நிறையப் பட்டதாரிகளை உருவாக்க முடிந்தும் வேலை வாய்ப்புஇல்லாதநிலை. ஆனால் சிங்கப்பூரைப் பொறுத்தவரை பட்டறிவு பெற்றவர்கள் அனைவருக்குமே சிறந்த வேலை வாய்ப்புகள் காத்திருக்கின்றன. சரியான கல்வித் தகுதி பெற்ற பட்டறிவாளர்களின் பற்றாக் குறையால் வெளிநாடுகளிலிருந்து அத்தகையவர்களைத் தருவிக்க வேண்டிய நிலை தற்சமயம் இங்கே நிலவுகிறது.

### தமிழ் ஆசிரியர் சங்கப் பணி

தமிழ் மொழி வளர்ச்சியில் சிங்கப்பூர் தமிழாசிரியர் சங்கம் சிறப்பான தொண்டாற்றி வருகிறது.

1982-இல் இந்தச் சங்கம் "சிங்கப்பூரில் தமிழ்மொழி கற்பித்தலில் மேம்பாடு" என்பது பற்றி ஓர் ஆய்வரங்கை நடத்தியது. இந்த ஆய்வரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகளும் அவற்றை எழுதியவர்களும் வருமாறு:

1. மாணவர்களின் கல்விமேம்பாடு —ச. வீரையன்.
2. கற்பித்தலில் சங்கத்தின் பங்கு —சாமி வீராசாமி.
3. கற்பித்தலில் ஆசிரியர் எதிர்நோக்கும் பிரச்னைகளும் ஆசிரியர் கல்வி வளர்ச்சியும் —செல்லையா.
4. தமிழ் மாணவர்களும் சமயக் கல்வியும் — அ. வீரமணி.

இந்த ஆய்வரங்கு, ஆசிரியர், மாணவர்களின் பிரச்னைகளையும் அதற்கான தீர்வுகளையும் காணப் பெரிதும் உதவியுள்ளது.

### சமயப் பாடம்

சிங்கப்பூரில் 1984 முதல் கட்டாயச் சமயக்கல்விப் பாடத் திட்டம் வர உள்ளது. இந்து, கிறித்தவ, பௌத்த, இஸ்லாமிய சீக்கியசமயங்களில் அல்லது கன்பூஷியஸ் அறநெறிப் பாடங்களில் ஒன்றை மாணவர்கள் கட்டாயப் பாடமாகக் கற்கவேண்டியுள்ளது. இந்து சமயக் கல்வி ஆங்கில மொழியில் போதிக்கப்

படுவது என முடிவு செய்யப்பட்டிருப்பதால், அதைத் தமிழிலும் நடத்தவேண்டும் எனத் தமிழாசிரியர்களும் மற்றும் பல சமூக அமைப்புகளும் கல்வி அமைச்சைக் கேட்டுள்ளன.

மாணவர் கல்வி ஒளிபெற்று சமுதாயத்தில் உயர்ந்த நிலையைப் பெற ஆசிரியர் ஆற்றும் அரும்பணியை நாம் மறக்க முடியாது. சிங்கப்பூர்க் குடியரசின் அதிபராக உள்ள மாண்புமிகு சி. வி. தேவன்நாயர் அவர்களும் முன்பு பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர்.

**ஆசிரியர் பணியாற்ற விரும்பும் அதிபர்!**

ஆசிரியர் நாள் சிறப்பு விருந்து ஒன்றில் தேவன்நாயர் அவர்கள் உரையாற்றியபொழுது தாம் சில பாடங்களைக் கற்க பள்ளிக்கு திரும்பப் போக விருப்பம் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். இதற்காகக் கல்வி அமைச்சர் கோ கெங் சுவீயிடம் ஒப்புதல் கேட்டிருப்பதாகவும் கூறினார்.

தமது உயர்வுக்குக் காரணமான கல்வியினால் நாடு பயனடைகிறது. அறிஞர்களின் நாட்டம் எப்போதும் கல்வியில்தான் இருக்கும் என்பதற்கு சிங்கப்பூர்அதிபர் தெரிவித்துள்ள விருப்பம் ஓர் எடுத்துக்காட்டாகும்.

> ''தாமின்புறுவது உலகின் புறக்கண்டு
> காமுறுவர் கற்றறிந்தார்''

என்னும் குறள் வாக்கு இங்கே நினைவுகூரத் தக்கது.

சிங்கப்பூர் தொழிற் சங்கங்களின் தலைமைப் பொறுப்பேற்று சிங்கப்பூரைத் தொழில் துறையில் கட்டொழுங்கும், உழைப்பும் உள்ளவர்களை உருவாக்கவும் ஆசியாவிலே ஜப்பானுக்கு அடுத்த படியாக தனி நபர் வருமானம் பெருக பொருளாதாரத் திட்டங்களையும் தந்தவர் தேவன்நாயர். இலக்கியம், சமயம் ஆகியவற்றிலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். முன்பு கதாசிரியர் அகிலன் சிங்கப்பூர் வந்தபோது, தமிழ் எழுத்தாளர் சங்கம், 'ஹாலிடே இன்' ஓட்டலில் விருந்துபசரிப்பு அளித்தது. அதில் தேவன்நாயர் தலைமை வகித்து ஆற்றிய உரை, சிறந்த இலக்கிய உரையாக அமைந்தது.

குன்றக்குடி அடிகளார் சிங்கப்பூர் வந்தபோது 'சங்ரிலா' ஓட்டலில் அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு நிகழ்ச்சியில், தேவன்நாயர், அடிகளாருக்குப்பொன்னாடை போர்த்தி ஆற்றிய உரையும் மறக்க முடியாதது. ஆழ்ந்த பொருளை, எளிய நடை

யில் நகைச்சுவையுடன் பேசும் ஆற்றல் வாய்ந்த நாயர் இன்று சிங்கப்பூரின் அதிபராக இருப்பது இந்தியர்களுக்குப் பெருமை தரும் சிறப்புத்தானே!

இந்தச் சமயத்தில் தேவன்நாயர் அவர்கள் 1982-இல் சிங்கப்பூர் தேசியப் பல்கலைக் கழகத்தில் நடத்தப்பட்ட பட்ட மளிப்பு விழாவில் ஆற்றிய உரை இங்கே குறிப்பிடத்தக்கது.

''கல்வியின் சிறப்பு அடக்கமே!''

''மிகவும் பாடுபட்டுப் படித்துப் பட்டம் பெறும் உங்களுக்கு இந்தப் பட்டமளிப்பு நாள் மூன்று விதத்தில் மனநிறைவு தரக் கூடியதாகும்.

''முதலாவது நீங்கள் பட்டம் பெறுவதற்காகப் பல்கலைக் கழகம் வந்தீர்கள். அந்த நோக்கம் இன்று நிறைவேறுகிறது. அந்த வகையில் மனநிறைவு கொள்கிறீர்கள்.

''இரண்டாவதாக, உங்கள் பெற்றோர் உங்கள் வெற்றியில் மனநிறைவு அடைகிறார்கள். உங்களுடைய வெற்றியில் அவர் களுடைய தியாகங்களும் நம்பிக்கையும் வீண் போகவில்லை.

''மூன்றாவதாக உங்களுடைய ஆசிரியரின் மனநிறைவு. அவர்களே உங்களுடைய அறிவு வளர்ச்சிக்கு உதவி, அறிவுச் செல்வத்தை வழங்கியவர்கள். அவர்களும் பேருவகை அடை கின்றனர்!

''நீங்கள் எவ்வளவு அதிகமாகக் கல்வி பெறுகிறீர்களோ அந்த அளவுக்கு அடக்க உணர்வையும் வளர்க்கவேண்டும். உங்க ளுடைய வெற்றிக்குக் காரணமான சமுதாயத்திற்கு, வெற்றி காண வேண்டுமென்ற எண்ணத்தையும் வளர்க்கவேண்டும்''

இவ்வாறு சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் தேவன் நாயர் ஆற்றிய உரை எல்லா நாட்டு மாணவர் களுக்கும் ஏற்புடையதாகும்.

சிங்கப்பூர் தேசியப் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டு இரண்டு ஆண்டுகளே ஆகின்றன. இந்தக் குறுகிய காலத்தில் விரிவுரை யாளரும் பேராசிரியரும் 700-இல் இருந்து 1000 ஆக உயர்ந் துள்ளனர். மாணவர் எண்ணிக்கை 9,000த்திலிருந்து 11,000 ஆகியுள்ளது.

தேசியப் பல்கலைக் கழகத்தில் கீழ்க்கண்ட துறைகளில் பயில்வோர் வருமாறு:

பொறியியல் 428
கலை, சமூகவியல் 408
சட்டத்துறை 398

சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகம் தவிர கீழ்க்கண்ட தொழில் நுட்பக் கல்லூரிகளும் பட்டறிவு பெற்றவரை ஆண்டு தோறும் உருவாக்குகின்றன.

- ☐ ஙீ ஆன் பல்துறை தொழில் நுட்பக் கல்லூரி
- ☐ சிங்கப்பூர் பலதுறை தொழில் நுட்பக் கல்லூரி
- ☐ நன்யாங் தொழில் நுட்பக் கல்லூரி.

1990 வாக்கில் இந்தக் கல்லூரிகள் ஆண்டுதோறும் 20 ஆயிரம் பொறியியல் சான்று பெற்றோரை உருவாக்கும் எனக் கூறப்படுகிறது.

சிங்கப்பூர் சிறிய குடியரசு நாடாயினும் சிறந்த வேலை வாய்ப்புகளும், நல்ல சம்பளமும் ஆடம்பர வசதிகளும், பசுமையும் துப்புரவும் தூய்மையும் கொண்ட சூழலும், வலுவான நாணயமும் அமைந்திருப்பதால் இன்றைய இளைய தலைமுறையினரும் வருங்கால சந்ததியினரும் இதைத் தொடர்ந்து காக்க உழைப்பும் மன உறுதியும் கொண்டிருந்தால் போதுமானது! பட்டறிவு பெறும் நிலையை எட்ட முடியாதவரும் நல்ல வேலை வாய்ப்புகளைப் பெற முடியுமாதலால் அவர்களும் உறுதியுடன் உழைத்து உயர முடியும். இவ்வாறமையும் மொழி, கல்வி வளர்ச்சி போலவே, சிறப்புடையதாக, சிங்கப்பூரின் இலக்கிய வளர்ச்சியும் அமைகின்றது.

### பத்திரிகைகள்

சிங்கப்பூரின் தமிழ் வளர்ச்சியின் தலையாய பங்கை கல்விக் கூடங்கள் ஆற்றினாலும் மக்களிடையே பரவலான முறையில் அவற்றை வளர்ப்பவை பத்திரிகைகள். அடுத்து வானொலி, தொலைக்காட்சி, சமூக இயக்கங்கள் ஆகியவை ஆற்றும் சேவைகள்.

சிங்கப்பூரில் அச்சிடப்படும் ஒரே நாளிதழ் "தமிழ் முரசு" காலஞ்சென்ற தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்கள் அரை நூற்றாண்டுக்கு முன்னர் தொடங்கிய இந்த நாளிதழ் இப்போது அவரது குடும்பத்தினரால் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது. இது தமிழ் கூறும் நல்லுலகம் போற்றும் ஒரு நற்பணி. தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்கள் மணந்தது ஒரு சீனப்

பெண்மணியை. அவர் மனைவியும் பிள்ளைகளும் தமிழ் அறிந்தவர்கள் அல்லர். ஆயினும் மறைந்த தமிழவேளின் நினைவுப் பணியாக இந்தத் தமிழ் முரசு நாளிதழைத் தொடர்ந்து நடத்தி வருவது பாராட்டுக்குரிய ஒரு சாதனை என்றே கொள்ள வேண்டும். அதிலும் சிங்கப்பூரில் பத்திரிகைகள் நடத்துவதற்கு அநேக கெடிபிடிகளும் கட்டுதிட்டங்களும் உள்ளன. இந்த நிலையில் இங்கே அச்சிடப்படும் ஒரே தமிழ் நாளேடு ''தமிழ் முரசு'' மட்டுமே.

**சிறு கதைகள்**

நாளிதழ்களின் பணி செய்திகளை வெளியிடுவதோடு முடிந்து விடுவதில்லை. இலக்கிய வளர்ச்சியிலும் நாளேடுகள் ஆற்றக்கூடிய பங்கு அளப்பரியது. தமிழ் முரசின் ஞாயிறு பதிப்பில் சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள், மாதர்க்கான அங்கம், திரைப்படப் பகுதி ஆகியவை இடம் பெறுகின்றன. வாரம் ஒரு நாள் மாணவர்க்கென ''மாணவர் மணி மன்றம்'' என்ற அங்கமும் முரசில் இடம் பெறுகிறது. இதில் பள்ளி மாணவரின் எழுத்தோவியங்கள் இடம் பெறுகின்றன.

ஞாயிறு பதிப்பு முரசில் வெளிவரும் சில சிறு கதைகளை எழுதியவரின் பெயர் இருந்தாலும் அவர்கள் சிங்கப்பூர் எழுத்தாளரா, அல்லவா என்பதைத் தெரிந்துகொள்ள முடிவதில்லை.

எடுத்துக்காட்டாக 9-1-82 முரசில் ''உறவின் இறுக்கம்'' கதையை எழுதியவர் அசோக்குமார் என்று தரப்பட்டுள்ளது. அதுபோல் 24-1-82 முரசில் ''என் பிள்ளை எனக்குக் கிடைப்பானா?'' என்ற கதையை எழுதியவர் கோகிலா என்று அறிகிறோம். இவர் எந்த ஊர்க் கோகிலா என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இதுபோல், ''சரசு ஒரு நிலா'' (10-1-82) எழுதிய எம். பி. எம்., ''கண்ணீர் கண்ணீர்'' (17-1-82) எழுதிய கே. ஜீ. ஜவகர் ஆகியோர் எந்த நாட்டைச் சேர்ந்த கதாசிரியர் என்பதைத் தெரிந்து கொள்ள முடியாததால் படைப்பாளரின் முழுமையான பட்டியலைத் தர முடியவில்லை.

1982-இல் தமிழ் முரசு ஞாயிறு பதிப்பில் வந்த சிறுகதைகளில் குறிப்பிடத்தக்கவை:

இரா. துரைமாணிக்கம் எழுதிய ''பரிகாரம்'' (23-5-82), தேவை ஒரு குழந்தை (14-3-82). பி. விமலா எழுதிய ''நல்ல

முடிவா'' (7-2-82), ''ஊருக்குத்தான்'' (16-5-82). கா. சங்கையா எழுதிய ''நினைத்தது ஒன்று'' (31-1-82), ''விட்டில் பூச்சி'' (21-6-82), ''நட்பு தெய்வமாகிறது'' (25-7-82). பாமலன் எழுதியவை: ''கரையை மோதும் அலைகள்'' (9-1-82), ''பழநி அழுகிறார்'' (14-2-82), ''கோகிலா சிரிக்கிறாள்'' (28-2-82). செம்பாவாங் சாந்தி எழுதிய கதை ''அம்மு என் மகள்'' (4-4-82). டேபான் கார்டனைச் சேர்ந்த ஏ. எஸ். எச். எழுதியவை: ''நெருடும் நினைவுகள்'' (21-3-82), ''ஏங்கும் நெஞ்சங்கள்'' (14-2-82), ''நியாயங்கள்'' (25-4-82). நன்யாங் தொடக்கக் கல்லூரியைச் சேர்ந்த க. சத்திநாதன் எழுதிய கதை ''நிழல் சுட்டது'' (18-4-82). செம்பவாங் பொன்னி எழுதிய கதை ''மூடுபனி'' (21-3-82). ''சாம்பலுக்கு அடியில்'' (25-4-82) கே. ராஜமாணிக்கம் எழுதிய கதை.

மா. இளங்கண்ணன் ''வைகறைப் பூக்கள்'' தொடர்கதையை எழுதியதுடன் ''அகங்காரத்திற்குக் கிடைத்த அடி'' (21-1-82), ''மனம் மாறிய மாமியார்'' (28-2-82) ஆகிய சிறுகதைகளையும் படைத்திருந்தார். இவர் ஆசியான் இலக்கியப் பரிசைப் பெற்ற எழுத்தாளர் என்பது குறிப்பிடத்தக்கது இக்கதைகள் பெரும்பாலும் குடும்பப் பிரச்சினைகளைச் சார்ந்தவையாய் இருந்தன.

சிங்கப்பூரின் இளம் எழுத்தாளர்க்கு ஆக்கமூட்டும் விதத்தில் நாளிதழ்கள் அவர்கள் படைப்புகளுக்கு இடமளிப்பது பாராட்டுக்குரியது. அதே சமயம் சில கதைகள் சரிவரத் திருத்தப்படாமல் எழுத்துப் பிழைகள், சொற்றொடர் தவறுகள், கதைக்குச் சம்பந்தமில்லாத வர்ணனைகள் போன்றவை இடம்பெற்றதைத் தவிர்த்திருக்கலாம்.

நாளிதழ் ஆசிரியர் குழுவினர் அன்றாடம் செய்திகளை ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்து வெளியிடுவதில் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருப்பவர்கள். அந்த நெருக்கடிப் பணிகளின் நடுவே எழுத்துப் படைப்புகளைக் கவனித்து திருத்தி வெளியிடப் போதிய அவகாசம் இருப்பதில்லை. பக்கத்தை எப்படியாவது நிரப்பி விரைந்து அச்சுக்கு அனுப்ப வேண்டியுள்ளது.

ஆயினும் சிங்கப்பூரில் இலக்கிய ஏடுகள் எதுவும் இல்லாத நிலையில், தமிழ் எழுத்துப் படைப்புகளுக்கு நாளிதழ்களையே எழுத்தாளர்கள் சார்ந்துள்ளனர் என்பதைக் கருத்தில் கொண்டு பத்திரிகை ஆசிரியர் இன்னும் அதிகமான பங்கை இலக்கியத் துறைக்குச் செய்ய வேண்டும் என்பதே நம் ஆசை.

### இதர இதழ்கள்

இந்தக் கட்டுரையாளரை (எஸ். எஸ். சர்மா) ஆசிரியராகக் கொண்டு கடந்த 32 ஆண்டுகளாக வந்து கொண்டிருக்கும் மாத இதழ் "இந்தியன் மூவி நியூஸ்". சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் தனித்தனியே அச்சிடப்பட்டு, இல்லந்தோறும் இடம்பெற்றுள்ள இதழ் என்ற பாராட்டைப் பெற்றுள்ள இதில், தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறுகதைகள் வெளியிடப்பட்டு வருகின்றன.

சிங்கப்பூர் இரா. இளங்கோவன் எழுதிய "இணையாத ராகங்கள்", பெரி. நீல. பழநிவேலன் என்பார் "பாமலன்" என்ற பெயரில் எழுதிய "மறுவாழ்வு", "திசை மாறும் உறவுகள்" ஆகியவை இதில் குறிப்பிடத்தக்க சிங்கப்பூர் எழுத்தாளர்களின் படைப்புகளாகும்.

1982-இல் வெளிவந்த இதர மாத இதழ்கள்: "வேல்" "திரையொளி" "கொள்கை முழக்கம்" என்பன. மூன்று மாதங்களுக்கு ஒன்றாக (காலாண்டு இதழ்) "தமிழ் மணி" என்ற இதழை தமிழ்மொழிப் பண்பாட்டுக் கழகம் வெளியிடுகிறது. "பேரவை" என்ற காலாண்டு இதழை, தமிழர் பேரவை வெளியிடுகிறது.

### வானொலி, தொலைக்காட்சி

உள்ளூரில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வானொலித் தமிழ்த் துறை அரும் பணியாற்றி வருகிறது. நாடகங்கள், சிறுகதை, மற்றும் மாதர், சிறுவர், இளையருக்கான அங்கங்கள் ஆகியவற்றில் உள்ளூர் எழுத்தாளரின் படைப்புகள் தொடர்ந்து இடம் பெற்று வருகின்றன. தொலைக்காட்சியிலும் நாடகங்கள் இடம் பெறுகின்றன.

சிங்கப்பூர் வானொலியின் இந்தியப் பிரிவுத் தலைவராக இருந்த அ. முருகையன், பி. ஏ., அவர்கள் 30-7-82-இல் காலமானது பெரிய இழப்பாகும். இவர் 1965 முதல் வானொலியின் இந்தியப் பிரிவுத் தலைவராக இருந்தார்.

### கவிதைகள்

நாட்டின் நிலையை சில வரிகளில் எளிமையாக, இனிமையாக எடுத்துக்காட்டக் கூடியவர் கவிஞர் இந்தப் பாவலர்களின் படைப்புகள் வானொலியிலும் பத்திரிகைகளிலும் இடம் பெற்று வருகின்றன.

நல்ல சந்தமுள்ள இனிய கவிதைகளைப் "பரணன்" படைத்து வருகிறார். இவர் இயற்றிய "வெளிச்சக் கோடுகள்"

(28-2-82), "முத்துக்களே கைகள் தட்டுங்கடி" (முரசு 2-2-82), "பறவைப் பூங்கா" (14-2-82) ஆகியவை குறிப்பிடத் தக்கவை.

மெ. இளமாறன் இயற்றிய கவிதைகளில் 'முருகன் காவடிப்' பாடல்கள்" (முரசு 7-2-82), "இறுமாப்பு இல்லாமல்வாழ்வோம் (முரசு 14-2-82), "பொது நலமுயர்" "பூட்டப்பட்ட ஆசை" (நேசன் 11-11-82) போன்றவை கருத்துள்ள படைப்புகள்.

சிங்கப்பூர், மலேசிய இலக்கியத் துறைக்கு அருஞ்சேவை யாற்றியவர் முன்னாள் "பொன்னி" ஆசிரியர் முருகு. சுப்பிரமணியன். இவர் "தமிழ் நேசன்" நாளிதழின் ஆசிரிய ராகவும் இருந்தவர். பின்னர் "புதிய சமுதாயம்" மாதஇதழைத் தொடங்கினார். அன்னாரின் மறைவை ஒட்டி சிங்கப்பூரின் மூத்த கவிஞர் ந. பழநிவேல் அவர்கள் எழுதிய "மறைந்த முருகு" இரங்கற்பா (முரசு 2-6-82) உள்ளத்தைத் தொடுவதாக அமைந்திருந்தது.

கடைய நல்லூர் ஜமீலாவின் "வெற்றி வழி" முத்து மாணிக் கத்தின் 'மகளுக்குத்தாலாட்டு' வலயன்வயல் முத்துவின் "என்றும் இளமைதானே" மலர் மாணிக்கத்தின் "ஆலையின் சங்கொலி" ஆகிய கவிதைகளும் நன்று. க. து. மு. இக்பால் எழுதிய "காசு" (தமிழ் நேசன் 11-12-82) "அலைகள்", "கல்" ஆகிய கவிதை களும், ப. கோவிந்தசாமியின் "சிங்கைப் பிரதமரின் சிறப்பு", சிங்கப்பூர் முகிலனின் "அமைதி கொள்வாய் மனமே," "சிங்கை யின் மாட்சி," சித. பழநிச்சாமியின் "வண்டமிழ் முருகா வா" ஆகியவையும் சிறப்பான படைப்புகள்.

"மலர் மங்கை" என்ற கவிதையை சிங்கப்பூர் ஜெக சுப்பிர மணியன் தமிழ்நேசன் 7-11-82 இதழில் எழுதியிருந்தார். சிங்கப்பூர்ப் பாடகர் எஸ். எம். காஜா எழுதிய "தூங்காத துறை முகம் சிங்கப்பூர்" என்ற பாடல் இசை நாடாவழி சிங்கப்பூர் தேசிய நாள் அன்று வெளிவந்தது.

**கட்டுரைகள்**

கட்டுரைகளில் "ஒரு சொல் கேளீர்" என்ற தொடரை தி. சு. மோகனம், தமிழின் சொல் வளமையைக் காட்டும் விதத்தில் எழுதினார். இது வானொலியில் இடம் பெற்றதாகும்.

கட்டுரையாளர் எஸ். எஸ். சர்மா கொழும்பில் நடைபெற்ற "உலக இந்து மாநாட்டு" சிறப்பு மலரில் "சிங்கப்பூரில் சீர் பெறும் ஆலயங்கள்" என்ற தலைப்பில் சிங்கப்பூரிலுள்ள ஆலயங் களைப் பற்றி எழுதிய கட்டுரை வெளிவந்தது.

கொழும்பு இந்து மாநாட்டில் இவர் படித்த ஆய்வுக் கட்டுரை "தென் கிழக்காசியாவில் இந்து சமய வளர்ச்சி." இது தொடர்பான கட்டுரைத் தொடர் இலங்கை "தினகரன்" வார மஞ்சரியில் 10 வாரங்கள் வெளிவந்ததும் குறிப்பிடத் தக்கது.

நாட்டு நிலை, மக்கள் நிலை, அறிவியல் வளர்ச்சி, வரலாற்றுச் சிறப்புகள் மற்றும் பல துறைகளைப் பற்றியும் கட்டுரைகள், ஆய்வுகள் எழுதுவோரைக் காண முடியவில்லை. சிறுகதைகள், கவிதைகள் இடம்பெறும் அளவுக்குக் கட்டுரைகள் இதழ்களில் வருவதில்லை. கவிதை அல்லது கதை எழுதுவது மட்டுமே இலக்கியம் என்ற மனப்பாங்கு இளம் எழுத்தாளர் களிடையே வளர்ந்துள்ளது. அது மாறவேண்டும். அப்போது தான் நாட்டு நடப்பைச் சித்திரிக்கும் கட்டுரைப் படைப்புகளை நாம் எதிர்பார்க்கலாம். கட்டுரை வழிதான் அநேக தகவல்களை நாம் அறிந்துகொள்ள முடியும்.

## நூல் வெளியீடுகள்

மறைந்த தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களின் சிறப்பைக் கூறும் நூல் "கவிக்குலம் போற்றும் தமிழவேள்." சிங்கைப் பாவலர் 30 பேர் இயற்றிய பாடல்கள் இந்த நூலில் இடம்பெற்றிருந்தன.

மெ. சிதம்பரம், அ. முருகையன், ந. பழநிவேலு, சிங்கை முகிலன், சொ. ஐ. துரை, வீ இக்குவனம், முத்தமிழன், க து.மு. இக்பால், திருமதி பார்வதி பூபாலன், சி. காவேரிநாதன் போன்றோரின் கவிதைகள் இந்த நூலில் இடம்பெற்றுள்ளன.

"மனங் கவரும் தமிழமுதக் கிண்ணம்" என்ற கவிதையால் (முரசு 9-5-82) கவிஞர் ஐ. உலகநாதன் இந்த வெளியீட்டைப் பாராட்டியுள்ளார். "நன்னெறிப் பயிரீடு" என்ற நூலை சிங்கப்பூர் கடையநல்லூர் முஸ்லிம் லீக் வெளியிட்டது.

கட்டுரையாளர் எஸ்.எஸ். சர்மா எழுதி வெளியிட்டிருந்த நூல் "ஈழத்தில் இனிய நாட்கள்." 158 பக்கங்கள் கொண்ட இந்தப் பயண நூலின் விலை சிங்கப்பூர் வெள்ளி ஆறு கி. வா. ஜகந்நாதன், சிவசங்கரி, இந்துமதி, இலங்கை ஜி. லட்சுமண ஐயர் ஆகியோரின் வாழ்த்துச் செய்திகள் இந்நூலில் இடம் பெற் றுள்ளன. பயணக் காட்சிப் படங்களும் இந்த நூலில் அழகுற அமைந்துள்ளன.

உரை

தமிழ் மொழிப்பண்பாட்டுக்கழகம் 11-9-82-இல் தமிழ் மக்களிடையே வாசிப்புப் பழக்கத்தை வளர்ப்பதற்காக ''தமிழ் இலக்கிய மாலை'' என்ற நிகழ்ச்சியை நடத்தியது.

''தமிழ் இலக்கியம் சில சுவையான அம்சங்கள்'' என்பது பற்றி புலவர் மாமணி இரத்தினம் செட்டியார் சிறப்பான உரையாற்றினார். ''பாரதியார்'' பற்றி கவிஞர் பரணனும், ''பாரதிதாசன்'' பற்றி கவிஞர் முத்தமிழனும், ''கண்ணதாசன்'' பற்றி அமலதாசனும், ''தமிழ் இலக்கியம் தம்மை எவ்வாறு ஈர்த்தது'' என்பது பற்றி மணிவண்ணனும் உரையாற்றினர். பேராசிரியர் ஜெயகுமாரின் சிறப்புரையும் இடம்பெற்றது. திருமதி சங்கரி ராமனுஜம் ''சக்தியின் பெருமை'' பற்றி 23-10-82-இல் ஜுரோங் முருகன் கோயிலில் சிறப்புரையாற்றினார்.

தமிழரின் பாரம்பரிய விளையாட்டு, இசை,கலை, பொருட்காட்சிகளுடன் ''இந்தியக்கலைவிழா'' ஏப்ரல் 13முதல் 17 வரை நடைபெற்றது. 24-9-82முதல் மூன்று நாட்களுக்கு நடைபெற்ற திருமுறை மாநாட்டில் பல தமிழறிஞரின் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

நாடகம்

சிங்கப்பூரில் மேடை நாடகக் கலை இன்னும் ஊக்க மூட்டுவதாக உள்ளது.

சிங்கப்பூர்த்தமிழர் இயக்கத்தின் படைப்பாக''மாசற்றவள்'' என்ற நாடகம் அரங்கேறியது. எஸ்.வி.நாதன் கதை வசனம் எழுதி இயக்கிய இந்த நாடகத்தில் சுந்தரம், எஸ். ஸ்ரீதேவி (கட்டுரையாளரின் சகோதரி), கிருஷ்ணசாமி, பாலன், ஆரூர் சபாபதி, கன்னிகா ஆகியோர் நடித்திருந்தனர். இந்த நாடக வசூல் உலகத்தமிழாராய்ச்சி மாநாட்டு நிதிக்கு வழங்கப்பட்டது.

கட்டுரையாளர் எஸ். எஸ். சர்மா திருமுறை மாநாட்டை ஒட்டி எழுதி இயக்கிய ''அப்பரடிகள்'' நாடகத்தில் எஸ். தணிகாசலம், எஸ். சதீஷ்குமார், எஸ். நாகஜோதி, என். வைத்தீஸ்வரன் ஆகியோர் நடித்திருந்தனர்.

கட்டுரையாளர் சர்மா எழுதி இயக்கி அரங்கேற்றிய மற்றொரு நாடகம் ''மாப்பிள்ளை வந்தாரு''. 17, 18-9-82 ஆகிய தேதிகளில் அரங்கேறிய இந்த நாடகம், தேசிய நாடக விழாவை ஒட்டி நடத்தப்பட்டது. முற்றிலும் புதியவரே இதில் நடித்தனர்.

சிங்கப்பூர் இந்தியக் கலைஞர் சங்கத்தின் படைப்பாக 28-9-82-இல் "நீரில் பூத்த நெருப்பு" என்ற நாடகம் அரங் கேறியது. இதன் கதை வசனத்தை எழுதியிருந்தார் ஆர். நாராயணசாமி. இதுவும் தேசிய நாடக விழாவில் இடம் பெற்றதாகும்.

**உலகத் தமிழாராய்ச்சி மாநாடு**

சிங்கப்பூரில் ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை நடத்தவேண்டும் என்ற திட்டம் 1982-இல் உருவானது. சிங்கப்பூர் தமிழர் இயக்கம், சிங்கப்பூரிலுள்ள தமிழர் அமைப்பு களின் பிரமுகரை அழைத்து வழிகாட்டிக் குழு ஒன்றை அமைத்தது. 1983-இல் ஆறாவது அனைத்துலக தமிழாராய்ச்சி மாநாட்டை நடத்துவது என முடிவு எடுக்கப்பட்டது.

இந்த மாநாட்டு ஏற்பாட்டுக் குழுவுக்குத் தேர்வு செய்யப் பட்டோர் வருமாறு:

தலைவர்: எஸ். எம். வாசகர். துணைத்தலைவர்கள்: டி. ராமசாமி, எஸ். ஐ. துரை, எஸ். எஸ். சர்மா, டி. பாவாடை சாமி, ஜாபர் மைதீன், சி. நடேசன், கே. துரை, கே. டி. சாமு வேல், வி. சண்முகம் செட்டியார். இணைச் செயலாளர்கள்: மா. சி. வீரப்பன், டி. சிவானந்தன். துணைச் செயலாளர்கள், முத்தமிழன், முகமது இக்பால், பி.பி. காந்தம். பொருளாளர்: எம். சின்னப்பு ராஜா, துணைப் பொருளாளர்: எம். மொகிதீன் பிச்சை. மற்றும் 16செயற்குழு உறுப்பினர்களும் தேர்வு செய்யப் பட்டனர். பல துணைக் குழுக்களும் அமைந்தன.

ஓராண்டாக இந்தக் குழுவினர் பல கூட்டங்களை நடத்தி முனைப்பாகச் செயல்பட்டனர். உலகமுழுவதுமுள்ள பல தமிழறிஞர்களிடமிருந்து ஆய்வுக் கட்டுரைகள் வந்தன. சிறப்பு மலருக்கும் அநேக கட்டுரைகள் வந்தன. ஆயினும் மாநாட்டை நடத்துவதற்குத் திட்டவட்டமான நாளை இன்னும் ஏற்பாட்டுக் குழுவினரால் முடிவு செய்ய முடியவில்லை.

நாடெங்குமுள்ள தமிழறிஞர்களும், பொதுமக்களும் ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு சிங்கப்பூரில் நடைபெறும் என ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். ஆனால் இந்தக் கட்டுரை அச்சுக்குப் போகும்வரை இந்த மாநாட்டைச் சிங்கப்பூரில் கூட்டுவது பற்றி இன்னும் எந்த முடிவும் எடுக்கப்படவில்லை.

தமிழரிடையே இயல்பாக இருந்து வரும் கருத்து வேற்றுமையும், பூசல்களும்இந்த மாநாட்டை நடத்தமுட்டுப்பாடாகஇருந்து வருகிறது. சிங்கப்பூருக்கே தனித்து அமைந்துள்ள அரசியல் சூழல் காரணமாக அரசினர் சார்ந்தோரின் ஆசியின்றி, ஆதரவின்றி நடத்த ஏற்பாட்டுக் குழுவினர் விழையவில்லை. எனவே இந்த உலகத் தமிழாராய்ச்சி மாநாடு சிங்கப்பூரில் நடைபெறுமா என்பது இன்னும் ஐயப்பாடாகவே உள்ளது.

**கலைத்துறை**

கலைத்துறையை எடுத்துக்கொண்டால் தேசிய நாடக விழாவுடன் தேசியநடன விழாவையும் கலாச்சார அமைச்சு நடத்தியது. 20-3-82 முதல் 24-3 82 வரை நடைபெற்ற இந்த நடன விழாவில் சாந்தா பாஸ்கரின் "சாகுந்தலம்", "மீரா கனவு," விஜயலட்சுமி கிருஷ்ணசாமியின் "மலைவளம்," பி ராஜ்யஸ்ரீ முரளிதரனின் தில்லானா, தாண்டவம், ஜமுனா ரங்கனின் "நாட்டியாஞ்சலி," நீலா சத்யலிங்கத்தின் "சிவசக்தி," பிரபாராவின் சிங்கப்பூர் வரலாறான "ராடின் மாஸ்" ஆகிய நாட்டிய இசை நாடகங்கள் நடைபெற்றன.

சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்தின் இந்தியப் பிரிவினர் "கலைத் திறன் 82" என்ற பாட்டுத்திறன் போட்டியை நடத்தி இளம் பாடகர்களைத் தேர்வு செய்தனர். இந்த ஒலிபரப்புக் கழகத்தினர் "சிலப்பதிகாரம்" நாட்டிய நாடகத்தையும் மேடையில் நடத்தினார்கள்.

கலாமந்திர் என்ற அமைப்பு மிகப் பெரிய அளவில் தீபாவளி நிகழ்ச்சியைப் படைத்தனர். இதில் தமிழ்நாடு தண்டாயுதபாணிப் பிள்ளை மாணவி குமாரி சூரியகலா படைத்த தியாகராயர் கீர்த்தனைக்கான நாட்டிய நாடகம் சிறப்பாக இருந்தது. "மலர்ந்த 25" என்றொரு தரமான மேடை நிகழ்ச்சியைத் தமிழ் இளைஞர் மன்றம் 6-3-82-இல் நடத்தியது. "கிருஷ்ண லீலா" என்ற நாட்டிய நாடகமும் நடைபெற்றது.

1982-இல் சிங்கப்பூரில் இயல், இசை, நாடகம், கதை, கவிதை, கட்டுரை, உரை, கல்வித்துறை, பத்திரிகைத் துறை எனப் பல் வகையிலும் தமிழ் வளர்ச்சி கண்டுள்ளது. இந்த வளர்ச்சி தடைப்படாது தொடர ஒவ்வொருவரும் முனைந்து பாடுபட வேண்டும்!

# 25. மலேசியாவில் தமிழ்

—இரா. தண்டாயுதம்

நூல்களும், இதழ்களும், சிறுகதை—கட்டுரைத் திரட்டுகளும் எப்பொழுதும் போல் இவ்வாண்டும் மலேசியத் தமிழ் வளத்திற்குச் சான்று பகர்கின்றன. பாரதி நூற்றாண்டு விழா, மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை, 'கவிதைக் களத்'தின் கவியரங்கம் எனப் பிற நிலைகளிலும் வெளியீடுகளும் இலக்கியப் பணிகளும் நிகழ்ந்து வளமான இலக்கிய இயக்க ஆண்டைத் தருகின்றன.

மலேசியாவில் இவ்வாண்டு வெளிவந்த நாளிதழ்கள் மூன்று. 'தமிழ்நேசன்', 'தினமணி', 'தமிழ்' ஓசை ஆகியவையே அவை. 'வானம்பாடி' என்ற வார இதழும், 'புதிய சமுதாயம்', 'ஒளி விளக்கு', 'புதிய ஒளி' ஆகிய திங்கள் இதழ்களும் இவ்வாண்டில் வெளிவந்துள்ளன. திங்கள் இதழ்களில் பின்னவை இரண்டும் சமயம் சார்ந்தவை.

மலேசியத் தமிழ் நாளிதழ்களின் ஞாயிறு பதிப்புக்களையே பெரும்பாலும் நம்பியிருக்கும் மலேசியத் தமிழ் இலக்கியம், இவ்வாண்டிலும் மாற்றம் எதுவும் பெற்றிடவில்லை. ஒவ்வொரு மாதமும் சராசரியாக முப்பது சிறுகதைகள் இவ்விதழ்களில் வெளிவந்துள்ளன. கவிதைகள் என்று பார்க்கும்போது, ஒவ்வொரு மாதமும் சராசரியாக அறுபது கவிதைகள் வெளிவந்துள்ளன.

இவ்வாண்டு மலேசியாவில் வெளிவந்த தமிழ் நூல்களில் ஏழு நூல்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. அவற்றில் இரு நூல்கள் சிறுகதைத் தொகுதிகள்; இரண்டு கட்டுரை நூல்கள்; இரு நூல்கள் பாரதியைப் பற்றியவை; மற்றொன்று, மலேசிய இந்தியக் காங்கிரஸ் தேசியத் தலைவரும், பொதுப்பணித்துறை அமைச்சருமான டத்தோ சாமிவேலுவைப் பற்றிய நூல்.

## சிறுகதைத் தொகுதிகள்

இவ்வாண்டு வெளிவந்த இரு சிறுகதைத் தொகுதிகளில் முதலாவது 'சத்து ரிங்கிட்' இரண்டாவது 'பாச அலைகள்'. இரண்டையும் வெளியிட்ட ஆசிரியர் பாரி. இப் புனைபெயரில் எழுதும் இராம. வீரசிங்கம், மலேசியத் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். பல ஆண்டுகளாகச் சிறுகதைகளைப் படைத்து வரும் இவர், தம்முடைய பல கதைகளுக்குப் பரிசையும் பெற்றுள்ளார். பல ஆண்டுகள் எழுதி, மலேசியத் தமிழ் எழுத்துலகில் நன்கு அறிமுகமானவர் ஆனாலும் முதன் முதலாக இப்போது தான் இவருடைய கதைகள் நூலுருவம் பெறுகின்றன.

பத்திரிகைகளைச் சார்ந்து வளரும் இலக்கியம் பொதுவாகப் பொழுது போக்கையே நோக்கமாகக் கொண்டிருப்பது வழக்கம். ஆனால் மலேசியத் தமிழிலக்கியத்தைப் பொறுத்தமட்டில் இதற்கு நேர்மாறான வழக்கமே வழக்கத்தில் இருந்திருக்கிறது. ''படிக்கும் நேரத்தில் மட்டும் இன்புறுத்தும் வெறும் கலைச்சுவைப் படைப்புக்களை விடக் காலங்காலமும் நின்று விளங்கிப் பயனூட்டக் கூடிய கருத்துப் படைப்புக்களே இன்று தேவை. நலிந்த சமுதாயத்தின் நாடியைப் பிடித்துப் பார்த்து, அந்தச் சமுதாயத்தின் நரம்புகளில் நல்லுணர்வுகளை ஏற்றி, விழிப்படையச் செய்து, சிந்தனை வளர்ச்சியை உண்டாக்கும் படைப்புக்களே என்றும் வெற்றி பெறுகின்றன. இன்று உலகில் நிலைத்து விளங்கும் இலக்கியங்கள் அனைத்தும் அந்த ரகத்தவை தாம்'' எனப் 'பாரியின் கதைகளில் சமுதாய நோக்கு' என்ற ஆய்வுரையில் சமூகக் கலைமணி சா. ஆ. அன்பானந்தன் குறிப்பிடுகிறார். இது, மலேசியத் தமிழ்ப் படைப்புக்கள் அனைத்திற்குமே பொதுவாகப் பொருந்தக் கூடிய ஒன்று. எதைச் சொன்னாலும் அல்லது எதைச் சிந்தித்தாலும் அதில் சமுதாய நோக்கு இருக்க வேண்டும் என இங்குள்ள எழுத்தாளர் எப்போதுமே வற்புறுத்துவர். அவ்வாறு வற்புறுத்துபவரில் இத் தொகுப்பின் ஆசிரியரும் குறிப்பிடத் தக்க ஒருவர். எனவே இக்கதைகளின் அடிப்படையாகச் சமுதாய உணர்வே விளங்குகிறது எனத் துணிந்து கூறலாம்.

மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் பெரும்பகுதி தோட்டப் புறத்திலேயே தன்னுடைய தலைவிதியை நிர்ணயித்துக் கொண்டுள்ளது. அந்தத் தோட்டப் புறத்திலேயே பிறந்து வளர்ந்தவர் பாரி. அதனால், தாம் பிறந்து வளர்ந்த தோட்டப்புறங்களையே தம் கதைகளின் பின்னணியாக்கி, அங்கு நிலவும்

பிரச்சினைகளையே தம் கதைகளின் கருப்பொருள்களாக்கியுள்ளார் அவர். தோட்டப்புற வாழ்க்கை, அதன் கல்விமுறை, குடும்ப அமைப்பு முதலிய பலவும் இவருடைய கதைகளில் சிறப்பாக வெளிப்பட்டுள்ளன.

**'சத்து ரிங்கிட்'**

பாரியின் முதல் சிறுகதைத் தொகுப்பான இதில் பத்துச் சிறுகதைகள் உள்ளன. சத்து ரிங்கிட், செவலை, நெஞ்ச அலைகள், தமிழாசிரியர், சாலா, மனத்தின் பின்னங்கள், அம்மை முத்துக்கள், ஒரு புளியமரம் சாய்ந்து விட்டது, சாதாரண மனிதன் என்பன அக்கதைகளின் தலைப்புக்கள்.

இத்தொகுதியின் முதல் கதையாகவும், நூலின் பெயராகவும் அமைந்துள்ள 'சத்து ரிங்கிட்' என்பதற்கு 'ஒரு வெள்ளி' என்பது பொருள். மலேசிய நாணயமான ரிங்கிட் என்பதையே தமிழர் வெள்ளி எனக் குறிக்கின்றனர். ஒரேயொரு வெள்ளியை வைத்துக்கொண்டு, இந்நாட்டில் வாழும் மலாய்க்காரர், சீனர், இந்தியர் ஆகிய மூவினத்தாரின் மனப்போக்கையும் ஆசிரியர் இக்கதையில் மிகச் சிறப்பாகக் காட்டிவிடுகிறார்.

கதை ஒரு தோட்டப்புறத்தில் நிகழ்கிறது. கதை நிகழும் காலம் ஒரு மணி நேரத்திற்கும் குறைவுதான். காலையில் மகன் பள்ளிக்கூடம் போகாததைக் கண்ட ஆயம்மாள் கல்யாணி, "என்னப்பா பொழுது விடிஞ்சிடிச்சே! பஸ் வந்துடுமே! பள்ளிக்கூடம் போகலையா?" எனப் பதட்டத்துடன் கேட்கிறாள். "இன்னிக்கு தேதி ஒண்ணும்மா! நேத்தோட பஸ் பாஸ் முடிஞ்சிடிச்சு. காசு கொடுத்துத்தான் போகணும். உன்கிட்ட தான் காசு இல்லையே" என்கிறான் மகன்.

தன் மகன் எப்படியும் படித்து முன்னேறி விட வேண்டும் என்ற வேகத்தில் அவனைக் கோலாலம்பூர் அனுப்பி படிக்க வைககிறாள் கல்யாணி. இது தன் தகுதிக்கு மிக மிக மீறிய செயல் என்று அவளுக்கு நன்கு தெரியும். எனினும் கல்வி ஒன்றுதான் தன் மகனின் எதிர்கால வாழ்க்கையைச் சிறக்க வைக்க முடியும் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். எனவேதான் தன்னை வருத்திக் கொண்டாவது அவனைப் படிக்க வைக்க முனைகிறாள்.

பஸ்ஸில் போக மகன் காசில்லை என்றதும், தோழி கமலத்தின் வீட்டிற்குச் சென்று ஒரு வெள்ளி கடன் கேட்கிறாள். "ஆயா, உனக்கு ஏன் இந்தக் கஷ்டம்? ஒனக்குக் கிடைக்கிற

அம்பது அறுபது வெள்ளியில உம் புள்ளய கோலாலம்பூருக்கு எத்தனை காலத்துக்குத்தான் படிக்க வைக்கப் போறே? அப்படி இந்தத் தோட்டத்துல எதுதான் ஒழுங்கா படிச்சி வாத்தியாராகி கிராணியா வந்து வேலை பார்க்குதுங்க? உன் புள்ள மட்டும் பி. ஏ. படிச்சி உத்தியோகம் பார்க்கப் போறானா? பேசாம போயி நம்ம ஐயா கிட்டச் சொல்லித் தோட்டத்துல ஏதாவது ஒரு வேலை வாங்கிக் கொடு'' என்பதுதான் கமலத்தின் பதில்.

கல்யாணி, சோர்வுறாமல் இபுராஹீம் வீட்டிற்குப் போகிறாள். ''ஒருநாள்தானே! வீட்டில் இருந்துவிட்டுப் போகட்டுமே!" என்கிறார் அவர். அடுத்து ஒரு சீனர் வீட்டிற்குப் போய்க் கேட்கிறாள். அவர் உடனே கடன் கொடுத்து உதவுகிறார்.

கதையின் மையப் பொருள் ஒரு வெள்ளி என்றாலும், அதனைச் சுற்றி அவர் பின்னியுள்ள மூன்று சம்பவங்கள் கதைக்கு ஓர் அசாதாரணமான அழுத்தத்தைத் தந்து விடுகின்றன. இவ்வழுத்தமே 'தமிழ்நேச'னின் பவுன் பரிசை இக் கதைக்குப் பெற்றுத் தந்தது.

இதனை அடுத்து இக் கதைகளில் குறிப்பிடத்தக்க கதை 'நெஞ்ச அலைகள்'. தோட்டப்புறப் பொருளாதார—சமூகச் சீர் கேடுகளுக்குப் பெருங்காரணமாய் இருக்கும் 'சம்சு'க் குடியை இக் கதையில் ஆசிரியர் காட்டுகிறார். இந்நிலை மாறித் தோட்டப் புறங்கள் முன்னேற வேண்டுமானால், தோட்ட நிர்வாகங்கள் மேற்கொள்ள வேண்டிய செயல் திட்டங்களையும் இக்கதையில் அவர் கூறுகிறார். கட்டாயப் பாலர் பள்ளி, ஆரம்பப் பள்ளி, இடைநிலைப்பள்ளி போக்குவரத்து வசதி, சீருடை, விளையாட்டுப் பூங்கா, நூலகம், இரவுப் பள்ளி, விளையாட்டுத்திடல், மருத்துவ மனை, கூட்டுறவுப் பண்டகசாலை, சிக்கனக் கடனுதவி சங்கம், சுகாதார வசதிகள், வசதியுள்ள வீடுகள், சொந்தத் தொழில் செய்ய வசதி, வேளாண்மை செய்ய ஏற்பாடு செய்தல் ஆகியவை அவற்றுள் சில.

தோட்டப்புறத் தமிழ்ப் பள்ளிகளில் பணியாற்றும் தமிழ் ஆசிரியர் நிலையைக் காட்டும் கதை 'தமிழாசிரியர்'. ''காற்றடித்தால் கடகட என ஆடும் கட்டிடம்...கூரைத் தகரங்கள் தாளம் போடும். நான்கு மூலைகளில் இருந்த தூண்களின் அடிப்பாகம் அப்படியே அற்றுப் போய் கரையானின் வசிப்பிடமாயிருந்தன" என வரும் தோட்டப்புறப் பள்ளி வருணனையே நிலையை உணர்த்தப் போதுமானது.

இத்தொகுதியின் பிற கதைகள் தனி மனிதப் பிரச்சினைகளை மையமாகக் கொண்டிருந்தாலும், அவையும் ஏதோ ஒரு வகையில் சமுதாயப் போக்குகளையே உணர்த்துகின்றன.

'பாச அலைகள்'

பாரியின் இரண்டாவது கதைத் தொகுப்பான இதில் பாச அலைகள், ஒற்றையடிப்பாதை, எந்தப் பள்ளிக்கூடம்?, சத்தியப் பரிசு, பவுன் பரிசு, செத்தியா, சமூகத்துக்காக, பயங்கரப் பேர் வழிகள் ஜாக்கிரதை, சாமிவெளியேறிவிட்டார் என்னும் ஒன்பது கதைகள் உள்ளன. முன் தொகுப்பைப்போல இதுவும் தோட்டப் புறப் பிரச்சினைகள் பலவற்றைக் காட்டும் தொகுப்பாகவே அமைகின்றது.

இதில் வரும் முதல் கதை, தோட்டப் புறங்களில் பிறந்து வளர்ந்தாலும் உயர்கல்வி பெற்று நகரங்களில் குடியேறும் பட்டதாரிகள் எப்படிச் சுயநலக்காரராக மாறிவிடுகின்றனர் எனக்காட்டும் ஒரு நல்ல கதை. தோட்டப்புறத்திலேயே பிறந்து வளர்ந்தும் தன் உழைப்பால் பட்டதாரியாகிக் கோலாலம்பூரில் வசிக்கும் தன் தம்பியைப் பார்க்கக் குழந்தைகளுடன் வருகிறாள் சண்பகம். தம்பியிடம் பாசத்தை மட்டுமே எதிர்பார்க்கும் அவள் அங்கு அலட்சியம், வெறுப்பு, புறக்கணிப்பு ஆகியவற்றையே சந்திக்கிறாள். மனம் பொறுக்காமல், தன் பாசத்தை இறுதியில் காட்டி அவள் தோட்டப்புறம் திரும்புவதே கதை.

அடுத்த கதையான 'ஒற்றையடிப் பாதை' ஓர் உருவகக் கதை மற்ற இனங்கள் முன்னேறுவதைக் கண்டு தானும் முன்னேற வேண்டும் என முயற்சி செய்யாமல், அவர்களைப் பற்றி எப்போதும் ஏதாவது பேசிக்கொண்டு ஒரே பாதையில் தனியாகப் போய்க்கொண்டிருக்கும் தமிழ்ச் சமுதாயத்தின் போக்கையே இதில் ஒற்றையடிப் பாதையாக ஆசிரியர் உருவகப் படுத்திக் காட்டியுள்ளார்.

ஒரே தோட்டத்திற்குப் பிழைக்க வந்த சீனன் படிப்படியாக முன்னேற, அவனைப்பார்த்து அங்கலாய்ப்பதையே வழக்கமாய்க் கொள்கிறான் களியன். ''அஞ்சு வருசத்துக்கு முந்தி அத்தாப்புக் குடிசை போட்டு அன்னாசிப் பழத்தையும் சிமிட்டாப் பழத்தையும் தொங்கப்போட்டு ஈ ஓட்டிக்கிட்டிருந்த பய இன்னைக்கு பெரிய சரக்குக் கடையாக்கட்டி யாவாரம் பண்ணுறான். பெரிய முதலாளியா வேற ஆய்ட்டான்'' என்றும், ''சும்மா பொறம் போக்கா கிடந்த கரட்டு நிலத்தக் கொத்தி சாயூர் (காய்கறி) போட்டுக்கிட்டிருந்த பயலுக்கு இப்ப வந்த வாழ்வு என்னடா

வாழ்வு? லோரி ரெண்ட வச்சுக்கிட்டு நாலு ஆள வச்சுக்கிட்டு சாயூர் யாவாரம் பண்றான். நாலு பண்டிக்கு மேல ஆச்சு. ஈத்த கோழின்னு வளர்த்து பணமாக்குறான். பத்தாததுக்கு இந்த எரி தண்ணிய (சும்சு) வேற வச்சி விக்கிறான்'' என்றும் அவன்பேசும் பேச்சுக்களில் ஒரு சமூகத்தின் ஊக்கமின்மையையே ஆசிரியர் காட்டி விடுகிறார்.

இங்குள்ள தமிழ்ச்சமுதாயம் எதிர்நோக்கும் மற்றொரு கல்விப் பிரச்னை 'எந்தப் பள்ளிக்கூடம்?' என்ற கதையில் அழகாகப் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது. இந்நாட்டுத் தேசிய மொழி மலாய். உலகமொழி ஆங்கிலம். தாய்மொழி தமிழ். இந்த அடிப்படையில் அமைந்த மலாய்ப் பள்ளியில் படிப்பதா? ஆங்கிலப் பள்ளியில் படிப்பதா? அல்லது தமிழ்ப் பள்ளியில் படிப்பதா? என்று சுப்பன் முன் எழும் கேள்விகளை இக் கதையில் ஆசிரியர் காட்டுகிறார்.

'செத்தியா' என்ற கதை தமிழ்ச் சமுதாயம் எதிர் நோக்கும் குடியுரிமைப் பிரச்சினையை மையமாகக் கொண்ட கதை. இந்த நாட்டிலே பிறந்து வளர்ந்து, வேறு வெளியுலகத் தையே அறியாத ஒரு தோட்டத்தொழிலாளி தன் அறியாமை யினால் குடியுரிமை பெறத்தவறி, நிரந்தரமாகத்தங்குவதற்குரிய சிவப்பு அடையாளக் கார்டைப் பெற்று, பல துன்பங்களுக் காளாகி, இறுதியில் நாட்டுப் பற்றின் காரணமாகவே உயிர்விடு வதை இக்கதை காட்டுகிறது.

இவ்வாறு பொருளாதாரம், கல்வி, குடிஉரிமை முதலிய பல்வேறு பிரச்சினைகளில் சிக்கித்தவிக்கும் தமிழ்ச்சமுதாயத்தை ஏமாற்றி, தம் வளர்ச்சிக்காக அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் சுயநலவாதிகளான அரசியல் பித்தலாட்டக் காரர்களைச் 'சமூகத்துக்காக' கதை இனம் காட்டுகிறது.

இவ்வாறு இவ்விரு தொகுதிகளிலுள்ள எல்லாக்கதைகளுமே நம்மைத் தோட்டப்புறத்திற்கு அழைத்துச் சென்று விடுகின்றன. கதைகளில் ஆங்காங்கு கருத்து முனைப்பு இருப்பினும், ஆசிரியரின் உள்ளத்தை உள்ளபடி உணர்வதற்கே அவை துணை செய்கின்றன.

## கட்டுரை நூல்கள்

இவ்வாண்டு வெளிவந்த கட்டுரை நூல்களில் மாசி அண்ணாமலையின் 'ஐந்தடித் தமிழர்கள்', இரா. இராமராவின் 'எது நாகரீகம்?' ஆகிய இரண்டும் குறிப்பிடத்தக்க நூல்கள்.

**ஐந்தடித் தமிழர்கள்**

மலேசியத் தமிழில் ஐந்தடி என்பது பாதையோரத்தில் உள்ள நடைமேடை (Platform)யைக் குறிக்கும். தங்களுடைய உழைப்பாலும் தியாகத்தாலும் இந்நாட்டின் பொருளாதார வளத்திற்கே வித்திட்ட தமிழினம் கல்வி, பொருளாதாரம், வாழ்க்கை நிலை முதலியவற்றில் பின்தங்கி, இந்நாட்டின் மற்றச் சமூகங்களின் ஏளனத்திற்கும் இகழ்ச்சிக்கும் ஆளாகிச் சிறுமைப் பட்டு நிற்பதை உணர்ச்சியோடு இந்நூலில் கண்டித்திருக்கிறார் ஆசிரியர்.

ரப்பர் இந்நாட்டில் பயிரிடப்பட்டது முதல் அதனோடு ஒன்றிவிட்ட இனம் தமிழினம். எனினும் அத்தமிழ் இனத்தார் தோட்டப்புறங்களில் எப்படி வாழ்கின்றனர்? "குடியிருக்கப் பன்றிக் கொட்டடிகள் போன்ற குடிசைகள். நால்வர் நடமாடு வதற்கே முடியாத அந்தக் குடிலில் சமையல், படுக்கை எல்லாம். வேறு எந்த விதமான சுகாதார வசதியுமற்றஅதில் உறங்குவதும், விடிந்ததும் விடியாததுமாகக் காலைக் கருக்கலிலே புறப்பட்டு வேலைக்குப் போவதும், இருட்டியதும் கொட்டடிக்குத் திரும்பிய ஆடுமாடுகளைப் போல் வந்து அடங்குவதுமான வாழ்க்கை. இந்த வகையான குடியிருப்பில் போதிய விளக்கு வெளிச்ச மின்றியும், இருப்பதை சமைத்துத் தின்று அப்படியே விழுந்து கிடக்கும் இச்சஞ்சிக் கூலித் தமிழனின் அந்தச் சிறிது நேர ஓய்வும் சண்டை சச்சரவுகளுடன் அக்கப் போருடன் இருளும் சூழ்ந்து விடுகிறது, அவர்களின் வாழ்க்கையைப் போல..." என அவர்கள் வாழ்க்கையைக் காட்டுகிறார் ஆசிரியர்.

தமிழினம் ஒன்றானாலும் அவர்களிடையே காணப்படும் பல்வேறு பிரிவுகளை அவர் இப்படிச் சுட்டிக் காட்டுகிறார்: "தமிழர்களிடையே எத்தனை வகையான தமிழர்கள் உண்டு? இங்கு நாம் தமிழரிடையேயுள்ள சாதிகளைக் குறிப்பிடவில்லை. பின் எந்த வகையான தமிழர்கள்? தமிழ் பேச மட்டும் தெரிந்த தமிழர், தமிழ் பேசத் தெரியாத ஆங்கிலத் தமிழர், கொஞ்சம் தமிழ் பேசும் தமிழர், தமிழ் தேவையற்ற ஒரு மொழி—தமிழால் எந்தப் பயனுமில்லை என்று கருதும் தமிழர், 'ஆமாலா, என்னலா ஜோ' என்று பேசும் தமிழர்..." இவர்களிடையே அறிவாளிகளே இல்லையா என்றொரு கேள்வி எழலாம். "தமிழர்களிடையே மிகவும் அதிகமான கல்விமான்கள், பட்ட தாரிகள், பொறியியல் வல்லுநர்கள், கணக்காயர்கள், வழக் கறிஞர்கள், மருத்துவர்கள், ஆராய்ச்சியாளர்கள், பொருளாதார வல்லுநர்கள், பேராசிரியர்கள், அரசியல் விற்பன்னர்கள், அரசு

அதிகாரிகள், வங்கித்தொழில் நிபுணர்கள், பெரும்பொருளீட்டும் வணிகப் பெருமகன்கள், குத்தகையாளர்கள் (கண்டிராக்டர்கள்), பெருநிலக் கிழார்கள், அச்சக உரிமையாளர்கள்—இப்படி எல்லாத் துறைகளிலும் ஏற்றம் பெற்றுள்ள மிகப் பெரிய மேதாவித் தமிழர்கள் இல்லாமல் இல்லை. ஆனால் இவர்களில் ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் தங்களுடைய அறிவை அல்லது இன உணர்வை இந்தத் தமிழர் சமுதாயத்திற்காக ஒரு சில மணி நேரங்களாவது ஒதுக்கியிருப்பார்களா?'' என அதற்குப் பதில் தருகிறார் ஆசிரியர்.

குடியுரிமை, கல்வி, பொருளாதாரம், தொழில்கள் முதலிய பல துறைகளில் தமிழினம் பின்தங்கி இருப்பதினையும்; கள்ள சம்சுக் குடியினால் அவ்வப்போது ஏற்பட்டு வரும் மரணங்களையும்; இனிச் செய்ய வேண்டியவற்றையும் இந்நூலில் ஆசிரியர் விவரித்துச் செல்கின்றார்.

**'எது நாகரீகம்?'**

தமிழில் இலக்கியக் கட்டுரைகள் பெருகி நின்றாலும் இன்றைய வாழ்க்கையமைப்பையும் போக்குகளையும் சுவையாக விளக்கும் கட்டுரைகள் அத்தி பூத்தாற் போலவே தோன்றுகின்றன. இந்நிலையில் அன்றாட வாழ்க்கைக்கு வேண்டும் சிறு சிறு செய்திகளையும் உள்ளடக்கி இக்கட்டுரை நூல் வெளி வந்துள்ளது.

இத்தொகுப்பில் நாகரீகம், வாழ்த்துக்கார்டு செய்யும் வசியம், தொலைபேசியில் பேசுவது எப்படி? நூல்நிலையத்தில் ஒழுங்கு, பஸ்சில் பயணஞ் செய்வோரே! கௌரவப் பிச்சைக் காரர்கள், அட்குக் கடைப் பழக்கம், விபத்து, கூட்டுச்சேரப் போகுமுன், வீட்டு வாடகை, திருமணம் செய்து கொள்ள சில ஆண்கள் அஞ்சுவதேன்? என்ற பத்துக் கட்டுரைகள் உள்ளன. செய்திகள் சிறியவை ஆனாலும் சுவையோடு சொல்லப் பட்டுள்ளன.

நாகரீகம் என்ற தலைப்பில் உடை நாகரீகம், வீட்டு நாகரீகம், மேசை நாகரீகம் ஆகியவற்றை ஆசிரியர் விளக்குகிறார். வீட்டை எப்படி வைத்துக்கொள்ள வேண்டும், ஒரு வீட்டிற்குள் எப்படி நுழைய வேண்டும், விருந்தினரை வரவேற்கும் முறை என்ன, சாப்பிடும்போது கைக்கொள்ள வேண்டிய பண்புகள் என்ன என இக்கட்டுரை விளக்குகிறது.

பல்வேறு சந்தர்ப்பங்களின்போது வாழ்த்து அட்டைகள் அனுப்புவதால் ஏற்படும் பயன்களை அடுத்த கட்டுரை விளக்கு

கிறது. வயதை நிர்ணயிக்கும் முறை, யாருக்கு யார் அனுப்ப வேண்டும், யார் முதலில் அனுப்புவது, எப்போது அனுப்ப வேண்டும் என்னும் தகவல்களையெல்லாம் இதில் ஆசிரியர் கூறியுள்ளார்.

தொலைபேசியில் பேசுவதே ஒரு கலைதான் என்பதைத் 'தொலைபேசியில் பேசுவது எப்படி?' என்ற கட்டுரை விளக்குகிறது.

நூல் நிலையத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும், நூல்களை இரவல் தந்து வாங்குவது பற்றியும் 'நூல்நிலையத்தில் ஒழுங்கு' கட்டுரையில் காணலாம்.

அன்றாடன் பேருந்துகளில் பயணம் செய்வோர் இலட்சக் கணக்காகப் பெருகிவிட்ட இந்நாளில் பயணம் செய்வோர், நடத்துனர், ஓட்டுநர் ஆகியோர் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் 'பஸ்சில் பயணம் செய்வோரே!' என அழைத்து அடுத்த கட்டுரை பேசுகிறது.

வெளியூர்களிலிருந்து வந்து பணத்தைக் கோட்டை விட்டதாகக் கூறி ஊர் திரும்பப் பணம் கேட்கும் கௌரவப் பிச்சைகள், கூட்டுப் பிடிப்பது எனத் தொடங்கி நடைபெறும் ஏமாற்றம், நகர்ப்புறங்களில் வீட்டு வாடகை என்ற பெயரால் நடைபெறும் கொள்ளை, திருமணம் பற்றிய ஆண்களின் கண்ணோட்டம் ஆகியவற்றைப் பிற கட்டுரைகள் விளக்குகின்றன.

## பாரதி நூற்றாண்டு விழா வெளியீடுகள்

தமிழ்க் கவிதையின் விடிவெள்ளியாக விளங்கிய பாரதியின் நூற்றாண்டு விழா இவ்வாண்டு பிப்ரவரி மாதம் மிகப் பெரிய அளவில் கலைவிழாவாகக் கொண்டாடப்பட்டது. ஒவ்வொரு தனி அமைப்பும் தனித்தனியாகக் கொண்டாடாமல் ஒன்று சேர்ந்து, மலேசிய இந்தியர் காங்கிரசின் கலாச்சாரப் பகுதியுடன் இணைந்து, மலேசிய மொழி-புத்தக நிறுவன மண்டபத்தில் கொண்டாடியது குறிப்பிடத் தக்கது. அப்போது மலாய் மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்ட பாரதியார் கவிதைகளால் ஆன ஒரு சிறு நூலை அமைச்சர் டத்தோ சாமி வேலு வெளியிட்டார். இதுவே பாரதியார் கவிதைகளின் முதல் மலாய் மொழியாக்க நூல்.

பெரியவர்க்காக மட்டும் அல்லாமல் குழந்தைகளுக்காகவும் பாடியவர் பாரதி. இதை நினைவு கூரும் வகையில் கூட்டரசுப் பிரதேச மலேசிய இந்தியர் காங்கிரசின் மகளிர் பகுதியினர்

டத்தோ சாமி வேலு தலைமையில் 'பாப்பா பாரதி' என்ற ஓர் அரிய நிகழ்ச்சியினைப் படைத்தனர். இது பெடாலிங் ஜெயாவில் உள்ள சமூக மண்டபத்தில் (Civic centre) ஆகஸ்டு 15-ஆம் நாள் அன்று நிகழ்ந்தது. இந்நிகழ்ச்சி முழுவதிலும் நூற்று ஐம்பதுக்கும் மேலான பள்ளிப் பிள்ளைகளே பங்கேற்றனர்.

பாரதி நூற்றாண்டு விழாவினை ஒட்டி இருநூல்களும் இங்கு வெளி வந்துள்ளன. கு. சோணைமுத்து எழுதிய 'பாரதி எனும் பேரருவி,' வீ.கு. சந்திரசேகரன் எழுதிய 'பாடிப் பறந்த குயில்' ஆகியவையே அவை.

**'பாரதி எனும் பேரருவி'**

இந்நூலில் பதினான்கு கட்டுரைகள் உள்ளன 'இருளுலகில் தமிழகம்' என்னும் முதல் கட்டுரை, பாரதி கால அரசியல், சமுதாய, மொழிச் சூழல்களை விளக்குகிறது. பிற கட்டுரைகள் அவரது வாழ்க்கையையும் தனித்தன்மைகளையும் விளக்குகின்றன. சுடரொளி, நூற்றாண்டு விழா, பொதுச் சொத்து, பாரதி கண்ட தேசிய குடும்பமும் கல்வியும், ஏற்றத்தாழ்வற்ற இந்துக்கள், வருங்காலக் கனவு, மாதர்களின் மறுமலர்ச்சி, பாரதியாரும் பாலகரும், பாரதி வகுத்த புதிய பாதை, பாரதியின் சொல்லாட்சி, விதவை மணம், மகாகவி பாரதியார், பாரதியாரும் பாண்டியத்தியமும் என்பன அக்கட்டுரைத் தலைப்புகள்.

**'பாடிப் பறந்த குயில்'**

பதினேழு கட்டுரைகள் உள்ள இந்நூல் பாரதியின் மொழிப் பற்று, நாட்டுப் பற்று, சுதந்திர தாகம், இறைப் பற்று, தத்துவ ஞானம், பெண் விடுதலை முதலிய பல்வேறு பொருட்களைப் பற்றிப் பேசுகிறது. கட்டுரைகள் சிறியவையாய் அமைந்திருந்தாலும், பாரதியைப் பற்றிய ஒரு பொதுவான அறிமுகத்தை இந்நூல் நன்கு செய்கிறது. பெருங்கவிஞன் பாரதிக்கு மலையகத் தமிழ்ச் சமுதாயத்தின் காணிக்கையாக இவை அமைகின்றன.

## தலைவர் பற்றிய நூல்

மலேசிய இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவரும் பொதுப் பணித் துறை அமைச்சருமான டத்தோ சாமிவேலு அவர்களைப் பற்றி சாதனைத் தலைவர் சாமிவேலு' என்றொரு நூல் இவ்வாண்டு வெளிவந்துள்ளது. இதனை எழுதி வெளியிட்டவர் வீ.கு சந்திரசேகரன். இந்நூல் டத்தோ சாமிவேலுவின் வாழ்க்கை வரலாறாக அமையாமல், அவர் பண்புகளை விளக்கும் போக்கிலேயே அமைந்துள்ளது.

## மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை வெளியீடுகள்

இந்நாட்டில் உள்ள ஐந்து பல்கலைக் கழகங்களில் தமிழ் மொழியும் இலக்கியமும் கற்பதற்காக உள்ள ஒரே பல்கலைக் கழகம் மலாயாப் பல்கலைக் கழகம். இப்பல்கலைக் கழகமே காலத்தாலும் மூத்தது. இங்கு பல்வேறு துறைகளிலும் பயிலும் தமிழ் மாணவர் தங்களுக்கென ஏற்படுத்திக்கொண்ட அமைப்பே தமிழ்ப் பேரவை. தமிழ்ப் பேரவை ஒவ்வோர் ஆண்டும் பல் வேறு செயல் திட்டங்களில் ஈடுபட்டு வருகின்றது. 'மாணவர் சமூக நலன் அணி' ஒவ்வோர் ஆண்டும் நீண்ட விடுமுறையில் பிற்போக்காக உள்ள சிலதோட்டப்புறங்களைத் தேர்ந்தெடுத்து, அங்கே சென்று அவர்களுடனேயே தங்கிப் பல அரிய பணிகளைச் செய்து வருகின்றது. இதுவல்லாமல் பல இலக்கிய நிகழ்ச்சிகளையும் அது அவ்வப்போது ஏற்பாடு செய்கின்றது. அதன் வெளியீடுகளாக இவ்வாண்டு ஓர் ஆண்டு இதழும், ஒரு சிறுகதைத் தொகுப்பும் வெளிவந்துள்ளன.

**'தமிழ்ஒளி'**

மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவையின் சிறந்த பணிகளில் ஒன்று, அதன் ஆண்டு வெளியீடான 'தமிழ் ஒளி'. இந்திய ஆய்வியல் துறை விரிவுரையாளர்களாலும், மாணவர்களாலும் எழுதப்படும் கட்டுரைகளைக் கொண்ட இவ்விதழ், மலேசியத்தமிழியல் துறையில் ஒரு குறிப்பிடத்தக்க சிறப்புவெளியீடாகும். மலேசியத் தமிழ்ச் சமூகத்தின் பல்வேறு நிலைகளைக் காட்டும் பல அரிய கட்டுரைகள் இவ்விதழில் எப்போதும் இருக்கும். இந்நாட்டுத் தேசிய மொழியான மலாய், ஆங்கிலம், தமிழ் ஆகிய மும்மொழிகளிலும் எழுதப்பட்ட கட்டுரைகளை ஒரு சேரத் தாங்கி வருவது இதன் தனிச் சிறப்பு.

'தமிழ் ஒளி'யின் பதின்மூன்றாவது வெளியீடாக வரும் இவ்வாண்டு இதழ், பாரதியார் நூற்றாண்டு விழாவையொட்டி அவருக்கே சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. இக்கட்டுரையாசிரியரின் 'மகாகவி பாரதியார்' என்ற கட்டுரையும் அவர் நினைவாக வெளியிடப்பட்டுள்ளது. சோ. ந. கந்தசாமியின் 'இந்து ஆலயங்கள்' இல. சதாசிவத்தின் 'மலேசியத் தமிழ்க் கவிதை உலகில் குழந்தைப் பாவலர்கள்', வே. சபாபதியின் 'திருவைந்தெழுத்தின் சிறப்பு', அ. சிவகுமாரின் 'சிலப...

கலை' ஆகியவை இவ்விதழில் தமிழில் காணப்படும் பிற கட்டுரைகள்.

பழைய மலாய் இலக்கியங்களில் காணப்படும் இந்தியக் கூறுகளைப் பற்றிய மலாய்மொழிக் கட்டுரை ஒன்று இவ்விதழில் உள்ளது. இந்திய ஆய்வியல் துறை விரிவுரையாளர் பழனியப்பன் இதனை எழுதியுள்ளார்.

பழைய மலாக்கா அரசாங்கத்திற்கும் விஜயநகர அரசாங்கத் திற்கும் இடையில் இருந்த உறவினை விளக்கும் பேராசிரியர் சிங்காரவேலுவின் கட்டுரை, நகர்ப்புற வேலை செய்யும் இந்திய வகுப்பினரிடையே காணப்படும் கணவன்—மனைவி உறவு பற்றிய சூசன் ஊர்ஜித்தின் கட்டுரை, ஜப்பானியர் ஆதிக்க காலத்தில் மலேசியத் தமிழ்ச் சிறுகதை பற்றிய சுப்பிரமணியத் தின் கட்டுரை, மலாயாத் தொழிற்சங்க இயக்கத்தில் இந்தியரின் பங்கு பற்றிய டானியலின் கட்டுரை, மலேசிய இந்தியர்களைப் பற்றிய ராஜகிருஷ்ணனின் கட்டுரை ஆகியவை ஆங்கிலத்தில் உள்ள கட்டுரைகளாகும். தமிழியல் ஆராய்ச்சியாளர்களுக்கு மிக மிகப் பயன்படும் இதழ் இது எனலாம்.

**'பேரவைக் கதைகள்'**

மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை தனது உறுப் பினர்க்குக் கடந்த சில ஆண்டுகளாக ஆண்டுதோறும் சிறுகதைப் போட்டியை நடத்திப் பரிசுகளைத் தந்து வருகிறது. இவ் வாண்டு போட்டி நடத்திப் பரிசு தருவதோடு நில்லாமல் அக் கதைகளைத் தொகுத்துப் 'பேரவைக் கதைகள்' என்ற ஒரு சிறுகதைத் தொகுப்பு நூலையும் அது வெளியிட்டுள்ளது. இத் தொகுப்பில் பத்துச் சிறுகதைகள் உள்ளன. இவை அனைத்தும் மாணவராலேயே எழுதப்பட்டவை.

இத்தொகுப்பின் முதல் கதை இல. சதாசிவத்தின் 'குழந்தை பிறந்தது'. பல முறையும் கருச் சிதைவினால் குழந்தைப் பேற்றை இழக்கும் தன் மனைவியை அமுதன் மிகக் கண்ணும் கருத்துமாகப் பார்த்து அந்த முறை ஒரு பெரிய மருத்துவரின் கீழ் ஒப்படைக்கிறான். அம்முறை கருச்சிதைவு ஏற்படுவதில்லை, ஆனால் குழந்தை இறந்து பிறக்கிறது. ஒரு தந்தையின் மன வுணர்வுகள் இக்கதையில் நன்கு காட்டப்பட்டுள்ளன.

பெற்றோரைத் தெய்வமாக வணங்கினாலும், தோட்டத் தில் கள்ளச் சம்சு காய்ச்சி விற்கும் தந்தையைக் காவலரிடம் பிடித்துக் கொடுக்கும் ஒரு மகனை வே. சபாபதியின் 'தெய்வம்'

கதை காட்டுகிறது. குடிகாரத் தந்தையினால் மகளின் திருமணமே நின்று போவதை அ. சிவகுமாரின் 'நாகு' கதையில் காணலாம். நாட்டிற்காக உயிர் துறந்த ஒரு போர்வீரனின் கதையே கே. பி. பாலாவின் 'இறுதி ஆசை'. மாணவர் தங்கள் உணர்வுகளையும் கற்பனையையும் வெளிப்படுத்த வாய்ப்பளிக்கும் இம் முயற்சி, தமிழ்ப் பேரவையின் சாதனைகளில் குறிப்பிடத்தக்கதாகும்.

## கோம்பாக் ஆறு கவியரங்கம்

தங்கள் தங்கள் நாட்டு ஆறுகளைப் பாடுவதில் எல்லாக் கவிஞருமே ஆர்வம் காட்டினாலும், தமிழ்க் கவிஞர் சங்க காலத்தில் இருந்தே இதில் தனி ஆர்வம் காட்டி வருகின்றனர். அம்முறையில் மலேசியத் தமிழ்க் கவிஞர் தங்கள் நாட்டு ஆறு ஒன்றைப் பற்றிக் கவிதை பாட முதன் முதலாக ஒரு கவியரங்கை இவ்வாண்டு நடத்தினர். கோலாலம்பூரில் கவிதை வளர்ச்சிக்காகவே தோன்றிப் பணிபுரியும் 'கவிதைக் களம்' என்ற அமைப்பின் ஆதரவில் இந்நிகழ்ச்சி ஆகஸ்டு 8-ஆம் தேதியன்று 'ரிஸ்டா' மண்டபத்தில் அமைச்சர் டத்தோ சாமிவேலு தலைமையில் சிறப்புற நடைபெற்றது.

தலைநகரில் ஓடும் கோம்பாக் ஆறே கவிதைப்பொருள். வி. கே சுப்பிரமணியம், காசிதாசன், டி. எஸ். பொன்னுசாமி, ஐ. இளவழகு, கரு.வேலுச்சாமி ஆகிய கவிஞர் கவிதை பாடினர்.

"ஆயிரத்தெண் ணூற்றைம்பத் தேழாம் ஆண்டில்
அரசாண்ட ராஜாஅப் துல்லா ஓர்நாள்
ஈயலம்பக் கிணறமைக்கச் சீன ரோடும்
எழிலான கிளாங் நதியை எதிர்த்துச் சென்று
வாயகன்ற கோம் பாக்கும் கிளாங்கும் கூடும்
வரிசைநதி சங்கமத்தில் இறங்க, சேற்று
நோயற்ற 'பங்காலான் லும்பூர்' என்று
தாயகத்தின் மாநகர்க்குப் புள்ளி வைத்தார்!
ஆறுகளின் சங்கமத்தால் ஈயம் கண்ட
அந்தஇடம் துறைமுகமாய் மாறிப் பின்பு
சேரிகளும் வீதிகளும தோன்ற 'ஆலோய்'
சீனருடன் வாணிபத்தால் உயர்ததி வைத்தான்!
தூரிகையில படடநிறம எண்ண மாகி,
துங்குஅதைத் தொடடதனால் வண்ண மாகி
நூறுவகைப் பெருமைகளைப் பெற்ற 'லும்பூர்'

நூலகமாய் நிற்பதுவும் கோம்பாக் ஆற்றால் !
இருநதிகள் இணைந்தயிடம் கோலா லம்பூர் !
இல்லையெனில் இப்பெரிய வரலா றில்லை !"

எனப் பாடும் டி. எஸ். பொன்னுசாமியின் கவிதை மூலம், கோலாலம்பூர் உருவான வரலாற்றையே அறிய முடிகிறது.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் முதலாவது தேசிய மாநாடு

மலேசியத் தமிழ் இலக்கியம் நூறாண்டு கால வரலாற்றை உடையது. இக்கால கட்டத்தில் எழுத்தாளர் தங்களுக்கென ஆங்காங்கு பல்வேறு அமைப்புக்களை ஏற்படுத்தினர். தேசீய அளவில் ஒரு மாநாடு கூட்டப்பட வேண்டும் என்ற சிந்தனை பல காலமாக அவரிடையே இருந்தாலும் அந்தச் சிந்தனை செய லுருவம் பெற்றது இவ்வாண்டில்தான். நாட்டில் உள்ள பல் வேறு எழுத்தாளர் அமைப்புக்களை ஒன்றுகூட்டி அமைக்கப் பட்ட 'மலேசியத் தமிழ் எழுத்தாளர் அமைப்புக்களின் பேரவை'யே இம் மாநாடு கூட்டப்படக் காரணமாய் அமை கின்றது.

இம் மாநாடு அக்டோபர் 30-31 தேதிகளில் ஈப்போவில் நடந்தது. நாடெங்கிலும் இருந்து வந்திருந்த சுமார் இருநூறு எழுத்தாளர் இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். இம் மாநாட்டினை யொட்டிச் சிறப்பு மலர் ஒன்றும் வெளியிடப் பட்டது. 'மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்கள்' என்ற மா. இராமையாவின் கட்டுரையும், 'வரலாற்றுக் கண்ணோட்டத் தில் சங்கமும் மாநாடுகளும் (1959 — 1982) என்ற சி. வேலு சாமியின் கட்டுரையும் இம்மலரில் உள்ளன.

பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், நெகிரி செம்பிலான் தமிழ் எழுத் தாளர் சங்கம், ஜோகூர் தமிழ் எழுத்தாளர் சங்கம், வடமலாயா தமிழ் எழுத்தாளர் சங்கம், கெடா எழுத்தாளர் - வாசகர் இயக்கம், செம்பிராங் பிறை எழுத்தாளர் - வாசகர் இயக்கம், சிலாங்கூர் - கூட்டரசுப் பிரதேச வாசகர் இயக்கம், தமிழ் இலக் கியக் கழகம், கவிதைக் களம், பகாங் மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆகிய அமைப்புக்கள் இம்மாநாட்டில் பங்கு பற்றிச் சிறப்புற நடத்தின.

# நாவல்

—தா. வே. வீராசாமி

எப்போதும் போல் நாவல் இலக்கியம் இவ்ஆண்டும் தன் பங்கை வழங்கியுள்ளது. சமுதாயமும், வாலாறும், ஈழத் தமிழனும் ஆழ்ந்த ஆய்வு நாவல்களுக்குக் கரு வழங்கிய போதும், வாசகரை நெறி பிறழப் பண்ணும் பாங்கின் படைப்புகளும் உள்ளமை வருந்தத்தக்கது. திரைப்படச் செல்வாக்கும், துப்பறிதலும், பாலுணர்வும் வேண்டாத விளைவு பயக்குமோ என அஞ்சவேண்டியுள்ளது. 26ஆசிரியரின் 28 படைப்புகள் இங்கு ஆயப்படுகின்றன.

இன்று தமிழில் வெளிவரும் இலக்கிய வடிவங்களில் நாவல் முதலிடம் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை. சற்றேறத்தாழ ஏழாயிரம் (7,000) பக்கங்களைப் படித்துப் பார்த்தபின் இக் கட்டுரையை எழுத முடிந்தது. இவ்வாண்டில் வெளிவந்த எல்லா நாவல்களையும் நான் படித்து முடித்து விடமுடியும் எனக்கூற முடியாது. 'உமி தேடிக் கைசலிக்கும்' வகையில் இத்துறைக்கு மேற்கொள்ள வேண்டிய உழைப்பு மிகுதி. எனினும் பல்வேறு வகையில் இத்துறையில் பல ஆசிரியர் ஆண்டுதோறும் தத்தம் படைப்புக்களை வெளியிடுகின்றனர். எனவே நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டினும் நாவல் என்ற இலக்கிய வகை தன்னைத் தானே நாளும் பெரிதாக்கிக் கொண்டே செல்கிறது. இந்நிலையில் வணிக நோக்கு இதன் வளர்ச்சியை வேறுபக்கம் திருப்பவும் செய்துள்ளது. அதன் விளைவு பல நாவல்கள் முட்புதர் போல முளைத்துள்ளன. அவற்றையே மிகுதியாகப் படிப்பவர் தொடக்கக் கல்விநிலை பெற்றவராவர். இது வேண்டத்தகாத விளைவு. இதனைக் காலமே மாற்றியாக வேண்டும்.

I

குறிப்பாகத் திரைப்படங்கள் தம்முடைய அளவுகடந்த செல்வாக்கைத் தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரப்பிக் கொண்டுள்ளது. அதன் தாக்கத்தை இன்றைய தமிழ் நாவலிலும்

பார்க்க முடிகிறது. இது தனி முயற்சியாகக் கூட இல்லாமல் ஒருவர் கதையை ஆங்கிலத்தில் சொல்ல மற்றவர் அதைத் தமிழில் எழுதியுள்ள நிலை ஏற்பட்டது. திரைப்படக்கலை நுணுக்கமெல்லாம் மீறிர அத்துறைத் திறன் கலக்கப் புதியதோர் நாவல் இலக்கியம் வெளிவந்திருப்பின் அது எதிர்கால வளர்ச் சிக்குப் பயன்படும் வகையில் அமைந்திருக்கும். மாறாகப் பாலியல் வாழ்வில் ஏமாறும் நிகழ்ச்சிகளைப் பலபடப் புனைந் திருப்பதே இதன் அமைப்பாகும். இத்தகைய படைப்புக்கள் நலன் தருவதற்கென அமையாமல் தொடக்ககாலப் படிப்பாளிகளின் உணர்வு நிலத்திற்கு வேண்டாத பயிரை விளைவிப்பனவாக உள்ளன.

இக்கால நகர்ச் சூழலில் பல மாடிக் கட்டிடங்கள் உருவாகி மக்களிடையே புறாக்கூட்டு வாழ்வைத் தோற்றுவித்து அதனால் தனிக்கூட்டு வாழ்க்கை நோக்கிற்கு ஒரு புதிய மாற்றம் தரும் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. இச்சூழலைப் பின்னணியாகக்கொண்டு தற்கொலை நடைபெறப் போகும் அச்ச உணர்வைத் தூண்டும் முயற்சி ஒரு நாவலில் அமைகிறது. கொலையும் பாலுணர்வும் கலக்கச் சமுதாயத்தில் எப்படி எப்படி ஆர்வத்தைத் தூண்டிக் கதையை வளர்த்துச் செல்ல முடியும் என்பதைக் காட்டும் பழைய முயற்சியில் புதிய சூழல் இணைக்கப் பெறுகிறது.

பொதுவாகக் கொலையை மையப்படுத்தும் முயற்சியில் கதைப் பின்னல் நல்ல வேலைப்பாட்டுடன் அமையும். யார் கொலை செய்வார் எதற்குச் செய்வார் எப்படிச் செய்வார் என்ற கேள்விகட்கு விடை கூறும் வகையில் கதையை மகளிர் விடுதிச் சூழல், விமானப் பெண்மணி வாழ்க்கைச் சூழல் போன்றவற்றைப் புதிதாகக் காட்டும்போது படிக்கும் ஆர்வம் புதிய வாழ்வை மனக்கண்ணால் பார்ப்பதில் நிறைவு பெறும். அதுபோனறே ஒரு பெண் தன் விருப்பிற்கிணங்காத ஆணைக் காலங் காலமாக எப்படிப் பழி தீர்த்துக் கொள்வாள் என்பதை யும், பெண் பழியைத் தன் பழியாகக் கொண்டு மனித நெஞ்சிரக் கத்தையும், உணர்வுக் கொந்தளிப்புடன் கொடுக்கும் ‘வேக நடை’ப் படைப்புக்கள் சில மணக்கின்றன.

முதற் காதலில் ஏமாந்து பின் மாற்றான் மனைவி ஆகிச் சந்தர்ப்பச் சூழ்நிலையில் பழைய காதல் உறவின் விளைவால் ஏற்படும் குடும்பச் சிக்கல், சதுரங்க ஆட்டமாக முன்னேற்றமும் தடையும் ஏற்படுவதை விளக்கும்போது பெண்மை உணர்வுகள் சிலிர்ப்பதைக் காட்டும் முயற்சி மென்மையாகச் செல்கிறது.

குடும்ப வாழ்வில் நிலை மாற்றங்கள் ஏற்படுவதை உருவக நிலையைத் தலைப்பிலேயே காட்டி அதன் அழகைத் துய்க்கு மாறு செல்கிறது ஒரு படைப்பு. புறக்கடமை அகக்கடமையை மிதித்துச் செல்லும்போது, நிலம் மாறும் பறவைபோல வாழ்வில் கால மாறுதல்களுக்கு உட்பட்டு பழமைத் தளை அறுபடும் பாங்கைச் சுட்ட முனைகிறது. இத்தகைய படைப்புகளில் கதை வளர்நிலையும், அழகிய நடையுமே வலிமையூட்டுவனவாகத் திகழ்கின்றன.

## II

வரலாற்று மாந்தரைக் கதை மாந்தராகக் கொண்டு பழங் கதைகளைச் சில புதிய எண்ணங்களுடன் படைத்தளிக்கும் முயற்சி காணப் பெறுகிறது. பாண்டியர்களில் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உடனுக்குடன் செயல் படும் செயலை விரிவாகக் காட்டும் முயற்சியில் துப்பறியும் கலைஞன் வடிவமே நம்முன் நிற்கும்.

புதிய சிந்தனைகள் வரலாற்றுப் பார்வையில் தோன்றா மலில்லை. சோழ மன்னன் இராசேந்திரன் கங்கை கொண்ட வனாகக் காணும் போக்கிற்கு இணையாக மற்றொரு பார்வையைச் செலுத்திப் பழைய நெறியைப் புது நெறியாகப் படைக்கும் முயற்சியும் எழுகிறது. தெய்வச் சிலை உடைப் பையே வாழ்க்கையாகக் கொண்ட கஜினியுடன் இராசேந்திர னைக் காணும்வாய்ப்பைஏற்படுத்தி அத்தகைய சிலைஉடைப்புச் செயல் தவறு என உணர்த்தும் புதிய அறிவைப் பாய்ச்சி மனித ஒற்றுமைக்கு வழி தேடும் நன்னோக்கைப் பரப்பும் பாங்கை வளர்த்துள்ளது. இது வரலாற்றுண்மையோடு முற்ற முழுக்கப் பொருந்துமா என்பது வேறு ஆய்வு. இருபெரும் வரலாற்றுப் பெரியோர்களை மனித நலத்திற்கெனக் காட்டும் கற்பனை வியப்பிற்குரியது.

வரலாற்று நாவல்கள் எழுதுவோரிடையே வரலாற்றுச் செய்திகளைச் சேகரித்து, அவற்றை முற்ற முழுக்கப் பயன்படுத் துவதுடன் அக்குறிப்புக்களின் முழு வடிவையும் பின்னிணைப் பாகத் தரவேண்டும் என்ற முயற்சியும் வளர்ந்துள்ளது. சான் றாகத் 'திப்பு சுல்தான்' என்ற வரலாற்று நாவல் இம்முயற்சியில் பெரிதும் ஈடுபட்டுள்ளது. இந்திய மன்னர்கள், அரசியல் பெரி யோர்கள், வெளிநாட்டுத் தளபதிகள் போன்ற கதை மாந்தர் களைக் கையாளும் சிறப்பு நன்குஅமைந்துள்ளது. புதிய கருத்தை

இக்காலத்திற்கேற்பப் படைக்க வேண்டும் என்ற ஆர்வமும் இதில் எழுகிறது. பலவாகச் சிதறிப் பகைவருக்கு அடிமையாகாமல் ஒன்றாகக் கூடி உயர்வு பெற வேண்டும் என்ற நோக்கில் திப்பு உருவாக்கப் பெறுகிறான். இப்பார்வை புதிது; காலத்திற்குரிய நற்கருத்தை ஊட்டுவது.

## III

எளிய முக்கோண நிலையிலிருந்து நாற்கோண நிலைக்குச் செல்லும் முயற்சி—காதல் உருவாகும் வாழ்வாக வளர்கிறது. இரு இணைகள், சூழலின்மாற்றத்தால் மாறிமாறி மணமக்கள் ஆகின்றனர். ஒருவர் நல்வாழ்வுக்கு மற்றொருவர் விட்டுக் கொடுக்கும் 'சாவு'க் கலை துணைபுரியும் வகையில், 'நீர் வழிப் படும்' நாவல் வாழ்வைச் சுட்டுவது ஒருவகைப் படைப்பு.

சாதிகளின் அடிப்படை, நில உடைமைப் பிடிப்புகள் என்பவை காதற் பயிரை எப்படி மாய்க்கின்றன என்பதை இதய உணர்வோடு தரும் முயற்சி எழுகிறது சில படைப்புக்களில். அத்துடன் அவ்வாற்றல்களை அழிக்க முயலும் முயற்சி, உறவு நிலையையும் கடக்கும் என்பதைச் சுட்டத் தவறவில்லை. பொது நலத்தொண்டு செய்ய முற்படுகையில் காதல் இடையீடு எத்தகைய துன்பத்தை உண்டாக்கும் என்பதை இணைக்கும்படி ஏசுவின் அறத்தையும் மார்க்சின் கொள்கையையும் ஆங்காங்கே தூவி இரண்டையும் கலக்கும் கலவை முயற்சியைச் சில படைப்பு கள் காட்டும். இது இக்கால வளர்ச்சியில் மதமும், பொருள் முதல் வாதமும் இடைப்பட்டு நிற்பதின் விளைவாகும். தனி ஒருவன் கொள்கைப் பிடிப்போடு வாழ நினைக்கும்போது சமூகச் சூழல்கள் எப்படித் தடையாகின்றன என்பதைக் குறிப்பாக உயிர் நலம் நாடும் மருத்துவத்துறையில் எவ்வாறு உள்ளது என்பதைக் காட்டும் முயற்சி ஓரளவு இங்கு வளர்ந்துள்ளது தெரி கிறது. மனித நலம் நாடாத வாழ்க்கை விலங்கு வாழ்க்கை என அத்தகைய இழிந்த வாழ்க்கையை வெறுத்தொதுக்கும் போக்கு வெளிப்படுகிறது. இத்தகைய மனித அன்பு ஆங்காங்கே சில படைப்புக்களில் அரும்பி நிற்கின்றன.

## IV

நேர்வழியில் சமூகச் சீர்திருத்தம் செய்யும் முயற்சி தமிழகத் தில் பெரியார் முயற்சியாக விளங்கியது. அதன் விளைவாகப் பிராமண அறிஞர்களிடையேயும் அத்தகைய உணர்வு எழுந்ததும் உண்டு. இந்நிலையில் சீர்திருத்தம், பழமை என்ற

இரண்டையும் எள்ளிநகையாடும் போக்கு 'சோ' வின் போக்காக வெளிவந்துள்ளது பார்ப்பனர் பின்பற்றும் பார்ப்பனீயம் சமூகத்திற்குத் தீங்கு பயக்கும் என்பதற்கு எதிராகப் பிராமணன் எங்கே? என்ற கேள்வியைக் கிளப்பி உண்மையான பிராமணனுக்கு உரிய பண்புகளோடு இன்று யாருமில்லை என்ற உண்மையை எள்ளல் உணர்வோடு காட்டச் சோவின் படைப்பு வெளி வந்துள்ளது. இரு நெறியாளரிடம் காணும் குறையைச் சுட்டிக்காட்டும் போக்கே தலை தூக்கி நிற்கிறது.

V

வெளிநாட்டிலிருந்து இங்குக் குடியேறியவர்கள் வாழ்க்கை மற்ற சூழ்நிலைத் தாக்கத்தால் எப்படி அமைகிறது என்பதைச் சில எழுத்தாளர்கள் காட்ட முயல்கின்றனர். அம்முயற்சியில் தனிமனித நலன்கள் வளர்க்கும் தாய்மை உணர்வே தலைதூக்கி நிற்கிறது. காதலில் தோல்வி, வாழ்வில் தோல்வி, உறவினரிடம் அன்பை எதிர்பார்த்து அந்நிலையிலும் தோல்வி காணும் பெண்ணுள்ளம், எவ்வகையிலும் ஒட்டுதலில்லாத மற்றவர்களிடம் அன்பைப்பெற்று வாழ நினைக்கும் போது சிதறிய கூடாக ஏமாறும் தனிமனித வாழ்வைப் பலரும் படம் பிடித்துள்ளனர். தனிமனித அடிச் சுவடுகளை எண்ணிப் பார்ப்பது இதன் போக்காகும். பெண்ணின் தனி வாழ்வில் நளாயினி வாழ்வைப் பழைமை விரும்பினாலும் புதுமை ஏற்பதில்லை. எனினும் இன்றைய சூழலில் எதிர்காலப் பாதுகாப்புக்குப் புதியசூழல்களை உருவாக்கித் தன்னைப் பாதுகாக்க நினைக்கும் இடைநிலைப் பெண்மை நிலையை வெளிப்படுத்தும், சில படைப்புகள்.

இன்றைய சமுதாய வளர்ச்சியில் திருமணம் பல சிக்கல்களின் நிலைக்களமாக உள்ளது. திருமணத்தின் பின் பெண்கள் வேலைக்குப் போவதால் பலகுழப்பங்கள் எழுகின்றன. ஆண்கள் தங்கள் சுயநலத்திற்குப் பெண்கள் சம்பாதிக்கும் பணத்தைப் பயன்படுத்தத் தயங்குவதில்லை. இதுவே பெரும்பாலான சிக்கலுக்கு அடிப்படையாக அமைகிறது. வேலை செய்யும் இடங்களில் தம் மனத்திற்குப் பிடித்தவர்களை மணந்து கொள்ளத் தக்க வண்ணம் இன்னும் சூழல் அமையவில்லை. அதை விஞ்சித் தடைகளை மீறி மணந்து கொள்ளும் போது வேறு சில தடைகள் முளைக்கின்றன. வரதட்சணை, சீர்வரிசை போன்றவைகளால் குடும்பம் சீரழிகிறது. இவற்றையெல்லாம், சமூக நிலைப்படிகளாகக் காட்டப் பல நாவல்கள் முன் வந்துள்ளன. மணமக்கள் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதில்தான் இல்லறத்தில்

பிணைப்பு ஏற்பட வழியுண்டு. காதல் மணம் என்ற பெயரால் பெற்றோர்களைப் புறக்கணிக்கும் போக்கு சமுதாயப் பிணைப்பு களை அறுத்துத் தள்ளத் தயங்குவதில்லை என்பதைப் பல நாவல்கள் சுட்டுகின்றன.

குழந்தைகள் பண்பாட்டுக் கழகம் என்ற பெயரால், வேலைக்கு வரும் பெண்களின் வாழ்க்கையைச் சீர்குலைக்கும் கேட்டினைப் பெண்விடுதலை இயக்கக் குரலாகச் சில நாவல்கள் ஒலிக்கின்றன. பெண் வருமானத்தில் ஆண் வாழ்க்கை நடத்த ஆசைப்படுவதும், அது கட்டுக்கடங்காமல் போகும் எனக் காணின் பெண்ணின் பொருளாதார உரிமையைத் துண்டாட நினைக்கும் வஞ்சகமும் தெளிவாகக் காட்டப்படுகின்றன.

காதல் திருமணம், இல்லறவாழ்க்கை என நினைக்கப்படுவன எல்லாம் சமூகத்துடன் தொடர்புடையன என்பதை வெளிநாட்டுப் பெண்டிரின் நட்புக் கூட்டுறவாலும், பணத்திற்கு மணம் பேசப்படும் சூழலாலும், நிலை நாட்டப் பெறும் வகையில் ஒரு சில நாவல்கள் வெளிவந்து ஆண்கள் இராவணர்களாகப் பெண்குலச் சீதைகளை அசோக வனத்தில் சிறை வைத்துப் பெண் வாழ்க்கையையே 'சுந்தர காண்ட'மாக மாற்றும் நிலையைக் கூறு வதில் முன் நிற்கும் படைப்புகளும் வெளிவந்துள்ளன. பொது வுடைமைச் சமூகத்தில் புதிய காதரீனாக்கள் தோன்ற முடியும் என்ற நம்பிக்கையை நிலை பெறச் செய்கின்றன இவை இருண்ட வீட்டில் பெண் விளக்காக ஒளிரமுடியும் என்பதை உணர்த்தும் நல்லொளியாகும்.

பொதுவாக நம் நாடு விடுதலை அடைந்த பின் பல மாற் றங்கள் பெற்றுள்ளது. நடுத்தர மக்களின் கனவு மிகமிக வேடிக்கையானது. தன் அறிவு மூலதனத்தை வைத்து எதையும் சாதித்து விடலாம் என நம்புகிறது. ஆனால் சுற்றுச் சூழலில் காணும் பொருளாதார மாற்றங்கள் நடுத்தர மக்களின் கனவு களைத் தரைமட்டமாக்கித் தன் காலடிக் கீழ் வைத்துக் கொள் கிறது. தம்பியரும் தன்னால் உருவாக்கப்பட்டவரும் தன்னை விட்டு விலகிச் செல்லும் இடைவெளியை ஒருமனிதன் உணரும் போது அவன் பெறும் 'மூலதனம்' எது என்பதை நன்கு காட்டு கின்றன சில படைப்புக்கள்.

தனிமனிதனும் சமுதாயமும் மோதும் மோதலுக்குக் குடும்ப மானம், அண்ணன் கொலை செய்யப்பட்டதற்குப்

பழிக்குப் பழி வாங்கும் மனம், கொலை புரிந்த குடும்பக் கொழுந்தைக் காப்பாற்ற முதியவர்கள் படும்பாடு, இயற்கைப் பின்னணி இந்த வெக்கையைப் போக்க நீராக உதவும் நீர்மை, சிறு தெய்வ வழிபாட்டில் உறங்கிக் கிடக்கும் தொல் பழங்காலக் கொலை வெறி — இவையெல்லாம் ஒருருவாக மாறி அன்றாட மக்கள் பேசும் பேச்சு மொழியில் சிறந்த படைப்பாக வெளி வந்துள்ளது.

இதற்குச் சார்பாகச் சற்று விரிந்த நிலையில் ஒரு வட்டாரப் பகுதியைப் பின்னணியாக்கி அங்குள்ள நிலவுடைமை, ஏழை எளியவர்களை எப்படிக் 'கல்லறை'களாக மாற்றுகிறது என்று காட்டும் முயற்சிக்கும் தக்க படைப்புக்கள் உள்ளன.

பர்மாவிலிருந்து தமிழர் இரண்டாம் போர்க்காலத்தில் எப்படித் தப்பிவந்தனர் என்பதை 'அந்த நாளாகவும் நினைவு அலைகளாகவும் சில நாவல்கள் காட்டியுள்ளன. அங்குக் குடியிருந்து பெற்ற வாழ்வியல் அடிப்படையில் வி.ஆர்.எம் எழுதிய நாவல் ஒன்றும் பர்மா வாழ்வைச் சிறப்பாகக் காட்டும். ஆனால் பர்மா வாழ்வையும் நாஞ்சில் நிலவாழ்வையும் பிணைத்துக் காட்டும் முயற்சியாக இப்போது வெளி வந்துள்ள நாவல்விளங்கு கிறது. ஐராவதி ஆற்றின் பின்னணி செவ்வையாகப் பயன் படுத்தப் பெற்றுள்ளது. பர்மா மக்களின் மனநிலையும் நாஞ்சில் மக்களின் மனநிலையும் நன்கு வெளிப்படப் பல வாய்ப்புகளை உருவாக்கியுள்ள நாவல் ஒன்று இருவகைப் பண்பாட்டுப் பல கலையாக விளங்குகிறது.

இலங்கையிலுள்ள ஈழ எழுத்தாளர்களின் பல நாவல்கள் இங்கு வெளிவந்தவண்ணம் உள்ளன. அவற்றில் பரிசு பெற்றவை யும் உள்ளன. தேயிலைத் தோட்டப் பின்னணி ஈழத் தமிழர் நெஞ்சைப் பிணிப்பது என்பதில் ஐயமில்லை. அங்கு மக்கள் படும் வேதனையை யாவரும் உணரும் 'மலைக் கொழுந்'தாகக் காட்டும்போது தனி மனிதக் காதலை விடப் பொதுநல அன்பே உயர்ந்தது என்பதை உணர்த்தும்போக்கு நன்கு தளிர்த்துள்ளது.

இலங்கையில் இன்றுள்ள தமிழர் சிங்களர் வேறுபாட்டை யாவரும் அறிவர். ஆயினும் இன வேறுபாடுகளைக் கடந்து மனித அன்புத்தளையில் யாவரும் ஒன்றுபட வேண்டும் என விரும்பும் படைப்புகளும் உள்ளன. அன்பு மையத்தில் ஒன்றாக பிறக்கும் ஆசை அது.

சாதியின் பங்குக்கு ஈழத்திலும் எவ்வாறு தன் நச்சுத் தன்மையைக் கக்கிய வண்ணம் உள்ளது என்பதைப் பற்றி

எண்ணிப்பார்த்து 'நாளை' எப்படி இருக்கவேண்டும் என்று ஆசைப்படும் உள்ளங்களின் எழுச்சியைச் சில படைப்புக்கள் நன்கு காட்டுகின்றன. முதிய தலைமுறை சாதிக்கட்டைக் காப்பாற்ற நினைப்பதும் இளைய தலைமுறை அதனைத் தாண்டி அப்பால் வர முயற்சி செய்வதையும் காட்டுகின்றன. முன்னணி வீரர்கள் ஆதிக்கச் சதியால் மறைந்தாலும் அஞ்சாத நெஞ்சுடன் மறைந்த வீரர்களின் கொள்கை ஒளியைப் பின்பற்றி முன்னேற நினைக்கும் நம்பிக்கைக் கொடி படர்வதைச் சில படைப்புக்கள் புலப்படுத்துகின்றன.

ஈழத்தமிழர்களிடையே இருக்கும் சாதி அடுக்களையும் மறைக்காமல் அங்குள்ள 'பஞ்சமர்' எப்படியுள்ளனர், எப்பாடுபடுகின்றனர், எந்த வழியில் முன்னேற முயல்கின்றனர் என்பதைப் பட்டறிவுப் பார்வையில் கூறி முன்னேற்றத் தேரோட்டத்தை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது என்ற நம்பிக்கையில் நாவல் களத்தை அமைத்துச் செல்கிறது.

நாவல்கள் என்பன மக்கள் நலம் நாடி நம்பிக்கையூட்டி நல்வழி அமைப்பதில் துடிப்பாக உள்ளன என்பதற்கு எடுத்துக்காட்டாக ஒருசில உருவாகியுள்ளமை வரவேற்கத்தக்கதே.

## VI

திரைப்படங்களின் செல்வாக்கு நாட்டிலே பரவியிருப்பதால் நாவல் உலகிலும் அதன் தாக்கத்தைக் காட்டும் வகையில் யாக்னிகின் 'நம்பவே முடியாது.'[1] வெளிவந்துள்ளது.

ஓவியக் கலையில் வல்ல கண்ணன் தன் ஊர் மணக்குடி, வெள்ளத்தால் பாதிக்கப்படவே வேலை தேடிச் சென்னை வந்து சேர்கிறான். கடைசியில் ஒரு பள்ளியில் ஓவிய ஆசிரியனாக அமர்கிறான். அங்குள்ள ஸ்கூல் மேடம், ஹாஸ்டல் மேடம், டைபிஸ்டு ஆகியோர்க்கு விருந்தாகிறான். அப்பள்ளியின் மேற்பார்வையாளர் சுந்தரமே அத்தகைய விளையாட்டுக்களில் ஈடுபட்டவர் என்பதைக் காட்டி இறுதியில் இச்சூழலில் ஏமாற்றப்பட்டுக் கண்ணன் நிலை குலைகிறான். சுந்தரம், விடுதிப் பெண்களாலேயே தன் முடிவைத் தேடிக் கொள்கிறார்.

1. நம்பவே முடியாது, 'யாக்னிக்'—மெய்யப்ப அரசு (த. ஆ) ஹரிநா பப்ளிகேஷன்ஸ், 56, ஜுப்லி ரோடு, சென்னை 33, செப்டம்பர், 1982.

இக்கதையின் போக்கிலே காட்சி விளக்கங்கள் முதலிடம் பெற்றுள்ளன. திரைப்படக் கண்கொண்டு பல இடவருணனைகள் முன்னிடம் பெற்றுள்ளன.

ஆசிரியர் இக்கதையை ஆங்கிலத்தில் சொல்ல அவர் நண்பர் இதைத் தமிழாக்கித் தந்துள்ளார். இத்துடன் 'பிரஞ்சு லாக்' என்ற அமைப்பை இணைத்துக் கதையின் அமைப்பைப் படைத்துள்ளார்.

பணச் சூழல் எப்படி இன்றைய இளைஞர் உலகத்தை அழிக்கிறது என்பதை இது காட்ட முயல்கிறது. திரைப்பட எழுத்தாளர்கள் நாவல் உலகில் புகுந்ததின் விளைவு எப்படி இருக்கும் என்பதை இதனால் உணர முடியும்.

பல மாடிக் கட்டிடத்தில் வாழும் பல குடும்பங்களில் ஒன்று பரத் குடும்பம். பரத் பாங்கில் பணிபுரிபவன். அவர் பார்க்கும் பார்வையின் அடிப்படையில் 'ஒரு தற்கொலை நடக்கப் போகிறது' என்ற ரா. கி. ரங்கராஜனின் விறுவிறுப்பான கதை[2] உருவாகியுள்ளது.

தாய் கல்யாணியை மருத்துவ மனையில் சேர்த்த போது அப்பாவும் மகனும் சேர்ந்து படும் பாடு இயற்கையாக உள்ளது. புரொபசர் நரேந்திரா அக்கட்டிடத்தில் ஒரு தற்கொலைநடக்கும் எனக் கணித்துக் கூறிய போது அவ்வாறு தற்கொலை செய்து கொள்பவர் யாராயிருக்கும் என்ற அச்சம் பெருகுகிறது.

பாடிக் கொண்டிருந்த ராதா அம்மாளின் குரல் கெடுவதும், சாஸ்திரியின் மகள் ஓடிப் போவதும், முறையே அவர்களிருவரும் பாடும் தொழிலை இழந்ததாலும், மகள் ஓடிப் போனதாலும் தற்கொலை செய்து கொள்ளுமாறு வழி வகுக்குமோ எனப் பரத் நினைக்கிறான். அவனுடைய அன்புக்குரியவளான சுபா ஒரு நாள் எட்டாவது மாடியிலிருந்து விழுந்து சாகிறாள். அதற்குக் காரணம் அவள் தோழி தங்கம் திருத்தணியில் புரொபசர் நரேந்திராவால் கெடுக்கப்பட்டுத் தான் பெற்ற குழந்தையை அனாதை விடுதியில் விட்டுவிட்டு இறந்து போனதே ஆகும். இதனைச் சுபா அறிந்துள்ளாள் எனத் தெரிந்து கொண்ட புரொபசர் அவளைக் கொல்லு முன் எல்லோரும் நம்பும்படி கட்டிடத்தின் கெட்டகாலம் என்ற பழியைப்போட்டு விடுகிறார்.

---

2. ஒரு தற்கொலை நடக்கப்போகிறது. ரா கி. ரங்கராஜன் திருமகள் நிலையம், சென்னை, மே, 1982.

பரத்தின் முயற்சியையும் அறிந்து அவனையும் ஹங்கேரியக் கத்தியால் கொல்லவரும்போது அதே மாடியிலிருந்து புரொபசர் வீழ்ந்திறக்கிறார். அவர் சாவுக்கு யார் காரணம் என்றும் தெரியாமலே போய்விடுகிறது.

தற்கொலை செய்து கொள்ளப் போவது யார் என்ற அச்சவுணர்வே இந்தக் கதை முழுதும் பரவிப் படிப்பவர்க்குத் தொடர்ந்து செல்ல ஆர்வம் ஊட்டுகிறது.

'அருணா ஆறாவது'[3] என்ற புஷ்பா தங்கதுரையின் கதை பழம் பொருள் சேகரித்துள்ள துஷ்யந்தனிடமிருந்து அவருடைய பழஞ் செல்வத்தைக் கைப்பற்ற நினைக்கும் நல்லதுரையின் முயற்சியை மிக நல்ல முறையில் கதைப் பின்னலுடன் காட்டிச் செல்கிறது. தொடர்ந்து பல கொலைகள்-குறிப்பாகப்பல நூலகங்களில் திட்டமிட்டுப் பல கொலைகள்-நடைபெற்றதை ஒட்டி யார் கொலை செய்கின்றனர் ஏன் செய்கின்றனர் என்ற முடிவுகளைக் காணக் காவல் துறையில் சிங், ரத்தினசாமி ஆகியவர் செய்யும் துப்பறியும் முயற்சிகள் நன்கு எடுத்துக் காட்டப் பெறுகின்றன. மனநோய் மருத்துவப் பின்னணி, விமானப் பெண்மணி வாழ்க்கைச் சூழல், மகளிர் விடுதிச் சூழல் ஆகியவற்றையெல்லாம் கவர்ச்சிக்குப் பயன்படுத்தும் வகையில் இக்கதை அமைந்துள்ளது. திட்டமிட்டுக் கொலைகள் செய்து தாம் ஒருவரே செல்வத்தைக் கைப்பற்ற வேண்டும் என்ற கொலை வெறியின் வேகத்தை இந்தக் கதை நன்கு வெளிப்படுத்துகிறது.

'வயலெட்பூக்கள்'[4] என்ற தலைப்பில் புஷ்பா தங்கதுரை, பேராசிரியர் ராம்நாதின் வாழ்க்கையை முன்னும் பின்னுமாகக் காட்டுகிறார். தொல் பொருள் ஆராய்ச்சியில் ஈடுபட்டு அதில் மேலும் சிறந்த அறிவு பெறுதற்கு வடமொழி கற்க கேதாரஹள்ளி கணேச பண்டிதரிடம் சென்றார். அங்குப் பண்டிதரின் மகள் கங்கா அழகுள்ள விதவை. அவளுடைய உணர்வுக்குத் தீனியாக மறுத்த ராம்நாத் மீது அபாண்டமான பழியைப் போட அவள் அஞ்சவில்லை. தோத்தாத்திரி என்ற இழி மகனுடன் தொடர்பு பூண்டு தன் ஆசையைத் தணித்துக் கொண்டு அவனால் உண்டான கருவுக்கு ராம்நாத்தை அப்பா

---

3. அருணா ஆறாவது, புஷ்பா தங்கதுரை, அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை, மே, 1982.
4. வயலெட் பூக்கள், புஷ்பாதங்கதுரை, அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை, மே, 1982.

வாக்கி விடுகிறாள். அதை ஏற்காது அந்த ஊரைவிட்டே வெளியேறிய ராம்நாத் வரலாற்றுத் துறையில் புகழ் பெற்று விளங்கினார். இருபது ஆண்டுகள் கழித்து அவரைக் கங்கா கண்டு அவரிடமிருந்து பணம் பறிக்கத் தொடங்கினாள்.

ராம்நாத் பெருந்தொகை கொடுக்க மறுத்தார். பின்னர் கங்காவின் மகள் நர்மதா வந்து அவளைக் கெடுக்கமுயன்றதாகப் பழி சுமத்தி வழக்கு நடந்தபோது தான் செய்யாத குற்றத்தைச் செய்ததாக ஒப்புக் கொண்டார். அது கங்காவுக்குத் தான் செய்யும் கடனாக ஏற்றுக் கொண்டு தண்டனை பெறுகிறார். கங்கா இறந்தபின் சிறையில் ராம்நாத்தைப் பார்த்துத் தன் குற்றத்தை நர்மதா ஒப்புக் கொள்கிறாள்.

தம் வறண்ட வாழ்க்கையில் மறுபடியும் வாழவேண்டும் என்ற உணர்வு தளிர்விடுவதைக் கண்டு அவளையே மனைவியாக ஏற்றுக் கொள்கிறார் ராம்நாத்.

ஒரு பெண் விதவையான பின் இளமை இன்பத்திற்கு என எந்த எல்லைக்குப் போய் பழி தீர்த்துக் கொள்வாள் என்பதைக் காட்டும் வகையில் கங்காவின் படைப்புள்ளது. அவளுக்கு வேண்டியவாறு உடன்படாத ஆண்மகன் பிற்காலத்தில் அந்தப் பெண்ணுக்குப் பிறந்த பெண்ணே தன்மீது பழி சுமத்தியபோது அவளுக்குக் களங்கம் ஏற்படக்கூடாது என அப்பழியைத்தான் ஏற்றுக்கொண்டு தண்டனையைப் பெறும் வகையில் 'வயலெட் பூக்கள்' கதை செல்கிறது.

இனிய நடை, உணர்ச்சிக் கொந்தளிப்பு ஆகியவை இரண்டும் புஷ்பா தங்கதுரையின் கை முதலாக உள்ளன. அதன் வளத்தில் இக்கதை நடையிடுகிறது.

காதல் என்பதுதான் வாழ்வு. அதில் தோல்வியுற்றால் சாவுதான் வழி என்று எண்ணிச் சாகத் துணிந்த ரஞ்சினியைக் காப்பாற்றிய ரஞ்சித் அவளையே மணந்து கொள்ளவும் தயங்கவில்லை. அவர்கள் வாழ்ந்த வாழ்வில் நந்தினி என்ற பெண்ணும் பிறக்கிறது. வாழ்வில் எதிர்பாராத சில மாற்றங்களும் நிகழும் என்பதற்கேற்ப சாகக் கிடந்த ரஞ்சினியின் விருப்பிற்கேற்ப அவளுடைய முதற் காதலன் மகேஷைப் பார்த்ததின் விளைவு அவள் சாகாமல் தப்பியதுடன் பாபு என்ற பையனுக்கும் தாயாகிறாள் அந்திப் பொழுதில ஆடிய சதுரங்கமாக அவள் வாழ்வு நெருஞ்சியாகக் குத்த தொடங்கியது. அந்த வாழ்வின் பல கூறு

களிலிருந்து உணர்வுப் படிவங்களை வடித்தெடுக்கிறார் பூவை எஸ். ஆறுமுகம்.[5]

தாயும், பிள்ளையும், தந்தையும் உணர்வு வேகத்தில் மோதுவதை மிக நுணுக்கமாக இந்த நாவல் வெளிக் காட்டுகிறது. ஒரு குடும்ப நிகழ்ச்சி எப்படி நடக்குமோ அப்படியே கற்பனை செய்து அதனை அன்றாட நிகழ்ச்சியின் மறுவடிவமாக முயற்சி செய்கிறது. பரசுராமன் போல் தன்னை உய்விக்க வந்தவன் பாபு என நம்பிய ரஞ்சனி வாழவும் அவர்கள் வாழ்வில் கறுப்பு மருவாக விளங்கிய மகேஷ் மறையவும் புதிய வாழ்வு மலர்வதைக் காட்டுகிறது. குறையுடைய வாழ்வு நெஞ்சில் ஒரு முள்ளாகக் குத்துவதையும் குத்திய முள்ளைக் களைவதையும் காட்டும் முயற்சியில் இந்த நாவல் உருவாகியுள்ளது.

'ஏப்ரல் பறவைகள்' என்ற சவீதாவின் படைப்பு[6] காவல் துறை அருணின் காதல் வாழ்வை ஒட்டியது. தீபாவைத் தன் பலவகையான வீரச் செயலைக் காட்டிக் கவர்ந்தான். ஊரிலும் உலகத்திலும் உள்ள பெண்களின் கற்பும் உரிமையும்காப்பாற்றப் படவேண்டும் என்பதில் துடிப்பாக இருந்தான். இருப்பினும் தன் மனைவிக்கு என ஒரு உள்ளம் இருப்பதை அவனால் உணரமுடியவில்லை. 'கடமை' 'கடமை' எனத் தன் வேலையில் ஓடியதால் மனைவியின் பிள்ளைப் பேறுக்குக்கூட அவனால் உதவ முடியவில்லை.அப்போது அவளுக்குஉதவியதிரைப்படஇயக்குநர் நவீனுடன் அவள் மனம் ஒன்றியதால் புதுவாழ்வு நடத்தப்பறந்து செல்லும் ஏப்ரல் பறவையாகச் சென்று விட்டாள். அதைத் தாங்கிக் கொள்ள முடியாத அருண் தான் வேலை வாங்கித் தந்த ரவியை அவன் தன் முதலாளி மனைவியுடன் தவறிழைத்த குற்றத்திற்காகச் சுட்டுத் தள்ளுகிறான். கடமையும் வாழ்வும் மோதும் போது உணர்வு வெறியால் கொலை செய்யவும் தயங்குவதில்லை என்பதைச் சலசலக்கும் மென்னடையில் ஏப்ரல் பறவைகள் குறியீட்டு வடிவில் சிறகடிக்கும் காட்சி இந்தப் படைப்பு.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றிச் சங்கப் பாடல்களில் காணும்

---

5. அந்தி நிலாச் சதுரங்கம், பூவை எஸ். ஆறுமுகம். மணியன் பதிப்பகம், 39 இரத்தின முதலித் தெரு, குறிஞ்சிப்பாடி ஜூன், 1982.

6. ஏப்ரல் பறவைகள், சவீதா, முருகன் பதிப்பகம், சென்னை-36, நவம்பர், 1982.

செய்திகளை அடிப்படையாகக் கொண்டு 'கொற்கைக் காவலன்'[7] என்ற படைப்பை இராசம் மரகதம் எழுதியுள்ளார். இளையவனாம் நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் போன்ற தமிழ்ப் புலவர்களின் அறிவொளி துணை செய்கிறது. இயல்பாகவே நுண்ணறிவு கொண்ட பாண்டியன் பகை அரும்பு களைத் தானாக நேரில் கண்டு உண்மையைத் தெளிகின்றான் அதற்கெதிராக உடனுக்குடன் செயல்படுவதையும், தன் பணியாளர் தவறு செய்தால் மன்னிக்கும் பெருங்குணம் படைத்திருப்பதையும் ஆசிரியர் காட்டியுள்ளார்.

ஐந்து வேளிரையும் இரு பெரு வேந்தரையும் வென்ற வெற்றியில் மகிழாமல், புத்த மதத்தினர்க்கு உதவுவதையும், சேரன் மகள் பூங்கோதையை மணந்து பகைத் தீயைத் தணிப்பதையும், கொற்கையில் யவனர் முத்துக் கடத்தியதற்குத் துணை புரிந்தவர்களையே துறைக் காவலர்களாக அமைத்து நல்வழியைக் காட்டியதையும் உணர்த்தும்போது இக்கதை நெடுஞ்செழியனின் சிறப்பை வெளிப்படுத்தும். இதில் காணும் நிகழ்ச்சிகள் பின்னணியாக விளங்கத் தனி மனிதப் பண்பு தலை எடுத்து நிற்கிறது இப்படைப்பில்.

பிற்காலச் சோழர் காலத்தைத் தமிழகத்தின் பொற்காலம் எனப் புகழ்கின்றனர் இக்கால வரலாற்றாசிரியர்கள். இராசேந்திர சோழனின் வடநாட்டுப் படையெடுப்பை மிகப் பெரிய திக்கு விசயமாகக் குறிப்பிடுவர். கி.பி 1021-22 ஆம் ஆண்டு கங்கையைக் கொள்வதற்காக வடநாடு சென்றான், இராசேந்திரன். இக்காலத்தில் தான் வட இந்தியா மீது கஜினி முகம்மதுவும் பலமுறை படையெடுத்துச் சென்று சோமநாதபுர ஆலயம் போன்றவற்றைக் கொள்ளை அடித்தான்.

இவ்விரு பெரும் நிகழ்ச்சிகளையும் இணைப்பதற்குரிய காரணமாக வடநாட்டு அரசர்களின் வேண்டுகோளின்படி இராசேந்திரன் அங்குச் சென்றதாகக் கற்பனை செய்ததின் விளைவு, ய. லட்சுமி நாராயணனின் 'ராஜமோகினி' தோன்றியுள்ளது.[8] தொடக்கத்தில் ராஜமோகினியின் செயல்கள்

---

7. கொற்கைக் காவலன், இராசம் மரகதம், சோழ புத்தக நிலையம், பசுமடம், 13A/3 திருத்தாநதோணி ரோடு, உறையூர், திருச்சி.

8. ராஜமோகினி, ய. லட்சுமிநாராயணன், நர்மதா பதிப்பகம், சென்னை 17, ஆகஸ்டு, 1982.

வெளிப்பட்டாலும் அவை வளரவில்லை. இராசேந்திரனும் கஜினியும் சந்திக்கும் நிகழ்ச்சியை மிகப் பேரளவில் உருவாக்கி யுள்ளார் ஆசிரியர்.

கஜினி முகம்மதின் அவைக்களத்திலிருந்த வரலாற்று வல்லு நரான நிஜாமுதீன் போன்றவர்களைத் தக்கவண்ணம் ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். விக்கிரக உடைப்பில் மதவளர்ச்சி இருப் பதை நம்பிய கஜினி முகம்மதுவுக்கு அது தவறான கருத்தென மிகச் சிறந்த முறையில் இராசேந்திரன் எடுத்துரைப்பதைக் கொண்டு மதக் காழ்ப்பை விட மத ஒற்றுமையே சிறந்த மனித நலத்தை வளர்க்கும் ஆற்றலைத் தரும் என இந்நூல் வற்புறுத்து கிறது.

பிற்பகுதியில் கஜினி செயலுக்கு எதிராக்கச் செயலாகக் கங்கை கொண்ட சோழீச்சுரம் உருவாகிறது. இதன் பின்னணி யாகச் சிற்பி சிலாயனன் அவன் மனைவி மல்லிகை, அவர்கள் வாழ்வைச் சிதைத்து நொறுக்கும் அம்பலத்தாடி ஆகியவர் வாழ்வு அமைகிறது. இதில் வரலாற்றுண்மைகள், வரலாற்று மாந்தர் மிகுந்த அளவு பயன்படுத்தப் பெற்றுள்ளனர்.

மைசூரை ஆண்ட திப்பு சுல்தான் பற்றி வரலாற்றாசிரியர் பல நூல்கள் எழுதியுள்ளனர். 'மைசூர்ப் புலி' என்று அவனைக் குறிப்பிட்டு அவனுடைய வீரச் செயல்களைப் பலர் போற்றினர். ஆயினும் ஒருசில மேனாட்டு ஆசிரியர் அவனைப்பற்றி இல்லாத தும் பொல்லாததுமாக எழுதிச் சென்றிருக்கின்றனர் என்பதும் உண்மை. இந்நிலையில் 14 நூல்களையும், மைசூர் குடகுப் பட்டயங்களையும் படித்துப் பின் 704 (687+17) பக்க அளவில் ய. லட்சுமி நாராயணன் 'திப்பு சுல்தான்'[9] என்ற வரலாற்றுப் புதினத்தை மிகவும் பாடுபட்டு எழுதியுள்ளார். நாவல் முழுதும் படிக்கும் போது ஆசிரியர் விருப்பு வெறுப்பின்றித் திப்புவின் வரலாற்றை நாவல் வடிவில் தந்துள்ள முயற்சி நன்கு புலனா கிறது.

தொடக்கத்தில் ஆங்கிலேயர்களால் 'வன்முறையில் மைசூர் ஆட்சியைக் கவர்ந்தவன் திப்பு' என்ற குற்றச்சாட்டு இருப்பதைக் கூறி அது வரலாற்றுக் கண்ணோட்டத்தில் எந்த அளவு பிழை யானது என்பதைச் சுட்டிச் செல்வதால் மைசூர் முன் வரலாறு

---

9. திப்பு சுல்தான், ய. லட்சுமி நாராயணன், ஸ்டார் பிர சுரம், சென்னை, 1982.

படிப்பவர்க்குத் தெளிவு பெற உதவுகிறது. கி.பி. 1761 முதல் ஹைதர் மைசூரின் ஆட்சித் தலைமை பெற்றதைக் காட்டிப் பின் திப்புவைத் தனக்குப் பின் ஆள்வதற்கு ஏற்ற வண்ணம் உருவாக்கியதை எடுத்துரைப்பதால் நாவலில் காணும் திப்புவின் வரலாற்று வடிவம் நன்கு உருவாக வழி செய்கிறது. அமைச்சர் பூர்ணையாவின் மதி நுட்பத்தாலும் அவ்வப்போது உருவாக்கிய அரசியல் செயல் திட்டங்களாலும் திப்பு மிகச் சிறந்த தலைவனாக உருவான நெறி புலப்படுகிறது.

பரங்கியரை எவ்வளவு காப்புணர்வோடு பாதுகாப்பதில் திப்பு தன் பார்வையைச் செலுத்தினன் என்பதை நாவலின் தொடக்கமே உணர்த்துகிறது. இந்து மதம், இஸ்லாம் மதம் என்ற மத அடிப்படையில் வேறுபாடுகள் தோன்றாமல் பூர்ணையா போன்றவரை மதிப்புடன் நடத்தும் முறையாலும் வரதாச்சாரியார் குடும்பம் திபபுவின் குடும்பத்தோடு கொண்ட அன்புப் பழக்கத்தாலும் மதவேறுபாடின்றி ஒற்றுமை உணர்வு வளர்ந்து வந்ததை நாவல் நன்கு காட்டுகிறது.

கதைத் திருப்பத்தைத் திடுமெனக் கோவைக்குக் கொண்டு செல்வதும் அதன்பின் நிகழ்ச்சிகள் மலபாருக்கு மாற்றப்படும் போது இயல்பாகக் கதை மாற்றம் பெறுவதுடன் இந்த நாட்டின் பல்வேறு பகுதிகளில் திப்புவின் ஆடசி ஒளி எங்ஙனம் ஊடுருவியிருந்தது எனவும், பூர்ணையாவின் அரசியல் மதிநுட்பத் திட்டங்கள் எவ்வாறு செயல் பட்டன எனவும் தெரியும் வகையில் இந்நூலில் உருவாகியுள்ளன.

போர் முடிந்து உடன்படிக்கைகள் தயாராவதும், திப்புவும் வெள்ளையரும் அந்தந்த நிகழ்ச்சிகளுக்குப் பின் செயல்படும் வகையும் நாவலில் நன்கு காட்டப்பட்டுள்ளன. சக்யாத்திரி மலைச்சாரல் போன்ற இயற்கை அழகு வருணனையும் அளவாக (பக்.155) அமைந்துள்ளது. வேண்டுமிடத்துப் பின்னோக்கு உத்தியைக் கையாண்டு பழைய வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறித் தன் வலிமையைப் பூர்ணையாவின் துணையால் பெருக்க வேண்டும் என்பது போன்ற எண்ண ஓட்டங்களை உருவாக்கிச் செல்வது குறிப்பிடத் தக்கது.

பிரிட்டிஷார் தந்திரங்களைத் திப்பு நன்றாக உணர்ந்திருந்தான். அவர்கள் செய்யும் ஒப்பந்தங்கள் நம்பத்தகுந்தவை அல்ல என அவன் அறிந்திருந்தான் என்பதை நாவலெங்கும் பரந்த அளவில் காட்டும் போது நெல்லிக் காயாய்ச் சிதறிக் கிடக்கும் பாரத நாட்டுச் சிற்றரசுகளின் கூட்டுத் துணையால் வேற்றானை

விரட்ட முடியுமா என்று முயன்ற கற்பனை வாழ்வின் தலைவனாகத் திப்பு உருவாக்கப் பட்டிருக்கிறான். அவனை மாபெரும் கோட்டையாக இருந்து பூர்ணையா காப்பது நாவலின் வலிமையாக, இதற்கு யார் முதல்வர் என்ற ஐயத்தைத் தோற்றுவித்த வண்ணம் உருவாக்கப் பெற்றுள்ளது.

ஆங்கில பிரஞ்சுத் தலைவர் அவரது படைகள் வரலாற்றில் பெற்ற பங்கினைப் பெரிதும் மாற்றாமல் படைத் தலைவரின் செயலுக்கேற்பக் கதையில் பங்குபெற்றுள்ளனர். மகாராட்டிர நானாவுடன் பூர்ணையா பேச்சு வார்த்தை நடத்துவது நல்லதோர் அரசியல் விருந்தாக உள்ளது. இறுதியில் உட்பகை, திப்புவை எவ்வாறு வீழ்த்துவதில் நயவஞ்சக வேடம் பூண்டது என்பதையும், அவன் குடும்பத்தைக் காக்கப் பூர்ணையா வெள்ளையரிடம் எந்த அளவுக்குத் தன்மானத்துடன் நிலைத்து நின்றார் என்பதையும் இது காட்டுகிறது. திப்புவின் சோக முடிவில் ஒரு தனிப்பட்ட பெருமிதம் விளங்குவதை உணர முடிகிறது.

நாவல் ஆசிரியர் வரலாற்றுக் குறிப்புகளை நன்குணரப் பல அடிகுறிப்புகளைக் கதையோட்டம் கெடாதவகையில் கொடுத்துள்ளார். (பக். 175, 203, 347, 549, 632). பின்னிணைப்பாகப் பல செய்திகள், அட்டவணைகள், கடிதங்கள் ஆகியவற்றைக் கொடுத்திருப்பது நாவலைப் படித்துணர மேலும் துணை புரிகிறது.

இரண்டு காதல் இணைகளை மாறவிட்டு உணர்வு வெள்ளத்தில் ஆழ்த்த முயற்சிசெய்கிறது, பாரதி ப்ரியனின் 'நதியோரத்து நாணல்கள்',[10] இணை பிரியா நண்பர் அருணும் ஜெயராஜும் மருத்துவர்கள். அருணின் அத்தை மகள் ஜெயாவும், ஜெயராஜுவின் முறைப் பெண் மங்கையும் முறையே ஜெயராஜுவையும் அருணையும் காதலித்தனர். ஆனால் ஜெயராஜு அமெரிக்கா சென்ற போது அருணின் அத்தை இறந்தார். அவர் இறக்கும்போது ஜெயாவை அருணின் மனைவியாக்கச் சொல்லி இறந்தார்.

அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்த ஜெயராஜு புதிய நிலையைக் கணடு தன ஊர் சென்றான. அங்கு உற்றாரின்

---

10. நதியோரத்து நாணல்கள், பாரதிப்ரியன், நர்மதா வெளியீடு, சென்னை, மார்ச்சு, 1982.

வற்புறுத்தலால் மங்கையை மணந்து சென்னை திரும்புகிறார். மாறுபட்ட இணைகள் துன்பத்தை மறைத்து வாழும் போது ஒருநாள் அது வெளிப்பட்ட நிலையில் மங்கையும் அருணும் மற்ற இருவருமாவது இன்பமாக வாழ வேண்டி இறக்கின்றனர்.

சிக்கலில்லாத நாற்கோணக் கதை எதிர்ப் போக்கில் இணைந்து துன்ப முடிவில் ஒரு இணை மறைகிறது. சென்னை நகர்ச் சூழலும், சேலத்துக்கு அருகிலுள்ள சிற்றூர்ச் சூழலும் இருவகைக் காதல் வளரக் களமாகின்றன. உணர்ச்சிக்கு முதலிடம் தந்து உருவாக்கப்பட்ட கதை இது. நீரோட்டத்தில் நாணல்கள் சாய்வது போலக் காதல் என்பது விதிவழியே சாயும் என்பதை இது உணர்த்த முயல்கிறது.

சாதிகள் இல்லை என்று சொல்லிக் கொண்டே அதன் வெறியைப் பயன்படுத்தித் தன் சுகத்தைப் பெருக்கிக் கொள்ளும் பண்ணையார் தர்மலிங்கரின் பொய் முகத்தை வெளிப்படுத்த முயல்கிறது இராம. ராகவேந்திரனின் 'இங்கே சில இதயங்கள்.'[11]

பண்ணையார் மகள் மாலதி படித்தவள். தன்னை ஆபத்திலிருந்து காப்பாற்றியகீழ்ச்சாதியைச் சேர்ந்த பிச்சைமுத்துவை விரும்புகிறாள். பண்ணையாரோ பிச்சைமுத்துவின் தங்கை அஞ்சலையைச் சுவைத்துப்பின் கைவிட நினைக்கிறார். அப்படிபட்டவரைத் தன் அப்பா வென்றும் பாராமல் சுட்டுத் தள்ளி விட்டுச் சிறைக்குப் போகிறாள் மாலதி.

சிற்றூர்களில் பண்ணையார்களின் கொடுமை எப்படி உள்ளது என்பதை வெளிப்படுத்தும் வகையில் காதலை வட்டமிட்டுக் கொண்டே காட்டுகிறது இந்தக் கதை.

இளைஞன் ஆனந்த் தன் குடும்பச் சூழலையும் மீறிக் கொண்டு சமுதாயத்திற்குத் தொண்டு புரியச் செல்லும்போது படும் துன்பங்களையும், துயரங்களையும் வெளிப்படுத்துகிறது கார்த்திகா ராஜ்குமாரின் 'இது முதல் அத்தியாயம்' என்ற படைப்பு.[12]

---

11. இங்கே சில இதயங்கள், இராம. ராகவேந்திரன், வைரம் பதிப்பகம், மதுரை, செப்டம்பர், 1982.

12. இது முதல் அத்தியாயம், கார்த்திகா ராஜ்குமார், பூக்கூடைப் பதிப்பகம், சென்னை-3, 1982.

கவிஞர் ராபர்ட் ப்ராஸ்டின் கவிதை வரிகளில் காணும் இலட்சியத் துடிப்போடு செயல்படும் இளைஞன் வாமங்கலம் என்ற பகுதிக்குச் சென்று இளைஞர் பணி இயக்கத்தில் சேர்ந்து வட்டார வளர்ச்சியில் ஆசிரியராகச் சேர்ந்து பெற்ற அனுபவங்களை விளக்கிச் செல்கிறது இந்தக் கதை.

பள்ளி மாணவரிடம் அன்பைப் பெற்றதுடன் பக்கத்துவீட்டு மாணவி ராணியின் காதலையும் பெறுகிறான் ஆனந்த். தீமையை எதிர்க்க மாணவரிடம் உணர்வூட்டித் தானும் அதில் ஈடுபடுகிறான். அப்போது ஊர்ப் பெரிய மனிதர் சொக்கலிங்கத்தின் கோபத்திற்கு ஆளாகி அடிபடுகிறான். மாணவர் அவனுக்கு ஆதரவாக வேலை நிறுத்தம் செய்கின்றனர். ஆசிரியப் பணியை விட்டு மருத்துவப் பணியிலீடு பட்டபோதும் சொக்கலிங்கத்தின் எதிர்ப்பு மிகக் கொடிய நிலையில் உருவாகிறது. அதனால் ராணி உலகை விட்டே பிரிய நேர்கிறது.

வாழ்வில் முதல் தடவையாகத் துன்பத்தைக் கண்டு சலித்த இளைஞன் மறுபடியும் எழுந்து புதிய உற்சாகத்துடன் பணி புரிவதைக் காட்டுகிறது இக்கதை. இடையே ஏசுவின் அறமும், மார்க்சின் கொள்கையும் ஆங்காங்கே தூவப்பட்டுள்ளன. இன்றைய இளைஞர் சமூகப்பணி புரிவதில் சோர்வு அடையக் கூடாது என்ற உண்மையை உணர்த்த முன் நிற்பது கார்த்திகா ராஜ்குமாரின் படைப்பாகும்.

இன்றைய நிலையில் தனியொருவனாய் வாழும் இளைஞன் ஒருவன் கொள்கைப் பிடிப்போடு நல்லவனாய் வாழ முயலும் போது படுகின்ற பாட்டைத் தெளிவாகக் காட்டுகிறது உதயணன் எழுதிய 'வாழ்க்கை விலங்குகள்'.[13]

பல்லவன் மருத்துவ மனையில் பணியாற்ற வந்த ராமநாதன் அலுவலகத்தில் படும் பாட்டை முதலிலிருந்து சிறிது சிறிதாக வெளிப்படுத்துகிறது இக்கதை. தன்னலத்திற்கு மருத்துவ மனைப் பொருள்களைக் கையாட நினைக்கும் மேலாளர்க்கு இடங் கொடுக்காததால் பல அவமானங்களுக்கு அவனை உட்படுத்த முனைகிறார் ஏ. ஓ. அவர் மட்டுமன்றி அலுவலகத்தில் அவரைச் சார்ந்தவர் பலரும் அவனை வீழ்த்த நினைத்தபோது தன் ஆளுமைச் செயல்களால் எல்லாரும் மதிக்கத்தக்க வண்ணம்

---

13. வாழ்க்கை விலங்குகள், உதயணன், முருகன் பதிப்பகம், 21, சிங்கார முதலித் தெரு, D.R.R. நகர், கறையான் சாவடி, சென்னை 56, டிசம்பர் 1982.

அவன் விளங்குகிறான். எனினும் அவன் காப்பாற்றிய பத்மாவதி என்ற பெண் ஏ.ஓ.வின் மகள் என்றும், அவள் வழுக்கி விழுந்த பெண் என்றும் அவனும் அறியவில்லை.

அவன் உள்ளம் ஓரளவு பத்மாவதிமீது படர்ந்தாலும், தன் தங்கையும் தன் நண்பனும் மணக்கத் துணை நிற்கிறான். அலுவலகத்தில் மற்றப் பகுதியில் ஊழல் நடந்தபோது அதையும் எதிர்க்கிறான். நல்ல உள்ளங்களைத் தன்பக்கம் திருப்புவதில் வெற்றி பெறுகிறான்.

மருத்துவமனை விழாவில் தான் எழுதிய நாடகத்தில் தக்க சமயத்தில் தானே முன்நின்று நடித்து, வரவிருந்த கெட்ட பெயரைப் போக்குகிறான். இந்நிலையில் அவன் விரும்பிய பத்மாவதியை ஏற்கெனவே காதலித்த ராபர்ட் மணந்துகொண்டு தன் பிழைக்குக் கழுவாய் தேடுகிறார்.

மனமாற்றம் அடைந்த ராமநாதன் உலகைச் சார்ந்து காணும் பயணத்தை மேலும் தொடர்கிறான். அன்றாட வாழ்வில் மருத்துவ மனையில் நடைபெறும் நிகழ்ச்சிகளை எவ்விதப் புனைவுமின்றி வெளிப்படுத்தும் முயற்சி இக்கதையில் தலைசிறந்து நிற்கிறது.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் என்ற கிளர்ச்சி நடந்து கொண்டே இருக்கிறது. சீர்திருத்த இயக்கத்தார் பெரியார் இராமசாமியின் தலைமையில் தன்மான இயக்கமாக வளர்ந்து வந்தனர். இந்து மதத்தில் பார்ப்பனர் தலைமை மக்களாகப் பிறப்பால் பெற்றிருக்கும் உரிமையை மறுக்கும் வகையில் சீர்திருத்த இயக்கம் எழுந்தது. இது அந்தக் குலத்திற்கு வெளியிலிருந்து வந்த எதிர்ப்புக் குரல் ஆகும்.

'சோ'வின் நாவலாம் 'எங்கே பிராமணன்?' [14]என்ற படைப்பு இந்தக் கேள்வியை ஒரு பிராமணக் குடும்பத்திலேயே கிளப்பி அந்தக் குலத்தைச் சார்ந்தவரை எல்லாம் எப்படி நுணுக்கமாகச் சிந்திக்கச் செய்கிறது என்பதை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. இந்த உலக நடப்புகளுக்கு வெளி உலகத் தெய்வங்களின் கண்ணோட்டத்தையும் புராண மரபுக்கேற்பச் சேர்த்து வசிட்டரே அசோக்காக இந்த உலகில் பிறந்து பிராம

---

14. 'எங்கே பிராமணன்', சோ, நர்மதா வெளியீடு, சென்னை, ஆகஸ்டு, 1982.

மணன் யார், அவன் தன்மை என்னவென்று கேட்கும் நிலையில் அமைகிறது.

நாதன், அவர் மனைவி வசுமதி ஆகியோர்க்குப் பிறந்த அசோக் எல்லாப் பையன்களும்போல் அல்லாமல் சற்று மாறாக இருக்கிறான். அவனுக்குப் பூணூல் போடும் விழாவில் அது பற்றிய விளக்கம் வெளிநாட்டாரான எட்ரிச்சுக்கு விளக்கம் தருவதுபோல் முழுமையாக ஆசிரியர் தருகிறார். பின் அசோக் வாயிலாகப் பூணூல் போட்டவன் பிராமணனா எனக் கேட்கச் செய்து எதிர்ப்புக் குரலை எழுப்புகிறார். ரௌடி சிங்காரத்தின் மது மயக்கக் குரலில் அசோக்கிற்குப் பல உண்மைகள் விளங்கு கின்றன. இறுதியில் தான் கற்றவண்ணம் உண்மைகளை வெளி நாட்டு ஆய்வாளர் ஹிக்கின்ஸிடம் சொல்லும்போது பிறப்பால் யாரும் பிராமணனாகிவிட முடியாது. பிராமணனுக்குரிய ஒழுக்கத்தைப் பின் பற்றாதவரை யாரும் பிராமணன் அல்ல. பண்டைய வேத சாத்திரங்களை இன்றுள்ளோர் தமக்கு வேண்டிய வண்ணம் மாற்றிக் கொள்கின்றனர் எனக்கூறியதை அவன் குடும்ப நண்பராம் பாகவதரும் ஒப்புக்கொள்கிறார்.

சொந்த சாதியின் பேரால் தவறுகள் செய்வது, சாதி எதிர்ப்பின் பேரால் தீமைகள் புரிவது, குறள், வேதம் போன்ற வற்றை மக்கள் தன்னலத்திற்காகப் பயன்படுத்துவது ஆகிய வற்றை எள்ளல் முறையில் வெளிப்படுத்திப் பெரும்பாலும் வியாபாரிகளே இன்று எல்லாச் சாதியிலும் உள்ளனர். ஈசன் ஒருவன்தான் உண்மையான பிராமணனாக வரமுடியும் என முடித்துக் காட்டுகிறார்.

இன்றைய நிலையில் சமுதாயத்தில் இல்லாத ஒரு பொருளை இருப்பதாக எண்ணி ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொள்வதாகத் தம் படைப்பைச் 'சோ' படைத்துள்ளார். இது பிராமண குலத் தார்க்கும், சீர்திருத்த நெறியாளர்க்கும் ஒரு வகையில் விளக்கம் தரும் முயற்சியாகும்.

ஆப்பிரிக்காவிலிருந்து சென்னைக்கு வந்த சியாமளா என்ற கிழவி புதிய வீட்டில் குடியேறினாள். கணவர் சதாசிவம் மாரடைப்பால் இறந்து விட்டதால் தனியாக வாழ்க்கை நடத்தி யதில் இரவில் ஒருவகை அச்சம் அவளை அலைக்கழித்தது. தான் குடிபுகுந்த வீட்டில் பல ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு பெண் தூக்குப் போட்டுக்கொண்டு செத்துப்போன செய்தி அவளுடைய மனத்தை மேலும் கலக்கியது. அவளிடம் ஏதாவது வேலை கேட்டு இளம்பெண் சுஜரிதா வந்தாள் அவளைத் தன் துணைக் காகச் சியாமளா வேலைக்கு அமர்த்திக் கொண்டாள்.

ஒருநாள் இரவு அவள் வீட்டில் ஓர் இளைஞன் திருடன் போலப் புகுந்தான். அவன் தன்வீட்டில் திருட வந்தும் அவனுக்கு ஒரு தாய் போல் உணவு தந்து, மருந்து கொடுத்துப் பின் தூங்க வும் இடம் தந்தாள்.

ஏழைக் குடும்பத்தில் பிறந்து கணவனுடன் ஆப்பிரிக்கா சென்று அங்குத் தன் ஒரே மகனையும் பறிகொடுத்த தனிமை அவளைத் துன்புறுத்தியது. பத்திரிகையில் வந்த விளம்பரத்தில் வீட்டை விட்டு ஓடிப்போன சித்தார்த் என்பவன்தான் தன் வீட்டிற்கு வந்திருப்பவன் என அறிந்ததால் அவனுக்கு வேண்டிய உதவி எல்லாம் செய்கிறாள். வேலைக்காரியிடமும் சுஜியிடமும் அவனைத் தன் தங்கை பையன் என்று சொல்லி வைத்தாள். அவனுக்கு வேண்டிய துணிமணிகள் எடுத்துத் தந்து தன் வீட்டி லேயே வளர்க்க எண்ணினாள்.

வேலை கிடைக்காமல் தன் சொந்த வீட்டில் மன்னியின் நகையைத் திருடி ஹைதராபாத் போன்ற நகரங்களில் சென்று சுற்றிப் பின் சென்னை திரும்பிய சித்தார்த், சியாமளா காட்டிய தாயன்பின் முன் தன் தவறுகளை எண்ணிப் பார்த்தான். செல்லாக்காசாகி மதிப்பிழந்த அவனைச் செல்லுபடியாகும் காசாக்கச் சியாமளா முயன்றாள். அவளன்பு வளர வளர அவனிடம் பொறுமையும் பொறுப்பும் முகிழ்த்தன. அவன் தனியே சிந்தித்துப் பார்த்தபோது தன் வீட்டில் மன்னி காட்டிய அன்பும் அவனுக்கு விளங்கியது.

ஒருநாள் அவன் சுஜியைப் பார்த்தான். அவளை மறுபடியும் பார்க்க வேண்டுமென்று நினைத்தான். தனக்கு வேலை கிடைத்த இடத்தை ஒட்டியே அவள் வேலை செய்யும் மருத்துவமனையும் இருப்பதை அறிந்து மகிழ்ந்தான். வழியில் அவளுக்கு நேர்ந்த துன்பத்தைத் தானே சென்று தவிர்த்தான். அவளுதவியால் அவனுக்கு மருத்துவமனையிலேயே ஒரு வேலையும் கிடைத்தது. அவளிடம் தன் வாழ்க்கையை மறைக்காமல் கூறினான். அவளும் அவனை ஏற்றுக் கொண்டாள். சித்தார்த் தாழ்வு மனப்பான்மை யால் வீட்டைவிட்டு ஓடிவந்ததை எண்ணி வருந்தினான். தனக் குதவிய முன்னாள் போலீஸ் அதிகாரி சண்முகம் வாயிலாக நகைக் கடையில் விற்ற மன்னியின் நெக்லசை மீட்டான்.

சியாமளா முன்னதாகவே இச்செய்தியெல்லாம் அவன் குடும் பத்திற்கு எழுதியிருந்ததால் அவர்கள் யாவரும் அங்கு வந்து சேர்ந்தனர். தன் அண்ணனிடமும் தாத்தாவிடமும் சித்தார்த் மன்னிப்புக் கேட்டான். சுஜரிதா, சித்தார்த் மணம் இனிதே முடிந்தது. இவ்வாறு வாழ்க்கையில் தறிகெட்டுப் போன

சித்தார்த்தையும் வாழ வழி தேடிய சுஜரிதாவையும் ஒன்றாக இணைத்து நல்வழி காட்டிய சியாமளா மனித அன்பொளி வீசும் ஒற்றை நட்சத்திரமாக லக்ஷ்மியின் படைப்பில் விளங்குகிறாள்.[15]

'அடிச் சுவடுகள்' என்ற ஹம்சா தனகோபாலின் படைப்பு[16] மருத்துவ மனையில் நூற்றுக்கணக்கான நோயாளிகளையும் மருத்துவரையும், செவிலியரையும், அங்குலவும் பல்வேறு மனிதரையும் பற்றிய உண்மை ஓவியமாக விளங்குகிறது.

இதன் தொடக்கமும் முடிவும் ஒரு 'சானிடோரிய'மாகவே உள்ளது. கதைத் தலைவி சரயூவைச் சுற்றிச் சுற்றி வந்து பல உண்மை நிகழ்ச்சிகளையும், நடமாடும் மக்களையும் வெளிப் படுத்தும் முயற்சியில் வெற்றி பெறுகிறது.

சரயூ தன் பக்கத்து வீட்டில் வாழ்ந்த திலீபனைக் காதலித்து மணக்க முடியாமல் முரளியை மணந்து அவனால் புறக்கணிக்கப் பட்டு நோய்வாய்ப்பட்டு 'சானிடோரிய'த்தில் சேர்கிறாள். அங்குத் திலீபனை மருத்துவராக மறுபடியும் சந்திக்கிறாள். படிக்கும் காலத்திலேயே அவர்கள் காதலுக்கு இடைவெட்டாக இருந்த ஜெயராமனும் எக்ஸ்ரே பகுதியில் அங்கு வேலை செய் கிறான்.

திலீபன் நளினாவை மணந்திருந்தும் அவளது கட்டற்ற வாழ்வால் கடைநிலைக்குத் தள்ளப்பட்டு அவள் பெற்ற பாபு வுக்குத் தந்தையாக மட்டும் வாழும் போது மறுபடியும் சரயூவை அடைந்து அவளை மணந்து வாழ எண்ணுகிறான்.

சரயூவின் அண்ணனோ அவளிடமுள்ள கொஞ்சம் பணத் தையும் சுரண்டி வாழ முனைகிறான். சரயூவுடன் நோயாளியாக வந்து சேர்ந்த செவிலி தங்கம், வாழ்க்கையைப்பற்றி முழு உண்மைகளைக் கசப்புத் தெரியாமல் இனிக்க இனிக்கப் பேசி உணர்த்துகிறாள்.

நோயாளிக்கு உதவும், அழகிய சிறு கவிதைபோல நடமாடும் விஜி, தான் தலைமை மருத்துவரின் தொடக்ககாலக் காதலில் பிறந்த பிள்ளை எனக் கண்ணம்மா வாயிலாக அறியும் போது வாழ்வின் உண்மை மேலும் விரிகிறது.

---

15. ஒற்றை நட்சத்திரம், லக்ஷ்மி, திருமகள் நிலையம், சென்னை, அக்டோபர், 1982.

16. அடிச்சுவடுகள், ஹம்சா தனகோபால், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, ஜூன் 1982.

நகைச்சுவை நடிகரின் நாய் கூடச் சரயூவைக் காப்பாற்றும் போது, மனிதப் பதர்கள் அவளை வாழவிடாமல், இறுதியில் குணமாகி வெளியே செல்லும்போது சூழ்ச்சி வலையில் சிக்கச் செய்து திலீபன் கனவை அழித்துச் சரயூவை மடியச் செய்கின்றனர்.

சரயூவின் மன ஓட்டங்களாகப் பல நிகழ்ச்சிகள் அலை அலையாக வருவதும் மருத்துவமனைப் பின்னணி சிறந்த களமாக அமைவதும் இதன் சிறப்பாகும். மனவோட்டம் வாழ்வின் பகுதியை உணர்ச்சி பொங்கக் காட்டுகிறது.

திருமணமாகிப் பல குழந்தைகளுக்குத் தகப்பனாகிவிட்ட மூர்த்தியின் கூடா ஒழுக்கத்தைப் பொறுக்க முடியாத அவன் மனைவி சந்திரா படும்பாட்டைக் காட்டுகிறது சிவசங்கரியின் 'மூக்கணாங் கயிறு'.[17] தன் தந்தை தம் அலுவலகத்தில் பணி புரியும் நளினியுடன் தொடர்பு கொண்டிருப்பதைக் கண்ணால் கண்டு வந்த மகன் மனோ ால் அதைத் தாங்கிக்கொள்ள முடியாமல் அதை அம்மாவிடம் ஆற்ற முடியாமல் கொட்டி விடுகிறான். அவளோ அதுபோல் பல நிகழ்ச்சிகளை முன்னரே கண்டவள். தன் கணவனின் தகாத போக்கை மாற்றத் தானே ஒரு தீர்மானத்துக்கு வருகிறாள்.

நளினியிடம் நேரே சென்று பேசி அவளுக்கும் தன் கணவனுக்கும் மணமுடிக்கிறாள். பின்னர் அவர்களிருவரையும் தேனிலவுக்குப் பங்களூர் அனுப்புகிறாள். திரும்பி வந்த போது கணவனை மட்டும் தன் வீட்டுக்கு அழைத்து வந்து மகன் மனோவின் முன்னிலையில் தான் ஒரு நளாயினி இல்லை எனவும், தன் குழந்தைகளுக்குத் திருமணம் செய்ய நினைக்கும்போது ஊரார் தன் கணவன் ஒழுக்கங் கெட்டவன் என நினைக்காமல் இரண்டு பெண்டாட்டிக்காரன் என்ற பாதுகாப்பான அமைப்புக்குள் இருக்க நினைத்தாள் எனவும், அதுவே தன் குழந்தைகளுக்குப் பாதுகாப்பு எனவும் கூறினாள். இனி அவள் பூட்டிய 'மூக்கணாங் கயி'றாகிய இரண்டாவது மணம், மூர்த்தியின் போக்கைக் கட்டுப் படுத்தும் எனவும் கூறி நளினியுடனே அவனை வாழுமாறு வேறுபட்ட வழியைக் காட்டினாள்.

பெண்கள், திருமணம் என்ற கட்டுப்பாட்டில் சிக்கிக் கணவனின் ஒழுக்கக் கேட்டைச் சகித்துக் கொண்டிருக்கும் புராண

17. மூக்கணாங் கயிறு, சிவசங்கரி, திருமகள் நிலையம், சென்னை, ஆகஸ்டு, 1982.

நளாயினியின் போக்குக்கு எதிராகச் சிவசங்கரியின் சந்திரா செயல்படுகிறாள். திட்டமிட்டுத் தன் கணவனுக்கு இரண்டாம் திருமணம் என்ற மூக்கணாங் கயிறு மாட்டியதுடன் இச் சமுதாயத்திலுள்ள கணவன் மனைவி உறவு நிலையைத் தாண்டித் தனக்கும் தன் பிள்ளைகளுக்கும் பாதுகாப்பான ஒரு நற்பெயரைத் தேடிச் சமூக மறைப்பைக் கட்டிக் கொள்கிறாள். இதனை எவ்வித ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தியுள்ளார் சிவசங்கரி.

இன்றையச் சமூகச் சூழலில் திருமணம் செய்யும் நிலையும் செய்துகொண்ட நிலையும், பல சிக்கல்களாக அமைந்துள்ளன. பெண்கள் வேலைக்குப்போவதால் அதனடிப்படையில் ஆண்கள் அவர்களைப் பணம் சம்பாதித்துத் தரவேண்டும் என்றும் கருதுவதை மீனாட்சி சுந்தரம், மாதங்கி என்பவர் வாழ்வைக்கொண்டு காட்டி, உண்மையாக ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டுவிட்டுக் கொடுப்பதில்தான் வாழ்வின்பம் அமைகிறது எனக் கிருஷ்ணமணியின் 'பிணைப்பு' உணர்த்துகிறது.[18]

குதிரைப் பந்தயத்தில் மூழ்கிய ராமசுப்பு தன் மனைவி சந்திராவைப் புறக்கணித்தபோது அவள் தவறிப் போக வாய்ப்பேற்படுகிறது. ஆயினும் அவளே அதை உணர்ந்து திருந்தி நன்னெறியில் வாழ முற்படும்போது கணவனைக் காப்பாற்றி அவன் சந்ததியையும் வாழவைக்கும் முயற்சி இப்பிணைப்பில் வெளிப்படுகிறது.

திருமணமாகாத உடன்பிறப்புகள் அலுவலகங்களில் வேலை செய்யும்போது மனத்திற்குப் பிடித்தவர்களை மணக்க ஏற்படும் சூழல்கள், தடைகள் ஆகிய இவற்றை அறிவு, உணர்வு என்பவற்றின் அடிப்படையில் முடிவு கட்டும் நிலை ஏற்படுகிறது. இதனைச் சௌந்திரா, தேசிகன் முறையே ரமேஷ், வசந்தரா ஆகியவர்களை மணக்கும் பிணைப்பில் நடுத்தரக் குடும்பங்கள் வரதட்சணை, சீர்வரிசை என்பவற்றால் சீரழிவதையும், காதல் மணம் என்ற பெயரால் நடைபெறும் பெற்றோர்ப் புறக்கணிப்பைத் தவிர்ப்பதையும் ஆங்காங்கே நடைபெறும் ஆண் பெண் உறவு நிலையின் எல்லை மீறல்களையும் நன்கு பிணைத்துக் காட்டுகிறது இந்த நாவல்.

இக்காலத்தில் திருமணம் என்பது பொருளாதார நிலையில் படும் அவலத்தையும், பழமையின் பெயரால் படும்பாட்டையும்

18. பிணைப்பு, கிருஷ்ணமணி, திருமகள் நிலையம், சென்னை, 1982.

காட்டி, விட்டுக் கொடுத்து, நிதானமாக நன்மை தீமையைக் கணக்கிட்டு வாழ்க்கையை உருவாக்கும் முயற்சியை இது சுட்டிக் காட்டுகிறது.

பெண் விடுதலைப் பற்றிப் பேசும் இந்நாளில் உழைக்கும் பெண்கள் எத்தகைய துன்பப்படுகின்றனர் என்பதை மிக விளக்க மாக எடுத்துக் காட்டியுள்ளார் ராஜம்கிருஷ்ணன்.[19] ஆண் பெற்றுள்ள சலுகைகள் அளவில்லாதவை. மீனா என்ற பெண்ணின் பிறப்பு பனிமூட்டமாக உள்ளது. கான்வெண்டில் வளர்ந்த வாய்ப்பைப் பெற்றும் அதனைப் பின்னர் இழந்த மீனா ஆயா அன்னம்மாள் அரவணைப்பிலே பெரியார் நகரில் 'ஊருணிக் கரைப் புதுமலர்' போல் வளர்ந்து வந்து கல்லூரியில் படித்துப் பட்டமும் பெற்றாள்.

'ஞானசாமி மிஷின் சில்ட்ரன் கல்ச்சுரல் அகாடமி' என்ற பள்ளியில் பணி செய்யும் போது அவள் பட்ட பாட்டை நடப்பிய லுக்கு ஏற்பக் கூறிமுடிக்கிறார் ஆசிரியர். மேலாளர் ராமலிங்கம், நம் நாட்டுப் பண்பாட்டைப் பற்றி நூல் எழுத மீனாவின் துணையை நாடித் தன் உறவினன் சாரங்கனின் மனைவியாக்கு கிறார்.

ஆனால் அதற்குள்ளே எத்தனை போராட்டங்கள்! அவள் குடியிருந்த வீட்டுக்கார மேஸ்திரியின் மோசத்திட்டம், உயர்ந்த குடும்பம் போல் வேடமிட்டுத் திருடியே வாழ்வு நடத்தும் பெண்கள் நிலை, பூக்கட்டி வாழ்வு நடத்தினாலும் பிறர்க்கு வேண்டிய சமயத்தில் தன்னலமின்றித் துணை செய்யும் தேவானையின் தியாகம், கணவனையும் பள்ளியையும் அடக்கி ஆணை செலுத்தும் தலைமை ஆசிரியை மங்களாவின் அரக்கத் தன்மை—இப்படி எண்ணற்ற சூழலில் மீனா சிக்கிச் சீரழிகிறாள்.

தன் பிள்ளைக்குத் தாயாகும் உரிமை உண்டே ஒழிய அது பற்றி வேறு எந்த உரிமையும் அவளுக்கில்லை என ஆண் உரிமை கொண்டாடும் கணவன் அவளுடைய பொருளாதார வலிமை யையும் பறிக்க அவளை வேலைக்குப் போக வேண்டாம் என வீட்டில் கூண்டுக் கிளியாக அடைக்கும் கொடுமை தீப்போல் பரவுகிறது. இத்தீயிலும் குளித்து வெளிவந்து தானாக வாழ வேண்டும், உரிமை பெற்று வாழவேண்டும் என்று மீனா நினைந்து வாழும்போது அவளைப் புறக்கணித்த கணவன் மனம் திருந்தி

---

19. ஓசைகள் அடங்கிய பறகு, ராஜம் கிருஷ்ணன், பாரி புத்தகப் பண்ணை, சென்னை, ஜனவரி, 1982.

யவனாக அவளிடம் புகலிடம் தேடிவரும்போது பழைமையின் ஆதிக்க ஓசைகள் அடங்கிய பிறகு புதிய வாழ்வின் ஒலிகள் மட்டும் கேட்கும் நிலையை உணர்த்துகிறார் ராஜம் கிருஷ்ணன்.

தமிழகத்தில் பெண்கள் நிலைபற்றித் தமிழ் நாவலின் தொடக்ககால முதல் பல்வேறு கதைகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. இப்போது ஜெயகாந்தனின் சுந்தரகாண்டம்[20] என்ற நாவல் இக்காலப் பெண்களின் நிலை பற்றி நல்விளக்கம் தருவதாக வெளிவந்துள்ளது.

நம் பெண்கள் அறிய வேண்டிய உண்மைகள் பல உள. பெண் ஒரு தனிப் பிறவி அல்லள். காதல் கொள்வது, திருமணம் செய்வது, அல்லது பெண் தன் உரிமையுடன் தனித்து இருப்பது என எந்த நிலையிலிருந்தாலும் அவள் சமூகத்தின் பாதுகாப்புக்கு உட்பட்டவள். காதல், திருமணம் இல்லற வாழ்க்கை என்பவை எல்லாம் சமூகச் சம்பந்தப்பட்டது என்பதை அறிவிக்கும் நாவல் இது.

சீதையின் துயரத்தை வெளிப்படுத்துவது இராமாயணத்தில் உள்ள சுந்தர காண்டம் என்ற பழம் பெயரின் பொருள் அழுத்தமாகும். பெண்கள் தங்களுக்குரிய வழிகாட்டியாக இராமாயணச் சீதையைக் கொள்ள வேண்டும் என இந்த நாட்டின் பெரியோர் பலரும் அறிவுறுத்தி வருகின்றனர். அந்த எண்ணத்தைக் கருத்தில் கொண்டு 'சுந்தரி' ஆசிரியர் சுந்தரராம சர்மாவின் மகள் சீதாவின் கதையை வடித்துதருகிறது ஜெயகாந்தனின் 'சுந்தர காண்டம்'. தமிழ் எம்.ஏ. முடித்து டாக்டர் பட்டத்துக்கெனப் பெண்கள் திருமணம் எனும் சமூக பந்தத்தால் ஏற்படும் கெட்ட விளைவுகளை எப்படித் தவிர்ப்பது, நல்லதை எப்படிப் பாதுகாப்பது என்ற போக்கில் ஆராய்ச்சி செய்து வந்தாள் சீதா. அவள் திருமண வாழ்வே ஒரு உண்மை ஆராய்ச்சிக்காக வளர்வதை இந்த நாவல் காட்டுகிறது.

தந்தை சர்மா பணிபுரிந்த பத்திரிக்கை முதலாளி சுகுமாரன் முதல் மனைவியை இழந்தவன் எனினும் தம்முடைய பொருளாதார நிலையைக் காப்பாற்ற வேண்டித் தம்மகள் சீதாவை அவனுக்குத் திருமணம் என்ற பெயரில் 'விலை' பேசி விடுகிறார். சீதாவுக்கு ஹரிஜனப் பெண் மாரியம்மாள் என்ற மரியம், தமிழ்ப்

---

20. சுந்தரகாண்டம், ஜெயகாந்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, செப்டெம்பர், 1982.

பயில வந்திருந்த சோவியத் பெண் காதரீனா ஆகியோருடைய நட்பால் சோவியத் பெண்ணுரிமை பற்றிய பெருமை புலப்பட்டாலும், சூழ்நிலையைப் புறக்கணிக்க முடியாமல், சுகுமாரனை மணந்து கொள்கிறாள். எனினும் தன் உரிமையைச் சற்றும் விட்டுக் கொடுக்காமல் தனி வாழ்வு வாழ்கிறாள்.

சுகுமாரன் பணப் பெருக்கத்தாலும், விதவைத்தாய் பங்கஜவல்லியம்மாள் காட்டிய பாசத்தாலும் எல்லாத் தீய சகவாசங்களும் கொண்டவனாயிருந்தான். தன் அம்மாவுக்கு 'நர்'சாக இருந்த விதவை மீனாவுடன் கள்ளத் தொடர்பு கொண்டிருந்தான். அதனை அவன் தாய் அறிந்திருந்தும் சீதாவைத் திருமணம் செய்து வைத்தால் மகன் மாறுவான் என நம்பினாள்.

சீதா பெயரளவில் சுகுமாரன் மனைவியாக வாழ்ந்தாலும் தன் உரிமையை எவ்வகையிலும் விட்டுக் கொடுக்காமல் தன் தனித் தன்மையைக் காப்பாற்றும் போது சுகுமாரனின் இழிந்த போக்கால் சுந்தரராமசர்மா மனந்திருந்தித் தன் ஆசிரியர் பதவியிலிருந்து விலக எண்ணியதுடன் மகள் வாழ்வை வீணாகப் பலியிட்டு விட்டதாக வருந்தினார். சுகுமாரனின் விருப்பத்தால் 'சுந்தரி', 'சுதந்தரி' ஆகிய இரு பத்திரிக்கைகளுக்கும் சீதா ஆசிரியர் ஆகிறாள். பத்திரிக்கையைச் செவ்விய நெறியில் நடத்த சீதா தன் நண்பர்களாம் மரியம், பெண்விடுதலைக்குப் பாடுபடும் 'பாரதன்' என்ற புனைபெயரில் எழுதி வந்த ராமதாசன் ஆகியோருடன் தன் பணியை நடத்துகிறாள். தொழு நோயாளிகள் முதல் யாவர்க்கும் சமூக சேவை செய்யும் டாக்டர் கிரிதரனைச் சீதா தன் பிறந்த நாள் விழாவில் சந்தித்த போது ஒரு தனி ஈடுபாடு கொள்கிறாள். அவனைச் சுகுமாரன் தன் மனைவியின் காதலன் எனக் கருதி நெஞ்சு துடிக்கிறாள். ஆனால் அதே சமயத்தில் அவனுடன் அவள் விரும்பினால் இன்பம் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் தன் மனைவி என்ற பட்டத்தை மட்டும் சீதை தாங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்கிறான். அத்துடன் மீனாவை அவன் மணந்து கொள்ளுமாறு தனகுச் சீதா அறிவுரை கூறியதை அவன் ஏற்க முடியாது எனவும் கூறிய போது அவனுடைய இராவணத் தன்மை நன்கு புலப்பட்டது. எனவே தனக்குப்பாதுகாப்பான இடத்தை உரிமையோடு தற்காலிகமாகத் தேடிய சீதா, ராமதாசனின் வீட்டைப் புகலிடமாக அடைகிறாள் இந்நிலையில் புதுமைப் பெண்ணொருததியின் புதிய வாழ்வு தொடங்குகிறது.

இந்தப் படைப்பு, நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த பெண் எப்படிப் பொருளாதாரச் சூழலால் பாதிக்கப்படுகிறாள் எனவும்,

பணம்படைத்தவர்கள் எப்படி 'இராவண'னாகச் 'சீதை'களைக் கவர்ந்து போகப் பொருளாகத் துய்க்க நினைக்கின்றனர் எனவும் பொருளாதாரத்தில் பெண்கள் உரிமை பெற்ற பொதுவுடைமைச் சமூகத்தில்எப்படி புதிய காதரீனாகளாகமாறமுடிகிறது, எனவும் காட்டுகிறது. மேலும்ஆண்களின் இராவணப்போக்கை உண்மை யான பெண் விடுதலை பூக்கும் பொதுவுடைமைச் சமூகம் தான் அழித்துச் 'சுந்தரகாண்ட'த் துன்பத்திற்கு விடுதலை கொடுக் கும் என்ற உண்மையை நன்கு உணர்த்துகிறது.

கதை மாந்தரின் மன ஓட்டங்கள் பல இடங்களில் வெளிப் பட்டுக் கதை நிகழ்ச்சியை உருவாக்குகின்றன. சீதா கொணர்ந்த 'ஹே சீதா' என்ற கதைத் தாள்கள் காற்றில் பறக்கா வண்ணம் அவளிடம் சுகுமாரனே பாதுகாப்பாக அளிப்பது, பனிப்படலம் கவிதல், கதவு உறுதியாகத் தாழிடப்பட்டிருந்த நிலை, கதைத் தலைப்புப் போன்றவை நல்ல குறியீடாகக் கதை மாந்தரின் கொள்கையையும் வரப்போகும் கதை நிகழ்ச்சிகளையும் உணர்த்துகின்றன. குறிப்பாகப் பெண் விடுதலைக்கு வழியாக அமைவது பொதுவுடைமைச் சமூகம்தான் என்ற உண்மையைக் கலை வடிவில் அமைத்துக் காட்டுகிறது 'சுந்தரகாண்டம்.'

பொதுவாகத் தமிழில் வெளியாகும் நாவல் போக்கிலிருந்து வேறுபட்டது டி. செல்வராஜ் எழுதிய 'மூலதனம்' என்ற நாவல்.[21] சுதந்திரத்திற்கு முன்னர் மக்களிடையே மலிந்துள்ள ஏற்ற தாழ்வுகளுக்கும் சுதந்திரத்திற்குப் பின்னர்க் காணும் அவ் வேறுபாடுகளுக்கும் இடையே அமைந்த சூழலை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது இந்த நாவல். படித்த மத்திய தர வர்க்கம் காணும் கனவுகள் பலவகைப் பட்டவை. அவற்றைச் சமூகப் பொருளாதார அரசியல் பின்னணியிலிருந்து காணும் போது பல்வேறு கோலங்கள் தென்படும். பழைய நம்பிக்கை களும் புதிய நம்பிக்கைகளும் ஒவ்வொரு வகையில் வேறுபட்டு வளர்வதைச் சிறுசிறு வளர்ச்சியைக்கூட ஒன்று விடாமல் காட்டும் முயற்சியில் 'மூலதனம்' தனியிடம் பெறுகிறது.

வாழ்வில் துன்பப்பட்டாவது தன்னைச் சேர்ந்தவரையும், அண்டியவரையும் முன்னுக்குக் கொண்டு வந்தால், அவர்கள் இந்த நாட்டின் வளர்ச்சிக்கு நல்ல துணை ஆவர் என்ற நம்பிக் கையில் சாம்பசிவம் மேடென்றும் பள்ளமென்றும் பார்க்காமல் தம் உடம்பையே பணயம் வைத்து உழைத்தார். கல்லூரிச் சூழல் அவருடைய தன்னலமற்ற பண்பு வளர்வதற்கு ஒரு வகை

---

21. மூலதனம், டி. செல்வராஜ், பூக்கூடைப் பதிப்பகம், சென்னை-3, 1982.

யில் துணை செய்தது. ஆனால் விஞ்ஞானி இந்த தேசத்தின் மூலதனம்; அவன் அறிவு இந்த நாட்டுக்குப் பயன்படுவதுதான் தேசிய நலனுக்குகந்தது என்று எண்ணினார். கல்வி நிலையங்களின் தலைவர் இட்ட சட்டங்களால் உண்மை ஒளி படைத்த மாணவர் உரம் பெற முடியாதபோது வெளிநாட்டுக்கனுப்பி விஞ்ஞானி ஆக்க முன் வந்தார் சாம்பசிவம். அப்படி அவரால் விஞ்ஞானி ஆகித் தாயகம் திரும்பிய மருதாசலம், தாய்நாட்டின் மூலதனமாக அமைவான் எனக் கனவு கண்டார்.

தம் தந்தையின் மறைவுக்குப் பின் படாத பாடுபட்டுத் தம் உடன் பிறந்த கணேசனை டாக்டராக்கினார். சோமசுந்தரத்தை வக்கீலாக்கினார். ஆயினும் அவர் எண்ணத்திற்கெதிராகக் கோதண்டராமன் ஏழைகளுக்குத் தொண்டனானான். தம்மால் உருவாக்கப்பட்ட தம்பியர் சமுதாயத்தின் நோயையும் குறையையும் பயன்படுத்தித் தத்தம் பணத்தைப் பெருக்கிச் சுகவாழ்வு வாழவே ஆசைப்பட்டனர். குடும்ப மையத்திலிருந்து தனியே சென்று 'உரிமை' வாழ்வு வாழ்ந்தனர். சமுதாயம் தப்பு என்று பொதுவாகக் கூறும் அறநெறியிலிருந்து மாறிப் போனாலும் பணத்தைத் திரட்டி, மருத்துவ வேலையை நடத்தினால் யாரும் எதுவும் பழி சொல்லாத 'உரிமை' கிடைப்பதைக் கண்டு பேராசிரியர் சாம்பசிவம் திகைக்கிறார். அறத்திற்கு வாதாட வேண்டிய வக்கீல், முதலாளியின் பணத்திலும் அவர் அளிக்கும் இன்ப போதையிலும் மயங்கித் தொழிலாளி வாழ்வுக்கு எதிராக வாதாடும் நிலையைக் கண்டு மனம் ஒடிகிறார். படித்தும் பதவி பெறாமல் 'வீணாக'ப் போனான் என்று கருதிய தம்பி கோதண்டராமனோ ஏழை எளியவர் கண்ணீரைத் துடைப்பதில் எத்தகைய துன்பத்தையும் ஏற்கத் தயங்கவில்லை.

தன்னல இன்பத்திற்கு மற்றவர் வாழும்போது தம்மால் உருவாக்கப்பட்ட விஞ்ஞானி மருதாசலமாவது தாயக நலனுக்குப் பாடுபட மாட்டானா என்று எதிர்பார்த்தார் சாம்பசிவம். முதலாளி நாதனின் மூலதனம் வெறும் பணம். அதனை இழக்காமலிருக்க அவர் எதையும் இழக்கத் தயாராயிருந்ததைச் சாம்பசிவம் உணர்ந்தார். திட்டங்கள் என்பன யாரையும் ஏன் சொந்த மனைவியையும் கூடப் பலிகொடுத்து ஏராளமான மூலதனத்தைப் பெருக்கிக் கொண்டே இருக்க வேண்டும் என்பது அவர் கொள்கை. மூலதனம் பற்றிய இந்த வேறுபட்ட கருத்தைச் சாம்பசிவத்தால் உணர முடிந்தது. உழைப்பாளிகள் தாம் இந்த நாட்டின் உண்மையான மூலதனம் எனக் கோதண்டராமன் சொல்லும் சொல்லும் தம் கருத்தோடு மாறுபடுவதை உணர்ந்

தார். பணம், அறிவு, உழைப்பு என்ற மும்முனைகளை அவர் உணர்ந்தாலும் தாம் வாழும் நடுத்தர வாழ்வுச் சூழலில் அறிவு கைகொடுக்கும் என நம்பி மருதாசலத்தை இந்த நாட்டிற்கு உழைக்கும் விஞ்ஞானியாக வேண்டுகிறார்.

காவலர் என்பவர் உண்மையில் எவற்றைக் காக்கின்றனர் என்பதைக் கோதண்டமும் அவரைச் சார்ந்தவரும் படும் துன்பங்களை நேரடியாகக் கண்டுணர்ந்தார். இந்த நாட்டு ஆய்வுக் கூடத்தில் தனக்குரிய வாய்ப்பும் வசதியும் கிடைக்காத விஞ்ஞானியாக மருதாசலம் துன்பப்படும்போது வெளிநாடு போவது பற்றிய சிந்தனை அவனை அலைக் கழிக்கிறது. தாம் வளர்த்த விஞ்ஞானி தம் பேச்சைக் கேட்டுத் தியாகம் புரிந்து இந்த நாட்டிலேயே தங்குவான் என்று சாம்பசிவம் அறநெறியில் எண்ணிக் கொண்டிருக்கிறார். ஆயினும் இந்த நாட்டில் விஞ்ஞானி என்ற பெயரில் சோம்பேறி வாழ்வு வாழாமல் வெளி நாடு சென்று தன் அறிவைப் பயன்படுத்த முடிவெடுக்கிறான் மருதாசலம். அம்முடிவு சாம்பசிவத்திற்கு அதிர்ச்சி தரும் முடிவாக இருந்தது. ஆயினும் கோதண்டராமனின் வழியாவது இந்த நாட்டுக்கு நல்வழி காட்டட்டும் என்ற மணி ஓசை எழுகிறது.

இன்றைய சூழலில் உண்மையான மூலதனம் சிதையாமல் விருக்க உழைப்பவர் தன்னலமின்றிப் பாடுபடவும். எண்ணற்ற துன்பங்களை ஏற்றுக் கொள்ளவும், வெறும் அறிவோ, பணமோ உண்மையான மூலதனம் அன்று எனவும், அறிவு நாட்டமெல்லாம் வாழ்வின் வசதியில் தன்னைத் தானே பலியிட்டுக் கொண்டு அதனை எதிர்பார்த்து நிற்பது நிழலை நம்பி வழி நடந்து செல்வதுதான் எனவும் வாழ்க்கையில் உண்மையை உணர்த்துகிறது இந்த நாவல். மற்ற நாவல்கள் செல்லும் வழியிலிருந்து மாறித் தனக்கெனத் தனி வழி வகுத்துக் கொள்வதில் சிறந்து நிற்கிறது.

சின்னஞ்சிறு சிற்றூர் மக்கள் வாழ்க்கையை உள்ளபடி படம் பிடித்துக் காட்டுவதில் முழுவெற்றி பெற்றுள்ளது. பூமணியின் 'வெக்கை'.[22] சமுதாயத்தின் பிடிக்குள் சிக்கிக் கொள்ளாமல் மான அவமானத்திற்கு அஞ்சி ஆனால் மானமே தலை எடுத்துச்

22. வெக்கை, பூமணி, படைப்பகம், 43 வாணியர் தெரு, சென்னை, 14, அக்டோபர், 1982.

சிலிர்த்து நிற்பது எப்படி எனக் காட்டுகிறது இந்த நாவல். சின்னஞ்சிறுவன் சிதம்பரத்தின் உள்ளம் பெரியவர் அன்பின் அணைப்பில் தோய்ந்து வளரும் போது குடிப்பெருமை காக்கப் போராடும் தனிநிலையின் சிறப்பு நிலை அடையும் கதை இக் கதை ஆகும். அரிவாள் வெட்டு, சிறு குண்டு எறிதல் இப்படி வெக்கை தொடங்குகிறது.

சின்னப்பையனுக்குத் தக்க 'கூறுகெட்ட வேலையைப்' பார்த்து விட்டதாகப் பெரியவர் நோவார்களோ என்ற அச்சம் பீறிடுகிறது. தலைமறைவு வாழ்வின் ஒவ்வொரு புள்ளியும் சிறு சிறு செயல் வடிவில் ஆண்மையின் விடிவெள்ளிகளாகப் பளிச்சிடுகின்றது.

செய்யத்தகாத ஆனால் செய்யத் தீர்மானித்தச் செயலால் குடும்பமே எப்படிச் சிதைந்து திக்குக்கொரு சிதறலாகச் சிதறி ஓடுவதைக் காட்டும்போது அதில் கழிவிரக்கமில்லை. செயல் முடிந்த பெருமிதத்தின் இறுமாப்பு எக்காளமிடுகிறது.

மூத்தவன் கொலைப்பட்டான். பழிக்குப்பழி வாங்க அந்தக் குடும்பமே பல்லைக்கடித்துக் கொண்டிருந்தது. செய்தசெயலை ஊரார் காட்டிக்கொடுக்க மாட்டார்கள் என்ற நல்லெண்ணம் இருந்தாலும் தலைமறைவாய் இருக்கும் நெஞ்சுரம் வெக்கை முழுதும் காட்டிவிடுகிறது. மலைமீது ஏறும் போதுள்ள எண்ண ஓட்டங்களைச் செவ்வையாக இயற்கைப் பின்னணியுடன் பிணைத்து விடுகிறது. பாறைகள், செடிகள், சிறு உயிரினங்கள் தாம் தலைமறைவினர்க்கு உற்றதுணை.

பின்னோக்க ஒளியில் குடிகார மாப்பிள்ளை வாழ்விலும் தனிப்போக்கும், மானக்காப்பும் ஒளிவிடும். ஆடுமேய்த்த அண்ணனின் உள்ளன்புக்குத்தான் எல்லையே இல்லை. நிலத்தகராறு ஏழையை மேலும் ஏழைஆக்க அவர்கள்குடும்பம் இடர்ப்பட்டது. பழிதீர்க்கும் முறையில் அண்ணன் கொலையால் அவன் குடும்பமே வெந்தது. சிற்றூரில் மாடசாமி கொடை வழக்கம் மக்களிடையே உள்ள பழக்கவழக்கங்களைக் காட்டிக் கொலை செய்யும் பழக்கமும் அதன் உள்வேராகக் காட்டும். தலைமறைவுவாழ்வில் தாய்தங்கை உற்றாரைப் பார்க்கும் உள்வேகமும் உருவெடுக்கிறது. செய்யாத குற்றத்துக்குத்தண்டனைதரும் வழக்கு மன்றத்திலிருந்து சின்னஞ் சிறுவன் சிதம்பரம் தப்பப் பெரியோர் இடும் திட்டம் வெக்கையின் முடிவாக வளர்கிறது. சிற்றூர் மனித உணர்வோவியத்தை நடப்பியலில் தருகிறது வெக்கை.

நாஞ்சில் நாட்டு வட்டாரத்தில் கிறித்துவக் குடும்பங்கள் எவ்வாறு வாழ்கின்றன என்பது பற்றி நாவல்கள் வெளி

வந்த வண்ணம் உள்ளன. பேச்சிப்பாறை வாய்க்கால் கரையை ஒட்டிய இடத்தில் சுக்குநீர்க்காப்பிக் கடை வைத்து வாழ்ந்த செல்வமணி, தன் இரு பெண் மக்களையும் மனிதக் கழுகுகளின் அலகுகளுக்குப் பலியாகாமல் பாதுகாத்து வளர்ப்பதற்குப் படும் துன்பங்களை வண்ண ஓவியமாக்கி, ஐசக் அருமைராஜனின் 'கல்லறைகள்'[23] வெளிவந்துள்ளது.

கமலா, ராணி என்ற இரு பெண்களையும் சுவைக்கப் பல மனிதர் முயல்கின்றனர். தேவசகாயம் என்ற பணக்காரர் கிறித்துவர், தம் நிலத்தில் கிழங்கு பிடுங்கவரும்போது அப்பெண் களை வலையில் வீழ்த்த நினைக்கிறார். செல்வமணி தம் கடையை நல்ல நிலைக்குக் கொண்டு வர அழகு சுந்தரம் என்பவ ரிடம் கடன் வாங்குகிறார். அதை அறிந்த தேவசகாயம் செல்வ மணியைப் பண நெருக்கடிக்கு ஆட்படுத்தித் தம் காலின் கீழ் மிதித்து நசுக்க நினைக்கிறார்.

ஊர் மாதாகோயில் அவர் கைக்குள் அடங்கியிருக்கிறது. ஏசுவின் போதகர் காசுடையவர் வாய்ச் சொல்லுக்கு அடங்கிக் கிடப்பதை நடப்பியல் முறையில் இந்நூல் காட்டுகிறது. தேவ சகாயத்தின் படைப்பு இந்நாவலில் நெஞ்சிலே தைக்கும்படியாக உள்ளது.

நிலவுடைமையின் கோரப்பற்கள் ஏழை அழகிகளைச் சுவைக்க நினைத்ததல்லாமல் தன் மகனே அப்பெண்களை விரும்பித் திருமணம் செய்துகொள்ள விரும்பும்போது அதனால் தன் சமுதாய ஏற்றம் குலையுமென்று கருதி அதனை வேரோடு கருக்கியது. ஊர் மக்களில் சிலர் ஏழைகளுக்கு உதவச்சென்றால் அவர்க்கு 'நக்சலைட்' என்ற முத்திரையைக் குத்திச் சிறைக்கு அனுப்பினர். மதத்தலைவர் மகன் உதவ நினைத்தாலும் அது தடுக்கப்பட்டது. கடைசியில் தமக்குதவி இன்பந்தர விரும்பாத ஏழைப்பெண்களின் அழகைக்—கீழ்வெண்மணியில்நடந்ததுபோல் —குடிசையோடு தீக்கிரையாக்கிக்கொக்கரித்து மகிழ்ந்தது. தீயில் செல்வமணியின் மக்கள் இறந்தபோது ஏழை என்று கல்லறை யிலும் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டது. அதைப் பார்த்த தந்தை உயிருள்ள மற்ற மக்களைப் பார்த்தபோது வெள்ளை யடிக்கப்பட்ட கல்லறைகளாகத் தெரிந்தனர்.

இந்நாவலின் சிறப்பைக் கூட்டும் வகையில் நாஞ்சில் நாட்டு இயற்கைப் பின்னணியும், மொழிநிலையும் துணைசெய்கின்றன.

---

23. கல்லறைகள், ஐசக் அருமைராஜன், பூக்கூடைப் பதிப்பகம், சென்னை, 1982.

தென் திருவிதாங்கூர்ப் பகுதியிலிருந்து பர்மா காட்டில்லாகா வில் வேலை செய்யச் சென்ற செல்வராஜுவின் குடும்பத்தைப் பற்றி 'மா—னீ' என்ற நாவலாகப் படைத்துத் தந்துள்ளார் ஹெப்ஸிபா ஜேசுதாசன்.[24]

கிரேஸ் அழகு மணியிலுள்ள மணி என்ற பெயர் பர்மியர் வாயில் 'மா-னீ' ஆகிறது. பர்மாவின் வடமுனையில் கத்தாவில் வேலை செய்யும்போது பர்மிய மக்கள் வாழ்வில் ஒன்றாகக் கலக்கும் வாய்ப்பைச் செல்வராஜுவின் குடும்பம் பெறுகிறது. முதல் மகன் ரஞ்சன் எம்.ஏ. படித்தவன். பர்மிய ஆசிரியர் மகள் மா-மியாவை மணக்கும் நிலை ஏற்படுகிறது. இரண்டாம் மகன் ஸ்டான்லி தேர்வில் வெற்றி பெறாமல் விமானி ஆகிறான். தம் மக்களைப் பற்றிப் பெருங்கனவு கண்ட தந்தை செல்வராஜு இவர்கள் இப்படி ஆனதால் நோயுற்று மருத்துவமனையில் சேர் கிறார்.

ஐராவதி நதி இயற்கை அழகும், புவே கொட்டகையில் பர்மிய ஆட்டம் பார்க்கும் கலை உணர்வும், யானைகள் மரம் சுமக்கும் வேலையின் பாங்கும், புத்தக் கோயிலான பகோடாவின் சிறப்பும் நாவலில் பர்மிய மணத்தைப் பரப்புகின்றன.

ஜப்பான் சண்டை வரவும், முதல் மகனின் தூண்டுதலால் ராணி புகைவண்டியில் ஏறினாள். அவளுடன் ஏற முடியாத பெற்றோர் மாட்டு வண்டியில் ஏறிக் காட்டுப் பாதையில் சொல்ல முடியாத துன்பப்பட்டுச் செல்லும் போது செல்வராஜு இறக்கிறார்.

சொந்த விட்டினை அருமனையில் முதலில் கண்ட ராணி, சிற்றப்பன் வீட்டில் தங்குகிறாள். தள்ளாடிய வண்ணம் அவள் தாய் அன்னம்மாளும் வந்து சேர்கிறாள். தங்கையையும் அம்மா வையும் காண அங்குத் திரும்பி வந்தான் ஸ்டான்லி. அது மட்டு மன்றித் தன் தங்கையை ஜானுக்குத் திருமணமும் செய்து மகிழ் கிறான்.

தென் திருவிதாங்கூரின் பனைச் செல்வமும், சின்னஞ் சிறு குடும்பங்களில் பொங்கி வழியும் உணர்வு வெள்ளமும், இளை யோர் முதியோர் போராட்டச் சூழலும், உறவுச் சங்கிலிகள் பொருளின் அடிப்படையில் துருப்பிடித்து ஒலியும் நிலையும், உடன் பிறந்த உள்ளங்களின் அன்பும் பிணைப்பும் நன்கு வெளிப் படுகின்றன.

---

24. மா—னீ, ஹெப்ஸிபா ஜேசுதாசன், அன்னம் வெளியீடு, சிவகங்கை, ஜனவரி, 1982.

நடப்பியல் நெறியில் பர்மா, தென்திருவாங்கூர்ப் பின்னணி யில் இரண்டாம் உலகப் போர்ச் சூழல் நன்கு வெளிப்பட மா—னி' என்ற ராணி குடும்பக்கதை தெளிவாக உள்ளத்தைத், தொடுகின்ற வகையில் உருவாகியுள்ளது.

இலங்கை சாகித்ய அகாதெமிப் பரிசு பெற்ற நாவலாம் 'மலைக் கொழுந்து', [25]இவ்வாண்டு தமிழகத்தில் வெளியிடப் பட்டுள்ளது. நந்தி என்னும் இந்த நாவலாசிரியர் இலங்கைத் தேயிலைத் தோட்டத்துத் தமிழ் மக்களின் வாழ்க்கையைக் கதையாக வடித்துத் தந்துள்ளார்.

தேயிலைத் தோட்டத்துப் பெண்கள் எத்தகைய துன்பப் பட்டு மடிகின்றனர் என்ற செய்தியை வள்ளி போலீசாரின் துப்பாக்கிக் குண்டுக்கு இரையாவதாலும், வீராயி தோட்டத்து முதலாளியின் சதைப் பசிக்கு ஆளாக இருந்து மடிவதாலும் வெளிக்காட்டப்படுகிறது

மலையப்பன் என்ற தோட்டத் தொழிலாள இளைஞன் தொழிலாளரிடையே உரிமை வாழ்வு வாழவும், கல்வி, உடல் நலம் போன்றவற்றைப் பெற்று நல்வாழ்வு வாழவும் எண்ணித் தொழிற்சங்கத்தை வளர்க்கும் போக்கைக் காட்டும்போது வீராயி மீது அவன் கொண்ட காதலைவிட மக்கள் தொண்டு தான் உயர்ந்தது என்பதை விளக்கமாகக் காட்டுவதில் இந்த நாவல் தனிச் சிறப்புப் பெறுகிறது.

தோட்ட முதலாளிகள் தொழிலாளர் இனத்தைப் பிரிக்கப் போட்டிச்சங்கம் வைப்பதையும் அதற்குக் கைக்கூலிகளை வைத்து உண்மையான இயக்கத்தின்மீது கெட்டப் பெயரைப் பரப்புவதில் எப்படி தூண்டும் ஆற்றலாக விளங்குகின்றனர் என்பதையும் நன்குக் காட்டுகிறது.

மலைத்தோட்டப் பகுதிகள், தேர்த் திருவிழா, தொழிலாளர் ஊர்வலம் போன்றவற்றை மிக இயல்பாக எளிய முறையில் வெளிப்படுத்தும் இந்த நாவல் தனி மனிதக் காதலைவிடப் பொதுநலத் தொண்டே சிறந்தது என்பதைக் காட்டுவதில் முன்னிற்கிறது. மொழி வேற்றுமையால் பகைமையைப் பரப்பு வதைவிட மனிதப் பொதுநலத்தில் நாட்டங்கொண்டு ஒற்றுமை

25. மலைக்கொழுந்து, நந்தி, நர்மதா பதிப்பகம், சென்னை, ஜூன் 1982.

யில் உயர்வது நல்லது என்பதைச் சுட்டிக் காட்டுகிறது இந்நாவல்.

இலங்கை வாழ் தமிழரின் வாழ்க்கையை மனித நேய உணர்வோடு வெளிப்படுத்துகிறது செங்கை ஆழியானின் 'ஒரு மைய வட்டங்கள்'[26]. இனம் என்றவட்டங்கள் இரண்டாக இருப்பினும் மனித மையம் மாறாத உண்மையாக உள்ளது என்பதை நெஞ்சு நெகிழுமாறு இந்த(க்குறு) நாவல் உணர்த்துகிறது.

ஈழத்திலுள்ள மருதங்குழி என்ற சிற்றூரில் வாழும் தமிழர், சிங்களவர் வாழ்வின் அன்புப் பிணைப்பை அடி நாதமாகக் கொண்டு ஒலிக்கிறது. சோமாவதியும் செல்லத்துரையும் இரு இனத்தைச் சேர்ந்தவர். எனினும் காதலில் ஒன்றுபடுகின்றனர். சிங்களச் சிரிசேனா அதனைக் கெடுக்க எவ்வளவோ முயன்றும் அக்காதல் உயர்ந்து செல்கிறது. அவர்கள் நல்வாழ்வுக்குச் சிரிசேனாவின் தந்தை ஐயரத்ன முதலாளியே உதவுகிறார். சிங்களவர், தமிழர் வாழ்வை எரிக்க வந்தபோது தம் வீட்டையே அரணாகக் கொண்டு தமிழர் வாழ்வைக் காப்பாற்றுகிறார்.

சிரிசேனா பொறாமையால் செல்லத் துரையின் குழந்தை எரிய, நெருப்பிட்ட போதும் அந்தத் தீமையை மனத்தில் கொள்ளாமல் காட்டிலே யானைக் கன்று வீழ்ந்த பள்ளத்தில் சிரிசேனா விழுந்தபோது அவனைத் தப்பிப் பிழைக்க உதவி செய்கிறான் செல்லத்துரை.

சிற்றூரின் வயல் வெளிக் காதலும், உழவுத் தொழிலும் நல்ல முறையில் வெளிப்படுகின்றன. தீயவரின் மாடு திருடல், மரம் திருடல் போன்ற செயல்களைக் காட்டுவதில் தனிக்கவனம் செலுத்தப்பெற்றுள்ளது. காட்டுக் குழியிலே சிக்கிய சிரிசேனா நொடிக்கு நொடி சாவை எதிர்பார்த்து அஞ்சிக் குலையும் இடம் இந்நாவலில் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. இனவேறுபாட்டை விட மனித அன்பே தலை சிறந்தது என்பதைத் தெளிவாக மனத்தில் பதித்துச் செல்கிறது இப்படைப்பு.

இலங்கை இளைஞர் கட்சி முன்னணி, பொதுமை ஆட்சி நிலைபெறக் கடினமாக உழைக்கும் முயற்சியை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளது காவலூர் எஸ். ஜெகநாதனின் இரண்

---

26. ஒரு மைய வட்டங்கள், செங்கை ஆழியான், நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ், சென்னை, ஏப்ரல், 1982.

டாவது நாவல் 'நாளை'[27] உயர்சாதித் தமிழர், கீழ்ச்சாதித் தமிழரோடு உறவாட விரும்பாத நிலையை முதியவரிடம் காட்டி இளைய தலைமுறையினர் அந்தக் கட்டுக்கோப்புகளை உடைத் தெறிய விரும்புவதைப் பரந்தாமன், கனகரத்தினம், சின்னத் தம்பி, குமரேசன், செல்வராணி ஆகியோர் வாயிலாக இந்நாவல் உணர்த்துகிறது.

செல்வலிங்கம் போன்ற ஊர்ச்செல்வர், தம்முடைய பண வளமையால் ஊர்மக்கள் மீதும் கீழ்ச் சாதியார் மீதும்கொண் டிருந்த பிடிப்புகளைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்ற முனைவதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. படகு விடும் உரிமை, பணங்கொடுத்து நிலத்தைக் கைப்பற்றும் வஞ்சனை, கோயில் பணத்தைக் கொள்ளையடிக்கும் திருட்டு, கூட்டுறவு என்ற பெயரால் நடைபெறும் ஏமாற்று வேலை ஆகியவற்றை யெல்லாம் உள்ளூர் இளைஞர் தன்னம்பிக்கையோடு எதிர்க்கின் றனர். சொந்தத் தந்தையாயினும், கற்றுக்கொடுத்த தலைமை ஆசிரியர் ஆயினும், யாராயிருந்தாலும் எதிர்த்தனர்.

முன்னணி வீரன் பரந்தாமனை ஊர்ச் செல்வர் சதிசெய்து கொன்றபோது சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கொடுக்காமல் கொள்கைக்காக முன்னேறும் வர்க்க உணர்வு கொண்ட இளைஞரின் வாழ்வைக் காட்டும் ஈழநாட்டின் நாவலாக இது விளங்குகிறது. சிங்களர், தமிழர் என்ற இன வேற்றுமைக்கு இடங்கொடாமல் உடையவர், இல்லார் என்ற பொருளாதார வேற்றுமை மறைந்தால் மற்ற குறைகள் நீங்கும் என்ற உண்மையை வெளிப்படுத்துகிறது.

இலங்கையில் வாழும் மக்களில் நளவன், பள்ளன், பறையன், வண்ணான், அம்பட்டன் என்ற ஐந்து பிற்பட்ட சாதியினரை யும் 'பஞ்சமர்' என்று அழைப்பர். இவரிடையேயும் சிற்சில வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் இருப்பினும் முரண்பாடு மிகக் குறைந்த அளவே உள்ளது. நிலவுடைமையாளர் இவர்களைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் அடக்கிப் பலவகையிலும் துன்புறுத்தி வந்தனர். இத்தகைய வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு கே. டானியலின் 'பஞ்சமர்' (இரண்டு பாகங்கள்) வெளி வந்துள்ளது.[28]

---

27 நாளை, காவலூர் எஸ். ஜெகநாதன், நர்மதா பதிப் பகம், சென்னை, ஆகஸ்டு, 1982.

28 பஞ்சமர், கே. டானியல், கார்க்கி நூலகம், 15, சாலித் தெரு, சென்னை-17, 1982.

ஆசிரியர் இத்தகைய மக்களுக்காகப் பாடுபடும் போது அடக்கு முறையிலிருந்து தப்பித் தலை மறைவு வாழ்க்கை வாழ்ந்த போது கிராமத்து மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்று இந்த நாவலை எழுதியுள்ளார். அங்குள்ள தமிழ்ப் பஞ்சமரின் வாழ்க்கையை உள்ளவாறு வெளிப்படுத்தும் வகையில் இந்த நாவல் முழு வெற்றி பெற்றுள்ளது.

இந்த நாவலில் காணப் பெறும் கதைமாந்தர் பல்வேறு குடிகளில் பிறந்து வளர்ந்தவர். சமூக வாழ்வில் அடிமைகளாக நடத்தப்பட்டவர். இவர்கள் மேல்தட்டு மக்களால் நசுக்கப்பட நசுக்கப்பட எவ்வாறு ஒரு அரசியல் வளாகத்திற்குள் தாமாகப் புகுகின்றனர் என்பதையும், உலகம் தழுவிய ஒரு கொள்கையைக் கைக் கொள்ளும் மக்களாக மாறுகின்றனர் என்பதையும் சுட்டிக் காட்டுகிறது.

பஞ்சமர் வாழ்வில் கள்ளுக் கடையும், சூதாட்டமும் எந்த அளவு இடம் பெறுகின்றன என்பதை ஆசிரியர் மறைக்கவில்லை. நிலக்கிழாரின் வீட்டிலே எடுபிடி வேலைக்கு அமர்ந்து அவர்களுடைய இன்ப துன்ப ஆசைகளுக்கு இரையாகித் தக்க வழி காட்டி வடிவில் ஐயண்ணன், குமாரவேலன் போன்றவர் வரும் போது புதிய போராட்டங்கள் நடத்தும் வலிமை பெறுவதை நன்கு காண முடிகிறது.

பஞ்சமரில் ஆண்கள் மேல் தட்டுப் பெண்களுடன் உறவு கொண்டால் பஞ்சம ஆண்களைக் கொலை செய்துமறைப்பதும், பிழை செய்த பெண்கள் தம் சாதியினரையே மணந்து வெளி நாடு சென்று சுகவாழ்வு வாழ்வதையும் சுட்டிக்காட்டுகிறது இந்த நாவல். மேல் சாதியில் பிறந்தாலும் சிறுவயது முதலே கீழ்ச்சாதியார் படும் துன்பங்களை உணர்ந்து அவர்களுக்கும் உயர் சாதியார் போன்று உரிமை பல பெற வேண்டும் என்று போராடும் போது அத்தகையோர் படும் துன்பங்களை மிக இயல்பாக வடித்துத் தந்துள்ளது இந்த நாவல். மேல் சாதிக் காரர் எப்படியானாலும் தங்கள் மரபுப் பெருமையைக் காப் பாற்ற வேண்டும் எனவும், பஞ்சமர் பண்டுதொட்டுத் தங்கள் வாழ்விலும் சாவிலும் அடிமையாய்ப் பணியாற்றியது போல் தொடர்ந்து இட்ட வேலையை எதிர்த்துப் பேசாமல் செய்ய வேண்டும் என்பதற்காக எதையும் செய்தனர். தங்கள் பழைமையை நிலைநாட்ட முயலும்போது புதிய விழிப்புணர்ச்சி பொங்கி வழியும் போது ஆங்காங்கே சங்கங்கள் தோன்றின. ஊர்வலங்கள் நடைபெற்றன. உரிமைக் குரல் முழங்கியது. தங்களைச் சார்ந்த இரத்தினம், கார்த்திகேயன் ஆகியோர்

தியாகத்திலே புதிய உணர்வு பெற்றுப் போராடத் துணிவு கொண்டனர்.

பழையமரபு காக்கும் மக்களாகக் கமலாம்பிகை அம்மையார் வேலுப் பிள்ளைக் கமக்காரன், மாம்பழம், சண்முகம் பிள்ளை, முதலியார் போன்றவர் எல்லாவகையிலும் தம் ஆற்றலைக் காட்டினர், ஆயினும் எதிரணியில் பஞ்சமர் குரலாகச் சின்னாச்சி, மாயாண்டி, குமாரவேலு, ஐயாண்ணன் போன்றவர் புதிய எழுச்சியில் பழைய விலங்குகளை ஒடித்தெறியப் பாடுபட்டனர்.

சமுதாயத் தேரோட்டம் பின்னவர் கையில் உள்ளது என்பதை உணர்த்தும் வகையில் இந்நாவல் வளர்ந்துசெல்கிறது. இலங்கையின் 'பஞ்சமர்' வாழ்வுப் போராட்டத்தை மிக நல்ல முறையில் உணர்த்தி நடைமுறை நிலையை வெளிப்படுத்துவதில் இது முன்னணியில் நிற்கிறது. பழைமை வெல்லாது என்பதைச் சண்முகம் பிள்ளை முதலாளி சாவையும் புதிய சமுதாய வளர்ச்சி ஏழை எளிய பஞ்சமர் உட்பட்டதொழிலாளர் செயலில் உள்ளடங்கி இருப்பதைக் கோயில் தேரோட்ட நிகழ்ச்சியிலும் குறியீடாக அமைத்துள்ளமை இதில் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

## 1982-இன் நாவல்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆறுமுகம் பூவை. எஸ். | அந்திநிலாச் சதுரங்கம், | மணியம் பதிப்பகம், குறிஞ்சிப்பாடி. |
| 2. | இராசம் மரகதம் | கொற்கைக் காவலன், | சோமு புத்தகநிலையம், உறையூர், திருச்சி |
| 3. | உதயணன் | வாழ்க்கை விலங்குகள், | முருகன் பதிப்பகம், சென்னை-56. |
| 4. | ஜசக் அருமைராஜன் | கல்லறைகள், | பூக்கூடைப் பதிப்பகம், சென்னை-3. |
| 5. | கார்த்திகா ராஜ்குமார் | இது முதல் அத்தியாயம், | ,, ,, |
| 6. | கிருஷ்ணமணி | பிணைப்பு | திருமகள் பதிப்பகம், சென்னை-1. |
| 7. | சவிதா | ஏப்ரல் பறவைகள், | முருகன் பதிப்பகம், சென்னை-56. |
| 8. | சிவசங்கரி | மூக்கணாங் கயிறு, | திருமகள் நிலையம், சென்னை-1. |
| 9. | செங்கை ஆழியான் | ஒரு மைய வட்டங்கள், | நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை. |
| 10. | செல்வராஜ், டி. | மூலதனம் | பூக்கூடைப் பதிப்பகம், சென்னை-3. |
| 11. | சோ | எங்கே பிராமணன்? | நர்மதா வெளியீடு, சென்னை-17. |
| 12. | டானியல், கே. | பஞ்சமர் | கார்க்கி நூலகம், சென்னை-17. |
| 13. | நந்தி | மலைக் கொழுந்து | நர்மதா வெளியீடு, சென்னை-17. |
| 14. | பாரதிப்ரியன் | நதிக்கரை யோரத்து, நாணல்கள், | ,, ,, |

| | | | |
|---|---|---|---|
| 15. | புஷ்பா தங்கதுரை | வயலெட் பூக்கள் | அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை-1. |
| | ,, | அருணா ஆறாவது | ,, ,, |
| 16. | பூமணி | வெக்கை | படைப்பகம், 43 வாணியர் தெரு, சென்னை-14. |
| 17. | யாக்னிக், மெய்யப்ப அரசு, | நம்பவே முடியாது, | ஹரிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை-33. |
| 18. | ரங்கராஜன், ரா. கி. | ஒரு தற்கொலை நடக்கப் போகிறது | திருமகள் நிலையம், சென்னை-1. |
| 19. | ராகவேந்திரன், இராம | இங்கே சில இதயங்கள், | வைரவன் பதிப்பகம், மதுரை. |
| 20. | ராஜம் கிருஷ்ணன் | ஓசைகள் அடங்கிய பிறகு, | பாரி புத்தகப்பண்ணை, சென்னை-5. |
| 21. | லட்சுமி நாராயணன், ய. | திப்பு சுல்தான், | ஸ்டார் பிரசுரம், சென்னை. |
| | ,, | ராஜ மோகினி, | நர்மதா பதிப்பகம், சென்னை-17. |
| 22. | லக்ஷ்மி | ஒற்றை நட்சத்திரம், | திருமகள் நிலையம், சென்னை-1. |
| 23. | ஜெகநாதன், காவலூர், எஸ். | நாளை, | நர்மதா பதிப்பகம், சென்னை-17. |
| 24. | ஜெயகாந்தன், | சுந்தர காண்டம், | மீனாட்சி புத்தகநிலையம், மதுரை. |
| 25. | ஹம்சா தனகோபால் | அடிச்சுவடுகள் | ,, ,, |
| 26. | ஹெப்சிபா ஜேசுதாசன் | மா-னீ, | அன்னம் வெளியீடு, சிவகங்கை. |

# நாடகம்

—ஏ. என். பெருமாள்

எண்பத்திரண்டில், முன் ஆண்டினை விட நாடகம் வளர்ந்துள்ளது. கவிதை, உரை நடைவடிவ நாடகங்கள் உள. வரலாறும், சமுதாயமும் பொருளாயின. முழு நீள நாடகமும், ஓரங்க நாடகமும் காணப்படுகின்றன. குழந்தை நாடகமும், துப்பறியும் நாடகமும் உண்டு. இதழில் தொடராக வந்தது நூலுருப்பெற்றுள்ளது. 82பாரதி நூற்றாண்டானமையின் அவர் பாஞ்சாலி சபதம் நாடக உருப் பெற்றுள்ளது.

## அறிமுகம்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டாம் ஆண்டில் தமிழ் நாடகம் கலையிலும் கருத்திலும் முன்னேற்றம் கண்டு வளர்ந்துள்ள நிலை மனநிறைவு தருவதாகக் காணப்படுகிறது. கால மாற்றம் கருத்து வளர்ச்சிக்கு இடமாகிறது. கருத்து வளர்ச்சி கலைகளின் ஏற்றத்துக்கு உதவுகிறது. கலைகளின் ஏற்றம் மக்களின் நிலையை உயரச் செய்கிறது. அதுவே கலையின் பயனாகவும் வெற்றியாகவும் அமைகிறது. மனித மனம் இன்பவுணர்வு பெறவும் மனித வாழ்வு சீர்திருத்தம் பெறவும் கலைகள் உதவுகின்றன. இந்நிலையில் நாடகக் கலையின் பங்கு குறிப்பிடத்தக்கது.

நீண்ட வரலாறும் இனங்கண்டு கூறத்தக்க பழமையான மரபும் கொண்டுள்ள தமிழ் நாடகம் 1982-ஆம் ஆண்டு எந்த நிலையில் உள்ளது என்பதைக் காண முயலலாம். மனிதன் தன்னையும் தன் வாழ்க்கை இயல்புகளையும் சிந்தித்துக் காண முற்படும் காலகட்டமாக இது உள்ளது. பழமையின் பிடியிலிருந்து நழுவிப் புதுமை வாழ்வைப் படைக்க மனிதன் துடிக்கும் நிலை எங்கும காணப்படுகிறது. எங்கும் எதிலும் மாற்றங் கண்டு முன்னேற்றப் பாதை அமைக்க விரும்பும் போக்கு தோன்றியுள்ளது பரவலாகக் காணப்படும் இந்தப் போக்கினை அடிப்படையில் நாடகக் கலையும் கதையும் அமைந்திருப்பதை இவ்வாண்டின் பொதுநிலைக் கூறாகக் கருதலாம்.

காலவுணர்வுகளினால் ஏற்பட்டுள்ள சில பற்றுக்களும் நீண்ட காலப் பழக்க வழக்கங்களினால் நிலைத்துள்ள சில விதமான பற்றுணர்வுகளும் நாடகங்களில் ஊடாடியுள்ளன. ஆயினும் புதுமை மெருகு சிறப்பாகப் பல நாடகங்களில் ஏற்றப்பட்டுள்ளது. இலக்கிய உணர்வு சிலவற்றில் காணப்படுகிறது. பலவற்றுள் சமூகவுணர்வு பரவி காலத்தின் போக்கை உணர்த்தி தேவைகளை எடுத்துக் காட்டுகிறது. நாடக ஆசிரியர் கற்பனையில் மிதக்கும் கவிஞன் இல்லை; என்றாலும் காலவுணர்வுடைய கலைஞன் என்பதைப் பல நாடகங்கள் உறுதிப்படுத்தியுள்ளன. கவிதை உருவில் மலர்ந்துள்ள ஒரு நாடகம் கவிஞனையும் கலைஞனையும் ஒருருவில் இணைத்துக் காட்டித் தன் பெருமையை உணர்த்துகிறது.

சமுதாய சிந்தனை, தமிழிலக்கிய அறிவு, வரலாற்றுக் கருத்து, தேசியவுணர்வு, குழந்தைகள் நல்வாழ்வு போன்ற பலவற்றை எண்ணி நாடகங்கள் படைக்கப்பட்டுள்ளன. நாடகங்கள் முழு நீளம் கொண்டவைகளாகவும் ஓரங்கமுடையவைகளாகவும் காணப்படுகின்றன. மக்களின் வாழ்க்கை முறைகள் விரைவாக இயங்குவதை மனத்திற்கொண்டு விரைவு முடிவுகளை விறுவிறுப்பாக எட்டும் ஓரங்க நாடகங்கள் பலவாக மலர்ந்துள்ளன. வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றின் நல்லாதரவு இத்தகைய சிறிய நாடகங்களின் வளர்ச்சிக்குப் பெருந்துணையாக அமைந்துள்ளன. இவ்வாண்டு அச்சு வாகனம் ஏறி உலா வரும் சில நாடகங்களையாவது தனித்தனிக் கண்டுணர்வது தேவையாகும்.

### துறவியின் புதையல்

பா. நாராயணன் கவிதையாகப் புனைந்து கற்பனையாகப் புலப்படுத்தும் மிக நீண்ட நாடகமான 'துறவியின் புதையல்' ஓர் இலக்கியச் சுரங்கமாக விளங்குகிறது. இளங்கோவின் கவிநயம், வள்ளுவரின் கருத்துச் சேர்க்கை, சுந்தரம்பிள்ளையின் நாடக அமைப்பு ஆகியவை இந்நாடகத்தில் இலணந்துள்ளன. தமிழுணர்வு களிநடம் புரிகின்றது. வரிப்பாடல்கள் இடைமிடைந்து இசைத்தமிழ்ச் சிறப்புக்களை இனிது காட்டிக் களிக்கின்றன.

நாடக நிகழ்ச்சிகள் கற்பனையாக இருப்பினும் உலக இயல்புகளுக்கு இசைந்து விளங்குகின்றன. ஆசிரியரின் அனுபவக் களஞ்சியத்திலிருந்து அவை எடுக்கப் பெற்று இலக்கிய உரு கொடுக்கப்பட்டவை என்பது அவருடைய உரை

யால் அறியக் கூடிய உண்மை[1]. இல்லது புனைதல், உள்ளது புனைதல் என்ற இரு வகைகளுள் இது பின்னதைச் சார்ந்த நாடகம். ஆசிரியரின் அனுபவங்களுடன் அவருடைய மருத்துவப் பயிற்சியும் நாடக ஆக்கத்துக்கு நன்கு கை கொடுத்துள்ளது.

பாத்திரங்களின் பெயர்கள் அனைத்தும் தமிழ்ச் சார் புடையன. அருளம்மை, மலர்க்கொடி, செங்கண்ணன், அழகன், பூதனடிகள், கிளிமொழி, அம்பலத்தடிகள் போன்றவை அவற்றுள் சில, ஒரே மாதிரியாக வரும் கயக்கண்ணன், காரிக்கண்ணன் செங்கண்ணன், குறுங்கண்ணன், நெடுங்கண்ணன், மழைக் கண்ணன் போன்ற பெயர்கள் நாடகத்தைப் படிப்போருக்கு மயக்கம் தருவதாக உள்ளன. மேலும் 61 பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளமை மிகை என்று கருதும் அளவுக்குக் காணப்படுகின்றன.

நூலின் பயன் நாடகத் தொடக்கத்தில் நயமான முறையில் ஆசிரியரால் தரப்படுகிறது.

'அன்பார் துறவி யரும்புதையல் கண்டெடுத்தோர்
துன்பார் நெறியகத்தே தோயாரால்—இன்பார்
இயற்கை நெறிமேவி யெஞ்ஞான்றும், வாழ்வில்
மயற்கை நெறியறுப்பார் வாய்ந்து' (பக். 3)

ஆசிரியரின் சொந்த ஊரையடுத்தே நாடக நிகழ்ச்சிக் களங்கள் அமைக்கப் பெற்றுள்ளதால் அவற்றைப் பற்றுணர்வுடன் புகழ்ந்து பாடி மகிழ்கிறார். வீர நாராயணம் ஏரி வரலாற்றுச் சிறப்பு மிக்கது. அதனைக் குறிப்பிடும் போது வரலாற்றுக் காலத்துக்குத் தாவிப் பராந்தகச் சோழனின் பெருமைகளை எடுத்துக் கூறித் தம் புலமையைப் புலப்படுத்துகிறார்.

'ஏழமை யில்லாச் சோழ நாட்டாங்கண்
வாழ்குடி புரக்குந் தாழ்வி லாண்மையர்
மலைவறு குடிகளுள் தலைவரு குடியினார்
அறிவற மாற்றல் நெறிவரு முறைமை
வழுவா தோம்பும் பழுதறு சோழர்' (பக். 8)

என்று கூறுவதில் சோழநாட்டாரின் பெருமை ஆசிரியரை எவ்வாறு கவர்ந்துள்ளது என்பது நன்கு விளங்கும். இவ்வாறு சோழப் பேரரசின் பெருமைகளை வானளாவப் புகழ்வதில் மன நிறைவு காண்கிறார்.

---

1. நாடக ஆசிரியரின் நுவல்வு, பக். 28.

மனிதனுக்கும் இறைவனுக்கும் இடைநின்று நிலவும் உறவும் உணர்வும் ஆங்காங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன.

'உலகிடை நிலவு மலகில் பல்லுயிரில்
எவரே சுற்றம்? எவரே பகைவர்?
எதுவோ வதியுறு பதியாம் உலகெனும்
நாடக அரங்கில் ஆடுநர் பலரே!
ஆட்டுவோன் திருவிளை யாட்டினை அறிவாரார்?'

(பக். 26)

துறவறம் மேற்கொண்டு காடு சென்று கரந்துறையும் துறவிகளைக் காட்டிலும் நாட்டகம் தங்கித் துயருறுவோர் தம் துயரைத் துடைப்போரின் பெருமையே உயர்வானது என்பது நாடகம் காட்டும் நல்ல கொள்கை.

'அஞ்சி யரணாய் மஞ்சுசூழ் மலையும்
காடும் புகலிடமாகக் கரந்துறை
நற்றவர் தம்மினும் மற்றிவர் வலியரே' (பக். 50)

நல்லவர்களின் தூயநெஞ்சத்தையே இறையிருப்பாய்க் கருதி ஆசிரியர் விளக்குகிறார்.

'தூயநல் லுளமே தூயனா மிறைவன்
நடம்புரி யிடமாம்' (பக். 117)

இறைவனின் அருளின்றி அணுவும் அசையாது என்ற கொள்கை ஆசிரியரின் அசைக்க முடியாத கருத்தாக உள்ளது.

'அவனருள் அன்றிமற் றணுவும்
அசையா நம்செய லாவதொன் றிலையே' (பக். 181)

இவ்வாறு இறைப்பற்றும், இறையியல்பும் இனிது விளக்கப்படும் நாடகமாக இது விளங்குகிறது.

நாடக முடிவு நன்மையின் வாழ்விலும் தீமையின் வீழ்ச்சியிலும் அமைந்து மரபு முறை காத்தலாக உள்ளது.

'பொய்ம்மையே மெய்ம்மை போலத்
தோன்றினும் ஈற்றில் தோன்றுமா லுண்மையே' (பக். 323)

என்ற அடிகளால் நாடகம் முற்றி முழுமையடைகிறது. ஓர் அரிய இலக்கியம் படித்த நிறைவும் ஏற்படுகிறது.

தமிழ்மொழி, தமிழினம், தமிழ்ப் பண்பு ஆகியவை நாடக ஆசிரியரை ஆட்கொண்டு பல இடங்களில் வெடித்துச் சிதறி

அவருடைய ஆளுமையை நன்குப் புலப்படுத்துகின்றன. ஆரியக் கொடுமை வன்மையாகக் கண்டிக்கப்படுகிறது.

'வடவா ரியரின் கொடுநெறி யதனால்
தாழ்ந்தது தமிழும் தாழ்ந்தனர் தமிழரும்' (பக். 287)

இவ்வளவு வேகம் இக்காலத்துக்கு வேண்டுமா என்ற அளவுக்கு ஆசிரியரின் கடுமைக் குரல் ஒலிக்கிறது. 'சாதி' என்பதைச் சாடுவது இன்னும் அதிக வேகமுடையதாகக் காணப்படுகிறது.

'சாதி தமிழ்ச்சொல் அன்று தமிழிற்
சாதியே யிலலை.' (பக். 209)

தமிழினம் ஒன்று என்ற நிலையை உறுதிப்படுத்த, பல வழிகளை ஆசிரியர் கையாள்கிறார்.

நாடகத்தின் இலககிய நயத்தைப்பெருக்கப் பல உத்திகளைப் பயன்படுத்துகிறார் உவமை உருவகங்கள் சிறப்பாக அமைந் துள்ளன.

'நெட்டியற் பெருநிலம் வட்டரங்காக
தாழ்வறு காதற் சூழ்வட் டாக
ஆடவர் மகளிர் ஆடுவோ ராக
ஆடவ ரனபும் நஙகையர் நலமும்
இணையெதிர் வைக்கும் பனைப்பொரு ளாக
ஆடுறு காதற் சூதாட் டினிலே' (பக். 57)

என்று கூறுவதில் நாடக ஆசிரியரின் கற்பனைச் சிறகின் விரிவும் பொலிவும் விளங்கும்.

தமிழ்ப் புலமை மிக்க ஓர் ஆசிரியரால் புலமைமிக்க அறிஞர்கள் படிப்பதற்காகத் தமிழ் உணர்வுடன் மரபுவழி நின்று எழுதப்பட்ட உயர்தனித் தமிழ் நாடகமாகத் 'துறவியின் புதையல்' விளங்குகிறது. அரிய கருத்துக்கள் வாழ்வியலுக்கு நன்கு உதவும் தரமாக இந்த நாடகத்துள் அழகான முறையில் மிகுதியாகப் பதிக்கப் பெற்றுள்ளன. இருபதாம் நூற்றாண்டில் படைக்கப் பெற்ற ஒரு சிறந்த இலக்கியமாகத் 'துறவியின் புதையல்' திகழ்கிறது.

**தலையாலங்கானத் தலைவன்**

சங்கப்பாடல்கள் வாயிலாக அறியப்படும் அரிய நிகழ்ச்சி களைப் பண்டைத் தமிழரின் பண்பும் பண்பாடும் தோன்ற சுவையான நாடகங்களாகப் படைத்துக் காட்டும் போககு நனகு வரவேற்கத் தக்கதாக உள்ளது. பண்ணன் என்பாரால் எழுதப

பெற்றுள்ள 'தலையாலங்கானத் தலைவன்' புறநானூற்றுச் செய்திகளை உள்ளடக்கிப்புனையப் பெற்ற ஒருதழுவல் நாடகம். தமிழ் நாட்டு வரலாற்றில் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் தனிச் சிறப்புடன் வீரப் போராற்றி சேர சோழ மன்னரையும் அவர்களுடன்கூட்டுச்சேர்ந்த குறுநிலமன்னரையும் 'தலையாலங் கானம்' என்ற களத்தில் வென்று வாகைச் சூடியதை இந்த நாடகம் இலக்கிய நயத்துடன் நன்கு விளக்குகிறது.

காதலும் வீரமும் பண்டைத் தமிழரின் இரு பெரும் பண்புகள். இதை விளக்கிக்காட்ட விரும்பிய நாடக ஆசிரியர் பாண்டிய மன்னனையும் சோழ இளவரசியான பெருந்தேவியை யும் காதல் வயப்படச் செய்து இருவரையும் ஆட்டிப் படைத் துள்ளது சுவையான காட்சிகளாக விரிகிறது. சேரப் படைத் தலைவன் அழும்பில்வேள் 'வீரமும் காதலும் நம் பண் பாட்டின் இரு கண்கள்' (கா. 15, பக். 67) என்று கூறுவது இக்கருத்தின் விளக்கமாகக் காணப்படுகிறது. காதலின் பாதை சிக்கலுடையது என்பதைச் சிறப்பாக ஆசிரியர் காட்சிப்படுத்திக் காட்டுகிறார்.

பொறாமைச் சேற்றைப் பூசிக்கொண்டுத் தன்னுடைய புரை யோடிப் போன வீரத்தைப் புகழாக்கிக் காட்ட விரும்பும் சேர மன்னன் இரும்பொறையின் பாத்திரப் படைப்பு மனித மனக் குகைகளில் மண்டிக் கிடக்கும் இருட் படலங்களை விரித்துக் காட்டும் சுருள் படமாகக் காணப்படுகிறது. தான் கருதியதை முடித்துக் காட்ட அவன் கருதும் வழிகள் அத்தனையும் தீயவை. எத்தனை பேரை அவ்வழிகளில் நடக்கச் செய்கிறான். தன் னலமே அவனுடைய குறிக்கோள். தீமையே அவனுடைய செயற்பாடுகள். மான அழிவுடன் தோல்வியை அணைத்து அவதிப்படுவதே அவனது அவலமான முடிவாக உள்ளது.

செயலாற்றும் திறனும் சிந்தனை ஆற்றலும் இல்லா நிலை யில் சோழ மன்னன் நாடகக் காட்சியுள் இடம் பெற்றுள்ளான். வஞ்சக் கூற்றுக்கு வளைந்து கொடுக்கும் அவனுடைய செவிகள் மாங்குடி மருதனாராகிய செந்நாப் புலவரின் செப்புரைகளைக் கேட்க மறுக்கிறது. அதன் பயனாக நல்லது நடக்க வேண்டிய தற்கு மாறாகத் தீய பகை விளைகிறது. இன்ப மணம் கூட வேண்டிய சோழ நாட்டில் துன்பப் போர் நடைபெறுகிறது. ஆனால் அவனையும் மீறி அவனுடைய மகளின் இன்பக் காதல் ஈடேற்றத்தில் நிகழ்ச்சிகள் முடிந்து விடுகின்றன. அதனால் அவ னுடைய அறிவுக் கண்கள் திறக்கப் படுகின்றன. தவறை உணர்ந்து திருந்துகிறான். தக்கதைச் செய்ய முன் வருகிறான்.

பகைவனாகப் போர்க் களத்தில் சந்தித்தப் பாண்டிய மன்னனை மருமகனாக மணவறையில் ஏற்றுக் கொள்கிறான்.

மருதனாரின் பாத்திரப் படைப்பு, ஆசிரியர் அறிஞருக்குக் கொடுக்கும் நன்மதிப்பாக அமைகிறது. கூர்வேலேந்தும் வீரர்களை விடவும் சீர்சொல்லேந்தும் புலவர் மிகுதியாகச் சிறப்பிக்கப் படுகிறார். பாண்டிய மன்னனே ஒரு சிறந்த புலவனாகப் படைக்கப்பட்டுள்ளான். அவன் தன் ஆசிரியரும் அவைப் புலவருமான மாங்குடி மருதனாரை மதித்துப் பாராட்டும் முறை மிகச் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளது.

பாண்டிய நாட்டு அமைச்சர் மருதனாரிடம் 'தமிழ் நெஞ்சும் மன்னவரின் நெஞ்சத்தில் இடம் பெற்ற நாங்கள் எங்கிருந்தாலும் பாண்டிநாடு முழுவதும் நிறைந்தவர்களே' (கா 2, பக். 12) என்று கூறுவதில் நன்கு விளங்கும். தமிழின தனிச் சிறப்பை மருதனார் கூற்றாக ஆசிரியர் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது. 'உள்ளத்தின் வளமையும் செங்கோலின் வலிமையும் தமிழ் உணர்விலே தான் கலந்துள்ளன'(கா. 2, பக். 12—13) என்பதை மன்னனுக்கு மருதனார் உணர்த்துகிறார்.

அறத்தை வலியுறுத்த ஆசிரியர் பல இடங்களில் முயல்கிறார். 'அறமின்றி ஆக்கமில்லை' (பக். 18) என்பது அவருடைய கொள்கை. வாள் வீரம் பேசும் சேரப் படைத் தலைவன் அழும்பில்வேளிடம் அவனுடைய தங்கை வஞ்சி அறவுணர்வை வலியுறுத்துவதைக் காணலாம். 'கடமை ஆற்றுவதே அறத்தின் வழி நிற்பது தான் என்றாலும் அது நேர்மையின் பக்கம் சார்ந்திருக்க வேண்டும்.' (கா. 6, பக். 33) மருதனார் பாண்டிய மன்னனிடம் 'அறமே உலகமெனும் சகடம் ஒழுங்குற இயங்கத் தாங்கும் அச்சாணி' (கா. 7, பக். 35) என்று உறுதியாகக் கூறுவது ஆசிரியரின் அறக்கோட்பாட்டை மேலும் வலிமையடையச் செய்யும். 'தவறி வாழ்வதிலும் செத்துமடிவதே மேல்' (கா. 17ஆ, பக். 81) என்ற நாடகக் கூற்று ஆசிரியரது மனக் கருத்துப் புலப்பாடாக வெடித்து உள்ளது.

மனித மனத்தின் இயல்பான உணர்வுகள், தமிழர் பண்பாட்டு உணர்வுகள், சமூக நடப்பு உணர்வுகள் இணைந்து விளக்கப்படும் ஒரு பண்டைத் தமிழ் இலக்கியத் தழுவல் நாடகமாக இது விளங்குகிறது. உரைநடையில் எழுதப் பட்டிருந்தாலும் இது நடிப்பதற்கு உரியதாக அமைந்துள்ளதா என்ற ஐயம் ஏற்படத்தான் செய்யும் நாடக நடையை எளிது என்று கூற முடியாது. ஆயினும் இனியது இல்லை என்று ஒதுக்க இயலாது. இலக்கிய நயமும், கருத்துச்

செறிவும், பயன் அறிவும் மிக்க இந்த நாடகத்தை மேடைக்கு அறிமுகம் செய்வது கடினமாயினும் படிப்போருக்கு நல்ல விருந்து படைக்கும் என்று கருதுவதில் கடினமில்லை. தமிழ் நாடகவுலகம் ஏற்று மகிழ வேண்டிய ஓர் இலக்கியப் படைப்பாகத் 'தலையாலங்கானத் தலைவன்' என்ற தழுவல் நாடகத்தைச் சிறப்பாக மதிக்கலாம்.

அடாவடி அம்மாக்கண்ணு

சமூக உணர்வுடன் மனித அவலங்களைச் சுட்டிக் காட்ட விரும்பிய 'மெரீனா' 'அடாவடி அம்மாக்கண்ணு' என்ற நயமான நாடகத்தை நடிப்பதற்கு ஏற்றவாறு எளிமையாகவும் இனிமையாகவும் படைத்துத் தந்துள்ளார். 'அடாவடி அம்மாக்கண்ணு' தன்னம்பிக்கையும், மன உறுதியும் கொண்ட ஒழுக்கமுள்ள பெண். உழைத்துப் பிழைக்க வேண்டும் என்ற எண்ணப்பாங்கு உடையவள். ஒழுக்கமற்ற மாமனின் மிருக ஆசைக்கு இளவயதில் பலியாகும் அவளுடைய வாழ்க்கைப் பெரும் சோதனைக்கு உள்ளாகிறது.'[2] இது ஆசிரியர் இந்நாடகம் பற்றிக் கூறுவதாகும். நாடகத் தலைவி ஓர் உதாரண மங்கையாகத் திகழ்வதாகவும் கருதுகிறார்.

பாமர மக்களின் வாழ்வியலைக் கொண்டு இந்த நாடகம் புனையப் பெற்றுள்ளது. அறியாப் பருவத்தில் எதிர்பாராத விதமாக நடந்த தவறு நாடகத் தலைவியைக் குற்றவுணர்வில் ஆழ்த்தி விட்டது என்று கருதும் அளவுக்கு நாடகச் செயலோட்டம் காணப்படுகிறது. அவள் தவறு செய்தவனை மன்னிக்கவும் முடியாமல் மறக்கவும் முடியாமல் தவிப்பது நாடகத்தின் அகவுணர்வுக் களனாக அமைகிறது. தவறு செய்தவன் வெறியுடனும் வேகமுடனும் செயற்படுவது நாடகச் சிக்கலை வளர்ப்பதாக உள்ளது. அஞ்சி அஞ்சிச் சாகும் அபலைகளுடன் அஞ்சா நெஞ்சமும் அயரா உழைப்பும் கொண்டு நெறியும் நேர்மையும் விளங்க வாழ விரும்பும் அம்மாக்கண்ணு படும் பாடு தான் நாடகத்தின் செயல்பாடுகள்.

அம்மாக்கண்ணு புரிந்து செயலாற்றுவதைப் புரியாமல் சிக்கலுக்கு ஆளாகும் பாத்திரங்களை இறுதியில் இரக்கத்துக்கு உரியவராக்கி அனைத்தையும் எளிதாகப் புரிய வைக்கும் ஆசிரியரின் படைப்புத்திறன் நாடகத்தை வெற்றிப் பாதைக்கு இழுத்துச் செலகிறது. அதிகாரத் திமிரும், பண பலமும் அறிவுத்

2. நாடக ஆசிரியரின் 'என்னுரை', பக். 1.

திறனுக்கு அடங்கி அலறுவதை நாடக இறுதி நன்கு புலப்படுத்துகிறது. நுட்பச் செயல்களை எளியவராலும் திறமையாகச் செய்ய முடியும் என்பதை இந்த நாடகத்தின் வாயிலாக நாடக ஆசிரியர் நன்கு காட்டி விடுகிறார். செயல்பாடுகள் எளியவரின் இயல்புகளைக் கொண்டே அமைந்து உயர்வுகளை எடுத்து இயம்புகின்றன.

நாட்டு நடப்புகள் காட்சிகளுக்குள் ஊடாடிச் சமூகச் சீர் திருத்தத்துக்கு உரிய சிந்தனைக் கருத்துக்களாக அமைகின்றன. கள்ளப்பணம், பதுக்கல், கலப்படம், பரிசுச் சீட்டு மோசம் போன்றவை நயமாகக் கண்டிக்கப் படுகின்றன. அங்கதப் போக்கில் அவ்விடங்கள் அமைவதினால் நகைச் சுவை கூட்டும் நோக்கமும் நிறைவேறி நாடகச் சுவை பெருகுகிறது. பாத்திரங் களுக்குத் தக்க மொழி நடை பயன் படுத்தப்பட்டுள்ளது.

நாடகக் கட்டுக் கோப்பில் அளவான சிக்கலும் தகுதியான நிகழ்ச்சிகளும் இருப்பது மெய்ம்மைச் சிறப்புக்குத் துணையாக அமைகின்றன. பாத்திரப் படைப்பு வாழ்வில் காண்போரை நினைவு படுத்துகிறது. ஆசிரியரின் நோக்கம் சமூகப் பிரச்சினைத் தீர்வாக உள்ளது. அது இக்கால கட்டத் தேவை கருதியது. ஆகையினால் இந்த நாடகத்தை நல்ல பயனுள்ள படைப்பாக ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. சமூகப் பயன் கருதி மேடைக்கு ஏற்ற முறையில் எளிமையாக எழுதப்பட்ட ஒரு நல்ல நாடக மாக 'அடாவடி அம்மாக்கண்ணுவை' ஒப்புக்கொள்ளலாம்.

### இங்கே சாதி சாகுது

தேசிய விருது பெற்ற நாடகமான 'இங்கே சாதி சாகுது' என்ற சமூகவுணர்வு நாடகம் குழந்தைகளுக்கும் பாமர மக்களுக் கும் ஏற்ற முறையில் முகமதலி என்பவரால் நன்கு எழுதப்பட்ட தாகும். சாதி மாறித் திருமணம் செய்வது நாடகத்தின் சிக்க லாக அமைகிறது. முதற்காட்சியில் பிச்சைமுத்து என்ற நாட்டுப்புறப் பாத்திரம் 'என்ன இருந்தாலும் சாதிவுட்டு சாதி கண்ணாலம் பண்ணிக்கிறது சாதாரண சமாசாரங்களா?' (கா.1, பக். 7) என்று கூறுவதில் சிக்கல் அறிமுகமாகி விடுகிறது. சமூக வழக்கங்களை மீறுவது கடினமானதாக இருக்கும். மீறும்போது பிறர் குறை கூறுவது மனவருத்தத்தைத் தரும். ஆயினும் சில வழக்க மீறல்கள் பழக்கத்துக்கு வந்து விடும்போது அவற்றின் நன்மை சமூகத்துக்கு இனிமை தருவதாக அமைந்து விடுவதைக் காணலாம். இந்த உண்மையை நாடகப் போக்கில் பார்க்க முடிகிறது.

சாதிப் பிடியில் சிக்கித் தவிக்கும் ஆளவந்தாரிடம் அவருடைய மனைவி செல்வத்தம்மாள் 'பாவக்கா கசக்கத்தாங்க செய்யும்; ஆனா உடம்புக்கு நல்லதாச்சே' (கா.6, பக். 33) என்று கூறியதும் அவரது மனத்தின் இறுக்கமாகப் பற்றியிருந்த சாதி பாகுபாட்டுப் பிடி முறுக்கவிழ்ந்து தளருகிறது. இவ்விடத்தில் நாடகத்தின் உச்ச நிலையை உணர முடிகிறது. முடிவில் ஊரிலுள்ள முதியவர் ஒருவருடைய அனுபவ அறிவுரைப் படி சாதி மாறித் திருமணம் செய்வது தவறில்லை என்று அனைவராலும் எந்த விதமான சிக்கலுக்கும் இடமில்லாமல் ஒப்புக் கொள்ளப் படுகிறது. 'அய்யா! எங்க எல்லாருடைய கண்ணையுமே தெறந்திட்டீங்கய்யா!' (கா. 8, பக். 55) என்று ஊர் மக்கள் உணர்ச்சியுடன் கூறுவதில் சிக்கலின் தீர்வு முழுமையடைந்து நாடகம் முற்றுப் பெறுகிறது.

சாதி வேறுபாடு நாடகத்தின் முக்கியப் பிரச்சினையாக இருந்தாலும் செயலோட்டத்தின் இடை நடுவே முதியோர் கலவி, புதுமுறை விவசாயம், பண்பாடு காத்தல், பெண்களை மதித்தல், நல்ல மருத்துவ முறைகளை ஏற்றல், மூட நம்பிக்கை அகற்றல், சுய வேலை வாய்ப்புக்களை ஏற்றல், விதவைகளின் மறுமணம் போன்ற தேவையான கருத்துக்கள் பொருத்தமாக விதைக்கப் பட்டுள்ளன. பெண்கள் பிள்ளைகளை மிகையன்பு செலுத்திக் கெடுக்கும் போக்கை ஆசிரியர் வன்மையாகக் கண்டித்துள்ளார்.

நாட்டுப்புற பேச்சு வழக்கு முறை நாடகத்தின் மொழிநடையாகக் காணப்படுகிறது. மக்கள் சாதாரணமாகப் பயன்படுத்தும் பழமொழிகள் பழக்கத் தொடர்கள் ஆகியவற்றை நன்கு தெரிந்த முறையில் நாடகம் எழுதப்பட்டுள்ளது. 'அடி வயித்திலே நெருப்பை வச்சிட்டானே' (பக். 40), 'பாவிப் பய மவன்' (பக் 41), 'சாடை மாடையா' (பக். 41), 'சட்டு புட்டுனு' (பக். 42), 'எசகு பிசகு' (பக். 43) போன்ற பல தொடர்கள் கொத்துக் கொத்தாக நாடகமெங்கும் பரவியுள்ளன. செயல்களும் சொற்களும் நடப்புக்கு ஏற்றவாறு உண்மையாக உள்ளன.

பாமர மக்களிடம் அறியாமை காரணமாகப் பரவிக் கிடக்கும் பலவிதமான குறைபாடுகளை அகற்றி அவர்களை முறைப்படுத்தி முன்னேற்ற வேண்டும் என்ற நல்ல நோக்கம் ஆசிரியரின் மனத்தில் எழுந்துள்ளதை இந்த நாடகம் நன்கு காட்டி விடுகிறது. எளிமையாக இருந்தாலும் ஓரளவு திருத்தமாக அவர்கள் பேசப் பழக வேண்டும் என்ற கருத்தும் இருக்க வேண்டும். இதை நாடகப் படைப்பாசிரியர் சிந்திப்பது மொழிக்கு நல்லது. சாதிப்

பிடிப்பைத் தளர்த்தும் ஒரு சிறு கருவியாக இந்த நாடகத்தைக் கருதி மன நிறைவு பெறலாம்.

**ஏமாந்தவர் யார்?**

**ஆலந்தூர் கோ. மோகனரங்கன்** சிறுவர் நலம் கருதிப் பல இலக்கியச் செல்வங்களை எழுதிப் புகழ் பெற்றவர். அவர் இவ்வாண்டு 'ஏமாந்தவர் யார்?' என்ற நாடகத்தைச் சிறுவர்க்குச் சுவையாகவும் பெரியவர்க்கு நல்ல அறிவு விளக்கமாகவும் எழுதி வெளியிட்டுள்ளார். நாடகம் 22 காட்சிகளால் கட்டப் பெற்றுள்ளது.

சமூகவுணர்வுடன் பின்னப்பட்ட இந்தநாடகம் வரதட்சினை வாங்கும் வழக்கத்தை வன்மையாகக் கண்டிக்கும் தன்மையுடன் புனையப் பெற்றுள்ளது. பிள்ளைக்குச் சீர்வரிசை வாங்க வேண்டும் என்ற உணர்வு எவ்வளவு தூரம் சமுதாயப் பழக்கமாக ஒட்டியுள்ளது என்பதை முதற் காட்சியிலேயே ஆசிரியர் நுட்பமாக விளக்கி விடுகிறார்.

பொறியியல் பட்டம் பெற்று மகிழ்வுடன் வந்து நிற்கும் மகனிடம் அவன் பிறப்பதற்கு முன்பே தந்தையின் விருப்பம் எதுவாக இருந்தது என்பதனை விளக்கிக் கூறுகிறாள், தாய்.

'மகன் பொறந்து வளர்ந்ததும் அவனுக்குப் பொண்ணு கொடுக்கிறவர் இந்தப் பிளாட்லே பங்களா கட்டிக் குடுக்கட்டும் அப்படின்னு சொன்னார்.' (பக். 6.) எவ்வளவு பெரிய ஆசை எப்பொழுதே தொடங்கி விடுகிறது. என்று சிந்தித்தால் வரதட்சணை வாங்கும் வழக்கத்தின் சமுதாயப் பிடிப்பு நன்கு விளங்கும்.

பெரும் செல்வத்தைச் சீராகவும் வரிசையாகவும் வாங்க வேண்டும் என்ற பேராசையில் தந்தை மகனின் நல்வாழ்வையும் குடும்பப் பந்த பாசங்களையும் முன்னாளில் மற்றவர் தனக்குச் செய்தஉதவிகளையும் மறந்து விடுகிறார். வரதட்சணை வாங்க வேண்டும் என்ற பேராசைப் பேய் பிடித்து மனிதாபிமான உணர்வு இழந்து செயல்படுத்துகிறார்.

அவரை ஏமாற்ற சிங்கப்பூரிலிருந்து ஒரு போலிப் பணக்காரன் வருகிறான். அவனுடைய பேச்சில் மயங்கிய தந்தை நோய் பிடித்த பெண்ணைத் தன் மகன் கைபிடிக்குமாறு செய்து விடுகிறார். திருமணத்துக்குப் பின், தான் நன்றாக ஏமாற்றப் பட்டுள்ளதை அறிகிறார். அவரது வெறுப்பு மணப் பெண்ணைப் பழி வாங்கப் பாய்கிறது. அவளைக் கொல்லும் அளவுக்கு அவருடைய செயல்கள் கடுமையாகின்றன.

ஆனால் மகனும் மனைவியும் மணமகளுக்குத் துணையாக நிற்கின்றனர். அவள் இறந்து விட்டாளா அல்லது மறைந்து விட்டாளா என்ற சூழ்நிலை உருவாக்கப் படுகிறது. உடனே தந்தை மகனுக்கு மறுமணம் செய்ய விரும்புகிறார். இரண்டாம் திருமண ஒழுங்குகளை மகனும் முன்னின்று கவனிக்கிறான். திருமணம் நடந்த பின்னர் தான் தந்தைக்குத் தன் முதல் மருமகளும் இரண்டாம் மருமகளும் ஒருத்தியே என்ற உண்மை புலனாகிறது.

'என்னை நல்லா ஏமாத்திட்டிங்களேடா பாவிகளா!' (பக். 76) என்று அலறித் தலையிலே கையை வைத்து அவர் அமர்ந்து விடுகிறார். 'யாருமே வரதட்சணை வாங்காம திருமணம் பண்ணுகிற காலத்திலே தான் உண்மையான சமுதாய மறுமலர்ச்சியைப் பார்க்க முடியும்!' (பக். 79) என்ற அறிவுரையுடன் நாடகம் இனிது முடிகிறது.

பாத்திரப் படைப்பு இயல்பாக அமைந்து உள்ளது. நாடகக் கட்டுக்கோப்பு சீராகக் காணப்படுகிறது. எடுத்துக் கொண்ட கருப்பொருள் இன்னும் சற்று அழுத்தம் பெற்றிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

**எனக்கென்றே நீ!**

'வாசவன்' எழுதியுள்ள 'எனக்கென்றே நீ' என்ற நாடகம் செல்வச் செருக்கால் ஏற்படும் அவலங்களை எடுத்துக் காட்டுவதுடன் மனித இயல்புகளைப் புரியாமல் செயல்படுவதினால் நேரிடும் சிக்கல்களையும் விளக்க முயல்கிறது இந்த நாடகத்திலுள்ள பிரச்சனைகள் சமுதாய நிலைக்கு ஏற்றிக் காண முடியா விட்டாலும் ஓரளவு அதை ஒட்டியதாகவே காணப்படுகின்றன. மறைப்பு உத்தி (suspence) நாடகத்தை வளர்க்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது ஆனால் அது ஆற்றல் குறைந்ததாகவே காணப்படுகிறது.

குருமூர்த்தி ஒரு தொழிலதிபர். அவர் தாயற்ற தன் மகளை கட்டுப்பாடின்றி வளர்த்துள்ளார். ஆகையினால் அவள் பிறரிடம் முறையிலாது நடந்து பலவிதமான சிக்கலுக்கு ஆளாகிறாள். சூழ்வினை காரணமாக ஏழையாகவும் பகையாகவும் இருந்த அத்தை மகனை அவள் மணக்க வேண்டிய கட்டாய நிலை ஏற்படுகிறது. பிறரைப் புரிந்து அவர்களுக்கு ஏற்றவாறு நடந்து கொள்ளும் அறிவு இல்லாமையால் அவளுடைய மண வாழ்க்கை வெறுமை ஆகி விடுகிறது. பிறருடைய வெறுப்புக்கு ஆளாகிறாள். அவளது அவலமான வாழ்வினால் ஏற்பட்ட

பட்டறிவு பலவித வாழ்க்கை உண்மைகளை உணர்த்துகிறது. மயக்கக் காட்சிகள் தெளிவடைகின்றன, மணவாழ்வு புது வாழ்வாக மலர்கிறது நாடகம் பலவிதமான சிக்கல்களுக்கு இடைப்பட்டு முடிவில் இன்பியலாக மாறி நிறைவுறுகிறது.

நாடகத்தில் பல்வேறு சிக்கல்கள் இடை நுழைவதினால் ஒரு விதமான குழப்ப நிலை உருவாகிச் செயலோட்டத் தடை ஏற்படச் செய்துவிடுகிறது. ஆசிரியர் பல கருத்துக்களை மனத்திற்கொண்டு அவை அனைத்தையும் ஒரே நாடகத்திற் புகுத்தித் தெளிவு காண விரும்பியுள்ளதாகத் தோன்றுகிறது. ஆகையினால் நாடகத்தின் இயல்பான வளர்ச்சியும் சீரான போக்கும் சிதைந்துக் காணப்படுகிறது.

முறையாக வளர்க்கப்படாத பெண்ணைத் திருத்த கையாளும் முறைகள் முறையாகத் தோன்றவில்லை. சில நிகழ்ச்சிகள் மிகையாக இணைக்கப்பட்டுள்ளதாகக் கருத இடமுள்ளது. சீதாவின் குடும்பத்துக்காக மனிதாபிமான முறையில் இரங்கி உருகும் முரளி, தன் மனைவியான மதுவிடம் மிகுந்த முரட்டுத்தனத்துடன் நடந்து கொள்ளும் போக்கு அவனுடைய பாத்திரப் படைப்பு ஒழுங்கை ஊனமுறச் செய்வதாகக் காணப்படுகிறது.

இறுதியில் மது முரளியிடம் 'மன்னிப்புக் கேட்டுடாதீங்க... தெய்வம் வரம்தான் கொடுக்கலாம் வரம் கேட்கக்கூடாது'' (பக். 159) என்று கண்கலங்க மனம் பதறக் கேட்கும்போது அவள் உண்மையில் தெய்வமாகி விடுகிறாள். ஆனால் இந்த இடத்தில் சீதையின் பரிதாப நிலைக்கு உருகி உருகித் தேய்ந்த தெய்வமான முரளியின் நிலை என்ன ஆகிறது? இது முரண்பாடல்லவா? இத்தகைய முரணானப் போக்கு தவிர்க்கப்பட்டிருக்க வேண்டும். சூழ்நிலைச் சுரண்டல்களால் மனிதன் மற்றவர்கள் கண்களுக்கு மயக்கப் பொருளாக மாறிப் பலவிதமான அவலங்களுக்குக்காரணமாகி விடுவதை விளக்கும் நாடகமாக இதனைக் கொள்ளலாம்.

**சங்கமித்திரை**

ஓரங்க நாடகங்கள் மதிப்பும் வரவேற்பும் மிகுதியாகப் பெற்ற இக்காலத்தில் சில ஓரங்கத் தொகுதிகள் இவ்வாண்டு வெளியிடப் பெற்றுள்ளன. தாமரைக் கண்ணனின் 'சங்கமித்திரை' அத்தகைய தொகுதிகளில் ஒன்றாக உள்ளது. இதில் விசாகை, தெய்வத்தைக் கொன்ற மனிதர்கள், சங்கமித்திரை, தகடூர்க்கோட்டை, நிழல் என ஐந்து நாடகங்கள் இடம் பெற்றுள்ளன. அனைத்தும் வரலாற்று மூலம் கொண்டவை. கற்பனைக் களத்தில் வரலாற்று உண்மைகள் புகுத்தப்பெற்று புனைவு வண்ணப்பூச்சுடன் நாடக

மலர்களாக விரிந்துள்ளன. இவற்றில் வரலாறு வாழ்வதுடன் கலையும் சிறப்பது போற்றுவதற்கு உரியதாகும்.

புத்த சமய உணர்வைக் கொண்டு வடிக்கப் பெற்றுள்ள விசாகை பெண்களின் உணர்வுகளுக்கு மதிப்பு கொடுக்கும் படைப்பாகும். ஆண்களுக்குப் புரியாதப் புதிராகப் பல சமயம் இருக்கும் பெண்மனம் இரக்கச் சிந்தனைக்கு இனிமையான இருப்பிடமாகக் காணப்படுகிறது. பெண்ணின் மனவியல்புகள் பல இடங்களில் விளக்கப் பெற்றுள்ளன.

'பெண்களின் கோபமும் வருத்தமும் நிலையானவை அல்ல! அதிலும் புத்திசாலிப் பெண்களின் மன வருத்தங்களும் கோபங்களும் மின்னலைப் போல் தோன்றி உடனே மறைந்து போகும்' (பக். 31) என்று மிகாரர் கூறுவது அவற்றுள் ஒன்று. அன்பு செலுத்துவதில் பூவைப் போன்ற மென்மையும் கொள்கைப் பிடிப்பில் எஃகைப் போன்ற உறுதியும் உடையவர் என்பது நன்கு உணர்த்தப்படுகிறது.

முறையே மாமனாகவும் மருமகளாகவும் வரும் மிகாரர் விசாகை ஆகிய இருவரும் கருத்து மாறுபட்டுமனவேறுபாட்டுடன் உண்மை காண விரையும் வேகத்தில் நாடகம் விறுவிறுப்புடன் வளர்கிறது. அறவாழ்வே மனிதனுக்கு உயர்வைத் தருவது என்ற உண்மை உயிரோட்டமாக அமைகிறது. புத்த தருமம் புகழப் படுகிறது.

இரண்டாவது நாடகமான 'தெய்வத்தைக் கொன்ற மனிதர்கள்' பண்டைக் கிரேக்க வரலாற்று நிகழ்ச்சியான சாக்ரட்டீசின் தண்டனையை அடிப்படையாகக் கொண்டது. ஞானத்துக்குப் பெயர் போன அத்தீனிய அறிஞரைச் சட்டத்தின் பிடிக்குள் அடக்கிக் கொன்ற அத்தீனிய மக்கள் வரலாறு அழிக்க முடியாத கறையுடன் குறைபட்டுள்ளதை இந்த நாடகம் விளக்குகிறது.

'வாலிபர்களைத் தம் பக்கத்தில் வைத்திருக்கும் யாரையும் நாம் சுலபமாக எண்ணிவிடக் கூடாது. ஏனெனில் நாட்டை அவர்கள் தங்கள் பக்கம் திருப்பிக் கொள்வார்கள்' (பக். 102) என்று லைகோன் என்ற பாத்திரத்தின் வாயிலாக வெளிப்படுத்தும் உண்மை' எக்காலத்துக்கும் பொருந்தும் கருத்தாகக் காணப்படுகிறது. இவ்வாறு பல நுட்ப உரைகள் அங்கும் இங்குமாகச் சிந்தனையைக் கவர்வதாக உள்ளன. நாடகம் எழுதும் வேகத்தில் சிதறியுள்ள சில உரைத்துளிகள் மயக்க உணர்வுக்கு இடம் அளிப்பதாகவும் காணப்படுகின்றன.

மூன்றாவது நாடகமாக வந்துள்ள 'சங்கமித்திரை' போரின் கொடுமைகளை விளக்கி அதற்கு எதிரானப் போரை அறிவுரை ஆயுதங்கள் தாங்கித் தொடுக்கிறது. படை வலியால் பிற நாட்டைக் கவரும் அரசர் பகற்கொள்ளைக்காரர் (பக். 196) என்று கூறும் அளவுக்கு ஆசிரியரின் போரெதிர்ப்புக் கொள்கை இந்த நாடகத்தில் வலிமை பெற்றுள்ளது. போரை மறந்து சீரை நாடுவது இதன் நோக்கமாகக் காணப்படுகிறது.

நாலாவது நாடகமான 'தகடூர்க் கோட்டை' புறநானூற்றுச் செய்திகளைக் கொண்ட அதியமானின் வரலாற்றுப் படமாகும். நாடக ஆசிரியர் பாடல்கள் சிலவற்றுக்குப் புதுப் பொருள் கண்டு அதற்குத் தக்கவாறு நாடகப் புனைவை அமைத்துள்ளமை சிந்தனைக்குரியது. புதுமையான சிந்தனை வரவேற்கத்தக்கதே. ஆயினும் அது உறுதியான உண்மைகளுக்கு ஊறாக அமையாமல் இருப்பதே முறையாகக் கருதப்படும்.

ஐந்தாவது நாடகமாக அமைந்துள்ள 'நிழல்' மனச்சான்றுக்கு எதிராக மனிதன் செயற்பட முனைவதை வலிமையாகக் கண்டிப்பதுடன் ஒவ்வொருவரின் செய்வினைப் பயன்களும் அவர்களை நிழல் போலத் தொடர்ந்து கொண்டே இருக்கும் (பக். 272) என்ற கருத்தையும் உறுதிப் படுத்துகிறது. பதவி யாசைக்கு அடிமையாகி கொடுமைகள் புரியும் ஒருவன் மீது அன்பை அள்ளிக் கொட்டி வாட்டும் பெருமிதச் செயலில் நாடகச் சிறப்பு உள்ளது. ஒருவர் செலுத்தும் அன்பு அடுத்தவரின் மனத்தைத் தொட்டு அவருடைய நெஞ்சத்தில் உறைந்து கிடக்கும் வஞ்சத்தைக் கரைத்து விடும் என்பது உண்மை. இதனை உணர்த்தும் நாடகமாக இது காணப்படுகிறது.

நாடகக் கொள்கைகளை நன்கு அறிந்து படைக்கப்பெற்ற நாடகங்கள் போன்று இவை நன்கு அமைந்து தோன்றுகின்றன. நாடகத் தொடக்கங்கள் குறிப்பிடத் தக்க சிறப்புகளுடன் அமைந்துள்ளன. பல உத்திகளைக் கையாண்டு நாடகங்களின் மையக் கருத்துக்களை வலிமையடையச் செய்வதுடன் படைப்புக் களின் கலைச் சிறப்புக்களையும் பெருக்க ஆசிரியர் முயல்கிறார். கருத்தும் கற்பனையும் மனத்தைக் கவர்கின்றன.

**நீ வந்த நேரம்**

ஏர்வாடி எஸ் இராதா கிருஷ்ணன் எழுதி வெளியிட்டுள்ள ஓரங்கத் தொகுதியான 'நீ வந்த நேரம்' என்பதில் எட்டு நாட கங்கள் சமூக எண்ணங்களை வெளிப்படுத்திக் காட்டும் தரமாக அமைந்துள்ளன. அவை, இப்பொழுது புரிகிறது, ஆயிரமும்

ஆயிரத்து நூறும், தேவை உங்கள் சேவை, பழசும் புதுசும், ஒரு நாடகம் அரங்கேறுகிறது, நீ வந்த நேரம், உன்னிடம் மயங்கு கிறேன், உபசாரம் என்ற பெயர்வரிசையில் இடம் பெற்றுள்ளன. தனித்தனியாக ஒவ்வொன்றும் ஒரு பிரச்சினையை எடுத்து அழுத்தமான முறையில் அலசிப் பார்க்கிறது உணர்ச்சிப் புலப் பாடும் உள்ளது. இன்றைய சமுதாயத்துக்கு உதவும் தரமாக இந்த நாடகங்கள் அமைந்திருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

வேலை பார்க்க அலுவலகத்துக்குச் செல்லும் பெண், கணவ னுக்கும் மற்றவர்க்கும் எத்தகையப் பிரச்சனைகளைக் கொடுக் கிறாள் என்பதை, முதல் நாடகமான 'இப்போது புரிகிறது' விளக்கிக்காட்டுகிறது. கணவனின் தங்கை, வீட்டு வேலைகளைச் செய்து அலுப்புடன் அலுவலகம் சென்று வரும் அண்ணனின் மனைவியைப் பொறாமையுடன் நோக்குகிறாள். ஆனால் நேர் மாறான கருத்துடன் அண்ணியின் வெறுப்புக் கனல் 'அவள்' மீது கொட்டப்படுகிறது. வீட்டு வேலையில் அலுத்தவள் திருமண மானதும் கணவனுடன் பொருந்தாமல் அவதிப்படுகிறாள். அவ ளுடைய பிரிவு அனைவரையும் வாட்டுகிறது. முன்பு வெறுப் புற்றவர் பின்பு வாழ்வின் தன்மைகளை நன்கு புரிந்து ஒருவரை ஒருவர் பற்றுடன் காணத் துடிக்கின்றனர். மனவியல்பே அனைத்துச் சிக்கல்களுக்கும் காரணம் என்ற உண்மை புலனா கிறது.

'ஆயிரமும் ஆயிரத்து நூறும்' என்ற ஓரங்க நாடகம் தாயின் மிகையன்பால் தகுதி இழந்து வாழும் ஒரு தனையனின் வாழ்வை எடுத்துக் காட்டி அவனை நெறிப்படுத்தும் தந்தையின் திறத்தைச் சுட்டுகிறது. தந்தையிடம் முரண்பட்டு அவரிடம் தோற்று மனம் மாறித் திருத்தமுறும் இளைஞனை இந்த நாடகம் சுவையாகக் காட்டுகிறது.

'தேவை உங்கள் சேவை', ஒரு சிற்றூர் நிகழ்ச்சியை அடிப் படையாகக் கொண்டது. நாட்டாண்மைக்காரரின் அதிகாரத் திமிரும் ஆணவப்போக்கும் வெறித்தனமான போக்குக்கு மற்ற வர்களைத் தூண்டுகிறது. ஆனால் அவரவர் வினைகள் அவரவ ருக்கு எதிராகப் படம் விரித்து ஆடுகிறது. முடிவில் யாரை நாட் டாண்மைக்காரர்வெறுத்து எதிர்த்தாரோ அவருடைய பரிவால் இவருடைய உயிர் காப்பாற்றப்படுகிறது. வெறுப்பு உறைந்த மனத்தில் அன்பு ஊறி வழிகிறது. போலி மருத்துவம் கண்டிக்கப் படுகிறது. வஞ்சகம் நெஞ்சகத்தை அரிக்கும் கரையான். அதைக் கொன்று விட்டால் அமைதியும் ஆறுதலும் கிடைக்கும். இன்ப வாழ்வு இனிது மலரும்.

நாலாவது நாடகமான 'பழசும் புசுதும்' வாடகைக்கு வீடு தேடி அலையும் அவலத்தை நன்கு காட்டுகிறது. நகரத் தரகரின் நாசமான போக்கைக் கண்டிக்கும் நயமான நாடகமாக இது காணப்படுகிறது. குடியிருக்கிற வீட்டுக்கே குடிபோகிற வேடிக்கை' (பக். 64) இந்த நாடகத்தின் உச்ச கட்டமாக உள்ளது. வீடு தேடுவோருக்கு ஓர் எச்சரிக்கையாக அமைகிறது.

'ஒரு நாடகம் அரங்கேறுகிறது' என்ற நாடகம் சுவையாக ஒரு நாடக அரங்கேற்ற நிகழ்ச்சிகளைச் சுட்டுகிறது. நாடக ஆசிரியர் தயாரிப்பாளரிடம் படும் பாடு இரக்கவுணர்வை ஏற்படுத்துகிறது. ஆனால் இறுதியில் சூழ்நிலை தலைகீழாக மாறி விடுகிறது. 'கலையைக்கலை நோக்கத்தோடு வளர்க்கவேண்டும்' (பக். 85) என்ற உறுதிப்பாட்டுடன் நாடகம் முடிகிறது.

'நீ வந்த நேரம்' என்ற நாடகம் பிள்ளை இல்லா மங்கையரை மற்றவர் படுத்தும் பாட்டை விளக்குகிறது. குறையைப் பெண்ணின் மீது சுமத்தி ஆணை அனைவரும் இன்னொரு மணம் செய்து கொள்ள வற்புறுத்தும் வன்மைச் செயல் நாடகச் செயலோட்டமாகக் காட்டப் படுகிறது. அவளுடைய கணவன் மற்றவரைப் பார்த்து, 'சுமதி விளையாத நிலமாயிருக்கலாம். அதுக்காக அவளோட வாழ்க்கையில் விளையாடச் சொல்கிறீர்களா?' (பக். 91) என்று கூறுவதில் நாடகப் பொலிவு உச்ச நிலை அடைந்து அனைவரையும் சிந்திக்கத் தூண்டி விடுகிறது.

ஏழாவது நாடகமான 'உன்னிடம் மயங்குகிறேன்' ஒரு நுட்பமான கருத்தை விளக்கும் கலைப் படைப்பாக உள்ளது. அலுவலக அதிகாரி தட்டச்சு உதவியாளரான பெண்ணை மணக்க விரும்புகிறார். காயத்திரி ஓர் ஏழை. அவளை நம்பி ஒரு குடும்ப வாழ்வே இருக்கிறது. மேலும் அவளுடைய அக்காள் இன்னும் மணமாகாமல் இருக்கிறாள். அதிகாரியான பாஸ்கர் அனைத்துத் தடைகளையும் நீக்கிக் காயத்திரியை மணக்கத் துடிக்கிறார்.

அக்காவைப் பெண் பார்க்க வருபவர் அனைவரும் தங்கையை விரும்பி அவளைப் புறக்கணித்து விடுகின்றனர். முடிவில் பாஸ்கர் அக்காளைத் தியாகவுணர்வுடன் மணக்க முன் வருகிறான். தங்கை காயத்திரி பாஸ்கரை அடைய முடியவில்லையே என்ற ஏக்கத்தில் கலங்கித் துடிக்கிறாள். நாடகம் முடிந்து விடுகிறது. பத்து காட்சிகளால ஆன இந்த நாடகம் ஒரு முழுநீள நாடகத்தைப் படித்து முடித்த உணர்வைத் தருவதாக அமைந்துள்ளது.

'உபசாரம்' என்ற எட்டாவது நாடகம் தீயவரிடமும் நல்லுள்ளம் காணக் கிடைக்கிறது என்ற உண்மையைக் காட்டுகிறது. களவு செய்யும் நோக்கத்துடன் வந்தவர் மனிதாபிமான உணர்வுடன் ஒரு பிரச்சினையை அணுகித் துன்பத் தீயில் தகித்த பெண்ணுக்கு நல்வாழ்வு கொடுத்து, தங்கள் தவறுகளுக்கு உரிய தண்டனையை மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கின்றனர். சீர்வரிசை வாங்க விரும்புவோர் செய்யும் கொடுமைகள் கடுமையான முறையில் சுட்டப் படுகின்றன.

ஓரங்க நாடகங்கள் பயனுடைய கலையாக்க உருவங்கள் என்பதனை இந்த நாடகங்கள் மூலம் நன்கு அறிய முடிகிறது. ஆசிரியரின் படைப்பாற்றலும் கற்பனைத் திறனும் விளங்குகிறது. நாடகத் தொடக்கங்கள் பிரச்சினைகளை அறிமுகப் படுத்துவதுடன் உணர்ச்சிக் கலவைகளாகவும் காணப் படுகின்றன.

**நாடகம் சுப நாடகம்**

கௌரி ராஜன் என்பார் எழுதியுள்ள ஆறு ஓரங்க நாடகங்கள் 'நாடகம் சுப நாடகம்" என்ற தலைப்பில் நூலாகியுள்ளன. பொங்கலோ பொங்கல், பணம் கிடைத்தது, கடன் கேட்காதே, நாடகம் சுப நாடகம், தொழிலும் ஒரு தெய்வமே, டிசம்பர் 20 ஆகிய ஓரங்க நாடகங்கள் ஒவ்வொரு கோணத்தில் சமுதாயப் பிரச்சினைகளை அணுகி அவற்றிற்குத் தீர்வு காண முயல்கின்றன.

வாழ்க்கைச் சிக்கல்கள் வந்து கொண்டே இருக்கும் என்பதை அறிமுகப் படுத்தும் 'பொங்கலோ பொங்கல்' என்ற நாடகம், ஒரு மனிதன் தன்மான மற்ற முறையில் அவற்றை எதிர்கொள்ள முயல்வதை விளக்குகிறது. வீட்டு வாடகை கொடுக்காமல் இருத்தல், மளிகைக் கடைக்குக் கடன் தீராமல் கடத்தல், வாங்கியக் கடனைத் திருப்பித் தராமல் காலம் கடத்தல் போன்றவை நாடகத்துள் பேசப்படுகின்றன. வாழ்வியல் அறியாப் போலியாக அவன் தோன்றுகிறான். அவனுடைய மனைவியின் நிலை கழிவிரக்கம் தருவதாக உள்ளது. கடன் வாங்கிக் கடனடைக்கும் அறிவற்ற செயல் அழிவுக்கு வழி வகுக்கும் என்பது நாடகக் கருத்து.

'பணம் கிடைத்தது' நாடகம் மாமியார் மருமகள் சிக்கலையும், அண்ணி நாத்தனார் சச்சரவையும் கொண்டு உருவாக்கப் பட்டுள்ளது. கணவனது சிந்தனையும் மாமியாரின் பொறுமை

யும் நன்மை ஊற்றுகளாக அமைய அடுத்த வீட்டுக்காரியின் தீய அறிவுரை நச்சுச் சிதறலாக விழுந்து நாடகச் சிக்கலுக்கு உதவுகிறது. பழி ஓரிடம் பாவமோரிடம் என்று நினைத்த தீச்செயல், அறிவு நுட்பச் செயற்பாட்டால் அம்பலப்படுத்தப் பட்டு அனைவருக்கும் அமைதியைக் கொடுப்பதுடன் தீயவர் திருந்த வழியமைத்துக் கொடுக்கிறது.

'கடன் கேட்காதே' நாடகம் வீணாண பேச்சாக அமையும் போலியான மனிதனின் உள்ளக் கருத்தை வெளிப் படுத்து கிறது. பணம் இருக்கும் போதுள்ள மனநிலை, பொருள் பெற்றதும் மாறி விடுவதை இந்த நாடகம் தெளிவாகக் காட்டு கிறது. மனிதனின் போலித்தனத்துக்கு ஒரு சம்மட்டி அடியாக இந்த நாடகம் அமைகிறது.

'நாடகம் சுப நாடகம்' நகைச் சுவையுடன் ஒரு மனிதனின் நாடக ஒத்திகையைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. அவனுடைய நாடக ஒத்திகைப் பயிற்சியை அறியாத குடும்பத்தினர் அவன் மேல் ஐயப்படுவதும் பின்னர் உண்மையை அறிந்து வியப்பதும் நாடகக் கதைப் பின்னல் கூறுகளாகும். ஐயத்துக்கு ஆளானால் அனைவரும் தீயரே என்ற கருத்து புலனாகிறது.

செய்யும் தொழிலைத் தானே மதிக்கா விட்டால் யார் அதை மதிப்பார்கள் என்ற கருத்தை விளக்குகிறது 'தொழிலும் ஒரு தெய்வம்' என்ற நாடகம். கட்டிடக் கையாள் வேலை பார்க்கும் ஒருவன் குடித்துக்கூத்தாடிப் பணமின்றி அலைகிறான். அவனை யாரும் மதிக்க வில்லை. பின் தன் உறவுப் பெண்ணை மணப்பதற்காகக் குடிப் பழக்கத்தை நிறுத்திப் பணம் சேர்க் கிறான். பணம் சேர்ந்ததும் அவனுக்கும் அவன் பார்க்கும் தொழிலுக்கும் மதிப்பு ஏற்படுகிறது. வாழ்வைத் தந்த தொழிலைத் தெய்வமாக மதிக்கிறான். செய்யும் தொழிலில் உயர்வு தாழ்வு இல்லை. அதைச் செய்பவனின் வாழ்வமைப்பில் தான் சிறப்பும் சிறப்பின்மையும் காணப்படுகிறது.

'டிசம்பர் 20' என்ற நாடகத்தை ஓரங்கமாக மதிக்க முடியாது. அது நான்கு பாகங்களாக (அங்கம்) அமைந்த குறு நாடகமாகத் தோன்றுகிறது. கதைப் பின்னல் சிக்கல் நிறைந்தது. நாடகத் தலைப்பு அதில் அமைந்துள்ள மறைப்பை அடிப்படையாகக் கொண்டது. டிசம்பர் இருபதில் நடந்த ஒரு கொலையை அடிப்படையாகக் கொண்டது.

நாடகத் தொடக்கத்தில் சாந்தி என்ற நல்ல பாத்திரம் தனக்குள் 'உலகத்திலே என் நிலைமை

யாருக்கும் வரக்கூடாது' (பக். 90) என்று கூறுவதில் நாடகச் சிக்கல் தோன்றிச் சிந்தனையைக் கிளறி விடுகிறது. பின்னர் திருமால் என்பவன் அவளிடம் 'நாம் துன்பத்தைக் கண்டு அழ மட்டும் பிறக்கலே...அதை சமாளிக்கவும் பிறந்திருக்கோம்' பக். 93) என்று கூறுவதில் நாடகச் செயற்பாடுகள் உறுதிபெற்று முன்னேறத் தொடங்குகின்றன.

அமிர்தகோகிலா பொன்னாசை பிடித்தபேயாகத் தோன்று கிறாள். 'டிசம்பர் 20' என்று கூறிச் சாந்தியின் ஊதாரித் தந்தை அவளை மிரட்டுவது நல்லவர் அனைவருக்கும் புரியாத புதிராக உள்ளது. ஆயினும் மோகன் என்ற காவல்துறைத் தலைவரால் புதிர் விடுவிக்கப்பட்டதும் நல்லோர் அனைவரும் துன்ப விடுதலை அடைகின்றனர்.

இந்த நாடகத்தில் ஆசிரியர் காட்சி மாற்ற உத்தியை மிகுதி யாகப் பயன்படுத்திக் கதையின் சிக்கலைப் படிப்படியாக விடுவிப்பது நாடக வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிகிறது. பண ஆசை மனிதனை வெறிகொள்ளச் செய்து பழிபாவம் செய்யும் துணிவைக் கொடுக்கிறது என்ற உண்மை விளக்கப்படுகிறது. ஒருவரின் மெலிவு அடுத்தவருக்கு வலிமையாக அமைவதை அமிர்தகோகிலாவை முத்துவேல் மிரட்டுவதிலிருந்து அறிய முடிகிறது. இது ஒரு நல்ல நாடகம் என்று கூறும் அளவில் இருந் தாலும் சிறந்த நாடகம் என்று கருதும் நிலைக்கு உயரவில்லை. கருத்துத் தெளிவும் கதைப் பின்னலும் இன்னும் சீராக அமைந் திருக்க வேண்டும். வஞ்சப் பாத்திரங்களின் கடுமை இன்னும் சற்று கூடுதலாகி உறுதிப் படுத்தப்பெற்றிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

### பிற நாடகங்கள்

குழந்தை எழுத்தாளரான பூவண்ணன், குழந்தைக் கவிஞன், பொம்மை நூலகம் என இரு நாடகங்களைச் சிறுவர்களின் வாழ்க்கை வழிகாட்டிகளாக அவர்கள் எளிதில் புரிந்து சிறக்கும் தரமாக எழுதி வெளியிட்டுள்ளார். பாரதியாரின் 'பாஞ்சாலி சபதம்' நாடக உருவம் பெற்றுள்ளது. க. வெள்ளிமலை எழுதி யுள்ள 'தூக்கிலே பகத் சிங்' என்ற நாடகம் வரலாற்று உண்மைகளை அறிவிப்பதுடன் தேசிய உணர்வையும் ஊட்டு கிறது. அவர் எழுதியுள்ள 'வாயசொல் வீரர்' பாரதியாரின் கருத்தைத் துணை கொண்டு இன்றைய இளைஞர் சமுதாயத் துக்கு அறிவுரை பகர்கிறது.

இவை தவிர நாகர்கோவில் கிருஷ்ணனின் 'சிதம்பர ரகசியம்', சுஜாதாவின் 'டாக்டர் நரேந்திரன் விநோத வழக்கு', பச்சையத் தேவரின் 'திடீர் பணக்காரர் ஆவது எப்படி?' 'நான் வாழத்தான் வேண்டுமா?', சாரண பாஸ்கரனின் 'ரோஜாத் தோட்டம்' ஆகிய நாடகங்களும் வெளிவந்துள்ளன.

நிறைவுரை

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டாம் ஆண்டு, தமிழ் நாடக உலகுக்கு நல்லப் படைப்புக்களைப் பல அமைப்புக் களில் சிறந்தச் சிந்தனைத்தெளிவுடன் தந்துள்ளதாகக்கருதலாம். படிப்பதற்குத் தக்கவையாகவும் காண்பதற்கு உகந்தவையாக வும் நாடகங்கள் எழுதப் பெற்றுள்ளன. கலை மெருகும் கருத் தாழமும் உடைய நாடகங்கள் உள்ளன. சென்ற ஆண்டை விடவும் இவ்வாண்டு தமிழ் நாடகம் சற்று வளர்ச்சியடைந் துள்ள நிலை மனநிறைவைத் தருவதாகும்.

காலத்துக்கு வேண்டிய கருத்துக்கள் கலை மெருகுடன் எளிமையாகத் தரப் பெற்றுள்ளமையால் பல நாடகங்கள் சமுதாயப் பயன் கருதியவைகளாக உள்ளன. மனித மனவுணர்வு களின் பான்மையை நன்கு உணர்ந்து காலத்தினால் வெல்ல முடியாதக்கருத்துக்களைச்சுமந்து களிக்கும் நாடகங்களும் மலர்ந் துள்ளன. இத்தகைய வளர்ச்சி நாடகத் தமிழின் உயர்வை உண்மையாகக் காட்டுகிறது. தமிழ் நாடகத்தின் தேக்க நிலை மாறி ஆக்க நிலை அடையும் நல்ல அறிகுறிகள் தோன்றுகின்றன.

பின்னிணைப்பு

## 1982-இல் தமிழ் நாடகம்

| எண் | நாடகம் | ஆசிரியர் | வெளியீடு |
|---|---|---|---|
| 1. | அடாவடி அம்மாக்கண்ணு | மெரினா | பூரம் பப்ளிகேசன்ஸ்,<br>6, ஜம்புலிங்க நாயக்கர் தெரு,<br>நுங்கம்பாக்கம், சென்னை-43. |
| 2. | இங்கே சாதி சாகுது | சே.மு.மு முகமதலி | சஹாஜா பிரகாசன்,<br>D41, குல்மோகர் பார்க்,<br>புதுதில்லி-49. |
| 3. | ஏமாந்தவர் யார்? | மோகனரங்கன், கோ.<br>ஆலந்தூர். | வசந்தா பதிப்பகம்,<br>21, தருமராசா கோயில் தெரு, |
| 4. | குழந்தைக் கவிஞன் | பூவண்ணன் | ஆலந்தூர், சென்னை-26,<br>பழனியப்பா. |

| | | | |
|---|---|---|---|
| 5. | சங்கமித்திரை<br>(ஓரங்க நாடகங்கள்)<br>i) விசாகை ஏ-86<br>ii) தெய்வத்தைக் கொன்ற மனிதர்கள் 87-160<br>iii) சங்கமித்திரை 161-204<br>iv) தகடூர்க் கோட்டை 205-248<br>v) நிழல் 249-280 | தாமரைக் கண்ணன் | விசாலாட்சிப் பதிப்பகம்,<br>இராயப்பேட்டை,<br>சென்னை-14. |
| 6. | சிதம்பர ரகசியம் | கிருஷ்ணன்<br>நாகர்கோயில் | மீனா புத்தக நிலையம்,<br>மதன கோபால் தெரு,<br>அபிராமபுரம், சென்னை-18. |
| 7. | டாக்டர் நரேந்திரனின்<br>விநோத வழக்கு | சுஜாதா | குமரி |
| 8. | தலையாலங்கானத்<br>தலைவன்<br>(இலக்கிய நாடகம்) | பண்ணன் | திருமலைப் பதிப்பகம்,<br>இராயப்பேட்டை,<br>சென்னை-14. |
| 9. | திடீர் பணக்காரர்<br>ஆவது எப்படி? | பச்சையாத் தேவர்,<br>பி. எம். | சக்திப் பதிப்பகம். |
| 10. | துறவியின் புதையல் | நாராயணன், பா. | கபிலன் பதிப்பகம்,<br>34, இராசாசி குடியிருப்பு,<br>ஆத்தூர், சேலம். |

| | | | |
|---|---|---|---|
| 11. | தூக்கிலே பகத்சிங் | வெள்ளிமலை, க. | அகரம் வெளியீடு,<br>சிவகங்கை. |
| 12. | நாடகம் சுப நாடகம்<br>(ஓரங்க நாடகங்கள்)<br>i) பொங்கலோ பொங்கல் 5-17<br>ii) பணம் கிடைத்தது 18-42<br>iii) கடன் கேட்காதே 43-57<br>iv) நாடகம் சுப நாடகம் 58-77<br>v) தொழிலும் ஒரு தெய்வமே 78-89<br>vi) டிசம்பர்-20 90-159<br>(4-பாகங்கள்). | கௌரிராஜன் | முருகன் பதிப்பகம்,<br>2, சிங்கார முதலித் தெரு,<br>டி. ஆர். ஆர். நகர்,<br>சென்னை-50. |
| 13. | நான் வாழத்தான்<br>வேண்டுமா? | பச்சையாத் தேவர்,<br>பி. எம். | சக்தி நிலையம்<br>215, தர்கா ரோடு,<br>பல்லாவரம், சென்னை-43. |
| 14. | நீ வந்த நேரம்<br>(ஓரங்க நாடகங்கள்)<br>i) இப்போது புரிகிறது 1-15<br>ii) ஆயிரமும் ஆயிரத்து நூறும் 16-35<br>iii) தேவை உங்கள் சேவை 36-54<br>iv) பழசும் புதுசும் 55-66 | இராதா கிருஷ்ணன்,<br>ஏர்வாடி, எஸ். | சுதா பதிப்பகம்,<br>4-முத்து முதலித் தெரு,<br>சென்னை-7. |

| | | | |
|---|---|---|---|
| | v) ஒரு நாடகம் அரங்கேறுகிறது 67-86<br>vi) நீ வந்த நேரம் 87-104<br>vii) உன்னிடம் மயங்குகிறேன் 105-149<br>viii) உபசாரம் 150-163 | | |
| 15. | பாஞ்சாலி சபதம் | பாரதியார் | வானதி,<br>தி. நகர்,<br>சென்னை-17. |
| 16. | பொம்மை நூலகம் | பூவண்ணன் | பழனியப்பா |
| 17. | — ரோஜாத் தோட்டம் | சாரண பாஸ்கரன் | தென்றல் மன்றம்,<br>கூத்தா நல்லூர்,<br>தஞ்சாவூர். |
| 18. | வாய்ச்சொல் வீரர் | வெள்ளிமலை, க. | அகரம்<br>2-சிவன் கோயில் தெரு,<br>சிவகங்கை. |

# தொலைக்காட்சி நாடகம்

—வெ. நல்லதம்பி

தொலைக்காட்சி நாடகங்கள் பெரும்பாலும் பொழுது போக்கிற்காகவும், கொள்கைப் பரப்பிற்காகவும் அமைகின்றன. வாரந்தோறும் முக்கால் மணிநேரத்தில் தரப்படும் முழு நாடகங்களுடன், பத்து, பதினைந்து அல்லது முப்பது நிமிடத்திற்கேற்ற குறுநாடகங்களும் ஒளிபரப்பாவதுண்டு. அருகி, சில சிறப்பு நாடகங்களும் தயாரித்து வழங்கப்படுகின்றன.

தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் மக்களால் பெரிதும் விரும்பப்படுவன நாடகம், செய்தி, திரைப்படங்கள் எனலாம். இம் மூன்றனுள் நாடகம் பலரையும் விரும்பவைக்கும் பாங்குடையது. தன் இயல்புக் காரணமாகவும், புதியபுதியகதைகளைக் கொண்டு தோன்றுவதாலும் மக்களுக்கு நாடகம் இன்பம் விளைவிக்கிறது. தமிழ் நாடகத் துறைக்கு மேடைகளும் வானொலியும் இடம் கொடுத்து இருப்பது போலவே தொலைக்காட்சியும் இடம் கொடுத்திருக்கிறது.

சென்னைத் தொலைக் காட்சி 1975—ஆம் ஆண்டு தொடங்கிய நாள் முதல தொடர்ந்து நாடகங்களை ஒளிபரப்பி வருகிறது. தொலைக்காட்சி நாடகங்கள் பெரும்பாலும் பொழுது போக்கிற்காகவும், கொள்கைப் பரப்பிற்காகவும் அமைகின்றன. தனது உத்திகளுக்கேற்ப நாடகங்களைத் தயாரிப்பதுடன் மேடை நாடகங்கள் சிலவற்றையும் அது ஒளிபரப்பி வருகிறது. தொலைக்காட்சி நாடகம் ஒவ்வொரு இல்லத்திற்கும் தொலைக்காட்சிப் பெட்டி வழியாக இலவசமாகச் சென்று சேர்கிறது. அன்பர்கள் தாம் வாழும் இருப்பிடச் சூழலிலேயே இருந்த வண்ணம் இந்த நாடகங்களைக் காண்கின்றனர். இல்லச் சூழ்நிலை எவ்வாறு இருக்கும் என்பதை நாம் ஒருவாறு கற்பனை செய்து கொள்ள முடியும். விருந்தினர் நடமாடும் சூழல், இல்லத்தரசி சமையல் அறையில் வேலையாக இருக்கும் நிலை, பக்கத்து வீட்டாருக்கும் தமக்கும் உள்ள (பகை, நட்பு) உறவு நிலை, குழந்தைகளின் படிப்பு அல்லது விளையாட்டு,

குடும்ப உறுப்பினர் யாருக்கேனும் ஒருவருக்கு உடல்நலக்கேடு, அல்லது வீட்டில் நடைபெறும் விசேடம் என்று இவ்வாறான வேறுபட்டச் சூழல்களுக்கு இடையேத் தொலைக்காட்சி நாடகம் ஒளிபரப்பாகும் போது அதனைப் பார்ப்போர் மனநிலை ஒன்று போல் இருக்குமா? ஒன்றியதாக இருக்குமா? இவை எண்ணற் குரியன. உறுதியாக அவை வேறுபட்டிருக்கும் என்பதில் ஐய மில்லை. அச் சூழ்நிலையில் தொலைக்காட்சி நாடகம் எந்த அளவுக்கு அன்பர்களால் ஆர அமரச் சுவைக்கப்படும் என்று உறுதியாகக் கூற முடியாது.

தொலைக்காட்சி நாடகங்கள் முன்னரே ஒளிப்பதிவு செய்யப் பட்டு ஒளிபரப்பப் படுகின்றன. வாரந் தோறும் குறிப்பிட்ட ஒரு நாளில் முக்கால் மணி நேரத்திற்கு ஒளிபரப்பாகும் இந்த நாடகங்கள் பல வகையின. அவற்றை வரலாற்று நாடகங்கள், இலக்கிய நாடகங்கள், சமூக நாடகங்கள், எள்ளல் நாடகங்கள். நகைச்சுவை நாடகங்கள், மேடை நாடகங்கள், துப்பறியும் நாடகங்கள் என்று வகைப்படுத்தலாம். இதில் பங்கேற்போர் தொழில் துறை நடிகர், பயில் முறை நடிகர், திரைப்பட நடிகர், நடிப்புக் கல்லூரி மாணவர் என்று பல திறக் கலைஞர் ஆவர். நாடகங்களைப் பெயர் பெற்ற எழுத்தாளர் எழுதுகின்றனர். தொலைக் காட்சிக்கென்றே நாடகம் எழுதும் ஆசிரியரும் எழுது கின்றனர். அவ்வப்போது, மேடை நாடகங்களின் எழுத் தோவியங்களை வாங்கித் தொலைக்காட்சி நாடகம் தயாரிப் பதும் உண்டு. இந்த நாடகங்கள் அனைத்தும் தொலைக்காட்சி நிலையத் தயாரிப்பாளரால் இயக்கப்படுகின்றன. தேர்ந்தெடுக் கப்பெற்ற இசைக் குழுவினர் நாடகங்களுக்கு இசைஅமைப்பினை வழங்குகின்றனர்.

இந்த முழு நேர நாடகங்கள் தவிர, குறுநாடகங்கள் பல தொலைக்காட்சியில் ஒளி பரப்பாகின்றன, இந்த நாடகங்கள் பத்து நிமிடங்கள் முதல் பதினைந்து நிமிடங்களோஅல்லது அரை மணி நேரமோ கூட ஒளிபரப்பாகின்றன. இந்த நாடகங்கள் பெரும்பாலும் குறிப்பிட்ட ஒரு (பிரச்சார நோக்குடைய) கொள்கையை வலியுறுத்துவனவாக அமைகின்றன. தீண்டாமை, சிறுசேமிப்பு, நவீன வேளாண்மை முறைகள், சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்திருத்தல், கலப்புத்திருமணம், வரதட்சிணைக் கொடுமை, தொழில் அமைதி போன்ற பல கொள்கைகளை எடுத்து இயம்புவனாக அவை அமையும். வயலும் வாழ்வும், உழைப்பவர் உலகம், நலவாழ்வு, கொஞ்சம் நில்லுங்கள், வாழ்க்கைக் கல்வி முதலான நிகழ்ச்சிகளில் அவை இடம் பெறுகின்றன. இந்த நிகழ்ச்சிகள் பெரும் பாலும் நேரடி

யாகவும், சிறுபான்மை ஒளிப்பதிவு செய்யப்பட்டும் ஒளி பரப்பா கின்றன.

குறிப்பிட்ட ஒரு நாடகத்தைத் தயாரிப்பாளர் ஒருவர் தேர்ந் தெடுத்து மேலாண்மைக் குழுவினரின் ஒப்புதலோடு நாடக மாக்குகிறார். பிரதிகளைத் தயார் செய்தல், கலைஞர் தேர்வு, ஒத்திகை முதலாயின தொடங்குகின்றன. அரங்க அமைப்பு, காட்சி அமைப்பு, அரங்கப் பொருட்கள், ஒலி-ஒளி அமைப்பு முதலான தயாரிப்பு அம்சங்களை நிலைய அலுவலருடன் கலந்து ஆலோசித்துத் தயாரிப்பாளர் திட்டமிடுகிறார்.

ஒளிப்பதிவானாலும், நேரடி ஒளிபரப்பானாலும் கலைஞர் நிலையத்திற்குக் குறித்த நேரத்திற்கு வருதல் மிகவும் அவசிய மானது. அவர்க்குத் தேவையான ஒப்பனை வசதி, உடைகள், அணிமணிகள் யாவும் நிலையத்திலேயே வழங்கப்படுகின்றன. ஒளிப்பதிவு, ஒளிபரப்பு முடிந்தவுடன் இக்கலைஞர்க்குரிய சன்மானத் தொகை உடனடியாகக் காசோலை மூலம் வழங்கப் படுகின்றது.

''வாரந்தோறும் ஒலி பரப்பாகும் 52 பொது நாடகங்கள் தவிர சில சிறப்பு நாடகங்களும் தயாரிக்கப் பெறுகின்றன. தொலைக்காட்சி உத்திகளைப் பெருமளவில் சோதித்துப் பார்க்க வும் அல்லது அவற்றில் பலவற்றைப் பயன்படுத்திப் பார்க்கவும் இந்த நாடகங்கள் வழிவகுக்கின்றன. மிகச் சிறந்தக் கலைஞர் வரவழைக்கப் பட்டு அந்நாடகங்களில் பங்கேற்கின்றனர். தொலைக்காட்சி நிலையத்தில் பணிபுரியும் தயாரிப்பாளரின் ஒத்துழைப்புடன் வெளிப்புற இயக்குநர் தங்கள் திறமையைப் பயன்படுத்த இச்சிறப்பு நாடகங்கள் வழிகோலுகின்றன.

நாடகங்களைத் தொலைக்காட்சித் தயாரிப்பாளர் குறைந்த அவகாசத்திலேயே தயாரிக்கின்றனர். தயாரிப்பாளர் எண்ணிக்கை பெருகும்போது, ஒருவர் மாதம் ஒரு நாடகமும், எண்ணிக்கை குறையும்போது மாதம் இரு நாடகமும் தயாரிக்க வேண்டி வருகிறது தமிழ் நாடகத் துறை, பலர் கைவண்ணத்தில் மிளிர்ந்துள்ளது. எண்பத்திரண்டாம் ஆண்டு ஒளிபரப்பான நாடகங்களில் பெரும்பாலன சமூக நாடகங்கள்; ஓரிரு இலக்கிய நாடகங்களும் இடம் பெற்றுள்ளன. ஆண்டு தொடக்கத்தில் நாடகத்துறை இருவர் பொறுப்பில் இருந்த நிலை மாறி, பின்னாளில் நான்கு தயாரிப்பாளர் பொறுப்பில் விடப்பட்டது. ஆசிரியரில் பெரும்பாலோர் தொலைக்காட்சிக்கெனவே நாடகங் கள் எழுதியவர். புகழ்பெற்ற நாடக ஆசிரியர் சிலரும் நாடகங் களை எழுதியிருக்கின்றனர். அவர்களில் குறிப்பிடத்தக்கோர்

ஜோசப் ஆனந்தன், ராண்டார்கை, அன்னம், கிரேஸிமோகன், ஞா. மாணிக்கவாசகன், சுகி சுப்ரமணியன், உமா சந்திரன், சி. எம். வீ. ரமணன் ஆகியோர்.

அன்பரின் பெருமளவு ஆதரவைப் பெற்ற நாடகங்களாகக் கரும்புக்கண்ணு, கடிதங்கள் தந்திகள், நானே நானா, மாவீரன் அலெக்சாண்டர், கட்டம் போட்டச் சட்டை, ஓப்பன் சாலஞ்ச் முதலிய பலவற்றைக்குறிப்பிடலாம். நேயரின் ஆதரவு பெறாத நாடகங்களும் சில உண்டு. நாடகங்களின் கருத்துக்கள் பொது மக்களுக்கு ஏற்புடையதாக இல்லாத போது நேயர் கண்டனம் தெரிவித்திருக்கின்றனர். சான்றாகத் திருமணமான ஒரு பெண் மீண்டும் கணவன் தேடும் முயற்சியைச் சித்திரித்த 'எனக்கு ஒரு கணவன் வேண்டும்' என்ற நாடகம், அன்பரின் ஆதரவைப் பெறவில்லை. நல்லவேளையாக அந்தப் பெண் தன் முயற்சியில் தனது கணவனையே மீண்டும் தன் கணவனாகத் தேர்ந்தெடுக்கிறாள் என்று நாடகம் முடிக்கப் பட்டிருந்தது. நாடகத் தலைப்புகளையும் நேயர் சிலர் விமர்சித் திருந்தனர். 'பொய்கள் சொல்வது பாவம் அல்ல' என்று அடித்துச் சொல்வது போல் நாடகத் தலைப்பு இருந்ததாகவும் 'பழனியா, திருப்பதியா' என்பதில் அவை ('ஆட்களின் பெயரை உண்மையில் சுட்டினாலும் சைவ, வைணவத் தலங்களுக் கிடையே போட்டி ஏற்படுத்தும் நோக்குடையதாகத் தோன்றியது எனவும் கருத்து தெரிவித்திருக்கின்றனர். இலக்கிய நாடகங்களான 'பழி நீக்கிய பாவலர்', 'அருள் நெறி புகட்டிய அமைச்சர்' ஆகியன அன்பரிடம் ஆதரவைப் பெற்றன என்றாலும் ஒரு சிலர் அவற்றைப் போற்ற முன்வரவில்லை. அந்நாடகங்களில் கருப் பொருளாக இருந்தது வரலாறு. வரலாறு என்றாலே அவர்க்கு ஒவ்வவில்லை (அலர்ஜி) போலும். உண்மை யில் சமூக நாடகங்களைத் தயாரிப்பதை விட இந்த வரலாற்று நாடகங்களைத் தயாரிப்பது மெத்தவும் கடினம்.

ஒரு குறிப்பிட்ட காலககட்டத்தைச் (பீரியட் பிளேய்ஸ்) சித்திரிக்கும் நாடகங்களைத் தயாரிக்கும் போது மிகவும் விழிப் போடு செயல்பட வேண்டியிருக்கிறது. சான்றாகச் சங்ககால நாடகத்தைத் தயாரிக்கும்போது ஆங்கிலச் சொற்களோ, அல்லது குறுமொழிகளோ பயன் படுத்தாமல் நல்லத் தமிழ் நடை யில் அமைக்கப்படும் உரையாடல்களை நடிகர் கவனத்துடன் உச்சரிக்க வேண்டி வருகின்றது. சென்னை நகரிலுள்ள நடிகரில் ஒரு குறிப்பிட்ட அளவினர், இந்த உரைநடையினைப் போது மான திருத்தத்துடனும் வனப்புடனும் பேச முடியவில்லை,

நடிகரில் பலரும் சமூக நாடகங்களிலேயே பெரிதும் பயின்றிருப்பதால் இக்காலப் பேச்சுத் தமிழ் வழக்கில் சிறந்தவராக இருக்கின்றனர். உரையாடல்களைப் போலவே அணிமணிகள் தேர்விலும் வரலாற்று நாடகங்களைப் பொறுத்தவரை கவனமாக இருக்க வேண்டியுள்ளது. சமூக நாடகங்களும் இதில் விதி விலக்கல்ல. சான்றாக, 'கடிதங்கள் தந்திகள்' என்ற நாடகத்தில் தோன்றும் ஒரு இராணுவக் கதா பாத்திரத்திற்குத் தோள் பட்டையில் அணிய மூன்று நட்சத்திரத்திற்குப் பதிலாக இரண்டு நட்சத்திர அடையாளத்தைக் கொடுத்ததில், நாடகத்தைக் கண்ணுற்ற முன்னாள், இந்நாள் ராணுவ வீரரில் சிலர் நாடகம் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் போதே நிலையத்திற்குத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு அக்குறையைச் சுட்டிக் காட்டியிருக்கின்றனர்.

மனிதரின் குணத்தைச் சித்திரிக்கும் ஒரு நாடகம் '30 ஆம் தேதி இரவு பன்னிரண்டு மணி'. இந்நாடகத்தில் ஒரு கதா பாத்திரம் குறிப்பிட்ட நேரத்தில் இறந்து விடுவார் எனச் சொல்லப்பட்டவுடன் தனது தீய குணங்களை எல்லாம் விட்டு எல்லா நல்ல குணங்களோடும் அவர் திகழ்கிறார். ஆனால் அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் அவர் இறக்கவில்லை. இந் நாடகத்தின் மூலம் இறப்பு அச்சம் ஒருவரை எப்படி மாற்றுகிறது என்பதைச் சித்திரிக்க முயன்றிருக்கின்றனர். இந்நாடகம் மறு ஒளிபரப்பானாலும் நல்ல வரவேற்பைப் பெற்றது.

எண்பத்திரண்டாம் ஆண்டு பாரதியார் நூற்றாண்டு விழா ஆண்டாக அமைந்ததையொட்டிப் புரட்சிக் கவிக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அவர் இயற்றிய 'பாஞ்சாலி சபதம்' என்ற நாடகம் இரண்டு பாகங்களாக டிசம்பர் திங்களில் மறு ஒளிபரப்பு செய்யப் பெற்றது.

நகைச்சுவை நாடகத்தில் சிறந்ததாக 'நானே நானாவும்' 'ஐயா அம்மா அம்மம்மா'வும் விளங்கின. திரைப்பட நகைச் சுவைக் கலைஞர் நாகேஷ் அவர்கள் பங்கெடுத்துக் கொண்ட 'கரும்புக் கண்ணு' என்ற நாடகத்தில் தாம் ஒரு குணச்சித்திர நடிகரும்கூட என்பதை அவர் நிரூபித்ததுடன் வேளாண்மைப் பின்னணியைக் கொண்டக் கதையால் அன்பரின் நெஞ்சங்களைக் கவரமுடியும் எனவும் காட்டினார்.

தொலைக்காட்சி நாடகங்கள் மேலும் சிறக்க ஓரிரு அம்சங்களில் தயாரிப்பாளர் கவனம் செலுத்த வேண்டியுள்ளது. அவற்றுள் குறிப்பிடத்தக்கது போதுமான அளவுக்கு ஒத்திகை நடத்துவதாகும். சில வேளைகளில், ஒத்திகைக்கு வந்த கலைஞர்

ஒருவர் உடல்நலக் குறைவாலோ, வேறு காரணத்தாலோ ஒளிபரப்புக்கோ, பதிவுக்கோ வராமல் நின்றுவிடும் போது மாற்றுக் கலைஞரை வைத்து நாடகத்தைத் தயாரிக்கும் நிலையில், நாடகத்தின் தரம் குறைவதற்கு வாய்ப்பு உள்ளது.

நாடகக் கலைஞர் தொலைக்காட்சி நாடகத் தயாரிப்பு உத்திகளைப் போதுமான அளவுக்குத் தெரிந்து கொள்வதும், நாடகம் சிறந்து தோன்ற வழி வகுக்கும். தொலைக்காட்சி அரங்கில் ஒளி வசதி நிறைந்த இடம், ஒலி அமைப்பு உள்ள இடம், கலைஞர் நடமாட வேண்டிய பகுதி, எந்தக் காமிராவை நோக்கி நடிப்பது என்பன போன்றவற்றில் நடிகருக்குள்ள அறிவு, நாடகம் மேலும் சிறக்க உதவி செய்யும். நடிகர், தொலைக் காட்சித் தயாரிப்பாளர்களைக் கொண்ட குழு ஒன்றால் தேர்வு செய்யப்படுகிறார். அவ்வாறு செய்யப்படும் கலைஞரின் பட்டியலிலிருந்து ஒருவரைத் தேர்வு செய்து ஒரு குறிப்பிட்டக் கதாபாத்திரத்தை நடிக்க வைக்கின்றனர். அந்நிலையில், சில வேளைகளில், குறிப்பிட்ட ஒரு கதாபாத்திரத்திற்குப் பொருத்தமான கலைஞர் கிடைப்பது அரிதாக உள்ளது.

தொலைக்காட்சித் தமிழ் நாடகம் குழந்தைப் பருவத்தில் தான் உள்ளது, அது திறமை மிக்கதாக வருங்காலத்தில் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

## 1982-ஆம் ஆண்டு ஒளிபரப்புப் பெற்ற நாடகங்கள்

| நாள் | நாடகம் | ஆசிரியர் | தயாரிப்பாளர் |
|---|---|---|---|
| 5-1-82 | கடைசி நிமிஷங்கள் | ''அகஸ்டோ'' (எம். புருஷோத்தமன்) | கோபாலி |
| 12-1-82 | அடிச்சது யோகம் | சரோஜா சீனிவாசன் | ,, |
| 19-1-82 | டாக்டருக்கு ஆபத்து | ஆர். முத்துசுப்பிரமணியம் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 2-2-82 | கேள்வி பிறக்குது | சரோஜா சீனிவாசன் | கோபாலி |
| 9-2-82 | காட்டிக் கொடுத்தக் கண்ணாடி | ராண்டார்கை | ,, |
| 16-2-82 | ஒப்பன் சாலஞ்ச்-பகுதி 1 | காரைக்குடி சொர்ணவேல் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 23-2-82 | ஒப்பன் சாலஞ்ச்-பகுதி 2 | ,, | ,, |
| 2-3-82 | பெண்குரல் | எம். எஸ். ராதா | கோபாலி |
| 9-3-82 | ஏங்க சௌக்கியங்களா | பாலா விஸ்வநாதன் | ,, |
| 16-3-88 | சாந்தாவின் காதலி | ராண்டார்கை | ,, |
| 30-3-82 | நாடகம் தொடர்கிறது | ரமணி | கோபாலி |
| 6-4-82 | முப்பதாம் தேதி இரவு 12 மணி | அனுராதா | வே. சேனாபதி |
| 13-4-82 | பாஞ்சாலி சபதம் —கவிதை நாடகம்— | பாரதியார் | கோபாலி |
| 20-4-82 | கட்டம் போட்டச் சட்டை | ஜோசப் ஆனந்தன் | வே. நல்லதம்பி |
| 27-4-82 | எங்கே நிம்மதி | சி. ஆர். விஸ்வநாதன் | கோபாலி |
| 4-5-82 | பத்துவருஷப் பயித்தியம் | 'அன்னம்' கே. விஸ்வநாதன் | ,, |
| 11-5-82 | வந்தேன், கண்டேன், சென்றேன் | அகஸ்டோ | ,, |

| | | | |
|---|---|---|---|
| 18-5-82 | சூரியனுக்குக் குளிர் | எம். எஸ். ராதா | பீர்முகமது |
| 25-5-82 | மாவீரன் அலெக்சாண்டர் | சாம். டி. தாசன் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 1-6-82 | எனக்கு ஒரு கணவன் வேண்டும் | ஆறு. அழகப்பன் | வெ. நல்லதம்பி |
| 8-6-82 | பழனியா திருப்பதியா | ரமணி | கோபாலி |
| 15-6-82 | அம்மாவுக்கு தெரியக்கூடாது | எம். எஸ். ராதா | கோபாலி |
| 22-6-82 | கிளி ஜோஸ்யம் | சைலஸ்ரீ | ,, |
| 29-6-82 | கரும்புக் கண்ணு | பிரபு | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 6-7-82 | அம்மா அம்மா அம்மம்மா<br>—முதல் பகுதி | கிரேசிமோகன் | கோபாலி |
| 13-7-82 | —இரண்டாம் பகுதி | ,, | ,, |
| 20-7-82 | மேல்மாடி காலி | கோவை அனுராதா | ,, |
| 27-7-82 | கடிதங்கள் தந்திகள் | ஜோசப் ஆனந்தன் | வெ. நல்லதம்பி |
| 3-8-82 | விளையும் பயிர் | ஆர். கிருஷ்ணமூர்த்தி | ,, |
| 10-8-82 | நிலவின் மறுபக்கம் | பி. சுப்ரமணியன் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 17-8-82 | கடைசி நிமிஷங்கள் | அகஸ்டோ | கோபாலி |
| 24-8-82 | பழிநீக்கிய பாவலர் | க. அண்ணாமலை | வெ. நல்லதம்பி |
| 31-8-82 | நிழல்கள் நிற்பதில்லை<br>—பகுதி-1. | — | பீர்முகமது |
| 7-9-82 | —பகுதி-2. | — | பீர்முகமது |
| 14-9-82 | நானே நானா | சி. எம். வி. ரமணன் | வெ. நல்லதம்பி |
| 21-9-82 | உறவுகள் பெருகிவரும்<br>(மறு ஒளிபரப்பு) | — | எம். எஸ். பெருமாள் |

| | | | |
|---|---|---|---|
| 28-9-82 | கரனல் நீரா | ஞா. மாணிக்கவாசகன் | வெ. நல்லதம்பி |
| 5-10-82 | பொய்கள் சொல்வது பாவமல்ல-பகுதி-1. | — | பீர்முகமது |
| 12 10-82 | ,, பகுதி-2. | — | பீர்முகமது |
| 19-10-82 | அருள்நெறி புகட்டிய அமைச்சர் (மறு ஒளிபரப்பு) | — | கே. கோவிந்த ராமானுஜம் |
| 26-10-82 | முடிவில் ஒரு தொடக்கம் | பொள்ளாச்சி பாலகிருஷ்ணன் | கே. கோவிந்த ராமானுஜம் |
| 2-11-82 | ஒரே குடும்பம் | டாக்டர் மாத்ருபூதம் | வெ. நல்லதம்பி |
| 9-11-82 | அஜாத சத்துரு | பொன் பரமகுரு | கே. கோவிந்த ராமானுஜம் |
| 16-11-82 | திருமணச் சக்கரம் | சுகி. சுப்பிரமணியன் | வெ. நல்லதம்பி |
| 23-11-82 | | ஆசிய விளையாட்டு அஞ்சல் காரணமாக | |
| 30-11-82 | | நாடகம் ஒளிபரப்பவில்லை. | |
| 7-12-82 | பாஞ்சாலி சபதம் (மறு ஒளிபரப்பு) | பாரதியார் விழாவுக்காக | கோபாலி |
| 14-12-82 | ,, | ,, | ,, |
| 21-12-82 | வரவர மாப்பிள்ளை | — | கே. கோவிந்த ராமானுஜம் |
| 28-12-82 | மானுடம் | உமாச்சந்திரன் | வெ. நல்லதம்பி |

# சிறுகதை

சு. வேங்கடராமன்

முன் ஆண்டுகளை நோக்க, எண்பத்திரண்டில், மிகுதியான சிறுகதைத் தொகுப்புகள் வந்துள்ளன. இவை தரத்திலும் சிறந்துள்ளன. புதிய எழுத்தாளரையும் அளித்துள்ளன. தமிழ்ச் சிறுகதை, உருவம், உள்ளடக்கம், உத்தி ஆகியவற்றில் வளர்ந்துள்ளது. இலக்கிய வீதி, இலக்கியச் சிந்தனை ஆகிய அமைப்புகளும் இதற்கு ஒருவகையில் உதவியுள்ளன.

**நுழைவாயில்:** ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து இரண்டாம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்களின் திறனாய்வாக இக்கட்டுரை அமைகிறது. கட்டுரையின் முதற்பகுதியில் சிறுகதைத் தொகுப்புக்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது. அதனையடுத்து அவை பற்றிய மதிப்பீடு உள்ளது. எண்பத்திரண்டில் நூல் வடிவில் முதற்பதிப்பாக வெளியான தமிழ்ச் சிறுகதைகள் மட்டுமே இங்கு ஆய்வுப் பொருளாகின்றன. இதே கால கட்டத்தில் வெளியான இதழ், மலர்ச் சிறுகதைகளையோ மறுபதிப்பாக வந்த சிறுகதைகளையோ இந்த ஆய்வில் எடுத்துக் கொள்ளவில்லை. எண்பத்திரண்டில், தமிழர் வாழும் பிற நாடுகளில் வெளியான சிறுகதைகளையோ, பிற நாட்டுத் தமிழர் எழுதி, தமிழகத்தில் வெளியான சிறுகதைகளையோ இவ்ஆய்வில் சேர்த்துக் கொள்ளவில்லை. எனவே, எண்பத்திரண்டில் தமிழக எழுத்தாளர்களின் படைப்புக்களாகத் தமிழ்நாட்டில் முதற்பதிப்பாக வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்கள் மட்டுமே இக்கட்டுரையின் ஆய்விற்கு முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.[1]

---

1. இவ்வரையறைக்கு எண்பத்திரண்டில் தமிழ் என்ற இத் தொகுப்பு நூலில், கூறியது கூறல் வருதல் கூடாது என்ற விழிப்புணர்வு காரணம்.

**ஆய்வில் அணுகுமுறை:** முற்கூறியபடி, முதலில் இவ்வாண்டில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்களின் (23)[2] பட்டியல் உள்ளது. அடுத்து அவை பற்றிய திறனாய்வு உள்ளது. திறனாய்வு பொது நிலையிலும் ஒவ்வொன்றின் தனித்தன்மையை மதிப்பிட்டுக் காட்டும் நிலையிலும் உள்ளது. வாசகர்களின் படிப் பார்வம், எழுத்தாளர் நிலை, பதிப்பாளர் (வெளியீட்டாளர்) நிலை என்ற முப்பரிமாண அடிப்படையில் இக்காலகட்ட அடிப்படைப் போக்குகள் சில விளக்கப்படுகின்றன. இந்த அடிப்படைகளை உள்வாங்கிக் கொண்டால், பின்னர் மதிப்பிட்டுக் கூறும் சிறுகதைகளின் போக்கை அறிந்து கொள்ள முடியும். சிறுகதைகளை மதிப்பிடும் போக்கில் உள்ளடக்கம், உருவம், உத்தி ஆகிய அடிப்படைகள் காணப்படினும் பொதுப்பாங்கும் தனிப்பாங்கும் புலப்படுமாறு விவாதிக்கப்படுகிறது. சிறுகதைகளின் உள்ளடக்க ஆய்வில் சமுதாய, குடும்ப, தனிமனித நிலைகளில் மதிப்புக்கள் (Values) ஆயப்படுகின்றன. சில போக்குகளுக்குக் காரணமான நிலைகள் சுட்டப்படுகின்றன. ஒவ்வொரு சிறுகதைத் தொகுப்பையும் தனித்தனியே ஆராய்ந்து மதிப்பிடாமல், பொதுவாக இக்காலகட்ட நிலை இதுவென்று இனம் பிரித்துக் காட்டும் தன்மை இந்த ஆய்வின் அடிப்படைக்காரணம் என்பதால் அம்முறையிலே ஆய்வும் அமைகிறது.

**எண்பத்திரண்டில் வெளியான சிறுகதைகளின் பட்டியல்:**

1. ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள், பிரபஞ்சன், நர்மதா பதிப்பகம், சென்னை.

2. நிதர்சனம், சுஜாதா, பாரதி பதிப்பகம், சென்னை.

3. கலைந்த பொய்கள், சுஜாதா, குமரிப்பதிப்பகம், நாகப்பட்டினம்.

4. தவளைத் திருமணம், வ. தேனப்பன், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை.

---

2. ஆய்வாளரின் முயற்சியால் தொகுக்கப் பெற்றவை இந்த 23 சிறுகதைத் தொகுப்புக்கள். இதற்கு உதவியோர் திரு. முத்தப்பன் (மேலாளர், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், மதுரை), திரு. அ. பசுபதி (தமிழ்த்துறை தாகூர் கலைக் கல்லூரி, புதுச்சேரி, திரு வ. **தேனப்பன்** (தமிழ்த்துறை, சேவுகன் அண்ணாமலைக் கல்லூரி, தேவகோட்டை), திரு. இனியவன் (அமைப்பாளர், இலக்கியவீதி, விநாயகநல்லூர், வேடந்தாங்கல் அஞ்சல் - செங்கற்பட்டு மாவட்டம்), ஆகிய நண்பர்.

5. சிரிப்புக்குப் படமெடுப்போம், வ. தேனப்பன், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை.

6. யுகதர்மம், ஜெயரதன், மருதமலையான் பதிப்பகம், சென்னை.

7. அழைப்பு அங்கேயே நிச்சயிக்கப்படுகிறது. செல்வி சிநேகலதா, விமலை நூலகம், பெரம்பலூர்.

8. தெப்பக்குளம், சிவசங்கரி, திருமகள் நிலையம், சென்னை.

9. உண்மைக் கதைகள், சிவசங்கரி, திருமகள் நிலையம், சென்னை.

10. மழையில் நனைபவளுக்காக, ஆர். ஈ. சந்திரசேகர், நர்மதா பதிப்பகம், சென்னை.

11. மானுடத்தின் நாணயங்கள், சு. சமுத்திரம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

12. கல்லிற்குக் கீழும் பூக்கள், மாலன், அகரம், சிவகங்கை.

13. ராதா உபதேசம், லீலாகிருஷ்ணன், அகரம், சிவகங்கை.

14. கோடு தாண்டாத குலங்கள், பிரதிபா ராஜகோபாலன், நர்மதா பதிப்பகம், சென்னை.

15. வியோசனம், அசோகமித்திரன், நர்மதா பதிப்பகம் சென்னை.

16. அழகின் நிறம், விக்கிரமன், திருமகள் நிலையம், சென்னை.

17. பசியோ பசி, 'பசி', பாப்பு வெளியீடு, நாமக்கல்.

18. சிறகு முளைக்காத ஒரு பறவை, டி. எஸ். ரவீந்திரதாஸ், மயிலவன் பதிப்பகம், சென்னை.

19. முற்றுப் பெறாத முதல் காதல்கள், உஷா சுப்பிரமணியன், நர்மதா பதிப்பகம், சென்னை.

20. பிரும்மம், தொகுப்பு, இலக்கியச்சிந்தனை, வானதி பதிப்பகம், சென்னை.

21. அவள், தொகுப்பு, இலக்கியச்சிந்தனை, வானதி பதிப்பகம், சென்னை.

22. விதைநெருப்பு, தொகுப்பு, இலக்கிய வீதி, விநாயக நல்லூர்.

23. பாரதி கதைகள், தொகுப்பு, பாரதி பதிப்பகம், சென்னை.

இத்தொகுப்புக்கள் 1980, 1981 ஆகிய ஆண்டுகளில் வெளியான சிறுகதைகளைவிட எண்ணிக்கையில் கூடுதலானவை.[3] எண்ணிக்கையில் மட்டுமின்றி, தரத்திலும் நல்ல சிறுகதைகள் எண்பத்திரண்டில் வந்துள்ளன. எழுத்துத் துறைக்குப் புதியவர்களின் கையில் சிறுகதைச்செம்மையுற மலர்வதை இவ்வாண்டில் உணர முடிந்தது. இலக்கியச் சிந்தனை, இலக்கிய வீதி ஆகிய அமைப்புக்களின் முயற்சிகளால் வெளியான சிறுகதைத் தொகுப்புக்களும்[4] முதன்முறையாகச் சிறுகதைத் தொகுப்பாக வந்த பிரபஞ்சனின் எழுத்துக்களும்[5], மாலன்[6], அசோகமித்திரன்[7], சு. சமுத்திரம்[8] ஆகியோரின் சிறுகதைகளும் தமிழ்ச்சிறுகதை உள்ளடக்கம், உருவம், உத்தி ஆகியவற்றில் புதிய வீச்சைக் காட்டி வளர்கிறது என்ற நம்பிக்கையை இவ்வாண்டில் ஏற்படுத்தி உள்ளன.

**தொகுப்பும் பதிப்பும்:** ஒரு ஆசிரியர் அல்லது பல ஆசிரியர்கள் எழுதியச் சிறு கதைகளை ஒன்று சேரத் தொகுத்து, அவற்றிற்கு அவை வெளியான இதழ், ஆண்டு, மாதம் ஆகிய விவரங்களைத் தந்து அச்சிடுவது நூலாக்க முறை. நம் தமிழ் நாட்டில்

---

3. காண்க; (i) "சிறுகதை" வேங்கடராமன், சு., எண்பதில் தமிழ், சுப்பிரமணியன், ச.வே., விஜயலட்சுமி ர. (ப.ஆ.), பக். 36-37, சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், 1982; (ii) "சிறுகதை", வேங்கடராமன், சு., எண்பத்தொன்றில் தமிழ், சுப்பிரமணியன், ச.வே., கடிகாசலம், ந. (ப.ஆ.) பக். 76-77, சென்னை, உலகத்தமிழாராய்ச்சிநிறுவனம், 1983.

4. பிரும்மம், அவள், விதைநெருப்பு ஆகியன.

5. "பிரபஞ்சனின் சிறுகதைகள் அச்சேறத் தொடங்கிப் பல ஆண்டுகள் ஆகின்றன. ஆனால் நூலுருவில் அவை வெளியாவது இதுவே முதல் தடவை"—முன்னுரை, அசோகமித்திரன், பிரபஞ்சன், ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள், ப. iii சென்னை, நர்மதா பதிப்பகம், 1982.

6. மாலன், கல்லிற்குக் கீழும் பூக்கள், சிவகங்கை, அகரம், 1982.

7. அசோகமித்திரன், விமோசனம், சென்னை, நர்மதா பதிப்பகம், 1982.

8. சமுத்திரம், சு., மானுடத்தின் நாணயங்கள், சென்னை, NCBH, 1982.

பதிப்பகங்கள் அனைத்துமே வணிக நோக்கில் செயற்படுவதால், பக்கங்களை எவ்வாறு மிச்சம்பிடிப்பது என்ற நோக்கில் இவற்றை எல்லாம் கடைப்பிடிப்பதில்லை. படைப்பாளர்களும் தங்கள் கதைகளை வெளியிடும் முன் இவ்விதிகளைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. இதன் விளைவுகள் பல. ஓர் ஆசிரியரின் சிறுகதையைச் சிறந்த கதையாகத் தேர்ந்தெடுத்து, அவ்வாறு தேர்வு செய்த கதைகளையெல்லாம் நூலாக்கும் அமைப்பு அதனை வெளியிடும். அதே ஆசிரியரின் சிறு கதைகள் நூலாக்கம் பெறுகையில், அத்தொகுப்பில் அப்பரிசுக் கதையும் இடம்பெறும். பிரபஞ்சனின் பிரும்மம் என்னும் சிறுகதை இலக்கியச் சிந்தனை யால் எண்பத்திரண்டின் சிறந்த கதையாகத் தேர்வு செய்யப் பெற்று, பிரும்மம் தொகுப்பில் இடம் பெற்றது.[9] இதே கதை பிரபஞ்சனின் தொகுப்பான ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள் தொகுப்பிலும் இடம் பெற்றது.[10] மாலன் எழுதிய ஆயுதம் என்ற சிறுகதை ஆனந்தவிகடன் இதழில் பாரதி சிறுகதையாக வெளிவந்தது. இத்தகைய கதைகளை எல்லாம் ஒன்றாகத் திரட்டிப் பாரதி சிறுகதைகள் என்ற தலைப்பில் நூலாக வெளி யிட்ட பாரதி பதிப்பகம் (இத்தொகுப்பில் யாருடைய, எக்கதை ஆனந்த விகடனின் எவ்விதழில் வெளியானது என்ற கால வரலாறு இடம் பெறாதது மேற்கூறிய கருத்தை அரண்செய்யும்.) மாலனின் ஆயுதம் சிறுகதையை இதில் வெளியிட்டது. மாலனின் சிறுகதைகளின் தொகுப்பான கல்லிற்குக் கீழும் பூக்கள் தொகுப் பிலும் இதே கதை இடம் பெற்றது.[12] சுஜாதா எழுதிய பாரதி விழாச் சிறு கதையான ஒரு லட்சம புத்தகங்கள் என்ற சிறுகதை பாரதி சிறுகதைகள் தொகுப்பிலும் இடம் பெற்றது.[13] இதே

9. __________, பிரும்மம், பிரபஞ்சன, "பிரும்மம்", பக். 1-14, சென்னை, வானதி பதிப்பகம், 1982.

10. பிரபஞ்சன், ஒருஊரில் ரெண்டு மனிதர்கள், "பிரும்மம்" பக். 16-28, சென்னை, நர்மதா பதிப்பகம், 1982.

11. __________, பாரதி சிறுகதைகள், மாலன், "ஆயுதம்", பக். 5-21, சென்னை, பாரதி பதிப்பகம், 1982.

12. மாலன், கல்லிற்குக் கீழும் பூக்கள், "ஆயுதம்", பக். 134-147, சிவகங்கை, அகரம், 1983.

13. __________, பாரதி சிறுகதைகள், சுஜாதா, "ஒரு லட்சம் புத்தகங்கள்" பக். 76-95.

கதை, கலைந்த பொய்கள் என்னும் தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது.[14]

சிறுகதைத் தொகுப்பு நூலில் சிறுகதைகள் மட்டுமே இடம் பெற வேண்டும் என்பது விதி. தமிழகத்தில் இவ்விதி செல்லாது. ஊருக்கு இளைத்த வடிவம் சிறுகதை. சிறுகதைத் தொகுப்பு நூலில் எது வேண்டுமாயினும் இடம் பெறலாம் என்பதைச் சிறுகதைகளுடன் குறுநாவல் இடம் பெற்றுள்ளதால் அறியலாம். சுஜாதாவின் கலைந்த பொய்கள் தொகுப்பில் அதே பெயரில் குறுநாவலும் சிறுகதையும் உள்ளன.[15] ஆர். சு. சந்திரசேகரின் மழையில் நனைபவளுக்காக என்ற தலைப்பிலான குறுநாவலும் நான்கு சிறுகதைகளும் அடங்கிய தொகுப்பிற்கு அதுவே பெயர்.[16] குறுநாவல், சிறுகதை என்ற அனைத்தையும் இணைத்து, சிறுகதைத் தொகுப்பு என்றே அச்சிடுவது ஒரு நிலை;[17] பிரபல ஆசிரியர் எழுதிய எதையும் சிறுகதை, குறுநாவல், நாடகம் என்ற வகைமை விளக்கப் பெயர் இன்றி வெளியிடுவது மற்றொரு நிலை.[18] இரு நிலைகளுக்கும் அடிப்படை இத்தகைய நுட்பமான பதிப்புக்கலை பற்றி அறியாத பதிப்பகத்தின் போக்கே யாம்.

மூன்றாவதாக, சுஜாதாவின் கதை ஒன்று,[19] எண்பத்தொன்றில் வெளியிட்ட ஒரு சிறுகதைத் தொகுப்பிலும், எண்பத்திரண்டில் சுஜாதாவின் மற்றொரு சிறுகதைத் தொகுப்பிலும் அமைகின்றது. ஒரேயொரு மாற்றம்: இரண்டும் இருவேறு பதிப்பகங்கள்.

---

14. சுஜாதா, கலைந்த பொய்கள், "ஒரு லட்சம் புத்தகங்கள்" நாகப்பட்டினம், குமரிப்பதிப்பகம், 1982.

15. மேலது.

16. சந்திரசேகர், ஆர். சு., மழையில் நனைபவளுக்காக, சென்னை, நர்மதா பதிப்பகம், 1982.

17. மேலது, நூலின் இரண்டாம் பக்கம்.

18. சுஜாதா, கலைந்த பொய்கள்.

19. சுஜாதாவின் எல்டொராடோ என்ற சிறுகதை இவ்வாறு வந்துள்ளது.

i) சுஜாதா, சிறுகதை எழுதுவது எப்படி? (பக். 50-61), நாகப்பட்டினம், குமரிப்பதிப்பகம், 1981,

ii) சுஜாதா, நிதர்சனம், சென்னை, பாரதி பதிப்பகம், 1982.

**வெளியீட்டாளர் நிலை: இதழ்களின் நிலை:** பெரும்பாலும் சனரஞ்சக இதழ்களில் எழுதிடும், மக்கள் மத்தியில் பெயர் பெற்ற எழுத்தாளரின் (சுஜாதா, சிவசங்கரி போன்றோர்) சிறு கதைகள் ஆண்டுதோறும் தொகுப்புக்களாகின்றன. சனரஞ்சக இதழியல் உத்திகளை இவர் படைப்பில் காணமுடியும். எனவே, இத்தகைய தொகுப்புக்கள் பெரும்பாலும் பொழுதுபோக்கு அம்சங்களைப் பெரிதும் உள்ளடக்கி வெளிவருகின்றன. இக் கதைகளில் கலைத்தரத்தையோ உள்ளடக்கத்தில் சமுதாய, வாழ்க்கை மதிப்புக்களையோ காண முயலுதல் வீண் வேலை. தமிழ்ச்சிறுகதை வளர்ச்சிக்கு இவை உதவா. ஆயின், தமிழரின் நற்பேறின்மை காரணமாக, புதிய சில எழுத்தாளரும் (தேனப்பன், ஜெயரதன், ஆர்.ஈ. சந்திரசேகர், லீலாகிருஷ்ணன், டி. எஸ். ரவீந்திரதாஸ், 'பசி' போன்றோர்) இவ்வணியில் சேருகின்றனர். சனரஞ்சக எழுத்தின்மிகு வளர்ச்சியின் பாதிப்பை இவர்களிடம் காணமுடிகிறது. மக்களின் சிந்தனையை மரத்துப் போகச்செய்யும் கலாச்சாரச் சீரழிவை இப்படைப்புக்களில் நாம் காண்கிறோமெனில் அதற்கு அடிப்படை, வாசகரைச் சீரழிக்கும் வெகுசன இதழ்கள் ஆகும். வணிக நோக்கில் போட்டிப்போட்டுக் கொண்டு வெகுசன இதழ்கள் சிறுகதைகளுக்கு அளிக்கும் குறைந்த இடம், சிறுகதை வடிவைச் சிதைக்கிறது. இதன் விளைவு, சிறுகதை 'மினிக்கதை' யாக— துணுக்கே கதையாக மலரும் நிலையைக் காண்கிறோம். (காண்க: வ. தேனப்பனின் சிரிப்புக்குப் படமெடுப்போம், செல்வி சிநேகலதாவின் அழைப்பு அங்கேயே நிச்சயிக்கப்படுகிறது). அத்துடன் இதழ்களுக்கே உரிய கதை கூறும் திறன், கொலை, கொள்ளை போன்ற குற்றங்களை மிகுதிப்படுத்தும் உள்ளடக்கம், பாலுணர்வைக் கொச்சைப் படுத்தும் போக்கு ஆகியன இக்கால இதழ்களின் சிறுகதைகளுக்கு அடிப்படை ஆயின. (காண்க: சிவசங்கரியின் தெப்பக்குளம், உண்மைக்கதைகள், சுஜாதாவின் நிதர்சனம், உஷா சுப்பிரமணி யனின் முற்றுப்பெறாத முதல் காதல்கள் போல்வன). இதே நேரத்தில் சிறு அளவில் விற்பனையாகும் இதழ்களில் நல்ல தர மான கதைகள் வெளிவந்தபோதிலும் வாசகர் அவற்றைத்தேடிப் பிடித்துப் படிப்பதில்லை. படிப்பவரின் சிரத்தைக் குறைவும் ஒரு காரணம். தரமான கதைகள் என்பவற்றைத் தேடிப் படிப்பவர் குறைவு என்பதுடன் சிந்தையைத் தூண்டும் கதைகள் படிப்பதை விடப் பொழுது போக்கிற்குப் படிப்பவரே மிகுதி. இலக்கியச் சிந்தனை மாதந்தோறும் இதழ்களில் வரும் சிறந்த கதைகளைத் தக்கஒரு திறனாய்வாளர் கொண்டுத்தேர்வு செய்கிறது. எனவே, ஒவ்வோர் ஆண்டிலும் சிறு இதழ்களிலும் (Little Magazines)

வந்த சிறுகதைகள் தேர்வுச் செய்யப்பெறுகின்றன[20] இலக்கியச் சிந்தனை அமைப்பு கடந்த பதின்மூன்று ஆண்டுகளாக மாதந் தோறும் சிறந்த சிறுகதைகளைத் தேர்வுசெய்து ஆண்டுதோறும் பன்னிரு சிறுகதைகளைத் தொகுத்து நூலாக வெளியிடுகிறது. தொடர்ந்து இத்தேர்வும் தொகுப்பும் வெளியீடும் நடைபெறு கிறது. சிறந்த சிறுகதைகள் பன்முறை சிறு இதழ்களிலிருந்தே தேர்வு செய்யப் பெறலாயின. இதன் விளைவு, கடந்த சில ஆண்டுகளாக, வணிக நோக்கில் பெருமளவில் உற்பத்தி செய்யப் படும் இதழ்களும் அடிக்கடிச் சிறந்த சிறுகதைகளை வெளியிட லாயின. ''தரமான தமிழ்ச் சிறுகதைகளை எல்லாப் பத்திரிகை களும் வெளியிட ஆர்வம் காட்டுகின்றனவா என்ற ஆரோக்கிய மான கேள்வி நமக்கு ஊக்கத்தைத் தருகிறது''[21] என்ற இலக்கியச் சிந்தனை அமைப்பின் அமைப்பாளர் கூறுவது இங்கு அறியத்தக்கது. தமிழ்ச் சிறுகதை வளர்கிறது என்ற ஆரோக்கிய மான நிலையை இப்போக்கு காட்டும்.

**பதிப்பக நிலை:** முற்கூறியபடி சுஜாதா, சிவசங்கரி போன்ற வெகுசன படைப்பாளர் எழுத்துக்களை வெளியிடும் பதிப்பகங் கள், தொடர்ந்து வெளியிடுகின்றன. சில பெரிய பதிப்பகங்கள் எண்பதாம் ஆண்டைப்போலவே எண்பத்திரண்டிலும் முழுவதும் மறுபதிப்பே வெளியிட்டுள்ளன.[22] சிறு கதைகள், நாவல் அளவிற்கு விற்பனை ஆவதில்லை என்பது பதிப்பகத்தார் கூறும் விடை. சில புதிய படைப்பாளர் தாங்களே தங்கள் எழுத்துக்

---

20. i) அவள் என்ற தொகுப்பில் திசைகள், தாமரை, செம்மலர், கணையாழி ஆகிய சிறு இதழ்களில் வந்த கதைகள் உள்ளன.

20. (ii) பிரும்மம் என்ற தொகுப்பில் கணையாழி, செம்மலர் தாமரை, விழிகள், தீபம், ஆகிய சிறு இதழ்களில் வெளி யான சிறுகதைகள் தேர்வு செய்யப் பெற்றுள்ளன.

21. ——அவள், ''பதிப்புரை'' (சிதம்பரம், ப., லட்சுமணன், ப.) ப. iii.

22. சென்னையிலுள்ள தமிழ்ப் புத்தகாலயம், மதுரை யிலுள்ள மீனாட்சி புத்தக நிலையம் போல்வன. காண்க:

வேங்கடராமன், சு., ''சிறுகதை'' எண்பதில் தமிழ் சுப்பிரமணியன், ச. வே., விஜயலட்சுமி, ர., ப. 37.

களை வெளியிட்டுள்ளனர்.[23] இதன் விளைவு, வாசகர்-படைப்பாளர் என்ற ஒரே முனை உறவு ஏற்படுகிறது.

**வாசகர் நிலை:** வாசகரின் படிப்பார்வமும் சிறுகதை வளர்ச்சிக்குத் துணைசெய்கிறது. இருப்பினும், பெரும்பாலான வாசகர் பொழுது போக்கிற்காகப் படிக்கின்றனர். தமிழ் வாசகர்க்குத் தமிழ் சினிமாவைப் போலவே கொலை, கொள்ளை, திருட்டு போன்ற வன்முறை, கொச்சைப் படுத்தப்பட்ட பாலுணர்வு இவற்றிலே நாட்டம் உள்ளது. மேலும், துணுக்குகளில் உள்ள ஈடுபாடு காரணமாகச் சின்னஞ்சிறு—வடிவஞ்சிதைந்த—சிறுகதைகளை விரும்புவது காணப்படுகிறது. இவற்றின்விளைவு, தமிழ்ச் சிறுகதைகளில் இதழ்களின் பாதிப்பைப் பெரிதும் இவ்வாண்டில் காண முடிகிறது.

**எழுத்தாளர் நிலை:** சிறுகதை உருவாக்குவது எளிய பணி அன்று. கலைத் தன்மை வாய்ந்த கதையைப் படைப்பது எளிய செயலன்று. இதழ்களின் விருப்பு வெறுப்பு, படிப்பவர் சுவையுணர்வு ஆகியவற்றிற்கு ஏற்ப எழுதுவதால், சிறுகதை தன் கலைத்திறனை இழப்பதையும் வணிகப் பொருள் ஆவதையும் உணரலாம். மாறாக, இளம் எழுத்தாளரான மாலன், சு. சமுத்திரம், பிரபஞ்சன், ஜெயந்தன், வண்ணதாசன் ஆகியோர் சிறு கதையை அற்புதமாகப் படைத்துள்ளனர். சிறு கதைக்கு மையமாக அமையும் அழுத்தம் நாடகப் பண்புகளை உள்ளடக்கி மிகக் குறைந்த எடுத்துரைத்தலுடன் விளங்கும். ஒரு கணப்பொழுதில் ஒரு மாந்தரின் அசையின்—செயலின்—சிறு துளியை அழுத்தமான பின்னணியில் நுணுக்கமாக வருணிப்பதையே சிறுகதைக்கு இலக்கணமாக இவர் எண்ணுகின்றனர். பின்னணியும் சூழலும் மாந்தர் மனஉணர்வும் வாழ்க்கைச்சூழலும் சமூகமும் இவரால் நுட்பமாகக் காட்டப் படுகின்றன. பின்னணி யதார்த்தமாக அமையக் கிளை மொழி (Dialect)மிகுதியும் ஆளப்படுகிறது. கதைமாந்தர் உரையாடலில் மட்டுமின்றி, ஆசிரியர் எடுத்துரைக்கும் (narration)நடையிலும் கிளை மொழிச் சொற்கள் உண்டு. மண்ணின் மணம் கமழப் படைக்கப்படுகையில்தான் கதை உயிர்த்தன்மை பெறும் என்பது இக்கால—இவர் தம்—கலைக்கொள்கை. இவர் கையில் கதையின் கருப்பொருள்(theme), கதைப்பின்னல் (plot), எடுத்துரைக்குந் திறன் ஆகியன புது வீச்சைப் பெறுகின்றன. மரபு வழியான—

---

23. தேனப்பன், வ., தவளைத் திருமணம், சிரிப்புக்குப் படமெடுப்போம் [தேவகோட்டை, தேன் வள்ளியம்மை பதிப்பகம்].

இதழ்ச் சிறுகதைக்குரிய — நிகழ்ச்சிகள் அடுக்குப் பின்னலை விடுத்து, மாந்தரின் அக மன உணர்வு, உளவியல் தாக்கம், கருப் பொருளின் நுட்பமான விவரிப்பு, தனிமனித, குடும்ப, சமூக அவலங்களுக்குரிய மதிப்புநிலை ஆகியவற்றைக் கொண்டு எழுப் பப்படும் புதியவகைக் கதைப்பின்னலை இவர்தம் கதைகளில் காண்கிறோம். சிக்கலை(problem)யும் அதன் தீர்வையும் காட்டு கையில் இரண்டிற்கும் நிலைக்களனாக அமையும் சமூகம்காட்டப் படுகிறது. சமூக(social), வாழ்க்கை (life)மதிப்புக்கள் (values) மாறுகின்றன. மாறுவது இயற்கை நியதி. சமுதாய நிலையில் உள்ள வர்க்க வேறுபாடுகள் மாறும் நாள்—மாற்றப்படும் நாள்— வருகையில் வாழ்வு புதிய பரிணாம வளர்ச்சியைப் பெறும் என்று காட்டும் சித்தாந்தப் பிடிப்பையும் இவர்களிடம் காணலாம். பழைய எழுத்தாளரை விடவும் அறிவியல் நிலையில் தத்துவ விளக்கம் கண்டு தமக்குக் கிட்டிய வாழ்க்கை நோக்கைத் துணை யாகக் கொண்டு இவர் காட்டாதன காட்டுகின்றனர். மொத்தத் தில் தமிழ்ச்சிறுகதை பிரும்ம வளர்ச்சி பெற்றுள்ளது என்ற பிரபஞ்ச தத்துவத்தை இவர்களின் இக்கால—எண்பத்திரண்டு— கதைகள் நிலைநாட்டுகின்றன.

**சிறுகதையின் உள்ளடக்கம் :** சிறுகதைக்குக் கருப் பொரு ளாக எதுவும் அமையலாம். இதையெல்லாம் கதையில் கருவாக வைத்து எழுதலாமா —எழுத முடியுமா—என்று போன தலை முறை எழுத்தாளர் விடுத்தவற்றைப் புதிய தலைமுறையினர் தேர்ந்து எழுதுவதை, எண்பத்திரண்டில் காண முடிந்தது. பிரபஞ்சனின் பிரும்மம் கதை இதற்கு நல்ல சான்று. வீட்டில், முருங்கைப் போத்து ஒன்றை வைக்க, அது துளிர்த்து, செடியாகி, மரமாகிப் பூத்துக் குலுங்கி, காய்த்துப் பயன் நல்கி, நிழல் தந்து, பிரும்ம விருட்சமாக வளர்ந்து, ஒருநாள் விழுகிறது. சில நாள் கழித்து மீண்டும் துளிர்க்கிறது. முருங்கைக்கே பிரும்ம விருட்சம் என்ற பெயர் உண்டு. ("முருங்கையின் மேல் தோல், காய், கீரை என்று அனைத்தும் மனுஷ இன விருத்திக்குக் காரண மாகிய புணர்ச்சிக்குத் தீவிர உரமும் உற்றுதலும் தருவதால் அது சிருஷ்டிக்கு உதவுவதாகிறது. பிரமனும் சிருஷ்டிபரமான காரியங்களிலேயே இருப்பதால் அது பிரம்ம விருட்சம் என்றா கிறது என்றார்"[24].) முருங்கை மீண்டும் துளிர்க்கிறது என்பது கருவன்று. பிரும்மம் என்பது ஆன்மா—பிரபஞ்சம் (உலகம்). உயிரும் உலகமும் தோன்றும்— மலரும்—வளர்ந்து பிறரை

---

24. பிரபஞ்சன், ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள் ("பிரும்மம்") ப. 23.

வளர்த்து தான் வாழ்ந்து, பிறரை வாழ்வித்து, மறைந்து மீண்டும் மலரும். (புனரபி ஜனனம் புனரபி மரணம்). உலகம் (பிரபஞ்சம்) ஓயாத இயக்கம். உயிர் அது போல ஓயாத ஒழியாத இயக்கந்தான். வாழ்க்கையில் மனத்தில் கற்பனை செய்து பல வற்றைப் படைத்தான்—துயருறுகிறான். தானும் அனுபவித்துப் பிறருக்கும் நல்கி, பிரபஞ்சம் முழுவதையும் கண்டு களித்து வாழலாம். அது இன்ப அனுபவம். (நோக்க நோக்கக் களியாட்டம்.) இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்றாக நாம் காலத்தைப் படைத்துக் கொண்ட (கற்பனை செய்து கொண்ட) போதிலும் வாழ்க்கை நீண்ட தொடர்ச்சிதான். இந்த அத்துணை விளக்கங் களும் கதையில் குறிப்பாக உணர்த்தப்படுகின்றன. கதையில் வரும் செளந்தரா என்ற பெண்—உயிர் வளர்ச்சி—பற்றி வரும் குறிப்புக்களையும் முருங்கையையும் இணைத்துப் பார்த்தால், இக்கதை புரியும். இதன் தத்துவ தரிசனம் புலனாகும்.

''அது (முருங்கை) நாளுக்கு நாள் பெருகிக் கொண்ட ஆகிருதியினால் செளந்தராவையே பல நேரங்களில் எனக்கு நினைவூட்டியது.''[25]

''செளந்தராவை அவள் குழவிப் பருவந்தொட்டே அருகிருந்து கண்டு வருகிறேன். அதையும் அது முளைவிட்ட பருவந்தொட்டே தரிசித்து வருகிறேன்''[26] இயற்கையைப் புறக் கணித்து, வாழ்வைத் தரிசிக்கத் தெரியாத உறவுகளை விடுத்துத் தனித்துப் போகும் அவல மனிதனை இக்கதை வழி ஆசிரியர் காட்டவில்லை. மாறாக, வாழ்வின் தத்துவம் காட்டப்படுகிறது.

பிரபஞ்சனின் 'விழுது', 'பிம்பம்' என்பன கருவால் சிறக்கும் கதைகள். குடும்பம் ஒரு சுடுகாடாகிவிட்ட நிலையில்—தனக்குப் பின் தன் பிள்ளைகள் தன் குடும்பத்தைத் தாங்கும் விழுதுகள் என்று நம்பும் தந்தை, தாய் இருவரின் ஆவல் மிக்க எதிர் பார்ப்பையும், விழுதுகள் யாவும் பிஞ்சிலே பழுத்து, செல்லரித்து வெறுமனே கவையாகிக் கொம்பாகி நிற்பதையும் முரண்படக் காட்டுகிறார். கருவிளக்கம் கதையின் வலுவான மாந்தர் வார்ப்பால் வெளிப்படுகிறது. உருண்டோடும் வாழ்வில் மனிதன் எத்தனைவித முகங்களோடு — எவ்வளவு வேஷங்களோடு— எப்படிப் பொய்யாக உலவுகிறான் என்பதை—இவ்வளவுமே அவன் பிம்பம் - என்பதைக் காட்டுவது 'பிம்பம்' என்ற கதை. வாழ்க்கையே எதனிடமிருந்தோ தப்புதலாக அமைகிறது.

---

25. மேலது, ப. 22
26. மேலது, ப. 22

''இத்தனை முகங்கள் உனக்கெதுக்கு?''

'இவைகள் என் பார்வைகள். தேவைகள், சிரம மில்லாமலும் சிரமத்தோடும் சமயா சந்தர்ப்பங்களில் நான் தேர்ந்து அணிந்துகொள்ளும் முகங்கள் இவை.'

'நீ என்னையும் உன்னையும் ஏமாற்றுகிறாய்' என்று வருத்தத்தோடு அது சொன்னது.

'ஆம்...என்னை நானும், உன்னை நீயும், முறை மாறி என்னை நீயும் உன்னை நானும் ஏமாற்றிக் கொள்ளுதலே நம் விஸ்தரிப்புக்கள்...நம் ஆக்கங்கள். நம் விகசிப்புக்கள்'[27]

இவ்வுரையாடல் வழி கதையின் கரு விளக்கப்படுகிறது. இக் கதையில், கதை கூறும் ஒரு மனிதனின் மனச்சான்று உரையாடலில் பங்குபெறும் மாந்தராகப் பங்கு ஏற்கிறது. இத் திறன் கதைக்குச் சுவை கூட்டுகிறது.

'பிரும்மம்', அவள் என்ற இரு தொகுப்புக்கள்[28] இலக்கியச் சிந்தனை வெளியீடுகள். இவற்றில் உள்ள சில கதைகள் உள்ளடக்கம்-உருவம்-திறன் இவற்றால் சிறந்து இவ்வாண்டின் சிறந்த கதைகளாகி, தமிழ்ச் சிறுகதைத் திறனை நிலை நிறுத்து

---

27. மேலது, ப. 101

28. பிரும்மம் தொகுப்பு. 1982-ஆம் ஆண்டில் பல்வேறு இதழ்களில் வெளிவந்த கதைகளில் இருந்து, தேர்வு செய்யப் பெற்ற சிறந்த கதைகளை உள்ளடக்கி 1983-ஆம் ஆண்டு வெளிவந்தது. அவள் தொகுப்பு 1981-ஆம் ஆண்டில் வெளிவந்த கதைகளில் இருந்துத் தேர்வுச் செய்யப் பெற்ற சிறந்த கதைகளைத் தொகுத்து 1982-இல் வெளிவந்தது. இவ்விரு தொகுப்புக்களும் 1982-ஆம்ஆண்டின் சிறுகதைகளாக இக்கட்டுரைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இவ்விரு தொகுப்புக்களிலும் ஆனந்த விகடன், கல்கி, குமுதம், தினமணி கதிர், இதயம் பேசுகிறது போன்ற வணிக நோக்குடைய, பெருமளவில் விற்பனை ஆகும் இதழ்களிலும், தீபம், கணையாழி, தாமரை, செம்மலர், விழிகள், திசைகள் போன்ற இலக்கிய நோக்குடைய குறைந்த அளவில் விற்பனை ஆகும் சிறிய இதழ்களிலும் வெளிவந்த கதைகள் உள்ளன. எனவே, கதைகளிலும் இரு போக்குகளை யும் காணலாம். திறனாய்வின் முழுமை கருதி இக் கருத்தை இங்குக் குறிப்பிடுகிறேன்.

கின்றன. பிரும்மம் தொகுப்பில் கல்கி, சங்கிலி, கண்ணீர் மழை என்பவை குறிப்பிடத்தக்க கதைகள். வலி தெரியாத ரணங்கள் வழக்கமான குடும்பக் கதை. பெண் பார்க்கும் படலத்தில் தொடங்கி வரிசையாக அடுக்கப்படும் சம்பவக்கோவைகளாலான வழக்கமான கதை. பெண்ணைப் பற்றிய ஆண் ஆதிக்க சமுதாயக் கருத்தை- பெண் பொறுமையின் சிகரம், தியாகத்தின் பிறப்பிடம் என்பன போன்ற வாழ்க்கை அறமதிப்புக்களைச் (moral values) சொல்லியே பெண்ணைத் தன் விருப்பப்படி அடக்கி ஆளும் ஆண் கற்பித்த சமுதாயநீதிகளை - வெளிப் படுத்தும் கதை. கௌரி என்ற பெண் எழுத்தாளர் எழுதிய கதை. 1982ஆம் ஆண்டு ஏப்ரல் மாதச் சிறந்த சிறுகதையாக அனுராதா ரமணன் என்னும் பெண் எழுத்தாளரால் தேர்வு செய்யப் பெற்ற கதை. ஆனந்தவிகடனில் வந்த இக்கதை, விகடனின் இதழ்ப்போக்கை நன்கு காட்டும். பெருவாரியான நடுத்தர வர்க்க வாசகர்களை-குறிப்பாக அலுவலகம் செல்லும் அவசரத்தில் பேருந்துகளிலும் அலுவலகங்களிலும் படிக்கும் பெரு வாரியான பெண், ஆண் வாசகர்களை- எட்டும் இதழின் வழக்க மானவாய்ப்பாட்டுக்கதை (formula story). இத்தகைய பல கதை களை (ஒரு பஸ் நிற்க மறுக்கிறது, மைதானத்து மரங்கள், உயிர்) இத்தொகுப்பில் காணலாம்.

'கல்கி' என்ற கதை மாலன் படைத்த அறிவியல் கதை அறிவியல் வளர்ச்சியில் அன்பு செய்வது மறந்து போனதை வலி யுறுத்தும் கருவை அழகாக அறிவியற் பின்னணியில் புலப் படுத்துகிறது. அறிவியலின் மிகு வளர்ச்சியில் மனிதன் இழப்பது மிகுதியாக உள்ளது என்ற அபாய அறிவிப்பை மாலன் காட்டு கிறார். கதை வடிவச் செம்மையுடன் உள்ளது.

'கண்ணீர் மழை' ஏழையின் கண்ணீர்க்கதை. உழைக்கும் வர்க்கத்திற்கு—அனைத்தையும் இழந்துவிட்டோம் என்ற நிலையில்-இன்றில்லாவிடினும் நாளை நன்னிலை அடைவோம் என்ற நம்பிக்கை உள்ளதை நுட்பமாக, வட்டார வழக்கு மிக்க நடையில், யதார்த்தமான பின்னணியில் காட்டும் கதை.

'சங்கிலி' வண்ணதாசன் படைத்த கதை. மாந்தரின் மன உணர்வை நுட்பமாக மையமிட்டு அதைச்சுற்றி அழகாகச் சிறுகதை வடிவம் படைத்த கதை. தங்கத்தின்மீது பகட்டார்வம் உடைய மனைவியை அடிக்கடி அதட்டும் போக்குகொண்ட கணவன், தன் பிள்ளையின் கழுத்தில் கிடந்த சங்கிலியைமிகுந்த முன் கவனத்துடன் கழற்றிக் கொள்கிறான். தன் நண்பன் வீட்டிற்கு ஓய்வைக் கழிக்கப்போய் அதனையும் முழுவதாக

அனுபவிக்க முடியாது போன அவலம் ஒருபுறம், குழந்தையின் கட்டுப்பாடற்ற சுதந்திரம் பாதிக்கப்பட்ட அவலம் ஒருபுறம் என்ற அனைத்திற்கும் சங்கிலி தளையாகிறது.

> 'நான்தான் வீட்டைவிட்டுப் புறப்படும்போதே செயின் எல்லாம் என்னத்துக்குப் போடுதே. நாம என்ன கல்யாண வீட்டுக்கா போறோம்...ஃபிரண்டு வீட்டுக்குத்தானேன்னேன் கேட்டாத்தானே'[29]

> 'நல்ல வேளையாப் போச்சு. இங்கேதானே இருக்கே கழுத்திலே செயின் வேறே கிடக்கு. எங்கேயும் தெருவாசலுக்குத்தான் போயிட்டயோண்ணு பயந்தே போயிட்டேன்' என்று குழந்தையைப் பார்த்துச்சொல்லி அதன் இதுவரையிலான பிரத்தியேக உலகங்கள் நொறுங்கும்படியாக உள்ளே எடுத்துக்கொண்டு போனான்.[30]

சிறுகதையில் நுட்பமாகக் காணக்கிடைக்கும் அற்புதச் சொற்சித்திரமாக மாந்தர் வார்ப்பு, மன உணர்வு, உறவுகளைப் போற்றும் மனித இயல்பு, யதார்த்த வாழ்க்கை, நுண்ணிய வாழ்க்கை நோக்கு என்ற அனைத்தும் வண்ணதாசனின் சங்கிலியில் தென்படுகின்றன.

'அவள்' சிறுகதைத் தொகுப்பில் பல கதைகள் இதழியல் வாய்பாட்டுக் கதைகளாக உள்ளன. ஒன்று படிப்பவனை மறந்த, படிப்பவனைக் கதைக்குள் புகவிடாத, மிகச் சாதாரண கதை. அல்லது, மிகக் கொச்சையான முறையில் உறவையும் உணர்வையும் காட்டுபவை. (இவ்விரு வகையிலும் அமைபவை, 'பசி', 'தையா', 'அகங்காரி', 'அவன் அழுகிறான்', 'இன்னும் எத்தனை பெண்களோ', 'ஊனமும் உள்ளமும்', 'இரண்டாவது வசந்த காலம்'). காதலின், மௌனமே காதலாக, அவள் ஆகிய மூன்றும் உள்ளடக்கத்தாலும் உருவச் செம்மையாலும் சிறந்த கதைகள். சுகமான கலைத்திறன் உடையவை. 'காதலின்' என்னும் கதை காதலுக்கும் நட்பிற்கும் இடையிலான மெல்லிய வேறுபாட்டைக் காட்டும். ஆணும் பெண்ணும் சேர்ந்து பணிபுரியும் அலுவலகச் சூழலில், பெண் ஓர் ஆணுடன் (இளைஞனுடன்) பழகினால், அதைப்பிறர் —குறிப்பாக வயதான ஆண்— எவ்வாறு எதிர்கொள்கின்றனர் என்று காட்டும் கதை. இன்றைய வாழ்வில் மதிப்புக்கள் மாற்றம் பெற்று வருகின்றன. இளையதலைமுறை

---

29. ________, பிரும்மம், வண்ணதாசன், "சங்கிலி", ப.106

30. மேலது, ப. 110.

யினர் உணர்வை, வாழ்வு பற்றிய மதிப்பீட்டைப் போன தலைமுறையினர் பார்க்கும் பார்வையில் மதிப்பு மாற்றமும் (Change in values) தலைமுறை இடைவெளியும்(generation gap) காணப்படுகின்றன. பொருள்மயமான வாழ்வில், பொதுவாக இன்றைய மதிப்பு இருண்மை நிலையில் அன்பும் பாசமும் நட்பும் உறவும் எவ்வாறு கொச்சைப் படுத்தப்படுகின்றன என்பதை இக்கதையில் மாலன் அற்புதமாகக் காட்டுகிறார்.

"...ஒரு பையனும் பொண்ணும் பரஸ்பரம் பிரியம் வைச்சா அது காதல்தானா? வொய் நாட் பிரண்ட்ஷிப்?... புடவையில் இருக்கேங்கிற வித்தியாசத்தாலேயா? பொம்பனாட்டிங்கற உடம்பினாலேயா, ஐடோண்ட் அண்டர்ஸ்டாண்ட்... நாங்க பிரண்ட்ஸ். ஜஸ்ட் பிரண்ட்ஸ். ஆனா நல்ல சிநேகிதர்கள். காதலில் பிரமைகள் உண்டு. பிம்பத்திற்காக வாழ்கிற பொய்கள் உண்டு... பெரியவா சின்னவா பேதம் உண்டு. இதில் இந்த இம்சைகள் எல்லாம் கிடையாது, ஸார். இது சுத்தம். ஓடற சுத்த ஜலம் மாதிரி சுத்தம். சமுத்திரத் தண்ணிபோல உப்புக் கரிப்புக் கிடையாது. காதலை விட ஸ்நேகம் உயர்ந்தது. ரொம்ப உயர்ந்தது. இதைப் புரிஞ்ச்சுக்கிற வயது உங்களுக்குப் போயிடுத்து."[31]

இன்றைய சூழலில், வாழ்க்கை மதிப்புக்கள் மாறிவருகின்றன. இத்தகு நிலையில் காதல் பெறுமிடம் என்ன என்பதை 'மௌனமே காதலாக' கதை வழி பாலகுமாரன் காட்டுகிறார். அச்சத்துடனும் காதலனிடம் உள்ளஅன்புடனும் அஞ்சிநடக்கும் பெண்ணையும் காதலன்பண்பையும்நன்கு காட்டுகிறார். 'அவள்' என்ற சிறுகதை வழியே ஜெயந்தன் காட்டும் சமூகச் சித்திரம் நுட்பமானது. அலுவலகச் சூழலில் அநீதி நடக்கும் போது அதை எதிர்த்துக் குரல் கொடுக்கும் கிராம சேவக் சிதம்பரத்தின் படைப்பு அற்புதமானது. அவரைப் புரிந்து கொள்வது, தீமை நடக்கும் போது கண்டும் காணாமல் ஒதுங்கிப் போகும் நகர நாகரிகப் புது இளைய சமூதாயத்திற்குக் கடினமாக இருக்கலாம். ஆனால், ஜெயந்தனின் பேனாவில் அவர் உருவாக்கப்பட்டுள்ள முறையில் அதன் இயற்கைத் தன்மை புலனாகிறது.

'இலக்கிய வீதி'யின் வெளியீடான விதைநெருப்பு தொகுதியில் 'மேலத் தெரு பள்ளம்', 'வலி', 'விதைநெருப்பு" ஆகிய கதைகள் உள்ளடக்கத்தால் தனித்தன்மையும்,சிறப்புமுடையன. சிறுகதை அனைத்தும் மாந்தரை அவர் தம் உணர்வுகளைக் கதைக் கருப்பொருளாக்கிட, 'மேலத் தெருப் பள்ளம்' என்ற

---

31. ________, அவள், மாலன், "காதலின்", பக். 131-132.

கதை மேலத் தெருவில் உள்ள பள்ளத்தை மையமிட்டுச் செல்கிறது. வீதியின் நடுவில் தோண்டப்பட்ட பள்ளம் மூடப்படாமலே கிடக்கிறது. அது வீட்டுக்கு அடையாளம் காட்ட (''மேலத் தெரு இடது கை வரிசையில், அஞ்சாம் நம்பர் வீடு, தெற்கு வீதி திரும்பியவுடன் ரோடிலே பைப் போடுவதற்காய் வெட்டின பள்ளம் வரும். அதற்கு அடுத்த வீடு நம்ப வீடு''[32]), வேகமாக வரும் வாகனங்களுக்கு வேகத் தடையாக (''அது, இப்போது, பள்ளம் ஸ்பீட் பிரேக்கர் ஆகிவிட்டிருந்தது''[33]), கவனமின்றி வருபவர் விழ என்று பல்வேறு வழிகளில் பணி புரிகிறது. பொதுவாக, இம்மாதிரியான, பொதுநலம் உடையவற்றைக் கண்டு ஒதுங்கிப் போவது, நமக்கேன் வம்பு என்று வாளா விருப்பது, இது நம் பணியன்று, நகராட்சி (முனிசிபல்) கமிஷனர் பணி என்று சுலபமாகப் பொறுப்பைத் தட்டிக் கழிப்பது, அவ்வாறு இன்றிப் பொதுப் பணி செய்ய வருபவரை ஏளனமாகப் பேசுவது இவற்றைச் சுலபமாக மறப்பது என்பன நகரவாழ்வின் மதிப்புக்கள். ஆயின், இப் பள்ளம் ஒரு நாள் திடீரென மூடப்பட்டு விடுகிறது.

''அடுத்த நாள் காலையில் வேகமாகச் சைக்கிள் ஓட்டி வரும் பலர், இங்கே நிதானித்து வந்து, பள்ளமில்லாததால் தடுமாறிப் போனார்கள்' இதை இவன் ரொம்பவும் ரசித்துச் சிரித்தான்.

அலுவலகம் செல்வதற்காய், இவன் புறப்பட்டபோது, தெற்கு வாசல் வழியில் ஒரு பெரிய 'பேனர்' தெரிந்தது...

'மாண்புமிகு முதல்வர் அவர்களே! வருக! வருக!''[34]

தெருவில் உள்ள பள்ளம் மூடப்பட்டு, தரை சமன் செய்யப்பட்டுக் கொடுப்பதற்குக் கூட மந்திரியின் வரவு தேவை ஆகிறது. சமூகப் பொறுப்பின்மையும் வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவைகள் கூடப் புறக்கணிக்கப்படும் அளவிற்கு அதிகார வர்க்கத்தின் போக்கும் வளர்ந்துள்ளன. இதன் விளைவாக, ஆளப்படும் மக்களுக்கு இருக்க வேண்டிய நியாயமான உணர்வும்—தீமை கண்டு எதிர்க்கும் குணமும்—இல்லாமையால் நகர வாழ்க்கையில் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு—உத்தரவாதமின்மை—ஏற்பட்டுள்ளது. இச் சிந்தனைகளை இக்கதையின்

32. இனியவன் (தொ.ஆ.), விதை நெருப்பு, ''மேலத்தெருப் பள்ளம்'', ஸ்ரீநிவாசன், தி., ப. 83.
33. மேலது, ப. 84.
34. மேலது, ப. 87,

உள்ளடக்கம் தாங்கி நிற்கிறது. 'வலி' என்ற சிறு கதையில் கல்யாணி என்னும் பெண்ணிற்கு ஏற்படும் கடுமையான தலை வலி காட்டப்படுகிறது. மாயவரம் ஊரும் காவேரி ஆற்றின் ஓட்டமும் அவ்வூர் மண்வாசனையும் தாயன்பும் தந்தையின் அரவணைப்பும் இல்லாத தனிமை அவளை வாட்டுகிறது. குடும்பப் பொறுப்புக் காரணமாக, அலுவல் பார்க்க வேண்டி, பிறந்த மண்ணைப்பழகிய பாசத்தைவிட்டு-வந்து புதிய சூழலில் ஒத்திசையாத மனவலி, தலைவலியாகக் காட்டப்படுகிறது.

> 'குடும்பத்தில் மூத்தவள் அல்லவா? வேறு வழியில்லாமல் சென்னைக்குத் தனியாளாய் வந்து, இந்த பர்மா பஜார் நெரிசலில் முண்டியடித்துக்கொண்டு,ஒரேயொரு மின்விசிறி மட்டுமே உள்ள அலுவலகத்தின் புழுக்கத்தில் வெந்து பல்லவனின் மூச்சு முட்டும் கூட்டத்தில் கசங்கி ஹாஸ்டலில் வந்து விழும் அவலம் கல்யாணிக்கு மட்டுமே.
>
> ...............
>
> தலைவலியைச் சாக்காய்க்கொண்டு வெளிப்பட்ட கண்ணீரின் நிஜக் காரணம் புரிந்தபோது, அவள் புழுவாகச் சுருங்கிப் போனாள்.'[35]

அவள் தன் தலைவலிக்கு அடிப்படைக் காரணம் எதுவெனப் புரிந்துகொண்டு தெளிவுபெற்று, வலியிலிருந்து மீள்கிறாள். சிறுகதைக்கு உள்ளடக்கமாக, தெருப்பள்ளமும் தலை வலியும் அமைய அவை வழி சமுதாய, குடும்ப, தனிமனித நிலைகளில் காணப்படும் வாழ்க்கை மதிப்புக்கள் துலக்கமாகக் காட்டப்படு கின்றன.

'விதைநெருப்பு' கதையின் உள்ளடக்கம் பழமையானது. ஆயின் கூறப்பட்டுள்ள முறையால்—பார்வையற்ற பெண் மைதிலி, மாற்றுச் சமயத்தைச் சார்ந்த சாதிக்கை நேசிக்கிறாள்; மணம் ஏற்கப் படாதபோது, அவளே தன் சமூகத்தைச் சாடும் பாங்கால் உள்ளடக்கம் வலுப்பெறுகிறது. மைதிலியின் சமூக மான உயர்ந்த ஆசாரமிக்க ஐயங்கார் சமூகம், இவள் பார்வை யற்றவளாகிப் போனபோதும் வரதட்சணைப் பணத்திலே நாட்டம் செலுத்துகிறது. [''மைதுவுக்கு ஒரு வரன் வந்திருக்கு. தென்கலை வசிஷ்ட கோத்திரம். எல்லாம் பொருத்தம்தான்... லௌகீக விஷயத்லேதான் இழுபறி. கொஞ்சம் அதிகமா எதிர் பாக்கறா —ம். பகவான் இவளோட பார்வையைப் பறிச்சுட்டான்...

---

35. இனியவன் (தொ. ஆ.), விதைநெருப்பு, ''வலி'', புஷ்பா பாலசந்தர், 127.

கேட்டதைத் தந்தாவது இவளைப் புக்ககம் அனுப்சுட வேண்டாமா ...?''—36] மைதிலி தனக்குப் பார்வையாக இருந்து அன்பு செலுத்தும் சாதிக் பிற மதத்தவன் என்பதைக் காரணம் காட்டி மறுக்கும் சமூகம், பணம் என்ற ஒன்றை வைத்துச் சமூக மதிப்பு பேசுகிறது. அந்தணச் சமூகம், தன் மதிப்புக்களை இப்படி பணத் திற்காக விலை பேசும் கொடுமையை அவள் எதிர்க்கிறாள்.

''பணம், வசதி, சௌகரியங்களுக்கெல்லாம் செல்லரித்துப் போன ஜாதிப்பெருமை, உண்மையாகநேசிக்கிற மனத்தை நான் அடையறதாலே நீர்த்துப்போனால்தான் என்னவாம்.

வாழ்க்கையை மனிதாபிமான கோணத்திலே பாருங்கோ. இத்தனை சடங்கு, சம்பிரதாயங்களை, இடம், சந்தர்ப்பச் சூழ்நிலை, வசதிகளுக்கேற்ப மாத்திண்டிருக்கோம்...ஒரு கல்யா ணத்துக்கு ஆயிரம் பொய்களை ஒப்புக்கொள்கிற நாம, அதே கல்யாணத்துக்கு ஒரு உண்மையை அனுமதிக்க மறுக்கறது விசித் திரமா இருக்கு''36

வரதட்சணை, பணம் என்ற பெயர்களால் பணத்திற்காக வாழ்க்கை அறம், அறமதிப்புக்கள் (ethical values) (பொய் சொல்லல் பாவம்), வாழ்க்கை மதிப்புக்கள், சமூக மதிப்புக்கள் ஆகியவற்றை மாற்றிக்-காள்ள—விட்டுவிட—இழக்க முன்வரும் சமுதாய அமைப்பு இக்கதையில் விமர்சிக்கப்படுகிறது. மதமும் சமூக அமைப்பும் மனிதாபிமான அடிப்படையில் செயல்படின் அனைவரும் நன்மை பெறுவர். மாறாகப் பணத்தின் மதிப்பு மிகுந்திட பொருள் உடைமை—வர்க்க உணர்வு—வளருமானால், வாழ்க்கை பொருளற்றுப் போகும் என்பதை இக்கதையில் நன்கு வலியுறுத்துகிறார்.

பாரதி சிறுகதைகள் என்ற தொகுப்பில் ஏழு கதைகள் உள்ளன. இருப்பினும் உள்ளடக்கத்தால் சிறப்புற்றுக் குறிப்பிடத் தக்கவை மாலனின் ஆயுதம் என்ற கதையும் சுஜாதாவின் ஒரு இலட்சம் புத்தகங்கள் என்பதுமாகும். பாரதியின் 'ஆயுதம் செய் வோம் நல்ல காகிதம் செய்வோம்' என்ற கவிதை வரிக்கு மாலன் தரும் கருத்து விளக்கம்—புதிய பொருள்—ஆயுதம் என்ற கதை யின் உள்ளடக்கம். இங்குச் சமூகம் கெட்டுப்போய் உள்ளது. முரண்பட்ட கொள்கைகளோடும் செயல்களோடும் [''காக் காய்க்குச் சோறு வைக்காமல் சாப்பிடுவது பாவம் என்று நம்புகிற தேசத்தில்தான் பட்டினியால் சாகிறவர்களும் இருக்

36. இனியவன் (தொ. ஆ.), விதைநெருப்பு, 'விதை நெருப்பு'', ஆர்த்தி ப்ரியா, பக். 31, 32.

கிறார்கள்''[37]) இந்தியசமூகம்உள்ளது. பாரததேசமென்றுபெயர் சொல்லுவார் இந்த நாட்டிற்கு. ஆயின் நாடு இப்போது குரு ஷேத்திரம் ஆகிவிட்டது. ''பெண்கள் பகிரங்கமாக மார்க் கெட்டில் விற்கப்படுகிறார்கள். விவசாயி தான் விளைத்த பொருட்களிலிருந்து அந்நியப்படுத்தப்படுகிறான். கவைக்குத வாத ஒரு கல்வி. முறைகேடான வழிகளில் வெளிப்படையாகப் பணம் திரட்டும் அரசியல்வாதிகள். ஆதாரங்களோடு அது நிரூபிக்கப்பட்டும் அசையாமல் அவர்கள் தொடர்கின்ற அரசியல் —எது நடந்தாலும் வேடிக்கை பார்க்கிற பத்திரிகைகள் —என்று எத்தனை கௌரவர்கள். இங்கு வில்லைப்போட்டுவிட்டு வேதம் கேட்க எங்களுக்கு ஆசை இல்லை. எங்களுக்கு வேண்டியது ஆயுதங்கள்'[38] இவ்வாறு இங்குச் சமுதாயம் உளுத்துப் போகிறது. அதற்குப்பெருந்துணையாகப் பத்திரிகைகள் உள்ளன. சமூக மாற்றத்திற்கு — புரட்சிக்கு — உறுதுணையாகாது, கலாச்சார சீரழிவிற்கு, சமூகத் தனிமனித சோரத்திற்குப் பத்திரிகை துணை நிற்கிறது. இந்தப் பத்திரிகைகள் காகிதம் செய்யாமல் ஆயுதம் செய்ய வேண்டும் என்கிறார் மாலன்.

> ''எழுதுவதும் நம் ஆயுதம் (writing is our weapon) என்றல்லவோ அர்த்தம்? சுரண்டறவன் வயிற்றில் சொருகுகிற கத்தி மாதிரி நியூஸ் பேப்பர் வந்துவிழவேண்டும். நசுக்கி வைத்திருக்கிறவர்கள் மேல், ஆட்டம்பாம் போல் எழுச்சியூட்டும் கட்டுரை வந்துவிழ வேண்டும். மெஷின் கன்னில் சுடுகிற மாதிரி படபடவென்று கவிதை தெறித்துக் கொண்டுவர வேண்டும்.''[39]

இதுதான் பத்திரிகை வழி வரவேண்டிய எழுத்து. சமூக மாற்றத்திற்குப் படைப்புத் துணைபோக, ஆயுதமாகப் பத்திரிகை விளங்க வேண்டும் என்ற கருவைச் சுமந்துகொண்டுள்ள கதை. இது அண்மைக் காலத்தில் தமிழ்ச் சிறுகதை உலகம் காணாத ஒன்று.

சுஜாதாவின் 'ஒரு லட்சம் புத்தகங்கள்' என்னும் சிறுகதை, அண்மையில் நடந்த இலங்கைக் கலவரத்தை மையமிட்டது. யாழ்ப்பாணத்தில் ஒரு லட்சம் தமிழ்ப் புத்தகங்கள்—நூலகத்திலிருந்த அரிய தமிழ் நூல்கள் —தீயிட்டுக் கொளுத்தப்பட்டன.

---

37. ______, பாரதி சிறுகதைகள், மாலன், ''ஆயுதம்'', ப 9.
38. மேலது. ப. 17.
39. மேலது, ப. 20.

இதை எடுத்துச் சொல்ல பாரதி விழா மேடையில் முயன்ற ஈழ நாட்டுத் தமிழ் இளைஞனை மேடையிலிருந்து மட்டுமல்ல, தமிழகத்திலிருந்தே அப்புறப்படுத்துகிறார், பெரியவர், தமிழ் அறிஞர் டாக்டர் நல்லுச்சாமி. புதிதாக அரசு அமைக்கும் பாரதி பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பதவியை அடைய அவர் கொடுக்கும் விலை இது. பதவிக்காக எதையும் இழக்கும் ஒரு தமிழறிஞரின் கதை இது. அறிவுக்குத் துணை போகும் நூல்கள் ஒரு லட்சம் தீயிடப்பட்டன என்பதை அறிந்து துடிக்காமல், அறிவுச் செல்வம் கொள்ளை போனது என்று அதிராமல், தனக்குப் பதவி வரவேண்டும் என்பதற்காக ஒரு தமிழறிஞர் ("டாக்டர் இரா. நல்லுச்சாமி தன் தலைமையுரையின் போது, 'சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம் என்று பாரதி சொன்னது கான்க்ரீட் பாலத்தை அல்ல, மனப்பாலத்தை''[40]) எவ்வாறு சோரம் போகிறார் என்று இக்கதை காட்டுகிறது. அறிவைப் பெருக்க வழி செய்ய வேண்டிய உயர் கல்விப்பீடமான பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவியை அடைவதற்கு ஒரு மனிதன்-பாரதியை எழுத்தெண்ணிக் கற்றுப்பட்டம் பெற்றவர்-புத்தகங்கள் எரிக்கப்பட்ட கொடுமையைச் சொல்வதைக்கூட ஏற்க முடியாமல், அதனால் அமைச்சர் சினந்து தனக்கு வர வேண்டிய பதவி வராதுபோகுமோ என்று அஞ்சி, அவ் விளைஞனை நாடு கடத்துகிறார். பதவிக்காக மனிதன் தரும் விலை என்ன என்பதைக்காட்டும்-இன்றையநடைமுறை வாழ்வில் உருவாகிவரும் அதிகார வர்க்கத்தின் சமூக மதிப்புக்களை இனம் காட்டும்-உள்ளடக்கத்தால் இக்கதை சிறக்கிறது.

'கல்லிற்குக் கீழும் பூக்கள்' என்ற தொகுப்பில் மாலனின் சிறந்த கதைகள்—உள்ளடக்கத்தால் வலிமை பெறும் கதைகள்—பலவற்றைக் காணலாம். 'முகங்கள்' என்ற கதையில் காலங்கால மாக ஆண் வர்க்கத்தால் அடிமையாக்கப் பட்டும் சுரண்டப் பட்டும் வரும் பெண்ணின் முகம்—பெண்ணின் மனம்—கருவா கிறது. "இந்தியப் பெண்கள் விடுதலையடைய விரும்புவதில்லை என்பது உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும். காலங்காலமாக ஆண் கள் அவர்களுக்கு உருவாக்கி வைத்திருக்கும் பிம்பத்தை அணிந்து கொள்வதே அவர்களுக்குச் சந்தோஷமாயிருக்கும்''.[41] பெரும்

---

40. ______, பாரதி சிறுகதைகள், சுஜாதா, "ஒரு லட்சம் புத்தகங்கள்'', ப. 95.

41. மாலன், கல்லிற்குக் கீழும் பூக்கள், "முகங்கள்'', பக். 38-39.

பாலான பெண்கள், ஆண்களின் ஆதிக்கத்தை ஏற்பதை விரும்பு கின்றனர். இங்கு, பெண்களுக்குப் பொருளாதார சுதந்திரம் இல்லை. அலுவல் மகளிராக, சுயமாகப் பொருள் ஈட்டும் பெண் ணாக இருப்பின், அவள் தன்முனைப்பு உடையவள் எனப் பழிக் கப்படுகிறாள். மணமான பெண் மணமுடிந்த பின், தன் மாதச் சம்பளத்தை அப்படியே கணவன் வீட்டிற்கு அளித்து விட வேண்டும். ஆண் வாரிசே இல்லாத நிலையில், தன் தந்தைக்கு— தன் திருமணத்திற்கு வாங்கிய கடனை அடைக்க உதவட்டும் என்று—மணமான பெண் கொடுப்பாளேயானால், அவள் வாழா வெட்டியாக்கப்படுகிறாள். பெண்ணுக்கு என்று ஒரு விருப்பம் இருப்பின் ‘‘வேலைக்குப் போற திமிர்’’[42] என்று அவள் பழிக்கப் படுகிறாள். பொதுவாக, காலங்காலமாகப் பெண்ணைக் கொடுமைப்படுத்தும் ஆண்களின் முகங்களை மட்டுமல்ல ஆன்மா வையே இக்கதையில் மாலன் தோலுரித்துக்காட்டுகிறார். பெண் ணால்—வேலைக்குப் போய், ஆணின் ஆதிக்கப் பிடியிலிருந்து விடுதலையடைந்து, பொருளாதாரச் சுதந்திரம் அடைந்த பெண் ணால்— ‘‘அங்கங்கு தங்கி விட்ட ஈரங்களைத் தாண்டிவிட முடிந்தது; ஆனால் சேற்றைத்தான் தவிர்க்க முடியவில்லை’[43] ‘ஆணுக்குப் பலநூறு முகங்கள் உள்ளன; பெண்ணுக்குந்தான். ஆனால், தன் ஏதோ ஒரு முகத்தில் மயங்கி, தன்னை வீழ்த்தி விட்டாள்’[44] பெண் என அறிந்த ஆண், அது தங்களிருவரையும் பிணைக்கும் மணமாகாது என்று கூறும் போது அவளுக்கு அதை ஏற்க முடியவில்லை. சமூக மதிப்பு மாறும்போது வாழ்க்கை மதிப்பை மாற்றிக் கொள்ளப் பெண் இன்னும் முன் வர வேண்டும் என்பது இங்கு வலியுறுத்தப்படுகிறது (பெண்ணுக்கு அலுவல் பார்த்து' பொருளாதாரச் சுதந்திரம் ஏற்பட்டதில் சமூக மதிப்பு, மாறிப் புதிய மதிப்பு உருவானது. ஆயின் அதன்பின் திருமணம் என்ற வாழ்க்கை மதிப்பு, அதைத் தொடர்ந்த சிக்கல்களால் பெண், ஆணுக்கு அடிமையாகிறாள். ‘‘கல்யாணங்கள்—அதுவும் நம் கல்யாணங்கள்—சுய பொருளா தாரத் தெம்பில், புத்தியின் பலத்தில் நிற்கும் நம் தலைமுறைப் பெண்களுக்கு ஒரு ஆணின் உடம்பைத் தருவதற்கு வழி செய்வதைத் தவிர நம் கல்யாணங்களுக்கு அர்த்தங்கள் வேறு இருக்கிறதா?"[45] எனவே, முகங்கள் புதிய பரிணாமம் பெற்று

---

42. மேலது, பக். 42.
43. மேலது, பக் 46.
44. மேலது, ப. 46.
45. மேலது, ப. 44.

மேலும் இறுகுவதை மாலன் காட்டுகிறார்)' நம்மைச் சுற்றி எங்கும் வன்முறை பல்வேறு வழிகளில் இடம் பெறுவதைக் காண்கிறோம். ஒவ்வொரு நிலையிலும் மனிதன் பல்வேறு முகங்களுடன் உலவுகிறான். இந்தப் புதிய நடப்புச் சமூகமதிப்புக்களை —வாழ்க்கை மதிப்புக்களை—மாலன் இக்கதைத் தொகுப்பு முழுவதிலும் காட்டுகிறார். அவருடைய கதைகளில் சிறுகதையின் உள்ளடக்கம் மிகுந்த கனம் பெறுவதை எண்பத்திரண்டில் வெளியான இத் தொகுப்பு பறைசாற்றுகிறது.

சு. சமுத்திரத்தின் 'மானுடத்தின் நாணயங்கள்' தொகுப்பில் புதிய விதைகள் கதை உள்ளடக்கத்தால் வலுவானது. வர்க்க வேறுபாடுள்ள சமுதாயத்தில் பணம் படைத்தவன் அநீதி செய்யும் போதும் வாளாவிருப்பதையே—எதிர்த்துக் குரல் கொடுப்பதே பாவம் என்று பேசுவதையே—வாழ்க்கை அறமாக, சமூக மதிப்பாகக் கொண்டவர்கள், போன தலைமுறையினர். ஆனால், புதிய விதைகளான இளையதலைமுறையினர் தாங்கள் பொருள் படைத்தவரால் சுரண்டப்படுவதை எதிர்த்துக் குரல் கொடுக்கின்றனர். (''ஏழைகளை அடிக்கிறது இவன் அப்பா காலத்தோடயும் ... உம்ம காலத்தோடயும் முடிஞ்சிட்டு. இனிமேல் அடிச்சா முப்பத்திரண்டு கீழே விழும்...ஓஹோன்னானாம்...)[46]'' எல்லோரும் இதனைக் கண்டு வாயடைத்து நின்றனர். 'இசக்கி வழி நடத்த எல்லாப் பையன்களும் வெளியே வந்து கம்மாக் கரை மேல் நடந்தார்கள். குளத்தடி பக்கம், புதிய ரக நெல் விதைகளால், நாற்றங்காலான நெற்பயிர்கள் ஆடிக் காற்றுக்கும் ஈடுகொடுத்துக் கம்பீரமாகத் தலையாட்டின.'[47] என்ற வருணனையில் இளைய சமூகத்தின் எழுச்சியை—பேராட்ட உணர்வை—ஆசிரியர் காட்டுகிறார்.

இவ்வாண்டு வெளியான அனைத்துச் சிறுகதைகளின் உள்ளடக்கம் பற்றித் தனித்தனியே இங்கு ஆராயவில்லை. இதழ்களின் போக்கிற்கு ஏற்ப, வாசகர்களின் பொழுதுபோக்கு மனோபாவத்தை வைத்துக் கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற குற்றங்களையும் பாலுறவைக் கொச்சைப்படுத்தும் பாங்கிலும் எழுதப்பட்ட, கலாச்சாரச் சீரழிவுகளை விற்பனைக்காக முதன்மைப்படுத்தும் கதைகளை-அவற்றின் உள்ளடக்கம் பற்றிய

---

46. சமுத்திரம், சு., மானுடத்தின் நாணயங்கள், பக். 177-178.

47. மேலது, ப. 179

விளக்கங்களை—விடுத்து, சிறுகதை வளர்ச்சிக்கு வளஞ்சேர்க்கும் கதைகளின் உள்ளடக்கத்தை மட்டும் இங்குக் காட்டியுள்ளேன். அவற்றையும், அனைத்துக் கதைகளையும் உள்ளடக்காமல் பதச் சோறு காட்டும் தன்மையை மேற்கொண்டுள்ளேன்.

**கலைத் திறன்:** இக்காலச் சிறுகதைகள் பலவற்றின் கலைத் திறன் ஆள்வதில் இருவிதப் போக்குகள் உள்ளன. இதழ்களில் எழுதிப் பொழுதுபோக்கு வாசகரை மையமிட்ட சனரஞ்சக எழுத்தாளர் கதைகளில் மரபு வழியான கதைகூறுந்திறன், கதைப்பின்னல் அமைப்பு, மரபு வழியான ஆசிரிய இடையீடு, தலைப்பு, தொடக்கம், முடிவு, ஆர்வநிலை, மறைபொருள் (suspence) வியப்பு முடிவு ஆகிய பல்வேறு கலைத்திறன்களைக் காணலாம். நல்ல உள்ளடக்கம்கூட இதழ் போக்கிற்கு ஏற்ற கலைத்திறன்களால் நீர்த்துப் போகிறது. சுஜாதாவின் கதைகள் இதற்கு நல்ல சான்று. சுஜாதாவின் 'ஒரு லட்சம் புத்தகங்கள்' கதையின் முடிவு வரிகளைக் கூறலாம். இதற்கு மாறாக, எடுத்துக்கொண்ட கதையின் மையத்திற்கு ஏற்ப மாந்தர் படைப்பை அல்லது கதைக் கருவை முதன்மைப்படுத்திக் காட்டும் கதைப்பின்னல் அதற்கேற்ற கலைத்திறன், நுணுக்கமான வருணனை, கிளைமொழி வழக்கு ஆட்சி போன்ற திறன்களை மாலன், பிரபஞ்சன், அசோகமித்திரன், புஷ்பா பாலசந்தர், ஆர்த்திப்ரியா, தி. ஸ்ரீனிவாசன், வண்ணதாசன் போன்ற பலரின் எழுத்துக்களில் காணலாம்.

> "சாதிக், நம்மோட மனசு 'கேஸட்' மாதிரி—ஏற்கெனவே பதிவாயிருக்கறது அழியணும்னா, அது மேலே புதுசா பதிவாகணும்..."[48]

இவ்வாறு புதிய உவமை ஆட்சிகள் மிக்க உரையாடல்.

"உனக்கோ முகங்கள் பலநூறு
எனக்கும்தான்.

என்னுடைய ஏதோ ஒரு முகத்தை உன்னுடைய
ஏதோ ஒரு முகம் பார்க்க வீழ்ந்தாய்...
மயங்கி அதனில்
ராஜி
இதோ பார் என் விஸ்வரூபம்.

---

48. இனியவன் (தொ. ஆ.), விதைநெருப்பு, ஆர்த்தி ப்ரியா "விதைநெருப்பு", ப. 26.

உனக்கு ஞானக் கண்ணிருந்தால், பலநூறு
முகங்களுடன் கூடிய என்னைப் பார்' இதோ''[49]

என்று புதுக்கவிதையாக மலரும் நடையும்,

''அவர் கம்யூனிஸ்டுன்னு கேள்விப்பட்டனே...''

ஆமாமா-அந்தக் கட்சிதான் அவரு-நல்ல மனுஷம்பா-எந்தக் கட்சியில் இருந்தாத்தான். என்னா - நல்லா இருக்கணும்-எந்த நிலைக்குப் போனாலும் நம்ம ஆளுக நாலு பேருக்கு உதவியா இருந்து கைதூக்கி விடணும்...நம்ப செகரட்ரி சொந்தமா வீடு கட்டிட்டாரு கொஞ்சம் காசும் கையில் இருக்கே ஆளு நிமிந்திடுவாரு—ஆமா, பணம் ஏற்பாடு பண்ணி இருக்கியா?''[50] என்று சமகாலச் சமூகப்படப்பிடிப்பான-கம்யூனிசம் பேசும் செக்ரட்டரி, தன் இனம் பார்த்து அவனிடமும் பணம் வாங்கிப் பணியாற்றும் சமூக நிலையின் விளக்கமான நடையும் இக்காலச் சிறுகதைகளில் குறிப்பிடத்தக்க - பதச்சோறான - கலைத்திறன் ஆட்சிக்குச் சான்றாக அமைவன. இவர் கைகளில் திறன்கள் எதுவும் துருத்திக்கொண்டு அமையாமல், இயல்பாக ஒத்திசைந்து—''கலைவடிவில் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு கலைத்திறனும் கலைதயின் அடிநாதமாக ஒலிக்கும் கருப்பொருளை விளக்கி எதிரொலி செய்யும் வண்ணம்''[51] அமைந்துள்ளன.

முடிவுரை: இக்காலகட்ட, இதழ்ச் சிறுகதைகள், தொகுப்பான நிலையில் அவை பெரும்பாலும் சனரஞ்சக இதழ்களின் வணிக, பொழுதுபோக்கு நோக்கங்களை மையமிட்டே உள்ளன. அவற்றில் ஆழ்ந்த கலைத்திறன்களைக் காண முடியவில்லை. திரைப்படப் பாதிப்பைப் பல கதைகளில் காண முடிந்தது. கலைத்திறன் மட்டுமின்றி, கதை வடிவம், பிரச்சினைகளைச் சரிவர ஆளாததால் கதையின் உள்ளடக்கம் நீர்த்துப் போதல், திடீர்த் திருப்பம், எதிர்பாராத முடிவு ஆகிய போக்குகளிலும் சினிமாத்தனத்தைக் காணலாம். ஆர். ஈ. சந்திரசேகரின் 'ஒரு தபால்காரி கிராமத்துக்குப் போகிறாள்' 'உதிராத பூ ஒன்று'. 'வசந்தம் வரும்' ஆகிய மூன்று கதைகள்

---

49. மாலன், கல்லிற்குக் கீழும் பூக்கள், ''முகங்கள்'', ப. 46.
50. பிரபஞ்சன், ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள், ''சங்கம்'', பக். 48-49.
51. வேங்கடராமன், சு., அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 153, சென்னை, தமிழ்புத்தகாலயம், 1977.

இதற்கு நல்ல சான்று. இவை மூன்றும் வேலை இல்லாத் திண்டாட்டம் பற்றியவை முதலிரு கதைகளில்வேலைக்குச் செல்லும் பெண் அலுவல் மகள் மையப்படுத்தப்படுகிறாள். மூன்றாம் கதையில், வேலை கிடைக்காததால் தற்கொலைக்கு முயலும் ஆடவனைக் காண்கிறோம். பெண் வேலைக்குப் போனால், கற்புக்கு ஊறு வருவதை முதலிரு கதைகள் காட்டும். தமிழ்த் திரைப்படங்கள், கதைகள் ஆகியன பொழுது போக்கை மையமிட்டு, மிக எளிதில் பெண் கற்பிற்குக் கேடு வருவதை, ஆண் தற்கொலை செய்து கொள்வதைக் காட்டுகின்றன. வாழ்க்கை மதிப்புக்கள் எவ்வளவு தூரம் கொச்சைப் படுத்தப்பட்டுள்ளன என்பதற்கு இவை சான்று. பெண்ணை, அவள் மன உணர்வுகளை, அவளுடைய பிரச்சினைகளை மையப்படுத்தி எழுதப்பட்ட கதைகளில் பெண் எழுத்தாளர்களே எழுதியக் கதைகளில் உள்ளடக்கமும் கலைத் திறன்களும் கவனக் குறைவுடன் ஆளப்பட்டு, பொழுதுபோக்கு அம்சங்களே மேலோங்கி நிற்கும் பாங்கை லீலா கிருஷ்ணனின் ராதா உபதேசம் தொகுப்பின் பல கதைகளில் காணலாம். அலுவலகத்தில் பணி புரியும் பெண் ஒருத்தியை, மேலதிகாரி கெடுத்து விடுவதைக் காட்டும் 'தடுமாற்றம்' கதையில் அப் பெண் அதற்கு இணங்குவது காட்டப்படுகிறது. கற்பு விலை மதிப்பற்றது. எப்பாடு பட்டும் பெண் அதைக் காக்கப் போராடுவாள் என்று சொல்லப்பட்ட அறமதிப்பு—வாழ்க்கைமதிப்பு — இங்கு மிக எளிதில் புறந்தள்ளப்படுகிறது, அதைப் பெண்ணை மையமிட்டுப் பெண் எழுத்தாளரே படைத்துள்ளார்.

பாலுறவை மிகவும் கொச்சைப்படுத்தி ஆபாசமாக எழுதும் போக்கு இன்று இதழ்ச் சிறுகதைகளில் மிகுந்துள்ளது. பெண் எழுத்தாளரே இவ்வாறு எழுதுவது வருந்தத்தக்கது.

> ''ஏதோ 'ஜெனரேஷன் கேப்' என்று பிரமாதப்படுத்கிறார்களே. எனக்கு ஒன்றும் அப்படி ஒரு பிரமாத இடைவெளி இருப்பதாகத் தெரியவில்லை...நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...?
>
> நான் நினைப்பதைக் கேட்கிறாயா? இப்போ எதற்கு இவ்வளவு 'கேப்' என்று நினைக்கிறேன்'' [52]

---

52. லீலா கிருஷ்ணன், ராதா உபதேசம், ''தலைமுறையாவது இடைவெளியாவது!'', ப. 75.

என்று லீலா கிருஷ்ணனும், தன் கதை மாந்தரைத் திரைப்பட நடிகருடன் உவமித்து உஷாசுப்ரமணியன் எழுதுவதும் இதற்குச் சான்று. 'கட்டிலில் அமர்ந்து கொண்டவர் என்னை ஒருமுறை பார்த்துவிட்டு' தனது இடப்பக்கக் கட்டில் மெத்தையில் இலேசாக இரண்டு தடவை தட்டுகிறார். அதனுடைய பொருள் எனக்குப் புரியாதா என்ன, பகலில் என்னைக் கடிந்து கொண்டதற்கு ஏகப்பட்ட சமாதானங்கள், சடங்குகள், இனிமை"[53] என்று படுக்கையறைச் செய்திகளை இன்னொரு கதையில் லீலா கிருஷ்ணன் விளக்குகிறார். லீலாகிருஷ்ணனின் தடுமாற்றம் கதையிலும், அவன் அழுகிறான் கதையில் சுபா என்ற ஆண் எழுத்தாளரும் மிகச் சுலபமாக, முறைகேடான பாலுறவை விளக்குகின்றனர். "என்ன நடக்கப் போகிறதோ? தனியாக அவருடைய அறைக்குள் தள்ளிவிடப் போகிறார்களே. என்ன செய்வது? அவர் முரடனாக இருப்பாரோ? எஸ்ஸென்ஸ் எடுப்பது போல, சினிமாவிலே கதாநாயகியைப் பிழிவார்களே அப்படிப் பிழிந்து விடுவாரோ?'[54] என்றுவரும் வ.தேனப்பனின் எழுத்தும் ஆபாசமாகப் பாலுறவைக் கொச்சைப்படுத்தி விளக்குவதாக உள்ளது. கதையின் தலைப்புக்களிலே ஆபாச உணர்வை அமைத்து, படிக்கும் வாசகர்களைத் திசை திருப்பும் மட்டமான திறனை 'முழுமையான முதலிரவு'[55], 'ரேகாவுடன் தனிமையில்'[56] போன்ற கதைகளில் காணலாம். பொதுவாக, தமிழ் இதழ்கள் வணிக நோக்குடையவை. இதழ் உலகப் போட்டிகளின் நடுவில் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக்கொண்டு கவர்ச்சி என்ற பெயரில் ஆண், பெண் உடல்களையும் பாலுறவையும் கொச்சைப்படுத்தி அதையே மூலதனமாக்கி வருகின்றன. எனவே, இத்தகைய இதழ்களில் வரும் கதைகளிலும் அவை தொகுப்பாக வருமிடங்களிலும் இப்பாங்கே காணப்படுகின்றன. அட்டைப்படம் முதல் அனைத்தும் இத்தன்மையைப் பிரதானப்படுத்துகின்றன. "படு கவர்ச்சியான அட்டை. எக்ஸ்ரே எலும்பைப் படம் பிடிப்பதைப் போல, ஓவியர் சதைகளை மட்டும் வரைந்திருந்தார். (ஒரு நடிகை ஒருக்களித்துப் படுத்திருந்தாள்) புத்தகத் தலைப்பு; 'படிக்கக் கூடாத கதைகள்'' [57] என்று வரும் விளக்கம் இக்

53. மேலது, ப. 98.
54. தேனப்பன், வ , தவளைத் திருமணம், "முழுமையான முதலிரவு", ப. 32.
55. மேலது, ப. 31
56. லீலா கிருஷ்ணன், ராதா உபதேசம், ப. 90.
57. தேனப்பன், வ , சிரிப்புக்குப் படமெடுப்போம், ப. 114.

கருத்தை வலியுறுத்தும். எனவே, இக்கதைகளில் கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற சமூகக் குற்றங்கள் கதைப் பொருளாகின்றன. இவற்றை எழுதும்போது வேண்டிய அளவு ஆபாசத்தைச் சேர்க்கின்றனர். (''சிலுக்கு நெளியுறா! போட்டிருந்த ஒரே டிரஸ்ஸையும் துவைத்துக் கரையில காயப் போட்டுட்டு — உள்ளாடையோட — இந்தக் காட்சியைத்தான் பெருசா வால்போஸ்ட் — பேனர்லே போடணும் — கூட்டம் ஆகா ஓஹோன்னு அலை மோதும்" [58] என்று தேனப்பன் வருணிப்பது இதற்கு ஏற்ற சான்று. தமிழ்த் திரைப்படத்தை விமர்சிக்க முயலும் அவர், தம்முடைய பல கதைகளில் ஆபாசத்தைக் கலப்பதை எண்பத்திரண்டில் வெளியான அவருடைய இரு தொகுப்புக்கள் காட்டும்). இக்கதைகளை இதழ்கள் எந்த வாசகர்க்காக வெளியிடுகின்றன என்ற நோக்கமின்றி உற்பத்தி செய்கின்றன. எனவே, அதற்கு ஏற்ப, சனரஞ்சக இதழ்களில் எழுதிப் பெயர் பெற்ற எழுத்தாளரும், அவருடைய புதிய சீடரும் கதைகளை அவ்விதழ் விதிகளுக்கு ஏற்ப வாய்ப்பாட்டுக் கதைகளாக (formula stories) எழுதிக் குவிக்கின்றனர். சனரஞ்சக எழுத்துக்களில் கதைப்பின்னல் (plot) மரபு வழியான — சனரஞ்சக இதழ்களின் வாய்ப்பாட்டுக் கதைகளுக்கான — முறையில் நிகழ்ச்சிகளின் அடுக்கில் கதை பண்ணுவதாக இருக்கும். படிப்பவர்க்குப் பொழுதுபோக்கை நல்கும் ஒரே நோக்கில் இவை உற்பத்தி செய்யப்படும், இதனால்தான் 'ஆசிரியர் நடையில் சிறுகதைக்குத் தலைப்பு இடுவது முதல் ஆசிரியர் எடுத்துரைக்கும் நிலை முடியப் பல்வேறு நிலைகளில் இக்கதைகளில் பிறமொழிக் கலப்பு உள்ளது.[59] இக்கதைகள், இவற்றின் உள்ளடக்கம், வடிவச் சிதைவு, கலைத்திறன்களை நேர்வர ஆளாத தன்மை, மொழிக் கலப்பு (''செட்டியாரிடம் 'பிளாஷ் பேக்' கினாள் ஆச்சி"[60] என்று தேனப்பன் புதிய வாக்கிய அமைப்பை உருவாக்குவது. பத்திரிகைத் தமிழ் நடைக்கூறு) ஆகிய அனைத்தும் வெகுசன இதழ்களின் போக்கைப் புலப்

---

58. மேலது, ப. 27.

59. வேங்கடராமன், சு., ''எண்பத்தொன்றில் சிறுகதை'', எண்பத்தொன்றில் தமிழ், சுப்பிரமணியன், ச.வே., கடிகாசலம், ந., (ப. ஆ.), ப. 94.

60. தேனப்பன், வ., தவளைத் திருமணம், ''விறகில் உறங்கும் நெருப்புகள்'', ப. 24.

படுத்தும். இவை, தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு உதவுவன அல்ல.

சிறுகதை வாழ்க்கையின் வெளிப்பாடு. கண்முன் நாம் காணும் நடப்புச் சமூகத்தின் குரலாகச் சிறுகதைகளைப் படைத்து-அவற்றின் உள்ளடக்கம், வடிவம், கலைத்திறன் என்ற அனைத்து நிலைகளிலும் செம்மையுடையதாகப் படைத்து-அளிப்பவரே தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு உதவுபவர். வண்ணதாசன், மாலன், பிரபஞ்சன், அசோகமித்திரன் ஆகியோரும் இலக்கிய வீதி, இலக்கியச் சிந்தனை ஆகிய அமைப்புக்களின் வழி அறிமுகமான படைப்பாளரும் எண்பத்திரண்டில் தரமான கதைகளைத் தந்துள்ளனர். இவர்தம் கதைகளில் கதைப்பின்னல் நிகழ்ச்சிக் கோவையாக அமையாமல் புதுமையாக உள்ளது. மண்வாசனை, மனஉணர்வு, உளவியல், தத்துவச்சிந்தனை, உலகந் தழுவிய கண்ணோட்டம், அறிவியல் நுண்கலை உள்ளிட்ட பிறதுறை அறிவு என்ற பலவும் இணைந்து நுட்பமாக வருணிப்பதாக இவர் கதைகள் அமைகின்றன. தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் எண்பத்திரண்டின் பங்காக இவர்தம் கதைகள் பெருமை சேர்க்கின்ற நம்பிக்கை நமக்கு ஏற்படுகிறது.

# 30. வார இதழ்ச் சிறுகதைகள்

க. ரத்னம்

வார இதழ்கள் மிகுந்த சிறுகதை எழுச்சிக்கு வழி வகுத்துள்ளன. பரிசுப் போட்டிகள், பல புதிய எழுத்தாளர்களை அரங்கிற்குக் கொண்டு வந்துள்ளது. குட்டிக் கதைப் பெருக்கம் அமைந்தாலும், 'அந்தாதிச் சிறுகதை' போன்ற புதுமை முயற்சிகளும் உள. தலைப்பு, கரு, படம் கொடுத்து எழுதச் சொல்லும் நிலை பெருகியுள்ளபோதும் இது சிறந்த பயன் எதுவும் விளைவிக்க வில்லை. விகடன், இதயம் கல்கி, குங்குமம், குமுதம், கதிர், சாவி ஆகிய இதழ்கள், வழி 509 ஆசிரியரின் 1200—இற்கும் மேற்பட்டகதைகள் வெளிவந்தமைகுறிப்பிடத் தக்கது.

## போட்டியும், புதுமைப்படைப்புகளும்

ஆனந்த விகடன்: 1982—இல் ஆனந்த விகடனில் வெளியான சிறு கதைகள் 245. ஒரு பக்கக் கதைகள் 72; இரண்டு மூன்று பக்க அளவின 93. அவற்றினும் நீண்டவை 80.

மாணவர்க்கெனச் சில பக்கங்களை ஒதுக்கி அதில் பள்ளி, கல்லூரி மாணவரின் படைப்புக்களை மாணவர் பக்கம்' எனத் தனியே பிரசுரித்து வந்துள்ளது விகடன். மாணவர் படைப்புகளில் பெரும்பாலானவை சிறுகதைகளே. அருப்புக் கோட்டை தேவாங்கர் கல்லூரியைச் சேர்ந்த எஸ். முருகன், மாத்திரைக்கு அடிமையாகும் மாணவர் வாழ்வின் சோகத்தை 'நடுக்கம்' என்ற சிறுகதையில் சித்திரித்துள்ளார். அவரது இன்னொரு கதையான 'காயங்கள்' கொடுமை இழைக்கப்பட்ட ஒரு குழந்தை மனம், வஞ்சிக்கப்பட்ட ஒரு பெண்ணின் மனம், வாழ்வில் மன்னிப்பைப் பெற முடியாத ஒரு பேதை மனம் ஆகியவற்றில் பட்ட காயங்களின் அவலக் கோலத்தைச் சித்திரிக்கிறது. இளந்தலை முறையினரின் எதிர்காலம் பற்றிய கனவுகள் பெற்றோரின் நிகழ்காலப் போராட்ட ஓலத்தில் கலைந்து விடும்

யதார்த்த நிலையினைச் சித்திரிப்பது திருவண்ணாமலை அரசினர் கலைக் கல்லூரி மாணவி தி. திலகவதியின் ‘பகல் நேரக் கனவுகள்". அவருடைய இன்னொரு கதை, ‘ஆண்மை என்பது எதில்?" என்ற வினாவினை எழுப்பி அதற்கு விடையும் கூறு கின்றது. பெற்றோரின் பணத்தாசைக்கு அடிமைப் பட்டுத் தான் காதலித்து மணந்து கொள்ள விரும்பிய அத்தை மகள் பாரதி யைக் கைவிட்ட இளைஞனுக்குப் பாரதி வழி வந்த புதுமைப் பெண்ணாக ஆண்மை எது என்பதனை நெஞ்சில் படுமாறு உணர்த்துகிறார் அக்கதைத் தலைவி பாரதி. அதன் தரம் உணர்ந்து, கே. பிச்சாண்டி என்ற செங்கம் வாசகர், ‘‘ஆண்மை என்பது எதில்?’—தீபாவளி சிறப்பிதழில் வெளிவந்த மாணவர் சிறுகதைக்கு ஐ. எஸ். ஐ. முத்திரை அளிக்க வேண்டும் என 24—10—82 வாசகர் கடிதப் பகுதியில் பாராட்டியுள்ளார். வழக்கமாக எழுதும் எழுத்தாளரின் கதைகளை விட மாணவர் படைப்புக்கள் சிறந்த குறிக்கோள் உடையனவாக இருப்பது வருங்காலத் தமிழ்ச் சிறுகதைகள் தரமுடையனவாக அமையும் என்ற நம்பிக்கை யூட்டுவதாக உள்ளது.

ரூ. 500 பரிசு பெறும் அட்டைப்படச் சிறப்புச் சிறுகதைகள் விகடனின் இப்போதைய முத்திரைக் கதைகளாகத் திகழ்பவை. 1982—இல் மூன்று அட்டைப்படச் சிறப்புச் சிறுகதைகளைப் படைத்து முன்னணிச் சிறுகதை எழுத்தாளருள் ஒருவராகத் திகழ் பவர் அனுராதா ரமணன்.

அப்பா பேரு என்னடா குழந்தை?—17.1.82
ஆராதனை —30.5.82
வைபவம் காணாத வைதேகி—17.10.82

இந்த மூன்று கதைகளுமே சிறுவர் சிறுமியரை மையமாக வைத்து எழுதப்பட்டவை. சாதி, சமயம் போன்ற பாகுபாடு களை அறியாது ஒருமித்த மனப்பான்மையுடைய அவர்கள் நெஞ்சிலே பிரிவினைகள் என்ற நெருஞ்சியினை வளர்த்துப் பயிராக்குபவர் பெரியவர்களே என்பதனை இந்தக் கதைகள் தெளிவு படுத்துகின்றன.

மதுப்பழக்கத்தின் பிடியில் அகப்பட்டுத் துன்புறும் குடும்பங் களின் சித்திரமாக ‘யாருக்கும் நான் தேவையில்லே ஜோ... என்ற சிவசங்கரியின் அட்டைப்படச் சிறப்புச் சிறுகதை (25.7.85) அமைந்துள்ளது. மதுவிற்கு எதிராக மக்கள் கருத்தைத் திருப்பும் சிறப்பு இதழுக்குத் தகுதியான கதைதான் என்றாலும் 1.8.82

விகடனில் வாசகர் பகுதியில் ராமாபுரம் சந்துரு விடுத்திருக்கும்' ''மதுவின் இம்சையிலிருந்து 'அரிஸ்டோ கிராட்ஸ்' மட்டும் விடு தலையானால் போதுமானது என்று சிவசங்கரி எண்ணுகிறாரா? சமுதாயத்தின் கீழ் மட்டத்திலிருக்கும் சாதாரண மக்கள், தொழிலாளர்கள் ஆகியோர் மதுவில் சிக்கிச் சீரழிகிறார்கள். இவர்களை விடுவிக்கச் சிவசங்கரியின் கவனம் திரும்புமா?' என்ற கேள்வி நியாயமான கேள்வியே.

28.3.82 இதழில் வெளியாகியுள்ள 'கேதாரி'ன் 'ஓர் இசை யின் சரணம்' என்ற அட்டைப்படச் சிறப்புச் சிறுகதை பல வாச கரை வயிப்பில் ஆழ்த்தியக் கதையென்பதனை 'லெட்டர் பாக்' ஸில் பிரசுரமாகியுள்ள கடிதங்கள் மெய்ப்பிக்கின்றன. ஆசிரிய ரின் நோக்கத்தைப் புரிந்துகொண்டு, ''நமது சபாக்கள் எல்லாம் இசையின் தோஷ விகாரங்களுக்குப் பூச்சூட்டிக் களிக்கின்ற கயமையை அர்த்தத்தோடு சாடியிருக்கிறார்'' எனத் திருச்சி-18 சே. கோவலன் பாராட்டியிருப்பது அழகிய கலைப்படைப்பாக மட்டும் இல்லாமல் சிறந்த குறிக்கோளும் உடைய படைப்பு என்பதனைப் புரிந்துகொண்டு பாராட்டிய பாராட்டாகும்.

இன்றைய சமூகப் பிரச்சினைகளேயன்றி பழைய புராண இதிகாசங்களிலிருந்தும் புதுநோக்குடைய சிறந்த சிறுகதைகளை படைத்தளிக்கலாம் என்பதற்குச் சான்றாகத் திகழ்வது 26.12.82 இதழிலில் வெளியாகியுள்ள கே. சி. கிருஷ்ணனின் 'வேள்வி'. பரதனுடைய குண மேம்பாட்டினையும் தியாகப் பண்பினையும் இதிகாச காவியங்களின் விருத்தியுரைபோல அமைந்து விளக்கிச் சொல்லும் சிறப்பினை அக் கதையில் காண்கின்றோம். இது போன்ற படைப்புகளுக்கு இதழ்கள் சிறப்பிடம் தருமானால் மக்கள் பண்டை இலக்கியங்களில் அதிக நாட்டங் கொள்ள அது பேருதவியாக அமையும்.

24 சிறுகதைகளை ஒரே இதழில் வெளியிட்டு 21-3-82 இதழை ஒரு பக்கச் சிறுகதை மலராக வழங்கியுள்ளது விகடன் அனுராதா ரமணன், பாலகுமாரன், பி.வி.ஆர், லக்ஷ்மி, புஷ்பா தங்கத்துரை போன்ற முன்னணி எழுத்தாளர் எல்லாம் ஒரு பக்கக் கதை எழுதியுள்ளனர். விகடன் அவர்களை அணுகி இந்த மலருக்கு இது போன்ற சின்னஞ்சிறு கதை வேண்டும் எனக் கேட்டு வாங்கி இந்த மலரைத் தயாரித்திருக்க வேண்டும். எதிர்பாராத, வாசகரைத் திடுக்கிட வைக்கும் முடிவே பெரும் பாலான கதைகளின் உயிர்நாடியாக அமைந்துள்ளது.

12-12-82 விகடன் இதழ் பாரதி நூற்றாண்டு விழா நிறைவினை ஒட்டி மகளிர் சிறப்பிதழாக மலர்ந்துள்ளது. 'எங்கள் பாரத தேசமென்று...' என்ற பாரதியின் பாடல் வரியை தலைப்பாகக் கொண்டு கௌசலா ரங்கநாதம் அம்மலரில் படைத்துள்ள கதை பாரதி கனவு கண்ட பாரதம் இன்று எப்படிப் போய்க் கொண்டுள்ளது என்பதனைத் தெளிவுபடுத்தும் தேசியப் பிரச்சினையை முன் வைக்கும் பிரச்சினைக் கதையாக மலர்ந்துள்ளது.

தலைப்பில் ஓர் ஒற்றுமையைப் புகுத்தி 16-5-82 இதழில் 'ஹோட்டலில்', 'பிளாட்பாரத்தில்', 'வீட்டில்' 'இருட்டில்' என்ற தலைப்புக்களில் கதைகளை வெளியிட்ட விகடன் 23-5-82 இதழில் யார் என் பெயரை மாற்ற?' 'ஒரு கோயில் உண்டியலை நோக்கி ஓடுகிறார்கள்' 'என்னை அவமானப்படுத்தமாட்டேன்னு தெரியும்...'' என மிக நீண்ட தலைப்புகளிலான கதைகளை வெளியிட்டுத் தலைப்புப் புதுமை செய்துள்ளது.

அசோக்குமார், அல்லி உதயன், எம். ஏ. வின்சென்ட், எம். பானு, எஸ். என். ராஜா, எஸ். கனகவல்லி சாரங்கபாணி, ஏ.ஜி. மித்ரா சேகர். கண்ணன் பாலா, கற்றுக்குட்டி, குமுதா, கே. வெங்கட்ராம், கௌசல்யா ரங்கநாதம், சரோஜா ரங்கராஜன், சித்ரா ராமசாமி, ஞா. அரங்கசாமி, ஞானதீபன், டி. எஸ். ராமனுஜம், தமிழ்ச்செல்வி, தயாளன். தும்பூர் வைத்யநாதன், தே. ஞானசூரியன், ந. நீலகண்டன், மணிமொழியன், மிஸ்ஸிஸ்ஸிப்பி, விஜயன், ஜி. கடக்கரை போன்ற, சென்ற நான்கு ஆண்டுகளில் இங்குத்தொகுக்கப்பட்டுள்ள ஏழு வாரஇதழ்களிலும் தங்கள் கதைகளை வெளியிடாத புது எழுத்தாளர்களை வழக்கம் போல இந்த எண்பத்திரண்டிலும் அறிமுகப்படுத்தியுள்ளது. புதிதாகப் பேனாப் பிடிப்பவர்கள் உள்ளம் ஊக்கம் பெறும்படி செய்வதில் முன்னணியில் நிற்கும் இதழ் விகடன் என்பதனை நிரூபித்துள்ளது.

இதயம் பேசுகிறது: 1982-இல் இதயம் பேசுகிறது இதழில் வெளியான சிறுகதைகள் 143. ஒரு பக்கக் கதைகள் 22; இரண்டு, மூன்று பக்க அளவின 54; அதனினும் மேற்பட்ட பக்க அளவின 67.

82இல் இந்த இதழில் வெளியான கதைகளுள் குறிப்பிடத் தக்கவை 7-3-83 இதழில் தொடங்கிய அந்தாதிக் கதைகள். ஒரு கதையாசிரியர் தன்னுடைய கதையினை முடித்த இறுதி வாக்கியத்தினையே முதல் வாக்கியமாக அமைத்து இன்னொரு கதையாசிரியர் தன்னுடையக் கதையினைத் தொடங்குவார். வாக்கி

யங்களிடையேயுள்ள இந்த ஒற்றுமையைத் தவிர கதையின் கருவிலோ பாத்திரங்களின் படைப்பிலோ இக்கதைகளிடையே எவ்விதத் தொடர்பும் இல்லை உஷா ரகுநாதன், மணியன், இந்துமதி, எஸ். லட்சுமி சுப்ரமணியம, அனுராதா ரமணன், பால குமரன், சிவசங்கரி, தாமரைமணாளன், சுஜாதா ஆகிய வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான எழுத்தாளரின் படைப்புகள் என்பதனைத் தவிர இந்தக் கதைகளில் வேறு குறிப்பிடத் தக்க சிறப்பு ஏதும் இல்லை.

அந்தாதிக் கதைகளை அடுத்துத் திரைப்படத் துறையோடு தொடர்புடையவரைக் கொண்டு `சிறுகதை எழுதுவித்து வாசகரைக் கவர முற்பட்ட முயற்சி குறிப்பிடத் தக்கது. திரை யுலகச் செய்திகளின் கவர்ச்சியோடு அதனைச் சார்ந்தவரைக் கொண்டு படைப்பிலக்கியம் வழங்குவதும், கட்டுரைத் தொடர் எழுதச் செய்வதும் இன்றைய இதழ்களின் கவர்ச்சியூட்டும் மனப் பான்மையைக் காட்டுவது என்பதற்கு இது மேலும் ஒரு சான் றாகும். வியட்நாம் வீடு சுந்தரம், வினுசக்ரவாத்தி, காரைக்குடி நாராயணன், ஆர். செல்வராஜ், மகேந்திரன், ஆர்.கே. சண்முகம் ஆகியோர் ஜூன், ஜூலை இதழ்களில்சிறுகதை வழங்கிய திரைப் படத்துறையினராவர்.

1981-இல் 'உங்களுக்காக ஒரு போட்டி' என்ற தலைப்பில் இதயம் தொடர்ந்து வாரம் ஒரு வாக்கியமாகச் சில வாக்கியங் களை வெளியிட்டது; அந்தவாக்கியங்களைக் கதையில் இடையே அமைத்துச் சிறப்பாகப் படைக்கப்படும் சிறுகதைகள் பரிசுக்குரியன என்பதுதான், உங்களுக்காக ஒரு போட்டி என அறிவிக்கப்பட்ட போட்டியாகும். இந்தப் போட்டியில் பங்கு பெற்று வெற்றி பெற்றவரின் படைப்புக்கள் 1982-இல் பிரசுரமாகியுள்ளன. முதற்பரிசான ரூ. 750-ஐ 3-1-82 இதழில் வெளியான 'ஜெனமே ஜெய'னுடைய 'குறை' என்ற கதையும், இரண்டாம் பரிசான ரூ. 500-ஐ 10.1.82 இதழில் வெளியான 'திவ்யா'வினுடைய 'மௌனி' என்ற கதையும், மூன்றாம் பரிசான ரூ. 250-ஐ 24.1.82 இதழில் வெளியான மு. சண்முகத்தின் 'அன்பு நெஞ்சங்கள்' என்ற கதையும் பெற்றுள்ளன. இக் கதைகளிலும் கருவும், பாத்தி ரங்களும் வேறுபட்டனவாகவே உள்ளன எனினும் போட்டிக் காகத் தரப்பட்ட வாக்கியங்களை அவரவர் எடுத்துக்கொண்ட கதைக் கருவில் சந்தர்ப்பத்திற்கேற்பத் திறமையாக இணைத்துக் கதை புனைந்துள்ளனர் பரிசு பெற்ற எழுத்தாளர். இவருள் மூன்றாம் பரிசைப் பெற்ற மு. சண்முகம் ஆய்வுக்குரிய ஏழு

இதழ்களிலும் சென்ற நான்கு ஆண்டுகளில் வேறு கதைகள் ஏதும் எழுதாத அறிமுக எழுத்தாளர்.

எழுத்தாளர், தங்கள் படைப்புக்களால் படிப்பவர் மனத்தில் வாழ்வு பற்றிய அவநம்பிக்கையையும் விதைக்கலாம் நம்பிக்கையையும் மலரச் செய்யலாம் என்பதற்குப் பாரதியின் வாசகங்களான 'காதல் போயின் சாதல்', 'எல்லாம் இனிது' என்ற தலைப்புக்களைக் கொண்ட இதயம் கதைகளை எடுத்துக்காட்டலாம். ஒரே கருவினையும், பாத்திரங்களையும் கொண்டு இரு வேறு வகையில் புனையப்பட்ட கதைகள் இவை. 6.6.82-இல் வெளியான 'காதல் போயின் சாதல்' என்பதன் தொடர்ச்சியாக 22.8.82-இல் 'எல்லாம் இனிது' என்ற கதையினைப் படைத்துள்ளார், அமெரிக்காவில் வாழும் தமிழ் எழுத்தாளரான கீதா பென்னட். இவர் அமெரிக்காவில் வாழ்ந்தாலும் தமிழ்நாட்டுக் குடும்பங்களின் பிரச்னைக்குத் தன் கதைகளின் மூலம் தீர்வு காண முயன்றிருப்பது தனிச் சிறப்பாகும்.

ஓவியர், தூரிகையைக் கீழே வைத்துவிட்டுப் பேனாவைக் கையில் எடுத்தால் கற்பனை வளத்தோடு கதைகளையும் படைப்பர் என்பதனை நிரூபிக்க இதயம் அவர்களுக்கு வாய்ப்பு அளித்துள்ளது. பிரபல பத்திரிகைப் பட ஓவியரான மாயா, ஜெயராஜ், எஸ். மாருதி ஆகியோர் சிறுகதை படைப்புக்கள் இதயத்தில் வெளியிடப் பட்டுள்ளமை ஒரு புதுமை.

மாயா — ஓர் உயிர் ஓவியமாகிறது — 14.2.82
ஜெயராஜ் — சாவுக்கு ஒரு விசா — 21.2.82
எஸ். மாருதி —எங்கே சென்றாள் என் தேவதை?—27.3.82

என்பன அவர் படைப்புக்களும் அவை வெளியான இதழ்களுமாகும்.

30-8-81 இதழில் ஒரு அழகிய வண்ணப் புகைப்படத்தை வெளியிட்டு அதற்குப் பொருத்தமான ஒரு கதையினை அனுப்பும்படி அறிவிப்பையும் வெளியிட்டிருந்தது இதயம். உதகைச் சூழலில் அழகிய பள்ளத்தாக்கில் ஓரத்தின் ஒரு பெண் மணியும் அவளுடைய ஐந்து குழந்தைகளும் அமர்ந்திருப்பதான அந்தப் படத்திற்கேற்ற கதை, 1.8.82 இதழில் மீண்டும் புகைப் படத்தோடு வெளியாகியுள்ளது. 'அருக்காணி குடுமபத்திற்கு ஒரு ஆண் பிள்ளை' என்ற அந்தக் கதையை எழுதியவர் சாரதா விஸ்வநாத். குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரக் கதைபோல அமைந்த இந்தக் கதை முன்பே வரையப்பட்ட படங்களுக்கோ

எடுக்கப்பட்ட புகைப்படங்களுக்கோ பொருத்தமாகக் கதை எழுதுவது எவ்வளவு சிரமமானது என்பதனை நிரூபிப்பதாக உள்ளது.

சிறப்புச் சிறுகதை என மகுடமிட்டு நரசய்யா அவர்கள் எழுதிய 'வாரிசு' என்ற கதையினை 7-11 82 இதழில் இதயம் வெளியிட்டுள்ளது. இளைஞர்களுக்கே அறிவுரை கூறும் பாடங்களாக இக்காலத்தில் பெரும்பாலான கதைகள் அமையும்போது இந்தக் கதை வயதானவருடைய மனப்பான்மை எத்தகைய தியாக உணர்வு உடையதாக அமையவேண்டும் என்பதைச் சிறப்பாகச் சித்திரித்துள்ளது.

**கல்கி**

1982-இல் கல்கியில் வெளியாகியுள்ள கதைகள் 180. ஒரு பக்கக் கதைகளின் செல்வாக்கு கல்கியில் இல்லை என்பது, அவை ஒன்பதாக இருப்பதிலிருந்து தெளிவாகின்றது. இரண்டு மூன்று பக்க அளவின 107 கதைகள், நீண்ட கதைகள் 70.

ஆண்டு தோறும் கல்கி நடத்தும் 'கல்கி நினைவுச் சிறு கதைப் போட்டி'யில் பரிசு பெறும் கதைகளும் போட்டிக்கு வரும் கதைகளும் பிரசுரத்திற்கு உரியன எனத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளும் குறிப்பிடத்தக்கவை.

கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற கதைகளும் அவற்றை எழுதியவரும் வெளியான தேதிகளும்:

முதல்பரிசு ரூ. 1000: ஊமைச்சனங்களடி- "முருகு" 1. 8. 82.

இரண்டாம் பரிசு ரூ. 500: பொறம்போக்கு-பிரதிபா ராஜகோபாலன், 8. 8. 82.

மூன்றாம் பரிசு ரூ. 250: விடை இல்லாத விடுகதைகள். கோபினாத ஆத்ரேயன், 15. 8. 82.

மூன்றாம் பரிசு ரூ. 250: ஊற்றுக்கண்—ஆர். ஸி. சம்பத், 22. 8. 82.

வேலையில்லாத் திண்டாட்டத்தில் அவதிப்பட்ட இளைஞன் மேலதிகாரியின் அவமதிப்பைத் தாங்க இயலாது, தனக்குக் கிடைத்த வேலையினைத் தன்மான உணர்வோடு உதறி விட்டு பஸ்ஸில் சொந்த ஊருக்குத் திரும்பும் போது எண்ணும் எண்ணச் சிதறல்களாக அமைந்துள்ளது, முதல் பரிசுக்குரிய 'ஊமைச் சனங்களடி' கதை.

சாலையோரத்தில், பொறம் போக்கு நிலத்தில் கடைகள் வைத்து வாழ்பவரின் பிரச்சினையை, இரண்டாம் பரிசுக்குரிய

கதையான 'பொறம் போக்கு' அலசுகின்றது. அரசியல் சாயம் பூசிக் கொண்டு அப்பாவி மக்களின் வயிற்றில் அடித்து,புல்லுருவி களாக வாழும் ஒரு கூட்டமும் நம்மிடையே உண்டு என்பதனை யும் இது வெளிச்சம் போட்டுக்காட்டுகிறது. ஏமாற்றுபவரின் திறமையோடு, ஏமாறுபவரின் அப்பாவித்தனம் சிறந்த முரணாக இக்கதைக்கு மேலும் சிறப்பூட்டுகின்றது.

'விடை இல்லாத விடுகதை'களின் படைப்பாளர்ஒரு அறிமுக எழுத்தாளர். இதற்கு முன்எந்த இதழ்களிலும் இவர் படைப்புக் கள் வெளி வந்ததில்லை. புதிய எழுத்தாளர்க்கு ஊக்கம் தரும் வகையில் அவர் படைப்புக்களை தனியே பிரித்து, பரிசும் பாராட்டும் செய்யும் கல்கியின் இந்த முயற்சி பல இளைஞரின் வளர்ச்சிக்கு உதவும் எனப் பாராட்டலாம்.

மூன்றாவது பரிசு பெற்ற இன்னொரு கதையான 'ஊற்றுக் கண்'ணில் கொலைக்கு ஆளான கோயில் குருக்களின் மனைவி துளசி,அரசாங்கம் தனக்குத்தரப்போகும் தொகையான பத்தாயிரம் ரூபாயைத் தன் கணவனைக் கொன்ற தூக்குத் தண்டனை பெற்ற சங்கிலியின் குடும்பத்தின் துயரத்தைத் துடைக்க அளிப்பதாகப் படைக்கப்பட்டுள்ள தியாகச் சித்திரம் இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் சால்பின் ஊற்றுக் கண் இன்னமும் அடைபடவில்லைஎன்பதனை நிரூபிக்கும். துளசி போன்ற மூதாட்டிகள் நம்மிடையே இல்லாமல் இல்லை என்ற பெருமித வியப்புணர்வு கதையைப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் ஏற்படும்.

போட்டிக்காக வந்தக் கதைகளுள் பிரசுரத்திற்காகத் தேர்ந் தெடுக்கப்பட்டு 1982 கல்கி இதழ்களில் பிரசுரிக்கப்பட்டவை.

1. எஸ். சகுபர் ஷாதிக், உயிர்—12. 9. 82

2. மார்ஷல், இது வேறு பாஷை—19. 9. 82

3. அர. நாகராஜன், ரோஷங்கள்—26. 9. 82

4. கிருஷ்ண குரு, இவர்கள் இந்நாட்டு மன்னவர்கள்—3. 10. 82.

5. 'நினைவுகள்' வசந்தி, இன்னும் என்ன தாமதமடி?—10. 10. 82

6. டி. நாராயண மூர்த்தி, குழந்தை பெற்றுக்கொள்ள ஒரு பர்மிட்—17. 10. 82

7. "ரோஹிணி", நீ வருவாய் என... 24. 10. 82

8. ஞா. செல்வராசன், குயிலம்மா—31. 10. 82

9. "ஜே", நான் எங்கே? அவள் எங்கே?—14 11. 82

10. பொன்னித்துறைவன், தெய்வாம்சம்—21. 11. 82

11. கோமகள், சந்தேகத்துக்கப்பால்—28. 11. 82

12. மெ. மெய்யப்பன், யார் வீட்டுப் பணம்?—1 . 12. 82

13. ஏ. ஏ. ஹெச். கே. கோரி, எக்ஸ் சமன் ஸிரோ—19. 12.82

பிற இதழ்களைப்போலவே 1982-இல் சிறுகதைகளை வெளியிடுவதில் கல்கியும் சில புதுமையான உத்திகளைக் கையாண்டுள்ளது.

31. 1. 82 இதழில் இந்தித் திரைப்படஸ்டில்களை வெளியிட்டு அதற்கான கதைகள் என ஆறு கதைகளை வெளியிட்டுள்ளது கல்கி. அந்த ஸ்டில்களுக்கும் கதைக்கும் சம்பந்தமில்லையாயினும் கதைகள் சிறப்பாக இருந்தன என கல்கத்தா வாசகர் கே. கே. பாலசுப்ரமணியன் பாராட்ட, அந்த இதழினைப் பற்றி "ஹிந்திப்படம் தமிழ்க்கதை பார்த்தேன், சசிக்கவில்லை. கதைகளைப் படிக்கும் ஆர்வமே இல்லை. ஏன் சார் இப்படி ஓவியர்கள் பிழைப்பைக் கெடுக்கிறீர்கள்?" என வட்ட மேஜையில் வயிற்றெரிச்சலைக் கொட்டியிருக்கிறார் விழுப்புரம் கே. எஸ். குமார் என்ற வாசகர்.

9.5.82, 16.5.82 கல்கி இதழ்களில் வெளியான சிறுகதைகளின் தலைப்புக்கள் பிரபல தமிழ் வார இதழ்களின் பெயர்களாக உள்ளன. அவற்றை எழுதியவர்களின் பட்டியலில் அனுராதா ரமணன், பாலகுமாரன், சிவசங்கரி போன்ற எழுத்தாளர் இடம் பெற்றிருப்பதை நோக்க இவை ஒரு திட்டத்தின் அடிப்படையில் எழுதுவிக்கப் பட்டவை என்பது தெளிவாகின்றது. கல்கி, விகடன், கல்கண்டு, இதயம், தாய், குங்குமம் கதிர், சாவி, குமுதம் எனத் தலைப்புப் பெற்றுள்ளன இக்கதைகள். தாய் என்ற வார இதழின் தலைப்புப் பெற்ற சிவசங்கரி எழுதிய கதை, பொது வாழ்வில் மோகங்கொண்ட ஒரு மேல் வர்க்கத்துத் தாய், அன்புக்காக ஏங்கும் தன் குழந்தை இந்துவின் மனத்தைப் புரிந்து கொண்டு அவள் கனவுகளையும் மலர்விப்பதாக அமைந்துள்ளது. இத்தகைய தலைப்பு உறவேயன்றி குறிப்பிட்ட வார இதழ்களுக்கும் கதைகளும் எத்தகைய உறவும் இல்லை.

29.8.82, 5.9.82 கல்கி இதழ்களில் வெளியான சிறுகதைகள் அரசியல் கட்சிகளின் தேர்தல் சின்னங்களான கை, தாமரை, கதிர்-அரிவாள், உதயசூரியன், ரோஜா, இரட்டை இலை, ஏர் உழவன், அரிவாள்-சுத்தியல், நட்சத்திரம் ஆகியவற்றைத் தலைப்புக்களாகக் கொண்டுள்ளன. இவையும் திட்டமிட்டு எழுதுவிக்கப்பட்ட கதைகளே. வேலையில்லாது திண்டாடும் இரண்டு இளைஞர் எப்பொழுதும் இரட்டை இலை போல ஒற்றுமையாக ஊரைச் சுற்றியபடி உள்ளனர். ஒரு பெண்ணின் காதலால் அவர்கள் நட்பு முறிந்து விடும் நிலையில், ஒரு பெரியவர் அவர்களுக்கு ஆபில் காபில் சகோதரர்களின் கதை யினைக் கூறி அவர்கள் மன விரிசலை நீக்கி, ஒன்றாக்குகின்றார். ஜே.எம்.சாலி எழுதியுள்ள 'இரட்டை இலை' என்ற தலைப்புக் கொண்ட இக்கதைக்கும் அரசியலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. மற்ற தேர்தல் சின்னக் கதைகளும் இத்தகைய பெயர்த் தொடர்பு மட்டும் உடையவைதாம்.

7.11.82 இதழில், அடிக்கடி நம் காதில் ஒலிக்கும் விளம்பர வாசகங்களைச் சற்று மாற்றி, ''தடங்கலுக்குச் சந்தோஷப் படுகிறோம்'', ''ஒரு மாடு ஒரு மரம்'', ''இந்தியனாக இரு இந்தியாவை வாங்கு'', ''எட்டுக்குமேல் எப்போதும்வேண்டாம்'' எனத் தலைப்புகளாகக் கொண்டு எழுதப்பட்ட நகைச்சுவைக் கதைகளை வெளியிட்டுள்ளது கல்கி. தொடர்ந்து 14.11.82 இதழில் 1982-இல் வெளியான படங்களான ''அக்னிசாட்சி'', ''டார்லிங், டார்லிங், டார்லிங்'', ''பரீட்சைக்கு நேரமாச்சு'' என்ற திரைப்படத் தலைப்புக்களைக் கொண்ட கதைகளை வெளியிட்டு 1982-ஐச் சிறுகதைத் தலைப்புப்புரட்சி ஆண்டாகக் கொண்டாடியுள்ளது கல்கி.

குங்குமம்

குங்குமம் இதழில் வெளியான கதைகள் 139. இவற்றுள் ஒரு பக்கக்கதைகள் 12. இரண்டு மூன்றுபக்க அளவிலானவை 56. எஞ்சிய 71 கதைகள் நீண்டவை. 'பெண் எழுத்தாளர்கள் வரிசை' எனத் தொடர்ந்து, முன்னர் பெண் எழுத்தாளர் எழுதிப் புத்தகத் தொகுதிகளில் இடம் பெற்ற 10 கதைகளை, மீண்டும் குங்குமம் 25.4.82 இதழில் தொடங்கி 15.8 82 இதழ் வரை பிரசுரித்துள்ளது. அந்தக்கதைகள் இதில் கணக்கில் சேர்க்கப்படவில்லை. 28-2-82, 7-3-82, 14-3-82 குங்குமம் இதழ்கள் ஹைதராபாத் சிறப்பிதழ்களாக வெளிவந்துள்ளன. அவற்றில் வெளியான தெலுங்கு மொழிபெயர்ப்புக் கதை களும் 16-5-82, 23-5-82, 30-5-82 கல்கத்தா சிறப்பிதழ்களில் வெளியான வங்காள மொழிபெயர்ப்புக் கதைகளும் இந்தக் கணக்கில் இடம்பெறவில்லை.

குங்குமம் தொடக்க நாளிலிருந்து வெளியிட்டு வந்த புது எழுத்தாளர் அறிமுகம் என்ற பகுதியை 1982-இல் நிறுத்தி விட்டது.

ஹைதராபாத், கல்கத்தா சிறப்பிதழ்களில் முறையே தெலுங்கு, வங்காள மொழிபெயர்ப்புக் கதைகளை வெளியிட்டதோடு அந்த நகரங்களில் வாழ்ந்துவரும் தமிழ் எழுத்தாளரின் கதைகளைப் பிரசுரித்துப் பிற மாநிலங்களில் வாழும் தமிழ் எழுத்தாளரைச் சிறப்பாக அறிமுகப்படுத்தியுள்ளமை ஒரு புதிய முயற்சி எனலாம். 'ரமேஷின்' 'கல்லறை நகரம்', இரா.மரியதாஸின் 'எந்தப் பெயரில் அழைத்தாலும்...', சுபஸ்ரீ யின் 'இடைவெளி', சாந்தாதத்தின் 'கைடு', ஸ்ரீதர் சுபஸ்ரீயின் 'அல்லுடு காவாலே' ஆகியவை ஹைதராபாத் நகரில் வாழும் தமிழ் எழுத்தாளர் படைப்புக்கள். எஸ்.கிருஷ்ணமூர்த்தியின் 'கூழ்-மீசை-புழு' கல்கத்தாவில் வாழும் தமிழ் எழுத்தாளரின் படைப்பு.

பிற மாநில எழுத்தாளரின் கதைகளுக்கு மட்டுமல்லாமல் பிறநாடுகளில் வாழும் தமிழ் எழுத்தாளரின் கதைகளுக்கும் சிறப்பிடம் தந்து பிரசுரிப்பது குங்குமத்தின் தனிச்சிறப்பு. அந்த வகையில் ஈழத்தமிழில் ஒரு சிறுகதை என, 1-8-82 இதழில், இலங்கையர் கோனின் 'வெள்ளிப் பாதசரம்' என்ற சிறுகதையை,

> ''ஈழத்து இலக்கியத்துறையில் முதல் தலைமுறை எழுத்தாளர்களில் முதன்மை வகித்தவர் இலங்கையர் கோன் ஆவார். ஈழத்தின் இலக்கிய கர்த்தாக்கள் யாவருக்கும் ஆரம்ப வழிகாட்டியாக அமைந்தவர். சமுதாயப் பிரச்சனை களை அடிப்படையாகக் கொண்டு கதைகளை எழுதுவதில் வல்லவரான இலங்கையர் கோன் அவர்களின் கதைகள் ஈழத்துப் பத்திரிக்கைகளில் மட்டுமல்ல கலைமகள், சூறாவளி, மணிக்கொடி, பாரதத்தாய், சக்தி, சரஸ்வதி ஆகிய தமிழகச் சஞ்சிகைகளிலும் வெளிவந்துள்ளன. 1961 ஆம் ஆண்டு இந்த அருங்கலை விநோதர் மறைந்துவிட்டா ராகிலும் இன்னமும் அவரின் கதைகள் ஈழத்தில் சிரஞ்சீவி யாக இருக்கின்றன''

என்ற அறிமுகத்தோடு வெளியிட்டுள்ளது. இந்த அறிமுகமும் கதையும், பிறநாட்டு எழுத்தாளரின் படைப்புக்களை ஆய்வோர்க்குப் பயனுடையனவாகும். மறைந்த இந்த ஈழ எழுத்தாளரின் கதையே யன்றி வாழும் எழுத்தாளர் 'தமிழ்ப் பிரியா' வும் எழுதியுள்ளார். இவர் பழக்கமாகத் தன்னுடைய கதை

களைக் குங்குமத்தில் எழுதிவருபவர். 20-6-82 இதழில் வெளி வந்துள்ள 'மௌனங்கள் சாக வேண்டும்' என்ற இவருடைய சிறுகதை வரதட்சணைக்கு எதிரான எழுச்சிக்குரல்தமிழர்வாழும் கடல்கடந்த நாடுகளிலும் ஒலிக்கத் தொடங்கியுள்ளதை உணர்த்துவதாகும்.

மதுப் பழக்கத்தின் கொடுமைகளைக் கருவாகக் கொண்ட சில கதைகள் 82 குங்குமம் இதழ்களில் சிறப்பிடம் பெற்றுள்ளன. 4-4-82 இதழில் டி. மல்லிகா எழுதியுள்ள 'நீதி' என்ற சிறுகதை, 'குடி குடியைக் கெடுக்கும்' என்ற நீதியை அறிமுகவுரையாகத் தலைப்புத் தந்து பிரசுரிக்கப்பட்டுள்ளது. 'கல்மண்டபங்கள்', 10-1-82 இதழில் இடம் பெற்றுள்ள நீண்ட கதை. கள்ளமது விற்கு அடிமைப்பட்ட ஏழைகளின் துயரத்தை சி. ஏ. பாலன் இதில் உள்ளத்தைத் தொடும் வகையில் சித்திரித்துள்ளார். சென்ற நான்கு ஆண்டுகளில் இந்த ஏழு இதழ்களிலும் இவருடைய வேறு கதைகள் பிரசுரமாகவில்லை என்பதைப் பார்க்கும் போது இவர் அறிமுக எழுத்தாளர் அல்லது அபூர்வ மாகவே எழுதும் எழுத்தாளர் பட்டியலில் இடம் பெறத்தக்கவர் என்ற உண்மையும் தெளிவாகின்றது.

## குமுதம்

1982-இல் குமுதத்தில் வெளியான கதைகள் 201. ஒரு பக்கக்கதைகள் 28; இரண்டு மூன்று பக்க அளவின 96; அதனினும் நீண்டவை 77. ஓரங்க நாடகங்களோ, இன்றைய முன்னணி எழுத்தாளர் தேர்ந்தெடுத்துக் கொடுத்துப் பிரசுர மான பழம்பெரும் எழுத்தாளரின் கதைகளோ இதில் அடங்காது.

எப்பொழுதுமே புதுமைகள் செய்வதில் புதுவழி காட்டும் குமுதம் 82-இல் இளமைக்கதைகளை வெளியிட்டுப் புதுமை செய்துள்ளது. 1-4-82 இதழில் வாரத்திற்கு ஓர் இளமைக்கதை பதினொரு புகழ்பெற்ற எழுத்தாளரால் எழுதப்பெறும் என்றும் அதில் மிகச் சிறந்ததென எதனை வாசகர் தேர்ந்தெடுக்கிறார் களோ அந்தக் கதைக்கு ரூ 5000 பரிசு வழங்கப்படும் என்ற அறிவிப்பைக் குமுதம் வெளியிட்டது.

| | கதை ஆசிரியர் | இளமைக்கதை | வெளியான இதழ் |
|---|---|---|---|
| 1. | அனுராதா ரமணன் | மேடை ராஜாக்கள் | 15-4-82 |
| 2. | ஹேமா ஆனந்த தீர்த்தன் | பெட்டர் லேட் தேன் நெவர் | 22-4-82 |
| 3. | பாலகுமரன் | சுழல் பந்து | 29-4-82 |
| 4. | கோவி. மணிசேகரன் | ஆ! அந்த ஒரு நிமிஷம் | 6-5-82 |
| 5. | சு. சமுத்திரம் | ஒரு காதல் கடிதம் வந்த போது! | 13-5-82 |
| 6. | ஆதவன் | காதலின் முகங்கள் | 20-5-82 |
| 7. | புஷ்பா தங்கத்துரை | வனிதா என்னைத் தொட்டுவிடு | 27-5-82 |
| 8. | அழகாபுரி அழகப்பன் | ஒரு பஸ் நிற்க மறுக்கிறது | 3-6-82 |
| 9. | ஜெயந்தன் | குணா லட்சுமி | 10-6-82 |
| 10. | அசோகமித்திரன் | கண்ணும் காதும் | 17-6-82 |
| 11. | சிவசங்கரி | ஸ்டெப்னி | 24-6-82 |

தொடர்ந்து வெளியான இந்த இளமைக் கதைகள் வாசகரிடையே பரபரப்பூட்டின. "அப்பட்டமான செக்ஸ் கதைகளுக்கு 'இளமைக்கதை' என்ற முகமூடி மாட்டி வாராவாரம் குமுதத்தின் தரத்தினைக் குறைத்துக் கொண்டே போகிறீர். குமுதத்தைச் சிறுசுகளும் படிக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும்" என இளமைக்கதைகளை 27-5-82 இதழில் வாசகர் கடிதத்தில் சாடியுள்ளார் திருநின்றவூர், சைமன். இதில் உண்மை இல்லாமல் இல்லை. எனினும் வாக்காளாரைக் கவர்ந்தது தமிழகக் கிராம மக்களின் பிரச்சினை ஒன்றினை முன் வைத்து, ஒரு இளைஞன் போராடியதாக அழகாபுரி அழகப்பன் எழுதிய 'ஒரு பஸ் நிற்க மறுக்கிறது' என்ற சமூகப் பிரக்ஞையுள்ள கதை யென்பதை அதற்கு 4736 வாக்குகள் அளித்துப் பரிசுக் குரியதாக அவர்கள் தேர்ந்தெடுத்தது மெய்ப்பித்துள்ளது. சிவசங்கரியின் 'ஸ்டெப்னி' 3393 வாக்குகள் பெற்று இரண்டாவது இடத்தையும் அனுராதா ரமணனின் 'மேடை ராஜாக்கள்' 1472 வாக்குகள் பெற்று மூன்றாவது இடத்தையும் பெற்றுள்ளன.

தொகுதிகளில் நூலாக வெளிவரும் சிறுகதைகளுக்கும் இதழ்களில் வெளியாகும் சிறுகதைகளுக்கும் உள்ள சிறப்பான வேறுபாடு இதழ்க்கதைகளுக்காக வரையப்பட்டு கதையோடு பிரசுரமாகும் படங்களே. இந்தப் படங்கள் கதைகளுக்குக்

கவர்ச்சியூட்டுவதோடு கதைகளின் பாத்திரங்களை வாசகர் விரைந்து மனத்தில் பதித்துக் கொள்ளவும் உதவுகின்றன. வாசகர் இந்தப் படங்களையும் ஊன்றிக் கவனித்து விமர்சிக்க வும் செய்கின்றனர். 13-5-82 குமுதம் இதழில் வெளியான 'எதிரில் வந்த எதிரி' என்ற கதைக்கான படத்தைச் சங்கரம் பந்தலிலிருந்து ஆ. உலகநாதன் என்ற வாசகர், "ஏனய்யா! கதைக்கும் படத்திற்கும் சம்பந்தம் வேண்டாமா? குருக்கள் மகள் கை பின்புறம் கட்டியிருக்கும் போது எப்படி எழுந்து வந்து குருக்களை அவிழ்த்து விடமுடியும்? வாயில் துணி கொண்டு கட்டியிருக்கும் போது 'அப்பா!' என அலற முடியுமா?" எனப் படத்துக்கும் கதைக்கும் உள்ள முரண்பாடுகளைச் சுட்டிக்காட்டி யுள்ளார். படங்கள் சிறப்பாக அமையும் போது அவற்றைப் பாராட்டி, "பருப்புத் துவையலும் பூல்பூல் சன்னாவும்' கதைக் கான படத்தில் ரொட்டி பன் கடலை இவை தத்ரூபமாக இருந்தன. பார்க்கும் போதே நாக்கில் நீர் ஊறியது" என்று திருவாரூர் என். நம்பி பாராட்டி எழுதியதைப் போல் எழுதவும் செய்துள்ளனர்.

"உன்னுடைய எதிர்காலத்தில் நல்ல மாறுதல் ஏற்பட இருக் கிறது. பழகியவர்களை மறக்காதே."

"எதையும் ஆத்திரப்பட்டுச் செய்து விட்டுப் பிறகு யோசிக் காதே. அதனால் நீ தான் கஷ்டப்பட வேண்டிவரும்."

"உன்னிடத்தில் நல்ல நிர்வாகத் திறன் உண்டு. ஆனால் பிறர் சொல்லைக் கேட்டு ஏமாறாதே".

மேற்கண்ட அறிவுரைகள் எடை அறிவிக்கும் அட்டைகளில் காணப்படும் வாசகங்கள். இந்த வாசகக் கருத்துக்களைக் கருவாகக் கொண்டு எழுதப்பட்ட மூன்று கதைகளை 30-9-82 இதழில் குமுதம் பிரசுரித்துள்ளது. ஜே. எம். சாலி கோமகள், கமலா சடகோபன் ஆகியோர் மேற்கண்ட கருவினை அமைத்துக் கதைகளைப் படைத்துள்ளனர். எடை அறிவிக்கும் அட்டையின் வாசகங்களும் அவற்றின் அடிப்படையில் எழுதப்பட்ட கதை களும் இயைந்தனவாக அமையாமல் எண்ணெய்யும் தண்ணீரும் போலப் பிரிந்தே நிற்கின்றன. செயற்கையான படைப்பு முயற்சி களில் இது போன்ற இடர்ப்பாடுகள் இயல்பானவையே.

பெங்களூரில், திருச்சியில், ஸ்ரீரங்கத்தில், பீஜப்பூரில், ராஜ பாளையத்தில் என ஐந்து ஊர்களைத் தலைப்பாகக் கொண்டு எழுதப்பட்ட ஐந்து சிறுகதைகளை 14-1-1982 இதழில் குமுதம் வெளியிட்டது. இந்தக் கதைகள், தலைப்புக்குரிய ஊரிலே நடை

பெறுகின்றன என்பதனைத் தவிர அந்தத் தலைப்புக்களுக்கும் கதைகளுக்கும் சிறப்பான தொடர்பு ஏதும் இல்லை. ராஜேந்திர குமார், தமிழினியன், எம். கே. நாராயணன், ப. மு. இளங்குமாரன், வி. உஷா ஆகியோர் எழுதியுள்ள இந்தக் கதைகள், வழக்கமாகக் குமுதம் வழங்கும், ஒரு அசுபப்பிரசவம், ரூட் மாறிய குடிகாரன், வேண்டாம் நான்காவது குழந்தை போன்ற தலைப்புக்களைப் பெறுவதற்குரியன. பெண்களின் பிரசவம் பற்றிய அச்சம், குடிகாரன் திருந்துவது, குடும்பக் கட்டுப்பாடு போன்ற பிரச்சினைகளைக் கருவாகக் கொண்டு எழுதப் பட்டவையே இவை.

குமுதம் சிறுகதைகளின் தலைப்புக்கள் வழக்கமாக அமையும் தலைப்புக்களைப் போல அமையாமல் புதுமையான போக்கு டையனவாக அமையும் இயல்புடையவை.

| | |
|---|---|
| அடுத்த வாட்டி நீ வர்றப்ப | 7-1-82 |
| எடுத்ததை எடுத்த இடத்தில் | 28-1-82 |
| ராஜசேகரின் வயிற்றில் ஒரு குழந்தை | 14-3-82 |
| அரைமணிக்கு கால் ரூபா | 2 -4-82 |
| கால் ரூபாய்க்கு மேல் போடாதே | 29-4-82 |
| தவறு செய்து அடையாளம் காட்டுங்கள் | 11-5-82 |
| சைதாபேட்டை கனகாபாய் அவர்களே! | 11-11-82 |
| தப்பாய் நினைக்காமல் இருந்தால் சரி | 16-12-82 |

என, செய்தித்தாள்களின் செய்தித் தலைப்புக்கள் போல படிப் பவர் ஆர்வத்தைத் தூண்டுவன வாக அமைபவை.

### தினமணி கதிர்

தினமணிகதிரில் 1982-இல் வெளியான சிறுகதைகள் சுமார் 140. அவற்றுள் ஒரு பக்கக்கதைகள் ஒன்றிரண்டே. இது மற்ற இதழ்களைப் போல எதிர்பாராத முடிவுகளையே கதையின் உயிராகக் கொண்டிலங்கும் ஒரு பக்கக் கதைகளிலே கதிருக்கு நாட்டமில்லை என்பதனைத் தெளிவு படுத்துகின்றது. இரண்டு மூன்று பக்க அளவிலான கதைகள் 37. இவையும் பிற இதழ் களின் இந்த அளவினவான கதைகளோடு ஒப்பிடும் போது எண்ணிக்கையில் குறைந்தனவே. சுமார் 100 நீண்ட கதைகளைக் கதிர் வெளியிட்டுள்ளது. இவைகளில் பல குறிப்பிடத்தக்கன வாக, இன்றைய சமூகப் பிரச்சினைகளை அலசி ஆராயும் இயல்பினவாக அமைந்துள்ளன.

8-1-82 இதழில் கி.ராஜநாராயணன் படைத்துள்ள 'அவுரி', விவசாயிகள் தங்கள் விளைபொருள்களின் விலை திடீர் எனச்

சரிந்து விடுவதால் பல ஆண்டுகளில் உழைப்புக்கு உரிய பயனைக் கூடப் பெற முடியாமல் திண்டாடும் நிலையினை இயல்பாகச் சித்திரிக்கின்றது.

26-2-82 இதழில் வெளியாகியுள்ள நட்சத்திரச் சிறுகதை யான 'தர்மமிகு சென்னை' சென்னையில் பத்திரிக்கை உலகில் தர்மங்கள் படும் பாட்டினைத் தெளிவு படுத்தும் உண்மைகளின் படப்பிடிப்பு. அதே இதழில் வெளியாகியுள்ள பிரதிபா ராஜ கோபாலனின் 'தொடுவானத்தைப் பிறகு தொடலாம்!' பட்டணங்களில் தர்மத்தின் வேரில் புழு விழுந்தாலும் தமிழகத்து கிராமங்களில் ஆங்காங்கே தர்மம் துளிர்விட்டு வளர்ந்தபடி இருப்பதைப் படம்பிடித்துக் காட்டும் கிராமியக்கதை.

22-1-82 இதழில் அனுராதா ரமணன் படைத்துள்ள 'சிசுஹத்தி' மனிதாபிமான அடிப்படையில், அவர் 82-இல் படைத்துள்ள பல கதைகளுக்கும் முரண்பட்டதாகக் கணவன் கொடுமையால் வெறி கொண்ட ஒரு மனைவி அவன் விபத்தில் உயிர் துறந்தபின் தன் வயிற்றில் வளரும் அவன் நினைவான கருவையும் அழித்துக் கொள்வதான புரட்சிப் படைப்பு.

26.3.83 கதிர் இதழை அலங்கரிக்கும் நட்சத்திரக்கதை 'மீனாக்ஷி' லா.ச.ராமாமிர்தத்தின் படையல். முதுமையின் பிரச்சினைகளை தனக்கே உரிய நினைவோட்ட உத்தியையும் உருவக உத்தியையும் கையாண்டு சிறந்தச் சித்திரமாகத் தீட்டி யுள்ளார்.

1.1.82 இதழில் நம் கவனத்தைக் கவரும் இன்னொரு நட்சத்திரக்கதை வையவனின் 'கவனிக்கிறார்கள்'. உலகம் என்பது நம்மைச் சுற்றியுள்ளவர்கள் என்றால், அந்த உலகம் நம்மைக் கவனிக்கிறது என்பதற்காக, நாம் நம் இயல்பான- நமக்கு மகிழ்ச்சி தரும் செயல்களில் எவ்வளவு தூரம் எப்படி விட்டுக் கொடுத்து வாழலாம் எனக் கோடிட்டுக் காட்டுகிறார் வையவன்.

19.3.82 இதழ் நட்சத்திரக்கதையில் 'தராசி'னைத் தூக்கிப் பிடிக்கிறார் ஜே.எம்.சாலி. போதிப்பவர் — சமுதாயத்திற்குத் தர்மமும் நீதியும் எடுத்துக் கூறுபவர்— எவ்வளவு புகழ் உடைய வராயினும் தங்கள் போதனைக்கேற்ற ஒழுக்க நெறியில் நிற்காது போனால், நேர்மையாளர் அவர் வேஷத்தைக் கலைக்க முற்படும்போது அவர் புகழ்த்தட்டுத் தாழ்ந்து கவிழ்ந்து விடும் என்பதனை நேர்மையான ஒரு எழுத்தாளனையும் போலியான ஒரு பேச்சாளரையும் பாத்திரங்களாகக் கொண்டு விளக்கியுள்ளார்.

12.2.82 இதழில் வெளிவந்துள்ள நட்சத்திரக் கதை நீல பத்மநாபனின் 'கண்'. நமது பல நோய்களுக்குக் காரணம் உடம்பன்று மனமே என்பதனை இக்கதை மூலம் தெளிவு படுத்துகிறார் ஆசிரியர். தனக்கு கண் கோளாறு இருப்பதாகத் தவித்துப் பல தொல்லைகளுக்கு ஆளான ஒருவன், மேல் நாட்டுக் கண் நிபுணர் அவன் கண்களில் எந்தக் குறையும் இல்லை என்று கூறி கண் தானம் செய்ய அவனுக்கு இசைவு தந்தவுடன் அவன் கற்பனைக் கோளாறுகள் நீங்கி விடுகின்றன என்பதே கண் கதையின் கரு.

5.3.82 இதழில் தி சா.ராஜுவின் 'பழைய வார்ப்புகள்' நட்சத்திரக் கதைத் தகுதிபெற்று அச்சேறியுள்ளது. தோல்வி யுற்ற காதலில் உள்ளம் வருந்தும் ஒரு ஆணும் பெண்ணும் புதிய உலகத் தொடர்பாலும் சமுதாயத்தகுதி உயர்வாலும் எல்லை மீறிச் செல்ல முற்படுகின்றனர். ஆனால் காவிரிக்கரைப் பண்பாட்டில் ஊறிய பழைய வார்ப்புகளான ரகுபதியும், கமலி யும் அந்த எல்லை மீறலுக்கு இடந்தராமல் பண்பாடு காக்கின்றனர் என்பதனை அழகிய கதையாகப் புனைந்துள்ளார் தி. சா. ராஜு.

சமூகப் பிரச்சினைகளை முன் வைத்து எழுதப்பட்ட நட்சத்திரக் கதைகளை மட்டும் வழங்காமல் சிரித்து மகிழ்வதற் குரிய நகைச்சுவைக் கதைகளையும் சற்று தாராளமாகவே வழங் கியுள்ளது கதிர். வ. தேவப்பனின் 'யாருக்கும் தெரியாத ரகசியம்' (7-5-82), கல்கிதாசனின் 'காலம் மாறுகிறது' (14-5-82), ஜி. நடராஜனின் 'அவஸ்தைக்கோர் ஆண்டு விழா' (30-4-82), எஸ். சங்கர நாராயணனின் 'த. ப. பி. இ. வ.' (9-4-82) போன்ற கதைகளை நகைச்சுவைப் படைப்புக்கு உதாரணமாகக் காட்டலாம்.

19-5-82 கதிர் இதழில் கலாமணியின் படைப்பான 'விளக்கு எரிந்து கொண்டிருந்தது' என்ற கதையினை 'வாசகர்களுக்கு ஒரு சவால்' என முடிவினைப் பிரசுரிக்காது முக்கால்வாசிக் கதையினை மட்டும் பிரசுரித்து "ஸ்ஸ்...இப்படி சஸ்பென்ஸில் விட்டுவிட்டாரே ஆசிரியர் எழுத்தாளர் யரேனும் தொடருங் களேன்" என்று கதிர்த்தும்பி சவால் விட்டுள்ளது. விமலா வித்யாவும் கல்கிதாசனும் சவாலை ஏற்றுக்கொண்டு இருவேறு கோணங்களில் "அவள் மாலையானாள்" என்ற தலைப்பிலும் 'ஆரம்பம் கொஞ்சம் அச்சத்திலே' என்ற தலைப்பிலும் தொடர்ந்து எழுத அக்கதைகள் 25-6-82 இதழில் இடம் பெற் றுள்ளன.

30-7-82 இதழில் ஜே. எம். சாலி படைத்துள்ள 'ஓர் இரவு' ரம்சான் மாதக் கதையாகச் சிறப்பு அறிமுகத்தோடு பிரசுரம் செய்யப்பட்டுள்ளது வேறு இதழ்களில் காணப்படாத புதுமை.

**சாவி**

1982-இல் சாவியில் வெளியான சிறுகதைகள் 170. இவற்றுள் 50 கதைகளே மூன்று பக்க அளவிலும் நீண்ட கதைகள். இரண்டு மூன்று பக்கக் கதைகள் 90. ஒரு பக்கக் கதை மோகம் கொண்ட இதழ்களுள் சாவியும் ஒன்று. 15-8-82 இதழில் பத்து ஒரு பக்கக் கதைகளை வெளியிட்டு அதனைச் சின்னஞ்சிறு சிறுகதை மலராகத் தந்துள்ளது. வழக்கமாக நீண்ட கதைகளை எழுதும் அசோகமித்திரன், ராஜேஷ்குமார் போன்ற எழுத்தாளரும் இந்த ஒரு பக்கக் கதைப் படைப்பாளர் வரிசையில் இடம் பெறுகின்றனர். சின்னஞ்சிறு கதைகளின் செல்வாக்கினைச் சாவி அறிவித்த 'இரண்டு பக்கச் சிறுகதைப் போட்டி'யும் மெய்ப்பிக்கின்றது. அதில் பரிசு பெற்ற அன்பிற்கினியவனின் படைப்பான 'அழகி' என்ற கதையும் இந்த இதழிலே இடம் பெற்றுள்ளது.

சாவி பிரபலமான எழுத்தாளரைக் கொண்டு சிறுகதை எழுதுவித்து அதனைத் தொடர்ந்து வாரம் ஒன்றாக 'மணிக் கதைகள்' என்று மகுடம் சூட்டி 5-9-83 இதழில் தொடங்கி ஒன்பது இதழ்களில் வெளியிட்டுள்ளது.

ஆர். சூடாமணி—ரோஜாப் பதியன்கள்
அசோகமித்திரன்—விரல்
வாஸந்தி—ஜுடாஸ்கள்
பட்டுக்கோட்டை பிரபாகர்—ஒரு காந்தமும் இரு இரும்புத் துண்டும்
ஆதவன்—அன்னை வடிவமடா!
ராஜேஷ்குமார்—விழுதுகள்
ஜெயந்தன்—வேறு சுல்தான்
அமுதவன்—ஞானம்
அனுராதா ரமணன்—ஞானஸ்நானம்

என்பவை மணிக்கதை எழுத்தாளரும் அவரின் படைப்புக்களும் ஆகும். இவை வழக்கமாக வெளியாகும் கதைகளைவிட அளவில் சற்று நீண்டும் தரத்தில் சிறிது உயர்ந்தும் அமைந்து விட்டதால் வாசகரின் கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பேதுமில்லை. ''ஆதவனின் 'அன்னை வடிவமடா!' அதி அற்புதம்! மணிக்கதை வரிசையில் தொடர்ந்து மணியான கதைகளே வெளியாகின்றன'' என எச். எச். ஹரிஹரன்,

மதுரையிலிருந்தும், ''ஜெயந்தன் எழுதிய மணிக்கதை 'வேறு சுல்தானை'ப்படித்து முடித்ததும் கிராமத்து மண் வாசனை நாசியை நெருடிச் சென்றது" என ஏ. சாகுல் அமீது, உடுமலைப் பேட்டையிலிருந்தும், ''மணிக்கதை வரிசையில் இவ்வாரம் இடம் பெற்ற ராஜேஷ்குமாரின் கதை என் மனத்தை ஊடுருவி அடிமனத்தைத் தொட்டது'' என என். ஜானகி, சென்னையிலிருந்தும் எழுதியிருக்கும் இரண்டு வரி வாசகர் விமர்சனங்கள் மணிக்கதைகள் மணியான கதைகளாக வாசகர் மனதில் இடம் பெற்றவை என்பதனைத் தெளிவாக்குகின்றன.

வழக்கத்திற்கு மாறாகப் புதுமை செய்து வாசகர்களைக் கவரும் வகையில் சாவியில் 1982-இல் சிறுகதைகள் வெளி வந்துள்ளன. 'ரொம்ப நாள் ஆசை' என்ற தலைப்பில் பலர் தங்கள் ஆசையினைத் தொடர்ந்து சாவியில் வெளியிட்டனர். அவருள் ரோஸிட்டா மோகன், 'தான் எழுதும் கதை சாவியில் வெளியாக வேண்டும்' என்ற தன் ஆசையினை வெளியிட்டிருந் தார். அவர் தன் ஆசையினை நிறைவேற்றிக் கொள்ளச் சாவி வாய்ப்பு அளித்தது. அவர் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தன்னுடைய தோழியின் வாழ்க்கையில் நடந்த ஓர் உண்மைச் சம்பவத்தை 5-12-82 இதழில் 'மாட்டேன் என்றா சொல்வாய்?' என்ற தலைப்பில் சிறுகதையாக்கியுள்ளார். இயல்பான உரையாடல்களும் தெளிவான கதைப்போக்கும் கொண்ட அக்கதையில் அனுபவம் மிக்க எழுத்தாளரின் முத்திரை பளிச்சிடுகின்றது.

பண்டைய புலவர்,வெண்பாவின் முதலும் முடிவும் கொடுத்து பாடல் அமைக்க வேண்டியதைப் போல், இன்றைய பத்திரிக்கையாசிரியர்கள்,ஒரு படத்தையோ, விசித்திரமான தலைப்பையோ கொடுத்துக் கதை படைக்கும்படி, எழுத்தாளர் வாசகர்க்குச் சவால் விடுவது வழக்கமான ஒன்று. 'குல்லாவுக்கு ஏற்ற தலை' என்ற தலைப்பில் ஒரு படத்தை வெளியிட்டு அந்தப் படத்திற்கான கதையினை எழுதும் படி கேட்டிருந்தது சாவி. 'ஷா' என்ற புனைப்பெயரில் ஒரு புதிய எழுத்தாளர் 'மும்தாஜ்-சங்கர்' என்ற தலைப்பில் 10-1-82 இதழில் அப்படத்திற்கான கதையினை எழுதியுள்ளார்.

ஒருவர் கதைக் கருவினைத்தர அதனை இன்னொருவர் கதையாகப் படைக்கும் புது முயற்சியில் பிறந்த கதை 'நிலா மட்டும் துணையாக...' என்ற தலைப்பில் 3-1-82 இதழில் வெளியான சிறுகதை. கருக் கொடுத்தவர் ஆர். சேகர்; கதை படைத்தவர் மௌனா சந்தர்.

'வழக்கமாக ஜோக் எழுதும் வெ. சீதாராமன்' எழுதிய கதை என்ற அறிமுகத்தோடு ஜோக் எழுத்தாளர் வெ. சீதாராமனின் 'இந்தாங்க மேடம்' என்ற கதையினை 14-3-82 இதழில் வெளியிட்டுள்ளது சாவி. டாக்டர் இரா. தண்டாயு தத்தின் 'புதிய அர்த்தங்கள்' என்ற உண்மைக்கதை மலேசியா மண் வாசனையுடையது. ஜோக் எழுத்தாளர்க்கு மட்டுமன்றி தமிழ்ப் பேராசிரியர்க்கும் இன்றைய பத்திரிகைகளில் இடமுண்டு என நிரூபிக்கும் வகையில் 4-4-82 இதழில் சாவி அதனை வெளி யிட்டுள்ளது.

ஊதா, கறுப்பு, நீலம், பச்சை, வெள்ளை, சிவப்பு, மஞ்சள் என்ற வண்ணங்களை முறையே பூ, ஆடு, கல், ரத்தம், வயல்கள், விளக்கு, பத்திரிக்கை என்பனவற்றோடு இணைத்துத் தலைப்புத் தந்து அந்தத் தலைப்புக்களில் சிறந்த கதைகளை எழுதி அனுப்பு பவர் நூறு ரூபாய் பரிசு பெறுவர் என அறிவித்தது சாவி. வானவில் சிறுகதைப் போட்டி எனப் பெயரிடப்பட்ட இதில் பரிசு பெற்றவரும் கதைகள் வெளியான இதழ்களின் தேதிகளும் வருமாறு :

| | | |
|---|---|---|
| ஜெகதா | ஊதாப்பூ | 18-4-82 |
| ராமாபுரம் சந்துரு | கறுப்பு ஆடு | 2-5-82 |
| ராஜா ரங்கராஜன் | நீலக்கல் | 9-5-82 |
| மது ராஜேந்திரன் | மஞ்சள் பத்திரிக்கை | 16-5-82 |
| தஞ்சை குமார் | பச்சை ரத்தம் | 23-5-82 |
| சாருப்ரபா சுந்தர் | வெள்ளை வயல்கள் | 30-5-82 |
| பி. எம். மதியழகன் | சிவப்பு விளக்கு | 6-6-82 |

கதைத் தலைப்புக்களில் உள்ள வண்ணக் கவர்ச்சி இந்தத் தலைப்புக்களில் அமைந்த கதைகளில் அமையாது போனதற்குக் காரணம் செயற்கையான தலைப்புக்களுக் கேற்பக் கரு அமைந்த கதைகளைப் படைப்பதில் உள்ள தொல்லை என்றே கொள்ள வேண்டும்.

### சிறுகதைப் படைப்பாளரின் பட்டியல்

குறிப்பு: எழுத்தாளரின் பெயருக்கு அடுத்துள்ள எண்களில் முதல் எண் இதழையும் அடுத்த எண் 1982-ஆம் ஆண்டில் அது எத்தனையாவது வாரத்திற்குரிய இதழ் என்பதனையும் குறிக்கும்.

இதழுக்குரிய எண்கள்:

1. ஆனந்த விகடன், 2. இதயம் பேசுகிறது, 3. கல்கி, 4. குங்குமம், 5. குமுதம், 6. தினமணி கதிர், 7. சாவி.

(எ.டு) அசோகமித்திரன் பெயருக்கு எதிரில் உள்ள எண் விளக்கம்.

2-21 இதயம் பேசுகிறதில் 1982-இல் 21 ஆவது வார இதழில் சிறுகதை படைத்துள்ளார் என்பதைக் குறிக்கும்.

5-24 குமுதத்தில் 1982-இல் 24 ஆவது வார இதழில் சிறுகதை படைத்துள்ளார் என்பதனைக் குறிக்கும்.

7-33 சாவியில் 1982-இல் 33 ஆவது வார
7-36 இதழிலும் 36 ஆவது வார இதழிலும் கதை படைத்துள்ளார் என்பதனைக் குறிக்கும்.

1. அகத்தியன் 3-45
2. அசோக்குமார் 1-46
3. அசோகமித்திரன் 2-21, 3-34, 3-37, 5-24, 7-33, 7-37
4. அடியார்க்கு நல்லான் 4-41
5. அதிலை ரத்னசாமி 8-21
6. அப்துல் கரீம்.மு. 4-51
7. அப்துல் ஷ்கூர் 7-27, 7-28, 7-30
8. அரங்கசாமி.ஞா. 1-11
9. அருண் 1-43
10. அருள்மொழிவர்மன் 6-2
11. அல்லி உதயன் 1-15
12. அழகாபுரி அழகப்பன் 5-22, 6-14
13. அன்பழகன் 7-2
14. அன்பிற்கினியவன் 7-33
15. அன்னம் 1-1, 1-12, 1-16, 1-22, 1-32, 1-36, 1-48, 2-13, 2-14, 2-36, 2-44, 3-4, 3-14, 3-34, 6-13, 6-18, 6-27, 6-49

130. சந்தர் கே. 1-15, 4-6
131. சந்திரபோஸ் ஆ. 4-15
132. சந்திரசேகரன் பொன். 1-26
133. சந்திரமோகன் பொன் 5-48
134. சந்திர ஸேனா 2-44
135. சப்தரிஷி 7-5
136. சமுத்திரம் சு 1-40, 2-46, 5-19, 5-46
137. சரவணன் 2-21
138. சரிதா 2-5, 2-32
139. சரோஜா சி. 1-24
140. சரோஜா ரங்கராஜன் 1-25
141. சவிதா 3-16, 3-20, 4-28
142. சாணாக்கியன் 2-35
143. சாதிக் 1-23
144. சாந்தாதத் 1-28, 4-10
145. சாந்திராஜா 2-35
146. சாம்ராட் 6-50
147. சாரதா விஸ்வநாதன் 1-1, 2-31, 3-42, 6-11, 6-23
148. சாரதி ஆர். பி. 7-23
149. சார்வ பௌமன் எஸ் 5-42
150. சாருப்ரபா சந்தர் 7-3, 7-10, 7-15, 7-21
151. சாலி ஜே. எம். 3-5, 3-27, 3-36, 4-6, 5-11, 5-39, 6-4 6-12, 6-18, 6-22, 6-31, 6-48
152. சித்ரா கிருஷ்ணமூர்த்தி 5-14
153. சித்ராங்கதா 1-30
154. சித்ரா. மிஸ் 7-13
155. சித்ரா ராமசாமி 1-14
156. சிவகுமார் ம. வே. 6-3
157. சிவசங்கரி 1-30, 2-16, 3-20, 3-31, 5-25
158. சிவதணல் 5-48
159. சிவராமன் எஸ். எம். 5-13
160. சிவராஜா 1-33

192. செல்வராஜ் ஆர். 2-25
193. செல்வராஜன் கோ. 3-34, 6-28, 6-38
194. செல்வராஜன் ஞா. 3-44
195. சென்மேனி 4-49
196. சென்னி கிருஷ்ணா எச். ஆர். 4-39
197. சேகர் ஆர். 1-19, 7-1
198. சொக்கி 5-48, 5-49, 5-52
199. சோனா 1-8, 1-29, 1-40
200. ஞானசூரியன் தே. 1-23
201. ஞானசௌந்தரி கே. 4-19
202. ஞானதீபன் 1-47
203. சா. கந்தசாமி 6-3
204. டெனிராஜ் 1-30
205. டோல்மா 1-9
206. தங்கமுத்து ப. 2-17
207. தங்கவேலு கே. 5-29, 5-47
208. தஞ்சாவூர் கோபாலி 1-2
209. தஞ்சைகுமார் 7-21
210. தண்டாயுதம் இரா. 7-14
211. தத்தாத்ரேயன் 5-30
212. தமிழ்ச்செல்வி 1-5
213. தமிழ்மாமணி மா. 6-19, 7-38
214 தமிழினியன் 5-16, 5-30, 5-42, 6-39
215. தயாளன் 1-48
216. தனுஷ்கோடி ராமசாமி 1-29, 1-49
217. தாக்கூர்தாஸ் 5-5
218. தாசன் என். ஆர். 6-5
219. தாமரைச் செல்வி 4-17
220. தாமரை செந்தூர்பாண்டி 1-28, 1-39, 2-32, 2-47, 4-42.
221. தாமரைமணாளன் 2-17
222. தானியல் அம்புரோசு 4-28

254. நாராயணன் எம்.கே. 5-2
255. நாராயணன் ஜி. 3-5
256. நித்யா மூர்த்தி 7-33
257. நிர்மலா எஸ். 4-31
258. நீரஜா 4-2, 4-44, 4-48, 5-8, 5-9
259. நீலகண்டன் ந. 1-18
260. நீலவன் 4-32, 4-35, 6-7
261. நிவேதா 4-48, 5-40, 7-26, 7-43
262. ப்ரியவர்த்தினி 5-12
263. ப்ரேமாமணி 2-41
264. பஞ்சாட்சரம் செல்வராஜ் 1-18, 2-14
265. பஞ்சாபகேசன் க. 1-32
266. பஞ்சு ச. 5-48
267. பட்டாபிராமன் எஸ் 1-49
268. பட்டுக்கோட்டை பிரபாகர் 1-45, 3-40, 3-45, 5-22, 5-37, 7-7, 7-15, 7-25, 7-30, 7-32, 7-33, 7-39
269. பட்டுக்கோட்டை ராஜா, 1-33, 7-34, 7-37
270. பத்மனாபன், நீல. 6-1
271. பத்மஜா ஐயங்கார் 1-13, 1-29
272. பத்மினி எ. 1-48
273. பநூஷா 6-36
274. பர்கத் சித்தீக் எம். 5-26
275. பர்வீன் 7-2
276. பரமசிவம் ப. 5-20
277. பழனிச்சாமி எஸ். 5-36
278. பன்னீர் செல்வம் பா. 4-13
279. பாக்கியராஜ் கே. 3-3
280. பாக்கியலட்சுமி சீனிவாசன் 2-29
281. பாகி 1-32
282. பாண்டியன் மருதுபூபன் 1-27
283. பாமாகோபாலன் 1-28, 3-7, 3-12, 3-21, 3-27, 3-30, 3-50, 7-1

344. மாருதி எஸ். 2-10
345. மாலன் 1-12, 3-19, 3-46, 6-25
346. மித்ராசேகர் ஏ.ஜி: 1-33
347. மிஸ்ஸிஸ்ஸிப்பி 1-9
348. மீனா சங்கர் 7-31
349. முகவை ராஜா 1-27, 4-43
350. முகுந்தன் 1-12, 1-16, 1-38
351. முத்தராஜன் 4-18, 1-26
352. முத்து இராமலிங்கம் இ. 2-28
353. மும்தாஜ்யாசின் 1-35, 3-6, 4-40
354. முரளி 5-43
355. முருகு 3-31
356. முருகேசன் நா 1-12, 4-47
357. முல்லைமணாளன். எஸ். 1-11, 2-42
358. முள் 7-17, 7-18
359. மூர்த்தி எஸ். கே. 6-19
360. மெய்யப்பன் மெ. 3-50
361. மெல்க்யு ஐ. 7-19
362. மேத்தா மு. 1-46, 2-38, 6-38
363. மேலாண்மை பொன்னுசாமி 4-42, 6-17
364. மைத்ரேயி 3-19, 6-27
365. மைதிலி எஸ். 4-1
366. மோகன் 7-11
367. மோகன்தாஸ் 4-14
368. மோகன் கே.பி. 1-12
369. மௌனாசந்தர் 7-1
370. யாமினி 2-34
371. ரங்கநாதன் பி.எஸ். 5-25
372. ரங்கநாயகி பி. 2-43, 3-7, 3-30, 7-11
373. ரத்னம் எம்.கே. 1-31
374. ரமணீயன் 7-13, 7-29, 7-31
75. ரமாமணிசுந்தர் 3-27

# 31. தமிழில் பிறமொழிக் கவிதைகள்

-ஆ. தனஞ்செயன்

*மொழிபெயர்ப்புக் கவிதைகளும் தமிழை வளர்க்கின்றன. சிறு பத்திரிகைகள் பல இவற்றிற்கு இடமளித்து உதவுகின்றன. இந்திய நாட்டின் பஞ்சாபி, இந்தி, மைதிலி, தெலுங்கு, மலையாளம் போன்ற பிற மொழிகள் மட்டுமன்றி, உலகமொழிகள் சிலவும் வழங்கிய கவிதைகள் 'புதுக்கவிதை'யாகப் பெயர்க்கப் பட்டுள்ளன. ஆப்பிரிக்க, பாலஸ்தீன மக்களைப் புரிந்து கொள்ள இவை துணையாகின்றன.*

தமிழகக் கலை இலக்கியங்களைக் குறித்துப் பேசும்போதெல்லாம், புதிய தமிழ் இலக்கியத்திற்கு ஒரு தரமான முன்னோடியாக விளங்குகின்ற பாரதியாரைத் தொடாமல் மேலே செல்வதற்கு இயலாது. தமிழ் இலக்கியத் துறையில், பிறமொழி இலக்கியப் படைப்புகள் மற்றும் தத்துவங்கள் முதலியவற்றின் வரவு மிகவும் இன்றியமையாதது என்பதைப் பாரதியார் உணர்ந் திருந்தார். எனவேதான் 'புதியன விரும்பு' என்னும் கோட்பாடுடைய அவர், 'பிறநாட்டறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்' என்று வற்புறுத்திச் சொல்லுகிறார். பாரதிக்கு முன்னமேகூட பல்வேறு மொழிகளில் உள்ள பல்வேறு துறைசார்ந்த நூல்கள் தமிழில் தழுவலாகவும் மொழிமாற்றமாகவும் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. பாரதியாருக்குப் பிறகும் கணிசமான அளவில் நூல்கள் மொழிபெயாக்கப்பட்டிருக்கின்றன. படைப்பிலக்கியம் என்று எடுத்துக்கொண்டு பார்க்கையில், மொழிபெயர்ப்பு முயற்சிகள் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வந்திருக்கின்றனவா அல்லது குறைந்து கொண்டிருக்கின்றனவா என்பதைக் கணித்துச் சொல்வதற்கு இயலவில்லை. ஆனால் மக்கள் சமுதாயம் விழிப்புற்று மீள்வதற்குரிய புரட்சிகரமான படைப்பு முயற்சிகள் தமிழில் குறைவாகவே மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன என்றே சொல்ல இயலுகிறது.

இக்கட்டுரை, தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்ட பிற மொழிக் கவிதைகள் பற்றிய ஒரு நோக்கமாக அமைகிறது.

தமிழில் ஏற்கெனவே, அந்நிய தேச மொழிகள் மற்றும் இந்திய மொழிகளில் இருந்து ஒரு சில கவிதை நூல்களும், தனித்தனிக் கவிதைகளும் மொழிமாற்றம் செய்யப்பட்டுள்ளன. ரஷ்ய கவிஞரான மாயா காவ்ஸ்கியின் கவிதைகளும், சீன நாட்டின் புனரமைப்பிற்கு வித்திட்ட மாவோவின் கவிதைகளும் அவ்வகையில் நூல்களாக வடிவம் பெற்றன. சிலி தேசத்தின் புரட்சிக் கவிஞனும் அமெரிக்க ஏகாதிபத்தியக் கொலைக்கூட்டத்தால் படுகொலை செய்யப்பட்டவருமான பாப்லோ நெருடாவின் (Pablo Neruda) ஒரு சில கவிதைகளின் மொழி பெயர்ப்புத் தொகுப்பாக, "சிலிக் குயிலுக்கு ஓர் செங்கவிதாஞ்சலி" என்ற தலைப்பில் வே. மு. பொதிய வெற்பனின் முயற்சியில் வெளிவந்த நூலும் குறிப்பிடத்தக்கது. கவிஞர் அப்துல் ரகுமானின் மொழிபெயர்ப்பில் உருவான 'இக்பாலின் கனற்பூக்கள்', சாகித்திய அக்காதெமியின் வெளியீடான குமாரன் ஆசானுடைய '3 கவிதைகள்', தெலுங்குக்கவிஞர் நாராயணரெட்டியின் 'அனல் காற்று', மக்கள் கலைஇலக்கியக் கழக வெளியீடான 'சோஷலிசக் கவிதைகள்' போன்றன குறிப்பிடத்தக்க மொழி பெயர்ப்புக் கவிதை நூல்களாக விளங்குகின்றன.

இங்கே, 1982-ஆம் ஆண்டில் தமிழாக்கம் செய்யப்பட்ட பிறமொழிக் கவிதைகள் மட்டும் ஆராயப்படுகின்றன. சிறு பத்திரிகைகள், தொகுப்பு நூல்கள், தனி நூல்கள், மலர்கள் என்ற சாதனங்களின் மூலமாகப் பிரசுரிக்கப்பட்ட கவிதைகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இவ்வடிப்படையில், 1982-இல் வெளியான ஏடுகள், தாமரை, செம்மலர், சோவியத் நாடு, மன ஓசை, கணையாழி, வானம்பாடி, அன்னம்விடு தூது, கவனம், அலை (இலங்கை) முதலிய இதழ்களும், 'வித்யாபதியின் காதற் கவிதைகள்' என்ற நூலும், 'அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம்' என்ற தொகுப்பு நூலும் ஆகிய இவையே பார்வைக்கு உட்படுத்தப்படுகின்றன.

### எமிலி டிக்கின்ஸன் (Emile Dickinson)

இலங்கையிலிருந்து, மு. புஸ்பராஜன், அ. யேசுராசா ஆகியோரை இணையாசிரியராகக் கொண்டு வெளியிடப்படுவது 'அலை.' தை—பங்குனி மாதத்திய இதழ், அமெரிக்கப் பெண் கவிஞரான எமிலி டிக்கின்ஸன் எழுதிய கவிதைகள் ஏழினைத் தாங்கி வந்திருக்கிறது. அந்த ஏழு கவிதைகளுடைய தலைப்புகள் ஆங்கில மொழி வடிவத்திலேயே (உ—ம். 'A Word is dead', 'The Last Night That She Lived') கொடுக்கப்பட்டிருக்கின்றன. மொழிபெயர்ப்பில் தலைப்புகள் கொடுக்கப்பட்டிருந்தாலும்,

மூல ஆசிரியர் தலைப்புக்கொடுப்பதில் நம்பிக்கை வைக்கவில்லை. அவற்றைத் தமிழாக்கத்தில் கொடுத்த ரூமி பின்வருமாறு எமிலி டிக்கின்ஸனை அறிமுகப்படுத்துகிறார்:

"எமிலி டிக்கின்ஸன் (Emile Dickinson) என்ற அமெரிக்கப் பெண் கவிஞர் நாம் அறிந்து, ஆழமாகப் படிக்க வேண்டியவர்களுள் ஒருவர். கவிதை என்ற இலக்கிய வடிவத்தின் தன்மைகள் பற்றி இன்று வரை எழும்பிக் கொண்டிருக்கும் வினாவிற்குத் தெளிவாக இவர் கவிதைகள் விடையளிக்கும். 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில், அமெரிக்காவில் எஸ்ரா பவுண்ட் (Ezra Pound), டி. எஸ். எலியட் (T. S. Eliot) போன்றோர் பல்வேறு இழைகள் பின்னிப் பிணைந்த — complex — கலாச்சாரத்தை எடுத்துக் காட்டும் பொருட்டு, கவிதை வடிவத்திலும், வெளியீட்டு முறையிலும் பல சோதனை முயற்சிகளைத் தீவிரமாக மேற்கொண்டிருந்தபோது, அந்த அலைகளிலிருந்து ஒதுங்கித் தனித்து இயங்கிக் கொண்டிருந்தவர் இவர். மாடியில் தனது அறைக் கதவுகளை மூடி சதா காலமும் கவிதை எழுதிக் கொண்டிருக்க, இவரின் தனிமை ஒரு துறவியின் தனிமையைப் போன்றது. வாழ்வை மறுத்ததன் மூலம் அதன் மீது ஆளுமை கொண்டவர் இவர் — "When she went upstairs and closed the doors, she mastered life by rejecting it" — என்று ஆலன் டேட் (Allen Tate) என்ற விமர்சகர் கூறுகிறார்" (ரூமி, அலை தை-பங்குனி, 1982, ப. 545).

வார்த்தைப் பெருக்கத்தின் மூலம், கவிதையை நீர்த்துப் போகச் செய்துவிடாமல், மிகவும் சுருங்கிய வார்த்தைகளில் மிகவும் ஆழமான அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய கவிதைகளைப் படைக்க வேண்டும் என்பதில் 'மந்திரம் போல் வேண்டுமடா சொல்லின்பம்' எனக் கூறும் பாரதியார் போன்ற கவிகளும் கருத்திணக்கம் கொள்வர். எமிலி டிக்கின்ஸன்கூட, வார்த்தைப் பிரயோகத்தில் சிக்கனத் தன்மை காட்டி, கவிதையின் ஒவ்வொரு வார்த்தையும் பல அர்த்த பரிமாணங்களைக் கொடுக்கக் கூடிய முக்கியத்துவம் பெற்றது என்பதில் அக்கறை காட்டுகிறவராகக் காணப்படுகிறார். அவருடைய 'A Word is dead' என்ற கவிதை,

செல்லப்படும் போதே
சொல்லிறக்கிறது
என்பார் சிலர்
ஆனால் அப்போதுதான் அது
உயிர்க்கிறது
என்பேன் நான்

(அலை, ப. 546)

என்றமைகிறது. பொதுவாக, எமிலி டிக்கின்ஸன் மரணத்தைப் பற்றியே அதிகம் சிந்திப்பவராக உள்ளார்.

'' அவள் ஏதோ சொல்ல வந்தாள்
பின் மறந்து போனாள்
நீர் நோக்கி வளையும் நாணல் போல்
சிரமங்களின்றி —
ஏற்றுக் கொண்டாள், இறந்து போனாள்''
(அலை, ப. 548)

என்று 'The Last Night that she Lived' என்ற கவிதையும்,

''பனிக் காலத்துப் பிற்பகல்களில்
ஓர் ஒளிச் சாய்விருக்கும் —
தேவாலய ராகங்களின் கனத்தைப்போல்
அது நம்மை அழுத்தும்—
தெய்வீக துன்பம் தருமது—
தழும்புகளிருக்காது,
அகமாற்றங்கள் தரும்
அர்த்தங்கள் உள்ளிருக்கும்.
கல்வி தாண்டியதது
அது முத்திரை, நிராசை—
காற்றுவழி வந்த
உன்னத வேதனை.
அது வருகையில் நிலம் செவி மடுக்கும
நிழல்கள் மூச்சடக்கும்
அது போகையில்,
சாவைப் பார்த்த தூரமிருக்கும்''
(அலை. பக். 546-547)

என்பதாக முடியும் 'There is a certain slant of Light' என்ற கவிதையும், ஒருவிதத் தற்சோகத்தையும் மரணம் பற்றியதான எண்ணங்களையும் பிரதிபலித்துக் காட்டுவனவாகும்.

அமெரிக்க இலக்கிய உலகில் இன்று முக்கியமான ஒரு கவிஞராக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் எமிலி டிக்கின்ஸன் ஏறக் குறைய இரண்டாயிரம் கவிதைகளின் சொந்தக்காரர். ஆனால், அவருடைய வாழ்நாளில் ஏழு கவிதைகள் மட்டுமே பிரசுரமாயின. அவருடைய கவிதையின் இன்றியமையா அம்சங்களாக: (1) ஏமாற்றும் எளிமை (deceiving simplicity) (2) கனமான விஷயங்களையும் உள்ளார்த்த பரிமாணங்களோடு எளிமையான முறையில் சொல்கின்ற மொழி ஆளுகை (Mastery over the

Langu·ge) ஆகியன சுட்டப்படுகின்றன. 'இந்த ஆளுமையைத் தமிழில் கொண்டுவரும் முயற்சியில் நான் வெற்றி பெறாவிட்டாலும், கருத்துச்சிதைவு ஏற்படாவண்ணம் முயன்றுள்ளேன்' எனக் கூறும் மொழிபெயர்ப்பாளர் ரூமி, அட்சய பாத்திரமாய் அர்த்தங்கள் விளையும் இவர் கவிதைகளை மொழிபெயர்ப்பில் படிப்பது ஒரு இழப்புதான்' என்கிறார்.

## அம்ரிதா ப்ரீதம்

இந்திய மொழிகளில் எழுதுகின்ற பெண்படைப்பாளருள்' பஞ்சாபி எழுத்தாளரும் கவிஞருமான அம்ரிதா-ப்ரீதம், குறிப்பிடத்தக்கவராக விளங்குகிறார். தனது 63-ஆவது வயதைக் கடந்துவிட்ட இக்கலைஞர், பஞ்சாபியிலும் இந்தியிலும் இதுவரையில் 24 நாவல்கள், 10 சிறுகதைத் தொகுதிகள், 18 கவிதை நூல்கள் ஆகியவற்றின் படைப்புக் கர்த்தாவாக விளங்குகிறார். 1957-இல் 'சுனேரே' என்னும் கவிதை நூலுக்காக சாஹித்திய அக்காதெமியின் பரிசையும், 'காகஸ் தே கேன்வாஸ்' (காகிதத்திலிருந்து திரைச்சீலை வரை) என்ற கவிதைத் தொகுப்பிற்காக 1982-ஆம் ஆண்டிற்கான ஞானபீடப் பரிசையும், பெற்றிருக்கும் அம்ரிதா ப்ரீதம், பொதுவாக 'இலக்கிய சேவை' குறித்து என்ன நினைக்கிறார்?

'இலக்கிய சேவை என்பதே முரணானதாகும். ஏனென்றால் அவ்வாறான இலக்கிய சேவையாளர், தான் எந்தச் சமூக அரசியல் அமைப்பினை விமர்சிக்கிறாரோ, அதனிடமிருந்தே அதற்கான விலையையும் (பரிசு, பதவிகள்) கேட்கிறார்' என்று Mirror இதழில், ஒருசமயம், "Why do I write?" என்ற தலைப்பிலெழுதிய கட்டுரை ஒன்றில் இலக்கியசேவை, பரிசு குறித்த வெளிப்படையான தனது கருத்தினை முன் வைக்கிறார்.

அற்புதமான இந்தப்பெண் கவிஞரைப்பற்றி, தமிழில் போதுமான அளவிற்குக்கூட அறிமுகம் செய்யப்படவில்லை. இந்திய மொழிகளிலும் அந்நிய மொழிகளிலும் இவருடைய படைப்புகள் எல்லாம் மொழிமாற்றம் செய்யப்பட்டிருக்கின்றன. பம்பாயிலிருந்து வெளிவரும் 'கவி' ஆங்கில இதழில் அவர் அளித்த பேட்டியின் சிலபகுதிகளை மீரா 'அன்னம் விடு தூது'வில் மொழிபெயர்த்து வெளியிடும்போது, தவறிப்போனதுபோல் அவருடைய இரண்டொரு கவிதைத் துணுக்குகள் தமிழ்மொழியில் முகங்காட்டுகின்றன. அம்ரிதா ப்ரீதம், தனது இன்றியமையா துணையாகப் புத்தகங்களைக் கருதுகிறார்.

'என்னை நான் உணர்ந்தேன்
ஒரு புத்தகமாக
ஆனால் ஒரு காலிப்புத்தகமாக
அதன் வெற்றுப் பக்கங்களில்
நான் தொடங்கினேன்'

தனது பதினோராவது வயதில் காதலுணர்வுக்கு, தனது கவிதையில் வாய்க்கால் வெட்டத் தொடங்கிய அம்ரிதாவின் வாழ்க்கையில் இடம்பெற்ற இரண்டு ஆண்கள்; இம்ரோஸ், சாகிர்லூதியான்சி. இந்த இருவரைக் குறித்தும், "சாகிர் என் தலைக்குமேல் இருக்கும் வானத்தைப்போல. இம்ரோஸ் கூரை போல" என்றெழுதும் அம்ரிதா, தனது மனத்திற்குள் எதையும் அழுத்திப் புதைக்கும் இயல்பினர் அல்லர். தன் மனத்தைத் திறந்து,

துணி கிழிந்தால்
ஒட்டுப் போடலாம்
வானம கிழிந்தால்
தைக்க முடியுமா?
கணவன் மறைந்தால்
மறுமணம் புரியலாம்
காதலன் மறைந்தால்
என்னால்
வாழ முடியுமா?

எனக் கேள்வி தொடுக்கும் அவர், 'சுய சரிதம்' என்னும் கவிதையில் தனது ஆழ்மனத் துயரத்தைப் பின்வருவதுபோல் வெளிப்படுத்துகிறார்.

"என்னுள் ஒரு வலி
அமைதியாய்
உறிஞ்சினேன்
ஒரு சிகரெட்டாய்
உயிருள்ள சில பாடல்களை
மெல்ல உதிர்த்தேன்
அந்த சிகரெட் சாம்பலாய்"

அம்ரிதா தன்னுடையஎழுத்துக்கள் மொழிமாற்றம் செய்யப்படுவது பற்றி, "மொழிபெயர்ப்பின் மூலம் வெறும் நிழலைத்தான் பிடிக்க முயலுகிறோம். எந்த மொழியிலும் முதல் படைப்பே உண்மையான மன உணர்ச்சிகளின் பெயர்ப்புத் தானே? ஒருமொழியிலிருந்து மற்றொரு மொழிக்குப்பெயர்ப்பது

ஒரு மொழிபெயர்ப்பின் மறு பெயர்ப்பு ஆகும்—அதாவது ''நிழலின் நிழல்'' என்று கருத்துரைத்தாலும் பொய்ம் முகங் களோடு உலாவரும் எழுத்தாளர் பலர் நிறைந்த தமிழ் இலக்கிய உலகில் திரைபோட்டுத் தன்னை எழுத்திலிருந்து ஒளித்துக் கொள்ளாத அவருடைய எழுத்துக்கள் தமிழாக்கம் செய்யப் படுவது மிகவும் அவசியமாகும்.

செரபண்டராஜு

புரையோடிப் புழுத்துப்போன சமூக அமைப்பைத் தகர்த் தெறிந்திட வெடிகுண்டுக் கவிதைகளை உச்சரித்த உஷ்ணமான உதடுகளுக்குச் சொந்தக்காரரான 'திகம்பர கவிகள்' இயக்கத் தைச் சார்ந்தவர்தான் புரட்சிக்கவி செரபண்டராஜு. தெலுங்கு இலக்கிய உலகில், ஒரு புயலையே உண்டாக்கிய 'திகம்பரகவிகள்' இயக்கம் 1965-இல் கேசவராவ் நக்ன முனியால் உருவாக்கப் பட்டது (கண்ணதாசன், மாத இலக்கிய இதழ், டிசம்பர் 76, ப. 22). அந்த இயக்கத்தின் உயிர்நாடியாகத் திகழ்ந்த செரபண்டராஜு 'திக்சூசி', 'வந்தே மாதரம்', 'காந்தி யுத்தம்', 'கௌரம்மகலலு', 'முட்டடி' முதலான கவிதைத் தொகுப்பு களையும், 'பிரஸ்தானம்', 'பல்லவி', 'மாபல்லே' ஆகிய புரட்சி கரமான நாவல்களையும் எழுதி வெளியிட்டார்.

வியாபார எழுத்தாளரைப் போல் வேஷமிட்டுக்கொள்ளாத இப்புரட்சிக் கவிஞர்,

''நாங்கள் மலைகளைத் தகர்த்தோம்
பெருங் கற்களை உடைத்தோம்
எங்கள் குருதியைச் சாந்தாக்கி
பல திட்டங்களைக் கட்டினோம்
இந்த உழைப்பு யாருடையது
இதன் பலன்கள் யாருடைதுது?''

(மன ஓசை, நவம்பர் 82, ப. 30.)

என்று உழைக்கும் மக்களுடைய விழிப்புணர்வு மிக்க பெருங் குரலாகவே தனது கவிதைகளை முழக்கியவர். ஐதராபாத்திற்கு அருகில் அங்குசபுரம் என்ற கிராமத்தில் ஒரு விவசாயக் குடும்பத்தில், 1944-இல் பிறந்த பி. பாஸ்கர் ரெட்டி என்னும் செரபண்டராஜு, ஒரு தெலுங்கு ஆசிரியராகத் தனது வாழ்க் கையைத் தொடங்கியவர். புரட்சி எழுத்தாளர் சங்கத்தின் பொதுச் செயலாளராகப் பணியாற்றிய அப்புரட்சிக் கவிஞர், பல முறை அரசின் அடக்குமுறைக்கு ஆளானார். சிறைச்சாலையில்

சிக்குண்டிருக்கையில் மூளைப் புற்றுநோய்க்காளான கவிஞர், 1982-ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் இயற்கை எய்தினார். அவருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில், மன ஓசை (ஜுலை-ஆகஸ்ட் '82, ப. 36-37) இதழ் அவருடைய 'வந்தே மாதரம்' கவிதையினை (மொழிபெயர்ப்பு: ஏ. ஆர். பாலசுப்ரமணியம்) வெளியிட்டது. அக்கவிதை பாரத தேசத்தின் அவலநிலையை மிகவும் யதார்த்தமாக அம்பலப்படுத்துகிறது.

''ஓ...என் அன்பார்ந்த தாய்த் திருநாடே!
தாய் தந்தை தெய்வம் நீதான் அம்மா!
கொடியவருடன் படுக்கையில் புரளும்
கற்பு உனனுடையது!
சர்வதேசச் சந்தையில் ஒவ்வொரு உறுப்பும்
அடகு வைக்கப்பட்ட அழகு உன்னுடையது!
செல்வந்தர் கரங்களில் மெய்மறந்து உறங்கும்
பருவம் உன்னுடையது!
உமிழ்ந்தாலும் புழுதிவாரித் தூற்றினாலும்
சலனமே இல்லாத மயக்கம் உன்னுடையது!
அறுவடைக்கு வந்த விளைச்சல் வயல்களில்
எலிகளையும் பெருச்சாளிகளையும்
தாங்கி நிற்கும் பாரதத் தாயே
நீ, வாய்க்கு எட்டாத
செல்வச் செழிப்புமிக்க பூமியம்மா!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!
உடல்மீது துணிகளால் கொடிகள் செய்து
ஆடையில்லாமலே ஊர்வலம் வரும் துணிவு உன்னுடையது!
கடன்வாங்கி எழுப்பிய மாளிகைகளில்
கால்வெந்த பூனையாய் அலையும் பரிதாபம்உன்னுடையது!
காய்ந்து சருகான மார்பகங்களைத் தேடும்
குழந்தைகளைச் சமாதானப்படுத்த முடியாத சோகம்
உன்னுடையது!
பசியால் வாடி வதங்கி இரவில் நகைகளுடன்
வீதிக்கு வந்த அலங்காரம் உன்னுடையது!
அம்மா! பாரதமே! நீ சேர வேண்டிய
இடம்தான் எது தாயே?
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

(மன ஓசை, ப. 37)

'மக்கள் கவி' என்றும் 'புரட்சிக் கவி' எனவும் கொண்டாடப் படுவதற்கு மிகவும் அருகதை வாய்ந்த செரபண்டராஜுவின் தெலுங்குக் கவிதைகள் யாவும, தமிழ் இலக்கியச் சூழலில்

அறிமுகப்படுத்தப்பட வேண்டியது ஓர் அவசியமான சமுதாயப் பணியாகும்.

**சமிஹ் அல்—காசீம்**

1920—ஆம் ஆண்டில் மத்திய கிழக்கு நாடுகளின் வரை படத்தில் மிகப் பெரிய தேசமாக பாலஸ்தீனத்தைப் பார்க்க முடியும். ஆனால், இன்றிந்த அறுபத்திரண்டு ஆண்டுகளில் அது சிறு சிறு முகாம்களாகச் சுருங்கி விட்டிருக்கிறது. பாலஸ்தீனம் பிரிக்கப்பட்டு அரேபியர்களுக்கும் இஸ்ரேல் என்னும் யூத தேசத்திற்குமாகக் கொடுக்கப்பட்டது. 1948-ஆம் ஆண்டில் இஸ்ரேலுக்கும் அரேபியர்களுக்கும் இடையே மூண்டெழுந்த போரில் வென்ற இஸ்ரேல், அரேபியாவின் பல்வேறு பகுதிகளைப் பறித்துக் கொண்டு விட்டது. பாலஸ்தீனர் அகதிகள் முகாம் களில் அனாதைகளின் வாழ்க்கை அனுபவத்திற்குத் தள்ளப் பட்டனர். அகதிகள் முகாம்களிலும் இனவெறிக் கொள்கை யைக் கடைப்பிடிக்கும் இஸ்ரேல் படையினர் நுழைந்து, தங்கள் ஆயுதங்களுக்கு எண்ணற்ற மனுத உயிர்களைப் பலி யிட்டு, அதன் மூலம் இரத்தக் குளியல் நடத்தப்பட்டது. இந்தக் கொடுமையும், அதனை எதிர்த்து விடாப்பிடியாகப் போர்க் குரலெழுப்பி நம்பிக்கையோடு சுதந்தர வேட்கையை வெளிப் படுத்தும் போக்கும் பாலஸ்தீன மக்கள் கவிகளின் எழுத்துக் களில் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன.

“என் காணியின் கடைசித் துண்டையும் பறித்தெடு
என் இளமையைச் சிறைக் கூண்டினுள்ளே புதைத்திடு
என் முழுச் சொத்தைக் கொள்ளையடி!
என் நூல்களை எரித்திடு!
என் கோப்பைகளில் உன் நாய்களுக்கு இரைபோடு
போ! என் ஊரிலுள்ள கூரைகளின் மீது
உன் பயங்கர வலைகளை விரித்திடு
மனிதனின் எதிரியே,
நான் விட்டுக் கொடுக்க மாட்டேன்!
இறுதிவரை போராடுவேன்!

(மன ஓசை, நவம். 82, ப. 6—7).

உலகில் இதுவரை நிகழ்ந்திராத அவலங்களை என்னில் விளைத் தாலும், விட்டுக் கொடுக்காமல், பணிந்து மண்டியிடாமல், நிமிர்ந்து நின்று ‘இறுதி வரை போராடுவேன்’ என்று உலகதிர முழக்கமிடும் கவிஞர் சமிஹ் அல்-காசீம்மின் கவிதையில், நீண்ட நாட்களாக அமெரிக்க ஏகாதிபத்தியம் உலக அமைதிக்கு ஏற்

படுத்தும் பங்கமும், மனித நேசத்திற்கு விரோதமாக நடத்தும் படுகொலைகளும் அப்பட்டமாக வெளிப்படுத்துகின்றன.

''என் கண்ணெதிரே
நீ எல்லா விளக்குகளையும் ஊதி அணைத்தாலும்
உதடுகளின் முத்தங்கள் அனைத்தையும்
உறைவித்தாலும்
என் நாட்டின காற்றினைச்
சாபங்களால் நிறைத்தாலும்
என் ஓலமிடும் குரல்வளையை
அமுக்கி ஒடுக்கினும்
என் காசுகள் போல் பொய்க்காசு தயாரித்தாலும்
என் பிள்ளைகளின் முகத்து முறுவலைப்
பிடுங்கி எடுத்தாலும்
இகழ்ச்சி ஆணி கொண்டு
என் விழிகளில் அறைந்தாலும்
மனிதனின் எதிரியே
நான் விட்டுக் கொடுக்க மாட்டேன்
இறுதிவரை போராடுவேன்!''

எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்தும், எல்லா மோசமான சக்திகளோடும் சமரசம் செய்துகொண்டும் ஈனப் பிழைப்பு நடத்திவரும் பல இலக்கியப் 'படைப்பாளர்' மத்தியில் சமிஹ் அல்-காசீம் போன்ற பாலஸ்தீனக் கவிகளின் முகங்கள் மிக எடுப் பாகத் தெரிய வேண்டும். முற்போக்கு எண்ணங்கொண்ட மொழியாக்கக் கர்த்தாக்கள் இப்பணிக்குத் தங்களை உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இணைத்துக் கொள்ள வேண்டும். மன ஓசை போன்ற இதழ்களின் பங்கு இதில் குறிப்பிடத் தக்கது.

## மாயா காவ்ஸ்கி

சோவியத் புரட்சியில், கலை இலக்கியவாதிகளின் அணியில் ஒரு தளபதியாக நின்றவர் மாயா காவ்ஸ்கி. உலகின் தலை சிறந்த கவிஞர்களுள் ஒருவர். உலகில் அமைதித் தென்றல் வீசிக் கொண்டிருக்க வேண்டும்; மக்கள் யாவரும் தங்கள் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டு நிறைவான வாழ்க்கை வாழ வேண்டும் என்ற மனித நேசமிக்க நோக்கத்தோடு பொது வுடைமை சித்தாந்தத்தைத் தந்தவர் கார்ல் மார்க்ஸ். மிகவும் சீரழிந்து குலைந்துபோன சமூக, அரசியல் அமைப்பினை முற்றிலுமாகத் தகர்த்தெறிந்துவிட்டு, அதற்கொரு புதிய

பரிமாணத்தைக் கொடுப்பதற்குப் போராடிய அந்த மாபெரிய வீரன் இயற்கையெய்தி ஒரு நூற்றாண்டுக் காலம் கடந்து விட்டது. 82—இல் உலக முழுதும் அந்த அறிஞனுடைய நினைவுக்கு அஞ்சலி செலுத்தியது மாயா காவ்ஸ்கியின் கவிதை யொன்று மார்க்ஸின் புகழைப் பின்வருமாறு பாடுகிறது.

" கம்யூனிஸம் என்னுமொரு ஆழமிக்க அலைகடலுக்குள்
கண்மூடித் தெளிவின்றி புதிரதனைத் தடவிநின்றோம்
நம்எண்ண மெல்லாம் நல்வாய்ப்பு என்னுமொரு
நல்லகால அலையடித்து நம்மை யெல்லாம்
நரகத்தின் பிடியினின்றே தானாக மீட்குமென்று
காத்திருந்தோம் எண்ணமிட்டோம்! கார்ல்மார்க்ஸ்
என்னுமொரு
மாமனிதன் தோன்றிவந்து வரலாற்றின் ஆழம்மிக்க
விதிகளையும் வெளிக்கொணர்ந்து பாட்டாளி வர்க்கத்தை
முன்னிலையில் நிறுத்தி வைத்தான் "

(தீக்கதிர், கார்ல்மார்க்ஸ் நூற்றாண்டு
நினைவு மலர், ப. 168).

கணைக்கால் இரும்பொறை - ஹோ-சி-மின்

ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, சோழன் செங்கணானோடு போரிட்டுத் தோல்வியுற்று, குடவாயில் கோட்டத்துச் சிறையில் அகப்பட்டுக் கிடந்த சேரமன்னன் கணைக்கால் இரும்பொறை என்பவன், இந்தக் கொடிய அடிமை வாழ்க்கையினும் மரணமே மேலானது என்று இறப்பைத்தழுவிக் கொள்கிறான் (புறநானூறு, பாடல். 74). அவனைப் போலவே, அரசியல் புரட்சியில் ஈடுபட்டுப் போராடிய ஹோ-சி-மின், சிறை யினில் அகப்பட்டு வேதனையை அனுபவித்துத் தனது கவிதை யின் மூலமாக வெளிப்படுத்துகிறார். ஆனால், 'அடிமை வாழ்வை விட மரணமே மேலானது' எனக் கூறும் ஹோ-சி-மின் எப்படியும் விடுதலை பெற்றுப் போராடுவேன் என்று துடிக் கிறார்.

உடல் வேதனைப் பட்டாலும்
உள்ளம் குலைய வில்லை
அடிமை வாழ்வை விட
மரணமே மேலாம்
என் நாட்டில் எங்கணும்
செங்கொடிகள் பறக்கின்றன

இத்தகைய தருணத்தில்
இருட்டறையில் வாடுவதோ
என்று நான் விடுதலை பெறுவேன்? — போரில்
என் பங்கை ஆற்றிடுவேன்?

(ஹோ-சி-மின் சிறைக்குறிப்புகளிலிருந்து, தமிழில் : கே. ராமநாதன், தாமரை, ஜூலை-82, ப. 79).

''வறுமை வனங்களில் வசந்த வித்து நிமிரும் இடமெல்லாம் நெருப்பு விழுதாகும்'' — என்ற நம்பிக்கையூட்டும் கவிதை வரிகளோடு வெளிவந்த கவிதா (ஓரிதழ் மட்டுமே) என்னும் ஏடு, வானம்பாடியிலிருந்து மறுபிரசுரமாக ''ஜென்னி என் வார்த்தைகள்'' என்ற கவிதையைப் பதித்துள்ளது.

'' என் தீவிர தாகங்களைச் சுற்றி
அழிவுகளும் சிதைவுகளும்
மரணித்த சின்னங்களும்
அல்லவா வலம் வருகின்றன...''

என்று கூறும் கார்ல் மார்க்ஸ், தனது வார்த்தைகளில் ஒளிந்து கிடக்கும் அர்த்தத்தை, தன் இனிய மனைவி ஜென்னியைப் பார்த்துத் தேடுமாறு கூறுகிறார்.

'' ஜீவிதத்தை ஆனந்திக்கும் முயற்சியில் ஈடுபடு
சுந்தரியான நீ, உன் அழகிய கரங்களால்
வாழ்வை அழுத்திப்பார்
அப்போது உனக்கே
அதன் பதில் தெரியும்
எனது நெடுந்தூர லட்சிய பூமியை
நீ அறிந்து கொள்ள முடியும் ''

(கவிதா, மே/பா. வெ. பத்மா, 58, சட்டக் கல்லூரி மகளிர் விடுதி, சென்னை-5.)

கவிதாவில் இடம்பெற்றிருக்கும் 'அழகிய சொல்' என்ற வால்ட் விட்மனின் கவிதையும், காஷ்மீரியக் கவிஞன் அப்துல்ரஹ்மானின் ''சூறாவளி''யும் (தமிழில் : யக்ஞன்) நினைவில் பதியக் கூடியன. முன்பு நின்றுபோன 'சிகரம்' இதழ் மீண்டும் 82-இல் மார்ச்சு, ஏப்ரல்களில் வெளிவந்து மீண்டும் நின்றுவிட்டது. ஏப்ரல் மாதவிதழில் மட்டும் பல்கேரியக் கவிதைகள் இரண்டு ''காடு'', ''ஒப்புதல்'' என்ற தலைப்புகளில் பத்மனால் மொழி பெயர்க்கப்பட்டு இடம் பெற்றிருக்கின்றன (ப.25).

சாவதற்குத் தயாராகு

'சிறகு' என்றொரு புதிய ஏடு, தனது முகப்பில் ''விவசாயத் தோழனே'' என்னும் தலைப்பிட்ட பஞ்சாபிப் பாடலைச் சூடிக் கொண்டிருக்கிறது. 1907-இல் பஞ்சாப் விவசாய இயக்கம், இந்தியாவைக் கொள்ளையிட்ட வெள்ளையர் அரசை எதிர்த்துப் போராட்டம் நிகழ்த்தியபோது,

'' விவசாயத் தோழனே, நீ உனக்காக எழு!
இந்தியா உனது இல்லம்! நீ அதன் தலைவன்!
எவ்வளவு காலம்
இந்த அடக்குமுறைகளைப் பொறுத்திருப்பது?
சாவதற்குத் தயாராகு!
ஏனெனில் உனது வாழ்க்கை
சாவினும் கொடியதாய் இருக்கிறது
பொசுக்கும் நரகச் சூழலில்
உனக்காக நீயே போராட வேண்டும்!
அரசாங்கம் என்பது கொடூரமானது
எப்போதும் நம் உணர்வுகளை மதிப்பதில்லை!
அதன் ஆசைகளுக்கு நாம்
ஏன் அடிபணிய வேண்டும்?
ஒன்று சேர், அரசை எதிர்த்து
ஒரே குரலாய் உயர்த்து!
உனக்காக—விவசாயத் தோழனே!
நீயே போராடு! எழுந்து நில்!

என்று பாடப்பட்டது இப்பாடல். உழைக்கும் வர்க்கத்தின் குரலாக ஒலிக்கும் இப்பாட்டு வரிகள், இந்திய விடுதலைப் போரில், பாட்டாளிகளுக்கும் பெரும் பங்குண்டு என்று காட்டும் சரித்திர ஆதாரங்களில் ஒன்றாகும்.

'சாயாவனம்' என்ற கையெழுத்து இதழ், ''ஏன் அழுகிறாய் நீ?'' என்னும் தலைப்பில் எத்தியோப்பியன் கவிதையையும், ''போர்வீரரின் பாடல்'' என்ற தலைப்பிலமைந்த சூடன்நாட்டுப் பாடலொன்றையும் தாங்கி வெளிவந்துள்ளது. ''போர் வீரரின் பாடல்''—ஆப்ரிக்க மக்களின் வெள்ளை ஏகாதிபத்தியம் மற்றும் நிறவெறிக் கொடுமை எதிர்ப்பினை மையமாகக் கொண்டது.

''துப்பாக்கிகள் கர்ஜனை செய்யட்டும்
நாங்கள் அஞ்ச மாட்டோம்

அவைகள் இடி இடிக்கட்டும்
நாங்கள் அசைய மாட்டோம்!
வெள்ளையனின் துப்பாக்கி மருந்து
காற்றை நிரப்பட்டும்
எமக்கு அச்சம் என்பதில்லை
நாங்கள் எதிர்த்து நிற்போம்!
நாங்களே முன்னேறுவோம்!

(*சாயாவனம், முதல் இதழ், மார்ச்சு, 82, ப. 13*)

'கவனம்' இதழ், மொழிபெயர்ப்புக் கவிதைகளுக்கு இடம் அளிக்கிறது. ஆத்மாராமின் பெயர்ப்பின் மூலம் துருக்கிய கவிஞர் நஸீம் ஹிக்மத், ப்ரெஞ்சுக் கவிஞர் கிஸெப் யுங்கரெட்டி ஜெர்மானிய கவிஞரான நதன் ஸக், பெர்டோல் ப்ரெஷ்ட் ஆகியோர் தமிழ் இலக்கிய உலகில் சிறிதே முகம் காட்டுகின்றனர். (கவனம், இதழ்—7, மார்ச்சு '82). கணையாழியும் கூட பிறமொழிக் கவிஞரின் படைப்புகளுக்கு இடமளித்துள்ளது. ''லெனின்கிராட் அருகில் அந்த யூதர்களின் கல்லறை வளாகம்'' என்ற ஜோஸப் ப்ராட்ஸ்கியின் கவிதையும் போலந்து கவியான ரோஸ்விகின்,

''எதனையும் மொழி பெயர்ப்பதில்லை
எதனையும் விவரிப்பதில்லை
எதனையும் வெளியிடுவதில்லை''

(*கணையாழி, டிசம்பர், 1982, ப. 32*)

என்று தொடங்கும் ''என் கவிதை''யும் கவனிக்கத் தக்கனவாகும். பெரும்பாலும் கணையாழி, கவனம் இதழ்களில் வரும் மொழிபெயர்ப்புக் கவிதைகள், கவிகளின் தன்னுணர்வு வெளிப்பாடுகளாகவும், தமக்குள் தம்மைத் தேடும் தேடல்களாகவும் அமைவதால் இருண்மைப் பண்பைத் தழுவிக் கொண்டு விடுகின்றன.

பொதுவாக நோக்கும்போது, சிறு பத்திரிகைகள்தாம் புதிய இலக்கிய வடிவங்களையும், பரிசோதனை முயற்சிகளையும் மேற்கொண்டு, தமிழ் இலக்கியத்திற்கு உலகளாவிய பார்வையை யூட்டி, ஒரு புதிய தடத்தை அமைத்துக் கொடுத்துள்ளன என்ற உண்மையை மறுக்கவியலாது. பிறமொழி இலக்கியங்களைத் தமிழுக்கு அறிமுகம் செய்வதில் சிறுபத்திரிகைகள் அன்றி வேறு பத்திரிகை எவையும் முனையவில்லை. எண்ணிக்கையில் ஆயிரம், இலட்சம் என்று வியாபாரம் ஆகும் வார, இருவாரப் பத்திரி

கைகள், தினசரிகள் ஆகியன வியாபார முனைப்பில் தமிழ்க் கலாச்சாரச் சூழலை, மிகக் கொடுமையாக நச்சுப்படுத்தியன்றி பிறமொழிக் கவிஞரின் கவிதைகள் எவற்றையும் தமிழில் கொணரும் முயற்சியில் சிறிதும் இறங்கவில்லை. மாறாக, வியாபார நோக்கம் ஏதுமின்றி, பொருள் முடக்கத்தால் தடைப் பட்டுத் தடைப்பட்டு, வெளிவந்துள்ள சிறு பத்திரிகைகள் 'வெகு ஜனம்' என்ற பெரிய வட்டாரத்தை எட்ட முடியா விட்டாலும் கூட, தமிழகக் கலை இலக்கியச் சூழலை வளமுடையதாக்க முயன்றிருக்கின்றன.

அலை (இலங்கை), மன ஓசை, படிகள், தாமரை, வானம் பாடி, கணையாழி, கவனம், அன்னம்விடு தூது முதலிய சிறு பத்திரிகைகள் பிறமொழிக் கவிஞரின் கவிதைகளைத் தமிழ் வடிவத்தின் மூலம் கொடுத்ததில் குறிப்பிடும்படியான இடத்தை வகிக்கின்றன. ஆனால், பழைய ''கண்ணதாசன்'' இலக்கிய இதழோடு நோக்க இவற்றின் பணி இரண்டாம் இடமே பெறும். கடம்னிட்ட ராமகிருஷ்ணன், வயலார் ரவிவர்மா போன்ற மலையாளக் கவிகளின் படைப்புகளைத் தமிழுலகிற்குச் சென்ற ஆண்டுகளில் அறிமுகப்படுத்தியதை நோக்க, 82-இல் வானம் பாடியின் பங்கு மிகவும் குறைவானதேயாகும். தாமரை, இந்த ஆண்டில் செமியான் கிர்ஸனோவ், அமிலியா ஹவுஸ் (தெ.ஆ.), ஹோ - சி-மின், ஒ.ன்.வி.குருப் (கேரளா) முதலிய கவிகளின் படைப்புகளைத் தந்திருந்தபோதிலும் அதன் பங்கு மற்ற சிறு பத்திரிகைகளோடு ஒப்பிடும்போது திருப்தியாக இல்லை. ''சோவியத்நாடு'' இதழானது வெளிக் கொணர்ந்த கவிதைகள் வறட்சிநிலைக்கு ஆட்பட்டுப் போயினவாகத் தோன்றுகின்றன. 'முழக்கம்' இதழ் 1980 - 81 ஆண்டுகளில் பிறமொழிக் கவிதைக்கு இடம் கொடுத்து, எண்பத்திரண்டைப் புறக்கணித்து விட்டது.

### நீக்ரோவியம் (Negritude)

ஏறக்குறைய 15-ஆம் நூற்றாண்டிலிருந்து வெள்ளையர் களால் கொடுமைப் படுத்தப்பட்டுச் சித்திரவதைக்குள்ளாகி யிருக்கும் மனித இனமாகிய நீக்ரோக்கள், அடிமைத்தனத்தை எதிர்த்துத் தொடர்ந்த போராட்டத்தை மேற்கொண்டு வருகின் றனர். தென் ஆப்ரிக்கா, அமெரிக்கா, இங்கிலாந்து என்றிங்கெல் லாம் நிறவெறிக் கொடுமைகள் ஆங்கிலேயரால் இழைக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இயற்கை, கறுப்பு நிறத்தை அவருடைய தோலில் ஒரு மாறாத சாபமாகப் படிய வைத்து விட்டது. அதனால் நிறவெறிமிக்க வெள்ளையர் ஏற்படுத்திய காயங்

களோடு, அவர்கள் சோகத்தைச் சிலுவையாக சுமந்து நிற்கின்றனர். தங்களை விலங்கைவிட மிகவும் கேவலமாக நடத்தியும் அடிமைப்படுத்தியும் சுரண்டி வாழ்கிற ஆதிபத்தியக்காரரை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்துவதற்கு நீக்ரோ படைப்பாளிகள் தங்கள் எழுத்துக்கள் மூலம் மக்களை உசுப்பிவிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

''உங்கள் கருப்புத் தோல்களை
உங்கள் உடம்பை மூடும்
ஓர் அங்கியைப்போல் அணிந்து கொள்ளாதீர்கள்
அதை
ஒரு போர்க்கொடியைப்போல் உயர்த்திப் பிடியுங்கள்''
(அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், ப. 13)

என்று ஒரு கவிதை நீக்ரோக்களைப் பார்த்து அறைகூவல் விடுக்கிறது. தங்கள் அன்றாட வாழ்க்கையில் ரத்த அணுக்களைப் போலக் கலந்துவிட்டிருக்கும் இசை, நாட்டியம், இலக்கியம், ஓவியம், சிற்பம் ஆகிய கலாச்சாரக் கூறுகளில் படிந்துகிடக்கும் தங்களுடைய நிறப்பண்பை, ஏளனப் பார்வை கொண்ட உலகிற்கு வெளிப்படுத்திக் காட்டவேண்டும் என்ற தீவிர முனைப்பில் ''நீக்ரோவியம்'' (Negritude), புதிய நீக்ரோ இயக்கம்"(New Negro Movement) முதலிய இயக்கங்கள்தோன்றத் தொடங்கின. இவற்றின் நோக்கம் குறுகிய இனவெறி அல்ல; சார்த்தர் (Jean Paul sarter) சொல்வதுபோல் ''இனவெறியை எதிர்க்கும்—இனவெறியாகும்.'' ஆப்பிரிக்க நாடுகள், மற்றும் ஆசிய நாடுகளில் மேலைநாட்டுக் கல்வி புகுந்ததன் பலனாக அவற்றின் கலாச்சார வாழ்வில் மிகப்பெரும் சேதம் ஏற்பட்டிருக்கிறது. இதைத் தடுத்து நிறுத்துவதற்குப் படைப்பாளிகளும், அறிஞரும் குரல்கொடுத்து வந்திருக்கின்றனர். உகாண்டாவின் கவியான ஒகோட் பீ பிடெக் (Okot P. Bitek) முதலியோரின் எழுத்துக்களில் ''வகுப்பறைகளில் எங்கள் இளைஞர்களின் ஆண்மை சாகடிக்கப்பட்டு விட்டது. அவர்களது விதைகள் கனமான புத்தகங்களால் நசுக்கப்பட்டு விட்டன'' என்றவாறு, தங்கள் கலாச்சாரத்தில் நிகழ்ந்துவிட்ட பாதிப்புகள் வெளிப்படுத்தப்படுகின்றன. 1939—இல் எய்மீ சீசெய்ர் (Aime Ceasaire) என்பவரால் உருவாக்கப்பட்ட ''நீக்ரோவியம்'' என்ற சொல்லும் பொருளும் இயக்கமும் பிற்கால கருப்பு எழுத்தாளரால் வாதுக்கு அழைக்கப்பட்டன. ''நீகரோவியம்'' என்பது நிறவேறுபாடும் அல்ல; தன் மறுப்பும் அல்ல. அதே

நேரத்தில், அது வெறுமனே ஒப்புக் கொள்ளலும் அல்ல. அது தனக்குள்ளாகவே தன்னை வேரூன்றிக் கொள்வதாகும். தனது இருப்பை தானே உறுதிப்படுத்திக் கொள்ளுதல் ஆகும்'' எனவும், ''கருப்பு உலகத்தின் பண்பாட்டு மதிப்பீடுகளின் மொத்த உருவம்தான் 'நீக்ரோவியம்'. அதாவது இந்த உலகில் இயக்க முள்ள ஒன்றாக இருத்தல் ஆகும். ஜான் ரீடும், கிளைவ் வேக்கும் குறிப்பிடுவது போல—குறிப்பிட்ட முறையில் தன்னை இந்த உலகோடும் மற்றவற்றோடும் இணைத்துக் கொள்வ தாகும்''— எனவும் லியோபோல்டு சிடார் செங்காரால் 'இன்றைய உலகில் தோன்றிய இருபதாம் நூற்றாண்டின் மனித நேயம்' ஆக நீக்ரோவியத்திற்கு விளக்கம் தரப்படுகிறது.

''தன்னம்பிக்கைமிக்க புதிய தலைமுறையின் இத்தகைய விமர்சனங்களினால் இலக்கியத் தரம்மிக்க எழுத்துக்கள் தோன்றலாயின. பிரச்சாரங்கள் குறையத் தொடங்கின. உருவம், உள்ளடக்கம், உத்தி முறை ஆகிய அனைத்திலும் புதுமை தேடப்பட்டது. ஆப்பிரிக்கா மட்டும் அல்லாமல் பிரான்சு, அமெரிக்கா ஆகிய நாடுகளின் பின்னணியிலும் நீக்ரோக்கள் வாழ்க்கை சித்தரிக்கப்பட்டன. பேச்சு மொழியைக் காட்டிலும் விசாலமும், வசதியும் நிறைந்த உருவங்கள் தேடப் பட்டன. அதே நேரத்தில் நீக்ரோ மக்களுக்கே உரிய சிந்தனைத் திருப்பங்கள், கற்பனை, சொல்லாட்சி, நகைச்சுவையும் அவல மும் கலந்த தனிச்சுவை ஆகியவை திறம்பட வெளிப்பட லாயின'' (அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், பக். 14—15.).

**கறுப்பு இயேசுநாதர்**

மதங்கள் இன்றைக்கு மனித நேசத்தை உதிர்த்துக்கொண்டு விட்டன. இந்து, புத்தம், ஜைனம், இசுலாம், கிறித்தவம் என்று எல்லா மதங்களும் மனிதர் ஒற்றுமையாக வாழ்வதற்கு பதிலாக அவர்கள் பேதங்களில் விழுந்து கலகங்களில் அமைதியற்றவராக அல்லல்படுவதற்குக் காரணமாக அமைந்துவிட்டன. நடப்பு உலகம் இதனை உறுதிப்படுத்துகிறது. வெவ்வேறு இனங்களைச் சார்ந்து, கிறித்துவ மதத்தின் மூலம் ஒன்றுபட்டாலும் இயேசுவின் சந்நிதியில் கிறித்துவ மக்களே நிறவெறி யால் எவ்வளவு கொடுமையாக பேதப்படுத்தப்பட்டு, இழிவாகக் கருதப்படுகின்றனர் என்பதற்கு அமெரிக்காவைச் சேர்ந்த லாங்ஸ்டன் ஹ்யூக்ஸ் என்ற கவியின் ''கறுப்பு இயேசு நாதர்'' என்ற கவிதை ஒரு சான்றாக அமைகிறது.

"இயேசுவானவர்
ஒரு கருப்பனாகத் திரும்பி வருவாரானால்
அது நல்ல தல்ல.
அவர் சென்று பிரார்த்தனை செய்யமுடியாத
தேவாலயங்கள்
இங்கு ஏராளமாய் உள்ளன.
எவ்வளவு புனிதப் படுத்தப்பட்டாலும்
நீக்ரோக்களுக்கு
அங்கே வாயில்கள் மறுக்கப்படும்.
அங்கே இனம்தான் பெரிதே தவிர
சமயம் அல்ல.
ஆனால்
இதை மட்டும் உறுதியாகச் சொல்லலாம்—
இயேசுவே!
நீர்
நிச்சயமாக
மீண்டும்
சிலுவையில் அறையப்படுவீர்"

(அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், ப. 60)

மேற்கண்ட கவிதையில், நீக்ரோக்களைத் தேவாலயங்களும் கூட நிறத்தின் காரணமாகப் புறக்கணிப்பதைக் காணவியலும். ரே டுரம் என்றகவிஞனின் "கறுப்பு நங்கையின் கண்ணீர்" என்ற கவிதை வெள்ளை இனம், நீக்ரோக்களுக்கு இழைக்கும் அநீதிகள் பற்றி ஒருவித யுத்தியின் மூலம் விவரிக்கிறது.

"மிக மிக துயரமான கண்ணீர்
ஒரு கறுப்பு நங்கையின் கண்ணீர்தான்.
ஏனெனில்
அவளை அழவைப்பது சுலபமல்ல
அவள் மகனை அவளிடமிருந்து
எடுத்துச் செல்.
அவனை போதைப் பழக்கத்துக்கு ஆளாக்கு.
வயலில் அவனை உழைக்கவை.
கொரியாவில் அவனைக் கொன்றுபோடு.
ஒரு பி.எச். டி. பட்டத்துடன்
ஓட்டலில் உணவு பரிமாறச் செய்.
அவள் உதிர்ப்பாள் ஒரு புன்னகை
– தனக்கே உரித்தான
கசப்புப் புன்னகையை

கேடயமாகப் பயன்படும்
தன் கறுப்பு முகமூடியின் ஊடாக
அவள் உதிர்ப்பாள்.
கண்ணீர் பெருகும்
உள்ளுக்குள்
இரத்தச் சிவப்பாக.
அவள் கணவனை
அவளிடமிருந்து பிரித்து வை.
சமையல் அறையிலேயே
சாக வை.
பெரிய கடன் ஒன்றை உண்டாக்கி
ஆயிரம் நாளில் அதை
திருப்பிக்கொடுக்கச் செய்.
அவள் கொடுப்பாள்
தண்டனை ஒன்று கொடுத்து
ஆயிரம் இரவுகளைக் கழிக்க வை
அவள் கழிப்பாள்.
ஆயினும்
வெள்ளையனே,
நீ அவளிடமிருந்து
கண்ணீரை மட்டும் பெறமுடியாது
ஏனெனில்,
அவள் துயரங்களின் அரசி''

(*அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், பக். 103-104.*)

அழகியல்

*நீக்ரோக்களின் கவிதைகளில் அழகியல் வளத்திற்குப் பஞ்சம் இல்லை. உவமை, உருவகம், படிமம் என்றான உத்திகளின் மூலம், கருத்தை இலகுவாகத் தெளிவிக்கும் கவிதைகளும் நமது பார்வையில் படுகின்றன. அந்த வகையில், ஹவாயைச் சேர்ந்த பிராங்கு மார்ஷல் டேவிஸ் என்ற கவிஞரின் 'இரவு மூன்று பார்வைகள்' என்னும் கவிதை நெஞ்சில் சுவடு பதிக்கக் கூடியது.*

I

ஆசையுடன்
காதலனைத் தேடி விரையும்
காதலியைப்போல்
இரவு,

உலகென்னும் அறைக்குள் வந்து
சயனித்து
உடன்பட்டு
மன நிறைவுடன்
நிலவின்
குளிர்வடிக்கும் வட்டமுகத்தின்
எதிரே படுத்திருக்கிறது.

II

இரவு
ஒரு குறும்புக்காரக் குழந்தை.
வானத்துக்கும் பூமிக்கும்
இடையிலே நடைபழகி
சன்னல்களிலும், கதவுகளிலும்
தவழ்ந்து
அண்டை வீட்டில் எல்லாம்
கருநீலத்தை அப்பிவிடும் குழந்தை.
அதைத் துடைப்பதற்குக்
கையில் துணியுடன்
மன்னிப்புக் கேட்டுக் கொண்டே
தொடரும் தாய்தான்
பகல்.

III

இரவு
வீடுவீடாகச் சென்று
கருப்புப்பை நிறைய
நட்சத்திர மிட்டாய்களும்
அட்டைக் கோப்பைகளில்
இனிக்கும் நிலவையும்
திரிந்து விற்று
கைச்சரக்குத் தீர்ந்த பின்னால்
விடியற் காலையின்
சாம்பல் நிறக் காசுகளை
ஓசையெழ குலுக்கிக் கொண்டே
வீடு திருமபுகிறது.

தமிழில் புதுக் கவிதையின் வருகை நிகழ்ந்ததற்குப் பிறகு, இது போன்ற கற்பனைகளும், கவிதை வடிவங்களாக இடம்

பெற்றுள்ளன. ஆனாலும், மேற்கண்ட [illegible]விதையின் பரிமாணம் மிக அழகிய வார்ப்பாகத் திகழ்ந்து மனத்தைக் கவர்கிறது.

சுமார் முப்பது கவிதைகளையும் கொண்டு, ஆப்பிரிக்க சிறு கதை, நாடகம், கட்டுரை என்ற இலக்கிய வடிவங்களின் தொகுப்பு நூலாக அமைந்த 'அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம்' தமிழுக்கு வந்த புதிய வளமான வரவு ஆகும். நீக்ரோக் களின் கறுப்பு எழுத்துக்களில் தணியாத ஆசைவைத்துக் கவனம் செலுத்திய இந்திரன், அவற்றைத் தமிழில் கொணர்ந்தமை பாராட்டுதலுக்குரியது. தமிழகக் கலை இலக்கியங்களில், தமக் குரியநிறப்பண்பை பாதுகாக்கவேண்டும் என்று இங்குள்ள படைப் பாளிகளுக்கு நீக்ரோவிய எழுத்துக்கள் பிரக்ஞையூட்டுமெனில், அதுவே போதுமானது.

### மைதிலி மொழிக் கவிஞன்

இந்தியும் நேபாளமும் கலந்த மக்கள் மொழியான மைதிலி யில் காதற் கவிதைகள் புனைந்து, அம்மொழியை இலக்கிய அரியணையில் ஏற்றி வைத்த சிறப்புக் குரியவராகப் போற்றப் படுகிறவர் கவி வித்யாபதி. கி. பி 1380 - 1406-களுக்கிடையே எழுந்த அவரது தனிப்பாடல்களில், காதற் கவிதைகள் தாம் அவருடைய பெருமைக்குச் சிகரங்களாக அமைகின்றன. அவை, கண்ணன்-ராதையை மையமாகக் கொண்டு, அவர்களின் உறவை, சூழ்நிலையை, மனத்தைச் சித்திரிப்பனவாக அமைந்து விடு கின்றன. இன்றும் கூட மிதிலைப் பகுதிகளில் திருமணங்களிலும், மக்கள் நாவுகளிலும் காதல் ரசம் பெருகப் பொங்கி வழிந்து கொண்டிருக்கும் மக்கள் பாடல்களாக வித்யாபதியின் கவிதை கள் திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

கவிஞர் பாலா தமிழ்ப் புதுக் கவிதைக்கே யுரிய ஒரு வித நடைப்பாங்கில் அவற்றைத் தமிழாக்கம் செய்திருக்கிறார். "இந்தக் கவிதைகள் மைதிலி மொழியில் எழுதப்பட்டிருந்தாலும் வடமொழி இலக்கிய மரபைத் தழுவியே அமைந்துள்ளன. வடமொழிக் காதல் இலக்கிய மரபு, தமிழ்க் கவிதை மரபி லிருந்து வேறுபட்டதல்ல. இயற்கை சார்ந்த வாழ்வு விளை விக்கும் உணர்ச்சிப் பின்புலமும் மன ஆழத்தை நுண்ணிதாகப் படம் பிடிக்கும் சாமர்த்தியமும் இரண்டிற்கும் பொது. ஆயினும் தமிழ் மரபை விட வடமொழி மரபு உடல்சார்ந்த உணர்வெழுச் சிகளைத் தயக்கமின்றி எடுத்து வைக்கிறது" (வித்யாபதியின் காதற் கவிதைகள், ப. 9).

வித்யாபதியின் காதற் கவிதைகள், காதல் என்னும் உணர்ச்சித் தீ பற்றி எரியும் பெண்ணின் மனத்தை மிக நயமாகத் தீட்டிக் காட்டுகின்றன. கனவில் வந்த கண்ணன் ராதையிடம் செய்த குறும்புகளைச் சொல்லி அவள் புலம்புகின்ற வரிகள்:

''இன்று இரவு
அந்த அமுத அரசனைக்
கனவில் கண்டேன்.
அவன் என் ஆடை நுனிதான் பற்றினான்.
காதல் உணர்ச்சி வேகத்தில்
கழன்றன ஆடை முடிச்சுகள்.
என் கரங்கள்
நெஞ்சிற்குத் தாவின
ஆயினும்
பொற் குன்றத்தை
தாமரை இதழ்களால்
மறைத்திட இயலவில்லை.
(வித்யாபதியின் காதற் கவிதைகள், ப. 43).

காதலனைக் கவர்ந்திழுப்பதற்குக் கவி வித்யாபதி பெண்ணவளுக்கு இங்கே 'காதல் பாடம்' சொல்லித் தருகிறார்:

''முதலில் உன் கூந்தலை அழகுசெய்.
மேனியில் சந்தனம் தடவிக் கொள்.
எங்கும் நிலைக்காது சுழலும்
கண்களுக்கு அஞ்சனம் தீட்டு
மேனி போர்த்து அவனிடம் செல்.
கொஞ்சம் தொலைவிலேயே நின்றுகொள்.
அவன் உன் அருகில் வர ஆவலைத் தூண்டு.
சிறிது நாணம் காட்டு.
கடைக் கண்களினால் காமனைத் துயிலெழுப்பு.
உன் மார்பைப் பாதி மூடி நில்.
ஒவ்வொரு நொடியும்
ஆடைகளை இறுக்கி முடிந்துகொள்
முதலில் கோபம் காட்டிப்
பின் காதல் காட்டு
இவ்வுணர்வைப் பேணு
அப்போதுதான் அவன் வருவான்
பின்னும் பின்னும்''
(காதல் பாடம், ப. 46).

கவிஞர் வித்யாபதி, தமிழில் புதியன இவை என்று சொல்லும் படியான பல அழகிய உவமைகளைத் தனது கவிதைகளில் மின்னும் பொன்னாகக் காட்டி, அழகு பார்க்க வைக்கிறார்.

''அளவுக்கதிகமாய் நிலவொளி உண்டு
மயங்கிக் கிடக்கும் சகோரப் பறவைகள் போல்
களைப்பும் சிவப்பும் கொண்ட உன் கண்கள்,
போர் முடித்தபின்
களத்தில் கிடத்திச் சென்ற
காமன் வில்போல்
ஆடாமல் அசையாமல்
களைத்துக் கிடக்கும்உன் புருவங்கள்''
(பேசும் கோலம், ப. 50)

''குழந்தைத் தன்மையும் இளமையும்
அங்கே சந்திக்கின்றன—
போரைச் சந்திக்கும்
இருநாட்டுப் படைகள் போல''
(பள்ளி எழுச்சி, ப. 13).

என்பன போன்ற உவமைகளில் போரும் போர்க் கருவிகளும் கவிஞனுக்கு மிக இயல்பாகப் பயன்படுகின்றன.

''அவள் சென்ற திசைநோக்கி
என் கண்களும் சென்றன—
ஒரு கஞ்சனைக் கூட
பிச்சைக்காரன்
பின் தொடராது விடுவதில்லையே!''
(தண்டனை, ப. 21).

என வரும் யதார்த்தமிக்க உவமையும்,

''மேகம் வெடித்து மழை பொழிந்த
அந்த இருண்ட பகற்பொழுதில்
இரவென்று நினைத்து
காதலரிடம் செல்ல
என்னை அழகு செய்தேன்.
என் துணிச்சல் வெற்றி தந்தது
மேகம் பிறர் கண்களை மறைத்துவிட்டது.
அப்போது நான் நினைத்ததை
எப்படிச் சொல்வேன்?
பட்டப் பகலில் யானையைத்
திருடிச் செல்வது போன்று...''
(பகல் திருட்டு, ப. 33.)

என்ற கவிதையில் வரும் 'யானைத் திருட்டு' உவமையும் மறப்பதற்கு அரியன.

''புயல் என எழுந்தது
என் மூச்சுக் காற்று
அதில் என் சிலம்பு மணிகள்
ஆர்த்த வண்டென
அதிர்ந்தது கேட்டது''(உலகு முடியவில்லை ப. 53)

''அந்த இருட்டு நிறத்தவனை
மின்னல் கொடிபோல்
நான் கட்டிக் கொண்டேன்''
''அந்த ஈரமுகத்தை
காயும் நிலவுபோல்
உண்டேன்''

(உலகு முடியவில்லை, ப. 52).

என்பன போன்ற காதலுணர்வுத் தொடர்பான உவமைகள், மொழிபெயர்ப்பு என்ற தடையேதுமின்றி அனுபவிக்கக் கூடியனவாகப் பதிந்து விடுகின்றன. 'வித்யாபதியின் காதற் கவிதைகள்' காதல் வயப்பட்ட நெஞ்சங்களின் புலம்பல்களையும், வருணனைகளையும், உவமைகளையும் மிக்க எழிலோடு பேசுகின்றனவாக அமைந்து, இலக்கியச் சுவை யூட்டுகின்றன.

உலகின் மூலை முடுக்குகளில் எல்லாம் அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்களின் குரலாக ஒலிக்கும் கவிஞரின் படைப்புகளும், அந்தந்த மக்களின் கலாச்சாரத்தைப் பிரதிபலித்துக் காட்டக் கூடிய பிறமொழிக் கவிதைகளும், மொழியை எப்படியெல்லாம் இலாவகமாகப் பயன்படுத்த முடியும் என்று சோதனையாக எழுந்த அயல்மொழிக் கவிதை வடிவங்களும் தமிழில் பெயர்க்கப் படவேண்டும். அதற்குச் சிறுபத்திரிகைகளும், மொழிபெயர்ப்புக் கலையில் திறன் மிக்க அறிஞரும் சமூகநோக்கம் கொண்டோரும் துணைபுரிவது அவசியமாகும்.

**உசாத்துணைப்பட்டியல்:**

## 1. இதழ்கள்

1. அலை, 2. அன்னம்விடு தூது, 3. சிகரம், 4. சிறகு (கலை இலக்கிய மாதஇதழ்), 5. கவிதா, 6. சாயாவனம் (கையெழுத்து ஏடு), 7. கணையாழி, 8. கவனம், 9. சோவியத்நாடு, 10. படிகள், 11. தாமரை, 12. மன ஓசை.

## 2. மலர்கள்

1. தீக்கதிர், கார்ல்மார்க்ஸ் நூற்றாண்டு நினைவு மலர், ஆர். கே. முத்தையா, 6-16, பைபாஸ் ரோடு, மதுரை-18.
2. இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 14-வது கருத்தரங்கு, சிறப்பு மலர், பெங்களூர், 29, 30, மே, 1982.

## 3. நூல்கள்

1. அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், தமிழில்: இந்திரன்; அன்னம் வெளியீடு, (பி) லிட், சிவகங்கை, ஆகஸ்ட், 1982.
2. வித்தியாபதியின் காதற் கவிதைகள், தமிழில்: பாலா, அன்னம் பிரைவேட் லிமிடெட், சிவகங்கை, ஜூலை, 1982.

# 32. நகைச்சுவைத் துணுக்குகள்

-மு. சாயபு மரைக்காயர்.

நகைச்சுவைத் துணுக்குகளால் உருவாகிய தொகுப்பு நூல்கள் எட்டு, எண்பத்திரண்டில் வெளியாகியுள்ளன. நகைச்சுவைத் துணுக்குக் கதைகளும், பெரியோர் வாழ்வின் நகை பொங்கும் நிகழ்வுகளும் இதில் இடம் பெறுகின்றன. பலவகையான இதழ்களும் இத்தகு துணுக்குகட்கு மிகுதியான இடமளித்து இத்துறையை வளர்க்கின்றன.

துன்ப-துயரங்கள் சூழ்ந்த இவ்வுலகில் மனித இனத்தை மகிழ்ச்சிப்படுத்துவது நகைச்சுவையே. பிற உயிரினங்களுக்கு நகைச்சுவையை உணரும் அறிவோ, நகைக்கும் ஆற்றலோ இல்லை. எனவேதான் அரிஸ்டாட்டில், 'உயிரினங்களில் நகைத்து மகிழக் கூடியவன் மனிதன் ஒருவனே!' என்கிறார்.

மனித இனத்துக்கு இறைவனால் வழங்கப்பட்ட தலையாய வரமாய், தனிப்பெருஞ் சொத்தாய் நகைச்சுவை உணர்வு திகழ்கின்றது. இவ்வுணர்வு மட்டும் இல்லாவிடில் வாழ்க்கைச் சோலை மனிதர்க்கு வறண்ட பாலையாய்த் தோன்றும். அதனால்தான் அண்ணல் காந்தியடிகளும், ''எனக்கு மட்டும் நகைச்சுவை உணர்வு இல்லையானால், எப்போதோ தற்கொலை செய்து கொண்டிருப்பேன்'' என்றார்.

சிரிப்பென்ற ஒன்று சிறுதளவும் இன்றேல்<br>
பொறுக்காது இந்த உலகு

என்றும்,

சிரிக்கத் தெரியாச் சிறுபிழையால் அந்தோ<br>
மரித்துள்ள மாந்தர் பலர்

என்றும் வான்கோழியார் என்ற புலவர் பாடியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

நகைச்சுவையின் அருமையை அறியாமல் வாழ்வோர்க்கு, இவ்வுலகம் பகற்பொழுதிலும் இருள் மூழ்கிக் கிடப்பதாகத் தோன்றும் என்னும் பொருள்பட,

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள் (999)

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் தெளிவுபடுத்தியுள்ளார். அதனாலன்றோ அவரும், 'இடுக்கண் வருங்கால் நகுக' (621) என்றார்.

எல்லாச் சுவைகளிலும் நகைச்சுவையே முதன்மையானது என்பதை உணர்ந்துதான் தொல்காப்பியனாரும்,

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்(று)
அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப (தொல்-மெய்-3)

என்று எண்வகை மெய்ப்பாடுகளுள் நகைச்சுவையை முதற்கண் வைத்துப் பாடியுள்ளார். அன்றியும் எள்ளல், இளமை, பேதமை, மடன் என்ற நான்கினையும் நிலைக்களனாகக் கொண்டு நகைச்சுவை தோன்றும் என்று நகைச்சுவையின் வகைகளையும் நுட்பமாக உணர்ந்து கூறியுள்ளார்.

எள்ளல் இளமை பேதமை மடனென்று
உள்ளப் பட்ட நகை நான் கென்ப (தொல்-மெய்-4)

மேலும் தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய பேராசிரியரும், "நகை என்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலுமென மூன்றென்ப" என்று மூவகைப்படுத்தி மொழிகின்றார். வாழ்விலக்கணம் வகுத்த தொல்காப்பியம், இவ்வாறு நகைச்சுவைக்கும் இலக்கணம் வகுத்துள்ளதென்று தமிழராகிய நாம் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்.

மன மகிழ்ச்சிக்கு மட்டுமின்றி உடல் நலத்துக்கும் உறுதுணை புரிவது நகைச்சுவை. வளமான உடல்நலத்துக்கும், நல்ல இரத்த ஓட்டத்துக்கும் நகைச்சுவை துணை புரிவதாக மருத்துவ அறிஞர் கூறுகின்றனர். வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்.

மொகலாயப் பேரரசர் அக்பரின் அரசவையில் பீர்பால் என்ற அமைச்சரும், விஜயநகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயரின் அவையில் தெனாலிராமனும் விகடகவிகளாக விளங்கி,

காலத்தால் அழியாத நகைச்சுவைக் கதைகளை வழங்கி யுள்ளனர்.

எல்லாக் காலத்திலுமே நகைச்சுவை உணர்வோடு வாழ்ப வரை எல்லாரும் விரும்புகின்றனர். சொற்பொழிவாளரும் தமது பேச்சினிடையே பொருத்தமான நகைச்சுவைத் துணுக்கு களையும் கதைகளையும் சொல்வாரானால் அந்தப் பேச்சு அனைவரையும் கவர்கின்றது.

மக்களது 'ரசனை'யை உணர்ந்தே நாடகம், திரைப்படம், பத்திரிகை போன்ற எல்லாத் துறைகளிலும் நகைச்சுவைக்குச் சிறப்பிடம் வழங்கப்படுகின்றது. இலக்கியத்தில்கூட இடை யிடையே நகைச்சுவை கலந்துவருமானால், கற்போர் சலிப்பின்றி ஆர்வத்துடன் படிக்கின்றனர்.‡

சங்க காலம் முதல் தற்காலம் வரை தோன்றியுள்ள தமிழ் இலக்கியங்களிலும் நகைச்சுவை சிறப்பான இடத்தைப் பெற்றி ருக்கக் காணலாம். காளமேகப்புலவர், ஔவையார், இரட் டையர், அந்தகக் கவி வீரராகவ முதலியார் போன்ற புலவர் பெருமக்கள், தமது நகைச்சுவைப் பாடல்களாலேயே புகழ் பெற்றவர் ஆவர். பாரதியார், பாரதிதாசன், கவிமணி போன்ற இந்நூற்றாண்டுக் கவிஞரின் பாடல்களிலும் நகைச்சுவை இழைந் தோடுவதை உய்த்துணர இயலும்.

தற்காலப் படைப்பிலக்கியம் எதுவாயினும் நகைச்சுவை யோடு எழுதப்படுமானால், மக்களிடையே பெரும்வரவேற்பைப் பெறுகின்றன. இன்றைய நிலையில் நகைச்சுவையை வெளிப் படுத்துவதற்குத் துணுக்குகளே சிறந்த இலக்கிய வடிவங்களாக உள்ளன. "விரைவான காலஓட்டத்தில், இன்றைய மனிதர்க்குப் படைப்பிலக்கியங்களை ஆழ்ந்து படிக்கின்ற பொறுமையும், நேர மும் இல்லை. இதழ்களில் வெளிவருகின்ற துணுக்குகளை மட்டும் படிப்பதிலேயே மிகப் பலர் தம் அறிவுப் பசியைத் தணித்துக் கொள்கின்றனர். எனவேதான் எல்லா இதழ்களுமே துணுக்கு களுக்கு முதலிடம் தந்து வெளியிடுகின்றன. எல்லாராலும்

‡ மு. சாயபு மரைக்காயர் 'சற்றே நகைத்துப் பாரீர்' வானொலிப் பேச்சு, புதுவை வானொலி நிலையம் 22-8-83 இரவு 9-30 மணி.

இன்றைக்கு மிகவும் விரும்பிப் படிக்கப்படுபவை துணுக்குகள் தாம்!''*

இத்துணுக்குகளையும் நகைச்சுவைத் துணுக்குகள், செய்தித் துணுக்குகள், தகவல் துணுக்குகள், அறிவியல் துணுக்குகள் என்று பல வகையாகப் பாகுபடுத்திக் கொள்ளலாம். ஆயினும் இவற்றுள் எல்லாத் தரப்பினராலும் எக்காலத்திலும் விரும்பப் படுபவை 'நகைச்சுவைத் துணுக்குகளே' எனில் அது மிகையன்று.

இத்தகு சிறப்பிற்குரிய நகைச்சுவைத் துணுக்குகள் நம்மைச் சிரிக்கச் செய்வதோடு சிந்தனைக்கும் விருந்தாக அமைகின்றன. பல நேரங்களில் நம் கவலைக்கும் மருந்தாகத் திகழ்கின்றன.

நகைச்சுவை என்பது இயல்பிலேயே நகையை எழுப்பிச் சுவையினை நல்குவதாய் இருத்தல் வேண்டும். சோர்வைப் போக்கிச் சுறுசுறுப்பைத் தருவதும், கவலையைக் களைந்து களிப்பை நல்குவதும் நகைச்சுவையேயாம். இத்தகு நகைச்சுவை உணர்வை உயிரோட்டமாகக் கொண்ட துணுக்குகளே 'நகைச் சுவைத் துணுக்குகள்' என்று வழங்கப்புடுகின்றன.

நல்ல குறிக்கோளோடு அமைந்து நல்வழி காட்டுவதும், இணையிலா இன்பத்தைத் தருவதும் இலக்கியங்கள் ஆகும். இப் பணியை நகைச்சுவைத் துணுக்குகளும் செய்வதால் அவற்றை யும் இலக்கியங்களாய் ஏற்கலாம்.

கதைகள் சிறுகதை தொடர்கதை கவிதை
இவைதாம் இலக்கியம் என்று எண்ணி வந்தோம்;
துணுக்குகள் தாமே என்று சிரித்த
அணுக்கள் இவையும் இலக்கியம் ஆகும்**

என்கிறார் பேராசிரியர் ரா. சீனிவாசன்.

''கதை, கட்டுரைக், கவிதைகளைப் போலவே துணுக்கு களும் இலக்கியந்தான்! அரும்பெரும் கருத்துக்களையெல்லாம் மிகச் சில வரிகளில் சுவையாகவும், செறிவாகவும், அழகாகவும், ஆணித்தரமாகவும் சொல்லிவிடும் ஆற்றல் துணுக்குகளுக்கு

---

* மு. சாயபு மரைக்காயர் ''நீங்களும் சிரிக்கலாமே'' நூலின் முன்னுரை, பாத்திமா பதிப்பகம், காரைக்கால், முதற் பதிப்பு பிப்ரவரி 1981, பக். 3.

** ரா. சீனிவாசன், சிரித்து மகிழுங்கள், அணியகம், சென்னை-30, முதற் பதிப்பு அக். 1975, பக். 3.

உண்டு. ஒரு நாட்டின், ஓர் இனத்தின் ஒரு சமுதாயத்தின் பண்பாட்டைக் கூடத் துணுக்குகள் அழகாகப் படம் பிடித்துக் காட்டிவிடுகின்றன''** என்னும் கருத்தும் உண்டு.

இலக்கியச் சுவையை எல்லாரும் அனுபவித்துவிட முடியாது. கற்றவர் மட்டுமே இலக்கிய இன்பத்தைத் தம் அறிவுத் திறத்தால் உணர்ந்து மகிழ முடியும். ஆனால் நகைச் சுவையைக் கல்லாதவரும் சுவைக்கலாம். படித்தவர், பாமரர் என்ற பாகுபாடின்றி எல்லாத் தரப்பினரும், எல்லா வயதினரும் சுவைத்து மகிழத்தக்கதாய் நகைச்சுவை விளங்குகின்றது; எல்லாரையும் எளிதில் கவர்கின்றது.

1982-ஆம் ஆண்டில் தமிழில் வெளியான நகைச்சுவைத் துணுக்குகளைக் கீழ்க்காணும் இரு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம். அவை,

1. நூல் வடிவில் வெளியான நகைச்சுவைத் துணுக்குகள்,
2. இதழ்களில் வெளிவந்த நகைச்சுவைத் துணுக்குகள் என்பன.

இவ்விரு வகைக்குள் அடங்கும் நகைச்சுவைத் துணுக்குகள் மட்டுமே இக்கட்டுரையில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. 1982-ஆம் ஆண்டில் இலக்கியச் சொற்பொழிவு கள், பட்டி மன்றங்கள், வழக்காடு மன்றங்கள், கவியரங்கங்கள், நாடகங்கள், திரைப்படங்கள் போன்றவற்றில் சொல்லப்பட்ட நகைச்சுவைத் துணுக்குகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட வில்லை.

### நகைச்சுவைத் துணுக்கு நூல்கள்

தமிழில் இதுவரை முப்பதுக்கும் குறைவான நகைச்சுவைத் துணுக்கு நூல்களே வெளிவந்துள்ளன. ஆங்கிலம் போன்ற பிற மொழிகளை ஒப்புநோக்க, இது மிகமிகக் குறைவான எண்ணிக்கையாகும்.

1907 ஆம் ஆண்டில் பாப்புராஜபுரம் ஹக்கீம் முஹம்மது நிஜாமுகியித்தீன் சாகிபு அவர்களால் இயற்றப்பட்டு சென்னை யில் வெளியான 'மஹா விகட விநோதக் களஞ்சியம்'† என்ற நூலே, தமிழில் தோன்றிய முதல் நகைச்சுவைத் துணுக்கு

** மு. சாயபு மரைக்காயர், நீங்களும் சிரிக்கலாமே, பக். 3.

† இந்நூல் இக்கட்டுரை ஆசிரியரிடம் உள்ளது.

நூலாகும். ஆனால், முல்லை முத்தையா, தாம் எழுதிய சுவாரஸ்ய விருந்து என்ற நூலே தமிழில் தோன்றிய முதல்நகைச் சுவைத் துணுக்கு நூல் என்கின்றார். “இன்றைய வாசகர்கள் சுவையான கருத்துக்களை, சின்னஞ்சிறு துணுக்குகளை ஆர்வத் தோடு படித்து மகிழ்கிறார்கள். ‘சுவாரஸ்ய விருந்து’ என்ற நூலை 1952-ல் வெளியிட்டேன். அதுவே தமிழில் வெளியிடப் பெற்ற முதல் நூல்”* என்கின்றார். இதிலிருந்து 1907-ஆம் ஆண்டுக்கும் 1952-ஆம் ஆண்டுக்கும் இடையில் நகைச்சுவைத் துணுக்கு நூல்கள் அனேகமாக வெளி வரவில்லையென்று துணியலாம்.

இதையடுத்து, 1959-ஆம் ஆண்டில் பி. சி. ஜோசப் அவர்களால் சிரியுங்கள், சிரிக்க வையுங்கள் என்ற நகைச்சுவைத் துணுக்கு நூல் வெளியிடப்பட்டுள்ளது.

அதற்குப் பிறகும் ஓரிரு நகைச்சுவைத் துணுக்கு நூல்கள் வெளி வந்திருக்கலாம். ஆயினும் அண்மைக் காலத்தில் தான் நகைச்சுவைத் துணுக்கு நூல்கள் அதிகமாக வெளிவரத் தொடங்கியுள்ளன. ரா. சீனிவாசன், சிரித்து மகிழுங்கள் என்ற நூலை, விரிவானதோர் முன்னுரையோடு வெளியிட்டுள்ளார்.

தஞ்சை குஞ்சிதபாதம் அவர்கள், நகைச்சுவை விருந்து, அறுவை ஜோக்ஸ், காதலர் ஜோக்ஸ், டீன்ஏஜ் பிளேபாய் ஜோக்ஸ், ஹாஸ்ய உலகம், சிரிப்பதற்காக மட்டும், மனம் விட்டுச் சிரியுங்கள், ஆபீஸ் ஜோக்ஸ் முதலிய எட்டு நகைச் சுவைத் துணுக்கு நூல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளார். இது வரை அதிகமான நகைச்சுவைத் துணுக்கு நூல்களை வெளி யிட்டவர் இவரே.

கவிஞர் குயிலனின் இளமை ஜோக்குகள், மு. சாயபு மரைக் காயரின் நீங்களும் சிரிக்கலாமே!, ஸாரதியின் நகைச்சுவை ஸ்பெஷல், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழுவின் சிரித்து மகிழச் சிறந்த ஜோக்குகள், ராஜா சொர்ண சேகரின் மறக் காமல் சிரிக்கவும் போன்றவை, 1981-ஆம் ஆண்டு வரை தமிழில் வெளிவந்த குறிப்பிடத் தக்க நகைச்சுவைத் துணுக்கு நூல்களாகும்.

1982—ஆம் ஆண்டில் மட்டும் எட்டு நகைச் சுவைத் துணுக்கு நூல்கள் வெளி வந்துள்ளன. நகைச் சுவைத் துணுக்கு

* முல்லை முத்தையா, “நகைச்சுவை விருந்து”, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு, நவம்பர் 82, பக். vi

இலக்கியத் துறையில் இவ் ஆண்டில் தான் அதிகமான நூல்கள் வெளியாயிருக்கின்றன என்பது குறிப்பிடத் தக்கது.

**1. நகை மொழிக் கதைகள் நானூறு. (4 ஆம் பாகம்),** *வித்துவான் ஆர். எஸ். ஜேக்கப், ஜெபா நிலையம், பாளையங்கோட்டை 627002, பக். (8+94) 102, விலை : ரூ. 5.*

'நகைமொழிக் கதைகள் நானூறு' என்ற தலைப்பில், ஏற்கெனவே மூன்று பாகங்களை வெளியிட்டுள்ள இந்நூலாசிரியர், இறுதி நான்காவது பாகமாக இந்நூலை எழுதியிருக்கிறார். பிற பாகங்களைப் போலவே இந்நூலிலும் நூறு கதைத் துணுக்குகள் இடம் பெற்றுள்ளன.

நெல்லைத் திருமண்டிலத் திங்களிதழாகிய "நற்போதகம்" இதழின் இணையாசிரியராகப் பணியாற்றும் இந் நூலாசிரியர், 'பழமொழி நானூறு' போன்ற இலக்கிய மரபைப் பின் பற்றி இந்நூலை உருவாக்கியதாகக் கூறுகிறார்.

"தேனடைக்குக் காரணமான மலர்கள் யார் யாருக்கோ சொந்தமானவை. அவ்வண்ணமே இத் தொகுப்பும்! இந் நகை மொழிக் கதைகளில் சில அன்றாடப் பத்திரிக்கைகளில் யான் படித்தவை. இன்னும் சில, சான்றோர் அருளுரைகளில் கேட்டவை; மற்றும் சில சொந்தமானவை" என்று இந்நூல் உருவான வகையை ஆசிரியர் தம் முன்னுரையில் (பக் iv) விளக்குகின்றார்.

இந்நூலில் இடம் பெற்றுள்ளவை கதைத் துணுக்குகள்.

**ஒரே ஒருவர்:** ஒரு கூட்டத்தில் பிரசங்கம் செய்த ஒருவர் உலகிலுள்ள யாவரும் மனைவிக்குப் பயப்படுகிறவர்கள் தாம் என்று சொல்லி விட்டு, "மனைவிக்குப் பயப்படுகிறவர்களெல்லாம் தென் பக்கம் வாருங்கள்" என்றார். யாவரும் தென்பக்கம் வர, ஒரே நபர் மட்டும் வட பக்கம் நின்று கொண்டிருந்தார். அவ் வீராதி வீரரை அனைவரும் ஆச்சர்யத்துடன் நோக்கினர்.

பிரசங்கியார் அவரைப் பார்த்துக் கேட்டார், 'நீர் மட்டும் ஏன் அங்கே நின்றீர்?' அதற்கு அவர் சொன்னார்: "கூட்டத்தோடு போகாமல் தனியே நில்லுங்கள்" என்று என் மனைவி சொல்லி அனுப்பினாள். எனவே தான் நான் தனியாக நின்றேன்" என்றார். கூட்டம் ஒரே சிரிப்பொலியில் மிதந்தது.

(பக். 84.)

சுவையான துணுக்குகள் சில இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஆயினும் பெரும்பாலானவற்றைப் படிக்கும் போது நகைச்சுவை எழவில்லை. அவை வெறும்செய்தித் துணுக்குகளாக விளங்குகின்றன.

இந்நூலாசிரியர் கிறித்துவராக இருப்பதாலும், கிறித்துவ இதழில் பணியாற்றுவதாலும், துணுக்குகளின் வழியே கிறித்துவ நெறியைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டு இந்நூலை வெளியிட்டுள்ளார். நகைச் சுவை எழாவிட்டாலும் பல துணுக்குகள், நாம் அறியாத பல புதுச் செய்திகளை அறிவிப்பனவாய் உள்ளமை பயனுடையது.

**2. சிரிக்கலாம் கவலையை மறக்கலாம்!, ப்ரியா பாலு, நர்மதா பதிப்பகம், தி. நகர், சென்னை-17, பக். 112, விலை: ரூ. 6.**

துணுக்கு எழுத்தாளர் ப்ரியா பாலு தொகுத்தளித்த நகைச்சுவைத் துணுக்கு நூலாகிய இது படிக்கச் சுவையாக அமைந்துள்ளது.

இதற்கு, நூலாசிரியர் முன்னுரை எழுதவில்லை. இந்நூலின் பின்பக்க அட்டையில், "இந்நூல் இது வரையிலும் பத்திரிக்கைகளில் வெளியான இவரது நகைச் சுவைத்துணுக்குகளைக் கொண்டே தொகுக்கப் பெற்றிருக்கிறது" என்ற குறிபபு காணப்படுகிறது. ஆனால், பல்வேறு துணுக்கு எழுத்தாளர்களின் நகைச்சுவைத் துணுக்குகளும் இந்நூலில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. ஆங்கிலத் துணுக்குகளின் தழுவலாகச் சில அமைந்துள்ளன.

பல்வகைச் சுவையிலும் அமைந்த நகைச்சுவைத் துணுக்குகள் இந்நூலை அணி செய்கின்றன. சில துணுக்குகள் 'அறுவை'யாக அமைந்து நம்மைச் சிரிக்க வைக்கின்றன.

"ஆற்றுக்குப் பணக்கவலை கிடையாது

எப்படி?

அதன் இரு பக்கமுந்தான் 'பாங்க்' இருக்கிறதே".

(பக். 5)

வேறு சில துணுக்குகள் 'பாலியல் துணுக்குகளாக' (Sexual Jokes) அமைந்து நகைச்சுவை பயக்கின்றன.

இந்நூலிலுள்ள இன்னும் சில துணுக்குகள் கதைத் துணுக்குகளாக அமைந்து, படித்தவுடன் வெடிச்சிரிப்பை ஏற்படுத்துகின்றன.

ஒரு விடுதியில் இருந்த வாசகம் :

'படுக்கையிலிருந்து கொண்டு சிகரெட் பிடிக்காதீர்கள். கீழே விழும் சாம்பல் உங்களுடையதாகவும் இருக்கலாம்''. (பக். 94)

நம் கவனக்குறைவு, நம் அழிவுக்கே காரணமாய் அமைந்து விடும் என்ற உண்மையை எவ்வளவு நாசூக்காக இந்த நகைச் சுவைத் துணுக்கு எடுத்துணர்த்துகிறது.

'Generation gap' என்பதற்கு ஒரு நகைச்சுவைத் துணுக்கு அழகான விளக்கம் தருகின்றது.

'Generation gap' என்றால் அர்த்தம் என்ன?

தாய் விளக்கு ஏற்ற பெண் வேண்டும் என்று விரும்புகிறாள். மகன் விளக்கை அணைக்க பெண் வேண்டும் என்று விரும்பு கிறான். (பக். 6)

இந்தச் சொல்லுக்கு இதைவிடச் சுருக்கமாக விளக்கம் தர முடியாதல்லவா?

இத்தொகுப்பின் 12, 23, 25, 40, 81, 86, 90, 108 போன்ற பக்கங்களில் இடம்பெற்றுள்ள நகைச்சுவைத் துணுக்குகள், ஏற் கெனவே வெளிவந்துள்ள நகைச்சுவைத் தொகுப்பு நூல்களுள் வெளியிடப்பட்டவை ஆகும். அவற்றை இத்தொகுப்பிலும் சேர்க்காமல் தவிர்த்திருக்கலாம். துணுக்குத் தொகுப்புக்களை வெளியிடும்போது, முடிந்தவரை அவற்றின் படைப்பாளிகளது பெயர்களையும் சேர்த்துப் பிரசுரிப்பது நல்லது.

3. படிக்கக் கூடாத ஜோக்குகள். மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, பக். 156, விலை: ரூ. 8.

இந்நூல் முழுமையும் பாலியல் துணுக்குகளை உள்ளடக்கிய தாக உள்ளது. பெரும்பாலும் ஆங்கிலத்தில் வெளிவருகின்ற பிளேபாய் ஜோக்'குகளின் மொழி பெயர்ப்பாகவே இந்நூல், துணுக்குகள் அமைந்துள்ளன. எல்லா வயதினரும் இந்நூலைப் படிப்பது ஏற்புடையதன்று என்று எண்ணித்தானோ என்னவோ, ''படிக்கக் கூடாத ஜோக்குகள்'' என்று பெயர் சூட்டியுள்ளனர்.

ஒரே வகைச் சுவையுடைய துணுக்குகளே இதில் ஒரு சேரத் தொகுக்கப்பட்டிருப்பதால், பெரும்பாலும் எரிச்சலைத் தருகின்றன. பாலியல் துணுக்குகள் நகைச்சுவை உணர்வோடு மட்டுமே எழுதப்படுமானால், படித்துவிட்டுச் சிரிக்கலாம். நகைச்சுவைக்கு இடமின்றி ஒழுக்கத்தையும் பண்பாட்டையும்

பொருட்படுத்தாமல், இழிநிலை உணர்வுகளோடு எழுதப்படும் இவ்வகைத் துணுக்குகள் இளைஞர் நெஞ்சங்களைக் கெடுக்க வல்லவை. அவற்றை நச்சிலக்கியமாக ஒதுக்க வேண்டுமே யன்றி, நகைச்சுவை இலக்கியமாக ஏற்கவியலாது.

**4. மேதைகள் தமாஷ், (தொகுப்பு)மயிலை நாதன், மயிலவன் பதிப்பகம், மைலாப்பூர், சென்னை-4, பக். 152, விலை: ரூ. 8.**

கற்பனையாக எழுதப்படும் நகைச்சுவைத் துணுக்குகள் கலகலப்பை ஊட்டுவதைப் போன்று, மேதைகளின் வாழ்விலே நடைபெறும் நகைச்சுவை நிகழ்ச்சிகளும் மகிழ்ச்சியை அளிக்கின்றன. அவ்வாறு 147 சான்றோரின் வாழ்வில் நிகழ்ந்த நகைச்சுவையான நிகழ்ச்சிகள் இந்நூலில் அழகாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

''இந்த முதலாளித்துவ சமூக அமைப்பில் மக்கள் இன்பத்தைக் குறைவாகவும் துன்பத்தை மிகுதியாகவும் அனுபவிக்கிறார்கள். அதனால் வாழ்வில் ஒருவித வறட்சி இருந்துகொண்டு தான் இருக்கும். இந்த நிலையில் இசையும் நகைச்சுவையுந்தாம் துன்பச் சுமைகளைச் சிறிது குறைக்க வல்லவை. நான் இசையை வழங்க இயலாது அல்லவா? நகைச்சுவையைத் திரட்டித் தந்திருக்கிறேன்'' (பக். 10) என்று இந்நூலைத் தொகுத்ததற்கான காரணத்தைத் தொகுப்பாசிரியர் மயிலைநாதன் தம் முன்னுரையில் கூறுகின்றார்.

அரசியல் மேதைகள், தலைவர், நீதிபதிகள், தத்துவ ஞானிகள், விஞ்ஞானிகள் இலக்கிய மேதைகள், எழுத்தாளர், கவிஞர், பத்திரிகையாளர், ஓவியர், திரையுலக மேதைகள், இயல், இசை, நாடகக் கலைஞர், இஸ்லாமியச் சான்றோர், கிறித்துவப் பெரியோர் என்று எல்லாத் துறைச் சான்றோரின் வாழ்வில் நடந்த நகைச்சுவை நிகழ்ச்சிகளும் சிறப்பாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவை நம்மைச் சிரிக்கச் செய்வதோடு சிந்திக்கவும் தூண்டுகின்றன.

ஒரு சமயம் காந்தி ஜெயந்தியன்று காந்திஜிக்குப் பணமுடிப்பு அளிப்பதற்காக ஆயிரக் கணக்கான ரூபாய் வசூலாகி இருந்தது. அந்தப் பணமுடிப்பைச் சுட்டிக்காட்டி திருமதி. சரோஜினி நாயுடு, ''இதைத் தங்களிடம் கொடுக்காமல் நான் எடுத்துக் கொண்டு ஓடிவிட்டால், என்ன செய்வீர்கள்?'' என்று காந்திஜியைக் கேட்டார்.

அதற்கு காந்திஜி ''இந்த மாதிரி ஜோலிக்குத் தாங்கள் மிகவும் லாயக்கானவர்தான் என்று தெரிந்துகொள்வேன்'' என்று சொல்லிச் சிரித்தார். (பக். 18)

இது போன்று 147 மேதைகளின் வாழ்வில் நடந்த சுவை யான நிகழ்ச்சித் துணுக்குகள், இந்நூலில் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. அவை படிக்கும்போது சிரிப்பைத் தருவதோடு, பாதுகாக்க வேண்டிய துணுக்குகளாகவும் திகழ்கின்றன.

**5. நகைச் சுவை விருந்து (தொகுப்பு) முல்லை முத்தையா, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், பக். (8+164) 172, விலை: ரூ. 8-50.**

தமிழ் இலக்கியவுலகுக்குச் சுவையான நூல்கள் பலவற்றைத் தொகுத்து வழங்கியுள்ள முல்லை முத்தையா, இந்நூலில் 199 நிகழ்ச்சித் துணுக்குகளைத் தொகுத்துள்ளார்.

ஐன்ஸ்டீன், டார்வின், எடிசன், வின்ஸ்டன் சர்ச்சில், ஆபிரகாம் லிங்கன், ஐசன்ஹோவர், ஆலிவர் கோல்டுசுமித், அலெக்சாண்டர் டூமாஸ், பைரன், ஹிட்ச்காக், சார்லி சாப்ளின் போன்ற அயல்நாட்டுச் சான்றோரின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே இந்நூலில் பெரும்பாலும் துணுக்குகளாய் இடம் பெற்றுள்ளன.

தங்களைப் போலவே பிறரையும் கருதுவது சிலருடைய இயல்பு. ஒருமுறை பிரபல விஞ்ஞானி ஐன்ஸ்டீன் ரயிலில் பிரின்ஸ்டன் என்ற ஊருக்குப் போய்க்கொண்டிருந்தார். இடை வேளையில் உணவு வண்டியில் உணவு கொள்ளச் சென்றார். அவரிடம் உணவுப் பண்டங்களின் பட்டியல் ஒன்றைக்கொடுத் தான் உணவு பரிமாறுகிறவன்.

மூக்குக்கண்ணாடியை மறந்து வேறு வண்டியில் வைத்துவிட்டு வந்ததால், பட்டியலில் குறிப்பிட்டிருப்பதை அந்த ஆளையே படித்துச் சொல்லும்படி கேட்டார் ஐன்ஸ்டீன்.

அவனோ பட்டியலை அப்படியும் இப்படியும் பார்த்துவிட்டு, ''தெரியல்லீங்களே, ஐயா! உங்களைப் போலவே எனக்கும் படிக்கத் தெரியாதுங்க!'' என்று கூறினன். (பக். 7)

மாமேதை ஐன்ஸ்டீனும் ஒரு சூழலால் கல்லாதவராகக் கருதப்பட்டார் என்ற இந்நிகழ்ச்சி படிக்கச் சுவையாக உள்ளது.

திருப்பங்களோடு கூடிய சுவையான சிறுகதை போல் விளங்கும் இந்நிகழ்ச்சி, படித்ததும், நகைப்பை விளைவிக்கிறது.

ஆனால் இந்நூலிலுள்ள எல்லா துணுக்குகளும் நகைச்சுவை உணர்வோடு தொகுக்கப்படவில்லை. பெரும்பாலானவை நகைச்சுவைக் கலப்பற்ற செய்தித் துணுக்குகளாகவே உள்ளன.

**6. சிந்திக்க வைக்கும் சிரிப்புவெடிகள், (தொகுப்பு) மா. சேசையா மாணிக்கம் பதிப்பகம், சென்னை, பக். 232, விலை: ரூ. 15.**

இந்நூலில் 1029 சிரிப்புத் துணுக்குகளைத் தொகுத்து வழங்கியுள்ளார் ஆசிரியர். "இது வெறும் Joke book அல்ல. பல நூறு சிரிப்பு வெடிகள், தொகுக்கப் பெற்று ஒரு மணி மாலையாக இது திகழ்ந்தாலும் இடையிடையே ஆன்மீகத் தலைவர்கள், அறிஞர்கள், பத்திரிக்கை ஆசிரியர்கள், அரசியல்வாதிகள், இலக்கிய மேதைகள் போன்றோர் பலரின் நகைச்சுவையுடன் அறிவுச்சுடர் வீசும் பல நூறு பட்டைத் தீட்டிய வைரங்களையும் இடம் பார்த்து, பொருத்தமான வகையிலே புகுத்தித் தொகுத்துள்ளேன்" என்று நூலின் தொகுப்புப் பற்றி ஆசிரியர் தம் முன்னுரையில் கூறுகின்றார் (பக்-7.)

தமிழ், ஆங்கில இதழ்களில் வெளியான நகைச்சுவைத் துணுக்குகளும், அறிஞர் அண்ணா, திருமுருக கிருபானந்த வாரியார், கலைஞர் கருணாநிதி போன்றோரது சொற்பொழிவுகளில் இடம் பெற்ற நகைச்சுவைச் செய்திகளும், பாபுராவ் பட்டேல், தமிழ்வாணன். சோ போன்றோரதுகேள்வி பதில்களும்; 'குமுதம்', 'கல்கி', 'இதயம்', 'சாவி' போன்ற இதழ்களில் வெளியான கேள்வி-பதில்களும் இந்நூலில் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. இராமகிருஷ்ண பரமஹம்சர், காஞ்சி காமகோடிப் பெரியவர்கள் போன்றோரது பொன் மொழிகளையும், சில பழமொழிகளையும் கூட ஆசிரியர் இந்நூலில் தொகுத்திருக்கிறார்.

பொன் மொழிகள் சிலவற்றில் சிந்தனைக்கு இடமிருக்கிறதேயன்றி சிரிப்புக்கு வழியில்லை. இவை போன்ற பொன்மொழிகளையும் பழமொழிகளையும் நகைச்சுவை நோக்கோடு தொகுக்கப்பட்டுள்ள இந்நூலில் ஆசிரியர் சேர்க்காமல் தவிர்த்திருக்கலாம். அவ்வாறே பத்திரிகையில் வெளியான கேள்வி—பதில்கள் சிலவற்றைச் சேர்த்திருப்பதும் இந்நூலுக்குத் தேவையில்லை. "குடும்பத்தோடு சேர்ந்து 'குபீர்' சிரிப்பு சிரிக்க இந்நூல் உதவும்" என்று ஆசிரியர் தம் முன்னுரையில் கூறியிருந்தாலும் அவ்வளவு துணுக்குகளும் சிரிப்பை வரவழைக்கவில்லை.

நீதி மன்றங்களில் தொடரப்படுகின்ற வழக்குகள் உடனடியாக முடிந்து விடுவதில்லை. அவை ஆண்டுக் கணக்கில் நீண்டு கொண்டே போவதுண்டு. நீதித் துறையின் மெத்தனத்தை அழகாக உணர்த்துகின்றது ஒரு துணுக்கு.

நீதிபதி :- உனக்கு என்ன வயதாகுது?
கைதி :- ஐம்பதுங்க!
நீதிபதி :- முப்பத்தஞ்சுன்னு ஏறிப்பிட்டிருக்கே?
கைதி :- அது, வழக்கு ஆரம்பிச்சப்போ உள்ள வயசுங்க (பக். 13.)

திரைப்பட நடிகைகள் வயதை மறைப்பது வாடிக்கை. அதைப் போலவே தாம் நடிக்க வராவிட்டால் டாக்டராகவோ, பேரா சிரியராகவோ ஆகியிருப்போம் என்று பேட்டி கொடுப்பதும் அவர்களுக்கு உரிய தனிக்கலை.

நிருபர் :- நீங்க நடிக்க வராமல் இருந்தால் என்ன பண்ணிக் கிட்டு இருப்பீங்க?

நடிகை:- ஐ.ஏ.எஸ். படிச்சு டாக்டராகி இருப்பேன்! (பக். 28)

நடிகையின் அறியாமையை அப்பட்டமாகக் காட்டும் இத் துணுக்கு, தொல்காப்பியர் சுட்டும் 'பேதமை' வகையைச் சார்ந்தது.

வேலையில்லாத் திண்டாட்டம், எல்லாக் குடும்பங் களையுமே பாதிக்கின்ற ஓர் அவலநிலை ஆகும். அந்த அவலச் சுவையிலும் நகைச்சுவையைக் காண முடியும் போலும்!

மகன் :- அப்பா, இன்னிக்கி எம்ப்ளாய்மென்ட் ஆபீசுக்கு என்னுடைய கார்டை ரினுவல் செய்யணும்.

தந்தை :- அப்படியே என்னுடைய கார்டையும் ரினுவல் செய்திடு.

தாத்தா :- பேராண்டி! போறது தான் போறே, என் கார்டையும் அப்படியே ரினுவல் செய்து கொண்டா! (ப. 45)

மூன்று தலைமுறைக்கும் வேலை கிடைக்கவில்லை என்பதைச் சிரிப்பாகச் சொல்லும் இத் துணுக்கு, நம்மைச் சிந்திக்கவும் தூண்டுகிறது. இவை போன்ற சமுதாய நிலையைக் காட்டும் சில துணுக்குகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

ராமு :- இது உங்க சொந்தக் கப்பலா?

சீனு :- இல்லே, எங்க சொந்தக்காரங்க கப்பல்!

ராமு :- ஓ! ஐ ஸீ! ரிலேஷன் ஷிப்பா? (பக். 102)

என்பது போன்ற அறுவைத் துணுக்குகளும்,

ரவி :- அம்மா நான் 'துப்பு துலக்கப்' போறேன்!

அம்மா :- முதல்லே உனக்குப் 'பல் துலக்கவே' துப்பு இல்லை! (பக். 131)

என்பது போன்ற சொல் விளையாட்டுக்களும்.

ஒருவர் :- மிஸ்டர் சர்ச்சில்...நீங்க அரசியல் பேச்சு பேசும் போது எவ்வளவு கூட்டம் கூடுது பார்த்தீர்களா?

சர்ச்சில் :- என்னைத் தூக்கில் போட்டால் இதை விடப் பத்து மடங்கு கூட்டம் கூடி வேடிக்கை பார்க்கும்! (பக். 188)

என்பது போன்ற நிகழ்ச்சித் துணுக்குகளும், இந்நூல் முழுவதும் நிறைந்துள்ளன. ஒவ்வொரு துணுக்கிற்கும் பொருத்தமான தலைப்பை ஆசிரியர் தந்திருப்பது போற்றத் தக்கது. ஆனால் துணுக்குகளின் சொந்தக்காரராகிய படைப்பாளர் பெயர்களைச் சேர்க்காமல் விட்டிருப்பது வருத்தத் துக்குரியது. ஆய்வாளராகிய ஆசிரியர், தாம் தொகுத்த துணுக்குகளின் அடிப்படையில் ஓர் ஆய்வுக் கட்டுரையும் எழுதிச் சேர்த்திருப்பாரானால் இந்நூலுக்கு இலக்கியவுலகில் மதிப்பு ஏற்பட்டிருக்கும்.

7. **நகைச்சுவை 40**, கு. அங்க முத்து, தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம். பக். 48, விலை : 2-90.

சொற்பொழிவு மேடைகளிலும், நண்பர் உரையாடல் களிலும் தாம் கேட்ட நாற்பது நகைச் சுவைக் கதைகளைத் தொகுத்து ஆசிரியர் இந்நூலை வழங்கியுள்ளார். இவையாவும் படிக்கச் சுவையாக உள்ளன.

**தகராறு :** ஓரிடத்தில் மக்கள் கூட்டமாகக் கூடித் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். வழியில் சென்ற ஒருவன் கூட்டத்தில் நுழைந்து தகராறுக்குக் காரணம் என்னவென விசாரித்தான். கூட்டத்திலிருந்த ஒருவன் 'தகராறுங்கற வார்த்தை தாங்க எங்க தகராறுக்கே காரணம்' என்றான்:

வழிப்போக்கன், "அது என்ன தகராறு" என்று கேட்டான். அதற்கு அவன் சொன்னான் : "ஐயா! தகராறு என்று எழுதும் போது பெரிய 'ற' போடறதா? சின்ன 'ர' போடறதா? அப் படிங்கறதைப் பத்திதான் இங்கே தகராறு. ஒவ்வொருத்தனும் ஒவ்வொரு விதமாச் சொல்றான்" என்றான்.

வழிப்போக்கன் அவர்களைப் பார்த்து "இதற்கா தகராறு போட்டுக்கிறீங்க. இது என்ன பெரிய விவகாரம்? சின்னத் தகராறு இருந்தா சின்ன 'ர' போட்டு எழுதுங்க. பெரிய தகராறு வந்தா பெரிய 'ற' போட்டு எழுதுங்க" என்றான், (பக்கம். 17).

இதன் துணுக்குகள், ஒரு சிறுகதைக்கு வேண்டிய கலை உத்திகள் யாவற்றையும் பெற்று விளங்குகின்றன. ஓர் உணர்வு, ஒரு நிகழ்ச்சி, ஒரு சிக்கல் அல்லது ஒரு பாத்திரப்படைப்பு என்ப வற்றையே கருப்பொருளாகக் கொண்டு சிறுகதைகள் எழுதப்படு கின்றன. ஆனால் இத்தகு கதைத் துணுக்குகள் நகைச்சுவை உணர்வை மட்டுமே நோக்கமாகக் கொண்டுள்ளன. சுருக்கமான வடிவத்தில் செறிவாக அமையும் இவை போன்ற நகைச்சுவைக் கதைகளைக் கேட்டு மகிழ்வதற்காகவே, இற்றை நாளில் இலக்கிய நிகழ்ச்சிகளுக்கு வருவோரின் தொகை பெருகியிருக் கிறது எனலாம்.

ஒலி வடிவத்தில் வழங்கி வந்த நகைச்சுவைக் கதைகள் சில வற்றை எளிய நடையில் நூல் வடிவாக்கியிருக்கும் புலவர் கு. அங்கமுத்து பாராட்டுக்குரியவர். நகைச்சுவைத் துணுக்கு இலக் கியத்துறையில் இதுபோன்ற நூல்கள் பெருகுதல் வேண்டும்.

8) அத்தைக்கு மீசை முளைக்கிறது, வ. தேனப்பன், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை. பக் (2+48)50, விலை. ரூ. 3.

1982-ஆம் ஆண்டு வெளிவந்துள்ள எட்டு நகைச்சுவைத் துணுக்கு நூல்களுள், முழுமையும் ஆசிரியரால் எழுதப்பட்ட துணுக்குகளைக் கொண்ட ஒரே நூல் இதுவே ஆகும். தொகுப்பு நூலாக அமையாமல் படைப்பிலக்கியமாகத் திகழ்வது இந் நூலின் தனிச்சிறப்பு எனலாம்.

'இந்த மாதிரி ஜோக்குகளை இதற்கு முன்பு எங்கோ படித் திருக்கிறோமோ என்று எவரும் புகார் கூறாதபடி அவரது கற்பனை உணர்வு சுத்தமாகச் செயல்பட்டிருக்கிறது. எனவே அவர் 100% Pure Jokes என்று போட்டிருப்பது மெத்தச் சரியே. நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளருக்கு இருக்க வேண்டிய முக்கியமான சிறப்பு அம்சம் இது. இந்த இலக்கணத்திற்கு இலக் கியமாக இருக்கிறார் தேனப்பன்'* என்று எழுத்தாளர் லேனா தமிழ்வாணன் இந்நூலாசிரியரைப் பாராட்டியிருப்பது ஏற்கத் தக்கதேயாகும்.

தேனப்பன் எழுதி ஏற்கெனவே பல்வேறு இதழ்களில் வெளி வந்தவையும் இந்நூலுக்கெனப் புதிதாக எழுதப்பட்டவையுமாக 220 துணுக்குகள் இந்நூலை அணி செய்கின்றன. நாட்டு நடப்புக்

* லேனா தமிழ்வாணன், முன்னுரை, அத்தைக்கு மீசை முளைக்கிறது, பக். 2.

களை வேதனையோடு நோக்கி, சமுதாயச் சீர்கேடுகளை நகைச் சுவை உணர்வோடு சாடுவதில் தேனப்பன் தனக்கென ஒரு தனிப் பாதை அமைத்துக் கொண்டுள்ளார்.

இன்று எங்கும், எதிலும் இடம் பெற்றுவிட்ட 'கலப் படத்தை', மிகவும் தூய்மையாகப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

*வீட்டுல செடிகளுக்கு, சாதாரணமா என்ன உரம் போட லாம்?*

*சாம்பல் இருந்தாப் போடுங்க. இல்லாட்டா சிமிண்ட் கிடைச்சாலும் போடலாம், இப்ப...ரெண்டும் ஒண்ணுதான்* (பக். 5)

கலப்படத்தை இதைவிட நாசூக்காக எள்ளி நகையாட முடியாதல்லவா? இப்பொழுதெல்லாம் போராட்டங்களின் போது உண்ணாவிரதம் இருப்பது பொழுதுபோக்காக மாறி விட்டது. அதையும் குறிப்பாகச் சாடுகிறார், ஆசிரியர்.

*அதென்ன சார் $23\frac{1}{4}$ மணி நேர உண்ணாவிரதம்! பாக்கி*
*$\frac{3}{4}$ மணி நேரமும் என்ன பண்ணுவீங்க?*
*மூணு வேளை சாப்பிடுவோம்* (பக். 41)

கட்டுப்பாடுகளும், தட்டுப்பாடுகளும் இன்றைய நாகரீக வாழ்வின் நடப்பியல் சித்திரங்கள்! மின்வெட்டைப் பற்றிய ஓர் அருமையான துணுக்கு—

*ஏன் சார் பகல் முழுக்க கரண்ட் கட் பண்ணிடுறாங்க!*

*பகல்லதான் சூரிய வெளிச்சம் இருக்குல்ல!*

*அப்ப... ராத்திரி முழுக்க ஏன் கட் பண்றாங்க?*

*ராத்திரியில தூங்குறபோது வேஸ்ட்டா எதுக்காகன்னு தான்!* (பக். 10)

இப்படி எல்லாவற்றையுமே நகைச்சுவையாக நினைக்கப் பழகி விட்டால் நம் பிரச்சினைகள் குறைந்துவிடும் அல்லவா?

கெரசினுக்கு மட்டுந்தானா தட்டுப்பாடு? கேஸ் சிலிண்ட ருக்குந்தான்...! பல நேரங்களில் கேஸ் சிலிண்டர் கிடைக்காமல் பழையபடி விறகுக் கட்டைகளோடு வெந்து போவது நமக்குப் பழக்கமாகி விட்டது. கடவுளே வந்தாலும் கேஸ் சிலிண்டர் கிடைக்காதாம். கேஸ் சிலிண்டர் தெய்வ சக்திக்கும் அப்பாற் பட்டது என்று அங்கதமாய்ச் சொல்கிறார் ஆசிரியர்,

கடவுள் : பக்தா! பல்லாண்டுகளாக நீ எதற்காகத் தவமிருக்கிறாய்?

பக்தன் : கேஸ் சிலிண்டர் கிடைக்க வரம் வேண்டும் சுவாமி!

கடவுள் : தெய்வ சக்திக்கு உட்பட்டது எதையாவது நீ கேட்கக் கூடாதா? (பக். 33)

இதைப் போன்றே விலைவாசி உயர்வையும் ஓர் இனிய துணுக்கில் உணர்த்திவிடுகின்றார் தேனப்பன்.

மயக்கமா இருக்கிறவனுக்குக் கொடுக்க, எலுமிச்சம்பழம் வாங்கப் போனான் நம்ம ராமு...
சரி அப்புறம்?
எலுமிச்சம்பழ விலையைக் கேட்டவுடனே அவனும் மயங்கி விழுந்துட்டான்! (பக். 23)

'இரண்டு கதைகள் எழுதுவதைக் காட்டிலும், ஒரு நகைச் சுவைத் துணுக்கு எழுதுவது கடினம்'. இதை அனுபவத்தாலேயே ஒருவர் உணர முடியும். ஒவ்வொரு துணுக்குமே சமுதாயத்தின் நிறைகுறைகளைச் சுட்டிக் கூறும் ஒரு மிகச் சிறிய கதையைத் தன் அகத்தே கொண்டிருக்க வேண்டும்'* என்று நகைச் சுவைத் துணுக்குகளுக்குத் தேனப்பன் கூறும் இலக்கணத்துக்கு ஒப்பவே அவர்தம் துணுக்குகளும் அமைந்திருப்பது பாராட்டத் தக்கது.

உங்க கதைகளைப் படிச்சதும், எனக்கு பீமன் ஞாபகந்தான் வரும்.
ஏன் அப்படி?
அவனும் 'கதை'யை ஆயுதமா வைச்சுத்தானாம்ல எல்லோரையும் கொல்லுவான்! (பக். 8)

என்றெல்லாம் சொல் விளையாட்டுக்களின் மூலமும் சிரிக்கச் செய்ய இவர் தெரிந்து வைத்திருக்கிறார்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள தேனப்பனின் துணுக்குகளில் பாதிக்கும் மேலானவை, படித்தவுடன் வெடிச்சிரிப்பைத் தரா

* வ. தேனப்பன், ''அத்தைக்கு மீசை முளைக்கிறது'' பக் 4.

மல் இருக்கலாம். ஆயினும் அவை ஆசிரியரின் சொந்தக் கற்பனையில் உருவானவை என்பதற்காகவே பாராட்டவேண்டும்.

1982 - ஆம் ஆண்டில் வெளியான எட்டு நகைச்சுவைத் துணுக்கு நூல்களுள் ஏழு, ஆசிரியர்தம் படைப்புக்களாக அமையாமல் தொகுப்பு நூல்களாகவே உள்ளன. இவற்றில் இடம் பெற்றுள்ள துணுக்குகள் தமிழ், ஆங்கில இதழ்களில் வெளிவந்தவையாகும். ஒரே ஒரு நூல் மட்டும் ஆசிரியரின் சொந்தப் படைப்பாக உள்ளது ('அத்தைக்கு மீசை முளைக்கிறது'). முற்றிலும் ஆங்கிலத் துணுக்குகளின் மொழிபெயர்ப்பாக ஒரு நூல் ('படிக்கக் கூடாத ஜோக்குகள்') அமைய, மூன்று நூல்களில் ('நகைச்சுவை விருந்து', 'மேதைகள் தமாஷ்', 'சிரிப்பு வெடிகள்') நிகழ்ச்சித் துணுக்குகளும் நகைச்சுவை நோக்கில் தொகுக்கப்பட்டுள்ளன. ஒரு நூல் ('நகைச்சுவை நாற்பது') முழுமையும் கதைத் துணுக்குகளாய் அமைந்து சிரிப்பு விருந்தளிக்கிறது.

## இதழ்களில் வெளிவந்த நகைச்சுவைத் துணுக்குகள்

1982-ஆம் ஆண்டில் தமிழ் இதழ்களில் வெளிவந்த நகைச்சுவைத் துணுக்குகள் பல. 'கவிதை யுகம்' 'நாவல் யுகம்" 'சிறுகதை யுகம்' என்று குறிப்பிடுவதைப்போல் தற்காலத்தைச் சொல்ல வேண்டுமானால் துணுக்கு யுகம் எனலாம். இன்றைய வாசகரால் பெரிதும் படிக்கப்படுபவை துணுக்குகள் தாம்! எனவேதான் எல்லா இதழ்களுமே துணுக்குகளை அதிகமாக வெளியிடுவதில் அக்கறை காட்டுகின்றன.

ரா. சீனிவாசன் சொல்வதுபோல், ''எந்தப் பத்திரிக்கையில் துணுக்குகள் அதிக இடம் பெறுகின்றனவோ அவை வாசகர்களிடம் மிகுதியான செல்வாக்கைப் பெறுகின்றன''*

துணுக்குகளிலும் சிறப்பாக நகைச்சுவைத் துணுக்குகளைத் தான் இளையோர் முதல் பெரியார் வரை விரும்பிப் படிக்கின்றனர். ''பத்திரிகைகளின் பாதி உயிர் மூச்சு நகைச்சுவைத் துணுக்குகள்தான்! இவைதான் இன்றைய பத்திரிக்கைகளின் கண்ணும் காதுமாக ஒவ்வொருபக்கத்திலும்இடம்பெறுகின்றன. வாசகர்கள் அனைவரும் எடுத்ததும் படிப்பது இவைகளைத்தான்! கதைகளை நேரம் கிடைக்கும்போது படித்துக் கொள்ளலாம் என ஒதுக்கி விடுகிற மனது சிரிப்புத்துணுக்குகளை மட்டும் காதலியின் கடிதத்தைப்போல் உடனடியாகப் படிக்க

---

* ரா. சீனிவாசன், சிரித்து மகிழுங்கள், பக். 16.

விரும்புகிறது. காரணம் இவை உருவில் சிறியவை; சுவையில் பெரியவை''** என்று எழுத்தாளர் தேனப்பன் இன்றைய இதழ்களில் நகைச்சுவைத் துணுக்குகளுக்குத் தரப்படுகின்ற இன்றியமையாமை பற்றிக் கூறுவது, நூற்றுக்கு நூறு உண்மையாகும்.

நாளிதழ், வாரஇதழ், மாத இதழ் என்ற வேறுபாடின்றி எல்லா இதழ்களுமே நகைச்சுவைத் துணுக்குகளுக்குச் சிறப்பிடம் தந்து வெளியிடுகின்றன ஓரிரு இதழ்கள் முழுமையும் நகைச்சுவைக்கு முதன்மை அளிக்கின்றன.

நகைச்சுவை உணர்வை வாசகர்களிடையே வளர்க்கும் வகையில் சில இதழ்கள் போட்டிகள் நடத்திப் பரிசளிக்கின்றன. ''தினத்தந்தி'', ''மாலைமுரசு'' போன்றநாளிதழ்கள் ஒவ்வொரு நாளும் சிறந்த நகைச்சுவைத் துணுக்குகளை வெளியிட்டுப் பரிசு தந்து பாராட்டுகின்றன. ''தேவி'' வார இதழில் அவ்வப்போது ''காணோம் சிரிப்பு'' என்ற தலைப்பில் சிரிப்பு வசனம் இல்லாத படங்களைக் கொடுத்து, அந்தப் படங்களுக்குப் பொருத்தமான சிரிப்பு எழுதுமாறு வாசகர்க்குப் போட்டி நடத்திப் பரிசளிக்கின்றனர்.

ஆனந்தவிகடன், குமுதம், சாவி, குங்குமம், இதயம் பேசுகிறது, ஜூனியர் விகடன், கல்கி, தாய் போன்றவார இதழ்களில் ஒவ்வொரு வாரமும் வெளியிடப்படுகின்ற நகைச்சுவைத்துணுக்கு ஒவ்வொன்றிற்கும் ஐந்து ரூபாய் முதல் பத்து ரூபாய் வரை அன்பளிப்பு வழங்கி ஊக்கமளிக்கின்றனர்.

ராணி வார இதழில் 'சிரிப்புக்கொத்து' என்னும் தனிப்பகுதி எல்லாவாரங்களிலும் இடம் பெறுகின்றது. ஆனந்த விகடன் ஒவ்வொரு வாரமும் 'நடுப்பக்க நகைச்சுவை' வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறது. சில நேரங்களில் நகைச்சுவைத் துணுக்குகளை அட்டைப்படத்திலேயே விகடன் வெளியிடுவதுண்டு.

(எ-டு) 'ஆனந்தவிகடன்' 5-9-82 இதழ்.

'ரெட்டை வால் ரெங்குடு' 'அரசியல் அய்யாவு' போன்ற சில கற்பனைப் படைப்புக்கள், 'விகடனில்' நகைச்சுவை வழங்கப் பயன்படுத்தப்படுகின்றன. அவ்வாறே 'குமுதத்தில்' அப்புசாமி, 'ராணி'யில் குரங்கு குசலா போன்ற கற்பனைப் பாத்திரங்களை நகைச்சுவைக்காகவே படைத்துள்ளனர். இப்பாத்திரங்களை

---

** வ. தேனப்பன், அத்தைக்கு மீசை முளைக்கிறது, பக். 3

உண்மை மனிதரோ என்று எண்ணும் அளவிற்கு இவ்விதழ்கள் தொடர்ந்து வெளியிட்டு வருவது குறிப்பிடத் தக்கது.

சில நேரங்களில் ஒரே தலைப்பில் நகைச்சுவைத் துணுக்குகள் இதழ்களில் தொகுத்துத் தரப்படுவதும் உண்டு.

1. தாய்— 10-1-82—சி(கி)ரிக்கெட் ஸ்பெஷல் ஜோக்ஸ்.
2. சாவி—17-1-82—காகம் ஜோக்ஸ்.
3. ஆனந்தவிகடன்—25-4-82—மன்னர் ஜோக்ஸ்.
4. தாய்—12-9-82—கொசு கொசு கொசு.
5. ஆனந்தவிகடன்—17-10-82—சிரிப்புத்திருடன் சிங்கார வேலு.
6. கல்கி—14-11-82—பட்படார் ஜோக்ஸ்.
7. தாய்—5-12-82—ஆசிய விளையாட்டு.

நகைச்சுவைத்துணுக்குகளை ஒவ்வோர் இதழிலும் வெளியிட வேண்டியிருப்பதால், அவற்றின் தேவை அதிகமாக இருக்கின்றது. அதனால் சில நேரங்களில் சுவையற்ற துணுக்குகளையும் இதழ்கள் வெளியிட்டு விடுகின்றன. இதைப்பற்றிக் குறைபட்டுக் கொள்கிறார் ஒரு வாசகர்.

"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என்று போடுவதற்கு ஒன்றும் குறைச்சலில்லை. வரவர ஜோக்குகளைப் படித்தால் மகா எரிச்சலாய் வருகிறது. ஒன்றும் சிரிப்பை வரவழைக்கக் காணோம்"‡ என்று வருத்தப்படும் வாசகரின் எண்ணத்தையும் 'விகடன்' வெளியிட்டிருக்கிறது.

இது ஒருபுறமிருக்க, சில துணுக்கு எழுத்தாளர் தாம் காப்பியடித்த துணுக்குகளை இதழ்களுக்கு அனுப்பி விடுகின்றனர். இதழ்களும் அவற்றை அடையாளம் காணமுடியாமல் பிரசுரித்து விடுகின்றன. அவை வெளியானபிறகு வாசகரிடமிருந்து புகார்கள் வரத்தொடங்க, அதன்பிறகே தம் தவறுணர்ந்து இதழ்கள் வருத்தம் தெரிவிக்கின்றன. இது வாடிக்கையாய் அடிக்கடி நிகழும் செயலாகும்.

ஒரு முறை 'கல்கி' வார இதழ் பின்வருமாறு அறிவிப்பு வெளியிட்டிருந்தது:

---

‡ எஸ். எல். பாபுகுமார், பெங்களூர்-21, "ஆனந்த விகடன்" 10-1-82.

"இந்த இதழில் (3-10-82) அவ்வளவும் தகவல் துணுக்குகளே! ஒரு சிரிப்புத் துணுக்கு கூடக் கிடையாது. காரணம்? 'காப்பி அடித்த ஜோக்' புகார்கள்தாம்! சுயமாகச் சிந்தித்துச் சிறப்பாக ஜோக் எழுத ஒருவாரம் அவகாசம் தந்திருக்கிறோம். பார்க்கலாம் உங்கள் திறமையை!"

— "கல்கி" 3-10-82

ஆகவே நகைச்சுவைத் துணுக்குகளை வெளியிடும்போது அவை எழுத்தாளரின் சொந்தக் கற்பனையில் எழுதப்பட்டதா அல்லது ஏற்கெனவே இதழில் வெளிவந்து காப்பியடிக்கப் பட்டதா என்று கண்டறிய வேண்டிய பொறுப்பு இதழ்களுக்கு இருக்கின்றது. அதோடு அத்துணுக்குகள் படிக்கச் சுவையாக உள்ளனவா என்று பார்த்து வெளியிட வேண்டிய கடமையுணர்வும் இதழ்களுக்கு வேண்டும்.

சில இதழ்கள் நகைச்சுவைத் துணுக்குகளைத் தனியே சிறு பிரசுரமாகத் தொகுத்து, அவற்றை இலவச இணைப்பாக வாசகர்க்கு வழங்குவது உண்டு மதுரையிலிருந்து வெளிவரும் "ஓ" என்ற பல்சுவை மாத இதழ் 1982-ஆம் ஆண்டில் "சிரிப்போ சிரிப்பு" என்ற சிறு பிரசுரத்தைப் பொங்கல் இதழோடு இலவச இணைப்பாக வழங்கியுள்ளது.

எல்லா இதழ்களிலுமே நகைச்சுவைத் துணுக்குகள் இடம் பெறுகின்றன என்றாலும், ஓரிரு இதழ்கள் மட்டுமே நகைச்சுவை நோக்கோடு நடத்தப்படுகின்றன. ஒரு நூற்றாண்டுக்கு முன்பே தமிழில் நகைச்சுவை இதழ் வெளிவந்துள்ளது. கி. பி. 1885-இல் மகா விகட தூதன் என்ற நகைச்சுவை இதழ் வெளிவந்துள்ளது. பின்னர் பிரசண்ட விகடன், அதன்பின் ஆனந்தவிகடன் போன்ற இதழ்கள் நகைச்சுவை உணர்வை மக்களிடையே பரப்பும் பணியில் வெற்றி பெற்றுள்ளன.

அண்மையில் வெளிவரத் தொடங்கி இருக்கும் ஜூனியர் விகடன், அரசியல், சமூகச் சிக்கல்களை நகைச்சுவையோடு அலசுகிறது. சோ அவர்களை ஆசிரியராகக் கொண்ட துக்ளக் அரசியல் இதழேயாயினும், இதில் வெளியாகும் கட்டுரைகள், கார்ட்டூன்கள், கேள்வி பதில்கள் போன்ற எல்லாப் பகுதிகளுமே அங்கதச் சுவையோடு அமைந்து அனைவரையும் கவர்கின்றன 'துக்ளக்'கில் அவ்வப்போது வெளிவரும் "ஒண்ணரைப் பக்க நாளேடு" அங்கதச் சுவைக்கு அழகியதோர் எடுத்துக்காட்டு!

முழுமையும் நகைச்சுவைத் துணுக்குகளை மட்டுமே கொண்ட ஓரிதழ் தமிழில் இதுவரை வெளியிடப்படவில்லை.

அப்படியோர் இதழ் வெளிவருமாயின், அவ்விதழ் வாசகரிடையே பெரும் வரவேற்பைப் பெறக்கூடும்.

## நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளர்

புனைகதைத் துறையில் (fiction) புதினம் எழுதுவது எளிது; ஆனால் செறிவாகச் சிறுகதை எழுதுவது கடினம் என்பர். சில பக்கங்களில் எழுதும் சிறுகதைகளைக்கூடச் சிறப்பாகச் செய்து விடமுடியும். ஆனால் சில வரிகளில் எழுதப்படும் நகைச்சுவைத் துணுக்குகளை, எல்லாரும் சிரிக்கும்படி எழுதுவதற்குக் கடுமையான முயற்சியும், பயிற்சியும் வேண்டும்.

"பார்ப்பதை, கேட்பதை, மனதில் படுவதை அப்படியே சொல்லி விடுவது எளிது. ஆனால் நகைச்சுவைக்கு இது மட்டும் போதாது. நாம் அன்றாடம் சந்திக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இருக்கக்கூடிய நகைச்சுவையைப் பார்ப்பதற்கு ஒரு "எக்ஸ்ரே மனம் வேண்டும்" ‡ என்கிறார் எழுத்தாளர் சோ. இத்தகு எக்ஸ்ரே மனமும், இயல்பிலேயே நகைச்சுவை உணர்வும் கொண்டவரால் மட்டுந்தான் நகைச்சுவைத் துணுக்குகளைச் சிறப்பாகப் படைக்க முடியும்.

1982-ஆம் ஆண்டில் நகைச்சுவைத் துணுக்குகளைத் தமிழ் இதழ்களில் வழங்கிய எழுத்தாளருள் வெ. சீத்தாராமன், முத்து. தங்க. ஐயப்பன், கடலூர் கன்னியப்பன், வ. தேனப்பன், எம். பூங்கோதை, உ. ராஜாஜி, வி. பார்த்தசாரதி, மதன், சுதர்ஸன், கீழை. அ. கதிர்வேல் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்.

இவர்களுள் வெ. சீத்தாராமன் மட்டும் 1982-ஆம் ஆண்டில் 205 நகைச்சுவைத் துணுக்குகளை எழுதி வெளியிட்டுள்ளார். 'சாவி'யில் 56 துணுக்குகளும், 'குங்கும'த்தில் 51 துணுக்குகளும், 'இதய'த்தில் 32 துணுக்குகளும், 'விகடனில்' 21 துணுக்குகளும், 'கல்கி'யில் 16 துணுக்குகளும், 'தினமலர்'ரில் 14 துணுக்குகளும்; 'குமுத'த்தில் 10 துணுக்குகளும், 'மயனில்' 5 துணுக்குகளுமாக இவருடைய நகைச்சுவைத் துணுக்குகள் பிரசுரமாகியுள்ளன. இவ்வாண்டில் அதிக நகைச்சுவைத் துணுக்குகளை எழுதிய எழுத்தாளர் என்ற பெருமை வெ. சீத்தாராமனையே சேரும்.

---

‡ சோ, அணிந்துரை, "நகைச்சுவை ஸ்பெஷல்" ஸாரதி, முரளி பப்ளிகேஷன்ஸ், முதற்பதிப்பு, செப்டம்பர் 1981, பக். 5.

மற்றோரில் முத்து. தங்க. ஐயப்பன் 47 துணுக்குகளையும், கடலூர் கன்னியப்பன் 46 துணுக்குகளையும் இவ் ஆண்டில் எழுதியுள்ளனர். சிலர் நினைப்பதுபோல் நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளர், 'கத்துக்குட்டி'கள் அல்லர். சமுதாயத்தின் உயர்ந்த பதவிகளிலும், பெரும் பொறுப்புக்களிலும் உள்ளவர் பலர் நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளராக இருப்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

வெ. சீத்தாராமன் சென்னை திருவல்லிக்கேணிப் பகுதியில் புகழ்பெற்ற டாக்டராகத் திகழ்கின்றார். முத்து. தங்க ஐயப்பன் போடிநாயக்கனூர் கல்லூரியிலும், வ. தேனப்பன் தேவகோட்டை கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுகின்றனர். உ. ராஜாஜி ஒரு நூலகராகப் பணியாற்றுகிறார். இவ்வாறு டாக்டர், பேராசிரியர் என்று சமுதாயத்தின் அறிவு ஜீவிகளாக மதிக்கப்படுபவர் நகைச்சுவைத் துணுக்குகளை எழுதி வருகின்றனர். தொடக்கநிலை எழுத்தாளர்தான் துணுக்குகள் எழுதுவர் என்று சிலர் எண்ணுவது தவறு.

நகைச்சுவைத் துணுக்கு எழுத்தாளர்க்காக "உலக நகைச்சுவையாளர் சங்கம்" (Humour Club International) ஒன்று கர்நாடகாவில் தொடங்கப்பட்டு, இப்போது அதன் கிளைகள் தமிழகத்திலும் இயங்குகின்றன. சென்னையிலுள்ள நகைச்சுவை மன்றத்தில் (Humour Club) மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் கூடி, ஆர்வமுடைய பலரும் சிரிப்புத் துணுக்குகளைச் சொல்லி மகிழ்ந்து வருகின்றனர். இத்தகு சிரிப்பு மன்றங்கள் ஊர்கள் தோறும் தோன்றினால் நகைச்சுவை உணர்வு பெருகும்; நமது கவலைகள் குறையும்.

**அரசியல் நகைச் சுவைத் துணுக்குகள் :**

அன்றாட அரசியல் வாழ்வில் நடைபெறும் அட்டூழியங்களை எள்ளல் சுவையோடு எடுத்தியம்புவதற்கு நகைச் சுவை ஒரு கருவியாகப் பயன்படுகின்றது. அரசியலைப் பின்னணியாகக் கொண்ட இவ்வகைத் துணுக்குகள் நம்மைச் சிரிக்கச் செய்வதோடு சிந்திக்கவும் தூண்டுகின்றன.

ஆங்கிலேயரது ஆட்சியை அகற்றுவதற்கு அண்ணல் காந்தியடிகள் பின்பற்றிய போராட்ட நெறிகளில் "உண்ணா விரதமும்" ஒன்று. ஆனால் இன்று? இப்பொழுதும் அரசியல்வாதிகள் உண்ணா விரதங்கள் இருக்கின்றனர். ஆனால் அவை எவ்வளவு போலியானவை என்பதை ஒரு துணுக்கு அழகாக உணர்த்துகின்றது.

மனைவி ;- பிச்சைக் காரனை ஏன் வீட்டுக்குள்ளே கூப்பிடு நீங்க?

அரசியல்வாதி :- சும்மா இரு! பத்து நாளாக சாப்பிடலேங்கிறான். எப்படி அவனாலே இருக்க முடியுதுன்னு கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டா, உண்ணாவிரதம் இருக்க சவுகரியமாக இருக்கும்!

—கே. செல்வராஜ்
"தினத்தந்தி" 23. 10. 82

சட்ட சபையை விடச் சாராயக் கடை கௌரமான இடம் என்று சொல்கிறது ஒரு துணுக்கு!

சாராயக் கடைக்காரர் :- (எம். எல். ஏக்களை நோக்கி) இதோ பாருங்க! நீங்க ரெண்டு பேரும் எம். எல். ஏ. வாக இருக்கலாம். அதுக்காகச் சட்டசபை மாதிரி இங்கே நடந்துக்கக் கூடாது. இது கௌரவமான இடம்......!

—"துக்ளக்" 15. 4. 82

தமிழகத்தில் பஞ்சாயத்து சபைத் தேர்தல் நடைபெற்று பதினைந்து ஆண்டுகளுக்கும் மேல் ஆகி விட்டன. எதிர்காலத் தலைமுறையினருக்குப் 'பஞ்சாயத்து தேர்தல்' என்றால் என்னவென்றே தெரியாமல் போகலாம்.

மகன்:—அப்பா! கவுன்சிலர்கள்னா யாருப்பா?

அப்பா:—யாருக்குடா தெரியும்? வேணும்னா உங்க தாத்தாவைக் கேட்டுப் பாரு! அவருக்குத் தெரிஞ்சிருக்கலாம்.

வெ. சீத்தாராமன்
"கல்கி" 7-2-82

மக்களுக்கு வழங்கிய வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டிய அரசியல்வாதிகள், தாம் பதவிக்கு வந்ததும் அவற்றை மறந்துவிட்டு நியாயமான காரணங்கள் எதுவுமின்றி வெளி நாட்டுப் பயணங்களை மேற்கொள்வது அடிக்கடி நிகழும் செயலாகும். இதை ஒரு துணுக்கு எள்ளி நகையாடுகிறது.

தொண்டர்:-உங்க கால்லே முள் குத்திட்டதாய்ச் சொன்னீர்களே...தேர்தல் கூட்டத்துக்குப் போறதுக்கு முன்னாலே எடுத்துடறேன்...காட்டுங்க!

அரசியல்வாதி:- வேண்டாம்...ஜெயிச்சு மந்திரி ஆனப்புறம் அமெரிக்கா போய் எடுத்துடறேன், விட்டுடு!

-கிரிஜா மணாளன்
''ஆனந்த விகடன்'' 26-12-82

நம்நாட்டு அரசியலின் அவலநிலைகளை நகைச்சுவைத் துணுக்குகள் அழகாகப் படம்பிடித்துக்காட்டுகின்றன. ''நம்மைச் சிரிக்கவைப்பதெல்லாம் நகைச்சுவை அல்ல! நல்ல நகைச்சுவை என்பது சிரிப்பில் தொடங்குகிறது. ஆனால் அது சிரிப்போடோ, சிரிப்பதுடனோ மட்டுமே முடிந்து போய்விடுவது இல்லை''‡ என்கிறார் எழுத்தாளர் நா. பார்த்தசாரதி.

சிந்திக்கச் செய்யும் சிரிப்புத் துணுக்குகளே சிறந்தவை. அரசியல் நகைச்சுவைத் துணுக்குகளைப் படிக்கும்போது, அத்தகு இழிவான அரசியல்வாதிகளை இனங்கண்டு தக்கவரைத் தேர்ந்தெடுக்க இத்துணுக்குகள் பயன்படுமானால் அதுவே அவற்றின் வெற்றியாக அமையும்.

### பாலியல் துணுக்குகள்

பாலியல் கவர்ச்சி இயல்பானது; எவருக்கும் உரியது. பால் கவர்ச்சியின் அடிப்படையில் நகைச்சுவைத் துணுக்குகளும் எழுவதுண்டு. அத்தகு பாலியல் துணுக்குகள் எல்லாக் காலங்களிலுமே இளைஞரால் பெரிதும் வரவேற்கப்படுகின்றன.

''எதையும் வெளிப்படையாகச் சொல்லாமல், குறிப்பாக வெளிப்படுத்துவதில்தான் இவற்றின் நயம் இருக்கிறது. தமிழ் இலக்கியங்களில் உள்ளுறை உவமம், இறைச்சி என்ற பொருள்நய உத்திகளை எடுத்துக் காட்டுவர். அதே போன்றதுதான் பால் கவர்ச்சித் துணுக்குகள்''** என்று ரா. சீனிவாசன் பாலியல் துணுக்குகளின் தன்மையை வெளிப்படுத்துகின்றார்.

பாலியல் துணுக்குகள் நகைச்சுவை உணர்வோடு மட்டுமே எழுதப்படுமாயின், அவற்றைப் படித்துவிட்டுச் சிரிக்கலாம்; பாராட்டலாம்; மாறாக இழிநிலை உணர்வுகளைத் தூண்டும் வகையிலோ, பண்பாட்டைப் பாழாக்கும் வகையிலோ எழுதப்படுமாயின் அவற்றைப் புறக்கணிக்கவேண்டும். சிரிப்பைத் தருவது

‡ நா. பார்த்தசாரதி, ''சத்தியவெள்ளம்'',
** ரா. சீனிவாசன் ''சிரித்து மகிழுங்கள்'' அணியகம், சென்னை, பக். 53.

மட்டுமே இவற்றின் நோக்கமாக இருக்கவேண்டும். முறையற்ற பாலியல் உறவுகளையோ ஒழுக்கக் கேடுகளையோ மையமாகக் கொண்ட பாலியல் துணுக்குகள் தமிழுக்குத் தேவையில்லை.

### சிலேடைத் துணுக்குகள்

இருபொருள் தரும்படியாக அமையும் சொற்களைப் பயன் படுத்தி எழுதுவதை இலக்கணத்தில் 'சிலேடை' என்பர். காளமேகப் புலவர், ஒளவையார், இரட்டையர் போன்றோர் சிலேடைப் பாடல்களைப் பாடுவதில் சிறந்து விளங்கியவர். தனிப் பாடல் திரட்டில் இவை இடம்பெறுகின்றன.

முன்பெல்லாம் நகைச்சுவையை வெளிப்படுத்துவதற்குச் சிலேடைப் பாடல்கள் துணைபுரிந்தன. ஆனால் இப்பொழுது இரட்டுற மொழிதல் என்றாலே ஆபாசமாக எழுதுதல் என்று பொருள்படும்படியாகப் பலரும் எழுதத் தொடங்கிவிட்டனர். இந்நிலை வருந்தத் தக்கது. நகைச்சுவைத் துணுக்குகளிலும் சில சொற்கள் சிலேடையாக அமைந்து சிரிப்பைத் தருவதுண்டு.

*அமைச்சர்:- இதென்ன அரசே! போரே நிகழாதபோது தங்களுக்கு விழுப்புண்ணா?*

*அரசர்:-இல்லை அமைச்சரே...!அரியாசனத்திலே தடுக்கிக் கீழே விழுந்ததால் ஏற்பட்ட புண்...அதனால் 'விழுப்புண்' என் கிறேன்!*

'ஆனந்த விகடன்' 7-3-82

சில துணுக்குகள் சிலேடையாகவும் இன்னும் சில சொல் விளையாட்டுக்களாகவும் அமைந்து நகைச்சுவை தருகின்றன. ஒரு சொல் இருபொருள் படும்படியாக அமைந்தும், ஒரே ஒலியை யுடைய இருவேறு சொற்கள் மாறுபட்ட பொருளைத் தந்தும் சிலேடையாய் விளங்கி, நமக்கு நகைச்சுவையை நல்குகின்றன. இத்தகு சிலேடைத் துணுக்குகளை ஆங்கிலத்தில் PUN* என்று அழைப்பர்.

---

* Pun—a play upon words of similar sounds, சிலேடைப் பேச்சு; Using a word to convey different meanings, பல பொருள்பட மொழிதல்.

The Lifco Dictionary, The Little flower company, Madras-17, Eleventh Edition, May 1972, P. 913.

### அறுவைத் துணுக்குகள்

ஒரு சில நகைச்சுவைத் துணுக்குகள் சிலேடையாகவோ, சமயோசிதமாகவோ அமையாமல், சொல்லுபவரின் அறிவுக் கூர்மையைக் காட்டுவதாக வருவதுண்டு. இவையும் ஒருவகைச் சொல் விளையாட்டுக்கள்தாம்! இவற்றை "அறுவைத் துணுக்குகள்" என்று பொதுவாக அழைப்பர்.

அறுவைத் துணுக்குகள் பெரும்பாலும் பேச்சு வழக்கில்தான் பெரிதும் பயின்று வருகின்றன. இவற்றை ஆங்கிலத்தில் சொல்லப்படும் "WIT" வகையில் சேர்க்கலாம்.

ஒருவர் :-ஏம்பா உன் பேரு சீனிவாசன்தானே! ஏன் 'வாசன்'னு மாத்திட்டே?

மற்றவர் :-டாக்டர் என்னை 'சீனி'யே சேர்க்கக்கூடாதென்று சொல்லியிருக்கிறார்......அதனால்தான்!

-வி. சந்திரசேகரன்
"தினத்தந்தி" 2-11-82

### அச்சுப் பிழையும், அறியாமையும்

அச்சுப் பிழைகளை அடிப்படையாகக் கொண்டு அழகான நகைச்சுவைத் துணுக்குகள் உருவாவதுண்டு.

மானேஜர்:-என்னய்யா, ஆபீசில் எல்லாரும் அவனவன் டேபிளில் படுத்துத் தூங்கறான்?

ஊழியர்:-மறைந்த தலைவருக்கு நம் ஆபீசிலும் ஒரு வாரம் 'துக்கம்' அனுஷ்டிக்கலாம்னு அனுப்பின சர்க்குலர்ல 'தூக்கம்'னு டைப் ஆயிடுச்சாம்!

—ஆரோக்ய செல்வி
"ஓ" ஆகஸ்ட் '82.

அறியாமையும் பல நேரங்களில் சுவையான நகைச்சுவைத் துணுக்குகளுக்கு அடிப்படையாய் அமைவதுண்டு.

டாக்டர்:-தினமும் பச்சை முட்டை குடியுங்க என்றால் தலையைச் சொரிந்துகொண்டு நிற்கிறீங்களே...ஏன்?

நோயாளி:-கோழி இருக்குதுங்க...ஆனா அது வெள்ளை முட்டை தானே போடுது!

—ஜி. நடராஜன்,
"ஓ", ஆகஸ்ட் 82.

அறிஞர் வ. ரா. அவர்கள் சொல்வதுபோல், ''யாருக்கும் கோபமோ அல்லது அவமானமோ நேராமல் சிரிக்கச் செய்யும் சிரிப்புத்தான் உயர்ந்த நகைச்சுவை'' ஆகும்

**திருநாளும் திரைப்படங்களும்**

ஆண்டுதோறும் கொண்டாடப் படுகின்ற தீபாவளி, பொங்கல், சுதந்திர தினம், கிறிஸ்துமஸ் போன்ற திருநாட்களும் நகைச்சுவைத் துணுக்கு தோன்றக் காரணமாய் அமைவதுண்டு. இத்திருநாட்களையொட்டி இதழ்கள், சிறப்பு மலர்கள் வெளியிடு கின்றன. இவற்றில் அவ்வத் திருநாளைப் பின்னணியாகக் கொண்ட நகைச்சுவைத் துணுக்குகளே சிறப்பாக வெளியிடப் படுகின்றன.

1982 ஆம் ஆண்டில் தீபாவளித் திருநாளைப் பின்னணி யாகக் கொண்டு வெளியான நகைச்சுவைத் துணுக்கு:

''ஏன், அந்த வீட்டுப் பட்டாசு விட்டுவிட்டு வெடிக்குது?''

''தவணை முறையிலே வாங்கினதா இருக்கும்!''

—வி. பார்த்தசாரதி, ''தாய்'', 14-11-82

''ஏங்க, தீபாவளி அன்னைக்கு கூடக் குடிக்கிறீங்க?''

''நரகாசுரன் செத்த துக்கத்தை மறக்கத்தான்!''

—வி. பார்த்தசாரதி, ''தாய்'', 14-11-82

மனைவி:-என்னங்க...தீபாவளியும் அதுவுமா நான் செஞ்சி வச்சிருக்கிற ஸ்வீட்டையெல்லாம் எவனோ திருடன் புகுந்து சாப்பிட்டுக்கிட்டு இருக்கான்...!

கணவன்:-பேசாம தூங்கு! காலையில் அவன் செத்துக் கிடப்பான்...விடிஞ்சதும் பார்த்துக்கலாம்!

—கடலூர் கன்னியப்பன்,
''இதயம் பேசுகிறது'' 14-11-82.

இவ்வாறே பொங்கல், கிறிஸ்துமஸ், விநாயக சதுர்த்தி, ஆடிப்பெருக்கு, சுதந்திர தினம் போன்ற திருநாட்களை அடிப்படையாகக் கொண்டு நிறைய துணுக்குகள் எழுந்துள்ளன.

திரைப்படத் துறையும் நகைச்சுவைத் துணுக்குகள் தோன்றும் நிலைக்களனாகத் திகழ்கின்றது. திரைப்படத் துறை யின் தாக்கம் அரசியலையே ஆட்டிப் படைக்கும்போது, இலக்கியத் துறையிலும் நுழைந்திருப்பது வியப்புக்குரியதன்று.

திரைப்படக் கலைஞரை மையமாகக் கொண்டு பல துணுக்குகள் எழுந்துள்ளன.

ஏற்கும் பாத்திரத்தோடு ஒன்றிப்போகும் 'நடிகர் திலகம்' சிவாஜிகணேசனின் உயர்ந்த நடிப்பாற்றலை மையமாகக் கொண்டு ஓர் அருமையான துணுக்கு உருவாகியுள்ளது.

''நீ செய்திருக்கிற ஸ்வீட் நடிகர் சிவாஜி மாதிரி!''

''இதென்ன, புது உவமானமா இருக்கு?''

''சிவாஜி, பாத்திரத்தோடு பாத்திரமா ஒன்றிபோற மாதிரி, இந்த ஸ்வீட்டும் பாத்திரத்தோடு பாத்திரமா ஒட்டிப் போயிருக்கு!''

—அ. தெ., ''ஆனந்த விகடன்'' 7-3-82.

திரைப்படக் கலைஞர்களைக் கருவாகக் கொண்டு துணுக்குகள் எழுதப்படுவதைப் போன்று, திரைக்கலையின் எல்லாத் துறைகளும் நகைச்சுவைக்கு இலக்காகின்றன. திரைப்படங்களைப் பற்றிய நகைச்சுவைத் துணுக்குகளுள், நடிகையரைப் பற்றிய துணுக்குகளே மிகுதியாய் உள்ளன.

**நகைச்சுவைத் துணுக்குகளில் சமூகவியல்**

நடப்பியல் வாழ்வைப் படம்பிடித்துக் காட்டாத எந்தப் படைப்பிலக்கியமும், காலத்தை வென்று நிலைத்து வாழ முடியாது. நகைச்சுவைத் துணுக்குகளும் இதற்கு விதிவிலக்கில்லை.

அன்றாட வாழ்வின் அவலங்களை அங்கதச் சுவையோடு விளக்கும்போது நாம் சிரிக்கிறோம்; கூடவே சிந்திக்கிறோம். ''கொடுமை இல்லாமல் தீமையை அழிப்பதற்கு நகைச்சுவையால் தான் முடியும். இழிநடை இல்லாமல் இலக்கியத்தை உறுதிப் படுத்தவும் அதனால்தான் முடியும்'' என்று பெர்னாட்ஷா கூறியிருப்பது எண்ணத்தக்கது.

நகைச்சுவைத் துணுக்குகளில் சமூகவியல் பார்வை சிறந்து விளங்குகிறது. ஒரு புதினமோ, சிறுகதையோ, கவிதையோ அல்லது கட்டுரையோ ஏற்படுத்தக்கூடிய சமுதாய விழிப்புணர்வை மிகச் சில வரிகளில் அமையும் நகைச்சுவைத் துணுக்குகள் சிறப்பாகச் செய்துவிடுகின்றன. ''மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது'' என்பரே! நகைச்சுவைத் துணுக்குகளுக்கு அந்தப் பொன்மொழி முற்றிலும் பொருத்தமானது.

பொருட்களின் விலை ஒவ்வோராண்டும் ஏறிக்கொண்டே போகிறது. ஒருமுறை கூடக் குறைந்ததாகத் தெரியவில்லை.

'விலைவாசியைக் குறைப்பதே எங்கள் கட்சியின் கொள்கை' என்று எல்லாக் கட்சிகளுமே கூறி வருகின்றன. ஆனால் எந்தக் கட்சியுமே செயலளவில் வெற்றி பெற்றதாகத் தெரியவில்லை.

'விலைவாசி' என்று பெயர் வைத்தவர் யாரோ, அவரை முதலில் பாராட்ட வேண்டும். பல பொருட்களின் விலைகள் வாசிக்கும்படி இருக்கிறதே தவிர, வாங்கும்படியாக இல்லை. இந்த விலைவாசி பற்றியும் பல துணுக்குகள் கூறுகின்றன.

வந்தவர்:- பஸ் கட்டண உயர்வை நினைச்சா மயக்கம் வருது! ஒரு காபி கொண்டு வா...!

சர்வர்:- காபி விலையும் இன்று முதல் 50 காசிலிருந்து 75 காசுக்கு உயர்ந்திருக்கு...கொண்டு வரட்டுமா?

—கடலூர் கன்னியப்பன்
''சாவி'' 28-2-82

இன்றைய சமூகத்தைப் பிடித்திருக்கும் பெருநோய் வரதட்சணை. நாள்தோறும் வளர்ந்து வரும் இந்நோயை விரட்டியடிக்க, முழு முயற்சியோடு யாரும் முயன்றதாகத் தெரியவில்லை. வரதட்சணைக் கொடுமையால் மணமேடையே காண முடியாமல், காலமெல்லாம் கன்னியராய் வாழும் மங்கையரைக் கணக்கிடவே முடியாது. இல்லறத்தில் ஈடுபட்ட பெண்களும் ஏற்கெனவே வாக்களித்த வரதட்சணையைக் கொடுக்க முடியாமல், மாப்பிள்ளை வீட்டாரால் விரட்டியடிக்கப்பட்டு வாழாவெட்டிகளாய் வாடும் காட்சிகளையும் நாம் கண்டு வருகிறோம்.

வரதட்சணைக் கொடுமையால் தற்கொலைபுரிந்துகொண்டு தம் வாழ்வை முடித்துக்கொண்ட வனிதையரின் பட்டியலை நமது நாளேடுகள் நாள்தோறும் கொடுத்து வருகின்றன. இத்தகு கொடிய வரதட்சணைச் சிக்கல்களையும் நகைச்சுவைத் துணுக்குகள் சுவையாகச் சுட்டிக் காட்டுகின்றன.

வரதட்சணைக் கொடுமையால் பெண்களுக்கு மட்டுந்தான் வாழ்வு அமையாமல் போகுமா? அளவுக்கு அதிகமாக வரதட்சணை கேட்டால் ஆணுக்குக் கூட மணவாழ்வு அமையாமல் போகும் என்று எச்சரிக்கிறது ஒரு துணுக்கு!

வாலிபன்:- வரதட்சணைக் கொடுமையாலே எனக்கு கல்யாணமே ஆகலே...!

பெரியவர்:- ஆம்பிளைக்குக் கூடவா வரதட்சணைக் கொடுமை!

வாலிபர்:- ஆமாம்! எங்கப்பா எனக்கு 'ஐம்பதாயிரம்' வரதட்சணை கேக்கறார். பத்து வருஷமா யாரும் பெண் கொடுக்க முன் வரலே!

வெ. சீத்தாராமன்
''சாவி'' 28-2-82

வரதட்சணைக் கொடுமை ஒரு பக்கம் இருந்தாலும், நாட்டில் திருமணங்கள் எப்படியும் நடந்துகொண்டுதானிருக்கின்றன. திருமணங்கள் நிச்சயிக்கப்பட்டாலும், திருமண மண்டபங்கள் நாம் நினைக்கும் நேரத்தில் கிடைப்பதில்லை. பல பேர் மண்டபத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு, அதற்குப் பிறகுதான் மாப்பிள்ளையோ அல்லது பெண்ணோ தேடத் தொடங்குகின்றார்கள்.

ஜனவரி 30 ஆம் தேதி என் பெண்ணுக்கு கல்யாணம் பண்ணலாம்னு இருக்கேன். சத்திரம் கிடைக்குமா சார்?

இல்லீங்க...புக் ஆயிடுச்சு!

நான் கேக்கிறது 1999 ஆம் வருஷம் ஜனவரி மாசங்க... எனக்கு இன்னிக்குத்தான் பெண்ணே பிறந்திருக்கு...!

வெ. சீத்தாராமன்,
ஆனந்தவிகடன், 10-1-82

இத்துணுக்கு சற்று மிகையாகத் தோன்றினாலும் உண்மை நிலை இதுதான்! பெண் பிறந்தவுடனேயே பதிவு செய்துகொண்டால்தான் எதிர்காலத்தில் திருமண மண்டபங்கள் கிடைக்கும் போலும்! நர்சரிப் பள்ளிகளில் படிக்கின்ற குழந்தைகளைப் பார்த்தால் பல நேரங்களில் பரிதாபமாக இருக்கும் ஒவ்வொரு குழந்தையும் படிக்கின்ற புத்தகங்கள் ஒரு வண்டிக்கும் மேல் என்றால் மிகையில்லை. ஆம்! இன்றைய குழந்தைகளுக்குக் 'கல்விச்சுமை' ஏறித்தான் போயிருக்கிறது. அதைக் குறைக்க ஒருவழிசொல்கிறது இத்துணுக்கு!

''இந்த நர்சரிப் பள்ளியிலே சிறுவர் சரக்கு வண்டின்னு ஒண்ணு விடறாங்களாமே... எதுக்குங்க?''

''இந்த ஒரு ஸ்கூல்லேதான் குழந்தைகளோட நோட்டுப் புத்தகங்களை அவங்க வீட்டிலிருந்து கொண்டு வர்ற ஏற்பாடு பண்ணியிருக்காங்க...!''

முத்து. தங்க. ஐயப்பன்
''ஆனந்த விகடன்'' 1-8-82

82-ஆம் ஆண்டில் தண்ணீர்ப் பற்றாக் குறையினால் தமிழகம் கடும் பஞ்சத்துக்கு ஆளானது. இந்தச் சிக்கல்களையும் நகைச்சுவைத் துணுக்குகள் எடுத்துரைக்கத் தவறவில்லை. எண்ணெய்யைத் தேய்த்துக் கொண்டு தண்ணீரில் குளிப்பது தான் நமது பழக்கம். ஆனால் தண்ணீர்த் தட்டுப்பாட்டால், நிலைமையே மாறிப் போகிறது.

மனைவி:- இந்தாங்க ஸ்பூனிலே தண்ணி...... இதைத் தலையிலே தடவிக்கிட்டு உள்ளே பக்கெட்டிலே வச்சிருக்கிற எண்ணெய்யை ஊத்திக்கிட்டு குளிச்சு டுங்க...

கணவன்:- ?......!......?......!......?

''ஆனந்த விகடன்'', 17-10-82

என் பையனுக்கு இங்கிலீஷ் தண்ணி பட்ட பாடு!
பாவம்! அவ்வளவு கஷ்டப்படுறானா?

—வெ. சீத்தாராமன்
''குங்குமம்'' 30-5-82

ஒரு காலத்தில் 'தண்ணி மாதிரி செலவழிக்கிறான்' என்ற சொற்றொடர், ஊதாரியைக் குறிப்பதாக இருந்தது. அதுவே கால மாற்றத்தில் இன்று சிக்கனவாதியைச் சுட்டுகிறது.

சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வுகளைக் குறிப்பாக உணர்த்து வதுபோல், நமது வீதிகள் மேடும் பள்ளமுமாக, குண்டும் குழியு மாக உள்ளன. பேராசிரியர் முத்து. தங்க. ஐயப்பன், வீதிகளின் சீர்கேட்டைத் தமது நகைச்சுவைத் துணுக்கின் மூலம் காட்டு கிறார்.

உங்க ஊரிலே எல்லோரும் சின்ன ஏணியைக் கையிலே வைச்சுக்கிட்டு நடக்கிறாங்களே, ஏன்?

தெருவிலே அங்கங்கே இருக்கற பள்ளத்திலே விழுந்துட்டா, எந்திரிச்சு மேலே வரத்தான்......!

முத்து. தங்க. ஐயப்பன்
ஆனந்த விகடன், 24-1-82

இந்த நகைச்சுவைத் துணுக்கை அரசியல் பிரச்சினையாக்கிப் பேராசிரியர். க. அன்பழகன் 29-1-82 'முரசொலி' இதழில், ''விகடன் கார்ட்டூனும் விவஸ்தை கெட்ட எம்.ஜி.ஆரும்'' என்ற கட்டுரையை எழுதியுள்ளார். ஓர் அரசியல் பிரச்சினை உருவாகும் அளவுக்கு, ஒரு நகைச்சுவைத் துணுக்கு பேராற்றல் வாய்ந்தது என்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டு.

என்னதான் தந்தை பெரியார் தோன்றி பகுத்தறிவு கருத்துக்களைப் பரப்பினாலும், நம் நாட்டில் மூட நம்பிக்கைகள் இன்னும் அழியவில்லை. ஜோதிடம், ராசிபலன், நியூமராலஜி போன்றவற்றில் நம் மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். இதை ஒரு நகைச்சுவைத் துணுக்கு அழகாக எள்ளி நகையாடுகிறது.

ஏன் 'பகுத்தறிவு மன்றம்' என்ற பெயரை மாத்தி, 'சிந்தனைக் கழகம்'னு வைச்சிருக்கீங்க?

ஒண்ணுமில்லே.. நம்ம தலைவருக்கு ஒன்பது ராசியான நம்பர். மன்றத்தின் பெயரிலே ஒன்பது எழுத்து இருக்கணும்னாரு...!

— பாகி, ஆனந்தவிகடன், 3-1-82

பகுத்தறிவு மன்றத்துக்குள்ளேயே மூட நம்பிக்கை நுழைவதை, முரண்பட்ட பாத்திரப் படைப்பை இத்துணுக்கு அழகாகச் சித்திரிக்கிறது.

நாட்டு நடப்பை நன்றாகப் புரிந்துகொண்ட ஒரு நடிகர், தனக்கு ரசிகர் மன்றம் அமைப்பதற்குப் பதிலாக ஒரு புதுக்கட்சியைத் தொடங்கி விடும்படிச் சொல்கிறாராம்.

ரசிகர்கள் :- சார்! நாங்கள் எல்லாம் உங்க விசிறிகள்! உங்க பேர்ல ஒரு ரசிகர் மன்றம் ஆரம்பிக்கலாம்னு இருக்கோம்.

நடிகர் :- ரசிகர் மன்றமா? சுத்த பத்தாம் பசலிகளா இருக்கீங்களே! என் பேர்ல ஒரு கட்சி ஆரம்பிச்சுடுங்கப்பா!

வெ. சீத்தாராமன்
''குமுதம்'', 22-7-82

இந்த நடிகர் இப்படிச் சொல்வதில் என்ன தவறு? அவரை அப்படிச் சொல்ல வைப்பதே இன்றைய சமூகச் சூழல்தானே!

இவ்வாறு 1982-ஆம் ஆண்டின் சமுதாய நிலையைப் பல்வேறு கோணங்களில் நகைச்சுவைத் துணுக்குகள் படம் பிடித்துக் காட்டுகின்றன. அன்றியும் சமூகத்தின் இழிநிலைகளை எள்ளி நகையாடுகின்றன.

**நிறைவுரை**

வாழ்வின் வெற்றிக்கு அடிப்படையான இயல்புகளுள் இன்றியமையாததாக நகைச்சுவை உணர்வு விளங்குகின்றது. வாழ்க்கையே ஒரு பெரும் போராட்டமாக, துன்பச்சுமையாகத் திகழும் இக்காலத்தில் நமக்கு நகைச்சுவை உணர்வு மட்டும் இல்லாவிட்டால் மகிழ்ச்சியுடன் காலம் தள்ளுவது கடினம். எனவேதான் நகைச்சுவையாகச் சொல்லப்படும் எல்லாவற்றையும் மக்கள் விரும்பிப் படிக்கின்றனர்.

நகைச்சுவைத் துணுக்குகளே இன்றைய இதழ்களின் கண்ணும் காதுமாக உள்ளன. பரபரப்பும், ஆரவாரமும் மிகுந்த இன்றைய வாழ்வில், மன அமைதியும் மகிழ்ச்சியும் தருவனவாக நகைச்சுவைத் துணுக்குகள் திகழ்கின்றன.

1982-ஆம் ஆண்டில் நகைச்சுவைத் துணுக்கு நூல்கள் எட்டு வெளிவந்துள்ளன. இவற்றுள் ஒன்று மட்டுமே ஆசிரியரின் படைப்பாக அமைய, ஏனையவை தொகுப்பு நூல்களாக உள்ளன. முந்தைய ஆண்டுகளை ஒப்புநோக்க இவ்வாண்டில்தான் அதிகமான அளவில் நகைச்சுவைத் துணுக்கு நூல்கள் வெளியாயின என்பது குறிப்பிடத்தக்கது.

நகைச்சுவைத் துணுக்குகளுக்கு இதழ்கள் சிறப்பிடம் தருகின்றன. 82-இல் மட்டும் பத்தாயிரத்துக்கும் அதிகமான நகைச்சுவைத் துணுக்குகள் தமிழ் இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளன.

"மனிதரின் தரத்தை அளப்பது எளிது. அவன் எதைச் சொன்னால் சிரிக்கிறான் என்று பாருங்கள்!" என்பார் அறிஞர் கதே. ஆகவே நம் தரத்தை நாமே உணர்வதற்கும், மற்றவர்களது தரத்தை அறிந்து கொள்வதற்கும் நகைச்சுவைத் துணுக்குகளை அளவுகோலாகப் பயன்படுத்தலாம்.

அரசியல் துணுக்குகள், பாலியல் துணுக்குகள், அறுவைத் துணுக்குகள், சிலேடைத் துணுக்குகள், சமூகவியல் துணுக்குகள் என்று பலவகையாக நகைச்சுவைத் துணுக்குகளைப் பிரிக்கலாம். இத்துணுக்குகள் யாவும் சிரிப்பின் மூலம் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன.

சங்க காலத்தில் தோன்றிய தனிப்பாடல்களைத் தொகுத்து இலக்கியமாக்கியதைப் போன்று தற்காலத்தில் தோன்றுகின்ற நகைச்சுவைத் துணுக்குகளையும் தொகுத்து நூலாக்குதல் வேண்டும். இவையும் காலக்கண்ணாடிகள்தாம்! நகைச்சுவைத் துணுக்குகளைப் பற்றிய ஆய்வு பெருகுதல் வேண்டும். அறிஞர் பெருமக்கள் இத்துறையையும் எண்ணிப் பார்ப்பாராக!

"நம் வாழ்க்கையின் பாதையிலே மலர்களைத் தூவ முடியாவிட்டாலும், புன்னகைகளைத் தூவ முடியும்; தூவ வேண்டும்; ஏனென்றால் சிரித்தபடி வாழ்வதே சிறந்த வாழ்வாகும்" என்றார் சார்லஸ் டிக்கன்சு. நகைச்சுவைத் துணுக்குகளைப் படித்துச் சிரிப்போம்; மற்றவரையும் சிரிக்கச் செய்து மகிழ்வோமாக.

சிரித்து வாழ்வதே சிறந்த வாழ்வு!

# 33. வானொலியில் தமிழ்

—இளசை எஸ். சுந்தரம்

பல் நிலையிலும், வகையிலும் தமிழை வளர்க்கும் பணியை வானொலி செய்கிறது. அறிவியல் தமிழுக்குச் சிறந்த இடமளிக்கிறது பள்ளி மாணவரின் கல்விக்கு உதவுகின்றது. தமிழிசைப் பாடல்களை ஒலி பரப்புகின்றது. கவிதை, சிறுகதை, நாடகம் ஆகிய துறைகளை வளர்க்கின்றது. மக்களுக்குத் தேவையான சட்டம் பற்றிய அறிவை வழங்குகிறது. 82 பாரதி நூற்றாண்டாக அமைந்தமையால் அதற்கேற்பத் தனி நிகழ்ச்சிகளை உருவாக்கியமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

## முன்னுரை

பல்வேறு துறைகளில் கிளை பரப்பிப் புதிய வேகத்துடன் வளர்ந்து வருகிறது நமது தமிழ்மொழி. வானொலியும் தனது நிகழ்ச்சிகள் மூலம் வளரும் தமிழுக்கு மேலும் வளமை சேர்த்து வருகிறது. தொலைக் காட்சிப் பெட்டிகள் வந்துவிட்டன; மக்களின் கவனம் பெருவாரியாக அதன்பால் ஈர்க்கப் படுகின்றது. தொலைக்காட்சியின் வளர்ச்சியால் வானொலி பாதிக்கப் படுமா என்ற கேள்வி இப்பொழுது பரவலாக எழுகிறது. எந்த விதத்திலும் பாதிப்பு ஏற்பட வாய்ப்பு இல்லை என்பதைப் பதிலாகக் கூறலாம். வானொலிக்குத் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் தனித்தன்மைகள் மிகுதியாக இருக்கின்றன. தொலைக்காட்சி பார்ப்போர், தம் வேலை வெட்டியெல்லாம் போட்டு விட்டு தொலைக்காட்சி பார்ப்பதையே வேலையாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் வானொலி கேட்டல் அப்படியல்ல. ஒரு வேலையைச் செய்துகொண்டே வானொலி நிகழ்ச்சிகளையும் கேட்டு மகிழ முடியும். பெண்கள் சமையல் செய்து கொண்டே வானொலி நிகழ்ச்சியையும் கேட்டு ரசிப்பதையும், சாதாரண மக்கள் வானொலிக் கருவியைத் தோளில் மாட்டிக் கொண்டு ஆடு மேய்ப்பதையும், ஏர் உழுவதையும் காண முடிகிறது. தொலைக்காட்சியைப் போல வானொலிப் பெட்டியை ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைத்துத்தான் கேட்க

வேண்டும் என்பதில்லை. எந்த மூலை முடுக்கில் வைத்து வேண்டுமானாலும் கேட்கலாம். குறைந்த விலையில் கிடைப்பதால் சாதாரண மக்களின் சாதனமாக வானொலி இருப்பதில் வியப்பில்லை. இத்தகைய காரணங்களால் வானொலியின் இன்றியமையாமை புலப்படுகிறது. மக்களின் வாழ்க்கையில் அது எப்படி இரண்டறக் கலந்து விட்டது என உணர முடிகிறது. இத்தகைய அரிய சாதனத்தால் தமிழின் வளர்ச்சிக்கு ஏற்பட்ட நன்மை பல.

தமிழ்நாட்டில் சென்னை, திருச்சிராப்பள்ளி, கோயமுத்தூர், திருநெல்வேலி ஆகிய இடங்களிலும், பாண்டிச்சேரியிலும் தமிழ் மொழியில் ஒலிபரப்புக்கள் நடைபெறுகின்றன. தென்கிழக்கு ஆசியப்பகுதியில் வாழும் தமிழர்க்காக சென்னையிலிருந்து தனியாக நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன. புதுடில்லியிலிருந்து வெளிநாடுகளில் வாழும் தமிழர்க்கென்று வெளிநாட்டு ஒலிபரப்பு உள்ளது. திருவனந்தபுரத்திலிருந்து ஞாயிறு தோறும் 'தமிழ்ச் சொல் மாலை' என்ற ஒருமணி நேர நிகழ்ச்சி ஒலிபரப்பாகிறது.

### அறிவியல் நிகழ்ச்சிகள்

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் தாண்டி அறிவியல் தமிழ் என்ற நான்காவது தமிழையும் வளர்க்க வேண்டிய அவசரக் கட்டத்தில் நாம் இருக்கிறோம். அறிவியலின் வேகத்துக்கு ஈடு கொடுத்து அவை பற்றிய செய்திகளை நம் மக்களுக்கும் அப்போதைக்கப்போதே விளக்க வேண்டிய நிலை இருக்கின்றது. இல்லாவிட்டால் நாம் பின்தங்கி விடுவோம். அறிவியலை மக்கள் மத்தியில் கொண்டு செல்ல வேண்டுமானால் மொழி ஒரு சிறந்த கருவியாக இருக்கவேண்டும். அத்தகைய சிறந்த கருவியாக தமிழ்மொழியை ஆக்க வேண்டும். ஆக்கிக் கொண்டிருக்கிறோம் என்பது ஒரு வகையில் நிம்மதி அளிக்கும் செய்தி தான். அறிவியல் தமிழின் வளர்ச்சிக்கு வானொலி ஆற்றிவரும் பங்கு மிகப்பெரிது.

### ஏன்? — அறிவியல் வினாக்கோலம்

ஏன்? எதற்கு? எப்படி? என்ற வினாக்கள்தான் சிந்தனையைக் கிளறி செயல்பட வைக்கின்றன. அதன் விளைவுதான் அறிவியல் ஆராய்ச்சி. அதன் முடிவுதான் அறிவியல் கண்டு பிடிப்புகள். அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு முடிவே இல்லை. ஏனென்றால், இயற்கையில் அத்தனை இரகசியங்கள் புதைந்து கிடக்கின்றன. சாதாரண மக்களும் தெரிந்துகொள்ள வேண்டிய நடைமுறை, அறிவியல் செய்திகள் ஏராளம் ஏராளம். அவற்றை

மக்களுக்குத் தொகுத்துக் கொடுப்பதில் வானொலி தனது சிறப்பான பணியைச் செய்கிறது. மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் வரும் கேள்விக்கணைகளை தொகுத்து, அந்தந்த துறைக்குரிய நிபுணரிடம் கொடுத்து சரியான விடைகளைப் பெற்று, ஏன்? என்ற அறிவியல் வினாக்கோல நிகழ்ச்சியாக ஒலிபரப்புகிறது வானொலி. அப்படி வானொலியை நோக்கி வகைவகையான கேள்விகள் வந்துள்ளன.

> இடியோசை கடலில் கேட்காததின் காரணம் என்ன? மேகம் என்பது என்ன? மின்னல் மின்னும் போது ரேடியோவில் தேவையற்ற சத்தம் ஏற்படுவது ஏன்? எதிரொலி எவ்வாறு ஏற்படுகிறது? சிலருக்கு, சிரிக்கும்போது கண்களில் நீர் வருகிறதே ஏன்? வானில் உள்ள நட்சத்திரம் கீழே விழுவதுபோல் தோன்றுவதற்குக் காரணம் என்ன? டேப் கேஸட்டுகள் எவ்வாறு ஒலிகளை ஈர்த்து, டேப் ரிகார்டில் இயங்கும்போது எவ்வாறு இசை ஒலிகள் ஒலிக்கின்றன? நல்ல வெளிச்சத்திலிருந்து அறைக்குள் போனால் கண்தெளிவாகத் தெரிவதில்லையே ஏன்? வானம் நீலநிறமாகத் தெரிவது ஏன்? எல்லா மரங்களையும் அரிக்கும் கரையான் தேக்குமரங்களை அரிக்காதது ஏன்? மூளையின் ஒரு பகுதியில் வாட்டும் கவலைகளால் குடல் பகுதியில் 'அல்சர்' ஏற்படும் என்கிறார்கள். மூளைக்கும் குடல் புண்ணுக்கும் என்ன தொடர்பு? 'மைக்ரோவேவ்' என்பது என்ன? அதன்பயன் என்ன? தேங்காய் எண்ணெய்மட்டும் குளிர் காலத்தில் உறைவது ஏன்? பூமியிலிருந்து வென்னீர் ஊற்றுக்கள் எவ்வாறு உண்டாகின்றன? பூமியைப்போல் மற்ற கிரகங்களிலும் இரவு பகல் தோன்றுமா? சுண்ணாம்பில் மஞ்சள்தூளைக் கலந்தால் ஏன் சிவப்பாக மாறுகிறது? ஒளியின் திசைவேகம், ஒலியின் திசைவேகத்தைவிட குறைந்த வேகம்கொண்டது. அப்படியிருக்க, டி.வி.யில் இரண்டும் இணைந்து நமக்குஒன்றாக நிகழ்ச்சிகள் கிடைக்கின்றனவே, அது எவ்வாறு? மழைக்காலத்தில் இடியின் ஆதிக்கம் அதிகமாக இருக்கும். இந்தஇடி எப்படி பூமியில் விழுகிறது? என்பனபோன்று இவை அமைகின்றன.

### விண்மீன் அறிமுகம்

விண்மீன் அறிமுகம் என்ற இந்த புதுமையான அறிவியல் நிகழ்ச்சி சென்னை வானொலி நிலையத்திலிருந்து ஒலிபரப்பாகியது. ஒரு குறிப்பிட்ட தினத்தில், இரவு நேரத்தில் விண்மீன்களைப்பற்றி அறிந்த வல்லுநர் வானொலி நிலையத்தின் மேல் மாடியில்இருந்துகொண்டு வானத்தைப் பார்த்து விண்மீன்களில்

இருப்பிடத்தையும், அவை பற்றிய விவரங்களையும். விளக்கிக் கூறுவார். அவ்விளக்கங்கள் அப்போதே ஒலிப்பரப்பாகும், இந் நிகழ்ச்சி ஒலிபரப்பாகும் நாள் மக்களுக்கு முன்கூட்டியே தெரிவிக்கப்பட்டுவிடுவதால் அவர்கள் கையில் வானொலிப் பெட்டிகளுடன் தங்கள் வீடுகளின் மொட்டை மாடிகளிலோ அல்லது முற்றங்களிலோ நின்றுகொண்டு வானத்தைப் பார்த்து, வானொலியில் கூறப்படும் விவரங்களைக்கேட்டு விண்மீன்களைப் பற்றி அறிந்துகொள்வர்.

வானில் மினுமினுக்கும் நட்சத்திரங்களின் அழகைக் கண்டு களிக்கின்றோம். ஆனால் அவற்றைப்பற்றி ஆராய்ந்தறிந்தால் தான் எல்லையற்ற பிரபஞ்சத்தின் விநோதத்தையும் உண்மை யையும் அறியமுடியும். அப்படி இயற்கையின் சக்திகளை அறிகின்ற மனிதன், அவற்றைத் தனது ஆக்கப் பணிக்கு உபயோகப் படுத்த முயலுகிறான். இவ்வாறுதான் பண்டைக் கால முதல் நாகரீகமும், அறிவும் வளர்ந்துகொண்டே வரு கின்றன.

பிரபஞ்சத்தைப்பற்றி அறியவேண்டிய முயற்சியில் பொது மக்கள் பங்கெடுத்துக் கொள்வதால் அறிவு வளர்கிறது; விஞ்ஞான அறிவு பெற்ற சமுதாயம்வளர உதவுகிறது. நாகரீகம் வளர்ந்ததே விண்மீன் அறிவு வாயிலாகவும் வானியல் மூலமாக வும்தான் என்று திட்டமாகக் கூறலாம். அறிவியல் சரித்திர ஆசிரியரின் கருத்தும் அதுவே. உதாரணமாக நேரம், காலம் அறியாமல் நாம் வாழ்க்கை நடத்த முடியுமா? இவையும், நமது காலண்டர் முறையும் எவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளது? நட்சத்திரங்களையும், சூரியனையும், அதைச் சுற்றும் பூமியின் நகர்ச்சியையும் கொண்டுள்ளதுதான். பருவகாலங்களை அறிந்து உண்ண உணவு உற்பத்திசெய்யவும் இவைதான் ஆதாரம். கடல், வானம், விண்வெளி ஆகியவற்றில் பயணம் செய்ய உதவுவதும் நட்சத்திரங்களேயாகும். அணுவின் சக்திமுதல் அண்டத்தின் சக்திவரை மனிதனுக்கு எடுத்துக் காட்டுவதும் இந்த நட்சத்திரங் கள்தான். இப்படி, பல பயன்கள்.

நட்சத்திரம் என்பது என்ன, அவை எவ்வளவு தூரத்தில் உள்ளன, கிரகம் என்பது எவை, அவை எவ்வாறு நகர் கின்றன, என்பவற்றை எல்லாரும் அறிந்தால் பலதரப் பட்ட தவறான கருத்துக்கள் மக்களிடமிருந்து நீங்கும். விண் மீன் அறிமுக நிகழ்ச்சிகளில் இவைதான் விவரிக்கப்படு கின்றன. சென்ற மார்ச் மாதம் கிரகச் சேர்க்கையினால் பூகம்பம் போன்ற சம்பவங்கள் நிகழும் என்று தவறான கருத்துக்கள் பரவின. ஆனால் எதுவுமே நிகழவில்லை என்பதை

யும், இவையெல்லாம் வீண் கற்பனைகள் என்பதையும் அனைவரும் புரிந்து கொண்டனர். முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது, கிரகங்கள் எல்லாம் அதாவது, புதன், சுக்கிரன், பூமி, செவ்வாய், வியாழன், சனி, யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ ஆகிய ஒன்பதும் சூரியனின் ஆகர்ஷண சக்திக்கு உட்பட்டு ஆகாயத்தில் இயங்குகின்றன, பல பல கோடி மைல்களுக்கப்பால் அதனதன் சுற்று வட்டப்பாதையில் நகர்ந்து கொண்டிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் சூரியனைச் சுற்றும் காலமும் மாறுபட்டுள்ளன. அதனால் அவை சுற்றும்போது சில காலத்தில் ஆகாயத்தின் ஒரே பகுதியில் வந்தமைவது இயற்கை. இதே போல் அநேக வருடங்களுக்கொருமுறை ஏற்பட்டுக் கொண்டு தான் இருக்கிறது. அதற்கும் பூமியில் ஏற்படும் பூகம்பம் அல்லது பிரளயம் போன்ற நிகழ்ச்சிகளுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை. இவைபோன்ற அறிவியல் கருத்துக்கள் அவ்வப்போது வானொலி மூலம் எடுத்துச் சொல்லப்படுகின்றன.

## தொலைபேசி விடு தூது

சென்னை தொலைபேசியின் நூற்றாண்டைக் கொண்டாடும் வகையில் வானொலியின் வரலாற்றில் புதியதோர் நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாண்டின் தொடக்கத்தில் ஜனவரி 31-ம்தேதி சென்னை வானொலி நிலையத்திலிருந்து இந்நிகழ்ச்சி ஒலிபரப்பானது. சென்னை வானொலி நிலைய அரங்கு, சென்னை தொலைபேசி அரங்கு, துறைமுக டிரஸ்ட் அரங்கு, அண்ணாசாலை இந்தியன் ஓவர்சீஸ் வங்கி அரங்கு, கிண்டி பொறியியல் கல்லூரியின் மின்அணுவியல் அரங்கு ஆகிய ஐந்து இடங்களில் இலக்கிய ஆர்வலர் குழுமியிருக்க, அவருடன் வானொலி நிலையத்திலிருக்கும் நடுவர் தொலைபேசி இணைப்பு மூலம் தொடர்பு கொண்டு இந்த நிகழ்ச்சியை நடத்தினார். நடுவரின் அழைப்புக்கு இணங்கி சுவைஞர் கதை, கவிதை, விவாத மேடை, நகைச்சுவை, ஆலோசனை என்று பல்வேறு சுவையான நிகழ்ச்சிகளில் பங்கேற்றனர்.

## அறிவியல் பூங்கா

அறிவியலின் வளர்ச்சியை கிராம மக்களுக்குக் கொண்டு செல்வதில் கண்ணும் கருத்துமாக செயல்படுகிறது வானொலி. அறிவியல் பூங்கா என்ற அற்புத நிகழ்ச்சி மூலம் பல அறிவியல் செய்திகள் மக்களுக்குக் கிடைக்கின்றன.

## தமிழ் மணம்

பழந்தமிழ்ப் பாடல்களைப் பக்குவமான இசையோடு இணைத்து மக்களின் கவனத்தை ஈர்க்கும் மாபெரும் பணியைச்

செய்து வருகிறது வானொலி. முக்கூடற்பள்ளு, நன்னெறி, குமரேச சதகம், திருவள்ளுவமாலை, அறப்பளீசுர சதகம் போன்ற, பண்டிதர் மட்டுமே தொட்டுப் பார்க்கும் நூல்களி லுள்ள பாடல்களைத் தேர்ந்தெடுத்து, பாமர மக்களும் ரசிக்கும் வண்ணம் செய்வது தமிழின் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாகும். செய்யுள் நடையிலுள்ள பல பாடல்களைப் படிக்கவே முகம் சுளிக்கும் பலருக்கு, அந்தப் பாடலைப் பதம்பிரித்து, பண்ணோடு இணைத்து வழங்குவதால் அனைவரும் இலகுவாக ரசிக்க முடி கிறது. அப்படியெல்லாம் பழம் பாடல்கள் இருந்தனவா என்று இன்றைய தலைமுறையைச் சேர்ந்த சிறுவரும், இளைஞரும் வானொலி கேட்பதன் மூலம் தெரிந்து கொள்கின்றனர். தமிழ் மொழியை மட்டுமே பாடமாக எடுத்துப் படிப்போர் படிக்கும் பல நூல்களைப் பலரும் அறிந்து கொள்ளும்படி, பண்ணோடு ஒலிபரப்புவது வானொலியின் சிறந்த சாதனை தான். சென்னை வானொலியில் 'தமிழ் மணம்' என்று தனியாக நேரம் ஒதுக்கப் பட்டு இத்தகைய பாடல்கள் ஒலிபரப்பாகின்றன.

நல்லகீதம் - பாரதியார், பதியுண்டு - தாயுமானவர், கோங்கு - யசோதரகாவியம், வஞ்சமற்ற - பார்தியார், சாட்டையில் - தாயுமானவர். அன்னதானம் - குமரேச சதகம், புரையின்றி - பழமொழிநானூறு, வாணிக்கல் தெய்வம் - பாரதியார், தெள்ளமிர்த - அறப்பளீசுர சதகம், திருவிளைத்தார் - தனிப்பாடல், தண்டாமரை - சீவக சிந்தாமணி, மண்முதல் - கம்பராமாயணம், நாவுண்டு - பெருந்தொகை, சந்தன—குமரேச சதகம், அன்பெனும்— அருட்பா, கருத்து—பழமொழி நானூறு, பவனி —குற்றாலக் குறவஞ்சி, சிவ சிவ —அருட்பா, பிறையணிந்த—பெருந் தொகை, ஈதல் - அவ்வையார், தென்னவா - தனிப் பாடல், சீர்கெழு - சிலப்பதிகாரம், அற்றகுளத்தில் - தனிப் பாடல், ஐவகை - தாயுமானவர், பொல்லாத - படிக்காசு தம்பிரான், பொன்னே - பலபட்டடைச் சொக்கநாதப் புலவர், சினமாக - மணிமேகலை, எண்ணரிய - கம்பராமா யணம், மூவுலகும் - சிலபபதிகாரம், வேதப் பொருளே - திரு வள்ளுவமாலை, ஓதற்கெளிதாய் - திருவள்ளுவமாலை, அரியது - அவ்வையார், பின்னமாம் - பெருந்தொகை வட வரையை-சிலப்பதிகாரம், முட்டின்றி- முன்றுறையரையனார் கலங்காத - அறப்பளீசுர சதகம், பங்கயந்தலை - முக்கூடற் பள்ளு. சேயிழை - புறநானூறு, மாசற்ற - நன்னெறி, வாணன் புகழ் - தனிபபாடல், முனிவிலும் - நன்னெறி,

எண்ணும் - பாரதியார், நாரணன் - கம்பராமாயணம், பரந்த - திருவள்ளுவமாலை என இது விரியும்.

**கவிதை**

மொழியை வளர்க்கும் முக்கிய துறைகளில் கவிதை சிறப்பிடம் பெறுகிறது. மரபினைப் போற்றி அதே நேரத்தில் புதுமை நோக்கில் கவிதைக்கு ஆக்கம் கொடுக்கும் முயற்சியும் நடக்கிறது. மரபை வேர் என்று சொன்னால் பூத்துச் சொரியும் மலர்களைப் புதுக்கவிதை வடிவங்கள் என்று சொல்லலாம். இதை உணராமல் புதிய பூ பூக்கிறதே என்று வேர் ஆயாசப் படுவதிலோ வேரின்றி நானே தான் பூத்தேன் என்று பூ பெருமையடித்துக் கொள்வதிலோ அர்த்தம் இல்லை. இத்தகைய புது முயற்சிகளுக்கும் மரபுக் கவிதைகளுக்கும் சிறப்பான வாய்ப்பு கொடுத்து செந்தமிழை வளர்க்கிறது வானொலி. கவிமுகில், கவிச்சொல் கேளீர், என் கவிதை போன்ற பல்வேறு தலைப்புகளில் கவிஞர் தங்கள் கவிதைகளை வழங்க வானொலி வகை செய்கிறது. காலத்தின் வேகமான வளர்ச்சிக்கேற்ப அதன் தேவைக்கேற்ப கவிதையின் பொருளும் இடம் பெறுகிறது. இயற்கையின் அழகை மட்டுமே ரசித்துக் கொண்டிருந்த கவிதை, சுத்தம், சுகாதாரம், வனப் பாதுகாப்பு, சுற்றுப்புற சூழ்நிலையைப் பாதுகாத்தல், குடும்ப நலம், சேமிப்பு, சிக்கன வாழ்வு போன்ற இன்றைய தேவைகளை வலியுறுத்தும் நோக்கோடு வானொலியில் இடம் பெற்று வண்ணத் தமிழுக்கு வளம் சேர்க்கின்றன. மரங்களின் பெருமைகளை மாண்புறப் பாடும் ஒரு சில வரிகள் ஆளுக்கொரு மரம் எனும் பி. வி. கிரியின் கவிதையில் அமைகின்றன.

மகேஸ்வரனுக்கு
மட்டுமல்ல
உற்சவம்!
மரத்துக்கும் கூட!
அதுவே
வனமகோற்சவம்!
அதனால்
இனறும் வணங்குவோம்
இயற்கைத் தெய்வத்தை
வனம்
பூமித்தாயின்
மனம!
அவள் புன்னகையோ

பூத்துக் குலுங்கும்
புதுமலர்!
அவளது
ஆனந்தக் கண்ணீர் தான்
அடை மழை!
நாட்டு நலத்துக்கு
நாம் செய்வதொன்றுண்டு
நாளுக்கொரு மரமல்ல
ஆளுக்கொரு மரம்
அழகாய் வளர்த்து
அன்னை பூமியை
அலங்கரிப்போம் வாரீர்!

*மரங்கள் மண்ணின் குடைகள் என்பது இ. சிகாமணியின் பாடல்.*

**கவியரங்கம்**

*பொங்கல், தமிழ்ப்புத்தாண்டு, குடியரசு தினம், சுதந்திர தினம் போன்ற முக்கிய சந்தர்ப்பங்களில் கவிஞரை அழைத்து பொதுமக்கள் முன்னிலையில் வானொலிக் கவியரங்கங்கள் நடத்தப்பட்டு, பின்னர் அவை வானொலியில் ஒலிபரப்பப்படுகின்றன. இவ்வாறு பட்டி மண்டபம், வழக்காடு மன்றம் போன்ற நிகழ்ச்சிகளும் ஒலிபரப்பாகின்றன. 1982-ஆம் ஆண்டு பாரதி நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டதற்காக வானொலி நிலையம் பாரதி கண்ட பாரதம் எனும் சிறப்புக்கவியரங்கை ஏற்பாடுசெய்தது. அதில் 'வறுமையே பெரும் பகை' எனும் இளந்தேவனின் கவிதை சிறப்புற அமைந்தது.*

பாரதி கண்ட பா...ரதத்துக்கு
முன்னேற்றக் குதிரைகள் பூட்டியிருந்தன...
நாமோ...
வறுமைச் சுமையை ஏற்றி குதிரையை
எருமைகளாக மாற்றி யிருக்கிறோம்.
பாரதத்தை வறுமை சுவைக்கக் கூடாதென்று
பாரதி வறுமையை தான் சுவைபார்த்தான்.
கிருஷ்ணாம் பேட்டையிலே கிடத்தி வைக்கப்பட்டவனின்
பாதி உடம்புதான் நெருப்புக்குச் சாப்பாடு.
பாதியை ஏற்கனவே பட்டினிக்குக் கொடுத்துவிட்டான்...
கவிஞன் என்பவன்
வாழ்கிற காலத்தில் செத்துப் போனவன்...
செத்துப் போனபின் வாழ்ந்து கொண்டிருப்பவன்

ஆகவே பாரதி அமரனாயிருக்கிறான்
அந்த
அமரன் கண்ட கனவுகள் இன்னும்
மொழி பெயர்க்கப்படாமல் மூலையில் இருப்பதால்
வறுமைக்கு நாமின்னும் வாழ்க்கைப் பட்டிருக்கிறோம்...
'என்னையே நோக்கி இந்நெடும்பகை தேடிக் கொண்டேன்'
என்ற இராவணன் போல் இந்தியர் இருக்கிறோம்
நம்மையே நோக்கியிந்த நெடும்பகை தேடிக் கொண்டோம்......

வைரமுத்துவின் தேசவிடுதலை, இலந்தை சு. ராமசாமியின் தொழில் வளர்ச்சி போன்ற கவிதைகளும் குறிப்பிடத்தக்கன.

**சட்டங்களைப் பற்றித் தெரிந்துகொள்வோம்**

மக்கள் வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்துவைக்க அரசியல் சட்டம் நமக்கு வழிகாட்டுகிறது. ஆனால், பொது மக்களில் பலர் ஒரு குறிப்பிட்ட பிரச்சினைக்குச் சட்டம் என்ன சொல்லுகிறது என்பதைத் தெரிந்துகொள்ளாமல், தெரிந்து கொள்ள வாய்ப்பில்லாமல் வழக்கறிஞரையே நம்பி இருக்க வேண்டிய நிலை உள்ளது. சட்டங்கள் பற்றிய தெளிந்த அறிவு மக்களுக்கு இருந்தால் தாங்களே சிந்தித்து, வழக்கறிஞரோடு ஆலோசனை செய்து பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள முடியும். படிப்பறிவில்லா மக்கள் பலர் வாழும் நம் நாட்டில் வானொலி மூலம் பல சட்டங்களைத் தெரிவிக்கும் முயற்சி மேற் கொள்ளப் பட்டது. கோயமுத்தூர் வானொலி நிலையத்தி லிருந்து 'வாரம் ஒரு சட்டம்' என்ற தொடரில் ஒவ்வொரு வார மும் ஒரு சட்டம் விளக்கப் பட்டது. இதன் மூலம் சட்ட சம்பந்த மான பல கலைச் சொற்கள் தமிழுக்கு அறிமுகமாயின. அவ்வாறு ஒலிபரப்பப்பட்ட சில சட்டங்களும், அவற்றில் பங்கு கொண்டு உரையாற்றிய வழக்கறிஞரும்:

வரதட்சணைத் தடுப்புச் சட்டம் - ஆர்.எம். சண்முகம், வாகன விபத்துக்கான நஷ்டஈட்டுச்சட்டம் - டி. மயில்சாமி, சொத்துரிமைச் சட்டம் - பிரேமா சாமுவேல், காப்பி ரைட் சட்டம் - எம்.என்.ராமலிங்கம், குத்தகை மற்றும் வாடகை கட்டுப்பாட்டுச் சட்டம் - செல்வி. ஏக்னஸ், முதியோர் பாது காப்பு நலச்சட்டம் - கே.வெள்ளங்கிரி, உயில் - எம் பெரியசாமி, தத்துச்சட்டம் - ஈரோடு சி. பாஸ்கரன், தீங்கியல் - கே. அனந்த குமார், கடன் நிவாரணச்சட்டம் - டி. திருநாவுக்கரசு, கடைகள் மற்றும் நிறுவனங்கள்சட்டம் - சி.எஸ். வெங்கடசுப்பிரமணியன், ஒப்பந்தங்கள் - டி.கே. பாப்பண்ணன், ஜீவாதார உரிமைகள்- ஜி. சிவராமலிங்கம், வயது நிரம்பாதோர் சட்டம் - டி.எஸ். ராம

ர்த்தினம், பதிவு மற்றும் மத்தியஸ்தர் தொடர்பான சட்டப் பிரிவுகள் - என்.டி.என் பார்த்தசாரதி, தேர்தல் சட்டம் - ஆர். சுப்பிரமணியன், மணமான மகளிர் உரிமைகள் - பி.வி. கணேசன், தடுப்புக்காவல் சட்டம் எஸ். ஆர். ஆறுச்சாமி, திருட்டுக் கொள்ளை - எம் தியாகராஜன், கொலை - என். ஆறுமுகம், அவதூறு, பண்பாடற்ற செயல், அச்சுறுத்தல்— என். ஆர். சம்பத்.

**சிறுகதை**

தற்கால இலக்கியப் படைப்பில் சிறப்பிடம் பெற்று விளங்குவது சிறுகதை. மானுட வர்க்கத்தில் அன்றாட வாழ்வில் ஊடாடும் சின்னச் சின்னப் பிரச்சினைகளே இதற்குக் கருவாகின்றன. அதைப் பின்னும் விதத்திலே நெஞ்சில் நிலைத்து நிற்கும்படி செய்யும் ஆற்றல் சிறுகதை எழுத்தாளனைப் பொறுத்தது. நொடிப் பொழுதில் வண்ண மிட்டு மறையும் மத்தாப்பைப் போல படிப்போர் நெஞ்சைப் பளிச்செனக் கவர்வதே சிறந்த சிறுகதை. ஆனால் அந்தக் கவர்ச்சி மட்டும் போதாது. ஆழமும் வேண்டும். அப்போதுதான் காலந்தோறும் அந்த சிறுகதை நிலைத்து நிற்கும். சிறுகதையின் வளர்ச்சிக்கு வானொலியும் தகுந்த வாய்ப்பளித்து வருகிறது பொதுவாக ரசிகர்களுக்கென்று ஒலிபரப்பாகும் சிறுகதைகள் போக, தொழிலாளர் நிகழ்ச்சி, மாதர் நிகழ்ச்சி, இளைஞர்க்கான நிகழ்ச்சி ஆகியவற்றில் அந்தந்த பிரச்சினைகளுக்கேற்ப சிறுகதைகள் படைக்கப்படுகின்றன. இதன் மூலம் சமுதாயத்தில் ஒவ்வொரு பிரிவினரின் தனித்தன்மையான பிரச்சினைகள் கூர்ந்து கவனிக்கப்பட்டு கதை வடிவாகும் வாய்ப்பு பெற்றன. அவ்வாறு ஒலி பரப்பப்பட்ட சிறுகதைகள் பல. புகழ் பெற்ற எழுத்தாளரும், புது எழுத்தாளரும் பல் வகையான கருவுடன் இவற்றைப் படைத்துள்ளனர்.

உதிராத மலர்—புலவர் கல்லை ஆ. துரை

இந்தச் சிறுகதையை சுண்டி இழுக்கும் படியான சொற் ஜாலங்களைக் கொண்டு, விதிவிலக்கான கதாபாத்திரங்களை விரக்தியான மிதவாதப் போக்குக் கொள்ளும் வகையிலும் உணர்ச்சிகளைக் கிளறும் வண்ணமும் அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

உதய காலத்து அஸ்தமனம் — பால விஜயகுமார்.

மூர்த்தி சிறியதாயினும் கீர்த்தி பெரியது என்பதற்கேற்ப சிறிய கதையாக இருந்தாலும், மிகப் பெரியதொரு கருத்தை தெளிவாக எடுத்துக் காட்டியது. உஷா போன்ற பெண்கள்

இன்றைய சமுதாயத்துக்கு மிகமிகத்தேவை. ரவியின் மனம் மிகவும் விசாலமானது. மொத்தத்தில் சிறுகதை பாடமாகவும் படிப்பினையாகவும் அமைந்திருந்தது.

உறவு — ராஜம் கிருஷ்ணன்.

நெஞ்சத்தைநெகிழ வைத்த அம்சுவைப் போல் எத்தனையோ பெண்கள் இன்று ஏழ்மையில் வாடிக் கொண்டிருக்கின்றனர். அத்தையின் கீழ்த்தரமான பேச்சில் இடம் பெற்ற வசனங்கள் ஒவ்வொரு இதயத்தையும் இளக வைத்திருக்கும். குறிப்பாக கதையின் இயற்கையான வசனம் பாராட்டுதற்குரியது.

அன்பிற்கு மறுபெயர் அருணகிரி — கோமதி ஸ்வாமிநாதன்.

இருபது ஆண்டுகள் ஆசிரியராகவும், இருபது ஆண்டுகள் தலைமை ஆசிரியராகவும் பணியாற்றி மாணவ சமுதாய வளர்ச்சியில் பெரும்பங்காற்றி ஊரிலேயே ஒருவித தனி மரியாதையைப் பெற்றிருந்த அருணகிரி மறக்க முடியாத பாத்திரம். அருணகிரியைப் போல் கடமையைக் கண்ணாக மதித்து, போக்கிரியாக மாறியிருந்த கோவிந்தனை அன்பால் நல்ல வழிக்குத் திருப்பி சாதனை புரிந்த ஆசிரியர் இருப்பதால் தான் "மாதா பிதா குரு தெய்வம்" என்ற முதுமொழிக்கே அர்த்தம் ஏற்படுகிறது.

கைமேல் பலன் — வெ. கபிலன்

சமுதாயத்தில் இன்னும் சிலர், தான் முன்னொரு காலத்தில் எப்படி இருந்தோம் என்பதை சற்றும் நினைத்துப் பார்க்காமல் தற்பொழுது தான் இருக்கும் நிலையின் பூரிப்பால் வேண்டாத சில காரியங்களைச் செய்து விடுகிறார்கள். அதனால் பின்னால் வரும் இடையூறுகளை நினைத்துப் பார்ப்பதில்லை என்னதான் பணமும், பேரும், புகழும் வந்துவிட்டால்கூட, நாம் முன்னொரு காலத்தில் எப்படி இருந்தோம் என்பதை நினைத்துப் பார்த்து செயல்பட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியது இச்சிறு கதை.

இளந்தலை முறை — ?

மாறி வருகின்ற இந்த தலைமுறையினரின் மனநிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாகக் கதை இருந்தது. பெண்ணுக்கும் பொருளுக்கும் ஆசைப்படாமல் நீதி வழியிலும், நேர்மை உணர்வுடனும் மனிதாபிமானத்துடன் நடக்கத் துடிக்கும் இளைஞர் விரைவிலேயே ஒரு புதிய சமுதாயத்தை அமைக்கப் போகின்றனர் என்பத கு இது ஒரு எடுத்துக்காட்டு.

புதுமைப் பெண் — ஜே. எம். சாலி

இந்தச் சிறுகதை ஒரு பெண்ணுக்கு, கணவன் அல்லாத இன்னொரு ஆண் நண்பனாக இருக்கக் கூடாது: இருந்தால் இப்படித்தான்......என்பதை உணர்த்துகிறது.

நல்லதோர் வீணை செய்து — இனியவன்

கதையில் ஆசிரியர் தமது பேனாவை வீணையாக்கி மனோரமா போன்ற நல்ல உள்ளங்களை அதில் ஸ்வரங்களாய் மீட்டி அனைவரையும் வயப்படுத்தி விட்டார்.

நதி வழிமாறுகிறது — இரா. வேலுச்சாமி

ஒரு கிராமத்தில் திசைமாறிப் பாய்கிற நதியால் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கையும் அவலங்களையும் படித்தபோது நமது கண்களிலும் கண்ணீர் நதி பெருக்கெடுத்து ஓடுவதை அணை போட்டுத் தடுக்க முடியவில்லை.

இது என்ன சார் நியாயம் — ப. முருகேசன்

காதல் கொள்வது இயல்பாய் அமைவதா? அல்லது அதற்கும் சில தகுதிகள் தேவையா? வேலை தேடிக்கொண்டு வசதியாய் இருப்பவன்தான் காதலிக்க தகுதியுள்ளவன் என்ற நிதர்சனத்தைப் புரிந்து கொள்ளும் ஒரு இளைஞனின் வேதனை அனுபவம் இந்த சிறுகதை.

ஒரு குழந்தையின் நன்மைக்காக — கோவை பாலகிருஷ்ணன்

தான் பெற்றெடுத்த தன் குழந்தையையே நீண்ட நாட்களுக்குப் பிறகு தேடிக் கண்டுபிடித்தும் அதை அடைய வகையற்றுத் தவிக்கிறது ஒரு தாய் மனம். பாசத்துக்கும் நல்லுணர்வுக்குமிடையே பிரிவுச் சுவர் எழுப்பிய சிறுகதை.

மேலும், உயிர்ப்பு-க. தட்சிணாமூர்த்தி, பார்வைகள் மாற வேண்டும் - பூவை. தங்கபாரதி, வேலு - விக்கிரமன், அழைக்கும் கடமைகள்-மன்னார்குடி விசுவநாதன், நான்கு பேர் - பனசை. கண்ணபிரான், அன்பளிப்பு - வீர. வேலுச்சாமி, இடி-எஸ். ஸ்வாமிநாதன், பூச்சாண்டி - அகிலன், தனி ஆவர்த்தனம் - மல்லிகைக்கண்ணன், பாதையில் கிடந்த மலர் - உஷா, ஆயிரத்தில் ஒருத்தி அம்மா-எம். ஸ்டீபன்ராஜன், சிரிக்க மறந்த பூக்கள்-மல்லிகைக்கண்ணன், என்னைக் கவர்ந்த அவன்-அவள்-இளசை எஸ். சுந்தரம் எனப் பல கதைகள் ஒலிபரப்பாயின.

**உரை**

வானொலி நிகழ்ச்சிகளில் முக்கியமானவற்றில் உரை நிகழ்ச்சியும் ஒன்று. பல கருத்துக்களை நேரடியாகவே மக்களுக்கு

எடுத்துச் சொல்ல இந்த முறை பயன்படுகிறது. உரையில் உள்ள குறை என்னவென்றால் நினைவாற்றலுக்காகவும், இலக்கியச் சுவைக்காகவும் எழுத்தின் வரிகளை மீண்டும் படித்துப் பார்ப்பது போல் ஒலிவடிவான உரையில் மீண்டும் கேட்பது இயலாத காரியம். அதே நிகழ்ச்சியை வானொலி திரும்பவும் ஒலி பரப்பினாலன்றி உரையில் சொல்லப்பட்ட செய்திகளை நாம் முழுவதும் நினைவுக்குக் கொண்டு வர முடியாது. ஆனால் எழுத்தில் அப்படியில்லை. நினைவாற்றலுக்காகவும், இலக்கியச் சுவைக்காகவும படித்து முடித்த வரிகளில் மீண்டும் உடனே படிக்க இயலும். உரையில் இந்தக் குறை இருந்தாலும் அதையும் தாண்டி அதற்கென்று தனித்த சிறப்பு உண்டு. உரை செவிப் புலனை மட்டுமே நம்பி ஒலிபரப்பப்படுவதால் கேட்போரின் கற்பனையைக் கிளறி விடக்கூடிய ஆற்றல் அதற்கு உண்டு. உள்ளத்திலிருந்து பிறக்கும் ஒரு கருத்தை அந்தரங்க உணர்ச்சியில் குழைத்து வெளியிடுவதற்கு ஏதுவான சாதனம் உரை ஒன்றுதான். குரலின் தன்மை, ஏற்றத்தாழ்வு, குழைவு, நெளிவு, சுளிவு இவற்றின் வழியாக பேசுகிறவர் தனது உள்ளக் கருத்தை கேட்போரின் நெஞ்சிலே இறக்கிவிடமுடியும். இந்தக்கலை உத்தியை வானொலி மிகச்சிறப்பாக பயன்படுத்துகிறது.

எல்லோரும் ஓரினம்—பாண்டிச்சேரி.

மதங்களும், சமயங்களும், இன்ன பிறவும் நம்மைப் பிரித்தாலும் நாம் எல்லோரும் ஓரினம்—அது பாரத புகழ் இனம்—உலக மாந்தரினம். மகாகவியின் "எல்லோரும் ஓரினம்" என்ற வரிகள் மிகவும் பொருள் பொதிந்தவை. இதை விளக்கும் உரைகள் மாதம் இருமுறையாக ஒலிபரப்பப்பட்டது.

தாகூர் கண்ட பெண்மையின் நளினம்—கோயமுத்தூர்.

தாகூரின் பெண்பாத்திரங்கள் புதிரானவை. சிக்கலான மன அமைப்புடன் சிந்திக்கும் பாங்கும் கொண்டவை. நளினமும் நயமும் மிக்கவை. தாகூர் கண்ட பெண்மையின் பெருமையை விவரித்த உரை.

நாட்டுப்புற நம்பிக்கைகள்—கோயமுத்தூர்.

நாட்டுப்புறநம்பிக்கைகள் விசித்திரமானவையாகத்தோன்றலாம். ஆனால் அவற்றில் பொதிந்துள்ள உட்கருத்து பூமியின் பண்பாட்டுக்கும், உறவின் உன்னத நெருக்கத்துக்கும் அடித்தளம் அமைத்து எழுப்பப்பட்ட நுண்மையான எண்ணக்கோட்டையாக இலங்குவதோடு, நாட்டுப்புற நம்பிக்கைகளில் இழைந்தோடும் நுட்பமான மனித உறவுகளை விவரித்த உரை இது.

சமயம் கண்ட சகோதரத்துவம்—இந்துமதம்—சென்னை.

மதங்களிடையே வேறு எந்த வேறுபாடுகள் காணப்படினும், மனிதரிடையே சகோதரத்துவம் காணும் முயற்சியில் அவை அனைத்தும் ஒன்றே என்பதை விளக்கிய உரை.

பாரதியார் பார்வையில் பெண்மை — சென்னை.

பெண் சமுதாயம் விழிப்புணர்ச்சி பெற ஆணுடன் சம உரிமை பெற்று சிறக்க குரல் கொடுத்தவர் மகாகவி பாரதியார். அவர் கண்ட கனவு நிறைவேறி உள்ளதா என்று ஆராய்ந்த உரை.

நான் ஏன் எழுதுகிறேன் —சென்னை

சிந்தனையின் காட்சி வடிவம் எழுத்து. சிந்திக்கத் தெரிந்தவன் மனிதன். ஆனால் மனிதர் எல்லோரும் எழுதும் ஆற்றலைப் பெற்றிருக்கின்றனரா? எழுதுவதற்கு எவ்வளவோ உந்துதல் காரணங்கள் உண்டு. அதை விவரித்தார் ஜெயகாந்தன்.

இலக்கிய வளர்ச்சியில் பத்திரிகையின் பங்கு—கோயமுத்தூர்

தற்காலத்தில் வார, மாத இதழ்கள் இலக்கியப் படைப்புகளைச் சுமந்து வருகின்றன. தரமான இலக்கிய வளர்ச்சிக்கு இந்த இதழ்கள் எவ்வாறு உதவுகின்றன என்பதை ஆராய்ந்த உரை.

ஏன் எழுதுகிறேன்—சென்னை

எழுத்தாளர் விக்கிரமன் தனது அனுபவங்களைக் கூறினார்.

காந்தியப் பொருளாதாரமும், காலத்தின் மாறு பாடுகளும்—கோயமுத்தூர்.

மாறி வரும் கால மாறுதலுக்கேற்ப பொருளாதார நிலையும் அணுகுமுறையும் மாறுபடுகிறது. காந்தியடிகள் வகுத்துத்தந்த பொருளாதாரக் கொள்கை மனித குலத்தின் பல்வேறு பிரிவுகளின்பாற் கொண்ட நேயம், கருணை, மனிதாபிமானம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது. அறிவியலின் தவிர்க்க இயலாத தாக்குதலுக்கு உட்படும் இன்றைய சமுதாயத்திற்கு காந்தியடிகளின் பொருளாதாரக் கொள்கை பொருத்தமுடையதாகுமா என்று விளக்கிய உரை இது.

மொழிவளர்ச்சியும், மனித மதிப்பீடுகளின் முன்னேற்றமும்-கோயமுத்தூர்

மொழியின் வளர்ச்சியும், மனித எண்ணப் போக்குகளின் முன்னேற்றமும் இணைந்து நடைபெறுவதாகும். சமுதாயத்தின் பல்வேறு நிலையில் நிகழும் மாற்றங்களை உள் வாங்கிக்கொண்டு அந் நிலத்து மொழி மெருகேறுகிறது. பின்னர் மொழியும். இலக்கியமும் மனிதரின் எண்ணங்களை பக்குவப்படுத்தி, மனித மதிப்பீடுகளை உயர்த்த உதவுகிறது. இக்கருத்தை விளக்கிய உரை இது.

திருச்சிராப்பள்ளி வானொலியிலும் மிகப் பல உரை நிகழ்ச்சிகள் ஒலி பரப்பாயின.

## இலக்கியப் பேருரை

இலக்கியத்தில் ஒரு குறிப்பிட்டப் பொருளை எடுத்துக் கொண்டு அதை விரிவாக ஆராய்ந்து, பல செய்திகளை மக்களுக்குத் தொகுத்துச் சொல்வது இலக்கியப் பேருரை ஆகும். பேருரைகள் பொதுவாக ஒரு மணி நேரம் ஒலிப்பரப்பாகும். அப்போது தான் மிக விரிவாக ஒரு தலைப்பை ஆராய்ந்து செய்திகளை எடுத்துச் சொல்ல வாய்ப்புக் கிடைக்கும். இதன் மூலம் பல புதிய செய்திகள் வளரும் தமிழுக்கு வந்து சேருகின்றன.

வேதாந்த மரத்தில் ஒரு வேரைக் கண்டேன்—கோயமுத்தூர்.

பாரதியின் குயில்பாட்டு பலருக்கும் புரியாத புதிராகவே இருந்து வருகிறது. எனினும், பாரதியின், பல்வேறு கட்டங்களிலும் பலவித அருள் மேன்மை உணர்வுகளைப் பெற்று பாடிய பாடல்களை முழுக்க ஆய்ந்தால் வேதாந்த மரம் என்ற ஒன்றை அவரே குறிப்பிடுவதை அறிகிறோம். குயில்பாட்டின் தத்துவத்தை பாரதி தம் சுய சரித்திரத்தில் கோடிட்டுக் காட்டுவதைக் கொண்டு விரிவாக விளக்கிய சொற்பொழிவு.

சங்க இலக்கியத்தில் அறிவியல்—பாண்டிச்சேரி

சங்க இலக்கியம் என்றாலே பழம்பெருமையைக் கூறுவது என்று தான் எல்லோரும் நினைக்கின்றனர். பழைய உண்மைகளை படியாகக் கொண்டுதான் இன்றைய மக்கள் சமுதாயம் மேம்பாட்டின் உச்சிக்கு ஏறிவர முடிந்திருக்கிறது என்பதை இவ்வுரை விளக்கியது.

தற்காலக் கவிதையின் போக்கு, பாரதியும் பெண்மையும், பாரதி ஓர் அதிசயம், பாரதியும் கீட்சும், தமிழில் இறை வழிபாடு, வயிற்றிடை வாயன், பாரதியின் படைப்புகளில் நகைச்சுவை, தொல்காப்பியத்தின் இலக்கியக்கொள்கை, மகா கவியில்

மண்ணின் குரல், குயில்பாட்டில் கூறப்படும் தத்துவம், திருக்குறளும் ஒப்புமைக் கொள்கையும், மலை மகள் திருமணம், பாரதியின் கவிதை அமைப்பு என்று திருச்சியிலிருந்து வந்த உரைகளும், கண்ணார் அமுதன் எனக் கோயமுத்தூரிலிருந்து ஒலிபரப்பான உரையும் இவ் வகையில் வந்தன வாகும்.

**கல்வி நிகழ்ச்சிகள்**

வானொலி மூலமாக நடைபெறும் கல்வி நிகழ்ச்சிகள் மாணவர்க்குப் பெரிதும் உதவுகின்றன. இந்தியாவிலேயே தமிழகத்தில் தான் வானொலிப் பெட்டிகள் இருக்கும் பள்ளிகள் அதிகம் இருப்பதால் பயனும் அதிகமாக இருக்கிறது. வகுப்பறைக் கல்வியோடு வானொலிக்கல்வியையும் மாணவர் பெறமுடிகிறது. ஆசிரியர் மூலமாகவே பாடங்களைக் கேட்கும் மாணவர் கொஞ்சம் வித்தியாசமாக வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்பதிலும் ஆர்வம் காட்டுகின்றனர் வானொலியில் பாடங்கள் நேரடியாக போதிக்கப்படாமல் உரையாடல், உரைச் சித்திரம், நாடகம் போன்ற கவர்ச்சிகரமான கலைவடிவங்கள் மூலமாக வழங்கப் படுகின்றன. தமிழ், அறிவியல், வரலாறு, புவியியல் போன்ற பாடங்கள் வானொலி மூலம் கற்பிக்கப் படுகின்றன. இத்தகைய வானொலிப்பாடங்கள் மாணவர்க்குப் பயன்படுவதோடு தமிழின் வளர்ச்சிக்கும் உதவுகின்றன. ஒரு குறிப்பிட்ட பாடத்தை எடுத்துக் கொண்டால் அதுபற்றி, பாடப் புத்தகத்திலுள்ள செய்திகளை மட்டும் கூறாது, அது தொடர்பாக, பல்வேறு தகவல்களைத் திரட்டி வானொலி நிகழ்ச்சிகள் தயாரிக்கப் படுகின்றன அழகுக்கு அணிகலன்களும் கிடைத்தாற்போல தமிழின் வளர்ச்சிக்கு மேலும் இது உதவுகின்றது. 'சென்று பார்ப் போம்' என்ற நிகழ்ச்சிகளின் மூலம் பல்வேறு தொழிற்சாலை களுக்கும், ஆலயங்களுக்கும், வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இடங்க ளுக்கும் வானொலி மூலமாக மாணவரை அழைத்துச் செல்லும் புதுமை நிகழ்ச்சிகளும் இதில் இடம்பெறுகின்றன. 'சொல்லுங் கள் பார்க்கலாம்' என்ற வினாடிவினா நிகழ்ச்சி மூலம் பல புதிய செய்திகள் மாணவர்க்கும் அதே நேரத்தில் தமிழ் மொழிக்கும் வந்து சேருகின்றன. 'பாடிப் பழகுவோம்' பகுதியில் பல சிறந்த பாடல்கள் மாணவர்க்குக் கற்றுத் தரப்படுகின்றன.

இக் கல்வி நிகழ்ச்சிகள் சென்னை, திருச்சிராப்பள்ளி ஆகிய வானொலி நிலையங்களில் தயாரிக்கப் பட்டு ஒலிபரப்பா கின்றன. தமிழ்நாட்டிலுள்ள பிற வானொலி நிலையங்களும், பாண்டிச்சேரி வானொலி நிலையமும் இந்நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்கின்றன. ஒவ்வொரு வகுப்புக்கென்றும் தனித்தனியாக நிகழ்ச்சிகள் தயாரிக்கப் படுகின்றன.

6-ஆம் வகுப்புக்கு 'நமது நாடு' என்று மூவேந்தர், பௌத்தம் -சமணம், குப்தர்கள், முஸ்லிம் வம்சங்கள், மொகலாயர், ஆங்கிலேயர், பாரதக் குடியரசு என்பனவும்; மொழிப்பாடம் கற்பித்தலின் நோக்கங்கள், வாழ்த்து, தாய் மொழிப் பற்று, கவரி வீசிய காவலன், காப்பியங்கள், இசை, ஓசை நயங்களுடன் செய்யுள் கற்பித்தல், தந்தையன்பு, காவிரி வழங்கும் கவின்மிகு காட்சிகள், பசும்பொன் உ. முத்து ராமலிங்கத்தேவர், படிக்கும் திறன், ஆசிய ஜோதி , குடும்ப விளக்கு, கண் இழந்தும் கல்வி கற்ற கவிஞர் போன்றனவும் வழங்கப்பெற்றன. இவ்வாறே 7-ஆம் வகுப்புக்கு, 'பாடிப் பழகுவோம்' என்ற இசைப்பாடலும், நியூஸிலாந்து: அமைப்பும் விவரங்களும், மொகலாயர் கலை வளர்ச்சி, ஆப்ரிக்கா: அமைப்பு விவரங்கள், பயிர்கள், மொகலாயப் பேரரசு மறைவு, ஆப்ரிக்கத் தொழில்கள் என்பனவும், 'சொல்லுங்கள் பார்க்கலாம்' என வரலாறும், பொது அறிவும், மேலும் தனி எந்திரங்கள், இயக்கம், திரவங்கள், உயிரினங்கள்: சமூகங்களும் எண்ணிக்கையும், சார்ந்து பிழைத்தல், மக்கள் பெருக்கமும் தேவைகளும், பாஸ்கல் விதி, நிலை மாற்றம் போன்றனவும் ஒலிபரப்பப் பெற்றுள்ளன

8-ஆம் வகுப்பிற்கு 'சென்று பார்ப்போம்', 'உரைக் கோவை', 'சொல்லுங்கள் பார்க்கலாம்' எனும் அமைப்புக்களில் தென் அமெரிக்கா: விவசாயமும் தொழில்களும், மக்களும் போக்குவரத்தும், வாணிகம், நல்ல குடும்பம், வரலாறு, பாண்டிச்சேரி, இயற்பியல் தராசு, புவியீர்ப்பு, தனி ஊசல், மூலக்கூறுகள், நுண்ணுயிர்கள், இலகு இயந்திரங்கள், மீட்சி இயல், நீர், தாவரங்கள், விலங்குகள், மிதத்தல், வாயுவின் அழுத்தம், செல்கள், சமதள எதிரொளிப்பு, திசுக்கள், தவளை இருதயம், ஒளியின் திசைவேகம், தொடரிணைப்பும், பக்க இணைப்பும், மனிதனின் இருதயம், தமனிகள், சிரைகள், மின்னோட்டத்தின் வேதியியல் பயன் எனபனவும், பாடிப் பழகுவோம் பகுதியும், பொது அறிவு வினாடிவினாவும் அமைந்தன.

9-ஆம்வகுப்பிற்கு அறிவியல் கல்விநிகழ்ச்சிகளாக 'அமைப்பும் வேலையும்' என இலைகள், தசைமண்டலம், தோல், சிறுநீரகம், எலும்புகள், கண் என்பன குறித்தும், ஒளிச்சேர்க்கை, சுவாச மண்டலம், சுவாச உறுப்புக்கள், நரம்புகள், ஐம்புலன் குறித்தும், பாடங்கள் அமைந்ததுடன் பொது அறிவு—வினாடி வினாவும் நிகழ்ந்தது.

10-ஆம் வகுப்பிற்குப் புவியியல் வரலாற்றுப் பாடமாக, நிலத்தின் தோற்றம், ஆறு, கடல், காற்று, ஆசியாவின் பொது விவரம் என்பனவும், பொது அறிவு வினாடிவினாவும், 'நம்நாடு' எனும் தலைப்பில் நல்லவர்கள், சமயத் தலைவர்கள், துணைக் கண்டம், மொகலாயர்கள், இயற்கைப் பிரிவுகள், தட்பவெப்ப நிலையும், மழையும், விவசாயம், கால்நடைச்செல்வம், தொழில் கள் எனும் பொருள் பற்றிய உரைகளும் அமைந்தன.

## முறைசாராக் கல்வி

பள்ளிகளில் பயிலும் மாணவர்க்கு வகுப்புவாரியாக ஒலி பரப்பப்படும் நிகழ்ச்சிகள் தவிர, பள்ளிப் படிப்பை இடையில் விட்டவர்க்கும், பள்ளியின் வாசலையே அறியாதவர்க்கும் நல்ல அறிவை ஊட்டி நாட்டின் சிறந்த குடிமக்களாக்க முறைசாராக் கல்வி ஒலிபரப்பப்படுகிறது. படிப்பறிவு இல்லாதவர் வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்பதன் மூலம் நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ள முடிகிறது. வானொலி செவிப்புலனை மட்டுமே சார்ந் திருப்பதால் இது அவர்க்கு எளிதாக இருக்கின்றது. திருச்சிராப் பள்ளி வானொலி நிலையத்திலிருந்து இந்த முறைசாராக் கல்வி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன. இதில் பல தலைப்புகள் உள; பல முறைகளும், உத்திகளும் கையாளப்படுகின்றன. முறை சாராக் கல்வியும் கற்பிக்கும்முறைகளும், அறிவியல் அற்புதங்கள், சிறுசேமிப்பு (வில்லுப்பாட்டு), ஆண்டுமுழுவதும் பண்டிகை (நாடகம்), நாட்டுக்கு உழைத்த நல்லோர்: லால்பகதூர் சாஸ்திரி, தேடிவந்த அறிவு (நாடகம்), உயிர்களைப் பாதுகாப் போம், தொழில் செய்ய நிதி உதவிகள் பெறுவது எப்படி? உலகை மாற்றிய அறிவியல் அறிஞர் தாமஸ் ஆல்வா எடிசன், தொற்று நோய்களும், தடுப்பு முறைகளும், பாப்பாவும் பாரதியும் (உரைச்சித்திரம்) போன்று இவை பலவாகும்.

## சான்றோர் வாக்கு

நம் நாட்டிலும் சரி, வெளி நாட்டிலும் சரி பல அறிஞர், சான்றோர், மகான்கள் தோன்றி மறைந்திருக்கின்றனர். அவர் களின் சிந்தனைகள், போதனைகள் நமக்கெல்லாம் நல்ல வழி காட்டிகளாக இருக்கின்றன. ஆனால் அவற்றை யெல்லாம் ஆற அமர இருந்து படிப்பதற்கு மக்களுக்கு நேரம் இருப்பதில்லை. எனவேதான் அவர்களின் கருத்துகளை சான்றோர் வாக்கு, இன்றைய சிந்தனை, குறள் நெறி, மணி மொழி, நாள் ஒரு குறள் என்று பல்வேறு தலைப்புகளில் வானொலி நிலையங்கள் ஒலி பரப்புகின்றன. வெளி மாநில, வெளி நாட்டு அறிஞரின்

சிந்தனைகளையும், கருத்துக்களையும் நாம் அறிந்து கொள்ளு வதற்கு வாய்ப்புக்கள் குறைவு. கற்றறிந்த ஒரு சிலர் வேண்டு மானால் எப்படியோ அவற்றைத் தேடிப் பிடித்துப் படிக்க முடியும். அப்படிப் படித்தாலும் அவர்க்கு சில விளக்கங்கள் தேவைப்படும். சாதாரண மக்களுக்கு இந்த வாய்ப்புக்கள் கிட்டு வது மிக மிக அரிது. இத்தகைய அரிதான செயலை அதிகாலை வேளையில் தங்கள் இல்லங்களில் இருந்தே கேட்டு மகிழ்ந்து சிந்திக்க முடிகிறதென்றால் அதற்கு வழிகாட்டியாக அமையும் வானொலியின் சாதனை நன்றாகப் புரியும். இவ்வாறு ஒலி பரப்பப்பட்ட சான்றோரின் சிந்தனைகள் பல.

கபீர்தாசரின்சிந்தனைகள் - கோ. முத்துப்பிள்ளை.

ஒருவரை ஒருவர் ஏமாற்றிப் பிழைப்பதையே உத்தம வாழ்க்கையெனக் கொண்டு திரிகின்ற உலகோரைப் பார்த்து, கபீர் சொல்கிறார்: "தான் ஏமாந்தாலும் பிறரை, ஒருவரும் ஏமாற்றாதீர். நாம் ஏமாந்தால், பிறருக்காவது சுகம் ஏற்படும். பிறரை ஏமாற்றினால் நமக்கு துக்கம் தான் ஏற்படும்," என்கி றார். "பிறர் மகிழ்ச்சியே நமக்கு பெரு மகிழ்ச்சியாகும்" என்பதைக் கவினுறக் காட்டுகிறார் கபீர். அன்பின் இடமாற்றம் தானே ஏற்படும். இந்த மாற்றம் நம்மிடம் நிகழ வேண்டாம். பிறருக்கு வாய்ப்புக் கொடுப்போம். அவர்கள் பெறட்டும் அந்த மகிழ்வினை என்று காட்டுகின்றார்.

ரவீந்திரநாத் தாகூரின் சிந்தனைகள் — எஸ். மோகன்.

தன்னுடைய வாழ்நாள் முழுவதும் ரவீந்திரநாத் தாகூர் மக்கள் அனைவரும் சமம் என்ற சீரிய கொள்கையை நிலை நாட்ட பல்வேறு வழிகளிலும் பாடுபட்டார். "ஏழைகள் பொருள் ஈட்ட, சொத்து சேர்க்க வழிகள் செய்ய வேண்டும். மக்களின் அடிமைத் தளை அகற்றப்பட வேண்டும். கல்வியறி வற்ற மக்கள் கல்வி பயில வேண்டும். ஆண்களோடு பெண்களும் "சரிநிகராக வாழ வேண்டும்", என்ற குறிக்கோள்களை அடைய பெரும் முயற்சி செய்தார். சாதி சமயங்களை வெகுவாகச் சாடி னார். உழைப்பிற்கு உயர்விலா மதிப்புக் கொடுத்தார். உயர்ந்த உழைப்பின் நடுவில்தான் இறைவன் வாழ்கிறான் என்று ஆணித் தரமாகக் கூறினார். கீதாஞ்சலியில் மிக அழகாகச் சொல்கிறார்: "கடினமான பாறை பிளக்கும் இடத்தில் இருக்கிறான் இறைவன். சாலை போட கல்லுடைக்கும் இடத்தில் கடவுள் இருக்கின்றான். அந்த உழைப்பாளிகளோடு, மழையிலும், வெய்யிலிலும் வாழ்கின்றான. அவன் உடையிலும் புழுதி மண்டிக் கிடக்கின்றது. எனவே உன்னுடைய புனித ஆடையை

தூக்கி எறிந்து விட்டு, இறைவனைப் போல் புழுதி மண்ணிற்கு இறங்கி வா."

கௌதம புத்தர் — பி. வேணுகோபால்

உலகில் பிறவி, வயோதிகம், சாவு, துக்கம், அழுகை, சஞ்சலம், வருத்தம், ஏக்கம் ஆகியவை இருந்து கொண்டிருக்கின்றன. வாழ்க்கைப் போராட்டங்களில் உழன்று அதற்கு ஈடு கொடுக்க முடியாமல் மனிதன் படும் கவலைகளைப் பார்த்தால் கல்லும் கரைந்து உருகும். இவை ஏன் இருக்கின்றன? இவற்றிலிருந்து மனித வர்க்கம் மீள முடியாதா? இவற்றை நிவர்த்திக்கும் வழிதான் என்ன? என்று ஆராய்ந்த புத்தர், துக்கம், துக்க காரணம், துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்ற பௌத்தத்தின் அடிப்படைக் கொள்கைகளைக் கண்டறிந்தார். 'மனத்தைத் தாராளமாக ஆக்கிக் கொள்வதன் மூலம் பேராசையை அகற்று. பொய்மையை உண்மை பேசிப் போக்கு' இவையே பௌத்தத்தின் அடிப்படைத் தத்துவங்கள். சுகத்தில் இருந்துதான் வேதனை பிறக்கிறது; சுகத்தில் இருந்துதான் பயம் பிறக்கிறது; சுகத்தின் வேட்கையிலிருந்து நாம் விடுபட்டால் வேதனையையோ, பயத்தையோ அறியமாட்டோம் என்று விளக்கினார் கௌதமர்.

வள்ளலாரின் சிந்தனைகள் — கு. சிவமணி.

சன்மார்க்க நெறிக்குரியவரின் நெஞ்சமே இறைவன் மகிழ்வுடன் உறையும் திருக்கோவிலாகும்.

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்து உரிமை உடையவராய் உவக்கின்
றார் யாவர்? அவர் உளம்தான்,
சுத்த சித்துருவாய் எம்பெருமான்
இருக்கும் இடம் எனநான் தெரிந்தேன்."

என்றுரைக்கும் வள்ளலார், "அந்த வித்தகர்தம் அடிக்கு ஏவல் புரிந்திட என் சிந்தை விழைந்தது" என்று தம் எளிமையையும் பணிவையும் தெரிவிக்கின்றார்.

நேருஜியின் சிந்தனைகள் — கா. மீனாட்சி சுந்தரம்

நேரு சமுதாயக் கட்டடப் பொறியாளர் (Social Engineer). காந்தியடிகள் ஆன்மா நெறி மருத்துவர் (Spiritual Leader). இந்தப் பொறியியல் வல்லுநர் ஆன்மநெறி மருத்துவர் சொல்லில் கட்டுண்டு இயங்கியதாலேயே புதிய இந்தியாவை உருவாக்க

முடிந்தது. நமக்குக் கிடைத்த பெரும்பேறு நமக்கு இந்த இரு சான்றோரும் இரு நெறியும் கிடைத்ததேயாகும். இயேசு பெருமானின் பெருநெறியும், கௌதம புத்தரின் புனித வழியும் நேருவைக் கவர்ந்திருந்தாலும் அவர்களின் ஆன்மீகப் போக்கில் உலகியல் நடைமுறை இணைத்துப் பார்த்து ஓரளவு அவர் ஏற்றுக் கொண்டுள்ளார்.

வறுமையால் வாடி அறியாமையால் மூழ்கி உண்ண உணவின்றி உடுக்கப் போதிய உடையின்றி துயரில் மூழ்கி அடித்தளத்தில் வாழும் பல்வேறு மாக்களையும் மக்களாக மாற்ற சமுதாயப் பொருளியல் வல்லமையே உடனடித் தேவை என்பதை உணர்ந்ததால் தான் அதற்கான வழிகளை நாடு விடுதலை பெற்றதும் செய்ய முயன்றார். உலகில் உள்ள எந்த குடிமகனும் பிறருக்குத் துன்பம் தராமல் தன் பணியை, தன் முன்னேற்றத்தைக் கவனிக்க வேண்டும் என்ற கொள்கையை உருவாக்கினார்.

இது போலவே, நாமக்கல் கவிஞர் (சந்திரா பார்த்த சாரதி), பிளேட்டோ (கு. சிவமணி), ஆப்ரகாம் லிங்கன் (வெ. வரத ராசன்), பெஞ்சமின் பிராங்க்ளின் (எஸ். திருமலையப்பன்), டால்ஸ்டாய் (ஆர். நடராஜன்), டாக்டர் அம்பேத்கார் (சு. ந. சொக்கலிங்கம்), கார்ல் மார்க்சு (மா. நன்னன்) முதலியோர் சிந்தனைகள் வழங்கப்பட்டமையும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

**உரைச் சித்திரம்**

வானொலிக்குக் கிடைத்த மிக அருமையான ஒலிவடிவம் உரைச் சித்திரம், ஒலிச்சிற்பிகள் பல 'நகாசு' வேலைகளுடன் நேயர்க்குப் படைத்துக் காட்டும் அற்புத வடிவமே உரைச் சித்திரம். பல சம்பவங்கள், உரையாடல், நேர்முக உரையாடல், இசை, அந்தந்த சூழ்நிலைக்குரிய ஒலிக்கூறுகள் போன்ற பல வண்ணங்களை, தேவைகளுக்கேற்ப குழைத்து நேர்த்தியாகப் போடும் முழுமையான ஓவியம் என்றும் இதைச் சொல்லலாம். கேட்போர் அயர்ச்சியடையாமல் இருக்க பல்வேறு ஒலி வடிவங்களை மாறி மாறி அமைத்து அழகாகப் பின்னல் வேலைசெய்யும் அற்புதக் கலை இது. எல்லா வானொலி நிலையங்களும் பயன்படுத்தும் ஒப்பற்ற ஒலிவடிவம். இவ்வாறு ஒலிபரப்பான உரைச் சித்திரங்களில் சில:

பேரெழில் திகழ் பேரூர்—கோயமுத்தூர்.

சிற்பக் கலைக்கு ஓர் இலக்கணம் சொல்லும் மேலைச் சிதம்பரம் என்ற தலம் கொங்கு நாட்டில் மங்கா புகழ்பெற்ற

ஏழு தலங்களில் ஒப்பற்றது. கோவைக்கு அருகிலுள்ள இக் கோவிலின் கவின்மிகு கலையழகு, பக்திச் சூழல், கல்வெட்டுக் குறிப்பு ஆகியவற்றை விளக்கிய உரைச்சித்திரம்.

வானம் அளப்போம்—கோயமுத்தூர்

விமானப் படையின் பல்வேறு பிரிவுகளையும், வளர்ச்சியையும் விளக்கியதோடு விமானப் படையின் பொன்விழா ஆண்டையொட்டி அங்குப் பணிபுரிபவரின் வாழ்க்கை முறையையும் விளக்கியது.

மன உறுத்தல்கள்—சென்னை.

மனித வாழ்க்கையின் இயக்கத்துக்கே அடிப்படையாக அமைவது மனோசக்தி. ஆழமான எண்ணங்களை உள்ளடக்கிய அடிமனதில் ஏற்படும் உணர்வுகள் தனி நபரோடும், சமுதாயத்தோடும் தொடர்புடையவை. உள்ளங்களில் தேங்கிக் கிடக்கும் உணர்வுகளை நெருங்கி உணர்ந்து அமைக்கப்பட்ட உரைச் சித்திரம்.

களக்காடு வனவிலங்கு சரணாலயம்—திருநெல்வேலி

இயற்கைச் செல்வங்கள் நம் நாட்டில் வளம் சேர்ப்பவை. காடுகளும் அந்தச் செல்வங்களுக்குள் அடக்கமே. விலங்குகளும், பறவைகளும் உயிர் வாழ, காடுகள் ஏற்ற இடமாக அமைந்துள்ளன. திருநெல்வேலி மாவட்டத்தில் களக்காடு என்ற இடத்தில் அமைந்துள்ள வனவிலங்கு சரணாலயத்தை விவரித்துக்கூறிய உரைச்சித்திரம் இது.

ஞான வீரர்—சென்னை

நம் நாட்டின் விடுதலைக்காக வீரத்தியாகம் புரிந்த தலைவர் பலர். அவர்களில் வ.வே.சு. அய்யர் அவர்களுக்கு சிறப்பான இடம் உண்டு. அவரது நூற்றாண்டுவிழா நிறைவை ஒட்டி ஒலிபரப்பான நிகழ்ச்சி.

நெல்லைச் சீமையின் தேம்ஸ் நதி—திருநெல்வேலி

பொதிகை மலையில் தோன்றி வங்கக்கடலில் கலக்கும் முன் வழியெலாம் வளங்கொழிக்கச் செய்யும் புகழ்பெற்றது தாமிரவரணி ஆறு. வரலாறு, இலக்கியம், தொழில், பண்பாடு, கலை எனப் பல வழிகளில் நெல்லை மாவட்டத்துக்கு ஏற்றம் தரும் இந்நதியின் சிறப்பை எடுத்துக்காட்டிய உரைச்சித்திரம்.

குமரிக்கரையின் ஓரத்திலே—திருநெல்வேலி.

கன்னியாகுமரிக் கடற்கரைப் பகுதியில் வாழும் மக்களை, குறிப்பாக மீனவ மக்களைப் பற்றி விவரித்த உரைச்சித்திரம்.

அருவிக் கரைதனிலே—திருநெல்வேலி.

நம் உள்ளம் மட்டும் குளுமையாய் இருந்தால் போதாது. உடலும் அவ்வாறே இருக்கவேண்டும். இத்தகைய குளிர்ச்சியை அருவிகள் நமக்களிக்கின்றன. நெல்லை மாவட்டத்திலுள்ள அருவிகளைப் படம் பிடித்த உரைச்சித்திரம் இது.

பசுமை நினைவுகள், பாரதி கனவுகள்—திருநெல்வேலி.

மகாகவி பிறந்த எட்டையபுர இல்லம், மானாமதுரையில் வாழ்ந்துகொண்டிருக்கும் பாரதியாரின் தம்பி சி. விசுவநாத பாரதி, எட்டையபுரத்தில் வாழ்ந்துகொண்டிருக்கும் சிறிய தாயார் பெற்ற மகன் எஸ். குருசாமி தீக்ஷிதர் ஆகியோரை இணைத்து உருவாக்கப்பட்ட உரைச் சித்திரம்.

புதியதோர் மதம்—கோயமுத்தூர்.

உலகெங்கும் பல்வேறு மதங்கள் பல்கிப் பெருகியுள்ளன. புதியதொரு மதம் சாதி, சமய பேதங்களை மட்டுமல்ல, மொழி, இனம், நாடு இவற்றையும் கடந்து பெருகியுள்ளது. அந்த மதம் தான் 'தாமதம்'. இதன் விளைவுகளைவிளக்கிய உரைச்சித்திரம் இது.

தேன்தமிழ் தந்த பொருனைத்துறை—திருநெல்வேலி.

நவ திருப்பதிகளுள் ஒன்று நம்மாழ்வார் பிறந்த இடம். அது தான் பொருனை நதிக்கரையில் அமைந்துள்ள ஆழ்வார் திருநகரி அது பற்றிய உரைச்சித்திரம் இது.

தளர்ந்த தலைநகரங்கள்—திருச்சி

திருச்சி மாவட்டத்தில் உடையார்பாளையம் வட்டத்தில் இன்று உள்ள ஒரு சிற்றூர் ஒரு காலத்தில் வரலாற்றுப் புகழ் பெற்ற தலைநகராகத் திகழ்ந்துள்ளது. அந்தச் சிற்றூரின் மையத்தில் சிதைந்த நிலையில் நிற்கும் ஒரு கோயில் பண்டைத் தமிழரின் கட்டிடக் கலையின் சிறப்புக்குச் சான்று பகர்வதோடு அதைப் படைத்த பேரரசனையும், அவன் புரிந்த சாதனைகளை யும் பெருமையோடு நினைவூட்டி நிற்கிறது. அந்த நினைவுகளை சித்திரித்த உரைச்சித்திரம் இது.

**இலக்கிய ஏடு**

வார, மாத இதழ்களைப்போல பலவகையான இலக்கிய வடிவங்கள் ஒரே நிகழ்ச்சியில் சேகரித்து இலக்கிய ஏடாக (Literary Magazine) ஒலிபரப்பப் படுகிறது. பொதுவாக எல்லா வானொலி நிலையங்களும் இந்த வடிவத்தைப் பயன்படுத்து கின்றன. ஒரே நிகழ்ச்சியில் பலவகை அம்சங்களை, பத்திரிகை

படிப்பதைப் போல, மக்கள் அனுபவிப்பதால் இந்நிகழ்ச்சி பலரை யும் கவர்ந்துள்ளது. சிறுகதை, கவிதை, கட்டுரை, நூல் மதிப் புரை, இலக்கிய அறிமுகம் போன்ற பலவகையான இலக்கிய வடிவங்களைத் தகுந்த இணைப்புரைகளுடன் ஒரே நேரத்தில் கேட்க இந்நிகழ்ச்சி வகை செய்கிறது.

சொல் புதிது; சுவை புதிது — பாண்டிச்சேரி

நவ கவிதை படைத்த நற்றமிழ் கவிஞன்பாரதி இலக்கிய மாளிகையின் புதிய வாயிலைத் திறந்து, மக்கள் சமுதாயத்தை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறான். பாரதிக்குப்பிறகு பாரதிதாசன், கண்ணதாசன் இருவரும் இந்த இலக்கியப் பணியை இனிதே தொடர்ந்த தன்மையை விளக்கிய இலக்கிய ஏடு.

தேச ஒருமைப் பாட்டுக்கு இலக்கியம்—சென்னை.

ஆன்ம நேய ஒருமைப் பாட்டுக்கும், தேச ஒருமைப் பாட்டுக் கும் இலக்கியம் எப்படி அடித்தளமாக அமைகிறது? தெலுங்குக் கவிஞரான குருஜாட அப்பாராவ், விஸ்வநாத சத்யநாராயணா, டி.வி. கிருஷ்ணா சாஸ்திரி ஆகிய கவிஞரின் படைப்புகளைப் பற்றித் தமிழுக்கு அறிமுகப் படுத்தும் வகையில் அமைந்த இலக்கிய ஏடு.

தமிழ் இலக்கியத்தில் இயற்கை—சென்னை.

'காலை', 'மாலை', 'இரவு' என்ற பிரிவுகளில் இயற்கை யினைத் தமிழ் இலக்கியம் எனும் சாளரம் வழியாகக் காட்டிய இலக்கிய ஏடு.

களஞ்சியம்—திருச்சி.

நகரத்தார் வளர்த்த நல்ல தமிழ்,பாரதியார் பாடல்கள்,திருக் கோயிலூர் ஆகியவை இடம் பெற்ற இலக்கிய ஏடு. தாடிக் கொம்பு சிற்பச் சிறப்பு, கரூர் காட்டும் வரலாறு, போலந்து மண்ணில் பொற்றமிழ் ஆகியவற்றை விளக்கிய இலக்கிய ஏடும், இலக்கியம் வளர்த்த வள்ளல், தமிழ் இலக்கியங்களில் அங்கதம், பாவேந்தர் பாடல்களில் இயற்கை ஆகியவற்றைத் தந்த இலக்கிய ஏடும் காணப்படுகின்றது.

பாரதி தரிசனம்

1982-ஆம் ஆண்டு பாரதியின் நூற்றாண்டு விழா ஆண்டு. எனவே பாரதிக்கெனத் தனி நிகழ்ச்சிகளைத் தயாரித்து ஒலி பரப்புவதில் வானொலி நிலையங்கள் அக்கறை காட்டின.

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம் இதில் முன்னணியாய் நின்றது என்றே சொல்லலாம். பாரதிதரிசனம் என்ற தலைப்பில் காலை 7 மணிக்குச் சிறந்த நிகழ்ச்சி ஒன்றினைத் திருச்சி வானொலி நிலையம் ஒலிபரப்பியது. ஒருநாள் பாரதியின் கவிதையின் மேன்மைகள் பற்றிய விளக்கங்கள் இடம்பெறும். ஒருநாள் பாரதியின் கதைகள் உரிய விளக்கங்களோடு மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்படும். மற்றொரு நாள் பாரதியாரின் கட்டுரைகள் வாசிக்கப்பட்டு விளக்கங்கள் சொல்லப்படும். இதன் மூலம் பாரதியின் கவிதையை மட்டுமே அறிந்திருந்த பொது மக்கள் பாரதியின் கதைகள் பற்றியும், கட்டுரைகள் பற்றியும் தெளிவாகப் புரிந்து கொண்டனர். வருட முழுவதும் இந்த நிகழ்ச்சிகள் தொடர்ந்து இடம்பெற்றதால் மக்களும் தொடர்ந்து கேட்டு நல்ல பயனைப் பெற்றனர். பாரதியோடு பிற மாநிலக் கவிஞரையும், பிரதேசக் கவிஞரையும் ஒப்பிட்டாய்ந்து ஒலிபரப் பப்பட்ட நிகழ்ச்சிகள் மிகவும் சிறப்பானவை. இதனை வானொலி தமிழுக்குச் செய்த அற்புத சாதனை என்றே சொல்ல வேண்டும்.

இது தவிர பாரதி பற்றிய கவியரங்கம், பட்டி மண்டபம், கருத்தரங்கம் ஆகியவற்றை வானொலி நிலையங்கள் ஏற்பாடு செய்து பொதுமக்கள் முன்பு முதலில் நடத்தி, பின்பு வானொலி யில் ஒலிபரப்பின. இவ்வாறு ஒலிபரப்பப்பட்ட நிகழ்ச்சிகள் இக் கட்டுரையில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன.

எட்டையபுரத்தில் அரசு நடத்திய பாரதி நூற்றாண்டு விழா நிகழ்ச்சிகளை உடனுக்குடன் தொகுத்து தமிழகத்திலுள்ள எல்லா வானொலி நிலையங்களும், பாண்டிச்சேரி வானொலி நிலையமும் ஒலிபரப்பி தமிழ்த்தாயைமகிழ்வித்தன. பாரதியைப் பல்வேறு கோணங்களில் படம் பிடித்துக் காட்டிய வகையில் இவ்வாண்டு தமிழ் வளர்ச்சிக்கு வானொலி அரிய சாதனை புரிந் திருக்கிறது என்பதில் ஐயமில்லை.

### குழந்தை இலக்கியம்

தமிழ் மொழியில் குழந்தைஇலக்கியவளர்ச்சிக்கும்வானொலி பெருந்தொண்டு புரிகிறது. ஒவ்வொரு நிலையத்திலும் குழந்தை களுக்கான நிகழ்ச்சிகள ஒலிபரப்பாகின்றன. குழந்தைகள் பகுதிக் கென்றே தனியாகப் பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு இசை வடிவில் ஒலிபரப்பப்படுகின்றன. பிறமாநில, பிறநாட்டு நாடோடிக் கதைகள் அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றன. குட்டி நாடகங்கள், அறிவியல்பொருட்கள், கண்டுபிடிப்பு பற்றிய கதைகள், தொடர் கதைகள், குழந்தைகள் படைக்கும்

கைவண்ணங்கள், விடுகதைகள் என்று பல்வேறு வகையான துறைகளில் குழந்தை இலக்கியம் வளர வானொலி துணை செய்கிறது. எல்லா நிலையங்களிலும் குழந்தைகள் நிகழ்ச்சி ஒலி பரப்பப்பட்டாலும்,இந்தியாவில் ஆறு வானொலி நிலையங்களில் குழந்தைகள் நிகழ்ச்சிக்கான தனித்துறைகள் தொடங்கப் பட்டுள்ளன. அவற்றுள்தமிழகத்தில்திருச்சிராப்பள்ளிவானொலி நிலையமும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது.

## நாட்டுப்புற இலக்கியம்

மண்ணில் மலர்ந்த மாண்புறு பாடல்கள் பல நிறைந்தது நமது தமிழ்நாடு. தனிமுத்திரை பதிக்கும் கிராமியக் கலைகள் பல உண்டு. நாகரீக மோகத்தின் அசுரவேகத்தில் அவை சரியாகக் கண்டு கொள்ளப் படாமல் தூசு படிந்த வைரங்களாகக் கிடக்கின்றன. அந்த வைரங்களைக் கண்டுபிடித்து தூசினைத் துடைத்து மக்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதிலே வானொலி மாபெரும் பணியாற்றுகிறது. அழிவு நிலையிலிருக்கும் கிராமியக் கலைகளுக்கு வானொலி புத்துயிர் அளிக்கிறது என்றால் மிகை இல்லை. திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் நாட்டுப்புற இலக்கியப்பகுதிக்கென்றே தனித்துறை தொடங்கப்பட்டு செயல் பட்டு வருகிறது. கிராமங்களில் புழங்கி வரும் கிராமியப் பாடல் களை அதன் இயல்பான தன்மை குன்றாமல் சேகரிப்பதில் வானொலி தனிக்கவனம் செலுத்துகிறது. அப்படிப் பாடக் கூடியவரை இனங்கண்டு, அவர்கள் இருப்பிடத்துக்கே சென்று பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்படுகின்றன. நாற்று நடும் போது பாடும் பாட்டு, தாலாட்டு, ஒப்பாரி என்று இந்தப் பாடல்கள் திரட்டப்பட்டு உரிய விளக்கங்களுடன் வானொலியில் ஒலி பரப்பப்படுகின்றன. அதோடு இவ்வாறு சேகரிக்கப்பட்ட பாடல்கள் தமிழ் அறிஞரிடம் கொடுக்கப்பட்டு ஆய்வு செய்யப் படுகின்றன. அந்த ஆய்வுரைகளும் ஒலிபரப்பாகின்றன. பிற மாநிலங்களிலுள்ள நாடோடிப் பாடல்களும், நமது நாடோடிப் பாடல்களும் ஒப்பாய்வு செய்யப்படுகின்றன. வில்லுப்பாட்டு, கரக ஆட்டம், காவடி ஆட்டம்,பொம்மலாட்டம், ஒயிலாட்டம், மகுட ஆட்டம், தெருக்கூத்து, லாவணி போன்ற பல்வேறு கிராமியக் கலைகள் வானொலியால் வளர்க்கப்படுகின்றன. இவற்றில் திறமை மிக்க கலைஞர் வானொலி நிலையம் வந்து நிகழ்ச்சிகளை வழங்குகின்றனர். தங்கள் கலைவாழ வகை செய்யும் வானொலியை வாயார வாழ்த்துகின்றனர்.

## முடிவுரை

தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு வானொலி செய்து வரும் தொண்டுகள் அளவிட முடியாதது. துருவித்துருவி ஆராய்ந்தால்

இன்னும் பல அரிய செய்திகள் கிடைக்கும். வானொலி திட்டமிட்டு ஒலிபரப்பும் நிகழ்ச்சிகளைத் தவிர அவ்வப்போது வெளியிடங்களில் இலக்கிய அமைப்புகளால் ஏற்பாடு செய்யப்படும் கவியரங்கம், கருத்தரங்கம், பட்டி மண்டபம், வழக்காடு மன்றம், சிறப்புச் சொற்பொழிவுகள் ஆகியவற்றை ஒலிப்பதிவு செய்து வானொலி நிலையத்தில் தகுந்த இணைப்புரைகளுடன் சுருக்கி வானொலித் தொகுப்பாக ஒலிபரப்பும்போது மக்கள் பெரிதும் விருப்பத்துடன் அந்த நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழ்கின்றனர். தமிழ் மொழியின் ஒலியை ஆகாசத்திற்குத் தூக்கிச் சென்று அங்கிருந்து அறிவு என்னும் வித்துக்களை இல்லங்கள் தோறும் தூவி, அற்புத சாதனை புரிகிறது வானொலி. அதன் சேவை தொடரட்டும். தொடர்ந்து தமிழும் வளரட்டும்.

# 34. நாள் இதழ்கள்

—வே. இரா. மாதவன்

எழுபத்தெட்டு நாளிதழ்கள் தமிழில் எண்பத்திரண்டா மாண்டு வந்தன என்பது வியப்புக்குரிய செய்தி. நாட்டு நடப்பு களையும் உலகச் செய்திகளையும் உடனுக்குடன் தருவது நாளிதழின் அடிப்படை நோக்கமான போதும், பிற பல கூறு களுமிணைந்து, தனித்தன்மையும், புதுமையும், நயமும் கொள் கின்றன. மொழி, இலக்கியம், கலை, கல்வி, வாழ்வியல் போன்றவற்றின் வளர்ச்சியும், பல் நிலைப் பிரச்சாரப் பாங்கும் பொருந்துகின்றன.

## முன்னுரை

உலகில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் உடனுக்குடன் அறிய வேண்டும் என்னும் ஆர்வம் இன்று எல்லா மக்களிடமும் காணப்படுகின்றது. இதன் காரணமாக வானொலி, தொலைக் காட்சி, திரைப்படம், இதழ்கள் போன்ற செய்தித் தொடர்புக் கருவிகள் பல எழுந்துள்ளன. இவற்றுள், இதழ்கள் பலவகைப் படும். அவை நாள் இதழ்கள், வார இதழ்கள், வாரம் இருமுறை இதழ்கள், மாத இதழ்கள், மாதம் இருமுறை இதழ்கள் காலாண்டு இதழ்கள் என்பன. வார, மாத இதழ்களைக் காட்டி லும் செய்திகளை வெளியிடுகின்ற பணியில் நாளிதழ்களே முன் நிற்கின்றன. நாள்தோறும் செய்திகளை விரைவாகவும், விளக்க மாகவும் கொடுக்கின்ற தலையாய பணியினை நாள் இதழ்கள் செய்து வருகின்றன.

பொதுநிலையில், மொழி என்பது இலக்கிய இலக்கணங் களோடு மட்டும் முற்றுப் பெறுவதில்லை. அதற்கும் மேலாக, மக்களின் பேச்சு வழக்கு, செய்தித் தொடர்புக் கருவிகளின் தாக்கம் இவற்றாலும் மொழியின் திறன் வெளிப்படும். இந் நிலை காலத்திற்கேற்பவும் இடத்திற்கேற்பவும் மாறக்கூடும். மொழியின் வளர்ச்சியில் இதழ்களுக்கும் பங்குண்டு. குறிப்பாக, ஒரு குறிப்பிட்ட ஆண்டில் தமிழின் நிலை எவ்வாறு இருந்தது

என்பதை ஆய நாள் இதழ்கள் பெரிதும் பயன்படும். இவ்வகையில் 1982-ஆம் ஆண்டில் தமிழில் வெளியான நாள் இதழ்கள் அணுகத் தக்கன.

## இதழ்களின் தோற்றம்

உலகில் பல்வேறு முறைகளில் செய்திகள் மற்றவர்க்குத் தெரிவிக்கப்பட்டன. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பல இதற்குச் சான்று பகருகின்றன. எடுத்துக்காட்டாக,

'பறையறைந் தல்லது செல்லற்க என்னா
இறையே தவறுடையன்'[1]
'யானை எருத்தத்து அணி பிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்''

என்னும் பாடலடிகள் முரசு கொட்டியும் பறையறைந்தும் செய்திகள் அறிவிக்கப்பட்டதை விளக்குகின்றன. இவ்வாறே, மணியடித்தும், சீழ்க்கை ஒலித்தும், புறாக்களின் கால்களில் செய்தி ஓலைகளைக் கட்டியும், ஆட்களை அனுப்பியும் செய்திகளை அறிவித்துள்ளனர்.

வரலாற்று அடிப்படையில் நோக்க, இத்தாலி நாடே செய்தி இதழ்களுக்குப் பிறப்பிடமாக அறியப்படுகிறது.[3] உலகின் மிகப் பழமையான முதல் செய்தி இதழ் 'பீகிங் கெஜட்' என்பதாகும். இது கி.பி. 8 அல்லது 9 ஆம் நூற்றாண்டினது என்பர்.[4]

இந்தியாவில் அசோக மன்னன் காலத்தில் செய்தி இதழ்களின் தோற்றம் குறிப்பிடத் தக்கது. இரகசிய செய்தியாளர் மன்னருக்கும் மந்திரியருக்கும் செய்திகளையளிப்பதில் முதன்மை பெற்று விளங்கினர். இதன்பின் முகமதியர் காலத்தில் செய்தி இதழ்களின் வளர்ச்சி அறியத்தக்கது. குறிப்பாக ஔரங்கசீப் காலத்தில் இவை பெரிதும் சிறப்புற்றன. இவர் காலத்துச் செய்தி இதழ்களில் அரசாங்க அலுவலர் நியமனம், மாற்றம் முதலியன காணப்படும். சில நேரங்களில்சில முக்கியமான செய்திகளும் காணப்படும். இந்நிலையில்,பொது மக்களுக்குப் பயன்படும் வகையில் இவர்காலத்துச் செய்தி இதழ்கள் இருந்தமை இவண் குறிப்பிடத்தக்கது.

---

1. குறிஞ்சிக் கலி 20: 32-33.
2. சிலம்பு. மங்கல. 43-44.
3. க. குளத்தூரான், தமிழ்ப் பத்திரிகைகள் பக். 1-2.
4. மருதாசலக் கவுண்டர், பத்திரிகைத் தொழில். ப. 6

## வளர்ச்சி நிலைகள்

ஜெர்மன் நாட்டவரான ஜான் கூட்டன்பர்க்கு (1398-1468) என்பவர் முதன்முதலாக அச்சுப்பொறியைக் கண்டுபிடித்தபின் உலகெங்கும் செய்தி இதழ்களின் பெருக்கம் அதிகமாயிற்று எனலாம்.

இந்தியாவிற்கு வருகைதந்த கிறித்துவப் பாதிரியார் பெரு முயற்சியால் நம்நாட்டில் அச்சுப்பொறிகளின் பழக்கமும் செய்தி இதழ்களின் பெருக்கமும் வளர்ந்தன.

சமயத்தைப் பரப்பும் நோக்குடன் வந்த இவர்களின் செய்தி இதழ்கள் இங்குள்ளவரிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி மேலும் பல இதழ்கள் வெளி வர வழி ஏற்பட்டது. பொதுநிலையில், சமயம், இலக்கியம், குலமுன்னேற்றம், சமூக முன்னேற்றம் என்பனவற்றைக் கருத்தில் கொண்டே இவ்விதழ்கள் வெளி வந்துள்ளன.

1857-இல் நடைபெற்ற சிப்பாய்க்கலகக் கிளர்ச்சிக்குப் பின் இந்திய அரசியலில் மிகுந்த எழுச்சி ஏற்பட்டது. இதன் தாக்கம் தமிழ்நாட்டில் மிகுதியும் பரவி அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்படச் செய்தது. இதன் காரணமாக பல செய்தி இதழ்கள் தோன்றின. தமிழர் பலர் தங்களுக்கெனத் தனி இதழ்கள் வர வேண்டுமென்பதில் ஆர்வம் கொண்டனர்.

## முதல் நாளிதழ்

ஆங்கிலம் அறியாத மக்களும் நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ளவேண்டும் என்னும் நோக்கில் 'இந்து' ஆங்கில இதழ் நிறுவனர் ஜி. சுப்பிரமணிய ஐயர் தமிழில் சுதேசமித்திரனைத் தோற்றி வைத்தார். 1882-இல் வார இதழாகத் தொடங்கி, 1887-இல் வாரம் மும்முறை வெளியீடாக வளர்ந்து, 1889-இல் நாளிதழாகிய வரலாற்றினைக் கொண்டது சுதேசமித்திரன்.

தமிழில் முதல் நாளிதழான சுதேசமித்திரன் 1889 முதல் 1916 வரை இருபத்தேழாண்டுக் காலம் எந்த போட்டியும் இல்லாமல் தனித்து நின்று வெற்றி கண்டுள்ளது. இதனையடுத்து, நாட்டில் காணும் சாதிவெறி, சமயப் பொய்மைகளைச் சாடும் வகையில் 'திராவிடன்' என்னும் இரண்டாவது நாளிதழ் 1916-இல் வெளிவந்தது. இதனைத்தொடர்ந்து 1917-இல் வெளி வந்த மூன்றாவது தமிழ் நாளிதழ் 'தேசபக்தன்' ஆகும். திரு.வி.க. அவர்களை ஆசிரியராகக்கொண்டு விளங்கிய இவ்விதழ் தேசிய உணர்வோடு சாதிப் பாகுபாட்டைத் தகர்ப்பதாக அமைந்தது.

தொடக்க காலத்தில், 1857 முதல் 1940ஆம் ஆண்டு வரையுள்ள காலத்தில் தமிழில் வெளிவந்த நாள் இதழ்கள் மிகக் குறைவு. இக்கால கட்டத்தில் குறிப்பிடத் தக்கனவாக சுதேச மித்திரன், இந்தியா என்னும் இரு நாளிதழ்களே அமைந்தன. பாரதியாரின் 'இந்தியா'வைத் தொடர்ந்து திரு.வி.க.வின் தேசபக்தன் (1917), நவசக்தி (1920), தகட்டூர் பிரகாசத்தின் சுயராஜ்யா (1930) வரதராஜுலு நாயுடுவின் தமிழ்நாடு (1922), கணேசனின் 'சுதந்திரச்சங்கு' (1930), தினமணி (1934), தினசரி (1944), தினத்தந்தி (1942) போன்ற நாளிதழ்கள் தோன்றின. இவற்றுள் சிலவற்றைத் தவிர மற்றவை மறைந்தன. இதன்பின் 1950-ஆம் ஆண்டு வரை இரண்டு அல்லது மூன்று இதழ்களைத் தவிர வேறு இதழ்கள் இல்லை என்றே கூறலாம்.

இந்தியா விடுதலையடைந்த பின் நாடு பல்வேறு முன்னேற்றங்களைக் கொண்டது. ஐந்தாண்டுத் திட்டங்கள், மக்களின் கல்வியறிவு வளர்ச்சி, போக்குவரத்தின் வளர்ச்சி, மக்களின் ஊதிய வளர்ச்சி போன்றன செய்தி இதழ்களின் பெருக்கத்திற்குக் காரணமாயின.

மேலும், தமிழ் நாட்டில் மாநிலக் கட்சிகளின் தோற்றம்—வளர்ச்சியால் இதழ்களின் தோற்றமும் பெருகியது. இவ்வாறே, பொழுதுபோக்கு, கலை, இலக்கியம், திரைப்படம் போன்றவற்றின் தாக்கத்தால் பல்துறை பற்றிய இதழ்கள் பெருகின. இவ்வகையில் 1953-இல் தமிழ் நாட்டில் மட்டும் 21 நாளிதழ்கள் வெளிவந்துள்ளன.[1] 1960-ஆம் ஆண்டில் 31 நாளிதழ்களும், 1971-ஆம் ஆண்டில் 97 நாளிதழ்களும் வெளிவந்துள்ளன.[2]

இவ்வளர்ச்சி மிகவும் குறிப்பிடத்தக்கது. ஆயின், இவ்விதழ்கள் பலவும் தொடர்ந்திருப்பதில்லை; பல இடையில் மறைகின்றன; எனினும் புதிதாக எழும் இதழ்கள் அவ்விடத்தை நிரப்பி விடுகின்றன.

### நாளிதழ்

பொதுவாக, 'நாளிதழ்' என்பதன் பொருள், அன்றாடம் மலரும் மலர் இதழாகக் கொள்ளலாம். அவ்விதழ் அன்றைய தினம் மட்டும் மணமும் கவர்ச்சியும் தரும். அடுத்தநாள் அது பயனற்றதாகும். இது எல்லா நாளிதழ்களுக்கும் பொருந்தும்.

---

1. India, a reference annual, p. 252, 1956.
2. Press in India, p. 37, 1972.

இவையேயல்லாமல், சில இதழ்கள் தங்கள் பெயருக்கேற்பவே அமைகின்றன. ஒரு சில நாட்கள், மாதங்கள் அல்லது ஆண்டுகளே வாழ்வு பெறும் இதழ்களும் உள்ளன. இவை எப்பொழுது தோன்றுகின்றன. எப்பொழுது மறைகின்றன என்பன தெரிவதில்லை. எனவே, நாட்டில் வெளியாகும் செய்தி இதழ்களின் எண்ணிக்கை, விற்பனை இவற்றைப் பற்றிய புள்ளி விவரங்களைத் தர 'Registrar of News papers for India' 1956-இல் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அத்துடன், அரசின் செய்தித் துறை அளிக்கும் தகவல்களின்படி இன்று நாட்டில் வெளிவரும் செய்தி இதழ்களின் பட்டியலை ஓரளவு அறியலாம். நாளிதழ்களைப் பொறுத்தவரையில், 1982 இல் எத்தனை இதழ்கள் முழுமையாக வெளிவந்தன என்பதை 1983-இல் தெளிவாகக் கூற இயலவில்லை. 1980-81-இல் வெளிவந்தவை மட்டுமே இப்பொழுது கணக்கிட முடிகிறது. அதற்குப் பின்பு வெளிவந்த அல்லது நின்றுவிட்ட இதழ்களைப்பற்றி முழுமையாக அறிய இயலவில்லை.

மத்திய அரசின் செய்தி மற்றும் ஒலிபரப்புத் துறையினர் (India 1982) அளிக்கும் செய்திகளின்படி, 1980-இல் 19 இந்திய மொழிகளில் வெளிவந்துள்ள நாளிதழ்கள் மொத்தம் 1,173. இவற்றுள், இந்தி மொழி இதழ்களே (367) முதலிடம் பெறுகின்றன. அடுத்து உருது (120), மராத்தி (117), ஆங்கிலம் (102), மலையாளம் (95) இதழ்கள் அமைகின்றன. மலையாள மொழியை அடுத்து, தமிழ் மொழியில் 92 நாளிதழ்கள் அமைகின்றன. மிகக்குறைந்த அளவில் வெளிவருவன சமஸ்கிருதம் (2), அஸ்ஸாம் (3) மொழி நாளிதழ்களாகும்.

இத்தகைய இதழ்கள் அவ்வப்போது தோன்றி மறைவதற்குப் பல காரணங்கள் உள்ளன. நாளிதழ்களை வெளியிடுவதற்கு வேண்டிய பொருள் வசதி படைத்தவர் குறைவு என்பது ஒரு காரணமென்றாலும் நாளிதழ்களின் பணியினைச் செவ்வனே அமைத்துக் காட்டுவதும் அதனை முழுமையாகக் கடைப்பிடிப்பதும் மிகவும் அரிய செயல். இவற்றில் குறைபாடுள்ள இதழ்கள் அவ்வப்போது மறையக்கூடும்.

கலை, இலக்கியம், பொழுதுபோக்கு, அரசியல் எனப் பல்வேறு பொருளடிப்படைகளைக் கொண்டு இவ்விதழ்கள் வெளிவந்தாலும், அன்றாடச் செய்திகளை அறிவித்தல், ஆராய்தல் என்ற நிலைகளிலேயே இவற்றின் பணி அமைகின்றன. அன்றாடச் செய்திகளை விரைந்தும் விரிவாகவும் கொடுக்கும்

நாளிதழ்களே மக்களிடையே நிலை பெற்று வாழ முடியும் என்ற நிலை இருப்பதால் பல இதழ்கள் தோன்றிய சுவடு தெரியாமலேயே மறைகின்றன. குறிப்பிட்ட சில இதழ்கள் இதில் மிகுந்த அக்கறை காட்டுவதால் அவை நிலை பெறுகின்றன.

மத்திய அரசு செய்தித்துறையினர் அளிக்கும் புள்ளி விவரப்படி 1982-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தமிழில் தொண்ணூறுக்கும் மேற்பட்ட நாளிதழ்கள் வெளிவந்துள்ளன. ஆனால், இவற்றுடன் தொடர்பு கொண்டதில் 21 இதழ்கள் முகவரியே இல்லாமல் போனதை அறிய முடிகிறது. பல இதழ்களை நேரில் காணவும் இயலவில்லை. சென்னை கன்னிமாரா நூலகத்தில் இவ்விதழ்களில் சிலவற்றையே பார்க்க முடிகிறது. சுமார் 40 இதழ்கள் இவ்வாறு கிடைக்கின்றன. மற்ற இதழ்களின் நிலை என்ன என்பதை அறிய இயலவில்லை. இவற்றின் ஒரு பிரதிகூட ஒரு நூலகத்திலும் கிடைக்கவில்லை, தொடர்பு கொண்டும் தகவல் பெற முடியவில்லை. எனவே, 1982-இல் வெளிவந்து பார்வைக்குக் கிடைக்கும் தமிழ் நாளிதழ்கள் மட்டும் இவண் கருதப்படுகின்றன.

### தமிழ் நாளிதழ்கள்

மக்களுக்குத் தேவையான செய்திகளை உடனுக்குடன் அளிப்பதே இதழ்களின் பொதுத்தன்மை. ஆயின், ஒவ்வொரு நாளிதழும் செய்திகளைத் தேர்ந்தெடுத்து அளிப்பதில் தங்கள் தனித்தன்மையைக் காட்டுகின்றன. இவ்விதழ்களின் புறத்தோற்றம், தலைப்புச் செய்தியளிக்கும் விதம் சில சொல்லாளுகை போன்றவற்றைக் கொண்டே இது இன்ன இதழ் என்பதை அறிந்துகொள்ளத்தக்க வகையில் இவை அமைந்துள்ளன.

#### அண்ணா

தமிழகத்தில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றிய பின்பு, 1976ஆம் ஆண்டு எம். ஜி. ராமச்சந்திரன் அவர்களை நிறுவனராகக் கொண்டு இவ்விதழ் தொடர்ந்து வெளிவருகின்றது. 'Leading progressive Tamil Daily of the people' எனத் தன்னைக் கூறிக்கொள்ளும் இவ்விதழில் பெரும்பாலான செய்திகள் கட்சிச் சார்புடனேயே அமைந்துள்ளன.

ஒவ்வொரு நாளும் தலைப்பின் இருபுறமும் கட்டமிட்ட பகுதிகளில், 'காந்தி, அண்ணா, பெரியார்' போன்ற தலைவரின் பொன்மொழிகள் அவர் படத்துடன் இடம் பெறுகின்றன.

உள்நாட்டுச் செய்திகளும் குறிப்பாக தமிழ் நாட்டின் செய்திகளும் இடம் பெறுவது குறிப்பிடத் தக்கது. அவ்வப்போது அரசியல் அல்லாத சில பொதுவான செய்திகளுக்கும் சிறப்பிடம் கொடுத்து வெளியிடும் பாங்கையும் இவ்விதழில் காண முடிகிறது.

(எ. டு.) நாகர்கோவில் அருகே
சித்த மருத்துவ சுவடிகள் கண்டுபிடிப்பு

நாகர்கோவில். மார்ச். 1, குமரி மாவட்டம் தோவாளையில் காலஞ்சென்ற உலகநாதன் என்ற சித்த மருத்துவர் வீட்டிலிருந்து 30 அரிய சித்த மருத்துவ சுவடிகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

அதோடு மருத்துவ அகராதி ஒன்றும் கண்டெடுக்கப் பட்டுள்ளது.

பல்வேறு நோய்களுக்கான மருத்துவம் பற்றி இச்சுவடிகளில் குறிக்கப்பட்டுள்ளது.

இத்தகவலை எம்.டி.டி. இந்துக் கல்லூரி சரித்திரப் பேராசிரியர் பி. ராமச்சந்திரன் கூறினார்.

(1-3-82 ப. 3)

இதுபோன்ற செய்திகள் ஒரு கட்சி இதழில் இடம்பெற வேண்டிய தேவையில்லை. எனினும், 'பொது மக்கள் இதழ்' என்பதை மெய்ப்பிக்கும் வகையில் சில பொதுவான செய்திகள் அவ்வப்போது இடம்பெறுகின்றன.

எதிரொலி

'நடுநிலை நாளேடு' என்று கூறிக்கொள்ளும் இதழ்களில் இதுவும் ஒன்று. இவ்விதழில் பலதரப்பட்ட செய்திகள் வழங்கப் படுகின்றன. தலைப்பின் இருபுறங்களிலும் விளம்பரங்கள் இடம் பெற்று, இதழ் இருவண்ணங்களில் அச்சாகிறது.

பலசரக்கு, சினிமா / எதிரொலி, வாசகர் எதிரொலி (கடிதங்கள்), நகரில் சினிமா, ரேஸ்டிப்ஸ்—போன்ற பொதுவான செய்திகள், மக்கள் பலரையும் மகிழ்விக்கும் நோக்கில் இடம் பெறுகின்றது.

குமரி முரசு

தமிழகத்தின் தென் கோடியிலுள்ள கன்னியாகுமரி மாவட்டம்-நாகர்கோவிலிலிருந்து வெளிவரும் இவ் இதழ் தமிழ்

மாநிலச் செய்திகளுக்கும், மாவட்டச் செய்திகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கின்றது. தலைப்பில் இருபுறமும்விளம்பரங்களுடன், நான்கு பக்கங்களில் வெளிவரும் இவ்விதழ் மற்ற இதழ்களைப் போலவே ஆசிரியருக்குக் கடிதம், வானொலி நிகழ்ச்சிகள், சினிமாச் செய்திகள் போன்றவற்றை அடிக்கடி வெளியிடுவது குறிப்பிடத் தக்கது. இலக்கியம், அறிவியல், சமயம் தொடர்பான கட்டுரைகளும், கிராம முன்னேற்றம் தொடர்பான கட்டுரைகளும், குமரி மாவட்ட மக்கள் நலம் பெறும் செய்திகளும் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

**சுதேசமித்திரன்**

1957-ஆம் ஆண்டிலிருந்து இப்பெயரில் வெளிவரும் இதழ் காலத்திற்கேற்பச் செய்திகளை வழங்குவதில் மாற்றம் பெற்று விளங்குவதைக் காணமுடிகின்றது. 1982-இல் இதன் நிலை மற்ற நாளிதழ்களைப் போலவே அமைகின்றது. நான்கு பக்கங்களுடன் வெளியாகும் இவ்விதழின் முதல் பக்கத் தலைப்பில் இந்திரா காந்தி, காமராசர், புரட்சித் தலைவர் போன்ற தலைவரின் பொன்மொழிகள் படத்துடன் இடம் பெறுகின்றன. இவ்வாறே இரண்டாம் பக்கத்தில் ஏசுவின் பொன்மொழிகள் அவ்வப்போது வெளியிடப்படுகின்றன.

முக்கிய நாட்டு நடப்பு நிகழ்ச்சிகளைத் தலைப்புச் செய்தியாக அமைப்பதில் இவ்விதழ் குறிப்பிடத்தக்கது.

(எ.டு.) சத்துணவு திட்டத்திற்காக
துணை பட்ஜெட் தாக்கல்
130 கோடி ரூபாய்க்கு!!

சென்னை. செப். 8. 1982-83 ஆம் ஆண்டிற்கான முதல் துணை பட்ஜெட்டை நிதியமைச்சர் நெடுஞ்செழியன் இன்று சட்டசபையில் தாக்கல் செய்தார். (8-9-82 ப. 1).

என்பன போன்ற செய்திகள் அமைவது குறிப்பிடத்தக்கது. இத்துடன் சில சுவையான தலைப்புகளுடன் சாதாரண செய்திகளையும் இவ்விதழ் அளிக்கின்றன.

(எ.டு)

'குடிகார மாப்பிள்ளை வேண்டாம்!'
மாலையை பிய்த்து எறிந்துவிட்டு மணமகள் ஓட்டம்!!
(6-9-82 ப. 3)

போன்ற தலைப்பிலான செய்திகள் இவ்வாறு அமைகின்றன.

இவையேயன்றி, நாள்தோறும் ரேஸ்டிப்ஸ், இன்றைய சினிமா, நாளைய தினம் எப்படி போன்ற பகுதிகளும் இடம்பெறு கின்றன. வெள்ளிக்கிழமைதோறும் 'சினிமாப்பகுதி' படங்க ளுடன் ஒரு பக்கம் முழுவதும் சினிமா செய்திகளாகவே வெளி வருகின்றன. இதில் 'டிட்-பிட்ஸ்' என்ற தலைப்பில் சினிமாத் துணுக்குகள் வெளிவருவது குறிப்பிடத்தக்கது. இவ்வாறே ஞாயிறு தோறும் 'வார ராசி பலன்' போன்ற பகுதிகளும் தவறாமல் இடம் பெறுவது சுட்டத் தக்கது.

சில செய்திகளை வெளியிடும்போது, இதழின் அல்லது எழுதும் ஆசிரியரின் நோக்கம் ஒன்றாக இருக்க அச்செய்தியில் இடம் பெறும் சில சொற்கள் மற்றவரிடையே வேறு கருத்தை உண்டாக்கி விடுவதும் உண்டு. இம் மாறுபாடுகளை வாசகர் உடனுக்குடன் சுட்டிக் காட்டும்போது சில இதழ்கள் இதற்காக வருத்தம், அல்லது விளக்கக் குறிப்புக்களை அடுத்த இதழிலேயே வெளிப்படையாக வெளியிடுவது வழக்கம். இவ்வகையில் சுதேச மித்திரனும் செயல்படுகின்றது என்பதைப் பின்வரும் ஒரு குறிப்பு காட்டுகின்றது.

> கடந்த 3-9-82 வெள்ளிக்கிழமை வெளியான சுதேச மித்திரன் சினிமா பகுதியில் 'சிவாஜி கணேசன் அரசியலுக்கு வரவேண்டும்' என்ற கருத்தினை வெளிப்படுத்துகின்ற வகை யில் ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். அந்தக் கட்டுரையில் நான் உபயோகித்திருந்த சில வார்த்தைகள் சிவாஜியை மட்டுமல்ல, அவரது நண்பர்களையும், ரசிகர்களையும் புண் படுத்தியதாக அறிந்தேன். அந்த மாதிரி சொற்களை உபயோகிக்க நேர்ந்ததற்காக வருந்துகிறேன்.
>
> அன்பன்
> தானுஜா
>
> 'ஒரு விளக்கம்' (6-9-82 ப. 4)

இது போன்ற விளக்கக் குறிப்புக்கள் ஒரு நாளிதழின் பண்பினை வெளிக் காட்டுவதாக அமைகின்றன.

**தினகரன்**

அண்மைக் காலத்தில், மாநிலச் செய்திகளைப் பரபரப்பாக வும் சுவையாகவும் வெளியிடுவதில் இவ் இதழும் சிறப்பிடம் பெறுகிறது. இவ்வாண்டில் நாள்தோறும் ஆறு பக்கங்களுடன் வெளியாகும் இவ்விதழ் திருச்சி, சென்னை, கோவை, மதுரை போன்ற நான்கு பெரிய நகரங்களிலிருந்து அச்சாகி வருகிறது.

முதல் பக்கத்தில் கருத்துப்படம் வெளியிடும் போக்கை இவ் விதழும் பின்பற்றுகிறது. இவ்வாறே 'தலையங்கம்' எழுதி வெளியிடுவதும் குறிப்பிடத் தக்கது.

நாள்தோறும் படக்கதை, தொடர்கதை போன்றவற்றுடன், நகரில் சினிமா, ரேடியோ, வாசகர் குரல், விவசாயப் பகுதி, தினப்பலன், லாட்டரி முடிவுகள், விளையாட்டுப் பகுதி (ஆசிய விளையாட்டுக்கள்), விலைப் பட்டியல் என்ற தலைப்பில் தங்கம், வெள்ளி, மணிலாப் பயிறு போன்றவற்றின் அன்றைய விலைகள் மருத்துவப் பகுதி, செய்திக்கொத்து, செய்தித்துளிகள், சினிமாச் செய்திகள், போன்ற பலதரப்பட்ட செய்திகளையும் உள்ளடக்கி வெளியிடுவது குறிப்பிடத்தக்கது.

### தினச்சுடர்

தமிழ்நாட்டிற்கு வெளியே, கர்நாடக மாநிலத்திலிருந்து வெளிவரும் தமிழரின் பொது நாளேடு இது. நான்கு பக்கங் களில் நல்ல பல செய்திகளை நாள்தோறும் அளிக்கும் இதழ். தமிழகத்திலும், கர்நாடகத்திலும், பொதுவாக இந்தியாவிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளை அவ்வப்போது வெளியிடுவதுடன், சிரிப்புப்பகுதி, சினிமாப்பகுதி, சினிமாச் செய்தி, வானொலி, நாளை நாள் எப்படி! போன்றனவும் இடம் பெறுகின்றன. 'இன் றைய சினிமா' என்று மற்ற இதழ்கள் குறிப்பிடுவதையே இவ் விதழ் 'இன்று என்ன சினிமா பார்க்கலாம்?' என்ற தலைப்பில் வாசகரைத் தூண்டுவதுடன், தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் போன்ற பல்வேறு மொழிகளில் வெளியிடப்பட்டுள்ள திரைப்படங்களைப் பட்டியலிட்டுக் காட் டுவது குறிப்பிடத்தக்கது.

### தினத்தந்தி

நீண்ட காலமாகத் தொடர்ந்து வெளி வருவதுடன் நிலைத்த இடத்தையும் பெற்றிருக்கும் ஒரு சில தமிழ் நாளிதழ் களில் தினத்தந்தி குறிப்பிடத் தக்கது. 1942-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட இவ் இதழ் 1982-இல் சென்னை, மதுரை, திருச்சி, கோவை, திருநெலவேலி, வேலூர், கடலூர், சேலம் ஆகிய எட்டு பெரிய நகரங்களிலிருந்து வெளி வருகின்றது. தினத் தந்தியில் உள்நாட்டுச் செய்திகளுக்கு, குறிப்பாகத் தமிழகச் செய்திகளுக்குப் பெரும்பான்மையான பங்கு அளிக்கப்படு கின்றது.

செய்திகளை மிகவும் குறிப்பாகவும் சுவைபடவும் அளிப்பதில் பிற இதழ்களைவிட ஒரு தனித்தன்மையை இவ்விதழில் காணலாம். பலதரப்பட்ட மக்களுக்குத் தேவையான பொழுது போக்குப் பகுதிகளை வெளியிடுவதிலும் இதற்குத் தனியிடம் உண்டு.

### தினமலர்

சென்னை, திருச்சி, மதுரை, நெல்லை ஆகிய நகரங்களிலிருந்து வெளிவரும் தினமலர் நாளிதழ் படித்தவரும், பொது மக்களும் ஒருங்கே படிக்கத்தக்க வகையில் உள்நாட்டுச் செய்திகளை அளிக்கிறது. தமிழக அரசியல், பொருளாதாரம், அறிவியல், பண்பாட்டு வளர்ச்சி போன்ற செய்திகளைத் தருவதில் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றது ஒவ்வொரு மாவட்டச் செய்திகளும் குறிப்பிடத்தக்க அளவில் வெளியிடப்படுகின்றன.

நாள்தோறும் நடைபெறும் கொலை, கொள்ளை, விபத்து போன்ற செய்திகளுடன் மிகுதியான புகைப்படங்களையும் வெளியிடுவது இவ்விதழின் சிறப்பாகும்.

இன்றைய நிகழ்ச்சி, இன்றைய சினிமா, வானொலி, நீர் மட்டம், நாள்பலன், இன்றைய நட்சத்திரப் பலன், நாளைய ராசிபலன், இலங்கை வானொலி போன்ற அன்றாடச் செய்திகளுடன் டார்ஜான், காட்டுமிராண்டிக் கோபன் போன்ற படக் கதைகளும் இடம்பெறுகின்றன. வெள்ளிக்கிழமைகளில் 'திரை வானில்' என்ற தலைப்பில் சினிமாச்செய்தி ஒரு பக்கம் படங்களுடன் வெளிவருகின்றன. 'இது உங்கள் இடம்' என்ற தலைப்பில் வாசகர் கடிதங்கள் பிரசுரிக்கப்படுகின்றன.

ஞாயிறுதோறும் தினமலருடன் ஒரு இலவச இணைப்பு 32 பக்கங்களுடன் கூடிய புத்தகமாக வெளிவருகிறது. இவ்வாரமலர் 'அட்டை டு அட்டை ஏராளமான செய்திகள்' என்ற குறிப்பைத் தாங்கி வருவதும் இதன் அமைப்பைக் காட்டுகிறது. 'இதுஉங்கள் இடம்' என்ற தலைப்பில் வாசகர் கடிதங்கள் சுவையான தலைப்புகளுடன் இடம்பெறுகின்றன. 'துணுக்கு மூட்டை' என்ற தலைப்பில் சினிமாச் செய்திகள் படத்துடன் சிறுசிறு தலைப்புகளோடு மூன்று அல்லது நான்கு பக்கங்களில் வெளியிடப்பெறுகின்றன. அத்துடன் அறிவியல் செய்திகள், விளையாட்டுச்செய்திகள், பிற துணுக்குகள் என அங்கங்கே இடம்பெறுகின்றன.

பவித்ரா, பீட்டர், சர்புதீன், சோப்ரா போன்றவர்கள் தீட்டும் நகைச்சுவைத் துணுக்குகள் குறிப்பிடத்தக்கவை. அரைப் பக்க அளவிற்கு வெளியாகும் 'பட்டுக்குட்டி', 'நடிகை ஜெய

மல்கோவா' போன்ற படக்கதைகள் சிறுவர்க்கான பகுதிகளாக அமைகின்றன.

1982-ஆம் ஆண்டின் சிறப்புச் செய்திகளில் 'தமிழக அரசு' அறிவித்துள்ள 'சத்துணவுத்திட்டம்' குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு நாளும் என்னென்ன சத்துணவு வழங்கப்படுகிறது என்பதை இந்த இதழ் குறிப்பாகக் கட்டமிட்டுக் காட்டுவது தனிச்சிறப்பாகும்.

(எ-டு) இன்றைய சத்துணவு
18-9-82—சனி
கோதுமை உப்புமா
தண்டுகீரை பொறியல்
தக்காளிப்பழம்

—தினமலர் (திருச்சி)
18-9-82, ப. 2

என இதுபோன்று ஒவ்வொரு நாளும் செய்தியுடன் சேர்ந்து வெளியிடப்பெறுகின்றது.

**தீக்கதிர்**

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழுவின் சார்பில் வெளிவரும் இந்த இதழ் பெயரிலேயே தனது நோக்கத்தை வெளியிடுகிறது. மதுரையிலிருந்து வெளியாகும் இவ்விதழ் 4 பக்கங்களில் பல உள்நாட்டுச் செய்திகளைப் பரபரப்புடன் வெளியிடுகிறது. நாள்தோறும் வெளியாகும் தலையங்கம், கட்சிச்சார்பான தொடர்கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

**நவ இந்தியா**

கோவை மாவட்டத்திலிருந்து வெளிவரும் இந்த இதழ் நடுநிலையுடன் பல மாவட்டச் செய்திகளையும் தாங்கிவருகிறது. இதழின் முதல்பக்கத் தலைப்பில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு திருக்குறள் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது. இம்முறையை வேறு எந்தத் தமிழ் நாளிதழும் கையாளுவதாகத் தெரியவில்லை.

நகர சினிமா, லாட்டரி முடிவுகள் போன்ற அன்றாடச் செய்திப் பகுதிகளுடன், செவ்வாய், வெள்ளி போன்ற நாட்களில் திரைமலரும், சனிக்கிழமை 'உங்கள் வார பலன்', புதன்கிழமை 'உங்கள் கேள்விகளுக்கு ஜோதிடர் பதில்கள்' வியாழன் 'மருத்துவப் பகுதி', ஞாயிறு 'தொழில் மற்றும் விவசாயச்

செய்திகள்' எனப் பலதரப்பட்ட செய்திகளை இந்த இதழ் அளிக்கிறது.

திங்கட்கிழமை தோறும் வெளியாகும் இ. பாலகிருஷ்ண நாயுடு அவர்களின் 'டணாயக்கன் கோட்டை' போன்ற சரித்திரத் தொடர்பான தொடர்கதைகளும் குறிப்பிடத்தக்கன.

பொதுவாக, தொழிலாளர், விவசாயிகள் எனப் பல்வேறு மக்களுக்கும் மாவட்ட அளவிலும் மாநில அளவிலும் அறிவூட்டும் வகையில் இவ்விதழ் அமைகின்றது.

### நீரோட்டம்

1980-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இந்த இதழ் பரபரப்பூட்டும் நாளிதழ்களில் ஒன்றாக அமைகின்றது. முற்றிலும் அரசியல் தொடர்பான செய்திகளைக் கொண்டுள்ளது. முதல் பக்கத் தலைப்பில் சில குறிப்பான செய்திகளைக் கட்டமிட்டுக் காண்பிப்பது இதன் சிறப்பு. இவ்வாண்டின் பெரும்பாலான இதழ்களில் 'புரட்சிக் கவிஞர் புகழ் அந்தாதி' என்னும் தலைப்பில் மலேசியக் கவிஞர் உலகநாதன் அவர்களின் 'தொடர் கவிதை' இடம் பெற்றுள்ளது.

'இலக்கிய நீரோட்டம்' என்னும் பகுதி உவமைக் கவிஞர் சுரதா அவர்களால் எழுதப்படுகிறது.

'கம்ப இராமாயணம் ஒரு கலப்படம்' (20-12-82)

'அவனுக்கு மன்மத மயக்கம்
அவளுக்குக் கன்மத மயக்கம்' (18-12-82)
'மனக்குறி கொண்டு நகக்குறி வைத்தான்' (7-12-82)

போன்ற தலைப்புகளுடன், கவிதை நடையும் கருத்துச் செறிவும் மிக்க பகுதியாக இப்பகுதி அமைகின்றது.

சிரிப்பு-சிந்தனைகள் என்ற தலைப்பில் பலரின் துணுக்குகளும், 'வாசகர் வட்டம்' போன்ற பகுதிகளும் உண்டு. மொத்தத்தில் மாநிலக் கட்சித் தொண்டர்களைத் திருப்தி செய்யும் வகையிலேயே இவ்விதழ் அமைகின்றது எனலாம்.

### பாரதம்

"கோடிக்கணக்கான ரூபாய்களை முதலீடு செய்த குபேர புரியினர் நடத்தும் ஏடுகள்கூட தடுமாறுவதுண்டு. நிலை பெற முடியாமல் நின்று போவதும் உண்டு.

விழுவது தவிர்க்க முடியாதது. மறுபடியும் எழுந்து நடக்க முடிகிறதா என்பதுதான் கேள்வி. உங்களின் பேராதரவோடு பாரதம் மீண்டும் நடைபெறத் தொடங்குகிறது.

பத்திரிகை உலக வரலாற்றில் தடுமாறி தத்தளித்து விடா முயற்சியுடன் நின்று நிலைத்துவிட்ட ஏடுகளும் உண்டு. பாரதம் அந்த வகையைச் சார்ந்தது.

வசதிகள் குறைவு. சிரமங்கள் அதிகம். இருந்தும் பாரதம் இன்று உங்கள் கரங்களில் எல்லாம் தவழுகிறது என்றால் இந்த நிறுவனத்தில் பணியாற்றிடும் பல்வேறு துறையினரும் லட்சிய நோக்கோடு—தியாக மனப்பான்மையோடு — இதன் வளர்ச்சிக் கென்றே தங்களை அர்ப்பணித்துக் கொண்டதே காரணம்.

வெறும் முயற்சிகள் மட்டும் வெற்றி தேடித் தந்து விடாது. நிதி பலமில்லாத எந்த அமைப்பும் வெறும் முயற்சியால் மட்டும் உருப்பெற்று விடுவதில்லை.

தமிழகத்தில் அன்னை இந்திராவின் கரத்தைப் பலப்படுத்த தமிழ் நாளேடு எதுவும் இல்லை என்பது பெரும் குறை.

இந்தக் குறையை ஈடுகட்டும் முயற்சியாக வெளிவரும் நாளிதழ் பாரதம்......''

(பி.சி. ஜீ. பாரதம் 7-5-82, ப. 1)

ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் ஒரு நாள்இதழை நடத்துவதிலுள்ள பிரச்சினைகளை எடுத்துக் காட்டித் தன் நோக்கத்தையும் வெளியிட்டுள்ள இந்த இதழ் ஒரு அரசியல் இதழ் எனினும் பொதுச் செய்திகளும் இடம் பெறுகின்றன. முதல் பக்கத் தலைப்பிலும் பின் பக்கத்திலும் கட்டமிட்ட பகுதியில் மகாத்மா காந்தி, நேரு போன்ற தலைவரின் பொன்மொழிகள் இடம் பெறுகின்றன. முதல் பக்கச் செய்திகளும் பிறவும் எளிய நடையில் உரையாடல் பாங்கிலேயே அமைகின்றன. காட்டாக,

கூட்டணிக் குழப்பம்!
ஜோதிபாசு பணிந்தார்!

இலாகா மாறுதல் இல்லையாம் (1-6-82, ப.1) என்பன போன்ற செய்திகள் தமிழகத்தில் மட்டுமல்லாது வெளி மாநிலங்களில்—குறிப்பாக இந்திரா காங்கிரஸ் அல்லாத மாநிலங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளைச் சுட்டிக் காட்டும் திறன் குறிப்பிடத்தக்கது.

'ஏவுகணை' என்ற தலைப்பில் பி. சி. ஜீ அவர்கள் எழுதும் கட்டுரைகளும், 'பார்வையாளன்' என்ற பெயரில் இடம் பெறும்

கட்டுரைகளும் உணர்ச்சி மிக்க தலைப்புகளைத் தாங்கி வருகின்றன. காட்டாக,

'தமிழனை மூன்றாம்தரக் குடிமகனாக்கும் கருணாநிதி'
(வேல்வீச்சு 'விவேக்' 1-6-82. ப.3)

'மக்களும் மயக்கங்களும்' (பார்வையாளன் 10-5-82. ப.1)

'பிராமண மாநாடு—ஒரு தேசியப் பார்வை'
(பார்வையாளன்—11-5-82. ப.1)

போன்றவையும்,

'காலக் கண்ணாடி' — 'விவேக்' (29-5-82. ப. 1)

'கதைக்கிறார் காலியான முத்தர்— (30-5-82. ப.3)

'ஆகாஷ்வாணியும் ஸ்ரீ அப்பன் பிலிம்சும் (31-5-82 ப. 3) போன்றவையும், அமைகின்றன.

'பாசறைச் செய்திகள்' என்ற தலைப்பில் 'விவசாயிகள் போராட்டம்' (13-5-82. ப. 2) போன்ற மாவட்ட ஊர்ச் செய்திகள் தொடர்பான கட்டுரைகளும் கருத்தாழத்துடன் அமைகின்றன.

ஞாயிறு தோறும் சினிவிருந்து இடம் பெறுகிறது. இவற்றுடன் திங்கள், வியாழன் (வெள்ளித்திரை 20-5-8 , சினி விருந்து 10-5-82), செவ்வாய் (பட விமர்சனம் 25-5-82) என வெவ்வேறு நாட்களிலும் சினிமாச் செய்திகள் மிக அதிக அளவில் புகைப் படங்களுடன் வெளியாவது குறிப்பிடத் தக்கது. இப் பகுதிகள் யாவும் பொழுதுபோக்கு நோக்கில், இந்த இதழ் காட்டும் ஆர்வத்தைச் சுட்டுவதாகவும் வாசகரைக் கவர்வதாக வும் அமைகின்றன எனலாம்.

### பிற்பகல்

காலைப் பதிப்பு, மாலைப் பதிப்பு என இருவேளைகளில் வெளியாகும் நாளிதழ்களினின்றும் சற்று வேறுபாடு காட்டும் படியாக, 'பகலில்' வெளிவரும் ஒரே நாளிதழ் என்ற வகையில் இந்த இதழ் அமைகின்றது. கோவையிலிருந்து வெளியாகும் 'பிற்பகல்' இதழ், சென்னை நகருக்கு வெளியிலிருந்து வரும் ஒரே ஆங்கில மாலை இதழின் தமிழ்ப்பதிப்பாக அமைகின்றது. இரண்டே பக்கங்களைக் கொண்ட இந்த இதழில் மிக அதிகமாக விளம்பரங்களே இடம் பெறுகின்றன. செய்திகள் மிகக் குறைவு. நாளொன்றுக்கு 10,000 பிரதிகள் வரை அச்சாகும் 'பிற்பகல்' இதழ் இவ்வாண்டு மொத்தம் 710 பக்கங்கள் வெளியிட்டுள்ளது.

இலக்கியம், அறிவியல், சமயம், தொழில், சினிமா பற்றிய கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளது. உண்மைச் செய்திகளைத் துணிவாக வெளியிடுவது இதன் நோக்கமாக உள்ளது.

சமயம் முதல் அரசியல், குற்றவியல் வரை உண்மைச் செய்திகளை சிறப்புச் செய்தியாளரையனுப்பிப பெற்று வெளியிட்டுள்ளது. உழைக்கும் தொழிலாளர், மூட நம்பிக்கை ஒழிப்பு, வேலை வாய்ப்புச் செய்தி போன்றன சிறப்புச் செய்திகளாக வெளியிடப்பட்டுள்ளன.

இந்த இதழில் சோதிடம், குதிரைப் பந்தயம் தொடர்பான செய்திகள் இடம் பெறாதது குறிப்பிடத்தக்கது.

**மக்கள் குரல்**

இது ஒரு 'நடுநிலை நாளேடு' என அழைக்கப்படுகிறது. மாலை இதழ்களில் மிகவும் பரபரப்பான முறையில் செய்திகளை அளிக்கிறது. முதல் பக்கத் தலைப்பில் இரு புறங்களில் விளம்பரங்களுடன் தலைப்புச் செய்திகள் படத்துடன் வெளியிடப் படுகின்றன.

'சில செய்திகள், சில சிந்தனைகள்' என்னும் தலைப்பில் 'அறிவார்ந்த நண்பர்களே!' என ஆரம்பித்து டி. ஆர். ஆர். அவர்களால் சுவையுடன் எழுதப் பெறுகிறது. இதில் பல வெளி நாட்டுச் செய்திகளும் (பாக்லாந்து போர், இஸ்ரேல் இனப் படு கொலை) இடம் பெறுகின்றன.

அன்றாட அரசியல் நிகழ்ச்சிகளில் சில குறிப்பாகவும் விளக்க மான முறைகளிலும் கோடிட்டுக் காட்டத்தக்க அளவில் அமை கின்றன. காட்டாக,

தமிழன் என்று நிரூபிக்க போராட்டம்
தாய் மீது ஆணை தந்தை மீது ஆணை
தமிழ் மீது ஆணை அண்ணா, பெரியார்
மீது ஆணை.

அடுத்த வாரம்

சாகும்வரை கருணாநிதி உண்ணாவிரதம்
'மனைவிகள் தடுத்தாலும் கேட்க மாட்டேன்
அன்பழகன் தடுத்தாலும் நிறுத்தமாட்டேன்!'
(அமைச்சர் குழந்தைவேலு பேச்சுக்கு எதிர்ப்பு)

என்பன போன்ற செய்தித் தொடர்கள் கவர்ச்சிகரமாகவும் எடுப்பாகவும் அமைக்கப்படுகின்றன.

தமிழக அரசின் சத்துணவுத் திட்டத்தைப் பற்றி விரிவான செய்திகள் இவ்வாண்டில் அவ்வப்போது இடம் பெற்றுள்ளன.

அத்துடன், பொதுவான செய்திகளும் சினிமா, பெங்களூர் ரேஸ் டிப்ஸ், சென்னை மார்க்கெட், லாட்டரி முடிவு போன்ற அன்றாடச் செய்திகளும் விரவி அமைவது குறிப்பிடத்தக்கது.

**மதுரை மணி**

மதுரை நகரிலிருந்து, திரு. ம. சொர்ணமணி என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் இது ஒரு மாலை இதழாகும். இரண்டே பக்கங்களைக் கொண்ட இவ்விதழ் ஒரு சுய வேலை வாய்ப்புப் பெற்ற இதழாசிரியரால் நடத்தப் பெறுகிறது. இதில் அன்றாடச் செய்திகளுடன் சினிமாச் செய்திகளும் உண்டு.

**மராத்திய முரசு**

வட நாட்டிலிருந்து வெளிவரும் ஒரே தமிழ் நாளிதழ் என்னும் சிறப்பினைப் பெறுகிறது. நடுநிலை நாளேடாக அமையும் இது, நாடெங்கிலும் நடைபெறும் செய்திகளை மிகப் பரவலாக அளிக்கிறது. 'வாசகர் தோட்டம்' 'பார்வையர் பகுதி" 'கிச்சு-கிச்சு' (கிச்சு கிச்சு மூட்டுபவர் ராஜன், தானா) போன்ற பகுதிகள் சுவையாக அமைகின்றன.

இவ்வாண்டில் மொத்தம் 1440 பக்கங்கள் வரை வெளியிட்டுள்ள இவ்விதழ், வட மாநிலங்களான மராத்தியம், கோவா, குஜராத் பகுதிகளில் வசிக்கும் தமிழர்க்குச் செய்திகளை முந்தித் தருவது. தமிழரிடையே ஓர் இணைப்பாலமாகப் பணியாற்றுவது இதன் சிறப்பாகும்.

**மலர்ந்த ரோஜா**

இரண்டு பக்கங்களில் வெளிவரும் இதழ்களில் இதுவும் ஒன்று. முதல் பக்கத் தலைப்பில் இதழின் பெயர் படத்துடன் அமைந்து, அதன் இரு புறங்களிலும் வணிக விளம்பரங்கள் இடம் பெறுவதுடன் இதழின் பெரும்பாலான பகுதியிலும் விளம்பரங்களே அமைவது குறிப்பிடத் தக்கது.

இலக்கியச் செல்வர் குமரி அனந்தன் அவர்களைச் சிறப்பாசிரியராகக் கொண்டிலங்கும் இவ்விதழில் அவரது அரசியல் சுற்றுப்பயணம் பற்றிய செய்திகள் மிகவும் இடம் பெறுகின்றன. 'இதயத்தோடு இதயம்' என்னும் தலைப்பில் கா. கா. தே. கா. தொண்டர்க்காகக் கடிதப்பகுதி முதல் பக்கத்தில் தலைப்பிலேயே இடம் பெறுகிறது.

சில பொதுவான செய்திகளைச் சுவைபடவும் வெளியிடுகிறது. காட்டாக,

'சிவலோக பதவி

அடைந்தவருக்கு

தலைமை ஆசிரியர் பதவி' (27-12-82. ப.1) என்பது குறிக்கத் தக்கது.

இவற்றைத் தவிர, பொதுவான சில கட்டுரைகள் ஆசிரியர் பெயரில்லாமல் கால் பக்க அளவிற்கு வெளியிடப் பெறுகிறது.

'பெண் குற்றவாளிகள் பெருகி வருகிறார்களா?' (5-12-82 ப. 2.) ''நோய்கள் வருவதை தடுக்கமேற்கொள்ளவேண்டிய சில நடவடிக்கைகள்'' (13-12-82. ப. 2) போன்ற தலைப்பிலான கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

மருத்துவப்பகுதி, கலைப்பூங்கா போன்ற பொழுது போக்குப் பகுதிகளும் இடம் பெறுவதிலிருந்து இந்த இதழ் பொது மக்களின் நோக்கிற்கேற்பத் தன்னை அமைத்துக் கொண்டிருப்பது அறியத் தக்கது.

### மாலை மலர்

மாலைப் பதிப்பாக வரும் இதழ்களில் ஒன்று மாலை மலர். சேலம் மாவட்டத்திலிருந்து வெளியாகும் இவ்விதழில் உள்நாட்டுச் செய்திகள் பெரும்பான்மையாக வெளியிடப் பெறுகின்றன. இன்றைய சினிமா, நாளைய பலன், அனைத்து மாநில லாட்டரிமுடிவுகள் போன்றவற்றுடன் 'கொள்ளைக்காரி' போன்ற படக்கதைகளும், 1001 இரவுகள் போன்ற தொடர் கதைகளும் இடம் பெறுகின்றன. 'பலராமையா பதில்கள்' (மருத்துவப்பகுதி) +2 வினாவிடை (மாணவர் பகுதி)' போன்றனவும் அவ்வப்போது இடம் பெறுவது குறிப்பிடத் தக்கது.

### மாலை முரசு

காலைப் பதிப்பில் தினத்தந்தி இதழ் போல மாலைப் பதிப்புகளில் மக்களை மிகவும் கவருவது மாலை முரசு இதழாகும். அன்றைய செய்திகளை விரைவாகவும் விறுவிறுப்பாகவும் அளிப்பதில் இது சிறப்பிடம் பெறுகிறது. கோவை மதுரை, நெல்லை, சென்னை, சேலம், தஞ்சை, வேலூர், போன்ற பெரிய நகரங்களின் பெயருடன் வழங்கும் மாலை முரசு இதழ்கள் யாவும் இப் பண்புகளுடன் விளங்குவது குறிப்பிடத்தக்கது. உள்நாட்டு

நிகழ்ச்சிகளில், குறிப்பாக, அரசியல், சினிமா, கொலை, கொள்ளை, கடத்தல், விபத்து, சாவு ஆகிய செய்திகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதுடன் புகைப் படங்களையும் தவறாது வெளியிடுவதில் மாலைமுரசுக்குத் தனியிடம் உண்டு.

இவ்வாறே தலைப்புச் செய்திகளை அளிப்பதிலும் இவ்விதழ் குறிப்பிடத்தக்கது. காட்டாக,

'பக்கத்து நாடுகளில் படைகுவிப்பு
இந்திரா புத்தாண்டு சபதம்!'
''யுத்த அபாயத்தை முறியடிப்போம்''!!

(1-1-82 ப. 1)

என்பன போன்ற 'தலைப்புச் செய்திகள்' நாடு முழுவதுக்குமான செய்தியை அளிப்பதாக அமைகின்றன.

சில செய்திகள் மிகவும் பரபரப்பூட்டும் வகையிலும் படிப் போர் ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் அமைவது இவண் சுட்டத் தக்கது. காட்டாக,

இந்திராவின் அரசியல் வாரிசு யார்?
அவரே அளித்த பதில்

புது டெல்லி, ஜன. 10—இந்திராவின் அரசியல் வாரிசு யார்? என்பதற்கு அவரே பதில் அளித்தார்.

பிரதமர் இந்திராகாந்தி அமெரிக்கப் பத்திரிகை ஒன்றுக்கு பேட்டி அளித்தார். அவரிடம் ''உங்களுக்கு பின் யார்?'' என்று அந்த பத்திரிகை நிருபர் கேட்டார். அதற்கு பதில் அளித்து இந்திரா கூறியதாவது:-

கடினமான நிலைமை :- இன்று உள்ள நிலைமையே கடினமாக இருக்கிறது. நாளை அல்லது நாளை மறுநாள் என்ன நடக்கப் போகிறது என்று சொல்வதை விட இன்று உள்ளதையே கவனிக்க வேண்டும்.

இவ்வாறு இந்திரா பதில் அளித்தார்.
மேலும் இந்திரா கூறியதாவது :-

நம்பிக்கை :- இந்தியா பெரிய நாடு. தனித்தன்மை உடையது. இந்தியாவுக்கு ஜனநாயக முறைதான் ஏற்றது. மற்ற அமைதியான நாடுகளில் உள்ளதைப் போலவே இந்திய மக்கள் அமைதியான முறையில் உள்ளனர்.

இந்தியா மீதும், இந்திய மக்கள் மீதும் நான் நம்பிக்கை வைத்து இருக்கிறேன். அவர்களுக்காக உழைப்பேன்.

இவ்வாறு இந்திராகாந்தி கூறினார். (10-1-82, ப.1)

இச்செய்தியில் தலைப்பினைப் பார்த்த அளவில் பெரியதொரு இரகசியம் தெரியப்போவது போல இருப்பினும் உள்ளே படிக்கப்படிக்க இது ஒரு பத்திரிகை பேட்டி என்பதும், அதில் பிரதமரின் உண்மை நிலையை அவர் கூறியவாறே வெளியிட்டிருப்பதும் விளங்குகிறது. இத்தகைய உத்திமுறைகள் மாலை முரசு போன்ற இதழ்களுக்கே உரியன.

மற்றச் செய்திகளுடன் தமாஷ், படக்கதை, நாளைய தினப் பலன், கிண்டிரேஸ், இன்றைய சினிமா, போன்றவை நாள் தோறும் இடம் பெறுகின்றன. சனிக்கிழமைதோறும் வெளிவரும் 'ஆலய அற்புதங்கள்' போன்ற தொடர் கட்டுரைகளும், 10-வது வகுப்பு மாணவர்க்கான வினா-விடைப் பகுதிகளும் குறிப்பிடத் தக்கன. வாரந்தோறும் வரும் முரசு மலரில் உள்ள சிறுகதை, கவிதை, கட்டுரைகளும் சிறந்த பொழுது போக்குப் பகுதிகளாக அமைகின்றன.

**முத்துச் சரம்**

நான்கு பக்க அளவில், நாற்பது காசு விலையில், நல்ல பல செய்திகளை நாள்தோறும் அளிக்கும் நடுநிலை நாளோடு முத்துச்சரம். இதில் பொதுவான பொழுதுபோக்குப் பகுதிகளும் விளம்பரங்களும் இடம் பெறுகின்றன.

**முரசொலி**

தமிழகத்தில் நீண்ட நாட்களாகத் தொடர்ந்து வெளிவரும் தனியொரு கட்சியின் நாளிதழ் என்னும் பெருமை முரசொலிக்கு உண்டு தற்போது சென்னை, மதுரை நகரங்களில் அச்சாகிறது.

'இன்றைய செய்தி நாளைய வரலாறு' என்னும் தன் இலட்சிய நோக்கை இதழ் ஒவ்வொன்றிலும் காட்டுகிறது. கலைஞர் கருணாநிதியின் கலையழகு மிக்க பேச்சுகள் கழகத் தொண்டரைக் கட்டியிழுக்கும் வகையில் அமைக்கப்படுகின்றன.

முதல் பக்கத்தில் வெளியாகும் 'கலைஞர் கடிதங்கள்' பகுதியில் அமையும் தலைப்புகள் கவர்ச்சி மிக்கன. காட்டாக,

'நடந்தாய் வாழி கண்மணியே' (1-3-82. ப. 1)

'மழையில் நனையும் மண்ணாங்கட்டி' (2-3-82. ப. 1) போன்றவை சுட்டத்தக்கன.

'கழகச் செய்திகள் என்ற தலைப்பில் ஒவ்வொரு மாவட்டத்திலும், வட்டத்திலும் நடைபெறும் கழகக் கூட்டங்கள் பற்றிய

செய்திகள் நாள்தோறும் இடம் பெறுகின்றன. 'உங்கள் பார்வை, என்ற தலைப்பில் ஆசிரியருக்கு வரும் கடிதங்கள் அச்சிடப் பெறு கின்றன.

### விடுதலை

தமிழகத்தில் நீண்ட நாட்களாக வெளியாகும் 'முற்போக்கு' நோக்கங் கொண்ட 'கட்சி' நாளிதழ் விடுதலை. தந்தை பெரியாரை நிறுவனராகக் கொண்ட இந்த இதழ் இன்றும் அதே கொள்கைகளுடன் நிலை பெற்றுள்ளது.

முதல் பக்கத் தலைப்பில் அன்றைய முக்கியச் செய்திகள் கட்டத்திற்குள் அமைக்கப் பெறுகின்றன. இரண்டாம் பக்கத்தில் 'தலையங்கம்' 'பொதுச் செயலர் சுற்றுப்பயணம்', 'அறிவுரை' என்னும் தலைப்பில் பெரியாரின் பொன்மொழிகள் அமைகின்றன.

ஆசிரியருக்குக் கடிதம், 'சங்கமித்ரா' எழுதும் சில அரசியல் தொடர்பான கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன. 'செய்தித் தொகுப்பு' என்ற தலைப்பில் முதல் பக்கத்தில் சில தகவல்களை ஒரு பத்தி அளவிற்கு மிகவும் சுவையான சிறு தலைப்புகளிட்டு வழங்குவது தனிச் சிறப்பாகும்.

பொழுதுபோக்கு அம்சங்கள் குறைந்திருப்பினும் கட்சித் தொண்டர்க்காக, மிகவும் கவர்ச்சிகரமான தலைப்புகளை யிட்டு, தனக்கென தனித்ததொரு நடையுடன் வெளிவருவது விடுதலை நாளிதழ் என்பது குறிப்பிடத்தக்கது. இன்று தமிழக அரசு ஏற்றுக்கொண்டுள்ள 'சீர்திருத்த எழுத்து' அமைப்பினைப் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே ஏற்படுத்தி இன்றும் கடைப் பிடித்து வரும் நாளிதழ் விடுதலை ஒன்றே என்பதும் இவண் சுட்டத்தக்கது.

### இதழும் பெயரும்

தமிழ் நாளிதழ்களின் பெயர்கள் பெரும்பாலும் நல்ல தமிழிலேயே அமைந்துள்ளன. இவை நாள்தோறும் வெளிவருவன என்ற அடிப்படையிலும், செய்திகளை அளிப்பன என்ற கருத்திலும், வெளியிடுவோர் தங்களை இனங்காட்டிக் கொள்ளும் வகையிலும் பெயர்கள் அமைந்துள்ளன. இவற்றின் பெயர்களைப் பின்வருமாறு பிரித்தறியலாம்.

தினம் : 'தினம்' என்னும் சொல் திருநாள், நாள், பகல் போன்ற பொருளில் அமையும். 'தினசரி' என்னும் சொல் 'நாள்தோறும்' என்ற பொருளிலேயே வழங்கப் பெறுகின்றது.

'தின' என்னும் அடியினைக் கொண்டு அமையும் நாளிதழ்களாக, தினகரன், தினத்தந்தி, தினச்சுடர், தினமலர், தினமணி போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவற்றுள், தினகரன், தினச்சுடர் என்னும் இரு பெயர்களும் நாள்தோறும் காலையிலெழும் கதிரவனின் பெயரால் வழங்கப்பெறுவது குறிப்பிடத்தக்கன.

**மக்கள் :** நாளிதழ்கள் அனைத்தும் மக்களுக்கான செய்திகளை அளிப்பதாலும், அவர் அன்றாட வாழ்க்கையை ஒட்டி அமைவதாலும் சில நாளிதழ்கள் 'மக்கள்' என்னும் சொல்லின் அடியாக அமைகின்றன. 'மக்கள் குரல்', 'மக்கள் செய்தி' என்னும் இரு இதழ்களை இவண் சுட்டலாம்.

**மாலை :** 'மாலை' என்னும் சொல் 'அந்திப் பொழுது' என்னும் பொருளில் வழங்கப் பெறுகிறது. இவை மாலைப் பதிப்பாக வரும் இதழ்கள் என்பதை இப் பெயரைக் கொண்டே அறியலாம். இவ்வகையில் 'மாலை மலர்', 'மாலை முரசு' போன்றவற்றைக் கூறலாம்.

மாலைப் பதிப்பு என்று இருப்பினும் இவ்விதழ்களில் சில, பிற்பகலிலேயே விற்பனைக்காக வெளிவந்து விடுகின்றன. எனவே, இவற்றைப் 'பிற்பகல் இதழ்கள்' என்றும் கூறலாம். 'பிற்பகல்' என்னும் பெயருள்ள இதழ் இவ்வகையில் அமைகின்றது.

**நவம் :** 'நவம்' என்னும் சொல் ஒன்பது, புதுமை போன்ற பொருள்களில் அமையும். 'நவ இந்தியா', 'நவசக்தி' போன்ற பெயர்கள் இவண் குறிப்பிடத்தக்கன.

**மலர் :** இயற்கையில், பெரும்பாலான பூக்கள் தினமும் தோன்றி மறைகின்றன. நாள்தோறும் புதுமையும், பொலிவும் பெற்று, மணம் வீசுவனவே மலர்கள். இவ்வடிப்படையில் நாள்தோறும் புதிய செய்திகளைச் 'சுடச்சுட'வும் சுவைபடவும் கூறும் இதழ்கள் தம் பெயரில் 'மலர்' என்னும் இறுதி இயைபு பெற்று அமைகின்றன. இவ்வகையில் 'அரும்பு மலர்', 'மாலை மலர்', 'தினமலர்' போன்றவற்றைச் சுட்டலாம்.

**ஒலி :** இவ்வாறே, முரசொலி, எதிரொலி என்பன ஒலி என்னும் இறுதி இயைபு பெறுகின்றன.

**மணி :** தினமணி, இனமணி, மதுரை மணி, தமிழ் மணி என்பன 'மணி' என்னும் இயைபுடையன.

**குரல் :** மக்கள் குரல், நீதியின் குரல் என்பன குரல் என்னும் இறுதி இயைபுடையன.

பொது நிலையில் இவை யாவும் ஒலி அடிப்படையில் அமைவதாகக் கூறலாம். முற்காலத்தில் செய்திகளை அறிவிக்க 'முரசு' கொட்டி அறிவித்ததாக அறிகிறோம். இன்றும் இப் பழக்கம் உண்டு. இவ்வாறே 'மணி' ஓசையை எழுப்பி ஒரு குறிப்பிட்ட செய்தியை அறிவித்தல் என்பது வழக்கு. இன்றும் கோவில்கள், பள்ளிகள், அலுவலகங்களில் இது நடைபெறுகிறது.

### தலைவர் பெயரில்

தமிழகத்தின் தலைசிறந்த தலைவர்களுள் ஒருவர் என்ற வகையில் தமிழக முன்னாள் முதல்வர் மாண்புமிகு சி. என். அண்ணாதுரை அவர்களின் பெயரைச் சுருக்கி 'அண்ணா' என்ற பெயரில் 'அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்' ஒரு நாளிதழை நடத்தி வருகிறது. இது தவிர வேறு எந்த இதழும் இவ்வாறு ஒரு தலைவரின் பெயரால் வழங்கப் படுவதாக அறியக்கூடவில்லை.

### இடப்பெயரில்

தேசபக்தன், இந்தியா, நவஇந்தியா, தமிழ்நாடு டெமாக் ராட், தென்னகம், பாரதம், வஞ்சிநாடு, இமயம் போன்ற நாளிதழ்கள் இடப்பெயரோடு அமைகின்றன.

இவையே தவிர, கோவை மாலை முரசு, மதுரை மாலை முரசு, மதுரை மணி, சேலம் மாலை முரசு, தஞ்சை மாலை முரசு, வேலூர் மாலை முரசு, மராத்திய முரசு, குமரி முரசு போன்ற இதழ்களும் ஊர்ப் பெயரால் வழங்கப் பெறுகின்றன.

### வேற்று மொழிப் பெயர்கள்

சில இதழ்களின் பெயர்கள் வடமொழிக் கலப்புடனும், ஆங்கில மொழிக் கலப்புடனும் காணப்படுகின்றன. தேசபக்தன், மாளவிகா, மாங்கல்யம், நாத்திகம், நவஇந்தியா, நவசக்தி, பஞ்சாமிர்தம், சுதேசமித்திரன், ஜான்ஸிராணி, தினமணி, தினத்தந்தி, தினகரன், தினச்சுடர், தினமலர் போன்ற பெயர் கள் வடமொழிக் கலப்புடனும், சினிமா முரசு, தினத்தந்தி, தமிழ்நாடு டெமாக்ராட், மூவிடைம்ஸ் போன்றவை ஆங்கில மொழிக் கலப்புடனும் பெயர் பெற்றுள்ளன.

### பொதுவான பெயர்கள் சில

அறிவிப்பு, செங்கொடி, கலிங்கா, முயல், பிரம்படி, பொன் திரை, தீக்கதிர், திலகம், வணிக ஒற்றுமை, விடிவெள்ளி, விடுதலை, கழகக் கோட்டை, மணல்வீடு, முருகு, நீரோட்டம்,

சத்திய வேட்கை, சாட்டை, திரைப்பித்தன் போன்ற சில இதழ்களின் பெயர்கள் பொதுவாக அமைகின்றன.

### இதழ்களின் பாகுபாடு

நாள்தோறும் நடைபெறுகின்ற பொதுவான சமூக நிகழ்ச்சிகளையும், சில நேரங்களில் சில அபூர்வ நிகழ்ச்சிகளையும் செய்தியாக வெளியிடுவன நாளிதழ்கள். இந்நிலையில் எல்லா இதழ்களுமே ஒன்றுபடுகின்றன. ஆயின், இவற்றைப் பாகுபாடு செய்து பார்க்க வேண்டுமெனின் இவைதரும் செய்திகளின் தன்மையைக் கொண்டும் இவற்றின் வெளித் தோற்றத்தைக் கொண்டுமே அளவிட முடியும்.

பொதுவாக, பரபரப்பூட்டும் இதழ்கள் தீவிரவாத இதழ்கள் மிதவாத இதழ்கள் என மூவகையாக இவற்றைப் பாகுபடுத்தலாம். நடுநிலை இதழ்கள் சிலபோது பரபரப்பூட்டுவனவாயும், மிதவாதமுடையனவாயும் அமைகின்றன. இவை அரசியல் சார்பு இல்லாமலும் உள்ளன. சில அரசியல் இதழ்களைத் தீவிரவாத இதழ்கள் எனலாம். பரபரப்பூட்டும் இதழ்கள் பெரிய பெரிய எழுத்துக்களைச் செய்தித்தலைப்புகளில் அமைக்கின்றன. இத்தகைய தலைப்புகளைக் கொண்டே இவற்றின் பொதுத் தன்மையை அறியலாம்.

### கட்சிச் சார்புடையன

பொது நிலையில் பல இதழ்கள் நடுநிலையாக இருப்பினும், சில இதழ்கள் கட்சிச்சார்புடன் இயங்குகின்றன. அண்ணா, முரசொலி, தீக்கதிர், விடுதலை, பாரதம் இவற்றை இவ்வாறு கூறலாம்.

### துறைச் சார்புடையன

நாளிதழ்களைப் பொறுத்தவரை ஒரு குறிப்பிட்ட துறையை சார்ந்த இதழ்களாக வருபவை ஒரு சிலவே. சினிமா முரசு, மூவிடைம்ஸ், திரைப்பித்தன் போன்றவை திரைப்படத் துறையைச் சார்ந்து அமைகின்றன.

'வணிக ஒற்றுமை' என்பது வணிகத் துறையைச் சார்ந்து அமைகின்றது.

### அரசியல் இதழ்கள்

மக்கள் மனங்களை வேறு திசையில் செல்லவிடாமல் தம் எண்ணப்படி ஆட்டி வைக்கவேண்டும் என்பதும், அதன்வழி தம்

நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும் என்பதும் பல அரசியல் கட்சிகளின் இன்றைய பொது நிலையாகும். நாள் தோறும் நிகழும் குறிப்பிடத்தக்க அரசியல் நிகழ்ச்சிகளைச் சில பொது நாளிதழ்கள் வெளியிட, அவற்றிடையே நிகழும் போட்டி, மறுப்பு, விளக்கம் போன்றவற்றை மக்களுக்கு உடனுக்குடன் அளிக்க வேண்டி அரசியல் இதழ்கள் தோன்றுகின்றன. இவை காலத்திற்கேற்பவும் அமையும். சில இதழ்கள் சில குறிப்பிட்ட கட்சிகளின் நலனுக்காகவே உள்ளன.

அண்ணா—அ.தி.மு.க. இதழ்
தீக்கதிர்—இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி இதழ்
பாரதம்—இ. காங்கிரஸ் இதழ்
முரசொலி—தி.மு.க. இதழ்
விடுதலை—தி.க. இதழ்

என இவை அமைகின்றன.

வேறு சில இதழ்கள் முழுமையாக இல்லாவிட்டாலும் சில கட்சிகளைச் சார்ந்தே அமைகின்றன. மக்களிடையே செல்வாக்கு மிக்க கட்சிகளைச் சார்ந்து இவை அமைவதால் இவற்றின் ஆயுட்காலம் நீடிக்கும் என்ற நம்பிக்கையும் இதற்கு ஒரு காரணமாகும்.

அரசியல் இதழ்களுக்கென சில தனித்தன்மைகளை அவையே ஏற்படுத்திக் கொண்டுள்ளன. இது வரவேற்கத் தக்கதே. ஆயினும், சில இதழ்கள் அதற்காக சில சொற்களை மிகவும் தரக்குறைவான முறையிலும், கொச்சையான தொடர்களுடனும் வெளியிடுவது தமிழரின் பெருமைக்கும், மொழித் திறனுக்கும் இழுக்காகவே அமைந்து விடுகிறது. சிலவற்றை வெளிப்படையாகக் கூறும்போது இதனால் சிலபகுதி மக்களிடம் வெறுப்புணர்வு தோன்றக்கூடும். எனவே, மொழிநடையைக் கையாள்வதில் இதழ்கள் கண்ணியத்தைக் கடைப்பிடிக்க வேண்டியது மிகவும் தேவையாகிறது. தமிழ் நாளிதழ்களில் பல இவ்வகையில் மிகவும் விழிப்பாகவே செயல்படுகின்றன.

### நாள் இதழ்களின் பொது அமைப்பு

நாள் இதழ்களின் புற, அக அமைப்பு கவனிக்கத் தக்கது. மக்களின் கருத்தைக் கவர இவை பல அமைப்புகளைக் கொண்டுள்ளன.

### தலைப்பகுதி

இதழின் பெயர் முதல் பக்கத்தின் மேற்பகுதியில் இடம் பெறுகிறது. இப்பெயர்கள் படிப்போரின் கண்ணைக் கவரும்

வகையில் சில கருமை நிறத்திலும், சில வெண்மை நிறத்திலும், சில கறுப்பு சிவப்பு நிறங்களிலும் அச்சிடப்பெறுகின்றன. இதழின் பெயரிடையே அவ்விதழின் குறியீட்டுச் சின்னத்தையும் பொறித்து வழங்குவதை மலர்ந்த ரோஜா (ரோஜா மலர் ஓவியம்), தினமணி (இரு மூவர்ணக் கொடி ஓவியம்) போன்ற இதழ்களில் காணலாம். இவ்வாறே, பதிவு எண், நாள், கிழமை, பக்கம், விலை போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன.

சில இதழ்களின் தலைப்பகுதியில் இதழின் பெயரை அடுத்துள்ள இரு புறங்களிலும் வணிக விளம்பரங்கள் இடம் பெறுகின்றன—மலர்ந்த ரோஜா, எதிரொலி, குமரி முரசு போன்றன. சில இதழ்களில் தலைவரின் பொன்மொழிகள் சிலவும் (சுதேச மித்திரன், அண்ணா, பாரதம் போன்றன), அன்றைய குறிப்பான செய்திகள் சிலவும் (விடுதலை, நீரோட்டம்) கட்டங்களில் அமைத்து வெளியிடப்படுகின்றன.

## தலைப்பில் இடம்பெறும் குறிப்பு

சில நாளிதழ்கள் தமது குறிக்கோளையும் தன்மையையும் வெளிக்காட்டும் முகமாக ஒவ்வொரு இதழின் தலைப்பிலும் ஒரு வாசகத்தை வெளியிடுகின்றன. தன் விளக்க விளம்பரங்களாக அமையும் இவை அவ் இதழின் பொதுவான நோக்கத்தை அறிய வகை செய்கின்றன. எடுத்துக்காட்டாக,

'நாட்டுக்கும் வீட்டுக்கும் ஒரு போர்வாள்'
(மலர்ந்த ரோஜா—29-12-82)

'இன்றையச் செய்தி நாளைய வரலாறு' (முரசொலி—1-3-82)

'வாழ்க பெரியார்' 'வளர்க அவர்தம் கொள்கை' (விடுதலை 25-5-82)

'படம் நிறைந்த பத்திரிகை' (மாலை முரசு 1-1-82)
'நடுநிலை நாளேடு' (Independent Tamil Daily) (மக்கள் குரல் 27-6-82)

'நடுநிலை நாளேடு' (எதிரொலி—3-10-82)

'வடநாட்டிலிருந்து வெளிவரும் ஒரே தமிழ் நாளிதழ்'
(மராத்திய முரசு 18-7-82)

'கர்நாடக தமிழரின் பொது நாளேடு' (தினச்சுடர் 18-3-82)
'தினத்தந்தியின் கருத்துப்படம் (கார்ட்டூன்) வெளிநாடுகளிலும் புகழ் பெற்றது' (தினத்தந்தி—கடலூர். ஜன. 11)

'தினத்தந்தி உள்நாட்டுச் செய்திகளை உடனுக்குடன் தருகிறது.' (தினத்தந்தி—நெல்லை - ஜன. 11)

'தினத்தந்தி உயிர்த்துடிப்பு உள்ள நாள்-தாள்' (தினத்தந்தி-கடலூர். ஜன. 5)

'தினத்தந்தி வெளிநாட்டு ஏடு போன்ற தோற்றம் உடையது' (தினத்தந்தி-கடலூர். ஜன. 6)

'தினத்தந்தி ஒவ்வொரு அங்குலமும் தங்க நகை போல அலங்கரிக்கப்படுகிறது.' (தினத்தந்தி-கடலூர்.ஜன. 7)

'Leading progressive Tamil Daily of the people'
(அண்ணா - 1-3-82)

'Daily run by self employed working Journalist'
(மதுரை மணி - 23-5-82)

என்னும் இவை போன்ற குறிப்புகள் கவனிக்கத் தக்கன.

## இதழைக் குறிக்கும் இணைச்சொற்கள்

ஒவ்வொரு நாளிதழும், தன் தொடக்க ஆண்டு முதலாக எத்தனை இதழ்கள் வெளி வந்துள்ளன என்பதைக் குறிக்க ஒரு சொல்லை அமைத்து, அதன் தொடர்பாக ஒவ்வொரு நாளுக்கும் ஒரு சொல்லை அமைத்து வரிசை எண் கொடுத்து அமைக்கின்றன. பெரும்பாலும் இவை முறையே 'மலர்-இதழ்' என்றே அமையினும், சில இதழ்கள் தம் பெயருக்கேற்பவும் இச் சொற்களை அமைத்துக் கொண்டுள்ளன.

| | |
|---|---|
| சரம் 1 — முத்து 46 | (முத்துச்சரம் 7-9-82) |
| கதி 2 — ஒளி 86 | (தினகரன் 2-12-82) |
| நீர் 3 — ஓட்டம் 266 | (நீரோட்டம் 31-12-82) |
| மணி 2 — ஒலி 230 | (எதிரொலி 1-10-82) |
| மணி 9 — ஓசை 53 | (மதுரை மணி 23-5-82) |
| கதிர் 19 — பொறி 349 | (தீக்கதிர் 30-3-82) |
| சுடர் 19 — ஒளி 40 | (தினச்சுடர் 18-3-82) |

என்னும் இவ் இணைச் சொற்களுடன் கூடிய எண்கள் இதழ்களின் வயதை அறியச் செய்கின்றன.

## பக்கமும் விலையும்

நாளிதழ்களின் விலை மக்களின் வாங்கும் திறனை ஒட்டி அமைகின்றது. பொதுவாக இவ் விதழ்களின் விலை நாளொன்

மா—48

றுக்கு 50 பைசாவிற்குள் உள்ளது. ஆயினும் 10 ஆண்டுகளுக்கு முன்பிருந்த விலையை (25 காசு) நோக்க இரண்டு மடங்கு கூடியுள்ளதை அறியலாம்.

எனினும், தொடக்க காலத்தில் அதிக பக்கங்களுடன் குறைந்த விலையிலிருந்த இதழ்கள் இன்று குறைந்த பக்கங்களுடன் அதிக விலையில் விற்பனையாவது குறிப்பிடத்தக்கது. பெரும்பாலான நாளிதழ்கள் நான்கு பக்கங்களையே கொண்டுள்ளன. சில இரண்டு பக்கங்களையும், சில ஆறு அல்லது எட்டுப் பக்கங்களையும் கொண்டுள்ளன.

நாலு பக்க நாளிதழ்கள் எல்லாம் ஒரே விலையைக் கொண்டிருக்கவில்லை. காட்டாக, முத்துச்சரம், சுதேசமித்திரன், விடுதலை, அண்ணா, பாரதம், குமரிமுரசு, தினச்சுடர் போன்றன நாற்பது காசு விலையுள்ளவை. முரசொலி, எதிரொலி, தீக்கதிர் போன்றவை நாற்பத்தைந்து காசு விலையின. நீரோட்டம் ஐம்பது காசாக இருக்க, நவ இந்தியா நான்கு பக்கங்களை இருபத்தைந்து காசுக்கு அளிக்கிறது. மராத்திய முரசு முப்பது காசு என அமைக்கிறது. மலர்ந்த ரோஜா, பிற்பகல், மதுரை மணி போன்ற இரு பக்க இதழ்கள் இருபத்தைந்து காசு விலையின.

மாலைமலர், தினகரன் ஆறு பக்கங்களுடன் ஐம்பது காசிலும், மக்கள் குரல் நாற்பத்தைந்து காசுமாக இருக்க, தினமலர் ஐம்பது காசுக்கு எட்டு பக்கங்களை அளிக்கிறது. தினமணி, தினத்தந்தி போன்றன மிகக் குறைந்த விலையில் அதிக பக்கங்களுடன் அமைகின்றன. வெள்ளி, ஞாயிறு மற்றும் சிறப்பு மலர்கள் அடங்கிய இதழ்களின் விலை அவ்வப்போது பக்க எண்ணிக்கைக்கேற்ப மாறுவதுண்டு. இது எல்லா இதழுக்கும் பொருந்தும். இவ்விலையமைப்பு இவ்விதழ்களின் விற்பனைத் தரத்தையும், மக்களிடையே பரவியிருக்கும் தன்மையையும் காட்டுகின்றன எனலாம்.

### பெருமையும் சிறுமையும்

இதழ்களை, பெரிய இதழ்கள் (Big Newspapers), நடுத்தர இதழ்கள் (Medium Newspapers), சிறிய இதழ்கள் (Small News papers) என மூன்று வகையாகப் பிரிக்கலாம். இவற்றுள் நாளொன்றுக்கு 50,000க்கும் மேற்பட்ட பிரதிகளுடன் வெளி வருவன பெரிய இதழ்கள் என்றும், நாளொன்றுக்கு 15,000க்கு மேல் 50,000க்குள் வெளி வருவன நடுத்தர இதழ்கள் என்றும், நாளொன்றுக்கு 15,000 பிரதிகள் வரை வெளியிடுவன சிறிய இதழ்கள் என்றும் கூறப்படும்.

தமிழ் நாளிதழ்களுள், தினத்தந்தி, தினமணி போன்றன பெரிய இதழ்களாகவும், தினகரன், தினமலர், மாலை முரசு, முரசொலி போன்றன நடுத்தர இதழ்களாகவும், மதுரைமணி, நவ இந்தியா, தீக்கதிர், விடுதலை போன்றன சிறிய இதழ்களாக வும் அமைகின்றன.

## இதழும் பதிப்பும்

பெரும்பாலான நாளிதழ்கள் ஒரு நாளைக்கு ஒரு பதிப்பினை மட்டுமே கொண்டுள்ளன. சில பெரிய இதழ்கள் தங்கள் வசதிக் கேற்ப பல மாவட்டப் பதிப்புகளைக்கொண்டுள்ளன. சென்னை, மதுரை, திருச்சி, கோவை, திருநெல்வேலி, வேலூர், கடலூர், சேலம் ஆகிய மாவட்டங்களில் தினத்தந்தியும், சென்னை, கோவை, மதுரை, திருச்சி ஆகிய மாவட்டங்களில் தினகரனும், திருநெல்வேலி, சென்னை, திருச்சி, மதுரை ஆகிய மாவட்டங் களில் தினமலரும், மதுரை, சென்னை ஆகிய மாவட்டங்களில் தினமணியும், சென்னை, மதுரை, திருநெல்வேலி, சேலம், தஞ்சை, வேலூர், கோவை ஆகிய மாவட்டங்களில் மாலை முரசும் தனித்தனிப் பதிப்புகளையுடையன.

இவ்வாறு மாவட்டந்தோறும் பதிப்புகளை அமைப்பதால் ஒரே செய்தியை ஒரே நேரத்தில் விரைவாக எல்லா இடங் களுக்கும் அளிக்க இயலுவதுடன் பொருட் செலவும் இவ்விதழ் களுக்குக் குறைகிறது எனலாம். எனவே, இத்தகைய இதழ்கள் நன்கு செயல்படுகின்றன.

## காலையும் மாலையும்

'காலை எழுந்தவுடன் படிப்பு' என்பதற்கேற்ப இன்றைய நாகரிக வாழ்க்கையில் காலையில் நாளிதழ்களைப் பார்த்து, நாட்டு நடப்புகளை அறிந்து கொள்வதில் அனைவருமே ஆர்வம் கொண்டுள்ளனர். எனவே, பல தமிழ் நாளிதழ்கள் காலைப் பதிப்புகளாகவே வருகின்றன.

காலையில் வந்த செய்திகளின் தொடர்ச்சி மற்றும் அன்றைய புதிய செய்தி என பல்வேறு நோக்குடன் படிக்கப்படுவன மாலை பதிப்புகள். தொழிலாளர், தொண்டர் போன்ற பலரும் விரும்பிப் படிப்பவையாக இவை அமைகின்றன.

காலைப் பதிப்பு, மாலைப் பதிப்பு எனத் தனித்தனியே பதிப்புகள் இருப்பினும், சில இதழ்கள் மாலையில் ஓரிடத்தில் வெளியாகி, மறுநாள் காலை வெளியூர்களில் கிடைப்பனவாகவும்

அமைகின்றன. இவை அளிக்கும் செய்திகளைக் கொண்டும் இப் பதிப்பு முறையை அறியலாம்.

முந்திவரும் முதல் செய்திகள் (காலை—மாலை)

புதிய செய்திகளை முந்தித் தருவதே நாளிதழ்களின் பொதுவான குறிக்கோள். இது காலை, மாலை இரு பதிப்புகளுக்கும் பொருந்தும். இவ்வகையில், காலை வெளிவரும் தலைப்புச் செய்தி மாலை இதழில் தலைப்புச் செய்தியாக வருவதில்லை. மாறாக, அடுத்த நாள் நடைபெற விருக்கும் முக்கிய நிகழ்ச்சிகளையே மாலை இதழ்கள் அளிக்கின்றன. இவ்வகையில் இவை செய்திகளை முந்தித் தருவதில் காட்டும் ஆர்வத்தை அறிய முடிகிறது.

சில தலைப்புச் செய்திகள் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குத் தொடர்பு கொண்டு அமைவதும், காலை, மாலை இதழ்களில் மாறி மாறி அமைவதும் ஒப்பிட்டு நோக்கற்குரியன.

மாலைமுரசு—தலைப்புச் செய்திகள்

தமிழ்நாட்டில் 14-ந்தேதி
வழக்கம் போல் பஸ்கள் ஓடும்!
அரசு அதிகாரி அறிவிப்பு!! (17-1-82)
நாளை முழு அடைப்பு, இரவோடு இரவாக
தலைவர்கள் கைது!
தமிழ்நாடு முழுவதும் 2, 000 பேர் கைதானார்கள்!
(18-1-82)

தமிழ் நாட்டில் 2 இடங்களில்
துப்பாக்கி சூடு!
குண்டு பாய்ந்து ஒருவர் சாவு!! (19-1-82)

நேற்று நடந்த முழு அடைப்பில்
மொத்தம் 10பேர் பலி
இந்தியா முழுவதும்!! (20-1-82)

தினத்தந்தி—தலைப்புச் செய்திகள்

19-ந்தேதி வேலை நிறுத்தம்
வேலைக்கு போகிறவர்களை தடுத்தால்
கடும் நடவடிக்கை
ஜயில்சிங் எச்சரிக்கை. (18-1-82)
'கடைகளை திறந்து வையுங்கள்'
பாதுகாப்பு கொடுப்போம்
எம். ஜி. ஆர். அறிக்கை (19-1-82)

முழு அடைப்பில் வன்முறை
சென்னை அருகே பஸ்மீது
தீப்பந்தம் வீச்சு!

கூட்டத்தை கலைக்க துப்பாக்கி சூடு! (20-1-82)

இவ்வாறு ஒரே நிகழ்ச்சித் தொடர்பற்றிய செய்தியைத் தொடர்ச்சியாக வெளியிட்டு வரும் இவ் இதழ்கள் திடீரென அடுத்த நாள் புதிய செய்திகளுக்கு முதன்மையளித்துத் தலைப்பில் வெளியிடுவதும் கவனிக்கத் தக்கது. மாலைப் பதிப்பில் ஓரளவு தொடர் செய்தியாக இடம் பெற, காலைப் பதிப்பில் புதிய புதிய செய்திகள் மாறி மாறி அமைகின்றன.

**மாலைமுரசு—தலைப்புச்செய்திகள்**

திருச்செந்தூர் கோவில் அதிகாரி மரணம்
போராட்டத்தில் நானே குதிப்பேன்!
கருணாநிதி எச்சரிக்கை!! (21-1-82)
தமிழ்நாடு முழுவதும் இன்று போராட்டம்!
தி. மு. க. வினர் உண்ணாவிரதம்!
பரங்கிமலையில் நல்லதம்பி!! (22-1-82)
மக்களை திசை திருப்ப போராட்டம்,
'கருணாநிதி மீது எம். ஜி. ஆர். பாய்ச்சல்!
'போராட்டம் நடத்துவதை தவிர வேறு
வேலை கிடையாதா?' (23-1-82)

**தினத்தந்தி—தலைப்புச்செய்தி**

தூக்கு தண்டனைக்கு தடைநீக்கம்
பில்லாவின் கூட்டாளி ரங்காவை
தூக்கில் போட உத்தரவு
சுப்ரீம் கோர்ட்டுக்கு தீர்ப்பு (21-1-82)
பஞ்சாப்-முதல்-மந்திரி தர்பாரா சிங்கை
கொலை செய்ய முயற்சி
கத்தியுடன் பாய்ந்து தாக்கியவன் கைது (22-1-82)

என இவ்வாறு அமைகின்றன.

**செய்திகள் அமையும் விதம்**

தி மணி போன்ற மிதவாத இதழ்களில் மிகவும் முக்கியமான தலைப்புகளே செய்திகளின் மீது அளிக்கப்படுகின்றன செய்திகளின் தன்மைக்கேற்ப அவற்றின் தலைப்பை அமைக்கும் பாங்கு இத்தகைய இதழ்களில் தொடர்ந்து அமைவது குறிப்பிடத்தக்கது.

தினமலர், தினத்தந்தி, மாலை முரசு, தீக்கதிர் போன்றவற்றில் தலைமைச் செய்திகள் அவ்வளவு தெளிவாக அமைந்திருக்கவில்லை. முக்கியமில்லாத தலைப்புகள் பல செய்தியின் முதல் வரியில் அமைவது கவனிக்கத்தக்கது படிப்போரிடையே இதனால் பரபரப்பு ஏற்படுமே தவிர செய்தித் தெளிவு கிட்டுவது கடினமே.

பொதுவாக நோக்குமிடத்து, கொலை, கொள்ளை, சாவு, விபத்து போன்ற விறுவிறுப்பான செய்திகளை வெளியிடும் முறை எல்லா இதழ்களிலும் ஒன்று போலவே அமைகின்றது.

### வியப்புக் குறிகள்

பரபரப்பூட்டும் தன்மையை வெளிக்காட்ட ஒவ்வொரு செய்தித் தலைப்புடனும் வியப்புக் குறியினை அமைப்பது தினத்தந்தி, மாலை முரசு மற்றும் சில அரசியல் இதழ்களின் வழக்கமாகிறது. ஒரே செய்திக்கு அடுத்தடுத்து, ஒன்றுக்கு மேற்பட்ட வியப்புக் குறிகளும் அமைவதுண்டு.

(எ-டு) 1. கோவில் திருவிழாவில்
பெண்கள் நிர்வாண நடனம்!
நடனத்தை பார்க்க ஆண்களுக்கு தடை!
(தினத்தந்தி.31-1-82 ப. 18)

2. வடநாட்டில்
தமிழ்ப்பெண் தற்கொலை! ( ,, 10-1-82 ப. 6)

3. இந்திய வாலிபரின்
தலை துண்டிப்பு!
அரபு நாட்டில் ( ,, 10-1-82 ப. 6)

இவற்றுள் சில வியப்புக் குறிகள் தேவைதானா என எண்ண வேண்டியுள்ளது ஆயினும் செய்திகளைப் பரபரப்பூட்டுமாறு அமைக்க இம்முறையைத் தினத்தந்தி போன்ற இதழ்கள் அதிகமாகவே பயன்படுத்துகின்றன. தினமணி, தினமலர் போன்ற இதழ்களில் இத்தகைய வியப்புக் குறிகளைக் காண இயலவில்லை.

### வினாக் குறிகள்

படிப்போரைக் கவரவும், எழுச்சியூட்டவும் செய்திகளிடையே வினாக்குறி அமைப்பது வழக்கம். ஆயினும இது போன்று அமையும் வினாத் தொடர்களுக்கு எல்லா இதழ்களுமே வினாக்குறி இடுவதில்லை தினமணி போன்ற இதழ்களில் இத்தகைய செய்திகள் பின்வருமாறு அமைகின்றன.

'விரைவில் சீனா, பாகிஸ்தானுக்கு
புது இந்திய தூதர்கள்?'

'புதுக்கோட்டையில் விவசாயக்கல்லூரி
ஏற்படும்?' (தினமணி. 10-1-82 ப. 1, 2)

'மாலுமிகள் ஸ்டிரைக் விளைவு
சிங்கப்பூர் கப்பல் 8-ந்தேதி புறப்படுமா?' (தினமணி. 6-1-82

1982-ம் ஆண்டில் உணவுப் பண்டங்களின்
விலை கூடும்? (தினமணி. 8-1-82 ப. 5)

இத்தகைய வினாக்குறி அமைப்பால் படிப்போருக்கும் செய்தியளிப்போருக்கும் ஒரு நெருக்கம் ஏற்பட்டு அதன் வழி செய்திகளை ஆய்ந்தறியும் ஆர்வமும் பெருகும் எனலாம்.

**தலையங்கம்**

நான்கு, ஆறு, எட்டு, பன்னிரண்டு என பல பக்கங்களில் வெளியாகும் செய்திகளில் ஏதேனும் ஒன்று மிக முக்கியமான தாகக் கருதப்பட்டு, அச்செய்தியைப் பற்றி இதழ் ஆசிரியராலோ அல்லது துணை ஆசிரியர் குழுவாலோ கருத்துக் கோவையாக எழுதப்படுவது தலையங்கம். தலையங்கம் எழுதுவோரின் தனித் திறமையால் அவரது கருத்து ஒருசில நாட்களிலேயே நடை முறைக்கு ஏற்றதாக அமைந்து பலரின் பாராட்டுக்கும் இடமாவ துண்டு.

சமூக நலனைக் கருதி, பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து, பொதுவான கண்ணோட்டத்துடன் படிப்போரின் மனக்கதவு களைத் திறந்து வைக்கும் அளவில் சில தலையங்கங்கள் அமைவ தால் சில நாட்களில் சில செய்திகள்பற்றி இன்ன இதழ் எவ்வாறு தலையங்கம் எழுதப்போகிறது? என எதிர்பார்க்கும் வாசகரும் உளர்.

பொதுவாக, அரசியல் இதழ்களில் இடம்பெறும் தலையங் கங்கள் கட்சிச் சார்புடையதாக, கேள்வி பதில் அமைப்பில் வெளி வருவது குறிப்பிடத்தக்கது. முக்கிய பிரச்சினை பற்றி இவை அதிகமாக அக்கறைகாட்டுவதில்லை. ஆயின், தினமணி போன்ற இதழ்களில் வெளியாகும் தலையங்கங்கள் கருத்தாழமும் சமுதாயப் பயனும் மிக்கன.

தினமணியில் தலையங்கம் இரண்டாம் பக்கத்தில் இடம் பெறுகின்றது. இதில் பல வெளிநாட்டு, உள்நாட்டுச் செய்திகள், சமூக, அரசியல், பொருளாதார, அறிவியல் செய்திகள், ஆளுங்

கட்சி, எதிர்கட்சி பற்றியசெய்திகள், சட்டம், உணவு, மின்சாரம், விவசாயம், திட்டம், கல்வி, கலை போன்ற பல்வேறு துறை பற்றிய செய்திகள் மிகவும் கவனத்துடன் நாள்தோறும் ஆராயப்படுகின்றன. எல்லாத் தலையங்கங்களும் ஒரே மாதிரியோ அல்லது விருப்பு வெறுப்பு இல்லாமலோ அமைவ தில்லை. சிலவற்றில் சில விதிவிலக்குகளும் உண்டு. ஒரே நாளில் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் பற்றியும் தலையங்கத்தில் ஆராயப்படுகின்றன.

### பொன்மொழிகள்

நாட்டின் அரசியல் மதத்தலைவர்கள் சிலர் சிறந்த சிந்தனை யாளராக இருந்து காலந்தோறும் தம் எண்ணங்களால் பலருக்கும் வழிகாட்டி வந்துள்ளனர். அவர்கள் அவ்வப்போது மொழிந்த எண்ணங்கள் பொன்மொழிகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்றும் வழங்கப்படுகின்றன. இவற்றில் சிலவற்றையாவது நாள் தோறும் நாளிதழ் வாசகர் பின்பற்ற வேண்டும் என்னும் எண்ணத்துடனும், இதழின் பொது நோக்கைப் பறைசாற்றும் முகமாகவும் இத்தகைய பொன்மொழிகளைச் சில இதழ்கள் தொடர்ந்து வெளியிடுகின்றன.

இத்தகைய பொன்மொழிகள் காலத்திற்கேற்பவும், சில நாட்டு நடைமுறைக்கேற்பவும் அவ்வப்போது அமைவதுண்டு. சுதேசமித்திரன், விடுதலை, அண்ணா, பாரதம் போன்ற இதழ்கள் இத்தகைய பொன்மொழிகளை வெளியிட்டு வருகின்றன.

### ஞாயிறு மலர்

நாளிதழ்கள் வாரந்தோறும் ஒரு மலர் வெளியிடுவது ஒரு சிறப்பு. இது எல்லா இதழுக்கும் பொருந்தி வருவதில்லை. தினமணி, தினமலர், தினத்தந்தி, மாலை முரசு போன்ற இதழ்களே மலர்களை வெளியிடுகின்றன. இவற்றுள் தினமணி வெளியிடும் ஞாயிறு மலர் பல்துறைகளைச் சார்ந்து இலக்கியச் சுவை மிகவும் அளிப்பது. மற்ற மலர்களில் பெரும்பாலும் பொழுது போக்குப் பகுதிகளே மிகுதி.

### படங்கள்

இதழிலும் மலர்களிலும் பலவிதமான படங்கள் இடம் பெறுவது குறிப்பிடத் தக்கது. சினிமா கவர்ச்சிப் படங்கள், தலைவர், விளையாட்டு, அபூர்வ கண்டுபிடிப்பு, கோயில், விழாக்கள் போன்றவை பற்றிய படங்கள் என இதழுக்கு ஏற்றவாறு படங்கள் அமைகின்றன.

கருத்துப்படம், சிரிப்பு, படக்கதை போன்றவற்றிற்கான 'வரிக்கோட்டுப் படங்கள்' இதழுக்கு இதழ் சில வேறுபாடுகளுடன் அமைகின்றன.

### திரையுலகச் செய்திகள்

படிப்பறிவு குறைந்த பாட்டாளிகள் முதல் படித்துப் பட்டம் பெற்ற மாணவர் சமுதாயம் வரை எல்லா மக்களையும் ஒருங்கே கவர்ந்துவிட்ட ஒருதுறை இன்றைய திரைப்படத் துறை. மக்களில் குறிப்பாக, மகளிரின் மனப்போக்கையே மாற்றியமைக்கும் வகையில் பல படங்கள் அமைகின்றன. வெளிப்பகட்டு, வேடம் என்பதையெல்லாம் மறந்து, நடிகர் நடிகைகளே தெய்வம் என்ற நிலையும் உள்ளது. திரைப்படம் பார்ப்பதிலும், திரையுலகச் செய்திகளை அறிந்து கொள்வதிலும் உள்ள இன்றைய நடுத்தர மக்களின் ஆர்வம் கட்டுக்கடங்காததாகவே உள்ளது. ஆயினும், மாத இதழ், மாதமிருமுறை எனப் பல திரை இதழ்கள் வெளிவரினும், இத்துறைக்கென வெளிவரும் நாளிதழ்கள் மிகக் குறைவு.

இன்று வெளியாகும் பெரும்பாலான நாளிதழ்களில் நாள் தோறும் சினிமாச் செய்திகள் இடம் பெறுவதுடன், ஒவ்வொரு வாரமும் ஒரு குறிப்பிட்ட நாளில் திரையுலகச் செய்திகள் சுவையுடனும், கவர்ச்சிமிகு படங்களுடனும் வெளியிடப் படுகின்றன. இது இதழுக்கு இதழ் மாற்றம் பெறுகிறது. பெரும்பாலான காலைப் பதிப்புகளில் வெள்ளி அல்லது ஞாயிற்றுக் கிழமைகளிலும், சில மாலைப் பதிப்புகளில் வியாழன் அல்லது சனிக்கிழமைகளிலும் இத்தகைய திரைப்படச் செய்திகள் வெளியிடப் படுகின்றன. எடுத்துக்காட்டாக,

| | | | | |
|---|---|---|---|---|
| தினகரன் | — | வெள்ளி | — | திரையரங்கம் |
| சுதேசமித்திரன் | — | ,, | — | சினிமாப்பகுதி |
| தினமலர் | — | ,, | — | திரைவானில் |
| நவ இந்தியா | — | ,, | — | திரைமலர் |
| தினமணி | — | ,, | — | திரை உலகம் |
| மாலை முரசு | — | வியாழன் | — | சினிமா வார இதழ் |
| மக்கள் குரல் | — | ,, | — | சினிமா மலர் |
| எதிரொலி | — | ஞாயிறு | — | சினிமா/எதிரொலி |
| பாரதம் | — | ,, | — | சினி விருந்து |
| தினச்சுடர் | — | ,, | — | சினிமா செய்தி |
| குமரி முரசு | — | சனி | — | திரைவானில் |

என இவ்வாறு அமைகின்றன.

**பரிசுச் சீட்டு**

நாட்டிலுள்ள மாநில அரசுகளுக்கு உடனடி வருவாயாக அமைவன பரிசுச் சீட்டுகள். தனி மனிதனின் வருவாயைச் சுருக்க வைப்பதும் அவனது கற்பனைகளை வளர வைப்பதும் இப் பரிசுச் சீட்டுகளே. கறுப்புப் பணத்தை வெள்ளையாக மாற்றவும் இதில் வழியுண்டு. எவ்வளவு தான் உழைத்தாலும் நாகரிக வளர்ச்சிக்கேற்ற வகையில் உடனே உயர்வது என்பது ஊதியத்தால் முடியாது என்ற கருத்து ஒருபுறமிருக்க, ‘உழைக்கவே வேண்டியதில்லை ஒரு ரூபாய் கொடுத்தால் பல லட்சங்களை உடனே பெறலாம்’ என்னும் விளம்பர வாசகங் களை மறுபுறம் அமைத்து உழைக்கும் மக்களையும் மாற்றி யமைக்கின்றன. இதற்கேற்ப, ஒவ்வொரு நாளும் யார் யாருக்கு? எவ்வளவு பணம் குலுக்கலில் கிடைத்தது? என்பன போன்ற செய்திகள் வெளி வருவதால் மக்களிடையே பரிசுச் சீட்டு மோகம் மிகவும் அதிகமாக உள்ளது.

இப் பரிசுச் சீட்டுகளால் பெறப்படும் வருவாய் அந்தந்த மாநில வளர்ச்சிக்காகவே பயன்படுத்தப் படுகின்றன, என்றாலும் ஏழை மக்கள் இதில் பணத்தை இழப்பது மிகவும் வேதனைக்குரியதே.

முந்தைய ஆண்டுகளைக் காட்டிலும் 1982-இல் இப் பரிசுச் சீட்டுகளின் விளம்பரங்கள் நாளிதழ்களில் மிகையாகவே அமை கின்றன. மேலும், நாள்தோறும் பல மாநிலப் பரிசுச் சீட்டுக் குலுக்கல்கள் நிகழ்வதால் அவற்றின் முடிவுகளை அறிவிக்கும் முக்கிய கருவிகளாக நாளிதழ்களே முன் நிற்கின்றன. மக்களின் ஆர்வத்தைக் கருத்தில் கொண்டு, பெரும்பான்மையான இதழ் கள் இம்முடிவுகளை உடனுக்குடன் அளிப்பதில் ஆர்வம் காட்டு கின்றன. தினகரன், மக்கள் குரல், நவ இந்தியா, தினத்தந்தி, தினமணி போன்ற இதழ்களில் குறிப்பிடத்தக்க அளவில் இப் பகுதி அமைகிறது. கட்சிச் சார்பான இதழ்களில் இப்பகுதி அரிதாகவே காணப்படுகிறது.

**மதிப்புரை**

நாளிதழில் புத்தக மதிப்புரை இடம் பெற வேண்டிய தேவையில்லை என்ற கருத்துடன் பல இதழ்கள் மதிப்புரை அளிப்பதில்லை. ‘மதிப்புரை என்பதில் புத்தகம் வெளியிட்ட வரைத் தவிர வேறு யாருக்கும் ஆர்வம் இல்லை ஆதலால் மதிப்புரையே வெளியிட வேண்டாம்’ என எண்ணியிருந்த தினத்தந்தி போன்ற இதழ்களும் இப்பொழுது மதிப்புரைப்

பகுதியை அமைக்கின்றன. தமிழில் நூல்களின் பெருக்கமும், வெளியீட்டாளரின் அன்புத் தூண்டுதலாலும் இப்பகுதி நாளித ழில் தற்போது அதிகமாயுள்ளன எனலாம்.

1982-இல் தினத்தந்தி, மாலை முரசு, தினமணி போன்ற இதழ்களில் வாரந்தோறும் புத்தக மதிப்புரை இடம் பெறு கின்றது. இதழின் இட அமைப்பிற்கேற்ப நூல்களின் எண்ணிக்கையும் அமைகின்றன. நாளிதழ்களில் தினமணியில் வெளியாகும் மதிப்புரைப் பகுதி பலராலும் விரும்பிப் படிக்கப் படுகிறது. வாரந்தோறும் ஞாயிறு சுடரில் இப்பகுதி அமை கிறது. (1983-இல் திங்கட்கிழமை இதழின் இரண்டாம் பக்கத்தில் அமைகிறது). இப் பகுதியில் பல்வேறு தலைப்பிலான நூல்கள், முழு விபரங்களுடன், தக்க திறனாய்வாளரால் மதிப்புரை செய்யப்பட்டு வெளியிடப்படுகின்றன. இம் மதிப்புரையைப் பார்த்தவுடன் அந் நூலினைத் தேடி வாங்கும் வாசகரும் உளர்.

தமிழில் நூல் வெளியீடு என்பது மிகக் குறைவு. எல்லா நூல்களுக்கும் விளம்பரமும் விற்பனையும் சரிவர அமைவ தில்லை. இன்ன நூல் வெளி வந்திருக்கிறது என்ற செய்தியை மக்கள் உடனே அறியக்கூடிய வாய்ப்புகளும் மிகக் குறைவு. எனவே, நாளிதழ்கள் மதிப்புரைக்கென ஒரு பகுதியை தவறாமல் அமைப்பின், தமிழ் நூல் வளர்ச்சிக்குப் பெரிதும் பயனாகும் எனலாம்.

### பெரிய இதழ்கள் இரண்டு

தமிழகத்தில் பெரும்பான்மை மக்களால் விரும்பிப் படிக்கப் படும் பெரிய நாளிதழ்கள் தினமணி மற்றும் தினத்தந்தி ஆகிய இரு இதழ்களாகும். தினமணி இதழ் நடுத்தர வகுப்பு மற்றும் ஓரளவு படித்த மக்களிடையேயும் செல்வாக்குப் பெற்று மிகவும் தரமான நாளிதழ் என்னும் பெயருடன் எப்போதும் ஒரே தன்மையுடன் செய்திகளை வழங்கி வருகின்றது. மற்றொரு இதழான தினத்தந்தி எல்லா மக்களையும் கவரக்கூடிய அளவில், பல பொழுதுபோக்கு அம்சங்களைக் கொண்டு, அன்றாடச் செய்திகளை மிகவும் பரபரப்புடனும் கவர்ச்சியுடனும் வெளி யிடும் முதன்மை இதழாக விளங்குகிறது. 1982-இல் இவ்விரு இதழ்களின் அக, புற அமைப்பு மற்றும் இவை மொழி வளர்ச் சிக்கு ஆற்றிவரும் பணியை ஆராயும் நோக்கில் பின்வரும் செய்திகளை அறியலாம்.

### தினத்தந்தி

மிகுதியான பக்கங்களுடன் குறைந்த விலைக்கு அன்றாடம் கிடைக்கக்கூடிய ஒரே இதழ் தினத்தந்தி என்பதால் பொது

மக்களில் பலர் இதை விரும்புகின்றனர். மேலும், தமிழகத்தின் எட்டு பெரிய நகரங்களிலிருந்து ஒரே நேரத்தில் அச்சாகி வெளி வரும் ஒரே தமிழ் நாளிதழும் இதுவே. இதனால் தமிழ் மக்களி டையே இவ் இதழ் மிகவும் நெருக்கமுடையதாகிறது.

முதல் பக்கம்: தமிழ், முஸ்லிம், ஆங்கிலம் போன்ற வெவ் வேறு முறைப்படி நாள், கிழமை, மாதம், ஆண்டு இவற்றை நாள்தோறும் குறிப்பிடுகின்றது. முதல் பக்கத் தலைப்புச் செய்தி கள் மிகப்பெரிய எழுத்துகளில் அச்சாகின்றன. நாள்தோறும் கருத்துப் படம் வெளியாவது குறிப்பிடத்தக்கது.

குறிப்பிட்ட ஒவ்வொரு நாளும் அது என்ன நாள்? என்ன சிறப்பு? என்பதை மக்களுக்கு உணர்த்தும் வகையில் தலைப்பினை அமைப்பது தினத்தந்திக்கே உரிய பண்பாகும்.

1982-ஆம் ஆண்டு இன்று பிறக்கிறது

தலைவர்களின் புத்தாண்டுச் செய்தி (*1-1-82 ப. 1*) என இவ் வாண்டின் முதல் நாளன்று தலைப்புச் செய்தியினை வெளியிட்டு பக்கத்திலேயே 'இன்று புத்தாண்டு (*1982*) பிறக்கிறது' என்று குறிப்பிட்டு, 'டாட்டா' என்னும் தலைப்பில் கருத்துப் படம் (1981-ஆம் ஆண்டுக்கு 'டாட்டா' காட்டுவது போல) அமைத் திருப்பது எளிமையையும் கருத்துப் புலப்பாட்டையும் தெளி வாக்குகிறது எனலாம்.

இதே போன்று, ஒவ்வொரு சிறப்பான நாளையும் முதல் பக்கத்திலேயே குறிக்கக் காணலாம்.

'இன்று பொங்கல் திருநாள்
தலைவர்கள் வாழ்த்து' (*14-1-82 ப.1*)

'இன்று சுதந்திர தின விழா
சென்னை கோட்டையில் எம். ஜி. ஆர்.
கொடி ஏற்றுகிறார்!'
கோவில்களில் பொது விருந்து! (*15-8-82 ப. 1*)

'இன்று தீபாவளி
தலைவர்கள் வாழ்த்து!' (*14-11-82 ப. 1*)

என இவ்வாறு குறிப்பிடுவதுடன், ஆண்டு முடிவில்,

பரபரப்பான 1982
ஆண்டு முடிகிறது
தினத்தந்தி கொடுத்த செய்திகள்!

1982-ஆம் ஆண்டு முக்கிய நிகழ்ச்சிகள் (30-12-82 ப. 1) என் இவ்வாண்டின் முடிவினையும் அறிவித்து, மக்களின் நினைவாற்றலைத் தூண்டும் வண்ணம் செய்திகளைத் தொகுத்தளித்திருக்கும் திறன் தனிச்சிறப்புடையது.

**சிரிப்பு:** சிறுவர் முதல் பெரியவர்வரை பலரும் விரும்பிப் படிக்கும் ஒரு பகுதி 'சிரிப்புப் பகுதி'யாகும். இதில் படத்துடன் இரண்டு சிரிப்புத் துணுக்குகள் தினமும் வெளியிடப்படுகின்றன். அவற்றுள் ஒன்றை எழுதிய நபருக்குப் பரிசும் வழங்கப்படுகிறது. இவ்வாறு சிரிப்பு எழுதும் வாசகர்களுக்கு 1982-இல் ஒரு மகிழ்ச்சியான செய்தி—ஒவ்வொரு நாளும் பிரசுரமாகும் ஒவ்வொரு சிரிப்புப் படத்துக்கும் ரூ. 10 அன்பளிப்பாக வழங்கப்படும் என்பதாகும். இச்சிரிப்புகளுள் பல சிந்திக்கும்படியாகவும் அமைகின்றன.

**சாணக்கியன் சொல்:** நாள்தோறும் படத்துடன் வெளியாகும் மற்றொரு துணுக்கு 'சாணக்கியன் சொல்' என்னும் தலைப்புடன் வருவது. இதில் ஒரே தனி மனிதர் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு முதுமொழியை அறிவிப்பதாக அமைக்கப்படுகிறது. இதில்,

'எல்லோருக்கும் நல்லவனாக நடக்க முடியும்
என்பது முட்டாள்களின் நம்பிக்கை, (3-1-82, ப. 3)

'ஒருவன் புத்திசாலியா முட்டாளா, என்று
கண்டுபிடிக்க அவனை 5 நிமிடம் பேச விடு' (1-1-82. ப. 3)

என்பன போன்ற தொடர்கள் சிந்தனைக்குரியன.

**சோதிடம்:** மக்களில் பலர், 'இன்று நாள் எப்படி?', எனத் தெரிந்து கொள்வதில் ஆர்வங் கொண்டுள்ளனர். இதைக் கருத்தில் கொண்டு இதே தலைப்பில் 'தந்தி ஜோசியர்' அன்றைய நாள், திதி, நட்சத்திரம், யோகம், காலம், நல்லகாலம் அதிர்ஷ்ட எண்கள், பொதுப்பலன் என அமைக்கின்றார்.

இவ்வாறே லாட்டரி முடிவுகள், சினிமா, கிண்டிநேரம், டெலிவிஷன், ரேடியோ செய்திகள், வியாபாரிகளுக்கான 'நியூயார்க்' பருத்தி விலைபோன்றன நாள்தோறும் குறிப்பிடத்தக்கன.

**அன்றாடச் செய்திகள்:** பலதரப்பட்ட மக்களைக் கவரும் நோக்கில் செய்திகள் வெளியிடப்படுகின்றன. மக்களின் பொது வாழ்க்கை, தனி வாழ்க்கை, விபத்து, குற்றம், கொள்ளை,

நாட்டுச் செய்தி, தேர்தல், விழா, விளையாட்டு, கல்வி, பயணம் மொழி எனப் பல்வேறு வகைகளில் செய்திகள் அமைகின்றன. இவற்றுள் பல கவர்ச்சியாக அமைவதும் இவண் கருதத்தக்கது.

**பொது வாழ்க்கை:** பொதுமக்கள் அன்றாடம் அனுபவித்து வரும் இன்பதுன்பங்களில் பங்குகொள்வது போலவும் அவர்களின் உணர்வுகளைப் பிரதிபலிப்பது போலவும் சில செய்திகளை அவ்வப்போது அளிப்பது கவனிக்கத்தக்கது. அதிலும், கொடுக்கப் படும் சிறு தலைப்புகளே செய்தி முழுமையையும் விவரிப்பதாக அமைப்பது சிறப்பாகும்.

*தமிழ்நாட்டில் தீப்பொறி பறக்கும் வெயில்*
*அனல்காற்று!*
*சென்னை 106 டிகிரி, வேலூர் 108 டிகிரி* (5-4-82. ப.1)

இவ்வாறே பொதுவாழ்க்கையில் நுகர்வோருக்கான செய்தி களை அளிக்கும் முறையும் குறிப்பிடத்தக்கன.

*'புத்தக வடிவில் புதிய ரேஷன் கார்டு*
*2 மாதத்தில் வழங்கப்படும்'* (12-2-82. ப.13)

*'3 'பாண்டு' ரேடியோக்களுக்கு*
*லைசென்சு ரத்து!*
*மத்திய அரசு முடிவு!'* (12-2-82. ப. 1)

*'மத்திய அரசு 'பட்ஜெட்'*
*தபால் கட்டணம் உயர்வு*
*கவர் விலை 50 காசு*
*இன்லண்டு 35 காசு*
*மத்திய அரசு வரவு-செலவு திட்ட கண்ணோட்டம்*

(1982-83)

மொத்த வருமானம் — ரூ. 27,134 கோடி
மொத்த செலவு — ரூ. 29,219 கோடி
பற்றாக்குறை — ரூ. 2,085 "

என இவ்வாறு பொருளாதாரம், வாழ்க்கை ஆகிய இணைந்த செய்திகளை வெளியிடும் பாங்கு அறியத்தக்கது.

**தனி வாழ்க்கை:** ஆண், பெண் சேர்ந்த தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல், குழப்பம், அதனாலுண்டாகும் தவிர்க்க இயலாத நிகழ்ச்சிகளை மிகவும் விறுவிறுப்புடனும் வெளியிடுவதில் தினத்தந்தி இதழ் தனி அக்கறை காட்டுகிறது.

'கள்ளக் காதலால் பெண் கொலை
துண்டித்த தலையுடன் கணவன் ஊர்வலம்!
போலீசில் சரண் அடைந்தார்! (12-6-82. ப. 3)

'சக்களத்தி சண்டையில் ஆத்திரம்
4 குழந்தைகளுடன் பெண் தீக்குளிப்பு!
5 பேரும் கருகி செத்தார்கள்' 12-1-82. ப. 12)

'கள்ளக் காதலில் பிறந்த
ஆண் குழந்தை கொலை
'குட்டு' அம்பலம் ஆனதால்
காதலனும் தற்கொலை!' (31-1-82 ப. 15)

சமுதாயத்தில் அவ்வப்போது நிகழும் இத்தகைய நிகழ்ச்சிகளைக் கோடிட்டுக் காட்டுவதால் ஒரு குறிப்பிட்ட காலக் கட்டத்தின் சமூக நிலையை உணர்வதற்கும் வழி ஏற்படுகிறது.

விபத்து : பொது வாழ்விலும், தனி வாழ்விலும் பல விபத்துகள் நிகழுகின்றன. மின்சாரம், தீ, வெள்ளம், இயந்திரக் கோளாறு ஆகியவற்றால் ஏற்படும் விபத்து பற்றிய செய்திகளைத் தினத்தந்தி பெரிதாக வெளியிடுகிறது. இதில் சாவு பற்றிக் கூறுவதிலும் புகைப்படம் போன்ற மற்ற விபரங்களை அளிப்பதிலும் இந்த இதழ் குறிப்பிடத்தக்கது.

குற்றம்: சமூக ஏற்றத் தாழ்வுகள் காரணமாக, பணம் சேர்ப்பதற்காகப் பல குறுக்கு வழிகளைக் கையாளும் போக்கு இன்று பரவலாகக் காணப்படுகிறது. இதன் தாக்கமாகக் கொலை, கொள்ளை போன்ற குற்றங்களும் பெருகிவருகின்றன. இவற்றைக் கணக்கிட்டுக் காட்டும் வகையிலும், குற்றம் செய்வோரைச் சட்டம் உடனடியாகக் கவனிக்கிறது என்ற உணர்வை மக்களிடையே பரப்பும் நோக்கிலும் பல செய்திகள் வெளியிடப் படுகின்றன. அவற்றுள் சில,

'ரூ 5 லட்சம் சாராயம் பறிமுதல்' (1-1-82 ப. 2)
'ஆட்டோ' மீட்டர்களில்
தில்லு முல்லு!
'மெக்கானிக்' கைது (20-2-82 ப. 1)
'போலீசார் வேடத்தில்
கிராமங்களில் கொள்ளை!'
4 பேர் கைது! (2-1-82 ப. 7)

நாட்டுச் செய்திகள்: உள்நாட்டுச் செய்திகளில் பல மத்திய மாநில அரசுகளை ஒட்டியதாகவும் அமைகின்றன.

'டெல்லி மேல் சபைக்கு
72 உறுப்பினர்களை
தேர்ந்தெடுக்க தேர்தல்' (1-1-82 ப. 3)

'மத்திய மந்திரி சபையில் மாறுதல்
ஆர். வெங்கடராமன் ராணுவ மந்திரி!
பிரணாப் முகர்ஜி நிதிமந்திரி! (16-1-82 ப. 1)

என்னும் செய்திகள் மத்திய அரசு ஒட்டியதாகவும்,

'பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தல்
300க்கு மேற்பட்ட இடங்களில் தி. மு. க. போட்டி!
கருணாநிதி அறிவிப்பு'. (1-1-82. ப. 3)

'பஞ்சாயத்து தேர்தலுக்கு
அடியோடு தடை செய்ய வேண்டும்
ஐகோர்ட்டில் புதிய வழக்கு! (1-1-82. ப. 4).

என்னும் செய்திகள் மாநில அரசுகளை ஒட்டியதாகவும் அமைகின்றன.

**பயணம்:** நாட்டுத் தலைவர், அமைச்சர், முக்கியப் பிரமுகர் ஆகியோரின் வெளிநாட்டுப் பயணம் பற்றிய செய்திகளைத் தவறாமல் வெளியிடுவதிலும் தினத்தந்தி தனி அக்கறை காட்டுகிறது.

ஜனாதிபதி
சஞ்சீவ ரெட்டி இலங்கை போனார்
விமான நிலையத்தில் வரவேற்பு! (3-2-82 ப. 7)

அமைச்சர் திருநாவுக்கரசுக்கு
லண்டன் தமிழ்ச் சங்கம் வரவேற்பு! (19-6-8? ப. 10)

என நம்மவருக்கு அளிக்கப்படும் சிறப்புகளையும் வெளியிட்டு மகிழ்கிறது.

**விளையாட்டு, போட்டி, பந்தயம்:** பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் தொடர்பான செய்திகள் அவ்வப்போது வெளிவருகின்றன. சில வாசகரால் ஆர்வத்துடன் எதிர்பார்க்கப்படும் குதிரைப் பந்தய முடிவுகள் போன்றவையும் சிறப்பாக வெளியிடப் பெறுகின்றன. இவற்றுள் சில எல்லோருக்கும் பயனளிப்பன அல்ல எனினும், குறிப்பிட்ட தரப்பினரை நிறைவு செய்கின்றன என்பது தெளிவு.

**கல்வி:** மாணவரைத் தூண்டும் வகையில் பல கல்வித் தொடர்பான செய்திகள் அவ்வப்போது வெளிவருகின்றன. 10-ஆம் வகுப்பு மற்றும் +2 வகுப்பில் நடைபெறும் பொதுத் தேர்வில் தமிழகத்தில் ஆண்டுதோறும் முதலாவதாக வரும் மாணவருக்குப் பரிசு அளித்து, அது பற்றிய செய்தியை மிகவும்

விரிவாகப் புகைப்படத்துடன் வெளியிடுவதும் குறிப்பிடத் தக்கது. மேலும், மாணவருக்கான கல்வி வசதிகள், நூல்கள், நூல் நிலையம் தொடர்பான செய்திகள் போன்றவற்றை வெளி யிடுவது கவனிக்கத்தக்கது.

'சென்னையில்
கப்பலில் புத்தகக் கண்காட்சி
கவர்னர் சாதிக் அலி தொடங்கி வைத்தார்' (30-1-82. ப.3)

என்ற செய்தியில் கல்வி தொடர்பாக வெளிநாட்டுக் கப்பல் ஒன்று தமிழகம் வந்திருப்பதைக் குறித்திருப்பது அறியத்தக்கது.

மொழி: தமிழகத்திலும் வெளியிலும் தமிழ்மொழியின் நிலை எவ்வாறு உள்ளது என்பதைத் தமிழக அமைச்சரின் கூற்று களாகவே வெளியிட்டு இன்றைய தமிழின் நிலையைச் சுட்டிக் காட்டுவது நோக்கக்கற்குரியது.

'எஸ். டி. சோமசுந்தரம் அறிவிப்பு
ஊர்களுக்குத் தமிழ்ப் பெயர்
சிதம்பரம்—தில்லை
மாயவரம்—மயிலாடுதுறை' (19-2-82. ப.8)

'தமிழில் குறைந்த மார்க்கு
வாங்கும் மாணவர்கள்
அமைச்சர் அரங்கநாயகம் வருத்தம்' (30-3-82. ப.9)

'தமிழில் பாடம் படிக்க முடியாமல்
பம்பாய் தமிழர்களின் குழந்தைகள் அவதி
அமைச்சர் அரங்கநாயகம் தகவல்' (22-3-82. ப.4)

போன்ற செய்திகள், மொழியில் நடைபெற்றுவரும் மாற்றம், செய்யவேண்டியவை போன்றவற்றை உணர்த்தும் வகையில் அமைகின்றன.

இலக்கியம்: தனிநாளிதழ் இலக்கியமாக அமைய முடியாது எனினும் தன்னிடத்தே சிறுகதை, தொடர்கதை, கவிதை, கட்டுரை எனச் சாதாரண இலக்கிய வகைகளை அமைத்துக் கொள்வதால் அவை தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் துணை புரிகின்றன எனலாம். இவை யாவும் பொழுது போக்கு அம்சங் களே என்றாலும், ஒவ்வொரு ஆண்டிலும் இவை பற்றிய ஆய்வு தமிழிலக்கிய வளர்ச்சிக்கு மேலும் உரம் சேர்க்கும் எனலாம்.

சிறுகதை: நாகரிக உலகில் மனிதனின் இயந்திர வேகத்துக்கு ஈடுகொடுத்து, குறைந்த நேரத்தில் மன நிறைவைப்

பெறவைக்கும் தற்கால இலக்கிய வகைகளுள் ஒன்று சிறுகதை. தினத்தந்தி இதழில் ஞாயிறு மலரில் பெண்கள் பகுதியில் வெளி வரும் சிறுகதைகள் பலதரப்பட்டன. பல ஆசிரியரால் எழுதப் படுவன. ஒவ்வொன்றும் அரை அல்லது முக்கால் பக்க அளவில் அமைவன. ஒவ்வொரு சிறுகதைக்கும் ஓவியங்களும் இடம் பெறுகின்றன.

இப்பகுதி பெண்கள் பகுதியானதால் பெண்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளை மையமாகக் கொண்ட சிறு கதைகளே மிகுதியாக இடம்பெறுகின்றன. நித்யகன்னி, பெண்ணின் சுமை, கன்னி சோதனை, சந்தியா வேலைக்குப் போகிறாள், மெழுகுவர்த்தி போன்ற கதைகள் இவ்வகையின. பொதுவாக, வேலைக்குப் போகும் பெண்களின் பிரச்சினைகள், காதல் தோல்வி, மணவாழ்க்கையில் மனமாற்றம், ஆணின் ஆக்கிரமிப்பு, வரதட்சிணை கொடுமை என இவற்றையே சுற்றிச் சுற்றிக் கதைகள் பின்னப்பட்டுள்ளன.

இவ்வாண்டு வெளிவந்துள்ள ஐம்பதுக்கும் மேற்பட்ட சிறு கதைகளின் மொழி நடையை ஆராய, அன்றாட பேச்சு வழக்கு, கொச்சைச் சொற்கள், ஆங்கிலச் சொற்களின் கலப்பு, ஆங்கில உரையாடல்களை அப்படியே தமிழ் எழுத்துக்களில் அமைத்தல் எனப் பல நிலைகளும் அமையக் காணலாம்.

சமுதாயத்தில் அப்பாவிப் பெண்களின் அவல வாழ்க்கை ஒருபுறமும், அழகின் ஆணவத்தால் அழிவைத் தேடிக்கொள்ளும் ஆரணங்குகளின் வாழ்க்கை ஒருபுறமும் அமைவதைப் பல கதைகள் காட்டுகின்றன.

கிரிஜா. ஜே. நாயர், எழுதியுள்ள 'போய்வா காதலே!' (12-12-82) என்னும் தலைப்பிலான சிறுகதை இதில் முதல் வகையைச் சார்ந்ததாகும். பணக்கார வாலிபன் ஒருவனின் தகாத நடத்தையால் தன் வாழ்க்கையில் களங்கப்பட்ட ஒரு ஏழைப்பெண்ணின் கதை இது. அவன் உண்மையிலேயே தன்னை அன்புடன் காதலிக்கிறான் என நினைத்து ஏமாந்த அப்பெண், அதற்கு உடந்தையாக, குற்றத்தை மறைப்பவளாக அவ் வாலிபனின் தாயே அமைந்தபோது மனமுடைகிறாள். மரணத்தை ஏற்கின்றாள்.

'கடைசிவரை அவள் அவனை காட்டிக் கொடுக்கவே யில்லை' என்னும் இறுதி அடிகள் அனைவரையும் சிந்திக்க வைப்பன. பணத்தால் எதையும் செய்ய முடியும் என்னும் இச் சமுதாயத்தில் மானத்தைக் காக்க மரணமே அப்பெண்ணுக்குத்

துணை நிற்பதாகக் காட்டியிருப்பது சமுதாயக் கொடுமையைச் சுட்டுவதாக அமைகின்றது.

'அழகின் அணைப்பு' (20-6-82) என்னும் தலைப்பில் எஸ். ஏ. ராமன் எழுதியுள்ள சிறுகதை இரண்டாவது வகையைச் சார்ந்தது. தன் உடல் அழகில் மிகவும் பெருமை கொண்டவள் ரம்யா. எந்த ஆடவனையும் தன் கவர்ச்சிமிக்க உடலழகால் கவரும் தன்மை அவளுக்கு இருந்தது. ஆனால், சந்திரன் என்னும் வாலிபனை மட்டும் அவளால் கவர முடியவில்லை. இதனால் அவனைப் பழிவாங்கும் பொருட்டு, அவன் தனியே இருக்குமிடத்தில் அவனை அவள் அணைக்க, அங்கிருந்த மெழுகுவர்த்தி கீழே விழுந்து, தீ பரவி, அவனையும் சிதைத்து அவள் அழகும் சிதைக்கச் செய்தது. ஆம்! அவள் அழகின் ஆணவத்தால் ஓர் ஆடவனும் மாய்ந்தான்.

இது போன்ற பல கதைகள் பெண்களின் நாகரிக வெறியுணர்ச்சியை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

**தொடர் கதைகள்:** படக்கதைகள் மற்றும் சில தொடர் கதைகள் தினத்தந்தியில் தொடர்ச்சியாக இடம் பெறுகின்றன. படக்கதைகள் நாள்தோறும் தொடர்ந்தும், மற்ற தொடர்கதைகள் வாரம் இருமுறையும் (திங்கள், வியாழன்) வெளிவருகின்றன.

படக்கதைகளில்- 'கன்னித்தீவு' பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வருவது. 1982-இல் கதாநாயகி, புதையல், சி.ஐ.டி. சங்கர், மர்மக்குகை, பச்சை நோட்டு போன்ற தலைப்புகளில் வந்துள்ள படக்கதைகள், நாள்தோறும் மூன்று அல்லது நான்கு படங்களில் துப்பறியும் முறையில், திடுக்கிடும் வகையில் தொடர்ச்சியாக வெளிவருவன. குறிப்பாக, சிறுவர்களால் இவை விரும்பிப் படிக்கப்படுகின்றன. இவற்றின் படங்களும் கவர்ச்சியாக அமைகின்றன.

வாரமிருமுறை வெளியாகும் அகல்விளக்கு, இரண்டாவது இரவு ஒரு கவிதை அரங்கேறுகிறது, கண்ணம்மா, அணையா விளக்கு, நிழல் போன்ற தொடர் கதைகள் சாதாரண காதல் வாழ்க்கைப் பிரச்சினைகளை மையமாகக் கொண்டுள்ளன. இவற்றுள் பல தேவையற்ற உரையாடல்களைக் கொண்டு, கதையை நகர்த்திச் செல்கின்றன. சில கதைகளில் இளமைக் குறும்புகள், உணர்ச்சிகளைத் தூண்டியிழுக்கும் தொடர்கள் என அமைந்து படிப்பவரைச் சலிப்படையச் செய்கின்றன. மொத்தத்தில் இவை யாவும் பொழுதுபோக்குக்காகவே எழுதப்படுகின்றன எனலாம்.

**கட்டுரைகள், கவிதைகள்:** பொங்கல் மலர் (ஜன. 14), தமிழ்ப் புத்தாண்டு மலர் (ஏப். 14), சுதந்திர தினமலர் (ஆக. 15) தீபாவளி மலர் (நவ. 14) போன்ற மலர்களில் பல கட்டுரைகளும் கவிதைகளும் இடம் பெறுகின்றன.

கட்டுரைகளில் சினிமா தொடர்பானவையே மிகுதி. திரைப் படத்துறையிலுள்ளவரின் பெயரால் வெளியிடப் பெறும் கட்டுரைகள் பல ஒன்று போலவே உள்ளன. சில கற்பனை கலந்தும் உள்ளன. இதே மலர்களில் பயணம் மற்றும் தொழில் தொடர்பான கட்டுரைகள், தமிழக அமைச்சர் பெயரிலும் சில ஆசிரியர் பெயரிலும் வெளியிடப்பட்டுள்ளன. செ. 30-ஆம் தேதி தினத்தந்தி தொழில் மலரில் உள்ள தொழில் தொடர்பான கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

கட்டுரையாசிரியர் புகைப்படத்துடன் கட்டுரைச் சுருக்கத்தை நான்கு அல்லது ஐந்து வரிகளில் அமைத்துத் தருவது, படிப்போர் ஆர்வத்தைத் தூண்டுவதாக உள்ளது. இவற்றுடன் கேள்வி-பதில் என்னும் தலைப்பில் திரைப்படத் துறையினரைக் கொண்டு சுவைபட அமைப்பது தினத்தந்தியின் சிறப்பாகும்.

1982-ஆம் ஆண்டு வெளிவந்துள்ள கவிதைகள் மிகக் குறைவு. நான்கு மலர்களிலும் எட்டு கவிதைகளே இடம் பெற்றுள்ளன. வெவ்வேறு கவிஞரால் இயற்றப் பெற்றுள்ள இவை மரபுக் கவிதைகளைச் சார்ந்தே அமைந்துள்ளன.

நாளொன்றுக்கு 12 முதல் 36 பக்கங்கள் வரை வெளியிட்டு இவ்வாண்டு மொத்தம் 4,476 பக்கங்களைக் கொண்டுள்ள ஒரே இதழ் தினத்தந்தி. இதன் ஒன்பது பதிப்புகளிலும் சராசரியாக நாளொன்றுக்கு 2,78,194 பிரதிகள் அச்சாகியுள்ளன.* மக்களுக்கு செய்திகளை முந்தித் தருவதையே நோக்கமாகக் கொண்டுள்ள தினத்தந்தி தமிழ் நாளிதழ்களில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது.

**தினமணி**

சென்னை மற்றும் மதுரையிலிருந்து வெளிவரும் தினமணி இதழ், தமிழகத்திலும் வெளியிலும் மிகப் பரவலாக விற்பனையாகும் தமிழ் நாளிதழாக விளங்குகிறது.

---

* 1983-இல் இது நாளொன்றுக்கு 3,40,000 பிரதிகளாக உயர்ந்துள்ளது.

**உருவமைப்பு:** தினமணியின் வெளித் தோற்ற அமைப்பு, பக்க அமைப்பு, முதன்மைச் செய்திகளுக்கு அளிக்கப்படும் இடம், தலையங்கம், கட்டுரைகள் போன்ற பல்வேறு நிலைகளிலும் ஒரு முறையான உருவமைப்பைக் காட்டுகிறது. தலைப்பு, துணைத் தலைப்பு, செய்திக்கதை என இவற்றுக்கு அளிக்கப்படும் எழுத்துகளின் அளவு மாறாது எப்போதும் முறையாக அமைக்கும் திறன் இவ்விதழுக்கே உரியது.

**முதல் பக்கம்:** தமிழ் முஸ்லிம், ஆங்கிலம் போன்ற வெவ்வேறு முறைப்படி நாள், கிழமை, மாதம், ஆண்டு இவற்றை நாள் தோறும் முதல் பக்கத்தில் குறிப்பிடுகிறது.

முதல் பக்கத் தலைப்புச் செய்திகள் ஒரு வரித் தலைப்பாகவும், நேர் வரிசை அடுக்குத் தலைப்பாகவும் மிதவாதத் தலைப்பாகவும் அமைகின்றன. பொதுவாக, வெளிநாட்டு, உள்நாட்டுச் செய்திகள் ஆகியவற்றில் மிக முக்கியமானவற்றை முதல் பக்கம் அளிக்கிறது.

'புத்தாண்டு' போன்ற முக்கிய நாட்களில் தலைவர்களின் வாழ்த்துச் செய்திகள் முதல் பக்கத்தில் இடம் பெறுகின்றன. 'வேறு பக்கங்களில்', 'உள் பக்கங்களில்' என்னும் தலைப்பில் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு பக்கங்களில் இடம் பெறும் முக்கிய செய்திகளைக் குறிப்பிட்டு முதல் பக்கத்தில் அமைப்பது படிப்போரைத் தூண்டும் வகையிலுள்ளது எனலாம்.

**இரண்டாம் பக்கம் — தலையங்கம்:** தினமணி இதழின் இரண்டாம் பக்கம் இடம் பெறும் தலையங்கம், கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

தமிழ் நாளிதழ்களுள், தினமணியின் தலையங்கம் சிறப்பாகப் போற்றப்படுகிறது. உள்நாட்டு மற்றும் வெளி நாட்டுப் பிரச்சினைகள் பல, மிக்க கவனத்துடன் ஆராயப்பட்டு, சில வழிமுறைகளையும் தெரிவித்து, மக்கள் உள்ளங்களில் ஆழப்பதியுமாறும் தலையங்கம் அமைகின்றது. சில நாட்களில் ஆழ்ந்த கருத்துள்ள சொற்களும் தொடர்களும் அமையினும், அன்றாடச் செய்திகளைத் தொடர்ந்து படித்து வருவோருக்கு இவை மிக எளிதாகவே அமைகின்றன. இப்பகுதியில் ஆசிரியரின் விழிப்பு மிக்க போக்கை நன்கறியலாம். செய்திகளின் முக்கியத்துவம் கருதி மொழி பெயர்ப்பில் காட்டும் ஆர்வம் குறிப்பிடத்தக்கது. காட்டாக,

'நீதிபதிகள் நியமனமும் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பும்' (1-1-82) என்னும் தலைப்பிலான தலையங்கத்தில் 1500 பக்கங்கள்

கொண்ட தீர்ப்பின் வாசகங்களைச் சுருக்கமாகத் தந்து, தன்னுடைய கருத்தையும் சேர்த்துக் கூறுவது ஆசிரியரின் தனித் தன்மையைக் காட்டுகிறது. அத்துடன் ஆங்கிலத் தொடர்களுக்கான மொழி பெயர்ப்பையும், அதே தொடர்களையும் அப்படியே அளிப்பது இதன் சிறப்பாகும். இவ்வாறே எல்லாத் தலையங்கமும் அமைகின்றன.

**கட்டுரைகள்:** இப்பக்கத்தில் இடம் பெறும் கட்டுரைகள் பல் வகையின. வெளிநாட்டுச் செய்திகளுடன், சூழ்நிலை மற்றும் காலத்திற்கேற்ற உள்நாட்டுச் செய்திகளை மையமாகக் கொண்ட மொழி பெயர்ப்புக் கட்டுரைகள் குறிப்பிடத் தக்கன. இவை ஒவ்வொன்றின் முதல் அல்லது முடிவில் ஆசிரியர் தரும் குறிப்புகள் பயனுடையவை. இவை கட்டுரையின் கருத் தோட்டத்தை ஆற்றுப் படுத்துவன. ஆழச் சிந்திக்க வைப்பன.

'சிமெண்டுப் பற்றாக்குறை
இந்த ஆண்டிலும் தொடர்ந்து நீடிக்கும்' (1-1-82)
(புள்ளி விவரங்களுடன் செய்தி)

'விஞ்ஞானத்தில் லெனின் பரிசு பெற்ற
சாகரோவ் ரஷியாவில் மனித உரிமைக்கு
போராடுகிறார்' (லெவ் கோபலெவ்)

இக் கட்டுரையின் ஆங்கிலத் தலைப்பு:

'Sakharovi Portrait of Scientist as here'

கட்டுரைக்கு அப்பால்...என்ற தலைப்பில் இக்கட்டுரை பற்றிய விளக்கத்தை ஆசிரியர் 'ஏ. என். எஸ்' என்ற குறிப்பில் தருகிறார். மேலும், 'நவரைக்கு ஏற்ற நல்ல நெல்' (3-1-82) போன்ற விவசாயம் தொடர்பான கட்டுரைகளும் உள்ளன.

சில கட்டுரைகள் இரண்டு மூன்று நாட்களுக்குத் தொடர்வதும், அவை முடிந்தபின் அவற்றின் மீதான ஆசிரியர் குறிப்பை வெளியிடுவதும் குறிப்பிடத் தக்கது.

'வேறு மதத்தினர் 'யூதர்' ஆக முடியுமா?'
யூத மதத்தில் ஒரு 'புரட்சி.' கலப்பு
மணத்தில் பிறந்தவர் எந்த மதம்? (11-1-82)

என்னும் கட்டுரையில் 'ஏ.என்.எஸ் குறிப்பு' பின்வருமாறு அமைகிறது.

'மதங்கள் பற்றி நான் அதிகம் ஆராய்ந்தவனல்ல. ஆகையால் என் கருத்துக்கு அதிக முக்கியத்துவம் தரவேண்டாம். ஆனாலும்

இந்த கட்டுரைக்கு அறிமுகமாக ஹிந்து மதம் பற்றியும் சில விஷயங்கள் சொல்லுகிறேன் ... சென்ற சில நூற்றாண்டுகளாகத் தான் ஹிந்து மதம் ஸ்தம்பித்திருந்தது. இந்த நூற்றாண்டில் மதம் தன்னை மாற்றிக் கொண்டு வருகிறது எனலாம். 'யூத மதத்தில் மதமாற்றம் பற்றி ஒரு புது இயக்கம் தோன்றியிருப்பதை இன்றையக் கட்டுரை விவரிக்கிறது. இதில் ஹிந்துக்களுக்கும் ஏதேனும் படிப்பினை இருக்கலாம்'.

இக்குறிப்பு, நாட்டில் இவ்வாண்டு நிலவும் மதமாற்றம் பற்றி மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படச் செய்யும் வகையில் அமைகின்றது. இவ்வாறே 'வெளிநாட்டுச் செய்திகள்' என்னும் தலைப்பில் வந்துள்ள கட்டுரைகள் பல உலக நிகழ்ச்சிகளை மக்கள் ஓரளவாவது அறியும் வகையிலுள்ளன. '1981 பிற நாட்டு நிகழ்ச்சிகள்' (2-2-82. ப. 6) என்ற தலைப்பில் சுமார் முக்கால் பக்க அளவில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகள் முந்தைய ஆண்டு வெளிநாட்டில் நிகழ்ந்த முக்கியச் செய்திகளின் தொகுப்பாக அமைகின்றன.

**பெட்டிச் செய்திகள்:** குறிப்பிட்ட சில செய்திகளை மிகவும் ஆர்வத்துடன் படிக்கும்படி அமைக்க, அவற்றை நாற்கோடுகளுக்குள் அடக்கிப் பெட்டிச் செய்தியாக அளிப்பதில் தினமணி குறிப்பிடத் தக்கது. முதல் பக்கம் அல்லது உள்பக்கங்களில் இப் பெட்டிச் செய்திகள் அவ்வப்போது வெளியிடப் பெறுகின்றன. இவற்றுள் சிலவற்றை இவண் சுட்டலாம்.

### இந்த ஆண்டில் 7 கிரகணங்கள்

ஜெய்ப்பூர். ஜன-12. நடப்பு ஆண்டில் ஏழு கிரகணங்கள் ஏற்படும். இது விண்வெளியில் ஒரு அபூர்வ நிகழ்ச்சியாகும்.

இவற்றில் நான்கு சூரிய கிரகணங்கள் என்று ஸ்கந்த பிரபாகர் என்ற ஜோசியர் தெரிவித்தார்.

இந்த நூற்றாண்டில் இதற்கு முன்பு இரு தடவைகளில்தான் (1917, 1935இல்) இவ்வளவு கிரகணங்கள் ஏற்பட்டன. இரண்டு ஆண்டுகளிலும் அசாதாரண சம்பவங்கள் நிகழ்ந்தன.

மார்ச் 10ம்தேதி மற்றொரு அதிசய நிகழ்ச்சி ஏற்படும். அன்று சந்திரனுக்கு ஒரு பக்கத்தில் பூமி மட்டுமே இருக்கும். மற்ற கிரகங்கள் எல்லாம் மறு பக்கத்தில் இருக்கும்.

பூமி மீது கிரகங்களின் கூட்டான ஆகர்ஷண சக்தி பூமியின் அச்சை பாதித்து கடல் மட்டத்தை உயர்த்தும் என்று பிரபாகர் கூறினார்.

முன்பு ஒரு காலத்தில் இத்தகைய கிரக சேர்க்கை நிகழ்ந்த போது மகாபாரத யுத்தம் நடந்ததாக வினோத் சாஸ்திரி என்ற மற்றொரு ஜோசியர் கூறினார். (13-1-82 ப.1) என இவ்வாறு இப்பெட்டிச்செய்திகள் சில வியத்தகு செய்திகளை அளிக்கின்றன. இவ்வாறே,

> 'வயதோ 52; செய்த திருமணமோ 83!'
> (மத்திய அமெரிக்கா-பனாமாநகர்-பிளாரிடாவில் நடந்த ஒரு செய்தி) (1-1 82)
>
> 'பாம்புடன் மோதி பறவைகள் வெற்றி' (29-10-82. ப. 3)
> 'தபால் பெட்டியில் தங்கச் சங்கிலி!' (1-6-82. ப.1)
> 'உலகத்திலேயே பெரிய புத்தகம்' (7-3-82 ப.1)
> 'சினிமா மோகம் சீனப் பெண்களையும் விடவில்லை'
> 'தரையில் ஓடி சாக்கடை மீது பாய்ந்த ரயில்'
> (8-1-82. ப .1)
> 'சிகரெட், பீடி உபயோகிக்காத ஒரு கிராமம்' (தஞ்சை மாவட்டம் மதுக்கூர் வட்டாரத்திலுள்ள காசன் காடு என்னும் கிராமம் பற்றிய செய்தி) (1-1.82. ப.1)

போன்ற தலைப்பில் வந்துள்ள பெட்டிச்செய்திகள் குறிப்பிடத்தக்கன.

**பொதுவான செய்திகள் :-** பொது வாழ்க்கை தொடர்பான செய்திகளும், விளையாட்டு, அரசியல் தொடர்பான செய்திகளும். அதிக அளவில் அமைகின்றன. கொலை, கொள்ளை, வழக்கு, விபத்து, சாவு, பயணம், பதவி மாற்றம் போன்ற பல்வேறு செய்திகளும் அவற்றிற்குரிய இட அமைப்போடு தக்க முறையில் வெளியிடப்படுகின்றன.

புதிய கண்டுபிடிப்புகள், கல்வெட்டுச் செய்திகள் போன்றனவும் அடிக்கடி இடம் பெறுகின்றன. சமயம், இலக்கியம் தொடர்பாக நிகழும் போட்டிகள் பற்றியும் அவற்றின் முடிவுகளை அறிவிப்பதிலும் இவ்விதழ் முதலிடம் பெறுகிறது.

**கல்வி, கலை பற்றிய செய்திகள் :** +2 மாணவர்களுக்கு மாதிரி வினா விடைகளைத் தயாரித்து வெளியிடுவதில் இவ்விதழ் சிறப்பிடம் பெறுகிறது. மேலும், 'கல்வி அரங்கம்' போன்ற பகுதிகளில் 'தமிழ்ப் போதனை' 'சீர்திருத்த என்ன வழி?' (20-11-82. ப.2) என்பன போன்ற கடிதங்கள் ஆராயப்படுகின்றன,

'இசை அரங்கம்', 'இசை உலகம்', போன்ற தலைப்புகளில் கர்நாடக இசை பற்றிய செய்திகள் மிகுதியும் இடம் பெறுகின்றன. இன்றைய நிகழ்ச்சிகள் என்ற தலைப்பில் சென்னை நகரில் பல்வேறு இடங்களில் நடைபெறும் இசை, நாட்டியம், நாடகம், சொற்பொழிவு போன்றவை முகவரியுடன் குறிப்பிடப் படுகின்றன.

**சோதிடம் :** அன்றைய நாள் மற்றும் அடுத்த நாளுக்கான 'தினப்பலன்' தவறாது இடம் பெறுகிறது. இதில் பக்ஷம், திதி, நட்சத்திரம், யோகம், முக்கிய நாள், ராகுகாலம், எமகண்டம், சூலம், நல்ல காலங்கள், 12 ராசிக்கும் ராசி பலன்கள் என அமைக்கப்படுகிறது.

'சென்னை மார்க்கெட்' என்னும் பகுதி வணிகர்களுக்குப் பயனளிப்பது. ஆசிரியருக்குக் கடிதம்' என்ற தலைப்பில் நேயர்களின் கடிதங்கள் பல வெளியிடப்படுகின்றன. இவற்றுடன் ரேடியோ, தொலைக்காட்சி, லாட்டரி முடிவுகள் போன்றவையும் அன்றாடம் வெளியாகின்றன.

இலக்கியம்—சிறுகதை : தினமணி இதழ் வாரந்தோறும் வெளியிடும் 'சுடர்' பகுதியில் நல்ல, தரமான இலக்கியப் பகுதிகள் இடம் பெறுகின்றன. கதை, கட்டுரை, கவிதை, துணுக்குகள் என்ற வகையில் இவை அமைகின்றன.

வாரந்தோறும் தவறாமல் இடம் பெறும் சிறுகதைகள் பல தரப்பட்டன. பெண்களின் அவலநிலை, வரதட்சிணைக் கொடுமை, வேலைக்குப் போகும் பெண்களின் பிரச்சினை, மண வாழ்க்கையில் மனமுறிவு, முரண்பாடு போன்ற பல்வேறு வாழ்க்கைப் போராட்டங்களை உள்ளடக்கியே பல கதைகளும் அமைந்துள்ளன.

''சிறுகதைக்குப் படிப்பினை ஏதும் தேவை இல்லை என்பார்கள் இருப்பினும் வரதட்சணைக் கொடுமையால் விளையக் கூடிய தீமைக்கு இந்தக் கதை ஒரு எடுத்துக் காட்டு ஆகும்'' (ஒரு ரகசியம்—அரங்க. சீனிவாசன்) என ஆசிரியர் கதையின் இறுதியில் சுட்டிக் காட்டுவது போல பல கதைகளும் பல படிப்பினையை அளிக்கின்றன.

இவற்றுள் சில, மனிதனின் மனப்போராட்டங்களை விவரிப்பதுடன், ஆழ்ந்த சிந்தனைக் குரியதாகவும் அமைகின்றன. பகல் கனவுகள் (8-8-82), மனப் பரீட்சை (5-8-82), அடி மாடுகள் (29-8-82), தடுமாறும் நெஞ்சங்கள் (5-12-82), இதுவும் ஒரு

பைத்தியம் (26-12-82), பிம்பம் (5-9-82), மெழுகுவர்த்தி (6-6-82) போன்றன இவண் குறிப்பிடத் தக்கன. சாதிகள் இருக் குதடி பாப்பா (13-6 82) போன்ற கதைகள் சமுதாயக் கொடுமைகளைச் சாடுகின்றன.

சில கதைகள் பொழுது போக்குக்காகவே எழுதப்பட் டாலும், பலவற்றுள் அடிப்படை வாழ்க்கைத் தத்துவக் கூறுகள் இழையோடியிருக்கக் காணலாம். ரமணி ரங்கநாதன் எழுதியுள்ள 'நண்பன்' என்னும் கதை இதற்கு ஒரு எடுத்துக் காட்டாகும். கதை இதுதான்,

இளமையில் நண்பரான இருவர் சந்திக்கின்றனர். திறமை சாலி வறுமையிலும், திறமையற்றவன் செல்வச் செழிப்பிலும் காணப்படுகின்றனர். திறமைசாலியின் நண்பன் அவன் வறுமைக் கான காரணத்தை அறிய விழைகிறான். கதை, கவிதை, ஓவியம், இசை, கல்வி என அனைத்துத் திறன்கள் இருந்தும் அவன் மனைவியின் ஆர்வக் குறைவினால் அவனது திறமைகள் ஒடுக்கப் படுகின்றன. அதுவே அவனது வறுமையின் அடிப் படைக் காரணமாக அமைந்ததை எண்ணி நண்பன் ஆதங்கப் படுகிறான்.

இதில், ஒருவனின் அனைத்துத் திறனும் வெளிப்பட அருகி லிருப்பவரின் ஆர்வமே காரணமென்பது தெளிவாகப் பெறப் படுகிறது. இவ்வாறு பல கதைகள் மிகவும் தரமாக அமைந் துள்ளன. துப்பறியும் கதைகள் யாவும் சிந்தனைக்குரியனவாக அமைந்துள்ளன.

**கட்டுரைகள் :** மகாகவி பாரதியாரின் நூற்றாண்டு ஆன தால் இவ்வாண்டில் பாரதி பற்றிய கட்டுரைகள் மிகுதியாக வெளிவந்துள்ளன. மூதறிஞர் பெ. நா. அப்புஸ்வாமி அவர்கள் 'பாரதியை ஒட்டிய நினைவுகள்' என்ற தலைப்பில் பல வர லாற்று நிகழ்ச்சிகளை எடுத்துரைத்துள்ளார். இவ்வாறே மற் றொரு நூற்றாண்டு நாயகரான திரு. வி. க. பற்றிய கட்டுரை களும் குறிப்பிடத்தக்கன.

தினமணியில் வெளியாகும் அறிவியல் கட்டுரைகள் மிகவும் போற்றத் தக்கன. மருத்துவம் தொடர்பான கட்டுரைகள் பல, மக்கள் நலம் காப்பனவாக அமைந்துள்ளன.

சமயக் கட்டுரைகளுள், மா. சண்முக சுப்பிரமணியனின் 'திருவாசகத் தேனமுதம்' என்னும் தலைப்பிலான தொடர் கட்டுரை குறிப்பிடத் தக்கது. நீண்ட நாட்களாக வெளிவந்த

இக் கட்டுரையின் இறுதிப்பகுதி, 81-ஆம் பகுதியாக ஏப்ரல் மாதம் முடிவடைந்துள்ளது.

கோவில், சிற்பங்கள், கல்வெட்டுக்கள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட கட்டுரைகள் வரலாற்றுச் சிறப்புடையன. சமயமும் கலையும் கலந்த ஒரு நோக்கில், அரிய புகைப்படங்களுடன் ஆழ்ந்த கருத்துகளையும் நல்கும் இக் கட்டுரைகள் சிறப்பாகப் போற்றத்தக்கன.

**மகளிர் பகுதி :** பெண்களுக்கான இப்பகுதியில் வாரந் தோறும் பல முக்கிய செய்திகள் அளிக்கப்படுகின்றன. இதில், மகளிருக்கான அழகுக் குறிப்புகள், மருத்துவம், சமையற் குறிப்புகள், இல்லம் காக்கும் இனிய முறைகள் எனப் பல்வேறு செய்திகள் அமைகின்றன.

குயிலி ராஜேசுவரி அளிக்கும், குழந்தைகள் பாதுகாப்பு, மருத்துவக் குறிப்புகள், மாதர் நலம் பற்றிய செய்திகள் சுவையாகவும் பயனுடையதாகவும் உள்ளன. இப்பகுதி மகளிரின் பொழுது போக்குக்கென அமையினும் நல்ல பல அறிவியற் செய்திகளை அளிப்பதாகவே உள்ளது.

**சிறுவர் பக்கம் :** ஞாயிறு சுடர் பகுதியில் இடம் பெறும் இப் பகுதியில் சிறுவர்க்கான சிறுகதைகள், துணுக்குகள் இடம் பெறுகின்றன. இவ்வாண்டின் முதல் நான்கு மாதங்களைத் தவிர மற்ற மாதங்களில் இப்பகுதி இடம் பெறவில்லை.

**கவிதை :** மற்ற இதழ்களைக் காட்டிலும் தினமணியில் கவிதைகள் நன்கு அமைகின்றன எனலாம். பொங்கல், தமிழ்ப் புத்தாண்டு, சுதந்திர தினம், தீபாவளி போன்ற குறிப்பிட்ட மலரிதழ்களில் நல்ல பல கவிதைகள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள், நெல்லை ஆ. கணபதி, புலவர் முத்து வேங்கடேசன் போன்ற கவிஞரின் படைப்புகள் குறிப்பிடத் தக்கன.

**மொழியமைப்பு :** நாளிதழ்களின் மொழியமைப்பு தனித் தன்மை வாய்ந்தது. அரசியல், அறிவியல், தொழில்நுட்பம் மற்றும் நாகரிக வளர்ச்சியின் காரணமாகப் புதிய புதிய சொற்களும், தொடரமைப்புகளும் அமைகின்றன. தமிழ் மக்களின் அன்றாடப் பேச்சு வழக்குகளில் இடம் பெறும் சில சொற்கள், சொற்றொடர்கள் போன்றவை மிகப் பரவலாக நாளிதழ்களில் பிரதிபலிக்கப் படுகின்றன.

தொடரமைப்புகள் பல இதழ்களிலும் முறையாக அமைவதில்லை. புணர்ச்சி விதிகளையும் இவை பொருட்படுத்துவ

தில்லை. ஒற்றுமிகுதலும் மிகாமையும் இவ்விதழ்களுக்குப் பொருந்தாது. தேவையான இடத்தில் இடாமலும், தேவையற்ற இடங்களில் இட்டும் காட்டுவதை விட, பெரும்பாலான இடங்களில் இதை அமைக்காதே விட்டுவிடுவது வழக்கமாகி விட்டது.' படிப்போருக்காக மொழியை எளிமைப் படுத்துவதே தமது குறிக்கோள் என்பதை இது காட்டுகிறது எனலாம்.

ஆங்கிலச் சொற்களை அப்படியே தமிழில் எழுதுவது (கோர்ட், பென்சன், பாக்லாந், இன்சாட், ஏசியாட் போன்றன) பிசுபிசுப்பு, கசமுசா போன்ற ஒலிக்குறிப்புச் சொற்களை அமைப்பது போன்றவையும் நாளிதழ்களில் தவிர்க்க முடியாதனவாக உள்ளன.

**1982-இல் முக்கிய நிகழ்ச்சிகள்**

இவ்வாண்டின் இறுதியில் தினமணி, தினத்தந்தி இதழ்களில், முக்கியமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் தொகுத்தளிக்கப் படுகின்றன. தினமணியில் முக்கிய தலைவர்களின்மறைவு, ஆசிய விளையாட்டு விழா போன்ற நிகழ்ச்சிகள் முக்கியமாகக் கருதப் பட்டுத் தொகுக்கப்பட்டுள்ளன.

வினோபா பாவே, கிருபளானி, கர்நாடக முன்னாள் முதல்வர் தேவராஜ் அர்ஸ், ராஜஸ்தான் முன்னாள் முதல்வர் மோகன்லால் சுகாதியா, பஞ்சாப் முன்னாள் கவர்னர் ஜெய்சுக்லால் ஹாதி, பீகார் முன்னாள் முதல்வர் பி.பி. மண்டல், முன்னாள் மத்திய மந்திரி சி. டி. தேஷ்முக், ஷேக் அப்துல்லா, சா. கணேசன், பிரபல பார்லிமெண்ட் உறுப்பினர் எச்.வி.காமத், ரஷியாவில் இந்தியத் தூதுவராக இருந்த கே. பி. எஸ். மேனன், காந்தியின் அந்தரங்க காரியதரிசி பியாரிலால், மேற்கு வங்க இடதுசாரி கம்யூனிஸ்ட் தலைவர் பிரமோத் தாஸ் குப்தா, சிக்கிம் முன்னாள் மன்னர் நாம்கியால், முன்னாள் துணை ராஷ்டிரபதி ஜி.எஸ்.பாடக், ரஷிய ஜனாதிபதி பிரஷ்னேவ், சவுதி அரேபியா மன்னர் கலீத் போன்றோரின் மறைவுச் செய்திகள் இவ்வாண்டில் முக்கியமாகக் குறிக்கப்பட்டுள்ளன.

இவற்றுடன், ஆசிய விளையாட்டு விழா, ரயில்கள் மோதல், ஜைல்சிங் புது ராஷ்டிரபதியாகப் பதவி ஏற்பு, கருணாகரன் விலகல், அமிதாபச்சன் படுகாயம், கருணாநிதி பாத யாத்திரை, அகல ரயில் பாதை, தனியார் பள்ளி ஏற்பு மசோதா, பெரிய குளம் தேர்தல் போன்ற செய்திகளும் இத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

**ஆசியாட்-1982 :** ''1982 ஆம் ஆண்டு நடைபெற்ற மிக முக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்று ஆசிய விளையாட்டு விழா. நவம்பர்

19-ஆம் தேதி வெள்ளிக்கிழமை புது டில்லியில் அந்த விளை யாட்டுகள் தொடங்கின. போட்டிகளை ஜெயில்சிங் தொடங்கி வைத்தார். 33 நாடுகளைச் சேர்ந்த 5000க்கும் மேற்பட்ட வீரர்கள் பங்கு கொண்டனர். 21 பிரிவுகளில் போட்டிகள் 16 நாள் நடந்தன. டெல்லி, பம்பாய், ஜெய்ப்பூர் போன்ற இடங் களில் பல்வேறு போட்டிகள் நடை பெற்றன. விளையாட்டுச் சின்னமான அப்பு யானைக்குட்டி அகில உலகப் புகழ் பெற்றது. ஆசிய விளையாட்டு டிசம்பர் மாதம் நாலாம் தேதி சனிக்கிழமை முடிந்தது. நிறைவு நாளன்று 33 நாடுகளின் அணிவகுப்பு நடந்தது. இப்போட்டிகளில் சீனா, ஜப்பான், தென் கொரியா முறையே 61, 57, 25 தங்கப்பதக்கங்களைப் பெற்று முதல் மூன்று இடங்களைப் பிடித்தன. இந்தியாவுக்கு 13 தங்கப் பதக்கம் கிடைத்தது. இந்தியா 5வது இடத்தைப் பெற்றது.

(தினமணி. டிசம்பர்.31)

உலகமே போற்றத்தக்க அளவில் அமைந்த இவ் விளையாட்டு விழா பற்றி மிகவும் சுருக்கமாகவும் விளக்க மாகவும் செய்திகளைத் தொகுத்தளித்திருக்கும் பாங்கு குறிப் பிடத்தக்கதாகும்.

இவ்வாறே 1982 திரைப்பட புள்ளிவிவரம் என்ற தலைப்பில் (31-12-82, ப.6.) அளித்திருப்பது தமிழ்த் திரைபடப் ரசிகர்க்குப் பயனளிப்பதாகும்.

தினத்தந்தி இதழில், இவ்வருடத்தில் முக்கிய நிகழ்ச்சிகள் மாதத்தின் பெயருடன், சிறுதலைப்புகளில் தொகுக்கப் பட்டுள்ளன. அவை, மந்திரிசபையில் மாறுதல், கருணாநிதி பாத யாத்திரை, சிவாஜிக்கு எம். பி. பதவி, ரெயில்வே பட்ஜெட், தமிழ்நாடு பட்ஜெட், தினத்தந்தி பரிசு, ஐகோர்ட் நீதிபதி, கேரள சட்டசபை கலைப்பு, கிருபளானி மரணம், ரயில்-பஸ் மோதல், தெலுங்கு தேசம் கட்சி, தண்ணீர் தண்ணீர் சிறந்த படம், இந்திய ராக்கெட்டு, இட ஒதுக்கீடு, நாலு மாநில தேர்தல், வறுமையின் நிறம் சிவப்பு, அ.தி.மு.கவில் ஜெயலலிதா, முதல் மாணவன் +2, பாக்லாந் போர், படாபட் மரணம், விமான விபத்து, தி.மு.க. எம்.பி. கம்பம் நடராசன் மரணம், ஜயில்சிங் வெற்றி, ரீகன இந்திரா சந்திப்பு, நம்பிக்கை யில்லா தீர்மானம் (பாரலிமெண்ட்), புதிய கவர்னர் குரானா, அகல ரயில் பாதை, சேக் அப்துல்லா மரணம், ராஜேந்திரன் உஷா திருமணம், பெரியகுளம் தேர்தல், இ. காங்கிரஸ் கமிட்டி கலைபபு, ஜனாதிபதி ஆபரேஷன, சுட்டுக் கொலை, சீக்கியர் போராட்டம், கடையடைப்பு, கேரள கவர்னர் பா. ரா.

இலங்கை ஜனாதிபதி, குதிரைப் பந்தயம், பிரஸ்நேவ் மரணம், இலவசப் பல்பொடி, ஆசிய விளையாட்டுப் போட்டி, அசோகன் மரணம், கேசவ ஆதித்தன் மரணம், இந்தியாவுக்கு 57 பதக்கம், ஆந்திரா தேர்தல், ஆசியாட் முடிவு விழா, என்.டி. ராமராவ், புதுமைப் பெண்கள் பேரணி, சீதாபதி விலகல், செரீப் பதவி நீடிப்பு, பாலுமகேந்திரா கைது, இலங்கை வாக்கெடுப்பு, மின்சார வெட்டு போன்ற பல்வேறு தலைப்புகளில் மிக அதிக மான செய்திகள் முக்கியச் செய்திகளாகத் தொகுக்கப்பட் டுள்ளன.

இவ்விரு இதழ்களில் இவ்வாறு முக்கிய செய்திகள் தொகுத் தளிக்கப்பட்டிருப்பினும், ஒன்றில் முக்கியமாக இடம்பெற்ற செய்தி மற்றொன்றில் விடப்பட்டும் உள்ளது. சில செய்திகள் ஒரே நாளில் வெளியானவை, முரண்பாடாகவும் அமைகின்றன. நாளிதழ்களில் இத்தகைய பகுதிகளால் 1982-இல் என்னென்ன நிகழ்ச்சிகள் நடைபெற்றன என்பது மக்களுக்கு நினைவூட்டப்படு கின்றன.

## தொகுப்புரை

நல்லபல கருத்துகளைக் கவர்ச்சியோடு வெளியிடுவதே நாளிதழின் பணி. கால நெருக்கடிக்குள்ளாகி வெளிவரும் நாளிதழ்கள், அவை தரும் செய்திகள், செய்திகளுக்குத் தருமிடம், தலைப்பு, அவற்றை வெளியிடும் உத்திமுறைகள், துணைப் படங்கள், செய்திகளைச் சுருக்கியும் பெருக்கியும் தரும் கலைப்பாங்கு, பரபரப்பூட்டும் செய்தியாயின் அதற்குப் பத்தி களைப் பிரித்தளிக்கும் முறை, அந்தந்த மாவட்டச் செய்தி களுக்குத்தரும் முக்கியத்துவம், அவற்றுக்கேற்ப அமைக்கப்படும் மொழிநடை போன்றவற்றால் படிப்பவரை எளிதில் கவர்ந்து விடுகின்றன.

மக்களின் மனநிலைக்கேற்ப, அவர்களின் தேவையை யுணர்ந்து, அவர்கள் பெரிதும் எதிர்பார்க்கும் செய்திகளைத் தருவது, கவர்ச்சியான, உள்ளீடுமிக்க தலைப்புகளை அமைப்பது என்பன போன்ற திறன்களால் நாளிதழ்கள் வாழ்வும் வளமும் பெற்றுத் திகழ்கின்றன.

ஆயினும், இன்றைய நாளிதழ் பற்றிய ஒரு பொதுவான கருத்தும் இவண் ஆராயவேண்டியுள்ளது. இவ்விதழ்கள் யாவும் சுயநலம் கொண்டு இயங்குபவை என்றும், மக்களைத் திசை திருப்பும் பணியில் இவை ஈடுபட்டுள்ளவை என்றும் சிலர் எண்ணு கின்றனர். இது ஒரு மேம்போக்கான முடிவு என்றே கொள்ள வேண்டும்.

1982-இல் தமிழ் நாளிதழ்களின் அமைப்பு, செய்திகளை அளிக்கும் பாங்கு போன்றவற்றை ஆராயுமிடத்து எல்லா இதழ் களுமே இக்கருத்துக்கு இலக்காவன எனக்கூற இயலவில்லை. மக்கள் தொடர்பு, மொழிவளர்ச்சி இவற்றில் நாளிதழ்களின் பங்கு மிகுதி.

1. இன்று ஓரளவு படிக்கத் தெரிந்த மக்களும்கூட அன்றாடம் நாளிதழ் படிக்கும் நாட்டம் கொண்டுள்ளனர்.

2. எழுத்தாளர் பெருக்கத்தால் பல நாளிதழ்கள் சிறுகதை, தொடர்கதை, துணுக்கு, நகைச்சுவை எனப் பல்வகைச் சிறப்பு களை அளிப்பதால் மக்களில் பலரும் படைப்பாற்றலைப் பெற முடிகிறது.

3. தமிழில் உரைநடை வளர்ச்சிக்கு நாளிதழ்களின் பங்கு மிகுதி.

4. நாளிதழ்களால் மக்களின் உணர்வுகள் அவ்வப்போது தட்டி எழுப்பப்படுகின்றன.

5. அரசியல் விழிப்புணர்வும், அறிவியல் தொடர்பும் இவற்றால் பெறப்படுகின்றன.

6. வட்டார வழக்குகளும் பேச்சுமொழிச் சொற்களும் மிகுதியாக வருவதால் மக்களிடையே நெருக்கம் அதிகமாகிறது எனலாம்.

பொது நிலையில், இத்தகைய நற்பண்புகள் பல இவற் றிடையே காணப்படினும் சில தேவைகளையும் இவை உணர்தல் வேண்டும். மக்களிடையே நல்ல தமிழ்மொழி ஆற்றலைப் பெருக்கும் வகையில் இவை அமைதல் வேண்டும். மொழி வளத்தினைக் கருத்தில் கொண்டு எளிய நடையையும் வேற்று மொழிக் கலப்பில்லாத தொடர்களையும் அமைப்பின் சிறப் பாகும். அரசியல் கட்சித்தொடர்பான இதழ்கள் இருப்பதுபோல, மாணவர், தொழிலாளர், மகளிர் போன்றோருக்கெனவும் தனித்த இதழ்கள் தோன்றுமாயின் மிக்க நலம் பயக்கும் என்பது தெளிவு.

## இணைப்பு

### 1. 1981-82-இல் வெளிவந்துள்ள தமிழ் நாள் இதழ்கள்

1. அண்ணா 2. அரும்பு மலர் 3. அறிவிப்பு 4. செங்கொடி 5. சினிமா முரசு 6. தினத்தந்தி-சென்னை 7. தினத்தந்தி-மதுரை 8. தினத்தந்தி திருச்சி 9. தினத்தந்தி-கோவை 10. தினத் தந்தி-நெல்லை 11. தினத்தந்தி-வேலூர் 12. தினத்தந்தி-கடலூர் 13. தினத்தந்தி-சேலம் 14. தினத்தந்தி-பெங்களூர்

15. தேசபக்தன் 16. தினகரன்-சென்னை 17. தினகரன்-கோவை 18. தினகரன்-மதுரை 19. தினகரன்-திருச்சி 20. தினமலர்-நெல்லை 21. தினமலர்-சென்னை 22. தினமலர்-திருச்சி 23. தினமலர்-மதுரை 24. தினமணி-மதுரை 25. தினமணி-சென்னை 26. இமயம் 27. இனமணி 28. இந்தியா 29. ஜான்ஸி ராணி 30. கலிங்கா 31. கோவை மாலைமுரசு 32. மாலை மலர் 33. மதுரை மாலை முரசு 34. மதுரை மணி 35. மக்கள் செய்தி 36. மக்கள் குரல் 37. மாலைமுரசு-நெல்லை 38. மாலை முரசு-சென்னை 39. மாளவிகா 40. மாங்கல்யம் 41. முரசொலி 42. முயல் 43. நாத்திகம் 44. நவ இந்தியா 45. நவசக்தி 46. நீதியின் குரல் 47. பஞ்சாமிர்தம் 48. பிரம்படி 49. பொன் திரை 50. சேலம் மாலை முரசு 51. தமிழ்நாடு டெமாக்ராட் 52. தமிழ் மணி 53. தஞ்சை மாலைமுரசு 54. தீக்கதிர்-மதுரை 55. தென்னகம் 56. திலகம் 57. வணிக ஒற்றுமை 58. வேலூர் மாலை முரசு 59. விடிவெள்ளி 60. விடுதலை 61. கழகக் கோட்டை 62. மணல் வீடு 63. மூவி டைம்ஸ் 64. முருகு 65. நீரோட்டம் 66. சத்திய வேட்கை 67. சாட்டை 68. திரைப் பித்தன் 69. தினச்சுடர் 70. மராத்திய முரசு 71. குமரி முரசு 72. பாரதம் 73. பிற்பகல் 74. மலர்ந்த ரோஜா 75. எதிரொலி 76. முத்துச்சரம் 77. சுதேசமித்ரன் 78. வஞ்சி நாடு 79. மாலை மலர்

2. 1980-81-இல் வெளிவந்து 1982-83-இல் முகவரி அறியஇயலாது, மறைந்த இதழ்கள்:-

1. உதய முரசு 2. எரி ஈட்டி 3. எழில் 4. காலை நிலா 5. சம நீதி 6. செய்திச் சுருள் 7. தங்க மடல் 8. தமிழ் முரசு 9. நறு மணம் 10. பகல் நிலா 11. பிரைட்னஸ் 12. பெண்கள் இனம் 13. மக்கள் அரசு 14. மக்கள் மலர் 15. மணி முடி 16 மேக ஒலி 17. ஜவஹரிசம் 18. ஜனதா குரல் 19. ஜூலியட் 20. ஸ்டுடியோ நியூஸ்

3. 1982 - தினமணி சுடர் - சிறுகதைகளும் ஆசிரியரும்

ஜன. 3. பெண் என்று பிறந்துவிட்டால் ஸ்ரீராமப்ரியன்
,, 10. பெண் எனும் புதிர்! - டி. மைதிலி
,, 10. மயக்கம் - பைங்காநாடு
,, 14. வகுப்பறைக்கு வந்த கடிதம் - கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்
,, 14. புதிய பாடம் - ஸ்ரீ ராமப்ரியன்
,, 17. அவளுக்கும் ஒரு வாழ்க்கை - சுப்ர. பாலன்
,, 24. இப்படியும் ஒரு காலம் வருமா? - டி. சீனிவாசன்
,, 24. கடற்கரைக் கன்னி-சைதை தேவாரம்.த.நடராஜன்

பிப். 7. வாழ்வில் ஓர் தேர்வு - டி. மைதிலி
,, 14. சிறகில்லாப் பறவை - நாகை எம். பி. வீரப்பா
,, 21. பூ உதிரும் - ஸ்ரீ ராமப்ரியன்

மார்ச் 7. நண்பன் - ரமணி ரங்கநாதன்
,, 14. பார்வையின் மறுபக்கம் -
குமாரி ஆண்டாள் பிரியதர்சனி
,, 21. ஒரு மோதல் காதலாகிறது! - ஏ. சுவாமிநாதன்
,, 28. அறுபது வயதில் ஒரு ஆசை - இந்திரன்

ஏப். 4. ஒரு ஜீவனின் பயணம் - அல்லி உதயன்
,, 11. முரண்பாடு - நீலா ராமமூர்த்தி
,, 14. சித்திரையில் ஒரு குழந்தை -
கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்
,, 18. அவள் உலகம் - பூவை. விமலன்
,, 25. சரிதா காத்திருப்பாள் - சேனையின் மாதவன்

மே. 9. டாக்டர் என்னைக் காப்பாத்துங்க! -
மெலட்டூர் விசுவநாதன்
,, 16. அனுபவங்கள் - அன்பிற்கினியவன்
,, 23. கழுத்தில் விழுந்த தாலி -
குமாரி ஆண்டாள் பிரியதர்சனி
,, 30. தேவை ஒரு ஆண்பிள்ளை - ஸ்ரீராமப்ரியன்

ஜூன் 6. மெழுகுவர்த்தி - பைங்கா நாடு
,, 13. சாதிகள் இருக்குதடி பாப்பா! - துரை சுந்தரமூர்த்தி
,, 20. சத்தியம் - விஜயா சிவகாசிநாதன்
,, 27. பாசங்கள் சந்தித்தபோது - அடியார்க்கு நல்லான்

ஜூலை 4. அம்மா மன்னிக்கிறாள் - நிவேதா
,, 11. கிராமத்துப் பொண்ணு - விஜயன்
,, 18. வெறும் வாய்ப்பந்தல் அல்ல! - அரங்கன்
,, 25. இரவு மணி இரண்டு - விஜய சிவகாமிநாதன்

ஆக. 1. மாப்பிள்ளை அழைப்பு - ஏ. சுவாமிநாதன்
,, 8. பகல் கனவுகள் - எஸ். திருமலை
,, 15. மனப்பரிட்சை - எம். ஜெயலெஷ்மி நரசிம்மன்
,, 22. நிறைவு - வினோதானந்த்
,, 29. அடிமாடுகள் - ஜெய் ஆனந்த்

செப். 5. பிம்பம் - 'ஆரெஸ்வி'
,, 12. ஓர் இறைவனின் ஏக்கம் - வினோதானந்த்
,, 19. மனக்குருவி - நீலா ராமமூர்த்தி
,, 26. நஞ்சு - வினோதானந்த்

அக். 3. ஓர் ஆஸ்பத்திரி உருவாகிக் கொண்டிருக்கிறது
- கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்
,, 10. சில சிறு துளிகள் - நிவேதா
,, 17. இப்படியும் ஒரு உலகம் -
திருமதி அரசு மணிமேகலை
,, 24. காயமல்ல சிறாய்ப்புத்தான் - 'ஆரெஸ்வி'
,, 31. எதிர் வீட்டுக்காரி - சேனையின் மாதவன்

நவ. 7. வெறும் பார்வைகள் அர்த்தமாகின்றபோது
- 'ஆரெஸ்வி'
,, 14. நடை - நா. ஜெயபாலன்
,, 14. புஸ்வானம் - ஆர். பி. சாரதி
,, 14. பழகிய பாசக்குரல் -
சைதை தேவாரம் த. நடராஜன்
,, 21. கனவுகள் யாருக்காக? - அடியார்க்கு நல்லான்
,, 28. புரட்சி - தபஸ்வி

டிச. 5. தடுமாறும் நெஞ்சங்கள் - திருமலை
,, 12. ஒரு ரகசியம் - அரங்க சீனிவாசன்
,, 19. ராஜி - ஸரோஜாமூர்த்தி
,, 26. இதுவும் ஒரு பைத்தியம் - அன்னம்

4. தினமணி-சுடர்-துப்பறியும் கதை. (நடராஜ்குமார்)

பிப். 7. அனாமதேயக் கடிதம் வந்தால்?—
,, 14. லாரியிலிருந்து விழுந்தவன்.
,, 21. காணாமல் போன தபால் பெட்டி.
,, 28. கொலையாளி யார்?

மார்ச் 14. மோட்டார் ஷெட்டில் நாய்!
,, 21. கண்ணாடியை உடைத்து—
,, 28. விரலடையாளம் சொன்ன கதை

ஏப். 4. காசு கேட்கவில்லையா.
,, 11. குதித்து விட்டானே!
,, 18. தஞ்சை மாநில பாணியில்.
,, 25. நான் கொலை செய்து விட்டேன்.

மே. 9. திருட்டு பெண் குமாஸ்தா.
,, 16. சாமான்கள் எப்படி வைக்கப்பட்டிருக்கின்றன.
,, 23. குழந்தையின் சங்கிலி-
,, 30. நிருபரின் குறையான ரிப்போர்ட்

ஜூன். 6. அரை லட்சம் எங்கே?
,, 13. தயவு செய்து சோதனை போடுங்கள்.
,, 20. வீணை வாசித்த பெண்.
,, 27. அது என்ன வார்த்தை
ஜூலை 4. முகத்தில குத்து.
,, 11. சிங்கப்பூர் நெக்லஸ்
,, 18. கடத்தல் காரரின் விந்தையான கடிதம்.
,, 25. கொலை வாசனை

ஆக 1. இதோ பேசரி.
,, 8. காணாமற் போன எம். எல். ஏ.
,, 15. தொடர்கதை ரசிகர்.
,, 22. புகை சொன்ன கதை.
,, 29. வண்டிகள் தாக்கப்படுவதேன்.

செப். 5. நவீன டைப்ரைட்டர்.
,, 12. 3மணி குதிரை பந்தயம்.

செப். 19. அதிகப்பணம் வேண்டாம்.
,, 26. கள்ளக்காதல் பேச்சு

அக். 3. காணாமற் போன சங்கிலிகள்.
,, 10. கறுப்பு கவுன் தார்
,, 17. தாய்மொழி என்ன?
,, 24. அதிகப் பணம் ஏது?
,, 31. முன்னே வந்தது யார்?

நவ 7. மூக்குக் கண்ணாடி இல்லாமலா?
,, 14. புரோ நோட்டு எங்கே?
,, 21. விஷம் ஏற்றிய வித்தை
,, 28. விபத்துக்காளானவனா?

டிச. 5. மனைவி எங்கே?
,, 19. வண்டி ஓட்டப்படவில்லையா?
,, 26. ஒளிந்து கொண்ட நீலக்கல்

### 5. தினமணி சுடர்—தலைவர் பற்றிய கட்டுரைகள்

ஜன. 3. பாரதியாரின் சீச்சீ - இரா. சுராஜ்
,, 10. பாரதியை ஒட்டிய நினைவுகள்
வெள்ளிப் பனிமலை-2 - பெ. நா. அப்புஸ்வாமி
,, 17. ஏற்பதிலும் பெருமை- 1- ,, ,,
,, 24. ,, ,, 2 - ,, ,,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிப். | 7. | பாரதி பாடும் தனிப்பாணி | 1 | பெ. நா. | அப்புஸ்வாமி |
| ,, | 14. | ,, ,, ,, | 2 | ,, | ,, |
| ,, | 21. | பாரதியின் நாட்டுப்பற்று | 1 | ,, | ,, |
| ,, | 28. | ,, ,, | 2 | ,, | ,, |
| மார்ச் | 7. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 14. | பாரதியும் நீதிமன்றமும் | | ,, | ,, |
| ,, | 21. | பாரதிப் பிரசுராலயம் | 1 | ,, | ,, |
| ,, | 28. | ,, ,, | 2 | ,, | ,, |
| ஏப். | 4. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 11. | ,, ,, | 4 | ,, | ,, |
| ,, | 18. | பாரதியும் சாமிநாதையரும் | 1 | ,, | ,, |
| ,, | 25. | ,, ,, | 2 | ,, | ,, |
| மே | 2. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 9. | ,, ,, | 4 | ,, | ,, |
| ,, | 16. | பாரதியும் எங்கள் குடும்பமும் | 1 | ,, | ,, |
| ,, | 23. | ,, ,, | 2 | ,, | ,, |
| ,, | 30. | ,, ,, | 3 | ,, | ,, |
| ஜூன் | 6. | ,, ,, | 4 | ,, | ,, |
| ,, | 13. | ,, ,, | 5 | ,, | ,, |
| ,, | 20. | பாரதியும் திலகரும் | 1 | ,, | ,, |
| ,, | 27. | ,, ,, | 2 | ,, | ,, |
| ஜூலை | 4. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 11. | ,, ,, | 4 | ,, | ,, |
| ,, | 18. | வளம்படுத்த முயன்றவர்கள் | 1 | ,, | ,, |
| ,, | 25. | ,, ,, | 2 | ,, | ,, |
| ஆக. | 1. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 8. | ,, ,, | 4 | ,, | ,, |
| ,, | 15. | ,, ,, | 5 | ,, | ,, |
| ,, | 22. | ,, ,, | 6 | ,, | ,, |
| ,, | 29. | ,, ,, | 7 | ,, | ,, |
| செப். | 5. | வளம்படுத்த முயன்றவர்கள் - திரு.வி.கலியாண சுந்தர முதலியார் | | பெ. நா. | அப்புஸ்வாமி |
| ,, | 12. | ,, ,, | 2 | ,, | ,, |
| ,, | 19. | ,, ,, | 3 | ,, | ,, |
| ,, | 26. | ,, ,, | 4 | ,, | ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அக். 3. | ,, | ,, | 5 | ,, | ,, |
| ,, 10. | ,, | ,, | 6 | ,, | ,, |
| ,, 17. | ,, | 8. | உயிரியல் பரிணாமம் | ,, | ,, |
| ,, 24. | ,, | 9. | உயிரியலில் மனித முன்னேற்றம் | ,, | ,, |
| ,, 31. | ,, | 10. | குரங்கு மனிதனும் மொழியும் | ,, | ,, |
| நவ. 7. | ,, | 11. | இனங்களின் தன் முயற்சி | | ,, |
| ,, 14 | ,, | 12. | நாட்டியக் கலைத்துறையில் | ,, | ,, |

## 6. தினமணிச் சுடர்-சமயக் கட்டுரைகள்

### திருவாசகத் தேனமுதம் – மா. சண்முக சுப்பிரமணியன்

ஜன. 3 - 66. 'கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே'

ஜன. 10 - 67. 'அந்தம் இலா ஆனந்தம் பாடுதுங் காண் அம்மனாய்!'

ஜன. 17 - 68. 'பொன் திருச்சுண்ணம் இடித்தும் நாமே'

ஜன. 24 - 69. 'திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ!'.

,, 31 - 70.

பிப். 7 - 71. 'ஆனந்தமாகி நின்று ஆடாமோ தோள் நோக்கம்'

பிப். 14 - 72. 'புஞ்சமார் வெள்வளையீர்! பொன்னூசல் ஆடாமோ!''

,, 21 - 73. 'கீதம் இனிய குயிலே'

,, 28 - 74. 'கிஞ்சுக வாய் அஞ்சுகமே'

மார்ச் 7 -

,, 14 - 76. 'ச ாதி குலம் பிறப்பு என்னும் சுழிப்பு'

,, 21 - 77. அன்பிலே விளைந்த ஆரமுதே'

,, 28 - 78. 'இன்பமே! என்னுடைய அன்பே'

ஏப். 4 - 79. 'சித்தமலம் அறுவித்து சிவமாக்கி எனை ஆண்டான்'

,, 11 - 80. 'கண்ணால் யானும் கண்டேன் காண்க!'

,, 18 - 81. 'செம்மையே ஆய சிவபாதம்' (முற்றிற்று)

## 7. தினமணி சுடர் - கோவில், சிற்பங்கள் கல்வெட்டுகள் பற்றிய கட்டுரைகள்

| | |
|---|---|
| ஜன. 3 | திருநெல்வாயில்—சி. டி. அளகப்பன் |
| ,, | தெள்ளாற்றில் ஒன்பதாம் நூற்றாண்டு ஜேஷ்டா தேவி. |
| ஜன. 14 | மகர சங்கராந்தி மங்கள சாசனம் — குடவாயில் பாலசுப்பிரமணியன் |
| ,, | களியங்காட்டுக் கோயில் ஒரு வரலாற்றுச் சின்னம் — பொ. ராமச்சந்திரன். |
| பிப். 7 | உலகம் போற்றும் தஞ்சை வீணைகள்—கரந்தை பி. சுப்பிரமணியம். |
| ,, 14 | ஐயங்குளத்து ஆஞ்சநேயர்—நாராயணஸ்வாமி |
| மார்ச் 7 | பூம்புகாரை மீண்டும் கடல் கொள்ளும்——கரந்தை பி. சுப்ரமணியம். |
| ,, | கம்பராமாயணத் தோல் பொம்மலாட்டம்—ஆர். மைதிலி |
| ,, 21 | புஷ்பவனத்து வைத்தியநாதன்-நாராயண ஸ்வாமி |
| ஏப். 14 | பிள்ளைத் தமிழ் முதல்வர் — பூ. ஜெயராமன். |
| ,, | திருவடி சுமந்த திரிபுவன வீரதேவன்-குடவாயில் பாலசுப்ரமணியன் |
| ,, 25 | சோழர் ஆட்சியில் குமரி மாவட்ட வளர்ச்சி. |
| ,, ,, | குமரி முனையில் ஒரு முருகன் குன்றம். |
| மே. 9 | பகவான் கௌதம புத்தர் —உ. ரத்தின பால தேரோ. |
| ,, 16 | தமிழ் நாட்டில் சமண சமயக் கோயில்கள்—ஸ்ரீபால். |
| ,, 23 | முப்பந்தொட்டி உலா—நாராயண ஸ்வாமி |
| ,, ,, | திருமலை வழியில் அனுமன் தரிசனம்-சுந்தரம். |
| ,, 30 | கன்னியர் வணங்கும் கன்னிகா பரமேஸ்வரி—ஆர். ரம்யா. |
| ஜூன் 6 | சத்தியசந்தரின் தஞ்சை விஜயம்—குடவாயில் பாலசுப்ரமணியன், |
| ,, | திருச்செங்கோடு—டி. எம். கிருஷ்ணன். |
| ,, 13 | பொடிபூசி இசை மேவும் திருவேதிகுடி—தஞ்சை ந. செல்வராஜ். |

| | |
|---|---|
| ஜூன் 20 | இம்மையிலும் நன்மை தருவார்—<br>பொன்குன்றில்—அகழ்வாராய்ச்சி |
| ,, 27 | பலகண்டம் கடந்த ஜலகண்டேஸ்வரர்<br>—புலவர் ஆனை நரசிங்கப் பெருமாள்.<br>கலைநுட்பம் நிறைந்த திருப்பதி சாரத்தேர்.<br>—பொ. இராமச்சந்திரன். |
| ஜூலை 4 | தீப்பாய்ந்த நாச்சியார்க் கோயில் |
| ,, | மாலினிக்கு ஓர் ஆலயம்— ஜே எம். சாலி |
| ,, 18. | அட்டபுயகரத்தோன்—நாராயணசாமி |
| ,, 25. | கொக்கராயன் பேட்டை சிவாலயம்-<br>தி. ராசமாணிக்கம் |
| ஆகஸ்டு 1. | கீழ்வாலை வண்ண ஓவியங்கள்-அனந்தபுரம்<br>கிருஷ்ண மூர்த்தி |
| ,, 8. | பல்லவர்கால சிற்பங்கள் நிறைந்த சாரம்-<br>புலவர் தாமரைக் கண்ணன் |
| ,, 15. | கோயில்களும் தேசிய ஒருமைப்பாடும்-ச.கு.க.<br>இராமலிங்க விலாசம்- குடவாயில் பால<br>சுப்ரமணியன். தொண்டைமான் இளந்திரையன்<br>வெட்டிய தென்னேரி — நாராயணஸ்வாமி |
| ,, 22. | தெய்வீக மணம் வீசும் குற்றாலம்-<br>எஸ். பத்மநாபன் |
| ,, 29. | சித்தையன் கோட்டை சௌடாம்பிகை அம்மன் |
| செப் 5. | காரப்பங்காட்டு வரதன் - கே. ரா.<br>திருமணிக்கூட நாயகன் - சிரோமணி ஸ்தல<br>சயனத் துறைவார். |
| ,, 12. | அரங்கன் கோயில் அறங்காவலர் - குடவாயில்<br>பாலசுப்ரமணியன் |
| ,, 19. | மல்லம் பல்லவர் கோயில் - நாராயணஸ்வாமி. |
| ,, 26. | சென்னைப் பெருநகரின் அணிகலன் எழுமூர். |
| அக் 10. | அதிகை மனவாசகங் கடந்தார் ஆலயம்-<br>நாராயணஸ்வாமி |
| ,, ,, | திரு அருட்பிரகாசரும் அம்பலவாணரும் - முருக<br>சரவணன் |
| ,, 17. | பூலோக சொர்க்கம் - சௌரி. |
| ,, 24. | சனீஸ்வரன் குடிகொண்ட குச்சனூர்- .<br>க. திருமலைமுத்து |

| | | |
|---|---|---|
| அக் | 31. | மகாதேவிப் பட்டினம் - சுவேதராக மூர்த்தி - குடவாயில் பாலசுப்ரமணியம் |
| ,, | ,, | கல்வெட்டுக்களில் 'அரையன்' - பெ. ராமச்சந்திரன் |
| நவ | 7. | உத்தரகங்கை கொண்ட சோழீச்சரம்- நாராயணஸ்வாமி |
| ,, | 14. | விடங்கனுக்கோர் பொற்கோயில் - குடவாயில் பாலசுப்ரமணியம் |
| ,, | ,, | குருடன் பாறை - அரங்க சீனிவாசன். |
| ,, | 21. | ஆதித்த சோழனின் தான் தோன்றீசுவரம்- டாக்டர். இரா. கலைக்கோவன். |
| ,, | 28. | கருப்புக்கோட்டை தொல்பொருள்கள்- பொ. ராமச்சந்திரன் |
| டிச | 5. | தூங்காலக் கிழவன் கோயில் |
| ,, | 19. | திருநெறிக் காரைக்காடு - நாராயணஸ்வாமி. |
| ,, | 26. | குலசேகர ஆழ்வார் கோயில் - கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன் |

8. தினமணி சுடர்- மருத்துவம் தொடர்பான கட்டுரைகள்

| | | |
|---|---|---|
| ஜன | 3. | ஜலதோஷ மருந்து விடமின் 'சி' - அறந்தாங்கி டாக்டர் சுப. சதாசிவம். |
| பிப் | 14. | சத்தை உறிஞ்சும் குடல் பூச்சிகள் - ,, |
| ,, | 21. | ,, ,, ,, (தொடர்ச்சி) ,, |
| ,, | 28. | ,, ,, ,, ,, ,, |
| ஏப் | 11. | முதுகுவலி |
| ,, | 25. | 'கண எருமை' - ஆரணி சுரேஷ் |
| மே | 9. | மஞ்சள் காமாலை - அறந்தாங்கி டாக்டர் சுப. சதாசிவம் |
| ,, | 16. | ,, ,, (தொடர்ச்சி) ,, |
| ஜூன் | 6. | பல் இடுக்கில் சீழ் பிடித்தால் ,, |
| ஆக | 15. | உயிரினங்களும் மூலிகைகளும். 'ஆரணி சுரேஷ்' |
| ,, | 22. | இரண்டு மனிதகுல விரோதிகள் (மேகவெட்டை, கிரந்தி) - அறந்தாங்கி டாக்டர் சுப. சதாசிவம் |
| ,, | 22. | மூளை அறுவை மருத்துவம் - பத்திரமான லேஸர் கருவி- |
| செ | 5. | வலிப்புநோய் - டாக்டர் அ. துரைராஜ். |

அக் 3. இரத்தத்தில் சர்க்கரை குறைதல் - டாக்டர்
சந்திரசேகர் ஜி. தாக்கூர்.
,, 10. வயிற்றுப்புண் - அறந்தாங்கி டாக்டர்
சுப. சதாசிவம்.
,, 24. வெண்படை (வெண்குஷ்டம்) ,,
நவ 28. நோய் நீக்கும் காந்தம் - ,, ,,
டிச 19. புதிய உணவு முறை - டாக்டர் சந்திரசேகர்
ஜி. தாக்கூர்

9. தினமணி சுடர் - அறிவியல் கட்டுரைகள்

ஜன. 3. அலைகடலில் அற்புதங்கள் -
செல்வி பரிமளா சம்பந்தம்
,, 10. வியக்கத்தக்க கூட்டுவாழ்வு ,, ,,
,, 14. பரிசோதனையிலிருந்து
பண்ணை வரை - எஸ். எஸ்.நாகராஜன்
,, 17. தினமணி சுடர் கொண்டு மின்சாரம்
,, 24. அறிவியல் தந்த அற்புதக் கண் - வே.தமையந்திரன்
பிப். 7. இந்திய மருத்துவ மனைகளுக்கு
'வெயில்விசை' குளிர்ப்பெட்டி
,, 14. மழையை வேண்டி - எஸ். திருமலை
,, 21. கடல் வெப்பம் தரும் மின்விசை கைகூடும் நாள்
தொலைவில் இல்லை - ரோஜர் எச். சார்லியர்
,, 28. வானத்தில் ஓர் அபாய அறிவிப்பு
- கே என். ராமச்சந்திரன்
,, 28. தண்ணீர், தண்ணீர்! – வே. தமையந்திரன்
மார்ச் 7. ஜீன்களும் திடீர் மாற்றமும் கலப்பின வீரியமும்
- இ. காதர் முகைதீன்
,, 21. உஷ்! சத்தம் போடாதீர்! - கே.என். ராமச்சந்திரன்
,, 28. முப்பரிமாண திரைப்படம் - வே. தமையந்திரன்
ஏப். 4. இன்ஸாட் 1-ஏ. இந்தியாவின் சொந்த
செயற்கைக்கோள் - (யு.எஸ் ஐ சிஏ)
,, 4. கோடிக்கரை - பறவைகள் சரணாலயம் -
கரந்தை பி. சுப்பிரமணியம்
,, 18. ஞானக்கண் ஒன்று இருந்திடும் போதினிலே -
கே. என். ராமச்சந்திரன்
மே 9. ஆழ்கடல் அதிசயம் - நிறம் கக்கும் விசித்திர மீன்
- சாரதா வெங்கடராமன்

மே ,, *16.* அயல் உலகில் அறிவுப் பிராணிகள்
- வே. தமையந்திரன்
,, *23.* அதிசய பிரமிட் - கே. என். ராமச்சந்திரன்
,, *23.* பெட்ரோலியத்தின் கதை - வே. தமையந்திரன்

ஜூன் *13.* நான்கு நாட்களில் ஓராண்டு படிப்பு
- வே. தமையந்திரன்
,, *27.* பார்க்கும் கம்ப்யூட்டர் - வே. தமையந்திரன்

ஜூலை *4.* பறக்கும் தட்டுகளின் மர்மம்
,, *11.* மனிதருடைய மூதாதையர் நீரில் வாழ்ந்தனரா
- வே. தமையந்திரன்
,, *18.* மூப்பின்றி முதியோர் வாழ்க
- டாக்டர் இ. எஸ். எல். இராமன்
,, *25.* மண்ணில் இருந்து விண்ணில் தாவும் ராக்கெட்
- வே. தமையந்திரன்

### 10. தினமணி சுடர் - அறிவியல் கட்டுரைகள்

ஆக. *1.* மரபு வழியில் மனித இன முன்னேற்றம் -
வே. தமையந்திரன்
,, *8.* மருந்தாகும் தேநீர் - டாக்டர் சுப. சதாசிவம்
,, *15.* உயிரினங்களும் மூலிகைகளும் - 'ஆரணி சுரேஷ்'
,, *29.* சக்கரத்தின் கதை - வே. தமையந்திரன்

செப்.12. நொடிப் பொழுதில் ஈரமில்லாப் பிரதி -
வே. தமையந்திரன்
,, *19.* இறவாமல் என்றும் உயிர் வாழ முடியுமா? ,,
,, *26.* உயிர்காக்கும் ஓசோன் திரை - ,,
சூரியனின் நாடித் துடிப்புகள் -

அக். *17.* காக்கை வலிப்பு - வே. தமையந்திரன்
,, *24.* மரபு நோய்கள் - ,,
,, *31.* இந்தியாவில் அறிவியல் ,,

நவ. *7.* அணு ஆற்றல் பிறந்த கதை ,,
,, *14.* ஈன்ஸ்டினின் ஈர்ப்பு அலை ,,
,, *21.* பொருளும் எதிர்ப் பொருளும் ,,
'' *28.* கண்டு பிடிப்புகளில் சந்தர்ப்பம் ,,

டிச. *5.* விண்வெளிப் பயணத்திற்கு வித்திட்டவர்கள் ,,
'' *19.* நினைவு எவ்வாறு பதிவு செய்யப்படுகிறது ,,
'' *26.* பெரிய வெடியுடன் பிறந்தது அண்டம்

## 11. தினமணி சுடர் - பொதுவான சில கட்டுரைகளும் துணுக்குகளும்

ஜன. 3. ஐயா! ஒரு காலெண்டர் கொடுங்கோ!- துமிலன்

ஜன. 10 சங்கீத விமர்சனம் - துமிலன்
,, அதிசய கோழி - படத்துடன் துணுக்கு
,, செட்டி நாட்டுப் பண்பாடுகள் -
அரக்கோணம் சங்கர பாண்டியன்

ஜன. 14. தொல்பொருள் ஆய்வாளர் கண்ட திருவள்ளுவர் -
டாக்டர் க. த. திருநாவுக்கரசு
,, பொங்கல் வாழ்த்துக் குறுங்காவியம் - இரா. சுராஜ்
,, 17. சில நேரங்களில் சில பிரமுகர்கள் - என்னார்
,, 24. வானொலியில் பேசுவது எப்படி? - மனசை ப. கீரன்

பிப். 7. வானொலியில் பேச்சை முடிப்பது எப்படி? - ,,
,, 21. சிதம்பரம் காந்தி மன்றத்தின் வெள்ளிவிழா -
கார்த்திகாயினி தணிகை தம்பி

,, 21. சட்டம் ஒரு...
இந்திய புதுமணத் தம்பதிகளைப் பிரித்து வைக்கும் பிரிட்டிஷ் சட்டம். ஹாங்காங்கில் பிறந்த குழந்தையை தாயிடமிருந்து பிரிக்கும் சட்டம்.

பிப். 28 டாக்டர்களுக்கு மருந்து
கணவனுக்கு ஜீவனாம்சம்

மார்ச் 7. ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் -
திருமதி ராஜம் ஜெயராமன்
,, 28. அறிஞர் வ. ரா. - தி. சா. ராஜு

ஏப். 4. ஆசிய விளையாட்டின் கதை - தீனதயாளன்
,, 4. சின்னங்கள் - வசுமதி பத்மநாபன்
,, 11. அனாதைகளுக்கு ஓர் அன்பு இல்லம் - ஆர். ரம்யா
,, 14. எத்தனை எத்தனை ஆண்டுகளோ - ஆர். பி. சாரதி
,, 14. ஸ்ரீ வானமாமலை ஜீயர் ஸ்வாமி -
பேராசிரியர் இரா. அரங்கராஜன்
,, 18. லண்டனில் இந்தியா பவன்
இந்திய சுதந்தரப் புரட்சிப் பாசறை -
பிரேம் வைத்யா

,, உங்களுக்குத் தெரியுமா?
,, 25. தமிழகம் அறிந்த தெலுங்குக் கவிஞர்கள் -
டாக்டர் சி. ஆர். சர்மா

ஜூலை 11. வீட்டருகே காட்டுச் செடிகள் - ச. கு. கணபதி

ஆக. 15. சுதந்திரப் போராட்ட வீரர் மாடசாமி - 'ரகமி'
,, கரையான் தின்னும் மிருகம்
,, 22. வாலம் அம்மையார் - நீதிபதி எஸ். சாமிக்கண்ணு
,, 22. திருவேங்கடக் குறவஞ்சி - என். பி. எஸ்.
,, 29. சாதுவான கொரில்லா (துணுக்கு)

செப். 5. ஞானபீடம் பரிசு பெற்ற முதல் தெலுங்கு கவிஞர் - பேராசிரியர் சி. ஆர். சர்மா
,, 12. பாரதியும் தேசபக்தியும் - திரு.வி.க.
(திரு. சீனி. விசுவநாதன் வெளியிட்டுள்ள பாரதி பற்றிய கட்டுரைத் தொகுப்பு நூலிலிருந்து)
,, 19. 'ஆராய்ச்சி' - ஓர் ஆராய்ச்சி
,, 19. பாரதியின் மகத்தான செய்தி - கி. ஸ்ரீநிவாசன்
,, 26. பாரதி வற்புறுத்திய பத்திரிகை தர்மம் - சீனி. விசுவநாதன்

அக். 3. காந்திஜி வாழ்க்கையிலிருந்து - எம். எஸ். கல்யாணசுந்தரம்
வாழ்ந்து காட்டிய வள்ளல் - ஸ்ரீராமன்
(சிவானந்த சுவாமிகள் பற்றி)
,, 3. பாரதியார் குடும்ப வம்சாவளி குறிப்புகள் - 'ரகமி' (படத்துடன்)
,, 10. கிராமோத்யோக் பவன் பொம்மை விழா - குயிலி
,, 17. தமிழ் வளர்க்க பிறந்த வித்தகர் - என். பி. ஸ்ரீரங்கன் (வை. மு. கோ.)

நவ. 7. வத்திராயிருப்பு - 'வைத்தி வாத்தியார் பள்ளியின் நூற்றாண்டு விழா' - இரா. அரிகர கிருஷ்ணமூர்த்தி

நவ. 14. தீபாவளி பற்றிய வரலாறுகள் - குத்தாலம் பாலு
கவிதை மலர்கள் - இரா. சுராஜ்
நாலாயிரத்தில் நாட்டுப் பாடற் பண்புகள் - பூ. ஜெயராமன்
,, பரிசு பெற்ற பார காவியம் - ஜஸ்டிஸ் எஸ்.மகாராஜன்
(அரங்க சீனிவாசனின் 'காந்தி காதை' பற்றிய திறனாய்வு) மூலம் : ஆங்கிலம்.
தமிழ் மொழி பெயர்ப்பு - கோவேந்தன்
,, 21. திருச்செங்கோடு காந்தி ஆச்ரமம்

டிச. 12. பாரத மாதாவும் மூன்று சுதேசிகளும் - ஆஜி. ரங்கநாயகி
பாரதியின் உரைநடை - ஆர். பி. சாரதி
ஸ்வாமினியின் மலரும் நினைவுகள் - 'ரகமி' (பாரதி பற்றியது)
பாரதி புகழில் பதிந்த இருவர் - எதிரொலி - விசுவநாதன்
தெலுங்கு நாட்டின் பாரதியார் - பேராசிரியர் சி. ஆர். சர்மா (கரிமெள்ள சத்திய நாராயணா)

டிச. 19. உலகிலேயே மிகச் சிறிய குள்ளநரி
,, கிறிஸ்துவும் அவதாரங்களும் - டாக்டர் பி. எம். ரெக்ஸ்

## 12. தினமணி சுடர் - கவிதைகள்

ஜன. 14. தை மகளுக்கோர் தமிழ் மாலை-திருமயம். (பொங்கல் சிறப்பிதழ்) புலவர் முத்து வேங்கடேசன்.

,, எங்கள் கிராமமும் ஒரு பிரியமான பொங்கலும் - தேவகி குருநாத்

,, பொங்குக பொங்கல் - நெல்லை ஆ-கணபதி.

ஏப். 14. தமிழ்ப்புத்தாண்டு - நெல்லை ஆ. கணபதி

(தமிழ்ப் புத்தாண்டு சிறப்பிதழ்). துந்துபிக்கோர் சந்தனக் கவிமாலை- திருமய்யம் புலவர் முத்து வேங்கடேசன்

ஆக. 15 சுதந்திர நாள் சூளுரை! - புதுவை அருணன்.

(சுதந்திர தின சிறப்பிதழ்)
சுதந்திரம் நிலைக்க வேண்டும் - குடந்தை புகழேந்தி
சுதந்திர நன்னாள் - கவிஞர் நெல்லை ஆ கணபதி
சுதந்திர நாள் மலர வேண்டும் - பாவலர் எழிற் கோவன்.

செப். 12. சொற்களும் பாரதியும் - மதிவண்ணன்.
புதிய காண்டீபம் - இளையவன்.

,, 26. இவன் தான் பாரதி - அடியார்க்கு நல்லான்

அக். 3. காந்தித் திருநாள் - எழிற் கோவன்.

நவ. 14. தீபாவளி அருள் வேட்டல் - புலவர் முத்து
வேங்கடேசன்.

தீபாவளி புது தீபம் ஏற்றிடுவோம் - ஸ்ரீதரன்·

தின சிறப் இன்பத் திருநாள் - மதிவண்ணன்
பிதழ்) விடிவுக்கு சுடரேற்ற வாருங்கள். கே. ராமமூர்த்தி

நவ. 21. காந்திய சகாப்தம் முடிவுற்றதோ! - திருமயம்
புலவர். முத்து வேங்கடேசன்.

டிச. 12. ஒரு கவிஞனின் வணக்கம்! - மதிவண்ணன்
அப்படி ஒரு புயல் வரவேண்டும் - இளையவன்.

டிச. 26. இயேசுபிரான் தாலாட்டு - திருமயம் புலவர்
முத்து வேங்கடேசன்.

## 13. தினமணி - சுடர் - மகளிர் பகுதி - செய்திகள்

(அழகு, மருத்துவம், சமையல், இல்லம் தொடர்பானவை)

ஜன. 17. எதிர் ஜாமின் அல்லது மாப்பிள்ளை விலை.
பெண்களுக்கான நவீன குடும்ப நல சிகிச்சை முறை.
—தொகுப்பு - பத்மா.

ஜன. 24. கொழுப்புச்சத்து உடலுக்குத் தேவையா?
கர்ப்பக் கிரகமும் பெண்களும்
இல்லத்தரசிகளுக்கு ஒன்பது யோசனைகள்.

பிப். 7. தெரிந்து கொள்ள வேண்டியவை; உடல் நலனுக்காக
பாவையர் ஆடும் பல்லாங்குழி - டாக்டர் அ. பிச்சை.

,, 14. அழகு தோற்றத்துக்கு முகப் பொலிவு

,, 21. மலர்களின் மணமும் ஆரோக்கியமும்.
இல்லத் தரசிக்கு 10 யோசனைகள்
தோலை வீணடிக்காதீர்.

,, 28. சத்து மிகுந்த சமையல்!
காய்கறிப் பூரி
முதிர்ந்த பெண்கள்.

மார்ச். 7. நகமும் அதன் பொலிவும் - குயிலி ராஜேஸ்வரி
ஆடைகளும் காக்கும் முறையும்- ,,
துணிகளை இஸ்திரி செய்யும் பொழுது
கவனிக்க வேண்டிய முறைகள்- ,,

மார்ச் 14. குழந்தைகளின் இடது கைப்பழக்கத்தை
மாற்ற முடியுமா? —நளினி
செய்து பாருங்கள் — ,,
வண்ணங்களும் குணங்களும் - குயிலி-
,, 21. கணவரை வெற்றி கொள்வது எப்படி!
அழகாயிருங்களேன்! — குயிலி
,. 28. வேனிற் காலத்தில் சருமப் பாதுகாப்பு — குயிலி
'ஏ' ஒன் பொடி. சத்துள்ள ராகி பானம்.

ஏப். 4. எட்டு யோசனைகள்.
,, 11. சண்டை போடுங்கள்,
ஜனதா பிரிஜ்,
வேனிற் கால பாதுகாப்பு - குயிலி.

ஏப். 15. கோலங்கள் நம்முடைய தனிச்சிறப்பு
நீருக்கு அடியில் கோலம் - குயிலி
காலத்தோடு ஒத்து வாழ்! - நளினி
'' 25. முகம் கண்ணாடியாக மின்ன நிலவு முறை
கூந்தல் பாதுகாப்பு, பொடுகு போக.

மே 9. ஓர் இனிய பொழுதுபோக்கு - ரமணி ரங்கநாதன்
பெண்கள் தெரிந்து கொள்ளக் கூடிய
பொது வைத்தியம் - குயிலி
" 16. முகத்துக்கு அழகு தருவது கண்கள் - குயிலி
ஐந்து அழகுக் குறிப்புகள் - நளினி
'' 23. டயாபெடிஸ்,
10 யோசனைகள்!
கண் மை தயாரிக்கும் விதங்கள்
'' 30. பட்டு, நைலான், நைலக்ஸ் துணிக்கு சாயம் போடுதல்
- குயிலி

ஜூன் 6. சில சுலப தயாரிப்புகள்
" 13. நீரின் மேல் கோலம் - குயிலி
கூந்தல் கருமையைப் பேண - நளினி
சில யோசனைகள் - ரமா ராமநாதன்
'' 20. இனிய பொழுது போக்கு
மூங்கில் தட்டில ஒரு பூச்சாடி!
,, 27. குழந்தைகள் ஆரோக்கியத்துக்கு
அவசியமான சுலப வைத்திய முறைகள்
காதி கிராமோத்யோக் பவன் வெள்ளி விழா - குயிலி

ஜூலை 4. மெனோபாஸ் - குயிலி
இனிய பொழுதுபோக்கு
தேய்ந்த ரிக்கார்ட் தட்டில் யானை -
ரமணி ரங்கநாதன்
,, 11. கர்ப்ப காலத்தில் உடல் பாதுகாப்பு - குயிலி
,, 18. குழந்தையும் தாய்ப்பாலும்
தலைமுடி நன்கு வளர,
,, 25. தாய்ப்பாலும் கவனிக்க வேண்டிய விதிகளும்

ஆக. 1. குழந்தை உணவு குயிலி -
வைட்டமின் துவையல்கள்-தங்கம் சந்திரமோகன்
,, 15. குழந்தை உணவும் காப்பிடச் செய்யும் முறையும்-
குயிலி; ஆரோக்கியத்திற்கு மருதாணி
,, 22. குழந்தையின் உறக்கமும், வளர்ப்பும்
,, 29. சிறந்த தாயாகத் திகழ,
வெள்ளைத் தொல்லையா!

செப். 5.
,, 12. கர்ப்ப காலமும் பாதுகாப்பும்—குயிலி
,, 19. கர்ப்ப கால வலி சிகிச்சை
,, 26. குழந்தைகளைப் பற்றிய சிந்தனை-குயிலி

அக். 3. கலை அழகுமிக்க பலவகைத் தோரணங்கள்-தங்கம்
சந்திர மோஹன்
,, 10. வண்ணக் குங்குமம், நெற்றிச்சாந்து ,,
மகளிர் மனதில் கொள்ள...-ரமா ராமநாதன்
,, 17. பாவையரிடையே படிக்கும் பழக்கம்-சுசீலா கணேசன்
,, 24. குழந்தைகள் பற்றிய சிந்தனை-குயிலி
,, 31. சிறுவர்-சிறுமியர் எதிர்காலம்-குயிலி

நவ. 7. சின்னச் சின்ன யோசனைகள் சில-ரமாரங்கநாதன்
,, 14. விடுதியில் வளரும் குழந்தைகள்-குயிலி
,, 21. திருட்டுகள் ஜாக்கிரதை!—ரமணி ரங்கநாதன்
,, 28. குழந்தைகளின் கதை கேட்கும் ஆர்வம்-குயிலி

டிச. 5. பெண்களும் சிக்கனமும்-குயிலி
,, 26. திருமதி நிர்மலா காளிமுத்துபயிரிடும் அபூர்வ ரோஜா
-குயிலி
ஆண்களின் இதய நோய்க்குக் காரணம் பெண்களே!
—ஹெலன்ஞானப்பிரகாசம்

## 14. தினமணி சுடர்-சிறுவர் பக்கம்-செய்திகள்

ஜன. 17. வேடிக்கை விஞ்ஞானம்-குப்! குப்குப்! குப்! குப்குப்! —தாத்தா.
பந்தும் ஸ்டம்பும்—ஆர். பி. சாரதி.
,, 24. பாரதியின் புதிய ஆத்திச்சூடி.
உபாத்தியாயர் ஏன் அழுதார்—தாத்தா. (சிறு கதை)
கனவில் விலங்குகள்,
வேடிக்கை விஞ்ஞானம்,

பிப். 7. 'ஹைஜம்ப்' சுண்டெலி
வேடிக்கை விஞ்ஞானம்-கடல்மீது படுத்துக் கொள்ளலாம்.
,, 14. ஏட்டிக்கு போட்டி,
சூ மந்திரக்காளி, பேசும் தலை!
,, 28. 'ஐஸ்' வேடிக்கைகள்—தாத்தா
மைனாக் குருவிகள்—பூங்கா அண்ணா.
காப்பி அடிப்பது எப்படி?—தாத்தா.

மார்ச் 14. நாவலே வேண்டாம்—தாத்தா
உங்களுக்குத் தெரியுமா?
,, 21. திருடனுக்குச் சாக்கலேட்!—தாத்தா.
உங்களுக்குத் தெரியுமா?
,, 28. நோயாளிகள் வேலை நிறுத்தம்.
உங்களுக்குத் தெரியுமா?

ஏப். 4. பூதக்கண்ணாடி சொன்ன கதைகள்.

குறிப்பு:- இப்பகுதி இத்துடன் முடிந்துள்ளது. பிறகு தொடரவில்லை.

## 15. 1982—தினத்தந்தி—ஞாயிறு மலரில் வெளிவந்த சிறு கதைகள்

ஜன. 3. வேலிக்கு வெளியே -ஷோபா லலித்

ஜன. 10. கசப்பில் இனிப்பு—உஷா தேவி

ஜன. 17. சிவப்பான ஒரு இரவு—மெ. மெய்யப்பன்.

ஜன. 24. பயம்+ரோஷம் = காதல் — நடிகை வடிவுக்கரசி. (நாடகம்)

ஜன. 31. வளைந்து செல்லும் பாதைகள்—குமாரி லலிதா நாராயணன்

பிப். 7. ஜானுவின் இதயம்—எம்மார்
,, 14. நித்ய கன்னி—ஏவி. எம். கணேஷ்
,, 21. மஞ்சள் கயிறு—கே. ரேணு தேவி
,, 28. நதிமூலம்—பரத்

மார்ச். 7. நட்சத்திர திருமணம்—ர. சுவாமிநாதன்.
,, 14. பிரிந்து போன பறவைகள்—லட்சுமி பிரியா
,, 21. பாதை மாறிய பயணம்—ஜெய்பு
,, 28. மனைவியை விரட்டும் ஜென்மங்கள்—எஸ். விஜயா

ஏப். 4. தெய்வ சக்தி—நிருத்யோதயா
,, 11. தற்காலிகங்கள்—கரு. நாகராசன்
,, 18. பேய்—முல்லைக்கரை கணேசன்
,, 25. நடைபாதை பூக்கள்—லலிதா நாராயணன்.

மே. 2. பெண்ணின் சுமை!—ஜி. பத்மினி.
,, 9. சிநேகிதி—ஷைலஜா
,, 16. கன்னி சோதனை—தமிழினியன்.
,, 23. டெலிவிஷனில் சுஜாதா—உஷாதேவி.
,, 30. இளமையில் வசந்தம் —ஏவி.எம். கணேஷ்

ஜூன். 6. மீண்டும் அவள் —வினு
,, 13. அவளின் நீண்ட நகங்கள்—நிவேதா.
,, 20. அழகின் அணைப்பு—எஸ்.ஏ. ராமன்.
,, 27. அவன் கொடுத்த விலை—மெய்யப்பன்

ஜூலை 4. வார்த்தை தவறிவிட்டாய்...—லட்சுமி ராஜரத்னம்
,, 11. எங்கோ பார்த்த முகம்—வி.உஷா
,, 18. வாய்க்கால் அருகே—மன்னார்குடி விசுவநாதன்.
,, 25. திருட்டு பூனை—எஸ். விஜயா.

ஆக. 1. பக்கத்தில் படுத்திருந்தவள்—வி. பார்த்திபன்
,, 8. உணர்வுகளை உணராதபோது...—அரசு மணிமேகலை
,, 22. நிழலாடும் நெஞ்சம்—மாலதி பாலன்
,, 29. ஆடும் வரை ஆட்டம் —விநோதா நாராயணன்.

செப். 5. கை மேல் பலன் —ஜெய்பு.
,, 12. ஓடினாள்—ஓடினேன—ஏவி. எம். கணேஷ்
,, 19. டெலிவிஷன் வாழ்க!—அருணா கோவிந்த்
,, 26. விலங்கு தளர்கிறது—செல்வி பிரீதி

அக். 3. இன்னொரு முறை—லலிதா நாராயணன்
,, 10. மனப்புயல்—நிருத்யோதயா
,, 17. அலங்காரம்—லட்சுமி ராஜரத்தினம்

அக். 24. பிரிவு—யுவராணி.
,, 31. அழகின் மயக்கம்—பிரேமா ராகவன்.

நவ. 7. அக்கா குருவி!—வி. உஷா
,, 21. வாரிசு—ப. மு. இளங்குமரன்.
,, 28. புதிய அலைகள்—இனியன் சம்பத்.

டிச. 5. சந்தியா வேலைக்கு போகிறாள்—பிரீதி.
,, 12. போய் வா காதலே!—கிரிஜா-ஜே. நாயர்.
,, 19. மெழுகு வர்த்தி—ஏவி. எம். கணேஷ்.
,, 26. மவுனம் கலைந்தது—எஸ். விஜயா.

## 16. தினத்தந்தி-ஞாயிறு மலர்
### இளைய தலைமுறையினர் பற்றிய பேட்டிகளும் செய்திகளும்

ஜன. 3. உமா, சந்தியா
,, 10. என் 'அவர்'—பொன்மணி. வைரமுத்து.
,, 17. வித்தியாவின் புத்தாண்டு ஆசை
,, 24. சுலக்சனா
,, 31. 16 வயதினிலே...சாரதா மூர்த்தி

பிப். 7. சுஹாசினி காவிராவில் சத்யா தேவி.
,, 14. இசைக்கு ஒரு ஜெயலட்சுமி.
,, 21. லட்சுமி சரசுவதி
,, 28. காதல் மூன்றாவது தலைமுறை.

மார்ச். 7. திரைப்பட கல்லூரி தோட்டத்து பூக்கள்.
,, 14. நீச்சல் அழகி ரமா
,, 21. சிரிப்புக்கு ஒரு ஜோடி.
,, 28. அமெரிக்காவில் படித்த காஞ்சனா.

ஏப். 4. சுதா மீனா சாந்தி.
,, 11. மாடல்கள்
,, 18. தோட்டக்கலை.
,, 25. ஸ்ரீ தேவியை புகழ்கிறார் சவுகார் ஜானகி.

மே 2. மனோசித்ரா.
,, 9. ரஜினிகாந்துடன் நடிக்க சான்ஸ்.
,, 16 மூன்று சகோதரிகள்.
,, 23. ஒரு டைரக்டரின் குடும்ப வாழ்க்கை.
,, 30. இரண்டு கேள்விகள்.

ஜூன் 6. ஸ்ரீ இன்று வயது 17
,, 13. பாடகியான கல்லூரி பேராசிரியை.

ஜூன் 20. சுயம்வரத்தில் பிரிந்த ஜோடி
,, 27. நடன மாடல் சுஜாதா
ஜூலை. 4. விஜி
,, 11. இவர்கள் மோதுகிறார்கள்.
,, 18. ஆகா...இட்லி என்ன ருசி.
,, 25. பிரியவதனா.
ஆக. 1. நடிப்புக்கு கல்லூரி அவசியமா?
,, 8. புதிய கீதம் லதா ராணி
,, 22. ஷோபா.
,, 29. மாடல் அழகி.
செப். 5. மெட்ராஸ்-டு-பாண்டிச்சேரி
,, 12. கல்லூரியில் நடனம் கற்கிறார்கள்.
,, 19. சந்திப்பு.
,, 26. டைரக்ஷனில் 2 மாணவிகள்.
அக். 3. ஜெய சிந்த்
,, 10. டிஸ்கோ.
,, 17. வயது 20.
,, 24. சைக்கிள் சரளா.
,, 31. ஸ்ரீநிதி.
நவ. 7. இளைய தலை முறை.
,, 21. நட்சத்திரங்களை ஆட்டி வைக்கும் புலியூர் சரோஜா.
,, 28. சரிதா சரிதான்...
டிச. 5. விமானம் ஓட்ட ஆசை.
,, 12. காதல் மலர்ந்தது எப்படி
,, 19. இவர்கள் கண்மணி பூங்கா.
,, 26. முட்டைக்குள் ஓவியம்.

## 17. தினத்தந்தி தொடர் கதைகள்

| | தொடக்கம் | | முடிவு |
|---|---|---|---|
| அகல் விளக்கு—ஏ. நடராஜன் | — | — | ஜன. 4 |
| இரண்டாவது இரவு—வேலூர் அப்துல்லா | ஜன. 7 | — | ஏப். 5 |
| ஒரு கவிதை அரங்கேறுகிறது —நாதன் | ஏப். 5 | — | ஜூன் 24 |
| கண்ணம்மா-அமுதாகணேசன் | ஜூன். 24 | — | செப். 30 |
| அணையாவிளக்கு—தாயப்பன் | செப். 30 | — | டிச. 27 |
| நிழல்—குரும்பூர் குப்புசாமி | டிச. 27 | — | — |

இத்தொடர்கதைகள் வாரம் இருமுறை (திங்கள், வியாழன்) மாறி மாறி வெளிவருகின்றன.

**தினத்தந்தி — தொடர் கதைகள் (படக்கதை)**

**கன்னித்தீவு—இது பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வருவது.**

| | | தொடக்கம் | | முடிவு |
|---|---|---|---|---|
| கதாநாயகி | — | — | — | பிப். 22 |
| புதையல் | — | பிப். 26 | — | மே. 31 |
| சி.ஐ.டி. சங்கர் | — | ஜூன்.5 | — | செப். 14 |
| மர்மக் குகை | — | செப். 17 | — | டிச. 23 |
| பச்சை நோட்டு | — | டிச. 29 | — | — |

**18. தினத்தந்தி கட்டுரைகள் (சினிமா தொடர்பானவை)**

ஜன. 14. (பொங்கல் மலர்)
படம் எடுத்துப்பார்!—தூயவன்
ஆசைக்கு அளவில்லை—பூர்ணிமா ஜெயராம்
கண்ணீர் பொங்கல்—கார்த்திக்
நடிகையின் வாழ்க்கை—சரிதா
பெண் பிறந்தாள்!—நடிகர் ரஜினிகாந்த்
ரகசியம்—சுமலதா
பிரதாப் ராதிகா சந்திப்பு (உரையாடல்)
தாய்மீது ஆணை!—டைரக்டர் டி. ராஜேந்தர்

ஏப். 14. (புத்தாண்டு மலர்)
காதல் போதை—நடிகை சில்க் சுமிதா
நானும் ஒரு குழந்தை—நடிகை தீபா
திரைக்குப் பின்னால்- டைரக்டர் ஏ.எஸ். பிரகாசம்
எனது லட்சியம்—கே. பாக்யராஜ்
தாகம் தணியவில்லை—சரிதா
மோகன்—பூர்ணிமா ஜெயராம் சந்திப்பு

ஆக. 15. (சுதந்திர தின மலர்)
பார்வை பல ரகம்!—கமலஹாசன்
நான் ஒரு குழந்தை—ஸ்ரீதேவி
சினிமா உலகம்—ராதிகா
காதல் வலை—கார்த்திக்
நான் வில்லன் அல்ல—தியாகராஜன்
கோழி கூவுது—கங்கை அமரன்

நவ. 14. (தீபாவளி மலர்)
நான் காதலிக்கிறேனா?—கார்த்திக்

என் உயிரே உஷா! —டி. ராஜேந்தர்
என் கதை—சுலக்சனா
நினைத்தது நடந்தது!—நடிகை ராதா
கலைக்கண் வேண்டும்! — கமலஹாசன்
நடிக்க வந்தேன்!—பிரபு

கேள்வி—பதில்

ஜன. 14. கே. பாலசந்தர் பதில் சொல்கிறார்!

ஏப். 14 ராதா பதில் சொல்கிறார்!

ஆக. 15. 'சிலுக்கு' சுமிதா பதில்கள்

நவ. 14. ராதிகா பதில் சொல்கிறார்

19. தினத்தந்தி- கட்டுரைகள் (பயணம், தொழில், தொடர்பானவை)

ஜன. 14. (பொங்கல் மலர்)
தன்னிறைவுப்பொங்கல்—அமைச்சர் குழந்தைவேலு

ஏப். 14. (புத்தாண்டு மலர்)
புதியதோர் உலகம் செய்வோம்!—அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு

ஆக. 15. (சுதந்திர தினமலர்)
நான் கண்ட சில நாடுகள் - கல்வி அமைச்சர் அரங்க நாயகம்

செப். 30. (தினத்தந்தி தொழில் மலர்)
கோழிக்குஞ்சு முதல் செயற்கை கோள் வரை
அலங்கார கலையின் சிகரம் 'கற்பகம்'
பளபளக்கும் கருங்கல் ஏற்றுமதி
தொழில் நுட்பம் பற்றி ஆலோசனை கூறும் 'இட்காட்'—எம். விசுவநாத்
மருந்து உற்பத்தியில் முன்னேறும் 'தாதா'
இனிய இசைக்கு கோனி 'கேசட்'
சைக்கிள் தொடங்கிய அருணா
இந்தியாவுக்குப் பெருமை தரும் இந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸ்
பூரிக்க வைக்கும் 'பூம்புகார்'
கதர் கிராம தொழில் வாரிய பணிகள்— அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன்
விவசாயிகள் விரும்பும் 'விஜய்'

நல்ல காகிதம் செய்வோம்!—எஸ். ஜி. ரங்கன்
உப்பு சொல்லும் கதை—மா. கருப்பையா
'டிரம்' தயாரிப்பில் கோபால் நிறுவனம்
டெலிவிஷன் உலகில் டயனோரா
தமிழகத்தில் ஜவ்வரிசித் தொழில்—ஊரகத்
தொழில் அமைச்சர் கே. ஏ. கிருஷ்ணசாமி
வாடிக்கையாளர்களின் விடிவெள்ளி 'விவேக்'
தொழில் துறையில் மறுமலர்ச்சி—தொழில்
அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு
சத்துணவு திட்டத்தில் கோழிமுட்டை
சோப்புத் தொழிலில் புதிய சாதனை

நவ. 14. (தீபாவளி மலர்)
ஜனாதிபதியைச் சந்தித்தேன்—'வீணை'
எஸ். பாலச்சந்தர்
நீரில் எரியும் விளக்கு!—குமரி அனந்தன்

## 20. தினத்தந்தி கவிதைகள்

ஜன. 14. கவி'தை'—கவிஞர் காமகோடியான்
,, 14. பொங்குது பொங்கல்—கவிஞர் நடனகேசவன்

ஏப். 14. வருக புத்தாண்டு—கவிஞர் அருண கீதாயன்
,, ஒளி தருவாய் புத்தாண்டே—கவிஞர்
முத்துராமலிங்கம்
,, பொன்மகள் வந்தாள்—புலவர் சி. பரஞ்சோதி

ஆக. 15. சுதந்திரம் போற்றுக!—கவிஞர் பொன்னருவி

நவ. 14. புதுமைத் தீபாவளி—பூவை எஸ். ஆறுமுகம்
இன்ப ஒளி—கவிஞர் பொன்னடியான்

# 35. பட்டிமன்றமும் வழக்காடுமன்றமும்

—பூ. சொல்விளங்கும் பெருமான்

பட்டிமன்றங்களும், வழக்காடு மன்றங்களும் கற்றோரிடையும், பொதுமக்களிடையும், மாணவரிடையும் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளன. சுவை நலம், சொல்லாற்றல், வாதத் திறன் என்பன மிளிர்கின்றன. எண்பத்திரண்டில் புதிதாக உருவாகிய 'சந்திப்பு'ம் அதன் முன்னோடி வகைகள் போலக் கருத்துப் பரப்பும் கருவியாகவும், கலைத்தன்மையுடையதாகவும்காணப்படுகின்றது.

## முன்னுரை

அரசியல், திரைப்படம் போன்றவை மக்கள் நடுவில் செல்வாக்குப் பெற்று வருவதைப் போன்று இன்று பட்டிமன்றங்களும் வழக்காடு மன்றங்களும் மக்கள் கவனத்தை ஈர்த்து வருகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்பு கம்பராமாயணம், சிலப்பதிகாரம், பாரதம் போன்ற இலக்கியங்களே பட்டி மன்ற ஆய்வுப் பொருளாக இருந்தன; ஆனால் அண்மைக் காலமாகச் சமுதாயப் பிரச்சினைகள் பட்டிமன்ற ஆர்வலர் நடுவில் பெரிதும் ஆயப் பெறுகின்றன.

நான்கு சுவர்களுக்குள் ஆராயப் பெற்ற இலக்கியச் செய்திகள் நாற்சந்திகளில் எளிமையாக்கப்பட்டுத் தரப்படுகின்றன. அறிவு விளக்கமாகவும் பொழுது போக்காகவும் அமைந்து பல நூறு கருத்தரங்குகளும் நூல்களும் செய்யாத பணியை இப் பட்டிமன்றங்கள் செய்கின்றன. எழுத்தறிவில்லாதவரும் நின்று கேட்டுத் தெளிவு பெறுகின்றனர்.

ஒரே செய்தியைப் பல்வேறு அறிஞர் வெவ்வேறு கோணத்தில் நோக்கும் போது புதுச்சுவை பிறக்கிறது. உழுத சால் வழியே உழாமல் குறுக்குச் சால் அடிக்கும் போது மன வயல் புது வளம் பெறுகிறது.

**மக்களை ஈர்க்கும் கலை**

மக்களிடையே கல்வித்தரம் உயர உயர பட்டி மன்றங்கள் மிகச் செல்வாக்குப் பெற்று வருகின்றன. கீழ் உணர்வுகளுக்குத் தீனி போடும் நாடகங்களைக் கண்டு முகஞ்சுளித்தவரும், கரகம் மேளம் இவற்றைக் கண்டு சலித்தவரும் அறிவுக்குத் தீனி போடும் இக்கலையின் பால் திரும்பியதில் வியப்பில்லை.

கூத்தாடிகள் என வெறுக்கப்பட்ட நடிகர், சங்கரதாஸ் சுவாமிகள், பம்மல் சம்பந்த முதலியார் போன்ற கற்றவரின் நாடக நுழைவுக்குப்பின், மேடைக்கலைஞர் என்று போற்றப் பட்டனர்; பட்டிமன்றமும் வழக்காடு மன்றமும் கற்றவரால் மட்டுமே திறமையாகக் கையாளப்படுவதால் அவற்றிற்கு மக்கள் நடுவில் ஒரு தனி மதிப்பு ஏற்பட்டு விட்டது.

சிலப்பதிகாரம், திருவாசகம், இராமாயணம் போன்ற தூய நூல்களில் பேசப்பெற்று பெருவழக்காக இருந்த பட்டி மன்றம் இடைக்காலத்தில் நலிந்தும் இக்காலத்தில் வளர்ந்தும் காணப் பெறுகிறது.

**வழக்காடுமன்றம்**

பட்டிமன்றத்திலிருந்து வளர்ந்த கலை வழக்காடு மன்ற மாகும். இரண்டிற்கும் அடிப்படையில் சில வேற்றுமைகள் உண்டு. புதுப்பார்வையும், ஒன்பான் சுவையும், புதுச் சிந்தனை யும், நறுக்குத் தெறித்த கேள்வி விடையும், சொல் வீசும், நற் கருத்தும் பளிச்சிடும் இவ்வழக்காடு மன்றங்கள் எல்லாத் திறத் தினராலும் வரவேற்கப் படுவதில் வியப்பில்லை.

**வேறுபாடுகள்**

பட்டிமன்ற வினாவிற்கு விடை கிடைக்கக் குறைந்தது பத்து மணித்துளிகள் காத்திருக்க வேண்டும். வழக்காடு மன்றத்தில் உடனுக்குடன் விடை கொடுத்தாக வேண்டும். பட்டி மன்றத் தில் எழுப்பப் பெறும் சிக்கலான கேள்விகளுக்கு விடை கூறா விடினும் ஒன்றுமில்லை; தப்பித்து விடவும் வாய்ப்பு உண்டு. வழக்காடு மன்றத்தில் விடை கூறாமல் தப்பிக்க வழியே இல்லை. பட்டி மன்றத்தில் குறைந்தது ஏழுபேர் பேசுவதால் ஒருவர் சோர்வை மற்றவர் சுவையாக்க முடியும். இங்கு மூவரே பேசு வதால் ஒருவர் பேச்சில் கருத்து, சுவை, ஓட்டம், கோர்வை குன்றினும் நிகழ்ச்சி முற்றிலும் சோர்வுற வாய்ப்பு உண்டு.

வழக்காடு மன்றத்தில் பொதுமக்களின் பங்கு மிக நெருக்க மாக இருக்கும். இலக்கிய வழக்கறிஞர் கேட்கும் வினா ஒவ்

வொன்றும் கேட்போர் தம்மை நோக்கி வீசப்படுவதாகவே எண்ணி அவரும் விடையைச் சுடச்சுட எண்ணுவர். வாதாடு பவரும் அதே விடையைக் கூறிவிட்டால் மிக மகிழ்வர். வேறு விடை வந்தால் அக மகிழ்வர்.

பட்டி மன்றத்தில் ஒருவர் 15 மணித்துளி பேச அணியமாய் இருந்தால்போதும்; வழக்காடு மன்றத்தில் குறைந்தது. 2½ அல்லது மூன்றுமணிநேரம் பேசவேண்டுமாதலின் வாதிடுவோருக்கு ஆழக் கல்வியும், பன்னூற் பயிற்சியும், உலகியலறிவும் தேவை. பட்டி மன்றத்தில்மிகநுணுக்கமான வேறுபாடுடைய ஒப்புடைய தலைப் புகள் போதும். எடுத்துக்காட்டாக: தம்பியருட் சிறந்தவர் யார்? இலக்குவனா—கும்பகர்ணனா? வழக்காடு மன்றத்தில் ஒரு தலைப்பிலுள்ள இரு வேறு எதிரான செய்திகள் மோதும். எடுத்துக்காட்டாக: கோவலன் குற்றவாளி —குற்றமிலன். இவ்வாறு ஒன்றிலிருந்து ஒன்று இன்று கிளைத்தாலும் இரண்டுமே மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழகத்தில் வேரூன்றிய கலைகளாகவே இருக்கின்றன.

### சமயத்தில்

முன்பு, சமணமும் பௌத்தமும் மக்கள் நடுவில் செல்வாக் குப் பெறுவதற்கு இக்கலையையே நாடின. மக்கள் கூடும் ஊர் மன்றத்தில் நாவல் கிளையொன்றை நடுவர். சமயக் கருத்தினை வாதிட விரும்பும் சமயவாதிகள் எதிரெதிராக நின்று தம்தம் கோள்களை நிறுவிப் பேசுவர். நாவன்மையைக் காட்டிப் போட்டியிடுவதன் குறியீடாக 'நாவல்' மரக்கிளையை நட்டனர் போலும். ஒட்டியும் வெட்டியும் பேசும் உண்மைப் பட்டிமன்றங் களாகவும் வழக்காடு மன்றங்களாகவும் அவை அமைந்தன.

மாயங்களும் மந்திரங்களும் புரிபவர்களும் இவ்வாறே நின்று போரிட்டுள்ளனர். அனல் வாதம் புனல் வாதம் என்பனவும் இவற்றின் விரிவேயாகும். அரசரின் அவைகளில் இலக்கிய விளக் கங்கள் இவ்வாறே சுவைபெற்றன. வழக்காடு மன்றமென்றோ பட்டிமன்றமென்றோ பெயர் சுட்டப் பெற்றிருக்காதே யன்றி அவ்விவாதங்கள் இம்முறையிலேயே அமைந்திருந்தன.

### பள்ளேசல்

முக்கூடற்பள்ளுவில், கடைசியில், மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் இடும் சைவ வைணவச் சண்டை வழக்காடு மன்ற மன்றி வேறென்ன?

மூ. ப: 'மங்கையொரு பங்கிருக்க யோகியென்று தான்—கை
யில் மழுவேந்தி நின்றானுங்கள் மத்தனல்லோடி.

இ. ப: கொங்கை தனில் நாச்சியாரைச் சங்கையில்லாமல்-
பண்டு கூடி நெய்யிற் கையிட்டானுங் கொண்ட
லல்லோடி.

மாதொரு பாகனாக இருக்கும் சிவபெருமான், தான் போகி யல்ல யோகி தான் என்று கையில் தீயேந்தி சத்தியம் செய்வது பச்சை பொய்யல்லவா? மார்பிலே திருமகளை வைத்துக் கொண்டே கொதிக்கும் நெய்யில் கைவிட்டு நான் போகியல்ல யோகிதான் என்று சத்தியம் செய்தவன் உங்கள் திருமாலல்லவா?—என இருவரும் வழக்கிடுகின்றனர்.

மூ. ப: காமனை மருகனென்று, எண்ணிப் பாராமல்—
காய்ந்து கண்ணி லேறு பட்டானுங்கள் கர்த்த னல்லோடி

இ. ப: மாமனென்று பாராமல் முன் கஞ்சனைக்கொன்றே—
கண்கள் மாறாதே பூப்பட்டான் உங்கள், மாயனல் லோடி.

[கண்ணிலேறு—கண்ணேறு என்றும் கண்ணால்தாக்கி, அருளின்மை என்றும் பொருள்பட நின்றது; பூப்பட்டான்—கண்ணில் பூப்படல் என்றும் தாமரை ஒத்த கண்ணன் என்றும் பொருள்பட்டது.]

சிவபெருமானது திருவிளையாடல்களையும் திருமாலின் லீலைகளையும் பழித்தும் உயர்த்தியும் வழக்கிடுவதை இங்குக் காண்கிறோம்.

மூ. ப: மாதொருத்திக் காசைப்பட்டுப், பொன்னின்
மயமாம்—பனி
மலையேறிப் போனானுங்கள் மத்த னல்லோடி

இ. ப: காதலித்துத் தம்பியுடன், சீதைபொருட்டால்—அன்று
கடலேறிப் போனானுங்கள், கண்ண னல்லோடி

மூ. ப: தான் பசுப்போல் நின்று கன்றைத்
தேர்க்காலில் விட்டே—சோழன்
தன்மகனைக் கொன்றா னுங்கள், தாணுவல்லோடி

இ. ப: வான் பழிக்குளாய்த் தவசி. போல மறைந்தே—நின்று
வாலியைக் கொன்றா னுங்கள், மாயனல் லோடி

அவள், சிவபெருமான் பார்வதி தேவிக்காகக் கைலாய மலை ஏறினான் என்று கூறியதும் இவள் இராமபிரான் சீதாதேவிக்

காகக் கடலைக் கடந்தானே என்று மறுத்துரைக்கிறாள். வழக்காடுமன்றம் சூடு பிடிக்கிறது.

மனுநீதிச் சோழன் வீதிவிடங்கனைத் தேர்க்காலிலிட்டுக் கொன்ற செய்தியும், இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற செய்தியும் மோதித் தெறிக்கின்றன.

மூ. ப: வலிய வழக்குப் பேசிச் சுந்தரன் வாயால்—அன்று
வையக் கேட்டு நின்றானுங்கள், ஐயனல் லோடி

இ. ப: புலி போல எழுந்து சிசு, பாலன் வையவே—ஏழை
போல நின்றான் உங்கள் நெடு, நீலனல் லோடி

வைதல் எனும் நடுப் பொருளில் நின்று வழக்காடுகின்றனர் இப்பொழுது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானைப் பித்தன் என்று வைததும் சிசுபாலன் திருமாலை தொண்ணூற் றொன்பது முறை வைததும் நடுப்பொருளாக நிற்கின்றன.

மூ ப: அடியனும் நாயனுமாய்க் கோவிற்புறகே—தொண்டன்,
அன்று தள்ளப் போனானுங்கள், ஆதியல்லோடி

இ. ப: முடியுஞ் சூடாமலேகை, கேசி தள்ளவே—காட்டில்
முன்பு தள்ளிப் போனானுங்கள், மூர்த்தியல்லோடி

அடியவர் சுந்தரரும் ஆண்டவர் சிவபிரானும் விறல்மிண்ட ரால் கோவிற் புறகே தள்ளப் பெற்ற செய்தியும், இராமபிரான் கைகேயியால் காட்டில் தள்ளப் பெற்ற செய்தியும் இங்கே பேசப் பெறுகின்றன. 'வெளியே தள்ளப் பெறுதல்' எனும் பொதுப் பொருளில் இருவரும் மோதுகின்றனர்.

மூ. ப: நாட்டுக்குள் இரந்தும் பசிக்,காற்றமாட்டாமல்—வாரி
நஞ்சையெல்லாம் உண்டானுங்கள், நாதனல்லோடி

இ. ப: மாட்டுப் பிறகேதிரிந்துஞ், சோற்றுக்கில்லாமல்—வெறும்
மண்ணையுண்டான் உங்கள் முகில், வண்ண னல்லோடி.

என்பதில் சிவபிரான் நஞ்சை உண்ட செய்தியும் திருமால் மண்ணை உண்ட செய்தியும் தற்குறிப்பேற்றமாகக் குறிக்கப் பெற்றிருக்கின்றன. இரந்தும் ஒன்றும் கிடைக்காததால் நஞ்சை யுண்டு இறக்க முயன்றான் சிவபெருமான் என்றும் மாடு மேய்த்தும் ஒன்றும் கிடைக்காததால் மண்ணை உண்டு மாய முயன்றான் மாயவன் என்றும் கூறி இருவரும் வழக்கிடு கின்றனர்.

மூ. ப: ஏறவொரு வாகனமும், இல்லாமையினால்—மாட்டில்
ஏறியே திரிந் தானுங்கள், ஈசனல் லோடி

இ. ப: வீறு சொன்ன தென்ன மாடு, தானுமில்லாமல்—பட்சி
மீதி லேறிக் கொண்டானுங்கள், கீதனல் லோடி.

வாகனத்திலுள்ள ஏற்றத் தாழ்வு இங்குப் பேசப்படுகின்றது. இவ்வாறு முக்கூடற்பள்ளுவில் சைவ சமய வைணவ சமயச் சண்டை, தர்க்க முறையில் பேசப்படுகின்றது. பெரும்பாலாக, எல்லாப் பள்ளுகளிலும் பள்ளி ஏசல் இடம்பெற்றிருக்கிறது. இப் பகுதி எல்லாராலும் பாராட்டப் பெற்றிருக்கிறது.

கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையிலும் அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனையிலும் சங்கரதாச சுவாமிகளின் பல நாடகங்களிலும் வரும் தர்க்கங்கள் இன்றைய வழக்காடு மன்றத்தை நினை வூட்டுகின்றன. அவற்றின் வளர்ந்த நிலையே இக் கலையாகும்.

**எரிந்த கட்சி எரியாத கட்சி**

'ரதி மன்மதன் தர்க்க ஒப்பாரி' எனும் நூலை இயற்றிய குடந்தை மாநகரம் எம். நாராயணசாமி பிள்ளை, தம் நூலில், ரதி சிவபெருமானிடமும், பார்வதியிடமும், திருமாலிடமும் பேசி வழக்காடிய காட்சிகளைக் காட்டியுள்ளார். இப்பகுதி நூலின் இறுதியில் வருகிறது.

மன்மதன் எரிந்துவிட்டான் என்பதைக் கேள்வியுற்றதும் ரதி அழுது புலம்பி அரன் அவை வந்து தம் தகப்பனாரை வினாவு கிறாள்.

" என்ன குற்றம் செய்தோமென்று எரித்தீரே மன்மதரை
பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படியும் பட்டீரே
கல்லடியும் வில்லடியும் கனமா படவில்லையா
அப்படிக்கு மன்மதரும் அடித்ததுண்டோ ஒந்தனையும்
அப்போது என்தகப்பா அக்கினிக் கண் எங்கேயோதான்
மார்க்கண்டனுக்கு வயது பதினாறு கொடுத்தீர்
அவர் — பூக்குடலை கையெடுத்து ஒம்மைப் பூசிக்க வந்ததினால்
அவருக்கு — என்றும் பதினாறென்று எடுத்துரைத்தீர் என்தகப்பா
வில்லாலடித்தானே விஜயனவன் பார்த்திபனும்
அப்போது இந்த அக்கினிக் கண் இல்லையா
அவர்களைப் போலென் புருஷனும்மை அடித்த துண்டா
சொல்வீரே

அய்ந்து வித புஷ்பத்தாலும்மை அர்ச்சித்தா ரென்புருஷன்
சப்த மலரெடுத்து சாற்றினா ரென்புருஷன்
அவர்—என்ன குற்றம் செய்தாரென்று எரித்தீரோ மன்மதனை

அவர்—என்ன குற்றம் செய்தாரோ என்பழியை ஏற்றிடுவீர்
வீணாக இவ்வுலகில் வினைஐந்தும் செய்தாரோ
தெய்வச் சிறையை மன்மதராஜன் திரமா யிழுத்ததுண்டோ
வானவர் சிறையை மருவி இழுத்த துண்டோ......
காமனை அழைத்துவந்து கனலாய் எரித்தீரே
இந்த அநியாயம் செய்ய அடுக்குமோ ஒங்களுக்கு
மருமக னென்று சொல்லி மனமிரங்கிப் பாராமல்
சற்றும் இரங்காமல் தணலா யெரித்தீரே......
பித்துப் பிடித்ததோ என்புருஷன் தனைஎரிக்க
பெற்றமகள் அறுத்துவிழ பொறுப்பாரோ வையகத்தில்......
ஆலவிஷ முண்டதனால் அறிவழிந்து போனீரோ
மாயவனா ரென்மாமன் மனமகிழ்ந்து பார்த்தாரோ
அத்தை அலமேலும் அகமகிழ்ந்து பார்த்தாளோ
அந்த— கோபாலன் வம்மிஷத்தில் கொடுங்கபடு மெத்தவுண்டு
பெருமாள் வம்மிஷத்தில் பெருங்கபடு மெத்தவுண்டு...

என்று ரதி பல்வேறு கேள்விகளை அடுக்குகிறாள். கல்லடி, வில்லடி, பிரம்படி பட்டபோதெல்லாம் நெற்றிக் கண் இருக்கத் தானே செய்தது — இப்படியெல்லாம் காமன் அடித்தானா? இல்லையே. அப்படியானால் இறைவன் ஏன் எரித்தான். நஞ் சுண்டதாலோ? பித்துப் பிடித்ததாலோ?

"அன்று கட்டிக்கொடுத்த தென்ன இன்று கண்ணாலெரித்த தென்ன
என்புருஷன் தனை யிழந்து போவேனோ என் தகப்பா......
என்மன்மதனை எரித்த கண்ணால் என்னையும் எரித்துவிடும்
என் புருஷனை எரித்த கண்ணாலும்பெண்ணையும் எரித்துவிடும்
..." என்று ரதி சிவபெருமானிடம் கரைந்துருகிப் பேசுகிறாள். அவனை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டுகிறாள். அதற்கு இறைவன்,

"மன்மதனை எரித்தேனென்று மனஸ்தாபம் படுகாதே
மாயன் குலத்தினிலே மாண்டவர்கள் வந்ததுண்டோ
ஆயன் குலத்தில் அழிந்தவர்கள் வந்ததுண்டோ
திருமால் குலத்தில் செத்தவர்கள் வந்த துண்டோ
இப்போ எழுப்புகிறேன் என்மகளே நீ கேளும்
செத்தவர்கள் வந்தாலே சிரிப்பார் உலகமதில்
மாண்டவர்கள் வந்தாலே வையகமும் தாங்காதே
சாம்பலாய்ப் போனவனும் தான்பிழைத்தா னென்றார்கள்
என்மேலே குற்றமில்லை எம்பெருமாள் செய்த குற்றம்
நாகராஜனைக் கொன்று நடுகளத்தில் தலையறுத்தீர்

இரணியனைக் கொன்று இடைச்சியையும் கைப்பிடித்தீர்
தன்பிள்ளை என்று சற்றும் வைத்துப் பாராமல்
என்மேலே குற்றமில்லை என்று சொன்னார் ஈஸ்பரரும் ''.

சிவபெருமான் தன்மீது குற்றமில்லை என்கிறார். தன்மீது பாணம் விட மதனை ஏவிய திருமால் போன்றவரே குற்ற முடையவர் என்றும் ஆதலால் உயிரை மீட்க முடியாதென்றும் கூறுகிறார். அதற்கு ரதி,

'' சீராளனைக் கொன்று திரும்பி உயிரளித்தீர்
பிள்ளையை அறுத்துண்டு பின்னே எழுப்பினீரே
இப்போ எழுப்புமையா என்புருஷன் மன்மதரை'' என்று சிவனை மடக்கி விடுகிறாள். அவர் அவளுக்கு மட்டும் தோற்றும் உருவினனாக அவ்வுருவிலியைத் தருகிறார்.

## இரதி மன்மதன் தருக்கம்

இந்த வகை ''எரிந்த கட்சி, எரியாத கட்சி'' லாவணிகளில் பலவகையுண்டு. இந்திரன் ஆணையை ஏற்று சிவபெருமான் மீது அம்புப் பாய்ச்சப் புறப்படும் மன்மதனைத் தடுத்து ரதி கூறுவதும் அவன் மறுப்பதுமாக அமைந்த தருக்கம் மிகச் சுவை பயப்பதாகும். திருமாலின் மகனும் சிவபெருமானின் மகளுமாக வாதிடுவதால் அது சைவ வைணவச் சண்டைபோலவே நமக்குத் தோற்றும். மன்மதன் சிவனைக் குறைத்துப் பேசுவதும் ரதி திருமாலைப் பழித்து மொழிவதும், ''ரதி மதன் பாடும் புதிய நவீன நவரத்தின ஒப்பாரி'', எனும் நூலில் காணலாம். இந்த நூலில் வரும் பாடல்கள் எல்லாமே ஒருவர் கூறுவதை மற்றவர் மறுத்தோ வெறுத்தோ கூறுவனவாகவே அமைந்துள்ளன.

இரதி : '' சண்டன் தனை உதைத்தான்
கண்டனுக்குயிர் கொடுத்தான்
தகித்தான் திரிபுரத்தை
பகைத்த சதுர்முகன் சிரத்தை
தன் கரத்திலே தரித்தான்
கெங்கையில் நெருபபை வைத்தான் ''

என்று அடுக்கிக் கொண்டே போகிறாள்.

தக்கன் தவத்தை அழித்தான், முக்கண்ணனையே படைத்தான்; காளிதனையே எதிர்த்தாடி வென்றான்; கனைகடல் நஞ்சையுண்டான், தாருகாவன ரிஷிகள் கோரமுற்ற மாமுனிகள் விடுத்த வேங்கைப்புலி, மான்குட்டி, பாம்புகளைத் தன்வச

மாக்கிக் கொண்டான்; ஜாதி முறையற்ற யோகி அவன்; ஆதியந்தமற்ற தேசி அவன்; அவனது

'தபசை அழித்திடும் போது
விபத்து வரும் தப்பாது
சண்டை செய்யப் போகாதீர்
கொண்டல் நிறவேள் மதனே''

என மதனை எச்சரித்துப் போகவிடாமல் தடுக்க முயல்கிறாள். இரதி. சிவனை உயர்த்திப் பேசியதை மறுத்து, மன்மதன் உனது ''ஆத்தாள் ஆண்டிச்சி, உன் தகப்பன் ஆடெடுத்த கள்ளன், மாடெடுக்கப் போவான், உன் அண்ணனோ மலைக்குறவன், மற்றொருவன் சந்திக்குச் சந்தி அன்னைபோல் பெண் தேடி அமர்ந்த கிறுக்கன்.'' ஆகவே அவனுக்குப் பக்கபலமில்லை; விரிபூங்கணை தொடுத்து வெல்வேன் என்கிறான்.

தன் தாய் தந்தையரையும் உடன் பிறப்புகளையும் பழித்துப் பேசியதைக் கேட்ட இரதி, மன்மதனை நோக்கி, ''உமதன்னை காசு உள்ளவரோடு பேசி விளையாடும் தேவதாசி, காட்டிடையன் உமது தந்தை; சிவனிடம் தலையைப் பறி கொடுத்தான் கமலபதி; இவர்கள் உன் துணைக்கு வரமாட்டார்கள்.''

கரிய குழல் மாதர்படை, அரியவெண் சந்திரகுடை
கரும்புவில் கரும்பு நாணி, அரும்பு மலர்க்கணை எல்லாம்
காற்றில் இலவம் பஞ்சைத், தூற்றியே விட்டதுபோல்
கருகி விண்டலம் வரைக்கும், சிறகில்லாமல் பறக்கும்
கர்த்தன் தபசழிக்க, சித்தஜனே போகாதீர்'

என்று மதனின் பலவீனத்தைசுட்டிக்காட்டி எதிர்த்து மொழிந்து தடுக்கிறாள்.

**வஞ்சப் புகழ்ச்சி**

இரதி, சிவபெருமானின் உயர்வைக்கூறி அவரிடம் மலர்க் கணை தொடுத்து மாய்ந்திட வேண்டாம் என்று கூறுவதும் மன்மதன் சிவபெருமானைக் குறைகூறித் தம் பெருமை தோன்றப் போருக்குப் போவேன் எனக் கூறுவதும் இந்நூல் தொடக்கத்தில் காணப் பெறுகிறது.

மதுரை நகரில் விறகு சுமந்து குறவனைப்போல் அலைந்து விற்றான்; உதிர்ப்பிட்டுக்காக வாணிச்சிக்காளாகி ஒட்டன்போல் மண்சுமந்து அடிபட்டான்;

''வில்லா லடியும் பட்டான் இன்னும்
கல்லா லடியும் பட்டான்
வேட்டன் செருப்படியும் பட்டான்
சாடையாய் இருந்து விட்டான்
வீடுவாசல் ஏதுமில்லை சுடு
காடுதான் அவனுக் கெல்லை
வெளியே சொன்னாலும் வெட்கம்''

ஆகவே ''விமலன் தபசழிக்க, அமரர் மனம் களிக்க விடைதர வேணுமடி கொடியிடைப் பெண்ணே ரதியே'' என்கிறான் மன்மதன்.

அவளோ, ''சங்கரன் தனை இகழ்ந்தீர் உங்கள் திருமால் பவுசைச் சாற்றுகிறேன்...கேளும்.

''சட்டி வெண்ணெயைத் திருடி, கொட்டுமத்தாலே யடி
தரைதனில் வாங்கிக் கொண்டான், உரல்தனிலே கட்டுண்டான்
...இடையனைப்போல் நடித்து...தனித்துப் பலமாடு மேய்த்தான்
வனத்தை ஓயாமல் காத்தான்.
சாலையில் கோபிமார்கள், சேலையெல்லாம் கவர்ந்தான்
தண்ணீரில் பள்ளிகொண்டான், மண்ணை உணவாக உண்டான்
தங்குகடல் மச்சமானான், சிங்கம் பன்றி ஆமையானான்''

என்று கூறி வசைபுகழ் பாடி நின்றான் மதன்.

ஆற்றலுடைய சிவனிடத்தில் அவமாக நடந்து ஐந்து மலர்க் கணை ஏவுவது கடலாழம் பார்க்க நரிவாலை விடுவதுபோல ஆகும் என்கிறாள் மன்மதனோ, 'பத்மாசுரனுக்கு அஞ்சிஅரளிப் பூவுக்குள் ஒளிந்தவன்தானே சிவன்' என்கிறான்.

''இரணியனுக்கஞ்சி தூணில், இருக்கவில்லையா—உங்கள்
எம்பெருமான் கதையை உலகம், ஏசும் தள்ளய்யா—அந்த
அரனை வெல்ல உங்கள் வீட்டுக், கிள்ளுக் கீரையா—வேறு
ஆளைப் பாரையா''

என மறுமொழி பகர்ந்து அவன் மொழியை அடைக்கிறாள்.

இலாவணிப் பாடல்களும் ரதிமதன் பாடல்களும் தர்க்க ஒப்பாரிகளும் பட்டிமன்றங்களுக்கு ஏற்ற எடுத்துக் காட்டுகள் என்றால் பள்ளேசல்கள் வழக்காடுமன்றங்களுக்கு எடுத்துக் காட்டுகள் எனலாம்.

எரிந்த கட்சி எரியாத கட்சிகளில் வரும் வெட்டிப்பாடும் தர்க்கப் பாடல்களும், இலாவணி முதலியவற்றில் வரும் நறுக்குத்

தெறித்த கேள்வி விடைப் பாடல்களும் வழக்காடுமன்றத்தின்பால் சார்த்தத் தக்கன.

**சிலம்பு:**

இலக்கியஉலகில் புகழ்பெற்ற வழக்காடல் சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றிருப்பதை யாவரும் அறிவர். கண்ணகியும் பாண்டியன் நெடுஞ்செழியனும் மோதும் இடம் நாடகமாக அமைந்த வழக்காடுமன்றம் எனலாம்.

பாண்டியன் : நீர்வார் கண்ணை எம்முன் நிற்போய்
யாரையோ நீ மடக்கொடி

கண்ணகி : தேரா மன்னா செப்புவதுடையேன்...
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி என்பது என்பெயரே

பாண்டியன் : பெண்ணணங்கே
கள்வனைக் கோறல் கடுங்கோலன்று
வெள்வேல் கொற்றங் காண்

கண்ணகி : நற்றிறம் படரா கொற்கை வேந்தே
என்காற் பொற்சிலம்பு மணியுடை அரியே

பாண்டியன் : தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே
.......................
பொன்செய் கொல்லன் தன் சொல் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்...

நாடகமும் வழக்கும் கலந்த இவைபோல்வனவும் இற்றை நாளில் மேடைகளில் ஆங்காங்கே தோன்றி மக்களை மகிழ்விக்கின்றன.

**நாடக வழக்காடு மன்றம்**

''கைகேயி குற்றவாளி'' எனும் வழக்காடு மன்றத்தில் மேடையை நீதிமன்றம் போலமைத்து, கைகேயி போல் ஒருவர் ஒப்பனை செய்து, விசாரிக்கின்ற—விசாரணைக்குரிய பிறகும் ஏற்றவகையில் ஒப்பனை செய்து மேடையில் தோன்றி வழக்காடுவர். சிவகாசியிலும், தூத்துக்குடியிலும் இத்தகு நாடக வழக்காடு மன்றங்களைச் சிலர் வெள்ளோட்டம் பார்த்தனர். மக்களுக்கு, நாடகம் பார்த்த நிறைவும் இலக்கிய வழக்காடு மன்றம் கேட்ட மகிழ்வும் ஒருங்கே கிடைக்கின்றன என்ப துண்மை எனினும் பெரும்பணச் செலவு கருதி விடவேண்டியதாயிற்று.

பரதநாட்டியம் உண்டெனில் அதற்கெதிர் இசைத்தட்டு நடனமும் உண்டு என்பதுபோல், வேத்தியல் பொதுவியல் போல் நாடக வழக்காடுமன்றத்திற்கும் நாட்டியல் வழக்காடு மன்றம் தோன்றியது. 'கைகேயி குற்றவாளி' என்பதற்கு முன் கூறியது போல் மேடையும் ஒப்பனையும் வழக்காடலும் அமைந்து வெற்றி கண்டதையறிந்த சிலர், "நல்லதங்காள் குற்றவாளி" "நளன் குற்றவாளி" எனும் தலைப்புகளில் ஒப்பனையும் மேடை அலங்காரமும் இன்றி வழக்காடுமன்றங்கள் போடத்தலைப்பட்டு இடருற்றுத் தோற்றனர். மேடையில் பாடவும் அழவும் நடிக்கவும் செய்வதால் வழக்காடுமன்ற நோக்கம் திசைமாறிப் போயிற்று. மக்களும் அப்பொழுது கண்டு மகிழ்ந்து அடுத்த வினாடி சிரித்து ஒதுக்கிவிடுவதால் இவை மேடையில் நிலையான வரவேற்பைப் பெற முடியாமல் போயிற்று எனலாம்.

**சந்திப்பு**

பட்டி மன்றத்திலிருந்து வழக்காடு மன்றம் வளர்ந்து கிளைத்ததைப்போல், வழக்காடு மன்றத்திலிருந்து "இவர்கள் சந்தித்தால்" எனும் நிகழ்ச்சி கடந்த இரண்டு ஆண்டுகளாகச் சற்றுச் செல்வாக்குப் பெற்று வருகிறது. சில அமைப்புகளில் பல நிகழ்ச்சிகளில் ஒன்றாக இடம்பெற்ற இச் "சந்திப்பு" வேறு சில இடங்களில் தனி நிகழ்ச்சியாக இடம்பெற்றுள்ளது.

எடுத்துக் காட்டாக, "தயரதனும் இராமனும் இன்று சந்தித்தால்," "கண்ணன்—இராமன்" என்பன போன்ற தலைப்புகளை மேடையேற்றியுள்ளனர்.

இராவணனும் கும்பகருணனும் சந்தித்தால் என்ன பேசிக் கொள்வர் எனும கற்பனை நாடகமாக அந்நிகழ்ச்சி அமையும். அவரவர் தம்புகழ் பேசுவதும் பிறர் குறை கூறுவதும் குற்ற மாற்றும் விடையுரையாற்றுவதும் இந்நிகழ்ச்சியின் சிறப்பாகும்.

'இவர்கள் சந்தித்தால்' எனும் நிகழ்ச்சியில் பொழுது போக்குத் தவிர வேறு பயன் இல்லை என்றும் கற்பனையாகவே பேசுவதால் கேட்போருக்குச் சலிப்பு ஏற்படுகிறது என்றும் மேடையில் நிற்பவரை இராமனாகவோ சீதையாகவோ கூனியாகவோ கற்பனை செய்வது கேலிக்குரியதாகத் தோற்றுகிறது என்றும் இந்நிகழ்ச்சியை எதிர்ப்போர் கூறுவர். சிறந்து விளங்கும் பேச்சாளர்களைக் கொண்டு ஏற்ற பாத்திரங்களைத் தேர்ந்து அமைத்தால் இந்நிகழ்ச்சி நன்றாகவே அமையும்.

'குகன்' எனும் பாத்திரமேற்றுக் காரைக்குடிக் கம்பன் விழாவில் பேசிய ஒருவரை எல்லோரும் பாராட்டினர். ஏனெனில் அவர் வழக்கமாகப் பேசும் செம்மொழி நடையை விட்டுக்

காட்டுவேடன் மொழியைக் கற்பனை செய்து அவ்வாறு பேசினார்; கற்றவர் இராமனைக் கண்டு பேசும் முறையையும், வேடன் இராமனிடம் அன்பால் ஈர்க்கப்பட்டுப் பேசும் முறையையும் வேறுபடுத்திக் காட்டினார். இவ்வாறு ஓரிரு சந்திப்புகள் சிறப்பாக அமைகின்றனவேயன்றி எல்லாம் நன்றாக அமைவதில்லையாதலால் இச்'சந்திப்பு' பின்னாட்களில் பெருவெற்றியடையுமா என்பது ஐயப்பாடே.

### நிலைத்த இடம்

வழக்காடு மன்றம், விறுவிறுப்பும் வேகமும் நிறைந்தது என்பது உண்மையே; ஆனால் இலக்கியத்திலுள்ள வழக்காடு மன்றத் தலைப்புகளில் பெரும்பாலானவை பலமுறை பேசப்பட்டுவிட்டன. பொதுத் தலைப்புகளிலும் வழக்காடு மன்றத் தலைப்புகள் புதிது புதிதாகவே சிந்திக்க வேண்டியுள்ளன. பேசியவற்றையே பேசுதற்கும் கேட்பதற்கும் சலிப்பேற்படுகிறது. தெய்வங்களைக் குற்றவாளிகளாக்கிப் பார்க்கும் பார்வைக்கு எதிர்ப்புகளும் கிளம்பியுள்ளன. ஆகவே வழக்காடு மன்றங்களும், தமிழ்நாடு முழுவதும் பரவி, தலைப்புகளை எல்லாம் விழுங்கிய பின், சற்றுக் குறையக் கூடும்.

பட்டிமன்றங்களுக்குச் சூழ்நிலையும் காலமும் தலைப்பினைக் கொடுக்கின்றன. ஆகவே அவற்றிற்குக் கால எல்லை வரையறுக்க இயலாது.

### மன்ற அமைப்பு

முன் கட்டுரைகளில் சில பட்டிமன்றச் சுருக்கங்கள் தரப்பெற்றன.* இங்கு, வழக்காடு மன்றச் சுருக்கம் தரப்பெறுகிறது. 'கோவலன் குற்றவாளி' எனும் தலைப்பே பெரும்பாலான இடங்களில்—இதற்கு முன் வழக்காடு மன்ற நிகழ்ச்சி நடைபெறாத இடங்களில்—முதலில் போடப்பெறும் தலைப்பாகும்.

வழக்காடு மன்றம் மிகச் சுவையுடையதாக இருக்க வேண்டுமாயின் அவையினருக்கு எடுத்துக்கொண்ட தலைப்பைப் பற்றிய செய்திகள் ஓரளவு தெரிந்திருக்க வேண்டும். நடுவருக்கு அவையின் 'அறிவு அளவில்' ஐயம் இருப்பின், முன்னுரையில், வழக்கின் சூழலை முன் பின்னாகச் சுருக்கி விளக்கியாக வேண்டும்; அன்றேல் வழக்காடுவோரைக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட கதைபோல் ஆகிவிடும். ஆகவேதான் பெரும்

---

* பார்க்க: எண்பதில் தமிழ், பக். 375-405, எண்பத்தொன்றில் தமிழ், பக். 645-684

பாலோருக்குத் தெரிந்த சிலப்பதிகாரக் கதையிலிருந்து; 'கோவலன் குற்றவாளி' எனும் தலைப்பினை ஆய்வுக்கு முதலில் எடுத்துக் கொள்வது வழக்கமாகும். அந்நெறியிலேயே ஈண்டும் அத்தலைப்பு தரப்பெற்றுள்ளது.

வழக்குத் தொடுப்பவரும் வழக்கு மறுப்பவரும் வழக்கமாகக் கூறும் முன்னுரைகள் இன்றி, நகைச்சுவைத் துணுக்குகள் இன்றி, காரசாரத்தாக்நதல்கள் இன்றி வழக்காடு மன்றம் மட்டும் தரப் பெற்றிருக்கின்றது.

**கோவலன் குற்றவாளி:** கோவலன் செய்த செயல்களைப் பட்டியலிட்டுக் காட்டி, அவற்றுள் மிகை கொள்வதே இவ் வாய்வின் நோக்கம்.

**வழக்குத் தொடுப்பவர்:** 'துன்னாத இன்பமெல்லாம் துன்னி னார்' எனும் அளவுக்கு இணைந்த பாம்புகள் போல் பிணைந்து வாழ்ந்த கோவலனும் கண்ணகியும் பிரிந்தார் அல்லவா? யார் காரணம்? உணர்ச்சி வயப்பட்டுக் கட்டிய மனைவியைக் கண் கலங்க விட்ட கோவலன் குற்றவாளிதான். இக்குற்றத்தினை இவன் புரிந்த ஏதுவால்தான் வரந்தரு காதையில் இளங்கோ வடிகள் எல்லோருக்கும் நல்லறவுரை கூறுவாராய் "அறமனை காமின்" என்கிறார். மட்டுமன்றிக் கோவலன், "வடுநீங்கு சிறப்பின் மனையகம் மறந்தென்" என்று கண்ணகியை விட்டு நீங்கியதை வேதனையோடு குறிப்பிடுகிறார்.

**வழக்கு மறுப்பவர்:** மாண்புமிகு நடுவர் அவர்களே, எதிர்க் கட்சி வழக்கறிஞர் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்புள்ள மரபையும் வழக்காற்றையும் மறந்து அல்லது மறைத்து இவ்வழக்கினைக் கொண்டு வருகிறார். தொல் காப்பியர் காலத்திலேயே பரத்தையர் பிரிவு என்று ஒரு துறையே இருக்கிறது. காதற் பரத்தையர், காமக் கிழத்தியர், இற்பரத்தை என்றெல்லாம் சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றன. வழக்கு களும் நியதிகளும் காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் மாறும் என்பதை யாவரும் அறிவர். அதே நெறியில் பரத்தையர் நெறியிற் பிரிந்தான் கோவலன் என்பதேயன்றிக் குற்றம் தழுவி னான் எனக் கூறுவது குற்றமாகும்.

மிகச் சிறப்பான கூறுபாடு ஒன்றினையும் நாம் காண்டல் வேண்டும். கோவலன்தான் மாதவியைக் குலக்கொடியாக்கி னான். சேற்றில் கிடந்தவளைச் செந்தாமரையாக உயர்த்தி னான். தந்தை பெயர் அறியாது பிறக்கின்ற குலத்துதித்த மாதவியைக் குலக் கொம்பராக்கி, அவள் வயிற்றில் பிறந்த

குழந்தைக்குத் தந்தையாகியதால் தாயையும் மகளையும் தலை நிமிரச் செய்தான்.

மாதவியிடம் சென்றது மரபு மீறல் என்றால் அதைக் கண்டித்திருக்க மாட்டாரா தாயும் தந்தையும் சுற்றத்தாரும்? ஏன் சென்றான்?

'ஆடல் பாடல் அழகு என்றிக்
கூறிய மூன்றில் ஒன்றுகுறை படாமல்'

இருந்த மாதவியிடம் சென்றான் என்று நாங்கள் கூறமுடியாதா? 'யாண்டு சில கழிந்தன' அவர்கள் இல்லறத்தில்; குழந்தைச் செல்வம் இல்லாத குறை போகக் குறிக் கொண்டான் என்று நாங்கள் கூற முடியாதா?

பக்தி நீதிமன்றத்தில் குழந்தையைக் கொல்வதும் மூக்கை அரிவதும் திருடுவதும் குற்றமில்லை; அதுபோல் கால நீதிமன்றத்தில் கோவலன் மாதவிபால் சென்றதும் குற்றமாகாது.

வ. தொ: தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் இருப்பதைக் காட்டுமேயல்லாது இருக்க வேண்டியதைக் காட்டும் நீதி நூல்களல்ல; அவை காலக்கண்ணாடி. பரத்தையர் பிரிவு இருந்தது என்று கூறிற்றேயன்றிக் கட்டாயமாகப் பரத்தையர்பால் பிரிந்தேயாக வேண்டுமென்று கூறியிருக்கின்றதா? சங்க காலத்தில் குடித்தனர் என்பது வேறு—எந்தக் காலத்திலும் குடிப்பது தீது என்பது வேறு. ஆகவே கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்ததும், மாதவியையடைந்து அவளைக் கண்கலங்க விடுத்ததும் மாபெரும் குற்றமேயாகும்.

குடும்பப் பெண்களின் ஆடல் பாடல்கள் அரங்கத்தில் வருவதில்லை; அரங்கில் அடங்குவதேயாம். கண்ணகியின் அழகு, "ஒன்று குறைபடாமல்" என்றதால் குறைபட்டது போன்று எதிர்க்கட்சி வாதமிருந்தது.

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே"

என்று கோவலன் பாராட்டியதை "கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள" என்ற குறட் கருத்துடன் இணைத்துக்கூறிய உரையாசிரியர் அறியாதவரோ? அல்லது 'உலவாக் கட்டுரை'- இது உதவாக் கட்டுரை என வழக்கறிஞர் உதறிவிடுவாரோ?

குழந்தை இல்லை எனும் ஏக்கத்தால் சென்றான் என்று சிலப்பதிகாரத்தில் யாண்டேனும் குறிப்பு உண்டா? குழந்தை

இல்லை என்பதற்காக 1008 பொற்கழஞ்சு கொடுத்து மனை புகுவதுதான் மரபா? காதலனாகவும் கணவனாகவும் வாழ வேண்டிய வணிக ஏந்தல் காமுகனாக வீழ்ந்தது குற்றமே.

காமுகனாகக்கோவலன்இருந்ததால்தான் பெரும்பொருளை இழந்ததோடு வணிகத் தொழில் திறமையும் மறந்து நிற்கிறான். தான் முயன்று ஈட்டாமல், ''குலம் தரு வான்பொருள் குன்றம்'' தொலைத்துவந்து நிற்கிறான். தான் செய்த தவறுகளைத்தானே ஒப்புக்கொண்டு கண்ணகியிடம் வாக்குமூலம் தருகிறான், ''சலம் புணர் கொள்கைச் சலதியொ டாடி'' என்கிறான். ஆகவேதான், மாதவியாடிய கண்கூடுவரி, காட்சிவரி, காண்வரி, உள்வரி புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, எடுத்துக்கோள்வரி போன்ற எண் வகை வரிகளையும் ஏளனம் செய்து—அவளது தூய காதலை நடிப்பு என்று ஒதுக்குகிறான்.

இளங்கோவடிகள், மதுரைத் தென்றலை வர்ணிக்கும் போது, பல்வேறு மலர்களில் நறுமணம் கவர்ந்து சேறாடிக் 'கோவலன்' போல வருவதாய்க் குறிப்பிடுகிறார். நகர நம்பியருடன் திரிந்தலைந்த கோவலனது ஒழுங்கற்ற வாழ்க்கையைக் தென்றலுடன் ஒப்பிட்டு நம்மை உய்த்துணர வைக்கிறார்.

''வறுமொழியாளரொடு வம்பப்பரத்தரொடு
குறுமொழி கோட்டி நெடு நகை புக்கு
பொச்சாப்புண்டு பொருளுரையாளர்
நச்சுக் கொன்றேற்கு நன்னெறி யுண்டோ?''

என்று தான் செய்த தவறுகளை அவனே கூறுகிறான். 'வம்பப் பரத்தரொடு திரிந்தேன்' என்று கூறியபின் அவன் குற்றமிலன் என்று எவரால் கூற இயலும்?

வ.ம: கோவலன் காமுகன் என்று எதிர்க்கட்சியாளர் கூறுகிறார். காமுகனுக்குக் காமக்கழிவு நோக்கமாக இருக்குமே தவிர காதல் உறவு குறிக்கோளாக இருக்காது. காமுகனுக்குக் குழந்தை பிறக்காது. சீத்தலைச் சாத்தனாரின் காவியத் தலைமை ஏற்கும் மணிமேகலையைக் காமந்துறந்த செல்வியைப் பெற்ற பெருமகன் காதலனாகவே இருப்பான்.

மணிமேகலையின் பிறந்தநாள் விழாவின் போது வந்த அந்தணனை யானையின் பிடியினின்று காப்பாற்றுகின்ற பலமும் வீரமும் உடைய கடக்களிறு அடக்கிய கருணைமறவனாம் கோவலன் காமக்களியாட்டம் கொண்டவனாக உறுதியாக இருக்கமுடியாது.

கோவலன் வாய்மொழியாகவே தன்னைத் தவறுடைய வனாகக் காட்டியிருக்கிறானே என்றுகூறினார். செய்யாத தவறு களையும் பெரும் குற்றம் செய்ததாகக் கூறுவதும் குறைகளைக் குற்றமெனப் பூதக்கண்ணாடி வழி தன்னைத்தானே விமர்சனம் செய்து கொள்வதும் பண்பட்டவர் செய்யும் செயலே. 'பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச்சுருக்கும் புழுத்தலைப் புலையனேன்' என்று மாணிக்கவாசகர் கூறுகிறார் என்பதற்காக அவர் அத்தவறுகளைச் செய்தார் என்று நாம் கொள்ளலாமா?

கோவலன், 'இலம்பாடு நாணுத்தரும்', 'நச்சுக் கொன் றேற்கு நன்னெறி யுண்டோ?' என்று தன்னிரக்கமெழக்குழைந்து கூறுகின்ற இடத்தில்தான் மிக உயர்ந்து விடுகின்றான். 'சலம் புணர் கொள்கைச் சலதி' என்று கூறிய கோவலன் புடம்போட்ட தங்கமாய் உயர்ந்த நிலையில்

> "தன்தீலள் எனத்தளர்ச்சி நீங்கி
> என்தீதென்றே எய்தியது உணர்ந்தான்"

ஆகவே அவன் குற்றமிலன்.

வ.தொ: எப்போது கோவலனைப் புடம்போட்ட தங்கமாய் உயர்ந்தான் என்து கூறிவிட்டீர்களோ அப்போதே அவன் துருப் பிடித்த இரும்பாய் இருந்திருக்கிறான் என்றுதானே பொருள்.

> "இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
> சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்"

என்று கோவலன் தன் பெற்றோருக்கும் மனைவிக்கும் இழைத்த பிழையையும் செய்த சிறுமையையும் தானே ஒப்புக் கொள் கிறான். இதற்கு மேற்கொண்டு சாட்சி தேவையா எனத் தோற்றவில்லை.

> 'நெறியின் நீங்கியோர் நீர்மையேனாகி...
> சிறுமையுற்றேன் செய்தவத்தீர்'

என்று கவுந்தியடிகளிடம் கூறும் கூற்றிலிருந்து கோவலன் நெறி முறையற்ற வாழ்க்கை மேற்கொண்டவன் என்று புலனாகிறது. இவனது ஒழுக்கமற்ற வாழ்வையும் நேர்மையற்ற நடத்தையை யும் பண்புகெட்ட போக்கையும் உட்கொண்டே இளங்கோவடி கள் மலைய மாருதம் வருவதை இவனோடு ஒப்பிடுகிறார். முல்லை, மல்லிகை, மயிலை, குவளை, செங்கழுநீர் பிணையலிற் பொலிந்து பொழிலாட்டமர்ந்து, புதுமணம்புக்கு,

> "நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
> குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு

திரிதரு மரபிற் கோவலன் போல'' மலைய மாருதம் வருகிறதாம். இதைவிட வேறு சான்று வேண்டியதில்லை. மதுரைக்குச் சென்று கண்ணகியின் காற்சிலம்பை விற்க முயலும் போது எந்த வழியாகச் செல்கிறான்! 'மாதர்வீதி மறுகிடை நடந்து' செல்கிறான். இயல்பான இதய நெறியை அவனால் மாற்ற முடியவில்லை. கவுந்தியடிகளின் நிழல்பட்ட பின்னரும் 'தன் உண்மையறிவே மிகும்' என்பதற்கேற்பவே நடந்து கொள் கிறான்.

வ. ம : இது, கோவலன்மீது வேண்டுமென்றே வீசப்படு கின்ற வீண்பழி என்றே சொல்வேன். தன்னிலைக்கு வருந்து பவனைப் பாராட்ட வேண்டுமேயன்றிப் பழிதூற்றக் கூடாது. கோவலன் சிலம்புக் கையனாய் சென்ற வழியில் தாதெரு மன்ற மும், மாதர் வீதியும், பீடிகைத் தெருவும் இருந்தன. அவற் றைக் கழிந்து சென்றதில் தவறு என்ன? சென்ற இடத்தில் நின்றால் தான் தவறு? நின்ற இடத்தில் நினைந்தால்தான் தவறு.

மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியுடன் கானகம் கடந்து வருகையில் வனசாரிணி வயந்தமாலை வடிவில் தோன்றிக் கோவலனை மயக்கம் செய்தது. மனத்தில் மாசுடையவனாயின் மயங்கியிருப்பான்; ஆனால் பாய்கலைப் பாவை மந்திரத்தைக் கூறி வனதேவதையை மருண்டோடச் செய்கிறான்.

கோசிகமாணி கொண்டு வந்த மாதவியின் இரண்டாவது மடலில், ''உடனுறை காலத்து உரைத்த நெய்வாசம், குறு நெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக் காட்டியது''. ஆயினும் மனம் சலனம் அடையாதவனாக ஒரு துறவிபோல் நடந்து கொள்கிறான். கற்பின் செல்வியும் பக்தி மூதாட்டியும் உட னிருந்து உருக்கி விட்டதால் மாசு நீங்கிய தூய உள்ளத்தனாகக் கோவலன் இருக்கிறான்.

பாடும் பாணரிற் சேர்ந்து பாடியதாலோ பல்வேறு தெருக் களின் வழியாகச் சென்றதாலோ கோவலன் தவறுடையவனா கான். தாமரை இலைத் தண்ணீர் போன்று கேடுகள் ஊடுருவப் படாதவனாகவே இருக்கிறான்.

வ. தொ : கண்ணகிக்குக் கணவன் என்ற முறையிலோ, தந்தைக்குத் தனையன் என்ற தகைமையிலோ, மணிமேக லைக்குத் தந்தை என்ற தன்மையிலோ தன் கடமையை ஆற்றி னானா கோவலன்?

கண்ணகிக்கு, இன்றைய கோணத்தில் கூற வேண்டுமானால் 'வாழாவெட்டி' எனும் இழிபட்டத்தை வாங்கித் தந்தான். சோம குண்டம் சூரிய குண்டம் மூழ்கினார்க்குப் பிரிந்த கணவன் கிடைப்பான் என்று தேவந்தி அறிவுரை கூறும் அளவுக்கு வேதனையின் உச்சிக்குச் சென்றாள் கண்ணகி.

'வாயல் முறுவல்' காட்டிப் போலி வாழ்க்கை வாழும்படி அவளை வைத்துவிட்டான்.

"அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மென்துகிலல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்குமம் எழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்
பவள வாணுதல் திலகம் இழப்ப" என்று அவல ஓவிய

மாகக் கண்ணகி காட்டப் பெறுகிறாள். இந்த வேதனையும் வெதும்பலும் ஒரு கணவனால் மனைவிக்கு வரக்கூடிய ஒன்றா?

தந்தையின் சொத்தைக் காத்தலும் அதை மேலும் வளப்படுத்தலும் குடும்பப் புகழை உயர்த்தலும் ஒரு உத்தம மகனின் கடமையாகும். கோவலன், "குலம்தரு வான்பொருட் குன்றத்தைத்", தொலைத்தான்; அவன் தானாக வணிகம் செய்ததாக வரலாறே இல்லை; பெற்றோரின் "உள்ளகம் வருந்த" ஒழுகினான். இவ் வாழ்க்கை தான் தந்தைக்குத் தனயன் நடத்திக் காட்ட வேண்டியதா?

மாதவியைக் கோபத்தில் பிரிந்து வந்தானேயன்றி, மணிமேகலையை எக்காரணம் பற்றி மறந்து வந்தான்? மாதவியைப் பிரிந்தது முதல் உயிர் பிரிந்தது வரை என்றாவது ஒருநாள் மணிமேகலையை நினைத்தானா? கூடியிருந்த காலத்தில் மணிமேகலையின் பிறந்த நாள் விழாவைக் கோலாகலமாக நடத்தி மகிழ்ந்தவன் தந்தையைப் பிரிந்து வருந்தும் மகளுக்காக எப்போதேனும் வருந்தினானா? மகளுக்குத் தந்தை ஆற்றும் உதவி இதுதானா? கணிகையர் குலத்துதித்த மாதவிக்குக் குலமகள் உயர்வு கொடுத்தவன் அவள் மகளை மொட்டையடித்துச் சட்டி கை கொடுத்துத் தெருவோடு அலையவிட்ட முறை சரிதானா?

வ. ம: கணவன் என்ற முறையில் கோவலன் வாழவில்லையா? "யாண்டு சில கழிந்தன இற்பெருங்கிழமையில்",

'விருந்து புறந்தரும் பெருந்தண் வாழ்க்கையும்'' வாழ்ந்த அவர்கள், '' தொலையாத இன்பமெலாந் துன்னினார் மண்மேல்
நிலையாமை கண்டவர்போல் நின்று'' என வாழ்ந்தனர்.

கூடி வாழ்ந்த காலத்தில் இவ்வாறு வாழ்ந்தவர்கள், மீண்டும் கூடியபோது கண்ணனும் நப்பின்னையுமெனக் கண்டவர்கள் வாழ்த்தும் வகையில் வாழ்ந்தனர்.

வணிகத்தால் வருபொருள் ஈட்ட முடியாததால்தான் தந்தை மாசாத்துவானைக் காண விரும்பாமல் கோவலன் மதுரை செல்ல எண்ணுகிறான். தந்தைமீது அவன் கொண்டுள்ள அளவற்ற மதிப்பே இதற்குக் காரணம். 'இருமுதுகுரவர் ஏவலும் பிழைத்தேன்' என்று உள்ளத்தால் வருந்தி உரைக்கும் உரையும் அவன் பெற்றோர்பால் கொண்டிருந்த பேரன்பை விளக்குகிறது. சூழ்நிலையால் அவன் கடமை செய்யத் தவறினாலும் அதனை அவன் எப்போதும் மறந்தவனில்லை என்பதை நாம் அறிகிறோம். மாதவியின் மடல் தூய்மையை உணர்ந்த கோவலன் அதனைத் தன் பெற்றோர்க்கு கோசிகமாணிமூலம் அனுப்புகிறான். ''மாசில் குரவர் மலரடி தொழுதேன்'' எனப் பேசி மாசற்ற மகன் என்பதனைக் காட்டுகிறான்.

மணிமேகலையின் பிறந்த நாள் விழாவை ஊரே வியக்கும் வண்ணம் கொண்டாடிய கோவலன் அவளைத் ''தன் தீதிலாளாகிய'' மாதவியிடம் ஒப்படைத்து வருகிறான். நற்றாயிடம் வளரும் குழந்தைக்கு — அதனினும் பாதுகாப்பு வேறு ஏது? மாதவியிடம் மணிமேகலை வளர்ந்ததால்தான் ஒரு காப்பியத்தின் தலைவியாகிறாள். கணிகையர் வாழ்வைக் கடை என ஒதுக்கித் தூயதுறவற வாழ்வை மேற்கொள்கிறாள். கோவலன் மணிமேகலையைப் பற்றி வாயளவில் பேசுவதைவிடச் செயலளவில் செய்து காட்டியிருக்கிறான். தந்தை என்ற முறையில் கோவலன் முறையோடுதான் செயல்பட்டிருக்கிறான்.

வ. தொ: 'வினையே ஆடவர்க்குயிரே' என்னும் பண்டை நெறியை மறந்து இழிநிலை எய்தியுள்ளான் கோவலன். தாமே ஈட்டிய பொருளைப் பகிர்ந்துண்பதும் விருந்தோம்பலும் அறநெறி. இவ்வில்லற நெறியை மறந்து தந்தையின் செல்வத்தை ஊதாரித்தனமாகச் செலவழித்து ஒட்டாண்டியாகியிருக்கிறான். இயற்றல், ஈட்டல், காத்தல் என்ற முந்நெறியும் மறந்தவன் எந்த வகையிற் சிறந்தவனாக இருக்க முடியும்?

வ. ம: கோவலன் அடைந்த 'இலம்பாடு', 'விற்றுக்கோள் தக்க துடைத்து'. ஏனெனில் இல்லாதவர்க்கு ஈகை புரிந்ததாலும் வருந்தியோருக்கு வழங்கியதாலும் வந்த வறுமையை எந்தச்

சான்றோரும் பழித்தது கிடையாது. ''கடக்களிறு அடக்கிய கருணை மறவன்'', ''செல்லாச் செல்வன்'', ''இல்லோர் செம்மல்'' என்று எல்லோராலும் பாராட்டப் பெற்றவன் கோவலன்.

வ தொ: 'செல்லாச் செல்வ' என்று கோவலனை ஏன் அழைத்தார்கள்?

வ. ம: குழந்தையைக் காத்த கீரிப்பிள்ளையை அறியாது கொன்ற மனைவியின் கையில் வடமொழி வாசகம் எழுதிக் கொடுத்துவெறுத்து ஒதுக்கிச் சென்றான் ஒரு அந்தணன். வருந்தி அழுது திரிந்த அப்பெண்ணுக்கு வேண்டுவ கொடுத்துக்காத்தான் கோவலன்.

''தானம் செய்தவள் தன்துயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து
நல்வழிப்படுத்த செல்லாச் செல்வ'' என்பார் அடிகள்.

வ. தொ: கணவனைப் பிரிந்து வருந்தி வழியில் செல்லும் யாரோ ஒரு பெண்ணுக்காக இரங்கி ஏங்கிய இச் செல்லாச் செல்வன், தானம் செய்தான், அவள் துயர் போக்கினான், கானம் போன கணவனைக் கூட்டி வந்து சேர்த்து உறுபொருள் கொடுத்தான். அத்தகையவனுக்குக் கண்ணகியின் கண்ணீர் புலப்படவில்லை; அவள் தன் கணவனைப் பிரிந்து இந்த வேதனைதானே பட்டிருப்பாள் என்று தோன்றவில்லை. இருட்டைக் கொண்டு பானை ஓட்டையை அடைப்பதுபோல் நடிக்கிறானா? இவன்தான் செல்லாச் செல்வனோ?

வ. ம: வருந்துவோரின் துன்பத்தைப் போக்கும் இரக்க குணம் இயல்பாகவே படைத்தவன் கோவலன் என்றுதான் பார்க்க வேண்டுமே தவிர எதிர்க்கோணத்தில் எதற்காகப் பார்க்க வேண்டும். இளைஞன் ஒருவனைப் பூதத்திடம் இழந்த தாய் ஒருத்தியின் துயர் போக்க

''...அவளுடன் போந்தவன்
சுற்றத்தோர்க்கும் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய இளைஞரின் பசிப்பிணி அறுத்துப்
பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்''

இவ்வாறு பிறர்பொருட்டு வாழ்ந்தவனாகவும் பிறர் துயர் துடைக்கத் தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் இழக்க அணியமாக நின்றவனுமாகக் காணப் பெறும் செம்மல் கோவலன். அதனால்தான் மாடலமறையோன்

''இம்மை செய்தது யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது'' என்று
வருந்திக் கூறுகிறான்.

வ. தொ: மாடலமறையோன் கூறுவதோ, கோசிகமாணி கூறுவதோ முற்றிலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. ஓரிடத்தில் நிற்காது ஊர்சுற்றும் இயல்பினர் இவர்; பிறரைப் புகழ்ந்து கூறிப் பொருள் பெறுபவருமாகலாம்.

வ. ம: மாடலமறையோனையும் கோசிகமாணியையும் இன்று வரை யாரும் இந்தக் கோணத்தில் கூறியதில்லை. இருக் கட்டும். கோவலன், புகாரை விட்டுச் சென்றபின் அவ்வூர்,

'அருந்திறல் பிரிந்த அயோத்திபோல
பெரும்பெயர் மூதூர் பெரும்பேதுற்றதும்' என்று கூறிக்

கோவலனை இராமனுக்கு ஒப்பிட்டுக் கூறும் உயர்வினைக் கோசிகமாணி கூறிவிட்டான் என்று ஒதுக்கிவிட்டாலும் கவுந்தி யடிகள் கூறுவதையும் புறக்கணிக்க வேண்டுமா?

''உருவும் குலனும் உயர்பேர் ஒழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பும்

உடையீர்'' என்று கவுந்தியடிகள் கூறுகையில் ''உயர் பேரொழுக் கம்'' பற்றிக் குறிப்பிடுகிறாரே. பரத்தனும் பரத்தையும் சொன்ன கொடுஞ்சொல்லுக்காக ''முதுகாட்டில் முதுநரியாகென''க் கூறிச்சபித்த மெய்ம்மொழிக் கவுந்தி கூற்றும் தவறோ?

இளங்கோவடிகள் ''கண்டேத்தும் செவ்வேள்'' என முருகனாக் காட்டியதும் பொய்ச் சொல்லோ?

பொய்க்கரி புகன்றானை அறைந்துண்ணும் பூதம்

''நரகனுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பீங் இல்லை'' எனக் கோவலனுயிரை 'நல்லுயிர்' என்று கூறியதும் தவறோ.

வ.தொ: பொய்க்கரி கூறியவனை அப்பூதம் கொல்லுமே தவிர, கோவலனை அது ஏன் துன்புறுத்தவேண்டும். பொய் சாட்சி கூறினான் என்று நான் கூறவில்லையே. கவுந்தியடிகள் 'உடையீர்' என்று பன்மையில் கூறினார். அது கண்ணகியை உள்ளடக்கியதால் வந்த பெருமையே தவிர கோவலனுக்குரிய தனிப் பெருமை இல்லை. 'கண்டேத்தும் செவ்வேள்' என அடிகள்

கூறியதற்கேற்ப முருகனைப்போல் இருமாதரை — கட்டிய தொருத்தியும் ஒட்டியதொருத்தியுமாகக் — கொண்டான் என்று வேண்டுமானால் பொருள் கொண்டு அமைதியடைலாம்.

இவ்வரியைக் கூறியவர்கள், இதற்கு முன் உள்ள இரு வரிகளை மறந்தது ஏன்?''

''மண் தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்ட''

என்கிறார் இளங்கோவடிகள்.

ஆடவரை ஆடவர் பாராட்டினால் அழகு; மதிமுகமடவார் தம் கூட்டத்திலேயே உழன்று கொண்டிருப்பதால் அவர்கள் பாராட்டுகிறார்கள். இதிலிருந்தே கோவலன் இயல்பு தெரிந்து விட்டது.

வ. ம: கோவலனது வளர்ச்சியைக் காண்பவர் அவனைக் குறைவாக மதிப்பிடார்.

''தன்தீதிலள் எனத் தளர்ச்சி நீங்கி
என்தீதென்றே எய்திய துணர்ந்தாங்கு''

என ஏதிலார் குற்றமும் தன்குற்றம் எனக்கொண்ட கோவலனின் உள்ள வளர்ச்சியை உணர்ந்து போற்றவேண்டும்.

''நெறியினீங்கியோர் நீர்மை''யனானேன் எனக் கண்ணகியைப் பிரிந்ததற்கும் பிறநாடு அழைத்து வந்ததற்கும் வருந்தி நைகின்ற கோவலனைக் காண்கிறோம். மண்மகள் அறியா மெல்லடிக் கண்ணகியிடம் 'வருந்தின கொல்லோ மடந்தை மெல்லடி' என்று இரங்குகின்ற இனிய நெஞ்சத்தைக் காண்கிறோம்.

'நச்சுக் கொன்றேற்கு நன்னெறியுண்டோ?' என்று கழிவிரக்கம் அடையும் கோவலனுக்கு இறுதியில் சுவர்க்கம் கிடைக்கிறது.

கோவலன் குற்றமுடையவனானால் மேலுலகம் வாய்க்குமா? 'கொலைப்படு மகனலன்' என்று கொலைஞர்களே கூறும் அளவிற்கு மெல்லிய இயல்புடையவன் அவன் என்பதால்தான் கண்ணகி மேலுலகம் எய்துங்கால் பூவிமானத்தில் கோவலன் வந்து கூட்டிச் செல்கிறான். குற்றமுடையவனுக்கு இப் பேறுண்டா? கண்ணகி தெய்வத்தைக் கரையேற்றும் வாய்ப்பு தான் கிட்டியிருக்குமா?

அவன் தெய்வமாம் தன்மைபெறப் போகிறான் என்பதைக் குறிப்பாகக் காட்டவே "தொழுதகை திருந்தடி" என அவனது அடியைப் போற்றினார்.

எண்ணத்தால் தூயவன் என்பதாலும் அவன்மூலம் அவளுக்கு உயர்வு கிடைக்கிறது. என்பதாலும் அவனை 'அரும்பெறல் கணவன்' என்றார், ஆகவே கோவலன் எந்தவிதக் குற்றமும் உடையவனாகான் எனக்கொள்ளும்படி வேண்டுகிறேன்.

**நடுவர்:** வழக்குத் தொடுப்பவரும் மறுப்பவரும் தம் கோள்களை நிறுவிய பின்னர் நடுவர் தம் தீர்ப்புரையை வழங்குவார் பெரும்பாலும் தீர்ப்புகள், பேசியோரின்வாதங்களின் அடிப்படையிலேயே அமையும்; மிகைநாடி மிக்ககொளலாகவே இருக்கும். ஆயினும் கண்ணன், இராமன் போன்ற தலைப்புகளில் எதிர் வாதம் சிறப்பாக அமையினும் தீர்ப்புகள் பெரும்பாலும் இவர் குற்றமிலர் என்றே வழங்கப்பெறும்—காரணம் தெரிந்ததே.

கோவலன் குற்றமிலன் என்று தீர்ப்பினை வழங்கிவிட்டு ஒரு கல்லூரி மேடையினின்று இறங்கினேன். அவையோரிலிருந்து ஒரு மாணவி வந்து, என்னிடம், உங்களுக்குக் கண்ணகிபோல் ஒரு மகளிருந்து கோவலன் போலொரு மருமகன் அமைந்தால் தீர்ப்பைக் குற்றமிலன் என்று வழங்குவீரா என்று கேட்டார். நான் வியந்து போனேன். தீர்ப்புகள் திருத்தப்படலாம். சில வேளைகளில், இத்தகு பழைய வழக்குகளைப் புதிய கண்ணோட்டத்தில் ஆய்ந்து தீர்ப்புகள் வழங்க வேண்டியதிருக்கும்.

**பொறுப்பு:** நடுவர் பொறுப்பு வழக்காடு மன்றத்தில் மிக முக்கியம் வாய்ந்ததாகும். உணர்ச்சி வயப்பட்டு பேசிக் கொண்டிருக்கும்போது வழக்கறிஞர் தடம் மாறிச் செல்லாமலும், வெற்றெனத் தொடுக்காமலும், கூறியது கூறாமலும் தரம் தாழாமலும், தனிப்பட்ட முறையில் தாக்காமலும், சுவை குன்றாமலும் காப்பது நடுவர் கடமையாகும். இடையிடையே நடுவர் கேட்கும் குறுக்குக் கேள்விகள் வழக்காடு மன்றத்தைச் சூடுபிடிக்கச் செய்யும். நடுவர் மறந்தும் நடுக்கோணல் கூடாது. திக்கு முக்காடச் செய்யும் கேள்விகளையோ, தம் அறிவுத் திறனைக் காட்டும் தொடர்களையோ, வழக்காடுபவரை அவையோரை விடத் தாம் பல துறைகளில் மேம்பட்டவர் எனக் காட்டும் சொற்களையோ தூவி விடக்கூடாது.

நடுவரின் கேள்வி, வழக்குக்குத் தொடர்புடைய ஒரு முக்கியமான செய்தியை நினைவூட்டுவதாக அமையலாம். உணர்ச்சிக் கொப்பளித்து ஆவேசமாகப் பறந்து செல்லும் போக்கைத் திசை

மாற்றிச் சுவைமாற்றுவதாக அமையலாம். மடைமாறிப் பாயும் வழக்கை வழிக்குக் கொண்டு வருவதாக அமையலாம். இங்ஙன மாக இருப்பின் வழக்கு சுவை மாறாமலும் பொருள் செறி வுடையதாகவும் அமையும். நடுவர் அவையோருக்கும் வழக்காடு வோருக்கும் தலைப்புக்கும் ஒரு பாலமாக இருந்து தீர்ப்பு வழங் கினால் பெருவெற்றியாக அமையும் என்பது உறுதி.

**தலைப்புகள் :** இவ்வாண்டில், "பாரதி வழியில் செல்லாத சமுதாயம் குற்றமுடையது", "பாரதி ஒரு பொதுவுடைமை வாதி என்பது குற்றம்", "பாரதியின் பாடல்களில் சமயநோக்கே மேலோங்கி யிருக்கிறது என்பது குற்றம்", "பாரதியின் கவிக் கருத்து எக்காலத்திற்கும் ஏற்றது என்பது குற்றம்", "பாரதியின் பொருளியல் கருத்துகள் எக்காலத்திற்கும் ஏற்றவை என்பது குற்றம்" என்பன போன்ற வழக்காடு மன்றங்கள் பல்வேறு இடங்களில் பேசப் பெற்றன.

கார்ல் மார்க்ஸ் நூற்றாண்டு விழாவை எதிர்நோக்கிப் பொருளுடைமை வாதிகளும் பிறரும் கார்ல்மார்க்சை நடுப்பொருளாக வைத்துப் பல பட்டிமன்றங்கள் நடத்தினர். 'மார்க்சீயச் சிந்தனை இந்திய மண்ணுக்குப் பொருந்துமா?", "மரர்க்சின் முன்னுரிமை அரசியலா பொருளியலா?" போன்ற பல தலைப்புகளில் ஆயப் பெற்றுள்ளன.

கோயில்கள், பொதுமன்றங்கள், அரசியல் கூட்டங்கள், திருமண விழாக்கள், குடும்ப விழாக்கள் போன்றவற்றில் இப்பட்டி மன்றங்களும் வழக்காடு மன்றங்களும் பல்கிப் பெருகி வருகின்றன. சொல்லும் செய்திகள் சுவைபடச் சொல்லப்படுவ தால் கூட்டம் திரளுகிறது.

**எதிர்ப்புகள்:** பட்டிமன்றங்களுக்கும் வழக்காடு மன்றங் களுக்கும் வந்த எதிர்ப்புகளில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டது. இந்துக் கடவுளரின் பெயர்கள் தேவையின்றி இழுக்கப் பெற்று அவமானப் படுத்தப் படுகின்றன என்றும், இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் இழுக்கு ஏற்படுகின்றது என்றும் வந்த வழக்கமான எதிர்ப்புகளல்ல இது. இவ்விலக்கியக் கலைக்கு எதிராகச் சுவ ரொட்டிகளும் கைத்தாள்களும் மேடை ஏச்சுக்களும் முன்பு வந்தன. இப்பொழுது அரசு கோயில்களில் பட்டிமன்றங் களும் வழக்காடு மன்றங்களும் வைக்கக் கூடாதென்று ஓராணை பிறப்பித்துள்ளது. எங்கோ ஓரிருவர் மின்சாரத்தால் மாள் கின்றனர் என்பதற்காக மின்சாரமே வேண்டாம் எனல் பொருந்துமா — கவனயாகக் கையாள வேண்டும் என்ற அளவில்

குறியாக இருக்கவேண்டுமே தவிர இக்கலை கோவில்களில் கூடாது என்பது முறையன்று.

கோவில்களிலேயே வளர்ந்த கலை, கோவிலுக்குப் பொது மக்களை ஈர்த்து நல்ல கருத்துக்களை எடுத்துக் கூறுவதற்கு ஏற்ற கருவியாக உள்ள இக்கலை, இப்பொழுது கோவிலுக்கு வெளியே இருந்து நற்பணியைத் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

பெரியவரும் சிறியவரும் இதை எதிர்ப்பதாகக் கூறுவது பொருந்தாது. பொருத்தமானவரின் எதிர்ப்பா அவை என்பதைக் காண்டல் வேண்டும். எதிர்ப்புகளையும் எருவாக்கி வளரும் கலை, பாமரனுக்கும் சிந்திக்கும் ஆற்றலை ஊட்டி வரும் கலை, நாற்சுவர் எல்லைகளைத் தகர்த்து நாற்சந்திகளில் இலக்கியங்களை எளிமையாக்கிக் கொண்டிருக்கும் இக்கலை இவ்வாண்டு பலவேறு கோணங்களில் ஏற்றம் பெற்றே வந்துள்ளது.

சென்ற ஆண்டைவிட இவ்வாண்டில் பட்டி மன்றங்களும் வழக்காடு மன்றங்களும் அதிகம் நடத்தப் பெற்றிருக்கின்றன. குறிப்பாக வழக்காடு மன்றங்கள் வேகமாக வளர்ந்திருக்கின்றன.

முடிவுரை:

தனிப்பேச்சுகளுக்குக் கூட்டம் சற்றுக் குறைந்து வருவதை உணர்ந்த அமைப்பாளர், தம் விழாக்களில் பட்டிமன்றத்தையும் வழக்காடு மன்றத்தையும் இணைத்துப் பெருங்கூட்டங்களைக் கூட்டுவதைக் கண்ட அரசியல் கட்சிகளும் தம் கருத்துக்களை இக்கலைகளின் மூலம் பரப்பத் தொடங்கி வெற்றி பெற்று வருகின்றன.

வரதட்சணை கொடுமை, குடும்பக் கட்டுப்பாடு, சேமிப்பு போன்ற அரசுத் திட்டங்களை மக்கள் நடுவில் செல்வாக்கடையச் செய்ய, பட்டிமன்றங்களை இவ்வாண்டில் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர். அவற்றை வானொலியிலும் வானொளியிலும் பரபபிப் பலரும் பயனடையச் செய்தனர்.

தேசியத் தலைவரைப் பற்றிப் பெரியோர் பேசுவதுடன், பட்டிமன்ற பாணியில் அவர் கொள்கைகள் விமர்சனம் செய்யப் பெறும்போது, அவர்களது புகழும் பெருமையும் மென்மேலும் மக்கள் நடுவில் பரப்பப்படுகின்றன.

பேரறிஞர் அண்ணா, பெருந்தலைவர் காமராஜர் ஆகியோரது பிறந்த நாட்களை ஒட்டி அமைந்த பட்டிமன்றங்கள் அவர்களைப் பல்வேறு கோணங்களில் மக்களுக்குக் காட்டின.

பாரதியாரின் நூற்றாண்டு விழாவை ஒட்டிச் சில திங்கள் களாக நடந்த பலநூறு கூட்டங்களில் அப்பெருங் கவிஞரின் பாடல்கள் பல கோணங்களில் ஆயப்பெற்றுப் பெரியோர் முதல் சிறியவர் வரை பாரதியின் பாடல்களை முணுமுணுக்கும் வண்ணம் இக்கலைகளால் விளம்பரப்படுத்தப் பெற்றன.

சமயக் கூட்டங்களில்தான் பட்டிமன்றங்கள் பெரிதும் நடத்தப் பெற்றன. புராணப் பாத்திரங்களும், பெரியபுராண நாயன்மாரும் பொதுவாக இம்மன்றங்களில் ஆயப்பெற்றாலும் பக்தியைப் பரப்புவதே முன்னோக்கமாக அமைந்திருந்தது கன்னியாகுமரி மாவட்டத்திலும் இன்னும் சில இடங்களிலும் நிகழ்ந்த சில சமயச் சலசலப்புகள் பட்டிமன்றங்களிலும் எதிரொலித்தன.

கிருத்துவக் கோயில் வளாகங்களிலும் அப்போஸ்தலர்களின் செயல்பாடுகளைப் பற்றிய பட்டிமன்றங்கள் நடைபெற்றன. ''வளனாரின் தொண்டுகளில் விஞ்சி நிற்பது சமுதாயத் தொண்டா பக்தித் தொண்டா?'', என்பது போன்ற தலைப்புகள் பேசப்பெற்றன. அவை பெரும்பாலும் காரைக்காலம்மையார், சிறுத்தொண்டர் பற்றிய பட்டிமன்றங்களைப் போன்றே அமைந்திருந்தன.

'சீறாப்புராணத்தில் சிறந்தோங்கி நிற்பது சமூக உணர்வா சமய உணர்வா?' எனும் பட்டிமன்றமும் நடத்தப் பெற்றுள்ளது.

இந்துக் கோயில்களிலும் இந்துசமயக் கூட்டங்களிலும் பெரும்பான்மையாக இடம்பெற்றிருந்த இப்பட்டி மன்றங்கள் இவ்வாண்டில் கிருத்துவ, இஸ்லாமியத் தொழுகையிடங்களிலும் விழாக்களிலும் இடம்பெற்றிருப்பது மக்கள் மன்றங்களில் இக் கலை பெற்றிருக்கும் வரவேற்பைக் காட்டுகிறது.

திராவிடர் கழகக் கூட்டங்களில் போடப்பெற்ற பட்டி மன்றங்கள் சமுதாயச் சீர்திருத்தத்தை அடிப்படையாகக் கொண்ட தலைப்புகளைக் கொண்டிருந்தன. சில இடங்களில் சமயவாதிகள் எதிர்க்கும் தலைப்புகளையும் வேண்டுமென்றே இணைத்துள்ளனர்.

பொதுவுடைமைக் கட்சியினர் நடத்தும் கூட்டங்களில் பெரும்பாலும் பொருளியல் தலைப்புகளும் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களுமே ஆயப்பெற்றன. கார்ல் மார்க்ஸின் நூற்றாண்டு விழாக் கூட்டங்களிலும் பொருளாதார முக்கியத்துவம் பெற்ற தலைப்புகளே பேசப் பெற்றன.

பட்டிமன்றம் வழக்காடு மன்றத்தை ஈந்தது; வழக்காடு மன்றம் 'சந்திப்பை' இவ்வாண்டு ஈன்றிருக்கிறது. கருத்துப் பரப்பும் கருவியாக இபபட்டி மன்றமும் அதைச் சார்ந்த கலைகளும் எண்பத்திரண்டில் நல்ல தொண்டாற்றியுள்ளன.

# 36. கம்பன் கழகங்கள்

—கா. அ. ச. ரகுநாயகன்

தமிழகத்திலும் வெளிநாட்டிலுமாக அமையும் 46 கம்பன் கழகங்களுள் மூன்று, எண்பத்திரண்டில் புதிதாகத் தோன்றியவை. கருத்தரங்கம், ஆய்வரங்கம், கவியரங்கம், வழக்காடு மன்றம், பட்டி மன்றம், கலை தெரி அரங்கம், தன்னிலை விளம்பல், சிறப்புரை போன்ற பல மரபு, புது அமைப்புகள் வாயிலாக இவை கம்பராமாயணச் சுவையறிவை மக்களிடையே பரப்புகின்றன. எண்பத்திரண்டு பாரதி நூற்றாண்டானமையால் பாரதி தொடர்பான நிகழ்வுகளும் பிறவுமமைந்து சிறந்தன.

1981-ஆம் ஆண்டு வரையில், தமிழ் நாட்டிலும், பிறவிடங்களிலும் நாற்பத்து மூன்று கம்பன் கழகங்கள் பதிவு பெற்றிருந்தன. தமிழ் நாட்டின் எல்லைக்குள் 39-உம், புதுவையில் ஒன்றும், கல்கத்தாவில் ஒன்றும், ஸ்ரீலங்காவில் யாழ்ப்பாணத்திலும், மலேஷியாவில் மலாக்காவிலும் ஒவ்வொன்றுமாக அமைந்திருந்தன. 1982-இல் தமிழ் நாட்டில் புதியனவாக மூன்று கழகங்கள் நெய்வேலி, வையப்பமலை (சேலம் மாவட்டம்), திருத்துறைப் பூண்டி (தஞ்சை மாவட்டம்) ஆகிய ஊர்களில் ஏற்பட்டுள்ளன.

கம்பருடைய 'இராமாவதார'த்தைப் படிப்பது, மற்றவரைப் படிக்கச் செய்வது, கம்பரின் புலமைத் திறத்தைக் கற்றறிந்தாரிடம் கேட்டறிவது, பிறரையும் கேட்டறியச் செய்வது ஆகியவையே கம்பன் கழகங்கள் அனைத்துக்கும் பொதுவான அடிப்படை நோக்கமாக அமைந்துள்ளன என்று கூறலாம். கம்பருடைய காப்பியம் சமயக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளது என்றாலும், கம்பன் கழகங்கள் பெரும்பாலும் அந்த எல்லைக்குள் நுழைவதில்லை. இலக்கிய ஆய்வு ஒன்றே அவற்றின் இலக்காக அமைந்துள்ளது.

இலக்கிய ஆய்வுத் துறையில் புதிய உத்திகள் பலவற்றைக் கம்பன் கழகங்கள் மேற்கொண்டு வருகின்றன. கருத்தரங்கம், ஆய்வரங்கம், கவியரங்கம், வழக்காடு மன்றம், இன்று சந்திக்கும் இவர்கள், எங்களையும் கேளுங்கள், கலை தெரி அரங்கம், செந்தமிழ்ச் சதுக்கம், இவர்கள் பார்வையில் இவர், காப்பியத்தில் இவர்கள், தன்னிலை விளம்பல், பட்டி மண்டபம் ஆகிய பன்னிரண்டும் புதிய உத்திகளாகும். இவை தவிர, தனிப் பேச்சு, சிறப்புரை, கருத்துரை, இசையுரை, நாடக அரங்கு போன்ற பழைய, மரபு வழிப்பட்ட நிகழ்ச்சிகளையும் இக் கழகங்கள் அமைத்து வருகின்றன. புதிய உத்திகளுக்குக் கீழ்க் காணுமாறு விளக்கம் கூறலாம்.

1. கருத்தரங்கம் : அறிஞர் ஒருவர் தமக்குத் தோன்றும் கருத்தைப் புலவர் தம் நூலில் எவ்வாறு கையாண்டுள்ளார் என்பதனை விளக்கிச் சொல்வது தனியுரை, அல்லது சிறப்புரை என்று சொல்லப்படுகிறது. ஒரே தலைப்பில் அறிஞர் பலர் பேசுதலும், ஒவ்வொரு தலைப்பில் ஒருவராகப் பலர் அவ்வாறு பேசுதலும் 'கருத்தரங்கம்' என்னும் பெயரைப் பெறுகின்றன.

2. ஆய்வரங்கம் : ஒரு கருத்தை அல்லது ஒரு செய்தியைப் புலவர் எவ்வாறு தம் நூலில் அமைத்துள்ளார் என்பதையும், அதன் பொருத்தத்தையும், பிற புலவர் அது போன்ற நிலையில் எவ்வாறு தம் கருத்தை அமைத்துள்ளனர் என்பதையும், இரண்டுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் ஆய்ந்துரைத்தல் ஆய்வுரையாகும். ஒரே தலைப்பில் அறிஞர் சிலர் ஆய்வதும், ஒவ்வொரு தலைப்பினை ஒருவராகச் சிலர் அவ்வாறு ஆய்வதும் 'ஆய்வரங்கம்' என்று சொல்லப்படுகின்றன.

3. கவியரங்கம் : கவிஞர் ஒருவர் அரங்கத் தலைமை ஏற்பார். கவிஞர் சிலர் மேடையில் வீற்றிருந்து தம் கவிதைகளைப் பாடுவர். பொதுத் தலைப்பு ஒன்று; அதன் உறுப்புகளை அல்லது அதனோடு தொடர்புடைய பொருள்களை இக் கவிஞர் பாடுவர். ஒவ்வொரு பொருளைக் குறித்து ஒருவர் பாடுவார். தலைமைக் கவிஞர் முன்னுரையாகவும் முடிவுரையாகவும் பொதுவாகப் பாடுவார். ஒவ்வொரு கவிஞரையும் தலைவர் அவைக்கு அறிமுகம் செய்து, அவரைப் பாடுமாறு கவிதையிலேயே அழைப்பார். இரட்டுற மொழியும் உத்தியைக் கையாண்டு கவிஞர் அவையோரை மகிழ்விப்பர். கவிதையின் சொல்லும் பொருளும் ஒலியும் கருத்தும் அவையோரின் உள்ளத்தை ஈர்க்கும். இதனால், கவியரங்கம் பொதுமக்களிடையே வெற்றி நடை போட்டு வருகிறது.

4. வழக்காடு மன்றம் : காப்பியத்தில் ஒரு பாத்திரத்தின் செயலை அல்லது ஒரு கருத்தைக் குற்றமென்று, மேடையில் நடுவராக அமர்ந்துள்ளவரிடம் ஓர் அறிஞர் எடுத்துக் கூறித் தம் வழக்கைத் தொடுப்பார். அப்படி அவர் கூறுவதற்கு அக் காப் பியத்திலிருந்து பல ஆதாரங்களைக் காட்டுவார். அவர் கூற்றுத் தவறு என்று மற்றோர் அறிஞர் எதிர் வழக்காடுவார். எதிர் வழக்காடுபவரும் தமக்குரிய ஆதாரங்களை அக் காப்பியத்தி லிருந்தே எடுத்துக் காட்டுவார். இருவர் கூற்றுகளையும் கேட்டு ஆய்ந்து தம் தீர்ப்பினை வழங்குவார் நடுவர். எல்லாவற்றுக்கும் அடிப்படை அறநூலாகத் திருக்குறளை மேற் கோள்காட்டுவர். இந்த நிகழ்ச்சியை 'வழக்காடு மன்றம்' என்று கூறுவர்.

5. இன்று சந்திக்கும் இவர்கள் : காப்பியத்தில் வரும் கதை மாந்தர் இருவரைப் போலத் தம்மைப் பாவித்துக் கொண்டு, அறிஞர் இருவர் மேடையில் தோன்றுவர். அப்பாத்திரங்களுடன் தொடர்புடைய கதை நிகழ்ச்சிகளைக் குறித்து, அவ்விரு மாந்தரும் இன்று ஒருவரையொருவர் காண நேர்ந்தால், தம்முள் எவ்வாறு கருத்துகளைப் பரிமாற்றம் செய்து கொள்வர் என்ப தனைக் கற்பனையாக எண்ணிப் பார்த்து உரையாடுவது இது. இது, கதை மாந்தர் தம்மைத் தாமே விமரிசனம் செய்து கொள்ளும் ஓர் உத்தியாகும். இதனால், கதை நிகழ்ச்சியின் நுட்பங்களும், பாத்திரங்களின் பண்பு நலன்களும் சிறப்பாக வெளிப்படும். நிகழ்ச்சிகள் நடைபெற்று நெடுங்காலத் தொலைவில் நின்று எண்ணும்போது, விருப்பு வெறுப்புகள் மறைந்து பாத்திரங்கள் சமநிலையில் நோக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது பாத்திரப் படைப்புகளின் சிறப்பினை இவ்வுத்தி யினால் சிறப்பாக வெளிக்கொணர இயலும்.

6. 'எங்களையும் கேளுங்கள்'

காப்பியத்தில் வரும் ஒரு பெரிய பாத்திரத்தின் பண்பு நலன் களைக் குறித்து அல்லது பொதுவான ஒரு நிகழ்ச்சியைக் குறித்து அக்காப்பியத்தில் வரும் வேறு சில சிறு பாத்திரங்கள் அல்லது அஃறிணைப் பொருள்கள் தம் கருத்தினைக் கூறுவதுபோலக் கற்பனையாக அறிஞர் சிலர் மேடையில் தோன்றிப் பேசுவது.

7. கலைதெரி அரங்கம்:

காப்பியப் பாடல்களில் அமைந்துள்ள இலக்கிய நயம், இசைச் சிறப்பு, நாடகப் பாங்கு, கற்பனை வளம், பாத்திரப்படைப்பு போன்ற கலை நுட்பங்களை அறிஞர் ஆய்ந்துரைத்தல். கவிஞரின் பல்வேறு ஆற்றல்களை இதனால் உணர முடியும்.

**8. செந்தமிழ்ச் சதுக்கம்:**

செந்தமிழ் வல்ல புலவர் பெருமக்கள் சிலர்—வெவ்வேறு காலத்தவரும் வெவ்வேறு இடத்தவரும்—ஓர் அவையில் கூடிக் காப்பியத்தில் தம்முடைய சொல், பொருள், கருத்து, உவமை, கற்பனை முதலான இலக்கிய உறுப்புகள் எவ்வாறு எடுத்தாளப் பட்டுள்ளன என்பதனை ஆய்வது போல அறிஞர் சிலர் கற்பனை யாகக் கலந்துரையாடல். இதனால், கவிஞர் எவ்வாறு முந்தை யோர் சொல் பொருள் முதலானவற்றைப் பொன்னேபோல் போற்றியுள்ளார் என்பதனை வெளிக்கொணர இயலும்.

**9. இவர்கள் பார்வையில் இவர்:**

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழறிஞர் சிலர் கம்பரை ஆழ்ந்து கற்றனர். அவ்வாறு கற்றவர் தத்தமக்குரிய நோக்கில் கம்பரின் பேராற்றலைக் குறித்துத்தம் கருத்தை வெளி யிட்டுள்ளனர். அவர்கள் எந்தக் கோணத்திலிருந்து கம்பரை எவ்வாறு நோக்கி வியந்து பாராட்டியுள்ளனர் என்பதனை அறிஞர் ஆய்ந்துரைத்தல்.

**10. காப்பியத்தில் இவர்கள்:**

காப்பியத்தில் சிறு பாத்திரங்கள் சில ஒவ்வோரிடத்தில் தோன்றித் தம் சிறு கடமைகளை ஆற்றி மறையும். அத்தகைய பாத்திரங்களின் செயல்களை ஆய்ந்து காப்பியத்தின் போக்கிற்கு அவை எவ்வாறு துணைபுரிந்துள்ளன என்பதனை அறிஞர் சிலர் ஆய்ந்துரைத்தல்.

**11. தன்னிலை விளம்பல்:**

காப்பியத்தில் தலைமைப் பாத்திரமாக வரும் ஒருவர் அல்லது துணைப்பாத்திரமாக இருக்கும் ஒருவர் போல மேடை யில் அறிஞர் ஒருவர் தனியாகத் தோன்றி, கதை நிகழ்ச்சிகளின் போது தாம் எண்ணிய எண்ணங்களையும், தாம் செய்த செயல் களையும், செய்யக் கருதியவற்றையும், செய்யத் தவறியவற்றை யும், தமக்கு மற்றவர் செய்த நலன்-கேடுகளையும், அவற்றால் மாறிய தம் மனநிலையையும் இவை போன்ற பிறவற்றையும் தமக்குத் தாமே வெளிப்படப் பேசிக்கொள்ளுதல்.

**12. பட்டி மண்டபம்:**

காப்பியத்தில் வரும் கதை மாந்தரின் பண்பு நலன்கள், அவர்தம் ஆற்றல்கள், புலவர் போற்றிய சுவைகள் போன்ற வற்றை ஒப்பிட்டு ஆய்ந்து அவ்வவற்றின் தகுதிகளை மதிப்பிட்டு நிலைநிறுத்திக் காட்டுதல் பட்டிமண்டபத்தின் நோக்கமாகும்.

இந்த அரங்கில் நடுவர் ஒருவர் வீற்றிருப்பார். தலைப்புகளில் எழுப்பப் பெறும் வினாக்களுக்கு ஏற்ப அணிகள் இரண்டாகவோ, மூன்றாகவோ அமைந்து முறையாகச் சொற்போரிடுவர். ஒவ்வோரணியிலும் அறிஞர் மூவர் அல்லது நால்வர் பங்கு பெறுவர். அணித் தலைவர் இறுதியில் தம் அணியின் வாதத்தை தொகுத்துரைப்பர். அதன் பின்னர் நடுவர் அணிகளின் வாதங் களை ஆய்ந்து, அவற்றின் தகுதிகளைத் தூக்கிட்டு நிறுத்துக் காட்டித் தம் முடிவை வெளியிடுவார். சில மேடைகளில் நடுவர் முடிவுரைக்கு முன்னர் நோக்கர் தம் கருத்துகளை வாக்குச் சீட்டின் வாயிலாக அறிவிப்பதும் உண்டு.

'மேல்முறையீட்டுப் பட்டி மண்டபம்' எனச் சில ஊர்களில் நிகழ்ச்சி அமைக்கின்றனர். மாவட்ட நீதி மன்றங்களில் வழங்கிய தீர்ப்பில் குறைபட்ட சிலர் உயர்நீதி மன்றங்களில் மேல் முறையீடு செய்வது போன்றது இந்த நிகழ்ச்சி. வழக்கமான பட்டி மண்டபங்களில் நடுவர் ஒருவரே இருந்து தீர்ப்பு வழங்கு வார். மேல் முறையீட்டுப் பட்டி மண்டபங்களில் இருவர் அல்லது மூவர் அமர்ந்து 'நடுவராயமாக'ச் செயல்படுவர். பதிவாளர் என்பவர் தொடக்கத்தில் வழக்கு என்ன என்பதை அவைக்கு விளக்கிச் சொல்வார்.

முதல் நாள் பட்டிமண்டபத்தில், நோக்கரின் தீர்ப்பால் குறைபட்ட அணியினர் சார்பில் ஒருவரும், நடுவர் தீர்ப்பால் குறைபட்ட அணியினர் சார்பில் ஒருவரும் முறையிடுவர். நோக்கர் சார்பிலும், வெற்றி பெற்ற அணியினர் சார்பிலும் வாதங்கள் நிகழும். வாதிட முற்படுவோரிடம் நடுவராயத்தினர் இடையிடையே ஐயங்களை எழுப்பிக் கேட்டுத் தெளிவிப்பர். இறுதியாக நடுவராயம் தன் தீர்ப்பினை வழங்கும்.

மணிமேகலை போன்ற பழைய நூல்களில் 'பட்டிமண்டபம்' என்னும் தொடர் வருகின்றது. ஆயினும், அக்காலத்தில் அத் தொடர் எந்தப் பொருளில் வழங்கியது என்பது தெளிவாகத் தெரியவில்லை. 'புலவர் கூடி இலக்கிய ஆய்வு செய்யும் மாளிகை' என்னும் பொருளை ஒருவாறு கொள்ளமுடிகிறது. இக்காலத்தில் இத்தொடரை முதன்முதலாகத் 'தமிழ்க்கடல்' ராய. சொக்க லிங்கம் அவர்கள் வழக்கத்தில் கொண்டு வந்தார். திருவண்ணா மலையில் ஆகஸ்டுத் திங்கள் பதினைந்தாம் நாளில் நடைபெறும் இலக்கியப் பெருவிழாவில், புதிய பொருள் தரும் வகையில் இந்த நிகழ்ச்சிக்குப் 'பட்டிமண்டபம்' என்னும் பெயரைச் சூட்டி யுள்ளார்.

கம்பன் கழகங்கள் ஒருநாள், இரண்டு நாள், மூன்று நாள் எனப் பல வகையாக விழாக்களை நடத்தி வருகின்றன ஒரு சில கழகங்கள் ஸ்ரீராம நவமியின் போதும், நவராத்திரியின் போதும், வேறு சில விழாக்களின் போதும் தொடர்ந்து பத்து நாள் விழாக்களும் நடத்துகின்றன. ஒவ்வொரு மாதத்திலும் ஒரு நிகழ்ச்சியை அமைக்கும் கழகங்களும் உண்டு. வேறு சில கழகங்கள் வாரந்தோறும் பாடம் நடத்தியும், அதனைத் தொடர்ந்து இளைஞரிடையே பேச்சாற்றலை வளர்க்கும் வகையில் பயிற்சி வகுப்பு நடத்தியும் வருகின்றன.

இவ்வாறு பல்வேறு வகைகளிலும் கம்பன் கழகங்கள் புதிய புதிய உத்திகளைக் கையாண்டும், புதிய புதிய முயற்சிகளில் ஈடுபட்டும் வருவதனால் பொதுமக்கள் கம்பருடைய காப்பியத்தை நன்கு அறியவும், சுவைக்கவும் வாய்ப்பு ஏற்படுகிறது. இத்தகைய முயற்சிகளினால் இளைஞர் இலக்கியங்களைக் கற்பதிலும், கம்பருடைய ஆற்றலை அறிவதிலும், அவற்றை எடுத்துரைக்க மேடை ஏறுவதிலும் ஆர்வம் கொள்கின்றனர்.

பாடல்களை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கும் போட்டி, பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, ஓவியப் போட்டி முதலான பல்வேறு போட்டிகளை நடத்துவதனால், மாணவப் பருவத்திலேயே இளைஞர்க்குக் கம்பரிடமும் பிற புலவரிடமும் தொடர்பு ஏற்படுகின்றது. இளமையில் செய்த மனப்பாடம் பிற்காலத்தில் அவர்க்குப் பெரிதும் துணை புரியும். பேச்சாற்றலையும், கட்டுரை வரையும் திண்மையையும் அவர்கள் வளர்த்துக் கொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது.

'கம்பன் கழகம்' என்று இக் கழகங்கள் கம்பன் பெயரில் அமைக்கப்பட்டிருந்தாலும், இவை பிற இலக்கியங்களையும்; கற்பதற்கு வாய்ப்பளிக்கின்றன.

**1. சென்னை :**

1974 ஏப்ரல் திங்களில் இக் கழகம் தொடங்கப்பட்டது. நீதிபதி மு. மு. இசுமாயில் தலைவராகவும், தி. மு. அழகர்சாமி செயலராகவும் பொறுப்பேற்றனர். ஆண்டு தோறும் ஆகஸ்டுத் திங்கள் இரண்டாவது வாரம் வெள்ளி, சனி, ஞாயிறுகளில் இக் கழகம் கம்பன் விழா எடுத்து வருகிறது. மயிலை ஏவி. எம் இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் இந்த விழா நடைபெறுகிறது. ஆண்டு விழா எடுப்பது மட்டுமன்றி, ஆண்டு முழுவதும், வாரத்தில் ஒரு நாள் இலக்கிய வகுப்பை இக்கழகம் நடத்தி வருகிறது.

1977-இல் கம்பராமாயண வகுப்புத் தொடங்கியது. மு.மு. இசுமாயில் வகுப்புகளை நடத்திவந்தார். நான்கு ஆண்டு கள் நடந்து வந்து 1981 மார்ச்சுத் திங்களில் நிறைவு பெற்றது. 1982 ஏப்ரல் முதல் சிலப்பதிகார வார வகுப்புகளை மு.மு. இசுமாயில் நடத்தி வருகிறார்.

1975-இல் 'கம்பராமாயணம்'-மெல்லிய தாளில் கையடக்கப் பதிப்பு வெளியிடப்பட்டது. 5000 பிரதிகள் எட்டுத் திங்களில் விற்றுத் தீர்ந்தன. 1975-இல் வெளி வந்த சிறந்த தமிழ் நூல் என இப்பதிப்புத் தேர்ந்தெடுக்கப்பட்டது. பதிப்பாளராகச் சென்னைக் கம்பன் கழகமும், அச்சிட்டோராகச் சென்னை 'ஹோா அண்ட் கம்பெனி'யும் மைய அரசின் விருது பெற்றன. 1976-இல் இரண்டாம் பதிப்பு 3000 பிரதிகள் அச்சிடப்பெற்றது.

கம்பராமாயணம், சிலப்பதிகாரம், திருக்குறள், சீவக சிந்தாமணி, சீறாப்புராணம் ஆகிய சிறந்த நூல்களில் கல்லூரி மாணவர்க்கான பேச்சுப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடத்தி வருகின்றனர். 1982 ஆகஸ்டுத் திங்கள் 13, 14, 15 ஆகிய மூன்று நாளிலும் இக் கழகம் தன் எட்டாம் ஆண்டு விழாவைக் கொண்டாடியது. தமிழகத்தின் தலைநகரமாக இருப்பதனால், இங்கு நடைபெறும் விழா மிகச் சிறப்பாக அமைகிறது. மாநிலத்தின் சிறந்த பேச்சாளரும், கலைஞரும், கவிஞரும் இவ்விழாவில் பங்கு பெறுகின்றனர். விழா, வெள்ளி மாலை தொடங்கி ஞாயிறு இரவு வரை ஐந்து வேளை நடை பெறுகிறது. சனியும் ஞாயிறும் அரசு விடுமுறை நாளாக அமைவது, எல்லோரும் திரளாகவந்து கலந்து கொள்ள வாய்ப் பளிக்கிறது.

13-ஆம் நாள் வெள்ளிமாலை தொடக்கவிழாவில் கல்யாணி மேனோன் அவர்களும், 14-ஆம் நாள் சனி காலை கே. வீரமணி அவர்களும், அன்று மாலை மணி கிருஷ்ணசாமி அவர்களும், 15-ஆம் நாள் ஞாயிறு காலை டி. கே. எஸ். கலைவாணன் அவர் களும், அன்று மாலை மகாராஜபுரம் சந்தானம் அவர்களும் 'இசை மாலை' அளித்து விழாவுக்கு இனிமை சேர்த்தனர். தொடக்க விழாவில் எம். பாலமுரளி கிருஷ்ணா அவர்கள் இறை வணக்கம் பாடினார்.

கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தலைமையில் சுவாமி ரங்கநாதானந்தா அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார். தமிழ்த் தொண்டாற்றிய சான்றோர் நாரண துரைக்கண்ணன் அவர்களையும், எஸ். மகராஜன் அவர்களையும் பாராட்டினர். பின்னர், சென்னைக்கே உரிய தனிப்பெருஞ் சிறப்பு நிகழ்ச்சி-யாகக் கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டிகளில் வெற்றி

பெற்ற கல்லூரி மாணாக்கர்களுக்குப் பரிசுகள் வழங்கினர். இறுதியாக, மு.மு. இசுமாயில் அவர்கள் எழுதிய, 'கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும்' என்னும் நூலைப் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள் வெளியிட்டார்.

14-ஆம்நாள் சனிக்கிழமை காலையில் 'கலைதெரி அரங்கம்' நடைபெற்றது. மெய்ப்பாடு, சந்தம், இலக்கியம், கற்பனை, பக்தி ஆகியவற்றைக் கம்பர் எவ்வாறு வெளியிடுகிறார் என்பதனை அவ்வத் துறையில் வல்ல அறிஞர் ஐவர் தத்தமக்குரிய கலைத் திறனோடு விளக்கினர். சனிக்கிழமை மாலை, தமிழவேள் அவர்களின் தலைமையில் கவியரங்கம் நடந்தது. அதன் பின்னர், ஸ்ரீ ஞானானந்த பால நாட்டிய மண்டலியினர் 'திருமுடி சூடிய திருவடி' என்னும் நாடகத்தை நடித்தினர்.

15-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலையில் சுகி. சிவம் அவர்கள் தலைமையில் பட்டிமண்டபம் நடைபெற்றது. அன்று மாலை 'செந்தமிழ்ச் சதுக்கம்' என்னும் ஒரு புதிய நிகழ்ச்சி நடைபெற்றது. திருவெண்ணெய் நல்லூர்ச் சடையன் சதுக்க நாயகமாக அமர்ந்தார். வான்மீகி, திருவள்ளுவர், இளங்கோவடிகள், ஆழ்வார் ஆகிய புகழுடம்பெய்திய புலவர் பெருமக்கள் சதுக்கம் புகுந்து கம்பர் மீது குறைபட்டனர். 'முன்னையோர் மொழிந்ததை முத்தமிழ்க் கம்பன் எடுத்தாண்ட நெறியும், திருத்திய முறையும்' சரியல்ல என்பது அவர்களின் குறை. கம்பரும் அங்கே உடனிருந்து அவற்றையெல்லாம் கேட்டுத் தாம் செய்தவற்றில் தவறு இல்லை என்றும், எல்லாம் முன்னையோரைப் போற்றியும் இலக்கிய மரபை ஒட்டியும் செய்துள்ளதாகவும் பணிவோடு விளக்கிச் கூறினார். இறுதியில், சடையன், கம்பர் கூறியவற்றை ஏற்று, அவர் செய்த செயல்களில் தவறில்லை என்றும், முன்னையோர் மொழிந்தவற்றை அவர் மேலும் மாற்றுயரச் செய்துள்ளார் என்றும் கூறி அனைவரையும் மகிழச் செய்தார்.

1982-இல் மு.மு. இசுமாயில் அவர்கள் இக்கழகத்தின் தலைவராகவும், பழ. பழனியப்பன் செயலராகவும் பணியாற்றி வருகின்றனர்.

**2. காஞ்சிபுரம் :**

6. 5. 1977-இல், மு.மு. இசுமாயில் அவர்கள் இக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். ப. கலியபெருமாள் தலைவராகவும், ச. கி. இராமன் செயலராகவும் பொறுப்பேற்றனர். கம்பராமாயண வகுப்பு நடத்துவதையும் திங்கள் தோறும் ஒரு சிறப்பு நிகழ்ச்சி நடத்துவதையும் இக் கழகம் தன் பணியாகக் கொண்

டிருக்கிறது. ஆங்கில மாதம் இரண்டாம் சனிக்கிழமைகளில் நிகழ்ச்சி நடத்தி வருகின்றனர். சிறப்புரை, கருத்தரங்கு, கவி யரங்கம், சந்திப்பு வலயங்கள், இசைப் பேருரைகள் போன்றவை மாத நிகழ்ச்சியில் இடம் பெறுகின்றன.

1978, 79, 81, 82 ஆகிய ஆண்டுகளில் கம்பன் விழா நடத்தி யுள்ளனர். ஏப்ரல், மே திங்களில் விழா நடைபெறும். மலர் வெளியிடும் வழக்கமில்லை. 1982-இல், பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்க்கான பேச்சுப் போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங் கினர். இவ்வாண்டில் பாரதி விழா கொண்டாடினர்.

**3. திருப்பத்தூர் :**

1977-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்ற இக் கழகத்தின் ஆறாம் ஆண்டு கம்பன் விழா, 1982 ஆகஸ்டுத் திங்கள் 28, 29 ஆகிய இரு நாளில் கொண்டாடப்பட்டது. வழக்கமாக சூலைத் திங்கள் மூன்றாவது வாரம் சனி ஞாயிறுகளில் கொண்டாடுவ தென்னும் இவர்களின் வழக்கம் இந்த ஆண்டில் ஒரு திங்கள் தள்ளி நடந்தது. கா. அ. ச. பத்மநாபன் அவர்கள் இதன் தலைவர். சு. சண்முக சுந்தரம் அவர்கள் செயலர். தொடக்கம் முதல் இவர்கள் தொடர்ந்து பணியாற்றி வருகின்றனர். ஆண்டு தோறும் மலர் வெளியிட்டு வருகின்றனர். மலரில் பல ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெறுகின்றன.

28. 8. 82 முதல் நாள் காலையில் தொடக்க விழா நடை பெற்றது. கம்பன் கழகங்கள் அனைத்துக்கும் தாயென விளங்கிய காரைக்குடி கம்பன் அடிப்பொடி அவர்களின் மறைவினால் ஏற்பட்ட துயரத்தை ஆற்றும் வகையில் அவருடைய திருவுருவப் படத் திறப்பு விழா சிறப்பிடம் பெற்றது. பேராசிரியர் சோ. சத்தியசீலன் அவர்கள் கம்பன் அடிப்பொடி அவர்களின் திருவுருவத்தைத் திறந்து வைத்துத் தொடக்கவுரை யாற்றினார் நீதிபதி எஸ். சோமசுந்தரம் அவர்கள் மலரினை வெளியிட்டார். சென்னை மருத்துவர் லலிதா காமேஸ்வரன் அவர்கள் சிறப்புரை ஆற்றினார்.

முதல் நாள் மாலை, 'ஆய்வு மேடை' நிகழ்ச்சி நடந்தது. கம்பரில் தெரிந்தெடுத்த தொடர்கள் நான்கினை அறிஞர் நால்வர் ஆய்ந்துரைத்தனர். காப்பியத்தில் சிலர் சிறு பாத்திர மாகத் தோன்றினாலும் அரிய செயலை ஆற்றுகின்றனர். தாடகை, மாரீசன், திரிசடை, விசுவாமித்திரன், கூனி ஆகிய ஐவரின் பங்கு பற்றிக் கல்லூரி மாணவர் ஐவர் விளக்கிக் கூறி னார்கள். அன்று இரவு சென்னை, இந்திராணி 'இராமாவ தார'த்தை நாட்டிய நாடகமாக ஆடி மகிழ்வித்தார்.

இரண்டாம் நாள் காலை, 'தன்னிலை விளம்பல்' என்னும் ஒரு புதிய நிகழ்ச்சியை நடத்தினர். தயரதன், இராவணன், சீதை, குகன் ஆகியோரின் பாத்திரங்களை ஏற்று அறிஞர் நால்வர் அப் பாத்திரங்களின் உள்ளத்தை விளக்கிக் காட்ட முயன்றனர். பாண்டிச்சேரி அமைச்சர் மாண்புமிகு எஸ். சௌரி ராசன் தலைமையில் கவியரங்கம் நிகழ்ந்தது. மாலையில், பாரதி விழா கொண்டாடப்பட்டது. சென்னை, தா. வே. வீரா சாமி அவர்கள் தலைமை ஏற்றுப் பாரதியின் சிறப்புக்களை விளக்கினார். பேச்சு, கட்டுரை, ஓவிய, மனனப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்க்கும் பிறர்க்கும் பரிசுகள் வழங்கினார். அதன் பின்னர், பேராசிரியர் இரா. இராதா கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் பட்டி மண்டபம் நடந்தது.

4. சேலம்

6-1-1974-இல் கழகம் அமைக்கப்பட்டது. எம். ஏ. பழனி யப்பச் செட்டியார் அவர்கள் தலைவராகவும், பி. கந்தசாமி அவர்கள் செயலராகவும் பொறுப்பேற்றனர். இக்கழகம் பதிவு செய்யப் பெற்றுள்ளது. 1976 ஆம் ஆண்டில் மூன்றாவது ஆண்டு விழா மலர் வெளியிட்டனர். இம்மலரில் பல்வேறு தலைப்புகளில் அறிஞர் பதின்மர் கம்பரை ஆய்வு செய்துள்ளனர். கவிதைகள் நான்கும் இடம் பெற்றுள்ளன. 1974 முதல் தொடர்ந்து கம்பன் விழா எடுத்து வருகின்றனர். 1980-இல் சென்னை, கம்பன் கழகத் தலைவர் மு. மு. இசுமாயில் அவர்களைப் பாராட்டிக் கவிஞர் எண்மர் 'பாராட்டுப் பாமாலை' தொகுத்தளித்துள்ளனர்.

16. 1. 82-இல் நடைபெற்ற கம்பன் விழாவில் சென்னை பத்மா சுப்பிரமணியன் அவர்களின் கம்பராமாயண நாட்டிய நாடகம் நடைபெற்றது. பெருந் தொகையை நன்கொடையாக வசூல் செய்து நிரந்தர காப்பு நிதி ஏற்படுத்தியுள்ளனர்.

5. கோபிச் செட்டிப் பாளையம்:

1963-இல் இக்கழகம் தொடங்கப்பட்டது. தங்கமணி முத்து வேலப்ப கவுண்டர் அவர்களும், ஜே சுப்பிரமணிய அய்யரும் இக்கழகத்தின் தலைவராகவும், துணைத்தலைவராகவும் இருந்து இதனைப் போற்றிக் காத்து வந்தனர். பி. என். நஞ்சப்பன் அவர்கள் கம்பன் விழாவின் முழுச் செலவையும் ஏற்று நடத்தி வருகின்றார். சீதா கல்யாண மண்டபத்தில் கம்பன் விழா நடைபெற்று வருகிறது. கடந்த பத்தொன்பது ஆண்டுகளில் இருபது கம்பன் விழா நடைபெற்றுள்ளன. தற்போது முத்து வேலப்பகவுண்டர் அவர்கள் தலைவராகவும், க. கு. கோதண்ட ராமக் கவுண்டர் அவர்களும், பி. என். நஞ்சப்பன் அவர்களும்

செயலாளராகவும் இருந்து வருகின்றனர். மலர் வெளியிடும் வழக்கமில்லை.

1982-இல் இக்கழகத்தில் கம்பன் விழா இரண்டு நடைபெற்றன. ஒவ்வோராண்டிலும் மார்கழியில் வைகுண்ட ஏகாதசிக்கு முன் இரண்டு நாளில் விழா நடத்துவது இக்கழகத்தின் வழக்கமாகும். 1982-இல் சனவரியில் ஒன்றும் டிசம்பரில் ஒன்றுமாக இரண்டு வைகுண்ட ஏகாதசி வந்துற்றதனால் விழாவும் இரண்டு நடைபெற்றுள்ளன. 1982-இல் முதல் விழா, 4-1-82 மற்றும் 5-1-82 ஆகிய இருநாளில் நடைபெற்றது. முதல் நாள் மாலை பேரவை தொடங்கியது. 'பாரதி கண்ட கம்பன்' என்னும் பொதுத் தலைப்பில் நால்வர் பேசினர். 5-1-82 காலையில் கவியரங்கமும், மாலையில் பட்டிமண்டபமும் நடந்தன. இரவு சென்னை, செல்வி பத்மாசுப்பிரமணியம் அவர்களின் நாட்டியம் நடைபெற்றது.

1982-இல் இரண்டாவது விழா, டிசம்பர் 24 மற்றும் 25 ஆம் நாளில் நடைபெற்றது. முதல் நாள் மாலை பேரவையும், பின்னர் 'உடன் பிறப்பு உலகு' என்னும் தலைப்பில் தனிப் பேச்சும் நிகழ்ந்தன. பேரவைக்கு ம. ரா. போ. குருசாமி தலைமை ஏற்றார். புதுவை, மாண்புமிகு எம். ஓ. எச். பாருக் மரக்காயர் தொடக்கவுரை ஆற்றினார். நா. கோவிந்தசாமி அவர்கள் கம்பன் அடிப்பொடி அவர்களின் திருவுருவப்படத்தைத் திறந்து வைத்தார். 'உடன் பிறப்பு உலகு' நிகழ்ச்சியில் இலக்குவன், பரதன், இந்திரஜித், கும்பகர்ணன் ஆகியோரைக் குறித்து அறிஞர் நால்வர் உரை நிகழ்த்தினர். இரண்டாம் நாள் காலையில் கவியரங்கமும், மாலையில் பட்டி மண்டபமும் நிகழ்ந்தன. கவியரங்கம், புதுவைமாண்புமிகு எஸ். சௌரிராசன் தலைமையில் நடைபெற்றது.

6. கள்ளிப் பட்டி:

1960 சனவரியில் தொடங்கப்பட்டது. கம்பன் அடிப்பொடி அவர்களும் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களும் இக்கழகம்தோன்ற உறுதுணையாய் நின்றனர். க.கு. கோதண்டராமக்கவுண்டர் அவர்கள் ஒருவரே இக்கழகத்துக்கு எல்லாமாக இருந்து நடத்தி வருகின்றார்; இங்கு நடைபெறும் கம்பன் விழாச் செலவுகள் அனைத்தும் இவர் பொறுப்பே. 23 ஆண்டுகளில் கம்பன் விழா 24 நடந்துள்ளன.

கோபிச் செட்டிப் பாளையம், கள்ளிக்குடி ஆகிய ஊரிடங்களில் உள்ள கழகங்களும் இரட்டைக்கழகங்கள் போல்இணைந்து

இயங்கி வருகின்றன. சென்னைக் கம்பன்கழகம் கம்பராமாயணத்தைப் பதிப்பிக்க முற்பட்டபோது இக்கழகங்கள் ரூ. 5000 கொடுத்து உதவின.

ஒவ்வோராண்டிலும் மார்கழித் திங்களில் வைகுண்ட ஏகாதசி விழாவை க. கு. கோ. அவர்கள் சிறப்பாக நடத்தி வருகின்றார். அதனையொட்டி அன்று அங்குக் கம்பன் விழாவையும் நடத்தி வருகின்றார். 1982-ஆம் ஆண்டில், வைகுண்ட ஏகாதசி இருமுறை வந்ததால், இங்கும் கம்பன் விழா இருமுறை நடந்துள்ளது.

**முதல் விழா:** 6-1-82-இல் கள்ளிப்பட்டி ஸ்ரீராமவிண்ணகரத்தில் நடைபெற்றது. காலையில் 'திருப்பாவை-திருவெம்பாவை' விழா; எஸ். கே. இராமராசன் தலைமை ஏற்றார்: ச. திருவேங்கடாச்சாரி 'திருப்பாவை' பற்றியும், மு. கணபதி அவர்கள் 'திருவெம்பாவை' பற்றியும் சிறப்புரை ஆற்றினர். 'இரு பாவைகள்' என்னும் தலைப்பில் இரா. இராதாகிருஷ்ணன் அவர்கள் ஆய்வுரை செய்தார். மாலையில் கம்பன் விழா நடைபெற்றது. பேரவை, வழக்காடு மன்றம், பட்டிமண்டபம் ஆகிய மூன்று நிகழ்ச்சிகளாக விழா அமைந்தது.

**இரண்டாவது விழா:** 26-12-82-இல் காலையில் 'திருப்பாவை திருவெம்பாவை' விழாவும், மாலையில் கம்பர் விழாவும் நடைபெற்றன. எஸ். கே. இராமராசன் தலைமையில், கோவை வானொலி நிலைய இயக்குநர் கோ. செல்வம் அவர்கள் தொடக்கவுரையாற்றினார். திருப்பாவை, திருவெம்பாவை பற்றி அறிஞர் இருவர் பேசினர். அதன்பின் சுகி. சிவம் அவர்கள் இரு பாவைகள் பற்றிக் கருத்துரை வழங்கினார். மாலையில் கம்பர் விழா நடந்தது. பேரவை, 'இவர்கள் சந்தித்தால்', பட்டிமண்டபம் ஆகிய மூன்று நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. இங்கு நடைபெறும் பட்டிமண்டபத்தில் நான்கு அணிகள் இடம்பெறுகின்றன.

**7. கோவை:**

1973-ஆம் ஆண்டில் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்கள் தலைமையில் தொடங்கப் பெற்றது. இதன் குறிக்கோள்: 1. கம்பன் இலக்கியப் பணி, 2. நாடகம், 3. நடனம், 4. புத்தகப் பதிப்பு, 5. அறிஞர் பாராட்டு, 6. கல்லூரி—பள்ளி மாணவர்க்குக் கம்பனில் பேச்சு, எழுத்து, இசைப் போட்டிகள் நடத்திப் பரிசளிப்பது என்பன.

ஆண்டுதோறும் பிப்ரவரித் திங்கள் இரண்டாவது வாரம் சனி ஞாயிறுகளில் கம்பன் விழா எடுக்கின்றனர். இக்கழகத்தின் தலைவர் ஜி. கே. சுந்தரம் அவர்களின் முயற்சியினால் பெருந் தொகை சேர்த்து ஓர் அறக்கட்டளையை நிறுவியுள்ளனர். இதன் வட்டி, மலர் வெளியீடு ஆகிய வருவாயுடன், அன்பரின் துணை யும் கொண்டு கழகப் பணிகளை நிறைவேற்றி வருகின்றனர்.

கடந்த மூன்று ஆண்டுகளாக, திங்கள் தோறும் இரண்டாம் சனிக்கிழமைகளில், கம்பராமாயணத்தில் சொற்பொழிவு நடத்தி வருகின்றனர். இம்மாதக் கூட்டங்கள் 'கம்பன் கவியமுதம்' என்னும் பெயர் பெற்றுள்ளன. 1982-இல், அயோத்தியா காண்டத்தின் பிற்பகுதியும், ஆரணிய காண்டம் முழுவதும் பேசப்பட்டுள்ளன. இப்பேச்சினால், பலர் மேடை ஏறும் வாய்ப்புப் பெற்றுள்ளனர். தமிழ்த்துறையினர் மட்டுமன்றிப் பிற துறைகளில் உள்ளோரும் இதில் ஈடுபடுகின்றனர்.

'கம்பன் களஞ்சியம்' என்னும் வரிசையில் பல ஆய்வு நூல் களைத் தொடர்ச்சியாக வெளியிடத் திட்டமிட்டுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் பணியாற்றும் அ. அ. மணவாளன் அவர்களின் 'கம்பன்—மில்டன் ஒப்பீடு' என்னும் ஆங்கில நூல் வெளிவரும் நிலையில் உள்ளது.

1982 பிப்ரவரி 13, 14 ஆகிய இருநாளில் கம்பன் விழா நடைபெற்றது. முதல்நாள் காலை 'திருநாள் மங்கலம்' என்னும் நிகழ்ச்சியில் மலர் வெளியீடு, கட்டுரை, பேச்சுப்போட்டிகளுக்குப் பரிசளிப்பு, சிறப்புரை ஆகியவை இடம் பெற்றன. அன்று மாலை யில் பாராட்டரங்கமும், கவிதை நூல் வெளியீடும் இடம் பெற்றன. அதன் பின்னர்க் கவியரங்கம், அபூர்வ சந்திப்புகள் ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இரண்டாம் நாள் காலையில் 'ஆய்வரங்கம்' என்னும் நிகழ்ச்சியில் 'இவர்கள் பார்வையில் கம்பன்' என்னும் தலைப்பில் அறிஞர் ஐவர் பேசினர். அன்று மாலையில் பட்டிமண்டபம் நடைபெற்றது.

## 8. நாமக்கல்

பழமையான கழகங்களில் இதுவும் ஒன்று. 1958-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்ற இதற்கு, 1982 வெள்ளிவிழா ஆண்டாகும். ஆனால், ஆண்டுதோறும் தொடர்ந்து விழா எடுத்து வந்த இக்கழகம் 1982-இல் எந்த நிகழ்ச்சியையும் நடத்த வில்லை.

தமிழ்க் கடல், ராய. சொ., கி. வா. ஜ., கம்பன் அடிப்பொடி போன்ற தமிழறிஞர் இக்கழகத்தின் நிகழ்ச்சிகளில் பங்கேற்றுச்

சிறப்பித்துள்ளனர். ஆண்டுதோறும், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் இசையுரை, கம்பன் விழாவில் நடைபெறுதல் வழக்கம். சூலைத் திங்கள் இரண்டாவது சனி ஞாயிறுகளில் இங்குக் கம்பன் திருநாள் கொண்டாடி வருகின்றனர்.

## 9. புதுவை:

புலவர் அ. அருணகிரி அவர்கள் பல ஆண்டுகளாகக் காரைக்குடி கம்பன் விழாவுக்குச் சென்றுகொண்டிருந்தார். காரைக்குடியில் நடப்பதுபோலவே புதுவையிலும் கம்பன் விழா நடத்த வேண்டுமென்னும் ஆவல் அருணகிரியின் உள்ளத்தில் முகிழ்த்தது; மகராஜன் புதுவைக்குத் தலைமை நீதிபதியாக 1955-இல் வந்தார்; அவருடன் அருணகிரிக்கு இலக்கியத் தொடர்பு ஏற்பட்டது. ஒருநாள் அருணகிரி அவர்கள் மகராஜன் அவர்களிடம் தம் உள்ளக்கிடக்கையை வெளியிட்டார். அவரும் அதனை ஏற்றுக் கொண்டார். 5-4-1966-இல் கம்பர் உருவம் பொறித்த அஞ்சல் தலையை இந்தியப் பேரரசு வெளியிட்டுச் சிறப்பித்தது. புதுவையிலும் இந்த அஞ்சல் தலை வெளியீட்டு விழா நடைபெற்றது. முதலமைச்சர் மாண்புமிகு வை. வேங்கடசுப்பா ரெட்டியார் தலைமையில், எஸ். மகராஜன் சிறப்புரை ஆற்றும் வாய்ப்பு அன்று நேர்ந்தது. அந்த உரையில், புதுவையிலும் ஆண்டுதோறும் கம்பன் விழா கொண்டாட வேண்டும் என்னும் கருத்தை அவர் வெளியிட்டார். முதலமைச்சர் அவர்களும் அக்கருத்தை அப்பொழுதே ஏற்று உடன்பாடு தெரிவித்தார்.

கம்பன் விழாக் குழு, முதலமைச்சர் தலைமையில் அமைக்கப்பட்டது. ந. கோவிந்தசாமி முதலியார் அவர்கள் செயலர் பொறுப்பை ஏற்றார். நீதிபதி எஸ். மகராஜன் அவர்களும், காவல்துறைத் தலைவர் பொன் பரமகுரு அவர்களும் விழாவினைச் சிறப்பாக நடத்துவதற்குப் பெரிதும் துணை நின்றனர். புதுவையில் 'கம்பன் விழா' மே திங்கள் இரண்டாவது வாரம் சனி, ஞாயிறுகளில் நடத்துவதென உறுதி செய்தனர். 1966, மே 14-இல் கம்பன் விழா தொடங்கியது.

புதுவை நகராட்சி அரங்கம் 'கம்பன் கலையரங்க'மாக மாறியது. 15-5-1966 அன்று விழாவின் இரண்டாவது நாள் இறுதி நிகழ்ச்சியாகப் பட்டிமண்டபம் நடைபெற்றது. அந்த நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன், முதலமைச்சர் வேங்கடசுப்பா ரெட்டியார் எழுந்து ஓர் அறிவிப்பை வெளியிட்டார். "கம்பன் விழாக்குழு இன்று முதல் 'கம்பன் கழகமாக' மாறி, இனி ஆண்டு

தோறும் மே திங்கள் இரண்டாவது சனிக்கிழமையை மைய மாகக் கொண்டு கம்பன் விழா எடுக்கும்'' என்று அவர் அறிவித் தார். உடனே கம்பன் அடிப்பொடி அவர்கள் 'கம்பராமாயண' பிரதி ஒன்றையும், ரூபா ஒரு நூறையும் புதுவைக் கம்பன் கழகத் துக்கு வழங்கி வாழ்த்தினார்கள்.

புதுவை மாநிலத்தில் எந்தக் கட்சி ஆட்சி நடத்தினாலும், யார் முதலமைச்சராக இருந்தாலும், மாநிலத்தின் முதலமைச்சரே கம்பன் கழகத்திற்குப் புரவலராக விளங்க வேண்டுமென விதி செய்தார்கள். ஒவ்வோராண்டு விழாவிலும் நூல்கள் வெளியிடுவதை ஒரு கடமையாக இக்கழகம் கொண்டி ருக்கிறது. 1982 மே திங்கள் 7, 8, 9 (வெள்ளி, சனி, ஞாயிறு) ஆகிய மூன்று நாளில் விழா எடுத்தனர்.

முதல் நாள் (7-5-82) காலையில் திருநாள் மங்கலம், நூல்கள் வெளியீடு, சிறப்புரை ஆகியவையும், அன்று மாலை 'இவர்கள் இன்று சந்திக்கின்றனர்' என்னும் நிகழ்ச்சியும் இடம் பெற்றன. இரண்டாவது நாள் (8-5-82) காலையில், எழிலுரை, வழக்காடு மன்றம் ஆகிய இரு நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. அன்று மாலை பட்டி மண்டபம் நடைபெற்றது. மூன்றாவது நாள் (9-5-82) காலையில் கவியரங்கமும், மாலையில் நயவுரை யும், மேல் முறையீட்டுப் பட்டிமண்டபமும் நடைபெற்றன.

10. தேரழுந்தூர்:

1910-ஆம் ஆண்டில் இந்த ஊரில் 'கம்பர் கழகம்' தொடங் கப்பட்டது. கம்பருக்காக முதன் முதலில் ஓர் அமைப்பு ஏற்பட் டது இதுவேயாகும். டீ. ஏ. பழனியப்ப முதலியார் என்பவர் இதனைத் தோற்றுவித்தார். ஆண்டுதோறும் பங்குனி அஸ்த நாளில் கம்பராமாயண உபன்யாசம் நடந்தது. இது மூன்று நாள் தொடரும்.

1925-இல், உ. வே. சாமிநாதய்யர் தலைமையில் விழா நடந்துள்ளது. அதன்பின் 1929, 30, 31, 36 மற்றும் 1937-ஆம் ஆண்டுகளில் டி. கே. சி. அவர்கள் தலைமையில் விழாக்கள் நடைபெற்றுள்ளன. அந்நாளில் கல்கி, பால் நாடார், சீனிவாச ராகவன், மு. அருணாசலம், அ. ச. ஞானசம்பந்தம், கம்பன் அடிப்பொடி, பாஸ்கரத் தொண்டைமான், பி. ஸ்ரீ. முதலா னோர் விழாவில் பங்கேற்று உரையாற்றியுள்ளனர்.

1933-இல், ஆர். எஸ். கந்தசாமிப்பிள்ளை அவர்கள் தலைமையில் குழு அமைந்து, அக்குழு கழகப் பணிகளை நடத்தி வந்தது. கந்தசாமிப்பிள்ளை அவர்களுக்குப் பின்னர்,

ஜி. ஸ்ரீநிவாசாச்சாரி, வி. ரெங்காச்சாரி, டி. எஸ். சுந்தர மய்யங்கார் ஆகியோர் தலைமை ஏற்றுச் செயல்பட்டிருக் கின்றனர். ஆர். எஸ். கந்தசாமிப்பிள்ளை, மேனாங்குடி சி. மருதவாணம்பிள்ளை முதலானோர் பேருதவி செய்து வந்தனர். 1953 முதல் 1975 வரையில் ஸ்ரீ ஆமருவியப்பன் தேவஸ்தானம் கம்பர் விழாவினை நடத்தி வந்தது. அந்த நாளில் முன்னாள் அமைச்சர் எம். பக்தவத்சலம் அவர்களும் விழாவில் பங்கேற்றுள்ளார்.

1976 முதல் மீண்டும் கம்பர் கழகமே செயல்படத் தொடங் கியது. இப்போது இக்கழகத்தில் புரவலரும், ஆயுள் உறுப்பினரு மாகப் பலர் சேர்ந்துள்ளனர். அவர்கள் செலுத்திய கட்டணத் தொகையை வங்கியில் சேமித்து வைத்துள்ளனர். அதன் வட்டி யைக் கொண்டும், ஆண்டு உறுப்பினர் செலுத்தும் சந்தாவைக் கொண்டும் விழாவை நடத்துகின்றனர்.

பங்குனி அஸ்த நாளை யொட்டிக் காரைக்குடியிலும் நாட்டரசன் கோட்டையிலும் விழா எடுப்பதனால், 1976 முதல் இங்கு மாசித் திங்கள் புனர்பூச நாளில் விழா நடத்தும் வழக் கத்தை மேற் கொண்டுள்ளனர். ஆண்டுதோறும் மாணவர்க்கான பல்வேறு போட்டிகளை நடத்திப் பரிசுகள் வழங்கி வருகின்றனர்.

1982 மார்ச்சுத் திங்கள் 6,7 (சனி, ஞாயிறு) ஆகிய இரு நாளில் கம்பர் திருநாள் நடைபெற்றது. முதல் நாள் காலை கம்பர் திருவுருவப்பட ஊர்வலமும், தொடக்கப்பள்ளி மாணவர்க் கான கம்ப ராமாயணப்பாடல் ஒப்பித்தல் போட்டியும், நடு நிலைப் பள்ளி மாணவர்க்கான பேச்சுப் போட்டியும் நடை பெற்றன. முற்பகல் 10 மணிக்கு ஆமருவிப் பெருமாள் திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள கம்பர் பெருமானுக்குத் திருமஞ் சனம் ஆட்டினர். பிற்பகல் பட்டிமன்றமும், அதனைத் தொடர்ந்து மேல் முறையீட்டுப் பட்டிமன்றமும் நிகழ்ந்தன. இரண்டாம் நாள் காலை உயர்நிலைப்பள்ளி மேல்நிலைப்பள்ளி மாணவர்க்கான பேச்சுப்போட்டி நடைபெற்றது. பிற்பகல் கவியரங்கம், கருத்தரங்கம் ஆகிய நிகழ்ச்சிகள் நடந்தன.

### 11. குடந்தை

1974-இல் இராதாமணாளன் என்பவர் முயற்சியினால் இக் கழகம் தொடங்கப் பெற்றது. ஆயினும், 1980-இல் தான் இதற்குத் தாய்க் கழகத்தின் 'ஏற்பு' கிடைத்துள்ளது. கம்பன் காப்பியச் சுவையும், தமிழ்ச்சுவையும் வழங்குவதோடு, பக்தி நெறியும் சமுதாய உணர்வும் மேலோங்கும் வகையில் இக்கழகம்

பணியாற்றி வருகிறது. வீ.ச. நடராசன் அவர்கள் இதன் தலைவர். ஆங்கிலத் திங்கள் தோறும் ஒரு நிகழ்ச்சியை இவர்கள் நடத்தி வருகின்றனர்.

## 12. புதுக்கோட்டை

1976-இல் தொடங்கப்பட்டது. 1. திங்கள் தோறும் நிகழ்ச்சி ஒன்று ஏற்பாடு செய்வது; 2. குழந்தைப் பருவம் முதல் கல்லூரியில் படிக்கும் வயது வரை உள்ள அனைத்து மாணவர்க்கும், வகுப்பு அடிப்படையில் 12 பிரிவுகளாகப் பிரித்துப் பாடல் ஒப்பித்தல், பேச்சு, கட்டுரைப் போட்டிகள் நடத்தி நூல்கள் பரிசளிப்பது; 3. ஏழை மாணவர்க்குப் பாட நூல்கள், சீருடைகள், தேர்வுக் கட்டணம் ஆகியவை வழங்குவது போன்றன இக்கழகத்தின் நோக்கங்களாக அமைந்துள்ளன. எம். கந்தையா அவர்கள் இதன் தலைவராகவும், சு. மலையப்பன் அவர்கள் செயலராகவும் பொறுப்பேற்றுள்ளனர். கோவை அ. கிருட்டிணசாமி அவர்கள் இக் கழகம் தொடங்கக் காரணமாக இருந்தார்.

1982-இல் இக் கழகம் தன் ஐந்தாவது மலரை வெளியிட்டுள்ளது. திங்கள்தோறும் அறிஞர் பெருமக்களைக் கொண்டு கருத்தரங்கு, கவியரங்கு, பட்டி மண்டபம், வழக்குரையாடல் முதலியன நடத்தி வருகின்றது. தமிழுக்கும் சமுதாயத்திற்கும் தொண்டு செய்யும் சான்றோரை இந்த ஆண்டில் பாராட்டியுள்ளது. ஆண்டுதோறும் சூலைத் திங்கள் கடைசி சனி ஞாயிறுகளில் கம்பன் விழா நடத்துவது இதன் நடைமுறையாகும்.

## 13. காரைக்குடி :

கலியாண்டு 3986; சகாப்தம் 807; விசுவாவசு பங்குனி 4ஆம் நாள் (கி. பி. 886 பெப்ருவரி 23) புதன்கிழமை, துதியை திதி, அத்த நட்சத்திரம் கூடிய நன்னாளில், வெண்ணெய் நல்லூரில் இராமாவதாரத்தைக் கம்பர் அரங்கேற்றினார் என்னும் கணிப்பை அடிப்படையாகக் கொண்டு இக் கழகம் ஆண்டுதோறும் பங்குனி அத்த நாளில் நாட்டரசன் கோட்டையில் விழா எடுத்து வருகிறது. நாட்டரசன் கோட்டையில், கம்பர் பள்ளிப் படை (சமாதி) கொண்டதாகக் கருதும் திருக்கோயிலில் விழா நடைபெறுகிறது.

அத்தத்துக்கு முன், மகம் பூரம் உத்திரம் ஆகிய மூன்று நாளிலும் காரைக்குடியில் கம்பன் திருநாள் கொண்டாடும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். காரைக்குடியில், 'கம்பன் மணிமண்டபம்' என்னும் அழகான மிகப் பெரிய அரங்கத்தை

அமைத்துள்ளார். ஆண்டுதோறும் இம் மண்டபத்தில் விழா எடுக்கின்றனர்.

1982 ஏப்ரல் திங்கள் 4, 5, 6 ஆகிய தேதிகளில் தங்கள் 44ஆவது ஆண்டுத் திருநாளைக் கொண்டாடினர். முதல் நாள் ஞாயிறு காலை நிகழ்ச்சியான திருநாள் மங்கலம் என்பதில் தஞ்சை, தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் வ. அய். சுப்பிரமணியம் தலைமை ஏற்றார். அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் தொடக்கவுரை யாற்றினார். பி. ஸ்ரீ. அவர்களின் படத்தை ம. பொ. சி. அவர்களும், கவிஞர் கண்ணதாசன் அவர்களின் படத்தை வ. சுப. மாணிக்கம் அவர்களும் திறந்து வைத்தனர். கோவை ஜி. கே. சுந்தரம் அவர்கள் 'கம்பன் மணி மல'ரை வெளியிட்டார். அன்று பிற்பகல் 'இன்று சந்திக்கும் இவர்கள்' நிகழ்ச்சி நடைபெற்றது.

இரண்டாம் நாள் முற்பகல் கவியரங்கமும், பிற்பகல் பட்டி மண்டபமும் நடந்தன. இரவு 'வயிற்றிடை வாயன்' என்னும் தலைப்பில் தனியுரை நடைபெற்றது. மூன்றாம் நாள் முற்பகல் மேல் முறையீட்டுப் பட்டிமண்டபமும், பிற்பகல் 'நற்றமிழ் முற்றம்' நிகழ்ச்சியும் நடைபெற்றன. இரவு இந்திராணி அவர்களின் 'இராமாவதாரம்' பரத நாட்டியம் நடைபெற்றது.

காரைக்குடி கம்பன் கழகத்தினர் காரைக்குடியில் விழா எடுப்பதோடு அமையாமல், ஆண்டுதோறும் நாட்டரசன் கோட்டைக்குச் சென்று அங்குள்ள கம்பருடைய பள்ளிப்படை (சமாதி) என்று கருதப்படும் திருக்கோயிலிலும் வழிபாடு நடத்தி வருகின்றனர். இந்த வழிபாடு பங்குனித் திங்கள் அத்தத் திருநாளில் நடைபெறுகிறது. காரைக்குடியில் மூன்று நாள் விழா முடிந்த பின்னர் நான்காவது நாளில் இங்கு வந்து இந்த வழிபாட்டை நிகழ்த்துகின்றனர்.

7.4.82-இல் எண்பத்திரண்டுக்கான வழிபாடு நடைபெற்றது. கம்பரைப் போற்றி மலர் வணக்கம் செய்த பின்னர், கம்பருடைய அருட்கவி ஐந்தினைப் பாடினர். எஸ். இராமகிருஷ்ணன் தலைமையில் விழா நடந்தது. இந்த ஆண்டின் விழாவை, டி. கே. சி., பாரதி ஆகிய இருவரையும் போற்றும் விழாவாக அமைத்தனர். டி கே.சி. படத்தை, க.கு. கோதண்டராமன் அவர்களும், பாரதியின் படத்தை, எஸ். டி. காசிராஜன் அவர்களும் திறந்து வைத்தனர். 'ரசிகமணியின் கம்பன் காதல்' என்னும் தலைப்பில் மு. அருணாசலம் அவர்களும், 'டி.கே.சி. யின் இலக்கிய ரசனை' என்னும் தலைப்பில் கு. அருணாசலக் கவுண்டர் அவர்களும் பேசினர்.

'பாரதியின் எழுத்து வளம்' என்னும் பொருளில் தா. பாண்டியன் அவர்களும், 'மகாகவியின் கவிதை நலம்' என்னும் பொருளில் மறைதிரு சா. லாரன்ஸ் அடிகளும் உரையாற்றினர். இறுதியாக 'ரசிகமணியும் மகாகவியும்' என்னும் தலைப்பில் இரா. இராதாகிருஷ்ணன் சிறப்புரை ஆற்றினார்.

**14. நாட்டரசன் கோட்டை :**

காரைக்குடி கம்பன் கழகத்தினர் இங்கு வந்து கம்பருடைய அருட்கோயிலில் வழிபாடு நடத்துவதைத் தவிர, இந்த ஊரிலேயே ஒரு கழகம் தனியாக இயங்கி வருகிறது. 1969 நவம்பரில் 'இலக்கிய மன்றம்' என்னும் பெயரில் தொடங்கிய இந்த அமைப்புப் பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் 19.5.1980-இல் 'கம்பன் கழகம்' என்னும் புதிய பெயரைப் புனைந்து கொண்டது. இக்கழகமும், காரைக்குடி கம்பன் கழகத்தின் ஒரு சேய்க் கழகமாக, கம்பன் அடிப்பொடி அவர்களால் தொடங்கி வைக்கப் பட்டது.

பேராசிரியர் இராம. ஆவிச்சி அவர்கள் இதன் தலைவராகவும், அரு. சுந்தரம் அவர்களும், புலவர் சு.ப. காளிமுத்து அவர்களும் செயலராகவும் பொறுப்பேற்றுள்ளனர். இக்கழகத்தில், புரவலர் கட்டணம் ரூ. 100-உம், உறுப்பினர் கட்டணம் ரூ. 25-உம் ஆண்டுக் கட்டணமாக வசூல் செய்கின்றனர். வாரந்தோறும் புதன்கிழமைகளில் பட்டிமண்டபம், கவியரங்கம், கருத்தரங்கம் போன்ற ஒரு நிகழ்ச்சியை நடத்தி வருகின்றனர். தவிர மாதந்தோறும் இரண்டாவது சனிக்கிழமைகளில் கம்பராமாயண வகுப்பு நடத்தி வருகின்றனர்.

ஆண்டுதோறும் வைகாசித் திங்களில் நடைபெறுகின்ற அருள்மிகு கண்ணுடை நாயகி அம்மன் திருவிழாவின் போது பத்து நாள் சிறப்பு நிகழ்ச்சி நடத்துகின்றனர். இங்குள்ள கம்பர் பள்ளிப்படைக் கோயிலின் நிருவாகி கம்பர்- இராம. கண்ணப்பன் அவர்கள் இக்கழகத்தின் துணைத் தலைவராக இருப்பது சிறப்பாகும். ஒவ்வோராண்டிலும் ஆடித் திங்கள் இறுதி வெள்ளிக் கிழமையில், கம்பன் அருட்கோயிலில் இக்கழகம் வழிபாடு நடத்துகின்றது. மே திங்கள் இறுதி சனி, ஞாயிறுகளில் கம்பன் விழா எடுக்கின்றனர். இக்கழகம் தனக்கென ஒருதனி இலச்சினையை வகுத்துக் கொண்டிருக்கிறது.

**15. சிவகங்கை**

10.7.1977-இல் கழகம் அமைக்கப்பட்டது. வே. நல்லசாமிப் பிள்ளை அவர்கள் தலைவராகவும், இராம. தவமணி அவர்கள்

செயலராகவும் பொறுப்பேற்றனர். 30.10.77-இல் சுத்தானந்த பாரதியார் அவர்களின் தலைமையில் தொடக்க விழா நடைபெற்றது.

திங்கள்தோறும் ஒரு நிகழ்ச்சி நடத்துவதை இக்கழகம் பின்பற்றி வருகிறது. ஆண்டு விழாவும் நடத்துகிறது. கம்பன் அடிப்பொடி அவர்களின் மறைவினால் 1982-இல் இக் கழகம் ஆண்டு விழாவைக் கொண்டாடவில்லை. ஞாயிறுதோறும் இக் கழகத் தலைவர் நல்லசாமிப் பிள்ளை அவர்கள், கம்பராமாயணப் பாடல்களை ஒவ்வொன்றாகப் படித்து பொருள் கூறி வருகின்றார்.

## 16. பரமக்குடி

1977 ஆகஸ்டுத் திங்களில், இராமநாதபுரம் அரசர் சேதுபதி தலைமையில், கம்பன் அடிப் பொடி அவர்கள் இக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். அறநிலையத்துறை ஆணையர் கே. சிதம்பரம் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். தில்லை. கி. இராகவன், கவிஞர் பீ. நாராயணன், எம். கோபால், க. பாண்டியன் ஆகியோர் முயற்சியினால் இக் கழகம் தோன்றியது. இப்போது 150க்கும் மேலானோர் இதில் உறுப்பினராகச் சேர்ந்துள்ளனர். தற்போது தலைவராக மு. கோட்டைச் சாமியும், செயலராகத் தில்லை. கி. இராகவனும் அமைகின்றனர்.

நகரில் நடைபெறும் கோயில் விழாக்களின் போது, இலக்கிய விழாக்களையும் இணைத்து நடத்துகின்றனர். வாரந்தோறும் பல்வேறு பகுதிகளிலும் கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவு அறிஞர் பலரைக் கொண்டு நடத்துகின்றனர். சொற்பொழிவு ஆற்றுவதிலும், கவி பாடுவதிலும் பலரை உருவாக்கியுள்ளனர். மாதந்தோறும் ஒரு நிகழ்ச்சியும், சூலைத் திங்கள் முதல் வாரத்தில் ஆண்டு விழாவும் நடத்துகின்றனர்.

1. திருப்பாவை திருவெம்பாவை, 2. பாசுர இராமாயணம், 3. கம்பன் கண்ட சமுதாயம், 4. கம்பன் கற்பகச் சோலை என்னும் நான்கு நூல்களை வெளியிட்டுள்ளனர். ஆண்டு தோறும் மாணவர்க்குக் கம்பராமாயணப் பாடல் போட்டி வைத்துப் பரிசுகள் வழங்கி வருகின்றனர். சிறந்த கலை நிகழ்ச்சி நடத்தும் பள்ளிகளைப் பாராட்டிப் பரிசுகள் வழங்குகின்றனர். தமிழ்ப் பாடத் தேர்வு நடத்தி மாணவர்க்குச் சான்றிதழ் வழங்குகின்றனர். ஏழை மாணவர்க்குப் புத்தகமும் ஆடையும் இலவசமாகக் கொடுக்கின்றனர். 1982-இல் மார்ச்சுத் திங்களில் ஆண்டு விழா நடத்தினர்.

**17. இராஜபாளையம் :**

1980-இல் கம்பன் அடிப்பொடி அவர்களின் வாழ்த்துத லுடன் இக் கழகம் தோன்றியது. எஸ். என். ஆர். டி. ராம சுப்பிரமணிய ராஜா அவர்கள் இதன் தலைவர். குன்றக்குடி பெரிய பெருமாள் அவர்களும், என். எஸ். முத்து கிருஷ்ணராஜா அவர்களும் பொதுச் செயலராகப் பொறுப்பேற்றுள்ளனர்.

ஆண்டு தோறும் நூல் ஒன்றை வெளியிடுவதை இக் கழகம் தன் கடமையாகக் கொண்டிருக்கிறது. 1981-இல் 'கவிச்சக்கர வர்த்தி கம்பன், மகா கவி வேமனா' என்னும் நூலையும், 1982-இல் 'இராமனைத் தரிசிப்போம்' என்னும் நூலையும் வெளியிட்டுள்ளது. நூல்களை அடக்க விலைக்கே விற்பனை செய்கிறது.

**18. திருநெல்வேலி**

25. 3. 1978-இல் பங்குனி உத்திர திருநாளன்று இக் கழகம் தொடங்கப் பெற்றது. அ. காளியப்பன் அவர்கள் இதன் தலைவர். ப. சங்கர நாராயணன் அவர்கள் செயலர். தமிழ் மொழி வளர்ச்சிக்கும், பொதுநல வளர்ச்சிக்கும் தொண்டு செய்தல் இதன் நோக்கம். கோயில் விழாக்களிலும், பள்ளி விழாக்களிலும் இக் கழகத்தினர் கலந்து கொண்டு சொற் பொழிவு செய்து வருகின்றனர். திங்கள் தோறும் கூடி இலக்கிய ஆய்வு செய்கின்றனர். ஆண்டுதோறும் பங்குனி உத்தர நாளில் ஆண்டுவிழா நடத்துகின்றனர்.

உறுப்பினர் கட்டணம் எதுவும் வசூல் செய்வதில்லை. நன் கொடைகளைக் கொண்டு கழகப் பணிகளைச் செய்து வருகின் றனர். பேட்டை பி. டி. எஸ் தில்லைக் காசி விசுவநாதன், பாளையங்கோட்டை எம். எஸ். சுந்தரம்பிள்ளை, தச்சநல்லூர் புஷ்பம் காந்திமதி நாதன், வண்ணாரப்பேட்டை அலங்கார் கந்தசாமி, ல. காசி விசுவநாதன் ஆகிய சான்றோர் இக் கழகத் தின் காவலராக இருந்து காத்து வருகின்றனர். 1982-இல் பாரதி தாசன் நினைவு விழாவைக் கொண்டாடியுள்ளனர். சுற்றுப் புற முள்ள சிற்றூர்களுக்கும் சென்று தமிழ் இலக்கியத்தைப் பரப்பி வருகின்றனர்.

**19. பாளையங்கோட்டை**

இங்கு அமைக்கப்பட்டுள்ள கழகம் 'நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்' என அழைக்கப்படுகிறது. 4. 10.1976-இல் கம்பராமாயண எழில் மண்டபத்தில் தொடங்கப் பெற்றது ஞாயிறு தோறும் இரவு 7மணி முதல் 7. 45 வரையில்

பட்சிராசன் அவர்கள் இராமாயண வகுப்பு நடத்தி, இரண்டு ஆண்டுகளில் முடித்துவிட்டார். அந்த வகுப்பு முடிந்த பின்னர் இரவு 7.45 முதல் ஒரு மணி நேரம் தனிப் பேச்சு நடைபெறும். கம்பராமாயண வகுப்பு முடிந்த பின்னர், இப்போது வால்மீகி, கம்பர், துளசி ஆகியோரின் இராமாயண ஒப்பு நோக்கு நடந்து வருகிறது. இது முடிந்த பின் வழக்கம் போல் தனிப் பேச்சுத் தொடர்கிறது.

16-5-82-இல் கழகத்தின் ஆண்டுவிழாவும், பி ஸ்ரீ. அவர்களின் பிறந்த நாள் விழாவும் இணைத்துக் கொண்டாடப் பட்டன. 10-5-82 முதல் 16-5-82 வரை சரஸ்வதி ராமநாதன் அவர்கள் தொடர் சொற்பொழிவு ஆற்றினார். கம்ப ராமாயணப் பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்க்குப் பரிசுகளும், வெள்ளிக் கேடயமும் ஆண்டு விழாவில் வழங்கினர். பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி, ஒவ்வொரு திங்களிலும் இறுதி ஞாயிற்றுக்கிழமையில், வைத்தமாநிதி அவர்கள் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றி வந்தார்.

பி.ஸ்ரீ. அவர்கள் எழுதிய 'நான் ரசித்த கம்பனும், கம்பன் கழகங்களும்' என்னும் நூலை இக் கழகத்தினர் காணைக்குடியில் வெளியிட்டனர். அது போலவே, பி.ஸ்ரீ. அவர்களும், சரஸ்வதி ராமநாதன் அவர்களும் இணைந்து எழுதிய, 'கம்பன் காவியம் அன்றும் இன்றும் என்றும்' என்னும் நூலைப் புதுவைக் கம்பன் விழாவில் வெளியிட்டுள்ளனர்.

பாளையங்கோட்டையில் காவலர் குடை ஒன்று கட்டிக் கொடுத்துள்ளனர். அருள்மிகு திரவுபதியம்மன் கோயிலுக்கு உண்டியல் ஒன்று கொடுத்துள்ளனர். கம்பராமாயண மண்டபத்தில் உள்ள நூல் நிலையத்துக்குக் கம்பராமாயணத்துக்குத் தொடர்புடைய நூல்களையும்; சமயச்சார்புடைய நூல்களையும் வாங்கி உதவியுள்ளனர். புரவலர் எம். எஸ். சுந்தரம்பிள்ளை அவர்களின் ஆதரவுடனும், அவருடைய அறக்கட்டளை உதவியுடனும் இக்கழகம் சிறப்பாக இயங்கி வருகிறது.

### முடிவுரை

சென்ற ஆண்டில் (1981-இல்) பதினெட்டுக் கழகங்களைக் குறித்து செய்திகள் கிடைத்தன. இந்த ஆண்டில், மேலும் கூடுதலாக முயற்சி செய்தும், பத்தொன்பது கழகங்களின் செய்திகள் மட்டுமே பெற முடிந்துள்ளது. ஆனால் சென்ற ஆண்டில் பெற முடியாத, ஏழு புதிய கழகங்களின் செய்திகளை இந்த ஆண்டில் பெற முடிந்துள்ளது. அவை: 1. கோபிச் செட்டிப் பாளையம்

2. கள்ளிப்பட்டி, 3. புதுவை, 4. குடந்தை, 5. சிவகங்கை, 6. பரமக்குடி, 7. திருநெல்வேலி என்பன.

சென்ற ஆண்டில் செய்திகள் பெற்றவற்றில் ஆறு கழகங் களின் செய்திகளை இந்த ஆண்டில் பெற முடியவில்லை. அவை: 1. வாழியூர், 2. ராசிபுரம், 3. திருச்சிராப்பள்ளி, 4. திருமங்கலம், 5. ஆலடிப்பட்டி, 6. அரூர் என்பன. இவற்றில் சில, பதில் எழுதவில்லை; சில கழகங்கள் எழுதியுள்ள பதில்களில், இந்த ஆண்டிற்கான செய்திகளைத் திரட்டமுடியவில்லை. திருச்சிராப் பள்ளியில் எந்த நிகழ்ச்சியும் நடைபெறவில்லை என்று தெரிவித் துள்ளனர்.

கம்பன் கழகங்கள் அனைத்தும் கம்பருடைய காப்பியத் துக்கும், இலக்கியம் பயிலாத எளிய தமிழ் மக்களுக்கும் இடையே அமைந்துள்ள பாலங்களாகத் திகழ்கின்றன. கம்பன் காப்பியத் தில் ஊறித் திளைத்த அறிஞர் தாம் பெற்ற இன்ப வெள்ளத் தைத் தமிழ் மக்களிடையே பாய்ச்சி அவர்களையும் அதனில் நனைத்துத் திளைக்கச் செய்து வருகின்றனர். தமிழ் மக்கள் இவற்றால் இலக்கிய இன்பம் பெறுவதோடு, இலக்கிய அறிவும் பெற முடிகிறது. மேலும் கம்பருடைய பேராற்றலினால், பாத்திரம் படைக்கும் கைவண்ணத்தினால், ஒழுக்கநெறிகளையும் அறவுணர்வுகளையும் எளிய மக்களும் அறிந்து பயன் பெறு கின்றனர்.

கம்பன் கழகங்கள் பொது மக்களிடையே கம்பருடைய காப் பியத்தைப் பரப்புவதோடு நிற்கவில்லை; திருக்குறள், சிலப்பதி காரம் போன்ற பல்வேறு இலக்கியங்களையும் அறிமுகப்படுத்திவரு கின்றன. மேலும் இக்கழகங்கள் அரிமா சங்கம், சுழற்கழகம் போல் சமுதாயத் தொண்டுகளிலும் ஈடுபட்டுவருவது குறிப்பிடத் தக்கதாகும். கம்பன் கழகங்கள் தமிழ்நாடு முழுவதிலும் பரவலாக எல்லா நகரங்களிலும் அமைந்து சீரிய முறையில் இயங்கக் கூடுமாகில், தமிழ் மக்களில் பெரும்பாலோர் தாய் மொழிப் பற்றிலும், இலக்கிய அறிவிலும் சிறந்து விளங்குவர் என்பது உறுதியாம்.

## இணைப்பு

### பட்டிமண்டபத் தலைப்புகள்

1. சென்னை: 'கம்பன் போற்றிப் புகழ்ந்ததில் தலை யாயது' 1. அறந்தலை நிற்றலே! 2. அன்பு பூண்டொழுகலே! 3. கற்பினைத் தொழுதலே!

மூன்றணியினரும் தத்தம் கருத்தைப் பலபடக் கூறி ஓய்ந்த பின்னர், நோக்கர் ஓரணியினரைச் சார்ந்து தம் வாக்குகளை அளித்தனர். எஞ்சிய ஈரணியினரும் நடுவரிடம் முறையிட, நோக்கர் சார்பில் ஒருவர் தம் வலிவை எடுத்துக் காட்டினர். பின்னர் நடுவர் அனைவருடைய வாதங்களையும் தூக்கிட்டு நிறுத்தித் தம் கூர்த்த அறிவினால் ஆய்ந்து தம் முடிவை வழங்கினார்.

2. காஞ்சிபுரம்: செய்திகள் கிடைக்கவில்லை.

3. திருப்பத்தூர்: 'இராமகாதையில் பெரிதும் வெளிப்படும் சுவை' 1. வீரமே! 2. காதலே! 3. அவலமே!

4. சேலம்: 'கம்பன் காப்பியத்தில் எவர் உதவி மாணப் பெரிது?' 1. சடாயு; 2. சபரி; 3. சுக்கிரீவன்.

5. கோபிச் செட்டிப் பாளையம்: (அ) 'இராமன் பெருமைக்குப் பெரிதும் காரணமாய் இருப்பது' 1. அன்பா? 2. அறிவா? 3. ஆற்றலா? 4. ஒழுக்கமா? (ஆ) 'கதைத் திருப்பத்திற்கு ஒப்பற்ற காரணம்' 1. விசுவாமித்திரனா? 2. கைகேசியா? 3. கூனியா? 4. சூர்ப்பணகையா?

6. கள்ளிப்பட்டி: (அ) 'சிறு பாத்திரங்களில் சிந்தை கவர்பவர்' 1. குகனா? 2. சடாயுவா? 3. தாரையா? 4. மண்டோதரியா? (ஆ) 'கம்பன் திறத்தால் கற்பார் உள்ளத்தைப் பெரிதும் கவரும் துணைப் பாத்திரம்' 1. இலக்குவனா? 2. வாலியா? 3. அநுமனா? 4. கும்பகர்ணனா?

7. கோவை: 'இராமனுடன் போரிட்டவர்களில் வீரம் மிக்கவர்'... 1. வாலியா? 2. கும்பகர்ணனா? 3. இராவணனா?

8. நாமக்கல்: நிகழ்ச்சி நடைபெறவில்லை.

9. புதுவை: 'பாட்டுத் திறத்தாலே பாரதி கம்பனை எட்டிப் பிடிப்பது' 1. காதற் சுவையிலா? 2. வீரச்சுவையிலா? 3. அவலச் சுவையிலா?

நோக்கர் ஒருகட்சியைப்போட்டியிலிருந்துவிலக்கினர். எஞ்சிய இரு கட்சியினரின் இறுதி வாதம் கேட்ட பின்னர் நடுவர் தம் தீர்ப்பினை வழங்கினார்.

10. தேரழுந்தூர்: 'அஞ்சன வண்ணனின் பணியில் விஞ்சி நிற்பவன்' 1. இலக்குவனே! 2. அநுமனே!

மேல் முறையீடும் தொடர்ந்து நடைபெற்றது.

**11. குடந்தை:** (அ) 'இராமபிரானுக்குப் பெரிதும் உதவியவர்கள்' 1. அநுமனா? 2. இலக்குவனா? (ஆ) 'மனிதனுக்கு ஏற்றம் தருவது' 1. கல்வியா? 2. செல்வமா? (இ) 'கம்பனுக்குப் பெரிதும் புகழ்சேர்ப்பது'. 1. சொல்வளமே! 2. பாத்திரப் படைப்பே!

**12. புதுக்கோட்டை:** செய்தி கிடைக்கவில்லை.

**13. காரைக்குடி:** 'கற்போர் நெஞ்சில் நிறைந்து நிற்பவன்' 1. பாலராமனே! 2. அயோத்திராமனே! 3. ஆரணியராமனே!

மேல் முறையீட்டுப் பட்டி மண்டபமும் நடைபெற்றது.

**14. நாட்டரசன் கோட்டை:** (அ) 'இராமபிரான் தம்பியருள் மிகச் சிறந்தவர்' 1. உடன் பிறந்த தம்பியரா? 2. உடன் பிறவாத் தம்பியரா? (ஆ) 'இறைவனை வணங்கச் சிறந்தவழி' 1. தனிமையே! 2. கூட்டமே! (இ) 'இராவணனை அவலத்தில் சிறக்கவைத்தது' 1. பாசமே 2. வீரமே! 3. ஆணவமே!

மூவணியினரும் தம் வாதங்களைப் பேசி முடித்த பின்னர் நோக்கர் ஓரணியைத் தம் வாக்குரிமையால் விலக்கினர். எஞ்சிய ஈர் அணியினரும் தம் சிறப்புகளை மீண்டும் வலியுறுத்திக் கூறினர். அவற்றைக்கேட்டறிந்த பின்னர் நடுவர்தம் தீர்ப்பினை வழங்கினார்.

நோக்கர் தீர்ப்பால் குறைபட்டவரும் நடுவர்தீர்ப்பால் குறை பட்டவரும் மேல் முறையீடு செய்தனர். நோக்கர் சார்பிலும், கீழே வென்றவர் சார்பிலும் அறிஞர் இருவர் தம் அணியின் சிறப்புகளை எடுத்துக் கூறினர். எல்லாவற்றையும் கூர்ந்துகேட்டு வந்த நடுவராயம், அவற்றைத் தூக்கிட்டு நிறுத்தி ஆய்ந்து தன் தீர்ப்பினை வழங்கியது.

(ஈ) 'நெஞ்சத்தைக் கவரும் பாத்திரச் சிறப்பில் விஞ்சியவன் 1. பரதனா? 2. இலக்குவனா?

**15. சிவகங்கை:** நிகழ்ச்சி நடைபெறவில்லை.

**16. பரமக்குடி:** (அ) 'பிரிவுத் துயரில் மிகவும் நலிந்தவர்' (1) தயரதனே! (2) சீதையே! (ஆ) 'நாட்டு முன்னேற்றத் திற்குப் பெரிதும் காரணம்' (1) தொழில் வளமே! (2) விவசாய முன்னேற்றமே! (இ) 'பாரதி திருவுள்ளத்தில் விஞ்சி நிற்பது' (1) சமயவுணர்வா? (2) சமுதாயவுணர்வா? (ஈ) 'தொண்டுணர் வில் விஞ்சி நிற்பவன்' (1) அநுமனா? (2) இலக்குவனா? (உ) 'கம்பனைக் கவிச்சக்கரவர்த்தி ஆக்கிய பெருமை' (1) கவிச்சிறப்பே! (2) கதை மாந்தர்களே! (ஊ) 'செஞ்சோற்றுக் கடனில் மிஞ்சி நிற்பவர்' (1) கர்ணனா? (2) கும்பகர்ணனா?

17. இராஜபாளையம்: செய்தி கொடுக்கவில்லை.

18. திருநெல்வேலி; நிகழ்ச்சி இல்லை.

19. பாளையங் கோட்டை: நிகழ்ச்சி இல்லை.

## கவியரங்கத் தலைப்புகள்

1. சென்னை: 'கம்பனின் கருத்துக் காட்டில்' 1. அறிவு செழிக்கிறது. 2. அறம் தழைக்கிறது. 3. அன்பு பூக்கிறது. 4. அருள் அரும்புகிறது. 5. கருணை மலர்கிறது. 6. ஞானம் கனிகிறது.

2. காஞ்சிபுரம்: செய்தி இல்லை.

3. திருப்பத்தூர்: 'இயற்கை வரைந்த எழில் ஓவியம்' 1. சரயு; 2. மருதம்; 3. சித்திரக்கூடம்; 4. பஞ்சவடி; 5. பம்பை; 6. சேது; 7. அசோகவனம்.

4. சேலம்: 'கம்பனில் கொடி மலர்கள்' 1. ஆண்மை; 2. பெண்மை; 3. உரிமை; 4. கடமை; 5. பெருமை; 6. சிறுமை; 7. கேண்மை; 8. இறைமை.

5. கோபிச் செட்டிப் பாளையம்: (அ) 'எண் சுவையில் எழில் கம்பன்' 1. நகை; 2. அழுகை; 3. இளிவரல்; 4. மருட்கை; 5. அச்சம்; 6. பெருமிதம்; 7. வெகுளி; 8. உவகை. (ஆ) 'நான் என்ன தீமை இழைத்தேன்' 1. தாடகை; 2. கூனி; 3. கைகேயி; 4. சூர்ப்பணகை; 5. மாரீசன்; 6. வாலி; 7. கும்பகர்ணன்; 8. இந்திரசித்தன்; 9. இராவணன்.

6. கள்ளிப்பட்டி: நிகழ்ச்சி இல்லை.

7. கோவை: 'பேசாதன பேசினால்' 1. வில்; 2. கல்; 3. ஓடம்; 4. பாதுகை; 5. வால்; 6. கணையாழி; 7. மௌலி.

8. நாமக்கல்: நிகழ்ச்சி இல்லை.

9. புதுவை: 'கம்பன் வழியில் பாரதி' 1. ஆன்மீகம், 2. நகைச் சுவை, 3. சமயம், 4. நாட்டுநலம், 5. வீரம்; 6. மொழிப்பற்று; 7. இசைவளம்; 8. பெண்ணுரிமை; 9. பக்தி; 10. ஒருமைப்பாடு.

10. தேரழுந்தூர்: 'கம்பன் காட்டிய வழியில் பாரதி' 1. அறவுணர்வில்; 2. பெண்ணின் பெருமையில்; 3. வீரவுணர்வில்; 4. சகோதரத்துவத்தில் 5. பரம்பொருள் வழிபாட்டில்;

11. குடந்தை : கம்பன் பார்வையில், 1. அரசியல்: 2. சமயம் 3. சமுதாயம்: 4. மக்கள்.

12. புதுக்கோட்டை : செய்தி இல்லை.

13. காரைக்குடி : 'எம் கணிப்பில் இராமன்' 1. விசுவா மித்திரன்; 2. பரசுராமன்; 3. குகன்; 4. அகத்தியன்; 5. சுக்கிரீவன் 6. வாலி; 7. இராவணன்; 8. வீடணன்; 9. கும்பகர்ணன்; 10. மேகநாதன்.

14. நாட்டரசன்கோட்டை : (அ) 'கண்ணன் எத்தனை கண்ணனடி' 1. மருத்துவன்; 2. தெய்வம்; 3. ஆசிரியன்; 4. தந்தை; 5. தாய்; 6. காதலன், 7. சேவகன். (ஆ) 'கம்பன் காட்டும் மெய்ப்பாடுகள்' 1. நகை; 2. அழுகை; 3. இளிவரல்; 4. மருட்கை! 5. அச்சம்; 6. பெருமிதம்; 7. வெகுளி 8. உவகை. 9. சமநிலை

15. சிவகங்கை : நிகழ்ச்சிகள் இல்லை.

16. பரமக்குடி : (அ) 'தெய்வமாக் கவிஞர்கள்' 1. ரவீந்திர நாததாகூர்; 2. பாரதி; 3. பாரதிதாசன்; 4. கம்பன். (ஆ) 'பாரதி கண்ட....' 1. சமுதாயம்; 2. சமயம்; 3. அரசியல்; 4. இலக்கியம்; 5. பெண்கள். (இ) 'பாரதி ஓர் உலகம்' 1. பெண்கள்; 2. நாடு; 3. இயற்கை; 4. தெய்வம்; 5. அரசியல். (ஈ) 'கம்பன் கவித்தோட்டம்' 1. இராமன்; 2. சீதை; 3. அநுமன்; 4. பரதன்; 5. இராவணன்.

17. இராஜபாளையம்; செய்தி இல்லை

18. திருநெல்வேலி : செய்தி இல்லை.

19. பாளையம் கோட்டை : 'கம்பன் காவியப் பூங்காவில்' 1. கருணை மலர்கிறது, 2. அருள் அரும்புகிறது. 3. அன்பு பூக்கிறது, 4. அறம் தழைக்கிறது.

## பிற நிகழ்ச்சிகள்

1. சென்னை

   1. தமிழ்த் தொண்டாற்றிய சான்றோர் (1) நாரணதுரைக் கண்ணன்; (2) எஸ். மகாராஜன் ஆகிய இருவர்க்குப் பாராட்டு.
   2. கம்பராமாயணம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், சீறாப்புராணம் ஆகிய நூல்களில் கல்லூரி மாணவர்க்குப் பேச்சுப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடத்திப் பரிசுகள் வழங்குதல்.

3. மு. மு. இஸ்மாயீல் அவர்கள் எழுதிய 'கவிச்சக்கர வர்த்தியும் கவியரசரும்' என்னும் நூல் வெளியிடுதல்.
4. கலைதெரி அரங்கம்: மெய்ப்பாடு, சந்தம், இலக்கியம், கற்பனை, பக்தி ஆகியவற்றில் ஆய்வுரை.
5. 'திருமுடி சூடிய திருவடி' என்னும் நாடகம்.
6. செந்தமிழ்ச் சதுக்கம்: வான்மீகி, திருவள்ளுவர், இளங்கோவடிகள், ஆழ்வார் ஆகிய சான்றோர் வெண்ணெய் நல்லூர் வந்து சடையரின் சதுக்கத்தில் அமர்ந்து, கம்பரின் பெருமையை விளங்க வைத்தல்.

2. காஞ்சிபுரம்-செய்தி இல்லை.

3. திருப்பத்தூர்:

1. ஆய்வு மேடை: (1) 'இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' (2) 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ?' (3) 'நின்னொடும் எழுவரானேம்.' (4) 'மற்றைய தொன்றும் மற' ஆகிய தொடர்களை ஆய்ந்துரைத்தல்.

2. காவியத்தில் இவர்கள்: (1) தாடகை; (2) மாரீசன்; (3) திரிசடை; (4) விசுவாமித்திரன்; (5) கூனி ஆகிய சிறு பாத்திரங்களின் பெரும்பணி குறித்து விளக்கம் செய்தல்.

3. தன்னிலை விளம்பல்: 1. தயரதன், 2. இராவணன்; 3. சீதை, 4. குகன்ஆகிய காப்பிய மாந்தர்கள் கதைப்போக்கில் தம் மனநிலையையும் தாம் மேற்கொண்ட நிலையையும் வெளிப்பட எண்ணமிடல்.

4. பாரதி விழா: 'பாரதி வேண்டிய புதிய சமுதாயம்' பற்றி எடுத்துரைத்தல்.

4. சேலம்

1. வ. வே. சு. அய்யர், பாரதியார், இக்கழகத்தின் முதல் தலைவராய் விளங்கிய எம். ஏ. பழனியப்பச் செட்டியார் ஆகியோரின் திருவுருவப் படங்களைத் திறந்து வைத்தல்.

2. 'கங்கையிரு கரையுடையான்' என்னும் தலைப்பில் சிறப்புரை.

3. கருத்தரங்கம்: (1) அன்புநெறி; (2) அறநெறி; (3) அருள் நெறி; (4) ஆட்சி நெறி: (5) போர் நெறி ஆகியவற்றைக் கம்பர் தம் காப்பியத்தில் கொண்டுசெலுத்தும் திறத்தைக் குறித்துக் கருத்துரை வழங்கல்.

4. கம்பன் அடிப்பொடி அவர்களுக்குப் பொன்னாடை அணிந்து பாராட்டுதல்.

5. 'இன்று இவர்கள் சந்தித்தால்': (1) பரதனும் இலக்குவனும்; (2) சீதையும் மண்டோதரியும்; (3) அநுமனும் வாலியும்;

(4) இராவணனும் வீடணனும் ஆகிய இவர்கள் ஈர் இருவராய்ச் சந்தித்து உரையாடல்.

5. கோபிச் செட்டிப் பாளையம்

1. 'பாரதி கண்ட கம்பன்' (1) 'யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்; (2) 'கம்பன் என்றொரு மானுடன்'; (3) கம்பன் இசைத்த கவியெலாம் நான்' (4) 'கம்பனொடு கவிதை போயிற்று' ஆகிய தலைப்புகளில் சிறப்புரை.

2. 'கம்பன் அடிப்பொடி' அவர்களின் படத்திறப்பு.

3. 'உடன் பிறப்பு உலகு'; (1) இலக்குவன்: (2) பரதன்; (3) இந்திரஜித்து, (4) கும்பகர்ணன் ஆகியோரைக் குறித்து ஆய்வுரை.

6. கள்ளிப் பட்டி

1. பேரவை: (1) இராமன் நல்ல அண்ணன்; (2) இராமன் நல்ல நண்பன் என்னும் இரு தலைப்புகளில் இராமனுடைய பண்பு நலன்களை ஆய்தல்.

2. வழக்காடு மன்றம்: 'தருமன் குற்றவாளி' என்பதுவழக்கு.

3. பேரவை: 'நம்பி', 'நங்கை' ஆகிய தலைப்புகளில் ஆய்வு செய்தல்.

4 'இவர்கள் சந்தித்தால்':- (1) இராவணனும் வீடணனும்; (2) சீதையும் சூர்ப்பணகையும். இவர்கள் ஈர் இருவராய் ஒருவரை யொருவர் கண்டு உரையாடல்.

7. கோவை

1 மலர் வெளியீடு.

2 பரிசளிப்பு: கட்டுரை, பேச்சுப் போட்டிகளில் முதலிடம் பெற்றவர்க்குப் பரிசளித்தல்.

3 சிறப்புரை: (1) பாரதியும் கம்பனும்;(2) கம்பன் காவியத்தில் களிப்பூட்டும் இசைவண்ணங்கள்.

4 பாராட்டு: (1) பி. ஏகாம்பரம் அவர்களையும், (2) ஏ.ஏ. மணவாளன் அவர்களையும், அவர்களுடைய இலக்கியப் பணிகளுக்காகப் பாராட்டுதல்.

5 நூல் வெளியீடு: அரு. நாகப்பன் இயற்றிய, 'கம்பன் கண்ட சமுதாயம், என்னும் கவிதை நூல் வெளியிடுதல்.

6 அபூர்வ சந்திப்பு: (1) இராமனும் இராவணனும்; (2) இலக்குவனும் இந்திரஜித்தும்.

7 ஆய்வரங்கம்: 'இவர்கள் பார்வையில் கம்பன்' என்னும் தலைப்பில் (1) வ.வே.சு; (2) பீ.ஸ்ரீ; (3) டி.கே.சி; (4) வையாபுரிப்பிள்ளை; (5) ஜெகவீர பாண்டியன் ஆகியோர் கம்பனைக் கண்டு சுவைத்த பாங்கை எடுத்தியம்பல்.

8 நாமக்கல்: நிகழ்ச்சி இல்லை.

9. புதுவை:

1 நூல் வெளியீடு: (1) கவிதையில் விடுமுறை (2) கம்பன் காவியம் அன்றும் இன்றும் என்றும்; (3) தமிழ் மாண்பு; (4) பாரதியார் கவிநயம் ஆகிய நான்கு நூல்கள்.

2 சிறப்புரை: (1) கம்பனில் பாரதியைக் கண்டேன். (2) பாரதியில் கம்பனைக் கண்டேன்.

3 இவர்கள் இன்று சந்திக்கின்றனர். (1) கம்பனின் சீதை, பாரதியின் பாஞ்சாலி. (2) கம்பனின் காமவல்லி, பாரதியின் காதற்குயில் (3) கம்பனின் கூனி, பாரதியின் சகுனி. (4) கம்பனின் இராமன், பாரதியின் கண்ணன் (5) கவிச்சக்கரவர்த்தி, மகாகவி.

4. எழிலுரை : 'மானுடம் வென்றதம்மா'

5. வழக்காடு மன்றம் : 'முப் பெரும் புலவர்களில், பாரதி கம்பனை முன்னிறுத்தியது தவறு' என்பது வழக்கு.

6. நயவுரை : 'கம்ப பாரதி' என்பது தலைப்பு.

10. தேரழுந்தூர்

1. கம்பரின் திருவுருவப்படம், 'கம்பர் மேடு' என்னும் இடத்திலிருந்து விழா அரங்கிற்கு வலமாக எடுத்து வருதல்.

2. மாணவர் கம்பராமாயணப் பாடல் ஒப்பித்தல், பேச்சுப் போட்டி நடத்தல்.

3. ஆமருவிப் பெருமாள் கோயிலில் உள்ள கம்பர் திருமேனிக்குத் திருமஞ்சனம் சூட்டல்.

4. கருத்தரங்கம் : (1) ஆழ்வார் அருள் நெறியில் கம்பர். (2) காவிய உலகில் கம்பரின் தனிநிலை. (3) உள்ளம் உருக்கும் கைவண்ணம்.

11. குடந்தை

1. சனவரி : 'தமிழர் திருநாள்' — சிறப்புரை, கருத் தரங்கம்.

2. மார்ச்சு : ஸ்ரீராமநவமி விழா — கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவு.

3. ஏப்ரல் : தனியுரை (1) தெய்வமும் வழிபாடும். (2) தமிழ்ப் புத்தாண்டு.

4. மே : மே நாள் கொண்டாட்டம். சிறப்புரை : 'அணை கட்ட அணிலின் உதவி'

5. சூன் : 'வைகாசிப் பெருவிழா'. சிறப்புரை: 'வைகாசி விசாகம்'

6. சூலை : 'ஆடிப் பெருக்கு' — சிறப்புரை : 'ஆடிப் பெருக்கும் தமிழ் வளர்ச்சியும்'.

7. ஆகஸ்ட் : 'விநாயகர் சதுர்த்தி' — 'விநாயகர் வழிபாடு' பற்றிச் சிறப்புரை.

8. செப்டம்பர் : கண்ணன் பிறந்த நாளில், 'கண்ணன் பெருமை' பற்றிச் சிறப்புரை

9. அக்டோபர் : விஜயதசமி. (1) கம்பன் அடிப்பொடி மறைவுக்கு இரங்கல் கூட்டம்; (2) 'விஜயதசமி' பற்றிச் சிறப்புரை.

10. நவம்பர் : திருக் கார்த்திகைத் திருநாளில் 'கார்த்திகை யின் சிறப்பு'ப் பற்றிய பேச்சு.

11. டிசம்பர் : ஸ்ரீவைகுண்ட ஏகாதசி — கருத்தரங்கம் 'கம்பன் கண்ட பாத்திரம்'.

12. புதுக்கோட்டை : செய்தி இல்லை.

13. காரைக்குடி

1. படத்திறப்பு : 1) பி. ஸ்ரீ. அவர்கள், 2) கவிஞர் கண்ணதாசன் ஆகிய இருவர் படம் திறக்கப்பட்டன.

2. மலர் வெளியீடு.

3. நூல் வெளியீடு : 'நான் ரசித்த கம்பன்'

4. 'இன்று சந்திக்கும் இவர்கள்' — 1) இராமன் - சீதை; 2) இலக்குவன் - இந்திரஜித்து; 3) குகன் - அநுமன்; 4) வாலி - இராவணன்.

5. அநுமனைப் பற்றி, 'எங்களையும் கேளுங்கள்'

1) இராமன், 2) இலக்குவன், 3) சாம்பன், 4) மைநாகம், 5) சுரசை, 6) இலங்கிணி, 7) அசோக வனம், 8) சீதை, 9) கணையாழி, 10) சூளாமணி, 11) சம்புமாலி, 12) அக்க குமாரன், 13) இராவணி, 14) இராவணன், 15) வீடணன், 16) கும்பகர்ணன்.

14. நாட்டரசன் கோட்டை

1. தனிப்பேச்சு — 1) திருவெம்பாவை, 2) 'இன்று போய் நாளை வா' 3) பாரதியும் பாஞ்சாலியும் 4) கம்பன் - தாய் 5) புறநானூறு, 6) சிலப்பதிகாரம் 7) ஆயுர் வேத மருத்துவம், 8) திருப்பாவை, 9) திருக்கூத்து, 10) மானுடம் போற்றிய மாகவி.

2. தொடர் நிகழ்ச்சி : (1) திருவாசகம் — ஆறு வாரம். (2) கீர்த்தித் திரு அகவல் — எட்டு வாரம்.

3. பலர் பங்கேற்றல் : 1) 'ஆயர்தம் கொழுந்து எனும் சுவை' ஆழ்வார்கள் பன்னிருவர், பாரதி, கண்ணதாசன் ஆகியோர் சுவைத்த பாங்கை உரைத்தல்.

2) 'எங்களுக்குப் பாடிய பாரதி' — ஓடி விளையாடு பாப்பா, முரசுப் பாட்டு, தொழில், ஆத்தி சூடி, புதுமைப் பெண், இளைய பாரதம் ஆகிய தலைப்பு களில் இளைஞர் பேசுதல்.

3) 'கம்பனில் சிறு துளிகள்' — விசுவாமித்திரன், பரசு ராமன், சுபத்திரை, சத்ருக்னன், நளன், மாரீசன், நீலன், அக்ககுமாரன், சனகன் ஆகிய சிறு பாத்திரங் களைப் பெரியோர் பேசுதல்.

(4) 'பெருமாளும் ஆழ்வார்களும்'—நால்வர் பேசுதல்.
(5) அபிராமி அந்தாதி—நவராத்திரி பத்து நாளில், ஒவ்வொரு நாளில் ஒருவர் பேசுதல்

4. வழக்காடு மன்றம்: வழக்கு 'சீறி வெகுண்ட கண்ணகி மதுரையை எரித்தது குற்றம்.'

5. இசைச் சொற்பொழிவு: 'பாதுகா பட்டாபிஷேகம்' செல்விகள்: மாலா, ராதிகா ஆற்றினர்.

6. சொல், இசை, அரங்கம்: 'நாடி மணந்த நாராயணன்' (1) சொல்லோவியமாக (2) இசையோவியமாக

7. நாடக அரங்கம்: 'இன்று சந்திக்கும் இவர்கள்'
(1) கூனி—வீடணன்; (2) சூர்ப்பணகை—அநுமன்;
(3) கோசலை—வாலி, (4) கைகேயி—மண்டோதரி.

15. சிவகங்கை

1. தனிப்பேச்சு: (1) கம்பன் கண்ட பொதுமை
(2) அநுமனின் தன்னிகரில்லாச் சேவை.

2. ஒன்பது மற்றும் பத்தாம் வகுப்பு மாணவர்க்குக் கம்பன் பாடல்களை ஒப்பித்தல் போட்டி வைத்துப் பரிசு வழங்கல்.

16. பரமக்குடி

1. 'திருப்பாவை விழா'—தனிச் சொற்பொழிவு.
(1) கோதையும் பாவையும்; (2) பெரியாழ்வார்;
(3) ஆண்டாள்.

2. 'திருவெம்பாவை விழா' —(1) மணிவாசகரின் பாவை.
(2) திருக்கோவையார்; (3) திருவெம்பாவை.

3. கருத்தரங்கம்: (1) அழியா அழகன்; (2) சொல்லின் செல்வன்; (3) கற்பின் கனலி, (4) ஒரு வில் ஒரு சொல் ஒரு இல்.

4. வழக்காடு மன்றம்: 'சமுதாய முன்னேற்றத்துக்குப் பெரிதும் காரணம் பெண்களே என்பது சரியன்று'

5. வழக்காடு மன்றம்: 'நாட்டின் வளர்ச்சிக்குச் சமயம் இன்றியமையாதது என்பது தவறு'

6. வழக்காடு மன்றம்: 'தயரதன் குற்றவாளி'.

7. சிறப்புரை: 'எரிய மறுக்கும் தீபங்கள்'

8. சங்கர ஜெயந்தி—தனியுரை: 'சங்கரனும் சங்கரரும்'

9. கருத்தரங்கம்: 'எழில்மிகு எழுத்தாளர்கள்' (1) உ. வே. சாமிநாத அய்யர் (2) மு. வரதராசன் (3) வ. வே. சு. அய்யர் (4) அகிலன்.

10. சிந்தனைமேடை : 'காப்பியக் கருத்துகள்' (1) கம்பன் 2) வள்ளுவன் (3) இளங்கோ.

11. சிறப்புரை ; 'கம்பன் கவிப் புலமை'

12. கருத்தரங்கம் ; 'மெய்யடியார்கள்' (1) சமயக்குரவர்கள் (2) சந்தானக் குரவர்கள். (3) வைஷ்ணவப் பெரியார்கள்

13. ஆய்வரங்கம் : 'சமய இலக்கிய மதிப்பீடு' (1) பெரிய புராணம் (2) அருட்பா (3) கம்பராமாயணம் (4) திருவிளையாடல் புராணம் (5) வில்லிபாரதம்.

14. ஆய்வுரை : 'சமுதாயம் எங்கே போகிறது?

15. கருத்தரங்கம் : (1) பாரதி (2) டி. கே. சி. (3) வ. வே. சு. அய்யர்

16. வழக்காடு மன்றம் : 'கைகேயி குற்றவாளி'

17. இராஜபாளையம்: செய்தி இல்லை.

18. திருநெல்வேலி: 1 பாரதி தாசன் விழா.

2. சிறப்புரை ; (1) கம்பன் படைப்பில் உவமை (2)கம்பன் நோக்கு (3) பொது உடைமைக் கருத்து (4) கம்பன் கண்ட கடவுள்.

19. பாளையங்கோட்டை: 1 சனவரி : (1) பாரதிநெஞ்சம் 2) ஊட்டப் பிறந்தவர்கள் 3) கம்பனில் குகன், 4) தவத்திற்கு ஒரு தையல் 5) பாரதியும் கம்பனும்

2. பிப்ரவரி : 1) முதிர்ந்த இளங்கனி 2) சிறையிருந்த செல்வியும் சுந்தர காண்ட நாயகனும் 3) பாரதியும் பிறமொழிக் கவிஞரும் 4) புகழ்க் கம்பன்

3. மார்ச்சு : 1) பாரதி கண்ட சமுதாயம் 2) மகாகவியும் மகாத்மாவும் 3) கோதைத் தமிழ்ச் சுவையமுதம் 4) பாரதியின் ஞானரதம்.

4. ஏப்ரல்: 1)யுத்தம் கண்ட அயோத்தி 2) வெல்லும் சொல் 3) வேத ரிஷிகளின் கவிதைகள்.

5. மே : 1) கம்பனில் வாலி 2) பாஞ்சாலி சபதம் 3)10. 5.82 முதல் 16. 5. 82 வரை பக்திச் சொற்பொழிவு 4) இன்று சந்திக்கும் இவர்கள்: கம்பர்—கண்ணதாசன் 5) பாரதியின் கதை ஜோதி

6. ஜூன்: (1) மந்தரை (2) பாரதி என்ற பல்கலைக் கழகம். (3) கம்பன் கண்ட கண்டீரவம். (4) இன்று சந்திக்கும் இவர்கள்: சீதை-திரிசடை

7 சூலை: (1) சீதா கல்யாணம்-வில் இசை (2) வாலி மோட்சம். (3) இன்று சந்திக்கும் இவர்கள்: கம்பர்-கவிமணி (4) வேத ரிஷிகளின் கவிதை.

8 ஆகஸ்ட்: (1) இன்று சந்திக்கும் இவர்கள்: வான்மீகி-துளசிதாசர். (2) வஞ்சமகள். (3) கம்பர் கண்ட மாதர் சொல்லாற்றல். (4) தசரதன் தவறா? ( ) மண்ணில் தெரியுது வானம்.

9 செப்டம்பர்: (1) கும்பன் எனும் தம்பி. (2) கம்பரும் பிரம்ம ஞானமும். (3) இன்று சந்திக்கும் இவர்கள்: வான்மீகி. துளசிதாசர். (4) பெரிய உடையார்.

10 அக்டோபர்: (1) நெடுந்தரும நெறியாளன் (2) பாரதி கண்ட பாரதம். (3) ஆசை பற்றி அறையலுற்றேன். (4) மாயச் செல்வன் (5) இன்று சந்திக்கும் இவர்கள்: தசரதன் - கைகேயி.

11 நவம்பர்: (1) பாரதி வழி (2) கோடிய கொடியாள். (3) விந்தைக்குயில் (4) அற்றவர்கட்கு அரு மருந்து.

12 டிசம்பர்: (1) நெடுந்தரும நெறியாளன். (2) ஆசைபற்றி அறையலுற்றேன். (3) கங்கைக் கரையினிலே.

## கழக நிகழ்ச்சிகளில் பங்கேற்ற அறிஞர் பட்டியல்

| பெயர் | பங்கேற்ற ஊர் |
|---|---|
| அகிலா சிவராமன் | புதுவை |
| அகிலா ராசாராமன் | புதுவை |
| அசோக்குமார், வி. | காரைக்குடி |
| அண்ணாமலை, ப. ப. வே. | நாட்டரசன்கோட்டை |
| அமிர்தவல்லி துளசிராம் | பாளையங்கோட்டை |
| அமுதா, பி. | தேரழுந்தூர் |
| அய்யப்பன், ச. | குடந்தை |
| அய்யாச்சாமி, டி. | பாளையங்கோட்டை |
| அரங்கசாமி, கா. | கோபிச்செட்டிப் பாளையம் |
| அரங்க சீனிவாசன் | கோவை |
| அருணகிரி, அ. | காரைக்குடி |
| அருணாசலக்கவுண்டர், கு. | நாட்டரசன்கோட்டை |
| அருணாசலம், கே. சி. எஸ். | புதுவை |
| அருணாசலம், பொ. | பரமக்குடி |
| அருணாசலம், மு. | நாட்டரசன்கோட்டை |
| அருணாசலம், லெ. | ,, |
| அருள், தொ. | ,, |

| | |
|---|---|
| அருள்தாசன் | பரமக்குடி |
| அலமேலு, எஸ். | தேரழுந்தூர் |
| அழகம்மாள், செ. | பாளையங் கோட்டை |
| அறிவொளி, அ. | காரைக்குடி |
| அன்னபூர்ணி | பாளையங்கோட்டை |
| ஆலடி ஜெயா | பாளையங் கோட்டை |
| ஆவிச்சி, இராம. | நாட்டரசன் கோட்டை |
| ஆறுமுகம் | குடந்தை |
| ஆறுமுகம், தி. சு. | பாளையங் கோட்டை |
| இசுமாயீல், மு.மு. | சென்னை |
| இந்திரா | பரமக்குடி |
| இந்திராணி | ,, |
| இரத்தின நடராசன் | திருப்பத்தூர் |
| இராச கோபாலன், அ வ. | பரமக்குடி |
| இராசகோபாலன், தி. | காரைக்குடி |
| இராசகோபால், உ.பெ.உ. | நாட்டரசன் கோட்டை |
| இராசகோபால், சுப. | ,, |
| இராசம் மரகதம் | கோவை |
| இராசரத்தினம், மு. | காரைக்குடி |
| இராசாராம், கா. | நாட்டரசன் கோட்டை |
| இராசேந்திரன், எம். | பரமக்குடி |
| இராதாகிருஷ்ணன், இரா. | நாட்டரசன் கோட்டை |
| இராதா மணாளன் | பரமக்குடி |
| இராதிகா | நாட்டரசன் கோட்டை |
| இராமகிருஷ்ணன். இரா. | தேரழுந்தூர் |
| இராமகிருஷ்ணன், இல. | பாளையங் கோட்டை |
| இராமகிருஷ்ணன், எஸ். | நாட்டரசன் கோட்டை |
| இராமகிருஷ்ணன், மா. | பரமக்குடி |
| இராமசாமி, சோ. | நாட்டரசன் கோட்டை |
| இராமசாமி, மு. | காரைக்குடி |
| இராமசுப்பிரமணியன், வெ. | ,, |
| இராமநாதன், கண. | நாட்டரசன் கோட்டை |
| இராமநாதன், க.வே. | காரைக்குடி |
| இராமநாதன், சிவ. | நாட்டரசன் கோட்டை |
| இராமநாதன், லெ. | ,, |
| இராமபத்திரன், ஆ. | தேரழுந்தூர் |
| இராமலிங்கம், த. | காரைக்குடி |
| இராமன் | பரமக்குடி |
| இளங்கவி நம்பி | பாளையங் கோட்டை |
| இளம்பரிதி | குடந்தை |

| | |
|---|---|
| இளம்பிறை மணிமாறன் | காரைக்குடி |
| இளமுருகு பொற்செல்வி | பரமக்குடி |
| இன்னாசி, ஆ. | பாளையங்கோட்டை |
| உமா, நே. | நாட்டரசன் கோட்டை |
| உமா மகேஸ்வரி | பாளையங்கோட்டை |
| உமையாள் முத்து | காரைக்குடி |
| ஊரன் அடிகள் | பரமக்குடி |
| எழில் வேலன் | கோவை |
| கங்காதேவி, எம். | புதுவை |
| கணபதி, அ. | பரமக்குடி |
| கணபதி, மு. | கோபிச்செட்டிப் பாளையம் |
| கணேசன், இரா. | நாட்டரசன் கோட்டை |
| கண்ணப்பமூர்த்தி, வெ. | ,, |
| கண்ணப்பன், குப. கரு. | ,, |
| கண்ணப்பன், மா. | பரமக்குடி |
| கண்ணன் | குடந்தை |
| கதிர்வேலு, வே. | புதுவை |
| கந்தகுமார், மா. | பாளையங்கோட்டை |
| கமலா வேணுகோபால் | கோவை |
| கம்பன் அடிப்பொடி | தேரழுந்தூர் |
| கருணாகாரன், எம்.வி. | திருப்பத்தூர் |
| கருணாநிதி, இரா. | தேரழுந்தூர் |
| கருப்பசாமி, ஐ | நாட்டரசன் கோட்டை |
| கருப்பண்ணன், எஸ். ஆர். | சேலம் |
| கருப்பையா, இரா. | காரைக்குடி |
| கருப்பையா, சுப. | நாட்டரசன் கோட்டை |
| கருப்பையா, பழ. | பரமக்குடி |
| கலிய பெருமாள், அ. | தேரழுந்தூர் |
| கலைதாசன் | குடந்தை |
| கல்யாண சுந்தரம், டி.வி. | பாளையங்கோட்டை |
| கல்யாணராமன், சு. | தேரழுந்தூர் |
| கவிதா, இரா. | நாட்டரசன் கோட்டை |
| காசிராஜன், எஸ்.டி. | நாட்டரசன் கோட்டை |
| காசி விசுவநாதன் செட்டியார் | கோவை |
| காசினி வேந்தப் பெருமாள் | பாளையங்கோட்டை |
| காந்திமதி | பரமக்குடி |
| காந்திமதி, இரா. | காரைக்குடி |
| காந்திமதிநாதன், தி.வ. | தேரழுந்தூர் |
| காவிய மைந்தன் | பரமக்குடி |
| காளிமுத்து, கா. | காரைக்குடி |

| | |
|---|---|
| காளிமுத்து, சுப. | நாட்டரசன் கோட்டை |
| காளியண்ணன், பி.பி. | கோபிச்செட்டிப் பாளையம் |
| காளியப்பன், சு. | பாளையங்கோட்டை |
| கிருட்டின மூர்த்தி, இரா. | சென்னை |
| கிருஷ்ணமூர்த்தி, எம். | தேரழுந்தூர் |
| கிருஷ்ணய்யங்கார், கே.எஸ். | பாளையங்கோட்டை |
| கிருஷ்ணன், ஆ. | நாட்டரசன் கோட்டை |
| கீதா, இரா. | தேரழுந்தூர் |
| கீரன் | பரமக்குடி |
| குகன் | நாட்டரசன் கோட்டை |
| குஞ்சிதபாதம், எஸ். | குடந்தை |
| குமரி அனந்தன் | பரமக்குடி |
| குமார சங்கரன் | பாளையங்கோட்டை |
| குருசாமி, மா பா. | ,, |
| குருசாமி, ம. ரா. போ. | கோவை |
| குருவம்மாள் | புதுவை |
| குருவாயூரப்பன், எஸ். | தேரழுந்தூர் |
| குன்றக்குடி அடிகளார் | பரமக்குடி |
| கோதண்டராமன், க. கு. | காரைக்குடி |
| கோபால ரமணன் | குடந்தை |
| கோபால் ஐயர், தி.வே. | புதுவை |
| கோவிந்தசாமி, ந. | கோவை |
| சக்தி | பரமக்குடி |
| சங்கரன், டி. | குடந்தை |
| சடாட்சரம், சு. | தேரழுந்தூர் |
| சண்முகம், பி. கே. | கள்ளிப்பட்டி |
| சண்முகம், வெற்றியூர் | நாட்டரசன் கோட்டை |
| சண்முகசுந்தரம், எஸ். | திருப்பத்தூர் |
| சத்திபெருமாள் | பரமக்குடி |
| சத்தியசீலன், சோ. | காரைக்குடி |
| சத்தியபாமா, இரா. | நாட்டரசன் கோட்டை |
| சந்தனமணி | பாளையங்கோட்டை |
| சரசுவதி ராமநாதன் | காரைக்குடி |
| சரோஜா | கோவை |
| சரோஜினி, தி. | புதுவை |
| சவகர்லால், ச. | காரைக்குடி |
| சவரிமுத்து, சி. வி. | காரைக்குடி |
| சவரிராஜன், எஸ். | காரைக்குடி |
| சாகுல் அமீது, ஏ. | பாளையங்கோட்டை |
| சாமி, பி. எல். | புதுவை |

| | |
|---|---|
| சாயபு மரக்காயர் | புதுவை |
| சாரங்கபாணி, கோ. | கோபிச் செட்டிப் பாளையம் |
| சாலமன் பாப்பையா | பரமக்குடி |
| சிங்கார வடிவேலன், அர. | காரைக்குடி |
| சிங்காரவேலன், சொ. | தேரழுந்தூர் |
| சிதம்பர நாச்சியப்பன் | நாட்டரசன் கோட்டை |
| சிதம்பரநாதன் | கோவை |
| சித்தன் | புதுவை |
| சித்திரா | திருப்பத்தூர் |
| சிவகாம சுந்தரி, சு. | புதுவை |
| சிவகுருநாதன், கோ. | காரைக்குடி |
| சிவக்கண்ணு, மு. | காரைக்குடி |
| சிவக்குமார், பெரி. | நாட்டரசன் கோட்டை |
| சிவசங்கரன், சி. | தேரழுந்தூர் |
| சிவசேதுராமன் | பாளையங்கோட்டை |
| சிவச்சந்திரன், மு. | தேரழுந்தூர் |
| சிவஞானம், ம. பொ. | காரைக்குடி |
| சிவதாணுப்பிள்ளை, ம. | பாளையங்கோட்டை |
| சிவம், சுகி. | சென்னை |
| சிற்சபேசன், கண. | பரமக்குடி |
| சீனிவாசன், எஸ். | காரைக்குடி |
| சீனிவாசன், ஏ. ஜி. | குடந்தை |
| சீனிவாசன், மீ. | பரமக்குடி |
| சீனிவாசன், வி. | பரமக்குடி |
| சுதா சேஷய்யன் | சென்னை |
| சுந்தரம் அடிகள் | பரமக்குடி |
| சுந்தரம், அரு. | நாட்டரசன் கோட்டை |
| சுந்தரம், சொ. சொ. மீ. | காரைக்குடி |
| சுந்தரம், ஜி. கே. | காரைக்குடி |
| சுப்பிரமணியபாரதி | நாட்டரசன் கோட்டை |
| சுப்பிரமணியம், ச. வே. | சென்னை |
| சுப்பிரமணியம், வ. அய். | காரைக்குடி |
| சுப்பிரமணியன், உ. | நாட்டரசன் கோட்டை |
| சுப்பிரமணியன், தா. கு. | பரமக்குடி |
| சுப்பையா, கண. | நாட்டரசன் கோட்டை |
| சுப்பையா, கண்ணன் | நாட்டரசன் கோட்டை |
| சுவாமிக்கண்ணு, எஸ். | காரைக்குடி |
| சுவாமிநாதன் | குடந்தை |
| சுவாமிநாதன், ஏ. எம். | சேலம் |
| செங்கோட்டுவேலன், ஆர். | காரைக்குடி |

| | |
|---|---|
| செல்லப்பன், சு | சென்னை |
| செல்லம், மு. | பரமக்குடி |
| செல்வமணி, வீர. | நாட்டரசன் கோட்டை |
| செல்வம், கோ. | கள்ளிப்பட்டி |
| செவ்வேள் | புதுவை |
| சேதுராமன், பெரிய. | காரைக்குடி |
| சேஷாத்திரி, ந. | ,, |
| சொக்கலிங்கம், பி.கே.டி | குடந்தை |
| சொல்விளங்கும் பெருமாள் | பரமக்குடி |
| சோம இளவரசு | குடந்தை |
| சோமசுந்தரம், எஸ். | திருப்பத்தூர் |
| ஞானசம்பந்தம், அ.ச. | சென்னை |
| ஞானசுந்தரம், தெ. | தேரழுந்தூர் |
| ஞானச் செல்வன் | காரைக்குடி |
| தங்க அன்புவல்லி | திருப்பத்தூர் |
| தமிழண்ணல் | பரமக்குடி |
| தமிழவேள் | காரைக்குடி |
| தர்மநாதன், ஐ. | நாட்டரசன் கோட்டை |
| தவமணி, இராம. | சிவகங்கை |
| தனபாலன், கு. | பரமக்குடி |
| தியாரு | பாளையங் கோட்டை |
| திரிவேணி | கோபிச்செட்டிப் பாளையம் |
| திருக்குறள் முருகையன் | குடந்தை |
| திருஞானம், சொ. | நாட்டரசன் கோட்டை |
| திருநாவுக்கரசு, சொ. கு. | கோபிச்செட்டிப் பாளையம் |
| திருமகன், சீ. | சென்னை |
| திருமாலழகு | நாட்டரசன் கோட்டை |
| திருவேங்கடாச்சாரி, ச. | கோபிச்செட்டிப் பாளையம் |
| திலகவதி, ச. | தேரழுந்தூர் |
| தில்லை இராகவன், கி. | பரமக்குடி |
| துரைசாமி, தெ. | காரைக்குடி |
| துரைசாமி, வீ. | நாட்டரசன் கோட்டை |
| துளசி ஐயா வாண்டையார், சி. | தேரழுந்தூர் |
| தெட்சணாமூர்த்தி, பி. | பாளையங்கோட்டை |
| நசீமா பானு | புதுவை |
| நஞ்சுண்டன், நா. | காரைக்குடி |
| நடராசன், அவ்வை. | சென்னை |
| நடராசன், இரா. | குடந்தை |
| நடராசன், சி. | பாளையங்கோட்டை |
| நடராசன், பால. | பரமக்குடி |

| | |
|---|---|
| நடராசன், வீ. ச. | குடந்தை |
| நடவரசன் | ,, |
| நமசிவாயம், பா. | காரைக்குடி |
| நல்லசாமிப்பிள்ளை, வி. | சிவகங்கை |
| நாகசாமி, இரா. | காரைக்குடி |
| நாகப்பன், அரு. | ,, |
| நாகராசன், சௌ. | குடந்தை |
| நாகராசன், சி. | நாட்டரசன் கோட்டை |
| நாகராசன், வி. ஆர் | சிவகங்கை |
| நாடார், எம். எஸ். | கோவை |
| நாயர், எஸ். கே. | நாட்டரசன் கோட்டை |
| நாராயணன், அ | ,, |
| நாராயணன், நா. சே. | ,, |
| நித்தியானந்தம், க. | பரமக்குடி |
| நிர்மலா, என். பி. | தேரழுந்தூர் |
| நிர்மலா சுரேஷ் | திருப்பத்தூர் |
| நீலகண்டன், த. கி. | சென்னை |
| நெடுமாறன் | பரமக்குடி |
| நெல்லைக் கண்ணன் | ,, |
| நேத்திரானந்தம் | பரமக்குடி |
| பசுபதி, ம. வே. | காரைக்குடி |
| பத்மா, ஏ. | சென்னை |
| பத்மா சுப்பிரமணியம் | ,, |
| பரிமளா | குடந்தை |
| பழநியப்பன், பழ. | காரைக்குடி |
| பழனிசாமி. செ. சு | கோபிச்செட்டிப்பாளையம் |
| பாண்டியன், கா. | நாட்டரசன் கோட்டை |
| பாண்டியன், தா. | ,, |
| பாபு அப்துல் ரஷீத், ஏ. | சென்னை |
| பாரூக்மரக்காயர், எம். ஓ. எச் | கோபிச்செட்டிப்பாளையம் |
| பாலகிருஷ்ணன், ப. | பாளையங் கோட்டை |
| பால சஞ்சீவி, எம் | கோவை |
| பாலச்சந்திரன், ந. | கோவை |
| பால நடராசன் | குடந்தை |
| பால முரளி | நாட்டரசன் கோட்டை |
| பாலா கந்தசாமி | புதுவை |
| பாலாஜி | குடந்தை |
| பிச்சை முகம்மது, தா. | காரைக்குடி |
| பிரமீளா | சேலம் |
| பிரேமா | திருப்பத்தூர் |

| | |
|---|---|
| புகழேந்தி | சேலம் |
| புவனேஸ்வரி | கோவை |
| புனித குமாரி | கோபிச்செட்டிப்பாளையம் |
| பேரரசு, ம. | நாட்டரசன் கோட்டை |
| பொன்னருவி | சென்னை |
| மகாதேவன், கே. வி. | தேரழுந்தூர் |
| மகாலிங்கம், தெ. ந. | பாளையங்கோட்டை |
| மகாலிங்கம், நா. | கள்ளிப்பட்டி |
| மகாலிங்கம், ப. | திருப்பத்தூர் |
| மணி, சி. சு. | பாளையங்கோட்டை |
| மணி, நா. | நாட்டரசன் கோட்டை |
| மணி மாறன், சா. பா. | குடந்தை |
| மணி முரசு, க. | நாட்டரசன் கோட்டை |
| மரகதம் | கோபிச்செட்டிப் பாளையம் |
| மரியதாஸ் | காரைக்குடி |
| மலைச்சாமி, பே. | கோவை |
| மலையப்பன், தி. சு. | காரைக்குடி |
| மனோகரன் | சேலம் |
| மனோரமா சுந்தரம் | கோவை |
| மாணிக்கம் | பாளையங்கோட்டை |
| மாணிக்கம், இரா. கா. | கோபிச்செட்டிப்பாளையம் |
| மாணிக்கம், வ. சுப. | காரைக்குடி |
| மாயாண்டி பாரதி | பரமக்குடி |
| மாருதி தாசன் | ,, |
| மாலதி, கே. | தேரழுந்தூர் |
| மாலா | நாட்டரசன் கோட்டை |
| முகிலன் | குடந்தை |
| முத்தப்பன், பழ. | காரைக்குடி |
| முத்துக் கிருஷ்ணன் | தேரழுந்தூர் |
| முத்துராமன், அ. | நாட்டரசன் கோட்டை |
| முத்து வீரப்பன், பழ. | காரைக்குடி |
| முருகேசன், மு. | பரமக்குடி |
| முனிசாமி, திருக்குறள், வீ. | காரைக்குடி |
| மேத்தா, மு. | சென்னை |
| மொய்தீன் அ. | ,, |
| மோகனசுந்தரம் | திருப்பத்தூர் |
| ரங்கநாதானந்தர், சுவாமி | சென்னை |
| ரஞ்சினி, வெ. | நாட்டரசன் கோட்டை |
| ராகவேந்திரன், கி | பாளையங்கோட்டை |
| ராணி | நாட்டரசன் கோட்டை |

| | |
|---|---|
| ராமதாஸ், சி. பி. | குடந்தை |
| ராமராசன், எஸ். கே. | காரைக்குடி |
| ராஜசதம், எம். | பாளையங் கோட்டை |
| ராஜேந்திரன், மீ. | பரமக்குடி |
| ருக்குமணி, இரா. | காரைக்குடி |
| ரேணுகா அப்பாதுரை | புதுவை |
| லதா, சு. | நாட்டரசன் கோட்டை |
| லலிதா காபேஸ்வரன் | திருப்பத்தூர் |
| லாரன்ஸ் அடிகள் | நாட்டரசன் கோட்டை |
| வயிரவன், வயி | நாட்டரசன் கோட்டை |
| வரதராஜன், கீ. | நாட்டரசன் கோட்டை |
| வளன் அரசு, பா. | பாளையங் கோட்டை |
| வள்ளி, துரை | தேரழுந்தூர் |
| வான்மதி ராமன் | கோபிச்செட்டிப் பாளையம் |
| விசுவநாதன், அ. | காரைக்குடி |
| விஜயலட்சுமி, சிவானந்த | சென்னை |
| வீரசாமி, தா வே. | திருப்பத்தூர் |
| வைத்தமாநிதி, டி | பாளையங்கோட்டை |
| வைரமுத்து இரா. | சென்னை |
| வைரவன், க. | நாட்டரசன்கோட்டை |
| வெங்கடாசலம், இரா. | பாளையங்கோட்டை |
| வெங்கடாசலம், ம | சேலம் |
| வெங்கடேசன் இரா | புதுவை |
| வெங்கடேசன், க. மீ | கோவை |
| வெங்கடேசன், முத்து | பரமக்குடி |
| வெங்கட்ராமன், அ. அ. | பரமக்குடி |
| வெள்ளையப்பச் செட்டியார் | நாட்டரசன்கோட்டை |
| வெள்ளையப்பன், சோம. | நாட்டரசன்கோட்டை |
| வேங்கடாச்சாரி, வி. எஸ். | பாளையங்கோட்டை |
| வேணுகோபால் நாயகர், என். | தேரழுந்தூர் |
| வேதாசலம், அன்பு. | காரைக்குடி |
| வேலாயுதஞ் செட்டியார், வே. | நாட்டரசன்கோட்டை |
| ஜகந்நாதன், கி. வா. | சென்னை |
| ஜாயிநேவிஸ் | பாளையங்கோட்டை |
| ஜெயசாந்தி, இ. ஜோ. | ,, |
| ஜெயராஜ், இ. | காரைக்குடி |
| ஜோசப் ஸ்டாலின் | நாட்டரசன்கோட்டை |
| ஜோதிர் மயானந்தம் | பாளையங்கோட்டை |
| ஹரிஹர சுப்பிரமணியம் | பாளையங்கோட்டை |
| ஹேமா, கே. | சென்னை |

# 37. நாட்டுப்புற இயல்

—வே. சா. திருமாவளவன்

தமிழாய்வுத்துறையில்நாட்டுப்புறவியல் தனியிடம் பெற்று வளர்ந்து வருகின்றது. கட்டுரை, நூல், ஆய்வேோடு எனப் பரிணமிக்கின்றது. நாட்டார் பாடலும், கதைப் பாடலும், கதைகளும், விளையாட்டும், கலையும், வழிபாடும், நம்பிக்கை -பழக்கவழக்கம் முதலிய சமூகச் செய்திகளும் ஆய்வுப்பொருளாகியுள்ளன. ஒப்பீடு, மொழிபெயர்ப்பு எனும் நிலைகளிலும் இது அமைகின்றது.

## பொது

நாட்டுப்புற இயல் குறித்துப் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படும் சமுதாய உணர்வு, உறவு முறை, பழக்க வழக்கம், நம்பிக்கை முதலியவற்றோடு நாட்டுப்புற இயல் கூறுகளைப் பாரதியார் தம் படைப்புக்களில் பயன்படுத்தியுள்ளமை குறித்து இரு கட்டுரைகளும், ஆழ்வார் அருளிச் செயல்களில் நாட்டார் பாடற் பண்புகள் அமைந்துள்ளமை குறித்து ஒரு கட்டுரையும், களப்பணியில் இத்துறை ஆய்வாளன் மேற்கொள்ள வேண்டிய நடைமுறைக் குறிப்புக்கள் பற்றிய ஒரு கட்டுரையும்,நாட்டுப்புற இலக்கியத்தை அறிமுகப்படுத்தும் பாங்கில் அமைந்த இரு கட்டுரையும், தமிழ் கன்னட மொழிகளில் நாட்டுப்புற இயல் ஆய்வு குறித்த கட்டுரை ஒன்றும் நாட்டுப்புற இயல் தொடர்பான பொதுக் கட்டுரைகளாகக் கொள்ளத்தக்கன.

'பாரதியாரும் பாமரர் இலக்கிய ஈடுபாடும்' என்ற கட்டுரை "ஒரு கவிஞனின் வெற்றி அவன் எடுத்தாளும் கருத்துக்களில் இல்லை. அவனது கவிதை அமைப்பில் உள்ளது. பாரதியின் வெற்றிக்குக் காரணம் பெரிதும் அவரது கவிதை நடைதான். அதாவது அவர் நாட்டுப்புற இலக்கிய பாணியைக் கையாண்ட முறைதான். அத்துடன் அவற்றில் அவர் கொண்ட ஈடுபாடு

தான்''[1] என்று குறிப்பிட்டு அவர் நாட்டுப்புற இலக்கியங்களில் கொண்ட ஈடுபாட்டினைப் பல பட விளக்கிச் செல்கிறது.

நாட்டுப்புற இலக்கியங்களில் அவர் காட்டிய ஈடுபாடு எளிய மக்களின் இதய பாவத்தை அறிய ஒரு வாய்ப்பாய் அமைந்தது. அதனால் அவர் ஒரு மக்கள் கவிஞராகவும் மலர்ச்சியுற்றார். அதனால்தான் எட்டயபுர அரண்மனை அவரைப் பொறுத்த மட்டில் எட்டிக்காய் ஆயிற்று. அவர் அரண்மனைத் துறவு பூண்டார் என்பதை நினைவு கூரலாம்.

மா. இராமலிங்கம் 'பாரதி பாடல்களில் நாட்டுப்புற இயல்' என்னும் கட்டுரையில் பாரதியாரின்பாடல்களில் 'நவீனத்துவம்' (Modernity) என்னும் பண்பொளி மெருகேறி இருப்பதற்குக் காரணம் நாட்டுப் புறத் தன்மையின்மீது வேர் கொண்டிருப்பது தான் என்றும், தொழில் செய்வோர் பாடும் குழுப் பாடல்கள் அவர் அடிமனத்தில் செயற்பட்டு நாட்டுப்புறத்தன்மை என்னும் உயிரோட்டத்தோடு புறப்பட்டது என்றும், நாட்டுப்புறப் பாடலின் நடையே பாரதியை மிகுதியும் கவர்ந்தது என்றும், மேலும் நாட்டுப்புறப் பாடல்களின் ஓசை, சூழமைவு ஆகிய வற்றை நன்கு உணர்ந்து இக் காலத்திற்கேற்பப் பொருத்திக் காணும் திறமை இருந்ததென்றும், அவரைப் பாட்டுலகின் தந்தை ஆக்கியது நாட்டுப்புற இலக்கியமே என்றும் கூறிச் சிந்தனைக்கு ஒரு கருதுகோளையும் முன் வைக்கிறார். குயில் பாட்டு ஒரு வாய் மொழிக் கதையாக இருக்கலாம் என்றும் அதுவே பாட்டுருவம் பெற்றிருக்கலாம் என்றும் குறிப்பிடு கிறார்[2]. இது ஆய்விற்குரியது.

பூ. ஜெயராமனின் 'நாலாயிரத்தில் நாட்டுப் பாடற் பண்புகள்' என்ற கட்டுரை, நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளான அடுக்குத்தொடர், இரட்டைக் கிளவி, மோனை, இயைபு, எதுகை, அந்தாதி, இரட்டைத் தொடை சொற்பின்வருநிலை அணி ஆகியவற்றை இனம் காட்டுகிறது. அந்தாதி வகையில் மட்டும் 1692 பாசுரங்கள் உள்ளன என்றும், ''குழந்தைச் செயல்களைக் கொண்டாடிப் பாடுகின்ற பாடல்கள் அனைத்துமே நாட்டுப் பாடற் பண்பு களைக் கொண்டுள்ளன'' என்றும், ''மனத்தில் எளிதில் சென்று

---

1. சு. சண்முகசுந்தரம், 14வது ஆய்வுக் கோவை- தொகுதி- 3, பக்கம் 184.
2. மா. இராமலிங்கம், மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழா மலர்.

பதிய வேண்டும். அவ்வாறு மனத்தில் பதிவதை மீண்டும் நினைவு கூர வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் எழுந்தவையே மோனையும் எதுகையும் அந்தாதியும் என்பதை உளங் கொள்ள வேண்டும்''[3] என்றும் கட்டுரையாளர் குறிப்பிடுகிறார்.

எஸ். சக்திவேலின் களப்பணி குறித்த கட்டுரை களப்பணியாளன் மேற்கொள்ள வேண்டிய நடைமுறைக் குறிப்புக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது. 'நாட்டுப்புற இயல் ஆய்வாளர் சரியான ஆய்வுமுறையினைப் பின்பற்றவில்லை'[4] என்பது மறு ஆய்வு செய்ய வேண்டியுள்ளது. ஏனெனில் இத் துறையில் உழைக்கும் ஆய்வாளர் அறிவியல் நெறியில் ஆய்வினைச் செய்துள்ளனர். சான்றாக ஆறு. இராமநாதனின் 'நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்' என்ற ஆராய்ச்சி நூலைக் கூறலாம்.

பா. மதிவாணனின் 'நாட்டுப்பாடல்கள் ஒரு 'கண்ணோட்டம்' என்ற கட்டுரையில் கூறும் ''எனினும் சாதித் தடைகளைத் தகர்க்க முயன்று முத்துப்பட்டன், காத்தவராயன் போன்றோர் தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்டது போலக் கொள்ளையர் உயர்த்தப்படவில்லை''[5] என்ற கருத்து, சிந்தனைக்கு உரியது. மேலும் நாட்டுப்புற இலக்கியம் பழைமையானதாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை என்ற கருத்தில் ''படைப்பு எப்படியிருந்தாலும் வாய்மொழி பரவுதலே நாட்டுப் பாடலாயிற்று[6]'' என்பார் கட்டுரையாளர். மாணிக்கத்தின் நாட்டுப்புற இலக்கியம் என்ற கட்டுரை மனிதன் பிறப்பிலிருந்து இறப்புவரை தோன்றும் பாடல்களை மனிதனின் வயதுக்குத் தக்கவாறு வகைப்படுத்திக் காட்ட முனைகிறது.

தமிழ் கன்னட மொழிகளில் நாட்டுப்புற இயல் ஆய்வு குறித்த கார்லோஸின் கட்டுரை பொதுவாக இருமொழிகளிலும் மேற்கொள்ளப்பட்ட ஆய்வினை ஆராய்கிறது கன்னட மொழியில் நாட்டுப்புற இயல் குறிப்பிடத்தக்க நிலையில் உள்ளதை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார். தொகுப்பு, பகுப்பு, ஆய்வு

3. பூ. ஜெயராமன், நாலாயிரத்தில் நாட்டுப்பாடற் பண்புகள், தினமணி — தீபாவளித் தினச் சிறப்பிதழ் (14, நவம்பர் 1982)
4. S. Sakthivel, 14வது ஆய்வுக் கோவை — தொகுதி-3, பக்கம் 171.
5. பா. மதிவாணன், செம்மலர், மே 1982.
6. மேற்படி

என்ற முறையில் பணி தொடர வேண்டும்என்றும் பொருண்மைப் பகுப்பு அறிவியல் சார்புடையதாகாது[7] என்றும் கூறுகிறார். கி. பி. கிருஷ்ணகுமார் நாட்டார் வழக்காற்றியலை 'ஜனபத பரம்பரை' என்ற தொடரால் குறிப்பிடுகிறார். நா. வானமாமலை 'நாட்டார் வழக்காற்றியல்'[8] என்ற தொடரைப் பயன்படுத்தியதோடு இதனை ஒப்பிடலாம். நாட்டார் பாடல்களில் ஆய்வாளர் கொண்டுள்ள ஆர்வம் நாட்டாரின் பழக்க வழக்கம், சிறு தெய்வ வழிபாடு, மருத்துவம் முதலிய துறைகட்கும் பரவ வேண்டுமென விழைகிறார்.

பாடல் வகைகள்

ஆறு. இராமநாதனின் நாட்டுப்புறப் பாடல் வகைகள், 'வகைப்பாடு' குறித்த சிறிய நூல் ஆகும். நூல் சிறிதாயினும் மிகவும் இன்றியமையாதது. எத்துறை ஆய்வாயினும் ஆய்வு நுட்ப திட்பம் உடையதாய் அமைய வகைப்பாடு மிகமிக இன்றி யமையாதது ஆகும். தமிழில் குழந்தைப் பருவத்தில் இருக்கும் நாட்டுப்புற இயல் ஆய்விற்குத் தேவையான வகைப்பாடு செம்மையுற அமையவேண்டும்.

நாட்டுப்புற இலக்கியத்தை மொழிநடை (Texture), பாடம் (Text), சூழல் (Context) ஆகியவற்றின் அடிப்படையில் பாடல் கதைகள், பழமொழிகள், விடுகதைகள் எனப் பொதுவாக வகைப் படுத்தினாலும், இன்னும் நுட்பமானவகைப்பாடு அமைய வேண்டும் என்னும் கருத்தினை உட்கொண்டு இந்நூலினை ஆசிரியர் யாத்துள்ளார்.

இந்நூலாசிரியர்க்கு முன் மு. அருணாசலம், பேரா. சாம்ப மூர்த்தி, கி.வா. ஜகந்நாதன், செ. அன்னகாமு, ஆறு. அழகப்பன், மா. கோதண்டராமன், மா. வரதராசன், சு. சண்முக சுந்தரம், நா. வானமாமலை, கிருட்டின சாமி, சா. வளவன் ஆகியோர் இத்துறையில் கருத்துச் செலுத்தியுள்ளனர். இவ்வறிஞர் கிடைத்த பாடல்களை ஏதோ ஒருவகையில் வெளிப்படுத்த வேண்டுமென்று நினைத்தாரே ஒழிய நுண்ணிய வகைப்பாடு தேவை என்று உணரவில்லை. வளரும் துறையாகிய நாட்டுப்புற இயலுக்கு, ஆயிரக்கணக்கான பாடல்கள் தொகுக்கப்பட்ட

---

7. S. Carlose, Folklore Research in Tamil and Kannada, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்மன்றம், 14வது கருத்தரங்குச் சிறப்பு மலர்.

8. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் ஓர் அறிமுகம், பக்கம்-76 அடிக்குறிப்பு.

நிலையில், ஒரு சீரிய வகைப்பாடு தேவையாகிறது. ஆறு. இராம நாதன், பொருண்மை அடிப்படையில் பாடல்களை வகைப்படுத் தாமல் சூழல் அடிப்படையில் வகைப் படுத்துகின்றார்: 1. தாலாட்டு, 2. குழந்தை வளர்ச்சி நிலைப் பாடல்கள், 3 விளையாட்டுப் பாடல்கள், 4. தொழிற் பாடல்கள், 5. வழி பாட்டுப் பாடல்கள், 6. கொண்டாட்டப் பாடல்கள், 7. இரத்தல் பாடல்கள், 8. இழப்புப்பாடல்கள். இவ்வகைப்பாடு சீரியதாக உள்ளது.

இதனால், இனிவரும் ஆய்வாளர்க்குப் பாடல்களை இனம் கண்டு வகைப்படுத்துவது எளிதாகும்.

**சமூகக் கதைப்பாடல்: சிதம்பர நாடார் கதை!**

அறிஞர் நா. வானமாமலை கதைப் பாடல்களை மூவகை யாகவும்[9] நான்கு வகையாகவும்[10] கொள்வர். சிதம்பர நாடார் கதை சமூகக் கதைப்பாடலாகும். கதைப் பாடல்கள் கோயில் விழாக்களில் வில்லுப்பாட்டாக இசைக்கப்படும். கதை கேட்கும் ஆர்வமுடைய மக்கள் எவ்வளவு நேரமானாலும் அலுப்பின்றிக் கதைகளை கேட்டு மகிழ்வர். சாதி ஒருமைப்பாடு, ஊர் ஒற்றுமை ஆகியவற்றிற்குக் கதைப்பாடல்கள் உறுதுணையாகின்றன.

சமூகக் கதைப்பாடல்களில் சாதீயம் உச்சம் பெற்றிருக்கிறது. கிராமப்புற சமுதாயம் சாதிக் கட்டுப்பாட்டில் இயங்குவது. சாதி மீறல்களை அம்மக்கள் அங்கீகரிப்பதில்லை. காதல் தனி மனித உரிமையானாலும் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டே தனிமனிதன் வாழவேண்டியிருக்கிறது. தனிமனிதன் சாதிக்கட்டுப்பாட்டை மீறும்போது, அவனே அழிக்கப்படு

---

9. நா. வானமாமலை (பதிப்பு) வீரபாண்டிய கட்ட பொம்மு கதைப் பாடல், பக்கம் 18.
10. நா. வானமாமலை (பதிப்பு) கான்சாகிபு சண்டை— பக்கம்-1.

நா. வானமாமலை கதைப் பாடல்களைப் புராணக் கதைப் பாடல்கள், வரலாற்றுப் பாடல்கள், சமூகக் கதைப் பாடல்கள் என்று மூவகையாகவும் தெய்வப் புனை கதைகள், புராணக் கதைகள், சமூகக் கதைகள், வரலாற்றுக் கதைகள் என்று நான்கு வகையாகவும் கொள்ள ஆறு. இராமநாதன், கதைப் பாடல்களைக் குறுங்கதைப் பாடல் நெடுங்கதைப்பாடல் என இரு வகையாகக் கொள்கின்றார். (Literary Heritage of the Tamils பக்-667.)

கிறான். அழிவிற்குப்பின் அவன் தெய்வமாக மதிக்கப்படுகிறான் வழிபடப் படுகிறான்.

சாதியில்லாத ஒரு இந்திய சமுதாயத்தைக் கற்பனை செய்ய முடியாது. ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமைகளைவிடக் கொடுமையானது சாதி உணர்வுதான். ஒவ்வோர் இந்தியனும் சாதி உணர்வுடையவனாக இருக்கிறான். எனவே சாதி மோதல்கள் தவிர்க்க இயலாதபடி ஆழ வேரூன்றியுள்ளன.

சாதி, சமூகக் கதைப்பாடல்களின் பொருண்மையாய் உள்ளது. தமிழகத்தில் குறிப்பாகத் தென்மாவட்டங்களில் சாதிப் பாதிப்பு அதிகமென்றே கருதலாம். வேதம் கற்ற பார்ப்பனரும், நிலவுடைமையாளராகியவேளாளரும் தங்கள் சாதியின் தூய்மையைக் காத்துக் கொள்வதில் விழிப்புடன் இருந்தனர். கீழ்ச்சாதிக்காரன் தங்கள் இனப்பெண்களைத் தீண்டிவிடக் கூடாதென்பதில் அக்கறை காட்டிய மேல்சாதிக்காரர், கீழ்ச் சாதிப் பெண்களைத் தீண்டுவதில் இன்பம் கண்டனர்.[11] தாழ்ந்த சாதிக்காரன் மேல்சாதிப் பெண்ணைக் காதலித்தபோது, மேல்சாதிக்காரன் அவனை அழித்தான். சாதிப்பூசல் தலைகாட்டிற்று.

சாதிப்போராட்டமும் இருவகைப்படும். 1. அரிசனங்களுக்கும் அரிசனங்கள் அல்லாதாருக்கும் இடையே ஏற்பட்ட போராட்டம். 2. அரிசனங்கள் அல்லாதாருக்குள்ளே நிகழ்ந்த போராட்டம். இரண்டிலும் பாலுறவு அடிப்படையாயுள்ளது. அதாவது தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர் உயர்ந்த குலத்தில் பிறந்தவரோடு உறவு கொள்ளல், அதனால் உண்டான போராட்டம் என்பது கதைப்பாடல்களின் அடிநாதமாகும், காத்தவராயன் கதையும், மதுரைவீரன் கதையும் சாதிப் போராட்டத்திற்குச் சான்றாக அமையும். அரிசனங்கள் அல்லாதாரிடையே நிகழ்ந்த போராட்டத்திற்குச் சிதம்பர நாடார் கதையைச் சான்று காட்டலாம். மதுசூதனபுரம் முத்தாரம்மன் கோயிலில் வில்லுப்பாட்டாக இக்கதை பாடப்பட்டு வருகிறது. இக்கதைப் பாடல் இரு தலைமுறைகட்கு முன்னர் மேலைக்

---

11. செம்மலர், அக்டோபர், 198 .

பறையன் பறையன்னு
பரமபதம் சொல்லுறீங்க
பறைச்சி செகப்பாயிருந்தா
பல்லைப் பல்லைக் காட்டுறீங்க
அதுமாத்திரம் ஒத்துக்கிருமா?
தொட்டாமாத்திரம் ஒட்டிக்கிருமா?

காட்டுவிளை குட்டி நாடாரால் இயற்றப்பட்டதெனத் தெரி கிறது; 1519 வரிகளால் ஆனது.

சாதிவிட்டுச் சாதி பாலுறவோ திருமணமோ நிகழ்வதை வேளாளர் விரும்பவில்லை. பறக்கையிலுள்ள வேளாளர், நாடாரை வெறுக்கும்படி வேதியரை முடுக்கி விடுகின்றனர்.

நாடாந் தானானவனும் நம்மோடிருக்க முறையுண்டோ
அந்தணர்களானவர்கள் அதிவேக கோபமதாய்
வேளாளர் மக்கள் சொல்லை மிகமறுத்துத் தட்டாமல்
தட்டாமல் வேதியர்கள் தானிருந்தார் எல்லோரும்.

வேளாளர் தொகை பெருகியும் அந்தணர் தொகை அருகியும் இருந்த சூழலில், முன்னவரின் சொல்வரம்பிற்குப் பின்னவர் ஆட்பட்டனர். மேலும், தென் மாவட்டங்களில் சாதியின் ஆதிக்கம் கோலோச்சியதையும் காண முடிகிறது. வேளாளரும் வேதியரும் ஒருவருக்கொருவர் இணக்கம் கொண்டபோது, நாடார் தம்முடன் வாழ்வதை விரும்பவில்லை. எனவே, நாடாரைத்தமக்குச் சமானமாக ஏற்றுக் கொள்ளவில்லை என்பதையும் அரசுப் பதவியிலிருந்தாலும் பொருட்படுத்துவதில்லை என்பதையும் அறியலாம்.

சிதம்பர நாடாரைக் கொல்ல வேண்டும் என்ற உணர்வு தலை தூக்கியிருந்தது. அதனால்தான் செறுக்கன் நாடாரை வெட்ட வேண்டாம் என்று அறிகுறி காட்டியும் மேல்சாதிக்காரர் அதனைத் தவறாகப் புரிந்து கொண்டு வெட்டி விடுகின்றனர். தென் மாவட்டங்களில் நீறுபூத்த நெருப்பாக இருந்த சாதிக் காழ்ப்பினைக் கதைப் பாடல்கள் தெளிவாக்குகின்றன. சிதம்பர நாடார் கதையும் அத்தகு நிலையைச் சித்திரிக்கிறது.

வெட்டுண்டு இறந்த நாடார் உயிர் மதுசூதனன் கோயிலுக்குச் சென்று தன்னை அழித்தவரை அழிக்கவும் தனக்குப் பூசை செய்ய வரமும் பெற்று வேதியரை அழித்தது. பாப்பாத்தி கனவு கண்டு செய்தியறிந்து நாக்கைப் பிடுங்கிக்கொண்டு உயிர் நீத்தாள். நாடாரும் பாப்பாத்தியும் செறுக்கனைக் கொன்று தன் வயதொத்தவரையெல்லாம் கொன்றழித்தனர். தப்பிப் பிழைத்த வேதியர் சோதிடனை அழைத்து அழிவிற்குக் காரணம் கேட்டனர். சோதிடன் 'சிதம்பர நாடாரைக் கொன்றதால் இவ்வழிவு உண்டாயிற்று என்றும் அவர்க்குக் கோயில் கட்டி வழிபட்டால் அழிவு நீங்கும்' என்றும் சொன்னான். வேதியர் சோதிடன் சொன்னபடி கோயில் கட்டிப் பங்குனி 11-ஆம் நாள் பூசையும் செய்தனர். மதுசூதனபுரத்தில் பள்ளிகொள்ள

விழைந்த நாடார், பாப்பாத்தி, செறுக்கனுடன், நாடார் இனத்தவர் கனவில் தோன்றி தன் வரலாற்றைக் கூறிக் கோயில் கட்டச் சொன்னார். அவரும் அவ்வாறே செய்து மூவருக்கும் பூசை செய்து வருகின்றனர்.

சாதிப் பேய்க்கு உயிர்ப் பலியானவர் தெய்வமாக மதிக்கப்பட்டு மேல்சாதிக்காரராலும் வணங்கப் படுகின்றனர்.[12] தனிப்பட்ட ஒருவன் சாதிக்குப்பலியாகித்தெய்வமாகமதிக்கப்படுவதால் சாதிப்பூசலும் கலகமும் வராமல் தடுக்கப்படுகிறது என்று கருதலாம்; சாதி முறை குலைந்து போகாமல் தடுக்கவும் இது காரணமாகிறது.

சிதம்பரநாடார் கதை மட்டுமன்றி, பொதுவாகக் கதைப் பாடல்களோடு தொடர்புடைய கட்டுரைகளும் வெளி வந்துள்ளன. ந. சத்தியபாமாவின் கட்டுரை, கதைப் பாடல்களில் கனவுகள் இடம் பெறும் பாங்கினை விளக்கிக் காட்டுகிறது. கதைப் பாடல்களில் கனவு எதிரது காட்டும் இயல்பினதாகப் படைத்துக் காட்டப்படுகிறது. நாட்டாரின் கனவு நம்பிக்கைகள் ஆழமானவை. எனவே, கதைப் பாடல்களில் கனவு ஓர் உத்தியாயமைந்து நிகழ்ச்சிகளை நடத்திச் செல்கிறது. பிராய்டின் உளவியல் கோட்பாட்டின் அடிப்படையில் முத்துப் பட்டன் கதை, வீரபாண்டியக் கட்டபொம்மன் கதைப்பாடல், கோவிலன் கதை ஆகிய கதைப் பாடல்களில் காணக்கிடக்கும் கனவுகளைக் கட்டுரையாசிரியர் ஆய்வு செய்ய முனைகிறார்.

நாட்டுப்புறக் கதைப் பாடலில் நம்பிக்கை குறித்த கட்டுரை கான்சாகிபு சண்டை என்ற நாட்டார் கதைப் பாடலில் அமைந்துள்ள 1. கெவுளி சொல்லுதல் 2 காவு கொடுத்தல் 3. கண்ணேறு கழித்தல் 4. இறை மானிட உருவெடுத்தல் 5. இறந்தோர் உயிர்த்தெழல் ஆகிய நம்பிக்கைகளை ஆராய்கிறது. கான்சாகிபு சண்டை-யில் மூன்று இடங்களில் பல்லி சொல்வதாக உள்ளது. அம்மூன்றிடமும் கோயிலாக இருப்பதால், பல்லி சொல்வதை மக்கள் தெய்வ வாக்கெனவே நம்பினர் எனலாம். பிராமணப் பெண்ணைப் பலி கொடுத்துத் தங்கப் பாலம் எடுத்தல், பீரங்கியைப் பயன் படுத்துவதற்கு முன்பாகக் கிடாவெட்டிப் பொங்கலிடல் முதலிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. தற்காலத்தும் உயிர்ப்பலி கொடுப்பது தடை செய்யப்பட்ட பின் எலுமிச்சை காவு கொடுத்தல் நாட்டாரின் நம்பிக்கை எச்சமாக உள்ளதை நினைவு கூரலாம்.

---

12. நா. வானமாமலை (பதிப்பு), காத்தவராயன் கதைப் பாடல்—பக்கம் 5.

**உரைநடைக்கதைகள்**

நாட்டார் வாய்மொழி இலக்கியத்தில் கதைகளுக்குத் தனி யிடம் உண்டு. கதைகள் பாடல் வடிவிலும் உரைநடை வடிவிலும் அமைவன. கதைகள் அவ்வப்பகுதி மக்களின் சிந்தனைப் போக்கு, மன வளர்ச்சி, வேட்கை, வெறுப்பு விருப்புக்கள் ஆகிய வற்றை வெளிப்படுத்துவன.

இவ்வாண்டு பல கதை நூல்கள் வெளி வந்துள்ளன. ஈசாப் குட்டிக் கதைகள், ஆர்மீனிய நாடோடிக் கதைகள் ஆகிய இரண்டும் மூன்றாம் பதிப்பாக வெளிவந்துள்ளன. முதற் பதிப் பாக வெளிவந்த நூல்கள் இந்திய நாடோடிக் கதைகள் இரண்டு பகுதிகள், மலைநாட்டு நாடோடிக் கதைகள் இரண்டாம் பகுதி, இந்தியக் கட்டுக் கதைகள், தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள், ஆகியன. தமிழ் நாட்டு நாடோடிக் கதைகள் தென்னிந்தியக் கதைகள் என்ற பெயரில் முன்னரே பல பாகங் களாக வெளி வந்துள்ளன.[13]

நாடோடிக் கதைகள் என்ற சொல்லாட்சி செல்வாக்கிழந்த நிலையில் இன்னும் சிலர் அதனையே வழங்கி வருவது வியப்பளிக் கிறது. இலக்கியத் துறைக்கும் ஆய்வுத்துறைக்கும் இடைவெளி அதிகமிருப்பதை இந்நிலை தெளிவுபடுத்துகிறது. நாட்டார் கதைகள் அல்லது நாட்டுப் புறக் கதைகள் என்ற சொல்லாட்சி யினை நடைமுறைப் படுத்துவது இன்றைய தேவையாகும்.

இந்திய நாடோடிக் கதைகள் இரு பகுதியிலும் பல மாநில நாட்டார் கதைகள் இடம் பெற்றுள்ளன. தமிழகத்தைச் சார்ந்த கதையொன்றும் இத் தொகுப்பில் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மலைநாட்டு நாடோடிக் கதைகள் இரண் டாம் பகுதியில் திரிபுரா, மிசோராம், நேபாளம், சிக்கிம் முதலிய மலைவாணரின் வாய்மொழிக் கதைகள் இடம்பெற்றுள்ளன. இந்தியக்கட்டுக் கதைகள் நீதி போதனையை மூச்சாகக் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளன. கிரேக்க அடிமை ஈசாப்பின் கதையை ஒப்ப இக்கதைகள் அமைந்துள்ளன. விலங்குகளும் பறவைகளும் பேச்சாற்றலும் செயல்திறனும் பெற்று விளங்குகின்றன. நுண் மாண் நுழைபுலமும் உளத்திண்மையும் விடா முயற்சியும் கடின

---

13. அ. லெ. நடராசனின் தென்னிந்தியக் கதைகள், IV பாகம் 1964-இல் முதற் பதிப்பாக வலம்புரிப் பதிப்பகத் தால் வெளியிடப்பட்டது. அதில் பெண்கள் திலகம், கற்பரசி, கங்காபாய் ஆகிய மூன்று கதைகளும் உள்ளன.

உழைப்பும் வீரதீரச் செயல்களும் இக்கதைகளில் சிறப்பிடம் வகிக்கின்றன. குழந்தைகளை வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்தும் தவப் பள்ளிகளாக இக்கதைகள் வாய்மொழியாக வழங்கிவந்தன எனலாம்.

தமிழ் நாட்டில் வழங்கிவரும் வாய்மொழிக் கதைகளின் தொகுப்பே தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள். முட்டாள் அரசன், கற்பின் பெருமை, பொறுமையின் பெருமை, அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற நல்லுணர்வு, பெண்கள் திறமையும் செயலாற்றும் சூழ்ச்சியும் கொண்டு திகழல் முதலியன பற்றிய கதைகள் இதில் உள்ளன.

கதைப்பாடல்கள் ஆய்வுலகில் பெற்ற செல்வாக்கினை வாய் மொழிக்கதைகள் இன்னும் பெறாமை வியப்பளிக்கிறது. அமெரிக்க நாட்டுப்புற இயலார் வாய்மொழிக் கதைகளைத் தொகுத்து, வகுத்தும் பகுத்தும், கதைவடிவங்களைக் கண்டுள்ள னர். அத்தகைய ஆய்வு தமிழிற்குத்தேவை. கதைகள் தொகுக்கப் பெறாமையின் தமிழைப் பொறுத்தவரையில் நாட்டுப்புற இயல் ஆய்வு குறையுடையதெனத் துணிந்து கூறலாம். திரைப்படம், தொலைக்காட்சி முதலிய அறிவியல் வளர்ச்சி, நாட்டுப்புற உணர்வைக் குலைக்கு முன்பாக இத்தகைய பணி அவசர நடவடிக்கையாக மேற்கொள்ள வேண்டும்.

பழமொழி

இப்பொருண்மையில் 'இராணுவப் பழமொழிகளும் மூதுரை களும்' என்ற நூலொன்றும், பழமொழிகளில் மருத்துவம், பழமொழிகளில் பண்பாட்டுக் கூறுகள், தமிழ் - கன்னடப் பழமொழிகள் ஒப்பீட்டாய்வு ஆகிய கட்டுரை மூன்றும் வெளி வந்துள்ளன.

'இராணுவப் பழமொழிகளும் மூதுரைகளும்' என்ற நூலின் முன்னுரையில் ''எழுதா இலக்கியங்களாக இருந்த ஏனைய துறைப் பழமொழிகள் ஏட்டில் இடம் பெற்றது உண்டு. ஆனால், இராணுவத்துறைப் பழமொழிகளையும் மூதுரைகளையும் தொகுத்துத் தமிழில் முதன் முறையாக ஏட்டில் இடம் பெறச் செய்யும் பெருமை இந்நூலுக்கே உரியது''[14] என்ற கருத்து அமைந்துள்ளது. ஐம்பது நாடுகளுக்கு மேற்பட்ட நாடுகளின் பழமொழிகளும் மூதுரைகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. உலக அறிஞர் பலரின் கருத்துரைகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

14. சாமி. வெண்கண்ணன், இராணுவப் பழமொழிகளும் மூதுரைகளும், முன்னுரை.

சில மூதுரைகள் சிந்தனைக்கு உரியவை.

“போர் வீரன் நல்ல வீரனாக மட்டுமின்றி நல்ல குடிமகனாகவும் இருக்க வேண்டும்”; “உன் பகைவன் விஷயத்தில் நீ செய்யக் கூடியவை இரண்டு காரியங்கள் தான். ஒன்று அவனை நண்பனாக்கிக் கொள். இல்லையேல் அவனை அழித்து ஒழித்துவிடு"; “ஒரு வாளைக் கொண்டு தீயைக் கிளறாதே" “கிழங்கு மரமாகலாம். ஆனால் பகைவன் நண்பனாக மாட்டான்”; “போரைக் காட்டிலும் மோசமானது போரைப் பற்றிய பயமே”

கவிதையைப் போன்றே பழமொழிகளும் மொழியாக்கம் செய்யும்போது தன் பொலிவை இழந்து விடுகிறது. ஆயினும் இராணுவம் பற்றிய உலகச்சிந்தனையை அறிந்து கொள்வதற்கு இந்நூல் முதற்படி என்று கொள்ளலாம்.

‘பழமொழிகளில் மருத்துவம்’ என்ற கு. மதிவாணன் கட்டுரையில் மாந்தர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள் பழமொழிகளின் வழி விளக்கப் பெறுகின்றன. ‘காலை துயில்வானும் மாலை இருப்பானும் பதர்’, ‘வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுச்குக்கொடு’, ‘சொறிந்து தேய்க்காத எண்ணெயும் பரிந்து இடாத விருந்தும் வீண்’. இன்னோரன்ன பழமொழிகளைக் கட்டுரையாளர் எடுத்தாண்டுள்ளார்.

வில்லவனின் ‘பழமொழிகளில் பண்பாட்டுக் கூறுகள்’ என்ற கட்டுரை பழமொழியைக் குறிக்கும் செலவாந்திரம் என்பது சொல் மந்திரம் என்பதன் திரிபாகவும் சுலோகம் என்பது சொல் ஓகம் என்பதன் திரிபாகவும் இருக்கலாம் என்று குறிப்பிடுகிறது. மூக்குப் போவதும் உயிர் போவதும் ஒன்றே என்பதை

‘மூக்கிலே புழுத்தவனுக்கு நாற்றமில்லே
முற்ற நனைந்தவனுக்கு ஈரமில்லே’

என்ற பழமொழியும் பெண்ணின் போலி அழகில் மயங்கினவன் கெடுவான் என்பதை,

‘மேனாமினுக்கியை மணந்தவனும் கெட்டான்
மேட்டாங்காட்டை உழுதவனும் கெட்டான்’

என்ற பழமொழியும் குட்டைக் கலப்பை நாட்டிற்கு நலம் பயவாது என்பதை,

‘கூழை குடியைக் கெடுக்கும்’
குட்டைக் கலப்பை நாட்டைக் கெடுக்கும்’

என்ற பழமொழியும், இன்னோரன்ன பழமொழிகளும் உணர்த்தி பண்பாட்டினை விளக்குகின்றன.

தமிழ் - கன்னடப் பழமொழிகள் ஒப்பீட்டு ஆய்வினை பெருமாள் நிகழ்த்தியுள்ளார். திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த தமிழ்-கன்னடப் பழமொழிகள் பல ஒத்த கருத்தும் சொல்லும் அமைப்பும் உடையன. ரெவரண்ட் பெர்சிவல் தமிழ்ப் பழமொழிக்கும், கிட்டெல் கன்னடப் பழமொழிக்கும் செய்த தொண்டு அளப்பரிது. சமுதாயம், கல்வி, பொருளியல், அறிவியல், சமயம், மருத்துவம், காதல் ஆகிய பொருண்மை குறித்த தமிழ்-கன்னடப் பழமொழிகளைக் கட்டுரையாக்கத் திற்குப் பயன் படுத்தியுள்ளார். மாமியார் மருமகள் உறவு சிக்க லுக்குரியது. தமிழில் மாமியார் மெச்சிய மருமகளில்லை என்ற பழமொழியைப் போன்றும் மாமியாரும் ஒரு வீட்டு மருமகளே என்பது போன்றும் கன்னடத்திலும் உண்டு. 'அதெகே ஒண்டு கால சுசெகெ ஒண்டு கால' என்பது ஆனைக்கு ஒருகாலமானால் பூனைக்கு ஒரு காலம் என்பது போலாம். ஆபத்துக்குப் பாவ மில்லை என்ற தமிழ்ப் பழமொழிக்கு நிகரான கன்னடப் பழ மொழி 'அபொத்திகெ பாபவில்ல' என்பதாகும். இங்ஙனம் இரு மொழிகளிலும் அமைந்த ஒத்த பழமொழிகளை இக் கட்டுரை யாளர்ஒப்பீட்டு ஆய்வு செய்துள்ளார்.

### விடுகதை

தொல்காப்பியர் முதன் முதலில் விடுகதையின் இலக் கணத்தை வரையறை செய்து இருவகைப்படும் எனக் குறித் தார்.[15] உரையாசிரியர் காலம் வரையில் மந்த கதியில் சென்ற விடுகதை பின்னர், துரித நடை பயின்றது. 'களவுக் காதலர் கையாண்ட விடுகதைகள்' என்ற நூல் 1962-க்கு முன் இல்லாத வகையில் விடுகதை இலக்கியத்தில் ஒரு மைல்கல்லாய் அமைந் தது. அந்த நூல் அமைப்புக் குறித்துச் சு. சண்முகசுந்தரம் "ஒவ் வொரு விடுகதைக்கும் தொகுக்கப்பட்ட வரலாறு, குறிப்புரை கள், திரிந்த வடிவங்கள் மாற்று வடிவங்கள் போன்றவையும் கொடுக்கப்பட்டுள்ளன."[16] என்கிறார். 1975-இல் வெளி வந்த 'தமிழில் விடுகதைகள்' என்ற நூலில் 2504 விடுகதைகள் காணப் படுகின்றன. ஆறு. இராமநாதனுடைய 'காதலர் விடுகதைகள், வட்டக் கோட்டை மு. இராமலிங்கத்தின் 'களவுக் காதலர் கையாண்ட விடுகதைகளை' ஒத்துள்ளது.

களப் பணியில் சேகரித்த இருபத்தேழு விடுகதைகளுடன் வேறு நூல்களிலிருந்து சேகரித்த எட்டு விடுகதைகளும் ஆக

15. தொல்காப்பியம்—பொருளதிகாரம் நூற்பா எண் 478 (இளம்பூரணம்)
16. சு. சண்முகசுந்தரம், நாட்டுப்புற இலக்கிய வரலாறு, பக்கம் 224.

முப்பத்தைந்து விடுகதைகள் காதலர் விடுகதைகள் என்னும் இந் நூலில் அடங்கும். ஆய்வு முன்னுரையில் புதிர்களைப் புதிர்ப் பேச்சு, நாட்டுப்புறப் புதிர்கள், இலக்கியப்புதிர்கள் என வகைப் படுத்தி நாட்டுப்புறப் புதிர்களை விடுபுதிர், விடுகணக்கு, விடுகதை எனப் பாகுபடுத்திக் கொள்கிறார்.[17] விடுபுதிர் என்பது புதுச் சொல்லாக்கம். விடுகதை என்பது கதையை உள்ளடக்கமாக உடைய புதிர்களைக் குறிக்கும்.

விடுகதைகளில் காதல் பொருண்மை அமைந்தவையே மிகுதியாக உள்ளன. காதலர் பிறர் அறியாமல் பூடகமாக உரையாடவேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்படுவதால் வயது வந்த ஆணும் பெண்ணும் விடுகதையைக் கருத்துவாகனமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். கிராமப்புற நாகரிகத்தில் விடுகதை பொழுதுபோக்குச் சாதனமாகவும் சுவையுடைய தாகவும் இருப்பதால் வாய்மொழியாக வழங்கிவருகின்றன.

**குருடன் பாறை:** காதலர் விடுகதையில் குருடனை நம்பி என்ற தலைப்பில் அமைந்த விடுகதை கணவனைக் கொன்ற மனைவி யைப் பற்றியது. அதற்கு இரு மாற்றுவடிவங்கள் காணப்படு கின்றன. ஒன்று (11.அ) மு. வை. அரவிந்தனின் தமிழக நாட்டுப் பாடல் தொகுதியிலும் மற்றொன்று (11. ஆ) நா. வானமா மலையின் 'தமிழர் நாட்டுப் பாடல்கள்' தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன. இந்த மூன்றையும் ஒத்த விடுகதையை அரங்க. சீனிவாசன் வெளிப்படுத்தியுள்ளார். இதுவரை வெளிவராத நாடோடிப்பாடலின் அடிப்படையில் அமைந்த அற்புதமான வரலாறு என்ற குறிப்புடன் குருடன் பாறை என்ற தலைப்புடன் அதனை வெளிப்படுத்தியுள்ளார்.

''குருகிருந்த மலைதனிலே
குருடன்கவி பாடையிலே
அருகிருந்த தோழனைத்தான்
ஆழ்கிணற்றில் தள்ளிவிட்டேன்
சங்குகளே தவளைகளே
சமுத்திரத்து முதலைகளே
என்தாலிக்கு உரியவனைத்
தள்ளிக்கரை சேரீரோ!''

---

17. ஆறு. இராமநாதன், காதலர் விடுகதைகள்—பக்கங் கள் 2-3.

குருடன் : "கறந்த பால் முலையேறுமா?
கடலுத்தண்ணி மீன் ஏறுமா?
அறுந்ததலை பொருதுமாடி
அந்தம் கெட்ட மூளி நாயே"

இந்த வரலாறு தொடர்பான பாறைக்குக் குருடன் பாறை என்று பெயர். அது கரூர்-திண்டுக்கல் வழியில் குஜிலியம் பாறையிலிருந்து மணப்பாறை செல்லும் வழியில் உள்ளது. இந்த விடுகதை இந்தப் பகுதியில் தோன்றித் தமிழகத்தின் பல பகுதிகளிலும் வாய்மொழிப் பரவலாகச் சென்றிருக்க வேண்டும். இவ் விடுகதையில் குருடன் பதிலிறுப்பதாகச் சொல்வது பொருத்தமாகவும் இருக்கிறது.

தாலாட்டு: சா. வளவனின் 'உளவியல் நோக்கில் நாட்டுப்புறத் தாலாட்டுக்கள்' என்ற கட்டுரை நாட்டுப்புற மக்களின் உள்ளங்களை பிராய்டின் உளவியல் கோட்பாட்டை ஆதாரமாகக் கொண்டு தாலாட்டுப் பாடல்கள் வழி ஆராய முனைகிறது. உளவியல் கோட்பாட்டைப் பொருத்திப் பார்க்கையில் தாலாட்டுப் பாடலின் அருமைப்பாடும் தாயுள்ளமும் குழந்தையின் ஆளுமை வளர்ச்சியும் தெற்றென விளங்கும். விழிப்புணர்வு பற்றிய பொதுவான கருத்து, தொடு உணர்வு, புலனறிவு, பிரித்தறியும் அறிவு எழுச்சி, தூண்டல் முதலியவற்றின் விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. குழந்தையின் ஆளுமை வளர்ச்சிக்குத் தாய் எங்ஙனம் துணை நிற்கிறாள் என்பதை "தன் தேவைக்காக இருக்கும் பழத்தையும், அது கனியும் போது கிளியை விரட்ட வேண்டும் என்ற சூழலையும், அதனை விரட்ட தன்னால் இயலும் என்ற ஆளுமை உணர்வையும் குழந்தைக்கு உணர்த்துகிறாள். குழந்தையும் ஆளுமையைப் படிப்படியாக வளர்த்துக் கொள்கிறது"[18] என்று விளக்குகிறார் கட்டுரையாளர்.

நம்பிக்கை: வி. ரவிச்சந்திரனின் பழிதீர்த்த நாகம் மக்கள் நம்பிக்கையை விளக்குவது. திருவாமாத்தூரிலிருக்கும் வட்டப் பாறையில் நின்று பொய்ச் சத்தியம் சொன்னவரைப் பாம்புகள் துரத்திக் கடிக்கும் என்று மக்கள் நம்புகின்றனர். அதற்கு ஒரு நிகழ்ச்சியும் சொல்லப்படுகிறது. அண்ணன் தம்பி இருவர் அந்த ஊரில் வாழ்ந்து வந்தனர். அண்ணன் கொஞ்சங் கொஞ்சமாகச் சொத்தையெல்லாம் விற்று நவரத்தினக் கற்களாக மாற்றிக் கொண்டான். கைத்தடி ஒன்றைத் தயாரித்து அதனுள்

18. சா. வளவன், ஆய்வுக்கோவை—தொகுதி-3, இந்திய பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம். பக்கம் 494

நவரத்தினங்களை மறைத்து வைத்தான். திருவட்டப் பாறையின் மேல் ஏறி நின்று சத்தியம் செய்யும்படி தம்பி சொல்கிறான். தன் கைத்தடியைத் தம்பியின் கையில் கொடுத்துவிட்டு அண்ணனும் 'பூர்வீகச் சொத்துத் தற்போது தன் தம்பியிடத்தில் தான் இருக்கிறது' என்று சத்தியம் உரைக்கின்றான். மூத்தவனுக்குக் கேடு ஒன்றும் ஏற்படவில்லை. தம்பி உளம்நொந்து கதறுகிறான். பாறையை விட்டு இறங்கிய அண்ணனும் திருவட்டப்பாறைத் தெய்வம் என்னைக் கொன்று விட்டதா? என்று நகைத்தான் திடீரென்று கரும்பாம்பு ஒன்று தோன்றி அண்ணனைக் கொத்திக் கொன்று விட்டது.

உறவு: குமரி மாவட்ட நாட்டார் பாடல்களில் காணப் படும் உறவு முறை பற்றிய ஆய்வினை நிகழ்த்துகிறது, நிர்மலா பாயின் கட்டுரை.

அண்ணன் மனைவி கொடுமைக்காரியாகப் பல பாடல்களில் சித்தரிக்கப்படுகிறாள்; பழையனூர் நீலியாகவும், கொலைகாரி யாகவும் வருணிக்கப்படுகிறாள்; அண்ணிமார் ஆண்டில் இளைய கொழுந்தனுக்குக் கல்விகற்பித்துமனிதனாக்குவதையும், இளைய கொழுந்தனோடு பாலுறவு கொள்வதையும் குறிப்பிடுகிறார்.

மாமியார்—மருமகன். இடையேயும் அத்தை—மருமகன் இடையேயும் பாலுறவு உண்மையைப் பாடல்கள் குறிப்பிடு வதாகக் கூறுகின்றார். மருமகனின் உடல்நலத்தில் மாமியார் அக்கறை காட்டுவதுடன் நல்லுணவு ஆக்கிப்படைப்பதையும், மருமகன் மாமியைக் கட்டித் தழுவிக்கொள்வதையும் எடுத்துக் காட்டி, மாமியார் ஆண்டில் இளையவளாக இருப்பதும் மகள் பூப்படையும் முன்பே அவளை மணமுடித்து வைப்பதும் அதற்குக் காரணம் ஆகலாம் என்கிறார்.

ஒவ்வொரு மாவட்டமும், சாதி இனப் பிரிவும் இத்தகைய ஆய்விற்கு ஆட்படுமானால், சமுதாய வரலாற்றில் உறவு முறை பற்றிய கருத்தினை உருவாக்கலாம்.

பெண்: ''இல்லாமையும் இழப்பும்'' என்ற புஷ்பாமதனின் கட்டுரை 'இல்லாமை எனப்படும் குழந்தைப் பேறின்மையையும் இழப்பு எனப்படும் கணவனை இழந்தமையையும் சமுதாய நோக்கில் ஆராய்கிறது. கட்டுரையில் இடம்பெற்றுள்ள பாடல் களைக் கட்டுரையாளர் தாமே சேகரித்துள்ளார். இனம் அழி யாமல் பாதுகாப்பது, சொத்துக்கு வாரிசாக இருப்பது, பெற் றோருக்கு ஈமக்கடன் செய்வது ஆகிய இந்த மூன்று காரணங் களுக்காகக் குழந்தைப்பேறு வேண்டப்படுகிறது. ஒப்பாரிகளில்

தாலி, மஞ்சள், குங்குமம், மலர் முதலிய மங்கலப் பொருள் களை இழந்ததற்காக வருந்துதல், தீய சகுனமாகக் கருதுவரே என்ற ஏக்கம் ஆகியவை இடம்பெறுகின்றன.

**பாரதம்:** பாமரமக்களும் பாரத மாந்தரும் என்ற கட்டுரை எளிய நாட்டுப்புற மக்களின் இதிகாச ஈடுபாட்டை ஆராய்கிறது. தாலாட்டு, ஒப்பாரிப் பாடல்களில் பாரதப் பாத்திரங்கள் இடம் பெற்றுள்ள நிலையை ஆராய முனைகிறார் கட்டுரையாளர். குழந்தையின் தந்தையை அருச்சுனன், தருமன், பஞ்சவன் ஆகிய பாத்திரமாகவும், தாய்மாமனை வீமனாகவும், பாட்டனைக் கருணனாகவும், குழந்தையை கருணனாகவும் வீமனாகவும் திரௌபதியாகவும் உருவகிப்பதைக் கட்டுரை ஆராய்கிறது. ஒப்பாரியில் தன் கணவனை அருச்சுனன், வீமன் என்று உருவகிப்பதையும் கட்டுரையாளர் எடுத்துக்காட்டுகிறார்.

**கனவு:** சாந்தியின் நாட்டாரின் கனவுபற்றிய மூடநம்பிக்கை குறித்த கட்டுரை மூடநம்பிக்கையை நான்கு வகையாகக் கொண்டு ஆராய்கிறது. எல்லாக்கனவுகளும் குறியீட்டு மூட நம்பிக்கை சார்ந்தன எனவும் நன்மை பயப்பன, தீமை தருவன, எதிரது விளைப்பவை எனவும் கட்டுரையாளர் விளக்குகிறார். சான்றாக கனவில் மலரைக் காண்பது, மலர் வாங்குவது நன்மை பயக்கும். கனவில் பூசணி விழுந்து உடைவதாகக் காண்பது தீமை தரும். கனவில் அரவம் தீண்டுவது சனி விலகு வதனை விளக்கும். சாவினைக் குறிப்பிடும் கனவுகள் உண்டு, எண்ணெய் தேய்த்துக் கொள்வது போல் கனவு கண்டால், அவ்வீட்டில் இறப்பு நிகழும். கனவு ஒன்றாக இருந்தும் வேறு வேறு விளக்கங்கள் கூறப்படுவதையும் கட்டுரையாளர் சுட்டிக் காட்டுகிறார்.

**சமூகவியல்: பண்பாடு: விளையாட்டு:**

குழிமணலுள் ஒளித்துவைத்து ஆடும் நாட்டுப்புற விளை யாட்டும், சிந்தி மக்களிடையே ஒரு தமிழ் விளையாட்டும் நாட்டார் விளையாட்டு தொடர்பானவை.

குழிமணலுள் சிறு பளிங்குக் கல்லை ஒளித்துவைத்து எதிர்க் கட்சியாரைத் தேடச் சொல்லும் ஒரு நாட்டுப்புற விளையாட்டு (மாதுமாது) தமிழகத்திலும்[19] ஆப்பிரிக்க இனம் வாழும் செனகல் நாட்டிலும் சில வேறுபாடுகளுடன் பல ஒற்றுமைகள் கொண்

19. இரா. பாலசுப்பிரமணியன், தமிழர்நாட்டு விளையாட்டு கள். பக்கம் 214-215.

டுள்ளதைத் தாயம்மாள்அறவாணன் புலப்படுத்தியுள்ளார். சாலை. இளந்திரையனின் சிந்தி மக்களிடையே ஒரு தமிழ் விளையாட்டு என்ற கட்டுரையில் நாட்டார் விளையாட்டாகிய கிட்டிப்புள் சிந்தி மக்களிடையே இட்டி தக்காரு என்ற பெயருடன் வழங்கி வருவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. கிட்டிப்புள் விளையாட்டில் பயன்படுத்தப்படும் தமிழ் எண்ணுப் பெயர்கள் கிட்டி தக்காரு விளையாட்டில் அப்படியே அமைந்துள்ளன. மொகஞ்சதாரோ—அரப்பா நாகரிகத்திற்கும் திராவிட நாகரிகத்திற்கும் உள்ள தொடர்பினை உறுதி செய்ய இவ்விளையாட்டும் பயன்படலாம். இவ்விரு கட்டுரைகளும் நாட்டார் வழக்காற்றியல் உலக ஒருமைக்கு வழிவகுக்கும் என்னும் நம்பிக்கையை ஊட்டுகின்றன.

கி. சுமதியின் கட்டுரை ''தனிமனித வாழ்வின் துயரங்கள் பெரும்பாலும் சமுதாயத்தின் பொதுவான அமைப்பு முறைகளால்தான் ஏற்படுகின்றன'' என்ற பின்னணியில் ஏழ்மை, பெண்களின் இயலாமை, தொழிலாளர் பிரச்னைகள் ஆகியவற்றை ஆராய்கிறது. நாட்டார் பாடல்களில் சமூகச் சிக்கல்கள் வெளிப்படுத்தப்படுகின்றனவே யொழிய, அவற்றிற்குத் தீர்வோ புரட்சிமிக்க மாற்றமோ பேசப்படவில்லை என்ற அரிய கருத்தைப் புலப்படுத்துகிறார்.

தொழிலாளர்: மீனவர்: நாட்டார் இலக்கியத்துள் தொழிலாளர் பாடல்களுக்கு ஒரு தனியிடம் உண்டு. வேலையின் கடுமை தெரியாமலிருப்பதற்கும் சோர்வைத் தவிர்ப்பதற்கும் தொழிலாளரிடையே ஒற்றுமை உணர்வைத் தோற்றுவிக்கவும் பொதுவான சமூக உணர்வைப் பகிர்ந்து கொள்வதற்கும் தொழில்பாடல்கள் துணைபுரிகின்றன. மீனவரின் சிறுதெய்வ வழிபாடும் நம்பிக்கைகளும், வண்டிக்காரன் பாட்டு ஆகிய இரு கட்டுரைகளும் தொழில் தொடர்பானவை. மீனவரின் சிறு தெய்வ வழிபாட்டில் குட்டியாண்டவர் மிகவும் முக்கியமானவர்; தனிக்கோயில் உண்டு; குதிரைப் பரிவாரம் உடையவர். கடலில் மீன்பிடிப்புத் தொழிலைத் தொடங்கும் போதும் அதன் பின்னரும் குட்டியாண்டவர் வழிபடப்படுகிறார். மீனவர் கிழக்கத்தியார் என்னும் சிறுதெய்வத்தையும் வழிபடுகின்றனர்; கிழக்கத்தியாருக்கு உருவமில்லை. கோலா மீன் பிடிப்புக்குச் செல்லுமுன் கிழக்கத்தியாரை நினைந்து விரதம் இருக்கின்றனர். அந்நாட்களில் உடற்சேர்க்கை, மீன் உண்ணல் ஆகியவற்றைத் தவிர்க்கின்றனர். வேடன், பனவா மீன்களை முறையே சின்ன குட்டியாண்டவர், பெரிய குட்டியாண்டவராகக் கருதி வழிபடு

கின்றனர். இன்னும் சமய வேறுபாடின்றி எல்லாக் கடவுளரை யும் வழிபடுகின்றனர். ஆமையைப் பெருமாளின் அம்சமாகக் கருதுவதால், அதன் இறைச்சியை உண்பதில்லை. வெளவால் மீன் தூண்டிலில் அகப்பட்டால், தூண்டில் போட்டவரும் அவர் குடும்பமும் தெய்வநிந்தனைக் காளானதாகக் கருதுகின்றனர்.

**வண்டிக்காரன்:** வண்டிக்காரன் பாட்டின் அமைப்பினை மா. நவநீதகிருட்டிணன் ஆராய்கிறார். பொதுவாகத் தொழிற் பாடல்கள் அருகி வருவதற்குக் காரணம் "தொழில் அருகுவ தாலும் தொழிலில் கிடைக்கின்ற மனநிறைவு அருகுவதாலும் தொழிலின் பொருள்வருவாய் அருகுவதாலும் இவற்றால் வாழ்வின்மீது ஏற்பட்ட நம்பிக்கையின்மையாலும்"[20] என்கிறார். வண்டிக்காரன் பாட்டினைத் தெம்மாங்கு எனக்குறிப்பர். வண்டிக்காரன் பாட்டில் வண்டியின் வருகை, வண்டியின் பெருமை, வண்டியிலுள்ள பொருள்கள், அவற்றை விற்பதால் உண்டாகும் பொருள் வரவு, வண்டி செல்லும் பாதையின் இயல்பு, காதல் நினைவு, பிரிவாற்றாமை, காதலில் தோல்வி, தொழிலில் விரக்தி முதலியவை இடம் பெறுகின்றன.

**வழிபாடு:** கலைவாணனின் மங்கையர் கொண்டாடும் மயில் வழிபாடு தருமபுரி மாவட்டத்தில் நிகழ்கிறது. தை மாதம் 6-ஆம் நாள் இரவு தொடங்கி ஏழுநாள் நோன்பு மேற் கொண்டு, ஏழாம் நாள் காலைத் தம் இல்லங்களைத் தூய்மைப் படுத்தி, நீராடி விட்டு, ஊரின் ஓரிடத்தில் கூடி மயிலை வணங்குவர். நோன்பு மேற்கொள்ளும்போது சில கட்டுப்பாடு களை விதித்துக் கொள்கின்றனர். மோர்குடிக்கக்கூடாது, பைத்தங்காய், கரும்பு, பிண்ணாக்குத் தின்னக்கூடாது; பல்லாங் குழி ஆடக்கூடாது. சுக்கு நசுக்கக் கூடாது. சோமபானம் கூட்டக்கூடாது.

நோன்பு முடியுநாளில் 21 கறிகாய்களுடன் சமையல் செய் கின்றனர். யார் வீட்டுத் தோட்டத்திலும் கறிகாய்களைப் பறித்துக் கொள்கின்றனர். சமையல் முடிந்தவுடன் பெண்கள் ஓரிடத்தில் கூடி மயில் உருவத்தைச் சுவரில் வண்ணத்தில் தீட் டியோ, மயில் உருவம் தீட்டப்பெற்ற வண்ணத் திரைச் சிலையைத் தொங்கவோ செய்து, அவ்விடத்தில் ஒவ்வோர் வீட்டிற்கும் ஒதுக்கப்பட்ட இடத்தில் தாங்கள் சமைத்த உணவுப்

---

20. மா. நவநீதகிருட்டிணன், ஆய்வுக்கோவை—தொகுதி-3, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், பக்கம் 347.

பொருட்களை வைத்துப் படைக்கின்றனர். நோன்பின் இறுதியாகக் கட்டு உடைப்புப் பாடல் நிகழ்கிறது. கட்டு உடைப்பு முடிந்தபின்னர் ஒவ்வொரு வீட்டுப்படையலிலிருந்தும் சோறு எடுத்துப் பெரிய உருண்டையாக்கி ஒரு வீட்டின் கூரையில் வைக்கிறார்கள். இப்படையலுக்காக மயில் ஏழுநாட்கள் உண்ணா நோன்பு இருப்பதாக நம்புகின்றனர். பின்னர் ஏழைகளுக்கு அன்னமிட்டுத் தங்கள் குடும்பத்துடன் உண்டு மகிழ்கின்றனர்.

மயிலுக்குத் தீங்கு செய்தவர், மயில் இறைச்சி உண்டவர், விலக்கப்பட்ட பொருள்களை உண்டவர், மயில் வழிபாட்டு விழாவில் கலந்துகொள்ள முடியாது. மயில் வழிபாடு செய்யாத குடும்பத்துப் பெண் மயில்வழிபாடு செய்யும் குடும்பத்திற்கு மணமகள் ஆவாள். ஆனால், அவள் நாவிலும் கைகளிலும் கற்பூரதீபம் ஏற்றப்பட்டுத் தூய்மையான பின்னரே மயில்வழிபாட்டில் கலந்து கொள்ளலாம். மயில்வழிபாடு செய்யும் குடும்பத்துப் பெண் மயில் வழிபாடு செய்யாத குடும்பத்துக்கு மணமகளாகப் போவாள். ஆனால், அவள் மயில் வழிபாடு செய்யும் உரிமையை இழக்கிறாள்.

**உழவர்:** ''உழவர்களின் நாட்டார் பாடல்கள்'', ''சமூக அநீதிகள் குறைபாடுகள் ஆகியவைகளை வெளிப்படுத்தும் நாட்டார் பாடல்கள் பல உழவர் களிடையே வழங்குகின்றன. இப்பாடல்களை அறிமுகப்படுத்திக் கிராமப்புற வளர்ச்சிக்கு இவைகளை எம்முறையில் பயன்படுத்தமுடியும் என்பதனை ஆராய்வதே''[21] நோக்கமாகக் கொண்டது. உழவரின் வாழ்வில் தோன்றும் சமூக, பொருளாதார வளர்ச்சி சமூகப் போராட்டங்களால்தான் இயலும். சமூகப் போராட்டம் நடப்பியலை உணர்ந்தால் அன்றி, உணர்த்தினாலன்றி இயலாது. நாட்டார் பாடல் இந்திய கிராமங்களின் அடிப்படைப் பிரச்சினையின் ஆழத்தினைச் சுட்டிக்காட்டிச் செல்கிறது. அதிக வேலை, குறைந்த கூலி, கூலியும் உரிய காலத்தில் கிடைக்கா நிலைமை, இடைத்தரகரின் சுரண்டலுக்கு ஆளாகும் சிறு நிலவுடைமையாளர் நிலை ஆகியவற்றை இக்கட்டுரை விவரிக்கிறது. பாதிக்கப்பட்ட உழவர் தங்கள் எதிரிகளை நோக்கி நேருக்கு நேர் பேச முடியா நிலையில், வேளாண்மையின் பல கட்டங்களிலும், பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளிலும், நல்ல சிங்கத்தேவர் போன்றோரின் தனி மனித

---

21. ஆ. சிவசுப்பிரமணியன், உழவர்களின் நாட்டார் பாடல்கள். செம்மலர் 1982.

வீரதீரச் செயல்களைப்பற்றித் தங்கள் உணர்ச்சியை வெளிப் படுத்துகின்றனர். நாட்டார் பாடல்களின் உருவத்தினை மாற்றாது உள்ளடக்கத்தினை மாற்றுவதன் வழிக் கிராம மக்களிடம் மிக எளிதாகப் புதிய சிந்தனைகளைக் கிளரச் செய்து சமூக மாற்றத்திற்கு வழிகோல முடியுமென்பது கட்டுரையாளர் கருத்து.

வரலாறு தனிமனிதன் பிறப்பு, வளர்ப்பு, இறப்பு, அவனது வெற்றி தோல்விகள் ஆகியவற்றைக் கூறுவதன்று. சமுதாயத் தின் உணர்வுகளை விளக்கிக் காட்டுவது என்ற நோக்கில் வாய் மொழியாக வழங்கிவரும் நாட்டார் வழக்காறு, வரலாற்று ஆவணமாக மாறுவதை "தாது வருடப் பஞ்சமும் நாட்டார் பாடலும்" என்ற கட்டுரை விவரிக்கிறது. தாது வருடப் பஞ்சம் 1876-1877-இல் தமிழகத்தினைப் பெருமளவில் பாதித்ததை பெர்சிமாக்குவின்தொகுப்பிலும், நா.வானமாமலையின் தமிழர் நாட்டுப் பாடல்கள் தொகுப்பிலும் உள்ள தாது வருடப் பஞ்சம் குறித்த பாடல்களின் அடிப்படையில் இக்கட்டுரை அமைந் துள்ளது. இவ்வரலாற்று நிகழ்ச்சியை எந்த வரலாற்று நூலும் குறிப்பிடவில்லை.

**கரகாட்டம்:** மா. நவநீத கிருட்டினன், கே.ஏ. குணசேகரன் ஆகியோரின் கூட்டு முயற்சியில் உருவானது 'கரகாட்டம்' என்ற நூல். கே.ஏ. குணசேகரன் அவ்வாட்டம் ஆடும் கலைஞராகவும் இருப்பதால் 'கரகாட்டம்' அறிவியல் சார்புடைய ஆராய்ச்சி யாக அமைகிறது.

புவிஈர்ப்புத்தான முறையினைப் புரிந்து ஆடப்பயின்றவர் எவரும் கரகாட்டம் ஆடலாம். பக்தியுணர்வு வேண்டியதில்லை. கழுத்துக்கு மேலே அசைவு கொடாமல், தலையிலுள்ள செம்பு கீழே விழுந்து விடாமல், தாளக் கணக்கு மாறிவிடாமல் காலடி வைத்து ஆடவேண்டும்.

கரகாட்டத்தில் வேக நிலைகள் உண்டு. அவை 1. தொடக்க நிலை 2. வேகநிலை 3. அதிவேக நிலை என்பன. தொடக்க நிலையில் நையாண்டி இசை தாள நடை இல்லாமல் சுதி மாறாமல் சமநிலையில் இருக்கும். கரகாட்டக் கலைஞர் கால் களைக் கைகளை அசைத்துச் சமநிலையில் இருப்பார். வேகநிலை யில் தாளச் சுதிக்கும் வாசிக்கும் ஒலி இசைக்கும் வேறுபாடு இராது. கரகாட்டக் கலைஞர் பார்வையாளர்க்குத் தம் திறமையை வெளிப்படுத்துவர். இசைக் கருவி வாசிப்போர் சற்று ஓய்வெடுத்துக் கொண்டாலும் தாளங்கள் அதே கதியில் அதே

வேகத்தில் ஒலித்துக் கொண்டேயிருக்கும். அதிவேக நிலையில் ஆட்டக் கலைஞரும் வாத்தியக் காரரும் சுழலும் பம்பரம் போல் இருப்பர். கரகாட்டத்தில் கோமாளியும் கலந்து கலைஞரை ஆட்டுவிப்பதுபோல நடித்துக் கொண்டிருப்பான். ஆட்டக் கலைஞரின் பாட்டும் கோமாளியின் பாட்டும் எதிர்ப்பாட்டாக அமையும்.

கரகாட்டத்தின் துணைநிலை ஆட்டங்கள் உண்டு. காவடி யாட்டம், மாடுபிடி நடனம், சிலம்பாட்டம், குறவன் குறத்தி ஆட்டம் அல்லது குருவிக்காரன் கூத்து, காமன் எரிப்பு ஆட்டம், மந்தியாட்டம், மயிலாட்டம், கரடியாட்டம், புலியாட்டம், மரக்கால்ஆட்டம், ஆலியாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம் ராஜா ராணி ஆட்டம், கருப்பாயி கூத்து ஆகியவை.

நூலாசிரியர் துணைநிலை ஆட்டங்களையும் விவரித்துள் ளார். மேலும் இசைக் கருவிகள் கரகாட்டக் கலைஞரின் நிலை, கரகாட்டத்தில் இடம்பெறும் நாட்டுப்புறப் பாடல்கள் முதலிய பல செய்திகளையும் நூலாசிரியர் ஆராய்ந்துரைக்கிறார். இங்குக் கூறப்பட்ட ஆட்டங்கள் னைத்துமே தமிழக முழுதும் எந்தெந்த உருவத்தில் இடம்பெற்றுள்ளன, மாற்றமிருப்பின் அதற்குக் காரணம் யாது என்பன போலப் பல வினாக்களுக்கும் விடை காணவேண்டும். நாட்டுப்புறக் கலை ஒன்றும் தனித்தனி நூலாக அமையவேண்டும். அதற்கு ஏற்ற தருணம் இதுவே.

**இசை:** நாட்டுப்புறப் பாடலில் பின்பாட்டு என்ற கட்டுரை குறிப்பிடத் தக்கதாகும். கிழக்கு இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்த நாட்டுப் புறங்களில் பாடப்படும் நாட்டுப் பாடல் களையே எல்லையாகக் கொண்டு இக்கட்டுரை அமைக்கப் பட்டுள்ளது. பின்பாட்டின் பொதுத்தன்மை, பின்பாட்டின் வகை, பின்பாட்டினால் ஏற்படும் பயன்கள் என்ற முப்பகுப்பில் பின்பாட்டினை கே. ஏ. குணசேகரன் ஆய்கிறார்.

கும்மியாட்டத்தில் தன்னன்னனன்னே என்ற இசைக்குறிப்புப் பின்பாட்டும் மாரடிப்பு ஆட்டத்தில் வரிப்பின்பாட்டும் இடம் பெறுவதாகக் கூறுகிறார். "கும்மியுடிப்பது, மாரடிப்பது போன்றவை தாளங்களாக இயைபு கொள்கின்றன', என்கிறார். நாட்டார் பாடல்கள் இசைத்தன்மை வாய்ந்தவை என்பதை இக்கட்டுரை விவரிக்க முனைந்திருக்கிறது.

**கூத்து:** கூத்துப்பற்றி இரு கட்டுரைகள் வெளிவந்துள்ளன. அவை 'சங்கக் கூத்தும் தெருக்கூத்தும்' 'தோல்பாவைக் கூத்து' என்பன ஆகும். 'சங்கக்கூத்தும் தெருக்கூத்தும்' என்ற கட்டுரை

யில் சிலம்பில் காணப்படும் கூத்தச் சாக்கையன் ஆடியகொட்டிச் சேதம் எனப்படும் கூத்துத் தெருக்கூத்து என்றும் இன்றைய கேரளத்தில் சாக்கையர் ஆடும்கூத்துதமிழகத்தெருகூத்தின்மலை யாள வடிவமே என்றும் சிலம்பிற்கு முன்பே தெருக்கூத்து இருந் திருக்கவேண்டும் என்றும் கருத்துத் தெரிவிக்கிறார், அறிவுநம்பி. திடீரென்று வேத்தியல் உருவாகியிருக்க முடியாது. பொதுவிய லில் திருந்திய, மெருகூட்டப்பட்ட வடிவமாகவே வேத்தியல் இருந்திருக்க வேண்டும் என்று கருதுவதில் தவறொன்றுமில்லை.

'தோல்பாவைக் கூத்து' என்ற கட்டுரையில் பொம்ம லாட்டக்கலை நான்கு வகைப்படும் என்கிறார் கட்டுரையாளர். அவ்வகைப்பாடு இயக்குமுறையால் அமைந்துள்ளது. மன்னரின் ஆதரவில் வளர்ந்த இக்கலை ஆங்கிலேயரால் பாதிக்கப்பட்டது. ஆந்திராவில் தோல் பொம்மலாட்டமு என்றும் கேரளாவில்நிழற் காட்சி என்றும் ஒரிசாவில் 'ராவன் சாயா' என்றும் மகாராட்டி ரத்தில் 'சர்ம பகுளி நாட்டியம்' என்றும் வழங்கப்படுவதாகக் கட்டுரையாளர் குறிப்பிடுகிறார்.

## ஆய்வு நூல்

நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல் இவ் வாண்டு வெளிவந்துள்ள ஆய்வு நூல்களில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஆறு - இராமநாதன் தென்னார்க்காடு மாவட் டத்தை ஆய்வு மையமாகக் கொண்டு ஆயிரம் பாடல்கள் வரை தொகுத்து முற்றும் புரிந்து கொள்ள இயலாதவை, திரிபு வடிவ முடையவை ஆகியவை போக, எஞ்சிய எழுநூற்று எண்பத்து நான்கு பாடல்களையும் இதுவரை வேறு மாவட்டங்களில் தொகுக்கப்பட்ட பாடல்களையும் ஆதாரமாகக் கொண்டு இந்த அரிய நூலை ஆக்கி அளித்துள்ளார். ஏ.என்.பெருமாள் அவர் களை ஆய்வு வழிகாட்டியாகக் கொண்டு, நூலாசிரியர் நான் காண்டுகள் இவ்வாய்வினை நிகழ்த்தியுள்ளார்.

காலக்கண்ணாடியாய் இலங்கும் இயல்பு நாட்டார் இலக்கி யங்களுக்கே பெரிதும் பொருந்தும். தமிழக ஊரமைப்பு சாதி யாலும் தொழிலாலும் அமைந்த மக்கட் பிரிவு அவற்றிடையே யுள்ள உறவுகள் குடும்ப அமைப்பு, குடும்ப உறவுகள், பண்பாட்டு நாகரிக நிலைகள், வாழ்க்கைத்தரம், மக்களின் உணர்வுகள் ஆகியவை பற்றி இந்நூல் கூறுகிறது. தமிழ்ச் சமுதாய வரலாறு நாட்டார் இலக்கியங்கள் கலைகள் ஆகியவற்றின் அடிப்படையில் எழுத வேண்டிய தேவை நெருங்கிக் கொண்டிருக்கிறது, அப்போது நாட்டார் வாழ்வியல் குறித்த ஆய்வுநூல்கள் பெரிதும் போற்றப்படும் என நம்பலாம்.

முன்னுரைக்கு ஒரு முன்னுரை என்ற பகுதியில் நூலாசிரியர் மேற்கொண்ட ஆராய்ச்சி நெறிமுறைகளையும் களப்பணி அனுபவங்கள், ஆய்வு தொடர்பாகச் சந்தித்த மக்கள், பாடல் பதிவு செய்த முறை முதலியவற்றை மிக விளக்கமாகத் தந்துள்ளார். நாட்டார் இலக்கியம் கலை பற்றிய ஆய்வினை மேற்கொள்ள விழையும் ஆய்வாளர்க்கு மிகவும் தேவையான குறிப்புக்களாக இவை அமைந்துள்ளன.

நூலாசிரியர் பல அரிய செய்திகளைத் தம் ஆய்வில் கண்டவற்றை ஆங்காங்குக் குறித்துச் செல்கிறார். சான்றாக, தென் மாவட்டங்களில் வில்லுப்பாட்டு, ஒயிற்கும்மி ஆகியவும் வட மாவட்டங்களில் தெருக்கூத்து, கும்மி ஆகியவும் செல்வாக்குடன் விளங்குவதை நுண்ணுணர்வால் அறிந்து வெளிப்படுத்துகின்றார்.

சாதியும் தொழிலும் என்ற பகுதியில் இந்தியாவில் சுமார் மூவாயிரம் சாதிகள் இருப்பதையும் உலகில் வேறு எங்கும் காண முடியா அளவிற்குச் சாதி அமைப்புச் சமுதாயம் இந்தியாவில் நிலவுவதையும் நூலாசிரியர் குறிப்பிடுகிறார். பல சாதியினர் இங்கு ஆய்விற்குட்படுகின்றனர். பார்ப்பனர் வெள்ளாழர், வன்னியர், செட்டியார், இடையர், சாணார், தச்சர், கொல்லர், வண்ணார், குயவர், நாவிதர், ஒட்டர், தொம்பர், குறவர், இருளர், பறையர், சக்கிலியர், செம்படவர், மலையாளி, வேடர், நரிக்குறவர் ஆகிய சாதி சமுதாய அமைப்பினை விளக்குகிறார். "தனிச் சொத்துடைமையோடு சாதி ஏற்றத்தாழ்வுகள் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. உடைமையாளர் தங்கள் வாழ்க்கை வசதிக்காகவே சேரி என்ற அமைப்பினை உருவாக்கியிருக்க வேண்டும் என்பதைத் தமிழகத்தில் காணப்படும் கிராம அமைப்புகள் தெளிவுபடுத்துகின்றன" என்ற கருத்தின் வழி சாதி அமைப்புடைய சமுதாயம் தமிழ்ச் சமுதாயம் என நிறுவுகிறார்.

குடும்பமும் உறவுகளும் குறித்து மிக விரிவாக நாட்டார் பாடல்கள் அடிப்படையில் ஆய்வினை மேற்கொண்டுள்ளார். கூட்டுக் குடும்பங்கள் பெரிதும் பொருளாதாரத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன என்றும் குடியிருக்கப் பெரிய வீடும் பொதுவில் உழைக்க நிலமும் இல்லாத போது கூட்டுக் குடும்பங்கள் இருக்க இயலாது என்றும் குறிப்பிடுகின்றார். ஏட்டிலக்கியத்தில் சான்று கிடைக்காத பல்கணவ மணம் பற்றிய சான்று நாட்டுப்புற இலக்கியத்தில் கிடைக்கிறது. பெண்கள் தொகை குறைவாக இருந்தபோது செல்வாக்குப் பெற்றிருந்த பல்கணவ மணம், பெண்தொகை பெருகிய பின்னர்ச் செல்வாக்கு இழந்துவிட்டது. அண்ணன் குடும்பத்தின் தலைவனென்ற முறையில்

தம்பி மனைவியை அனுபவித்த காலக்கட்டம்; அண்ணன் மனைவியிடம் தம்பிக்கு உரிமை உண்டு என்ற இன்னொரு காலக் கட்டம்; ஒருபெண் பலரை மணந்து கொள்வதா என்ற பிறி தொரு காலக்கட்டம் - இப்படிப் பல்வேறு நிலைமைகளை உணர்ச்சிக்கு இடங்கொடாமல் ஆராய்ந்துரைக்கிறார். பலதார மணம் சமுதாய அங்கீகாரம் பெற்றது. ஆண் ஆதிக்கச்ச முதாயம் இதனை ஏற்றுக்கொண்டது. அருச்சுனனும் கண்ணனும் பலதார மணத்தின் ஆதரவாளராக விளங்குகின்றனர். சோரம் போகும் பெண்கள் கேலிக்கும் வேதனைக்கும் ஆளாகின்றனர். மனை வியை ஐயுறும் கணவன், கணவனை ஐயுறும் மனைவி முதலிய பற்றிய தெளிவான சிந்தனைகளை ஆறு. இராமநாதன் தருகிறார்.

நாட்டுப்புறப் பாடல்களின்வழி மண முறைகளைக் காதல் மணம், ஏற்பாட்டு மணம், கடத்தல் மணம் என மூவகையாகக் கொண்டு பல அரிய கருத்துக்களை விளக்கிச் செல்கிறார். இலக்கியம் கூறும் காதல் நடைமுறையில் கடுமையான தாககு தலகளுக்கு உள்ளாகியது. ஆறேழு வயதிற்குப் பிறகு சிறுவர், சிறுமியர் சேர்ந்து விளையாடுவதைப் பெற்றோர் கண்டிக் கின்றனர். பொருளாதாரச் சமநிலைக் குடும்பங்களைச் சேர்ந்த சிறுவர் சிறுமியர் சேர்ந்து விளையாடுவதற்குப் பெற்றோரே தூண்டுகோலாக அமைகின்றனர்.

பல நாட்டுப்புறப் பாடல்களில் காதல் தோல்விகளே பாடற் பொருண்மையாக அமைந்துள்ளதையும், காதலித்து மணந்து கொண்டதாகக் குறிப்பொன்றும் கிடைக்காததையும் நூலாசிரியர் சுட்டுகின்றார். கோவை இலக்கியங்களும் சங்கப் பாடல்களும் காதலித்து மணந்து கொண்டவரின் அன்புறவினை சித்திரிக்கின்றன. ஏட்டிலக்கியம், நாட்டுப்புற இலக்கியம் இரண்டுமே வெவ்வேறு திசையில் நடைபோடுவதை இதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

கலப்பு மணங்கள் ஒரே இனத்தில் நடைபெறுவதில்லை. எனவே இவை காதல் மணத்தின் ஒரு பிரிவாகக் கொள்ளத் தக்கவை. அந்தணப் பெண் ஆரிய மாலாவை அரிசனன் காத்தவராயன் மணந்து கொண்டதைச் சான்றாகக் கொள்ள லாம்; அதன் விளைவாகக் காத்தவராயன் கழுவேற்றப் பட்டான் மேல்சாதிக்காரர் இத்தகைய திருமணத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. உயர்சாதிப் பெண்ணைத் தாழ்ந்த சாதிக்காரன் காதலிப்பது பாவம் என்ற எண்ணம் சமுதாயத்தில் வேரோடி யிருந்தது. மேல் சாதி, கீழ்ச் சாதி என்பன உடன் நோக்கின்

அடிப்படையில்அமைந்தன. எனினும் பார்ப்பனரும் வேளாளரும் சாதி வர்க்கத்தின் மேல் தட்டில் எப்போதுமே உள்ளனர். அரிசனன் காத்தவராயன் பார்ப்பனப் பெண்ணைக் காதலித்து மணந்து மரண தண்டனைக்கு ஆளானது போலவே சிதம்பர நாடாரும் பாப்பாத்தியைக் காதலித்து மரண தண்டனைக்கு ஆளானார் என்பதை நினைவு கூர வேண்டும்.

ஏற்பாட்டு மணத்தின் துயரவிளைவுகள் மணமக்கள் அதனை எதிர்த்து நடத்தும் ஒத்துழையாமைப் போராட்டம் ஆகியவை களை நாட்டுப்புறப் பாடல்கள் சித்திரிக்கின்றன. பெண்ணின் எண்ணத்திற்கு மாறாகவே குடும்பத் தலைமை ஏற்போர் செயல் பட்டனர். பெண்ணின் உள்ளத்தைஅறிந்து திருமணஏற்பாட்டை யாரும் கவனித்தாகத் தெரியவில்லை. அழகோ, குணமோ வயதோ எதைப் பற்றியும் கவலைப்படாமல் மணவினை நேர்ந் தனர். கிழவனை மணந்து கொண்ட பெண் அவன் இறந்து போனதற்காகத் துயரம் அடைவதில்லை. சமுதாயத்தின் கட்டுப் பாடுகளால் தன் வாழ்க்கை சிறையாவதை எந்தப் பெண்ணும் விரும்பவில்லை. அதனால் பொருந்தா விளைவுகளையும் அவள் விரும்புகிறாள் என்பன சிந்தனைக்கு உரியன.

ஏட்டிலக்கியத்தில் இடம் பெறாச் செய்தி!இளமை மணம்: நாட்டுப்புறப் பாடல்கள் இளமை மணம் இருந்ததற்கும் சான்று களாய் அமைகின்றன. "ஏட்டிலக்கியங்களை மட்டுமே ஆதார மாகக் கொண்டு தமிழ்ச் சமுதாயத்தை அளவிடுவது தவறாக முடியும் என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்"[22] என்று நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். உடைமைச் சமுதாயத் தின் நடைமுறையாலும் ஆணாதிக்கச் சமுதாயத்தாலும் பெண் படும் தொல்லை கொஞ்ச நஞ்சமன்று. பெண் அடிமையாகவே உள்ளாள். "பொருள் உற்பத்தியில் ஈடுபடாமல் எப்போது கணவனைச் சார்ந்து வாழத் தலைப்படுகிறார்களோ அப்போது அவர்கள் தங்கள் சுதந்திரத்தை இழப்பர்"[23] என்ற கருத்து, பொருளீட்டும் நிலையில் பெண் சமநிலை பெறும் வாய்ப்பிருப் பதைத் தெளிவுபடுத்துகிறது.

பண்பாட்டு மானிடவியல் ஆய்விற்குத் துணை செய்யும் சான்றுகள் நாட்டுப்பாடல்களில் கிடைக்கின்றன. இன்றைய

22. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், பக்கம்-84.
23. மேற்படி, பக்கம் 96.

நாகரிக நடைமுறைகள் ஒரு காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டு பின்னால் தவறாக தடைமீறல்களாகக் கணிக்கப்பட்டவை. அண்ணன், தங்கை உடலுறவு அத்தை மாமியார் மருமகன் பாலுறவு, கொழுந்தி—அக்காள் கணவன் பாலுறவு, மாமனார்-மருமகள் பாலுறவு ஆகியவற்றை விளக்கிச் செல்கிறார். உலகியலை நோக்காது நூலியலைமட்டும் நோக்கிச் செல்வார்க்கு இவை அசிங்கமாக இருக்கலாம். பண்பாட்டு மானிடவியலின் மனித நாகரிகத்தின் வளர்ச்சிப்படிகளாக இவை அமைந்துள்ளன.

அவையல் கிளவிகள் பாலுறவுச் சுதந்திரம் நிரம்ப உள்ள சமுதாயத்தில்தான் காணப்படுகின்றன. மேல்சாதிக் காரரிடம் அவையல் கிளவிகள் அவ்வளவாக இடம் பெறவில்லை. கீழ்ச் சாதிக் காரரிடம் அவையல் கிளவிகள் இடம்பெறுகின்றன. என்ற கருத்து, பண்பாட்டின் வளர்ச்சி நிலையைப் பிரதிபலிக் கிறது. நாட்டுப்புற மக்களின் கல்வியறிவிற்கு வாயிலாக அமைவன நாட்டுப்புற இலக்கியங்களும் கலைகளும் ஆகும். சமுதாயமே ஒரு கல்வி நிறுவனமாக இயங்குவதை நாட்டுப்புற மக்களிடையே காணலாம். தனிப்பட்ட பள்ளிகளோ அல்லது வேறு வகையான கல்வி நிறுவனங்களோ அந்த மக்களுக்குத் தேவைப்படாமல் போயின. காளைப்பருவம் எய்திய இளைஞர்க்கும் மணப்பருவம் எய்திய கன்னியர்க்கும் பாலுறவு பற்றிய கல்வியைச் சமுதாயமே போதித்தது. அதனைப் போதிக்க முனைந்தபோது அவற்றில் அமைந்துள்ள அவையல் கிளவியைப் பற்றி அவர்கள் நாணப்பட்டதாகவோ அவமானம் என்று கருதியதாகவோ தெரியவில்லை.[24]

கிராமப்புற நீதிமன்றங்களை ஆய்ந்து சொல்லியிருக்கும் கருத்துக்கள் உளங்கொளத் தக்கவை. உத்தர மேரூர் கல்வெட்டு அந்தணர் வாழும் கிராமப்புற அமைப்பைச் சித்திரிககிறது. வேறு சாதியாரின் ஊர் நிர்வாகம் எப்படியிருந்தது என்பதை அறிந்து கொள்ளப் போதிய சான்றுகள் இல்லா நிலையில் மலைவாழ் மக்களின் சிற்றூர் நிர்வாக முறையினை அறிவது பயனுடையதாகும். கிராம மக்களின் இதய பாவமாக விளங்கு கின்ற நாட்டார் பாடல்களின் துணைகொண்டு தமிழரின் வாழ் வியலை மிகவும் நுட்பமாகவும் திட்பமாகவும் ஆராய்கிறது இந்நூல்.

பொதுவாகவே, பல்கலைக் கழகங்கள் ஆய்வுப் பட்டங்களை வழங்கும் ஆர்வத்தினை ஆய்வு நூல்களை வெளியிடுவதில்

---

24. மேற்படி, பக்கம் 180-181.

காட்டுவதில்லை. நாட்டுப்புற இயல் வளர ஆய்வு நூல்கள் அச்சேறவேண்டும். சரஸ்வதி வேணுகோபாலின் மதுரை மாவட்ட சாதி அடிப்படைத் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களில் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகள், சு. சண்முகசுந்தரத்தின் திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, மு. இராமசாமியின் தமிழகத் தோற்பாவை நிழற் கூத்து, நசீம்தீனின் தேக்கடி மலைப் பழங்குடிகளின் வாழ்வியல் (மன்னான்) ஆகியோரின் ஆய்வேட்டினைப் பல்கலைக்கழகமோ உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனமோ வெளியிடலாம். மேலும் ஆய்வுப் பணியின்போது ஆய்வாளர்கள் தொகுத்த பாடல்களை யும் வெளியிடுவது நலம் விளைக்கும் செயலாகும். இவை உட னடியாக மேற்கொண்டால் நாட்டுப்புற இயல் ஆய்வு கூறியது கூறலாக அமையாமல் புதுவது கிளத்தலாக அமையும்.

சமூக மானிடவியல் அறிஞர் பிரந்தா எ. எப். பெக் அண்ணன்மார் சுவாமி கதைப்பாடல் பற்றிய ஆராய்ச்சி நூலை வெளியிட்டு நாட்டுப்புற இயலுக்கு அணி சேர்த்துள்ளனர். நாட்டுப்புற இயலும் மானிடவியலும் இணைந்த ஒரு சீரிய படைப்பு இருபது ஆண்டுகளுக்குப்பின் அவர் தம் ஆய்வு நூல் உருக் கொண்டுள்ளது. 1960-ஆம் ஆண்டு முதல் ஈராண்டுகள் கோவை மாவட்டத்தில் தங்கியிருந்து தமிழரின் சமூக அமைப் பினை ஆய்ந்த போது, இக் கதைப்பாடல் அவரின் உளத்தை ஈர்த்தது. அதன் விளைவே இந்நூல்.

அண்ணர்மார் சுவாமி கதை கொங்கு மாவட்டக் காரர்க்கு உரியது. "பாடகன் உடுக்கையடித்து இதைப் பாடுவதும் இதைக் கேட்டு மக்கள் நெஞ்சுருகி நிற்பதும் கொங்கு நாட்டில் இன்றும் வழக்கமாக இருந்து வருகிறது. கொங்கு நாட்டு வேளாளரின் பண்பாடு வெள்ளையுள்ளம், உயிரைக் கொடுத்தும் உண்மை யைக் காப்பாற்றும் பண்பு இவை கதை முழுவதும் பின்னிப் பிணைந்து வருகின்றன"[25] என்று இந்நூலின் பதிப்புரையில் சக்திக்கனல் குறிப்பிடுகிறார்.

பிரந்தா ஈ. எப். பெக் சக்திக்கனலின் பதிப்பை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு இவ்வாய்வு நூலை யாத்து விடவில்லை. சக்திக் கனலின் பதிப்போடு இன்னும் பிற நூல்கள், தாமே ஒலிப் பதிவு செய்த நாடாக்கள் ஆகிய எட்டு மூலங்களை (Versions) அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வினைச் செய்துள்ளார்.

---

25. சக்திக்கனல், அண்ணன்மார் சுவாமி கதை, பதிப்புரை.

நாட்டுப் புறப் பாடல்களிலெல்லாம் இரண்டறக் கலந்து, மக்களின் இதய பாவங்களிலெல்லாம் இழைந்து குழைந்து என்றும் வாழ்கின்றவர் இதிகாச மாந்தர். நாட்டுப்புற மக்களுக்கு இலட்சிய மாந்தராகவே அவர்கள் திகழ்ந்தனர் அண்ணன்மார் சுவாமிகளும் அப்படியே. அவர்கள் பிறப்பு தருமரோடும் வீமனோடும் திரௌபதியோடும் தொடர்பு கொண்டது. பொன்னரும் சங்கரும் தங்கமும் முறையே தருமன், வீமன், திரௌபதி ஆகியோரின் மறுபிறப்பு. எனவே, பாரதத்தின் தாக்கம் அண்ணன் மார் சுவாமி கதையில் பல இடங்களில் இருப் பதை நூலாசிரியர் சுட்டிக் காட்டுகிறார். மேலும் உடன் பிறப்பின் ஒற்றுமையைக் காட்டுவன இந்தியத் தொன்மை இலக் கியங்களான மகாபாரதமும் இராமாயணமும் ஆகும். அங் ஙனமே, அண்ணன்மார் சுவாமி கதையிலும் பொன்னர் சங்கர் ஆகியோரின் அன்புணர்வைக் காணலாம். சீதையைப் போன்றும் பாஞ்சாலியைப் போன்றும் தங்காள் விளங்குவதாகக் குறிப்பிடு கிறார். சம்பகா (சாம்பன்)வைச் சுக்ரீவனோடும் அசுவத்தாமா வோடும் ஒப்பீடு செய்கிறார். அரசியல் பூசல் காரணமாக வேளாளர் அணி அணியாகத் திரண்டு வேட்டுவர் வாழ்ந்த பகுதி களைக் கைப்பற்றிக் கொண்டதாகவும், அதனால் வேளாளர்க் கும் வேட்டுவர்க்கும் பகைமை மூண்டதாகவும், அப்பகை முற்றி கி. பி. 1450 ஆம் ஆண்டளவில் பொன்னரும் சங்கரும் போரில் இறந்திருக்கலாம் என்றும் கருதுகிறார்.

வேளாளரும் பிற இனத்தாரும் பொன்னரையும் சங்கரையும் தெய்வமாகக் கருதி வழிபடுகின்றனர். சமயத் தொடர்பான சடங்குகளையும் நடத்துகின்றனர். அப்போது சிலர் மருளுற்று ஆடிச் சாய்கின்றனர். கதைப் பாடகர் அண்ணன்மார் அருள் வேண்டி உருக்கமாகப் பாடுகிறார். கதைப் பாடகரின் உதவி யாளர், மருளுற்றுச் சாய்ந்து கிடக்கின்றவர் மேல் நீர் தெளிக்க உயிர் பெற்று எழுகின்றனர். இதைப் போன்ற ஒரு நிகழ்ச்சியை வீரமலைப் படுகளத்தில் ஆண்டுக்கொரு முறை நடத்துவதையும், பத்துப் பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட சிறுமியர் நீர் தெளித்து உயிர்ப்பிப்பதையும் கூறுகிறார். கன்னியரின் கற்புடைமை அவர்களை உயிர்ப்பிக்கிறது என்பது நம்பிக்கை.

இ.சி. இராமசாமி என்ற பாடகர் தம் நினைவுக் களஞ்சி யத்திலிருந்து இப்பாடலை மக்கள் முன் பாடி, மக்களின் உள்ளங் களைக் கவர்வதாக நூலாசிரியர் கூறுகின்றார். பொதுவாகவே கதைப் பாடகர் மக்களின் ஆர்வத்திற்குத் தக்கவாறு காலத்தைக் கூட்டியும் குறைத்தும் அமைத்துக் கொள்கின்றனர். அவர்களின்

இசை உணர்வும் காட்சிகளைக் கண்முன் நிறுத்தும் நடிப்பாற்றலும் கதைக்கு உயிர்ப்பு ஊட்டுகின்றன. இ.சி.இராமசாமியைக் கண்டு உரையாடி அரிய பல செய்திகளை நூலாசிரியர் தந்துள்ளார்.

சக்திக்கனல் இதுவரை மும்முறை அண்ணன்மார் சுவாமி கதையைப் பதிப்பித்துள்ளார். வாய்மொழி இலக்கியம் அச்சுருவம் பெறும்போது அத்தகைய மாற்றங்களுக்கு உட்படுகிறது என்பதனை நூலாசிரியர் பெக் தெளிவு படுத்துகின்றார். கதை அமைப்பில் வேறுபாடு அல்லது மாற்றம் இல்லை. ஆயினும் வண்ணனைப் பகுதிகள் மாற்றம் பெற்றுள்ளன; நுட்பமான வேறுபாடுகள் இடம் பெற்றுள்ளன. பிரந்தா ஈ. எப். பெக் அவர்களின் நூல் முழுமையும் வாய்மொழி இலக்கியம் அச்சுப் படிகள் ஆகியவற்றின் இடையே காணும் வேறுபாடுகளை ஒப்புக்காட்டிச் செல்கிறது என்றால் அது மிகையாகாது. பாத்திரங்களின் பெயரையும் சக்திக்கனல் மாற்றியுள்ளார். சான்றாக, பெரியநாச்சி என்பதைத் தாமரை என்று மாற்றியுள்ளார்.

கொங்குநாட்டு எல்லா இன மக்களாலும் அண்ணன்மார் சுவாமிகள் தெய்வமாகப் போற்றப் படுகின்றனர். அவர்களின் வரலாறு கதைப் பாட்டாகப் பாடப்படுவது, நாவிதர், உடையார் (குயவர்), குறவர் பண்டாரம் ஆகியவரால் தான். ஆசிரியன்-மாணவன் என்ற முறையில் இப்பாடல் கற்பிக்கப்படுகிறது. இ.சி. இராமசாமி இக்கதைப்பாடலைத்தன் தந்தையிடமிருந்தும், பின்னர் கருப்பண்ணனிடமிருந்தும் பயின்றுள்ளார். ஆடை அணிகலன்கள் புனைந்து ஆடினாலும் எவரும் நாடகம் என்று சொல்வதில்லை. பாட்டென்றே குறிக்கின்றனர்.

சில செய்திகள் தவறாகத் தரப்பட்டுள்ளன. இராமப்பய்யன் அம்மானை மதுரை நாயக்க மன்னனுக்கும் இராமப்பய்யனுக்கும் இடையே நிகழ்ந்த போர் என்றும், இராமப்பய்யன் தமிழனென்றும் மறவர் இனத்தவன் என்றும் கூறுவது விந்தையாக உள்ளது.[26] புராண மரபிற்கு மாறாக, மாயவனின் மனைவி

---

26. Brenda E. F. Beck, The Three Twins. Page 35.
"Its emphasis is on a war between a great Nayak ruler of Madurai city and Rāmappaiyan a local Cheiftain, who controlled much of the agricultural territory surrounding this center. The Nayak was a Brahman and a Telugu speaker, hence an outsider while the local leader was a warlike figure, and a Tamil belonging to the Maravar caste".

சரஸ்வதி என்று பெக் குறிப்பிடுகின்றார்.[27]

பாலெட் (Ballad) என்பதனை விதந்துரைக்கும் தமிழ்ச் சொல் இல்லை என்றும் கதைப்பாட்டும் பாட்டுக் கதையும் இச் சொல்லால் குறிக்கப்படுகின்றன என்றும் பெக் கூறுகின்றார்.[28] பொதுவாக பாலெட் என்பது நடனப்பாட்டினைக் குறிக்கும். ஆனால், தமிழில் உள்ள கதைப் பாடல்கள் நடனத்துடன் பாடப் படுவன அல்ல. எனவே தமிழில் உள்ள கதைப் பாடல்களுக்கு ஒப்பாக இதனைக் கூறுவது பொருந்தாது. ஆயினும் கதைப் பாடல் வகைக்கு நிகராக மேலை மொழிகளில் ஏதாயினும் உண்டா என்பது சிந்தனைக்கு உரியது.

பெக்கின் ஆய்வு நூல் நாட்டார் வாய்மொழிப் பாடல் ஆய்வில் ஒரு மைல் கல். மேலை நாட்டினர் தமிழகத்தின் வாய் மொழி இலக்கியப் பாங்கினை அறிந்து கொள்ள வாயிலாகவும் தமிழக, இந்திய நாட்டார் இலக்கிய ஆய்வாளர்க்கு மேலை நாட்டினரின் கண்ணோட்டத்தைப் புரிந்து கொள்ளவும் இந் நூல் வழி வகுக்கும் என நம்பலாம்.

## பின்னிணைப்பு

**எண்பத்திரண்டில் நாட்டுப்புற இயல்—நூல்— கட்டுரை அடைவு வாய்மொழி இலக்கியம்**

**1. நாட்டார் பாடல்கள்: நூல்கள்**

1. இராமநாதன், ஆறு. நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல் (மணிவாசகர் நூலகம்-சிதம்பரம்) ஏப்ரல்.

2. இராமநாதன், ஆறு. நாட்டுப்புறப் பாடல் வகைகள் (புலமை வெளியீடு—சென்னை) சூன்.

---

27. Brenda E. F. Beck, The Three Twins. Page 49.
"But even in such cases it is customary to mention Saraswati (Wife of Vishnu and patron of the bards) is passing".

28. Brenda E. F. Beck, The Three Twins. Page 3.

## கட்டுரைகள்

(1) இராமலிங்கம், மா. பாரதி பாடல்களில் நாட்டுப்புற இயல், மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழா மலர்—தமிழக அரசு.

(2) சண்முகசுந்தரம், சு. பாரதியாரும் பாமரர் இலக்கிய ஈடுபாடும், ஆய்வுக்கோவை — இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(3) சிவசுப்பிரமணியன், ஆ. உழவர்களின் நாட்டார் பாடல்கள்—செம்மலர் (இதழ்) (ஏப்ரல்).

(4) சிவ சுப்பிரமணியன், ஆ. தாது வருடப் பஞ்சமும் நாட்டார் பாடல்களும் - செம்மலர் (இதழ்) (செப்டம்பர்).

(5) சுமதி, கி. நாட்டுப் புறப்பாடல்களும் சமுதாயச் சிக்கல்களும் ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(6) நடேசன், அ. நாட்டுப்புறச் சிறுவர் பாடல்களின் அமைப்பு, ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைச் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(7) நவநீத கிருட்டிணன், மா. வண்டிக்காரன் பாட்டு, ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(8) புஷ்பா மதன், இல்லாமையும் இழப்பும் - ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(9) பூங்குன்றன், பாமர மக்களும் பாரத மாந்தரும், ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(10) மதிவாணன், பா. நாட்டுப் பாடல்கள் ஒரு கண்ணோட்டம் செம்மலர் (இதழ்) (மே).

(11) மாணிக்கம், நாட்டுப்புற இலக்கியம்-செம்மலர் (இதழ்) (அக்டோபர்).

(12) வளவன், சா உளவியல் நோக்கில் நாட்டுப்புறத் தாலாட்டுக்கள், ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

(13) ஜெயராமன், பூ. நாலாயிரத்தில் நாட்டுப் பாடற் பண்புகள் தினமணி-தீபாவளி தினச்சிறப்பிதழ் (14 நவம்பர்.)

(14) Nirmala Bai, J. The Relationship Existing Between the In-laws as Depicted in the Folk-songs of Kanyakumari District, ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

2. (அ) கதைப்பாடல்கள் : நூல்கள்

1) தங்கத்துரை, சு. (பதிப்பு) சிதம்பரநாடார் கதை. (சி. சுப்பையா நாடார், குமரி மாவட்டம்)

2) Beck, Brenda E.F. The Three Twins (Indiana University Press - Bloomington)

கட்டுரைகள்

1) சத்தியபாமா, ந. கதைப்பாடல்களில் கனவுகள். ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

2) நத்தர் சா, எச். நாட்டுப்புறக்கதைப்பாடல் நம்பிக்கை, ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

3. கதை நூல்கள்

1. சரஸ்வதி ராம்நாத், இந்திய நாடோடிக் கதைகள் முதற் பகுதி, (வானதி பதிப்பகம், சென்னை) நவம்பர்.

2. சரஸ்வதி ராம்நாத், இந்திய நாடோடிக் கதைகள்; இரண்டாம் பகுதி. (வானதி பதிப்பகம், சென்னை) நவம்பர்.

3. சரஸ்வதி ராம்நாத், மலைநாட்டு நாடோடிக் கதைகள் இரண்டாம் பகுதி. (வானதி பதிப்பகம். சென்னை) நவம்பர்.

4. தமிழ்மன்னன், இந்தியக் கதைகள் (பொன்மலர்ப் பதிப்பகம், சென்னை.)

5. நடராசன், அ. லெ. தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள் (ஸ்டார் பிரசுரம், சென்னை)

4. பழமொழி நூல்

வெண்கண்ணன், சாமி. இராணுவப் பழமொழிகளும் மூதுரைகளும் (அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை) அக்டோபர்.

கட்டுரைகள்

1. மதிவாணன், கு. பழமொழிகளில் மருத்துவம் ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

2. வில்லவன், பழமொழிகளில் பண்பாட்டுக் கூறுகள் ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

3. Perumal, V. A. Comparative Study of Tamil and Kannada proverbs, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் 14வது கருத்தரங்கு சிறப்பு மலர், பெங்களூர்.

5. விடுகதை: நூல்

இராமநாதன், ஆறு. காதலர் விடுகதைகள்

(சமுதாயச் சிற்பிகள் வெளியீட்டகம், மஞ்சக் கொல்லை அஞ்சல், புவனகிரி) மே.

கட்டுரை

சீனிவாசன், அரங்க. குருடன் பாறை (தினமணிசுடர்) நவம்பர் 14.

II 1. சமுதாயம்: நம்பிக்கை

1. தனஞ்செயன், ஆ. மீனவர்களின் சிறுதெய்வ வழிபாடும் நம்பிக்கைகளும், ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

2. ரவிச்சந்திரன், வி. பழிதீர்த்த நாகம் மஞ்சரி (இதழ்) ஆகஸ்டு.

3. Santhi, G. Tamil Folk's Superstional Beliefs on Dream, ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

வழிபாடு

கலைவாணன், மங்கையர் கொண்டாடும் மயில் வழிபாடு தமிழரசு (இதழ்) அக்டோபர் 1.

விளையாட்டு

1. அறவாணன், தாயம்மாள், குழிமணலுள் ஒளித்து வைத்து ஆடும் நாட்டுப்புற விளையாட்டு, ஆய்வுக் கோவை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

2. இளந்திரையன், சாலை. சிந்தி மக்களிடையே ஒரு தமிழ் விளையாட்டு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக மணிவிழா மலர்-சென்னை.

III கலை: நூல்

நவநீத கிருட்டினன் மா., குணசேகரன், கே. ஏ. கரகாட்டம் அகரம், சிவகங்கை) ஜனவரி.

கட்டுரை

1. அறிவுநம்பி, அ. சங்கக்கூத்தும் தெருக் கூத்தும் செந்தமிழ்ச்செல்வி. (இதழ்) ஆகஸ்டு.

2. குணசேகரன் கே. ஏ. நாட்டுப்புறப் பாடலில் பின்பாட்டு செம்மலர் (இதழ்) அக்டோபர்.

3. ராமன், கே.ஏ. தோல்பாவைக் கூத்து, தாமரை (இதழ்) பிப்ரவரி.

IV பொது

1. Carlose, S. Folklore Research in Tamil and Kannada, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் 14.வது கருத்தரங்குச் சிறப்பு மலர் பெங்களூர்.

2. Sakthivel, S. Field Folklore, ஆய்வுக்கோவை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்.

# 34. இலக்கியத் திறனாய்வு நூல்கள்

—கே. பகவதி

எண்பத்திரண்டு, பாரதி நூற்றாண்டானமையின் அக்கவிஞரையும் அவர் ஆக்கங்களையும் அடிப்படையாக்கி ஆறு திறனாய்வு நூல்கள் எழுந்தமை குறிப்பிடற்குரியது. 'எழுபதுகளின் கலை, இலக்கியம்' ஆய்வு வரலாற்றில் குறிப்பிடத்தக்க மைல்கல். சங்கஅகப்பாத்திரங்களைஉளவியலடிப்படையிலும், கம்பனைஉத்தியடிப்படையிலும் அணுகுதல் புதுமை. பல் நிலையிலும் திறனாய்வு வளர்ந்துள்ளதைப் பிற நூல்களும் காட்டுகின்றன.

இலக்கியப் பயிற்சி மிக்க புலமையாளராக விளங்கும் ஒருவர். ஓர் இலக்கியப் படைப்பை ஆய்ந்து-அதன் நிறைகுறைகளைத் தேர்ந்து அப்படைப்பினைப் பற்றி வழங்கும் தீர்ப்பே திறனாய்வு என இந் நூற்றாண்டின் தொடக்க காலம் வரை அழைக்கப்பட்டு வந்தது. ஆனால் இன்று இலக்கியங்களைப் பற்றிய நூல்கள் அனைத்துமே பகுப்பாய்வு (analysis) விளக்கம் (interpretation) மதிப்பீடு (evaluation), நலம் பாராட்டல் (appreciation) ஆகிய நோக்கங்களுள் எதனைக் கொண்டிருந்தாலும் திறனாய்வு என அழைக்கப்படுகின்றன என்று, 'இலக்கியத் திறனாய்வு—ஓர் அறிமுகம் என்ற தன் நூல் அறிமுகத்தைத் தொடங்குகின்றார் ஆசிரியர் [1].

இன்றைய நிலையில் இவரது எண்ணம் ஏற்றுக்கொள்ளத் தக்கதே எனினும் இலக்கியத் திறனாய்வு என்பது இதுதான் என்பதற்குரிய வரையறையை எங்கும் காண இயலவில்லை. திறனாய்வு பற்றிய தன்மையே தனித்ததொரு வரையறையைச் சுட்ட இயலாமைக்குக் காரணமாகும். ஏனெனில் ஒரு இலக்கியத்

---

1. இலக்கியத் திறனாய்வு ஓர் அறிமுகம், சி.இ. மறைமலை நீலமலர் வெளியீட்டகம், சென்னை, 1979

தைத் திறனாயப் புகும் அறிஞர் அதனைப் பல்வேறு கோணத்திலும் திறனாய்கின்றனர். எனவே பார்க்கும் பார்வைக்கேற்ப அவை விளக்கம் அளிக்கின்றன. மேலும் ஆய்விற்கும் திறனாய்விற்குமுரிய வேறுபாடும் எண்ணத் தக்கது. திறனாய்வு மட்டுமே திறனாய்வில் இடம் பெற, ஆய்வில் வேறு சில நோக்கங்களும் முழுமை பெறவேண்டும். ஆயின் இரண்டையும் வேறு படுத்தவில்லை என்பதற்குச் சில விளக்கங்களை நோக்கலாம். ஆய்வேட்டை அளிக்கும் போது வெறும் திறனாய்வுப் பார்வையையே ஆய்வு எனஅளித்தல். சு. சண்முக சுந்தரம் திறனாய்வு ஆய்வும் + அபிப்ராயமும் என்று கூறுகின்றார். ஆயின் அவர் தன் கட்டுரையிலேயே இவ்வெண்ணத்தில் முரண்படுகிறார்.[2] "இக் கருத்தரங்கக் கட்டுரைகள் விமர்சனப் பண்பும் ஆய்வுப் பண்பும் கொண்டுவிளங்குகின்றன" என்பது அவர்கூற்று. இவண் அவரது முன்னைய கருத்துப்படி விமர்சனப் பண்பில் ஆய்வுப் பண்பும் இணைந்தது தானே, இவண் ஆய்வுப் பண்பைத் தனியே பிரிக்கக் காரணம்? என்று வினவும் போது விளக்கம் தெளிவுறவில்லை. எனவே ஆய்வு, திறனாய்வு என்பது பற்றிய தெளிவான விளக்கம் வரையறுக்கப்பட வேண்டும் எனத் தெரிகிறது. சான்றாக, சங்க இலக்கியத்தை எடுத்துக் கொள்ளலாம். சங்க இலக்கியப் பாடல்களினுள் நின்று அவற்றின் சிறப்புகள், அவற்றைப் பகுத்தாய்தல், அவற்றைச் சில அணுகு முறைகளில் அணுகல் அதாவது சமுதாயப் பார்வை, உளவியல் பார்வை, அரசியல் பார்வை என, பாடல் விளக்கம், அவற்றின் இலக்கிய நயம், உத்திகள் எனப் பலவற்றையும் விளக்குதலைத் திறனாய்வு எனலாம். ஆயின் ஆய்வு என்று நோக்க பாடல்களின் உள்ளே அல்லாது வெளியிலும் நின்று அதாவது, அப் பாடல்களின் காலம், சூழல், கொள்கைகள், தோற்ற நிலை, தோற்றக் காரணம் போன்ற பலவற்றையும் ஆராய்ந்து தம் முடிவுகளையும் சுட்டுதலைச் சொல்லலாம். ஆய்வு, திறனாய்வு என்ற இரு சொற்களின் வேறுபாட்டுடன் ஆய்வுக்கென்று தனித்த சில நெறிமுறை உள்ளன என்பதும் ஈண்டு எண்ணத் தக்கது. எனினும் ஆய்வுப் போக்கில் சில திறனாய்வு நூல்கள் எழுவதைக் காண, திறனாய்வின் எல்லை விரிவாக்கம் ஆய்வைத் தொட்டு விட முயற்சிப்பதைக் காண முடிகிறது. எனவே ஆய்வு திறனாய்வு இவற்றைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையின் தேவையை இவண் உணரக் கூடுகின்றது.

---

2. எழுபதுகளில் கலை இலக்கியம், காவ்யா வெளியீடு, பெங்களூர், 1982, பக். 140

இது வரைத் தமிழில் வந்துள்ள திறனாய்வு நூல்கள் பல. எண்பத்திரண்டில் வெளிவந்தவற்றுள் 16 நூல்கள் இவண் நோக்கப்படுகின்றன.

**1. அகத்திணை மாந்தர், ஆ. இராமகிருட்டினன் சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை.**

அகத்திணை மாந்தரின் மன உணர்வுகள், மாந்தர், உணர்வு, சூழல் ஆகிய பின்புலங்களின் மாறுபாட்டிற்கேற்ப வேறுபட்டு வெளிப்படும் பாங்கினை உளவியல் நோக்கில் காண்பது இவ்வாய்வு நோக்கம் எனக்கூறும் நூலாசிரியர், ஆய்வின் கருதுகோள்-மூலங்கள், இதுவரையில் அகப்பொருள் தொடர்பாக வந்துள்ள ஆய்வுகள், ஆய்வுப் பகுப்பு, ஆய்வு எல்லை, முறை என மிகச் சிறப்பாக முன்னுரையில் தன்னுடைய திறனாய்வு அமைப்பினைச் சுட்டுகின்றார்.

முன்னுரையைத் தொடர்ந்து இலக்கியத்தில் உளவியல் அணுகு முறைகள் ஒரு பொதுப்பார்வை எனத் தொடக்கம் பெறுகிறது இந்நூல். பொது நிலையில் படைப்பாளி பற்றிய உளவியல், படைப்பில் வரும் பாத்திரங்களின் உளவியல், படைப்பு வெளியீட்டில் படைப்பாளி மேற்கொள்ளும் உளவியல் என்ற நிலையில் இவ்வாய்வு அமைகிறது. அடுத்த பகுதியாக அமைவது 'அகத்திணை மாந்தரின் உளவியல் அணுகு முறைகள்' என்ற கட்டுரை. தோழி, தலைவி, தலைவன், நற்றாய், செவிலி, பரத்தை, வாயில்கள் என ஆறுபகுதிகளாக, கூற்று அடிப்படையில் பிரிக்கப்பட்டு ஆராயப் படுகிறது.

'அகமாந்தர் படைப்பில் கவிஞன் மேற்கொண்ட உளவியல் அணுகு முறைகள்' என்ற அடிப்படையில், அடுத்த கட்டுரை நோக்கப்படுகின்றது. இறுதியில் முடிவுரையும் பின்இணைப்பும் அமைகின்றன. சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்திலும் உள்ள அகத்திணை மாந்தரின் பங்கீடுகள் அனைத்தையும் நோக்கி, உளவியல் அணுகு முறையில் இவற்றை நோக்கும் தன்மை, உளவியல் அணுகு முறையில் பல இலக்கியங்களையும் நோக்கி ஆயும் ஆய்வாளனுக்கும் சிறந்த பயனுடையது.

**2. சிலம்பும் மேகலையும், நாராயண வேலுப்பிள்ளை, அன்பு வெளியீடு, சென்னை.**

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரண்டு காப்பியங்களையும் ஆசிரியர் எடுத்துக் கொண்டாலும், இது வரை கூறி வந்த கருத்துகளைத் தொகுத்துத் தருகின்றாரே தவிர,

திறனாய்வுக் கண்ணோட்டம் எதையும் இவண் காண முடிய வில்லை. முதலில் புலவரையும், அடுத்து கதைச் சுருக்கத்தையும் இறுதியில், காப்பியங்களின் சில சிறப்புகள் எனத் தலைப்பிட்டு விளக்கும் நிலை மட்டுமே அமைகின்றது.

3. திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள், பகுதி 1, எஸ். இராஜு செட்டியார், கம்பன் பதிப்பகம், சென்னை.

திறக்குறள் பற்றிய பதினாறு கட்டுரைகளின் உள்ளடக்கமே இந்நூல். உலகம் உய்ய உழைத்த உத்தமர் என்ற தலைப்பில், திருக்குறளை உலகுக்கு அளித்த திருவள்ளுவர் மாண்பு பேசப்படு கின்றது. நல்ல சமுதாயமும் நல்ல அடிப்படையும் என்ற கட்டுரை திருக்குறள் ஒரு வாழ்க்கை நூலாக எவ்வாறு விளங்குகிறது என் பதைச் சுட்டி, சமுதாய மேம்பாட்டிற்கு அறத்தை எவ்வாறு அடிப்படையாகக் கொண்டார் என்பதனையும் சிறப்பாக ஆராய்கின்றது. அறன் வலியுறுத்துதலின் விளக்கம் என்ற மூன்றாம் பகுதி அறன் பற்றிய வள்ளுவர் கருத்தை விளக்கமாகத் தெளிவுறுத்துகிறது. இல்லமும் இல்லத்தினரும் என்ற தலைப்பில் வாழ்வு பிறக்குமிடமாகிய இல்லமே எல்லாவற்றிற்கும் அடிப் படை என்ற நிலையில் சிறந்தஇல்லமும் இல்லத்தினரும் தோன்ற வள்ளுவர் முயன்றதை எடுத்துக் காட்டி, இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு என்ற மூன்று தலைப்பு களில் அவற்றை விளக்குகின்றார், என்கின்றார். கண்ணோட்டம் அடுத்து இடம் பெறும் கட்டுரை. பரிமேல்அழகரும், மணக் குடவரும் இதுவரைச் சொன்ன பொருளை மறுத்து கண் ணோட்டம் என்ற தலைப்பில் திருவள்ளுவர் அமைத்துள்ள குறட்பாக்களுக்குப் புது விளக்கம் அளிக்கின்றார். பொது நிலை யில் மாந்தர் அனைவருக்கும் வேண்டிய பண்பெனக் கண் ணோட்டத்தை முந்தையோர் காட்ட, இவர், இது அரசனுக் குரியது எனக்கூறி, அதற்கு விளக்கமாக "குற்றம் சாட்டப் பட்டவன் குற்றவாளி தான் என்ற முடிவிற்கு அரசன் வந்த பிறகு, குற்றவாளியின் வயது, அறிவு, அறம், பண்பாடு, குற்றத் திற்குக் காரணம், அதன் விளைவு என்ற இவற்றிற்குத் தக்கபடி தண்டனை விதிக்க வேண்டும். அவ்வாறு விதிக்கும் அறத்திற்கே கண்ணோட்டம் என்பது பெயர்." என எடுத்தியம்புவது ஆசிரியனின் புதுப்பார்வையை எடுத்துக் காட்ட வல்லது. மதிநுட்பமும் நூலறிவும் என்ற கட்டுரை ஆறாவதாக இடம் பெறு கிறது. அடுத்து வெளிறும் மூன்று கருத்துப் பிழைகளும் என்ற கட்டுரையை வைக்கின்றார் நூலாசிரியர். மானமும் தற்கொலை யும் என்ற கட்டுரையில் மாண்பிறந்த மானம், மாண்புடைய மானம் என்று "மானம்" என்பதை இருபிரிவாகப்பிரித்துக்காட்டு

கின்றார். வள்ளுவரும் வாய்மையும் என்ற கட்டுரையில் 'வாய்மை எனப்படுவது யாது எனின், யாதொன்றும் தீமை இலாத சொலல்' என்ற குறளுக்குப் பரிமேலழகரின் பொருள் விளக்கம் மறுக்கப் படுகிறது. "பிறரைப் பற்றிக் கேடு பயக்கும்-தீமை பயக்கும்-செய்திகளைப் பரப்பிக் கொண்டு இருப்பதிலே நாம் அடிக்கடி ஈடுபட்டு வருகிறோம். அவை உண்மையான செய்தி களாக இருக்கலாம். நம்முடைய பகைமை அல்லது பொறாமை காரணமாக நாம் பிறருக்குத் தீமை புரியவே நாம் அவ்வாறு செய்கிறோம். அத்தகைய ஈடுபாட்டால், நாம் உலகிலுள்ள துன்பத்தையும் துயரத்தையும் அதிகப்படுத்துவதோடு, நமது அருமையான காலத்தையும் ஆற்றலையும் பாழாக்கிக் கொள் கிறோம். ஊழ்விதிக்கு மாறாகவும் நடந்து கொள்கிறோம். 'ஆதலால் தீமைபயவாத காரியங்களைப் பற்றி மட்டுமே, மெய் பேசுவதற்கு உங்கள் எல்லா ஆற்றல்களையும் காலத்தையும் செலவிட வேண்டும்' எனத் திருவள்ளுவர் இந்தக் குறளில் கூறு கிறார். நமது வீடு பேற்றிற்குத் தேவையான முத்தூய்மை களிலே ஒன்றான மொழித் தூய்மையினை அடையுமாறு செய் வதே இப்பாடத்தின் நோக்கமாகும்" எனக் கூறும் தன்மை, சிறந்த வாய்மைத் தத்துவமாக விளங்குகிறது. மேலும் "மெய்ப் பொருள் என்ற துறையிலே, மனிதனது அறிவுத்திறனைக் கிளரச் செய்து சிந்திக்கவும் மதிப்பிடவும் சரியாகத் தீர்மானிக்கவும் செய்து, மிகமிக உயர்ந்த வெற்றியைக் காண வேண்டும்" என்பதே அடுத்த குறளின் விளக்கம்எனக்கூறும் ஆசிரியர் மேலும் பொய்ம்மை புரைதீர்ந்த நன்மை பயப்பது என்றுமில்லை என்ற உறுதி காரணமாகவே வாய்மை ஆகும் (பொய்ம்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த நன்மை பயக்கும் எனின்-292) என்று வள்ளுவர் உறுதியாக உரைக்கின்றார். பொய்மை வாய்மையாக என்றும் ஆகாது ஆகமுடியாது என்பதே வள்ளுவர் கருத்தே தவிர, இதுவரைக் கூறிய அனைவர் எண்ணங்களும் தவறுடையதே என்பதை அழகாக எடுத்தியம்புகின்றார். அடுத்து இடம் பெறும் கட்டுரை 'வள்ளுவரும் கடவுள் வாழ்த்தும்' என்ப தாகும். கல்விக்கும் அறிவிற்கும் அறத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பண்பாட்டிற்கும் நெஞ்சிற்கும் இடையே நெருங்கிய தொடர் ஒன்று இருக்கிறது. அவ்வாறு தொடர்பு படுத்திக் காட்டக் கூடிய கருத்துகளைக் குறளினின்றும் எடுத்துக் காட்டுகின்ற ஆசிரியர் எண்ண ஓட்டம் நெஞ்சின் பண்பாட்டு வளர்ச்சியில் இடம் பெறுகிறது. ஊழ்விதி என்ற கட்டுரையைத் தொடர்ந்து அமைவது திருக்குறள் ஓர் ஆன்ம நூல். வள்ளுவரும் மழலைச் சொல்லும் என்ற கட்டுரையை அடுத்து பிரச்னைகள் ஏன் பெருகு கின்றன என்ற கட்டுரை இறுதியில் அமைகிறது. நாட்டு

முன்னேற்றம், முன்னேற்றமின்மை போன்ற சில எண்ணங்கள் இவண் அலசப்படுகின்றன.

திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் என்ற இந்நூல், குறள் பற்றிய பல நூல்களின் தோற்றம் போன்றில்லாது, வள்ளுவரையும் அவரது குறட்பாக்களையும் மனிதனும், மனித சமுதாயமும் உய்ய எவ்வாறு பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதற்குச்சிறந்ததொரு முன் மாதிரி எனலாம்.

4. குறள் காட்டும் உறவுகள், பொற்கோ, தமிழ் நூலகம், சென்னை.

சென்னை வானொலி நிலையத்தார் ஒலிபரப்பிய சிற்றுரைகளின் தொகுப்பாகத் திகழ்வது இந்நூல். 'குறள் காட்டும் உறவுகள்' என்ற தலைப்பில் பகையுறவுகளை மட்டுமே எடுத்து நோக்குகின்றார் என்பதனை இந்நூலினுள் அமையும் ஏழு தலைப்புகளான இகல், பகைமாட்சி, பகைத்திறம் தெரிதல், உட்பகை, பெரியாரைப் பிழையாமை, பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர் என்பன காட்டுகின்றன. இத்தலைப்புகளில் திருவள்ளுவர் கூறும் குறட்பாக்களைக் கொண்டு சிறந்த விளக்கங்களை நூலாசிரியர் தரும்விதம் சிறப்புடையது.

5. கம்பன் இலக்கிய உத்திகள், ச.வே. சுப்பிரமணியன், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, (சென்னை).

சிறந்த ஆய்வுக் கண்ணோட்டத்துடன் கம்பனின் இலக்கியத்தையும், அதனுள் பயிலும் உத்திகளையும்விளக்கிச்செல்கின்றார் நூலாசிரியர். இலக்கியம் பற்றிய கம்பன் கோட்பாடுகள் அவனது காப்பியத்தில் எவ்வாறு தெளிவுறுகின்றன என்பதை முதலில் விளக்கும் ஆசிரியர், பின்னர் உத்திகள் பற்றி பொதுநிலை ஆய்வொன்றைத் தருகின்றார். உத்திகள் பற்றி ஆய்வு செய்யும் ஆய்வாளர்க்குப் பெருந்துணையாகும் வண்ணம் இக்கருத்துகள் அமைகின்றன. கம்பன் இலக்கிய உத்திகளை நூலாசிரியர் ஐம்பிரிவாகப் பிரித்து நோக்குகின்றார்: 1. யாப்பு உத்திகள் 2. மொழி நடை உத்திகள் 3. அணி உத்திகள் 4. காப்பிய அமைப்புத்திகள் 5. பொருள் உத்திகள், என்பன அவை.

"பன்முக நோக்கு நிலையிலும், பல்வகைப் போக்கு நிலையிலும் உத்திப் பயிற்சி அமைகின்றது" எனக்கூறும் ஆசிரியர் கருத்து—கம்பராமாயணத்தின் பெருமைக்கு மேலும் பெருமை

சேர்க்ின்றது. "மரபுத்திகள் பலவற்றை இக்கவிஞன் பின்பற்றிப் பயன் கொண்டான் என்றாலும் அத்துடன் நின்றுவிடாது, அவற்றுள் பலவற்றைப் புதுக்கிக் கையாண்டு புதுமை செய்தும், பல நவமான உத்திகளைப் படைத்து ஆட்கொண்டும் தனக்கென ஒரு தனி நிலை வகுக்கின்றான்" எனவும் காண்கின்றோம். இவ்வைந்து வகை உத்திகளும் எவ்வாறு கம்பன் பாடல்களில் அமைந்து பாடலுக்குச் சிறப்பளிக்கின்றன என்பதைப் பின்னர் ஒவ்வொன்றாக ஆசிரியர் எடுத்தியம்புகின்ற திறம் போற்றற் குரியது. கம்பன் கவிதையின் ஒவ்வொரு கூறும் எவ்வாறு கம்பன் பெருமையைச் சாற்றுகின்றன என்பதற்குக் கம்பன் பயன் படுத்திய உத்திகள் சான்று பகரும் தன்மையை இவண் காண லாம்.

6. கம்பராமாயணத் தோற்றம் — ஓர் ஆராய்ச்சி, கு. திருமேனி, கோவல நிலையம், திருச்சி.

கம்பராமாயணத் தோற்றம் என்ற இந்நூலில் ஆசிரியர் பல கட்டுரைகளின் வழி நின்றும், இராமன் தமிழ்நாட்டு மன்னன்; கம்பர் வான்மீகத்திலிருந்து கதை பெறவில்லை என்ற கருத்தை யுணர்த்த விழைகின்றார்.

கம்பர் கவிபாடியபோது தமிழகத்தின் சூழ்நிலை, கம்பர் நன்றி கொன்றவரில்லை, தமிழில் கம்பருக்கு முன்பு காணப்பட்ட பல இராமாயணங்கள், இராமன் குலம், இராமன் தாய்மொழி, கம்பரும் ஆரியரும், புராணங்களில் காணப்படும் இராமாயணச் செய்திகள், ஸ்ரீமகாபாரதம் தரும் இராமாயணம், இராமகாதை கூறும் இராமாயணங்கள், சங்க இலக்கியம் வழங்கிய இராமா யணச் செய்திகள் என கம்ப ராமாயணத்தின் வெளி நின்று அது தொடர்பாகப் பல செய்திகளையும் ஆய்கின்றார் ஆசிரியர். பலர் அறிந்திராத பல செய்திகளைச் சுட்டும்போது, மேலும் இக் கருத்துகள் தொடர்பான சிந்தனைகளை வளர்க்க இவை துணை புரிகின்றன. இராமன் சோழர் குல மன்னவனே என்பதில் தெளிவாக இருக்கின்றார் ஆசிரியர். தமிழில் பல இராமாயணங் கள் இருந்துள்ளன என்பதைப் பல இலக்கிய நூல்கள், தவிர இலக்கண மேற்கோள்களினின்றும் எடுத்துக் காட்டுவது சிறப் புடன் அமைகிறது. இதனைக்கொண்டு, கம்பர் பாடியது வான்மீகியைப் பின்பற்றி அன்று; வான்மீகிக்கு முன்னர் தமிழில் அமைந்து கிடந்த இராமாயண நிகழ்ச்சிகளைக்கொண்டே என்ற முடிவுக்கு நூலாசிரியர் வருகின்றார். பொதுவாக, கம்பர், கம்ப ராமாயணம் பற்றியதொரு புதுவிதமான சிந்தனையுடன், மேலும் பல செய்திகளையும் உள்ளடக்கி இந்நூல் திகழ்கின்றது.

7. கம்பர் காட்டும் கார்காலம், முத்து எத்திராசன், சேகர் பதிப்பகம், சென்னை.

கம்பராமாயணத்தில் கார்காலப் படலம் அமைத்து கம்பர் விளக்கிய நிகழ்ச்சிகளை நோக்குகின்றது இந்நூல். மழைத்த வானம், கருமேகங்கள், மின்னல் காட்சி, கடவுள் உவமை, முல்லை ஒழுக்கம். பிரிவாற்றாமை, கார்கால நிகழ்ச்சிகள், வாடுவன மகிழ்வன, இராமன் வருந்துதல், பிற்பெயல் மாரி, திணை மயக்கம், மழைக்காலம் முடிவடைதல், உயிரினங்களில் மாறுதல் என தலைப்புகளிட்டு கம்பன் கவிதைகளை விளக்கி நிற்கின்றார் ஆசிரியர். கம்பனது இக்கவிதைகளிலும், பிற கவிதைகளினின்றும் தெரிய வருவது போன்று சமுதாய நிலை, மக்கள் பழக்க வழக்கங்கள், அறிவியல் நிலை போன்றன தெரிய வருதலையும் இவண் உணர்கின்றோம்.

8. கந்த புராணக் கதைகளும் அவைகள் உணர்த்தும் உண்மை நூற்கருத்தும், க. சோமசுந்தரப் புலவர், சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம்.

கடவுள், உயிர்க்கு உண்மைநூற் கருத்துகளை எளிதாக உணர்த்தும் நோக்கமாக நடத்துவதே திருவிளையாடல் எனக் கருதும் ஆசிரியர், திருவிளையாடல்களைத் தொகுத்தும் விரித்தும் கூறும் நூல்களே புராணங்கள் என்றும், செம்பொருள், குறிப்புப் பொருள் என்ற இரண்டு பொருட்களையும் அவை உணர்த்துவன என்பதையும் கூறுகின்றார்.

செம்பொருள் என்பது கதையை யுணர்த்துவது; குறிப்புப் பொருள் என்பது கதையிற் கிடக்கும் உண்மை நூற் கருத்து உணர்த்துவது. இவண், கந்த புராணக் கதைகள் வழி மெய் யுணர்வுக் கருத்துகள் பலவற்றையும் ஆசிரியர் எடுத்தியம்புகின்றார். சமயம் பற்றி ஆய்வு செய்யும் ஆய்வாளர்க்கு இந் நூல் பயன்படலாம்.

9. மிருச்சகடிகம் எனும் 'மண்ணியல் சிறு தேர்'—திறனாய்வு,

அரு. சோமசுந்தரன், பொன் முடிப் பதிப்பகம், காரைக்குடி.

மண்ணியல் சிறு தேர் என்ற மொழி பெயர்ப்பு நூலினைத் திறனாய்வு செய்கின்றார் ஆசிரியர். கதைச் சுருக்கத்தை முதலில் தந்துவிட்டு அடுத்து பாத்திரங்கள் பற்றி ஆய்கின்றார். அவர்களின் பண்பு நலன்களை எடுத்தியம்புகின்றார். இறுதியில் மிருச்சகடிகம் என்ற நூலுக்கு 'மண்ணியல் சிறு தேர்' என்று பெயரிட்ட மொழி பெயர்ப்பாசிரியரின் கவிதையுணர்வையும்,

பிற கவி நயங்களையும் விளக்கிச் செல்கின்றது நூல். இந் நாடக நூல் எவ்வாறு தமிழில் தலை சிறந்த காப்பியமாம் சிலப்பதிகாரத்துடன் ஒத்துள்ளது என்பதற்கும் சில எண்ணங்களைத் தந்து அமைகின்றார் நூலாசிரியர்.

10. பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள். ச. வே. சுப்பிரமணியன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

பாரதியின் வாழ்க்கைக் கொள்கைகளை ஆய்வு செய்து, சிறந்த முறையில் வகைப்படுத்தித் தருகின்றது இவ்வாய்வு. வாழ்க்கை, கொள்கைகள் இவற்றை விளக்கும்போது, 'இது இத்தகையது' என இயல்பு கூறலாகவும், 'இது இப்படி யிப்படியெல்லாம் இருக்க வேண்டும்' எனக் குணங்கள் வகுத்தலாகவும் கொள்கை அமைகிறது' எனக் கொள்கைக்கு நூலாசிரியர் கொடுக்கும் விளக்கம், கொள்கை பற்றிய சிறந்ததொரு விளக்கத்தை அளிக்கின்றது. வாழ்வியலைப் பற்றிய இருவிதமான அணுகு முறைகளைப் பாரதியிடம் காணலாம் எனக் கூறும் ஆசிரியர், ஒன்று நிலவும் வாழ்வைக் கூறுதல், இன்னொன்று விரும்பிய வாழ்வை வெளிப்படுத்துதல் என அவற்றைப் பகுத்துக் காட்டுகின்றார். தம் கொள்கைகளைப் படப்பிடிப்புகளாகச் சொல்லிச் செல்லாமல், இடித்துரையும் அறிவுரையுமாயும், வாயுறையும் செவியறிவுறூஉவுமாகவும் அமைக்கின்ற திறம் இவண் ஆராயப்படுகின்றது. இவர் கையாளும் உத்தி முறைகளும் இங்கு நோக்கப் படுகின்றன.

நூலாசிரியர், இந்நூலை, பாரதியார் — வாழ்க்கை — கொள்கை — வாழ்க்கைக் கொள்கை — பாரதியாரும் வாழ்க்கைக் கொள்கைகளும் — மனித வாழ்வியம் — அடிப்படை வாழ்வு — வாழ் நெறி — தினசரி வாழ்க்கை — நூறாண்டு வாழ்க்கை — சாவாமை — வாழ்வோர் — குழந்தை — இளைஞர் — முதியவர் — பெண் — கவிஞன் — சமுதாயவியம் — கல்வி — தொழில் — குடும்பம் — காதல் — நாடு — விடுதலை — உலகியம் — உடல் உள்ளம் உயிர் எனப் பாகுபடுத்தி நோக்குகின்றமை சிறந்த திறனாய்வுப் பார்வையைத் தருவதுடன், பாரதியின் கொள்கைகளைத் தனித்தனியே பெறவும் வாய்ப்பு அளிக்கிறது. பாரதியின் பாடல்களைக் கொண்டு மட்டுமல்லாமல், அவரது உரைநடை ஏடுகளையும் பயன்கொண்டு அவரது கொள்கைகளை, அவரது ஒவ்வொரு எழுத்தும் பிரதிபலிக்கும் நிலையை ஆசிரியர் சிறப்புற எடுத்தியம்புகின்றார். மனித சமுதாயம் விழிப்புணர்வு பெற்று நாடு முன்னேற வேண்

டும் என்று விரும்பிய மகாகவியின் நோக்கம் இங்கு தெளிவு பெறுகிறது.

11. பாரதி போற்றுவோம், பண்ணன், திருமலைப் பதிப்பகம், சென்னை.

பாரதி பாடல்கள் வரலாற்று நூலாகத் திகழும் தன்மையைக் காட்டுகின்றார் நூலாசிரியர். "இந்த நாடும், நாட்டு மக்களும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்த நிலைமைகளை இலக்கியச் சுவையுடன் தெரிந்து கொள்ள எந்த வரலாற்று நூலையும் தேடிப் போக வேண்டாம்" பாரதியின் பாடல்களே போதும் என உணர்த்தும் நூலாசிரியர், சமுதாய மலர்ச்சி காண விழைவார் ஏற்றுக் கொள்ளத் தக்க அனைத்தையும் பாரதி எழுத்தில் காணலாம் என்கின்றார். கடமையுணர்த்திய பாரதியைக் காட்டுவதுடன், அவன் இடும் கட்டளைகளையும் கடைப்பிடிக்கத் தூண்டுகின்றார் ஆசிரியர். அரசியல் விடுதலை மட்டுமல்லாது பிற பல துறைகளிலும் விடுதலை பெற வேண்டும் என்று அவர் விரும்பிய நிலை இங்கு விளக்கப்படுகிறது. பெண்மையின் சிறப்பும் இவண் ஆராயப் படுகிறது. இறுதியில் பாரதியின் மனஉணர்வுகளை எடுத்தியம்பும் கவிதைத் திறனும் விமர்சிக்கப்படுகிறது.

12. தேசியக்கவி, பி. எல். ராஜேந்திரன், வசந்தா பிரசுரம், சென்னை.

பாரதியின் பாடல்கள் வழிநின்று பாரதியார் வாழ்வியலைத் திறனாயும் நிலையை இந்நூலில் காண்கின்றோம். தமிழகக் கவி தேசியக் கவியாகத் திகழ்ந்ததை அவன் பாடல் மூலம் எடுத்துக் காட்டுகின்றார் நூலாசிரியர். தேசியக் கவியின் இளமைக்கால நிலை, அவன் மன உணர்வுகள், வாழ்க்கைத் திருப்பங்கள் போன்ற பலவும் எடுத்தியம்பப்படுகின்றன. தன்னுடைய எழுத்தும், பேச்சும், மூச்சும், வாழ்வும் எல்லாம் தேசத்திற்காக என்ற வகையில், தனது வாழ்நாளின் ஒவ்வொரு நிமிடத்தையும் கழித்து வந்த அந்த மகாகவியால் கவிதைப் பயிர் விளைவிக்கத் தான் முடிந்ததே தவிர, வறுமைக் களையை அகற்றுதல் இயலாததாயிற்று என்பதையும் அவரது எழுத்துகள் மூலமாகக் காட்டுகின்றார் ஆசிரியர் அவரது கவிதைகளில் அவர் பெண்ணின் பெருமை பேசும் நிலை மிகச்சிறப்புடையது எனக் காட்டி ஆசிரியர் இறுதியில் அவரது நூற்றாண்டு விழாவின் சில நிகழ்ச்சிகளையும் இயம்புகின்றார்.

13. பார்புகழ் பாரதி, ய. லட்சுமி நாராயணன், தமிழரசி, பதிப்பகம் சென்னை.

பாரதி பாடல் வழி பாரதியைத் திறனாய்வு செய்யும் இன்னொரு நூல் இது. தான் வாழ்ந்த சுற்றுப்புறச் சூழ் நிலையை அணு அணுவாகக் கண்டு, அவற்றைத் திருத்த பாடல்களின் வழிக் கருத்துகளை வீசிய திறம் இவண் தெளி வுறுத்தப் படுகின்றது. பாரதி, யாருக்கெல்லாம் பாடினா னோ, எதைக் கண்டெல்லாம் பாடினானோ, அனைத்தையும் ஆசிரியர் சிறப்புற விளக்குகின்றார். ‘பாரதி தேசிய கவி மட்டுமில்லை, புரட்சிக்கவி மட்டுமில்லை; பகுத்தறியும் பாவலன் மட்டுமில்லை; புத்தறிவுப் புனிதன் மட்டுமில்லை; பராசக்தி புகழ் பாடும் பக்திக் கவிஞனும் தான்’ எனக் கூறி ‘சக்தியைப்’ பற்றி விளக்குவது சிறப்பாகவும் அமைகிறது. பாரதியின் தெய்வப் பாடல்களுடன், இறுதியில் ஆசிரியர், கண்ணன் பாடல், குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகியவற்றையும், அவற்றின் சிறப்பு பற்றியும் திறனாய்கின்றார். பாரதியின் பெருமை இவண் சிறப் புடன் எடுத்தியம்பப்படுவதைக் காண்கின்றோம்.

14. பாரதி நூல்கள் - ஒரு திறனாய்வு, பெ. தூரன், வானதி பதிப்பகம், சென்னை.

பாரதியார் உரைநடை, வசனகவிதை, தேசபக்திப்பாடல்கள், தோத்திரப் பாடல்கள், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, ஞான ரதம், பாஞ்சாலி சபதம் எனப் பாரதியாரின் எழுத்துகளை நோக்குகின்றார் ஆசிரியர். எளிமையிலும் வலிமை வாய்ந்த உணர்ச்சிகளை ஊட்ட முடியும் என்பதற்கு எடுத்துக் காட்டாக இருப்பவர் பாரதியார். இத்தகைய நிலையில் இவரது பலதரப் பட்ட சிந்தனைகளையும் பற்றி ஆயும் தரம் சிறப்புடையது.

15. பல்கலை நோக்கில் பாரதி, ம.வி. சுதாகர் (தொகுப்பு), பூரம் பப்ளிகேஷன்ஸ் சென்னை.

பாரதியின் பெருமையைப் பல கோணங்களில் நின்றும் படம் பிடித்துக் காட்டும் தொகுப்பு நூல் இது. பேராசிரியர் பலரின் சிறப்பு மிக்க கட்டுரைகளைத் தாங்கும் தனி நூல் இது. இந் நூலினுள் உள்ள கட்டுரைகள், பாரதியைப் பொது நிலையில் பார்க்கும் நிலையும், அவனது தனிப்பட்ட பாடல்களைத் திற னாய்வு செய்யும் நிலையும், கொண்டன. பாரதியின் தமிழ்ப் பற்று, புரட்சி, சமத்துவ நெறி, சொல்லாட்சி, சாதியும் சமுதாய மும். மனம் போன்ற தலைப்புகள் பாரதியின் பல்வேறு எண்ண ஓட்டங்களையும் விளக்கி நிற்பன. புதுவையில் பாரதி போன்ற

பல தலைப்புகள் பாரதியின் வாழ்க்கைநிலையை எடுத்துக்காட்டு வன. குயில்பாட்டு, கண்ணன் பாட்டு போன்றன அவனது கவிதைச் சுவையைப் பிழிந்து தருவன.

பாரதியில் என்னைக் கவர்ந்த உணர்வுகள் என்ற தலைப்பில் கட்டுரையாசிரியர், தன்னைக் கவர்ந்த சில எண்ணங்களைச் சிறப்பாக எழுதிச் செல்கின்றார். பாப்பாவுக்கு பாரதி சொல்லிச் சென்ற எண்ணங்களும் ஆயப்படுகின்றன. மாதர் சிறப்புக்காக பாரதி எண்ணிய எண்ணங்களும் இவண் கவிதையில் அலசப்படு கின்றன. பாரதியார் ஒரு முழுப் பார்வை என்ற கட்டுரை, பாரதி சமுதாயக் கவிஞனாக, பெண்ணுரிமைக் கவிஞனாக, பொருளாதாரக் கவிஞனாக, வரலாற்றுக் கவிஞனாக, நாட்டுக் கவிஞனாக, நீதிக் கவிஞனாக, புதுமைக் கவிஞனாக, இயற்கைக் கவிஞனாக, இசைக் கவிஞனாக, மக்கள் கவிஞனாக, உணர்ச்சிக் கவிஞனாக, முன்னோக்குக் கவிஞனாக, சீர்திருத்தக் கவிஞனாக பொதுமைக் கவிஞனாக, தமிழ்க் கவிஞனாக, உலகக் கவிஞனாக விளங்கிய ஒவ்வொரு நிலையையும் எடுத்துக் காட்டுகின்றது.

16. எழுபதுகளில் கலை இலக்கியம், காவ்ய வெளியீடு, பெங்களூர்.

எழுபதுகளில் கலை இலக்கியம் பற்றிய திறனாய்வு செய்யும் இந் நூலுள் ஏழு பகுதிகள் உள்ளன. தமிழ்ச் சிறுகதைகள், தமிழ் நாவல்கள், தமிழ்க் கவிதைகள், தமிழ் விமர்சனங்கள், தமிழ் சினிமாக்கள், தமிழ்ப்பத்திரிகைகள், தமிழில் பிற துறைகள் என இவை அமைகின்றன.

தமிழ்ச் சிறுகதைகள் பற்றிய மூவரின் பார்வை இங்கு இடம் பிடிக்கிறது. சிறு கதை பற்றிய பொதுவான எண்ணத்தில் ஆரம் பித்து, ஆங்கிலக் கல்வி, அதன் பயனாய் நமக்குக் கிட்டிய மேலை நாட்டு இலக்கிய வளம், ஒரு தத்துவ நோக்கு, புதிய பரிணாமம், புதிய போக்கை உருவாக்கியிருப்பதை யாரும் மறுக்க முடியாது எனக்கூறும் சிவசங்கரி, வீழ்ச்சியும் கலந்து இருப்பதைத் தெளிவுபடுத்துகிறார். சில வித்தியாசமான கதை கள் என இறுதியில் சுட்டிச் செல்லும் இவர், தொடக்கத்தில் வளர்ச்சியும் இறுதியில் வீழ்ச்சியையும் உடையனவாகத் திகழும் தன்மையையும் காட்டுகின்றார்.

தமிழ்ச் சிறுகதையை உலகச் சிறுகதைகளின் தரத்திற்கு உயர்த்திய புதுமைப்பித்தனின் சிறப்புக் கூறிய சா. கந்தசாமி 1960—களில் எழுத ஆரம்பித்துச் சிறப்புற்றோர் என ஜெய காந்தன், சுந்தர ராமசாமியைக் குறிப்பிடுகின்றார். 70—களில்

தன்னை ஸ்தாபித்துக் கொண்ட எழுத்தாளராக வண்ணநிலவன், வண்ணதாசன், பூமணி நாஞ்சில் நாடன், ஆ. மாதவன் போன்றோரைக் குறிப்பிடுகின்றார். அசோகமித்திரன், சார்வாகன், ந. முத்துசாமி, சா. கந்தசாமி, வண்ணநிலவன் போன்ற சிலரைப் பற்றிப் பேசும் நிலையைப் பிரபஞ்சன் கட்டுரையில் காண்கின்றோம்.

தமிழ்நாவல், 'ஞானியால்' விமர்சிக்கப்படுகிறது. ஜெயகாந்தன், தி. ஜானகிராமன், அசோகமித்திரன், வண்ணநிலவன் இந்திரா பார்த்தசாரதி இவர்கள் தான் எனக்குரிய தேவையான நாவல் ஆசிரியர்கள் எனக் கருதும் ஞானி பிற பல நாவல் ஆசியர்களை நேரிடையாகவே தாக்கி எழுதும் நிலை அமைகின்றது. எந்த விதத்தில் அவை குறைபாடுடையன என்பதையும் விளக்கும் தன்மையைக் காண்கிறோம். பிரச்சினைகள், அவற்றிற்குரிய தீர்வுகள் தேவையான தீவிரத்துடன் இந் நாவல்களில் இடம் பெறவில்லை என்பது இவர் கருத்து. சமூக ஆய்வின்மையே இதற்குரிய காரணமாகும் என்கின்றார் இவர்.

எழுபதுகளில் தமிழ்க்கவிதை, 'எஸ். ஆல்பர்ட்'டால் நோக்கப்படுகிறது. புதுக் கவிதைகளைப் பற்றி எழுதும் எஸ். ஆல்பர்ட்டின் எழுத்தும் புதுக்கவிதை போன்றே இருக்கிறது. எழுத்தை எளிமைப்படுத்தியிருக்கலாம். 'ஒரு வண்ணமற்ற, அணிகளற்ற, விஞ்ஞானத் தெளிவுடைய, குரலை உயர்த்தாத, கிளாசிக்கல் (Classical) நடையில் கண்ட புறவுலக யதார்த்தத்தைக் கூட்டாமல், குறைக்காமல், உள்ளது உள்ளபடியே படிமங்களை வரையறுத்து அப்ஜெக்டிவ் ஆக பதிவு செய்கிறதே எழுபதுகளில் கவிதையில் நடந்த பொருள் மிக்க ஒரு சாதனை' என்று கூறும் இவர் பல கவிதைகளை விளக்குகின்றார். எழுபதுகளில் எழுதப்பட்ட குறுங்காவியங்களும் இவரது எழுத்தில் இடம் பெறுகின்றன. இறுதியில், 'திருப்தி தரும் போக்குகள், நிஜத்தின் தேடல்கள், புரிதல்கள் காணக் கிடைக்கின்றன. எழுபதுகளில் வெளியான கவிதைகளில் தயங்கித் தயங்கி எழுதிக் கொண்டிருப்பதுபோல் படுகிறது. ஒரு தொகுதி தயாரித்தால், பக்கங்கள் குறைவானதாயிருக்கும்; தரமானதாயிருக்கும்' என்று முடித்தல் சிறப்புடையது.

எழுபதுகளில் தமிழ் விமர்சனம் பற்றி மூவர் கட்டுரை இவண் இடம்பெறுகிறது. வெ சாமிநாதனின் விமர்சனத்தைக் குறிப்பிட்டுச்சுட்டும் கட்டுரையாசிரியர் அமிஷன் குமார் சிறுபத்திரிகைகளில் எழுபதுகளில் நிறைய விமர்சனம் வந்துள்ளன; சில சமயங்களில் விமர்சனங்கள் சமூக இலக்கியப் பிரக்ஞையுடன் நடந்திருக்

கின்றன என்கின்றார். விமர்சனம் இலக்கியத்தினின் உள் நிலையிலிருந்து, தனிநபர் தாக்குதலாய் எவ்வாறு மாறியது என்பதை எடுத்துக்காட்டும் நிலையில், விமர்சனம் இலக்கிய நிலையில் அமையவேண்டுமே தவிர, தனிநபர், நட்பு, பகை போன்றன அடிப்படையில் அமையக் கூடாது என்ற தனது மனத் தொனியைச் சுட்டுகின்ற திறம் தெரிகிறது. மார்க்ஸிஸ விமர்சனங்கள் பற்றி நிறைய எழுதும் இவர், 'மார்க்ஸியஸ என்பது செயல் முறைக்கோட்பாடு—மார்க்ஸிஸ்ட் செயல் புரியத்தான் துடிப்பான். கவிதை கதை முதலியன சமுதாயத்தை மாற்ற முடியாது என்பது அவனுக்குத் தெரியாததாக இருக்கமுடியாது' எனக்கூறும் இவரின் நோக்கில் தங்களுக்குள்ளாக எழுதிக் கொண்டு இருப்பதைவிட, செயல்தான் தங்கள் கருத்தை அனைவருக்கும் தெரிவிக்கவல்லது என்ற எண்ணம் வெளிப்படுகின்றது. எனவே, துணிச்சலுடன், ஒரு படைப்பைப் பற்றி ஆக்க பூர்வமான திறனாய்வு, அத்திறனாய்வினை மிகவும் மேம்படுத்தி விடுகின்றது. சமுதாய மாற்றத்தை அதன்மூலம் எளிதில் பெற முடியும் என்கின்ற கொள்கையை இவண் காண்கின்றோம்.

ராஜ்கௌதமன், விமர்சனங்களில் தத்துவங்களையும், கோட்பாட்டையும் பற்றிய லேசான பயணம் நன்று ஆரம்பித்துள்ளது என்னும்போதே திறனாய்வின் எல்லை விரிவாக்கம் தொடங்கிய நிலை தெளிவாகிறது. 'இலக்கியத்தை விளங்கிக் கொள்வதில், இலக்கிய உத்தி, உருவம், படிமம் என்று இலக்கியத்துக்குள்ளேயே வலம் வருவதைக் காட்டிலும், ஏனைய அறிவுத் துறைகளான நாட்டுப் புறவியல், சமூகவியல், அரசியல் பொருளாதாரம், உளவியல் போன்றவை இன்றியமையாதவையாகப் பொதுவுடைமைச் சிந்தனையாளரால் எடுத்துக் கூறப்பட்டது. இவ்வித பிறதுறை அறிவுத்தேவை இலக்கிய விமர்சனத்துக்கு ஏற்பட்டது முக்கிய வளர்ச்சி' என்று கூறும்நிலை, இலக்கியத்தைப் புதுப்பார்வையுடன் பார்க்கத் தொடங்கிய திறனாய்வின், 'எழுபதில்' ஏற்பட்ட புது எல்லையைக் காட்டவல்லது. எனவே இருநிலையில் 'எழுபதில்' விமர்சனம் நிகழ்ந்ததைக் காணக் கூடுகிறது. மார்க்ஸியம் சார்ந்த இலக்கியச் சிந்தனை ஒரு புறமும், இது பற்றிய எண்ணமில்லாது 'தூய' சிந்தனை ஒருபுறமுமாகும். பொதுவாக படைப்பு பற்றி எழுதும் இக்கட்டுரையாசிரியர், இன்றைய படைப்பாளி, பாட்டாளி வர்க்கத்தை மட்டும் எழுதி 'முற்போக்கு' ஆக வேண்டியதில்லை. சகல மட்டங்களிலும் நசிந்துகொண்டிருக்கிற மனித விடுதலையைச் சார்ந்திருத்தலே பிரதானம் என்று படைப்பை விமர்சனம் செய்வது உண்மையை உணர்த்துகின்றது.

70-இல் வெளிவந்த மரபுக் கவிதை விமர்சனங்களில் விமர்சனப்பண்பு மிக அருகியே அமைகின்றது என்பதைப் பலரின் எழுத்துகளின் மூலம் தெளிவுறுத்துகின்றார், சு. சண்முகசுந்தரம் கைலாசபதியின் விமர்சனம் இவரிடம் பெயர்பெற்று விடுகிறது. ஞானக்கூத்தனும் வித்தியாசமான கவிஞராக இருப்பதுடன், விமர்சகராகவும் இருப்பது இவரது கட்டுரையில் தெளிவாகிறது.

'எழுபதுகளில் தமிழ் சினிமா' கங்கை கொண்டானால் நோக்கப்படுகிறது. திரையுலகம் தாழ்ந்த நிலையில் உள்ளதற்கான காரணத்தைச் சிறப்பாகப் பிரித்துச் சொல்லும் கட்டுரையாசிரியர், அதன் வளர்ச்சிக்குரிய காரணத்தை, அதனையும் ஒரு கலைத் துறையாக மதித்து ஒதுங்கியும், ஒதுக்கியும் போகாது எழுத்துச் சிற்பிகளும், சிந்தனைவாதிகளும் இருத்தலின் தேவையைச் சுட்டுவது சிறந்த அடிப்படையாக இருக்க இயலும். 'எழுபதுகளில் தமிழ்ப் பத்திரிகை' பற்றி விமர்சிக்கின்றார் மாலன். 'எழுபதுகளில் தமிழில் பிறதுறைகள்' கட்டுரையில் இ. அண்ணாமலை, தமிழ்மொழி, இலக்கிய ஆராய்ச்சியையே திறனாய்வு செய்கின்றார். மொழி ஆராய்ச்சியும் இலக்கிய ஆராய்ச்சியும் நெருங்கி வந்த இப்பொழுதில், மொழியியலைப் பற்றிய அவநம்பிக்கையும் பகைமையும் போய் அதை ஏற்றுக் கொள்ளும் நிலையை இவண் காண்கின்றோம் என எழுதுகின்றார் இவர். மேலும் இலக்கியமும், ஆசிரியர்களும் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுவது வலுப்படுத்தப்பட்ட நிலையையும் காண்கின்றோம். சமூக இயல் சார்பும் இக்காலத்தில் ஏற்பட்டது.

இறுதியாக, எழுபதுகளில் பிறதுறை நூல்கள் பற்றி சாரு நிவேதிதா எழுதும் கட்டுரை அமைகிறது. தத்துவ நூல்கள்தான் இங்கு அலசப்படுகின்றன. எஸ்.வி. ராஜதுரையின் நூலே சிறப்புடையதாக இவண் சித்திரிக்கவும் படுகிறது.

முடிவுரை

'இலக்கியத் திறனாய்வு' என்ற நோக்கில் எழுந்த நூல்கள் இவண் நோக்கப்படுகின்றன. இவை தமிழ் பற்றிய, தமிழ்த் திறனாய்வு பற்றிய சில பொதுமைக் கருத்துகளுடன், சில சிறப்புக் கருத்துக்களையும் நமக்கு வழங்கத் தவறவில்லை.

சங்க காலம் முதற்கொண்டு, இன்று வரை வெளி வந்துள்ள இலக்கியங்களையும் தமிழ்த் திறனாய்வாளர் ஆராயத் தவறவில்லை என்பது வெளி வந்த நூல்களை நோக்கப் புலனாகும் ஒன்று.

தனித்த படைப்புடன், ஒத்த பிற படைப்புகளை ஒப்பிட்டு நோக்க வேண்டும் என்ற எண்ணம் ஈண்டும் புலப்படுகின்றது. ஆயின் புதுமை முயற்சி எதுவும் இல்லாதது இதனுள் குறையாக அமைகிறது.

இலக்கியப் படைப்பைக் கொண்டு, படைப்பாளர் நிலை ஆராயும் நிலையும் இவண் காணலாம். நூற்றாண்டு விழா காரணமாக பாரதி இவ்வகையினுள் மிகுதியாக இடம் பிடித்துக் கொள்கின்றார்.

இலக்கியத்தைப் பொது நிலையில் முழுமையாகப் பாராது, அதனுள் ஒரு குறிப்பிட்ட பொருளை அல்லது தன்மையை எடுத்துக் கொண்டு, ஆய்வு முறை அணுகலும் அமைகின்றது.

இவை அனைத்திற்கும் சிகரமாக திறனாய்வுக்குத் திறனாய்வு எழுதித நிலையையும் இவ்வாண்டு வெளி வந்த 'எழுபதுகளில் கலை இலக்கியம்' நெறிப்படுத்தி உரைக்கிறது. தமிழ் இலக்கியத்தின் பல பகுதிகளும் இவண் திறனாயப்படுகின்றன. தகுந்த திறனாய்வு இலக்கியத் துறையையும் சமுதாயத்தையும் வளர்ச்சி அடையச் செய்ய வல்லது என்றதொரு உணர்வை இவ்வெல்லா திறனாய்வாளரிடமும் காண இயலுகின்றது.

இந்நிலையில் அனைத்து இலக்கியங்களையும் திறனாய வேண்டும் என்ற எண்ணம், திறனாய்வு சிறப்புடன் திகழ வேண்டும் என்ற கருத்து, பல கோணங்களிலும் கால்வைத்துள்ள அதன் வளர்ச்சி போன்றவை தமிழர் ஆக்க பூர்வமாகச் சிந்திப்பதில் வெற்றி கண்டு வருகின்றனர் என்பதை உணர்த்துகின்றன.

# 39. மதிப்புரை

—ச. சிவகாமி

மதிப்புரைகள், நூலுக்கும் சுவைஞருக்குமிடையே இணைப்புக் கண்ணியாக அமைகின்றன. நூலின் தகுதி, உயர்வு, சிறப்பு, தேவை போன்ற நிறைகளையும், அருகிச் சில குறைகளையும் இவை சுட்டுகின்றன. மதிப்புரையாளராகத் துறை வல்லுநரோ பிறரோ அமையக்கூடும். நூலின் முன்னுரைப் பகுதிகளும், பல பத்திரிகைகளும் தமிழில் இத் துறையை வளர்க்கின்றன,

தொட்டனைத் தூறும் மணற்கேணியாக அமைவன நூல்கள். பல்வேறு துறைகளிலிருந்தும் பலவகை நூல்கள் வெளி வருகின்றன அந்நூல்கள் அனைத்தையும் அனைவராலும் பெற இயலாது. அக் காலையில் குறிப்பிட்ட நூல்கள் பற்றிய பொது அறிவினைப் பெறுதற்கு மதிப்புரைகள் உதவுகின்றன. மற்றும், ஆய்வில் ஈடுபட்டுள்ளோரும், நூல்களைத் தொகுப்பதில் ஆர்வமுள்ளோரும் தம் தேவைக்கேற்ற நூல்களைப் பெறுதற்கும் இவை பெரிதும் பயன்படுகின்றன. படைப்பிலக்கியங்கள், அவை சார்ந்த நூல்கள், அறிவியல், சமூகம், கலைகள் பிற துறை சார்ந்த நூல்கள், என எத்துறை பற்றியிருப்பினும், அவை கற்பாரிடையே அறிமுகமாதற்கும், பெருமை பெறுதற்கும் துணை நிற்கும் காரணிகளுள் மதிப்புரை முக்கியமானது. ஒரு நூலைப் படித்தற்குத் தூண்டு கோலாக அமையும் இம் மதிப்புரைகள் தமிழில் கொண்டுள்ள இடம் மற்றும் அதன் சிறப்புக் கூறுகள் பற்றிய பொது நிலை ஆய்வு 1982—இல் வெளிவந்துள்ள மதிப்புரைகளை அடிப்படையாக்கித் தரப்படுகின்றது.

**மதிப்புரை—சொல்லாய்வு**

மதி என்னும் வினையினின்றும் தோன்றிய மதிப்பு எனும் பெயர்ச்சொல் உரை எனும் பெயர்ச்சொல்லுடன் இணையும் பொழுது மதிப்புரை ஆகிறது. அளவிடுதல், பொருட்படுத்துதல், கருதுதல், துணிதல் முதலான பொருள்களை உடையது மதி (மதிப்பு) எனும் சொல். உரை என்பது ஒலித்தல், சொல்லுதல்,

வியாக்கியானம், முழக்கம், உயர்ச்சி, மாற்று அறியும் முறை போன்ற பொருள்களை உணர்த்துகிறது. இவை இரண்டும் இணையும் பொழுது, ஒன்றைப்பற்றிய ஒருவரின் அளவீட்டினை, கருத்தினை, துணிபினைச் சொல்லுதல், ஒலித்தல் எனக் கொள்ளலாம். பொன்னின் தகுதியினை, இயல்பினை அறிய உதவும் மாற்று அறியும் முறையினையும் உரை எனக் கோடல் இங்கு நூல் மதிப்புரையுடன் இணைத்து எண்ணத்தக்கது.

மதி (சொல். 274) மதிப்ப (பொருள். 282) எனும் சொற்களைத் தொல்காப்பியர் தரினும் அவை ஒன்றன் தகுதியுரைத்தல் எனும் பொருளில் கையாளப்படவில்லை. இப்பொருளில் இச்சொலின் பயிற்சியைச் சங்க இலக்கியத்துள்ளும் காண இயலவில்லை. எனவே இதனைப் பிற்காலத்திய வழக்கமாகக் கொள்ளலாம். ஆயின் ஒன்றன் சிறப்பு அறிந்து பாராட்டப்படுவது 'ஆய்வு' எனும் சொல்லால் குறிக்கப்படுவதை,

வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
தண்ணறுந் தொடையல் (குறிஞ்சி. 114—115)

புலவராய்புரைத்த புனை நெடுங் குன்றம் (பரி; 15—4) போன்ற பகுதிகள் காட்டுகின்றன. இதனால் ஆய்பு எனும் சொல்லிருந்தே பிற்காலத்திய ஆய்வுரை, மதிப்புரை, கருத்துரை, அணிந்துரை போன்றன எழுந்தனவோ என எண்ண மேற்படுகின்றது.

மதிப்புரை—விளக்கம்

ஒரு நூலின் இயல்பினை அளவிட்டு அதன் நிறை குறைகளைத் தேர்ந்து அவற்றை இனிய நடையில், நூலைப் பற்றிய பொது நிலையில் ஒரு அறிமுகம் கிடைக்கும் வகையில், அதிகமாக விரிக்காது இயன்ற வரையில் சுருக்கமாக அமைத்தலை மதிப்புரை எனலாம். இதனுள் நூலாசிரியர் அறிமுகமும் அமைதல் வேண்டற்பாற்று. ஒரு நூலைப் படித்தற்கோ அல்லது விட்டு விடுதற்கோ ஏற்றாற்போல் அம் மதிப்புரை உண்மை நிறைந்ததாக (அளவீட்டில்) சிறப்பாக அமைந்திருத்தல் இன்றியமையாதது.

"விமரிசகன் தராசைப் போல் நடுவு நிலையில் நின்று மதிப்பீடு செய்ய வேண்டும். டார்ச் லைட்டைப் போல் ஒளிகாட்டி படைப்பில் மறைந்து கிடக்கும் அழகுகளை விளக்க வேண்டும். இந்த இரு பணிகளையும் செய்து விட்டால் அவன் விமரிசனத்தை முழுமையாகச் செய்து விட்டான் என்று

பொருள்'' என்று மதிப்புரை அமைய வேண்டிய நிலையை விளக்குவர்[1] மதிப்புரையின் இன்றியமையாமையை, தேவையைப் பெஞ்சமின் டிஸ்ரெலி எனும் அறிஞர் முன்னுரை (Preface) பற்றிக் கூறுமிடத்து வலியுறுத்தியுள்ளமையும்[2] இங்கு இணைத்துக் காணத்தக்கது.

இம்மதிப்புரைகள், ஒரு நூலின் பெருமையைப் பாராட்டுதல் எனும் நிலையில் அணிந்துரை எனப்படுகின்றன; ஒருவர் கருத்தினைக் கூறுவது எனும் பொழுது கருத்துரையாகக் கருதப்படுகின்றன; நூலைச் சிறப்பித்துரைப்பதால் சிறப்புரை என்றும், நூலுக்கு ஒரு முன்னுரை போன்றமைவதால் முன்னுரை என்றும் பலவாறாகக் குறிக்கப்படுகின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, வள்ளுவர் 'தெரிந்து தெளிதல்' எனும் அதிகாரத்தில்

'குணம்நாடிக் குற்றமும்நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்' (504)

என்று மொழிந்துள்ளமை மதிப்புரைகளுக்கும் பொருந்தும். வினை ஆற்றுவாரைத் தேர்ந்து தெளிவதற்கு மட்டுமின்றி நல் நூல்களைத் தேர்தற்கும் இவ்வழி ஏற்புடைத்து.

### மதிப்புரை, திறனாய்வு—வேறுபாடு

ஒரு நூலின் இயல்பு, திறன், பெருமை, சிறுமை போன்றவற்றைக் காணுதல், அது பற்றிய கருத்துரைத்தல் எனும் நிலைகளில் மதிப்புரை, திறனாய்வு இரண்டும் ஒன்றுபடினும் ஆழ்ந்து நோக்குங்கால் இரண்டிற்குமிடையே வேறுபாடுகள் உள.

---

1. எழில் முதல்வன், விமர்சனக் கட்டுரை எழுதுவது எப்படி—எழுதுவது எப்படி? (தொகுதி 2) மகரம் (பதி); சென்னை; பழனியப்பா பிரதர்ஸ், மு. ப. 1979; ப. 430

2. A good preface is as essential to put the reader into good humour, as a good prologue is to a play, or a fine symphony to an opera, containing some thing analogous to the work itself, so that we may feel its want as a desire not elsewhere to be gratified. The Italians call the preface 'The sauce of the book' and if well-seasoned, it creates an appetite in the reader to devour the book itself''—Benjamin Disraeli.
The International Dictionary of Thoughts, John P. Bradely, Leo P. Daniels, Thomas C. Jones (Ed)., J. G. Ferguson Publishing Company; Chicago; 1969, p. 579.

1. மதிப்புரை என்பது நூலைப் பொது நிலையில் அறிமுகப் படுத்துதல் எனும் நோக்கில் அமைகிறது. திறனாய்வு என்பது சிறப்பாக, நூலின் குறிப்பிட்ட ஒருசில கூறுகளைநுணுகி முழுமை யாக ஆய்வதாகும். நூலினைப் பொதுநிலையில் ஆய்வதா யினும் அதனுள்ளும் ஓர் ஆழ்ந்த ஆய்வினைக் காண முடியும்.

2. ஒரு நூலினைக் கற்றல் வேண்டுமா, வேண்டாமா? என் பதனை உணர்த்துவது மதிப்புரையின் நோக்கங்களுள் ஒன்று. திறனாய்விற்கு நோக்கம் அஃதன்று திறனாய்வாளர் நூலைத் திறனாயும் கோணத்திற்குத் தக நோக்கங்களும் வேறுபடு கின்றன.

3. மதிப்புரை மிகக் குறுகிய அளவில் அல்லது ஓரளவுவிரிந்து அமைகின்றது. திறனாய்வு இயல்பாக மிக விரிந்த அளவில் இடம் பெறுகின்றது. மதிப்புரையாளரைவிடத் திறனாய்வாள ருக்குத் தன் கருத்தினை அதிகமாக எடுத்துரைத்தலுக்கு வாய்ப் புள்ளமையும் இதற்குக் காரணமாம்.

4. மதிப்புரையினைவிடத் திறனாய்விற்கு மிகுந்த முயற்சி தேவை. குறிப்பிட்ட நூலைக் கற்றல் மட்டுமே மதிப்புரைக்குப் போதுமானது. திறனாய்விற்குப் பிறபல நூல்களைக் கற்றலும் தேவையாகிறது.

5. நிறைகுறைகளைச் சமநிலையில் நின்று பார்த்தல் என் பது இரண்டிலும் பொதுவாயினும் மதிப்புரையில் குறைபாடுகள் ஓரளவு மட்டுமே தொட்டுக் காட்டப்படுகிறது. திறனாய்வில் குறைகள் வரன்முறையுடன் முழுமையாக எடுத்துக் காட்டப்படு கின்றன.

6. மதிப்புரையாளர் தம் கருத்திற்கு எத்தகைய விளக் கமோ, சான்றுகளோ அளித்தல் தேவை என்பது வலியுறுத்தப் படுவதில்லை. ஆயின் திறனாய்வாளர் தம் கருத்திற்குப் போது மான விளக்கமும் உறுதியான காரணங்களும், சான்றுகளும் அளித்தல் இன்றியமையாததாகும்.

7. நூலாசிரியரை அறிந்தவர் அல்லது மதிப்புரை வெளி யிடும் இதழ்களுடன் தொடர்புடையோர் என்போரே பெரும் பாலும் மதிப்புரை எழுதுகின்றனர். திறனாய்வாளர் இவ்விரு நிலைக்கும் அப்பாற்பட்டவராகவும் அமையலாம்.

சுருங்கக் கூறின் ஒரு வீட்டின் உள்ளும் புறமும் ஒரு சுற்று சுற்றி வந்து அதைப் பற்றிக் கூறுதல் மதிப்புரை என்றும், அதனை நுணுக்கமாக அளவிட்டும் பிற புள்ளி விவரக் கணக்குடன், அதன்

ஒவ்வொரு பகுதியின் இயல்பிற்கும் தன் கருத்துரைத்தல் திறனாய்வு என்றும் கூறலாம்.

"நூல் மதிப்புரை செய்வது என்பது வேறு; திறனாய்வுக் கட்டுரை எழுதுவது என்பது வேறு. தமிழ்நாட்டில் எல்லாமே ஒன்றாகத்தான் கருதப்படுகிறது. பத்திரிக்கைக் காரர்கள் விதிக்கும் இடக்கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு ஒரு நூலை அறிமுகம் செய்வதே 'நூல் மதிப்புரை'. விமரிசனம் என்பதோ நூல் மதிப்புரையைவிடத் தரத்திலும் அளவிலும் பரிமாணத்திலும் வேறானது. இரண்டையும் ஒன்றாகக் குழப்பிக் கொள்ளக் கூடாது" எனும் கூற்றில்[3] ஓர் ஐயம் எழுகின்றது. மதிப்புரை, திறனாய்வு, விமரிசனம் என்பன மூன்றும் தனித்த நிலையில் தம்முள் வேறுபடுகின்றனவா? அன்றி விமரிசனம், திறனாய்வு என்பதன் நேர் பொருளைத் தந்து இரண்டும் ஒன்றாகின்றனவா?

விமரிசனம் என்பது வடசொல். இச்சொல்லுக்கு எண்ணல், ஓர்தல் ஆராய்தல் எனப் பல பொருள்கள் உள[4]. தமிழில், ஒரு பொருள் பற்றி எண்ணுதல் எனும் நிலையில் பயன் கொள்வதாலும், பலவிதமாக அழைக்கப்படும் மதிப்புரையுள் ஒருவிதமாகவிமரிசனம்என்பது குறிக்கப்படுவதாலும்[5], அதன் அமைப்பும் இயல்பும் ஒத்தமைவதாலும்[6], மதிப்புரையும் விமரிசனமும் ஒன்றே என்று இவண் கருதப்படுகிறது. இவற்றினின்றும் மாறுபட்டமைவது திறனாய்வு என்பதும் பெறப்படுகின்றது.

**மதிப்புரை முன்னோடிகள் 1. சிறப்புப்பாயிரம்**

குறிப்பிட்ட ஓர் நூலை அறிமுகம் செய்தல் என்ற நிலையில் சிறப்புப்பாயிரம் மதிப்புரையின் முன்னோடி எனக் கொள்ளலாம். அந்நாளில் படைப்பாளர் தம் நூலை அரங்கேற்றம் செய்த பொழுது ஆன்றோரிடமிருந்து சிறப்புப்பாயிரம் பெற்று

---

3. எழில் முதல்வன்: முன் சுட்டியது, பக். 433.
4. தி. நீலாம்பிகையம்மையார், வடசொற்றமிழ் அகர வரிசை; கழகம்; சென்னை, ப. 285.
5. "சில ஆண்டுகளுக்கு முன், ஓர் இளம் எழுத்தாளரின் தமிழ் நாவலைப் பிரபல இலக்கிய விமர்சகர் ஒருவர், ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் விமர்சனம் செய்திருந்தார்."—சிட்டி; விமர்சனக் கட்டுரை எழுதுவது எப்படி; எழுதுவது எப்படி?-தொகுதி 2: ப. 412.
6. டி. எஸ். ரவீந்திரதாஸ்; விமர்சனச் சிதறல்கள்; சென்னை, வந்தனா பதிப்பகம்; மு.ப.டிச. 1980.

அரங்கேற்றினர் என்பதனைத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் முதலானவற்றால் உணர முடிகிறது. இப்பாயிரத்தின் இயல்பினைத் தெளிவாக நன்னூலார் வரையறுத்துள்ளார். முகவுரை பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை எனவும் அழைக்கப்படும்[7] பாயிரம் (நூற்பா. 1) பொதுப் பாயிரம், சிறப்புப் பாயிரம் என இருவகைப்படும் (2).

சிறப்புப் பாயிரத்தின் இலக்கணமாக,

ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர்ப் பயனோடாய் எண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்து இயல்பே (47

எனக் காட்டுகிறார். நூல் செய்தோன் பெயர், நூல் வந்த வரலாறு, நூல் வழங்கு நிலம், நூலியல்பு, நூலில் சொல்லப் பட்டுள்ள பொருள், இந்நூல் கேட்டற்குரிய தகவுடையார், கேட்டலாற் பெறப்படும் பயன் என இவ் எண் பொருளுக்கும் பொருளுரைப்பர் காண்டிகையுரையாசிரியர். இங்கு நூல் வழங்கு நிலம் என்பதனை இன்றைய நூல் வெளியீட்டாளருடன் இணைத்து எண்ணலாம். இப் பொருள்களனைத்தும் மதிப்புரைகளுள் காணப்படுகிறமை, சிறப்புப் பாயிரம்,மதிப்புரையின் முன்னோடி என்பதனை வலியுறுத்தும். இவ் எண் பொருள்களுடன் நூல் செய்த காலம், நூலரங்கேறிய அவை, நூல் செய்தற்குக் காரணம் எனும் இம்மூன்றினையும்(48)இணைத்துக் காட்டுவதும் உண்டு.

பாயிரம் என்ற சொல்லுக்கு அறிஞர் தரும் விளக்கம்,

"பயிர் என்ற சொல் பாயிர் என முதல் நீண்டு, 'அம்' சேர்ந்து 'பாயிரம்' என வந்தது. பாயிரம் என்றால் அழைத்தல் என்று பொருள். பயிர்வது பாயிரம் அழைப்பதற்குக் கருவியாக அமைந்த ஏட்டினை 'அழைப்பு' என்று இக் காலத்தில் வழங்குகின்றோம். 'திருமண அழைப்பு' என்ற விடத்து அழைப்பதற்குக் கருவியான ஏட்டினை நினைக் கின்றோமல்லவா? அது போல, 'ஒரு நூலைப் பற்றி' முன்ன தாகச் சில கருத்துகளை உணர்ந்து கொள்க எனப் பாயிரம் பாடல் அல்லது உரைநடை பாயிரம் எனப்பட்டது எனக் கருத இடமுண்டு."

7. நன்னூல் விருந்தியுரை: (பதி) ச. தண்டபாணி தேசிகர் சென்னை, பாரிநிலையம்: இ.ப. மார்ச். 1971.

என அமைகின்றது.[8] இவ் விளக்கமும், ஒரு நூல் பற்றிய முன் அறிமுகம் மதிப்புரை என்ற நிலையில் இரண்டிற்குமுள்ள தொடர்பினைக் காட்டுகின்றது.

'ஆயிர முகத்தான் அகன்றதாயினும் பாயிரம் இல்லது பனுவலன்றே' (54) என்ற நன்னூலார் கருத்து தமிழிலக்கிய உலகில் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாக அமையக் காணலாம். நீண்ட வரலாறுடையதாகவும் பாயிரம் உள்ளது. தொல்காப்பியத்திற்குப் பனம்பாரனார் வழங்கிய சிறப்புப் பாயிரம், நயக்குக் கிடைப்பவற்றுள் முதல் சிறப்புப்பாயிரம் எனக் கொள்ளலாம். இவர் காலம் தெளியுமாறில்லை. தொல் காப்பியர் காலத்தவராகலாம் என்ற கருதுகோள் உண்டு.[9] இது சிறப்புப்பாயிரத்தின் இலக்கணங்கள் அனைத்தினையும் பெற்றிருப்பினும்[10] மதிப்புரையின் பண்பு நலன்களும் கொண்டிருக்கக் காணலாம். 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி... ... போக்கறு பனுவல்' எனத் தொல்காப்பியம் பற்றிய பொதுக் கருத்தும், 'மல்கு நீர் வரைப் பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என நூலாசிரியர் பற்றிய குறிப்பும், 'மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி' என நூல் பற்றிய கருத்தும் இதனுள் அமைந்து சிறப்புப்பாயிரமும் ஒருவகை மதிப்புரையே என்பதனை நிறுவுகின்றன.

இத்தகு சிறப்புப்பாயிரத்தின்தொடர்ச்சியைச் சிலப்பதிகாரம் முதலான காப்பியங்களிலும் யாப்பருங்கலம் முதலான இலக் கணங்களிலும் காணலாம். இன்றைய தமிழிலக்கியங்களிலும், இன்றும் இம்மரபுத் தொடர்ச்சி அமைவதனை, 'துறவியின் புதையல்' (செந்தமிழ் நாடகக் காப்பியம்) எனப் புலவர் பா. நாராயணன் எழுதிய நூலுக்கு ஐ. நாராயணன் அளித் துள்ளமை[11] போன்றவற்றால் உணரலாம். படைப்பிலக்கியங்

8. ஆ. சிவலிங்கனார்; தொல்காப்பியம்—சிறப்புப் பாயிரம் (உரைவளம்); சென்னை; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: மு. ப. செப். 1980; ப. 6.

9. மேற்படி நூல்; ப. 2

10. மேற்படி நூல்

11. முத்தமிழ்ச் சுவையே போல
    முதுமொழி பயனே போல
    இத்தரை மக்கள் எல்லாம்
    இன்பமும் அறிவும் பெற்றே

கள் மட்டுமின்றித் திறனாய்வு நூல்களும் இதனைப் பெறு கின்றமை[12] சுட்டற்பாலது. காப்பியங்களில் காணப்படும் பதிகம், தற்சிறப்புப் பாயிரம் போன்றன காப்பிய உறுப்புகளுள் ஒன்றாகி இச்சிறப்புப் பாயிரத்தினின்றும் வேறுபட்டமைவன வாகும்.

## 2. சாற்றுக்கவி

சிறப்புப் பாயிரத்துடன் தொடர்புடையதாக அமைவது சாற்றுக்கவி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் 1835-இல் ஆங்கிலேய அரசு அனைவருக்கும் அச்சகம் அமைத்துக் கொள் ளும் அனுமதியை வழங்கியதனால் தமிழார்வம் மிக்கோர் பழைய,புதிய நூல்களைப் பதிப்பிப்பதில் பெரிதும் ஈடுபட்டனர்; இப்பதிப்பாளர் தம் நண்பர், ஆசிரியர், மாணக்கர் முதலானோ ரால் 'சாற்றுக்கவி' தந்து சிறப்பிக்கப்பட்டனர். சாற்றுதல் என்பதற்கு விளம்பரப் படுத்துதல், விரித்துரைத்தல், புகழ்தல் எனப் பல பொருள்களுண்டு. புகழ்வதன் மூலம் விளம்பரப் படுத்துதல் (அறிமுகப் படுத்துதல்) எனும் நிலையில் சாற்றுக் கவிகளாயின எனலாம். இச்சாற்றுக்கவிகளால் நூலாசிரியர், உரையாசிரியர், பதிப்பாசிரியர் முதலியோர் பற்றிய செய்திகள், நூல் பற்றிய செய்திகள், சிறப்புகள் போன்றவற்றை அறிய முடிகின்றது.

வளங்கொள் குளத்தூர் அமர்ந்த வேதநா
யகன் அருளால் வயங்க முன்னாள்
உளங் கொள் மனு உரைத்தனன் ஓர் நீதிநூல்
அந்நூற்பின் உறு நூலாக
துளங்கிடும் அவ்வூர் உறை அத் தோன்றல் ஓர்
நீதிநூல் சொன்னான் இந்நாள்
விளங்கும் இந்நூல் முன்னர் மற்றை

---

மெத்தவே புகழால் வாழும்
மேன்மை கொள் நயங்கள் எல்லாம்
நத்திய புதையல் தன்னில்
நவில் தொறும் காணலாமே!

12. சி. கணேசையர், சு. பொன்னம்பல பிள்ளை, சி. கே. சுப்பிரமணிய முதலியார், அ. தில்லைநாதர், கந்தபுராணக் கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மைநூற் கருத்தும் — க. சோமசுந்தரப் புலவர் (நாவலியூர்) மு. ப. 1982.

நூல் எல்லாம் கிழிபடத்தின் வெண்ணூல் அன்றே.

என்று இராமலிங்க சுவாமிகள், வேதநாயகம் பிள்ளையின் நீதி நூலுக்கு அளித்துள்ள சாற்றுக்கவியினைச் சான்றாகக் காட்டலாம். மற்றும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, பூவை. கலியாண சுந்தரம் பிள்ளை போன்றோர் மிகுதியான சாற்றுக்கவிகளை வழங்கியுள்ளனர். இந்நிலை இருபதின் தொடக்கம் வரை நீடித்திருந்தது. அதன்பின், நூல்கள் வெளிவரும் பொழுது, அணிந்துரை, மதிப்புரை, வாழ்த்துரை......எனப் பிறர் கூற்றினைத் தாங்கி வரத் தொடங்கின. விளம்பரப் படுத்துதல், புகழ்துரைத்தல் எனும் பண்புகளில் இவை சாற்றுக்கவிகளின் மறு உருவங்கள் என்பதில் ஐயமில்லை. சிறப்புப்பாயிரம், சாற்றுக்கவி என்பன நூலின் பெருமையை மட்டுமே உரைப்பன எனும் தன்மையில் மதிப்புரையினின்றும் மாறுபடுகின்றன.

### 3. புகழ்ப் பாமாலைகள் (மாண்பு மொழிகள்)

குறிப்பிட்ட தொரு நூலினைச் சிறப்பித்துத் பாடும் மரபினையும் மதிப்புரைகளுடன் இணைத்து நோக்கலாம். இப் புகழ்ப் பாமாலைகள், அந்நூலின் சிறப்பு கருதி, அதன் மாண்பினைப் பிறரும் உணர மொழிய வேண்டும் எனும் நிலையில் பாடப்பட்டனவாகும். ஒரு நுலின் மதிப்பினை எடுத்துரைத்தல், பிறருக்கு அதனைப் பற்றிய கருத்துரைத்தல், அறிமுகப் படுத்துதல் எனும் பண்புகளை இவை கொண்டிருத்தலால் இவையும் மதிப்புரையின் முன்னோடிகளாகின்றன. இவற்றில் பெருமைக்குரிய நூல்கள் மட்டுமே மதிப்பிடப்படுகின்றமை மதிப்புரையினின்றும் வேறுபட்டு நிற்கும் நிலையாகின்றது.

இப் புகழ்ப் பாமாலைகளின் தொடக்கத்தினைத் திருவள்ளுவ மாலையில் காண்கிறோம். திருவள்ளுவ மாலை திருவள்ளுவரின் குறளினைச் சிறப்பித்துப் பலர் அவ்வக் காலங்களில் பாடியவற்றின் தொகுப்பாகும். இப் புலவர்கள் இடைக்காலத்தவராகவும், முற்பட்டவராகவும் உள்ளனர். அதனுள் அமைந்துள்ள,

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால் (13)

எனும் அரிசில் கிழாரின் பாடல் நூலைப் மதிப்பிடுதல் எனும் சிறப்பில், நூலின் இயல்புரைத்து, மதிப்புரையுடன் தொடர்

புடையதாகப் புகழ்ப் பாமாலை அமைகின்றன என்பதற்குச் சான்றாக நிற்கக் காணலாம்.

இடைக் காலத்தில் பல தனிப் பாடல்கள் இந் நிலையில் அமைந்தமைக்கு நம்மாழ்வார் பற்றிய இடைக்காடரின் கூற்றினைக்[13] காட்டாக்கலாம். திறனாய்வு நோக்கிலும் அருகிக் காணப்பட்டமையைக் காளமேகப் புலவரின்,

நாராயணனை நராயணனென்றே கம்பன்
ஓராமற் சொன்ன உறுதியால்—நேராக
வாரென்றால் வர் என்பேன் வாளென்றால்
வள்ளென்பேன்
நாரென்றால் நர் என்பேன் நான்.

எனும் பாடலில் [14] காணலாம். சிவப் பிரகாசரின் நால்வர் நான் மணி மாலை தேவார மூவர் மற்றும் மாணிக்க வாசகரின் படைப்புகளைப் பாராட்ட எழுந்த தனி நூலாகும். தன்னைக் கவர்ந்த புலவரைப் பாராட்ட விழையும் பொழுது அவர் படைப்பினையும் சிறப்பித்துரைத்தல் இயல்பாக அமைகிறது. மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் போன்றன சான்று. இவ்வகையில் பல நூல்களும் தனிப்பாடல்களும் வெளி வந்து இன்றும் மரபுத் தொடர்ச்சி காட்டுகின்றன. 19-இன் இறுதியில் கே. என். சிவராஜ பிள்ளை (1898) படைத்தளித்த 'கம்பராமாயண கௌஸ்துபம்' தனித்த சிறப்புடையது. முன்னுரைப் படலம், ஆக்கியோன் படலம், உவமைப்படலம், இயற்கை வருணனைப் படலம், கதை மக்கட் படலம், மெய்ப்பாட்டு வருணனைப் படலம், சொல், நடை வனப்புப் படலம், புலமைத் திறன் படலம், அறவுரைப் படலம், கவி இலக்கணப்படலம் எனப் பத்துப் படலங்களில் 461 விருத்தங்களில் கம்பனைப் பலவாறாக அணுகிச் சிறப்பித்துள்ளார். வண்ணச் சரபம் தண்டபாணி

---

13. ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொருளும்
பெய்தமைத்த
செம்பொருளை எம் மறைக்கும் சேண்
பொருளைத்—தண் குருகூர்ச்
சேய் மொழியது என்பர் சிலர் யான் இவ்வுலகில்
தாய் மொழியது என்பேன் தகைந்து.

அ. மாணிக்கம் (உரை); தனிப்பாடல் திரட்டு; சென்னை; பூம்புகார் பிரசுரம், மு. ப. மே 1977, ப. 45

14. மேற்படி; ப. 159

சுவாமிகளின் 'புலவர் புராணம்' கர்ண பரம்பரைக் கருத்துகளுக்கு இடமளித்துள்ள போதிலும் இவ்வகையில் எண்ணத் தக்கது.

வாக்கிற்கு அருணகிரி வாதவூரர் கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற் குறுதிக்கு அப்பர் எனச் சொல்

போன்ற தனிப் பாடல்கள், புலவர் பெருமையை அவர் படைப்பினை மதிப்பிட்டே மொழிகின்றன. எனவே புகழ்ப் பாமாலைகளும் மதிப்புரைக்கு அடித்தளமாகின்றன எனத் துணியலாம்.

'ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பன போன்ற பழமொழிகளும் இவண் இணைத்து நோக்கத்தக்கன.

### உரை மேற்கோள்

"அஃதே எனின், பட்டினப் பாலைத் தொடக்கத்தக்கன அகத்திணை வஞ்சியாம் பிற எனின், 'அத்திணையகத்து வஞ்சி வருவது சிறப்பின்றாயினும், சிறுபான்மை வரப் பெறும்' என்பார் உளராகலின் அமையும் என்பது. என்னை?

அகத்திணை யகவயின் நிற்ப வஞ்சி
சிறப்பில எனினும் சிலவிடத்துளவே

என்பது மாபுராணச் சூத்திரம் ஆகலின்" என்பது போன்று வரும்[15] உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்படும் மேற்கோள்களும் இங்கு எண்ணத் தக்கன. இவற்றை மதிப்புரையின் முன்னோடி எனக் கூறவியலாவிடினும், ஒரு நூலில் உள்ளது மொழிதல், அதன் மூலம் அந்நூலை அறிமுகப்படுத்துதல் என்பதனால் மதிப்புரையுடன் தொடர்பு கொண்டமைகின்றன எனலாம்.

உரையாசிரியரும் உரை வகுக்கும் பொழுது படைப்பாளரின் சிறப்பினை எடுத்துக்காட்டும் நேரங்களில் மதிப்புரையாளராகத் தென்படுகின்றனர்.

---

15. யாப்பருங்கலம் (விருத்தியுரை), இரா. இளங்குமரன் (பதி); சென்னை; கழகம் ; ம. ப. 1976; ப. 128.

இவை அனைத்தையும் இணைத்து நோக்குங்கால் சில எண்ணங்கள் தெரிகின்றன: ஒரு நூலை மதிப்பீடு செய்தல் என்பது தொல்காப்பியப் பழமையுடையது; அன்று பாராட்டுதல் என்பது முதன்மை நோக்கமாக அமைந்தது; நடுநிலையில் நின்று நூலை அணுகுதல் என்பது இவற்றின் வளர்ச்சி நிலையில், இன்றைய மதிப்புரையாக அமைகின்றது; அவ்வப்பொழுது தம்மைக் கவர்ந்த புலவர், நூல் எனும் நிலைகளில் வழங்கி வந்த பாராட்டுரை, ஆங்கிலக் கல்வியின் பயனாக, வெளிவரும் எந்த ஒரு நூலையும் அது எத்துறையைச் சார்ந்ததாயினும் யாரால் இயற்றப்பட்டது என்று கருதாது நூலை மட்டும் கருத்தில் கொண்டு மதிப்புரைத்தலாக இன்று வளர்ந்துள்ளது.

### மதிப்புரையின் மறு பெயர்கள் (தலைப்புகள்)

மதிப்புரை என்பதனை மதிப்புரையாளர் தம் விருப்பம் போல் பிற சொற்களாலும் அழைக்கின்றனர். அவற்றுள்ளும் மூன்று பண்புகளைக் காண முடிகிறது. மதிப்புரையோடு தொடர்புடைய சொற்களைப் பயன் கொள்ளுதல் ஒரு நிலை. அணிந்துரை, கருத்துரை, முன்னுரை, ஆய்வுரை, வாழ்த்துரை, ஆராய்ச்சி முன்னுரை, சிறப்புப் பாயிரச் சிறப்புரை, சிறப்புப் பாயிரம், மதிப்பீடு, விமர்சனம் முதலானவாக[16] அவை அமைகின்றன. இவற்றுள்ளும் கருத்துரை, ஆய்வுரை, ஆராய்ச்சி முன்னுரை, மதிப்பீடு, விமர்சனம் என்பன மதிப்புரையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, நூல் பற்றிய ஒருவரின் கண்ணோட்டத்தினைச் சுட்டுவனவாக அமைகின்றன. ஏனைய அணிந்துரை, வாழ்த்துரை, சிறப்புப் பாயிரச் சிறப்புரை, சிறப்புப் பாயிரம் என்பன நூலைப் பாராட்டுதலைத் தம் நோக்கமாகக் கொள்கின்றன. மதிப்புரை பொது நிலையில் ஏற்கும் பெயர்களாக இவை அமைகின்றன.

---

16. அணிந்துரை ; எஸ். இராமகிருஷ்ணன்; மானுடத்தின் நாணயங்கள்— சு. சமுத்திரம்; சென்னை; என் சி பி எச்
கருத்துரை ; சி. பாலசுப்பிரமணியன்; சித்தர்கள் பரிபாஷை அகராதி—இரா. மாணிக்கவாசகம்; சென்னை; அன்னை அபிராமி அருள்.
முன்னுரை;மு. மேத்தா; ஹிரோஷிமாவின் ஹீரோக்கள்; மேமன்கவி; சென்னை; நர்மதா பதிப்பகம்.
ஆய்வுரை; ஆர். தியாகராஜன்; கண்மருத்துவம்—வே. இரா. மாதவன் (பதி); சென்னை; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

சிறப்பு நிலையில் ஏனைய இரு பண்புகளிலும் பெயரிடுதல் அமைகின்றது. முருகியல் உணர்வுடன் இலக்கிய நயம்பட அமையும் தலைப்புகளை இரண்டாவதாகச் சுட்டலாம். படைப்பாளர் தம் படைப்பிற்குத் தம் நோக்கில் பெயரிட்டு மதித்தல் போன்று மதிப்பாளரும் தம் நோக்கில் நூலறிமுகத்திற்குப் பெயரிடல்; படைப்பாளரே மதிப்புரையாளரின் மதிப்பீடுகளுக்கு நயம்படத் தலைப்பிடல் என இங்கும் இருநிலைகளைக் காணலாம், சிற்பியின் புதுக்கவிதை நூலான 'மௌன மயக்கங்கள்' நூலினை மதிப்பிட்ட கவிஞர் மீரா, 'காதல்...சூரியனைப் போல் சுத்தமானது' என்று தம் உரைக்குத் தலைப்பிட்டிருப்பதனையும் தமிழன்பன் 'கிழக்கைக் கிழிக்கும் விரல்கள்' என்று தலைப்பிட்டு உலகனின் புதியபூபாளத்தினை அறிமுகப்படுத்தியிருப்பதனையும் முன்னதற்குச் சான்றுகளாகக் காட்டலாம். நா. வேந்தனின் இன்று வந்த இறந்த காலம் என்ற நூல் கவிஞர் பொன்னடியானின் கருத்திற்கு 'மாலை தந்தவர்' என்றும், சிவசங்கரியின் கூற்றுக்குக் 'குங்குமம் இட்டவர்' என்றும் சுஜாதாவின் சொல்லிற்கு 'வாழ்த்தி மகிழ்ந்தவர்' என்றும் மகுடமிட்டிருப்பது பின்னதற்குச் சான்றாம். இத்தகு புதுமைகள் நூலினுள்ளே காணப்படும் மதிப்புரைகளில் சிறப்பிடம் பெறுகின்றன. மிகுதியும் ஒரு தலைச் சார்புடனேயே இவை அமைதல் இதன் காரணமாம்.

இந்து நாளிதழில் இடம்பெறும் மதிப்புரைகள் நூலின் பொது நோக்கினை அல்லது கருவினைச் சுட்டும் நிலையில் பெயர் கொண்டமைவது மூன்றாம் பண்பாகும். நூலினைப் பொது நிலையில் அறிமுகப் படுத்துதலை முதன்மை நோக்கமாகக் கொண்ட மதிப்புரைக்கு அதனை நிறைவேற்றும் உத்தியாக இஃது அமைதல் போற்றற்பாலது. மதிப்புரையின்

---

வாழ்த்துரை ; லலிதா காமேஸ்வரன்; மேற்கண்ட நூல்.
ஆராய்ச்சி முன்னுரை; இரா. இளங்குமரன்; துறவியின் புதையல் — பா. நாராயணன்; ஆத்தூர், கபிலன் பதிப்பகம்.
சிறப்புப் பாயிரச் சிறப்புரை; ப. சு மணியம். மேற்கண்ட நூல்.
சிறப்புப் பாயிரம்; ஐ. நாராயணன்; மேற்கண்ட நூல்.
மதிப்பீடு; சாலினி இளந்திரையன்; சென்னை; தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. சூலை. 1979
விமர்சனச் சிதறல்கள்; டி. எஸ். ரவீந்திர தாஸ் சென்னை; வந்தனா பதிப்பகம்; மு. ப. டிச. 1980.

வளர்ச்சி நிலையாகவும் இதனைக் கொள்ளலாம். பாரதி ப்ரியனின் 'நதிக்கரை யோரத்து நாணல்கள்,' 'Love quadrangle' என்னும் தலைப்பிலும்[17] தபஸ்யானந்தாவின் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் வரலாறு, 'Origin of a mission' என்னும் தலைப்பிலும்[18] மதிப்பீடு செய்யப்பட்டிருப்பதனை இதற்குச் சான்றுரைக்கலாம்.

### மதிப்புரை முதல்வர்

'காமம் செப்பாது கண்டது மொழி'யும் மதிப்புரையினைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தித் தந்தவராகச் சிறப்பிக்கப்படுபவர் உளர். மதிப்புரை அதன் தொடக்க காலத்தில் படைப்பிலக்கியங் களையே மையம் கொண்டிருந்ததனால், இலக்கிய மதிப்புரை யாளரே மதிப்புரை முதல்வராக அமைகின்றனர். 'தமிழில் இலக்கியத் தரமான விமர்சனத்துக்கு வழி வகுத்தவர்—தமிழ்ச் சிறுகதைக்கு முதன் முதலாக ஒரு இலக்கிய உருவம் தந்த வ.வெ. சு. ஐயர்தான் என்பது அங்கீகரிக்கப்பட்டுள்ள உண்மை ஆகும்' என்பர்.[19] மற்றும் தமிழ் இலக்கிய மதிப்பீட்டிற்கு ஆக்கபூர்வ மாக உதவியவராக, க.நா. சுப்பிரமணியம், சி.சு. செல்லப்பா, தொ. மு. சி. ரகுநாதன், கைலாசபதி, நா. வானமாமலை, வெங்கட் சாமிநாதன் ஆகியோரைக் கருதுவர்.[20]

தமிழ்ப் படைப்புகளை மதிப்பிடுவதில் தோன்றிய நிலை, இன்று படிப்படியே பிறதுறைகளையும் ஆட்கொண்டமையால், எத்துறை நூலும் மதிப்புரைக்கு உட்படுகின்றன. இன்று பலரும் இத்துறையில் ஈடுபட்டு இதனை வளர்த்து வருகின்றனர்.

### மதிப்புரைக் களன்

மதிப்புரைகளின் பண்பினைப் பொறுத்து, மதிப்புரை இடம் பெறும், வழங்கும் களன்களை இரண்டாகப் பகுக்கலாம். நூல் அகம், நூல் புறம் என அவற்றைக் குறிப்பிடலாம். நூல் அகம் எனும் பொழுது, நூலினை அச்சிட்டு வெளியிடும் பொழுதே அந் நூல் பற்றிய கருத்துகளைப் பிறரிடமிருந்து பெற்று உடன் வெளி

---

17. The Hindu; 7—9—1982.
18. The Hindu; 9—3—1982.
19. தமிழ் இலக்கிய விமர்சகர்கள்; புதுக்கோட்டை; சுவடு; மு.ப.பிப். 1979; ப. 9.
20. மேற்படி; ப. 4.

யிடுதலாம். நூல் வெளிவந்த பின் அதனைப் பற்றிப் பிறர் கூறுவது நூல் புறம் ஆகிறது. இந்நூல்புறம் பல களன்களில் அமைகிறது. இதழ்கள், கருத்தரங்குகள், வானொலி போன்றன அதன் பாற்படுகின்றன.

இதழ்கள் நூல் மதிப்புரைக்கு வழங்கும் இடம் குறிப்பிடற்பாலது. மதிப்புரை வழங்குதலைத் தனித்த துறையாக, கலையாக வளர்த்த பெருமையில்பெரும்பங்கு இதழ்களுக்குரியது; நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள், மாதமிருமுறை இதழ்கள் குறிப்பிட்ட ஒரு பகுதியை மதிப்புரைக்காக ஒதுக்கியுள்ளன. தினமணி, இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ் போன்றன மதிப்புரை நல்கும் நாளிதழ்களில் குறிப்பிடத்தக்கன. இவை வாரத்தின் குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட பகுதியில் இம்மதிப்புரையைத் தருகின்றன.[21] தாமரை, எழுத்து, தமிழரசு, செந்தமிழ்ச் செல்வி, முக்குடை, தீபம், தமிழியல் (Journal of Tamil Studies) ,தமிழாய்வு, முழக்கம் எனப் பிறபல இதழ்களும் மதிப்புரைக்குச் சிறப்பளிக்கின்றன. 'புத்தக விமர்சனம்' என்ற இதழ் மதிப்புரைக்கு முதன்மையளித்து சிறிதுகாலம் மட்டும் வெளிவந்தமையும் சுட்டத் தக்கது.

மதிப்புரைக்குச் சிறப்பளித்து நடத்தப் பெறும் கூட்டங்கள், கருத்தரங்கின் பாற்படுகின்றன. கலை இலக்கியப் பெருமன்றம் முற்போக்கு எழுத்தாளர் சங்கம், இலக்கிய வீதி, இலக்கியச் சிந்தனை போன்ற அமைப்புகள் நடத்தும் கூட்டங்கள் இதனைச் சிறப்பித்தல் குறிப்பிடத்தக்கது. இலக்கிய வீதி தான் வழங்கும் மதிப்புரைகளுக்கு, நூலாசிரியரைப் பதிலளிக்கும்படிச் செய்தல் வரவேற்கத் தக்க வளர்ச்சியாகும். மாவட்ட மைய நூலகம் மாதந்தோறும் நிகழ்த்தும் நூலறிமுகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மாதந்தோறும் நடத்தும் இலக்கியக் கொள்கை கருத்தரங்கின் ஒரு பகுதியாக நிறுவனம் வெளியிடும் நூல்களை அறிமுகப் படுத்துதல் ஆகியனவும் சுட்டத்தக்கன. வானொலியும் அவ்வப்போது மதிப்புரைகளை வழங்குகின்றது.

இவ்வாறு பலராலும், பலவாறாக வளர்க்கப்பட்டு வருகின்ற மதிப்புரை, சமீப காலத்தில் தொகுக்கப்பட்டு அவையும்

---

21. தினமணி—ஞாயிறுதோறும் தினமணிச் சுடரில் (அண்மையில் அது திங்கட்கிழமைக்கு மாற்றம் பெற்றுள்ளது.)
இந்தியன் எக்ஸ்பிரஸ்—ஞாயிறு
இந்து—செவ்வாய்க் கிழமை

நூலாக்கம் கொள்வதைக் காண முடிகிறது. இவ்வகையில் வலம்புரிஜானின் 'நான் விமர்சிக்கிறேன்' எனும் மதிப்புரை தொகுப்பு நூல் இரண்டாம் பதிப்பாக, இவ்வாண்டு வெளி வந்துள்ளது. மதிப்புரைகள் தமிழில் தனித்துறையாக மெது வாக வளர்ந்து வருவதை இத்தகு நூல்கள் சுட்டி நிற்கின்றன.

இங்குக் குறித்த இதழ்கள், அமைப்புகள் தவிர, மற்றும் பல இத்துறைக்கு இடமளிக்கின்றன. தம்முள் ஒரு பகுதியாக அல்லது நோக்கமாக மதிப்புரையைக் கொள்ளாது அவ்வப்போது போற்றுவனவும் உண்டு. இவை தவிர இதழ்களில் மதிப்புரைப் பகுதியில் இடம் பெறாது, கட்டுரை வடிவில் அல்லது செய்திக் குறிப்பாகத் தம்மைக் கவர்ந்த நூல் என்பதனால் அல்லது அதனுள் இடம் பெற்றிருக்கும் சிறந்த கருத்துகளுக்காக எனும் நிலையிலும் ஆங்காங்கே அமைவது உண்டு. இவற்றுடன் ஒருவர் தம் நண்பருடனோ அன்றிக் குடும்பத்தினருடனோ தான் படித்து அறிந்த நூலைப் பற்றிய கருத்துரைத்தலையும் இவண் எண்ணலாம். இவை மிகுதியும் ஒருவரை அந்நூல் படிக்கத் தூண்டுதல் அல்லது தவிர்த்தல் என்பது பற்றி அமைகின்றன.

### மதிப்புரையாளர்

ஒருநூலை இவர்தான் படைக்கவேண்டும் என்ற வரையறை எவ்வாறு படைப்பாளருக்கு இல்லையோ அதே போன்று ஒரு நூலை இவர் தான் மதிப்பிட வேண்டும் என்ற வரையறையும் இல்லை. நூல் எத்துறையின் பாற்பட்டதோ அத்துறையில் தேர்ந்தவரால் மதிப்புரைக்கப் படுதல் பொது விதி எனலாம். எழும் மதிப்புரைகளைக் கொண்டு மதிப்புரை அளிப்பவர் யார் என ஆராய, சில எண்ணங்கள் கிடைக்கின்றன.

நூல் அகத்துள் அமையும் மதிப்புரைகள், நூலாசிரியருக்கு வேண்டியவராலோ, அறிந்தவராலோ பெரும்பாலும் வரையப் படுகின்றன. 'நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே என்னுடன் இலக்கியத் தொடர்பு கொண்டு அணுக்கமாகப் பழகிவரும் நண்பர்களில் குறிப்பிடத்தக்கவர் இவர்' என்று 'அழகின்நிறம்' நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள நாரண துரைக்கண்ணன், ஆசிரியர் விக்கிரமனைப் பற்றிக் கூறியிருப்பதைச் சான்றாக்க லாம்.

நூலாசிரியர் அறிந்தவராக இருப்பினும், நூல் எழுந்துள்ள துறையை அறிந்தவராகத் தான் இருக்க வேண்டும் என்ப தில்லை. இதனை, தேவராசனின் 'புலவர் இரந்த பரிசு நூலுக்கு

மதிப்புரை அளித்துள்ள கா. நடராஜன், 'என் துறைக்கும் தமிழி லக்கியத் துறைக்கும் தொடர்பு மிகுதியாய் இல்லாமையால் நாடக இலக்கண முறைப்படி இந் நாடகம் அமைந்துள்ள சிறப் பைப் பற்றி என்னால் அதிகம் சொல்ல இயலாது' என்று கூறி யிருப்பது உணர்த்துகிறது. தன்னாசிரியன், தன்னொடு கற்றோன், தன் மாணாக்கன், உரைகாரர் முதலியோரைச் சிறப்புப் பாயிரம் செய்தற்குரியோராக, நன்னூலார் சுட்டுவதும் (51) இவண் இணைத்து எண்ணத்தக்கது.

அவ்வவ் துறையில் அறிஞராக இருப்போரிடம் இருந்து மதிப்புரை பெறல் நூலின் மதிப்பினை மிகுவிக்கும் என்பதும் நூலாசிரியரிடையே நிலவும் கருத்தாகத் தென்படுகிறது. வே. இரா. மாதவன் தான் பதிப்பித்துள்ள கண் மருத்துவம் நூலுக்கு, மருத்துவரான லலிதா காமேசுவரனிடமிருந்து பெற்றுள்ள வாழ்த்துரை இதனை உணர்த்துகிறது.

நூலின் புறமாக எழும் மதிப்புரைகள், மதிப்புரை எழுது வதில் விருப்பம் கொள்ளும் ஆர்வலரால் எழுகின்றன. நூலாசிரி யருக்கும் இவர்க்கும் நேரடித் தொடர்பு தேவையில்லை. இதழ் களில் வரும் மதிப்புரைகள் அவ்வவ் இதழ்களோடு தொடர்புடை யோராலும், அவற்றில் மதிப்புரையாளராகப் பணியாற்றுவோ ராலும் எழுகின்றன. "விமர்சகனும் முதலில் ஒரு வாசகனே. வாசகர்களிடையே மிகுந்த பயிற்சி பெற்ற ஒரு ரசிகன் அவன். ரசிகர்கள் நடுவே, ரசனை, ருசி, உணர்ச்சி இவைகளில் தேர்ச்சி யும் அனுபவமும் சிறக்கப் பெற்றவன் அவன்" [22] என்று மதிப் புரையாளர் பற்றிய பொதுவான எண்ணமாகும்.

இயல்பு நிலையில் சாதாரண வாசகனை விட சிறிது உயர் வாக, கற்ற நூல் பற்றித் தன் உள்ளத்தில் எழுந்த கருத்தினைச் சுவைபட, நெறிப்பட நடுநிலையுடன் எடுத்துரைக்க வல்லவரை மதிப்புரையாளராகக் கொள்ளலாம்.

### மதிப்புரை இயல்பு

"ஒரு நூலின் தேவை —அதிலுள்ள கருத்துக்கள் சமுதாயத் துக்கு எந்த அளவுக்குப் பயனுள்ளது என்பதைப் பொறுத்து தான் அதன் மதிப்பும். இலக்கிய விமர்சகன் அந்த மதிப்பைத் தான் எடை போட வேண்டும், உரை செய்ய வேண்டும். விமர்சனம்

22. வல்லிக்கண்ணன், எழுதுவது எப்படி — தொகுதி 2; ப. 420

ஒரு நூலின் மதிப்பிலும் அதிலுள்ள கருத்துக்களை எப்படி மக்களுக்கு எடுத்துச் சொல்லுகிறான். என்பதையே பொறுத்திருக்க வேண்டும்,'' என்று மதிப்புரையின் பொதுத் தன்மையினை, இயல்பினைச் சுட்டுவர். [23] இதனை, விளக்கி உரைத்தல் (Describing) மதிப்பீடு செய்தல் (Evaluating) கருத்து விளக்கம் தருதல் (Interpreting) ஆகியவற்றை மதிப்புரையாளரின் பணி என்று சற்று விளக்கி உரைப்பர். [24] இங்கு மதிப்புரையாளரின் பணி என்பதன் மூலம் மதிப்புரையில் இடம் பெற வேண்டியவற்றை வலியுறுத்துகிறார்.

இக் கருத்துகளுடன், மதிப்புரைகளையும் இணைத்து நோக்கும் பொழுது மதிப்புரையின் பொது இயல்பு புலனாகிறது. அதாவது நூலின் மையக் கருத்தினைச் சுட்டி அதனை வெளிப்படுத்துவதில் ஆசிரியர் பெற்றுள்ள வெற்றியை அளவிடுங்கால், நூலுள் பாராட்டுப் பெறும் செய்தியைச் சிறப்பிப்பதுடன் நின்றுவிடாது நூலுள் உறுதியாகத் தவிர்க்கப் படவேண்டிய குறைபாட்டினையும் அவற்றிற்குரிய விளக்கங்களுடன் உணர்த்துதல் மதிப்புரையின் இயல்பாகிறது. நூலை முன் அறியாதாரும் அதன் மதிப்புரையைக் கற்றளவில், அந் நூல் பற்றிய பொது நிலை அறிவைப் (அறிமுகத்தை) பெறுதல் மதிப்புரையின் பொதுவான இயல்பாக, நோக்கமாக அமைதல் வேண்டும்.

நூலின் இயல்பிற்கேற்ப மதிப்புரையின் இயல்பும் மாறுபடலையும் சிறப்பு நிலையாக இங்குக் குறிப்பிடலாம். சிறுகதைத் தொகுப்பு நூலுக்கு மதிப்புரைப்போர் ஒவ்வொரு கதையாக மதிப்பீடு செய்தல் பெரு வழக்கமாகக் காணப்படுகிறது. 'பிஞ்சு உள்ளம்' என்ற கதையில் தான் கார் விபத்துக்காளானதைப் பெரிதாக எண்ணாது தன் பொம்மை வண்டிச் சக்கரத்தில் அகப்பட்டு நசுங்கிப் போனதற்காக வருந்தும் ஒரு சிறுமியின் நிலை சோக ரசத்துடன் சித்திரிக்கப்பட்டிருக்கிறது' என்பதைச் சான்றாகக் காட்டலாம். [25]

---

23. ரகுநாதன்; இலக்கிய விமர்சனம்; மதுரை மீனாட்சிப் புத்தக நிலையம்; நா. ப. ஆக. 1980; ப. 12.

24. எழில் முதல்வன் முன் சுட்டிய நூல்; ப. 431

25. நாரண துரைக்கண்ணன், அழகின் நிறம் — விக்கிரமன்; சென்னை; திருமகள் நிலையம்.

புதினங்களாயின் அவற்றின் கதை மிகச் சுருக்கமாக, கதைக் கரு புலனாகும் வகையில் தரப்படுகின்றன.[26] "படித்து முடித்த பிறகு நான் ஏன் கடலுக்குப் போக வேண்டும்?— என்று கேள்விக் கணை தொடுக்கிற செபஸ்தியான், என்ன படித்தாலும் 'கடல் மேல்' பிறந்தவர்கள் நாம் என்பதைக் கதவின் கீல் மாதிரி திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிற குரூஸ் மிக்கேல்......" என்பது போன்று,[27] கதையின் முக்கிய பாத்திரங் களின் அறிமுகங்களையும் இதனுள் காணலாம்.

ஆய்வு நூல்களாயின், அவற்றிற்கு மூலமாகிக் களன் வழங் கிய, நூல்,படைப்பாசிரியர் பற்றிய சிறப்பும் குறிக்கப்படுகிறது.[28] கட டுரைத் தொகுப்பு நூல்களில் ஒவ்வொரு கட்டுரையாக மதிப்புரைக்கும் பாங்கும் அமைகிறது.[29] அவை, கட்டுரை ஆசிரியர் பெயர் சுட்டியும் அமைதல் உண்டு.

---

26. 'In the first novel, Jaya Kantan one of the top most novelists of the day presents Malathi, a motherless girl of 22 and also her co-tenant, the typical elderly lady Pankajam Ammal, a voracious reader with a great flair for carnatic music. Malathi's father fixes her marriage with a young man, but as she had already had premarital relationship with the motor mechanic nextdoor,her conscience pricks her..., M.D.Kanapathi; The Hindu, March 16, 1982.

27. வலம்புரிஜான்; நான் விமர்சிக்கின்றேன்; சென்னை; கவிதாபானு; இ.ப. 1982; பக். 11—12.

28. "அந்த வகையில் கம்பநாடன், வால்மீகியின் இராமா யணத்தை தமிழ்ப் பண்பாட்டை ஒட்டி வழி நூல் செய்து தன்னேரில்லாக் கவிஞனாக எல்லோர் உள்ளத் திலும் வாழ்ந்து வருகிறான்". குடந்தை புகழேந்தி; கம்பன் காவியம் அன்றும் — இன்றும் — என்றும்; பி.ஸ்ரீ, சரஸ்வதி ராமநாதன்; தினமணி; 26-12-'82.

29. "ஒருகாப்பியத்துக்கு உரைநூல் எவ்வண்ணம் அமைதல் வேண்டும் என்பதற்குச் சான்றாக அடியார்க்கு நல்லார் உரை விளங்குகின்றது. அவர் தண்டியலங்கார வழி யைப் பின்பற்றிக் காப்பிய இயல்பைக் காட்டுகின்றார். இலக்கிய வெளியீட்டு முறைகளையும் உத்திகளையும் தெளிவாகப் புலப்படுத்தி இலக்கியத்தில் மரபுபோற்றப்

கவிதை நூல்களில் மதிப்புரையாளரின் கருத்தைக் கவர்ந்த பகுதிகள் இடம் பெறுதலுண்டு. இந்து நாளிதழில் அவை மொழி பெயர்க்கப்பட்டு, "The poem on 'Dust stained flowers' is an eloquent commentary on the Plight of slum-dwellers. Here is a stanza from the poem,

In the school of life
the Poor have chosen
the study of hunger
as their optional subject"

எனவும்[30] அமைந்திருப்பதைச் சுட்டலாம்.

நூல் அக மதிப்புரைகள் நூல் புறமதிப்புரைகள் என்று அமையும் பொழுது, அவற்றைத் தம் இயல்பு நிலையில் வேறு படுத்திக் காட்டும் முக்கிய பண்பு ஒன்றினையும் இங்குச் சுட்டலாம். நூலுள் அமையும் மதிப்புரைகள் பெரும்பான்மையும் நூலாசிரியரை முன்னிட்டு அவருக்காக எழுதப்படுவனவாக அமைகின்றன. நூலுக்குப் புறத்தே அமைவன நூலாசிரியரிடமிருந்து விலகி நூலை முதன்மையாக்குகின்றன.

**மதிப்புரையின் உட்பொருட் கூறுகள்**

மதிப்புரையின் உள்ளீடுகளை ஒரு வரன்முறைக்குள் அடக்க இயலும். அவற்றை 1. நூலாசிரியர் அறிமுகம், 2. நூலின் கரு, 3. மதிப்புரையாளரின் பொது மதிப்பீடு, 4. பாராட்டு, 5. வாழ்த்து, 6. வேண்டல், 7. தேவை, 8. குறை என வகைப் படுத்தலாம். மதிப்புரையாளரின் மனத்திற்குத் தக இவற்றுள் ஒன்றோ, சிலவோ விடுபட்டும், தம்முள் முறை மாறியும் அமைகின்றன. நூலாசிரியர் அறிமுகமும், வேண்டலும் நூலுக்குப் புறத்தே அமையும் மதிப்புரைகளில் சிறப்பிடம் பெறுதல் இல்லை. மேற்கண்டன தவிர, நூல் தோன்றிய வரலாறு, நூலுடன் தொடர்புடைய மதிப்புரையாளரின் கருத்து, பதிப்பகத்திற்குப் பாராட்டு என்பனவும் பரவலாக மதிப்புரைகளுள் பொதிந்துள்ளன.

---

படல் வேண்டும் என்பது அடியார்க்கு நல்லாரின் கொள்கை. அவர் உரையைப் பற்றி மிக விரிவாக, விளக்கமாகப் புலப்படுத்தியுள்ளார் இரா.காசிராஜன்."
அரங்க சீனிவாசன் ; தமிழ் இலக்கியக் கொள்கை — 6 — ச. வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம் (பதி) — தினமணி; 7-6-82.

30. R. Sundaresan; Puzhuthippukkal — Manamadurai Masi; Hindu; 5-1-1982.

நூலாசிரியர் அறிமுகம், அவரது நூலியற்றும் தகுதி, பெற்றுள்ள சிறப்பு, எத்துறையில் வல்லுநர் என்ற செய்தி, இயற்றியுள்ள பிற நூல்கள், மேற்கொண்டுள்ள ஆய்வு எனப் பலவற்றைச் சுட்டி அமைகிறது. "இந்நூலை எழுதினார் இலக்கிய இலக்கணங்களை முறையுறக்கற்றவரும், சந்தான சைவசித்தாந்த நூல்களினுணர்ச்சியில் சிறந்தவரும், 'உயிரிளங்குமரன்' என்னும் நாடகத்தை இயற்றி வெளியிட்டவரும் இன்னும் வேறு நூல்களின் ஆசிரியருமாக விளங்கும் நாவலியூர் திரு.க. சோமசுந்தரப் புலவராவார். அவர் தமிழ் நாட்டிலுள்ள பெரும் புலவர்களுள் ஒருவராவார். கவிசிரேட்டராகிய அவர்களியற்றிய கவிகளைப் படித்து மகிழ்ந்து புகழாதார் இலர்" என்பது போன்று[31] இப்பகுதி அமைகின்றது. நூலைப் படைப்போன் பற்றிக் கற்பார்க்கு அறிமுகமாகவும் நூலாசிரியரைச் சிறப்பித்ததாகவும் இது மதிப்புரையில் முக்கியத்துவம் பெறுகிறது.

நூலைப் பற்றிய பொதுவான அறிமுகம் என்ற நிலையில், நூலின் கருவினை, அல்லது ஆய்வுப் பொருளைச் சுட்டுதல் மதிப்புரையுள் இன்றியமையாததாகிறது. இதனால் நூலின் நுவல் பொருள் யாது என்பது புலனாகிறது. இதனைக் கொண்டே கற்போர் நூலின் மேற் செல்லுதல் குறித்த தம்முடைய சொந்த முடிவிற்கும்வர இயலும். "பாரதி நூற்றாண்டில் மறுபதிப்பாகத் தோற்றம் கொண்ட இந்நூல் பாரதியின் பெருமைகளைத் தக்க ஆதாரங்களோடும், பாரதியின் பாடல்கள் விடுதலை வேள்வியில் விளைத்த மாற்றங்களை வரலாற்று நோக்கோடும் ஆராய்ந்துரைப்பது, இந்நூலின் தனிச் சிறப்புக்களாகும்."[32] "வாமனனாகப் பிறந்த திருமால், மண்ணினை அளந்து நீண்ட திரிவிக்கிரமனாக ஓங்கி உயர்ந்தான் என்று உரைக்கும் புராணம். மமதையின் சிகரத்தில் இறுமாந்து அமர்ந்து அடக்கு முறை கொடிகட்டிப் பட்டி தொட்டிகளிலெல்லாம் ஆர்ப்பாட்டம் செய்வோருக்கு அடங்கிக் கிடந்த அப்பாவி மக்களுக்கு வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு விசுவரூபம் எடுக்க விருப்பதைத் தொனிப் பொருளாகக் கொண்ட கதைகள் இவை"[33] என்பன போன்று இப் பொருட் கூறு அமைகிறது.

---

31. சி. கணேசையர்; கந்தபுராணக் கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மை நூற் கருத்தும் — க. சோமசுந்தரப் புலவர்; சிறப்புப்பாயிரம்.

32. இ. சுந்தரமூர்த்தி; பாரதி நூற்றாண்டில் பாரதி நூல்கள் மதிப்புரைகள்; தமிழியல்—டிச. 1982; சென்னை; உதநி; (பாரதியின்போர்க்குரல்—ம. பொ. சிவஞானம்)

33. எஸ். இராம கிருஷ்ணன்; முன் சுட்டியது

மதிப்புரையாளரின் பொது மதிப்பீடு என்பது 'வளரும் மொழிக்கு வளமூட்டும் முயற்சி இது. பக்கந்தோறும் ஆசிரியரின் புலமை வெளிப்படுகிறது. சில தலைப்புகள் ஆசிரியரின் பொது நோக்கை குலைத்துள்ளன. புதிய பார்வையை நொதுமல் நிலையில் செலுத்தியிருந்தால், நூல் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும்' என்பது போன்று [34] நூல் பற்றிய தம் முடிவினை உணர்த்துதலாகும். மதிப்புரையின் முக்கிய அங்கமாக, முதன்மையானதாக, மதிப்புரை என்பதனை நிறைவேற்றுவதாக இந்து அமைகிறது.

நூலின் சிறப்பினைச் சுட்டிப் பாராட்டியுரைத்தல் பாராட்டுப் பகுதியாகிறது "முன்னையோரின் வாழ்வும் வாக்கும் நமக்கும் ஒரு பாடம் தானே! பாரதியின் வாழ்வும் கொள்கைகளும் உலகிற்குப் புத்துணர்ச்சியைத் தருவதற்கு இந் நூல் ஒரு தூண்டுகோலாக அமையும் என எதிர்பார்ப்போம். நூலின் ஒவ்வொரு தலைப்பிற்கும் ஏற்றவாறு பாரதியின் பாடல்களைத் தொடக்கமாக வைத்திருப்பது அத் தலைப்பின் கீழ் அமைந்துள்ள செய்திகளைச் செறிவுடன் விளக்குவதாக அமைந்துள்ளது. பாரதியாரின் அறிவுரைகளையும் படைப்புகளையும் தொகுத்து அதே வேளையில் இலக்கிய நயத்திற்குரிய பல அரிய பாடல்களைச் சான்றுகளாகத் தந்து வாழ்வியல் நெறிகளைப் படிப்போர் சுவைக்கும் வண்ணம் ஆசிரியர் இந் நூலினை அமைத்திருப்பது குறிப்பிடத் தக்கது"; [35] "இப்ரானின் முறிந்த சிறகுகளைப் போல் என் தாய் மொழியில் ஒரு வசன காவியத்தை—அமர காவியத்தைப படைக்க வேண்டும் என்று பல நாட்கள் பரபரத்திருக்கிறேன். ...ஒரு நாள் ஆசையாய்ப் படைத்தும் பார்த்தேன். இதோ...சிற்பி ஊனுருக, உயிருருக மௌன பக்கங்களைப் படைத்து விட்டார்" [36] என்பன போன்று அவை அமைகின்றன. இத்தகு பாராட்டுரைகள் நூலாசிரியரை மேலும் பல அரிய படைப்புகளைப் படைக்கத் தூண்டுகின்றன எனில் மிகையில்லை.

சிறந்த படைப்புகளை நல்கும் நூலாசிரியரைப் பாராட்டுவதுடன் நிற்காது மற்றும் பல சிறந்த படைப்புகளைத் தர

---

34. —; இலக்கண உலகில் புதிய பார்வை—பொற்கோ; தினமலர் 26-12-82
35. இ. சுந்தரமூர்த்தி; முன் சுட்டியது; பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள்—ச. வே. சுப்ரமணியன்.
36. மீரா: மௌன மயக்கங்கள்—சிற்பி: காதல்... சூரியனைப் போல் சுத்தமானது.

வாழ்த்தி நிற்றல் வாழ்த்தாகும். ''இத்தகைய இளைஞரின் கை வண்ணத்தில் பூத்த 'காதலர் விடுகதைகள்' தமிழ் மக்களின் உள்ளத்தையும் காதல் கொள்ளும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. அவருடைய முயற்சி வாழ்க என வாழ்த்துகிறேன். நாட்டுப்புற வயலுக்கு அவர் மேலும் மேலும் தொண்டாற்றி நல்லதொரு உலக அறிஞனாக மிளிர என் வாழ்த்துக்கள்'' என்பது போன்று[37] அமையும் இவ் வாழ்த்துரைகள், இளைய எழுத்தாளர் வீறு கொண்டு மேலும் பல சிறந்த நூல்களைப் படைக்கத் தூண்டுகின்றன. இது அவர் உயர்விற்கு மட்டுமின்றித் தமிழின் உயர்விற்கும், வளத்திற்கும் வழிகோலுகிறது.

நூல் மேலும் சிறக்கப் படைப்பாளரிடம் எதிர்பார்க்கப் படுவன வேண்டல் ஆகிறது. ''இவருடைய கவிதைகளில் தெளிவும், வடிவச் செழுமையும் கவித்துவமும் ஏராளமாகத் தேவைப் படுகின்றன;''[38] வாலா லஜபதிராயின் வரலாற்றுக் கட்டுரையில் ஆசிரியர் ஏனோ 'ஜாலியன் வாலாபாக்' படுகொலை நிகழ்ச்சிகளைக் கூற மறந்து விட்டார்—அடுத்த பதிப்பிலாவது இதைச் சேர்க்க வேண்டும்''[39] என்பன சான்றுகள். படைப்பாளரிடம் மட்டுமின்றி கற்பாரிடையேயும் தம் வேண்டல்களை விண்ணப்பங்களாக்குவதை ''இலங்கையில் இன்றைய சமுதாய வாழ்வில் காணப்பெறும் அவலக் காட்சிகள், கொடுமைகள் கோரங்களை எதார்த்தமாக எடுத்தியம்பும் கதைகள் இவை. இவற்றைத் தமிழ் மக்கள் வாங்கிப் படித்து இது போலப் பிற நாட்டுக் கதைகளை வெளியிட ஆக்கமும் ஊக்கமும் தருவார்கள் என்று நம்புகிறோம்'' என்பதாக அமையும் குறிப்புகளில் காணலாம்.[40] நல்லதொரு சமுதாயத்தின் உருவாக்கத்திற்கு நூல்களின் பங்கும் பெரிதாகலானும், சிறந்த படைப்புகளே அதற்குத் துணை நிற்றலானும் இவ் வேண்டல்கள் மதிபபீட்டில இடங் கொள்கின்றன.

குறிப்பிட்ட ஒரு நூல் ஏன் தோன்றியது, அதனால் ஏற்பட்ட பயன் என்ன எனும் வினாக்களுக்குப் பதிலளிப்பதாக அமையும் கூறு 'தேவை' ஆகிறது. ''வீரர்களைப் போற்றாத நாட்டில்

---

37. ச. அகத்திய லிங்கம்; காதலர் விடுகதைகள்-ஆறு. இராமநாதன் அணிந்துரை.

38. மு. மேத்தா; ஹிரோஷிமாவின் ஹீரோக்கள்—மேமன் கவி; ஒரு முன்னுரை.

39. குடந்தை புகழேந்தி; விடுதலை வீரர் கதைகள்—செந் துறைமுத்து; தினமணி 19-12-82.

40. கே. ராமநாதன்; சிங்களச் சிறுகதைகள்; அணிந்துரை.

வீரர்கள் தோன்றுவதில்லை. வருங்கால சந்ததியினர் வீரமும் தீரமும் அறிவுத் திறனும் கொண்டு திகழ இது போன்ற நூற்கள் வெளிவர வேண்டும்'' என்பது போன்று[41] அது அமைகிறது. வெறுமனே எண்ணிக்கையைக் கூட்டுவதாக மட்டும் அமைந்து விடாது, பயன்பாட்டுடன் எழும் நூல்களே தேவை என்பதை உணர்த்துவதாகவும், தரமுடைய, தகுந்த நூல்களையே படைக்கப் படைப்பாளரைத் தூண்டுவதாகவும் இது அமைகிறது.

ஒன்றன் பெருமை மட்டுமன்றி சிறுமையையும் எடுத்துக் காட்டுதல் மதிப்புரையின் நோக்கமாதலின் நூலுள் குறைபாடாக மதிப்புரையாளருக்குத் தென்படுவது இங்கே குறை எனக் குறிக்கப்பட்டுள்ளது. ''அறிஞர் கால்டுவெல், போப் முதலிய சமயப்பரப்பாளர் ஆய்வினை, 'இந்து மத ஒற்றுமையை ஊடுருவித் தாக்க ஒரு படைக் கலன் அமைத்துக் கொடுத்ததாகவும் (33) 'உள் நோக்கம் கலந்த அணுகுமுறை' உடையதாகவும் ஆசிரியர் சுட்டுகிறார். அம்முடிவுக்கு அறிஞர் சிலர் எழுத்துச் சான்றுகளையும் இயைக்கிறார் ஆனால் இந்துமத ஒற்றுமையை ஊடுருவித் தாக்குதற்கும், இந்துத் தமிழர்களைப் பிராமணர்களிடமிருந்து பிரிப்பதற்கும் கிறித்தவ குருவர்கள் ஒப்பிலக்கணம் யாத்தலும், அகர முதலி தொகுத்தலும், பாவிகம் இயற்றலும், திருவாசகம், திருக்குறள் முதலிய நூல்களை மொழி பெயர்த்தலும் ஆகிய செயற்கரும் செம்பணிகளை ஏற்று இடருற்றி நக்க வேண்டுவது இல்லை. மிக எண்மையான வழிகளிலேயே அதனைச் செய்திருக்கலாம். இணையற்ற அவர்களின் அறிவாக்கத் தொண்டுகளை இவ்வளவு சுளுவில் தள்ளி விடுதல் சாலாது'' என்பது போன்று[42] சான்று காட்டி அக்குறைபாடுகள் சுட்டப்படுகின்றன. இவற்றால் மறு பதிப்புகளில் படைப்பாளர் தம் குறைபாட்டினை நீக்கி நூலை மேலும் செம்மைபபடுத்த வாய்ப் பேற்படுகிறது.

நூல் தோன்றிய வரலாறு என்பது, நூலின் தோற்றம் பற்றிய கருத்துரையாகும். ''இந்நூலாசிரியரின் நூற்றாண்டு

---

41. —; அமைச்சர் கதைகள்—வள்ளி நாயகி; தினமணி 5-12-82.

42. இரா. இளங்குமரன்; பாரதியாரும்—தமிழ்ப் புலவர்களும் — பெ. சு. மணி; செந்தமிழ்ச் செல்வி; சனவரி 1982.

விழா நினைவாக செண்ட்டினரி கமிட்டியார் வெளியிட்டிருக்கும் நூல் இது.'' என்பதாக[43] அது அமைகிறது.

மதிப்புரையாளர் நூலின் கருத்தினை, இயல்பினை மதிப்பிடுதலுடன் நின்றுவிடாது அதோடு தொடர்புடைய தம் கருத்துகளையும் உரைத்தல் ஆங்காங்கே காணப்படுகிறது. ''ஒன்று கூறல் பொருந்தும்; தமிழிலே இராமாயணம் பாரதம் உள்பட வடநூல்களும் சிலப்பதிகாரம் போன்றவையும் ஒரு காலத்தில் வாய்மொழி நாடோடி இலக்கியங்களாக இருந்தன. பின் வந்தவர்கள் காப்பியப் பண்புகளைப் புகுத்தி இப்போது இருக்கும் வடிவத்தை நல்கியிருக்கிறார்கள்'' என்பது சான்று.[44] இது போன்ற கருத்துரைகள் கற்பாருக்கு நூலின் பயனை மிகுவிக்கின்றன எனில் பொருந்தும்.

நூல் வெளியீட்டிற்குத் துணை நின்ற பதிப்பகத்தினை, வெயீட்டாளரை ''இந்த அரிய நூலை வெளியிட்ட வள்ளி புத்தக நிலையத்தார் பாராட்டுக்குரியவர்கள்'' என்பது போன்று[45] பாராட்டுதல், பதிப்பகத்தாருக்கு மேலும் பல நல்ல நூல்களை வெளியிடுவதற்குரிய ஊக்கமாக அமைகிறது.

மற்றும் சில கூறுகள் மிகஅருகிக் காணப்படுகின்றன. நூலின் உள்ளடக்கத்தினை நோக்கி மதிப்புரைத்தல் ஒரு நிலையாக, அதன் அச்சுப் பதிப்பு, விலை போன்றவற்றையும் மனதிற் கொண்டு கருத்துரைத்தல் அவற்றுள் ஒன்றாகும். வலம்புரிஜான், கங்கைகொண்டானின் கூட்டுப்புழுக்களை மதிப்பிடும் பொழுது, ''சில வரிகளை—அச்சகத்தார் அடித்து விட்டார்களோ என்று சந்தேகப் படுகிற அளவுக்கு இடைவெளி காணப்படுகிறது. காகிதக் கட்டுப்பாடு வந்த பிறகு இந்த கவிதைகள் அச்சிடப் பட்டிருப்பதை நினைக்கும் போது மனம் சஞ்சலப்படுகிறது... கங்கை கொண்டான் அவர்கள் அவரது கவிதைச் சரத்தை அதிக விலைக்குத் தந்திருக்கிறார். மேட்டுக் குடிகள் மட்டுமே இதனை வாங்கிட இயலும்''என்று[46] சுட்டியிருப்பதைச் சான்றாக்கலாம்.

---

43. பைங்கா நாடு வெங்கட்ராமன் ; இராமாயணம் — வால்மீகியின் தமிழ்ச் சுருக்கம் (பாலகாண்டம்)—டி. வி. சுந்தரேச சாஸ்திரிகள்; தினமணி; 5-12-'82.

44. ச.கு. கணபதி; சிலப்பதிகாரம் மணிமேகலை, காப்பிய மரபு — சொ. இலட்சுமணசாமி; தினமணி 13-6-'82.

45. பைங்கா நாடு வெங்கட்ராமன்; தமிழ்த் தென்றல் திரு.வி.க — டி.எம். சௌந்தரராஜன்; தினமணி 5-12-'82

46. வலம்புரிஜான், முன்சுட்டிய நூல், பக் 30—31

நூலின் எல்லாக் கூறுகளுமே மதிப்புரைக்கு உட்படும் என்பதனை இது சுட்டுகிறது. நூலின் கருத்தினை, உள்ளடக்கத்தினை மதிப்பிடுவதாக இருந்த நிலை அதன் பதிப்பு குறித்தும் விரிந்திருப்பது மதிப்புரையின் வளர்ச்சியைக் காட்டுகிறது.

வெளியீடு

மதிப்புரையாளர் தரும் மதிப்புரைகள், அதன் வெளியீட்டு நிலையிலும் சில எண்ணங்களைத் தருகின்றன பிறர் கூற்றைத் தன் கருத்திற்கு அரணாகக் கொண்டு மொழிவதை "முன்னுரையில் புதுவை மாநில உள்துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் என். சவரிராசன் அவர்கள், 'மணியெனப் பயிலும் சொற்கள், மழலைகள் சொகுசுப் பேச்சின் அணியென நடக்கும் பாக்கள்' என்று கூறுவதற்கேற்ப நல்ல புரியும் நடையில் குழந்தைகளும் புரிந்துகொள்ளத்தக்க, பெரியோரும் பாராட்டும் எளிமையுடன் கவிதைகள் எழுதப்பட்டிருக்கின்றன" என்பது[47] காட்டாக உணரலாம்.

நூலுக்கும், நூலாசிரியருக்கும் இடையே உள்ள தொடர்பினை அதாவது அதனைப் படைத்தவர் என்பதற்கு அப்பாற்பட்டு அமையும் தொடர்பினைச் சுட்டி மதிப்பிடுதலை, 'விக்கிரமன் சித்திரத்திலும் சிற்பத்திலும் ஈடுபாடு கொண்டவர். ஆதலால் பஞ்சவர்ணம் என்ற ஓவியனொருவனைப் பாத்திரமாக்கிக் கலையை விளம்பர வியாபாரமாக்கக் கூடாது என்று கூற வைத்திருக்கிறார்' என்பதில்[48] பெறலாம்.

"மரியம்மை—கடல்முத்து; நிலவிலே சிரித்தவள்—கனவிலே நடந்தவள். அவளைப் படிக்கிற போதெல்லாம் 'ஆம்லெட்' நாடகத்திலே வருகிற ஜெர்த்துரு என் நினைவுகளில் கோலம் போட்டாள்......அவளாவது அரசன் மனைவி நான் பார்த்த மரியம்மை ஒரு மீனவன் துணைவி" என்பது[49] போன்று ஒப்பியல் முறையைப் பயன் கொள்வதும் காணப்படுகிறது.

நூல் பெற்ற சிறப்பினைத் தன் மதிப்புரைக்குப் பயன் கொள்வதை 'ஏட்டுருவில் இருக்கும் பொழுதே சிறந்த நூல் எனத் தமிழக அரசால் தெரிந்தெடுக்கப் பெற்று, நிதியுதவியும்

47. சுராஜ்; தலைப்பைத் தொலைத்து விட்டேன் — கோ. கருணாகரன்; தினமணி 26-12-82.
48. நாரண துரைக்கண்ணன்; முன்சுட்டியது.
49. வலம்புரிஜான்; முன் சுட்டியது; ப. 13

பெற்ற சிறப்பினது காந்தீயம்' என்பது இங்கே குறிப்பிடத் தக்கது' என்பதால் பெறலாம்.[50]

கவிதை வடிவினைத் தம் வெளியீட்டிற்குப் பயன்படுத்தலும் பரவலாகக் காணப்படுகிறது. நூல் அக மதிப்புரைகளில் இத் தன்மை அமைகிறது என்பதும் குறிப்பிடற்பாலது. சான்று:

புதுக் கவிதை இலக்கியத்தின்
பிரும்ம மு. மேத்தா!
புயற் காற்றைப் புறாக் கூண்டிலும்
புலியை எலிப் பொறியிலும்
அடைத்திடும் ஆண்மை மிக்கது
இவர் தம் எழுத்துக்கள்
இவரின் பேனாவும்
புதுக் கவிதை பற்றிப் பேச்சு வார்த்தை நடத்தப் பறப்படும்.[51]

தகுந்த காரணங்களுடனே முரண்பட்ட கருத்துகள் மறுத்துரைக்கப்படுகின்றன. "அப் பாடல்கள் அப் பொருள்பட பாடப்பட்டன என்பதற்குரிய ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. அப் பொருள் படப் பாடியிருப்பின் அது அருளாளர்களுக்குப் பெருமை சேர்க்காது. தாம் கையாளும் சமயத்தின் தத்துவங்களை விளக்கிக் கூறி மக்களைத் தம்பால் கவரவே அருளாளர் முயன்றிருப்பார். பிற மதத்தை இழிவு படுத்தும் கொள்கையை வளர்ப்பது பெருமையாகாது" என்பதைக்[52] காட்டலாம்.

நூலாசிரியரின் கூற்றினை அவ்வாறே எடுத்தாள்வதும் மதிப்புரையில் காணப்படுகிறது. '133 மொத்த அதிகாரங்களில் 85 அதிகாரங்களில் அடங்கியுள்ள மூவகைச் சீர்களைத் தொகுத்து ஆராய்ந்துள்ள நூலாசிரியர் 'எளிய மக்களுக்கும் எளிதில் புரிய வைக்க வேண்டியே வள்ளுவர் முச்சீர் வரும்படிக்

---

50. மது. சு. விமலானந்தம்: காந்தியம்—வே. சந்திர சேகரனார்; அணிந்துரை,
51. ப. ரவிச்சந்திரன்; காத்திருந்த காற்று—மு. மேத்தா, முழுமை பெறாத முன்னுரை—இளைய கவிஞர்கள் எழுதுகிறார்கள்.
52. அரங்க சீனிவாசன்; மூவர் தேவாரம்: முதல் ஐந்து பதிகங்கள்— ம. சா. அறிவுடை நம்பி; தினமணி 13-6-82

குறளை ஆக்கினார்' என்கிறார்'' எனும் [53] பகுதி இதனை உணர்த்துகிறது.

மதிப்புரையின் பயன்

1. நூல்களைப் பயில்வதில் பெரு விருப்புடையோருக்குப் படிக்க வேண்டிய நூல்களைத் தேர்வதில் துணை நிற்கின்றது.

2. நூல் பற்றிய பொதுவான கண்ணோட்டத்தினை யாவரும் பெற உதவுகிறது.

3. புதிய புதிய சிந்தனைகளுடன் சிறந்த கருத்துகளை நல்கும் நூல்களைப் படைப்பதற்குப் படைப்பாளருக்கு உந்து கோலாகிறது.

4. மதிப்புரையாளர் தரும் கருத்துகள் வாசகருக்கு அதிகப் படியான செய்தியாகவும், ஆய்வாளர் ஆய்வினை வளப்படுத்துவ தாகவும் அமைகின்றன.

5. புற்றீசல்களைப் போல பயனற்ற நூல்கள் பல்கிப் பரந்து விடுவதை இம் மதிப்புரைகள் ஓரளவு தடுக்கின்றன. மற்றும் அத்தகைய நூல்களின் எழுச்சியைத் தடைபடுத்துவதற்கான முயற்சியைப் பலர் தம் மதிப்புரையில் அதனைக் குறிப்பிடுவதன் வழி மேற்கொள்கின்றனர். நூலுக்குப் புறத்தே எழும் மதிப் புரைகளே இப் பணி புரிகின்றன என்பதும் குறிப்பிடற் பாலது.

6. மதிப்புரைக்கும் மதிப்புரைகள் தோன்றுதல் [54] மொழி வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதலாகிறது. மதிப்புரையாளர் தம் நடு நிலையிலிருந்து தவறாதிருக்கச் செய்கிறது. மற்றும் விழிப்புணர் வோடு செயல்பட வைக்கிறது. ஆய்வாளர் ஆய்வுத் திறனுக்கும் துணை நிற்கிறது.

முடிவுரை

இது காறும் கண்டனவற்றைத் தொகுத்தும் பொது நிலை யில் தமிழில் இடம் பெற்றுள்ள மதிப்புரைகளையும் நோக்குங் கால் கீழ்க்கண்ட முடிவுகள் எழுகின்றன.

1. நூலின் நிறை, குறைகளை ஒருங்கே காணுதல் மதிப் புரையின் நோக்கமாயினும் மதிப்புரைகள் பெரும்பாலும்

---

53. இல. இராசேந்திரன்; முப்பாலில் முச்சீர் முத்துக் கள்—கு. மோகனராசு; தமிழரசு; 16—10—1982.

54. வலம்புரிஜான்; முன் சுட்டிய நூல்; எம். எஸ். தியாகராஜன் ''நவம்பர் மாதச் சிறுகதை'' விமர்சனத்திற்கு விமர்சனம்.

பாராட்டுரையாகவே அமைகின்றன. குறைகளைச் சுட்டுதல் ஓரளவே காணப்படுகிறது. நூல் அக, நூல் புற மதிப்புரைகள் இரண்டிற்கும் இந்நிலை பொருந்தும்.

2. தமிழ் நூல் பற்றித் தமிழில் அமையும் மதிப்புரைகளுக்கும், ஆங்கிலத்தில் அமையும் மதிப்புரைகளுக்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாடு இல்லை.

3. நூல்களின் இயல்பிற்கு ஏற்றவாறு மதிப்புரைகளின் இயல்பும் மாற்றம் கொள்கின்றன.

4. படைப்பாளர்க்கென்று தனித்த பண்புகள் அமைதல் போன்று மதிப்புரையாளரும் தங்களுக்கென்று தனித்தன்மை பெற்றுள்ளனர். ஒவ்வொருவரைப் பற்றியும் தனித்த நிலையில் ஆய்வு மேற்கொள்ள இயலும்.

5. தனித்ததொரு துறையாக, கலையாக வளர்ந்து வருகின்ற இதனைப் பாராட்டுரையாகப் பாராட்டாது குறைகளையும் கண்டுணர்த்தல் வாசகர், நூலாசிரியர், மொழி எனப் பலருக்கும் பயன்பாடுடையதாகும். எனவே மதிப்புரையாளர் ஒரு பாற் சாராது நடுநிலைக் கருத்துரைத்தல் தேவையாகிறது.

துணைநின்ற பிற நூல்கள்

1. தமிழ் இலக்கிய விமர்சகர்கள்; பலர்; புதுக்கோட்டை; சுவடு; மு. ப. பிப். 1979.

2. தமிழில் விமரிசன இலக்கியம் — ஒரு முன்னுரை; எம். பாலு, நாகர் கோவில்; சோபிதம் பதிப்பகம்; மு. ப. 1979.

3. ஜெயகாந்தன் — ஒரு விமர்சனம்; எஸ். தோதாத்ரி; சிவ கங்கை; அன்னம்; மு. ப. ஆக. 1976.

இணைப்பு : மதிப்புரை கண்ட நூல்கள்.

1982-இல், தினமணி (தி), தமிழரசு (த), தமிழியல் (Journal of Tamil Studies), இந்து (இ), இந்தியன் எக்ஸ்பிரஸ் (இ. எ.) ஆகிய இதழ்களில் மதிப்புரை பெற்ற தமிழ் நூல்களின் வரிசை இவண் கொடுக்கப் பட்டுள்ளது. பொதுவாகத் தமிழின் அனைத்துத் துறைகளைச் சார்ந்த நூல்களும் மதிப்புரைக்கு உட்படுகின்றன. அவ்வத் துறைகளில் சிறப்புடையோரால் அவை மதிப்பிடப் பெறுவது உணரப்படுகிறது. ஒவ்வொரு இதழுக்கும் குறிப்பிட்ட ஒரு சில மதிப்புரையாளர் இருப்பதையும் அறிய முடிகிறது. அரங்க சீனிவாசன், பைங்கா நாடு வெங்கட்

ராமன், இரா. சுராஜ், மு.அருணாசலம் போன்றோர் மிகுதியான நூல்களை மதிப்பிட்டுள்ளனர்.

• மதிப்புரை பெற்ற நூல்கள் பெரும்பாலும் 1982-க்கு முன் வெளிவந்தவையாகும். 1982-இல் வெளிவந்து மதிப்புரை பெற்ற நூல்கள்மிகச்சிலவே. மதிப்பீட்டாளர் நூலின்பதிப்பு ஆண்டினை மிக அருகியே தருவதனால் நூலின் பதிப்புக்கும் மதிப்புரைக்கும் இடையே உள்ள கால இடைவெளியைத் தெளிவாக உணர இயல வில்லை. ஆயினும் நீண்ட இடைவெளி இருப்பதைக் குறிப்பாக ஊகிக்க முடிகிறது. முதலபதிப்பு மட்டுமின்றித் தொடரும் பதிப்புகளும் மதிப்பீட்டிற்கு உள்ளாவதைக் காணமுடிகிறது. ஆனால் இது பற்றிய குறிப்பினையும் மதிப்புரையாளர் சுட்டுவ தில்லை. பெரும்பாலும் ஒரு இதழில் மதிப்புரை பெறும் நூல், பிறவற்றில் இடம்பெற வில்லை. ஓரிரு நூல்களே தினமணி, இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ் எனும் மூன்று இதழ்களிலும் மதிப்புரை பெற்றுள்ளன. (51, 53, 89, 275, 314, 418). ஈரிதழில் இடம் பெறுவனவும் சிலவே. (43, 47, 49, 52, 57, 69, 71, 101, 102, 138, 159, 16 , 161, 168, 201, 206, 207, 210, 211, 225, 229—232, 237, (255, 265, 270, 273, 298, 300, 316, 319, 323, 332, 343, 347, 368, 371, 377, 383, 387, 395, 399, 410, 421, 442, 448, 458, 469).

இங்கு, மதிப்புரையில் இடம் பெற்ற நூலின் பெயர்; ஆசிரியர், மதிப்புரை இடம் பெற்ற இதழ் மதிப்புரையாளர் என்ற வரிசையில் செய்திகள் தொடுக்கப்பட்டுள்ளன. நூலின் இயல்பிற்கேற்ப வகை செய்யப்பட்டுள்ள இவ் வரிசையில் மொழிபெயர்ப்பு நூல்கள் நூல் ஆசிரியரை அடுத்து (மொழி) என்பதால் சுட்டப்பட்டுள்ளன. அது நூலாசிரியர் அதற்கு மொழி பெயர்ப்பாளரே என்பதையும் உணர்த்தும். மதிப்புரையாளர் சுட்டப்படாத இடங்களில் கேள்விக் குறி இடப்பட்டுள்ளது.மிக்க சிறப்புடைய நூல்களுக்குத் தனித்து மதிப்புரை வழங்கிப் பெருமைப் படுத்துவதை இந்து (The Hindu) நாளிதழில் காணமுடிகிறது. கண்ணதாசனின் இயேசு காவியத்திற்கு இந்தியன் எக்ஸ்பிரஸில் (அக். 3) என். கிருஷ்ணசுவாமி அளித்துள்ள கால் பக்க மதிப்புரையே 1982-இல் இடம் பெற்ற மதிப்புரைகளில் அளவால் பெரியதாகும். பாரதி நூற்றாண்டானமையின் அவரைப் பற்றிய பல நூல்கள் மதிப் புரை பெற்றமை சுட்டத்தக்கது.

இலக்கியம்.

1. அங்கயற்கண்ணி அணிமாலை; கோகபென் — தி. ஆக. 15—பைங்கா நாடு வெங்கட்ராமன்.
2. அத்யாத்ம ராமாயணம், ஹரிணி (மொழி) — இ. ஏ. சூன். 27 — கேஇபி.
3. அபிராமி அருட்பா—2, ராஜலட்சுமி பரமேஸ்வரன் — தி. மே. 23—பைங்காநாடு வெங்கட்ராமன்.
4. அய்யப்பன் அந்தாதி; கே. ஆர். பாலகிருஷ்ணன்—தி. சூலை. 11—இரா. சுராஜ்.
5. ஆண்டாள் சந்திரகலா மாலை; ஸ்ரீ வில்லிசாமி — தி. ஆக. 1 — ?
6. ஆதிசங்கரர் புஜங்கங்கள்; ஹா. கி. வாலம் (மொழி) — இ நவ. 2 — சி. சுந்தரேசன்.
7. இயேசு காவியம், கண்ணதாசன் — தி மார். 7, அரங்க சீனிவாசன்; இ. எ. அக். 3 — என். கிருஷ்ண சுவாமி.
8. இராம சரித மானஸ் — பால காண்டம், சிவராம கிருஷ்ணன் (மொழி) — இ. சூலை. 6 — எஸ் வி கே.
9. இராமாயணம் — வால்மீகியின் தமிழ்ச் சுருக்கம் (பால காண்டம்) — டி. வி. சுந்தரேச சாஸ்திரிகள் (மொழி) — தி. மே. 12 — பைங்காநாடு வெங்கட்ராமன்.
10. கலைமகள் பிள்ளைத்தமிழ்; கி. வேங்கடசாமி ரெட்டியார் — தி. ஏப். 4 — அரங்க. சீனிவாசன்.
11. கீர்த்தனை மாலை, பாபநாசம்சிவன் — இ. எ. அக். 10 — ரஞ்சனி சுவாமிநாதன்.
12. சிவமாலை, சிவப்ரியா — தி. பிப். 28 — பைங்கா நாடு வெங்கட்ராமன்.
13. சிவன் அருள் திரட்டு, தி. பிப். 28 — திருவாரூர் மா. வரதராஜன்.
14. சிறுவபுரி திருப்புகழ், நல். முருகேச முதலியார் — இ. ஏப். 6, ஏ. ஏ. மணவாளன்.
15. சுடர்மணிமாலை, தி ஆக. 1— சே. ரா.
16. சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ், வி.மு சுப்பிர மணிய ஐயர்( பதி) –தி. டிச. 26— அரங்க.சீனிவாசன்.
17. சோலை மலைக் குறவஞ்சி, ஐம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார் — தி. செப். 12.—அரங்க. சீனிவாசன்.

18. தந்திவனப் புராணம், தா. வே. வீராசாமி (பதி) —தி. சூலை 11— அரங்க. சீனிவாசன்.

19. திருஅருட்பா (3 தொகுதிகள்) — தி. மே. 16 — இரா. சுராஜ்.

20. திருஅருட்பா மூலமும் உரையும், ஔவை. துரைசாமிப் பிள்ளை (உரை) — தி. சூலை 11 — ?

21. திரு எழு கூற்றிருக்கை, சி. ஜகந்நாதாசாரியார் (உரை); தி.ஆக. 1. — பைங்காநாடு வெங்கட்ராமன்.

22. திருப்புகழ் மாலை, எஸ். முத்துஸ்வாமி (தொகு) — தி. சன. 3. —எஸ் வி ஆர்.

23. திருவேங்கடமாலை, வசந்தா கிருஷ்ணஸ்வாமி — தி. சூன் 20 — தேவகி குருநாத்.

24. தொண்ணூற்றிரண்டு உபந்யாசமாலை; அண்ணங்கரா சாமி — தி. சூன். 6 — ?

25. நாராயணீயம், எம். எஸ். விஜயராகவன் + வி. கே. வேங்கட தீக்ஷிதர் (மொழி) — இ. எ. சூலை 25 — கே. இ. பார்த்தசாரதி.

26. நாலாயிர திவ்விய பிரபந்தம், கே.வேங்கடசாமிரெட்டியார் (பதி) — இ. பிப். 6, டி. வி. வி

27. நாலாயிர திவ்விய பிரபந்தம், திருவேங்கடத்தான் திருமன்றம் (பதி) — இ. சன. 3 — ஜே. பார்த்தசாரதி.

28. பகவத் விஜயம் — முதலிரண்டு திருவாய் மொழிகள், கிருஷ்ணசாமி ஐயங்கார் (பதி) — தி. ஆக. 15 - அரங்க. சீனிவாசன்.

29. பரகாலன் கண்ட பரிமள அரங்கன், ஆ. ராமபத்திரன் (உரை) — தி. சூன். 13 — இரா. சுராஜ்.

30. பாபநாசம் சிவன் இசைப் படைப்புகள் — தி. அக். 3 — என் பி எஸ்.

31. பூச்சி அய்யங்கார் சாகித்தியங்கள், சேலம். து.செல்லம் ஐய்யங்கார் — தி. நவ. 14, எஸ் பி எஸ்.

32. மகர நெடுங்குழைக் காதர் பாமாலை அந்தாதி, நாராயண தீட்சிதர் — தி. சூன். 6 — அரங்க. சீனிவாசன்.

33. மன அமைதி தரும் நித்ய பாராயணங்கள்; ஹா. கி. வாலம் (மொழி)—இ. நவ. 2—பி. சுந்தரேசன்.

34. மனிததெய்வம் காந்திகாதை, அரங்க. சீனிவாசன்— இ. எ. மார்ச். 21—என். கிருஷ்ணசாமி.

35. மூவர் தேவாரம்—முதல் ஐந்து பதிகங்கள்; ம. சா. அறிவுடைநம்பி—தி. சூன். 13-அரங்க சீனிவாசன்.

36. ஸ்ரீ தேவி பாகவதஸாரம்—மூன்றாவதுபாகம், அண்ணா (உரை)—தி. மே. 7—பைங்கா நாடு வெங்கடராமன்.

37. ஸ்ரீநாம ராமாயணம், பாபு, ராகவாசாரியார் (மொழி) தி. ஆக. 25-இரா. சுராஜ்.

38. ஸ்ரீநாராயணீயம்—1, எம். எஸ். விஜயராகவன் (உரை)—தி. பிப். 21—பைங்கா நாடு வெங்கட்ராமன்.

39. ஜெர்மானிய புத்திலக்கியம்—கே. திரவியம் + தெசிணி, (மொழி)—இ. சூன் 1—ஆர். சுந்தரேசன்.

இலக்கியத் திறனாய்வு

40. அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ஏ. ராமகிருஷ்ணன்—இ. அக். 19-சி. பால சுப்பிரமணியம்.

41. அப்பர் தேவாரத் திறன்—சோ. சிங்கார வேலன்—தி. மே, 30—அரங்க சீனிவாசன்.

42. ஆத்திசூடி நீதிக்கதைகள், வசந்தா ராமநாதன்—தி. சன 10—?

43. இராமனைத் தரிசிப்போம், கம்பன் கழகம் (பதி)—தி. ஏப். 18—மா. வரதராஜன்; இ.மே, 11—என். ஜெயராமன்.

44. இருமொழி இலக்கிய இன்பம், எஸ். என். ஸ்ரீராம தேசிகன்—இ. சன. 12—ஆர். ஆர்.

45. இலக்கியக்காட்சிகள், சி. பாலசுப்பிரமணியம்—தி. செப். 5—அரங்க சீனிவாசன்.

46. இலக்கியத் தகவு, மா. இராமலிங்கம்—தி. சன. 24—தாமரைக் கண்ணன்.

47. இலக்கிய மலர்கள்—2, மு.மு. இஸ்மாயீல்—தி. மார்ச். 28—அரங்க சீனிவாசன்; இ. சன. 26.—சி. பாலசுப்பிரமணியன்.

48. இளைஞர் கம்பராமாயணம், சரஸ்வதி ராமனாதன்—இ. மார்ச் 2—ஏ.ஏ. மணவாளன்.

49. ஈழத்திலிருந்து ஓர் இலக்கியக் குரல், தேனியன் (பதி)—இ. செப். 26—பி. சுந்தரேசன்; இ.எ. செப். 5—என். கிருஷ்ணசுவாமி.

50. உலகநீதிகள், வே. கபிலன்—தி. சன. 24—பைங்காநாடு வெங்கட்ராமன்.

51. எண்பதில் தமிழ், ச. வே. சுப்பிரமணியன் + ர. விஜய லட்சுமி (பதி)—தி. அக். 17—ஆர். சீனிவாசன்; இ. ஆக. 3—எஸ். ஆர். கோவிந்தராஜன்; இ. எ. மே. 30—கே. இ. பார்த்தசாரதி.

52. கதைக் கலை, அகிலன்—இ. ஏப். 20—பி. சுந்தரேசன்; இ. எ. சன. 3—கே. இ. பார்த்தசாரதி.

53. கம்பன் இலக்கிய உத்திகள்—ச. வே. சுப்பிரமணியன்—தி. சூன் 13—மா. வரதராஜன்; இ. ஆக. 10— மு. மு. இஸ்மாயில்: இ. எ. ஏப். 4—கே. இ. பார்த்தசாரதி.

54. கம்பன் காவியம் அன்றும் இன்றும் என்றும், பி. ஸ்ரீ + சரஸ்வதி ராமனாதன் — தி. டிச. 26—குடந்தை புகழேந்தி.

55. கம்பனைத் தரிசிப்போம், கம்பன் கழகம், ராஜ பாளையம் (பதி)—இ. எ. சூன் 20, கே. இ. பார்த்த சாரதி.

56. கலைஞர் கவிதை திறனாய்வு—காஜா மொஹிதீன் (தொகு)—இ. எ. ஆக. 8—என். கிருஷ்ணசுவாமி.

57. கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும், மு.மு. இஸ்மாயில் தி.நவ. 28—அரங்க சீனிவாசன்; இ. எ. டிச. 19. என். கிருஷ்ணசுவாமி.

58. கவியரசர் பாரதியார், ப. அருணாசலம்—இ. எ. பிப். 14—கே. இ. பார்த்தசாரதி.

59. கற்புக்கரசிகளின் சிறப்பு, ஹா. கி. வாலம்—தி. ஏப். 4—இரா. சுராஜ்.

60. காந்தியடிகளும் கம்பரும், ம.பொ. சிவஞானம்—இ.மே 4—ந. சஞ்சீவி.

61. குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி, கதி. கணேசன்—தி. மே.16—மா. வரதராஜன்.

62. கொன்றை வேந்தன் நீதிக்கதைகள், வசந்தா இராம நாதன்—தி. சன. 3—பைங்காநாடு வெங்கட்ராமன்

63. கோதையும் கோவிந்தனும், ஏ. ஸ்ரீ ராமுலு தேசிகன்—தி. மே. 16—அரங்க. சீனிவாசன்.

64. சங்க கால வரலாறு, ஏ. சுவாமிநாதன்—தி. நவ. 7—ஜனநாதன்.

65. சங்க நூல்களில் விந்தைப் பூச்சி, பி. எல். சாமி—த.நவ. 1—?

66. சமய இலக்கியங்கள், குன்றக்குடி அடிகளார்—தி. சன. 24—அரங்க சீனிவாசன்,

67. சிந்தைக் கினிய சீறா, எம். முஸ்தபா—இ. எ. சூலை. 8, ஜே. பி.

68. சிலப்பதிகாரத்து இசைத் தமிழ், எஸ். ராமநாதன்—இ. சூலை. 6—எம். அருணாசலம்.

69. சிலப்பதிகாரம் மணிமேகலை காப்பிய மரபு, கொ. இலட்சுமண சாமி—தி சூன். 14—ச. கு. கணபதி; இ. சூன். 22, எஸ், என். ஸ்ரீ ராம தேசிகன்.

70. ஞானரதம் ஒரு கண்ணோட்டம், தேவி தாசன்—தி. சன. 17—இரா. சுராஜ்.

71. டாக்டர் உ. வே. சா. பதிப்புப்பணி, பூ. சொல்விளங் கும் பெருமாள்—தி. சூன், 20—அரங்க சீனிவாசன்; இ. எ. ஏப். 11—கே. இ. பார்த்தசாரதி

72. தமிழ் இலக்கியக் கொள்கை—6, ச. வே. சுப்பிர மணியன் + ந. கடிகாசலம்—தி. சூன் 7—அரங்க சீனிவாசன்.

73. தமிழ் இலக்கியக் கொள்கை—7, ச.வே. சுப்ரமணியன் + ர. விஜயலட்சுமி—தி, சன. 28—அரங்க சீனிவாசன்.

74. தமிழ் நாடக ஆய்வு, இரா. குமார வேலன்—தி. மார்ச் 28—தாமரைக் கண்ணன்.

75. தமிழ் நாவல்களில் காந்தியத் தாக்கம், சபா. அருணா சலம் —தி. செப். 5—?

76. தமிழ் நூல்களில் குறிப்புப் பொருள், ம. ரா. பொ. குரு சாமி —இ. மார்ச் 23—ஏ. ஏ. மணவாளன்.

77. தமிழ் மந்திரம், பாலூர் கண்ணப்ப முதலியார்—தி. சூன் 20—இரா.சுராஜ்.

78. தேம்பாவணித் துணைக் கதைகள், துரை. சுந்தர மூர்த்தி – தி. சூலை 11—ஜே. ஜே. பிரகாஷ்

79. தேவாரத் திருச் செல்வர்கள், தே. ப. பெருமாள்—தி. நவ. 2 அரங்க. சீனிவாசன்.

80. நல்லோர் நல்லுரை, சி. பாலசுப்பிரமணியம்—தி. சன. 10. பைங்காநாடு வெங்கட்ராமன்

81. நெஞ்சின் நினைவுகள், சி. பாலசுப்பிரமணியம், தி. ஆக. 29—?

82. பத்துப்பாட்டு ஆய்வு, தெ. பொ. மீ—இ. சன. 5—மு. அருணாசலம்.

83. பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை —1 தி. மார்ச் 21—ச. கு. கணபதி.

84. பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை—2—தி. மார்ச் 7—ச. கு. கணபதி.

85. பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை—3—தி. ஏப். 4—ச. கு. கணபதி.

86. பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை—1—தி. ஆக. 1—ச. கு. கணபதி.

87. பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை—2—தி. ஆக. 22—ச. கு. கணபதி.

88. பதினான்காவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை—3—தி. ஆக. 29—ச. கு. கணபதி

89. பல்கலை நோக்கில் பாரதி, ம. ரா. சுதாகர்—தி. நவ. 28— இரா. சுராஜ்; இ. டிச. 7—ஆர் ஏ. பத்மனாபன்; இ. எ. அக். 31—என். கிருஷ்ணசாமி.

90. பன்னிரண்டாம் கருத்தரங்கு ஆய்வுக் கோவை—எஸ். அகத்திய லிங்கம் + தா. ஏ. ஞானமூர்த்தி (பதி)— இ. பிப். 14, என்.எஸ்.ஆர்.

91. பாட்டுக்கொரு புலவன், கே. பொன்னுசாமி—தி. செப். 12—இரா. சுராஜ்.

92. பாரதி கண்ட கவிதை தலைவி, ஏ. வி. சுப்ரமணியன்—இ. டிச. 7—ஆர் ஏ. பத்மனாபன்

93. பாரதி கண்ட தேவி தரிசனம், நஜன்—இ. பிப். 16—ஆர் ஆர் சி

94. பாரதி சிந்தனைகள், செந்துறை முத்து—இ. ஏப் 4—கே. இ. பி.

95. பாரதிதாசன் ஒரு நோக்கு, ச. சு. இளங்கோ—தி. செப். 26—அரங்க. சீனிவாசன்

96. பாரதிபதியம், தமிழ்முடி—தி. மே. 9—இராசு.

97. பாரதியார் கட்டுரைகள்—இ. எ. ஏப். 4 — கே இ பி.

98. பாரதியார் கவிநயம் —ரா. அ. பத்மனாபன் (பதி) தி. செப். 19—இரா. சுராஜ்.

99. பாரதியார் கவியின்பம்—ரா. அ. பத்மனாபன் (தொகு) —இ. நவ. 9—பிரேமா நந்த குமார்.

100. பாரதியாரின் புதிய ஆத்திசூடி, லலிதா பரமேஸ்வரன் —தி. சூலை 25—வில்லிதாசன்.

101. பாரதியாரும் தமிழ்ப்புலவர்களும், பெ. சு. மணி—தி. சன. 31, —இரா. சுராஜ்; இ. சூன் 1—ஆர். ஏ. பத்மநாபன்

102. பாரதியின் பண்பாடு, ம. வி. சுதாகர்—தி. டிச. 5—இரா. சுராஜ், இ. எ. டிச. 19—என். கிருஷ்ணசுவாமி.

103. பாரதியின் புலமை நலன், பா. வளன் அரசு(பதி)—தி. அக். 17—இரா. சுராஜ்

104. பாரதியின் போர்க்குரல், ம. பொ. சிவஞானம்—த. ஏப் 16—?

105. பாரதியுகம்,? —தி. ஆக. 8—?

106. பாரதியும் தாகூரும், பி. ஸ்ரீ—தி. பிப். 24—இரா.சுராஜ்

107. பாரதியும் பாரததேசமும், பி. தூரன் (தொகு)—இ. எ. ஏப். 4—கே. இ. பி.

108. பாரதியைப் பற்றி நண்பர்கள், ரா. அ. பத்மனாபன்—இ. எ. டிச. 19—என். கிருஷ்ணசுவாமி.

109. பாரியும் கபிலரும், எஸ். இராஜு செட்டியார்— த. ஏப். 16.

110. பாலர் மகாபாரதம், வசந்தா இராமநாதன்—தி. டி. 19—அரங்க சீனிவாசன்.

111. புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, பாலா—இ. சூன் 15—எஸ். ஆர். கோவிந்தராஜன.

112. புதுயுகக்கவிஞர் பாரதி திறனாய்வு,திருலோக சீதாராம் —தி. பிப். 7—இரா. சுராஜ்.

113. மக்கள் கவிஞர் பாரதி, கோ. செல்வம்—தி. செப்.26—குடந்தை புகழேந்தி

114. மக்கள் போற்றும் மகாகவி, எதிரொலி விசுவநாதன் தி. சன. 10, இரா. சுராஜ்.

115. மகாகவி பாரதி கட்டுரை மணிமாலை, சீனி. விசுவ நாதன்—தி. பிப். 14, இரா. சு.

116. மகாகவி பாரதி மதிப்பீடுகள், சிற்பி (தொகு)—இ. சூலை 13—ஆர். ஏ. பத்மனாபன்.

117. மகாகவி பாரதியார் கவிதையும் வாழ்க்கையும், டி. எஸ். ராஜு, இ. டிச 7—ஆர். ஏ. பத்மனாபன்.

118. மகாகவி பாரதியாரின் தராசு தி. செப். 5—?.

119. மணிமேகலைச் சிந்தனைகள்—தி. பிப். 7 திருவாரூர். மா. வரதராஜன்.

120. முதற்காப்பியச் சிந்தனை, ம. ரா. பொ. குருசாமி—தி. மார்ச் 21—அரங்க சீனிவாசன்.

121. ராமாயணம், மகாபாரதம் ஒப்பியல் ஆய்வு, ஏ. கே. கணேசன்—தி. மார்ச் 4—என். பி. ஸ்ரீரங்கன்.

122. வடலூர் வள்ளற் பெருமானார், மெய்வழிச் சுந்தரம் செட்டியார்—தி. செப். 26—குடந்தை புகழேந்தி.

123. வள்ளலார் பெருமைகளும் சுத்த சன்மார்க்க விளக்கமும் வெ. இராஜப்பா—தி நவ. 7—குடந்தை புகழேந்தி.

கவிதை

124. அந்தியில் மலர்ந்த அல்லிமலர்கள், குணப்பிரியன் — இ. டிச. 28—வேதம்.

125. அற்புதமே வகுளாபரணமே, எஸ். ரகுவீரன்—தி. ஆக. 8—இராசு.

126. ஆகாசம் நீலநிறம், விக்ரமாதித்யன், தி. டிச. 5—தேவகி குருநாத்

127. இளைஞர்களால்தான் முடியும், மா. பெருமாள் (தொகு)—இ. எ. செப். 26—ஆர். கிருஷ்ணமூர்த்தி.

128. இன்னொரு தேசியகீதம், வைரமுத்து—இ. சூலை 18—என். கிருஷ்ணசாமி.

129. எங்கள் சஹாரா இங்கே இருக்கிறது, இரா. கதைப் பித்தன்—தி. அக். 24—அபராஜிதா

130. எழுச்சி, கு. ஆ. சேது-தி. நவ. 21—குடந்தை புகழேந்தி.

131. ஐயாறப்பன் கவிதைகள்—தி மே 30—?

132. ஒன்பது செண்பகப்பூ, துறைவன்—இ. சன. 5—வேதம்,

133. கவிதாஞ்சலி, கண்ணதாசன்—இ. எ. ஆக. 1—ஆர். ஆர்.

134. கவிபாரதிக்குஒருகவியாரம், கே. இளையபெருமாள்—இ. எ. பிப். 4—கே. இ. பார்த்தசாரதி.

135. கனவுப் பூக்கள், ஆலந்தூர் மோகனரங்கன்—த. ஜூன் 16—?

136. காந்தங்கள், பிரதிபாராஜ கோபாலன்—இ. எ. ஜூலை 18—என். கிருஷ்ண சுவாமி.

137. காலப்பறவைகள், நா. நாகராசன்—த. நவ. 1—?

138. குற்றங்களே தீர்ப்பு எழுதினால், துரைவசந்தராஜன—த. ஜூன் 16—?, இ.எ. ஆக. 1—ஆர். ஆர்.

139. ஞானி, நல்லான் சக்கரவர்த்தி ஸ்ரீனிவாச ராமசுவாமி (மொழி)—தி. அக். 3—அபராஜிதா

140. தலைப்பைத் தொலைத்து விட்டேன், கோ. கருணாகரன்—தி. டிச. 26, இரா. சுராஜ்.

141. திருத்தி எழுதிய தீர்ப்புகள், வைரமுத்து—இ.எ. சூலை 18—என். கிருஷ்ணசாமி.

142. தென்றல், அருள்மொழி—இ.எ. மே 30—கே இ பி

143. நவமணி, இரா. இராதா கிருஷ்ணன் (தொகு) தி. ஏப். 25—பைங்காநாடு வெங்கட்ராமன்

144. நெருப்புக்காடுகள், தென்னவன்—இ. ஆக. 3—வேதம்.

145. பர்ணசாலை மான்கள், சே. சேவற்கொடியோன்—தி. அக். 17, அபராஜிதா.

146. பாரதி காணிக்கை, தமிழ்முடி—தி. மே. 30—இரா. சுராஜ்.

147. புழுதிப்பூக்கள், மானாமதுரை மாசி—இ. சன. 5—ஆர். சுந்தரேசன்.

148. பொழுது புலர்ந்தது, பட்டுக்கோட்டை இராசேந்திரன்—த. ஜூன் 16—?

149. மலைமாநதியோ, தயானந்தன் பிரான்சிஸ்—இ. எ. ஆக. 29—?

150. மனக்குயில்கள் ஓய்வதில்லை, குமாரி அமுதம்—இ.எ. பிப். 7—கே இ பி.

151. மனத்தூறல், எம்.ஏ.கணேசன்—இ.நவ.23—பி. சுந்தரேசன்

152. மோகனரங்கன் கவிதைகள், ஆலந்தூர் கோ. மோகன ரங்கன் — தி. பிப். 7. தாமரைக்கண்ணன்

153. மௌன மயக்கங்கள், சிற்பி — இ. டிச. 14 — ஆர். சுந்தரேசன்

154. வாழ்வொளி, மா. வேதாசலம் — தி. சன. 3 — ?

155. விசாரணைகள், இளைய பாரதி — இ. மே. 18, வேதம்

156. வியர்வை முத்துக்கள், க.மு. அரங்கன் — தி. ஆக. 29— தேவகி குருநாத்

157. வீணை மலர்கள், நாவேந்தன் — த. சூன் 16 — ?

158. வைகறை மேகங்கள், வைரமுத்து — இ. டிச. 7 — வேதம்

159. வெளிச்சம் வெளியே இல்லை, மு. மேத்தா — இ. சூன் 15 — ஆர். சுந்தரேசன், இ. எ. சூலை 8 — என். கிருஷ்ணசுவாமி.

புதினம்

160. அந்தி நேரத்து உதயங்கள், வாஸந்தி — இ. சூலை 27 எஸ். ஆர். கோவிந்தராஜன்; இ. எ. ஆக. 29 — ஜே. செலின் தமயந்தி.

161. அவன் ஆனது, சா. கந்தசாமி — தி. சூலை 11 — தேவகி குருநாத், இ. எ. செப். 26, சி. ஜி ரிஷிகேஷ்

162. ஆகாச வீடுகள், வாசந்தி — தி. நவ. 28 — மா. வரத ராஜன்

163. ஆயுதபூஜை ஜெயகாந்தன், இ. எ. சூலை 25 — என். கிருஷ்ணசுவாமி

164. ஆரண்ய வாசம், இந்துமதி — இ. டிச. 7, எஸ் ஆர் ஜி.

165. ஒரு கூரைக்கும் கீழே, ஜெயகாந்தன் — இ. மார்ச் 16. எம்.டி கணபதி

166. ஒருமலர், ரமணி சந்திரன் — தி. டிச. 26 — காந்தி ராமன்

167. ஓசைகள் அடங்கிய பிறகு, ராஜம் கிருஷ்ணன் — தி. மே 9 — பைங்காநாடு வெங்கட்ராமன்

168. கடல்ராணி, சாண்டில்யன் — தி. மே 30 — பைங்கா நாடு வெங்கட்ராமன், இ. ஏப். 20 — எஸ். ஆர். கோவிந்தராஜன்

169. கரிக்கோடுகள், ஜெயகாந்தன் — இ. பிப். 2 — பி. சுந்தரேசன்

170. கல்லறைகள், ஐசக் அருமைராஜன் — தி. மே 30 — தேவகி குருநாத்

171. காத்திருக்க ஒருத்தி, ஜெயகாந்தன் — இ. மார்ச் 16 — எம். டி. கணபதி

172. காளான், சிவசங்கரி — இ. பிப். 2 — எஸ். ஆர். கோவிந்தராஜன்

173. சிங்காரி பார்த்த சென்னை, கண்ணதாசன் — இ. மே 11 — ஆர். சுந்தரேசன்.

174. சீதம்மா, எஸ். குலசேகரன் — தி. மார்ச் 28 — பைங்கா நாடு, வெங்கட்ராமன்

175. சேற்றில் மனிதர்கள், ராஜம் கிருஷ்ணன், இ. சூலை 13, எம்ஆர்கே.

176. சொர்க்கம் ஒரு சுகமோ, சௌதலி — தி. செப். 5 — எஸ். திருமலை

177. சோழ இளவரசன் கனவு, விக்கிரமன் — தி. சூலை 18 — பைங்காநாடு வெங்கட்ராமன்

178. சோழ நிலா, மு. மேத்தா — தி. நவ. 21 — காந்திராமன்

179. தரையில் இறங்கும் விமானங்கள், இந்துமதி — தி. ஆக. 8 — பைங்காநாடு வெங்கட்ராமன்

180. நதிக்கரையோரத்து நாணல்கள், பாரதிப்ரியன், இ. செப். 7 — எம். ஆர். ரங்கராஜன்

181. நந்திபுரத்து நாயகி, விக்கிரமன் — தி. சூலை 7 — யாரோ.

182. நந்திவர்மன் காதலி, ஜெகசிற்பியன் — தி. பிப். 7 — கேவிஆர்.

183. நம்பிக்கைகள், ரா. சு. நல்ல பெருமாள் — தி. ஆக. 8— தேவகி குருநாத்

184. நிசப்த சங்கீதம், நா. பார்த்தசாரதி — தி. சூன். 20 — பைங்காநாடு வெங்கட்ராமன்

185. நினைவுகள் நெஞ்சோடுதான், இந்துமதி — இ. சூலை. 6, ஆர். சுந்தரேசன்.

186. நீலவல்லி, சாண்டியல்யன் — இ. நவ. 16 — எஸ்ஆர்ஜீ
187. பஞ்சமர், கே. டானியல் — தி. டிச. 19 — ?
188. பிருந்தாவனம், கண்ணதாசன் — இ. எ. டிச. 15, ஆர். பத்மாவிஜயம்
189. புல்லின் இதழ்கள், கே. பி நீலமணி — தி. ஏப். 25 — என் பி எஸ்,
190. பெண் இயந்திரம், சுஜாதா — இ. டிச. 31—எஸ்ஆர்ஜி.
191. பெண் ஒரு மலர், கோமகள் — இ.ஜூன் 29—எஸ்ஆர்ஜி.
192. மண்ணுலகத்து நல்லோசைகள், தி. சா. ராஜு — தி. மார்ச் 28 — எஸ். திருமலை
193. மண்மகள், சுஜாதா — தி.செப். 19 — மா.வரதராஜன்
194. மதுமதி, ரமணிசந்திரன் — தி. நவ. 14—எஸ்.திருமலை
195. மயிலாசனம், க. நாராயணன் — தி. அக் 30 — மா. வரதராஜன்
196. மலையரசி, சாண்டில்யன் — இ. ஏப். 20 — எஸ். ஆர். கோவிந்தராஜன்
197. மனம் ஊமையாகவில்லை, எஸ். விஜயலட்சுமி—தி.ஜூன் 27 — எஸ். திருமலை
198. மனம் போல வாழ்வு, கண்ணதாசன் — இ. பிப். 9 — ஆர். சுந்தரேசன்
199. மனிதாபிமானம், தி. ஜானகிராமன் — இ. மார்ச் 2 — எஸ்.ஆர். கோவிந்தராஜன்
200. மெரீனாவில் யேசு, தியோடர் — இ. நவ. 30 — எஸ் ஆர் ஜி.
201. மோகனச்சிலை, சாண்டில்யன் — தி. மார்ச் 3 — ? இ. ஏப். 20 — எஸ்.ஆர்.கோவிந்தராஜன்
202. வித்யா வித்தியாசமானவள், இராம. ராகவேந்திரன் — தி. சன. 24 — எஸ். திருமலை
203. வெட்கம் கெட்டவர்கள், சிவசங்கரி — இ. பிப். 2 — எஸ்.ஆர். கோவிந்தராஜன்
204. வெள்ளைக் கறை, கலா கே. தாக்கர் —'இ.எ.நவ.14 சி.ஜி.ரிஷிகேஷ்
205. வேலியோரத்துப் பூக்கள், இந்துமதி — தி. டிச. 5 — குடத்தைப் புகழேந்தி

## சிறுகதை

206. அணில்கள், சிவசங்கரி — தி.ஏப்.14 — ? — இ.எ.அக்-17 — சி.ஜி. ரிஷிகேஷ்

207. அத்தை சொன்ன நல்ல கதைகள், ஹா. கி. வாலம் — தி.ஏப். 14 — ?; இ.எ.சன. 24 — கேஜிபி.

208. அலைகள் ஓய்வதில்லை, கே.பி. நீலமணி—தி.பிப்.21— எஸ். திருமலை.

209. ஆனை சந்தம், ஏ. மாதவன் — இ. மார்ச்சு 9 — எஸ்.ஆர் கோவிந்தராஜன்.

210. உத்திராயணம், ல. ச. ரா — இ. பிப். 2 — எஸ். ஆர். கோவிந்தராஜன், இ. எ. டிச. 26 — பி. எஸ். பத்மா விஜயம்.

211. ஒரு ஊரில் இரண்டு மனிதர்கள், பிரபஞ்சன் —தி. சன. 7 — அபராஜிதா; இ. எ. நவ. 14 — என் கே எஸ்.

212. ஒரு பாரத புத்திரன், ஜெகசிற்பியன் — தி மார்ச் 14 — எஸ். திருமலை.

213. கதவைத் திற காற்று வரட்டும், ராசி. அழகப்பன் — தி. அக் 3 — தேவகி குருநாதன்,

214. கரிச்சான் குஞ்சு கதைகள் — இ. மார்ச் 9 — எஸ். ஆர் கோவிந்தராஜன்.

215. சிவப்பாய் சில மல்லிகைகள், திருப்பூர் கிருஷ்ணன் — இ. எ. மே 9 — என். கிருஷ்ணசுவாமி.

216. தாயுள்ளம், பொன்பரமகுரு — இ. எ. அக். 24, ஆர். கிருஷ்ணமூர்த்தி.

217. தெய்வீகக்கதைகள், மங்கையர்க்கரசி— தி. செப். 19— குடந்தை புகழேந்தி.

218. நரிக்குறத்தி, ஜெகசிற்பியன் — தி. ஜுன் 6 — எஸ். திருமலை.

219. நவதந்திரக் கதைகள், பார்த்திபன் — தி. ஆக 15 — இரா. சுராஜ்.

220. நன்னெறி புகட்டும் நகைச்சுவைக் கதைகள், நாக சண்முகம் — தி. செப். 19 — பைங்காநாடு வெங்கட் ராமன்.

221. நாலு பழங்கள், கி. வா. ஜ — தி. ஜூன் 6 — பைங்கா நாடு வெங்கட்ராமன்.

222. நிதர்சனம், சுஜாதா — தி. டிச. 19 — தேவகிகுருநாத்.

223. புகை நுழையாத இடத்தில், ஏ. ராஜமோகன் — இ. மே. 25 — ஆர். பார்த்தசாரதி.

224. மகாகவி பாரதியாரின் கதைக் கொத்து, சீனி. விசுவநாதன் (பதி) — தி. மே. 30 — ?

225. மகாகவி பாரதியாரின் சந்திரிகையின் கதை, சீனி. விசுவநாதன் + டி. வி. எஸ். மணி (பதி) — தி. ஜூலை 11 — ?

226. மனிதாபிமானம், தி. ஜ.ர — இ. எ. ஜூலை 25 — கே. வைஜயந்தி.

227. முடிவும் தொடக்கமும், வி. சுப்ரமணியம் — இ. நவ. 23 — எஸ் ஆர் ஜி.

228. யுகதர்மம், ஜெயரதன் — தி. அக். 17 — குடந்தை புகழேந்தி; இ. நவ. 2 — எஸ் ஆர் ஜி.

229. ராணாஹமீர், சாண்டில்யன் — தி. நவ. 11 — எஸ். திருமலை, இ. நவ. 16, எஸ் ஆர் ஜி.

230. வாழ்விலே ஒரு முறை, அசோகமித்திரன் — இ. செ. 14 — ஆர். சுந்தரேசன்.

231. வாழ்வின் தரிசனங்கள், டொமினிக் ஜீவா — இ. ஆக. 22 — எஸ் வி.

232. விடியும் வெளிச்சம் வரும், இனியவன் (தொகு) தி. செப். 12 — அபராஜிதா, இ. ஜூன் 1 — கே. என். பாஷ்யம்.

233. விமோசனம், அசோகமித்திரன் — இ. ஆக. 24 — எஸ். ஆர். கோவிந்தராஜன்.

234. ஜப்பானிய மரபுக் கதைகள், இராம. லட்சுமி நாராயணன், (மொழி) — தி. ஜூன் 20 —?

நாடகம்

235. அடாவடி அம்மாக்கண்ணு, மெரினா — இ. டிச. 5, கே. ஜெயந்தி

236. கடவுள் மறைந்த ரகசியம், ப. நீலகண்டன், தி. ஏப் 11, — ஜனநாதன்.

237. காரைக்காலம்மையார் இசைநாடகம், இ. எ. அக். 7, — ரஞ்சனி சுவாமிநாதன்.

238. சங்கமித்திரை, தாமரைக்கண்ணன் — தி. அக். 4 — ?

239. தங்கச் சிலைகள், ச. மாதவன் —தி.ஆக, 11 — எஸ். திருமலை, இ. மே. 18 — எஸ். ஆர். கோவிந்தராஜன்.

240. தண்ணீர் தண்ணீர், கோமல் சுவாமிநாதன், தி.ஏப். 25 — திருவாரூர் மா. வரதராஜன்.

241. நீ வந்த நேரம், ஏர்வாடி எஸ். ராதாகிருஷ்ணன், — தி டிச. 19 — இரா. சுராஜ்.

242. பாஞ்சாலி சபதம், பி. எஸ். ராமையா — தி. சூலை 4 — இரா. சுராஜ்.

243. பாரதியார் இல்லற நாடகம், ஏ. ஜி. ரங்கநாயகி — இ. எ. பிப். 14 — கே. இ. பார்த்தசாரதி.

244. பாரதி வரலாற்று நாடகம், சிலோன். விஜயேந்திரன் — தி. அக். 30 — இரா. சுராஜ்.

245. ராஜ தண்டனை, கண்ணதாசன் — இ. எ ஆக. 8 — கே. வைஜயந்தி.

246. வளவன் பரிசு, பூவண்ணன் — இ. சூலை 27 — ஆர், சுந்தரேசன்.

சிறுவர் இலக்கியம்

247. ஆடுவோமே விளையாடுவோமே, வாண்டு மாமா—தி. அக். 3–காந்திராமன்.

248. உலகம் சுற்றும் குழந்தைகள்—1, வாண்டுமாமா, தி. அக். 10—காந்திராமன்.

249. ஏழாவது வாசல், நாரா. நாச்சியப்பன்—தி. ஏப். 18—?

250. குட்டி இளவரசன், மதன கல்யாணி + ஸ்ரீராம் (மொழி) —இ. எ. ஆக. 22, என். கிருஷ்ணசுவாமி.

251. சிறுவர் இராமாயணம், செந்துறையான்—தி. டிச. 5, அரங்க சீனிவாசன்.

252. சிறார்களுக்கான நல்லொழுக்க நெறி, சே. மணவாளன் தி. மார்ச். 28—இரா. சுராஜ்.

253. சிறுவர் நகைச் சுவைக் கதைகள், துமிலன்—தி. அக்.30— குடந்தை புகழேந்தி.

254. சின்னஞ்சிறு குயிலே, அழ. வள்ளியப்பா + நாரண துரைக் கண்ணன் + புத்தனேரி ரா. சுப்பிரமணியம் (தொகு)— இ. எ. பிப். 14—கே. இ. பார்த்தசாரதி.

255. பறவைகளே பறவைகளே, கு. ராஜாராம்-த.நவ. 1—? இ.எ.ஆக. 1, ஆர்.ஆர்.

256. பிள்ளையார் சிரித்தார், கே.பி. நீலமணி—தி. சூலை 11 —எஸ். திருமலை.

257. மங்களபுரி வீரன், கே. பி. நீலமணி—தி.சூன். 20-எஸ். திருமலை.

258. மழலைத்தேன்; நீல. கணேசன்—த.ஏப். 16—தமிழ்ப் பித்தன்.

259. மழலைப்பாட்டு, மு. வைத்தியலிங்கம் — தி. ஏப். 4— தாமரைக் கண்ணன்.

260. மாந்தோப்பில் வெள்ளைப்புறா, நாரா. நாச்சியப்பன்— இ. ஆக. 31, ஆர். சுந்தரேசன்.

261. மாயத்தை வென்ற மாணவன், நாரா. நாச்சியப்பன்— தி. மார்ச் 14—திருமாலடியான்.

262. மாஸ்டர் ராஜா, கே. பி. நீலமணி—தி. செப். 19— எஸ். திருமலை.

263. வைரமூக்குத்தி, ஆலந்தூர் கோ. மோகனரங்கன்—தி. மார்ச் 28—ஜனநாதன்.

### வாழ்க்கை வரலாறு

264. அமைச்சர்கள் கதைகள், வள்ளிநாயகி—தி.டிச. 5—?

265. அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் வரலாறு, தபஸ் யானந்தா—இ. மார்ச் 9—சி. எஸ். ராமகிருஷ்ணன், இ. எ. ஏப். 4—கே இ பி.

266. அன்னை ஸ்ரீ சாரதா தேவியின் வரலாறு, அகிலா நாராயணசாமி (மொழி)—தி. சூலை 18—அரங்க. சீனிவாசன்.

267. இசையாய் இன்தமிழாய், சி. சுந்தரமூர்த்தி + வி. நாகேந்திரன்—தி.பிப். 21—என் பி எஸ்.

268. இறைவர் திருமகன், நாரா. நாச்சியப்பன்—தி. மார்ச் 14—திருமாலடியான்.

269. ஏழையின் சிரிப்பில் இறைவன், அந்தோனி ராஜராஜன் (பதி)—இ.எ. டிச. 5—ஜே. செவின் தமயந்தி.

270. கருணை மிகு வள்ளல் அருள் நிறை சரிதம், மி. கே. வெங்கடராமன்—தி. செப். 5—?; இ. ஆக. 31—மு. அருணாசலம்.

271. கார்ல் மார்க்ஸ், வெ. சாமிநாத சர்மா—தி. மே. 23—?

272. காலம் தந்த தலைவன், கே.ஆர். வாசுதேவன்(மொழி)—தி.நவ. 14—பைங்கா நாடு வெங்கட்ராமன்.

273. குருபரம்பரை வைபவம், எதிராஜ ராமாநுஜதாஸர்—தி. சூலை 13—என் பி எஸ்.—இ. சூன் 22—டிவிவி.

274. சந்தித்தேன் சிந்தித்தேன், கண்ணதாசன்—தி ஆக. 15—தேவகி குருநாத்—இ. ஆக. 10—பி. சுந்தரேசன்.

275. சர்வாதிகாரி இடி அமீன், பிரபு சங்கர்—தி. செப். 26 காந்திராமன், இ. டிச. 28—எஸ் ஆர் ஜி, இ. எ. செப். 5—நந்தலாலா.

276. சுதந்திரச் சிற்பி, ஜோதிர் லதா கிரிஜா—தி. செப். 25 இரா. சுராஜ்.

277. சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையும் போதனைகளும்—அ. இராமசாமி (மொழி)—தி. ஏப். 18—அரங்க சீனிவாசன்.

278. செங்கோர், அறவாணன்—இ. மார்ச் 16—எம். ஆர். ரங்கராஜன்.

279. சேதுபதிகள் வரலாறு, சிரஞ்சீவி—தி. நவ. 24, மா. வரதராஜன்.

280. தமிழ்த்தென்றல் திரு. வி. க., டி. எம். சௌந்தரராஜன்—தி.டிச. 5—?

281. தாயுமானார் கதை, வெள்ளையாம்பட்டு சுந்தரம்—தி. அக். 40-பைங்காநாடு வெங்கட்ராமன்.

282. திருத்தொண்டர் கதைகள், செந்துறை முத்து—தி. சூலை 25—பைங்காநாடு வெங்கட்ராமன்.

283. தெய்வீகப் பெண்மணிகள், திருமருகல்சிங்காரவேலனார், தி. அக். 17—பைங்காநாடு வெங்கட்ராமன்.

284. நான் கண்ட டி கே சி, எஸ் வி எஸ்—தி. சூன் 27—என் பி எஸ் —இ. சன. 26—ஆர். சுந்தரேசன்

285. பகவான் ஸ்ரீ ரமணர், ரமணாஸ்ரமம் — இ. எ. மே 30 —கே இ பி.

286. பாபா சத்தியசாய்—1, ரா. கணபதி—இ. எ. சன. 31— ஜே. பார்த்தசாரதி

287. பாரதியார் —பிரேமா நந்தகுமார் —தமிழியல்—22— அன்னி தாமசு, இ. எ. ஏப். 4—கே. இ. பி.

288. பாலபாரதி, சக்தி சீனிவாசன் — தி. சூலை 18—இரா, சுராஜ்

289. புதுவையில் பாரதியார், வி. எஸ். குஞ்சிதபாதம்— இ. டிச. 7—ஆர். ஏ. பத்மநாபன்

290. மந்த்ராலயம் சற்குரு, கே. வெங்கட்ராவ்—தி.பிப். 7—?

291. மருத்துவ மேதைகள், ரா. பாலகிருஷ்ணன்—தி. அக். 30—சுப. சதாசிவம்.

292. மலரும் நினைவுகள், நியூஸ் ஆனந்தன்—தி. மே 16—?

293. லீலா நாடக சாய், ரா. கணபதி, இ. எ. நவ. 7, எச். ஆர்.

294. வரலாறு கண்ட வைக்கம் வீரர், மங்கையர்க்கரசி, இ. எ, செப் 19—நந்தபாலா.

295. வள்ளலார் மறைந்தது எப்படி? ஊரன் அடிகள், தி. அக். 10—சக்தி சீனிவாசன்.

296. வாழ்ந்து காட்டிய வள்ளல், டி. கே. நாராயணன்— தி. அக். 17—அரங்க சீனிவாசன்.

297. வாழ்வளிக்கும் வள்ளல், தயானந்தன் பிரான்ஸிஸ் (மொழி)—இ. மார்ச் 30—இரா. சுந்தரேசன்

298. வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா, சம்பந்தம்—தி. பிப். 7—அரங்க சீனிவாசன், இ. செப். 6—எம். எஸ்

299. விடுதலை வீரர் கதைகள், செந்துறை முத்து—தி. டிச. 19—குடந்தை புகழேந்தி.

300. விவேகானந்தர் வாழ்வும் வாக்கும்; ர. சீனிவாசன்— தி. செப். 12—பைங்காநாடு வெங்கட்ராமன்; இ. எ. ஆக. 1—ஜே. பார்த்தசாரதி.

பயண இலக்கியம்

301. அக்கரைச் சீமையில் ஆறு வாரங்கள், எஸ். திருநாவுக் கரசு—தி. சூலை 25—மா. வரதராஜன்.

302. அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் சேக்கிழார்தாசன் + ஆர் இராமசேஷன் + ஆர். கிருஷ்ணன்—தி. சன. 17 — பைங்காநாடு வெங்கட்ராமன்

303. சாமி சரணம், பரந்தாமன்—தி. டிச. 5—?

304. ஞானயாத்திரை, ஓங்கார நந்தா—தி.அக்.30—தாமரைக்கண்ணன்

305. நான் கண்ட நாடுகள், க. இராசாராம்—தி.செப்.12—குடந்தை புகழேந்தி

நாட்டுப்புறவியல்

306. கொங்கு நாட்டுப் புறக் கதைகள், க. கிருட்டிணசாமி—தி சன. 17—அரங்க சீனிவாசன்.

307. கொங்கு நாட்டுப் புறப் பாடல்கள், க. கிருட்டிணசாமி (தொகு)—தி. பிப். 28—அரங்க சீனிவாசன்.

308. தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள்—1, அ. லெ. நடராசன், தி. அக். 10—அபராஜிதா; இ. நவ. 30—பி. சுந்தரேசன்

309. காதலர் விடுகதைகள், ஆறு. இராமநாதன் (பதி)—தி. ஆக. 29—குடந்தை புகழேந்தி

இலக்கணம்

310. இலக்கண உலகில் புதிய பார்வை, பொற்கோ—தி. டிச. 26—?

311. இளம்பூரணர், மு. அருணாசலம்—தி. மே. 23—அரங்க சீனிவாசன

312. இனிக்கும் இலக்கணம், திருமுருகன்—இ. பிப். 2. சி. பாலசுப்ரமணியன்

313. தொல்காப்பியம்—சிறப்புப்பாயிரம், ஆ. சிவலிங்கனார் (பதி) —இ. ஜூன் 8—ஏ. காமாட்சிநாதன்

314. தொல்காப்பியம் —தொகை மரபு, ஆ. சிவலிங்கனார் (பதி) —தி. மே. 9—அரங்கசீனிவாசன்; இ.செப். 7—சி. பாலசுப்ரமணியன்; இ. எ. அக்.24—பொற்கோ

315. தொல்காப்பியம்—புணரியல், ஆ. சிவலிங்கனார் (பதி) தி. ஜூலை 18—?

316. தொல்காப்பியம்—மரபியல்,கே. பகவதி—தி. ஏப். 25—அரங்க சீனிவாசன், இ. செப். 7—சி. பாலசுப்பிரமணியன்

317. தொல்காப்பியம்—மொழிமரபு, ஆ. சிவலிங்கனார் (பதி) — தி. பிப். 24—அரங்கசீனிவாசன்.

318. யாப்பு நூல், சரவண தமிழன்—இ. மே. 4—ஏ. ஏ. மணவாளன்

மொழியியல்

319. காலந்தோறும் தமிழ், இராம சண்முகம்—இ. சூன் 22. —ஆர். சுந்தரேசன்—இ, எ. சன். 17—கே. இ. பார்த்தசாரதி

320. சிந்துவெளி எழுத்து வடிவங்கள், க. தா. திருநாவுக்கரசு —இ. ஆக. 1—ஆர் ஆர்.

321. சுவடியியல் பயிற்சி கையேடு, மு.கோ. ராமன்—தி .அக். 24—அரங்க சீனிவாசன்.

322. சொல்லரங்கம், முத்து எத்திராசன்—த. நவ. 1—?

323. தமிழ்மொழி வரலாறு, ச. செயப்பிரகாசம் (மொழி)—தி.ஆக. 19—அரங்க சீனிவாசன், இ. டிச. 21—ஏ.ஏ மணவாளன்.

324. புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி, சு. தில்லைவாணன், இ. சூன் 29—அ. அ. மணவாளன்

325. மொழி வளர்ச்சி, கி. கருணாகரன்—தி.செப். 9—அரங்க சீனிவாசன்.

சமயம்

326. ஆச்சார்யார் அருளிய நவரத்தினங்கள்—தி. பிப் 28—பைங்காநாடு வெங்கட்ராமன்.

327. ஆறு ஆதாரங்களில் அம்பிகை, நஜன்—இ.பிப். 16—ஆர் ஆர் சி.

328. இந்து தர்மங்கள், ஜயேந்திர சரசுவதி சங்கராசாரியார் தி. ஏப். 4—?

329. இந்துமதம் அழைக்கிறது, பி. சி. கணேசன்—தி. நவ. 7 —பைங்காநாடு வெங்கட்ராமன்

330. இந்துமதம் ஒரு கண்ணோட்டம்—தி. ஏப். 11—இரா. சுராஜ்.

331. ஐயப்பன் தத்துவங்கள், வி. என். சிதம்பரம்—தி. செப். 26—பைங்காநா வெங்கட்ராமன்.

332. ஒன்றே குலம் ஒருவனே தேவன், கி. பழனியப்பன்-தி. டிச. 19—? ; இ. ஆக. 3—மு. அருணாசலம்.

333. குமார விஜயம் பைங்காநாடு ஆர். வெங்கட்ராமன்—தி. ஆக. 29—தாமரைக் கண்ணன்.

334. கைவல்யோப நிஷதம், வி. ஆர். கணேசன் (மொழி)—இ. எ. மார்ச் 21—ஆர். ரங்காசாரி.

335. சங்கரர் மகாத்மியம், ரத்தின சண்முகனார்—தி. ஜூன் 27.—பைங்காநாடு வெங்கட்ராமன்.

336. சனி மாறுதல்—தி. செப். 19—?

337. சோழநாட்டுத் திருப்பதிகள், ந. சுப்புரெட்டியார்—தி. சன. 24—?

338. ஞானானுபூதி வேதபோதம், இரத்தின சற்குரு — தி. ஆக. 8 — க. சதாசிவம்.

339. திருச்செந்திலாதிபன், வ. முத்தையா செட்டியார் (தொகு) — தி. மார்ச் 28 — மா. வரதராஜன்.

340. திருச்செந்திலாதிபன் — 2, வ. முத்தையா செட்டியார் தி. ஜூலை 4 — பைங்காநாடு வெங்கட்ராமன்.

341. தெய்வத்தின் குரல், ரா. கணபதி — தி. ஆக 15 — மா. வரதராஜன்.

342. தேவி மானஸ பூஜை, நஜன் — தி டிச. 26 — பைங்கா நாடு வெங்கட்ராமன்.

343. தொண்டை நாட்டுத் திருத்தலங்கள், கீதாச்சார்யன் — தி.சன. 24 — என் பி எஸ்; இ.எ. ஏப். 25, எஸ்என்எஸ்.

344. நம்பிக்கை தந்திடும் தெய்வீகத் தத்துவங்கள், அம்மன் சத்தியநாதன் — தி. ஏப். 25 — ?

345. நவக்கிரஹ ஆராதனை, கடலங்குடி நடேச சாஸ்திரிகள் — தி. அக். 10 — ?

346. பகவத்கீதா — கீதாசாரம், நரசிம்ஹாசாரியர் — இ. நவ. 30 — டி.வி.வி.

347. புனித கோயில்களும் புண்ணிய தீர்த்தங்களும் — சி. முத்துப்பிள்ளை — தி. ஆக. 8 — குடந்தை புகழேந்தி; இ. மே 4 — என். ஜெயராமன்.

348. மூகாம்பிகை அம்மன், பொன். கோதண்டராமன் — இ. எ. பிப். 7 — கே இ பி.

349. யஜுர் உபாகர்ம விளக்கம், வத்ஸ ஸோம தேவசர்மா — தி. நவ. 21 — ?

350. வற்றாத சுனை — இ. எ. ஏப். 18 — ஆர். ரங்காச்சாரி.

351. ஸ்ரீ கணேசன், காலிவேடி ரங்கா ரெட்டி — தி. மே 30 — ?

352. ஸ்ரீ குருவாயூரப்பன் சித்திர வரலாறு, முல்லை தங்கராசன் — தி. சன. 24 — இரா. சுராஜ்.

353. ஸ்ரீ சாமுண்டேஸ்வரி, நஜன் — இ. பிப். 16 — ஆர்ஆர்சி.

354. ஸ்ரீ சுக்லயஜுர் வேத காண்வசாகா ஸந்த்யாவந்தனம் — தி. சூன் 6 — சீனி விசுவநாதன்.

355. ஸ்ரீ சைதன்ய லீலாம்ருதம், நரசிம்ஹ பிரம்மசாரி — இ. எ. ஏப். 11 — ஜி. எஸ். கேசவாசார்யா.

356. ஸ்ரீமத் பஜனாம்ருதம் — தி. மார்ச் 7, — இரா.சு

357. ஸ்ரீராமபக்த ஹனுமான், நாகர் கோவில் கிருஷ்ணன் — தி. செப் 5 — இரா. சுராஜ்

358. ஸ்ரீலட்சுமி, காலிவேடி ரங்காரெட்டி — தி. மே 30 — என் பி எஸ்.

359. ஸதாசாரம், வத்ஸஸோம தேவசர்மா — தி. அக். 3 — ஜே. பார்த்தசாரதி

360. ஸர்வஜனஸர்வ தேவதா பூஜா முறை — தி. நவ. 21—?

361. ஸூதக ஆசௌச விளக்கம், வத்ஸஸோம தேவசர்மா— தி. அக். 3 — ஜே. பார்த்தசாரதி

362. ஜகத்குரு பதிலளிக்கிறார். — தி. மார்ச் 21 — பைங்கா நாடு வெங்கட்ராமன்

மருத்துவம்

363. அரிய பச்சிலையும் அது போக்கும் நோய்களும், சோனா — தி. டிச. 5, சுப. சதாசிவம்.

364. ஆரோக்கியம் அழைக்கிறது, தம்பி சீனிவாசன் — தி. சூன் 27, சுப. சதாசிவம்

365. ஆரோக்கிய ரகசியம், எஸ். லட்சுமி சுப்பிரமணியம் — தி. நவ. 21, சுப. சதாசிவம்.

366. உடலும் உணவும், ஆ. கந்தசாமி — தி. ஏப். 25 — சுப. சதாசிவம், த. நவ. 1 — ?

367. ஊட்ட உணவும் அதைப் பெறும் வழிகளும், தி.வேங்கட கிருஷ்ணையங்கார் — தி. சூலை 18 சுப. சதாசிவம்.

368. கண் பாதுகாப்பு, என். எஸ். சுந்தரம் — தி. பிப். 2 — சுப. சதாசிவம்; தி. மே 9 — தேவகி குருநாத்.

369. காப்பி நின்று கொல்லும் பகைவன் — எம்.எஸ்.ரே + ஸ்ரீ கல்பனா — தி. மார்ச் 7 — சுப. சதாசிவம்.

370. கீரை வைத்தியம், திருமலை நடராசன் — த. நவ. 1 — தமிழ்ப்பித்தன்.

371. குழந்தைப் பருவ நோய்களும் குழந்தை நலப் பாதுகாப்பும், பிரசன்னா — தி. ஆக. 1 — சுப. சதாசிவம்; இ. எ. மார்ச் 14 — கேஇபி.

372. குழந்தை வைத்தியம், ஆர். கன்னியப்பன் — தி. சன. 17 — சுப. சதாசிவம்.

373. சித்த மருத்துவ அமுது, எஸ். சிதம்பரதாணு பிள்ளை— இ. எ. மார்ச் 14, கே இ பி.

374. சித்தர்கள் பரிபாஷை அகராதி, இரா.மாணிக்கவாசகம் — தி. டிச. 5 — சுப. சதாசிவம்.

375. செலவில்லாத சுலப வைத்தியம், என். ஜனார்த்தனன் தி. சூன் 20 — சுப. சதாசிவம்.

376. திருக்குறள் மூலிகைகள், இரா. குமாரசுவாமி — இ. ஏப். 13 — வி. நாராயணசாமி.

377. தேனும் அதன் பயனும், சம்பந்தம்—தி. சன. 17—சுப. சதாசிவம்—இ. ஆக. 24.—ஜி. வி,

378. நீங்களும் நோயில்லாமல் வாழலாம், நவராஜ் செல்லையா—தி. சூன் 20—?

379. பல்பாதுகாப்பு, ஜே. ஜி. கண்ணப்பன்—தி. நவ. 28—சுப. சதாசிவம்.

380. பல்லாண்டு வாழ்க, ப. நீலகண்டன்—தி. மார்ச் 14—திருவாரூர் மா. வரதராஜன்.

381. புகை அகராதி, து. ரங்காச்சாரி (தொகு)—தி. சூலை 18—?

382. மருந்தில்லா மருத்துவம், இரத்தின சண்முகனார்—தி. சூன 13—சுப. சதாசிவம்.

383. மனநோயும் இன்றைய மருத்துவமும், ஓ சோமசுந்தரம் + டி. ஜெயராம கிருஷ்ணன்—இ. ஜூன் 29—ஆர். சிவராமன்; இ. எ. மார்ச் 14—கே. இ. பி.

384. மனோதத்துவ மருத்துவம், ஆர். எம். சோமசுந்தர்—தி. செப். 5—சுப. சதாசிவம்.

385. முதல் உதவி; கலவை மு. முபராக் அலி—த. நவ. 1—?

386. யோகாசன மருத்துவம், நடராஜ சிவாசாரியார்—தி. ஜூலை. 25—சுப. சதாசிவம்.

வரலாறு, மானிடவியல், அறிவியல்

387. உலக நாகரிகத்தில் தமிழரின் பங்கு, தெ. பொ. மீ—தி. ஜூலை 4—அரங்க சீனிவாசன்; இ. டிச. 21—ஏ.ஏ. மணவாளன்.

388. களப்பிரர்; நடன காசிநாதன்—தமிழியல்-21—ஏ. என். பெருமாள்.

389. நன்குடி, சிவகளை மு. சுப்பையா—தி. ஏப். 11—பைங்காநாடு வெங்கட்ராமன்; இ. பிப். 2—மு. அருணாசலம்.

390. பல்லவர் கால வரலாறு, ஏ. சுவாமிநாதன்—இ மார்ச் 22—எம். அருணாசலம்.

391. பொகுளுவாஸ, ஆர். வி—தி. நவ. 14—நம்பி.

392. மதுரை வரலாறும் பண்பாடும், வி. கந்தசாமி—தி. மார்ச் 14—அரங்க சீனிவாசன்.

393. வரலாற்றுப் பாலம், இளங்காப்பியன்—தி. மே. 23—இரா. சுராஜ்.

394. வரலாறு படைத்த கம்ப்யூட்டர், வே. தமையந்திரன்—தி. அக். 10—ஜெ. பா.

395. விடுதலைப் போரில் தமிழகம், ம. பொ. சிவஞானம்—தி. நவ. 7—மா. வரதராஜன்; இ. எ. டிச. 12—நந்தலாலா.

396. 100 விஞ்ஞான வினாக்களுக்கு விடைகள், ராஜப்பா குருசாமி—தி. நவ. 28—எம். சுந்தரராஜன்.

சட்டவியல்

397. இந்திய தண்டனை சட்டம், ஏ. எஸ். நடராஜன்—இ. ஜூலை 6—டிவிவி.

398. நீதியின் தேரோட்டம், ச. மோகன்—தி. செப். 12—மா. வரதராஜன், இ. அக். 12—எம் ஆர் கே.

399. பொது மக்களுக்கான சட்ட விளக்கங்கள், எம். பி. சுப்ரமணியன்—தி. ஆக. 8—இ. க; இ. எ. ஆக. 15—சி ஜி ஆர்.

400. வரிச்சட்டங்கள்—1, என். பஞ்சாபகேசன்—தி. சன. 10—கே வி ஆர்.

சோதிடவியல்

401. அதிர்ஷ்ட நியூமராலஜி ஜோதிடம், என். ஜனார்த்தனன்—தி. நவ. 21—சேஷன்.

402. அஸில் மருத்துவக்குடி வாக்கியப் பஞ்சாங்கம்—தி. ஏப். 4—?

403. காளிதாஸனின் ஜாதக சந்திரிகை, கடலங்குடி நடேச சாஸ்திரி—தி. நவ. 28—மணி.

404. சோதிட பிரக்ஞானதீபிகை, கடலங்குடி நடேசசாஸ்திரி—தி. நவ. 26—மணி.

405. புதுக்கோட்டை வாக்கியப் பஞ்சாங்கம்—தி. ஏப். 4—?

406. ரீட்டாவின் குரு பெயர்ச்சி—தி. அக். 30—?

407. ரீட்டாவின் சனிப் பெயர்ச்சி—தி. செப். 26—?

கலைகள், தொழில்கள்

408. உடை தயாரித்தல், தங்கம் சுப்ரமணியன்—தி. மே. 9—ச. கு. கணபதி.

409. உப்புச் செல்வம், கலை முகிலன்—தி. சூலை 25—காந்தி ராமன்.

410. ஒளிப்படம் பிடிக்கும் கலை, எம். எஸ். பி. சண்முகம்—தி. மே 23—சேரா; இ. எ. அக். 5—எஸ். கோதண்டராமன்.

411. கராத்தே கற்றுக் கொள்ளுங்கள்—இ. எ. அக். 10—எஸ். நாராயணன்.

412. சமையல்கலை, எஸ். சிவகாமி—தி. அக். 3—பாக்கிய லட்சுமி.

413. சைக்கிள் ரிபேர் செய்தல், எம். ஏ. சூசைராஜா—இ. எ. ஆக. 1—ஆர் ஆர்.

414. தமிழர் தோற்கருவிகள், ஆர். ஆளவந்தார்—தமிழியல் —21— நம்பி ஆரூரன்

415. நினைவுக்கலை, எம். இராமையா—த. சூன். 16—தமிழ்ப்பித்தன்

416. நீங்களும் பேச்சாளராகலாம், பி. சி கணேசன்—தி. பிப். 28—தாமரைக் கண்ணன்.

417. பனைத் தொழில், கே. சம்பந்தம்—இ. சன. 19—ஜி வி.

418. மேளராக கிருதி மாலா, டி. கே. பட்டம்மாள்—தி. பிப். 14—என். பி. எஸ்; இ. ஏப். 13—எஸ். வி. கே; இ. எ. ஏப். 25—எஸ். வி. எஸ்.

419. வண்ணக்கேக்குகள், இனிய பிஸ் கட்டுகள்—சுலக்சணா ராஜ கோபாலன்—தி. சூலை 11—பைங்காநாடு வெங்கட்ராமன்.

420. விளையாட்டுத் துறையில் ஆங்கிலம்—தமிழ் அகராதி, நம ராஜ் செல்லையா—தி. டிச. 5—?

421. ஹார்மோனிய போதினி, பி கே. மூர்த்தி—தி. நவ. 21 என். பி. எஸ்.—இ. எ. மே 2—ரஞ்சனி சுவாமிநாதன்.

மலர், இதழ்

422. எண்ணெய் காப்பு விழா மலர்—தி. அக். 10—இரா. சுராஜ்.

423. கல்கி விடுமுறை மலர்—தி. மே. 30—?

424. கலைமகள் பொன் விழா மலர்—இ. எ. சூலை 4—கே. சி பி.

425. தமிழாய்வு (Annals of Tamil Research)—இ. எ. ஏப். 25 —எஸ் என் எஸ்.

426. துந்துபி வருட மலர்—தி. சூலை 11—?

427. பாரதி நூற்றாண்டு மலர்—தி. ஆக 1—இரா. சுராஜ்.

428. புலமை—இ. எ. செப். 26—?

429. பெரம்பூர் சங்கீத சபை பொன் விழா மலர்—தி. டிச. 5 என் பி எஸ்.

430. மொழியல் 2, 3, 4 தொகுதிகள்—தி. ஆக. 8—அரங்க சீனிவாசன்.

431. ஸ்வரம் (6, 7 இதழ்), நந்தலாலா தி. செப். 19—தேவகி குருநாத்.

432. ஜகத்குரு முதல் ஆண்டு மலர்—தி. மே 16—என் பி எஸ்.

எஞ்சியவை

433. அன்னையின் அன்பளிப்பு, இ. கோவிந்த ராஜுலு—இ. பிப். 23—ஆர். சுந்தரேசன்.

434. இதயம் எங்கள் காலடியில், ஆலந்தூர் கோ. மோகன ரங்கன்—த. ஏப். 16—பி. வி. ஜி.

435. இரண்டாவது உலகத்தைத்தேடி, எம். ஜி. சுரேஷ்—தி. ஏப். 19—திருமாலடியான்.

436. இரவு விடிந்தது, நாகை. வீ. இராசன்—தி. பிப். 28—எஸ். திருமலை.

437. இல்லத்து அரசிக்கு, பத்மாஸினி—தி. டிச. 19—பைங்காநாடு வெங்கட்ராமன்.

438. உங்களுக்குத் தெரியுமா, என். கே. வேலன்—தி. பிப். 21—திருமாலடியான்.

439. என்ன செய்ய வேண்டும், லேனா தமிழ் வாணன்—தி. சன. 3—திருவாரூர் மா. வரதராஜன்.

440. என்னை ஏன் அழைத்தார், எச் எம் ஆர்—தி. அக். 30—அரங்க சீனிவாசன்.

441. கல்வி உன்னைக் காப்பாற்றும், ஆலந்தூர் கோ. மோகன ரங்கன்—த. நவ. 1—பி. வி. கிரி.

442. கவிதையில் விடுமுறை, எஸ். மகாராஜன்—இ. செப். 7—எம். ஆர். ரங்கராஜன்; இ. எ. செப். 19—என் கிருஷ்ணமூர்த்தி.

443. கற்றதனால் ஆய பயன், ஜி. வேங்கடசுப்பிரமணியன்—தி. சூலை 18—தாமரைக் கண்ணன்.

444. காற்றிலே கமழ்ந்தவை, மனசை ப. கீரன்—தி, ஆக. 3-ஜனநாதன்.

445. குழந்தைகளே நாட்டின் செல்வக் களஞ்சியம்—வி. எஸ். கமலா—தி. சன. 10—தேவகி குருநாத்.

446. கௌடில்யம் பொருள் நூல்—2, மு. கதிரேசன் செட்டியார்+பி. ஸ்ரீ. ராமானுஜாசாரி—இ. ஆக. 17—சி. பாலசுப்பிரமணியன்.

447. சிந்தனை வளம், நா. பார்த்தசாரதி—தி. ஆக. 29—பைங்காநாடு வெங்கட்ராமன்.

448. செஞ்சொல் உரைக்கோவை, கிருபானந்தவாரியார்—தி. மே. 23—ச. கு. கணபதி; இ. சூன். 15—டி.வி.வி.

449. செம்மை தரும் சிந்தனைகள், எஸ். இராஜு செட்டியார்—தி. நவ. 14—பைங்காநாடு வெங்கட்ராமன்.

450. செய்திக்குப் பின்—பத்திரிகை இயல், என். வேம்பு சாமி—இ. மே 11—ஆர். கே.

451. திருமணப் பொருத்தங்கள்—தி. மார்ச் 28—?

452. தெரிந்து கொள்ளுங்கள், வாண்டுமாமா—தி. சூன் 20—ஸ்ரீராமப்ரியன்.

453. நவரத்தினங்களின் அற்புத சக்தி, ம. ஸ்ரீநிவாஸாச்சாரியார்—தி. சூலை. 4—?

454. நீங்களும் ஆவிகளுடன் பேசலாம், பாலாஜி—தி. மார்ச் 28—தேவகி குருநாத்.

455. நீங்களும் உயரமாக வளரலாம், எஸ் நவராஜ் செல்லையா—தி. சூலை 4—இரா. சுராஜ்.

456. பரந்தாமன் சிந்தனையில், பரந்தாமன்—தி. டிச. 19—அபராஜிதா.

457. பாவையர் பண்பு, கிருபானந்த வாரியார்—தி.செப். 5—பைங்காநாடு வெங்கட்ராமன்.

458. புதுச்சேரியைப் பாருங்கள், மன்னர் மன்னன்—தி. சன. 17—தாமரைக் கண்ணன்; தி. மார்ச் 21—திருவாரூர் மா. வரதராஜன்.

459. பூமியின் செல்வங்கள், துமிலன்—தி. மார்ச் 21—திருமாலடியான்.

460. பெண்மையே நீ வாழ்க, சரோஜா பழனியப்பன்—இ. நவ. 23—பி. சுந்தரேசன்.

461. பெரியோர் சொல்லமுதம், தே. ப. பெருமாள் (தொகு) தி. சன. 17—திருவாரூர் மா. வரதராஜன்.

462. மணவாழ்க்கை, மாசில் மகிழ்நன்—தி. பிப். 14—பைங்காநாடு வெங்கட்ராமன்.

463. மணக்கவலைக்கு மருந்து, வேலவன்—தி. நவ. 21—பைங்காநாடு வெங்கட்ராமன்.

464. மாணவர் நற்பண்புகள், தி. நா. அர்த்தநாரி—தி. சூலை 4—தேவகி குருநாத்.

465. மேற்கொண்டு என்ன படிக்கலாம், லேனா தமிழ்வாணன்—தி. ஆக. 1—அரங்க சீனிவாசன்.

466. யதுநந்தன், கே. வி. கிருஷ்ணமாசாரி—இ. எ.மே. 30 கே.இ.பி.

467. வண்ணமலர், இந்திரா ராமதுரை—தி. நவ. 14—கேசிவ.

468. வாழ்க்கையில் வெற்றி பெறுவது எப்படி?, அருள்மணி—தி. அக். 24—ஆரெஸ்வி.

469. வெற்றிக்கு வழிகள், பி. எஸ். கிருஷ்ணசாமி—தி. மார்ச் 21—இரா. சுராஜ்; இ.எ.சன. 24—கே. இ. பார்த்தசாரதி.

470. வேதகணிதம், டி. சத்யநாராயணராஜு—இ.நவ. 23—ஆர். கே. ஸ்ரீனிவாசன்.

471. ஸ்ரீஐயப்ப தீக்ஷிதர், என். ரமேசன்—இ. எ. ஏப். 10—ஜி. கிருஷ்ணா.

# 40. சமய நூல்கள்

—பழ. முத்தப்பன்

தமிழ், பல் துறையிலும் பன்முக நோக்குடன் வளர்கின்றது என்பதைச் சமயம் தொடர்பாக எழுந்த நூல்களும் காட்டுகின்றன. சமயக்கதைகளும், இறைச் சிற்றிலக்கியமும். பெரியோர் அருளுரைகளும், சமய இலக்கியப் பதிப்புகளும், ஆய்வுக் கட்டுரைகளும் இத்துறையை வளப்படுத்தியுள்ளன. மொழிபெயர்ப்பாகவும் சமய உண்மைகள் வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

மக்களாகப் பிறந்தவர் மன உணர்வுடையவர். அவர்தம் உணர்வு நிகழ்காலத்து நிகழும் நிகழ்ச்சிகளை அறிவதோடு, இறந்த கால நிகழ்ச்சிகளையும் எதிர்கால விளைவுகளையும் அவற்றோடு தொடர்புபடுத்தி ஒருவாறு கற்பனை செய்து துணியும் ஆற்றல் உடையதாகும். இந்த உணர்வைக் கொள்கைகளாக வகைப்படுத்தி அக் கொள்கையால் அறிய முடியாத இன்ப துன்ப நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக சில மேலான ஆற்றல்கள் இருப்பதாக மனிதர் கருதுகின்றனர். அந்த ஆற்றல்களால் தாங்கள் நன்மை அடையவும், தீமையை நுகராமல் இருப்பதற்கும் அந்த ஆற்றல்களை நோக்கி வேண்டுதல் செய்கின்றனர். அந்த வேண்டுதல்களே சமயம் என்ற வடிவு கொண்டன.

எனவே மனிதன் தன் உணர்வால் காண இயலாச் செயலின் முடிவை—தனக்கு மேலான ஆற்றலால் பெறும் பொழுது—அம் மேலான உணர்வாம் சமய உணர்வுக்குத் தன்னை ஆட்படுத்துகிறான். காலத்திற்குக் காலம் மனிதனின் நாகரிகம் மாறினால்—அச்சமய உணர்வு மட்டும் மாறவில்லை. வழிபாடு—தத்துவ நிலை என்ற நிலையில் அவ்வுணர்வு அமைந்து படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்திருக்கிறது. அவ்வளர்ச்சியில் எழுந்தவையே சமய இலக்கியங்கள். தமிழில் அச்சமய இலக்கியங்களே பிற துறை இலக்கியங்களைக் காட்டிலும் எண்ணிக்கையால் 19-ஆம் நூற்றாண்டு வரை மிகுந்து காணப்பெறுகின்றன. நூற்றாண்டு வரிசையில் பட்டியல் அமைத்துக் கண்டாலும்

அப்பட்டியலில் மிகுதியான இடத்தைப் பெறுவது சமய இலக்கியங்களே ஆகும்.

20-ஆம் நூற்றாண்டின் தொடக்க முதல் ஆய்வியலும், நாவலும், கவிதையும், சிறுகதையும் மிகுந்த செல்வாக்குப் பெற்ற காரணத்தால் புதிய சமய இலக்கியங்கள் மிகுந்து தோன்றில. புதிய சமய இலக்கியங்கள் தோன்றுவதை விட, தோன்றியிருப்பவையின் சிறப்பை வெளிப்படுத்தும் ஆய்வுக் கட்டுரைகளும், தொகுப்புகளும், பழையவற்றின் மறுபதிப்புக் களுமே தோன்றலாயின. இத்தகு நிலையில் 1982-இல் சமய நூல்கள் என்று ஆய்ந்து காணும்போது—பிற நூல்களோடு ஒப்பிடுகையில் குறைவான நூல்களே கிடைத்துள்ளன. சமய நூல்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சென்னை நர்மதா பதிப்பகம், வானதி பதிப்பகம், லிப்கோ ஆகியவை பாராட்டத் தக்கதான வகையில் பல நூல்களை வெளியிட்டுள்ளன எனலாம்.

1982-இல் கிடைத்துள்ள சமய நூல்களை 1. கட்டுரை நூல்கள், 2. கதைகள், 3. கவிதைகள், 4. அருள் வாக்குகள் என நான்கு வகையாகப் பிரித்திடலாம். கட்டுரை நூல்கள் பெரும்பாலும் பழைய சமய நூல்களின் சிறப்புக் களை வெளிப்படுத்துவனவாகக் காணப்பெறுகின்றன. ஒரு சில நூல்கள் சமயங்களைப் பற்றிய தத்துவ விளக்கங்களைப் பெற்றுள்ளன எனலாம். கட்டுரைகளில் சமயத் தத்துவங்கள் மிகவும் எளிதாக—அனைவரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அமைந்திருக்கின்றன. இன்றைய நாகரிக உலகில் சமயச் சடங்கு கள் பொருளற்ற முறையில் அமைவதை எண்ணி அவற்றைப் போக்கும் வகையில் சில கட்டுரைகள் அமைந்துள்ளன. ‘தவம்’ என்னும் நூலை இங்குக் குறிப்பிடலாம். இதுபோல எட்டுத் தொகை நூலில் ஒன்றான புறநானூறு காட்டும் சமயம் என்ற ஆய்வு நோக்கில் எழுதப் பெற்ற கட்டுரையில் சமயத்தின் தொன்மை சுட்டிக் காட்டப் பெறுகிறது. இக்கட்டுரை இடம் பெற்ற ‘சமயக் கட்டுரை மாலை’ என்ற கட்டுரை நூல் சமயச் சடங்குகளைக் குறிப்பிடும் போது முன் குறிப்பிட்டது போன்றே தக்க விளக்கங்களைத் தருகிறது. இளைஞர் தான் நாளைய சமுதாயத்தின் சிற்பிகள். எனவே அவர்களை நல்வழிப்படுத்த சமய உணர்வை ஏற்படுத்த வேண்டும் என்பது இன்று பேசப் பெறும் கருத்தாகும். இக்கருத்தினை நடைமுறைப் படுத்திட பல கட்டுரைகள் 1982-இல் வெளிவந்த நூல்களில் இடம் பெற் றுள்ளன. ‘தெய்வவாக்கு’ என்ற கட்டுரை நூலை இங்கு சிறப் பாகக் குறிப்பிடலாம். பெண்களுக்கு எனப் பல அறிவுரைகள்

கூறப் பெற்றுள்ளன. அவை சிந்தனைக்கு விருந்தாக அமைந்துள்ளன. இளைய தலைமுறையினரை வழிப்படுத்த அக்கட்டுரைகள் பல அரிய கருத்துக்களை வழங்குகின்றன. இவ்வாறு சமயக் கட்டுரைகளைத் தாங்கிய சமய நூல்கள் சிந்தனைக் கருவூலங்களாக விளங்குகின்றன.

கதைப் பிரிவில் அடங்கும் சமய நூல்கள், சிறுகதை — நாவல் இலக்கியங்களைப் போலப் படிக்கும் போது சுவையூட்டுகின்றன. மேலும் மேலும் படிக்கவேண்டும் என்ற ஆர்வத்தை ஊட்டுகின்றன. 'தம்பிக்கு அருளாளர்கள்' என்ற இலக்கிய நூல் இரு சமயப் பெரியோரைப் பற்றிய கடிதக் கதை நூலாக விளங்குகிறது. ஆசிரியரே கதையைச் சொல்லும் பெரியவராய் விளங்குகிறார். கதை சொல்லும் பாங்கு மிகச்சிறப்பாக அமைந்துள்ளது. குழந்தைகள் படிக்கும் படக்கதைகள் போல அக்கதைகளின் அமைப்பு இருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

புராணக் கதைகள் இக்கால ஆய்வாளரால் கற்பனைக் கதைகளாகத் திறனாய்வு செய்யப் படுவனவாகும். அக்கதைகளின் உள்நோக்கம் மிகவும் பரந்து விரிந்த சமயத் தத்துவங்களாகும் என்பதை அவர்கள் ஏற்பதில்லை. எனவே தான் இன்றையத் தலைமுறையினர் புராணக் கதைகளை வெறுக்கும் அளவிற்குத் தள்ளப் பட்டுள்ளனர். இந்நிலை மிகவும் வருத்தத்திற்குரியதாகும். இவற்றை மாற்ற வேண்டிய கடமை சமயவாதிகளிடம் உண்டு. இத்தகு நிலைக்குச் சிறந்த நூலாகச் சில இந்த ஆண்டினில் வெளி வந்துள்ளமை மனத்திற்கு மகிழ்வு தருகிறது. அந் நூல்களில் 'கந்த புராணக் கதைகளும் அவைகள் உணர்த்தும்உண்மை நூற் கருத்துக்களும்'என்ற நூல் சிறப்பிடம் பெறுகிறது. மேலும் சமய அடியாரைப் பற்றிய வரலாறுகளும் கதைகளாக வெளியிடப் பெற்றுள்ளன. அவை இன்றைய பொய்ம்மைச் சமயவாதிகள் மாற்றம்பெற மிகவும் உதவுவனவாகும். அவ்வரலாற்று இலக்கியங்களில் குறிப்பிடத் தக்கது 'ஞானியார் அடிகளின் வரலாறு' ஆகும். என்வே சமய இலக்கியங்களில் கதை இலக்கியங்கள் பழமையையும் — புதுமையையும் இணைக்கும் பாலங்களாக, பழமை நிகழ்ச்சிகளையும் — புதிய எண்ணங்களையும் தருகின்றன எனலாம்.

கவிதை இலக்கியங்கள், பண்டைய சமய நூல்களின் பொதுத் தொகுப்பாகவும் உரைவிளக்கங்களாகவும் வெளி வந்துள்ளன. பண்டை பதிப்புக்களில் இல்லாத உரை விளக்கங்களைத் தருவதற்காகவும் — எளிய விளக்கங்களைத் தருவதற்காகவும் அவை வெளியிடப் பட்டுள்ளன எனலாம்.

மேலும் சிற்றிலக்கிய மரபிற்கேற்ப புதிய இலக்கியங்களும் தோன்றின. 'தெய்வ நான்மணிமாலை' போன்ற சிற்றிலக் கியங்கள் குறிப்பிடத் தக்கன. கவியரங்குகளிலும் சமய உணர்வு கள் வளர்க்கப் பட்டன. சமயங்களின் தலைமையிடமாம் திருக்கோவில்களின் நிகழ்ச்சிகளில் இலக்கிய அரங்குகள் கடந்த சில ஆண்டுகளாகச் சிறப்பிடம் பெற்று வருகின்றன. அத்தகு நிலையில் நடைபெற்ற கவியரங்குக் கவிதை இலக்கியம் ஒன்று; 'சிறுவர் கவியரங்கத்தில் திருஞான சம்பந்தர்' என்ற நூலைக் குறிப்பிடலாம். அதுபோல புதிய மரபு இலக்கியங்களிலும் சமயச்சார்பான கவிகள் தோன்றியமைக்குக் கண்ணதாசனின் 'அம்பிகை அழகு தரிசனம்' என்ற நூலைக் குறிப்பிடலாம். கவிஞரின் சமய உணர்ச்சியை அந்நூல் படம் பிடித்துக் காட்டுவ தாகும்.

'அருள்வாக்கு' என்ற அமைப்பில் எழுந்த இலக்கியங்களே இந்த ஆண்டில் வெளிவந்துள்ள இலக்கியங்களில் அதிக எண்ணிக் கையைப் பெற்றவை எனலாம். அவை ஆன்றோரின் அருள் வாக்குகளாக அமைந்திருக்கின்றன. சமயத் தலைவராக விளங்கும் திருமடங்களின் தலைவர் இந்த நூற்றாண்டில் சமுதாயத்தோடு பழகி வரும் உயர்நிலை பெருகி இருக்கிறது. திருமடங்களுக்குள்ளேயே இருந்து கொண்டு சமயச் சடங்கு களையும், வழிபாடுகளையும் ஆற்றி வந்த அத்தலைவர், இந்நூற்றாண்டில் மக்களோடு மக்களாக வாழக் கற்றுக் கொண்டிருப்பது சமய மறுமலர்ச்சி எனலாம். அத்தகைய தலைவர் மக்களுக்குச் சமயக் கருத்துக்களை எழுதியும் பேசியும் வருகின்றனர். அவர்களின் கருத்துக்கள் நூலாகவும் வெளிவரத் தலைப்பட்டன. அத்தகு நிலையில் இந்த நூற்றாண்டில் பல நூல்கள் வெளிவந்துள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். அந்நூல் களில் வடமொழித் தத்துவங்கள் தமிழாக்கப் பெற்று விளங்கு கின்றன. அது மட்டுமல்லாது எளிய நடையையும் பெற்றுத் தமிழ்த்தொண்டு புரிந்துள்ளன. வடமொழியில் இருந்தாலே தான் இறையருள் பெறலாம் என்ற காலம் மாறி- தமிழ்மொழி இறை மொழி என்பதில் ஐயமில்லை என்பதை நிலை நாட்டு கின்றன எனலாம். 'வள்ளற் பெருமானின் உபதேசம்' என்பன போன்ற நூல்கள் இங்குக்குறிப்பிடத்தக்கனவாகத் திகழ்கின்றன.

இவ்வாறு 1982-இல் வெளிவந்துள்ள சமய இலக்கியங்கள் இப் பகுப்புகளுக்குள் அடங்கியிருந்தாலும் சமய மறுமலர்ச்சிக்கு அவை எடுத்துக் காட்டுகள் என்பதில ஐயமில்லை. இவை மட்டும் போதாது. உலகம் அமைதி பெற—உணர்வுகள் சிறந்திட ஒரே

வழி சமய உணர்ச்சிகளே. அத்துறை வளர்வதுதான் தமிழ் மொழி இலக்கியத்திற்கு ஏற்றம் தரும். திருவாசகம் உள்ளிட்ட பல சமய இலக்கியங்கள் பிறநாட்டவரையும் தன் வசப்படுத்தி யுள்ளன என்பதைநாம் நினைவு கூர வேண்டும். அந்நினைவு புதிய இலக்கியங்களையும் — ஆய்வு நூல்களையும் உருவாக்கும் என்பதில் ஐயமில்லை. சமயமும் தமிழும் தழைத்து ஓங்கிட எழுத்தாளர்ஆர்வம் கொள்ள வேண்டும்.

சமயம் தொடர்பாகக் கிடைத்திருக்கும் நூல்களைப் பற்றிய கருத்துக்கள் காணத் தக்கன.

1. அறம் வளர்த்த அடியார்கள்

புலவர் சிவ. கன்னியப்பன் இதன் ஆசிரியர், பத்தொன்பது தலைப்புகளைக் கொண்ட கட்டுரைத் தொகுப்பு நூல், கட்டுரைகள் வழி, தத்துவங்களையும் அடியார், ஆன்றோர் வாழ்வியலையும் விளக்கும் நூலாகத் திகழ்கிறது. சிவானந்தப் பேறு என்னும் முதல் கட்டுரை சிவதரிசனம் பற்றி விளக்குகின்றது. இறைவனைப் பணிந்து போற்றுவதால் கிடைத்திடும் மன அமைதியையே மையமாகக் கொண்ட கட்டுரை அது. அடுத்த கட்டுரை பதி, பசு, பாசம் என்ற சைவசித்தாந்த முப்பொருள் பற்றிய சுருங்கிய விளக்கம். இப்பகுதி விரிவாக அமைந்திருக்கலாம். சைவக் குரவர் நால்வரைப் பற்றிய கட்டுரை நன்கு அமைந்துள்ளது. பண்புடையார் செயல் என்ற கட்டுரை நூலிற்குப் பெருமை சேர்க்கிறது. தாய் சொல் கேட்ட இராமனைப் பற்றி ஆசிரியர் விளக்கி— இன்றைய இளைய தலைமுறையினரை வழிப்படுத்த நினைப்பது குறிப்பிடத்தக்கது. அக்கட்டுரை அறம் வளர்த்த பெரியாராக நேரு பெருமானைக் காட்டி—அவர் ஒருமுறை தில்லைத் திருக்கோவிலிற்கு வருகை தந்தபோது மேலாடையின்றிச் செல்லவேண்டிய கருவறைக்குள்—தான் மேலாடையுடன் இருப்பதால் அதிகாரிகள் அவ்விதியைத் தளர்த்திச் செல்ல வேண்டியும் செல்ல மறுத்தமை குறிப்பிடத் தக்கதாகும் (பக்—95). சிறந்த தமிழ் நடையோடு கூடிய நூல்.

2. அற்புதமான இந்து மதம்—1000 உண்மைகள்

திருமருகல் சிங்காரவேலனார்இதன் ஆசிரியர்.ஆயிரம் சொற்களுக்கு விளக்கம் கூறும் நூல். அச் சொற்கள் சமய சம்பந்தமான சொற்களாகும். சிவலிங்க வடிவம், ஆலயங்களின் அமைப்பு ஆகியவற்றிக்கு விளக்கங்கள் அமைந்துள்ளன. சமய வேறுபாடு இன்றி அனைத்துச் சமயங்களின் விளக்கங்கள் அமைந்துள்ளமை பாராட்டத் தக்கது. இராமகிருஷ்ணர், காந்தி, அரவிந்தர், ரமணமகான் ஆகியோரின் கருத்துக்கள் தொகுக்கப் பெற்றுள்

ளன. பொதுவாகச் சமய உணர்வுடையோர் கையில் இருக்க வேண்டிய நூலாகும். சிறு சிறு விளக்கங்களைக் கொண்ட —நல்ல தமிழ் நடை கொண்ட நூல்.

3. அம்பிகை அழகு தரிசனம்

கவிஞர் கண்ணதாசன், ஆசிரியர். 100 கவிதைகளைக் கொண்ட நூல். கவிஞர் மறைந்தாலும் அவரின் நினைவு போற்றும் வானதி மறுபதிப்பாக இந்நூலை வெளியிட்டுள்ளது. சக்தியின் வடிவத்தைக்கண்டு மகிழ்ந்த நிலையில் பாடப்பெற்றுள்ளது. பாடல்களின் ஒவ்வொரு வரியிலும் கவிஞரின் முத்திரை பதிந்துள்ளது.

"வானத்தில் நீயுண்டு என்கிற ஓர்சேதி
மண்ணுக்கு சொல்கின்றதோ" — மகுடம்.

என்பன போன்ற வரிகள் உள்ளத்தை விட்டு நீங்கா. கவிஞரின் கவிதை ஆன்மீகத்தைப் பாடும்போது — பொலிவு பெற்று விளங்கும் என்பதற்கு இந்நூல் சான்றாகும்.

4. ஆண்டவரிடம் வள்ளல் பெருமான் வேண்டுதல்

இதன் ஆசிரியர், மு. சதாசிவம். கவிதைத் தொகுப்பு நூல். வள்ளல் இராமலிங்கனாரின் வேண்டுதல் பாடல்களைத் தொகுத்துள்ளார். குறைந்த பக்கங்கள். பதிப்பு தெளிவாக இல்லை.

5. ஆதி சங்கரர் புஜங்கங்கள் மற்றும் பல துதிகள்

ஹா. கி. வாலம், ஆசிரியர். மொழி பெயர்ப்பு நூல். வடமொழியில் ஆதிசங்கரர் பாடிய 19 பாமாலைகளின் மொழி பெயர்ப்பு அடங்கியுள்ளது. 8 பாடல்கள் ஆசிரியரின் சொந்தப் பாடல்களாக அமைந்துள்ளன.

6. இந்து தர்மங்கள்

ஜகத்குரு காஞ்சி காமகோடி ஜெயேந்திர சுவாமிகள் (ஆசிரியர்), இளைஞர்க்கு வழங்கியுள்ள அருள் வாக்கினைக் கொண்ட 6 தலைப்புகள் உடைய நூல். தனிமனிதனின் தர்மம், குடும்பத்தின் தர்மம், கிராமத்தின் தர்மம், நகரத்தின் தர்மம், தேசத்தின் தர்மம் எனப் பிரிக்கப் பெற்று இந்து சமயக் கோட்பாடுகள் கூறப் பெற்றுள்ளன. தர்மங்கள் என்ற அடிப்படையில் கடமைகள் கூறப்பெற்றுள்ளன. வடமொழியோடு கூடிய தமிழ் நடையே நூலில் அமைந்துள்ளது.

7. இந்துமதச் சிந்தனைகள்

பி. சி. கணேசன், ஆசிரியர். 29 தலைப்புகளில் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. விவேகானந்தர், ராம கிருஷ்ணர், காஞ்சிப்

பெரியார் ஆகியோரின் வரலாறுகள் குறிப்பிடத் தக்கன. இந்துமதம் உருவான கதை மிகச் சிறந்த கட்டுரையாகும். ஒவ்வொரு இந்துவும் அறிந்து கொள்ள வேண்டிய வரலாற்றைக் கொண்டது. இந்து மதப் புரட்சிக்காரர் என்ற தலைப்பில் பிரகஸ்பதி கதை இடம் பெற்றுள்ளது. வெறும் வரலாறாக மட்டும் அமையாது — இந்துமதம் வளர்த்த தமிழ் என்ற தலைப்பில் தமிழின் சிறப்பும் பேசப் பெற்றமை சிறப்புடைத்து. அப்பகுதியில் திருமந்திரம் பற்றி, சிறப்பான செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

8. இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது?

பி. சி. கணேசன், ஆசிரியர். சிறிய நூல். இந்நூலில் ஆலயம் பற்றிய கட்டுரை குறிப்பிடத் தக்கதாகும். வழிபாடு பொருளுணர்ந்து செய்யப்பட வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. ஆலயத்தையும் உடம்பையும் இணைத்து, ஆலயத்திற்குள் செல்லும்போது நாம் என்னென்ன செய்யவேண்டும் என்பதை நன்கு விளக்கியுள்ளார் ஆசிரியர். மதம் என்னும் போர்வையில் பொருளற்ற நிலையில் செயல் படுவோர்க்கு இந்நூல் நல்வழி காட்டுகிறது.

9. உபநிடதங்களின் சாரம்

புண்ணிய சோழ ஸ்ரீநடராஜ சிவாச்சாரியார், ஆசிரியர். வடமொழியில உள்ள உபநிடதங்களின் கருத்துக்கள் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளன. 18 உபநிடதங்களிலிருந்து கருத்துக்கள் தரப் பெற்றுள்ளன. 'நம்முடைய உபநிஷதங்கள் மிகப் பெரிய ஞானச் செல்வங்களைச் சூல் கொண்டிருப்பவை. ஆழ்ந்தும், விரித்தும், பொருள் நோக்கின் வரம்பிலா விரிவு உடையவை'.'இந்நூலை விரலிடுக்கின்வழியே சூரியனைக் காண்பதற்கு ஒப்பாகத்தான் சொல்லமுடியும் என்றாலும் நம்மில் யாரோ ஒருவர் முழுச் சூரியனையும் காண்பதற்கு இந்நூல் ஒரு படியாய் அமையுமென்று நம்புகிறோம்' என்று பதிப்புரையில் குறிப்பிட்டிருப்பது இந்நூலைப் படிக்கும் போது பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது. மணிப்பிரவாள நடையாகத் தொடர்கள் அமைந்துள்ளன. அட்டைப்படம் மிகச் சிறப்பாக அமைக்கப் பெற்றுள்ளது. கட்டுரைகளின் இடையிடையே தாயுமானவர் பாடல்கள் அமைத்துள்ளமை போற்றத் தக்கது.

10. கந்தபுராணக் கதைகளும், அவைகள் உணர்த்தும் உண்மை நூற் கருத்துக்களும்

நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர், ஆசிரியர். வெளிநாடுகளில் நல்ல தமிழ் நூல்கள் வெளியிடப் பெற்று வருவதை

இலங்கையில் வெளியானது இந்நூல் மெய்ப்பிக்கிறது. 30 தலைப்புகளில் கட்டுரைகள் அமைந்துள்ளன. உலக இந்து மாநாட்டின் அன்பளிப்பாக வெளியிடப் பெற்ற இந்நூல் மூன்றாம் பதிப்பாகும். முதல் பகுதியில் கந்தபுராணக் கதை அமைந்து பிற்பகுதியில் உண்மைக் கருத்துக்கள் அமைந்துள்ளன. சைவ சித்தாந்த முப்பொருள் பற்றியக் கட்டுரை சுருங்கிய நிலையில் இருப்பினும் சிறப்பான கட்டுரையாக அமைந்துள்ளது.

11. சமயக் கட்டுரை மாலை

வெ. சு. அழகப்பன், ஆசிரியர். 9 தலைப்புகளில் கட்டுரைகள் அமைந்துள்ளன. முன்னுரையில் கட்டுரைகளின் சுருக்கம் கொடுக்கப் பெற்றிருப்பது வரவேற்புக்குரியது. சங்க காலத்தில் சமயச் சண்டையில்லை என்ற ஆய்வுக் கருத்து சிந்திக்கத்தக்கது. சைவசமய மறுமலர்ச்சியில் நகரத்தார் என்ற கட்டுரையில் ஆதாரங்கள் காட்டப் படவில்லை. காட்டுவது இன்றியமையாதது. பழனிப் பயணக் கட்டுரை சிறப்பாக அமைந்துள்ளது.

12. சிறுவர் கவியரங்கில் திருஞானசம்பந்தர்

அரு.சோமசுந்தரம் இதன் ஆசிரியர். கவிதை நூல். கவியரங்கத்தின் மொத்த வடிவமாக அமைந்துள்ளது. சிறுவர் பாடுவது என்பதற்கேற்ப குழந்தை நடையில் அமைந்துள்ளது. 11 தலைப்புகளில் ஞானசம்பந்தரைப் பற்றிய தலைப்புகள் அமைந்துள்ளன.

''தங்கக் கிண்ணத்தில்
தானெடுத்து ஊட்டியதால்
மங்காப் புகழ்பெற்றார்
திருஞான சம்பந்தர்' (பக்—12)

என்பன போன்று அமைந்த வரிகள் கவிதையின் எளிமை நடைக்கு எடுத்துக் காட்டாகும்.

13. சீறாப் புராணம் நுபுவ்வத்துக் காண்டம்

கவி க. மு. ஷெரீப், உரையாசிரியர். இந்து சமய நூல்களைத் தவிர, பிற சமய நூல்களும் இந்த நூற்றாண்டில் வெளிவந்தமைக்கு இந்நூல் எடுத்துக் காட்டு. கவிஞர் சிறந்த முறையில் — முகமதியத் தத்துவங்களை உள்ளடக்கி உரை எழுதியமை குறிப்பிடத் தக்கது. மூல நூலைப் படிப்பதற்கு எளிமையாகப் பதிப்பித்திருக்கிறார்.

14. சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ்

வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயர் பதிப்பாசிரியர். முன்னுரையில் பிள்ளைத்தமிழ் இலக்கணம் ஆய்வு முறையில்

அமைந்துள்ளது. நாங்கூர் தலத்தின் பெருமை நூலில் பேசப்பெற்றுள்ளது. பிள்ளைத் தமிழ் நூல்களின் பட்டியல் ஆய்வாளர்க்குப் பெரிதும் துணை புரிவது ஆகும். நூலிற்குக் குறிப்புரை அடிப் பகுதியில் குறிக்கப் பெற்றுள்ளன.

**15. தம்பிக்கு அருளாளர்கள்**

குறிஞ்சி ஞான வைத்தியநாதன் ஆசிரியர். இருகதைகளைத் தம்பிக்குச் சொல்வது போல் நூல் அமைந்துள்ளது. மாணிக்க வாசகர், தாயுமானவர் வரலாறு அமைந்துள்ளன. மாணிக்க வாசகர் வரலாறு திருவாசகப் பாடல்களின் அடிப்படையில் எழுதப் பெற்றுள்ளது. ஆய்வுக்குரிய நிலையில் அமைந்துள்ளது அப்பகுதி. திருக்கோவை பற்றிய கருத்துக்கள் குறுகிய அளவிலே அமைந்துள்ளது. தாயுமானவர் பற்றிய கதை விரிவாகத் தரப்பெற்றுள்ளது.

**16. தெய்வ நான்மணிமாலை**

பழ. வெள்ளியங்கிரி ஆசிரியர். இளைய தலைமுறையினரின் கவிதை வளத்திற்குச் சான்றாக விளங்கும் நூல். விநாயகர், முருகன், உமை, சிவன் ஆகிய நான்கு தெய்வங்களைப் போற்றிப் பாடப்பெற்ற நூல். எளிமையும், செறிவும் அடைந்த சொற்களால் நிரம்பியுள்ள கவிதைநூல். பாடல்களுக்கு ஆசிரியரே குறிப்புரை எழுதியிருப்பது பாராட்டத் தக்கது. பாடல்கள் அந்தாதி முறையில் அமைந்திருப்பின் சிறப்பாக இருந்திருக்கும்.

**17. பரவசமூட்டும் பக்திக் கதைகள்**

டி. எம். சௌந்தரராஜன் ஆசிரியர். 13 தலைப்புகளில் கவிதைகள் அமைந்துள்ளன. பெரியபுராண அடியார் கதைகளும், வாலி வதையும், தாயுமானவர், அபிராமிபட்டர் கதைகளும் அமைந்துள்ளன. ஆசிரியர் இக் கதைகளை எடுத்துக் கொண்டதற்கு அவரே கூறும் காரணம், 'மானிடனாகப் பிறந்திருப்பதே, இப் பிறவியை ஒரு கருவியாகப் பயன்படுத்தி பரம் பொருளை அடைவதற்கே' — எனவே அவ்வாறு அடைந்தோர் வரலாற்றைக் காண்போம் என்பது. சிறுத்தொண்டர் கதையில் சிறுத்தொண்டரும் — சிவனடியாரும் உரையாடுவதைக் கூறும் பகுதி நாடகப் பாங்காக நன்கு அமைந்துள்ளது. ஒவ்வொரு கதையின் முடிவிலும் ஆசிரியர் தன் சொந்த எண்ணத்தை அறிவித்திருப்பது சிந்தனைக்கு உரியதே.

**18. பிரார்த்தனை எனும் பேராற்றல்**

பி. சி. கணேசன் ஆசிரியர். சிறியநூல். பிரார்த்தனை பற்றிய அனைத்து விளக்கங்களும் அமைந்துள்ளன. பிரார்த்-

தனை செய்து இறைவனிடம் வேண்டுதல் விடுப்பது தவறல்ல என்பது ஆசிரியரின் கருத்து. அமெரிக்கப் பரிசோதனை என்ற தலைப்பில் விஞ்ஞானத்தின் தோல்வியால் மெய்ஞ்ஞானத்தின் வலிமை உணரப் பெறுகிறது என்ற கருத்து வெளிப்படுத்தப் படுகிறது. எது பிரார்த்தனை என்ற தலைப்பு பிரார்த்தனைக்கு விளக்கம் தருகிறது. சிறந்த கட்டுரைகள் அடங்கிய நூல். மொத்தம் 11 கட்டுரைகள் அமைந்துள்ளன.

முடிவு:- எண்பத்திரண்டில் சமய நூல்கள் எனக் கிடைத் தவை கொண்டு ஆய்ந்திடும்போது பொதுவாக நல்ல தமிழ் நடை இலக்கியங்கள் அதிகம் தோன்றில என்பதை நாம் உணர லாம். பெரும்பாலும் வடமொழிச் சொற்களைக் கலந்து எழுதும் உரை நடையே காணப்பெறுகின்றன. சமயத் தொடர்பான சொற்களில் மிகுதியானவை வட சொற்களாக இருப்பதனால் அத்தகு நடை காணப்பெறுகின்றன போலும். இத்தகு நிலையை மாற்ற சமய அறிஞர் முயல வேண்டும். தத்துவச் சொற்களைத் தமிழ்ப்படுத்த முயலவேண்டும். தமிழ்ச் சொற்கள் உருவாகி னால்—இயற்கையாகவே சமய இலக்கியங்கள் நல்ல தமிழ் நடையைப் பெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. புதிய சிற்றிலக்கிய வகைகள் தோன்றிடவேண்டும். தத்துவக் கருத்துக் கள் எளிமைப்படுத்தி — இளைய தலைமுறையினர் உணர்ந்து கொள்ளும் வண்ணம் நூலகள் வெளிவரவேண்டும். உலக அரங்கில் இந்தியத் தத்துவங்கள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன. அந்தத் தக்துவங்களை மெய்ப்பொருள் இயலார் சிறு சிறு விளக்கக் கட்டுரைகளாக வெளியிடின் நலம் பயக்கும் என்பதில் ஐயமில்லை. எண்பத்திரண்டைப் பொறுத்த வரையில் சமய இலக்கியங்கள் மிகுதியும் இல்லை, அதே நேரத்தில் தமிழ் அத்துறையில் வளர்க்கப் படாமலும் இல்லை என்பதே முடிபாகும்.

## எண்பத்திரண்டின் சமய நூல்கள் (கிடைத்தவை)

| வ. எ. | நூலின் பெயர் | ஆசிரியர் | பதிப்பகம் | விலை ரூ. | திங்கள் | பக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | அறம் வளர்த்த அடியார்கள் | புலவர். சிவ. கன்னியப்பன் | தமிழரசி பதிப்பகம் மயிலாப்பூர், சென்னை-4. | 7.00 | சூன் | (19 கட்டுரைகள்) |
| 2. | அற்புதமான இந்து மதம் 1000 உண்மைகள் | திருமருகல். சிங்கார வேலனார் | அருணோதயம் வெளியீடு சென்னை-14. | 12.00 | மே | 228 |
| 3. | அம்பிகை அழகு தரிசனம் | கண்ணதாசன் | வானதி பதிப்பகம், சென்னை. | 4.00 | மே | 108 |
| 4. | ஆண்டவரிடம் வள்ளல் பெருமானின் வேண்டுதல்கள் | மு. சதாசிவம் (தொகுப்பு) | மீரா நிலையம், ஈரோடு. | — | பிப்ரவரி | 46 |
| 5. | ஆதிசங்கரர் புஜங்கங்கள் மற்றும் பல துதிகள் | ஹா. கி. வாலம் | நர்மதா பதிப்பகம் 1, வியாசராவ் தெரு, சென்னை-17. | 11.00 | ஆகஸ்டு | — |
| 6. | இந்து தர்மங்கள் | ஜெயேந்திர சுவாமிகள் | வானதி பதிப்பகம் சென்னை-17. | 5.00 | சூலை | 122 |
| 7. | இந்துமதச் சிந்தனைகள் | பி. சி. கணேசன் | வானதி பதிப்பகம் சென்னை-17. | 7.50 | செப் | 152 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8. | இந்துமதம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது | பி. சி. கணேசன் | வானதி பதிப்பகம் சென்னை-17. | 4.50 | செப் | 96 |
| 9. | உபநிடதங்களின் சாரம் | புண்ணிய சோழ ஸ்ரீ நடராஜா சிவாச் சாரியார் | நர்மதா பதிப்பகம் 1, வியாசராவ் தெரு, தி. நகர், சென்னை-17. | 6.00 | சூலை | 112 |
| 10. | கந்தபுராணக் கதைகளும் அவைகள் உணர்த்தும் உண்மை நூற்கருத்துக்களும் | நவாலியூர். க. சோமசுந்தரப் புலவர் | பா. சோ. பாரதி 24, ஆசுபத்திரிவீதி சொட்டடி, யாழ்ப்பாணம். | — | — | — |
| 11. | காஞ்சிப் பெரியவரின் பொன் மொழிகள் (தொகுப்பு) | சந்திர சேகர சுவாமிகள் | வானதி பதிப்பகம், சென்னை. | 5.00 | ஏப்ரல் | 116 |
| 12. | சந்திர சேகரேந்திர சுவாமிகள் அருள்மொழி(தொகுப்பு) | ஆர். கணபதி | வானதி பதிப்பகம், சென்னை. | — | — | — |
| 13. | சமயக் கட்டுரை மாலை | வெ. சு. அழகப்பன் | கண்ணம்மை பதிப்பகம், காரைக்குடி. | 8.00 | சூலை | 106 |
| 14. | சிறுவர் கவியரங்கில் திருஞான சம்பந்தர் | அரு. சோமசுந்தரம் | பொன்முடி பதிப்பகம், காரைக்குடி. | 4.00 | மே | — |
| 15. | சிவஞான போதம் | ………………… | தருமை ஆதீனம். | — | ஆகஸ்ட் | — |
| 16. | சீறாப்புராணம் (நுபுவ்வத்துக் காண்டம்) | கவி. காமு. செரீப் | வானதி பதிப்பகம், சென்னை. | 25.00 | ஆகஸ்ட் | 480 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 17. | செல்வத் திறவு கோல் | உரையாசிரியர். சு. அ. இராமசாமிப் புலவர் | தணிகைப் பதிப்பகம், 293, தம்புசெட்டித் தெரு, சென்னை-1. | 6.50 | ஜனவரி | — |
| 18. | சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத் தமிழ் | (பதிப்பாசிரியர்) வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயர் | உ. வே. சா. நூலகம், திருவான்மியூர், சென்னை-41. | 7.00 | — | — |
| 19. | தம்பிக்கு அருளாளர்கள் | குறிஞ்சி. ஞான வைத்தியநாதன் | மணியம் பதிப்பகம், 39, இரத்தின முதலி தெரு, குறிஞ்சிப்பாடி, தெ. ஆ. மா. | 8.00 | சூலை | 128 |
| 20. | தவத்திரு. ஞானியாரடிகள் | வெள்ளையாம்பட்டு. சுந்தரம் | அருள் பதிப்பகம், சென்னை-18 | 5.50 | சூலை | 100 |
| 21. | தவம் | கிருபானந்த வாரியார் | வானதி பதிப்பகம், சென்னை. | 3.00 | மே | 87 |
| 22. | தாயுமானவர் கதை (வரலாறு) | வெள்ளையாம் பட்டு. சுந்தரம் | அருள் பதிப்பகம், சென்னை-18. | 5.50 | சூலை | 100 |
| 23. | திருப்புகழ் | கிருபானந்த வாரியார் | வானதி பதிப்பகம், சென்னை | 30.00 | பிப்ரவரி | 612 |
| 24. | தெய்வ நான்மணி மாலை | புலவர். பழ. வெள்ளியங்கிரி | பச்சையம்மை பதிப்பகம், புதுவை. | 2.50 | டிசம்பர் | 36 |
| 25. | தெய்வத்தின் குரல் | ஆர். கணபதி | வானதி பதிப்பகம், சென்னை. | — | — | — |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 26. | தெய்வ வாக்கு | ஜெயேந்திர சுவாமிகள் | வானதி பதிப்பகம், சென்னை. | 12.00 | டிசம்பர் | 304 |
| 27. | தேவி மகாத்மியச் சுருக்கம் | — | தருமை ஆதினம். | — | — | — |
| 28. | பரவசமூட்டும் பக்திக் கதைகள் | டி. எம். சௌந்தர ராஜன் | தமிழ் சோலை, 48, சத்தியபுரி தெரு, சென்னை-33. | 6.25 | ஆகஸ்டு | 100 |
| 29. | பிரார்த்தனை எனும் பேராற்றல் | பி. சி. கணேசன் | வானதி பதிப்பகம். சென்னை. | 4.00 | ஆகஸ்டு | 72 |
| 30. | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (பதிப்பு) | குமரகுருபரர் | தேமா பதிப்பகம், காரைக்குடி-1. | — | ஆகஸ்டு | 104 |
| 31. | மன அமைதிகளும் நித்திய பாராயணங்களும் | ஹா. கி. வாலம் | நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு, சென்னை. | 11.00 | ஆகஸ்டு | — |
| 32. | மூத்தபிள்ளையார் திருச்சகதம் | கே பி. அறிவானந்தம் | எந்தைபிரான் பதிப்பகம், குன்றத்தூர், சென்னை. | 4.00 | நவம்பர் | — |
| 33. | வள்ளற் பெருமானின் உபதேசங்கள் அறிவுரைகள் | மு. சதாசிவம் (தொகுப்பு) | மீரா நிலையம், ஈரோடு. | — | பிப்ரவரி | 46 |

# 41. மொழிபெயர்ப்பு நூல்கள்

—சு. சண்முக வேலாயுதம்

தமிழிலிருந்து பிறமொழிகளுக்குச் சென்றதை விட, பிற மொழிகளிலிருந்து தமிழ் பெற்ற மொழி பெயர்ப்புகள் இவ் ஆண்டில் மிகுதியாக அமைகின்றன. நூற்றாண்டு நாயகரான பாரதி மொழி பெயர்ப்பாளராகவும் மிளிர்கின்றார். புதினம், நாடகம், வாழ்க்கை வரலாறு, அறிவியல், சிறுகதை, கவிதை, உரைநடை எனப் பல்துறை நூல்கள் பல மொழிகளிலிருந்து தமிழுக்கு வளஞ்சேர்க்க வந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

மொழிபெயர்ப்பு நூல்கள், ஒரு மொழியின் வளத்திற்கு உறுதுணையாக அமைவதோடு, மற்ற மொழியின் கலை, பண்பாடு, பழக்க வழக்கம் போன்ற நிலைகளை எல்லோரும் அறிந்து பயன் பெறுமாறும் விளக்குகின்றது.

மொழிபெயர்ப்புக் கலையைப் பொறுத்த அளவில் ஆண்டுக்கு ஆண்டு அதனுடைய வளர்ச்சியில் சிறந்த முன்னேற்றத்தைக் காணமுடிகின்றது. எண்ணிக்கையில் வளர்ச்சி உள்ளது போல், மொழிபெயர்ப்பின் தரத்திலும் வளர்ச்சி காணப்படுகிறது.

எண்பத்திரண்டாம் ஆண்டு பாரதி நூற்றாண்டாக அமைந்து விட்டதால், பாரதியின் கவிதை மொழிபெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. கவிஞரே மொழிபெயர்த்த கவிதைகளின் ஒரு தொகுப்பும் இதில் அடங்கும். நாடகத்துறையில் ஷேக்ஸ்பியரின் இரண்டு நாடகங்கள் தமிழ் வடிவம் பெற்றுள்ளன. இவைதவிர புதினம் (4), கவிதை (1), வாழ்க்கை வரலாறு (2), அறிவியல்(1), மார்க்சிய சித்தாந்தம்(1), கல்வி(1), சிறுகதைத் தொகுப்பு(1), குறும்புதினத் தொகுப்பு(1) போன்றனவும் மொழிபெயர்ப்பு வடிவம் கொண்டுள்ளன. இம்மொழிபெயர்ப்பு நூல்கள், மூல நூல்கள் தானோ என்று எண்ணுமளவிற்குச் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

**தமிழுக்கு வந்தவை: நாவல்**

**1. வெள்ளைக் கறை, பினாகின் தவே (பக். 216)**

இதன் மொழிபெயர்ப்பாளர் கலா. கே. தாக்கர், முதற் பக்கத்திலேயே, இது குஜராத்தி மொழியிலிருந்து பெயர்க்கப் பட்டுள்ள நாவல் என்பதையும், இரண்டாம் பக்கத்தில் மூலத் தலைப்பையும் கொடுத்துள்ளமை, மொழிபெயர்ப்பு நூல்கள் எவ்வாறு அமைய வேண்டும் என்ற ஒரு வரையறையின் இலக் கணமாகத் திகழ்கிறது.

இந்நூல் இன்னும் பலமொழிகளில் மொழிபெயர்க்கப்பட் டுள்ளமை இதன் ஆசிரியர்உரையின் பெயர்ப்பிலிருந்து தெரிய வருகின்றது. மூலமொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர், தான் நன்றாக அறிந்த இன்னொரு மொழியில், அம்மொழி நூலினைப் பெயர்க்கும் போது, அது மூலநூலையும் விஞ்சும் வண்ணம் அமைவதுண்டு. அத்தகைய நிலையை இம்மொழி பெயர்ப்பினைப் படித்த பொழுது தெள்ளத் தெளிவென உணர முடிந்தது.

மூலநூலாசிரியர் திறனை, மொழிபெயர்ப்பாளர் அறிமுகப் படுத்துவது ஒரு முக்கியமான அம்சமாகும். அதோடு மூலநூலா சிரியருடைய மற்றைய படைப்புக்களையும் மொழிபெயர்ப் பாளர் அறிமுகப்படுத்துகின்றார். குஜராத்தி மொழி வரலாற்று நாவலில் இவருடைய பங்கினையும் சுட்டிச் செல்கின்றார்.

இந்நாவலைப் பற்றிய திரு. தீபக் மேத்தாவின் திறனாய்வுக் கட்டுரையையும் மொழிபெயர்த்து கொடுத்துள்ளார். ஆராய்ச்சி யாளர்க்கு ஒரு சிறந்த கருவியாக இது அமையும். இம்மொழி பெயர்ப்பு நூலினைப் படிக்கும்போது, தமிழ்மொழியில் எழுதப் பட்டுள்ள நாவல் என்ற எண்ணமே ஏற்படுகிறது. குஜராத்தி மொழியிலிருந்து மொழிபெயர்க்கப் பட்டதாகவே தெரிய வில்லை. கதாநாயகனான வினுவின் தந்தை ரமன்லால் அவ ருடைய அன்னைக்கு எழுதும் கடிதம் இதற்குச் சான்று.

> ''மரியாதைக்குரிய அம்மா, சிரஞ்சீவி வினு!
>
> இப்பொழுது வேலை மிகுதியாக உள்ளது. அதனால் தான் கடிதம் எழுதவில்லை. ஆனால் அடிக்கடி உங்கள் நினைவு வருகின்றது. வினுவின் மருந்துகளைப் பற்றி நான் மறக்கவில்லை. வரும்பொழுது மருந்துகளைக் கட்டா யம் கொண்டு வருவேன்'' (பக். 28)

**2. விடியுமா, ஸதீநாத் பாதுரி (பக். 261)**

நூலின் முதற்பக்கத்தில் இது எந்த மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது என்பதைக் குறித்துள்ளார். இரண்டாம் பக்கத்தில், மூலநூலின் தலைப்பு 'ஜாகிரி' என்று காட்டுவதுடன் அச்சொல்லின் பொருளையும் கூறியிருந்தால் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும்.

முன்னுரையில் வங்க நாவலின் தோற்றம், வளர்ச்சி, அதில் இவ் ஆசிரியரின் பங்கு என்பனவற்றையெல்லாம் தொகுத்துக் கொடுத்துள்ளார். இம்மாதிரியான செய்திகள், மொழிபெயர்ப்பாளர்க்கு அந்நாவலைச் சரிவர புரிந்து கொள்ள வழிவகை செய்வதோடு, ஒப்பிலக்கிய ஆராய்ச்சியாளர்க்கும் உதவுகின்ற வகையில் அமைந்துள்ளன.

'ஜாகிரி' வங்காள அரசியல் நாவல் இலக்கியத்துக்கு ஒரு புதிய பரிமாணம் கொடுத்துள்ளது என்ற செய்தியை முன்னுரை வழங்குகின்றது. இதோடு, "ஒரு அரசியல் நாவல்என்ற பாண்டத்தில் மனித குலத்தின் பல வண்ணத்திய உணர்ச்சிகளை வடித்தெடுக்கிறார்" என்ற ஸரோஜ் பந்தோ பாத்யாயவின் முன்னுரை கூறுவது, அந்நாவலைப் படித்துப் புரிந்து கொள்வதற்கான பின்னணியினை உருவாக்கித்தருகின்றது. மொழிபெயர்ப்பு நூல்களைப் பொறுத்தவரையில் இம்மாதிரியான பின்னணிகள் தேவையாகும்.

'மேல்வகுப்பு வார்ட்' என்ற பகுதியிலே, ஆஸ்கார் ஒயில்டின் ஒரு பாடலை ஆங்கிலத்தில் கொடுத்திருக்கின்றார். இதைப் பீலு (கதாநாயகன்) சிறிது நேரம் நினைப்பதாக எழுதியிருப்பதால் தமிழில் மொழி பெயர்த்துக் கொடுக்கவில்லையா என்ற எண்ணம் எழுகின்றது.

பல ஆங்கில வார்த்தைகளுக்கு அவ்வாறே தமிழ் வடிவம் கொடுத்துள்ளார் (பக்கம் 111—'லார்ட்கள்' அரிஸ்டோக்ராடிக்') இவற்றைத் தவிர்த்து, மொழி பெயர்த்துக் கொடுத்திருக்கலாம்.

3. நம்பவே முடியாது, யாக்னிக் (பக். 92)

இம்மொழி பெயர்ப்பு ஒரு அழகு தமிழ்ப் புதினமாக அமைகின்றது. 'எண்ணத் துளிகள்' என்ற தலைப்பிலே ஆசிரியர் கதையின் பின்னணியினைச் சுட்டிச் சென்றுள்ளார். நாவலைப் படித்துத் துய்ப்பதற்கு இது பேருதவியாக அமைகின்றது. மூல நூல் ஆசிரியர் இந்நாவலை ஆங்கிலத்தில் கூற, அதனைத் தமிழ் நடைக்கு ஏற்றவாறு அமைத்துத் தந்துள்ளார், மொழி பெயர்ப்பாளர். மூல நூலின் தலைப்பு குறிக்கப்படவில்லை.

நாவலின் ஆரம்பப் பகுதியைப் படிக்கின்ற பொழுது, ஏதோ ஆங்கிலத்தில் சொல்லப்பட்டு தமிழிலே அமைக்கப்பட்ட கதையாகத் தோன்றவில்லை, தமிழில் வெளிவந்துள்ள நாவலைப் படிக்கின்ற உணர்ச்சிதான் ஏற்படுகின்றது.

"ஆண்டவனும் தனது விருப்பத்திற்கேற்ப, படைக்கப்பட்ட உயிரினங்களைச் சிரிக்க வைத்தும், சிந்திக்க வைத்தும், சீரழிக்க வைத்தும் பார்ப்பதுண்டு"

மூலநூலின் ஆசிரியரைப் போன்று பன்மொழிப் புலமை பெற்றவர்களாக மொழிபெயர்ப்பாளர் திகழ்ந்தால் இன்னும் பல நூல்கள் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டு, மற்றைய கலாச்சாரப் பண்பாட்டின் அறிவைத் தமிழ் மக்கள் பெறவும், தமிழ் மொழி வளம் பெறவும் வாய்ப்பமையும்.

4. நீலகண்டப் பறவையைத் தேடி..., அதீன் பந்தியோபாத்யாய (பக். 510).

இது, வங்காள மொழி மூலமுடையது என்பது நூலின் முதல் பக்கத்திலேயே குறிப்பிடப் பட்டுள்ளது அடுத்த பக்கத்தில் மூல மொழியின் தலைப்பையும் (நீலகந்த் பகீர்கோன்ஜே) மொழி பெயர்ப்புத் தலைப்பையும் அதன் கீழே கொடுத்துள்ளனர். இது வரவேற்கப்பட, அதோடு கடைப் பிடிக்கப்பட வேண்டிய அம்சமாகும்.

முன்னுரை சிறப்பாக அமைந்துள்ளது. அதில் இந்தியக்கலை இயற்கையோடு உறவு கொண்டுள்ளது என்ற கருத்தினையும் வடமொழிக் காவியம் பிறந்த நிலையினையும் குறிக்கின்றார். வடமொழி இலக்கியத்திற்கும், வங்காள நாவலுக்கும் இடையேயுள்ள தொடர்பினையும் வங்காள நாவலின் தோற்றம், வளர்ச்சி, அதில் இந்நாவலாசிரியரின் பங்கு என்ன என்பனவற்றையும் குறித்துள்ளார். நாவலாசிரியர் இந்நாவலில் கைக்கொண்டுள்ள கொள்கையினைச் சுட்டி நாவலைப்படிப்போருக்கு அதன் பின்னணியினைக் காட்டுகிறார்.

நாவலில் ஏழை முஸ்லீம்களின் வாழ்க்கையை விவரிக்கின்றார் மூலநூலின் உணர்வினை மொழி பெயர்ப்பு சீரிய முறையில் பிரதிபலிக்கின்றது..

நாடகம்

5. புயல், ஷேக்ஸ்பியர் (பக். 124)

ஷேக்ஸ்பியரின் (The Tempest) நாடகத்தைப் 'புயல்' என்று தமிழாக்கம் செய்ததன் காரணத்தை மொழிபெயர்ப்பாளரான

"உலகம் சுற்றிய பொற்கிழிக் கவிஞர் சோமசுந்தரன்", "ஷேக்ஸ் பியரின் படைப்புகள் தமிழர் தம்வீட்டில் பரவவேண்டும் என்ற ஆசையின் விளைவே" என்று முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். ஷேக்ஸ்பியரின் பல நாடகங்களையும் இவர் மொழி பெயர்த்துள் ளார். அதில் 'புயல்' பத்தாவது நூலாக வெளிவருகின்றது.

நாடக ஆரம்பத்தில், கதை மாந்தரின் பெயர்கள் ஆங்கிலத் தில் இருப்பது போலவே தமிழ் வடிவம் பெற்றுள்ளன (பிராஸ் பரோ, மிராண்டா). கதை மாந்தர்களின் உறவுகளைக் குறிக் கின்ற பொழுது, அலான்ஸோ-நேபிள்ஸ் அரசர், செபாஸ்டியன், மேற்படி தம்பி, என்று குறிப்பது மொழிபெயர்ப்பாளரின் தனித் தன்மையினைச் சுட்டுவதாக அமைகின்றது. கற்போருக்குக் கதை உறுப்பினர், கதை நிகழ்வினை எளிதில் புரிந்து கொள்ள இது உதவுகிறது.

ஆக்ட் (Act) என்ற சொல்லை, 'செயல்' என்று சொல்லுக்குச் சொல் பெயர்க்காமல், அதன் கருத்தினை உணரத்தக்கவகையில், செயல் நடைபெறுமிடமாகக் 'களம்' என்று பெயர்த்திருப்பது மொழிபெயர்ப்பாளர் கடைப்பிடிக்க வேண்டிய முறையாகும். இதன் மொழிபெயர்ப்பு மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. களம் (2) காட்சி (1)-இல், அந்தோனியோ பேசுகிறான்; "ஓ! உன் மனத்தில் இந்த நோக்கத்தை வைத்துக் கொண்டு வாய்ப்பினை இப்படிக் கேலி செய்கிறாய்! இந்த நோக்கத்தை எளிதாக எண்ணு கிறாய்! அதன் மூலம் அதற்கு உரம் போடுகிறாய். வாய்ப்பு வரு கிற பொழுது அதனைப் புறக்கணிப்பவர்கள், தங்களது பயத் தினாலோ, அல்லது சோம்பேறித் தனத்தினாலோ, தங்களது வாழ்க்கையை பெரும்பாலும் அழித்துக் கொள்கிறார்கள்" (பக்.04). மனிதனின் உணர்வுகள் எங்கும் ஒன்று போல் உள்ளது என்பதற்கு இது சான்றாகின்றது.

ஷேக்ஸ்பியரின் உவமை நயங்கள் அழகாகப் பெயர்க்கப் பட்டுள்ளன. "வலிமையான வாக்குறுதிகள் கூட ஆசை என்ற தீயில் எளிய வைக்கோல்களைப் போல் எரிந்து விடுகின்றன" (பக். 94).

மொழிபெயர்ப்பு நூலின் முன் மாதிரியாக இதைக் கொள்ள லாம். களம் (2)—காட்சி (1) இல் செபாஸ்டியன், கான்சலோ வின் பேச்சுக்களில் ஆங்கிலச் சொற்களான 'Dollar', 'Dolour' என்பவை இடம் பெறுகின்றன (பக். 41). அவை ஒரே மாதிரி உச்சரிக்கப்படுகின்ற சொற்களானதினால் தமிழில் 'டாலர்' என்றே குறிக்க வேண்டிய நிலை; மொழிபெயர்ப்பாளர் இந் நிலையைத் தெளிவாக்க இரண்டு சொற்களின் பொருளைத்

தமிழிலே அடைப்புக்குறிகளிலே டாலர்—(பவுன்), — (துக்கம்) என்று கொடுத்திருப்பது பின்பற்றப்பட வேண்டிய ஒன்று.

6. ஜூலியஸ் சீசர், ஷேக்ஸ்பியர் (பக். 132)

இம்மொழி மெயர்ப்பு நூலின் முன்னுரையில், "கி. மு. 44-இல் ஜூலியஸ் சீசர் குத்திக் கொல்லப்பட்ட வரலாற்றுப் புகழ் மிக்க செனட் மண்டபத்தைப் பார்க்கும் பெருமை பெற்றேன். ரோமானிய மக்களோடு பழகும் பேறு பெற்றேன். எனவே ரோமானிய உணர்வோடு இந்த நாடகத்தினை மொழிபெயர்த்துத் தமிழ்த்தாயின் திருவடிகளில் பணிவோடு சூட்டுகிறேன்" என்று மொழிபெயர்ப்பாளர் குறிப்பிட்டுள்ளார். மொழி பெயர்க்கப்பட்ட நூல், மூலநூலின் உணர்வினைப் பிரதிபலிப்பதாக அமையவேண்டும் என்பதற்கு இந்நூல் ஒரு சான்று. தலைப்பு மூலநூலில் அமைந்திருப்பது போலவே தமிழ்ப்படுத்தியிருப்பதால் மூலநூலின் உணர்வினைப் பெற வாய்ப்பாக உள்ளது. அதே போன்று நாடக மாந்தரின் பெயர்களுக்கும் தமிழ் வடிவம் கொடுத்துள்ளார்.

களம் (1) காட்சி (1)-இல் மருல்லஸ் பேசுகின்ற வசனங்கள் (பக். 7) மூலநூலில் அப்பேச்சைக் கேட்கும் போது ஏற்படுகின்ற உணர்வு ஏற்படும் வண்ணம் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இம்மாதிரியான உணர்வுகளை நாம் பெற்றால் அது மொழி பெயர்ப்பாளருக்குக் கிடைத்த வெற்றி என்பதில் ஐயமில்லை.

களம்—(1) காட்சி (2)-இல் காஷியஸினுடைய பேச்சும் இத்தகையது.

"காஷியஸ்: புரூட்டஸ்! உங்களைச் சமீப காலமாகக் கவனித்து வருகிறேன். தாங்கள் முன்பு என்னிடம் காட்டிய அன்பும் பெருந்தன்மையும் உங்கள் கண்களில் இப்பொழுது காணப்படவில்லை. நீங்கள் என்னை வேற்றான் போல நடத்துகிறீர்கள். உங்களிடம் அன்பு செலுத்தும் என்னிடம் வைராக்கியம் பாராட்டுகிறீர்கள்" (பக். 11).

ஷேக்ஸ்பியரினுடைய கவித் திறமையையும் மொழி பெயர்ப்பாசிரியர் மிகச் சிறப்பாக வெளிக் கொணர்கிறார். காட்சி(3)-இல் காஸ்காவினுடைய பேச்சு இப் பண்பு புலப்படுகிறது. "பொங்கி எழுந்த கடலின் அலைகள் மேக மண்டலத்தை முத்தமிட முயலும் காட்சியைக் கண்டிருக்கிறேன். ஆனால் இன்று வரை—இந்தக் கணம் வரை—நெருப்பை உமிழும் புயலை நான் பார்த்ததில்லை. வானுலகில் ஏதாவது உள்நாட்டுப் புரட்சி நடக்க வேண்டும்"—(பக் 24)

மனித குலத்தின் நம்பிக்கைகள் ஒரே மாதிரியாக அமைவதைக் காணமுடியும். இரவுப் பறவையாகிய ஆந்தை அலறுகின்றதைத் தீய சகுனமாக ரோமானிய மக்களும் கருதியதை இந் நாடகம் புலப்படுத்துகின்றது. அதோடு, அவருடைய நம்பிக்கைகள் முதலியவற்றை அறியவும் மொழி பெயர்ப்புகள் உதவுகின்றன. "வீதிகளில் ஒரு பெண் சிங்கம் குட்டி போட்டதாம்; கல்லறைகள் வாய் திறந்து பிணங்களைக் கக்கினவாம்" என நம்பிக்கை வயப்பட்ட கனவுக் காட்சி அமைகின்றது. இவற்றை நோக்க அந்தந்த மூலமொழியின், நாட்டு, கலாச்சார பழக்க வழக்கங்களைப் பிரதிபலிக்கின்றது, ஒரு முழுமையான மொழி பெயர்ப்பு எனக் கொள்ளலாம்.

ஒட்டு மொத்தமாக, இம் மொழி பெயர்ப்பு நூல் மூல நூலிலிருந்து வேறுபடாமல், அதே நேரத்தில் வழி நூலின் மொழியில் மூல நூலின் உணர்வினைப் பிரதிபலித்து அமைகின்றது.

**கலவைத் தொகுப்பு**

**7. அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம் (பக் 142)**

இந் நூல் 'நவீன ஆப்பிரிக்க இலக்கியத்தின் தொகுப்பு' என்று மொழிபெயர்ப்பு ஆசிரியர் குறித்துள்ளார். கவிதைகள் அதிகமாகவும், நான்கு சிறுகதைகளும், இரண்டு நாடகங்களும், இரண்டு கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

இது ஒரு ஆப்பிரிக்க இலக்கியத் தொகுப்பு என்றாலும், மொழிபெயர்ப்பாளர் இந்திரனின் திறத்தால், தமிழ்க் கவிதைகளாக, கட்டுரைகளாக, நாடகங்களாக, சிறுகதைகளாக மாறியுள்ளது.

'புதிய காற்று உள்ளே வரட்டும்' என்ற தலைப்பிலே மொழி பெயர்ப்பாளர் இந்நூல் தமிழிலே தோன்றியதன் காரணத்தைக் கூறுகின்றார். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் பழந் தமிழனின் சொற்கள் இன்று உதட்டளவில் உள்ளது. அது உண்மைச் சொற்களாக மாறுவதற்கு விழிப்புணர்ச்சி தேவைப் படுகிறது. அவ்விழிப்புணர்ச்சி ஏற்படுவதற்கு மற்றைய நாடுகள் கலை, இலக்கியம், தொழில் நுட்பம், விவசாயம் போன்ற துறைகளில் எந்தெந்த நிலையில் வளர்ச்சி பெற்றுள்ளனர் என்று அறிந்தாலொழிய நாம் உணருவது கடினம். அதைத் தமிழில் கொண்டு வர வேண்டியது மிகவும் அவசியமான ஒன்றாக மாறிவிட்டதன் விளைவே இந்நூல் என்று குறித்துள்ளார். மொழி பெயர்ப்பாளர் கூற்று முற்றிலும் வரவேற்கப்பட வேண்டிய ஒன்று. 'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ் மொழி

யில் பெயர்த்தால்' தான், தமிழ் மொழி வளம் பெற்று, இன்னும் சீரும் சிறப்புடன் விளங்கும்.

ஆப்பிரிக்க இனக் கவிஞரின் உள்ள உணர்ச்சிகளைத் தமிழிலே மிகச் சீரிய, அழகான முறையிலே வடித்துத் தந்துள் துள்ளார், மொழிபெயர்ப்பாளர். சிறுகதையைப் பொறுத்த அளவில் அது நன் முறையில் தமிழ் வடிவம் பெற்றுள்ளது. இதில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள கட்டுரை 'நீக்ரோவியம்—இருப தாம் நூற்றாண்டின் மனித நேயம்', என்ற தலைப்பில் நீக்ரோ இனத்தைப் பற்றிய செய்தியை அளிக்கின்றது. இதில் பெயர்க்கப் பட்டுள்ள நாடகம் ஆப்பிரிக்க இனத்தின் பழக்கத்தினைத் தமிழிலே அழகாகச் செப்புகின்றது. அதோடு ஆப்பிரிக்க மக்கள் பாம்பை வழிபடுகின்ற நிலையினையும் நமக்கு அறிவிக்கின்றது. இது நம் நாக வழிபாட்டு மரபோடு ஒத்துள்ளது என்ற செய்தி யினையும் அறிந்து கொள்ள உதவுகிறது.

வாழ்க்கை வரலாறு

8. புத்த தேவ போஸ், அலோகரஞ்சன் தாஸ்குப்தா (பக். 80)

சாகித்திய அகாதெமி 'இந்திய இலக்கியச் சிற்பிகள்' என்ற வரிசையில் இந்திய நாட்டிற்கு இலக்கியமியற்றித் தொண் டாற்றியவரைப் பற்றி, பல மொழிகளில் நூல் வெளியிட்டு வரு கின்றது. 1982—ஆம் ஆண்டு அலோகரஞ்சன் தாஸ்குப்தா ஆங்கிலத்தில் புத்த தேவ போஸ் பற்றி எழுதிய நூலினைத் தமிழில் தா. வே வீராசாமி மொழி பெயர்த்துள்ளார். மூலநூல் ஆசிரியர், புத்த தேவ போஸுடன் யாதவ்பூர் பல் கழகத்தில் ஒப்பியல் இலக்கியத் துறையில் பணியாற்றிய பெருமை பெற்றவர்.

மூல நூலிலிருந்து சற்றும் மாறுபடாமல், புத்த தேவ போஸி னுடைய திறனை, முழு விவரங்களுடன் எளிதான நடையிலேயே தமிழில் வழங்கியுள்ளார் மொழி பெயர்ப்பாளர். இம் மொழி பெயர்ப்பில், புத்த தேவ போஸின் மூலக் கவிதைத் தலைப்பை யும் கொடுத்து, அதற்குப் பக்கத்தில் தமிழில் அதற்கான பொரு ளையும் விளக்கியிருப்பது ஒரு சிறப்பு அம்சமாகும். பந்திர் பந்தனா (அடிமையின் பிரார்த்தனை); சாப பிரஷ்ட் — சபிக்கப் பட்ட கடவுள்-இத்தகு முறையினை மொழி பெயர்ப்பாளர் நூலின் கடைசி வரை கடைப்பிடிக்கின்றார்.

'சல சித்ர' (திரைப்படம்) என்ற சொல்லினை இம் மொழி பேரன்றே, மலையாள மொழியிலும் திரைப்படம் என்ற

பொருளில் பயன்படுத்துவது, மொழிகளிடையேயுள்ள ஒத்த பண்பினைத் தெரிவிக்கின்றது. மொத்தத்தில் மொழி பெயர்ப்பாளர் புத்த தேவ போஸினுடைய வரலாற்றை தமிழ்மொழி மூலமாக அனைவரும் அறிந்து கொள்ள உதவுகின்றார் என்றே சொல்ல வேண்டும்.

9. காலம் தந்த தலைவன் (ஜவஹர்லால் நேரு), ரஸ்கின் பாண்ட் (பக். 142).

இந்நூல் ஜவஹர்லால் நேருவைப் பற்றி இளைய தலைமுறையினர்க்கு எடுத்துக் கூறுகின்றது. மூல நூலின் தலைப்பு என்னவென்று குறிப்பிடப் படவில்லை என்பது ஒரு குறையே. முன்னுரையைப் படிக்கும் பொழுது சரண்சிங்கே தமிழில் எழுதியுள்ளது போல் மொழிபெயர்ப்பாளர் வெகு எளிமையாக, பழகு தமிழில் எழுதி உள்ளார். மொழி பெயர்ப்பாளர் 'என்னுரையில்' தமிழ் வாசனை புத்தகத்திலே கமழ வேண்டுமென்ற நோக்கத்தோடு "Servants of India Society" என்பதை அடைப்புக்குள் தந்து 'இந்திய ஊழியர் சங்கம்' என்று எழுதியுள்ளார்.

பொருளடக்கத்திலே உள்ள தலைப்புகளிலும் மொழி பெயர்ப்புத் தன்மையன்றி, தமிழ் நயமே விஞ்சி நிற்கிறது. (1) இளம் புத்தகப் பைத்தியம், (2) பள்ளிக் காலம், (3) செயலாற்ற ஆர்வம். இளைய தலைமுறையினர் இதைப் படிக்கும் பொழுது தாங்களும் நேருவின் வாழ்க்கையோடு ஒன்றி அவருடைய சுக துக்கங்களிலே பங்கு பெறுவர் என்பது திண்ணம்.

அறிவியல்

10. விந்தையான பிரபஞ்சம், வி. கோத் (பக். 266)

இம்மொழிபெயர்ப்பாளர் தலைப்பினைத் தமிழ்ப் படுத்தியதே சிறப்பாயுள்ளது. ஆங்கிலத்தில் தலைப்பு 'This Amazing, Amazing, Amazing, But Knowable Universe' என்பதாகும். அதைத் தமிழில் 'விந்தையான பிரபஞ்சம்' என்று பெயர்த்துள்ளதால், ஒரு தலைப்பு எவ்வாறு பெயர்க்கப்பட வேண்டும் என்பதைக் காட்டுகிறார். தமிழில் விஞ்ஞான தத்துவ நூல்களைப் பெயர்ப்பது கடினமான ஒரு செயல் என்று கருதுகின்றனர். ஆனால் அதில் முயன்று வெற்றியும் கண்டுள்ளார் மொழி பெயர்ப்பாசிரியர்.

மொழிபெயர்ப்பு நூலின் முன்னுரையைப் படிக்கும் பொழுது, தமிழில் மார்க்சிய தத்துவத்தை விஞ்ஞானத்தோடு இணைத்துப் பார்க்கின்ற மூல நூலினைப் படிக்கின்ற எண்ணம் தான் ஏற்படுகின்றது. அத்தகைய சிறப்பினை இம் மொழி

பெயர்ப்பு பெற்றுள்ளது. இருப்பினும் சிற்சில இடங்களில் ஒரு மொழிபெயர்ப்பு என்ற எண்ணத்தை எழச் செய்கிறது. 'அணு உட்கருவின் பௌதீகம்பொருத்து சோவியத் யூனியனில் நடத்தப் பட்ட யுத்த முற்கால ஆராய்ச்சிகளைப் பற்றி ஏற்கெனவே விரிவாக எழுதப்பட்டுள்ளது' (பக். 10, முன்னுரை)

இதழ்கள், நிறுவனங்கள் இவற்றின் பெயர்களை எவ்வாறு பெயர்ப்பது என்பதற்கு இந்நூலின் முன்னுரையில் விளக்கம் கிடைத்துள்ளது. ஒரு இதழின் தலைப்பு 'பிரிரோதா' என்பது. அதை அவ்வாறே தமிழ் வடிவமாக்கி விட்டு, அச்சொல்லிற்குத் தமிழ்மொழியில் கொள்ளுகின்ற பொருளினை அடைப்புக்குறி யிலே (இயற்கை) என்று கொடுத்துள்ளார். இதை ஒரு முன் மாதிரியாகக் கொள்ளலாம்.

மொழிபெயர்ப்பு நூல்கள் மற்றைய நாடுகளின் கலாச்சாரம், பண்பாடு, தத்துவம், அறிவியல் நிலை இவைகளை அறிந்து கொள்ள உதவும் ஒரு பெருங் கருவியாக அமைகின்றது. இந் நிலையிலே இந்நூலினை அணுகுவோமானால், இம்மொழி பெயர்ப்பு பெரும் வெற்றி பெற்றுள்ளது எனலாம். இந்நூல் ரஷ்ய நாட்டின் மார்க்சிச—லெனின் தத்துவங்களை விஞ்ஞானத் தோடு ஒப்பிட்டுச் செய்கின்ற ஒரு ஆராய்ச்சியினைக் குறிப்பதாக அமைகின்றது. விஞ்ஞானச் சமன்பாடுகளை அவ்வாறே கொடுக் கின்றது. இம்மாதிரியான நூல்கள் தோன்றினால் தமிழில் விஞ்ஞான நூல்களைப் பெயர்த்து எழுதமுடியாது என்ற கருத்தினை மாற்ற முடியும் என்ற நம்பிக்கை ஏற்படுகின்றது.

**தத்துவம்**

**11. மார்க்சிய சித்தாந்தம், (பக். 104)**

இந்நூலின் இரண்டாவது பக்கத்திலே இது ஆங்கில மொழி யிலிருந்து (Marxist philosophy) மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்ற செய்தி தரப்பட்டுள்ளது.

மொழிபெயர்ப்பாளர் யார் என்பது சுட்டப்படவில்லை. முன்னுரை, பதிப்புரை போன்றனவெல்லாம் தமிழ்நயத்துடன் அமைகின்றன.

மார்க்சிய தத்துவத்தினை அறிந்துகொள்ள இந்நூல் பேருதவியாக அமைகின்றது. இம்மாதிரியான சித்தாந்த, தத்துவ, கலாச்சார நூல்களைத் தமிழிலே பெயர்த்தால் உலகைப்பற்றி, மற்ற நாடுகளைப் பற்றி அறிந்துகொள்ள முடியும். மக்கள் எல்லோரும் எல்லா மொழிகளையும் கற்று அதில் உள்ள இலக்கியங்களை, பண்பாட்டினை அறிந்து கொள்வது மிகவும் கடினமானதாகும். அதனால் இதுபோன்ற

மொழி பெயர்ப்பு நூல்கள் தோன்றியாக வேண்டிய கட்டாயம் உள்ளது.

ஆனால், பொதுவாக, மொழிபெயர்ப்பு நூல்கள் சாதாரண மக்கள் புரிந்து கொள்ளுகின்ற வகையில் எளிமையான நடையில் பெயர்க்கப்படுவதில்லை என்பது வருந்தத்தக்கதாம்.

12. கல்வி, சுகோம்லின்ஸ்கி (பக். 313)

சுகோம்லின்ஸ்கியின் கல்விக் கொள்கையினைத் தெள்ளத் தெளிவெனப் பொங்கு தமிழ் நடையில் பொலிவுற எடுத்தியம்புகின்றார் மொழிபெயர்ப்பாளர், "சுகோம்லின்ஸ்கியின் பரிந்துரைகள் அனைத்தும், எல்லாக் கட்டுரைகளும், புத்தகங்களும், கருத்துகளும் ஒரே ஒரு எண்ணத்தை மையமாகக் கொண்டவையே ஆகும். கற்றுக் கொள்வதில் அக்கறை ஊட்டுவித்தல், விடா முயற்சியில் மகிழ்ச்சி பெறுவது, பெருமைப்படக்கூடிய மக்களாக வளர வேண்டும் என்ற பேரவா, ஆகிய இவைகளை எவ்வாறு கற்பிப்பது என்பதே அவருடைய கவலை" (பக். 17).

மொழிபெயர்ப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்ற கொள்கையின் வழித்தோன்றலாக இந்நூல் அமைந்துள்ளது. மொழிபெயர்ப்பு நூல்கள் பொதுவாக எளிமை, தெளிவுஎன்னும் இருகூறுகளைத் தன்னுள் அடக்கியதாக இருக்கவேண்டும். இவ்விரண்டு கூறுகளையும் இம்மொழி பெயர்ப்பு நூல் தன்னகத்தே கொண்டுள்ளது.

"மற்றவர்களை விடத் தான் மோசமானவன் என்றோ, பின் தங்கியவன் என்றோ, ஒரு குழந்தை எண்ணும்படி விடக் கூடாது. அவனுடைய தன்மானம் எந்தவிதத்திலும் பங்கப் படுத்தப்படக்கூடாது" இம்மாதிரியான வாக்கியங்கள் தமிழ் மொழியில் எழுதப்பட்ட நூல் ஒன்றினைப் படிப்பதைப் போன்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றதே ஒழிய, ஒரு மொழி பெயர்ப்பு நூல் என்ற எண்ணத்தை மனத்தில் தோற்றுவிக்கவில்லை.

சிறுகதை-குறுநாவல்

13. சிங்களச் சிறுகதைகள் (பக். 108)

இம்மொழிபெயர்ப்பு நூல் 'சிங்களத் தீவினுக்கோர் பாலமாக அமைந்து' சிங்கள இனத்தவரின் பண்பாட்டினை, மரபினை, அறிமுகம் செய்கின்றது என்பதை இதன் தலைப்பே அறிவிக்கின்றது. இந்நூலின் 'அணிந்துரை' இதைப் படிப்போர்க்கு, ஒரு பின்னணியினை உருவாக்கித் தருகின்றது. அதில் மூல எழுத்தாளரைப் பற்றிய செய்திகள், கதைகளின் சுருக்கம்

என்பன குறிக்கப்பட்டுள்ளமை பேருதவியாக அமைகின்றது. காதல் — மார்ட்டின் விக்கிரமசிங்க; சுதந்திரமாக வாழ்கிறார்கள் — குணசேன விதான; காவல்காரன் — ஆரியரட்ன வித்தான; எரிமலை வெடித்துச் சிதறியது — திலாக்குடா ஹெட்டி; அம்மா இல்லாத பிள்ளை — குணதாஸ வியனகே; உள்ளத்தின் பெறுமதி — கே. லயன் பெரேரா; சோமா — குணதாஸ அமர சேகர; எட்டாத கனி — வி. பியசோம பெரேரா; களைப்பாளியும் சுமைதாங்கியும் — ஜயசேன ஜயக்கொடி; பாலம்—குணசேன விதான என ஒன்பதின்மரின் பத்துக் கதைகள் அமைகின்றன. மூலத்தலைப்பினையும், பொருளடக்கத்தில், அடைப்புக் குறியிலே கொடுத்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

கதையின்முதலில் தமிழ்த்தலைப்பைக் கொடுத்து மூல நூலாசிரியர் பெயரைக் குறித்துள்ளனர்; முடிவில் ''தமிழில்'' என்று, மொழிபெயர்ப்பாளர் பெயரினைக் குறித்துள்ளனர். சிங்கள மொழியிலிருந்து இலங்கைத் தமிழரே இதை மொழிபெயர்த்துள்ளதால், மொழிபெயர்ப்பு சிறப்பாக அமைந்துள்ளது. 'நுளம்பு' என்ற சங்க இலக்கியச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது போன்றசொற்களைப் பயன்படுத்தும் பொழுது அடைப்புக் குறியிலே அதன் பொருளையும் கொடுத்தால் மொழி பெயர்ப்பு சிறக்கும். 'விதானையார்' எனும் சொல்லையும், தமிழகத்து மக்கள் புரிந்து கொள்ளற்கு இத்தகு முறைதேவையாகும். இலங்கைத் தமிழ் வழக்கினை அறிய இவை பயன்படுகின்றன.

மக்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகளிலே ஒரு ஒப்புமை உள்ளதை 'களைப்பாளியும் சுமைதாங்கியும்' என்ற தலைப்பில் உள்ள சிறுகதையில் கதாநாயகன் 'புஞ்சி சிங்கோ'வின் ''நேற்று 'காத்'தடிக்கெதிரே ஒரு மலட்டுப் பெண் எதிர்ப்பட்டதன் விளைவு தான் என் பயனற்ற பயணம் போலும்'' என்னும் கூற்று வெளிக் கொணருகிறது.

**14. மூன்று காதல் கதைகள், இவான் துர்கேனிவ் (பக். 563)**

நியூ செஞ்சுரி புத்தக நிறுவனத்தார், பல மொழிபெயர்ப்பு நூல்களைத் தமிழில் வெளியிடுவதன் மூலம், தமிழ் மொழிக்கு, அதனைப் பேசுகின்ற மக்களுக்குப் பெரும் தொண்டாற்றி வருகின்றனர். இம்மொழிபெயர்ப்பு நூல் அதில் ஒரு மணி மகுடமாகத் திகழ்கிறது.

முன்னுரை என்ற பகுதியிலே 'மூல நூல் ஆசிரியரின் தனித்தன்மைகள், திறமைகள் கூறப்பட்டிருக்கின்றன—மிக நுட்பமான உரை நடை, உணர்ச்சிக் கவிஞர், உளவியல் பகுப்பாய்

வில் தேர்ந்த நிபுணர்'—போன்று. காதலைப் பற்றிய ஆசிரியரின் எண்ணங்களும் குறிக்கப்பட்டுள்ளன. இவை நமக்குக் கதையின் போக்கினை விளக்கிச் செல்கின்றமை பாராட்டத் தக்கது. இக் காதல் கதைகள் ஆசிரியரின் வாழ்க்கையில் இடம் பெற்று, பின் காவியங்களாக மாறியவை. முன்னுரையில் காதல் கதைகளின் சுருக்கம் இடம் பெற்றுள்ளது, படிப்போருக்கு ஒரு சிறந்த பின்னணியினை உருவாக்கித் தருகின்றது. கதைகளின் மூலப் பெயர் சுட்டப்படவில்லை.

'ஆஸ்யா' என்ற முதல் கதையில் மற்றைய மொழிச்சொற்கள் இடம் பெற்றுள்ளன. குறிப்பாக, பிரெஞ்சு, ஜெர்மன் போன்ற மொழிச் சொற்களை தமிழ் வடிவமாக்கி அதன் பொருளை அடிக்குறிப்பில் கொடுத்துள்ளது, சொல்லறிவு பெறுவதற்குத் துணை செய்யும். அச்சொற்கள் இவ்விடத்தில் பயன் படுத்தப் படுகின்ற சூழல் பொருளையும் கூறுகின்றார்.

''லோன்-லாக்கே'' என்பது கூலிப் பணியாள் என்று பொருள் படும் பிரெஞ்சுச் சொல் இங்கே ஓட்டல் பணியாளரையும், பயணிகளால் கூலிக்கு அமர்த்தப்படும் வழிகாட்டிகளையும் குறிககிறது. என்ற அடிக்குறிப்பு இதற்குச் சான்றாகும்.

தமிழிலிருந்து சென்றவை: கவிதை

**15. Surrender and other Poems,** Neela Padmanabhan (Pages 60)

நீல. பத்மநாபன் ஒரு நாவலாசிரியர் என்ற முறையில் அவரைத் தமிழுலகம் நன்கறியும். இந்நூல் அவருக்குக் கவிஞர் என்ற அந்தஸ்தினை வழங்கியுள்ளது. மற்றைய மொழிபெயர்ப்பு நூல்கள் போன்று இதில் மூல ஆசிரியர் பெயர், மொழி பெயர்ப் பாளர் பெயர் என்பன குறிக்கப்படவில்லை. கவிஞரின் குறிப்பு என்ற தலைப்பில், இக் கவிதைத் தொகுப்பு எப்பொழுது தமிழில் வெளிவந்தது என்ற செய்தியைச் சொல்லிவிட்டு, எந்தெந்த கவிதைகளை யார் யார் மொழிபெயர்த்தனர் என்று கவிஞரே குறிப்பிடுகின்றார். கவிஞரே சில கவிதைகளையும் மொழி பெயர்த்துள்ளார்.

மூலக் கவிதையின் உணர்வினை மொழி பெயர்ப்பு நேர்த்தியாக வெளிப்படுத்தி உள்ளதை இக் கவிதைத் தொகுப்பில் உணர முடிகின்றது. துன்பம் (Agony) என்ற கவிதை, கேள்விக் குறியைத் தலைப்பாகக் கொண்ட கவிதை போன்றன இதற்குச் சான்று. முள் என்ற தலைப்புக் கொண்ட கவிதை எளிமையாக

மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. கவிதையைப் படிக்கும் பொழுது இதன் மொழிபெயர்ப்பாளரில் ஒருவரான, மூல நூலாசிரியரே எல்லாக் கவிதைகளையும் மொழி பெயர்த்திருந்தால் மொழி பெயர்ப்பு இன்னும் சிறப்பாக அமைந்திருக்குமோ என்ற எண்ணம் ஏற்படுகின்றது.

**16. 'Bharati As a Translator'** (pages 72)

இந்நூலின் தலைப்பே பாரதியை ஒரு மொழி பெயர்ப் பாளர் என்ற முறையில் அறிமுகப்படுத்துவதுதான். வெளியீட் டாளர் குறித்துள்ளதுபோல், பாரதியின் அளவற்ற, வியக்கத்தக்க ஆங்கில மொழி அறிவினை கண்டு உணர முடிகின்றது. அதோடு இறுதியில் இணைக்கப்பட்டுள்ள, 'பொன் வால் நரி' என்ற நையாண்டிக் கதை அவருடைய எள்ளல் சுவையைக் கையாளும் திறனைத் தெற்றெனப் புலப்படுத்தும். இம் மொழிபெயர்ப்பின் நோக்கம், பாரதியின் மற்றுமொரு கலைத்திறனான மொழி பெயர்ப்புத் திறனைப் படிக்கின்ற மக்களுக்குத் தெரிவிப்பதற் காகவாம்.

இவை பாரதி, சமஸ்கிருத ஆங்கிலப் படைப்புக்களைத் தமிழில் மொழி பெயர்த்தவைகளல்ல; இவை பாரதியின் கவிதைகள் சிலவற்றை (7) அவரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததையும், மற்றும் நாச்சியார் (3), நம்மாழ்வார் திரு வாய் மொழிகளையும் (4) அருணகிரிநாதரின் திருப்புகழை யும் அவர் மொழிபெயர்த்துள்ளதையும் உட்கொண்டனவாம் இம்மொழி பெயர்ப்பின் நோக்கத்தை "இது ஆங்கிலந் தெரிந்த தமிழர்களுக்காகவும், தமிழ் தெரிந்த ஆங்கிலேயர்களுக்காகவும்' என்று இந்நூலினைத் தொகுத்தவர் குறிக்கின்றார்.

மூலக் கவிதைகளை மொழிபெயர்ப்புக் கவிதையின் அருகிலேயே அமைத்துள்ளதால், மொழிபெயர்ப்பு எவ்வாறு அமைந்துள்ளது என ஒப்பிட்டு அறிய உதவுகின்றது. ஆனால் இதே முறையை மற்றைய மொழிபெயர்ப்பு நூல்களிலே கடைபிடிப்பது என்பது மிகவும் கடினமான ஒன்றாகும்.

கவிதையை இன்னொரு மொழியிலே பெயர்ப்பதென்பது எளிதான காரியமன்று. ஏனென்றால் ஒரு மொழியின் அமைப்பு இன்னொரு மொழியிலிருந்து வேறுபட்ட நிலையினைப் பெற் றுள்ளது. இருப்பினும் பாரதி இரு மொழியின் அமைப்பினையும் அறிந்தவராகையால் சிறந்தமுறையில் மொழிபெயர்த்துள்ளார். 'கண்ணம்மா என் காதலி' என்ற பாடலை 'In each other's Arm's என்ற தலைப்பிலே மூலக் கவிதையின் உணர்வினை மிக அருமையாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

"பாயும் ஒளி நீ எனக்கு
பார்க்கும் விழி நானுனக்கு
தோயுமது நீ யெனக்கு
தும்பியடி நானுனக்கு

'Thou to me the flowing light
And I to thee discerning sight
Honied Blossom thou to me;
Bee enchanted I to thee;

ஒட்டு மொத்தமாகப் பாரதியின் ஆங்கிலப் புலமையை நாம் அறிந்து கொள்ளவும், அவரை மொழிபெயர்ப்பாளர் முன்னுதாரணமாகக் கொள்ளவும் இந்நூல் வழி வகை செய்கின்றது.

**17. The Sun and the Stars**—Prose Poems by Subramania Bharati (Pages 67).

இம்மொழி பெயர்ப்பு நூலின் முன்னுரையிலே மொழி பெயர்ப்பாளர், "நல்ல நாடுகளையும், சாம்ராஜ்யங்களையும் கண்டுகளிக்கப் பயணம் செய்வதில் பெருவிருப்புடைய தமிழரல்லாதவர்கட்கு இது ஒரு வழிகாட்டியாக அமைவதே" என இதன் முதன்மையான நோக்கத்தை அறுதியிட்டுரைக்கிறார். இம் மொழிபெயர்ப்பு பாரதியின் உள்ளார்ந்த நோக்கத்தைத் தெள்ளத் தெளிவென ஆங்கிலத்தில் விளக்க முயன்றுள்ளது. பாரதியின் நூற்றாண்டிலே பாரதியைப் பற்றிய நூல்கள் ஏராளமாக வெளிவந்துள்ளன. ஆனால் பாரதியாரின் பாட்ல்களை நூலாக மொழி பெயர்க்கின்ற முயற்சியை இவர் ஒருவரே மேற்கொண்டுள்ளார்.

இம் மொழிபெயர்ப்பு நூலிலே பாரதியின் வாழ்க்கை வரலாற்றைத் தேவையான அளவில் சுருக்கமாகக் கொடுத்துள்ளார் ஆசிரியர். இது ஒரு சிறப்பான அம்சமாகும். பாரதியைப் பற்றி ஆங்கில மக்கள் அறிந்து கொள்ள உதவுவதோடு, இந்திய நாட்டின் சுதந்திரத்தைப் பொறுத்த அளவில் அவருடைய பங்கு என்ன என்று அறிவதற்கும் பேருதவியாக அமைகின்றது.

இம்மாதிரியாக எல்லா மொழிபெயர்ப்பு நூல்களிலும் மூல நூலின் ஆசிரியர் பற்றிய குறிப்பு அல்லது அந்நூல் தோன்றி உள்ள மொழியின் இலக்கிய வளத்தினைக் கூறிச் செல்வது மொழி பெயர்ப்பின் முக்கியமான நோக்கத்தினை வெளிக் கொணருவதாக அமையும்.

முடிவுரை

1982-இல் தமிழில் வெளிவந்துள்ள மொழி பெயர்ப்பு நூல்களைக் காண்கின்ற பொழுது, வளர்ந்து வருகின்ற மொழி பெயர்ப்புத் துறை வெற்றி பெறுகின்ற நிலையினை எட்டி விட்டது என்றே கூறலாம்.

இம் மொழி பெயர்ப்பு நூல்களைப் படித்துப் பார்த்த பொழுது, தமிழில் தோன்றியுள்ள நூல்கள் என்ற எண்ணந் தான் ஏற்பட்டதே ஒழிய ஒரு மொழிபெயர்ப்பு நூலினைப் படிக்கின்ற உணர்வினைத் தோற்றுவிக்கவில்லை. மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற முறையில் இது மொழிபெயர்ப்பாளர் களுக்கு ஒரு பெரும் வெற்றியினை அளித்துள்ளது என்று துணிந்து கூறலாம்.

நாடகம், நாவல், சிறுகதை, கவிதை, வாழ்க்கை வரலாறு போன்ற துறைகளில் மொழிபெயர்ப்பு நூல்கள் வெளிவந்துள் ளதை நோக்க, விஞ்ஞானத் துறையில் அருகியே புத்தகங்கள் வெளிவந்துளளன. தமிழில் கலைச் சொற்கள் அதிகமாக இல்லை என்ற நிலையை மாற்றுவதற்காக விஞ்ஞானம் சம் பந்தப்பட்ட நூல்களைத் தமிழிலே பெயர்க்கின்ற நிலை பெருக வேண்டும். அது விஞ்ஞானத் துறையிலே தமிழ்மொழி வளர்ச்சி பெறுவதற்கு, மேன்மேலும் வளம்பெற்று, உரம் பெறுவதற்கு உறுதுணையாக அமையும்.

பிற மொழிகளிலிருந்து தமிழ் மொழிக்கு 14 நூல்கள் மாற் றம் செய்யப்பட்டுள்ளன. அதே போன்று தமிழிலிருந்து பிற மொழிக்கு மாற்றம் செய்யப்பட்டுள்ளவையில் ஆங்கிலத்தில் மூன்று நூல்களும் கிடைத்துள்ளன. ரஷ்யாவில் சுப்பிரமணிய பாரதியாரின் நூற்றாண்டு விழா நடைபெற்றது. அதில் ஒரு குழு அமைத்திருந்தனர். அவர்கள் பாரதியின் கவிதைகளைப் புதிதாக ரஷிய மொழியில் மட்டுமல்லாது, ரஷ்ய மக்களின் மற்றைய மொழிகளிலும் மொழி பெயர்த்துக் கொடுத்துள்ள னர். குறிப்பாக நாற்பதுக்கும் மேற்பட்ட பாடல் மொழி பெயர்ப்புகளும் ரஷ்யாவில் வெளிவந்துள்ளன.

இதுபோன்ற மொழிபெயர்ப்புகள் தோன்றியதன் பயன், மற்ற நாட்டினர்க்கு, நம்முடைய கலாச்சாரம், பண்பாடு இவை களெல்லாம் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளன. அதே போன்று தமிழ் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள நூல்கள் மற்றைய கலாச்சாரத்தினைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்துகின்றன. இத்தகைய மொழிபெயர்ப்புகளினால் கலாச்சார பரிவர்த்தனை ஏற்படுகின்றது.

வங்க மொழியிலிருந்து தான் தமிழுக்கு அதிகமான நூல்கள் மொழி மாற்றம் பெற்றுள்ளன. அடுத்ததாக ஆங்கில நூல்கள் தமிழ் வடிவம் பெற்றுள்ளன. இந்நிலையில் மூலநூலாசிரியரைப் பொறுத்த அளவில் ஷேக்ஸ்பியருடைய நாடகங்கள் இரண்டு மொழி மாற்றம் பெற்றுள்ளன. கவிஞர் சோமசுந்தரன் இவ்

இரண்டு நாடகங்களை மொழிபெயர்த்து, இவ் ஆண்டின் மொழி பெயர்ப்பாளர் வரிசையில் முதலிடம் வகிக்கிறார்.

நூற்றாண்டுக் கவிஞர் பாரதியும், நாவலாசிரியர் நீல• பத்மநாபனும், ஒரே சமயத்தில் மூல நூலாசிரியராகவும், மொழி பெயர்ப்பாளராகவும் விளங்குவது. சிறப்புடைத்து இவர்களு டைய பன்மொழித் திறன் மற்றையோருக்கு வழிகாட்டியாக அமையும். இம் மொழிபெயர்ப்புகள், மற்றையோரைத் தமி மூலகுக்கு, மற்ற மொழி நூல்களை அறிமுகப் படுத்துவதிலும் அதே போன்று தமிழ் இலக்கியங்களை மற்றைய நாட்டினர்க்கு அறிமுகப்படுத்த வேண்டுமென்ற ஒரு ஆத்மார்த் உணர்வினை ஊட்டுகின்றது. வாழ்க்கை வரலாற்று மொழிபெயர்ப்புகள் பெரியோர்களின் வாழ்க்கையினை நமக்கு ஒரு படிப்பினையாகக் கொள்ள வழிவகை செய்கின்றது.

தமிழிலிருந்து ஆங்கிலமாகிய ஒரு மொழிக்குச் சென்ற நூல்கள் பற்றிய செய்திகளே கிடைக்கின்றன. அவையும், கவிதைகளே மொழிபெயர்க்கப்பட்டமையைத் தருவது எண்ணத் தக்கது. ஆனால் தமிழுக்கு வந்தவற்றில் பன்மொழி நூல்கள், பல்துறைப் பொருண்மைகள் அமைவது குறிப்பிடத்தக்கது.

எண்பத்திரண்டின் மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழிலிருந்து...

1. நீலபத்மநாபன், Surrender and other poems, Neela Padmanabhan & others, Intellectual Book corner, New Delhi, Rs. 10, 25.

2. பாரதியாரும் பிறரும், Bharati as a translator, Bharati, (comp) C. Viswanathan, அன்னம், சிவகங்கை, ரூ. 10.

3. பாரதியார், The sun and the Stars, P. Raja, அன்னம், சிவகங்கை, ரூ. 6.

* தமிழுக்கு...

1. அதீன் பந்தோபாத்யாய, (வங்காளம்), நீலகண்ட பறவையைத் தேடி, எஸ். கிருஷ்ணமூர்த்தி, நேஷனல் புக் டிரஸ்ட், ரூ. 20.

2. அலோக ரஞ்சன் தாஸ்குப்தா, (ஆங்கிலம்), புத்த தேவ போஸ், தா. வே. வீராசாமி, சாகித்திய அகாதெமி, ரூ. 4

3. --(?)அறைக்குள் வந்த ஆப்பிரிக்க வானம், இந்திரன், அன்னம், சிவகங்கை, ரூ. 8.

4. இவான் துர்கேனிவ் (?), மூன்று காதல் கதைகள், பூ. சோமசுந்தரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, ரூ. 13. 75.

5. கோத். வி, (ஆங்கிலம்), விந்தையான பிரபஞ்சம், பாக்கியம் சுந்தரம், என் சி பி எச், சென்னை, ரூ. 12.

6. —(சிங்களம்), சிங்களச் சிறுகதைகள், ?, என் சி பி எச் சென்னை, ரூ. 5.

7. சுகோலின்ஸ்கி (?) கல்வி, வை. முத்தண்ணா, என்சிபிஎச், சென்னை, ரூ 14.

8. பினாகின்தவே (குஜராத்தி), வெள்ளைக்கறை, கலா கே. தாக்கர், ஆசிரியர், அகமதாபாத், ரூ 12-50.

9. மார்க்ஸ் (ஆங்கிலம்), மார்க்சிய சித்தாந்தம், ?, மூன்றாம் உலகப் பதிப்பகம், சென்னை, ரூ. 4.

10. யாக்னிக் (ஆங்கிலம்), நம்பவே முடியாது, கே. சி. மெய்யப்ப அரசு, ஹரிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, ரூ 5.

11. ரஸ்கின் பாண்ட் (?) காலம் தந்த தலைவன், கே. ஆர். வாசுதேவன், பூரம் பப்ளிகேஷன்ஸ், சென்னை, ரூ. 6.

12. ஷேக்ஸ்பியர் (ஆங்கிலம்), புயல், அரு. சோமசுந்தரன், பொன்முடிப் பதிப்பகம், காரைக்குடி, ரூ. 8.

13. ஷேக்ஸ்பியர் (ஆங்கிலம்), ஜூலியஸ் சீசர், அரு. சோம சுந்தரன், பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, ரூ. 8.

14. ஸதீநாத் பாதுரி (வங்காளம்), விடியுமா?, என். எஸ். ஜகந்நாதன், நேஷனல் புக் டிரஸ்ட், ரூ. 12-75.

(★மூல நூலாசிரியர், (மொழி), பெயர்ப்புத் தலைப்பு, மொழி பெயர்ப்பாளர், வெளியீடு, விலை—எனும் முறையில் இவை தரப் படுகின்றன).

# 42. சுவடிப் பதிப்புகள்

—பூ. சுப்பிரமணியம்

பதினைந்து நூல்கள் சுவடிகளிலிருந்து பதிப்பிக்கப் பட்டுள்ளன. இவற்றுள் மூன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடியியல் பட்டய வகுப்பு மாணவரால் தட்டச்சு வடிவில் வழங்கப்பட்டது. தமிழரசின் பரிசு பெற்ற கண்மருத்துவம் அப் பொருண்மைகுறித்த பல்சுவடிப் பாடல்களின் பெருந்தொகுப் பாகும். சிற்றிலக்கியங்கள் பல புதிதாகச் சுவடியிலிருந்து பதிப்பிக்கப் பெற்றுள்ளன. நிறுவனத்துடன், உ.வே.சா. நூலகமும் இச் சுவடிப்பதிப்புப்பணியில் முன்னிற்கின்றது.

## 1. முன்னுரை

உலகநாடுகளை நோக்கப் பொதுவாக நம்நாட்டில் சிறப் பாகத் தமிழ்நாட்டில் நூல்களின் உற்பத்தி மிகமிகக் குறைவு என்பதை யுனெஸ்கோ ஆண்டு நூல்கள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய இக்காலத் தில் புதிய படைப்புகள் பல தோன்றி நூல்களின் எண்ணிக்கை வளர்ந்து வருவதை அறியமுடிகிறது. அறிவியலும் நாகரிகமும் புதுமையைப்புகுத்த அவற்றின் அடிப்படையில் புதியபடைப்புகள் தோன்றிவரும் இக்காலத்தில், பழந்தமிழரின் அனுபவங்களும் எண்ணங்களும் அடங்கிய சுவடிகளைப் பதிப்பித்து மக்களி டையே கொண்டுவரும் பணியும் ஓரளவு உயிர்பெற்று வருகிறது என்பதை இக்கட்டுரையின் வழி பரவலாகக் காணமுடியும்.

## 2. பதிப்புப் பொருள்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது, எண்பத்தொன்று ஆகிய ஆண்டுகளைப் போல எண்பத்திரண்டாம் ஆண்டிலும் பன்னிரண்டு நூல்கள் பதிப்பிக்கப் பட்டுள்ளன. தட்டச்சுவடிவில் மூன்று ஆய்வேடுகளும் உருவாகியுள்ளன. இப்பதினைந்து நூல் களுள் சிற்றிலக்கியங்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. அந்தாதி, சதகம், தூது, பிள்ளைத்தமிழ், மடல் மாலை,

வருக்கக் கோவை ஆகிய ஏழுவகையிலும் வகைக்கு ஒவ்வொன்று வெளியாகியுள்ளது. பிறவற்றுள் மருத்துவ நூல்கள் மூன்று; இசை நாடகங்கள் இரண்டு; பாட்டியல் இலக்கணம் ஒன்று: நாட்டுப்புற இலக்கியம் ஒன்று; சுவடி இயல் பற்றிய நூல் ஒன்று என அமைந்துள்ளன. இவற்றுள் ஆறு நூல்கள் டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலக வெளியீடுகள் ஆகும். எண்பத் தொன்றில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டித் தமிழ்நாடு அரசு சுவடிப் பதிப்புத் திட்டம் ஒன்றினை மேற்கொண்டது. அத்திட்டத்தின் அடிப்படையில் தொடங்கி உ. வே. சா நூலகத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதிப் பிப்பதற்காகத் தயாரிக்கப்பட்ட நூல்களுள் இவ் ஆறு நூல்களும் அடங்கும். அவையே எண்பத்திரண்டில் வெளி வந்துள்ளன. தனியார் பதிப்பகத்தின் மூலம் வெளிவந்துள்ள நூல் ஒன்று.

இவைதவிர மற்றைய எட்டு நூல்களும் உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனத்தின் மூலம் வெளிவந்தவையாகும். இவற் றுள்ளும் சிறப்பாக மிகச் சிறந்த மருத்துவ நூல்கள் இரண்டினை வெளியிட்டுள்ள பெருமை உலகத்தமிழாராய்ச்சிநிறுவனத்தையே சாரும். சென்ற ஆண்டில் பதிப்பித்த நூல்களை அடுத்துத் தொடர்ந்து புதிய வேறு சுவடிகளைத் தேர்தெடுத்து முறையாக இந்நிறுவனம் பதிப்பித்து வருவது குறிப்பிடத் தக்கதாகும். பதிப்பாசிரியர்களைத் தேர்ந்தெடுப்பதில் நிறுவனம் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளதால் நிறுவனப் பதிப்புகள் சிறந்த முறை யில் அமைந்துள்ளன எனலாம். சான்றாக, சுவடி இயல் பயிற்சியில் முதல் நிலையில் தேர்ந்தெடுக்கப்பட்ட இருவர் இரண்டு மருத்துவ நூல்களை முறையாகப் பதிப்பித்துள்ளனர். நாட்டுப் புறக்கலையில் சிறந்த ஆய்வுகளை நிகழ்த்தி, அக்கலைக் குரிய தனிநூல்களை இயற்றியுள்ள பேராசிரியர் கும்மிப் பாடல்கள் என்னும் நூலின் பதிப்பாசிரியராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். பல இலக்கண நூல்களை, ஆய்ந்து, தொகுத்துப் பதிப்பித்துள்ள பேராசிரியர் இலக்கண நூலின் பதிப்பாசிரியராக விளங்குகிறார். எனவே இப்பதிப்புகள் அனைத்தும் முறையாக, மிக ஆழ்ந்து, பரந்த ஆய்வுரைகளைத் தம் பதிப்புரைகளாகப் பெற்று வெளிவந்துள்ளன.

### 3. செய்திச் சுருக்கம்

**1. கண் மருத்துவம்**— கண்நோய்கள் தோன்றுதற்குரிய காரணங்கள்,நோய்களின் பெயர்கள் போன்றவற்றைக் கூறி நூல் தொடங்குகிறது. கருவிழி, வெள்ளைவிழி, இமை, குவளை போன்ற பாகங்களில் தோன்றும் நோய்கள் தனித்தனிப் பகுதி

களாக விளக்கப் படுகின்றன. ஆங்காங்கு அவற்றிற்கான மருத்துவமுறைகளும் தரப்பட்டுள்ளன. மாத்திரை, குழம்பு, தைலம், நெய், மை, பொடி, புகை, வேது, பொட்டணம், நசியம் போன்ற பலதிறப்பட்ட மருந்து வகைகள் முறைப் படுத்தித் தரப்பட்டுள்ளன. கடைப்பிடிக்க வேண்டிய பத்திய முறைகள் எடுத்துக் காட்டப் படுகின்றன. 1780 பாடல்களால் ஆன இந்நூல் ஒரு தொகை நூலாகக் காணப்படுகிறது.

"96 விதமான கண்நோய்களின் விபரங்கள் பற்றியும், அவற் றிற்குண்டான மருத்துவ முறைகளையும் மூலநூல்களின் கருத்துக் கள் மாறாமல் கொடுக்கப் பட்டிருப்பதுடன் நல்ல கண்ணின் இலக்கணம், கண்களைப் பாதுகாப்பதற்கான விதிமுறைகள் முதலியனவும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன....சித்த மருத்துவத் தில் கண்மருத்துவம் பற்றிக் கூறப்பட்டுள்ள அனைத்துச் செய்தி யினையும் ஒன்று திரட்டி ஒரே நூலாக அமைத்திருப்பதால் சித்த மருத்துவ மாணவர்க்கும் மருத்துவர்க்கும் இந்நூல் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை." என்று பாளையங்கோட்டை, அரசினர் சித்த மருத்துவக்கல்லூரி முதல்வர் அவர்களால் பாராட்டப் பெற்ற நூல் இது.

2. கருவூரார் பலதிரட்டு—அறுபத்து நான்குவகை மூலிகை களைப் பற்றிய குறிப்புகளைக் கொண்டது இந்நூல். மூலிகை களின் அடையாளங்களைக் கூறி, அவை கிடைக்கும் இடங்களை யும் சுட்டிக் காட்டுகிறது மூலிகையில் பறிக்க வேண்டிய பகுதி, பறித்தற்குரிய காலம், பறிக்குமுன் செய்ய வேண்டிய முறை போன்றவற்றையும் விளக்குகிறது. மூலிகைகளைப் பயன்படுத் தும் முறைகளும் அவற்றின் பயன்களும் நூலில் இடம் பெற் றுள்ளன. 298 பாடல்களால் ஆன நூல்.

3. கும்மிப் பாடல்கள்

3.1. ஆவுடையார் கும்மி—அன்னை சிவயோகவல்லி; இறைவன் ஆவுடைநாதன். இவர்கள் எழுந்தருளியுள்ள திருத் தலம் மிதிலைப்பட்டி. திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்தது.

நாட்டில் தீச்செயல்கள் மலிகின்றன. மழை பொய்த்துவிடு கிறது. எங்கும் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. மக்கள் அவதிப் படுகின்றனர். மக்கள் நிலைகண்டு உள்ளம் வெதும்புகிறார் குமாரசாமிப்புலவர். இவர் மல்லையூர்ப் பெரும்புலவராகிய அழகிய சிற்றம்பலக்கவிராயரின் பரம்பரையில் வந்தவர். இறை ஆற்றலில் மிகுந்த நம்பிக்கை உள்ளவர். மக்களின் தவறுகளுக் காக இறைவனிடம் மன்னிப்பு கேட்கிறார். கும்மிப் பாடலை

இயற்றுகிறார்; மகளிரைக் கூட்டி இறைவன்முன் பாடிப்பாடிக் கதறி அழச்செய்கிறார். இறைவன் உள்ளம் இரங்குகிறான். வருணனுக்குக் கூறுகிறான். வருணனின் கட்டளை பிறக்கிறது. ஏழு மேகங்களும் திரளுகின்றன. கடல்நீர் ஒரு முழ அளவு வற்று மாறு நீரைக்குடிக்கின்றன. மிதிலைப்பட்டியைச் சூழ்ந்தநாட்டில் அந்நீரைக் கொண்டு வந்து கொட்டுகின்றன. மக்கள் ஆரவாரம் செய்கின்றனர்.

வாய்க்கால் வரப்புகள் தோன்றாமல் — வெள்ளம்
வாரசிங் காரத்தைப் பாருங்கடி
தாய்க்குத்தா யாகிய ஆவிடை நாயகித்
தாயார் கிருபையீ தாகுமடி

என்று பாடி மகிழ்கின்றனர். இறையருளை நினைந்து நன்றி செலுத்துகின்றனர். இத்தகு சுவைமிக்க செய்திகளைத் தரும் அறுபத்தொன்பது பாடல்களைக் கொண்டது இந்நூல்.

**3.2 சிங்கை அழகிய அம்மன் கும்மி**—அழகிய நாயகி அம்மன் கோயில் கொண்டுள்ள நாடு சிங்கை நாடு. அது எந்த இடம் என்பதை இன்று அறிய இயலவில்லை. ஆயினும் கானாடு, கோனாடு, கல்வாசல் நாடு, பூங்குன்றை நாடு ஆகிய சுற்றிலும் உள்ள நாடுகள் நூலுள் சுட்டப் படுகின்றன.

கருப்பண்ணசாமி காவல்காத்து நிற்கிறான்; பூதகணங்கள் சூழ்ந்து நிற்கின்றன; இசைக்கருவிகள் ஒலிக்கின்றன; ஏழு நகரத்து மக்களுக்கும் அருள்புரிந்து வீற்றிருக்கிறாள் அன்னை அழகிய நாயகி அம்மன். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் அரசு புரிந்து வருகிறார் விசயரகுநாத ராயபகதூர் தொண்டைமான். அவர் ஆங்கிலஅரசுக்கு மதிப்பு கொடுத்துத் தன்நாட்டை ஆண்டு வருபவர். கோடிக் குமார சுவாமி என்பவர் அந்தத் தொண்டைமானின் உதவியோடு சிங்கைநாட்டை ஆண்டுவருகிறார். குமார சுவாமியின் குலதெய்வமாக விளங்குகிறாள் அன்னை அழகிய நாயகி அம்மன்.

அன்னைக்கு நாள்தோறும் பூசைகள், திங்கள் தோறும் திருவிழாக்கள், ஆண்டுக்கொரு முறை தேர்த்திருவிழா என ஏற்பாடுகள் செய்கிறார் மன்னன் குமாரசுவாமி. தேர்த்திருவிழா நடைபெறுகிறது. செம்பொற்கொடி பறக்கும் திருத்தேரில் வீதி வலம் வருகிறாள் அன்னை.

குமாரசுவாமி மன்னன் ஆடை ஆபரண அலங்காரங்களோடு சுற்றம் புடை சூழ வந்து, தேர் வடத்தினைத் தொட்டுத் தேர் ஓட்டத்தினைத் தொடங்கி வைக்கிறார், விழா சிறப்புற நடை

பெறுகிறது. அன்னையின்முன் பணிந்து நின்று அவள் அருள் வேண்டுகிறார். அவள் அருளால் அனைத்து நலன்களும் பெற்று வாழ்கிறார் குமாரசுவாமி. மகளிர் அந்த அன்னையின் சிறப்பு களைப் பாடிக் கும்மியடித்து மகிழ்கிறார்கள். இக்கும்மிப் பாடல் களின் தொகுப்பே சிங்கை அழகிய அம்மன் கும்மி எனப்படுகிறது. தொண்ணூற்று நான்கு பாடல்களைக் கொண்டது.

3.3. சிவயோகவல்லிக் கும்மி—மிதிலைப்பட்டியில் திருக் கோயில் கொண்டுள்ள இறைவன் ஆவுடைநாதன். தேவி சிவ யோகவல்லி. அவ் இறைவன்மீது பாடப்பட்டது ஆவுடையார் கும்மி எனப்பட்டது. இது தேவியின்மீது பாடப்பட்டது. எனவே இப்பெயர் பெற்றது.

தேவி வீற்றிருக்கும் திருத்தலம் சோலைகள் சூழ்ந்தது. வானளாவிய மரங்கள் நிறைந்தது. கீழே விழுந்துள்ள பூவையும் காயையும் கனியையும் கொண்டுதான் அது இன்ன மரம் என்று கூறமுடியுமாம். அவையாவும், அன்னையின் அருளால் ஏழுமேகங் களும் நீர்வார்க்க வளர்ந்தவையாகும். பயிறு வகைகள் விளைவு எடுக்க எடுக்கப் பயன் தந்து உதவும். நன்செய்ப் பயிர்களில் கதிர் கள் முழு நீளம் செழித்து விளையும். ஓயாது மாறி மாறி விளைச்சல் செழிக்கும். இத்தகு செழிப்புகள் அனைத்திற்கும் காரணம் அன்னையின் அருளேயாகும். இச்செய்திகளை மட்டும் எடுத்துக் கூறுவதே இக்கும்மிப் பாடல். முப்பத்தைந்து பாடல் களால் ஆனது.

3. 4. சீரணியம்மன் கும்மி—கல்வாசல் நாட்டைச் சார்ந்தது சீரணியூர். அவ்வூரில் எழுந்தருளியுள்ள தேவி முத்துமாரியம்மன் சீரணியம்மன் என்றே அழைக்கப்படுகிறாள். இந்நாடு பாண்டிய நாட்டைச் சேர்ந்தது. அம்மனோ சோழ நாட்டில் இருந்தவள். பாண்டிய மன்னன் ஒருவனால் தன் நாட்டிற்கு அழைத்து வரப் பட்டாள். இச்செய்தியை,

"காவிரிப்பூம் பட்டினத்தி லிருந்தொரு
காவலன் மாறன் அழைத்துவர
பூவிரிப் புனல்மிகு பாண்டிய நாட்டினில்
பொங்கத்துடன்வந் தமர்ந்தவளே" (பா. 59)

என்னும் பாடல் அறிவிக்கிறது. பல சிறப்புப் பெயர்களைப் பெற்றவள் சீரணியம்மன். மகிடாசூரனை வென்றவள். கருப்பண்ண சாமியை வாயிற்காவலனாகக் கொண்டவள். நாற்பத்து மூன்று கோணங்களையுடைய யந்திரத்தில் ஞானமய மாகி இருப்பவள். எல்லா வகை நோய்களையும் நீக்கும் ஆற்றல் உடையவள்.

அன்னைக்கு ஆடித்திங்கள் ஞாயிற்றுக் கிழமையில் திருவிழா நடைபெறுகிறது. அன்றுமுதல் எட்டு நாள் தெருக்களில் உலா வருகிறாள், ஒன்பதாம் நாள் செடில் என்னும் முள் குத்திக் கொண்டு ஊர்வலத்தை நடத்துகின்றனர். பொங்கலிடப்படு கிறது. பலியூட்டப் படுகிறது. நெய்யினால் மாவிளக்கு ஏற்றுகின் றனர். இடித்தமா, பானகம், மஞ்சள் நீர், தோசை, வடை, அவல், மோதகம் போன்றவற்றைப் படையலிடுகின்றனர். அன்னையை அங்கப் பிரதட்சணம் செய்கின்றனர். சிலாகைக் கயிறு குத்தி வேண்டுதலைச் செலுத்துகின்றனர். கல்வாசல் நாட்டு மக்களில் பெரும்பாலோர் பாளையக்காரர். அம்மனைப் பூசிக்கும் மக்கள் அனைவரும் அவள் அருள்பெற்று வாழ்கின் றனர். இச்சிறப்புக்களை நூற்று ஏழு பாடல்களில் தொகுத்துக் கூறுகிறது இப்பாடற் பகுதி.

3.5. சீனய்யங்கார் கும்மி—காலம் சுமாராகக் கி.பி. 1800 மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த பழனி வட்டத்தை மேற்பார்வை செய்து வந்தார் சீனய்யங்கார் என்பவர். ஆங்கில ஆட்சியில் அவரது பதவி தாசீல்தார் பதவி எனப்பட்டது. பதவிக்கு வந்த சீனய்யங்கார் பண ஆசை பிடித்தவராகிறார். மக்களிடமிருந்து வரியினைப் பெற்று ஆங்கில அரசுக்குச் செலுத்தவேண்டிய பொறுப்பு அவருடையது. இவ் இரண்டின் அடிப்படையில் தாறு மாறாக மக்களை வருத்திப் பணம் வாங்குகிறார். கிராம மக்கள் கொடுமைக்கு உள்ளாகின்றனர். கொடுமை தாங்காமல் அவரிடமே நேரில் கேட்கின்றனர். அவர்சிறிதும் பொருட்படுத்த வில்லை. ஆங்கில அதிகாரிகளிடம் பலமுறை முறையிடுகின்றனர் இறுதியாக கொடுமையிலிருந்து விடுபடுகின்றனர். மக்கள்பட்ட இன்னல்களையும் அவர்களின் போராட்ட முறைகளையும் சித்தி ரித்துக் காட்டுகிறது இக்கும்மிப் பாடல். 201 பாடல்களைக் கொண்டது. சிறந்த வரலாற்றுச் செய்திகளைத் தருவது.

3.6. சௌமிய நாராயணப் பெருமாள் கும்மி—திருமால் சௌமிய நாராயணப் பெருமாள் என்ற பெயரில் நின்ற கோலத் தில் எழுந்தருளியுள்ள இடம் திருக்கோட்டியூர் என்னும் திருத்தல மாகும். இது இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்தது.

அத்திருத்தலத்தில் ஆண்டுதோறும் சித்திரைத்திங்களில் பெருவிழா ஒன்று நடைபெறுகிறது. இறைவன் பதினொரு நாட் கள் பல்வேறு ஊர்திகளில் ஊர்வலம் வருகிறான். பக்தியுடன் வழிபடும் மக்களுக்கு அருள் புரிகிறான். இத்தகு செய்திகளை இருபத்திரண்டு பாடல்களில் எடுத்துக் கூறுகிறது இக்கும்மிப் பாடல்.

3.7. நல்லாண்டவர் கும்மி—திருமாலின் அவதாரமாகிய இராமபிரானை நல்லாண்டவர் என்ற பெயரில் மக்கள் வணங்கி வந்தனர். இவ்வணக்கமுறையை மாவை நகரமக்கள் மேற்கொண் டிருந்தனர். இந்நகரம் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந் தது. மாவை நகர மன்னன் குமாரலெக்கய்யன் என்பவன். அவன் வேட்டையில் பெரு விருப்பமுடையவன். நல்லாண்டவரை வணங்கி நல்லாட்சி செய்து வருகிறான். நல்லுசெட்டி என்னும் வள்ளலும் அத்தகு சிறப்புடையவனாகவே விளங்குகிறான். இவ் இருவரின் சிறப்பினைக் கூறி, இறையருள் வேண்டி, மகளிரால் பாடப்படுகிறது இக்கும்மிப் பாடல். எழுபத்து நான்கு பாடல் களால் ஆனது. மிதிலைப்பட்டிக் குழந்தைக்கவிராயரால் இயற்றப் பட்டது.

3.8. மருதபாண்டியன் கும்மி—ஊற்றுமலை ஜமீன்பகுதி யின் தலைநகரமாகவிளங்கியது வீரகேரளம் புதூர். திருநெல்வேலி மாவட்டத்தின் வடபகுதியில் உள்ளது. அந்நகரத்தில் இருந்து ஊற்றுமலைப் பகுதியை ஆண்டவர் மருதப்ப தேவர்.

நெல்லையில் வாழ்ந்தவன் சரவண முத்தையன். குளங்கள் பல வெட்டி, தருமங்கள் பல செய்து சிறப்புற வாழ்ந்தவன் அவன். இவ் இருவரும் ஒருமித்த பண்புடையவராய் மக்களிடையே பெரும் புகழ் பெற்றனர். இவ் இருவரின் சிறப்புச் செயல்களைப் பாடுகிறது இக்கும்மிப் பாடல். ஆனால் பிற்பகுதி முழுமையாக மருதபாண்டியனைப் பற்றியதாக அமைகிறது. எனவே மிகுதி பற்றி பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. எழுபது பாடல்களே கிடைத்துள்ளன.

3.9. மாடன் கும்மி—தென்பாண்டி நாட்டின் திருச்செந் தூருக்கு அருகில் உள்ளது குலசேகரப் பட்டினம். அப்பட்டினத்து மக்களுக்குக் கண்கண்ட தெய்வமாகக் காணப்படுகிறான் மாடன். அவன் யாருக்கும் அடங்காத வீரன். குருதியைக் குடிப்பவன். தீயன விலக்கும் ஆற்றல் உடையவன். தஞ்சம் அடைந்தோரைக் காக்கும் அருள் உடையவன். நாட்டுப்புறத் தெய்வமாகக் கருதப் படும் மாடனின் வீரச் செயல்களையும் அருள் தன்மைகளையும் புகழ்ந்து பாடுகிறது இக்கும்மிப் பாடல். இருபத்திரண்டு பாடல் களால் ஆயது. வீர கேரளம் புதூர், கவிராச குருசாமி என்ப வரால் இப் பாடல் இயற்றப்பட்டுள்ளதாகப் பதிப்பாசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.

4. சுவடியியல் பயிற்சி — கையேடு — சுவடியிலிருந்து பதிப் பித்த நூல்கள் சிலவற்றில் காணப்படும் பதிப்புப் பிழைகளைச்

சுட்டிக்காட்டி, இது இவ்வாறு பதிப்பிக்கப் பட்டிருக்கவேண்டும் என்று கூறிச் செல்லுகிறார் நூலாசிரியர். அப்பிழைகள் எழுத்து மிகையாலும் எழுத்துக் குறைவாலும், குறில், நெடில், புள்ளி ஆகிய மயக்கங்களாலும் ஏற்பட்டவை என அவற்றிற்குரிய காரணங்களையும் வகைப்படுத்திக் கூறிச் செல்லுகிறார். இவ்வாறு 150 பிழைகள் எடுத்துக் காட்டப்படுகின்றன.

5. பிரபந்த தீபிகை—சாதகம் முதலாகப் புறநிலைவாழ்த்து ஈறாகத் தமிழில் அமைந்த தொண்ணூற்றாறு வகை இலக்கியங்களுக்கான இலக்கணத்தையும், அவற்றின் தன்மையையும் தொகுத்துக் கூறும் ஒரு இலக்கண நூல் இது. இவற்றைத் தொகுத்துச் சுட்டுகிறது இந்நூலின் நான்காவது நூற்பா. எண்ணிக்கையைப் பட்டியலிட்டுப் பொருத்திக் காட்டுகின்றனர் பதிப்பாசிரியர். இதுபோன்ற பல பட்டியல்களால் நூற்பாக்களின் பொருள் தெளிவாக்கப்பட்டுள்ளது. நூற்பாக்களுக்குச் சங்ககால உரை எழுதும் முறையில் பதிப்பாசிரியரால் உரை எழுதப்பட்டுள்ளது. வேண்டிய விடத்துத் தனியே விளக்க உரைகள் அமைந்துள்ளன. பிற பாட்டியல் நூல்களில் இல்லாத புதிய இலக்கிய வகை ஏதும் இந்நூலுள் காணப்படவில்லை. ஆயின் பொதுவாகப் பாட்டியல் நூலுள் காணப்படா பல புதுச் செய்திகள் இதில் உள்ளன.

6. குமாரலிங்கர் குறவஞ்சி— மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த இருபத்து நான்கு பாளையப்பட்டுகளுள் நத்தம் என்பதும் ஒன்று. அப்பகுதியை ஆண்ட நாயக்க மன்னருள் ஒருவர் குமாரலிங்க நாயக்கர் என்பவர். அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டதே இக்குறவஞ்சி நூல். தலைவி ஒருத்தி குமாரலிங்க நாயக்கர்மீது காதல்கொள்ளுகிறாள். அவள் வருத்த முற்றிருந்த வேளை குறத்தி வருகிறாள். தலைவியின் விருப்பப் படி குறிசொல்லுகிறாள். மாதம், இராசி, மலர் போன்றவற்றின் பொருத்தம் கொண்டு, தலைவி விரும்பும் தலைவனின் பெயரைக் கூறுகிறாள். நடக்கவிருக்கும் செய்திகளையும் கூறு கிறாள். குறவன் வருகிறான். குறத்தியைக் காண்கிறான். இருவரும் குமாரலிங்கனை வாழ்த்துகின்றனர். இவையே நூல் தரும் செய்திகள்.

7. சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ் — தஞ்சை மாவட்டம், சீகாழிக்குத் தெற்கில் அமைந்துள்ள திருத்தலம் திருநாங்கூர் என்பது. அங்கு கோயில் கொண்டுள்ள இறைவன் பெயர் பொன்னுக்கு ஒளித்தார் என்பதாகும். அன்னை பொன்னளந்த நாயகி (சொர்ணநாயகி). செல்வச் சிறப்புடைய நகரம் திருநாங்

சூர். மேலும் அது சொர்ணநாயகியின் அருள்பெற்ற நகர மாதலின் சொர்ணபுரி என்ற பெயர் பெற்றது. இவ் ஊரின்கண் திருக்கோயில் கொண்டுள்ள இறைவியின்மீது பாடப்பட்ட நூலா தலின் இது இப்பெயர் பெற்றது.

8. வேலாபுரி கருப்பண்ணசாமி சதகம்—வாழ்க்கை நெறி களையும் ஒழுக்க முறைகளையுமே பெரும்பான்மையாக கூறும் இச்சதகம் ஒரு நீதிநூல்என்றே குறிப்பிடலாம். அவையடக்கமும் வாழ்த்துப் பாடலும் நீங்க 99 தனித்தனித் தலைப்புகளில் 99 பாடல்கள் அமைந்துள்ளன. நூல் தெய்வத் திறத்தைக் கூறித் தொடங்குகிறது; பூசையின் உயர்வினைக் கூறிமுடிகிறது.

இதற்கு இது அழகு; இதனின் உயர்ந்தது இல்லை; இதனால் இது உண்டாகும்; இதற்கு இது உயர்ந்தது; இதற்கு இது உறவு இல்லை; இதில் இது செல்லாது; இதற்கு இது சரியாகாது; இவர்க்கு இது எளிது என்பன போன்ற கருத்துகள் வாழ்க்கையில் பயன்தரத் தக்கவை.

9. கடம்பாடலி சின்னம்மை மாலை—தொண்டை நாட்டின் கடலோரப் பகுதியில் அமைந்துள்ள சக்தியின் ஆலயம், சுக்கிராச் சாரியின் கருத்துப்படி தூமகேதுவால் நிர்மாணிக்கப்பட்டது. கடம்ப மரங்கள் நிறைந்த சோலையின் இடையில் அமைக்கப் பட்ட ஆலயம் ஆதலின் இப் பெயர் பெற்றது. கடம்ப+அடவி= கடம்பாடவி எனவே கடம்பாடவி சின்னம்மை மாலை என்றி ருத்தல் வேண்டும்.

பன்னிரண்டு ஆண்டுகள் அத்தேவியை வழிபட்டான் தூம கேது. தேவிதிரிசூலம், உடுக்கை முதலியவற்றோடு சிங்கவாகனத் தில் காட்சி தந்தாள். ஆடிப்பாடி விழுந்து வணங்கித் துதித்தான். அவ் அன்னையின் கட்டளைப்படி அவ்விடம் கடம்பாடலி என்று பெயர் பெற்றது. தூமகேது அவளிடம் வரம்பெற்று நட்சத்திர மானான். பிறகு விதர்ப்பதேசத்து மன்னன் மார்த்தாண்டன் போன்ற பலர் வழிபட்டுவரம் பெற்றனர்.

10. கன்னிவாடி நரசிங்கப்ப நாயகன் வளமடல்—சொக்கநாத பிள்ளை என்பவரால் எழுதப்பட்ட இந்நூல் 338 கண்ணிகளை யுடைய கலிவெண்பாவால் ஆனது. காம இன்பத்தைப் பல வகைப் புராணக் கருத்துகளால் விளக்கிச் செல்லுகிறது.

தலைவனின் வீரம், கொடை, அரசு, உருவப் பொலிவு போன்ற சிறப்புகளைப் பலபடப் புகழ்கிறது. தலைவியின் சிறப்பும், தலைவன் தலைவியைப் புகழ்தலும் பரந்து காணப்படு கிறது. மடற்கோலம் கூறப்பட்டு மடல் ஏறுவேன் என்னும் கூற்றோடு முடிவு பெறுகிறது.

11. முத்துப்பாலாண்டித் தேவர் பேரில் திருமுக விலாசம் தான் வணங்கும் இறைவன்பால் திருமுகம் பெற்றுப் பாட்டுடைத் தலைவனிடம் பரிசுபெறும் புலவன், தலைவனின் திறம்கூறிப் பரிசில் பெறுவதாக அமைவது இந்நூல். மல்லையைச் சார்ந்த குழந்தைக் கவிராயரால் இயற்றப்பட்டது இந்நூல். பாட்டுடைத் தலைவர் முத்துப்பாலாண்டித் தேவர். இறைவன் தேவியுடன் கயிலையில் வீற்றிருக்கிறான். ஆறுமுகன் சரவணப் பொய்கையில் தோன்றுகிறான். பின் பிரணவப் பொருளைத் தந்தைக்கு உணர்த்துகிறான். சூரபதுமனின் கொடுமைகளைத் தேவர் முறையிடுகின்றனர். முருகன் வேலினால் அவனைப் பிளக்கிறான். மகிழ்ச்சியடைந்த இந்திரன் தேவானையைத் திருமணம் செய்து வைக்கிறான். வள்ளியைத் தானே வலிய மணக்கிறான். இத்தகு செய்திகளோடு முருகனின் புகழும் பாட்டுடைத் தலைவனின் புகழும் தசாங்க விளக்க முறையில் பாடப்பட்டுள்ளன.

ஆதிவராகப் பெருமாள்மீது பாடப்பட்ட வருக்கக் கோவையும் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியும் வைணவச் சிறப்புகூறும் சிற்றிலக்கியங்களாகும். தூது இலக்கியம் ஒன்றும் சிற்றிலக்கிய வகையில் அமைந்ததே. மருத்துவ அகராதி சொற்பொருள் கூறுவது.

4. பதிப்பு முறைகள் 1. முந்நூற்றுக்கும் மேற்பட்ட சுவடிகளை ஆய்ந்து தொகுக்கப்பட்டுள்ள கண் மருத்துவம் ஒரு சிறந்த தொகை நூலாக விளங்குகிறது. தொகுக்கப்பட்ட முறை நூலின் எட்டாம் பக்கத்தில் (VIII) விளக்கப்படுகிறது. இவ்வாறு தரப் படும் செய்திகளே பிற்காலத்தில் நூலின் தோற்ற வரலாற்றைக் குறிப்பனவாக அமையும். இதே நிலையில் ஒன்பது தனித்தனி நூல்களின் தொகுப்பே கும்மிப் பாடல்கள் என்னும் நூலாக வடிவெடுத்துள்ளது.

### பதிப்பில் ஆய்வுரை

சொற்பொருள் விளக்கம் என்பது தொடங்கி நாட்டுப்புறக் கலையாக, ஒரு இலக்கிய வகையாக கும்மிப் பாடல்களின் அமைப்பு முறையை ஆய்ந்து காட்டுகிறது தமிழில் கும்மிப் பாடல்கள் என்னும் பகுதி. இதேபோல சொல் பற்றிய ஆய்வு செய்து இலக்கியங்களில் அமைந்துள்ள கண்ணின் பல வகை நிலைகளையும் தொகுத்துக் காட்டுகிறது கண் மருத்துவம். இவை இரண்டும் ஆய்வு முன்னுரைக்கு எடுத்துக் காட்டுகளாக அமைகின்றன.

முக்காலமும் நோக்கிக் குறி சொல்லும் செய்தி ஒன்றினையே கூறுவதாக,

"இறப்பு நிகழ்வு எதிர்வென்னும் முக்காலமும்
திறம்பட உரைப்பது குறத்திப் பாட்டே"

என்னும் பன்னிரு பாட்டியல் நூற்பாவினைக் காட்டி, பிரபந்த தீபம் என்னும் இலக்கண நூலே குறத்திப் பாட்டுக்கு உரிய முழு இலக்கணத்தை வகுத்துக் காட்டுகிறது என்று கூறும் குறவஞ்சி நூலின் நூன்முகப் பகுதி மிகத் தெளிவுடையதாக அமைந்துள்ளது.

பன்னிருபாட்டியல் முதல் பாரதி தீபம் ஈறாக உள்ள பதினான்கு நூல்கள், பிள்ளைத் தமிழுக்குக் கூறும் இலக்கணத்தைத் தொகுத்துக் காட்டுகிறது சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத் தமிழ். பருவங்களை விளக்கிக் கூறும் இந்த நூன்முகப் பகுதி அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழ் முதலிய பல நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் பலவற்றைத் தருகிறது. ஆனால் பதிப்பு நூலிலிருந்து ஒரு சான்றும் காணப்பெறவில்லை.

சுவடியின்புற அமைதி, அக அமைதிகளை எடுத்துக் காட்டுவது தொடங்கி, நூலுள் செய்த சீர்மைகள் ஈறாக நூலைப் பதிப்பித்த வரலாற்றினைச் சுட்டிச் செல்லுகிறது கருவூரார் பல திரட்டு என்னும் நூலின் பதிப்புரை. இது. பயனுள்ள நூல் வரலாற்றுச் செய்தியாகும்.

சதகம் பற்றிய பொதுக் கருத்துகளைத் தொகுத்துத்தந்து சதக நூல்களைப் பொருள் அடிப்படையில் பாகுபடுத்தி அவற்றிற்கு விளக்கம் தருகிறது சதகநூலின் முன்னுரைப் பகுதி.

குறவஞ்சி மக்கள் இலக்கியம் என்று நிறுவுகிறார் பதிப்பாசிரியர். அம்பிகை எழுந்தருளியுள்ள திருவாங்கூர் என்னும் ஊர் இருக்குமிடத்தினை நேரில் சென்று கண்டு விளக்கிக்கூறும் அம்பிகை பிள்ளைத்தமிழின் பதிப்பாசிரியர் ஊரின் சிறப்பினைப் பிற நூல்களின் மேற்கோள்களோடு விளக்கிச் செல்லுகிறார்.

சிங்கைநாடு என்பது எந்தப்பகுதியைச் சார்ந்ததாக இருக்கக் கூடும் என்பதை எடுத்துக் காட்டக் 'கும்மிப் பாடல்கள்' என்னும் நூலின் பதிப்பாசிரியர் பெரும்பாடுபடுகிறார். ஆனால் வெற்றி அவரைத் தட்டிக்கழித்து விட்டது (அழகிய நாயகி கும்மி).

கீரணியூரா? சீரணியூரா? என்ற ஐயத்தினை எழுப்பிக் கொண்டு அது எங்கு உள்ளது என்பது பற்றிப் பல நாட்களாகப்

பலவாறு சிந்தித்திருக்கிறார். முடிவுதான் கிட்டவில்லை. (சீரணி யம்மன் கும்மி.)

இக்கால மருத்துவ முறைகளோடு தொடர்புடையனவாகக் கண் மருத்துவத்தில் உள்ள முன்னோரின் மருத்துவமுறைகள் பலவற்றைக் காட்டுகிறார் பதிப்பாசிரியர். இதன்வழி தமிழர்தம் மருத்துவத் திறன் வியக்கத்தக்க நிலையில் புலப்படுகிறது.

கண்ணாகிய உறுப்பின் பல உறுப்புகளை வகைப்படுத்தி அவற்றின் பெயர்களைச் சுட்டுகிறார். நூலில் கையாளப்படும் மருந்துப் பொருள்களை அகர வரிசைப் படுத்தி அவற்றின் குணங் களை விளக்குவதன் மூலம் அவற்றால் கண் நோய் நீங்கும் தன்மையினைப் புலப்படுத்துகிறார். நோய் தோன்றுதற்குரிய காரணங்களைத் தொகுத்துக் கூறியுள்ளது, சிறந்த முன் பாது காப்பாக, ஒழுக்க முறைகளைக் கடைப்பிடிக்கத் துணைபுரிகிறது.

**பிற் சேர்க்கைகள்**

நோயின் பெயர் மருந்தின் பெயர்களை முறைப்படுத்திப் பிற்சேர்க்கையாகத் தந்துள்ள கண்மருத்துவ நூலினைப் பயன் படுத்த எளிமையாக இருக்கிறது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள மருந்துப் பொருள்கள் என்ற பகுதியும் அவ்வாறே பயனுள்ளதாக அமைந்துள்ளது.

'கும்மிப்பாடல்கள்' என்னும் நூலில் பிற்சேர்க்கையாக அமைந்துள்ள, 1 அச்சான கும்மிநூல்களின் பட்டியல், 2 சுவடி உருவில் உள்ள கும்மிநூல்களின் பட்டியல்; 'குறவஞ்சி' நூலில் அமைந்துள்ள குறவஞ்சி நூல்களின் பட்டியல்; அம்பிகை பிள்ளைத் தமிழில் தனித்தனியே கொடுக்கப் பட்டுள்ள பெண் பாற்பிள்ளைத் தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்-ஆகிய நூல் களின் பட்டியல்; போன்றவை பிற பதிப்பாசிரியருக்கும் ஆய் வாளருக்கும் பெரிதும் துணைபுரிவனவாகும்.

பிற்சேர்க்கையாகத் தரப்படவில்லையாயினும் இலக்கியங் களுக்கான இலக்கணம், பிற இலக்கண நூல்களில் வரும் இடங் களைச் சுட்டிக்காட்டும் பட்டியல்கள் பிரபந்த தீபிகையின் நான் காவது நூற்பாவுக்குத்துணையாகத்தரப்பட்டுள்ளன. இவற்றைப் போலவே 'பிரபந்ததீபிகைகூறும் சந்திராலோகஅணிகள்', 'தீபிகை —தண்டியின் அணிவகைகள்', 'ஏழிசை உரிமைகள்', 'மதுரை நாயக்கர் பட்டியல்', 'ஐம்பத்தாறு தேசங்கள்', ஆகிய பட்டியல் கள் முறையே 42,43,50,96,99 ஆகிய நூற்பாக்களைஅடுத்து அமைந்துள்ளன. இவ்வாறான பிற்சேர்க்கைகள் பலவும் பிற

பதிப்பாசிரியர்களுக்கும் ஆய்வாளருக்கும் பெரிதும் துணை புரிவன வாகும்.

சிறப்பான சொற்களைத் தேர்ந்தெடுத்து அகர வரிசைப் படுத்தி அவற்றிற்கான விளக்கங்களைத் தந்துள்ள முறை கும்மிப் பாடல்களில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலிலும் உள்ள கடின சொற்களுக்கான குறிப்புரைகளையும், சிறந்த விளக்கங் களையும் பெற்று விளங்குகின்றன குறவஞ்சியும் பிள்ளைத் தமிழும்.

5. சிறப்பான இடங்கள்

இலக்கியக் கருத்துகள் உள்ளத்திற்கு உணர்வையூட்டி மகிழ்ச்சியளிக்க வல்லனவாக அமைதல் வேண்டும் அவற்றின் கூறுபாடுகளும் கருப்பொருள்களும் அவற்றாலமைந்த உணர்ச்சிக் கூற்றுக்களும் வாழ்க்கையின்வழிகாட்டிகளாக அமையவேண்டும். இத்தகு பயன்கள் பலவற்றைப் பெற்று விளங்குகின்றன சுவடிப் பதிப்புகள்.

பிள்ளைத்தமிழின் ஒன்பதாவது பாடல் திருநீற்றை அஞ்சலி செய்வாம் என்ற அடிப்படையில் திருநீற்றைத் தெய்வமாகக் கொண்டு அமைந்துள்ளது.

''பொய்கையம் புனல் மூழ்கி விளையாடும் அருமறைப்
புதல்வரிரு வரிலொருவனைப்
போழ்வார் திறந்தொரு கராம்விழுங் கிச்செழும்
புனலிடை ஒளிப்ப''

(பிள்ளைத்தமிழ்—33)

''கொள்ளையிடு பொருளெலாம் உள்ளபடி வாங்கிமுது
குன்றினில் பெற்ற பொருளை''

(ஷை. 34)

என்பன சுந்தரர் வரலாற்றைத் தாங்கி நிற்பனவாகும்.

வசந்தவல்லி போன்ற தலைவியர் செந்தமிழில் பேசக் குறத்தி நாட்டுப்புற மொழியும் செந்தமிழும் கலந்துபேசுகிறாள். தெலுங்கு, கன்னடம் போன்ற பிறமொழிச் சொற்களும் குறத்தி யின்மூலம் வெளிப்படுகின்றன. நாட்டுப்பற்று காரணமாகத் தோன்றிய கும்மிப் பாடல்கள் பலவற்றுள் பல வரலாற்றுச் செய்திகளைக் காணமுடிகிறது.

கட்டுக் கடங்காத காளைகளைப் போலக்
கட்டிப்பிடித்துக் கவலையுடன்

வெட்டிச் செயம்கொண்ட சின்னமலைதலை
வெள்ளைக் காரர்கொண்டு போவதைப்பார்.
(கும்மி—பக். 18)

கும்மியடிக்கும் செயலில் மங்கலமகளிரே கலந்து கொள்ள வேண்டும். அவரும் சிறந்த ஒப்பனையோடு விளங்கவேண்டும் என்ற விதிமுறைகளும் பாடலில் கலந்து விளங்குகின்றன.

" மங்கலப் பெண்க ளெல்லாமபி ஷேக
மண்டபம் முன்வந்து சேருங்கடி "

" குங்குமப் பொட்டுகள் தானணிந்து வண்ணக்
கூட்டங்கள் போலவே சேர்ந்துகொண்டு "
(மருதப்பாண்டி—10)

வட்டார வழக்குச் சொற்கள் பலவும் கும்மிப் பாடல் களுள் நிறைந்துள்ளன. சீனய்யங்கார் கும்மி போன்றவற் றில் பல ஆங்கிலச் சொற்களும் அமைந்துள்ளன.

இவ்வாறு சுவடிப் பதிப்புகளுள் பலவகை அனுபவக் கருத்து களும் அழகிய கருத்துகளுமாகப் பயன்தரும் கருத்துகள் பல பொதிந்துள்ளன. கண் மருத்துவம் முழுக்க முழுக்கப் பயனுள்ள கருத்துகளைக் கொண்ட பதிப்பாகும்.

## 6. பதிப்பு அமைப்புகள்

குறவஞ்சி நூலில் 'பதிப்பாசிரியர் குறிப்பு' என்ற செய்தி ஒரு பக்கம் அமைந்துள்ளது. அப்பதிப்பாசிரியரின் பெயர் நூல் தலைப்பு உள்ள முதற் பக்கத்திலும் அமைவது முறையாகும்.

'நூற்பா கூறும் செய்தி' என்னும் பகுதி பிரபந்ததீபிகையில் ஒவ்வொரு நூற்பாவின் அடியிலும் அமைந்துள்ளது. சுருங்கிய தொடரில் தலைப்பில் அமைப்பதும், சிறிது பெரிய எழுத்தில் அமைப்பதும் நூலை ஆள்வோருக்கு எளிமை பயக்கும்.

நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் நூல் பெயரும் உள் தலைப்பும் முறையே இருபக்கங்களிலும் அமைவதே முறை யாகும். பயனுள்ளதாகவும் அமையும். இதற்கு வேறாக, சொர்ணபுரி அம்பிகை — பிள்ளைத்தமிழ் என்ற இரு தொடரே இரண்டு பக்கங்களிலும் அமைந்து நூல் முழுமையும் காணப் படுகிறது. ஒரு புறம் நூல் பெயர் மறு பக்கம் பருவப் பெயர் என அமைவது சிறப்புடையது.

இதேபோல, தமிழில்— கும்மிப்பாடல்கள் என்பதற்குப் பதிலாக கும்மிப்பாடல்கள்—ஆவுடையார் கும்மி என அமைவது படிப்போருக்குப் பயன்தருவதாகும்.

முன்னுரை, ஆய்வுரை, பிற்சேர்க்கை 1, 2, 3 ..., நூல் பட்டியல், அருஞ்சொற்கள் போன்ற அனைத்துத் தலைப்புகளும் ஒவ்வொரு பக்கத்திலும் அமையுமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். பலதலைப்புப் பாடல்கள் அமைந்த தொகுப்பு நூலானால் ஒவ்வொரு தலைப்பிற்கும் வரிசை எண் கொடுத்துப் பதிப்பித்தல் நல்லது. கறுப்பண்ணசாமி சதகம் போன்றவற்றில் பாட்டுமுதற்குறிப்பு, அருஞ்சொல் அகராதி போன்றவை அமைதல் தேவை.

முன்னுரை, அணிந்துரை, வாழ்த்துரை, நன்றியுரை, பதிப்பாசிரியர் முகவுரை, குறியீடுகள்— சுருக்கெழுத்துகளின் விளக்கம், நூலாசிரியர் வரலாறு, நூலறிமுகம் என்னும் தலைப்புகள் எந்தெந்தப் பக்கங்களில் அமைந்துள்ளன என்ற விளக்கம் பொருளடக்கப் பகுதியில் காணப்படுகிறது. நூலிலுள்ள செய்திகள் அனைத்தும் நூல் பக் — 21—243. என்ற ஒரேவரியில் அடக்கப்படுகிறது. நூலில்உள்ள செய்திகளின் விளக்கமே பொருளடக்கத்தில் சிறப்பாக இடம்பெற வேண்டும். சான்றாக மெழுகு, கடப்பிலை வங்கம், சூதக்கட்டு, பாசாணக் கட்டு...... ஈசானமுகம் போன்ற பல உள்தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ள 'கருவூரார் பலதிரட்டு' என்னும் நூல், பொருளடக்கத்தில் 'நூல் பக் —21—243' என்ற ஒரே வரியினைப் பெற்றுள்ளது. பக்கத்தலைப்புகளும் அவ்வாறே கருவூரார் பலதிரட்டு— என்று இருபக்கத்திலும் அமைந்துள்ள பக்கங்கள் சிலவாகவும், கருவூரார்பலதிரட்டு— நூல் என்று அமைந்துள்ள பக்கங்கள் சிலவாகவும் அமைந்துள்ளன. பிரபந்த தீபிகை, சதகம் போன்ற நூல்களில் பக்கத் தலைப்புகளே அமையவில்லை. இந்நிலை முடியில்லா மன்னனை போன்றதாகும்.

7. திருத்தங்கள் —

''மூலிகைகள் உள்ள இடம், மூலிகையில் பறிக்கவேண்டிய பகுதி, பறிக்க வேண்டிய காலம், பறிக்குமுன் செய்யவேண்டிய முறைகள், ஆகியவற்றுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.''

"மூலிகையை எந்த நாளில் பறிக்கவேண்டும்? பறிக்குமுன் எந்தநாளில் காப்புக் கட்டவேண்டும்?...... பிடுங்கவேண்டும் என விளக்கமாக உரைக்கப் பட்டுள்ளன."

(கருவூரார் பக். 13-14)

ஒரே தலைப்பில் எழுதப்பட்டுள்ள ஆய்வுரையில் பல இடங்களில் இவ்வாறு கூறியது கூறலாக அமைவது தவிர்க்கப்படலாம்.

மேற்கோள் குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ள செய்தி—பெறப்பட்டகருத்து என அடிக்குறிப்பில் கொடுக்கப் பட்டுள்ளது. மேற்கோள் குறிகள் இல்லாமல் கொடுக்கப்பட்டுள்ள செய்திகளுக்கும் அடிக்குறிப்புகள் தரப்பட்டுள்ளன (கருவூரார் பக்.4.). இவை குழப்பம்தருமாறு அமைந்துள்ளன.

குறில் நெடில் மயக்கம் என்று பிறபதிப்பு நூல்களில் உள்ள தவறுகளைச் சுட்டுகிறார் ஆசிரியர். பிழைஉள்ளதாக அவர் சுட்டும் நூலின்பெயரைத் 'திருமயில உவமை வெண்பா' என்றே கூறியுள்ளார் (கையேடு —பக். 29). இதேபோல 'வைத்தமாநிதிப் பெருமாளூஞ்சல்' (பக். 8) 'வைத்தமாநி ஊஞ்சல்' (பக்.43) என்பனவும் ஆசிரியரால் குறிக்கப்பட்டுள்ளன.

ஒருஎடுத்துக்காட்டு அமைந்துள்ளது. அது எடுக்கப்பட்ட இடம்— அமுதரஸமஞ்சரி (கல்வெட்டுஇதழ்) என்று குறிப்பிடப் படுகிறது. எந்தஇதழ்? எந்தப்பக்கம்? என்பன அறிய இயலவில்லை துணை நூல் பட்டியலை நோக்கினால், 'அமுதரஸமஞ்சரி—கல்வெட்டு— காலாண்டிதழ்— 10, 11, 12 13, 14— 1976—77' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றுள் எதில்? எந்தப் பக்கத்தில் என்பதை அறிய இயலவில்லை. எண்கள் கூட 10—14 என்றாலே போதுமானது.

'அன்பே திரியா' என்பது 'அன்பே திரியாக' என்றிருத்தல் வேண்டும், என்று குறிப்பிடும் பணவிடுதூது என்னும் நூல் இவ்வாசிரியர் திருத்தியளித்த பதிப்பேயாகும் (கையேடு பக்.23). பிழையை எடுத்துக்காட்டும் தொடரே பிழையாக உள்ளது. னவர்க் கருளை என்பது னர்க்கருளை என்றிருத்தல் வேண்டும் என்று குறிக்கும் தொடர்களுள் முதல் தொடர் னவர்க் கருலை என்றே குறிப்பிடப்படுகிறது. (கையேடு·பக். 15.)

'ஒன்பதின் மருள் ஒருவராய கருவூராரும் ஒருவரன்று'—கருவூரார் பக். 2

'இரு வேறு கருத்தும் அறிஞர்களிடை நிலவுகிறது' —,, பக். 2

'பெயர்களை சங்கப்பாடல் பாடியவர்களாக —,, பக். 2

ஒவ்வொரு பக்கத்திலும் இத் தகு பிழைகள் அமைவது தவிர்க்கப் பட வேண்டும். 'சென்னை கீழ்த்திசைச் சுவடிகள் ஆவணக்காப் பகம்' என்று கருவூரார் பல திரட்டு, பல இடங்களில் குறிப்பிடு கிறது. அக் காப்பகம் எது? நூலகப் பெயர்கள் தவறாக எழுதப் படுவதும் தவிர்க்கப் பட வேண்டும்.

பேர்த்தெழுதுவது — கையேடு பக். 4, பெயர்த்தெழுதும் போது-கையேடு பக். 8. எதை ஏற்றுக் கொள்வது? 'ஏட்டுச் சுவடிகளை எழுதியும் படித்தும் பதிப்பித்தும் புகழ் பெற்ற ஐயரவர்கள்'— (கையேடு. பக். 4) எந்த ஐயரவர்கள்?

'முப்பூவில்ச் சாரம் இணைய' — கருவூரார் பக். 24.
'கல்ச் சுண்ணம்' ,, ,, 131.
'கல்த் தாமரை' ,, ,, 132.

இவற்றிற்குப் புணர்ச்சி விதி யாது?

'முதற் காரணகர்த்தா டாக்டர் ஐயரவர்கள் தான்'

'அநங்வயாலங்காரத்திற்கு எடுத்துக் காட்டாக'
'அச்சுவாகனம்ஏற்றி"

'திருமதி ருக்மிணிதேவி அவர்கள் பரிபாலனத்தில் நடந்து வருகிறது" (சொர்ணபுரி—பக். II.)

'கடவுளரையேனும் ஆசிரியரையேனும் உபகாரிகளை யேனும் குழந்தையாகப் பாவித்து'' (சொர்ணபுரி. பக் XV)

''நூலைப் படிப்போருக்கு மேற் சொன்னவை
கரதலாமலகம் போல் நன்கு விளங்கும்'' (ஷெ. பக். 29)

இவற்றுள் அமைந்துள்ள வடமொழித் தொடர்கள் எளிமை பெறல் வேண்டும்.

## 8. முடிவுரை

1. எண்பத்தொன்றைப் போலவே இவ்வாண்டிலும் சில நூல்கள் சுவடியினின்றும் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

2. அவற்றுள் உலகத்தமிழ் மாநாட்டுக்காகத் தயாரிக்கப் பட்ட பதிப்புகள் பல.

3. பிற அனைத்தும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளி யீடுகளாகவே அமைகின்றன.

4. எனவே, சுவடிப் பதிப்பினை முறையாகத் தொடர்ந்து மேற்கொள்ளுவது உலகத் தமிழராய்ச்சி நிறுவனமேயாகும் என்பது புலனாகிறது.

5. அந்தந்தத் துறையில் தனித் திறன் வாய்ந்த பதிப்பாசிரியர் பதிப்பித்தவை பயனுள்ளனவாக அமைந்துள்ளன.

6. தனித் திறன் உடையோர் தம் பதிப்புகள் முறையான ஆய்வுரைகளைப் பெற்றுள்ளன.

7. தற்கால மொழி நடைக்கேற்ப விளங்கும் சொற்களை ஆய்வுரையில் அமைப்பது சிறப்புடையதாகும்.

8. பயனுள்ள பிற்சேர்க்கைகள் பல நூல்களில் காணப்படுகின்றன. ஆயினும் அருஞ்சொல் அகரவரிசை கூட அமையாத பதிப்புகளையும் காண முடிகிறது.

இணைப்பு

## 1982-இல் சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பெற்ற நூல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கண் மருத்துவம் | திரு. வே. இரா. மாதவன் (பதி) | உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113. | பக். 996 | ரூ. 50-00 |
| 2. | கருவூரார் பல திரட்டு | செல்வி.இரா.நிர்மலாதேவி(பதி) | ,, ,, ,, | பக். 276 | ரூ. 12-00 |
| 3. | கும்மிப் பாடல்கள் | டாக்டர் ஏ.என். பெருமாள் (பதி) | ,, ,, ,, | பக். 400 | ரூ. 16 00 |
| 4. | சுவடியியல் பயிற்சி-கையேடு | திரு. மு. கோ. ராமன் (பதி)) | ,, ,, ,, | பக். 108 | ரூ. 6-00 |
| 5. | பிரபந்த தீபிகை | டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் டாக்டர் அன்னி தாமசு (பதி) | ,, ,, ,, | பக். 241 | ரூ. 12-00 |
| 6. | கடம்பாடலி சின்னம்மை மாலை | திருமதி. தெய்வநாயகி சோதி (பதி) | ,, ,, (தட்டச்சு வடிவில்) | பக். 141 | — |
| 7. | கன்னிவாடி நரசிங்கப்ப நாயகன் வளமடல் | திரு. க. கிருட்டிணமூர்த்தி (பதி) | ,, ,, ,, | பக். 139 | — |
| 8. | முத்துப் பாலாண்டித் தேவர் பேரில் திருமுக விலாசம் | திரு. ம. ஜகந்நாதன் (பதி) | ,, ,, ,, | பக். 103 | — |
| 9. | குமாரலிங்கர் குறவஞ்சி | திரு. சு. பாலசார நாதன் (பதி) | டாக்டர் உ. வே. சாமி நாதையர் நூல்நிலையம் | பக். 82 | ரூ. 6-00 |
| 10. | சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ் | திரு. வி. மு. சுப்பிரமணிய ஐயர் (பதி) | ,, ,, ,, | பக். 130 | ரூ. 7-00 |
| 11. | திருக்கரந்தை ஆதிவராகப் பெருமாள் வருக்கக் கோவை | திரு. சி. ஜெகந்நாதாசார்யர் (பதி) | ,, ,, ,, | பக். 182 | ரூ. 12.00 |
| 12. | நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி | திரு. எஸ். ஸ்ரீநிவாசையர் (பதி) | ,, ,, ,, | பக். 97 | ரூ. 10-00 |
| 13. | மூவரையன் விறலி விடுதூது | டாக்டர் இரா. நாகசாமி (பதி) | ,, ,, ,, | பக். 130 | ரூ. 12-00 |
| 14. | வாகட அகராதி | திரு. சு. பாலசாரநாதன் (பதி) | ,, ,, ,, | பக். 65 | ரூ. 5-00 |
| 15. | வேலாபுரி கறுப்பண்ண சாமி சதகம் | டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் (பதி) | மெய்யம்மை பதிப்பகம், சென்னை-14. | பக். 94 | ரூ. 6-00 |

# 43. நிறுவனப் பணிகள்

—ச. வே. சுப்பிரமணியன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பல்வகைத் தமிழ் வளர்ச்சிப் பணிகள், கருத்தரங்குகள் வழியும் நூலுருவாகவும் புலப்படுகின்றன; உலகத்துத் தமிழறிஞர் தொடர்பாலும், பிற மொழியினர்க்குத் தமிழ்மொழி கற்பித்தல் காரணமாகவும் விளக்கம் பெறுகின்றன; ஆய்வுப் பட்டம் பெறவும், பட்டயக் கல்வி தரவும் வழிவகுக்கின்றன; முன்னேற்றமும் முன்மாதிரியும் வழங்குகின்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, அடையாறு—தரமணியில் 'மைய தொழில் நுட்பக் கல்லூரி வளாக'த்துள் அமைந்து நாளும் தமிழ் பரப்பிக் கொண்டிருக்கிறது. உலக மெங்கும் தேமதுரத் தமிழோசை பரவ வேண்டுமானால் தமிழிற் கென்று தனித்த ஒரு நிறுவனம் வேண்டும் என்பது இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் போது உணரப்பட்டது. அவ்வுணர் வினைப் பேரறிஞர் அண்ணா 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்'தை 1970-இல் தோற்றுவித்து, செயலாக்கினார். தமிழ் மற்றும் தமிழர் பற்றி, இலக்கியம், வரலாறு, மருத்துவம், கல்வி, கலை, சமுதாயம், பண்பாடு என இயன்ற துறைகள் அனைத்திலும் ஆராய்ந்து இதனை உலகறியச் செய்ய வேண்டும் என்பது இதன் தலையாய நோக்கம். தமிழைத் தாய் மொழியாகக் கொள்ளாத பிற இந்திய மொழியினருக்கும், பிற நாட்டினர்க்கும் கற்பித்தல் பிறிதொரு நோக்கமாகும். இதனடிப் படையில் நிறுவனம் பல்வேறு திட்டங்களின் வழிச் செயலாற்றி வருகிறது.

## நூலகம்

ஆய்வுப் பணிகளுக்கு மிக இன்றியமையாதது நூலகம். ஆய்வாளர் ஆய்வுப் பணியை இடரின்றிச் செவ்வனே தொடர்வதற்கு இது மிகத் தேவையானது. இந்நிறுவனத்தில், விரிவான அளவில், ஆய்வுக்குகந்த நிலையில் தமிழ், ஆங்கிலம் மற்றும் பிற

மொழி நூல்கள் உள்ளடங்கிய பெரியதொரு நூலகம் உள்ளது. 1972-ஆம் ஆண்டில் 1,000 நூல்களுடன் இருந்த நூலகம் வளர்ந்து, 1982-இல், சனவரி முதல் தேதி 17,594 நூல்களைப் பெற்றிருந்த நூலகம், 2312 நூல்களைக் கூடுதலாகப் பெற்று டிசம்பர் 31-ஆம் தேதி 19,906 நூல்களைக் கொண்டது. அதிகப் படியான நூல்களுள் 1837 நூல்கள் தமிழ் மொழியிலும், 461 நூல்கள் ஆங்கிலத்திலும் எஞ்சிய 14 நூல்கள் பிறமொழிகளிலும் உள்ளன. படைப்பிலக்கியங்கள், இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், நாட்டுப்புறவியல், இந்திய மற்றும் ஐரோப்பிய இலக்கியங்கள், மொழியியல், மானுடவியல், சமுதாயவியல், சமயம், தத்துவம், வரலாறு, ஆகிய துறை சார்ந்த நூல்கள் பெரும்பாலும் உடனுக் குடன் வாங்கப்பட்டு நூலகத்தில் இணைக்கப்படுகின்றன. வெளி நாடுகளில் வெளியாகும் பல சிறந்த அரிய நூல்களும் தொகுக்கப் படுகின்றன. புதிய நூல்களுக்கு அளிக்கும் முக்கியத்துவம் அரிய பழைய நூல்களுக்கும் வழங்கப்படுகிறது. இதனால் ஆய்வாளர் தேவை குறித்துப் பிற நூலகங்களுக்குச் செல்வது மிகுதியும் குறைந்து அவர்தம் வேலை நேரம் சேமிக்கப்படுகிறது. மற்றும் வெளியிடங்களிலிருந்தும் எண்ணற்ற ஆராய்ச்சி மாணாக்கர் இந்நூலகத்தைப்பயன்படுத்திக் கொள்வதும் குறிப்பிடற்பாலது. பிற நூலகங்களில் கிடைக்காத ஆய்வேடுகள் 200-க்கு மேற் பட்டன இங்குப் பார்வைக்கு உள்ளன. மு.வ., அகிலன், பார்வதி சுப்பிரமணியன் ஆகியோர் நிறுவனத்திற்கு நூல்களை அன்பளிப் பாக வழங்கியவரில் குறிப்பிடத்தக்கவர்.

நிறுவனப்பணிகளைப் பொதுவாக இருபெரும் பிரிவுகளாகக் காணலாம். தமிழாய்வு, தமிழ்மொழி கற்பித்தல் என்பனஅவை.

## தமிழாய்வு

நூல் வெளியீடு, கருத்தரங்கு, இதழ் வெளியீடு, பிற நாட் டறிஞர் தொடர்பு எனும் நிலைகளில் தமிழாய்வுச் செயற்பாடு அமைகின்றது. இவற்றுள் 1975 முதல் தொடங்கப்பெற்ற நூல் வெளியீடு சிறப்பிடம் வகிக்கிறது. தமிழ் பற்றியும், தமிழர் பற்றி யும் உள்ள செய்திகளை உலகளவில் அறிவுறுத்துவதற்குரிய முதன்மை வாயிலாக இது அமைகிறது. அன்று முதல் 1982வரை 59 நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் 15 நூல்கள் எண்பத்தி ரண்டில் வெளிவந்த சிறப்புடையன. பல்வேறு திட்டங்களின் செயற்பாட்டுண்மையாக இவை அமைகின்றன.

## தொல்காப்பியம்-உரைவளம்

தொல்காப்பியத்திற்கு இதுவரை வெளிவந்துள்ள உரைகள் அனைத்தினையும் ஒன்று திரட்டி ஒவ்வொரு இயலுக்கும் ஒரு

நூலாக அவற்றை வெளியிட வேண்டும் என்று, 'தொல்காப்பிய உரைவளத் திட்டம்' ஆரம்பிக்கப்பட்டது. இதனால் பல்வேறு உரைகளையும் விளக்கங்களையும் நாடி ஆய்வாளர் செல்வது தவிர்க்கப் படுகிறது. மிக எளிதாக அவற்றைப் பெற்று, சிறந்த பயனடைய முடிகிறது. 1979 முதல் செயல்புரியத் தொடங்கிய இத்திட்டத்தினால் இதுவரை 13 நூல்கள் வந்துள்ளன. இப்பணியில் தம்மை முழுமையாக, தீவிரமாகப் புகுத்தியிருப்பவர் பேராசிரியர் சிவலிங்கனார். எண்பத்திரண்டில் ஐந்து தொகுதிகள் வெளிவந்துள்ளன.

1. தொல்காப்பியம்-உரைவளம்-எழுத்ததிகாரம்-புணரியல் மார்ச், பக். 32+175, ரூ. 10
2. ,, தொகைமரபு-மே, பக். 28+156, ரூ. 8
3. ,, சொல்லதிகாரம்-கிளவியாக்கம், சூலை, பக். 16+493, ரூ. 20
4. ,, எழுத்ததிகாரம்-உருபியல், நவம்பர், 24+88+16, ரூ. 8
5. ,, உயிர்மயங்கியல், டிசம்பர், 16+232, ரூ.12

இளம்பூரணர் உரை முதல், கிடைக்கும் அனைத்து உரைகளும் அவ்வவ் இயலில் அந்நூற்பாக்களின் கீழ் ஒருங்கே தொகுக்கப்பட்டுள்ளன. பதிப்பாசிரியரின் கருத்து விளக்கங்களும், உரை வேறுபாடிருப்பின் அவையும், மொழி பெயர்ப்புகளும், பிற இலக்கணங்களின் ஒத்த நூற்பாக்களும் இணைக்கப் பட்டுள்ளன.

தமிழகத்திலும், பிறவெளிநாடுகளிலும் தொல்காப்பிய உரைவளத்திற்குச் சிறந்த வரவேற்பு இருக்கின்றது என்பதை அறிஞர் பெருமக்கள் நிறுவனத்திற்கு வரையும் கடிதங்கள் உறுதிப்படுத்துகின்றன. இப்பணியின் விரைந்த செயற்பாட்டினை ஓராண்டிற்குள் ஐந்து நூல்கள் வெளிவந்துள்ளமை உணர்த்தும்.

சுவடி பதிப்பித்தல்

தமிழரின் அரும்பெரும் செல்வங்கள், தமிழரின் பெருமையைப் புலப்படுத்துவன பல சுவடியளவிலேயே நின்று விட்டன. அவற்றைத் தேடி ஒருங்கிணைப்பதையும், சுவடி உருவிலேயே மறைந்து விடாது, சிறந்த முறையில் அவற்றைப் பதிப்பித்து அச்சேற்றலையும் கடமையாகக் கொண்டு நிறுவனம்

அவற்றிற்குத் தேவையான முயற்சிகளை எடுத்து வருகிறது. உலகெங்கும் உள்ள தமிழ்ச் சுவடிகளைப் பற்றிய விவரங்களைத் தொகுப்பதில் முதனிலையாக, கேரளப்பல்கலைக் கழகச் சுவடிகள் நூலகத்தில் உள்ள தமிழ்ச்சுவடிகளின் தொகுப்புப்பணி நிறைவுறும் தறுவாயில் உள்ளது. பல்வேறு நிறுவனங்கள், தனியார் இவர்களிடமிருந்தும் சுவடிகள் பெற்றுக் கொள்ளப் பட்டு நிறுவனத்தால் ஒழுங்குபடுத்தப்பட்டுப் பாதுகாக்கப் பட்டும் வருகிறது.

நூல் வெளியீடுகளில், இத்தகு சுவடிகளைப் பதிப்பித்தற்கும் குறிப்பிடத் தக்க இடத்தைத் தந்துள்ளது. இவ்வாண்டு நான்கு நூல்கள் சுவடிப் பதிப்பாக வந்துள்ளன. இவற்றுள்ளும் மூன்று பல நூல்களின் தொகுப்பாகும்.

**கண்** மருத்துவம், (பதி) வே. இரா. மாதவன்; அக்டோபர்: பக். 996; ரூ. 50.

தமிழில் இன்று கிடைக்கக்கூடிய ஏட்டுச் சுவடிகளில் அறுபது விழுக்காட்டிற்கும் மேலாக மருத்துவ நூல்களே உள்ளன. இவற்றுள் ஐந்து விழுக்காட்டிற்கும் குறைவான ஏடுகளே அச்சில் பதிப்பிக்கப்பட்டுள்ளன என்று கூறும் பதிப்பாசிரியர், 14 சுவடிகளின் தொகுப்பாக இந்நூலைப் பதிப்பித்துள்ளார். மற்றும் மருத்துவம் பற்றிப் பொதுவாகக் கூறும் முந்நூற்றுக்கும் மேற்பட்ட சுவடிகளிலிருந்தும் செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. பதிப்பாசிரியர் தம் ஆய்வினைச் சுவடி களுடன் நிறுத்திவிடாது இலக்கியம், பழமொழி, நிகண்டு, விடுகதை எனத் தொடர்ந்திருப்பது நூற்பதிப்பில் கொண்டுள்ள அக்கறையினையும் உணர்த்துகிறது. ஆங்காங்கே தேவையான தொகுப்புரைகள், குறிப்புரைகளுடன் நூலைப் பதிப்பித் துள்ளார்.

"இந்நூலில் கூறப்படும் கண் நோய்கள் பலவும் தற்கால ஆங்கில மருத்துவ நூல்களிலுள்ள கண்நோய்களின் விளக்கங் களைப் போலவே அமைந்திருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும்... இந்நூலில் காணும் மருந்துகளும் அதனைப் பயன்படுத்தும் முறைகளும் பல்லாண்டு காலமாகத் தமிழகத்தில் வழக்கில் உள்ளனவே. மேலும் யாழ்ப்பாணம், மலையாளம் போன்ற பிற நாடுகளிலும் இவை இன்னும் வழக்கிலுள்ளதை அறியலாம்" என்று மருத்துவர் ஆர். தியாகராஜன் இந்நூலின் ஆய்வுரையில் கூறியிருப்பது தமிழ் மருத்துவத்தின் பெருமையையும், இந்நூலின் தேவையையும் காட்டும். மாண்புமிகு கல்வியமைச்சர் இந் நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்துள்ளார்.

**கருவூரார் பலதிரட்டு,** (பதி) இரா. நிர்மலாதேவி; ஏப்ரல்; பக். 280; ரூ. 12.

இந்நூலும் தமிழருக்கே உரித்தான சித்தமருத்துவம் பற்றிய தாகும். நூல், நூலாசிரியர் பற்றிய ஆய்வுடனும், பதிப்பிற்குரிய பொதுக்கூறுகளுடனும், நூலுக்கு உரையும் பதிப்பாசிரியர் நல்கி யுள்ளார்.

**பிரபந்த தீபிகை,** (பதி) டாக்டர். ச. வே. சுப்பிரமணியன், டாக்டர். அன்னிதாமசு; அக்டோபர்; பக். 24 + 217; ரூ. 12.

இப்பாட்டியல் வேம்பத்தூர் முத்து வேங்கட சுப்பைய நாவலர் அவர்களால் 19-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. 96 வகைப் பிரபந்தங்களைப்பாடஎடுத்துக்கொள்ளும் இலக்கண முறைமைகளைப் பற்றியும் பிற பலவகைப் பொருள்களைப்பற்றி யும் தொகுத்து 100 பாடல்களில் கொடுத்துள்ள இந்நூலை, பதிப்பாசிரியர், தாமெழுதிய உரையுடன் பதிப்பித்துள்ளனர். முன்பின் நூல்களின் கருத்துக்களைத் தெரிவிக்குமிடத்தும், தெளிவிற்காகவும் ஆங்காங்கே பதிப்பாசிரியரால் அட்டவணை களும், பட்டியல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. பாட்டியல் நூல் களின் செய்திகளுடன் மற்றும் பலபுதிய செய்திகளைத் தருவதன் மூலம் இந்நூற்பதிப்பு இலக்கண, இலக்கிய உலகில் சிறப்புப் பெறுகிறது.

**கும்மிப் பாடல்கள்;** (பதி) டாக்டர். ஏ. என். பெருமாள்; ஆகஸ்ட்; பக். 8 + 392; ரூ. 16.

தமிழரின் நாட்டுப்புறக் கலைகளில் சிறப்புடையதாக விளங்கும் சில கும்மிப் பாடல்கள் இதனுள் இடம் பெற்றுள்ளன. ஆவுடையார் கும்மி, சிங்கை அழகிய அம்மன் கும்மி, சிவயோக வல்லிகும்மி, சீரணியம்மன் கும்மி, சீனய்யங்கார் கும்மி, சௌமிய நாராணயப் பெருமாள் கும்மி, நல்லாண்டவர் கும்மி, மருத பாண்டியன் கும்மி, மாடன்கும்மி என்பன விளக்கவுரையுடன் பதிப்புப் பெற்றுள்ளன. கும்மிப் பாடல்கள் பற்றிய ஆய்வுரை, தமிழிலும் ஆங்கிலத்திலும் நூலின் முன் பகுதியில் அமை கின்றது.

சுவடிப் பதிப்புகள் தவிர, இன்னும் பிறநூல்களும் நிறுவனத் திலிருந்து வெளிவந்துள்ளன. கையேடு, தொகுப்பு, ஆய்வு எனப் பல நிலையில் இவை அமைகின்றன.

**சுவடியியல் பயிற்சிக் கையேடு;** மு. கோ. ராமன்; மே; பக். 108; ரூ. 6.

சுவடிப் பதிப்புத் துறையில் ஈடு படுவோர்க்கு, விரும்பு வோருக்கு ஒரு வழிகாட்டியாக இந் நூல் உருவாகியுள்ளது. சுவடிப் பதிப்பில் பொதுவாக எழும் ஐயங்கள், குறைபாடுகள், இடர்கள் முதலியனவற்றைச் சுட்டி, அவற்றை நீக்கிச் சிறப்பாகப் பதிப்பிக்கும் முறையைத் தகுந்த சான்றுகளுடன் விளக்குவது இந்நூல்.

**தமிழ் இலக்கியக் கொள்கை-7,** (பதி) டாக்டர். ச.வே. சுப்பிர மணியன்; டாக்டர். ஆர்.விஜயலட்சுமி; சூன்; பக்.17 + 358; ரூ.15

தமிழ் மொழிக்கென்று தனித்த இலக்கியக் கொள்கைகள் உண்டு. அவற்றை எடுத்துக்காட்டும் வகையிலும், இலக்கியத் திறனாய்வுடன் கூடிய இலக்கிய வரலாறு அமையும் நிலையிலும் இந்நிறுவனம் இலக்கியக்கொள்கைக் கருத்தரங்குகளைத் திங்கள் தோறும் நடத்தி வருகிறது. ஆண்டுதோறும் அவை நூலாக்கம் பெறுகின்றன. அவ்வகையில் தமிழ் இலக்கியக் கொள்கை-7-ஆம் தொகுதி இவ்வாண்டு வெளிவந்துள்ளது.

இத்தொகுதியுள் நிகண்டுகள்(ச.வே.சுப்பிரமணியன்) அந்தாதி (க.காந்தி), ஊசல்(வே. சீதாலட்சுமி), சிலேடை(இரா. தமிழரசி), மடல் (ந. கடிகாசலம்), கும்மிப்பாடல்கள் (ஏ. என். பெருமாள்), விலாசம் (கரு. நாகராசன்), மெய்க்கீர்த்தி (பூ. சுப்பிரமணியம்), யசோதர காவியம் (தா.வே.வீராசாமி), தூது(இ.சுந்தரமூர்த்தி) ஆகிய கட்டுரைகள் உள. சிற்றிலக்கியம் பற்றிய கட்டுரைகள் அவ்வவற்றின் தொகுப்புடன் அமைந்திருத்தல் ஆய்வாளருக்கு மிகவும் உதவுவது.

இத்தொகுதிகள், மலாய் மொழியில் மொழிபெயர்க்கப் பட இருத்தல் நிறுவனப் பணிகளின் உயர்வினை எடுத்துக் காட்டுவதாகும். இத்தொகுப்பில் உள்ள கும்மிப் பாடல்கள், மெய்க்கீர்த்திகள் முதலியகட்டுரைகள் தேவையான விரிவினைப் பெற்று நிறுவனத்தில் நூலாக்கம் கொண்டுள்ளமையும் குறிப் பிடற்பாலது.

**எண்பதில் தமிழ்,** (பதி) டாக்டர். ச. வே. சுப்பிரமணியன், டாக்டர். ஆர். விஜயலட்சுமி; மார்ச்; பக். 928; ரூ. 45.

உலகளவில் தமிழின் வளர்ச்சி நிலையை ஆண்டுதோறுமாகக் கணக்கிட வேண்டும் என்ற திட்டத்தில் உருவானதே இந்நூல். தமிழ் ஆய்வுலகில் புது முயற்சியாக அமையும் இதன் நோக்கமும் போக்கும், "ஆண்டுதோறும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் நடைபெறும் தமிழ் வளர்ச்சிக்கான பணிகள் பற்றிய செய்தி களைத் திரட்டி மதிப்பீடு செய்து ஆய்வுக் கண்ணோட்டத்துடன்

நூல்வடிவில் தரத்திட்டம். கட்டுரைகள் தலைப்புத்தொடர்பான செய்திகளைத் திரட்டித் தருவதுடன் அவற்றினை மதிப்பீடு செய்வதாகவும் அமைகின்றன. இதனால் ஒருஆண்டில் தமிழில் பல்வேறு துறைகளிலும் நடைபெற்றமுயற்சிகளைஒரே இடத்தில் பார்க்கும் வாய்ப்பு படிப்போர்க்கும் குறிப்பாக ஆய்வாளர்க்கும் கிடைக்கின்றது'' என விளக்கப்படுகின்றது.

அவ்வகையில், இவ்வரிசையில் முதலாவதாக, 1980-ஆம் ஆண்டு எடுத்துக் கொள்ளப்பெற்றது. 71 தலைப்புகளில் கட்டுரைகள் இத்தொகுதியில் இடம் பெற வேண்டும் எனத் தொடக்க நிலையில் விழைந்த போதும் 35 கட்டுரைகளே இங்கு இடம் பெற்றுள்ளன. சிறுகதை, புதினம் போன்ற படைப்பிலக்கியங்களுடன் இதழ்கள், வானொலி, ஆய்வுத்துறை, பதிப்பகங்கள், மலர்கள் எனப் பல துறைகளில் தமிழ் பற்றிய விளக்கங்களை இதனுள் பெற முடிகிறது. மலேசியாவில் தமிழ் (இரா. தண்டாயுதம்), ஆஸ்திரேலியாவில் தமிழ் (எஸ்.தாஸ், வி.சி. ஜெயராம்), இலங்கையில் தமிழ் (இ. பாலசுந்தரம்), பிரஞ்சு ஆப்பிரிக்காவில் தமிழ் (க. ப. அறவாணன்), Tamil Studies undertaken in Mauritius (எம். தங்கண முத்து) முதலான கட்டுரைகள் உலகில் தமிழ் பற்றிய கருத்தினை அறிய உதவுகின்றன. இப்பணி மற்றும் பல விரிவுகளுடனும், முன்னேற்றங்களுடனும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்நூலுக்கும் கல்வியமைச்சரவர்கள் அழகியதொரு அணிந்துரை அளித்துள்ளார்.

பாரதியார் வாழ்க்கைக்கொள்கைகள்; டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்; செப்டம்பர்; பக். 170; ரூ. 8.

பாரதி நூற்றாண்டு விழா ஆண்டில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வழியாக இந்நூல் வருகிறது. அவர் கவிதைகளையும் கட்டுரைகளையும் அடிப்படையாகக் கொண்டு அவரைப் பெருங்கவிஞர் எனக் கருதும் நூலாக மட்டும் அமையாது, மனிதன் வாழ்வதற்கு அவர் கவிதைகளும் கட்டுரைகளும் எவ்வாறு துணைபுரிகின்றன என்ற கோணத்தில் பாரதியார் உணர்த்தும் வாழ்க்கைக் கொள்கையைப் பற்றி இந்நூல் கூறுகிறது. பிறந்த குழந்தையிலிருந்து முதியவர் வரை எவ்வாறு வாழ வேண்டும் என்று தம் கொள்கைகளைப் பல இடங்களில் பாரதி சுட்டிச் சென்றுள்ளார். அவற்றையெல்லாம் தொகுத்து ஓரிடத்தில் தந்து மனிதர்க்கு வாழ்வதற்கு வழியாக, ஊன்றுகோலாக இனிது அமைய வேண்டும் என்ற கோணத்தில் வாழ, உலகத்தமிழர்க்கு அளிக்கப்படுகிறது. ஒவ்வொரு தலைப்புக்கும் பொருத்தமான பாரதியின் பாடலடிகள் முதலில் குறிக்கப்பட்டு,

கருத்து தொடர்வதாக நூல் அமைந்துள்ளது. இந்நூல் பெங்களூர்த் தமிழ்ச் சங்கத்தில் நடைபெற்ற பாரதி நூற்றாண்டு விழாவில் மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களால் வெளியிடப்பெற்றது.

**திவ்வியப் பிரபந்தத்தில் மனம்,** கரு. நாகராசன்; டிசம்பர்; *8+252;* ரூ. 12.

ஒவ்வொரு சமயத்தினரும் மனம் பற்றி என்ன நினைத்தனர் என்பதைத் தனித்தனியாகக் காண வேண்டும் என்ற விழைவின் விளைவே இந்நூல். அவ்வகையில் ஆழ்வார்கண்ட மனம் இந்நூலில் மணக்கிறது. இந்நூலுக்கு முன்னோடியாக இந் நூலாசிரியரால் 'தமிழர் கண்ட மனம்' என்ற நூல் எழுந் துள்ளமையும் குறிப்பிடற்பாலது.

**தமிழும் தமிழரும்,** டாக்டர். ந. கடிகாசலம், செப்டம்பர்; *12+108;* ரூ. 5.

உலகில் தமிழும் தமிழரும் என்ற நூல் 1976-இல் வெளி வந்தது. அதன் தொடர்ச்சியாக இந்நூல் அமைகிறது. உலகில் தமிழர் எங்கெங்கு வாழ்கின்றனர், தமிழ்க்கல்வி எந்த நிலையில் நடைபெறுகின்றது என்பதைப் பற்றிய ஒரு அறிமுகமாக இவை அமைகின்றன. இந்தியாவின் பிற மாநிலங்களிலும், 46 வெளி நாடுகளிலும் வாழும் தமிழர் பற்றிய பொதுச் செய்திகள், தமிழ்க்கல்வி நிலை, அங்கு வெளியாகும் தமிழிதழ்கள், வானொலி-தொலைக்காட்சிகளில் தமிழ் நிகழ்ச்சிகள், தமிழ்ச் சங்கங்கள், குறிப்பிடத்தக்க தமிழர் போன்ற பல செய்திகள் உள.

இந்நூல் மூன்று ஆண்டுகளுக்கொருமுறை புதிதாகச் செம்மைப்படுத்தப்பட்டு பல புதிய செய்திகளின் இணைவுடன் வெளிவர வேண்டும் என்பது திட்டமாதலின் "தமிழும் தமிழரும்" தொடர்பான செய்திகள் மேலும் கிடைக்கப் பெற்றவர் தரும் குறிப்புகள் நிறுவனத்தாரால் அன்புடன் வரவேற்கப்படுகின்றன.

பொதுவாக நிறுவன நூல்கள் அனைத்தும் மிகவும் குறைந்த விலையில் விற்பனைக்கு வருகின்றன. சிறந்த ஆய்வு நூல்களை நாடி நிற்போருக்கும், ஆய்வாளருக்கும் உதவும் நோக்கத்துடன் தான், நிறுவனம் புத்தக விற்பனையில் லாபத்தை முன்வைக் காது ஒவ்வொரு தனிமகனும் நூலைத்தனக்கென வாங்கிப் பயனடைய வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் அக்குறைந்த விலையிலும் 20 விழுக்காடு தள்ளுபடிசெய்து கொடுக்கிறது.

தரத்தில் சிறந்ததான நிறுவன நூல்கள், சொல்லகராதியும் தேவையான பிற பின் இணைப்புகளும் பெற்று அமைகின்றன. ஆய்வாளரை முன்னிட்டு நூல்கள் படைக்கப்படுவதால் அவர் தம் தேவை குறித்து இவை தரப்படுகின்றன. இது வரை வெளி யான நிறுவன நூல்களில்[1], 30 ஏற்கெனவே விற்றுத் தீர்ந்து விட்டன.

வெளிவரும் நூல்களைப் பற்றி உடனுக்குடன் அறிஞருலகம் அறியும் பொருட்டு, நூலறிமுகங்கள், திங்கள் தோறும் நடை பெறும் தமிழ் இலக்கியக் கொள்கை கருத்தரங்குகளில், 25.3.82 முதல் நடைபெறுகின்றன. நிறுவன நூல்களின் வெளியீடும் மதிப்பீடும் ஆண்டிற்கு ஓரிரு முறை விரிந்த அளவில் நடைபெறு கின்றது. 1982, டிசம்பர் திங்கள் ஆறாம் நாள் 'கண் மருத்துவம்' நூலின் வெளியீடும், பிற நூல்களின் மதிப்பீடும், மாண்புமிகு சிலம்புச் செல்வர் டாக்டர். ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மாவட்ட மைய நூலகக் கட்டிட அறையில் நடை பெற்றது. மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம் 'கண் மருத்துவம்' நூலை வெளியிட, கல்வி அறிவியல் மற்றும் தொழில் நுட்பவியல் துறை ஆணையர் மற்றும் செயலாளர் திரு. செ. ராமதாஸ் அவர்கள் முதல் பிரதியைப் பெற்றார். மருத்துவர் ஜி. கீதா அவர்களால் நூல் அறிமுகம் செய்யப் பட்டது. தொடர்ந்து, நிறுவனத்திலிருந்து வந்த தொல்காப் பியம்-உரைவளத் தொகுதிகள் டாக்டர் இரா. கு. நாகு அவர்களாலும், தமிழ்ப்பண்பாடு தொடர்பான நூல்கள் டாக்டர் க. ப. அறவாணன் அவர்களாலும், இலக்கியக் கொள்கை நூல்கள் டாக்டர். இராம. குருநாதன் அவர்களா லும், தமிழ்ச்சுவடிகளினின்றும் பதிப்பிக்கப்பெற்ற நூல்கள் டாக்டர். இ. சுந்தர மூர்த்தி அவர்களாலும் ஏனைய நூல்கள் டாக்டர். சி. பாலசுப்பிரமணியன் அவர்களாலும் மதிப்பிடப் பட்டன.

**கருத்தரங்குகள்**

நிறுவன ஆய்வறிஞர், பிற ஆய்வறிஞருடன் கலந் துரையாடற்கு வாய்ப்பாகவும், அவர்களின் ஆய்வினை யும் தமிழுலகம் அறிதற் பொருட்டும் பல கருத்தரங்குகள் நடத்தப்படுகின்றன. இவற்றால் நிறுவனத்தின் ஆய்வுப்பணி களைப் பிறர் அறிதற்கும் இடமேற்படுகிறது. இவ்வாறு நடைபெறுவனவற்றை ஆண்டுக்கருத்தரங்கு திங்கள் கருத்தரங்கு, வாரக் கருத்தரங்கு என்று பிரிக்கலாம்.

**ஆண்டுக்கருத்தரங்கு:** ஒவ்வொரு ஆண்டும், நாடெங்கிலும் உள்ள தமிழியல் அறிஞரை அழைத்து, நிறுவனத்தில் பெரிய

அளவில் கருத்தரங்கு நடைபெறுகிறது. தமிழரின்சமுதாயம்,பண் பாடு, கலை, போன்ற பல நிலைகளையும்வெளிப்படுத்தும் வகையில்'தமிழர் மரபுச் செல்வம்'எனும் நிலையில் இது அமைக்கப்படுகிறது. 1975-ஆம் ஆண்டு முதல் தொடர்ச்சியாக நடத்தப் படும் இக்கருத்தரங்கு[2], 1982-இல் பல காரணங்களால் நிகழாது, 'தமிழரின் தத்துவ மரபுச் செல்வம்' என்ற கருத்தரங்கு 1983-மார்ச்சில் அமைந்தது. இக்கருத்தரங்குகளின் கருத் துரைகள் காற்றோடு கலந்து விடாதவாறு அப்போதே அச்சிலும் பதிக்கப்படுகின்றன.

**திங்கள் கருத்தரங்குகள்:** தேவ நேயப்பாவாணர் மாவட்ட மைய நூலகக் கருத்தரங்க அறையில் திங்கள் தோறும் தமிழ் இலக்கியக் கொள்கை கருத்தரங்குகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன. தமிழர்க்கென்று தனித்த இலக்கியக் கொள்கைகள் உண்டு, அவற்றை இனம்காண வேண்டும், சிறப்பிக்க வேண்டும் என்ற நிலையில் 19 4-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 'தொல்காப்பியம்' முதலாகத் தொடங்கப்பட்டு, இன்று வரை இடையறாது நடை பெற்றுவருவதினின்றும் அதன் சிறப்பினை உணரலாம். தொல் காப்பியம் முதல் உரையாசிரியர் வரை, பல துறை நூல்களைத் தனித்தனியாகவும், புலவரைத் தனித்தனியாகவும், பொருள் வகையில் தொகுதியாகவும், தனித்தனி வகைகளாகவும் கண்டு இலக்கியக் கொள்கை பற்றிய ஆய்வுக் கட்டுரைகளை அவ்வத் துறையில் சிறப்புற்ற அறிஞர் ஆய்ந்து அளிக்கின்றனர். அவ் வகையில் 1982-சனவரி முதல் டிசம்பர் வரை 12 கட்டுரைகள் ஒவ்வொரு மாதத்தின் இறுதி வியாழக்கிழமைகளில் படிக்கப் பட்டுள்ளன.

இக்கட்டுரைகளும், தொடர்ந்த ஆண்டில் பதிப்பிக்கப்படுகின்றன. இக்கட்டுரைகள், பரந்த நிலையில் ஆய்வு மேற் கொள்ள வாய்ப்பளிக்கின்றன என்பதை வே. இரா. மாதவனின் 'சித்திரக்கவிகள்' பற்றிய இலக்கியக்கொள்கை கட்டுரை, நூலாக வெளிப்போந்துள்ளமை உணர்த்தும், இலக்கியக் கொள்கை நூல் கள் பல்கலைக்கழகங்களின் பாட நூல்களாக இடம் பெற்றுள் ளமையும் சுட்டற்பாலது.

**ஆய்வு மன்றக் கருத்தரங்கு:** திங்கள் தோறும் நடைபெறும் கருத்தரங்குகளில் பிறிதொன்று ஆய்வு மாணாக்கரின் நலனுக் காக, அவர் கட்டுரை அமைக்கும் திறனை வளர்த்துக் கொள்ளு தல் பொருட்டும், ஆய்வில் ஏற்படும் இடர்ப்பாட்டையும் ஐயங் களையும் களைவதற்குத் துணை நிற்றற்காகவும் இது நடை பெறுகிறது. நிறுவனத்தில் டாக்டர் பட்ட ஆய்விற்குப் பதிவு

| கருத்தரங்குத் தொடர் எண் | நாள் | தலைவர் | கட்டுரையாளர் | கட்டுரை |
|---|---|---|---|---|
| 88. | சன. 28 | க. ப. அறவாணன் | பூ. சுப்பிரமணியம்- | கலம்பகம் |
| 89. | பிப். 25 | இராம குருநாதன் | கரு. நாகசராசன்- | விலாசம் |
| 90. | மார்ச் 25 | சி. பாலசுப்பிரமணியன் | ச.வே.சுப்பிரமணியன்- | நிகண்டுகள் |
| 91. | ஏப். 29 | கரு. நாகராசன் | த. அழகப்பராசு- | காதல் |
| 92. | மே 27 | ஆ. சிவலிங்கனார் | நா. ரா. நாச்சியப்பன்- | விருத்தம் |
| 93. | சூன் 24 | ஆறு. அழகப்பன் | ஆ. தனஞ்செயன்- | பாட்டு |
| 94. | சூலை 29 | மணவை முஸ்தபா | மு. சாயபுமரைக்காயர்- | இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் |
| 95. | ஆக. 26 | ச. ந. கணேசன் | ஏ. என். பெருமாள்- | கதைப்பாடல்கள் |
| 96. | செப். 30 | ஆ. சிவலிங்கனார் | வே. இரா. மாதவன்- | சித்திரக்கவிகள் |
| 97. | அக். 28 | ந. ஞானசம்பந்தன் | கா. சி. தனக்கோடி- | பழமொழிகள் |
| 98. | நவ. 25 | க. பெருமாள் | இராம. குருநாதன்- | வெண்பா |
| 99. | டிச. 30 | தஞ்சைவாணன் | ம. இராசேந்திரன்- | நொண்டி நாடகங்கள் |

செய்துள்ள முழுநேர, பகுதிநேர ஆய்வாளரும், நெறியாளரும் இதில் கலந்து கொண்டு கட்டுரை நல்குகின்றனர். ஒவ்வொரு திங்களும் இறுதிச் சனிக்கிழமையன்று பிற்பகலில் நிறுவனத்தில் இது நடைபெறுகிறது. மூவர் எழுத்துரை நல்குவர். எழுத்துரைகள் அவ்வவரின் ஆய்வுத்தலைப்பினை ஒட்டி அமைகின்றன.

**வாரக் கருத்தரங்கு:** நிறுவனத்தில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்றும் மாலை 3 மணிக்கு நிறுவன ஆய்வு அலுவலர், ஆய்வாளர் அனைவரும் பங்கு பெறுகின்ற வாரக்கருத்தரங்கு நடைபெறுகின்றது. தொடக்க காலத்தில் அவரவர் விருப்பப் பட்ட தலைப்புகளில் கட்டுரையளிக்கப்பட்டது. அனைவரும் பொது நிலையில் ஓர் ஆய்வினை மேற்கொள்ள, அவற்றிற்கு நூல் வடிவம் தந்தால் தமிழ்உலகுக்கு மிகுந்த பயனாக இருக்கும் என்றஉணர்வு 1981-இல் தோன்றியதால் அவ்வாண்டு முழுவதும் 'இலக்கியத்தில் நிறங்கள்' என்ற பொதுத் தலைப்பின் கீழ் ஆய்வாளர்கள் கட்டுரை படித்தனர். அவை நூலாகி விட்டன என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. 1982 பாரதி நூற்றாண்டாக இருந்தமையின் வாரக்கருத்தரங்கு பாரதி ஆய்வாகச் சிறப்பிக்கப் பட்டது.

இவை தவிர அவ்வப்போது பிற அறிஞர் நிறுவனத்திற்கு வருகை தரும் பொழுது அவர்களது சிறப்புச் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன. 15.4.82—அன்று கே. நாச்சிமுத்து (கேரளப்பல்கலைக்கழகம்), தமிழக ஊர்ப்பெயர்கள் ஆய்வுபற்றி உரையாற்றினார். 21-8-1982 ஜெர்மானியர் வாழ்க்கை முறைகள் பற்றி 'ஒளிக்காட்சி'யுடன் பி.ஆர்.சுப்பிரமணியன் (கொலன் பல்கலைக்கழகம்) விளக்கினார். 23-11-82-இல் தவத்திரு செல்வ ரத்தினம் (யாழ்ப்பாணம்) நிறுவனத்தாருடன் கலந்துரையாடினார்.

## இதழ்

இதழ்கள் பரந்த அளவில் பிறரை அடைவதற்கு வாய்ப்பு உள்ளமையால், நிறுவனம், அரையாண்டிதழாகத் 'தமிழியல்' (Journal of Tamil Studies) என்பதனை வெளியிடுகிறது. 21, 22-ஆம் தொகுதிகள் இவ்வாண்டில் வெளிவந்துள்ளன. பல உள்நாட்டு வெளிநாட்டு அறிஞரின் கட்டுரைகள் இவற்றுள் இடம் பெறுகின்றன. தமிழ், ஆங்கிலம் என இரு மொழிகளிலும் கட்டுரைகள் வெளியிடப்பட்டு இருமொழி இதழாக இது விளங்குகிறது. தமிழியல் பற்றிய பல்துறைக் கட்டுரைகளும்அவ்வத்துறை சார்ந்தோரால் படைக்கப்பட்டு வெளிவருதல் இதன் சிறப்பு.

கமில்.வி. சுவலபிலின் 'தொல்காப்பியச் சொல்லதிகார ஆங்கில மொழி பெயர்ப்பு' தொடர்ந்து வருதலும் குறிப்பிடத் தக்கது நூல் மதிப்பீடுகளும் இதனுள் இடம் பெறுகின்றன. பாரதி நூற்றாண்டைச் சிறப்பிக்குமுகமாக 22-ஆம் தொகுதி பாரதி சிறப்பிதழாக (C. Subramania Bharati Centenary Commemoration Volum ) வெளிவந்துள்ளது. தனி இதழின் விலை ரூ.12-50 ஆகவும், ஆண்டுச் சந்தா ரூ.20 ஆகவும் உள்ள இதற்கு ஆயுள் உறுப்பினர் கட்டணம் ரூ.300 ஆகும். பல வெளிநாட்டினர் இதன் ஆயுள் உறுப்பினராக உள்ளமை குறிப்பிடற்பாலது.

### பிற நாட்டினரின் ஒத்துழைப்பு பெறல்

தமிழர், தமிழின் பெருமையைப் பிறநாட்டினருக்கு உணர்த்துவதில், அவர்தம் ஒத்துழைப்பு இருத்தல் இன்றியமையாதது ஆதலின் இதற்கும் தகுந்த முயற்சிகளை நிறுவனம் மேற்கொண்டுள்ளது. 1982-இல் டாக்டர் யரோ வாசக்கின் வருகை இதன் பாற்பட்டதாகும். இந்திய, செக்கோஸ்லோவேகிய கலாச்சார பரிவர்த்தனைத் திட்டத்தின் கீழ் பல்கலைக் கழக மான்யக் குழுவின் பரிந்துரையின்படி, தமிழரல்லாதார்க்குப் பயன்படும் வகையில் 'தமிழ்த் துணைவன்' ஒன்றினை உருவாக்கும் திட்டத்தின் நிறைவேற்றத்திற்காக, இந்நிறுவன இயக்குநருடன் ஒருங்கிணைந்து செயல் படுவதற்காக அவர்தம் நிறுவன வருகை அமைந்தது. அவர் சனவரி முதல் ஏப்ரல் வரை நிறுவனத்தில் பணியாற்றி அத்திட்டச் செயலாக்கத்திற்குத் தம் ஒத்துழைப்பை நல்கினார். இதன்தொடர்பாக நிறுவனஇயக்குநர் 198'-ஆம்ஆண்டு சுமார் மூன்றுதிங்கள் செக்கோஸ்லோவேகியா சென்று அவருடன் இணைந்து பணியாற்றினார். 1980-இல் இலங்கையைச் சார்ந்த டாக்டர். ஏ. வேலுப்பிள்ளை, 1981-இல் ஹாலந்தைச் சார்ந்த டாக்டர். கமில் சுவலபில் ஆகியோர் வருகையும் இதன்பாற்பட்டதே. பிற நாட்டுத் தமிழறிஞர் ஆய்வினையும் பெற்று உலகிற்கு நிறுவனத்தின் வழி வழங்கல் இதன் அடிப்படை நோக்கம். இவ்வகையில் இவர்களின் பணிகள் முதற்கண் சொற்பொழிவுகளாகவும், பின் முறையே 'Epigraphical Evidences for Tamil Studies', 'Tiru Murugan'என நூலாக்கமும் பெற்றன என்பது சுட்டத்தக்கது.

இவை தவிர, பிறரால் நடத்தப்பெறும், ஆய்வரங்குகளிலும், மாநாடுகளிலும், நிறுவனம், இயக்குநராலும் பிற ஆய்வு அலுவலர்களாலும் முக்கிய பங்கேற்கிறது. ஆண்டு தோறும் நடக்கும் 'அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்

தரங்கு'களில் நிறுவன ஆராய்ச்சி அலுவலர் பெரும்பான்மை யாகக் கலந்துகொள்கின்றனர். 'அகில உலக இந்து சமயக் கருத் தரங்கு' இலங்கையில் நிகழ்ந்ததிலும் நிறுவனத்தினர் கலந்து கொண்டனர்.

## கற்பித்தல்

**டாக்டர் பட்டம்:** ஆய்வு நிறுவனம் என்பதனால் ஆய்வா ளரை உருவாக்கும் நிலையில் இங்கு டாக்டர் பட்டத்திற்கு மட்டும் 1975 முதல் ஆய்வு மாணவர் சேர்க்கப்படுகின்றனர். எழுபதிற்கும் மேற்பட்ட பகுதி, மற்றும் முழுநேர மாணாக்கர் உள்ளனர். முழுநேர ஆய்வாளரில் ஐவருக்குத் திங்களொன்றுக்கு ரூ. 600 வீதம் உதவித் தொகை வழங்கப்பட்டு வருகிறது. தமிழ் இலக்கியம், நாட்டுப்புறவியல், ஒப்பிலக்கியம், சுவடியியல், வரலாறு, பண்பாடு, தத்துவம், இலக்கணம், இதழ்கள், சமயம் எனப் பல துறைகளிலும் ஆய்வு நிகழ்த்தப் பெறுகிறது. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், டாக்டர் க த திருநாவுக்கரசு, டாக்டர் தா. வே. வீராசாமி, டாக்டர் ஏ. என். பெருமாள், டாக்டர் அன்னி மிருதுலகுமாரி தாமசு, டாக்டர் ந. கடிகாசலம், டாக்டர் ர விஜயலட்சுமி ஆகியோர் ஆய்வுநெறியாளராகவும் பணியாற்று கின்றனர். 1982-இல் மூவர் இந்நிறுவனத்தின் வழி டாக்டர் பட்டம் பெற்றுள்ளனர். மற்றும் ஒன்பதின்மர் மதிப்பீட்டிற்காகத் தம் ஆய்வேட்டினைப் பல்கலைக் கழகத்திற்கு அளித்துள்ளனர்.

## பட்டய வகுப்பு

அழிந்து கொண்டிருக்கும் தமிழ்ச்சுவடிகளைக் காப்பாற்றி அவற்றைப் பாதுகாக்க வேண்டும், அதற்கு ஏற்றவர்களை உரு வாக்க வேண்டும் என்ற நோக்கில் நிறுவனம் 1979-இல் சுவடி யியல் பட்டய வகுப்பினைத் தோற்றுவித்தது. அதே ஆண்டி லேயே, மொழியை வளம்படுத்துதற்கும் மொழிவளம் காட்டு தற்கும் சிறந்த வழியாக உள்ள மொழிபெயர்ப்பினைக் கற்பிக் கும் எண்ணத்துடன் மொழிபெயர்ப்பியல் பட்டய வகுப்பும் தொடங்கப்பட்டது. இவற்றிற்குப் பட்டப் படிப்பில் தேறியிருத் தல் நுழைவுத் தகுதியாகக் கருதப்படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் இப்பட்டயவகுப்புகளில் முதல் தரத்தில் தேர்ச்சியடைந்தவர் களை ஊக்குவிக்கும் வகையில் ஓராண்டுக் காலத்திற்கு ஒப்பந்த அடிப்படையில் வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறது. இவ்வகுப்பு களில் பயிலும் பத்து மாணாக்கருக்குத் திங்களொன்றுக்கு ரூ.200 உதவித்தொகையாக வழங்கப்படுகிறது.

## தமிழ்ப் பயிற்சி வகுப்புகள்

தமிழரல்லாதார்க்குத் தமிழ் கற்றுத்தரும் நவீன வசதிகளுடன் கூடிய மொழிப்பயிற்சிக் கூடத்தின உதவியுடன் தமிழ்ப் பயிற்சி வகுப்புகள் நிறுவனத்தால் நடத்தப்பட்டு வருகின்றன. அவை இளநிலை, முதுநிலை என இரு பிரிவுகளாக உள்ளன. இளநிலை மூன்று மாதப் பயிற்சியுடனும், முதுநிலை ஆறுமாத பயிற்சியுடனும் அமைகின்றன. 1982 ஜூன் வரை 85 வெளி நாட்டவரும், 23 இந்தியரும் இப்பயிற்சி வகுப்புகளால் பயனடைந்துள்ளனர். 1982-1983-ஆம் ஆண்டில் மட்டும் 13 பேர் பயின்றுள்ளனர். அவர்களுள் நால்வர் அமெரிக்கர், இருவர் கொரியர், நைஜீரீயர், பிரெஞ்சு, செர்மானியர் முறையே ஒவ்வொருவரும், மீதி நால்வர் இந்தியரும் ஆவர்.

தமிழ் மொழித் தொண்டினையே உயிர் மூச்சாகக் கொண்டு இயங்கும் இந்நிறுவனப் பணிகளைக் கீழ்க்கண்டவாறு காட்டலாம்.




## முன்னேற்றப்பாதையில் நிறுவனப் பணிகள்

இதுகாறும் கண்டன 1982-இல் நிறைவு அடைந்த பணிகளாகும். இவை தவிர இன்னும் பல பணிகள் இவ்வாண்டில் செயலாக்கம் கொண்டன. 'ஒலிப்பதிவு நாடாக்களில் தமிழ்'

எனும் திட்டம் அவற்றுள் ஒன்று. இத்திட்டத்தின் நோக்கம் முற்றிலும் நவீன முறையில் புதிய வழிமுறைகளைக் கையாண்டு தானாகவே தமிழ் கற்க உதவுதல் என்பதாகும். 360 நிமிடங்களில் தமிழ் கற்க உதவுவது இந்தச் சாதனம். மொரிஷியஸ், சிங்கப்பூர் நாடுகளிலுள்ள தமிழ் சந்ததியினர்க்கு தமிழ் கற்கும் வாய்ப்பினை நல்கும் அடிப்படையில் இது தயாரிக்கப்படுகிறது. இதனுடன் இணைந்ததாக ஒலிப்பதிவு நாடாவில் உள்ளவற்றிற்கு விளக்கமாக 'தமிழ்ப் பாடப் பயிற்சி நூல்' என்ற ஒன்றும் தரப் படுகின்றது. இந்நூலில் 20 பாடங்கள் பேச்சு வழக்கு நடையிலும், அதே 20 பாடங்கள் இலக்கிய நடையிலும் அமைக்கப் பட்டுள்ளன. இப்பாடங்களின் துணைவனாக, இப்பாடங்களில் வரும் சொற்களின் பயன், பயன்படுத்துமுறை பற்றிய சொல்லகராதியும், சொல்லடைவும் உள்ளடக்கிய நூலொன்றும் தொகுப்பில் உள்ளது.

'ஊர்ப்பெயராய்வுத் திட்ட'மும் இவண் சுட்டத்தக்க சிறப்புடையது. தமிழக ஊர்ப் பெயர்கள் பற்றி 20 நூல்கள் வெளிக் கொணர வேண்டும் என்பது நிறுவனத்தின் நோக்கம். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒவ்வொரு தனித்தனி நூலும், தமிழ் இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் என்ற நிலையில் 4 தொகுதிகளும் வெளியிடப்படும்.

தமிழ் நாட்டினைக் குறிப்பாகக் கொண்டு இந்தியா, தெற்கு மற்றும் தென்கிழக்காசிய நாடுகள் ஆகிய இவற்றிற்கிடையேயான நாட்டுப் புறவியல் ஒப்பாய்வு என்பது ஆசிய நாடுகள் அனைத்திலுமுள்ள மக்களின் சமூக கலாச்சார பண்பாட்டில் ஒரு பொதுவான போக்கினை வெளிப்படுத்தித் தமிழரின் தொன்மையை நிலைநிறுத்தும் என்பது மகிழத்தக்க தொன்று. இப் பணியும் முன்னேற்றப் பாதையில் உள்ளது. இந்திய மொழிகளில் இலக்கிய ஒப்பாய்வு, சமயச் சொல்லகராதி, சங்க இலக்கியப் பாடல்களின் மொழி பெயர்ப்பு போன்றனவும் நிறுவனத் திட்டங்களில் உட்படும்.

தமிழ், தமிழர் பற்றி உலகளாவிய நிலையில் தேவையான முழுமையான ஆய்வினைச் சிறப்பாகச் செயல்படுத்தி அவற்றிற்கு நூலுருவம் நல்க வேண்டும் என்பதனை நிறுவனம் தனது முதன்மை நோக்கமாகக் கொண்டு செயலாற்றி வருகிறது. இதற்குத் தமிழறிஞருலகம் தரும் பரிந்துரைகள் வரவேற்கப் படுகின்றன.

1. நிறுவன நூல்கள்

1975

1. தமிழில் விடுகதைகள் (மூ. ப. 1980), 2. ☐ ஆராய்ச்சி நெறிமுறைகள் (இ. ப. 1977), 3. ☐ A Course in Modern Standard Tamil, 4. Tamil Research through Journals 5. Dr. Mu. Va., 6. ☐ தமிழ் இலக்கியக் கொள்கை-1.

1976

7. ☐ உலகில் தமிழும் தமிழரும், 8. ☐ அடியார்க்கு நல்லார் உரைத்திறன்.

1977

9. ☐ தமிழ் இலக்கியக் கொள்கை-2, 10. Dissertations on Tamilology.

1978

11. ☐ தமிழ் இலக்கியக் கொள்கை-3

1979

12. ☐ தமிழ் இலக்கியக் கொள்கை-4. 13. ☐ தமிழ்நாட்டுப் புறவியல் ஆய்வு.

1980

14. ☐ சின்ன மகிபன் குளுவ நாடகம். 15. உலகத்தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? 16. ☐ தமிழ் இலக்கியக் கொள்கை-5. 17. Language & Grammar (Heritage of the Tamils) 18. ☐ தொல்காப்பியம் - சிறப்புப்பாயிரம். 19. ☐ திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ். 20. ☐ பணவிடுதூது. 21. ☐ தமிழர் நாட்டு விளையாட்டுகள். 22. ☐ தமிழர் ஆடைகள். 23. ☐ தொல்காப்பியம்-நூன் மரபு. 24. ☐ தமிழர் கண்ட மனம். 25. ☐ தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கை களும். 26. ☐ கூவ நூல். 27. ☐ தமிழக நாட்டுப்புறக் கலைகள். 28. Papers on Tamil Studies. 29. ☐ பிரபந்தத் திரட்டு

1981

30. Tiru Murugan. 31. Epigraphical Evidences for Tamil Studies. 32. ☐ மனை நூல் 33. ☐ தமிழர் உணவு 34. A Study

---

☐ பிரதிகள் விற்பனைக்கு இல்லை.

of the Perunkathai. 35. □ தமிழ் இலக்கியக் கொள்கை-6. 36. □ தொல்காப்பியம் - மொழிமரபு. 37. □ தந்திவனப் புராணம். 38. □ தொல்காப்பியம் - மரபியல். 39. Tamil writers Directory. 40. Tamil Drama. 41. □ தொல்காப்பியம்—பிறப்பியல். 42. Cultural Heritageof the Tamils. 43. தமிழர் தோற்கருவிகள். 44. Literary Heritage of the Tamils.

**1982**

45. தொல்காப்பியம்—புணரியல். 46. 1980-இல் தமிழ். 47. கருவூரார் பலதிரட்டு. 48. சுவடியில் பயிற்சி-கையேடு. 49. தொல்காப்பியம் - தொகைமரபு. 50. தமிழ் இலக்கியக் கொள்கை-7. 51. தொல்காப்பியம்- கிளவியாக்கம். 52. கும்மிப் பாடல்கள். 53. பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள். 54. தமிழும் தமிழரும். 55. பிரபந்த தீபிகை. 56. கண் மருத்துவம். 57. தொல்காப்பியம் - உருபியல். 58. திவ்வியப்பிரபந்தத்தில் மனம். 59. தொல்காப்பியம் - உயிர் மயங்கியல்.

**2. ஆண்டுக் கருத்தரங்குகள்**

1975- ஆராய்ச்சி நெறிமுறைகள், 1976- திருக்குறள், 1977 - நாட்டுப்புற இயல், 1978 - தமிழரின் பண்பாட்டு மரபுச் செல்வம், 1978 - தமிழரின் இலக்கிய மரபுச் செல்வம், 1979 - தமிழரின் மொழி இலக்கண மரபுச் செல்வம், 1980 - தமிழரின் கலைகள் மற்றும் கட்டிடக்கலை மரபுச் செல்வம், 1981 - தமிழரின் வரலாற்று மரபுச் செல்---

# 44. நூற்றொகை

—ந. சிவகாமசுந்தரி

*சுமார் 660 நூல்கள் எண்பத்திரண்டில், தமிழில் வெளிவந்துள்ளன. இலக்கியம், கலை, அறிவியல்...எனப் பல் துறையிலாகப் பரந்தமையும் இவை, தமிழ் நூல் எழுச்சியின் வளர்ச்சியை யன்றித் தளர்ச்சியைக் காட்டின. எண்பத்தொன்றில் 1120, எண்பதில் 850 எனத் தமிழ் நூற்றொகை அமைந்தது இவ்உண்மையை வழங்குகின்றது. நால்வகை நூற்றொகை வகைகளுள், முறைப்படுத்தப்பட்ட நூற்றொகையாக, கட்டுரையைத் தொடரும் பட்டியல் அமைகின்றது.*

18-ஆம் நூற்றாண்டில் நூல்தொகை உருவாக ஆரம்பித்தது. நூல் உருவான பின்தான் நூலைப்பற்றி எழுத முடியும். பரந்த நோக்கில் பார்க்கும் போது நூல்தொகை என்பது நூல்களைப் பற்றிக் கூறும் ஒரு சரியான தொகுப்பு ஆகும். நூல் தொகையானது ஒரு நூலின் தரத்தினை மட்டுமின்றி, அதன் வரலாறு, மற்றும் அச்சிடல், நூல் விளம்பரம், நூல் சேகரிப்பு போன்றவற்றை உள்ளிட்டதாகும். எனவே ஒவ்வொரு மொழியில்உள்ள நூல்களையும் காலவாரியாகவோ, பொருள் வாரியாகவோ, நூலாசிரியர் அகரவரிசைப்படியோ பிரித்து, அல்லது மூன்றும் அமையும் படியோ வரிசைப்படுத்தி தொகுக்கப்பட்ட பட்டியலே நூற்றொகையாகும். சுருங்கக் கூறின் வரைமுறைபடுத்தப்பட்டு, விளக்கமாக எழுதப்பட்ட அல்லது வெளியிடப்பட்ட பதிவுகளின் பட்டியல் முறையே நூற்றொகையாகும்.

### முக்கியத்துவம்

எளிமையாகவும், துரிதமாகவும், சுருக்கமாகவும் எல்லா துறைகளைப் பற்றிய நூல்களின் விபரங்களையும் ஒரே இடத்தில் பெறுவதும் இதன் முக்கிய அம்சமாகும். தொழிலதிபர், நிர்வாகிகள், ஆராய்ச்சியாளர் போன்ற உடனடி தேவையுள்ளவர்க்குச் சார்புள்ள செய்திகளை ஒரு சேரக் கிடைக்கச் செய்வதும் இதன் சிறப்பாகும்.

**நோக்கம்**

ஒரு நூல் எந்த இடத்தில் பிறந்துளந்த இடத்தில் விற்பனைப் பொருளாய் வருகிறது என்பதையோ, அன்றி குறிப்பிட்ட எந்த நூலகத்தில் எந்த இடத்தில் வைக்கப்பட்டுள்ளது என்பதையோ அறிய உதவுவதே இதன் முக்கிய நோக்கமாகும். மேலும் நூல் தொகை ஒருவருக்குத் தான் மேற்கொண்ட ஆய்வுப் பொருளில் ஏற்கெனவே எழுதப்பட்ட செய்திகளைத் தருவதுடன் தனது தேவைக்கேற்ற, நாள் வரையிலான செய்திகளையும் தருகிறது. இது ஆராய்ச்சியில் இரட்டிப்பைத் தவிர்க்கவும், படிப்பவர்களின் நேரத்தை மீதப் படுத்தவும் உதவுகிறது.

அனைத்திற்கும் மேலாக நூல் தலைப்பின் பொருள், ஆக்கியோன், விலை, அச்சிட்டோர் முகவரி, விற்பனை உரிமை, இவற்றைத் தருவதன் மூலம் நூலகர்க்கு நூல் தேர்வு செய்ய, சிறந்த கருவியாக உதவுகிறது. எனவே, நூல்தொகை என்பது ஒரு நிர்வகிக்கப்பட்ட பதிவேடு களின் பட்டியலே அன்றி, ஒரு தனிப்பட்ட தொகுப்புக்கு உட் பட்டதல்ல.

புலவர் சுந்தர சண்முகனார் ''தமிழ் நூல் தொகுப்புக் கலை'' [1] எனும் நூலில் கிரேக்கம், இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கி லம், சமஸ்கிருதம், எபிரேயம், சீனம் ஆகிய மொழிகளின் தொகை நூல்கள் பற்றியும் உலகப் பொதுத் தொகை நூல்கள் பற்றியும் விளக்கியுள்ளமை வரவேற்கத்தக்கது. தொகுப்புக் கலை மிகப் பழங்காலம் முதலே சிறப்புற அமைந்திருந்தமையைச் சங்கத் தொகை நூல்கள் உணர்த்தும்.

இந்திய மொழிகள் அனைத்திலும் வெளிவந்துள்ள நூல் களில் தமிழ் நான்காவது இடம் பெறுகிறது. தமிழில் எண் ணற்ற நூல்கள் வெளியாகியுள்ளன. இவை அனைத்தையும் ஒன்று விடாமல் ஒவ்வொருவரும் படிப்பதென்பது இயலாத காரியம். அவற்றைப் பற்றியெல்லாம் படிக்கவும், அறிந்து கொள்ளவும், ஆய்வு செய்யும் ஆர்வமுள்ளவர்களுக்கு வரன் முறையாக அறிந்து கொள்ளவும் உதவும் முயற்சியின் விளைவு தான் நூற்றொகை.

1. சுந்தர சண்முகனார் : தமிழ் நூல் தொகுப்புக்கலை, பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1, 1972; ரூ. 12.00 பக். XIV+419.

இம்முயற்சியின் முதற்படியாக "தமிழ் நாட்டு நூற்றொகை"[2] மாதந்தோறும் தொடர்ந்து வெளிவருகிறது. இது ஒரு சிறந்த முயற்சியாகும். இதன்படி ஒவ்வொரு பதிவாளரும் அவர்கள் வெளியிடும் நூல்கள், பருவ வெளியீடுகள், செய்தித் தாள்கள், ஒவ்வொன்றிலும் ஒரு படியை இலவசமாக (1) தேசிய நூலகம் — கல்கத்தா; (2) கன்னிமாரா பொது நூலகம் — சென்னை; (3) நகர மன்ற மைய நூலகம் — பம்பாய்; (4) பாராளுமன்ற நூலகம் — டில்லி, ஆகிய நான்கு நூலகங்களுக்கும் அனுப்பி வைக்க வேண்டுமெனப் பொது நூலக வினியோகச் சட்டம் பகர்கிறது. இவ்வாறு அனுப்பப்பட்ட நூல்களின் தொகுப்பு ஒன்றை கல்கத்தா தேசிய நூலகம் "Indian National Bibliography"[3] என்னும் நூற்றொகையாக வெளியிட்டு வருகிறது. இதனுள் ஒரு பகுதி தமிழ் நூல்களின் விவரங்களை விவரிக்கிறது. தவிர கன்னிமாரா நூலகம் "தமிழ் நாட்டுக் குழந்தை நூற்றொகை"[4] (Madras State Bibliography of Children's Literature in Tamil) எனும் நூலை வெளியிட்டு வருகிறது.

இவை அனைத்திற்கும் முக்கிய முதல் மூல நூலாகத் திகழ்வது ஜான் மர்டாக்கின் "Classified Catalogue of Tamil Printed books"[5] எனும் நூலும், கோலின் மெக்கன்சியின்

---

2. தமிழ் நாடு பொது நூலகத்துறை, வெளி: தமிழ் நாட்டு நூற்றொகை; (மாத வெளியீடு), சென்னை கன்னிமாரா (மாநில - மைய) பொது நூலக நூலகர், சென்னை-8.

3. KESAVAN, B. S. & KULKARNI, V. Y. *Ed:* National Bibliography of Indian Literature 1901-1953, Vol. 1-4; Sahitya Akademi, Rabindra Bhavan, 35. Ferozes shah Road, NewDelhi,(Re.vol I-1962; Vol II-1966; Vol. III-1970; Vol. IV-1974. Each Vol Rs. 50).

4. தில்லை நாயகம், வே. பதி : தமிழ் நாட்டுக் குழந்தை நூற்றொகை 1963, கன்னிமாரா பொது நூலகம், சென்னை-8, 1965.

5. MURDOCH, John, *Comp:* Classified Catalogue of Tamil printed books with Introductory notices; Tamil development and Research Council, Govt of Tamilnad, First-1865, Re-1968, Rs. 11.50, p. xvi+cvi+538.

"Meckenzie collection"[6] எனும் நூலும் ஆகும். மேலும் திருமணம் செல்வக்கேசவராய முதலியார் அவர்களும் "தமிழும் தமிழரும்"[7] எனும் தன் நூல் மூலம் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறார்.

தமிழக அரசு தொடர்ந்து அச்சிட்டு வரும் "தமிழ் நாட்டு நூற்றொகை"[8]யும்; "தமிழ் நூல் விவர அட்டவணை"[9]யும் குறிப்பிட்ட காலத்தினை மையமாகக் கொண்டு தொகுக்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. எனினும் தமிழ் மொழியில் வெளிவந்துள்ள அனைத்து நூல்களின் விவரங்களையும் முழுமை யான அளவில் ஒரே இடத்தில் பெறுவது பெரும் இடர்ப்பாடா கிறது. அதனால் இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் பற்றிய முழுமையான தொகுப்பு ஒன்று உடனடியாகத் தேவைப்படு கிறது.

இத்தகு நூல்களின் அமைப்பு, தகவல் குறிப்புக்களின் விபரம் கீழ்க்கண்டவாறு அமைதல் நலம்.

| | | |
|---|---|---|
| குறிப்புகள் மற்றும்தகவல் தலைப்புகள் | — | Entries and items of in formation |
| நூல் ஆசிரியர்(கள்) | — | Authoi(s) |
| உடன் ஈடுபட்டவர்(கள்) | — | Collaborator(s) |
| பொருள் (அ) தலைப்பு | — | Subject |
| வரிசை (அ) பதிப்பு | — | Series (or) Edition |
| தலைப்புக் குறிப்புகள் (முழுத்தலைப்பு, பதிப்பு, வரிசை | — | Title entries (Full title edition, Series, number |

6. MAHALINGAM, T. V. *Ed;* Meckenzie Manuscripts-Vol. I, Tamil and Malayalam; 1972; Vol. II - Telugu, Kannada and Marathi, 1976, University of Madras, Madras. Rs. 25 and Rs. 40.

7. திருமணம் செல்வக் கேசவராய முதலியார் : தமிழும் தமிழரும், 1896.

8. தில்லைநாயகம், வே. பதி: தமிழ் நாட்டு நூற்றொகை, 1964, பகுதி 1, 2; தமிழ்நாடு எழுது பொருள் அச்சுத் துறை இயக்குநர், தமிழ் நாடு அரசு, 1972.

9. கண்ணையன், வெ.பதி: தமிழ் நூல் விவர அட்டவணை (The Madras State Tamil Bibliography) 1867-1900. தொ. 1, பகுதி 1; தமிழ் நாடு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு, சென்னை: 1951, ரூ. 8-00.

எண், தொகுப்பு எண்ணிக்கை, படம், வரைபடம் முதலிய விள்க்கங்கள், நூல்தொகைகள், அச்சிட்டோர், குறிப்பு (அ) சுருக்க விளக்கம்)

of volumes, Illustrations bibliographies, imprint, annotation)

**நூற்றொகை வகைகள்**

நூற்றொகையினை நால்வகைப் படுத்தலாம். அவை யாவன— (1) முறைப்படுத்தப்பட்ட (அ) கணக்கீடு செய்யப் பட்ட நூற்றொகை—(Systematic or Enumerative bibliography), (2) பகுப்பாராய்ச்சி செய்யப்பட்ட (அ) நுண்ணாய்வு செய்யப் பட்ட நூற்றொகை—(Analytical or critical bibliography), (3) வரலாற்றுச் சார்பான நூற்றொகை — (Historical bibliography), (4) பொருட் கட்டுரை நூற்றொகை, (Dissertation bibliography).

**1. முறைப்படுத்தப்பட்ட நூற்றொகை**

நூற்றொகைகளுள் எளியதும் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடியதும் இவ்வகை நூற்றொகை. ஏட்டின் பக்க ஒழுங்கு ஆய்தல் மற்றும் தனிப்பட்ட நூல்களின் சார்ந்த பொருட்களின் செய்திகளை எளிதில் நிலை நாட்டக்கூடிய பயனுள்ள முறையில் பட்டியல் தயாரித்தல் இதன் முக்கிய நோக்கமாகும். சுருங்கக் கூறின் தனிப்பட்ட பொருட்களைக் குறைந்த விபரத்துடன், எளிய பயனுள்ள வரிசையில் பார்வைக்காகவும், மற்றும் சாதாரண வாசகரின் உபயோகத்துக்காகவும் நேரடி வரிசைப் படுத்துவதாகும். நூல் பற்றிய மேலோட்ட விபரங்களை முழுமையாக பதிவு செய்வது ஒன்றே இதன் பணியாகும். இது ஒரு பகுப்பாராய்ச்சி செய்யப்படாத அணுகு நெறியாகும்.

தற்சமயம் நடைமுறையில் உள்ள முறைப்படுத்தப்பட்ட நூற்றொகைகள், 1) உலகளாவிய நூற்றொகை (Universal Bibliography), 2) இந்திய தேசிய நூற்றொகை (Indian National Bibliography), 3) பிரிட்டிஷ் தேசிய நூற்றொகை (British National Bibliography), 4) அச்சில் உள்ள இந்திய நூல்கள் (Indian Books in Print), 5) இந்திய ஆய்வுச் சுருக்க நூற்றொகை (Indian Dissertation Abstracts), 6) தமிழ் நாட்டு நூற்றொகை மாத வெளியீடு, போன்றனவும் பிறவுமாகும்.

1982 ஆம் ஆண்டு வெளியான நூல்களில் குறிப்பாக நூற்றொகை வரிசையில் வைத்து எண்ணும்படியாக அமைந்துள்ளது

"எண்பதில் தமிழ்"[10] என்னும் நூலாகும். இதில் 1980-இல் வெளியான நூற்பட்டியல் துறைவாரியாகப் பிரிக்கப்பட்டு அகர வரிசைப் படுத்தப்பட்டுள்ளது. இது முறைப்படுத்தப்பட்ட நூற்றொகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## 2. பகுப்பாராய்ச்சி செய்யப்பட்ட நூற்றொகை

இவ்வகை நூற்றொகை "நூல்களின் இயற்கைத் தன்மையை அலசி ஆராய்ச்சி செய்து தருகிறது. குறுகிய காலத்தில் வெளிவரும், ஆய்வு செய்யப் போதுமான பாங்குடைய, நூல் தயார் செய்த சூழ்நிலை மற்றும் வெளிப்படுத்த வேண்டிய வரலாறு போன்ற செய்திகளைத் தருகிறது." பகுப்பாராய்ச்சி என்பது நூல்களின் (பொருளின்) தன்மையை விளக்குவது பற்றியது. இது விளக்கமான நூற்றொகையுடனும் நூலின் வரலாற்றுடனும் நூல் ஆசிரியரின் படைப்புக் கலையுடனும் தொடர்புடையதாகிறது. பகுப்பாராய்ச்சி செய்யப்பட்ட அல்லது நுண்ணாய்வு செய்யப்பட்ட நூற்றொகையின் முடிவில் தான் விளக்கமான நூற்றொகை கிடைக்கிறது.

இதற்குச் சான்றாக 1982-ஆம் ஆண்டில் வெளியான "கண் மருத்துவம்"[11] எனும் நூலைக் குறிப்பிடலாம். இது ஒரு சுவடிப் பதிப்பு நூலாக இருப்பினும் இதன் பதிப்பாசிரியர் தான் மேற்கொண்ட பொருளின் முழு விவரங்களையும் இலக்கிய வாயிலாக ஆய்வு செய்து நோய் மற்றும் மருத்துவ முறை போன்றவற்றைத் தருகிறார். இந்நூலில் மருத்துவர், தியாகராஜன் எழுதியுள்ள ஆய்வுரையும் பதிப்பாசிரியரின் நன்றியுரையும் பதிப்புரையும் இந்நூல் எழுந்த வரலாற்றினையும் விளக்குவதால் இதனை மூன்றாம் பிரிவான வரலாற்று நூற்றொகையிலும் சேர்க்கச் சிறிது இடமுண்டு.

## 3. வரலாற்று நூற்றொகை

இது நூலின் கலை, எழுதிய முறை, அச்சிட்ட முறை, எழுத்துக்களின் அளவு, தொகுப்பு முறை போன்றவற்றைப் பற்றியது.

10. சுப்பிரமணியன், ச. வே., விஜயலட்சுமி, ர. பதி: எண்பதில் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; டி. டி. டி. ஐ. தரமணி, சென்னை-600 113, 1982, ரூ. 45. பக் xvi + 912.
11. மாதவன், வே. இரா. பதி: கண் மருத்துவம் (Opthalmology in Siddha Medicine); உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், மேற்படி, 1982, ரூ. 50.00, பக். xvi + 128 + 852.

உலகில் உருவாகும் நூல்களின் சமுதாயச் சூழல், பண்பாட்டு நிலை, நாகரிக வளர்ச்சி இவற்றின் எந்த அடிப்படைச் சூழலில் நூல் உருவானது என்பதைத் தெளிவாக விளக்க வரலாற்று நூற்றொகை உதவுகிறது.

வரலாற்று நூற்றொகை, அடிப்படைக் காரணமான நூல் உருவாகும் விதமும், எடுத்துக் கொண்ட பொருளின் நோக்கமும், நூல் உருப்பெறவும் அச்சிடவும் முற்பட்டபோது இடைப்பட்ட சிரமங்களையும் தொகுத்து, முன்னுரை மூலமே உணர்த்த முடியும் உ. வே. சாமிநாதையர் அவர்கள் 'சீவகசிந்தாமணி'[12] எனும் காப்பியத்திற்கு முன்னுரை, குறிப்புரை முதலியன எழுதி பதிப்பித்துள்ளார். "நூலும் உரையும் ஒரு வருடத்திற்கு முன்பே பதிப்பிக்கப் பெற்று நிறைவேறியும் ஆராய்ச்சி விளக்கம் முதலியவற்றைப் பதிப்பித்துச் சேர்த்தே புத்தகத்தை வெளிப்படுத்த வேண்டுமென்று வித்தியா விநோதர்களாகிய......" எனத் தொடங்கி எழுதிய இரண்டாம் பதிப்பின் முகவுரையையும், முதற் பதிப்பின் முகவுரையையும் நோக்குமிடத்து நூலின் சரித்திரம் நன்கு விளங்கும்.

அதே போன்று மு. வரதராசனார் தன் நூல்களில் முகவுரை, நன்றியுரை இவற்றில் அந்தந்த நூல் எழுந்ததன் விபரத்தைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். "ஓவச் செய்தி[13]" என்ற நூலின் நன்றியுரையில், "ஒரு பாட்டு; அதைக் குறித்துப் பலநாள் போராட்டம்......நல்ல தெளிவால் பிறந்த பேருவகை. இவையே இந்நூலாக உருப் பெற்றன" என்று நூல் உருவான வரலாற்றை உரைக்கிறார். இது போன்ற பல செய்திகள் வரலாற்று நூற்றொகையைத் தொகுக்க உதவும்.

### 4) பொருட் கட்டுரை நூற்றொகை

பொருட் கட்டுரை நூற்றொகை பல்கலைக்கழக உயர் பட்டத்தினைப் பெறுவதில் ஈடுபட்டுள்ளவர்க்கு இலக்கியம் மற்றும் அவர் மேற்கொள்ளவிருக்கும் பொருளின் தகவல்களை முதன்மையாகத் தந்துதவ வல்லது. ஆராய்ச்சியாளர் பல்கி வரும் இந்த நேரத்தில் திரும்பத் திரும்ப ஒரே பொருள் பற்றியே பலர்

---

12. திருத்தக்கதேவர்: சீவக சிந்தாமணி மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்; வே. சாமிநாதையர் பதிப்பு, 2-ஆம், சென்னை, 1907, (முதல் பதி. 1887).
13. வரதராசனார், மு: ஓவச் செய்தி; பாரி நிலையம், சென்னை-1, 1963, 4-ஆம், ரூ. 2.50 பக். 179.

ஆராய்ந்து பட்டம் பெறும் நிலையைத் தவிர்க்க, ஏற்கெனவே ஆய்வு செய்யப்பட்ட பொருள்களின் பட்டியலை ஆண்டுக்கு ஒரு முறை வெளியிடுவது நல்லது. இவ்விதப் பட்டியல் எல்லா ஆய்வுக்கு உரிய பொருள்களும் வரிசைப் படுத்தப்பட்டு, நூலின் வரலாறு மதிப்பீடு செய்யப்பட்ட விபரம், பொருட்கோவை இவற்றைத் தந்து குறிப்பிட்ட பொருளில் பயனுள்ள நூற்றொகையாக அமைகிறது. பல பதிவாளரின், பதிவேடுகளின் பகுக்கப் பட்ட செய்திகள் பகுக்கப்பட்ட பொருளின் கீழ் அமைந்து உதவு கிறது.

தமிழ்த் துறையைப் பொறுத்த வரை சிறந்த முன்னோடி யாகத் திகழ்பவர் தி. முருகரத்தினம். 'தமிழியல்'[14] என்ற இதழில் "Bibliography of dissertations on Tamilology" எனும் தலைப்பில் இவர் எடுத்துள்ள முயற்சி முதல் முயற்சியாகும். இதன் பின் அன்னி தாமசு "Dissertation on Tamilology"[15] எனும் நூலை தொகுத்துள்ளார். இது போன்ற தொகுப்புகள் குறைந்தது இரண்டு அல்லது ஐந்து வருடத்திற்கு ஒரு முறை வெளியிடப்படுவதால் ஆய்வாளர் மிகுந்த பயனடைவர். (1983-இல் தமிழண்ணலும், முத்தையாவும் "தமிழியல் ஆய்வு"[16] என்னும் நூலைத் தொகுத்தளித்துள்ளனர்).

இது போன்று அனைத்துத் துறைகளிலும் மொழிகளிலும் வெளியிடுவது சிறந்த செயலாகும். 1981-ம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தில் "27 Synopses"[17] எனும் தலைப்பில் உள வியல், மானுடவியல், சமூகவியல், அரசியல் போன்ற பல துறை ஆராய்ச்சியினையும் பொருட் கட்டுரைச் சுருக்கத்துடன் வெளி யிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

---

14. MURUGARATHNAM, T : 'Bibliography of dissertations on Tamilology', Journal of Tamil Studies, Vol. I, No. 2, October 1969, P. 125-166.
15. ANNIE THOMAS : Dissertations on Tamilology ; International Institute of Tamil Studies, Adayaru, Madras-600 020, 1977, Rs. 10.00.
16. பெரிய கருப்பன், இராம, முத்தையா, இ : தமிழியல் ஆய்வு, பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 625 021, பக். 22 + 344, 1983, ரூ. 19-00.
17. University of Madras, *Pub* : 27 Synopses; University of Madras; Madras, 1981, Rs. 16.00, P. 174.

### பொருட் கட்டுரை நூற்றொகை எழுதும் முறை

| | | |
|---|---|---|
| வரிசை எண் | : | Serial Number |
| ஆய்வாளர் பெயர் | : | Name of the Researcher |
| தலைப்பு | : | Title of work |
| பல்கலைக் கழகத்தின் பெயர் | : | Name of the universiy |
| நிறுவனம் | : | Name of the Institution. |
| பதிந்து அனுப்பிய ஆண்டு | : | Year of Registration. |
| பணிந்து அனுப்பிய ஆண்டு | : | Year of submission. |
| ஆய்வின் நோக்கம் | ; | Aim of the research. |
| பொருள் பற்றியசிறு விளக்கம் | ; | Annotation or synopsis. |
| பயன்பட்ட நூற்பட்டியல் | ; | Literatures cited. |

இத்தகு குறிப்புகள் அதிக பயனுள்ள தகவல் தரும் சாதன மாக அமைகின்றன.

### முடிவுரை

நூற்றொகையை ஒரு கலையாகவும் கொள்ளலாம் அறிவிய லாகவும் கொள்ளலாம். பகுப்பாய்வு செய்யப்பட்ட நூற்றொகை குறிப்பிட்ட சில பொது விதிகளை உள்ளடக்கி, நடைமுறையில் செயற்படுத்த உதவுவதால் இதனை ஒரு அறிவியலாகக் கருத லாம். ஆனால் முறைப்படுத்தப்பட்ட நூற்றொகை என்பது அதனை வெளியிடும் முறையின் காரணமாக வந்ததால் அதனை ஒரு கலை என்றே கூறலாம். ஏனெனில் நூற்றொகையைத் திரட்டியபின் அதனை நயம்பட; படிப்பவர்களின் மனப்பக்குவத் திற்கு இணங்க முறைப் படுத்தி அமைக்க உதவுவது கலைத் திறனேயாகும்.

நூற்றொகை என்பது நூலகருக்குச் சிறந்த சான்றாதாரமாக வும், தகவல் குறிப்பு அறிவிப்புக் கருவியாகவும் உதவுகிறது. நூலகருக்கு மட்டுமின்றி வாசகர்க்கும், அதிலும் முக்கியமாக ஆராய்ச்சியாளர்க்கும் சிறந்த பயன்படு பொருளாகும். ஆய்வாளர்க்கு அறிவு வளர்ச்சியின்எல்லையை உணர்த்துவதோடு அனைத்துத் துறை நூல்களைப் பற்றியும் ஒரே இடத்தில் பெற்று ஆய்வாளரின் நேரத்தைச் சேமிக்க உதவும் வகையில் நடை முறையில் மிகப் பயன்படுவதாக அமைகிறது.

பயன் கொண்ட நூல்கள் :


1. GIRJA KUMAR & KRISHNA KUMAR: *Bibliography* Vikas Publishing House Pvt. Ltd., 5, Ansari Road, New Delhi. 2, 1976, Rs. 35-00.

2. INDIAN STANDARDS INSTITUTION : *Indian standard recommendations for bibliographical reference* (Rep 1968); ISI, Manak Bhavan, 9, Bahadur Shah Zafar Marg, New Delhi—1, 1963, p. 12, Rs. 6-00.

3. INTER UNIVERSITY BOARD OF INDIA, *Pub : A bibliography of doctoral dissertations accepted by Indian Universities 1857-1970*, New Delhi, 1974.

4. JAGDISH SARAN SHARMA : *Fundamentals o Bibliography with special reference to India* ; S. Chand and Company Ltd, Ram Nagar, New Delhi. 110 055, 1977, Rs. 25-00, pp. V+151.

5. KADHIRVEL, S: *Historical methods*, Saravana books, 3, Pycrofts Rd, Madras-5, 1978, Rs. 27-00 p. 41-50.

6. LIBRARY OF CONGRESS, *Pub : Accessions list Eastern Africa :* Library of Congress Office, Nairobi, Kenya.

7. LIBRARY OF CONGRESS, *Pub : Accessions list India*, Library of Congress Office, New Delhi, India.

8. LIBRARY OF CONGRESS, *Pub : Accessions List Middle East;* Library of Congress Office, Cairo.

9. LIBRARY OF CONGRESS, *Pub : Accessions List Pakistan;* Library of Congress Office, Karachi.

10. LIBRARY OF CONGRESS, *Pub: Accessions List South Asia*; Library of Congress Office, New Delhi, India ; Karachi, Pakistan.

11. LIBRARY OF CONGRESS, *Pub : Accessions List South East Asia*, Library of Congress Office, Jakarta, Indonesia, New Delhi, India.

12. LIBRARY OF CONGRESS, *Pub: Annual Cumulative List of Serials* - author and subject Index - in each

December issue and quinquennial author Indexes at five years intervals.

13. OLAGANATHA PILLAY, L: *Descriptive Catalogue of the Tamil Manuscripts in the Tanjore Maharaja Saraswathi Mahal Library, Thanjavoor*, Vols 1 — 6, Tanjore, 1964 — , Rs. 5-50.

14. RAJANNAN, Busnagi Ed: *South Indian Studies*, Abstracts of American doctoral dissertations relating to South India; Institute of Kongu Studies, Salem, 1981, Rs. 130. P Ui + 432.

15. RANGANATHAN, S. R. : *Classified catalogue Code with additional rules for Dictionary Catalogue Code:* Asia Publishing House, Calcutta 5, Bombay, Delhi, Madras. Rep. 1965, page 538-1985

16. SAHITYA AKADEMI *Pub : Who's who of Indian Writers*-1983, Sahitya Akademi, New Delhi, 1983, Rs. 100-00.

17. SIVAKAMI, S, Ed.; *Bibliography on Translations*, International Institute of Tamil Studies, Madras—113, Rs. 35, P. Lxviii + 556.

18. SWAMINATHAIAR LIBRARY, Pub : *A descriptive Catalogue of Tamil manuscripts in Mahamahopadhyaya Dr. V. Swaminathaiyar Library*, Vols I-V, Madras.

19. UNIVERSITY OF MADRAS, Pub: *List of thesis accepted for the Research degrees* (viz M. Litt, M. Sc., Ph D and D Sc) from 1962-63 to 1971-72, University of Madras, Madras.

20. UNIVERSITY OF MADRAS, Pub: *List of Thesis accepted for the research degrees* (viz Ph. d and D. Sc.) from 1957-58 to 1961-62, University of Madras.

# இணைப்பு

## எண்பத்திரண்டில் தமிழ் நூல்கள்

இரா. பார்வதி

சுமார் 660 நூல்கள் தமிழில் 1982-ஆம் ஆண்டு வெளி வந்துள்ளன. இவை பற்றிய குறிப்பு நூலகக் குறியுடன் பொருள் வாரியாகப் பகுக்கப்பட்டு நூல் அகர வரிசையாக வழங்கப்படு கின்றன. தொடர்ந்து, இவற்றை ஆக்கிய நூலாசிரியர் பெயரும் அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ளன. மேலும், இந்நூல்களைப் பதிப்பித்து உருவாக்கி வெளியிட்ட 250 பதிப்பக முகவரிகளும் அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

### 1. நூல் அகரவரிசை

a. பொது

1. சுவடியியல் பயிற்சி-கையேடு, ராமன், மு. கோ, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ. 6.

A அறிவியல்

2. அறிவியல் அமுதம், சௌந்தரராஜன், டி. எம், கவிதா பப்ளிகேஷன்ஸ், ரூ. 15.
3. அறிவியல் கதம்பம், தமையந்திரன், வே, அன்னை அறிவுப் பதிப்பகம், ரூ 8.
4. உலகைச் சுற்றும் செயற்கைக் கோள்கள், நாகராஜன், என், வள்ளி புத்தக நிலையம், ரூ 13. 50.
5. நவீன கண்டு பிடிப்புகள், பதி. 2, துமிலன், புனை, வசந்தா பிரசுரம், ரூ 10.
6. விஞ்ஞானம் வளர்கிறது, பதி. 2, மணி, பி. எஸ். வசந்தா பிரசுரம், ரூ. 7. 50

C பௌதீகம்

7. அணுசக்தியின் கதை, பதி. 2, துமிலன், புனை, வசந்தா பிரசுரம், ரூ. 10.

D. பொறியியல்

8. செமி கண்டக்டர் ஐ. ஸி, அருணாசலம், ஓம்ஸ். வ, ஓம்ஸ் பதிப்பகம், ரூ. 30.
9. பாக்கெட் ரேடியோ, விஞ்ஞானி, கலைமகள் காரியாலயம் ரூ. 4.
10. மின்-இயல் இயந்திரங்களும் அளவைக் கருவிகளும், குமார், சொ, கு. மனோகர், ரூ. 19.

11. மோட்டார் ரீவைண்டிங், பாகம். 2, மின்னணு, புனை, பாலாஜி பப்ளிகேஷன்ஸ், ரூ. 12. 75.

12. விஞ்ஞான விநோதங்கள், வசந்த இராமனாதன், அருணோதயம், ரூ 6.

13. வீட்டு மின்கருவிகள் ரிப்பேரும் பராமரிப்பும், ஈசன், எம். ஜி, சங்கீதவாணி, ரூ. 8

## H புவியியல்

14. பூமியின் செல்வங்கள், பதி 2, துமிலன், புனை, வசந்தா பிரசுரம், ரூ 5.

## J விவசாயம்

15. எலுமிச்சை மரம், பதி. 2, சூசை ராஜா, எஸ். ஏ, ஸ்டார் பிரசுரம், ரூ 3.

16. புளிய மரம், பதி. 2, சூசை ராஜா, எஸ். ஏ, ஸ்டார் பிரசுரம், ரூ 2. 25.

17. முருங்கை மரம், மறு பதி, சூசை ராஜா, எஸ். ஏ, ஸ்டார் பிரசுரம், ரூ 2.

18. வாழைமரம், பதி. 3, சூசை ராஜா, எஸ். ஏ, ஸ்டார் பிரசுரம், ரூ. 2

## K விலங்கியல்

19. பறவைகளே பறவைகளே, ராஜாராம், கு, மீனாட்சி, ரூ 6. 75.

## L மருத்துவம்

20. அதிக இரத்த அழுத்தம், பதி. 3, கந்தசாமி முதலியார், ச, பாரி நிலையம், ரூ 4.

21. அவசியமான 600 மருத்துவக் குறிப்புகள், சம்பந்தம், வானதி, ரூ 8.

22. ஆஸ்பத்திரியை நடத்துவது எப்படி? கண் டாக்டரின் உதவியாளர்களுக்காக, கூடல் வெளியீடு, ரூ 2.

23. உணவு மருத்துவம், பதி. 6, கந்தசாமி முதலியார். ச, பாரி நிலையம், ரூ 10.

24. எலும்புப் பாதுகாப்பு, இராச மாணிக்கம், எம். சி, கழகம், ரூ 12.

25. எளியமுறையில் பிணியகற்றும் தெய்வீக மாதர்கள், பதி. 3, ஞானோதய வைத்தியர், நர்மதா, ரூ 6.50.

26. எளிய வைத்தியம், இந்திரா சுப்பிரமணியம், இலக்குமி நிலையம், ரூ. 3.50.

27. கண்மருத்துவம், மாதவன், வே. இரா, பதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ 50.

28. கருவூரார் பல திரட்டு, நிர்மலா தேவி, இரா, பதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ. 12.

29. சத்துள்ள உணவுகள் உண்டு ஆரோக்கியமாய் வாழ்வது எப்படி?, ராஜா, எஸ். ஏ. எஸ், தமிழ்ச் சோலைப் பதிப்பகம்.

30. சித்த மருத்துவ அமுது, சிதம்பர தாணுப்பிள்ளை, எஸ், சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ரூ 5.

31. சித்தர் குறுநூல், பதி. 3, சுப்பிரமணிய பிள்ளை, ஆ, சித்த மகுட பிரசுரம்.

32. சித்தர் மூலிகை வைத்தியம், செல்வப்ரியா, சங்கீத வாணி, ரூ. 5

33. சித்தர்கள் தத்துவம், சரவண பவானந்தர், மதிநூற் பதிப்பகம், ரூ 3.

34. சித்தர்கள் பரிபாஷை அகராதி, மாணிக்க வாசகம், இரா, அன்னை அபிராமி அருள், ரூ 15.

35. சின்னச் சின்ன நோய்களும் நீக்கும் வழிகளும், இரத்தின சண்முகனார், அருணோதயம், ரூ8.

36. சூலை நோயுடன் சமூக வாழ்வு, கணபதி ஐயர், ச.கு, பாரி நிலையம், ரூ 5.

37. தமிழ் மருந்துகள், நடராசன், திருமலை, குமரன் பதிப்பகம், ரூ 5.

38. தேனும் ஐந்து மூலிகைகளும், முத்துவேலு, நர்மதா, ரூ 5.50.

39. தொல்லைதரும் நோய்களும் அதை நீக்கும் வழிகளும், இரத்தின சண்முகனார், செல்வ நிலையம், ரூ 8.

40. நீண்ட ஆயுள் ரகசியம், சௌந்தர ராஜன், டி. எம், சங்கீத வாணி, ரூ 6.50.

41. நோய் விளக்கம், சிதம்பர தாணுப் பிள்ளை, எஸ், சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ரூ 2.0.

42. பயன்தரும் பச்சிலை வைத்தியம், பதி. 3, முத்துவேலு, நர்மதா, ரூ 6.

43. பாட்டி சொன்ன வீட்டு வைத்தியம், சூசை ராஜா, எஸ். ஏ, ரத்னா பதிப்பகம்.

44. மருத்துவக் கட்டுரைகள், அன்புதாசன், இமயம் பதிப்பகம், ரூ 7.

45. மருத்துவ திறவுகோல், சிதம்பர தாணுப் பிள்ளை, எஸ், சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ரூ 10.

46. மணமுள்ள மலர்களிலே மருத்துவம், சம்பந்தம், வானதி, ரூ 5.

47. மூலபவுத்திர நோய், சோம சுந்தரன், அரு, பொன் முடி பதிப்பகம், ரூ 4.

48. யோகாசனங்கள், பதி. 3, குருசாமி, சிவானந்த யோக சாதனா பயிற்சி நிலையம், ரூ 10.

49. வயது காலத்து நோய்களும் நீக்கும் வழிகளும், இரத்தின சண்முகனார், செல்வ நிலையம், ரூ 6.75,

50. வாழ்நாளை வளர்ப்பது எப்படி? முத்துக் காளத்தி, மு, பாரி நிலையம், ரூ 8. 25.

MZX சோதிடம்

51. அனுபவ ரேகை சாஸ்திரம், பதி. 2, சூசை ராஜா, எஸ். ஏ, இமயம் பதிப்பகம், ரூ 13.

52. கைரேகை ரகசியங்கள், லட்சுமணன், எம், யமுனா பிரசுரம், ரூ 7.50.

53. வாழ்வில் வெற்றியடைய வழிகள், மாரியப்பர் அடிகள், வசந்தவல்லி பப்ளிஷிங் ஏஜென்ஸி, ரூ 25.

54. விஞ்ஞான முறை ஜோதிடம், ராஜன், என், திருச் செந்தூரான் பதிப்பகம், ரூ 6.50.

55. ஜோதிடம் அறிவியலா? தமையந்திரன், வே, அன்னை அறிவுப் பதிப்பகம், ரூ 11.

ஆன்மீகம்

56. அகஸ்தியர் அஷ்டமா சித்து என்னும் மாந்திரீக ஜோதி, சுப்பிரமணிய பிள்ளை, கோ. வே, ரத்னா பதிப்பகம், ரூ 3.50.

57. அன்பு மாலை, திருவண்ணாமலை யோகி ஸ்ரீராம் சுரத் குமார் மீது பாடிய பாடல்கள், ஜகந்நாதன், கி. வா, காந்த மலை.

58. இங்கித மாலை, அருள் உரை; சரவணானந்தா சத்திய ஞானக் கோட்டம், ரூ 15.

59. இதய வித்தை, பொன் முடி, பி, பொன்முடி பிரசுரம், ரூ 2-10.

60. துதிமணி மாலை, திருவண்ணாமலை ஸ்ரீயோகி ராம் சுரத் குமாரைத் துதித்து பாடிய பாடல்கள், ஜகந்நாதன், கி. வா, காந்தமலை.

61. பட்டினத்தார் பாடல்கள், மெய்யப்பன், ச, பதி, மணி வாசகர், ரூ 12.

62. யோக சாதனை, பதி. 3, கோதண்ட ராமன், பி, அரவிந்த ஆசிரமம், ரூ 7.

63. வடலூர் வள்ளல் பெருமானார், சோம சுந்தரம் செட்டியார், மெய்வழி, செல்வன் பதிப்பகம், ரூ 15.

64. வள்ளல் பெருமானின் உபதேசங்களும் அறிவுரைகளும், சதாசிவம், மு,—, ரூ 3.50.

65. வள்ளலார் பெருமையும் சுத்த சன்மார்க்க விளக்கமும், இராஜப்பா, வெ, வள்ளலார் நிலையம், ரூ 12.

66. வள்ளலார் வாய்மொழி, திருநாவுக்கரசு, சீனி, கலைவாணி புத்தகாலயம், ரூ 6.

67. ஸ்ரீலஸ்ரீ பிரம்மோதய மெய் வழிச்சாலை ஆண்டவர் களின் தவச்செயல், செந்தாமரை அனந்தர், குப்பு ஸ்வாமி அனந்தர், ஜகா பதிப்பகம், ரூ 3.

N கலை

68. கலை வாழ்க்கை அனுபவம் வெளிப்பாடு, வெங்கட்சாமி நாதன், அன்னம், ரூ 11.

69. சித்திரத் தையல், பகுதி.1, பதி.7, வெற்றிச் செல்வி, ஆர், பாரி நிலையம், ரூ 7.50.

70. சித்திரத் தையல், பகுதி.2, பதி.6, வெற்றிச் செல்வி, ஆர், பாரி நிலையம், ரூ 9.

71. தியாக ராஜ ஸ்வாமி கீர்த்தனை, பதி.4, பார்த்த சாரதி, டி.எஸ், ஹிக்கின்பாதம்ஸ் லிமிடெட், ரூ 48.

72. தையல்கலை பூங்கா, பதி.4, எட்வின் சிங் வெளியீடு, ரூ 12.

73. தையல்கலை மணம், பதி.2. எட்வின் சிங், எட்வின் சிங் வெளியீடு, ரூ 15.

74. தையல் தொழில் துணைவன், பதி.4, சுந்தரம், கே.பி. பாரி நிலையம், ரூ 15.

75. மாணவர்களும் கல்வித்துறைகளும், லட்சுமணன், வே, வித்வான் பதிப்பகம், ரூ 6.

76. விஞ்ஞானத்தில் விளையாட்டு, பண்ணன், புனை: திருமலைப் பதிப்பகம், ரூ 6.80.

O 31, 1 A சங்கநூல்

77. அகத்திணை மாந்தர்: ஓர் ஆய்வு, இராம கிருட்டிணன், ஆ, சரவணா பதிப்பகம், ரூ 25.

78. ஐங்குறுநூறு: மருதமும் நெய்தலும், புலியூர்க் கேசிகன், பாரி நிலையம், ரூ 15.

79. நற்றிணைக் காட்சிகள், நெடுஞ்செழியன், இரா, பாரி நிலையம், ரூ 15.

80. குறள் காட்டும் உறவுகள், பொற்கோ, புனை, தமிழ் நூலகம், ரூ. 2.50

81. குறளும் பொருளும்: பாடல் விளக்கம், இறையரசன், மணிமேகலை பதிப்பகம், ரூ. 16.50

82. திருக்குறள் கனிகள், பதி. 2, தண்டபாணி தேசிகர், ச, தமிழ் உறவு, ரூ. 20

83. திருக்குறள் தரும் நீதிக்கதைகள், நாச்சியப்பன், சி.என், செந்தில், ரூ. 3.75

84. திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பகுதி 1, இராஜு செட்டியார், எஸ், கம்பன் பதிப்பகம், ரூ. 15

85. வள்ளுவம்: கற்பனைப்பொழிவுகள், பதி. 8, மாணிக்கம் வ.சுப, பாரி நிலையம், ரூ. 18

O 31, IC 95 காப்பியம்

86. சிலம்பும் மேகலையும், நாராயண வேலுப்பிள்ளை, அன்பு, ரூ. 7-50

87. சீறாப்புராணம் நுபவ்வத்துக் காண்டம் பா. 1, உமறுப் புலவர், ஷெரிப், கா. மு. (உரை), சீதக்காதி நூல் வெளியீட்டகம், ரூ. 25

O15, 1A கம்பர்

88. இராமனைத் தரிசிப்போம், கம்பன் கழகம் வெளியீடு, ரூ. 3

89. இராமாயணம், தமிழன்பர், புனை, சமுதாயம் பிரசுராலயம், ரூ. 35

90. இலக்குவன் : பிரியத் தம்பி, வீரராகவன், தே, பாரி நிலையம், ரூ. 7-00

91. கம்பர் கவிவளம், ஆதித்தர், அ. கு, — , ரூ. 15

92. கம்பன் இலக்கிய உத்திகள், சுப்பிரமணியன், ச. வே. மெய்யம்மை பதிப்பகம், ரூ. 32

93. கம்பன் காவியம் : அன்றும் இன்றும் என்றும், சரசுவதி இராமநாதன்; பி.ஸ்ரீ, வானதி, ரூ. 6

94. கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும், இஸ்மாயில், மு.மு. வானதி, ரூ. 12-50

95. வழக்காடு மன்றம் : கம்பனில், சொல் விளங்கும் பெருமாள், பூ; சக்திப் பெருமாள், வஞ்சிக்கோ பதிப் பகம், ரூ. 10

O31, 1K சிற்றிலக்கியும்

96. அந்தாதி ஐந்து, சுத்த சத்வானந்தா, சுத்த சத்வா னந்தா வெளியீடு, ரூ. 6

97. அபிராமி அந்தாதியும் அபிராமியம்மை பதிகங்களும், தெளிவுரை, அபிராமி பட்டர், திருக்கடவூர், ஸ்ரீ காசி மடம், ரூ 1

98. குமாரலிங்கர் குறவஞ்சி, டாக்டர் உ. வே. சாமி நாதையர் நூல் நிலையம், ரூ 6

99. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், மாதவச் சிவஞான யோகிகள், திருவாடுதுறை ஆதினம்.

100 திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ், பதி. 2, சோம சுந்தரன் அரு, பொன் முடி, ரூ 5. 00

101. நெஞ்சுவிடு தூது; தெளிவுரையுடன், உமாபதி, சிவாச் சாரியார், ஸ்ரீ காசி மடம் ரூ 1. 50

102. பெருந்தலைவர் காமராசர் பிள்ளைத் தமிழ், சுமாச. புனை (சு. மா. சண்முக சுந்தரம்) திரு. வி. க. பதிப்பகம். ரூ. 7. 50

103. ம. பொ. சி. பிள்ளைத் தமிழ், அமிர்தலிங்கம், த. செவ்வேள் பதிப்பகம், ரூ. 7

104. வேலாபுரி கருப்பண்ணசாமி சதகம், இராமசாமிக் கவிராயர், மெய்யம்மைப் பதிப்பகம். ரூ. 6

O 31, IN கவிதை

105. அரண்மனைத் திராட்சைகள், சிதம்பரநாதன், ப, அன்னம், ரூ 7. 50

106. ஆய்வுகள் ...தீர்வுகள்..., மணிமுத்து (தமிழ்ச்சுடர்), தமிழ் வேந்தன், (ஔவை) தொகு, தமிழ்ச் சுடர் பதிப்பகம், ரூ 5

107. இயேசு காவியம், கண்ணதாசன், தலைக் காவேரி ரூ 25

108. இருண்ட வீடு, பாரதி தாசன், புனை, பாரி நிலையம், ரூ. 2. 25

109. இன்று வந்த இறந்தகாலம், நாவேந்தன், நாயகி பதிப்பகம். ரூ 4

110. உதய காலங்கள், அமுத பாரதி, நர்மதா வெளியீடு, ரூ. 10

111. எங்கெங்கு காணினும், இராமலிங்கம், மா, தமிழ்ப் புத்தகாலயம், ரூ 10. 50

112. என்அபிமானத்திற்குரியவளே..., அறிவுமணி, எஸ், எஸ். அறிவுமணி வெளியீடு, ரூ 6.

113. ஒரு கையெழுத்தில்லாத கடிதம், புகழேந்தி, கவிதா பப்ளிகேஷன்ஸ், ரூ 5-50.

114. ஒளிந்திருப்பேன் உன் அடிச்சுவட்டில், வையாபுரி, தங்க சாரதா பதிப்பகம்.

115. கண்ணதாசன் கவிதைகள், தொ. 7, கண்ணதாசன், புனை, வானதி. ரூ. 17.

116. கணைகள் காயங்கள், வண்ணை வளவன், ஆனந்த பதிப்பகம், ரூ. 5.

117. கலை-நிலவு, அன்பு நிலவன், கலைச்செல்வி பதிப்பகம், ரூ. 2.

118. கவனிக்கப் படாத கருணை மனுக்கள், மாசி. மானா மதுரை, அன்பு, ரூ. 7-50.

119. கவிக்குலம் போற்றும் தமிழ்வேள் தங்கராசன், மு. (தொகு), தமிழ்வேள் நாடக மன்றம் ரூ. 9.

120. கவிதைத் துளிகள், கிருபாகரன், புனை, பி. பி. புக் ஹவுஸ்.

121. கவியரங்கில்கவிஞர் சோமசுந்தரன்: அரு, சோமசுந்தரன் அரு, பொன்முடி, ரூ. 6-50.

122. கனவுகள் கற்பனைகள் காகிதங்கள், மீரா, அன்னம், ரூ. 5.

123. கனவுகளின் விளிம்புகளில், இளவல் ஹரிஹரன் மிதிலா பதிப்பகம், ரூ. 5-25.

124. காகிதக் கனவுகள், மேத்தாதாசன், நர்மதா பதிப்பகம், ரூ. 6.

125. காத்திருந்த காற்று, மேத்தா, மு, பாரிநிலையம், ரூ. 7-50.

226. காதல் தாகங்கள், ஏகாந்தன், ஏகாந்தன் பதிப்பகம், ரூ. 5.

127. காவியச் செல்வி மணிமேகலை, அரசுமணி, புலவர், வள்ளி புத்தக நிலையம் ரூ. 9.

128. காவியத் தாயின் இளைய மகன், இராமலிங்கம், வியோ, இமயப் பதிப்பகம், ரூ. 9-50.

129. குடும்ப மலர்கள், சுரேந்திரன், ஜே. ஆர், எஸ் டி புக்ஸ் இண்டர் நேஷனல், ரூ. 7-50.

130. குற்றங்களே தீர்ப்பு எழுதினால், வசந்த ராசன், துரை, இளந்தேவி பதிப்பகம், ரூ. 5.

131. கோடுகள் கோலங்கள் ஆகின்றன, வைத்தியநாதன், குறிஞ்சி ஞானி, ஸ்ரீ அர்ச்சனா, ரூ. 5-75.

132. சத்து ரிங்கட், பாரி, பூவழகிப் பதிப்பகம், ரூ. 6.

133. சிந்தனையில் சில வடிவங்கள், லோகிதாசன், தங்க வயல், தங்க வயல் பதிப்பகம், ரூ. 6.

134. சிரபுஞ்சி வெயில், முத்தையன், வெ, வெள்ளையனார் பதிப்பகம், ரூ.3-50.

135. சுதந்திரம், விச்வநாதன், நா. அன்னம், ரூ.4.

136. சூரிய மழை, அனிதா, நர்மதா பதிப்பகம், ரூ.6.

137. சௌந்தர்ய சொப்பனங்கள் தொ.1, வீரபாண்டியன், தி, வினை வெளியீடு.

138. தடமால் மாறும் சுவடுகள், சந்திர சேகரன், இ, மீரா கலை நிலையம், ரூ.4.

139. தேவி கௌடஸ்வரி அம்மன் அருள், அமுதா பதிப்பகம், ரூ.3.

140. தேன் தமிழ் ஞானமார் மாலை, சிவசக்திக்குச் சூட்டியது, பா.2, கூடல் வரதராசன், பரசுராம் பிரசுரம், ரூ.6.

141. நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம், தேசிக விநாயகம் பிள்ளை, சி, பாரி நிலையம், ரூ.7.

142. நித்தம் எரியும் துர்க்கைகள், இவரா, புனை.

143. நெருப்புத் துண்டு, நீதிநேசன், புனை, சமத்துவப் பதிப்பகம், ரூ.5-90.

144. நெருப்புப் பார்வைகள், பழநி பாரதி, பூங்கொடிப் பதிப்பகம், ரூ.5.

145. பயப்படாதே பாப்பா, பூவண்ணன், புனை, வானதி, ரூ.3.

146. பரமசிவன் கவிதைகள், பரமசிவன், க, பழனியப்பா, ரூ.13-50.

147. பாண்டிமாதேவி, பதி.2, சோம சுந்தரன், பொன்முடி பதிப்பகம், ரூ.6.

148. பாதச் சதங்கைகள், சுப்பிரமணியன், வ, அன்னம், ரூ.4.

149. பிறை வெளிச்சங்கள், கனல் கீதன், ஸ்ரீ கல்யாணி பிரிண்டர்ஸ், ரூ. 3.

150. புதிய பூபாளம், உலகன், சோலோ பதிப்பகம், ரூ. 5

151. புதிய விடியல்கள், தாரா பாரதி, அருணோதயம், ரூ. 8

152. புள்ளிகளின் பூமுடிப்பு, மனோகரன், நாகை, மணிமலர் பதிப்பகம், ரூ. 6

153. புள்ளியில் மலர்ந்த பூக்கள், தாசன், என். ஆர். மயிலவன் பதிப்பகம், ரூ. 5

154. புன்னகை பூக்கும் பூனைகள், சிற்பி, புனை, அன்னம் ரூ. 7-50

155. பூப்பந்தம் பல்சுவைப் பாடல்கள், பழனிச்சாமி, பட்டணம், மெய்வழிப் பதிப்பகம், ரூ. 4-25

156. பொய்க்கால் குதிரைகள், வாலி, புனை, வானதி, ரூ.10

157. போர்க்காற்று, முல்லையூரான், நர்மதா, ரூ. 4.

158. மகரந்தங்கள், திருவாசன், எ. வே, தேன் தமிழ்ப் பதிப்பகம், ரூ. 3.

159. மலரும் பூக்கள், பொன்ராசன், ரா. அன்னம், ரூ. 5.

160. மழை வரும்வரை, கௌரி ஷங்கர், சியாமி, ரூ. 10.

161. மனத்தூறல், கணேசன், ம. ஏ, செல்வம் சேகர் பதிப்பகம், ரூ. 15.

162. மனமலர்கள், உலகநாத பல்லவன், பதி, மூவேந்தர் பதிப்பகம், ரூ. 7.

163. மேடை மின்னல், முத்துக் காளத்தி, மு. பாரி நிலையம், ரூ. 10-75.

164. மௌனப் பூவின் மகரந்த உச்சரிப்புகள், இவரா. புனை (வி. இந்திர பவானி), இண்டர்நேஷனல் பிரிண்டர்ஸ் அண்ட் பப்ளிகேஷன்ஸ், ரூ. 10.

165. மௌன மயக்கங்கள், சிற்பி, புனை, கோலம் வெளியீடு, ரூ. 6-50.

166. வடியாத வெள்ளங்கள், வேங்கடபதி, வல்லம், வானதி, ரூ. 11.

167. வாக்கு மூலங்கள், தமிழ்மணி, கருவூர், பார்வைப் பதிப்பகம், ரூ. 5.

168. விசாரணைகள், இளைய பாரதி, நிஜங்கள் வெளியீடு, ரூ. 6.

169. வியர்வை முத்துக்கள், அரங்கன், க. மு, பி. அண்டு சி ஆலைத் தொழிலாளர் தோழமைக் கழகம், ரூ. 7.

170. விழி மலர்கள், மணிவண்ணன், ப, கங்கை நூலகம், ரூ. 7.

171. வீதிகளை நேசிக்கும் வீணைகள், பாப்ரியா, நர்மதா, ரூ. 7-50.

## O31, 1:g கவிதை ஆராய்ச்சி

172. உலக மகாகவி பாரதியின் சொல் புதிது பொருள் புதிது, சக்தி, நெய்வேலி, ஸ்ரீ அர்ச்சனா பதிப்பகம், ரூ. 12-50.

173. எட்டையபுரத்துத் தங்கம், பொன்னம்மாள், ஆர், வானதி, ரூ. 9.

174. எண்ணத்தின் வண்ணங்கள்: தில்லிப் பேராசிரியர்களின் பாரதியார் கருத்தரங்கப் பொழிவுகள், இளந்திரையன், சாலை, தமிழ்ப் புத்தகாலயம், ரூ. 10.

175. கடவுள் பார்வையில் பாரதி, செந்தமிழ்ச் செழியன், பொன்னெழில் பதிப்பகம், ரூ. 5.

176. கண்ணன் பாட்டுத்திறன், சுப்பு ரெட்டியார், ந, சர்வோதய இலக்கியப் பண்ணை, ரூ. 15.

177. சக்திக் கனலும் காரைக்கிழாரும் ஒப்பாய்வு, சோலை, இருசன், வெற்றிவேல் பதிப்பகம், ரூ. 5.

178. சமுதாய சீர்திருத்தச் சிற்பி, துரை மலையமான், ஆர், முத்துப் பதிபபகம், ரூ. 6.

179. சிறுவர்களுக்குப் பாரதியார், சரசுவதி அமுதன், முத்துக் குமரன், ரூ. 4.

180. சுப்பிரமணிய பாரதியின் கண்ணன் பாட்டு, காப்பிய நாடகம்: கூவும் குயில், கமலையா க. சி, தமிழ்ப் புத்தகாலயம், ரூ. 6.

181. தேசியக் கவி, ராஜேந்திரன், பி. எல், வசந்தா பிரசுரம், ரூ. 9.

182. நாவலர் பாரதியாரின் கருத்து நயங்கள், இராமையா பிள்ளை நா, பூங்குன்றன் பதிப்பகம் ரூ. 6-50.

183. பல்கலை நோக்கில் பாரதி, சுதாகர், ம.வி, பூரம் பப்ளிகேஷன்ஸ், ரூ 18.

184. பல்கோண பாரதி, நக்கீரன், வேணி வெளியீடு, ரூ. 8.

185. பன்னோக்குப் பாவலன் பாரதி, வைத்தியலிங்கம், மு. அருண்மொழிப் பதிப்பகம், ரூ. 15.

186. பாஞ்சாலி சபதம்: ஒரு நோக்கு, சுப்பு ரெட்டியார், ந, சர்வோதய இலக்கியப் பண்ணை, ரூ. 10.

187. பாட்டுக்கொரு புலவன், பதி. 2, பொன்னுச்சாமி, கே. இமயப் பதிப்பகம், ரூ. 4-50,

188. பார் புகழ் பாரதி, தமிழரசிப் பதிப்பகம், ரூ. 10.

189. பாரதி இயல், இன்னாசி, சூ. பதி. ஆய்வுமையம், ரூ 10.

190. பாரதி இயல், சண்முகம், இராம. முதலியோர் பதி, மணிவாசகன் ரூ. 12-90.

191. பாரதி இலக்கியம் ஒரு பார்வை, வீராசாமி, தா. வே, தமிழ்ப் புத்தகாலயம், ரூ. 8.

192. பாரதி இன்பம், நாகராசன், கே. எஸ், பெர்ல் வெளியீடு, ரூ. 7.

193. பாரதி கண்ட கவிதைத் தலைவி, சுப்பிரமணியன், தி, வானதி, ரூ. 11-50.

194. பாரதி காட்டிய பாப்பாவின் தோழர்கள், கமலா, எஸ், அன்பு, ரூ 4.

195. பாரதி சில பார்வைகள், ரகுநாதன், மீனாட்சி புத்தக நிலையம், ரூ. 12.

196. பாரதி சில யதார்த்தப் பார்வைகள், பெருமாள், சென், முதலியோர், இராதா பதிப்பகம், ரூ. 11

197. பாரதி நூற்றாண்டு விழா தீக்கதிர் சிறப்புமலர் எம். ஆர், வெங்கடேசன், தீக்கதிர் அச்சகம் ரூ. 8.

198. பாரதி பிள்ளைத் தமிழ், சுப்பிரமணிய பிள்ளை. சு. குமரன். ரூ 7.

199. பாரதிப் புதிர், திருமொழி சரோ. புனை (பழனிசாமி' கருவை), திருமொழிப் பதிப்பகம் ரூ 10.

200. பாரதி புதையல் பெருந்திரட்டு பத்மநாபன், ரா. அ, வானதி. ரூ45

201. பாரதி போற்றிய பன்னரும் உபநிடத நூல், ராஜு, தி. சா, வானதி. ரூ. 7.

202. பாரதி போற்றுவோம், பண்ணன், புனை, திருமலைப் பதிப்பகம், ரூ. 6.

203. பாரதி மணிமலர்;பாடல் கொத்து, சங்கம் புக்ஸ் ரூ. 3

204. பாரதி வரலாற்று நாடகம், விஜயேந்திரன், சிலோன், அல்லயன்ஸ் கம்பெனி, ரூ. 5. 25.

205. பாரதி வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள் சங்கர ராம மூர்த்தி, தொகு, வானதி, ரூ. 5.

206. பாரதிதாசன்—ஒரு நோக்கு; இளங்கோ, ச. சு. சிந்தனையாளர் பதிப்பகம், ரூ. 15.

207. பாரதிதாசன் பார்வையில் பாரதி, இளங்கோ, ச. சு, அன்னம், ரூ. 2.

208. பாரதியார் இதயம், மணி, டி. வி. எஸ். சங்கம் புக்ஸ் ரூ. 8.

209. பாரதியார் உலக கவி, அப்துல் கறீம், மு. வானதி ரூ. 7. 50.

210. பாரதியார் கவிநயம். பத்மநாபன், ரா. அ. வானதி ரூ. 12. 50,

211. பாரதியார் கனவுகள் கற்பனைகள், வசந்தா இராம நாதன் அருணோதயம் ரூ. 6.

212. பாரதியார் தேடியதும் கண்டதும், கரிச்சான் குஞ்சு, வானதி, ரூ. 8.

213. பாரதியார் நூல்கள் ஒரு திறனாய்வு, பெரியசாமித் தூரன், ம. ப, வானதி. ரூ. 4

214. பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள், ச. வே. சுப்பிர மணியன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ. 8.

215. பாரதியாரில் மூன்று நாடகங்கள்: பெருமாள், சென், இராதா பதிப்பகம் ரூ. 6

216. பாரதியாரின் ஆத்திசூடி, லலிதாபரமேசுவரன், காயத்ரி பப்ளிகேஷன்ஸ், ரூ. 5.

217. பாரதியாரின் பாதையிலே, பதி. 6, சிவஞானம், ம. பொ. பூங்கொடி பதிப்பகம், ரூ. 7.

218. பாரதியாரின் மணிமொழிகள், ஸ்ரீதரன் என், இராதா. பதிப்பகம், ரூ. 7.

219. பாரதியாரின் வேதரிஷிகளின் கவிதை, பதி. 2, மணி, பெ. சு. பூங்கொடி பதிப்பகம், ரூ. 10,

200. பாரதியின் பராசக்தி ஸ்ரீதரன், என், வானதி, ரூ. 10.

221. பாரதியின் பாதை பாலருக்கு கீதை, சத்தியநாதன், அம்மன், வைரவன் பதிப்பகம், ரூ6:25.

222. பாரதியின் புலமை நலம் கருத்தரங்கக் கட்டுரைக் கோவை, வளன் அரசு, பா. பதி, கதிரவன் பதிப்பகம், ரூ. 8,

223. பாரதியின் போர்க்குரல், பதி. 2, சிவஞானம், ம. பொ, பூங்கொடி பதிப்பகம், ரூ. 7-50.

234. பாரதியுகம், பதி. 2, கோதண்டராமன், ப, இமயப் பதிப்பகம், ரூ. 4-50.

25. பாரதியும் கீட்சும், பாலா, அன்னம், ரூ 3.

26. பாரதியும் பொதுவுடைமையும், முகம்மது செரீபு, நா, முன்னேற்றம் வெளியீடு ரூ. 7-50.

227. பாரதியைப் பற்றி நண்பர்கள், பத்மநாபன், ரா. அ, வானதி, ரூ 13.

228. பாரதியைப் பாடுவோம், ஜோதி தாசன், அன்னபூரணி பிரசுரம், ரூ. 5.

229. பால பாரதி, சக்தி சீனிவாசன், புனை, அல்லயன்ஸ் கம்பெனி, ரூ. 7.

230. பாரதி நெஞ்சில் பாரதி, அருமை நாதன், அரு, தொகு, பரிமளாப் பதிப்பகம், ரூ. 6.

231. புதுவையில் பாரதியார், வேலாயுதனார், மு. த, வானதி, ரூ. 8.

232. புதையலும் பேழையும், இளஞ்சேரன், கோவை, கலைக் குயில் வெளியீடு, ரூ. 21.

233. போரும் பூவையரும், லோகிதாசன், தங்க வயல் பதிப் பகம், ரூ. 4-50.

234. மகாகவி பாரதி பற்றி சோவியத்அறிஞர்கள், சோவியத் நாடு, ரூ 2.

235. மகாகவி பாரதியார் கவிதையும் வாழ்க்கையும், ராஜு தி. சா, வானதி, ரூ. 7-50.

236. மறவேன் மகாகவியை, நாகையன், எஸ். என். சி, வைரவன் பதிப்பகம், ரூ 5.

237. மாணவச் செல்வங்களுக்கு பாரதியார், கவியழகன், சோமு புத்தக நிலையம், ரூ. 5-25.

O31, 2N நாடகம்

238. அடாவடி அம்மாக் கண்ணு மெரினா, புனை, பூரம் பப்ளிகேஷன்ஸ், ரூ. 7.

239. இங்கே சாதி சாகுது சேமுமு முகமதலி சலூஜா பிரகாசன், ரூ. 8.

240. குழந்தைக் கவிஞன், பூவண்ணன், புனை, பழனியப்பா, ரூ. 4.

241. சிதம்பர ரகசியம், கிருஷ்ணன், நாகர்கோவில், மீனா புத்தக நிலையம் ரூ. 6.

242. டாக்டர் நரேந்திரன் விநோத வழக்கு, சுஜாதா, புனை, குமரி, ரூ. 7.50.

243. தமிழ்ச் செல்வம், பதி. 9, விசுவநாதம், கி. ஆ. பெ. பாரி, ரூ. 6.50.

244. தலையாலங்கானத் தலைவன், பண்ணன், புனை, திருமலைப் பதிப்பகம், ரூ. 16.

245. திடீர் பணக்காரர் ஆவது எப்படி? பிச்சையாத் தேவர், பி. எம்., சக்திப் பதிப்பகம், ரூ. 5.

246. துறவியின் புதையல், நாராயணன், பா, கபிலன் பதிப்பகம், ரூ. 20.

247. தூக்கிலே பகத்சிங் வெள்ளி மலை, க. அகரம், ரூ. 9.50.

248. தொலைக்காட்சி நாடகம், சேனாபதி, வே, பூக்கூடை பதிப்பகம், ரூ. 4.

249. நாடகம் சுபநாடகம், கௌரிராஜன், புனை, முருகன் பதிப்பகம் ரூ. 10.

250. நான் வாழத்தான் வேண்டுமா? பிச்சையாத் தேவர், பி. எம். சக்தி நிலையம் ரூ. 5.

251. நீ வந்த நேரம், இராதா கிருஷ்ணன், ஏர்வாடி, எஸ், சுதா பதிப்பகம், ரூ. 10.

252. பொம்மை நூலகம், பூவண்ணன், புனை, (வேதா கோபால கிருஷ்ணன்), பழனியப்பா.

253. மனச்சான்று; ஓரங்க நாடகங்கள், பதி. 2, வரதராசன், மு, பாரி நிலையம், ரூ. 6.50.

254. ரோஜாத் தோட்டம், சாரண பாஸ்கரன், தென்றல் மன்றம், ரூ. 10.

255. வாய்ச் சொல் வீரர் வெள்ளி மலை க. அகரம், ரூ. 7.

O31, 3:g புதினம்-சிறுகதை-ஆராய்ச்சி

256. அகல்யா, பாலகுமாரன், வானதி, ரூ.9.00.

257. அடிச்சுவடுகள், ஹம்சா, தனகோபால், ரூ.10.75.

258. அந்தி நிலாச் சதுரங்கள், ஆறுமுகம். பூவை, எஸ், ரூ.13.

259. அவள் கணபதி, இரா, முதலியோர், வானதி, ரூ.8.

260. அப்ஸரா, சுஜாதா புனை. குமரிப் பதிப்பகம், ரூ.5.

261. அவர்கள் அவர்களேதான், இராகவேந்திரன், இராம. வைரவன் பதிப்பகம். ரூ.8.75.

262. அவள் ஒரு தென்றல், லக்ஷ்மி, புனை, ராணிமுத்து' ரூ.1-50.

263. அவள் மட்டுமா? இளந்திரையன், செ.சி, சிலம்பு பதிப்பகம்.

264. அழகின் நிறம், விக்கிரமன், புனை,(சு. வேம்பு)திருமகள் நிலையம், ரூ.9-50.

265. அழகு என்னும் தெய்வம் லக்ஷ்மி, புனை, திருமகள் நிலையம், ரூ.8.

266. அழியாத ஓவியங்கள், தமிழ்ச் செல்வன், மா. ர.குமரன் பதிப்பகம், ரூ.20.

267. ஆகஸ்ட் 26, முத்தையா, வி.ச. வேணி வெளியீடு' ரூ.5-50.

268. ஆயுத பூசை, ஜெயகாந்தன், த. மீனாட்சி புத்தக நிலையம், ரூ.3-75.

269. ஆன்மீகக் கதைகள், கமலாத்மானந்தர், தொகு, ஸ்ரீராம கிருஷ்ண மடம். ரூ 4-50.

270. இங்கே சில இதயங்கள், ராகவேந்திரன், இராம, வைரவன் பதிப்பகம், ரூ.10.25.

271. இதழ்கள், மணிசேகரன், கோவி, வானதி, ரூ. 7.

272. இது முதல் அத்தியாயம், கார்த்திகா ராஜ்குமார், பூக்கூடை பதிப்பகம், ரூ. 10.

273. இந்திய நாடோடிக் கதைகள், சரஸ்வதி ராமநாதன், வானதி, ரூ . 6.

274. இந்திய நாடோடிக் கதைகள், பகுதி 2, சரஸ்வதி ராமநாதன், வானதி, ரூ. 7.

275. இந்திய பாஸ்போர்ட், இரவிச்சந்திரன், விஜயா பதிப்பகம், ரூ. 8-50.

276. இல்லம் தோறும் இதயங்கள், சமுத்திரம், சு, மணிவாசகர், ரூ. 12-75.

